# முருகவேள் பன்னிரு திருமுறை —தொகுதி-6



## பொருளடக்கம்


| | பக்கம் |
|---|---|
| **8–ஆம் திருமுறை** | |
| கந்தரலங்காரம் | 1 - 141 |
| கந்தரந்தாதி | 142 - 286 |
| **9–ஆம் திருமுறை** | |
| திருவகுப்பு (25) | 287 - 621 |
| **10–ஆம் திருமுறை** | |
| கந்தரநுபூதி | 622 - 723 |
| வேல் விருத்தம் | 724 - 746 |
| மயில் விருத்தம் | 747 - 772 |
| சேவல் விருத்தம் | 773 - 793 |
| **11–ஆம் திருமுறை** | |
| 44 அடியார்களது துதிப்பாக்கள் (பழந்தமிழ் நூல்கள்) | 794 - 880 |
| **12–ஆம் திருமுறை** | |
| 40 அடியார்களது வரலாற்றுச் சுருக்கம் | 881 - 958 |
| அநுபந்தங்கள் | 959 - 976 |

# முருகவேள் பன்னிரு திருமுறை

## அருணகிரிநாதர் அருளிய திருப்புகழாதிய நூல்கள்
## மூலமும் உரையும் விசேஷ ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்

உரையாசிரியர்:

ராவ்பகதூர், தணிகைமணி. வ. சு. செங்கல்வராய பிள்ளை M.A.
Retired Personal Assistant to the Inspector General of Registration
292, லிங்கசெட்டித் தெரு, சென்னை 1,



தொகுதி 6

பதிப்பாளர்:

மீனாக்ஷி கல்யாணசுந்தரம்

2, இரண்டாவது தெரு, வடக்குக் கோபாலபுரம், சென்னை 6.

உ



# முகவுரை

கந்தரலங்காரம், கந்தரநுபூதி - இவைகட்குப் பொழிப்புரை, சுருக்க உரை, குறிப்புரை, செய்யுள் முதற்குறிப்பு, நூலின் சிற்ருராய்ச்சி இவைகளுடன் இதுவரை வெளிவராததும், மிக உபயோகரமானதுமான சொல்லகராதி ஒன்று எழுதிச் சேர்க்கப்பட்டுளது.

—உரை ஆசிரியர்.



அருணகிரிநாத ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# கந்தரலங்காரம்.

—: 0 :—

[ அந். = அந்வயம். பொ - உ. = பொழிப்புரை.
சு - உ. = சுருக்க உரை, கு - உ. = குறிப்புரை. ]

## காப்பு.

அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு வார்தலையில்
தடப டெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

(அந்.) வருவார் தலையில்...களிற்றினை...அடலருணைத் திருக் கோபுரத்தே அந்த வாயிலுக்கு வட அருகிற் சென்று கண்டுகொண்டேன்!

(பொ - உ.) தன்னிடம் வந்து வணங்குபவர்கள் தமது தலையில் 'தடபட' என்று ஒலிக்கும்படி குட்டிக்கொண்டு (தனக்கு நைவேத்தியமாக வைக்கும்) சர்க்கரையைக் கப்பி உண்கின்ற துதிக்கை உடையவரும், மதம் பொழியும் (தடம்) இடத்தைக்கொண்டதான (கும்பம்) மத்தகத்தை உடையவருமான (களிற்றுக்கு) யானை முகவராம் கணபதிக்கு (இளைய) இளையவரான—தம்பியான (களிற்றினை) இனியவராய் எனக்கு உவப்பைத் தரும் முருகனை (அடல் அருணை) வலிமை வாய்ந்ததும், (அருணை) திருவண்ணாமலையில் உள்ளதுமான அழகிய கோபுரத்தில் (அந்த) யார்க்கும் பிரத்யக்ஷமாய் விளங்கும் (வாயிலுக்கு) வாசலுக்கு வடக்குப் பக்கத்தின் (அருகே) சமீபத்திலே போய்க் (கண்டு கொண்டேன்) நான் தரிசிக்கப் பெற்றேன்.

(சு - உ.) அருணை வட வாயிலில் கணபதியின் தம்பி முருகனது தரிசனத்தைப் பெற்றேன்.

(கு - உ.) சர்க்கரை=ஆன்மபோதம். கும்பம்=மத்தகம். களிற்றுக்கு இளைய களிறு=விநாயக மூர்த்திக்கு இளைய முருகவேள். களிறு=ஆனை;—இனிமை, உவப்பு இவைகளைக் குறிக்குமிடத்து—'களிறே'—'ஆனையே' என்பது வழக்கு. 'திரு ஆவடுதுறையுள் ஆனையே'—சுந்தரர் 7-70-9, 'என் ஆனைக்கன்றினை என் ஈசன் தன்னை'—அப்பர் 6-63-1; 'ஐயை களிறு'—களிறு—ஆகுபெயர்'—தக்கயாகப் பரணி 170. 'வைதிக வாரணமே'—தக்க-பரணி 183. 'மைந்தவோ என்றன் மத களிறே'—கந்த புராணம் 4-11-164. 'வருக என் களிறென் றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்'—சிந்தாமணி 1911. களிறு=உவப்பின் வரும் விளி—'செல்க என்களிறு', பெருங்கதை. 1-36-347: "போர்யானை வந்தீகஈங்கு"-கலித்தொகை 8௩. 'தடகும்பக் களிறு'—தட=பெருமை உடைய எனலுமாம்—'தடவுங் கயவும் நளியும் பெருமை'—தொல்காப்பியம் சொல்லதி. வட அருகிற் சென்று கண்டு கொண்ட முருக மூர்த்தியே அருணகிரியார்க்கு 'முத்தைத்தரு' என்னும் திருப்புகழ் அடி எடுத்துக் கொடுத்தவர்;

இவரே 'கோபுரத் திளையனர்' என வழங்கும் முருகவேள்.

'அருணை ஆடகச் சித்ரமணிக் கோபுரத்து உத்தரதிக்காக வெற்றிக் கலபக் கற்கி அமர்வோனே'—திருப்புகழ் 577.

'அருணை இறையவர் பெரிய கோபுரத்தில் வடபால் அமர்ந்த அறுமுகப் பெருமாளே'—திருப்புகழ் 540.

'ஆடக விசித்ர கான கோபுர முகப்பில் அருணபுரியில் நிற்கும் அடையாளக் காரனும்'—(வேளைக்காரன் வகுப்பு.)

## 1. நூல்

### தன் அநுபவம் கூறினது

பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைப்ர பஞ்சமென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா!செஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே.

(அந்.) செஞ்சடாடவிமேல்.........க்ருபாகரன்......பேற்றைத்......வழிவிட்டவா.

(பொ - உ.) சிவந்த (சடாடவி) சடைக் காட்டின் மேலே (கங்கை) ஆற்றையும், (பணியை) பாம்பையும், (இதழியை) கொன்றையையும்,

தும்பை மலரையும் (அம்புலியின் கீற்றை) பிறைச் சந்திரனையும் சூடியுள்ள சிவபெருமானது (குமாரன்) பிள்ளையாகிய (க்ருபாகரன்) கருணைக்கு இருப்பிடமான மூர்த்தியாகிய (முருகன்) (பேறு) நல்ல பாக்கியம், தவ ஒழுக்கம் இவை கொஞ்சமேனும் இல்லாத என்னை (ப்ரபஞ்சம் என்னும்) உலகமாயை எனப்படும் சேற்றைக் (கழிய) தாண்டிச் செல்ல (வழி விட்டவா) வழி காட்டிய திருவருள் வியக்கத் தக்கதே.

(சு - உ.) நற்பேறு தவம் இல்லாத என்னை முருகவேள் உலகமாயையிற் சிக்காது விடுவித்த பெருங் கருணையை என்னென்று வியப்பேன்!

(கு - உ.) வழிவிட்டவா=வழிவிட்ட ஆற்றினை (செயலினை) என்னென்று கூறி வியப்பேன். வழிவிட்ட ஆறு - வழிவிட்டவா எனக் குறுகிற்று. இங்ஙனம் குறுகி வருவதை 8, 10, 61, 100 - என் பாடல்களிற் காண்க. 'தில்லை யம்பலவ னருட் கழல்கள் சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ' - திருவாசகம். 'பிமரங் கெடமெய்ப் பொருள் பேசியவா!'' - கந்தரநுபூதி-8. அம்புலியின் கீற்றை=பிறைச் சந்திரனை.

## 2. உலகுக்கு உபதேசம்

**அழித்துப் பிறக்கவொட் டாவயில் வேலன் கவியையன்பால்**
**எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீரேரி மூண்டதென்ன**
**விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடுங்கயிற்றாற்**
**கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றோகவி கற்கின்றதே.**

(பொ - உ.) பிறவிக்கு இடமான ஆசையை—பற்றை—(அழித்து) ஒழித்து (இனி) பிறவி வாராவகையில் காக்கவல்ல (அயில்வேலன்) கூரிய வேலைக்கொண்ட முருகவேளின் (கவியை) திருப்புகழ்ப் பாடல்களை அன்புடனே எழுத்துப் பிழை (அற) இல்லாமல் (கற்கின்றிலீர்) ஓதுதல் செய்கின்றீர்கள் இல்லை; எரி மூண்டது (என்ன) போலக் (கண்களை) விழித்தும் (அக் கண்களினின்று) புகை எழவும், (பொங்கு) கோபித்து வருகின்ற அந்த (வெங் கூற்றன்) கொடிய யமன் (விடும் கயிற்றால்) வீசுகின்ற பாசக் கயிற்றினால் (உங்கள்) கழுத்தில் சுருக்கு மாட்டி இழுக்கின்ற (அன்றோ) அந்தத் தினத்திலோ (கவி) முருகன் மீது தோத்திரப் பாக்களை (நீங்கள்) ஓதப் போகின்றீர்கள்!

(சு - உ.) பின்னர் ஆகட்டும் என்று இராமல் உடனே எழுத்துப்பிழை வராத வகையில் முருகன் திருப்புகழ்ப் பாக்களைப் பாடி உய்மின்கள்.

(கு - உ.) எழுத்து—இலக்கணம், அன்புடனும் எழுத்துப் பிழையின்றியும் இறைவன் திருப்புகழை ஓதுதல் வேண்டும் என்பது இதனாற்

பெறப்படும். 'இன்று கொல் அன்று கொல் என்றுகொல் என்னுது பின்றையே நின்றது கூற்றம் என்றெண்ணி' இறைவனைத் துதித்தல் வேண்டும். 'நீரில் எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே வழுத்தாத தெம்பிரான் மன்று'—நீதிநெறி 1.

## 3. வேலின் ஆற்றல்

தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட் டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்தது சூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

(பொ - உ.) (தேவர்களையே) ஒரு தேராக (அணியிட்டு) அலங்கரித்துத் திரிபுரத்தை எரித்த சிவபிரானது மகனாகிய குமரவேளின் செவ்விய திருக்கரத்தில் உள்ள வேலின் (கூர்) கூரிய பாகம் (அணியிட்டு) அண்ணியிட்டு — சமீபித்து — அல்லது அணியிட்டு — படை வகுத்ததுபோல அமைந்து—அணுவாகி—அணுகுண்டுபோல ஆற்றல் அமைந்த காரணத்தால்—கிரௌஞ்சமலை (குலைந்து) அழிபட்டு, (அல்லது கிரௌஞ்சம் அணுவாகிக் குலைந்து—கிரௌஞ்சம் அணுபோலப்பொடிப் பொடியாய் அழிந்து) அரக்கர்களின்...கடகம்-நேர் அணியிட்டு-ஒழுங்காக அணி-படை வகுக்கப்பட்டு (வளைந்த கடகம்) சூழ்ந்து நின்ற அரக்கர் சேனை (நெளிந்தது) கெட்டு நிலை குலைந்தது; சூரனுடைய பேரணி—சேனையின் பின்னணியும் (கெட்டது) சிதறி அழிந்தது; தேவேந்திரனுடைய உலகம் பிழைத்தது.

(சு - உ.) வேல் பட்டதனுல் கிரௌஞ்சம் குலைந்தது, சூரன் சேனை அழிந்தது. இந்த்ரலோகம் பிழைத்தது.

(கு - உ.) கிரௌஞ்சம்=மாயை. கடகம்=சேனை - கன்மம். சூர் - ஆணவம். பேரணி=கூழை=பின்படை, 'கூழை யென்பது பேரணி யாகும்'-பிங்கல நிகண்டு. புரம் எரித்த வரலாறு—திருப்புகழ் 285, பக்கம் 206; 1021—பக்கம் 68 கீழ்க்குறிப்பு.

## 4. தன் குறை கூறல்

ஓரவொட் டாரொன்றை யுன்னவொட் டார்மல ரிட்டுனதாள்
சேரவொட் டாரைவர் செய்வதென் யான்சென்று தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே.

(அந்.) தேவர் உய்யச் சென்று சோர நிட்டூரனை......கொன்றவனே! ஐவர் ஓர ஒட்டார்......தாள் சேர ஒட்டார், யான் செய்வது என்?

(பொ-உ.) தேவர்கள் பிழைக்கவேண்டிச் (சென்று) போருக்கு எழுந்து சென்று (சோர நிட்டூரனை)—வஞ்சனையும் கொடுமையும் உள்ள சூரனுடைய காருடல் கரிய தேகத்தினின்றும்(சோரி கக்க) ரத்தம் சொரியக் கூர—கூர்மையுள்ள (கட்டாரி இட்டு)—வேலைச் செலுத்தி ஒரு நொடி நேரத்தில் (அவனைக்) கொன்றவனே! ஐவர்—மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் (ஓர ஒட்டார்)—(உண்மைப் பொருளை) ஆய்வதற்கு விடுகின்றார்கள் இல்லை; ஒன்றை—ஒரு பொருளாகிய உன்னை (உன்னை) நினைக்க விடுகின்றார்கள் இல்லை; மலர் இட்டு உன்னுடைய திருவடிகளைச் (சேர) தியானிக்க—சிந்திக்க விடுகின்றார்கள் இல்லை; யான் செய்வது என்—நான் என்ன செய்யக்கடவேன்—இன்ன செய்வதென்று தெரியவில்லையே;

(சு-உ.) சூரனைக் கொன்றவனே! ஐம்பொறிகளும் உன்னை நினைக்க ஒட்டாமல் தடுக்கின்றன; நான் என் செய்வேன்.

(கு-உ.) சேர=இடைவிடாது நினைக்க. ஐம்பொறிகளின் வன்மையைக் கூறினர்; ஐவர்=ஐம்பொறி. 'இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும் ஏழையேற் கென்னுடன் பிறந்த ஐவரும் பகையே'
- திருவிசைப்பா 8-2.

'ஐம்பெருமா பூதங்கா ளொருவிர் வேண்டிற் றெருவிர் வேண்டீர் கண்டிவ் வவனியெல்லாம் உம் பரமே உம் வசமே யாக்கவல்லீர்'
- அப்பர் 6-27-2.

"அடுவன அஞ்சு பூதம் அவைதனக் காற்ற லாகேன்
படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ". - அப்பர் 4-76-10.

"ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச் செய்வதொன் றறியமாட்டேன்"—அப்பர் 4-54-9. "ஆயமாய காயந்தன்னுள் ஐவர்நின் றொன்றல் ஒட்டார்"—சம்பந்தர் 1-50-7. கட்டாரி=வேல்; "கட்டாரி வேல்விழியார்." [34] "காருடல்"—சூரன் நிறம் கறுப்பு—'காரவுணன் வானவரைவிட்டு வணங்காமையால்'-கந்தர் கலிவெண்பா. இந்தப் பாடலின் 3, 4 அடிகள் இதன் ஆசிரியர் சந்தக் கவி என்பதை விளக்கும். சூரனுதிய அரக்கர்களை அடக்கிய நீ இந்த ஐவரை அடக்கக் கூடாதோ! என முற்பாதிக்கும் பிற்பாதிக்கும் பொருத்தம் காண்க.

## 5. முருகன் பெருமை

திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே.

(பொ - உ.) திருந்திய வகையில்—நன்றாக உலகங்களைப் பெற்றருளிய (பொற்பாவை) அழகிய பாவை போன்ற தேவி பார்ப்பதியின் திருமுலைப் பாலை (அருந்தி) உண்டு, சரவணம் என்னும் மடுவிலே (பூந்தொட்டிலிலே) தாமரை மலர்களாய படுக்கையிலே வீற்றிருந்து (அறுவர்) கார்த்திகை மாதர் ஆறுபேர்களின் (கொங்கை) முலைப்பாலை விரும்பி-இந்தக் குழந்தை நம்மை வாட்டப் பிறந்திருக்கின்றதே என்று உணர்ந்து—கடல் அழ—கடல் அழவும், கிரௌஞ்சம்—எழுகிரி என்னும் மலைகள் அழவும், சூரன் அழவும்—விம்மி அழுகின்ற (குருந்தை) இளங் குழந்தை (முருகனை) (குவலயம் குறிஞ்சிக் கிழவன் என்று ஓதும்) உலகிற் பெரியோர் மலை கிழவோன் எனச் சொல்வார்.

(சு - உ.) (இவனால் நமக்கு ஊறு பின்னர் வரப்போகிறதென்று உணர்ந்து) கடலும், மலையும், சூரனும் அழும்படி அழுத இளங் குழந்தையைப் பெரியோர் மலைகிழவன் என்று கூறுவது ஆச்சரியம்.

(கு - உ.) கடல் = கன்மம்; குன்று = மாயை. சூர் = ஆணவம். குருந்து = பிள்ளை : குழந்தை.

குவலயம் = உலகம்; "உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டே" யாதலின், பெரியராம் நக்கீரர் "பழமுதிர்சோலை மலைகிழவோனே." என ஓதினதை ஈண்டு அருணகிரியார் குறிப்பிற் கூறினர்போலும்.

தேவி புவனங்களை ஈன்றது - 'உலகீன்ற பச்சை உமை', 'சகல புவனமும் உதவிய பதிவ்ரதை' - திருப்புகழ் 816; 511, கடல்-குன்று-சூர் இம் மூன்றும் வேலால் வேதனை உற்றன - 'வேலுக் கனிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே." - [62]: 'வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்' [40].

## 6. தன் ஆனந்தம் கூறினது

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி னான்மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மாநந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.

(பொ-உ.) பெரிய, பசுமை வாய்ந்த (தினைப்) புனத்தில் சிறிய தினைக் கதிர்களைக் காத்திருந்த பேதை—வள்ளியின் கொங்கைமீது ஆசை கொண்ட குமாரக் கடவுளை மெய்யன்புடனே மெதுவாகப் பயின்று பயின்று, உள்ள—சிந்தனை செய்ய, அப்போது (தனிப் பரமானந்தம் அரும்பும்)—தனக்கு நிகரிலாதொரு ப்ரம சந்தோஷம் உண்டாகும்: அந்த ஆனந்த ருசியின் இனிமையை அநுபவித்து உணரும்போது அந்த இனிமைக்கு முன் கரும்பு துவர்க்கும், நல்ல தேன் புளிக்கும், மிகக் கசக்கும்—என்னலாகும்.

(சு-உ.) முருகவேளை நினைக்க நினைக்கக் கரும்பு, தேன் இவைகளின் சுவையை வெறுக்கத்தக்க பேரின்பச் சுவையைப் பெறலாகும்.

(கு-உ.) புனம்=உலகம்; ஏனல்=மண், பொன், பெண்; பேதை= உயிர்; கொங்கை-பக்குவம்; கரும்பு, தேன்-விஷயாநந்தம். "காயத்துள்ளமு தூறவூறநீ கண்டுகொள்"-திருவாசகம்-சென்னிப் பத்து: 'நினைத்தொறும் . . . . . எப்போதும் . . . . . ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையான்'-திருவாசகம் 10-3. 'கனியும் கட்டிபட்ட கரும்பினும் . . . இனியன்'-அப்பர் 5-14-10.

"திருப்புத்தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே"-அப்பர் 4-61-5.

"விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே"-திருமந்திரம் 2976.

உள்ள=நினைக்க, அரும்பும்=அரும்புகின்ற (தோன்றுகின்ற) தனிப் பரமானந்த இனிப்பை உணரும்போது—எனவும் கூட்டிப் பொருள் காணலாம். பேதை கொங்கை விரும்பும் குமரன்—என்றது ஜீவாத்மாவின் பக்குவ நிலையை விரும்பி அருள்புரிவான்—என்பதைக் குறிக்கும். பேதை =வள்ளி—ஜீவாத்மா; கொங்கை—அந்த ஆத்மாவின் பக்குவ நிலை.

மெய்யன்பினன் மெல்ல என்பதை மெய்யன்பினல் மெல்ல, மெய்யன்பின் நான் மெல்ல—என இருவகையாலும் பிரிக்கலாம்.

## 7. பிரார்த்தனை-மயக்க அறிவு நீங்க

**சளத்திற் பிணிபட் டசட்டுக் ரியைக்குட் டவிக்குமென்றன்**
**உளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பா யவுண ருரத்துதிரக்**
**குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்**
**களத்திற் செருக்கிக் கழுதாட வேல் தொட்ட காவலனே.**

(அந்.) அவுணர் உரத்து உதிரக் குளத்தில்......காவலனே! சளத்தில் ......ப்ரமத்தைத் தவிர்ப்பாய்:

(பொ - உ.) (அவுணர்) அசுரர்களுடைய (உரத்து)—மார்பினின்றும் பெருகி வந்த (உதிரக் குளத்தில்)—ரத்தக் குளத்தில் குதித்தும் குளித்தும் (களித்து) மகிழ்ந்தும் (அந்த ரத்தத்தைக்) குடித்தும், (வெற்றிக் களத்தில்) ஜயம் விளங்கின அந்தப் போர்க் களத்தில், (செருக்கி) இன்பம் அநுபவித்து மகிழ்ந்து (கழுது) பேய்கள் (ஆட) கூத்தாடும்படி வேலாயுதத்தைச் செலுத்தின (காவலனே) அரசே! (சளத்தில்) வஞ்சனையிலும் பொய்யிலும் (பிணிபட்டு) கட்டுண்டு (அசட்டுக் க்ரியைக்குள்) சத்து இல்லாத மூடத்தனமான செய்கைகள் செய்து தவிக்கின்ற என்னுடைய (உளத்தில்) மனதில் உள்ள (ப்ரமத்தை) மயக்க அறிவை (தவிர்ப்பாய்) ஒழித்தருளுக.

(சு - உ.) அசுரரைச் சங்கரித்த அரசே! வினை தொழில்களைச் செய்யும் எனது மயக்கை அறிவை நீக்கி அருளுக.

(கு - உ.) சளம்=வஞ்சனை : பொய் : பிணிபட்டு அசட்டுக்கிரியைக்குள் தவிக்கும் எனப்பிரிக்க. கழுது=பேய். தொட்ட=பிரயோகித்த. இந்தப் பாடலின் 3, 4 அடிகள் ஆசிரியர் சந்தக் கவி என்பதைக் காட்டும்.

## 8. தன் அநுபவம்: உபதேசம் பெற்றது

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ராநந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வா!முக மாறுடைத் தேசிகனே.

(அந்.) முகமாறுடைத் தேசிகன்.........ஒளியில்.........தெளிய விளம்பியவா.

(பொ - உ.) ஆறு திருமுகங்களைக் கொண்ட தேசிகமூர்த்தி—(ஒளியில் விளைந்த) இன்ப ஒளியாக—சிவ ஒளியாக—ஏற்பட்ட, மேலான (ஞான பூதரத்து) ஞானம் என்னும் மலையின் உச்சியின் மேலே (அளியில்) கருணை மயமாய் விளங்கி எழும் (ஓர் ஆநந்தத் தேனை) ஒப்பற்ற ஒரு ஆனந்தத் தேன் போல் இனிக்கும் சுவைப் பொருளை, (அநாதியிலே) முதலற்றதான பரவெளியில் (விளைந்த) தோன்றி விளங்கும் (வெறும் பாழை) இது என்று சுட்டிக் காட்டுதற் கில்லாத பாழ் இடத்தை—வெற்றிடத்தைப் (பெற்ற) கொண்ட (வெறுந் தனியை) தன்னந் தனியான ஒரு நிலையைத்—(தெளிய) நான் தெளிவாக அறியும்படி (விளம்பியவா) உபதேசித்த கருணையை என்னென்று வியப்பேன்.

(சு - உ.) ஞானமலை மீது விளையும் தேனை—வெட்டவெளியில் விளங்கும் தனி நிலையை—ஆறுமுகப் பெருமான் எனக்குத் தெளிவாக உபதேசித்தது என்ன ஆச்சரியம்!

(கு - உ.) பேரின்ப ஞானநிலையைக் கூறினர். "உருவிலாத பாழில் வெட்ட, வெளியிலாடு நாத நிர்த்த, உனது ஞான பாத பத்ம முறுவேனே - திருப்புகழ் 442. வெறும் பாழைப் பெற்ற—வெறுந்தனி—இது அநுபவத்தில் உணர்தலாகுமே அல்லாது இத்தன்மைத்து என்று சொல்ல இயலாது. வெறும் பாழ்—நாத தத்துவம்.

"தன்னந் தனிநின்றதுதா னறிய இன்னம் ஒருவர்க்
கிசைவிப்பதுவோ" —கந்தரநுபூதி 49.

"முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும்பாழாய்
அப்பாழுக் கப்பால்நின் ருடுமதைப் போற்ருமல்"
—பட்டினத்தார் நெஞ்சொடு புலம்பல் 3.

"சூழ்ந்ததகன் ருழ்ந்துயர்ந்த முடிவில் பெரும் பாழேயோ
*** பரநன்மலர்ச் சோதியோ *** பெரிய சுடர்
ஞான இன்பமேயோ"—திருவாய்மொழி 10-10-10.

"இரும்பிடை நீரென என்னையுள் வாங்கி *** முப்பாழ் ஒளியை விழுங்கி இருந்த என் நர்தி இதயத் துளானே—திருமந்திரம் 2592.

"வெளிக்கும் வெளியென நிகழ்ச்சி தருவது......பெருத்த வசனமே" (திருவகுப்பு 5.) "வெட்ட வெளிதனிலே விளைந்த வெறும் பாழை" —பத்ரகிரி-எக்காலக் கண்ணி 175.

## 9. உபதேசப் பெருமை

தேனென்று பாகென் றுவமிக் கொணுமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்ருே
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே.

(பொ - உ.) தேனுக்கு நிகராகும் என்றும், (பாகு) சர்க்கரைக்கு ஒப்பாகும் என்றும் உவமை கூற முடியாத இனிப்பைக் கொண்ட சொற்களைப் பேசும் தெய்விகம் விளங்கும் வள்ளி நாயகியின் தலைவனுகிய முருகவேள் (அன்று) முதல் நாளில் எனக்கு உபதேசித்ததான (ஒன்று) ஒரு பொருள் உண்டு; (கூறவற்ருே) அது (கூறவல்லதோ) இன்னது, இத்தன்மைத்து என்று சொல்லுந் தரத்ததன்று. (அதுதான்) வான் = ஆகாயம் அன்று; (கால் அன்று) வாயு அன்று, தீ அன்று, நீர் அன்று, மண் அன்று—ஆகப் பஞ்ச பூதங்களும் அல்ல) தானும் அன்று, நானும் அன்று, (அசரீரி)

அன்று) சரீரம் இல்லாததும் (அருவப்பொருளும்) அன்று; சரீரம் உடையதும் (உருவப் பொருளும்) அன்று.

(சு - உ.) வள்ளி நாயகன் எனக்கு உபதேசித்தது இன்னது என்று சுட்டிக் கூற முடியாதது.

(கு - உ.) "தெய்வ வள்ளி" - கந்தரந்தாதி 64. கூறவற்றோ = கூறவல்ல தகைமையதோ? 'தானன்று நானன்று—' நீயின்றி நானின்றி நாடியினும் வேறு தனின்றி வாழ்கின்ற தொருநாளே'—திருப்புகழ் 93. 'வேலவன் அன்று......உணர்வித்தது தான் எவ்வாறெருவர்க் கிசைவிப்பதுவே'—கந்-அநுபூதி 30. 'தவலரும் ஞானபோதம் பனுவலின் அளவன்று'—கந்த புரா-1-3-13.

## 10. தன் அனுபவம் கூறினது

சொல்லுகைக் கில்லையேன் றெல்லா மிழந்து சும்மா விருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்ட வாஇகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக் கோவ்வைச் செவ்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல்லபமே. [வாய்

(அந்.) இகல் வேலன்***வல்லபம் சொல்லுகைக்கில்லை***விட்டவா.

(பொ - உ.) (இகல் வேலன்) போருக்கு உற்ற அல்லது வலிமை வாய்ந்த வேலாயுதக் கடவுள், சிறந்த (கொல்லியை) கொல்லிப் பண்ணை—நவரோசுராகத்தை-(சேர்க்கின்ற)ஒத்ததான(சொல்லியை) பேச்சைஉடைய வள்ளியை—(கல்வரை) கல்மலை நிலமாம் வள்ளிமலையில் வாசம் செய்தவளும், கோவ்வைப் பழம்போலச் சிவந்த வாயை உடையவளும், கொடி போன்றவளுமான வள்ளியை — (புல்கின்ற) அணைகின்ற (மால்வரை) பெரிய மலைபோன்ற தோள்களை உடைய (அண்ணல்) பெருமான்—முருகனுடைய (வல்லபம்) — சாமர்த்தியமானது — அடைந்த பேறு—(சொல்லுகைக்கு) இந்தன்மைத்து என்று சொல்வதற்கில்லை இல்லை என்று (எல்லாம் இழந்து) யாவற்றையும் இழந்து சும்மா இருக்கின்ற எல்லையுள்—(மனம்—வாக்கு-காயம் இவைகளின்) செயலற்ற மௌன நிலையிற்—(செல்ல)—புகுந்திருக்க (எனை) என்னை (விட்டவா) கொண்டுவிட்ட திறம் ஆச்சரியமாக இருக்கின்றது.

(சு - உ.) வள்ளி கணவன் திறம் என்னைச் சொல்லுதற்கு இயலாத மௌன நிலையிற் சேர்த்தது; இஃது என்ன ஆச்சரியம்!

(கு - உ.) வல்லபம்—"வல்லப மற்றழிந்து"—திருப்புகழ் 668. திருப்புகழில் வள்ளியின் பேச்சு இனிமையைப் பண்-இத்தளத்துக்கு (நாதநாமக்ரியை ராகத்துங்கு) ஒப்பிட்டார். [திருப்புகழ் 289, பக்கம் 220 கீழ்க்குறிப்பு.] 'உரையற்ற தொன்றை உரைத்தான்'-திருமந்திரம் 2648.

## 11. மயிலின் ஆற்றல்

குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே.

(பொ-உ.) (குசை) கடிவாளத்தை (நெகிழா) நெகிழாவகையில்— தளரவிடாமல் பிடித்து வெற்றிவேல் முருகன் அசுரர்களின் குடல் கலங்கும் படி, (கசையிடு) குதிரைச் சம்மட்டி—சவுக்கடி கொடுத்து ஓட்டும் (வாசி) குதிரையின் (விசை கொண்ட வாகனம்) வேகத்தைக்கொண்ட (வாகனம்) வாகனமாகிய மயிலின் (பீலியின் கொத்து) தோகைகளின் கொத்து (திரள்) (அசைபடு) அசைதலால் உண்டாகும் (கால் பட்டு) காற்று மோது வதால் (அசைந்தது மேரு) மேருமலையே அசைந்தது; (அந்த மயில்) அடி இட—அடி வைத்து நடக்க (எண் திசை வரை) எட்டுத் திசைகளில் உள்ள மலைகளும் தூளாயின; அந்தத் தூள்கள் (படிவதால்) (வாரி) கடலே (திடர்பட்டது) நீர்வற்றி மேடாயிற்று.

(சு-உ.) முருகன் வாகனமாம் மயிலின் தோகை அசைவால் உண் டாகும் காற்றுபட்டு மேருமலையே அசைந்தது; மயில் அடியிட்டு நடக்க மலைகள் தூளாயின; கடல் அத் தூள் நிறைந்து மேடிட்டது.

(கு-உ.) குசை=கடிவாளம். கசை=சம்மட்டி. வாசிவிசை=வாசி யின் விசை [வேகம்]; வாசி=குதிரை; "மகள் வாசி" - கந்தரந்தாதி 51. மயில் - திரோதான சக்தி.

"தடக் கடல் உடைய, மேருத் தடவரை இடிய, மற்றைப்
படித்தலம் வெடிப்பச், செந்தீப் பதைபதைத் தொடுங்கச், சூறை
துடித்திட, அண்டகூடந் துளக்குறக், கலாபம் வீசி
இடித்தொகை புரள ஆர்த்திட் டேகிற்றுத் தோகை மஞ்ஞை"
—கந்த புராணம் 4-13-500.

"எண்திக்குத் தடங்குவடு ஒக்கக் குலுங்கவரு சித்ரப்பதம்
பெயரவே......நடிக்கு மயிலாம்";
"வெகுகோடி மலைகளும் அடியினில் தகர்ந்திரு விசும்பிற்
பறக்க......வேலைசுவற......சிறகை வீசிப் பறக்கு மயில்"
—மயில் விருத்தம் 2, 4.

இப் பாடலிற் கூறிய மயிலின் ஆற்றலுக்கு ஒப்பாக "நடக்கிற் படி (பூமி) நடுங்கும்; நோக்கில் திசைவே(கு)ம்; இடிக்கில் உலகனைத்தும் ஏங்கும்"—என இடபத்தின் ஆற்றலைக் காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதியில் (100) கூறுவதைக் காண்க.

## 12. சேவலின் ஆற்றல்

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.

(பொ-உ.) படைகளுட் சிறந்ததான வேலை ஏந்திய முருகனிடம் வந்து சேர்ந்த (வாகைப் பதாகை) வெற்றிக்கொடி என்னப்பட்ட— (தடைபட்ட) போர் செய்யும் எண்ணத்துடன் வந்து அந்த எண்ணம் நிறைவேறாது, முருகன் அருட் கண்ணோக்கால் ஞான உணர்வு கொண்ட— சேவல் (சிறகடிக் கொள்ள) தனது சிறகை அடிக்க (அந்த வேகத்தால்) சலதி கிழிந்து—கடல் கிழிபட்டு (உடைபட்டது அண்டகடாகம்) அண்ட கோளத்தின்மேலோடு உடைபட்டது; (உதிர்ந்தது உடுபடலம்) நக்ஷத்திர கூட்டங்கள் உதிர்ந்தன; (இடைபட்ட) மத்தியிலிருந்த (குன்றங்களும்)— மலைகளும் மகாமேரு மலையும் (இடிபட்டன) பொடியாயின.

(சு-உ.) முருகவேளின் சேவல் சிறகடிக்கக் கடல் கிழிந்தது, அண்ட கோளஓடு உடைந்தது, நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன, மலைகள் பொடியாயின.

(கு-உ.) வேல் பட்டு சூரன் 'சேவல் மயில்' எனச் இரு பிளவுகளாக ஆனதும், அவை பின்னும் போருக்கு எழுந்து வந்தன; அப்போது முருகனது அருட் பார்வை பெற்று அவை ஞான உணர்வு பெற்றன.

"சேவலு மயிலுமாகி சினங்கொடு.........அமர்த் தொழில் கருதி வந்தான்"; எந்தை அருள் கெழு நாட்டஞ் சேர்த்த ஆங்கவன் இகலை நீக்கித் தெருள்கெழு மனத்தனுகி—நின்றனன்; அக்கணம் எம்பிரான் தன் அருளினுல் உணர்வு சான்ற குக்குட உருவை நோக்கிக் கடிதில்நீ கொடியே ஆகி மிக்குயர் நமது தேரின் மேவினை ஆர்த்தி என்ன"— "அண்டம் இடிபட உருமேறுட்க வன்னியும் வெருவ ஆர்த்து மற்றவண் உற்ற தன்றே"-கந்த புராணம் 4-13-492, 495, 497, 498. 'வாளகிரி யைத் தனது தாளில் இடியப்பொருது வானகபுனை குக்குட பதாகை'— வேளைக்காரன் வகுப்பு.

## 13. முருகன் பெருமை

ஒருவரைப் பங்கி லுடையாள் குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.

(பொ-உ.) (ஒருவரை) ஒப்பற்ற சிவபெருமானைத் தனது பாகத்தே கொண்ட தேவி—பார்வதியின் குமாரனும் முருகனது (உடைமணி சேர் திருவரைக் கிங்கிணி) உடைமணி என்னும் ஆபரணம் சேர்ந்துள்ள திருவரையிற் கட்டியுள்ள கிங்கிணியின் ஓசை (பட) உண்டாக, அதைக் கேட்டுத் (திடுக்கிட்டு அரக்கர் வெருவர) அரக்கர் திடுக்கிட்டு அஞ்ச, திக்கு—அஷ்ட திசையில் உள்ளவர்களும் செவிடராக, (எட்டு வெற்பும்) எட்டுத் திசையில் உள்ள எட்டு மலைகளும், (கனகப் பருவரைக் குன்றும்) பொன்மலையாகிய பெரிய மலையாம் மேருகிரியும் அதிர்ச்சி அடைந்தன; தேவர்கள் பயம் நீங்கி (மகிழ்ந்தார்கள்).

(சு-உ.) முருகவேளின் கிங்கிணி ஓசை கேட்டு அரக்கர்கள் அஞ்சினர்; மலைகள் அதிர்ந்தன; தேவர்கள் பயம் நீங்கினர்.

(கு-உ.) உடைமணி=குழந்தைகளின் அரையணி. "உடைமணி கட்டிச் சிறுதேர் உருட்டி"—திருக்கோவை 385. "உடைமணியொடணிசகல மணிகலென"—சீர்பாத வகுப்பு. முருகன் அரையிற் கட்டிய கிங்கிணி ஒலியின் வன்மையை 93-ஆம் பாடலிலும் பார்க்க.

## 14. பிரார்த்தனை ஈடேற

குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடு மைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை யீடேற்று வாயிரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங் குலுங்க விண் ணாருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே.

(அந்.) இருநான்கு வெற்பும்......சண்முகனே! குப்பாச வாழ்க்கையுட் *** ஈடேற்றுவாய்.

(பொ-உ.) (இரு நான்கு வெற்பும்) எட்டுத் திசையில் உள்ள எட்டு மலைகளும்—அப் பாதியாய் விழ—அந்தப் பாதி—பாதியாய் உடைபட்டு விழ—மேரு மலையும்—(குலுங்க) அதிர்ச்சி கொண்டு நடுங்க, தேவர்களும் பிழைத்து ஈடேறச் (சப்பாணி கொட்டிய) (கை) கொட்டின கைகள் (ஆறிரண்டு) பன்னிரண்டு உடைய சண்முகப் பெருமானே! (கு-பாச-வாழ்க்கையுள்)—இழிவானதும்-பாசங்களுக்கு-ஆசைகளுக்கு இடமானதுமான உலக வாழ்க்கையிற் கூத்தாடுகின்ற (ஐவரில்) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளால் (கொட்பு அடைந்த) மனச்சுழற்சி-கலக்கம் அடைகின்ற இந்தப் (பாச நெஞ்சனை) ஆசைகளுக்கு இடம் தருகின்ற உள்ளத்தை உடையவனாகிய அடியேனை ஈடேற்றி அருளுவாயாக.

(சு - உ.) சப்பாணி கொட்டி விளையாடும் சண்முகனே! பாசங்களிற் பட்டுக் கலங்கும் அடியேனை ஈடேற்றி அருளுக.

(கு - உ.) குப்பாச வாழ்க்கை; கு=சிறுமையைக் காட்டும் - 'குக் குடில்' என்புழிப்போல. 'கணேசர் கு-ஆகுவாகனர்'—திருப்புகழ் 441. கு=சிறுமை, பாபம், பூமி. விண்ணுர்=ஆன்மாக்கள். சப்பாணி= கைகளை ஒன்ருேடொன்று தட்டுதல். இப் பாடல் 'பிள்ளைத் தமிழில்' சப்பாணிப் பருவப் பாடலுக்கு இணையாகும்.

## 15. தன் அனுபவம் கூறினது.

தாவடி யோட்டு மயிலிலுந் தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன் ருேபடி மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே.

(அந்.) மாவலிபால் மூவடி படி கேட்டன்று......சிற்றடி—தாவடி யோட்டு......பட்ட தன்ருே.

(பொ - உ.) மாவலிச் சக்ரவர்த்தியிடம் (மூவடி) மூன்றடி (படி) மண் கொடு என்று கேட்டு, (அன்று) அந்நாள் (மூது அண்ட கூட முகடு) பழமையாய் நிற்கும் அண்ட கோளத்தின் மேற் கூறை—முட்டும்படி யாகத் தனது சேவடியை—செவ்விய அடியை (விசுவரூபம் எடுத்து) நீட்டின பெருமான்—திருமாலின் மருகனுகிய முருகனது சிறிய திருவடி யானது — (தாவடியோட்டும்) பிரயாணத்துக்கு (அல்லது போருக்கு) ஒருப்பட்டு, ஓட்டப்படுகின்ற மயில்மீதும், தேவர்களின் தலைமீதும், என்னுடைய பாடல்களின் அடிகளைக்கொண்ட ஏட்டுப் புத்தகத்தினுள்ளும் பட்டுள்ளது—பதிந்துள்ளது.

(சு - உ.) மண் மூவடி அளந்த திருமாலின் மருகன் முருகன் திருவடி மயில்மீதும், தேவர்கள் தலைமீதும், என் பாடற் புத்தகத்தினுள்ளும் விளங்கின.

(கு - உ.) தாவடி=பிரயாணம்; "கடிதுல கெங்கணுந் தா[வ]டி யிட்டு வந்த மயில்"-திருப்புகழ் 567. தாவடி=போர், பயணம், தாண்டுகால்.

"மாவலி வேள்வியில் மாணுருவாய்ச் சென்று
மூவடி தா என்று இரந்த இம்மண்ணினை
ஓரடி யிட்டு இரண்டா மடி தன்னிலே
தாவடி யிட்டானுல் இன்று முற்றும்
தரணி அளந்தானுல் இன்று முற்றும்"
- பெரியாழ்வார் 2-10-7.

'விழிவேல்கள் தாவடிபோய் மீள' - மதுரைச் சொக்கநாதருலா 254. "வேற்கண்......தாவடி வந்திப் படியென தாவி தளர்வித்ததே' — (புகலூரந்தாதி). என் பாவடி ஏடு = அடிமை.........பாடும்.........கவிமாலை சூடுவதும்' - திருவகுப்பு 1. இந்தப் பாடலில் முற்பாதிக்கும் பிற்பாதிக்கும் அரிய பொருந்தம் உளது. எவ்வாறு திருமாலின் திருவடி கீழே மண் மீதும், மேலே விண்மீதும், ஆட்கொள்ளப்பட்ட மாவலியின் தலைமீதும் பட்டதோ அவ்வாறு முருகன் சிற்றடி, கீழே மண்ணில் மயில்மீதும், மேலே விண்ணில் தேவர் முடிமீதும், ஆட்கொள்ளப்பட்ட அருணகிரியாரின் பாவடி ஏட்டிலும் பட்டது. இதன் கருத்து—மாவலியும் அருணகிரியாரும் மேலே உள்ள தேவர் சாக்ஷியாய்த் தத்தம் ஆணவம் கீழடக்கப்பட்டு இறைவனால் திருவடி தீக்ஷை செய்யப்பட்டனர் என்பது—புலப்படும். மாவலி திருவடி தீக்ஷையால் ஏன்று கொள்ளப்பட்டார்; அருணகிரியார் தமது பாடல்களில் இறைவன் திருவடி முத்திரை வரப்பெற்று ஏன்று கொள்ளப்பட்டார்.—[அருணகிரிநாதர் வரலாறு—பக்கம் 160.]

மாவலிபால் மண் இரந்தது-[திருப்புகழ் 668, பக்கம் 37; திருப்புகழ் 268, பக்கம் 166; 458 பக்கம் 24 கீழ்க்குறிப்பு.]

## 16. உலகுக்கு உபதேசம்

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோ ளிருந்த படியிருங் கோளெழு பாருமுய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் தொளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே.

(பொ-உ.) (தடுங்கோள் மனத்தை) மனத்தின் வேகச் செயலைத் தடுங்கோள்; மனத்தை ஒடுக்குங்கள்; (விடுங்கோள் வெகுளியை)—கோபத்தை விட்டு விடுங்கோள்; தானத்தை (என்றும்) எப்போதும் இடுங்கோள்; (இருந்தபடி இருங்கோள்) நிலை மாறாது இருங்கோள்; (இங்ஙனம் ஒழுகுவீர்களானால்) ஏழு உலகங்களும் பிழைக்க, கொடிய கோபத்தைக் கொண்டுள்ளவனான சூரனையும் (அவனுக்கு) அரணாயிருந்த ஏழு கிரிகளையும் (திறக்கத் தொளைக்க) பிளவுபடத், தொளைக்க, (வை) கூரிய (வேல்) வேலை (விடுங்கோன்) செலுத்தின நாயகன் முருகனது அருள் வந்து (தானே உமக்கு வெளிப்படுமே) தானாகவே உங்களுக்கு வெளிப்பட்டு உதவும்.

(சு-உ.) மனத்தை ஒடுக்கிக், கோபத்தை விட்டொழிந்து, தானம் செய்து, அடக்க நிலையில் இருந்தால் முருகன் அருள் தானே வந்துகூடும்.

(கு - உ.) எழுபார் - பூ, புவ, சுவ, சன, தவ, மகா, சத்திய லோகங்கள். மனத்தைத் தடுத்தல்: 'மனோலயம் என்று சேர்வேன்'— திருப்புகழ் 506.

(i) மனத்தைத் தடுத்தாலன்றி ஞானம் கிட்டாது: 'உள்ளம் அடங்குறினல்லால் தெள்ளரிய சிவஞானம் சிவணுது'- தணிகைப் புராணம்- இராமனருள்பெறு 42.

(ii) விடுங்கோள் வெகுளியை: 'என்றும் விடல்வேண்டும் தங்கண் வெகுளி'—நான்மணிக்-11. 'போக்குவ தேதெளில் வெகுளி போக்குக'— மேருமந்தர புராணம் ஈற்றுச் செய்யுள்.

'உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்—திருக்குறள் 309.

(iii) தானமென்றும் இடுங்கோள்: 'கரவா திடுவாய்'—கந்தர் அநுபூதி 7. 'இரவோருந் கேதுமித்தனை தானம் இடாதவர்......... நரகுழல்வாரே'—திருப்புகழ் 1149.

(iv) இருந்தபடி இருங்கோள்: 'இருந்த படியிருக்க என்று போரூரா திருந்தவரம் பாலிப்பாய் செப்பு'—போரூர்ச் சந்நிதிமுறை—மாலை 56. தாமசம், ராஜசம் என்னும் குணங்களாற் பீடிக்கப்படாது சுத்த நிலையாய் —இயற்கையாயுள்ள சாத்துவிக குணத்துடனே இருங்கோள்—என்பது பொருளாம். எனக்குச் சோம்பல் வந்திருக்கிறது, கோபம் வந்திருக்கிறது. 'நான் தெய்வமே என்று சும்மா இருக்கின்றேன்' என்னும் சொல் வழக்கே இயற்கையாம் சாத்துவிக குணம் மாறினல் வருவன தாமச ராஜச குணங்கள் என்பதைக் காட்டுகின்றது. இனி, 'நிலையில் திரியாது அடங்கி யான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது' என்னும் திருக்குறளின் கருத்துக்கு இணங்க உயர்ந்த பதவி உங்களுக்குக் கிடைத்தாலும் முன் இருந்த அடக்கமுடனே (கர்வம் கொள்ளாது), நிலை திரியாது இருந்தபடி இருங்கோள்—எனவும் பொருள் காணலாம்.

—[அருணகிரியார் நூலாராய்ச்சி பக்கம் 160-1.]

## 17. நெஞ்சொடு கிளத்தல்

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணுக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே.

(பொ - உ.) வேதங்களாலும் ஆகமங்களாலும் போற்றப்படும் (சித்ர) அழகிய வேலாயுதக் கடவுளின் வெட்சி மலர் (பூத்த) நிறைந்து விளங்குவதும், தண்டையணி பூண்டதுமான (பாதாரவிந்தம்) பாத-அரவிந்தம்

திருவடித் தாமரையை (அரணாக—காவலாகத்) துணையாகக் கொண்டு. (அல்லும் பகலும்) இரவு பகல் என்பன இல்லாததும், (சூதானதற்ற). வஞ்சகம் ஒன்றும் இல்லாத சுத்த ஞான வெளியில் மறைந்திருந்து (சுத்த) மவுன நிலையில் நிலைபெற்றிருக்க (மனமே இனிபோதாய்) மனமே! நீ இனி முயன்று செல்வாயாக; (உலகத்தவர் யார்க்கும்) இந்த நிலை தெரியாது;

(சு - உ.) மனமே! முருகன் திருவடியைத் துணையாகக்கொண்டு மௌன நிலையில் இருப்பாயாக; இந் நிலை உலகோர்க்குக் கிட்டுதல் அரிது.

(கு - உ.) வெட்சி மலர் முருக பிரானுக் குகந்தது -"வெட்சி மலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்" - கல்லாடம். 'வெட்சித்தண்டைக் காலென் கிலை' - 30. 'ஒரு பூதரும் அறியாத் தனி வீட்டில் உரை உணர்வு அற்று இரு"—(45)-எனப் பின்னர் வரும் இடத்தும் காண்க. 'அல்லும் பகலும் இல்லா-வெளி'—"இரவு பகலற்ற இடம் எனதற இருங்கைபுரி யோகப் புராதனன்"—வேடிச்சி-வகுப்பு. 'இரவு பகலில்லா இன்ப வெளியூடே விரவி விரவி நின் றுந்தீபற'—திருவுந்தியார் 20. 'ஒரு பூதரும் அங்கறியாவகை'—அஷ்டப்-திருவரங்க-மா. 62.

## 18. உலகுக்கு உபதேசம்

[1]வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி [2]வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ணுங்கட்கிங்ஙன்
[3]வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போற்
[4]கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே.

(பொ - உ.) (வையில்) கூர்மையைத் தன்னிடம் கொண்டதும் (கதிர்) ஒளியை உடைய (வடி) உரு உடையதுமான வேலை ஏந்தும் முருகனை வாழ்த்தி, (வறிஞர்க்கு) ஏழைகளுக்கு (என்றும்) எந்நாளும், ஒரு நொய்யின் பிளவு அளவேனும் கொடுத்து உதவுங்கள்; (நுங்கட்கு) உங்களுக்கு (இங்ஙன்) இங்கு—இப் பிறப்பில்—வெய்யிலுக்கு ஒதுங்குவதற்குக்கூட நிழல் தந்து உதவாத உடம்பின் (வெறு நிழல்போல்) உதவியற்ற நிழல் போல—(உங்கள் கையில் உள்ள பொருள்கூட (நும் கடைவழிக்கு உதவாது காண் (உங்கள் கடைநாள் வழிக்கு—இறந்து பின் செல்லும் அவ்வழிக்கு உதவாது)—இதைத் தெரிந்துகொள்ளுங்கள்.

(சு - உ.) இறந்த பின் உங்கள் செல்வப் பொருள் ஒன்றும் உங்களுக்கு உதவாது; ஆதலால் வேலனை வாழ்த்தி இயன்ற அளவு ஏழைகளுக் குத் தானம் செய்யுங்கள்,

(கு-உ.) 1, வை = கூர்மை. 2"கதிகேள் கரவா திடுவாய்" - கந்த ரநுபூதி 7. 3"வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்" என்பது இவ்வுடம்பு எதற்கும் உதவா தென்பதை விளக்கிற்று; "உடம்பு தீக்கிரை யாவதல்லா லேதுங்கா மிதைச் செப்புமினே" 4"காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே"—பட்டினத்தார் பொது-57, 10. கதிர் வடிவேல்—ஒளியை (வடிக்கின்ற) விசுகின்ற வேல் (எனலுமாம்) வடி—வடிவு—உருவம்—'கரியது வடிகொடு'—சம்பந்தர் 1-123-5. "குன்றிப் பிள அளவு தினையளவு பங்கிட்டு உண்கைக்கு இளையும் முதுவசை தவிர இன்றைக் கன்றைக் கென நாடாது இடுக கடிது"—திருப்புகழ் 17. வேலனை வாழ்த்தியே இடுதல் வேண்டும்—பாடல் 57ம் பார்க்க. கடைவழி—இறந்த பின் உயிர் செல்லும் மரண யாத்திரை.

## 19. தன் ஆனந்தங் கூறினது

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்தவைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே.

(பொ-உ) சொன்ன—(சொர்ண) பொன் மயமான கிரௌஞ்ச மலையிடை உருவிச் சென்று தொளை செய்த (வை) கூரிய வேலை ஏந்தும் (மன்ன) அரசே! கடப்ப மலர் மாலையை அணிந்த மார்பனே! (மௌனத்தை உற்று) மௌன நிலையை அடைந்து (நின்னை உணர்ந்து) உனது திருவருளில் ஊறி ஊறி உன்னை அறிந்து அறிந்து, எல்லாம் ஒருங்கிய) ஐம்பொறிச் சேட்டையாதியை எல்லாம் ஒடுங்கின நிர்க்குணம் பூண்டு—சத்துவம், ராஜதம், தாமதம் என்ற முக்குணங்களின் தாக்குதல் இலாத தன்மையை அடைந்து (என்னை மறந்திருந்தேன்) 'நான் நான்' என்னும் அகங்கார நிலையை (மறந்திருந்தேன்)-ஒழித்திருந்தேன்; (இறந்துவிட்டது இவ்வுடம்பே)—இந்த உடம்பு ஒன்று இருக்கின்றது என்ற எண்ணமும் அற்றது.

(சு-உ.) முருகா! உன்னை அறிந்து, மௌன நிலையை அடைந்து, முக்குணங்களைக் கடந்து, 'யான்' என்பது அற, இவ்வுடற் பாசமும் அற்றது.

(கு-உ.) (1) சொன்ன = சொர்ண: பொன்னிறமான கிரௌஞ்சத்தைக் "குருகுபெயர் பெற்ற கனவட சிகரி" என்றார் திருவகுப்பு 12.; கனம் - பொன்; - 'கனகக் கிரியைப் பொரும்வேலா' - திருப்புகழ் 250. "பொன்னஞ் சிலம்பு புலம்ப" (89). (2) மௌனத்தை உற்று-அருணகிரி

யார்க்கு இறைவன் மௌனோபதேசம் செய்தார். 'அருணைநகர் மிசை கருணையொடருளிய மவுனவசனமும் இருபெரு சரணமும் மறவேனே'—திருப்புகழ் 515. (3) நின்னை உணர்ந்து உணர்ந்து-'...உணர்ந்துணர்ந்து உணர்வுறக் கந்தனை அறிந்தறிந்து அறிவினில் சென்று செருகுந் தடம் தெளிதர'—திருப்புகழ் 47. (4) எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம்: 'எல்லா மிழந்து சும்மா இருக்கும் எல்லை—(அலங்-10.) "முக்குணம் மாள"—திருப்புகழ் 47. (5) என்னை மறந் திருந்தேன்-'யானாகிய என்னை விழுங்கி வெறுந் தானாய் நிலை நின்றது தற்பரமே'—அநுபூதி 28. (6) இறந்தது இவ்வுடம்பு: "உடம்பொடு செத்திட் டிருப்பர் சிவயோகியார்களே"—திருமந்திரம் 121. 'செத்தபட மானேன்டி தீயிரும்பின் நீரானேன்'—பட்டினத்தடிகள்—அருட்புலம்பல் 115.

## 20. உலகுக்கு உபதேசம்

கோழிக் கொடிய னடிபணி யாமற் குவலயத்தே
வாழக் கருது மதியிலி காளுங்கள் வல்வினைநோ
யூழிற் பெருவலி யுண்ணவொட் டாதுங்க ளத்தமெல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு மோநும் மடிப்பிறகே.

(பொ-உ.) கோழிக் கொடியைக் கொண்ட குமரவேளின் திருவடியை வணங்காமல் இவ்வுலகிலே வாழ்வதற்கு எண்ணுகின்ற (மதியிலிகாள்) அறிவிலிகளே! உங்களுக்கு உள்ள வலிய வினை நோயானது—(ஊழிற் பெருவலி) பழவினையாம் பலத்தை வலிமை உடையது; அது உங்கள் செல்வத்தை அனுபவிக்க விடாது; உங்களுடைய (அத்தம் எல்லாம்) செல்வப் பொருளை எல்லாம் நீங்கள் அனுபவியாமலும் ஏழைகளுக்கு ஈயாமலும் ஆழத்தில் புதைத்து வைத்தால் (நீங்கள் இறந்த பிறகு) (நும் அடிப் பிறகே வருமோ) அந்தச் செல்வப்பொருள் உங்களுடன் கூடத் தொடர்ந்து வருமோ. (வராது என்றபடி)

(சு-உ.) முருகனை வணங்காது வாழ எண்ணுகின்றீர்களே! உங்கள் ஊழ்வினை உங்கள் செல்வத்தை அனுபவிக்க விடாது; ஈயாமற் சேர்த்துப் புதைத்த பணம் நீங்கள் இறந்தால் உங்களுடன் வராது.

(கு-உ.) அத்தம்=பொருள்.

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் — கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்"—நல்வழி 23.

## 21. மரண பயம் - யம பயம் இன்மை

[1]மரணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞானு கரசுர பாஸ்கரனே.

(அந்.) கிண்கிணி முகுள.........பாஸ்கரனே! மரணப்ப்ரமாதம்.........வேலுமுண்டே.

(பொ-உ.) (கிண்கிணி) பாத கிண்கிணி என்னும் அணி (முகுள) குவிந்து விளங்கும் (சரண) திருவடிகளை உடையவனே! (ப்ரதாப) கீர்த்திமானே! (சசிதேவி) இந்த்ராணியின் (மங்கல்ய தந்து) மாங்கல்ய நூலை (ரக்ஷாபரண) பாதுகாத்துத் தாங்கினவனே! (க்ருபாகர) கிருபைக்கு உறைவிடமே! (ஞானுகர) ஞானத்துக்கு உறைவிடமே! (சுர) தேவனே! (பாஸ்கரனே) (ஞான) சூரியனே! (மரணப்ப்ரமாதம்) இறப்பு என்கின்ற அபாயம் (வருத்தம்) நமக்கு இல்லையாம்—நமக்குக் கிடையாது; (ஏனெனில்) (என்றும்) எப்போதும் (வாய்த்த துணை) உளதாகிய துணையாக (கிரணக் கலாபியும்) ஒளி வீசும் தோகையை உடைய மயிலும் வேலும் (உண்டு) உள்ளன.

(சு-உ.) முருகா! உனது வேலும் மயிலும் துணையிருப்பதால் நமக்கு மரண பயம் என்பது இல்லை.

(கு-உ.) 1"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்" - அப்பர் 6-98-1. "பயந்த தனி வழிக்குத் துணை வடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே"-70. "வேலு மயிலு நினைந்தவர் தந்துயர்தீர அருள்தரு கந்த" - திருப்புகழ் 920. தந்து = நாண்: நூல். மங்கல்ய தந்து ஆபரண ரக்ஷா கிருபாகர—திருமங்கல நாணுகிய ஆபரணத்தைக் காத்தருளிய கருணுகரனே—எனவும் கூட்டிப் பொருள் காண்பர்.

பரணம் = தாங்குதல்: சசிதேவி மங்கல்ய தந்து—காக்கப்பட்டது— "சசிதன் விளங்கிய மங்கல நூல் வாங்குகிலாள் வாழ்ந்தனள்"— காங்கெயன்......வேல் வாங்கவே"—(வேல் வாங்கு வகுப்பு). முருகன் ஞான சூரியன்—"(சேவலே! நான்) துறப்பரிய அகத்திருளைத் தொலைப்பதற்கு நீயொருக்காற்...குறத்தியணையுந் தணிகை வருஞான சூரியனைக் கூவுவாயே"—சேவற் பத்து.

## 22. முருகன் கருணை

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான் தலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே.

(அந்.) வெய்ய வாரணம் ...... இலஞ்சியம் மொய்தாரணி ...... வாழ வைப்போன்.

(பொ-உ.) வெய்ய வாரணம் போல்-கொடிய யானை போலக் கைகள் இருபது கொண்ட வலிய ராவணனுடைய (தலை பத்தும்) பத்துத் தலைகளும் (கத்தரிக்க) துண்டாய் விழ (எய்தான்) அம்பைச் செலுத்தின ஸ்ரீராமரது மருகன், உமையவள் (பயந்த) பெற்ற (இலஞ்சியம்)-சரவணபவன் (மொய்தார் அணிகுழல்—(தார்) — மாலை மொய்க்கும் அழகிய கூந்தலை உடைய வள்ளியை விரும்பி மணந்தவன்; (இவன்) இயல்-இசை-நாடகம் என்னும் முத்தமிழ் கொண்டு தன்னை வைதாரையும் (அங்கு) அப்பொழுதே வாழ வைப்பவன்.

(சு-உ.) திருமால் மருகன்—உமாசுதன்—சரவணன்-வள்ளி காதலன் —ஆன முருகன் தன்னை முத்தமிழ்கொண்டு வைதாரையும் உடனே வாழ வைப்பான் (தமிழ்க் கடவுளாம் முருகனுக்கு அவ்வளவு ஆசை தமிழில்.)

(கு-உ.) முத்தமிழால் வைதாரையு மங்கு வாழ வைப்போன் என்றது முருகவேள் முத்தமிழ்ப் பிரியர் என்பதை விளக்கிற்று. இலஞ்சி=குளம் [சரவண தடாகம்] மடு-கந்தரந்தாதி 13; இலஞ்சியம் [இலஞ்சிஜம்]-குளத்தி லுற்ப வித்தவன். அதனுற் "குளவன்" என்றும் முருகருக்குத் திருநாமம் உண்டு. கல்லாடம் 52. திருப்புகழ் 755. "மலர்வாவியி லுதித்த", "சரவண மடுவினில் வந்தருள் கந்தன்". - திருவகுப்பு 4, 18. முருகவேள் தன்னை வைதாரையும் அங்கு வாழ வைப்பவர் என்பதற்குச் சாக்ஷி 'மொய்தாரணி குழல்வள்ளியே'; வள்ளி முருகனை முத்தமிழால் வைதாள்—"நல்லறிவு சற்றுமிலீர்! எத்துக்கு மூத்தீர்' பித்துக் கொண்டார் போற் பிதற்றுவீர்' (கந்த புரா-வள்ளி 108) என்று இயற்றமிழாலும், "கொல்லிப்பண் போன்ற தனது குரலாம் இசைத் தமிழாலும், வைத பொழுது கை, கால், தலை இவைகளைக் கூத்தாட்டத்தில் ஆடுவதுபோல ஆட்டிப் பேசி யிருப்பாளாதலின் நாடகத் தமிழாலும் —முருகனை முத்தமிழால் வைதாள் என்றார். வள்ளியை 'முத்தமிழ்மான்' என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 648). மொய்தார் அணி குழல்— குழலில் மொய்தார்—வள்ளி வெற்றி பெற்றதற்கு-(adding a feather to one's cap) என்பதுபோல, ஓர் அடையாளப் பூச்சூட்டாம்.

## 23. பிரார்த்தனை - இறப்பதற்கு முன் காத்தருள்

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே
[1]வைவைத்த வேற்படை வானவ னேமற வேனுனை நான்
[2]ஐவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே.

(பொ-உ.) தெய்வீகம் வாய்ந்த திருமலையாகிய திருச்செங்கோட்டில் வாழும் (செழுஞ்சுடரே) திவ்ய ஒளியே! (வை) கூர்மை கொண்ட வேற்படையை ஏந்திய தெய்வமே! உன்னை நான் மறவேன். (ஐவர்க்கு) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் வாசம் பண்ணும்படி இடம் தந்து, கால் இரண்டு ஒட்டி—இரண்டு கால்களை அமைத்துப் (பின்னும் அங்கு இரண்டு கைகளையும் அமைத்து வைத்துள்ள (இந்த) வீடு—உடல்—(குலையும் முன்னே) அழிவதற்கு முன்பே (நீ) வந்து காத்தருளுவாயாக.

(சு-உ.) முருகா! உன்னை மறவாதிருக்கின்றேன்! இந்த உடல் அழிபடுமுன் வந்து காத்தருள்.

(கு-உ.) [1]வை = கூர்மை. [2]ஐவர் = ஐம்பொறிகள். கந்தரலங்காரத்திற் சொல்லப்பட்ட தலங்கள் ஐந்து — அருணை, செங்கோடு, செந்தில், திருத்தணி, பழநி: இந்த ஐந்தனுள் திருச்செங்கோடே அதிகமாகச் (ஏழிடங்களிற்) சொல்லப்பட்டுளது. திருச்செங்கோட்டில் அருணகிரியார்க்கு அதிக ப்ரீதி. பாடல் 90-ல் 'செங்கோடனைச் சென்று கண்டு தொழ நாலாயிரங் கண் படைத்திலனே அந்த நான்முகனே' என்றார், திருச்செங்கோடு—தெய்வ மலை என்பதை "தெய்வ ஆரணத் தந்தி நகர்" "செழுமறை தேர் தென்றலையம் புசகபூதர" (செழுமை தங்கிய—நான்கு வேதங்களும் துதிக்கின்ற—தெற்கின் கண்ணதாகிய—அழகிய பாம்பு போன்ற......மலை) என வருமிடத்தும் காண்க. (கந்தரந்தாதி 23, 82.)

## 24. தன் ஆனந்தங் கூறினது

[1]கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
[2]குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் [3]குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே.

(அந்.) கோடு குழல்......முயன்றவனே! கின்னம்......வெளியாக்கி விட்டது.

(பொ-உ.) (கோடு—ஊது கொம்பு, குழல், (சின்னம்) காளம் (அல்லது சங்கு) இவைகள் (குறிக்க) ஊதி ஒலிக்கக் (குறிஞ்சிக் கிழவர்) மலை நிலத்துக்கு உரியவர்களான வேடர்களின் (சிறுமி) மகளாம் வள்ளியை (முன்னம்) முன்பு (குறிச்சியில்) மலை நில ஊராகிய வள்ளிமலை (சென்று) போய் (கல்யாணம் முயன்றவனே) திருமணத்துக்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தவனே! கின்னம் குறிந்து-என்னுடைய மனத் துயரைக் கவனித்து அடியேனுடைய செவியில் நீ அன்று நான் கேட்டு (உய்யும்படியாக)ச் (சொன்ன) உபதேசித்த (குன்னம்) ரகசிய உபதேசத்தைக் (குறிச்சி) மலை நில ஊராகிய இந்த வள்ளி மலையே (வெளியாக்கிவிட்டது) வெளிப்படுத்தி விட்டது; பகிரங்கப்படுத்தி விட்டது.

(சு-உ.) நீயே வள்ளிமலைக்கு ஓடிவந்து வள்ளியை மணந்துகொள்ள முயன்றாய் ஆதலின் 'நான் அடியார்க்கு ஏவல் செய்பவன்' என்று அன்று நீ எனக்கு உபதேசித்த ரகசியத்தை இந்த வள்ளிமலை பகிரங்கப் படுத்திவிட்டது.

(கு-உ.) 1கின்னம்=துயரம்; "கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே" - அநுபூதி 49. (சின்னம்) குறிக்க - ஊதி ஒலிக்க - "வலம்புரி குறித்து" - வில்லி பாரதம் 17ஆம் போர் 12. சின்னம் - காளம் முதலிய- 'சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்.' — திருவாசகம் 7-7. 2குன்னம்=ரகசியம்; 'ரகசிய உபதேசம்' - என்றார் திருப்புகழிலும் 1274. 3குறிச்சி=குறிஞ்சி நில ஊர். முருகா! நீ எனக்கு ரகசியம் என்று உபதேசித்த பொருள்—'யாரொருவர் யான்—எனது என்னும் ஆணவ நிலை அற்று என்னை வழிபடுகின்றார்களோ அவர்களுக்கு நான் எளியன்—குற்றேவல் செய்பவன்' என்பது. உண்மை வழிபாட்டைச் செய்தவள் வள்ளியாதலின் நீ தனிகை மலையினின்றும் வள்ளிமலைக்குத் தனியேவந்து வள்ளியின் சன்மார்க்கத்தை உகந்து, (திருப்புகழ் 317), அவளுடன் விளையாடியும், அவளுக்குக் குற்றேவல் செய்தும் அவளை மணந்தாய்; அதனால் நீ ரகசியம் என்று உபதேசித்தது இந்தக் குறிஞ்சிநில ஊராகிய வள்ளிமலையில் பகிரங்கமாகப் புலப்பட்டு ப்ரத்யக்ஷமாய் விளங்கிவிட்டது. அருணகிரி நாதர் வரலாறு பக்கம் 120, 121 பார்க்க. 'குறவர் கற்பினுக்கு உற்று புணர் பெருமாளே', 'குறமாதுடன் மால் கடனும் எனவே அணைமார்பா" என வருவன காண்க. (திருப்புகழ் 1117, 563 கீழ்க் குறிப்பு.)

## 25. யமனை வெருட்டல்

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாவந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

(அந்.) அடா அந்தகா! செந்தில் வேலனுக்கு......கண்டாயடா! தண்டாயுதமும்......வெட்டி விழ விடுவேன்; சற்று என் கைக்கெட்டவே—வந்து பார்.

(பொ-உ.) அடா (அந்தகனே) எமனே! (செந்தில் வேலனுக்குத் திருச்செந்தூர் வேற்பெருமானுக்குத் தொண்டனாகிய என்னுடைய (அவிரோத ஞானச் சுடர் வடிவாள்) விரோதமின்மை என்கின்ற ஞான ஒளி வீசும் வாள் (என் கையில் இருப்பதைக் (கண்டாய்) காண்பாயாக! உனது தண்டாயுதமும் மூத்தலைச் சூலமும் கீழே விழும்படியாக (தாக்கி உன்னை) உன்னை நான் தாக்கித் திண்டாடும்படி உன்னையும் விழும்படி செய்வேன்; (வேண்டுமென்றால்) சற்று என் கைக்கு எட்டும்படியான இடத்தில் வந்து பார்ப்பாயாக.

(சு-உ.) முருகவேளுக்குத் தொண்டன் நான்; என்னிடம் அவிரோத ஞான வாள் உளது; அடா! யமனே; உனது தண்டும் சூலமும் கீழே விழும்படி உன்னைத் தாக்குவேன். என் அருகே சற்று வந்து பார்.

(கு-உ.) "படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்னம தீச னடியரை
விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்
புடை புகாது நீர் போற்றியே போமினே"
—அப்பர் 5-92-7.

"நமன்வரின் ஞானவாள் கொண்டே யெறிவன்
சிவன்வரி னுடன் போவது திண்ணம்"
—திருமந்திரம் 2968.

அவிரோத ஞானம்—"எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும் இதய பாவ னாதீதம்", "பஞ்சபூதமு நினைவு நெஞ்சு மாவியு நெகிழவந்து நேர்படு மவிரோதம்", "உள்ளது மிலாது மல்லத விரோதம் உல்லச விநோதம்"—திருப்புகழ் 1048, 674, 667.

திருப்புகழ் பாடிப் பாடிபத்தி பெரிதும் ஊறின நிலையிற் பாடப்பட்டன கந்தரலங்காரச் செய்யுள்கள்; அதனால் ஆசிரியருக்கு யமனையும் வெருட்ட வல்ல திறம் வந்துளது.—செய்யுள் 21, 64, 69, 81, 86, 87 பார்க்க.

## 26. தன் ஆனந்தம் கூறினது

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்; மரிப் பார்வெறுங் கர்மிகளே.

(பொ-உ.) நீல மயில்மீது ஏறும் பெருமானும், எப்போது நினைந்தாலும் அப்போதெல்லாம் அழகிய குறத்தி வள்ளிநாயகியுடன் வருபவனுமான குருநாதன் சொன்ன சிலத்தை—குருமூர்த்தி உபதேசித்த உத்தம மொழியைச் சிவயோகிகளே மெள்ளத் தெளிந்தறிவார்)—சிவயோகம் கைவந்த பெரியோர்களே மெதுவாக ஆய்ந்து தெளிந்து அறிவார்கள்; அவர்களே காலத்தை வென்றிருப்பார்—கால தத்துவத்தை—பிறப்பிறப்பை வென்றிருப்பார்கள்; (வெறுங் கர்மிகளே மரிப்பர்) ஏனையர், வெற்றுக் கருமங்கள் புரிபவர்-இறந்துபடுவர்.

(சு-உ.) சிவயோகிகளே முருகன் உபதேசித்த மொழியை அறிபவர்கள், இறவார்கள்; ஏனையோர்—கர்மிகள்—அறியார், இறப்பர்.

(கு-உ.) காலம்-வித்தியா தத்துவங்கள் ஏழனுள் ஒன்று; அது சரீராதிகளைப் பரிணமித்து அழியச் செய்வது (ஆசிரியர் திருவிளங்கம் அவர்கள் உரை) 'சாகா தெனையே சரணங்களிலே காகா' (அநுபூதி 41) என்றது சிவயோக நிலையைத் தந்தருள்; அதனல் இறவா நிலை வரும் என்னும் கருத்தது. எந்த நேரத்திலும் வருவான் என்றது 'எங்கே நினைப்பினும் அங்கே என் முன் வந் தெதிர் நிற்பனே'—(கந்தர் அலங்காரம் 104) என்னும் கருத்தது.

## 27. தரிசனப் பாடல்

ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு மே கந்த வேள் மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்த செச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.

(அந்.) கந்தவேள் ......... வாகையும்—ஓலையுந் தூதரும் ......... முன்னிற்குமே.

(பொ-உ.) கந்தக் கடவுளின் (மருங்கில்) அரையிற் கட்டியுள்ள (சேலையும்) ஆடையும், கட்டியுள்ள (சீராவும்) உடைவாளும், (கையில்) திருக் கரங்களை அணைந்த (தோளில் அணிந்துள்ள) (செச்சை) வெட்சி மாலையும், கோழிக் கொடியும் (தோகையும்), மயிலும், (வாகையும்) வெற்றிக்கு அறிகுறியாய் நிற்கும் வேலும்—(யமனது) ஓலையையும், (யமனது) தூதர்களையும் பார்த்துத் திண்டாட்டம் அடைதலை நீக்கி எனக்குக் காலையிலும் மாலையிலும் (முன்னிற்கும்) எதிரே தோன்றிக் காட்சி தரும்.

(சு-உ.) முருகவேளின் அரையிற் கட்டிய ஆடை, உடைவாள், வெட்சி மாலை, கோழிக் கொடி, மயில், வேல் இவை எனக்கு யம பயத்தை நீக்கிக் காலையும் மாலையும் என்முன் காட்சி தரும்.

(கு - உ.) சேலை=பீதாம்பரக் கச்சை. (கந்தரந்தாதி 89.); ஆடை பிங்கலம். சீரா=சிறிய கூரிய உடைவாள். "சூர் தூளாய் விழச் சிறு தாரைச் சீராவாலே வாளாலே வேலாலே சேதித்திடும் வீரா" - திருப்புகழ் 1045. "நிசாசரக் குலத்தை ......சீராவினு லறுத்தறுத் தொதுக்கிய பெருமாளே" - திருப்புகழ் 1132, [750, 1139ம் பார்க்க.] "அரையிற் கட்டுஞ் சீராவும்" என்பர் பின்னும்:-[81]. சீரா என்பதற்குக் கவசம் என்றும் பொருள்; "சீராம ராம" என்னுங் கந்தரந்தாதிச் செய்யுளைக் [80] காண்க. செச்சை=வெட்சி. யமதூதர் ஓலையுடன் வருவது:— "வருபவர்கள் ஓலைகொண்டு நமனுடைய தூதரென்று மடிபிடியதாக நின்று தொடர்போது"—திருப்புகழ் 430. வாகை—வெற்றி—ஆகு பெயராக வெற்றியே பிறங்கும் வேல் எனப் பொருள் காண்க.

' ' 2கையில்—மாலை—" ஒரு கை தாரொடு பொலிய—ஒரு கை மார்பின் மாலை தாழ்ந்ததனேடே சேர்ந்து அழகு பெற"—திருமுருகா-உரை. 'பூந்தொடையல் சேர அணிந்த திருக்கரமும்'—கந்தர் கலிவெண்பா 50. இந்தப் பாடல் காலையில் எழுந்திருக்கும்போதும் இரவிற் படுக்கும்போதும் சொல்லி முருகனைத் தியானிப்பதற்கு மிகப் பொருத்தமான பாடல்.

## 28. தன் ஆனந்தங் கூறினது

வேலே விளங்குகை யான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளையெவ் வாறு புகல்வதுவே.

(பொ - உ.) வேலாயுதம் விளங்கும் திருக் கரத்தை உடைய முருக வேளின் சிவந்த திருவடிகளில் விழுந்து வணங்கிப் போற்றி (மாலே கொள) ஆசை கொள்ள (இங்ஙன்) இவ்வாறு (காண்பது அல்லால்) காணலாமே ஒழிய, மனம், வாக்கு, செயல்—ஆகிய இவைகளால் அடைவதற்கு (அரிதாய்) முடியாததாய், (அருவுருவாகி) உருவின்மை, உரு உடைமை (ஆகி) ஆன இரண்டு நிலையையும் உடையதாய், (ஒன்று போல) ஏக மூர்த்தியாய் விளங்கும் (பொருளை) கடவுளை எவ்வாறு புகல்வது விளக்குவது; (விளக்க முடியாது என்றபடி)

(சு - உ.) முருகன் திருவடியில் விழ்ந்து ஆசையுடன் வணங்கிப் போற்றி அவனைக் காணலாமே ஒழிய வேறு மனம், வாக்கு, செயல் என்பனவற்ருல் அப் பரம்பொருளை அடைய முடியாது; இத்தன்மையன் என்று சொல்லவும் முடியாது.

(கு - உ.) "செவ்வா னுருவில்" எனத் துவக்குங் கந்தரநுபூதியின் [30] குறிப்புரையும், "அவனருளே கண்ணுகக் காணி னல்லால்.

இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவனென்றெழுதிக் காட்டொணுதே''-என்னும் அப்பர் ஸ்வாமிகள் திருவாக்கும் 6-97-10. ஈண்டுணரற் பாலன. 'ஏகத்து உருவும் அருவும் உருவருவுமாகி'—கந்தர் கலிவெண்பா 10. மால்=ஆசை. 'மாலொடு சலாமிடு'-திருப்புகழ் 207; அரிது இன்மைப் பொருளில் வந்தது—திருப்புகழ் 1069 கீழ்க்குறிப்பு.

## 29. தன் அனுபவம் கூறினது

கடத்திற் குறத்தி பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே.

(அ்.) சித்ரமாதர்......காம சமுத்திரம் கடத்திற் குறத்தி...திடத்தில் புணையென யான் கடந்தேன்.

(பொ-உ.) (சித்ரமாதர்) அழகிய பெண்களின் (அல்குல் படத்தில்) பாம்பின் படம போன்ற அல்குலிலும், கழுத்திலும் செம்மை நிறைந்த வாயிலும், மூங்கில் அணைய தோள்களிலும், (உந்தி) கொப்பூழ்—தொப்புள் என்னும் (தடத்தில்) இடத்திலும் (தனத்தில்) கொங்கையிலும் (கிடக்கும்) ஆசைகொண்டு கிடக்கும் (வெம்) கொடிய காமம் என்னும் கடலைக் (கடத்தில்) வள்ளிமலைச் சாரலில் வாசம் செய்திருந்த (குறத்திபிரான்) வள்ளி நாயகனுடைய (அருளால்) திருவருள் என்னும் துணையிருந்த காரணத்தால் (கலங்காத) கலக்கம் கொள்ளாத — சலனப்படாத (சித்தத் திடத்தில்) மனதிடத்தைப் (புணை என) தெப்பமாகக்கொண்டு நான் கடந்து நின்றேன் (தாண்டிக் கரையேறினேன்).

(சு-உ.) வள்ளி கணவன் திருவருளாற் கிடைத்த திடசித்தம் என்னும் தெப்பம் கொண்டு காமத்தை வென்றேன்.

(கு-உ.) கடம்=மலைப்பக்கம். புணை=தெப்பம். ''அஞ்செழுத்தின் புணைபிடித்து''-திருவாசகம்: திருச்சதகம் 27. பழுத்த செவ்வாய்= செம்மை பழுத்த (முற்றின) வாய். பணை=மூங்கில்: தோள்; ஆகு பெயர். திருப்புகழ்ப் பாடல்களிற் பல இடங்களிலும், கந்தரநுபூதியில் 'மங்கையர் மையல் வலைப்பட்டுசல் படும் பரிசென் ெறழிவேன் (9) என்றது போன்ற இடங்களிலும், அலங்காரத்தில் 'கண்ணூர்க்கு இளைத்துத் தவிக்கின்ற என்னை' (32) என்றது போன்ற இடங்களிலும் பெண்ணாசையினற் கொண்ட கலக்க நிலை—கந்தரலங்காரத்துள் இச் செய்யுளினுல் தொலைந்து ஒழிந்தது என்பது நன்கு பெறப்படுகின்றது.

²பெண்ணாசை கொண்ட மனத்தை முருகன் எங்ஙனம் மாற்றி அடியார்க்கு அருள் புரிவார் என்பதற்குச் சான்று தணிகைப் புராணத்தில் "தொழும்பினரை உடையவர்கள் ஆளவ துறுகட னென்னுந் தொல்லை மாற்றம், செழும்பவள இதழ் மடவார் திறத்தழுந்தும் எனதுளத்தைத் திருப்பித் தன் சீர்க், கொழும் புகழின் இனிதழுத்திப் புதுக்கியருள் தணிகை வரைக் குமரன்" என வருமிடத்திற் காண்க. [புராணத்து இறுதிப்பாடல்.]

## 30. நெஞ்சொடு கிளத்தல்

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென்ப தாகத் திரிகின்ற நீசெந்தி லோன்திருக்கை
வேலென் கிலைகொற்ற மயூர மென்கிலை வெட்சித்தண்டைக்
காலென் கிலைமன மேயெங்ங னேமுத்தி காண்பதுவே.

(அந்.) மனமே! பாவையர் மொழி பாலென்பது; பதம் பஞ்சென்பது, கண் சேலென்பது—ஆகத் திரிகின்ற நீ செந்திலோன்......... காலென்கிலை; முத்தி எங்ஙனே காண்பது;

(பொ-உ.) மனமே! (பாவையர்) பெண்களின் (மொழி) பேச்சு பால்போல இருக்கின்றது; (பதம்) அடிகள் பஞ்சுபோல (மெத்தென்றிருக்கின்றது; (கண்) சேல் மீன்போல விளங்குகின்றது (ஆக)—என்று இவ்வாறாக வர்ணித்துத் திரிகின்ற நீ—திருச்செந்தூர் வேலனுடைய திருக்கையில் விளங்கும் வேல் என்று போற்றுகின்றாயில்லை; (கொற்றம்) வீரம் வெற்றி உள்ள (மயூரம்) மயில் என்று துதிக்கின்றாயில்லை; வெட்சிப் பூக்கள் சூழ்ந்த தண்டையணிந்த (கால்) திருவடிகள் என்று வாழ்த்துகின்றாயில்லை—இப்படி இருந்தால் முத்தி நிலையை எப்படி நான் காண்பது! (காண முடியாது என்றவாறு).

(சு-உ.) மனமே! நீ முருகவேளின் வேல், மயில், திருவடி இவைகளைப் போற்றுகின்றாயில்லை; பெண்களின் மொழியையும், அடியையும், கண்ணையும் வர்ணனை செய்து திரிந்து கொண்டிருக்கின்றனை......நான் எப்படி முத்தி அடைவது?

(கு-உ.) "பாலோ தேனோ.........மொழி", "பஞ்சான.........சீறடி"; "விழி......வேலோ சேலோ"—திருப்புகழ் 826, 26, 328; 'பஞ்சொக்கும் அடிகள்'—கம்ப ராமாயணம் மாரீசன் 70; 'சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே......புந்திதனை நுழையவிட்டு.........அலையாமல் உன் இரு தாள் மட்டிலே மனது செல நினைதருளும் அருள்வையோ" —தாயுமானவர் மலைவளர்-2.

## 31. பிரார்த்தனை - திருவடியைப் பெற

[1]போக்கக் [2]குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேல்தொட்ட காவலனே.

(அந்.) சிந்து வெந்து...காவலனே! போக்கக் குடிலில்...தந்தருள்.

(பொ-உ.) சிந்து—கடல், வெந்து—வெந்து சுவறி, கொக்கு—மா மரமாய் நின்ற சூரன் (தறிபட்டு எறிபட்டு) துண்டுபட்டு சிதற எறியப்பட்டு, (உடலினின்றும்) உதிரம்—ரத்தம், குமுகுமு என்று (கக்க) சொரியவும், (கிரி உருவ) எழு கிரியிலும் கிரவுஞ்ச கிரியிலும் ஊடுருவவும், (கதிர்வேல் ஒளி வீசும் வேலைத் (தொட்ட) பிரயோகித்த (காவலனே) அரசே! (போக்கம்) பொய்யான—நிலைத்திராத (குடிலில்) குடிசையாகிய உடலில் (புகுதா வகை) நான் மீண்டும் புகா வகைக்கு (நீ) (புண்டரீகத்தினும்) செந்தாமரையினும் (செக்கச் சிவந்த) அதிகமாக மிகச் சிவந்த (கழல் வீடு) உனது திருவடியாகிய மூத்தி இன்பத்தைத் தந்தருளுவாயாக.

(சு-உ.) முருகா! நான் மீண்டும் பிறவாதிருக்க உனது திருவடி நிழலாம் வீட்டைத் தந்தருளுக.

(கு-உ.) 1போக்கம்=பொய்; "போக்கங்க ளேபேசும்" - திருவாசகம்-திருவெம்பாவை (5.) 2குடில்=சிற்றில்; "மலஞ்சோரு மொன்பது வாயிற்குடில்" - திருவாசகம்-சிவபுராணம் 54. "போக்கக் குடில்"= அழிபடுந் தேகம். பின் இரண்டடியிற் சந்த நயத்தைக் காணவும். செக்கச் சிவத்தல் — மிகச் சிவத்தல் 'விழியிணை செக்கச் சிவந்து'— திருப்புகழ் 137. இனிப் பிறவா வரம்: 'மீட்டிங்கு வந்து வினைப் பிறவி சாராமே கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே'—திருவாசகம் |-87. 'இனி ஒரு காயத்திற் புக்குப் பிறவாமல்போம் வழி நாடுமின்'—திருமந்திரம் 2106. வேலால்—சூர்மா தறிபட்டது, கடல் வெந்தது, கிரி உருவப்பட்டது —இது ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்களும் வேலைத் தியானிக்க ஒழியும் என்பதைக் குறிக்கும். வேலால் சூரன் அழிந்தது போல என் ஆணவம் அழியவும், வேலால் கடல் வற்றினது போல என் கன்ம வசப் பிறவிக் கடல் வற்றவும், வேலால் மாயைக்குன்றம் (கிரவுஞ்சம்) பிளவுபட்டதுபோல என் மாயை ஒழியவும் (என் பொருட்டு வேலைச் செலுத்தி) அருள்புரிவாயாக என்பது குறிப்பு.

## 32. பிரார்த்தனை - ரக்ஷித்தருள்

[1]கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னே[2]துறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற என்னை யெந்நாள்வந் திரட்சிப்பையே.

(பொ - உ.) (கிளைத்துப் புறப்பட்ட) மக்களாதிய சுற்றத்தாருடன் போருக்கு எழுந்த சூரனுடைய மார்புடனே (கிரி) அவனுக்கு அரணாயிருந்த எழுகிரிகளும் பட்டழியும்படி ஊடுருவித் தொளைத்து வெளிவந்த வேலை ஏந்தும் கந்தனே! (துறந்தோர்) துறவிகளின் உள்ளத்தை வளைத்திழுத்துப் பிடித்து அந்த உள்ளம்—நெஞ்சம் (பதைக்கப் பதைக்க) பதை பதைக்க வதைக்கின்ற (கண்ணார்க்கு) கண்களை உடைய மாதர் பொருட்டு (இளைத்து) வாடித் தவிக்கும் என்னை என்று வந்து காப்பாற்றுவாய்.

(சு - உ.) துறவிகளின் உள்ளத்தையும் இழுத்து வதைக்கும் மாதர்களின் கண் வலையிற்பட்டுத் தவிக்கும் என்னை என்று காத்தருளுவாய்.

(கு - உ.) 1"கிளைபட்டெழு சூருரமும்" - அநுபூதி (4). 2"துறவினர் சோரச் சோர நகைத்து" - திருப்புகழ் 158. 'முநிவரையும் அவர் உயிர் துணிய வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடுஞ் செங்கண் வேலும்', 'கரியகன் துறந்தவர் நிறந் தொளைபட ஓட' - திருப்புகழ் 1277, 1151. கிளைத்துப் புறப்பட்ட சூர்—கிளைகள் விட்டுப் பரந்தெழுந்த (சூர்) மாமரத்தையும் குறிக்கும். 'சூர் மார்புடன் கிரி'—என்றதனுங் கிரி—எழு கிரியையே குறிக்கும்.—திருப்புகழ் 257, பக்கம் 140 கீழ்க்குறிப்பு.

## 33. முருகன் நாம விசேஷம்

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
[1]மிடியாற் படியில் [2]விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
[3]அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்[4]திரு நாமம் புகல்பவரே.

(அந்.) வெற்றிவேற்......புகல்பவரே முடியாப் பிறவிக்......விதனப் படார்.

(பொ - உ.) வெற்றி வேலை ஏந்திய பெருமாள், அடியார்க்கு நல்ல பெருமாள், அசுரர்களின் குலம் முழுமையும் பொடியாகும்படி ஆக்கிய பெருமாள்—ஆகும் முருகவேளின் திருப்பெயர்களைச் சொல்பவர்கள் (முடியா) ஓயாத பிறவி என்னும் கடலிற் (புகார்) புகுந்து அலைச்சலுறார்;

(முழுதும்) எல்லாவற்றையும் கெடுக்கின்ற (மிடியால்)வறுமையால் (படியில்) இப் பூமியில் (விதனப் படார்) துன்பம் அடைய மாட்டார்கள்.

(சு-உ.) முருகவேளின் திருநாமங்களைச் செபிப்பவர்கள் இனிப் பிறவார், வறுமை நோயால் வருந்தார்.

(கு-உ.) [1]மிடி=வறுமை. [2]விதனம்=மனத்துயர். முடியாப் பிறவிக் கடல்—'திரை ஏழே போல் எழு பிறவிமாக் கடல்'(—திருப்புகழ் 1168); "பிறவிப் பெருங்கடல்'—திருக்குறள் 10; முழுதுக் கெடுக்கும் மிடி—'நல்குரவென்னும் இடும்பையுள் பல்குரைத் துன்பங்கள் சென்று படும்'—திருக்குறள் 1045. 'வடிவுந் தனமும் மனமுங் குணமுங் குடியுங் குலமுங் குடி போகியவா...மிடியென் றொருபாவி வெளிப்படினே'—கந்தரநுபூதி 19; 'வறுமை யாகிய தீ' (திருப்புகழ் 753.) [3]'கருவூரு ளண்ணலார் அடியார்க்கு நல்லரே'—சம்பந்தர் 2-28-3. [4]முருகனது நாம விசேடத்தை எடுத்துக் கூறும் அருமைப் பாடல் இது. முருகன் நாம விசேடத்தை—திருப்புகழ் 668, பக்கம் 34 கீழ்க்குறிப்பிற் காண்க. திருநாம ஜெபத்தால் 'நாருயிர பேதஞ்சாதம் ஒழிந்தவாதான்' என்றூர். திருநாமம் பிரமன் எழுதிய எழுத்தை அழிக்கும்—'தே வரைந்தது எய்வ'—கந்தரந்தாதி 30. 'இசைபயில் சடாக்ஷரமதாலே இகபர சௌபாக்யம்'—திருப்புகழ் 191.

## 34. பிரார்த்தனை - ஞான கலை பெற

[1]பொட்டாக வெற்பைப் பொருதகந் தாதப்பிப் போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே.

(அந்.) பொட்டாக வெற்பைப் பொருத கந்தா! இருங் காம விடாய்......கட்டுண்டது; தப்பிப் போன......கலை தருவாய்.

(பொ-உ.) (பொட்டாக) தொளைபடும்படி (வெற்பை) கிரவுஞ்ச மலையொடு சண்டை செய்த கந்தனே! (இருங் காமவிடாய்) பெரிய காமம் என்னும் தாகம் (பட்டார்) கொண்டவர்களின் உயிரைத் திருகிப் பறித்து (பருகி) உண்டு பசியாறுகின்ற (கட்டாரி வேல் விழியார்)—கட்டி போன்றதும் வேல் போன்றதுமான (விழியார்) கண்களை உடைய மாதர்களின் வலையில் (என்) மனம் கட்டுப்பட்டிருக்கின்றது. (இங்ஙனம்) தப்பிப் போனதொன்றற்கு—நன்னெறியைக் கைவிட்ட இந்த ஒருயிர்க்கு நீ (எட்டாத) யார்க்கும் எட்ட முடியாத ஞான கலையைத் தந்தருளுவாயாக.

(சு - உ.) கந்தா! நான் மாதர்களின் கண் வலையில் மனம் கட்டுண்டு நெறி தவறிக் கிடக்கின்றேன்; எனக்கு ஞான கலையை உபதேசித்தருளுக.

(கு - உ.) 1பொட்டு=நுழைவாயில்: தொளை; "சாடு குன்றது பொட்டெழ" - திருப்புகழ் 105; "மின்னயில் கொண்டொரு வெற்புப் பொட்டுப்பட" - திருப்புகழ் 492. "கிரௌஞ்சம் புழைபட் டழிய" - தணிகைப் புராணம்; புழை=உட்டொளை. 'சூர்பொட்டாகக்-குத்திய வேலா' - திருப்புகழ் 1119. கட்டாரி = குத்துவாள், ஈட்டி—"ஈட்டி விழியார்:—"ஈட்டி வரிவிழி"—திருப்புகழ் 1278, 1198. தான் தப்பி நெறி தவறினபடியால்—தன்னை இழிவுபடுத்தத் 'தப்பிப்போன எனக்கு' என்று தன்னை உயர்திணையிற் குறிக்காமல் 'தப்பிப்போன தொன்றற்கு' என்று தன்னை அஃறிணையிற் குறிக்கின்றார். இது திணைவழுவமைதி. "இழிப்பினும் பால்திணை யிழுக்கினும் இயல்பே'-'நாம் அரன் உடைமை' என்பது இழிப்பின் உயர்திணை அஃறிணை யாயிற்று" — நன்னூல் சூத்திரம் 379, எட்டாத ஞானகலை—'கதறிய கலைகொடு சுட்டாத் தீர்பொருள் பதறிய சமயிகள் எட்டாப் பேரொளி'—திருப்புகழ் 1152. இறைவன் திருவருளின்றி எட்ட முடியாதது ஞானகலை.

## 35. பிரார்த்தனை - புத்தி தெளிய

பத்தித் துறையிழிந் தாநந்த வாரி படிவதினல்
புத்தித் 1தரங்கந் தெளிவதென் றோபொங்கு வெங்குருதி
2மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கொற்றவனே.

(அந்.) பொங்கு வெங்குருதி......கொற்றவனே! பத்தித்துறை...... தெளிவதென்றோ!

(பொ - உ.) பொங்கி எழுகின்ற (வெம்) வெப்பம் உள்ள (குருதி) ரத்தம் (மெத்தி) நிறைந்து (குதிகொள்ள) கொப்புளித்துக் குதித்துச் சொரிய, (வெஞ்சூரனை) கொடிய சூரனை (விட்ட சுட்டியிலே) ஒளிவிட்டு விளங்கும் நெற்றித் தலத்தில் குத்தி, (தரம்கொண்டு) மேன்மை பெற்று (வெற்றி அடைந்து), (அமராவதி) தேவர் உலகைக் (கொண்ட) கைக் கொண்ட (கொற்றவனே) வெற்றியாளனே! (பத்தித்துறை) பத்தி என்கின்ற இறங்கு துறையில் (இழிந்து) இறங்கி, (ஆனந்தவாரி—) ஆனந்தம் என்னும் கடலிற் (படிவதினல்) குளித்து அனுபவித்தலால் (புத்தித் தரங்கம்) அறிவு அலைகள் உணர்ச்சிகள் (தெளிவது என்றோ) தெளிவடைவது எந்நாளோ! ஞான உணர்வு பெறுதல் எந்நாளோ! என்றபடி.

(சு-உ.) சூரனை அட்டுப் பொன்னுலகைக் காத்த வீரனே! நான் பத்தி வழியில் இறங்கி ஆனந்தம் அடைய என் புத்தி அலைகள் என்று தெளிவடையும்!

(கு-உ.) 1தரங்கம்=அலை. 2மெத்தி=நிறைந்து: மிகுந்து, மெத்திய=நிறைந்த; "விடமெத்திய கணை" - திருப்புகழ் 290. 'பத்தி செய்யச் செய்ய ஆனந்தம் உண்டாகும். அங்ஙனம் ஆனந்தம் பெருகப் பெருக அறிவு தெளிவு அடையும்; அத்தகைய தெளிவை அடையும் நாள் எப்போது வரும்.

சுட்டி=நெற்றி அணி—ஆகுபெயராய் நெற்றியைக் குறிக்கின்றது. சுட்டிக்கு அடைமொழியாக 'விட்ட' என்பதைக்கொண்டு தொங்கவிடப் படும் சுட்டி என்னலாம்.

## 36. நெஞ்சொடு கிளத்தல்

**சுழித்தோடு மாற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்ப மின்பங்**
**கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக் கோட்டு முத்தைக்**
**கொழித்தோடு காவிரிச் செங்கோட னென்கிலை குன்றமெட்டுங்**
**கிழித்தோடு வேலென் கிலையெங்ங னேமுத்தி கிட்டுவதே.**

(அந்.) நெஞ்சே! சுழித்தோடு......எக்காலம்! கரிக்கோட்டு........ வேலென்கிலை: முத்தி எங்ஙனே கிட்டுவது.

(பொ-உ.) நெஞ்சே! சுழிசுழித்துக்கொண்டு ஓடுகின்ற ஆற்றின் பெருக்குப் போன்றது செல்வம்; (துன்பம் இன்பம்) துக்கம்—சுகம் இவைதமை-சுக துக்கத்தை-(கழித்து) பொருட்படுத்தாது விலக்கி நின்று (ஓடுகின்றது) காலத்தைப் போக்குவது எந்தக் காலத்தில்? (கரிக் கோட்டு) யானையின் தந்தத்தில் நின்று சிதறின முத்துக்களை (கொழித்து) வாரி ஒதுக்கி ஓடி வரும் காவிரியாறு சூழ்ந்து வரும் திருச்செங்கோட்டு (வேலன்) (என்கிலை) என்று போற்றுகின்றாயில்லை; (குன்றம் எட்டும்) மலைகள் எட்டையும்—கிழித்து ஓடுகின்ற—பிளந்து செல்லும் வேலாயுதம் என்று போற்றுகின்றாயில்லை—இப்படியிருந்தால் முத்தி எப்படி கிட்டும்— (கிட்டாது என்றபடி).

(சு-உ.) நெஞ்சே! செல்வம் நிலையில்லை என்றுணர்ந்து சுக துக்கங் களை நீ எப்போது கடந்து நிற்பாய்: செங்கோட்டு வேலன், வேல் என்றெல்லாம் போற்றுகின்றாய் இல்லை; நீ இப்படி இருந்தால் எப்படி முத்தி கிட்டும்.

(சு - உ.) செல்வம் நிலையாமையை—" நிறை செல்வம் நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் "—(நீதிநெறி-காப்பு), "செல்வம் சகடக்கால் போல வரும்"—(நாலடி-2) என வருமிடத்துக் காண்க.

துன்பம் இன்பம் கழித்திருத்தல் — ஞானியின் நிலை—" மன்னவர் முதலோர்......தொழுதாலும் துதித்தாலும் அவமதித்துக் கடந்தாலும் மெய்ஞ்ஞானி கமல இலைப் புனல்போல்வான் "—சூதசங்கிதை.

ஆற்றில் முத்து அடித்து வருதல்:—' திரைகளெல்லாம்...... முத்தொடு பொன்வரன்றிக்...காவிரி கால்பொரு '-சம்பந்தர் 1-5-3. ' மத்தயானையின் கோடும்......வாரித் தத்துநீர்ப் பொன்னி '—2-38-1. ' பெருங்களிற்று முத்துடை வான்கோடு தழீஇ '—திருமுரு-305. இப்பாட்டின் ஈற்றடி களோடு 30-ஆம் பாட்டின் ஈற்றடிகளை ஒப்பிடுக.

## 37. தன் உறுதி கூறல்

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக் கள்ளை
மொண்டுண் [1]டயர்கினும் வேன்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டூடூ டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற ராவுத்தனே.

(அந்.) முதுகூளித்திரள்......ராவுத்தனே! கண்டுண்ட...மறவேன்.

(பொ - உ.) (முதுகூளித்திரள்) பழைமை வாய்ந்த பேய்க் கூட்டங்கள் டுண்டுண் டுடுடுடு......டிண்டிண் டென வாத்தியங்களைக் (கொட்டி) முழக்கி, (ஆட) கூத்தாட, (வெஞ்சூர்) கொடிய சூரனைக் கொன்ற (ராவுத்தனே) விரனே! (கண்டு உண்ட) கற்கண்டு போன்ற சொற்களை உடையவர், (மெல்லியர்) மென்மை வாய்ந்தவர்-ஆகிய மாதர்கள் மீதுள்ள (காமக் கலவிக்கள்ளை) காமப் புணர்ச்சி என்னும் கள்ளினை (நான்) மொண்டு உண்டு—மொண்டு நுகர்ந்து (அயர்கினும்) அயர்ச்சியுற்ற போதிலும்—தளர்ச்சியுற்ற போதிலும்—(உனது) வேல்—வேலாயுதத்தை நான் மறக்க மாட்டேன்.

(சு - உ.) சூரனை அட்ட விரனே! நான் மாதர்களின் காமத்திற் பட்டபோதிலும் வேலாயுதத்தை மறவேன்.

(கு - உ.) 1" அநுராகப் பரவை படியினும் வசமழியினும் *** இரு சரணமு மறவேனே " என்றார் திருப்புகழிலும் 513. கூளித்திரள்—சிவ கணங்களாகிய பூதங்கள்—என்லுமாம். ராவுத்தன் = குதிரைவீரன். பாடல்-50ம் பார்க்க; வேடிச்சி காவலன் வகுப்பு, அடி 22-ம் பார்க்க. பேய்கள் வாத்தியங்களைக் கொட்டிக் கூத்தாடுதல்:—

" திரிகிட தொங்கிட திரிகட திங்கிட
தித்தீ செக்கண செககண மொழிந்து கூத்தனைத்து
நவில்வன — போர்க்களத்தில் அலகையே''

" கொடுகொட் டிபடத் துடிகொட் டிநடத்
தடமிட்டு வளைத் திருக்கும் ஒருதிரள்
...... செருக்களத்தில் அலகையே''

" இடக்கை குடமுழ வுடுக்கை துடிபறை
எடுத்து முகிலென முழக்கி வருவன......
பொரு களத்தின் அலகையே''

" தொகுக்கு தொகுதொகு...... தொகுக்கு தொகுவென்
...... நடித்து வருவன ...... பொருகளத்தில் அலகையே''
—திருவகுப்பு.

மொண்டுண் டயர்கினும்—உம் - எதிர்மறை.

## 38. முருகன் பெருமை - கருணை

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

(அந்.) 'குமரேசர் இரு தாளும் சிலம்பும்......தோன்றிடின் நாளென் செயும்.........கூற்றென் செயும்'.

(பொ-உ.) குமாரக் கடவுளின் இரண்டு திருவடிகளும், (அத் திருவடியில்) விளங்கும் சிலம்பும், சதங்கையும், தண்டையும், அவரது (சண்முகமும்) ஆறு திருமுகங்களும், (தோளும்) பன்னிரு தோளும், கடப்ப மாலையும், எனக்கு முன்னே வந்து (தோன்றிடின்) காட்சி கொடுக்கு மானல், (நாள் என் செயும்) கெட்ட நக்ஷத்திரங்கள் என்ன செய்யக் கூடும், (வினைதான்) என்னுடைய தீவினைதான் என் செய்யக் கூடும்' என்னைத் தேடி வரும் (கோள்) கெட்ட கிரகங்கள் தாம் என்ன செய்யக் கூடும், (கொடும் கூற்று) கொடிய யமன்தான் என்ன செய்யக்கூடும்— (ஒரு கெடுதலும் செய்ய முடியாது என்றபடி.)

(சு-உ.) குமாரக் கடவுளின் திருவுருவம் எனக்கு முன்னே தோற்றம் தருமாயின், கெட்ட நாள், தீவினை, கெட்ட கிரகம், கொடிய கூற்று— இவை ஒன்றும் எனக்குக் கெடுதல் செய்யமுடியாது.

(கு-உ.) ஒரு காரியம் தொடங்கு முன்னும், பயணத்துக்கு முன்னும் இப்பாடல் ஓதித் தியானிக்கத் தக்கது. ஆபத்து வேளையிற் பெரிதும்

உதவும் பெருமை வாய்ந்த பாடல் இது. சம்பந்தர் தேவாரத்தில் உள்ள 'வேயுறு தோளிபங்கன்' எனத் துவக்கும் பதிகம் போல ஆற்றல் உடையது. 'சேயவன் புந்தி' என்னும் கந்தரந்தாதிச் (48) செய்யுளும் இத்தகையது. "எங்கள் பரமன் உளமே புகுந்த அதனற் கொதியுறு காலனங்கி நமனேடு தூதர் கொடுநோய்க ளான பலவும் அதிகுணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே." - சம்பந்தர் 2-85.

## 39. பிரார்த்தனை - ஐக்கிய நிலைபெற

[1]உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்தெனை யுன்னிலொன்ரு
விதித்தாண் டருள்தருங் காலமுண் டோவெற்பு நட்[2]டுரக
பதித்[3]தாம்பு வாங்கிநின் [4]றம்பரம் பம்பரம் பட்டுழல
[5]மதித்தான் திருமரு கா மயி லேறிய மாணிக்கமே.

(அத்.) வெற்பு நட்டு...மாணிக்கமே! உதித்தாங்கு...காலமுண்டோ?

(பொ - உ.) (வெற்பு) மந்தரமலையை (நட்டு) மத்தாக நட்டு. (உரகபதி—) நாகராஜனுகிய ஆதிசேடனை (அல்லது வாசுகியை) (தாம்பு) கயிருய் (வாங்கி நின்று) வளைத்துக்கட்டி (அம்பரம்) கடலை (பம்பரம்பட்டு) பம்பரம் சுழலுவதுபோலச் சுழன்று உழலத் திரியவைத்து, (மதித்தான்)- கடைந்தவனுகிய திருமாலின் (திருமருகா!) அழகிய மருமகனே! மயில் ஏறிய மாணிக்கமே! (உதித்து) பிறப்பதையும் (ஆங்கு) அப் பிறவியில் (உழல்வதும்) அலைச்சல் உறுதலையும் (பின்னர்) (சாதலும்) இறந்து படுவதையும் (தீர்த்து) ஒழித்து (எனை) என்னை (உன்னில் ஒன்ருக) உன்னெடு ஒன்ருகும் வண்ணம்—ஐக்கியம் ஆகும் வண்ணம் (விதித்து) நல் விதியை விதித்து (என்னை) ஆண்டு கொண்டு (உனது) திருவருளைப் பாலிக்கும் (காலம் உண்டோ) ஒரு காலம் எனக்குக் கிட்டுமா!

(சு - உ.) திருமாலின் மருகனே! பிறப்பிறப்பை ஒழித்து என்னை உன்னுளே ஐக்கியமாக்கிக் கொள்ளும் ஒரு நாள் எனக்குக் கிட்டுமா!
மத்தின் கயிறு—கூறுவதையும், கடல் கடைந்த விவரத்தையும்-மத்தின்

(கு - உ.) [1]இறவியொடு பிறவியற ஏகபோகமாய் நீயுநானுமாய் இறுகும்வகை பரமசுகம் அதனையருள்" - திருப்புகழ் 862. [2]உரகபதி= வாசுகி; [3]தாம்பு=கயிறு; [4]அம்பரம்=கடல்; [5]மதித்தல்=கடைதல். கடல் கடைந்த விவரத்தையும், மத்தின் கயிறு—ஆதிசேடன் என்றும், வாசுகி என்றும் புராணங்கள் கூறுவதையும்—திருப்புகழ் பாடல் 509, பக்கம் 162; பாடல் 1003, பக்கம் 24-கீழ்க்குறிப்பிற் பார்க்க. பிற்பாதியில் மதித்த மத்தின் சுழற்சி, முற்பாதியில் பிறப்பிறப்பின் சுழற்சி—ஒன்றுக்கு ஒன்று உவமையாம்.

## 40. தன் அனுபவம் கூறினது

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே.

(பொ-உ.) (செந்தூர் வயற் பொழில் சேல் பட்டு அழிந்தது)—திருச் செந்தூரிலிருந்த—வயல் சூழ்ந்த சோலைகள்—சேல் மீன்கள் அழிக்க அழிந்தன; (பூங்கொடியார் மனம் தேங்கடம்பின் மால்பட்டு அழிந்தது)-பூங்கொடி போன்ற மாதர்களின் மனமானது (முருகவேள் அணிந்துள்ள (தேம்) இனிய கடப்பமாலை கிடைக்கவேண்டுமே என்னும்) மால் பட்டு—ஆசை கலக்கம் செய்ய அதனல் சோர்வுற்றது; மா-அழகிய (மயிலோன்) மயில் வாகனனும் முருகன் திருக் கரத்து வேல் பாய்ந்ததால் (வேலையும் சூரனும் வெற்பும்) அழிந்தன—கடல் அலறுண்டது, சூரன் அழிந்தான், எழுகிரியும் கிரவுஞ்ச கிரியும் பொடிபட்டன; (அவன்) அந்த முருகனது (கால் பட்டு) திருவடிகள் பட்டதனல் (இங்கு) இங்கே என் தலைமேல் (அயன் கையெழுத்து) பிரமன் எழுதியிருந்த விதி எழுத்துக்கள் (அழிந்தது) அழிந்து போயின.

(சு-உ.) சேல்மீன் வயற்பொழிலை அழித்தது; கடப்மாலை மாதர்களின் மனத்தைக் கலக்கி அழித்தது; வேல்—கடலையும் சூரனையும், எழுகிரி—கிரவுஞ்சத்தையும் அழித்தது; முருகன் திருவடி பிரமன் எழுதிய என் தலை எழுத்தை அழிந்தது.

(கு-உ.) வேலால் கடல், சூர், மலை பட்டது :—'நேமிச் சூரோடு மேருத் தூளெழ'- திருப்புகழ் 68; அலங்காரம் 62ம் பார்க்க. அயன் கையெழுத்து அழிந்தது—என்பது என் பிறப்பிறப்பை முருகவேளின் திருவடி ஒழித்தது—என்பதாம். "என் ஐயிரு திங்களும் மாசுணமாக்கும் பதாம்புயன்' என்றூர் கந்தரந்தாதியில் [71]; இது (அவரது) திருவடி தீக்ஷையின் சிறப்பை உணர்த்துகின்றது. "போரூர்க் குகன் பதஞ் சூடும் சென்னிக் கில்லைப் பிரமன் துயருறக் கீறும் எழுத்துக்களே"—(போரூர்ச் சந்நிதிமுறை அலங்காரம் 41). பொழில் தேங்கடம்பு எனப் பிரித்து சோலையில் உள்ள கடம்பு எனலுமாம். 'வயற்பொழில்' அழிந்தது என்பதனல் மண்ணுசை ஒழிந்தது என்பதும், பூங்கொடியார் மனம்......... அழிந்தது' என்றதனல் 'பெண்ணுசை ஒழிந்தது' என்பதும், (வெற்பு)-பொன்னஞ் சிலம்பு—கிரவுஞ்சம் அழிந்தது என்றதனல் பொன்னுசை ஒழிந்தது என்பதும், வேலை—அழிந்தது என்றதனல் பிறவிக் கடல் ஒழிந்தது என்பதும், சூரன்—அழிந்தது என்றதனல் ஆணவம் அடங்கிற்று என்பதும்-அயன் கையெழுத்து அழிந்தது என்றதனல்-பிரமனே!

"தீட்டப்பட்டா இனி உன்னல் என் சென்னி"—(கந்தரந்தாதி 72,-என்னும் பேற்றினைப் பெற்றுயிற்று—என்பதும் இச் செய்யுளாற் காணக் கிடக்கின்றன.

## 41. பிரார்த்தனை - திருவடியைப் பெற

பாலே யனைய மொழியார்த மின்பத்தைப் பற்றியென்றும்
மாலேகொண் டுய்யும் வகையறி யேன்மலர்த் தாள்தருவாய்
[1]காலே மிகவுண்டு காலே யிலாத [2]கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ் வேலவனே.

(அந்.) காலே மிகவுண்டு......வேலவனே! பாலே அனைய......தாள் தருவாய்.

(பொ - உ.) (காலே) காற்றையே நிரம்ப உண்டு, (காலே இலாத) கால்கள் என்பனவே இல்லாதனவான (கணபணத்தின்) கூட்டமான படங்களை உடைய ஆதிசேடன் என்னும் பாம்பின் மேலே தூங்குகின்ற திருமாலின் மருகனே! சிவந்த வேலாயுதனே! (பாலே அனைய) பால்போல இனிக்கின்ற (மொழியார் தம்) பேச்சினை உடைய மாதர்களால் கிடைக்கும் (இன்பத்தைப் பற்றி) இன்ப சுகத்தையே பற்றினவனுய் எந்நாளும் (மாலே கொண்டு) காம மயக்கமே கொண்டவனுய் இருந்து, (உய்யும் வகை) அம் மயக்கம் நீங்கிப் பிழைக்கும் வழியை அறிகின்றிலேன்; (அடியேன் உய்யும் பொருட்டு) நீ உன் மலரன்ன திருவடியைத் தந்தருளுக.

(சு - உ.) முருகா! பெண்ணுசை கொண்டு மயங்கும் நான் உய்ந்து ஈடேறும்படி உனது திருவடியைத் தந்தருளுக.

(கு - உ.) [1]கால்=காற்று. [2]கணபணம்=ஆயிரம் பணமுடிகளை யுடைய ஆதிசேடன்; கணம்=கூட்டம்; பணம்=படம். காலே மிக உண்டு காலே இலாத கணபணம்-என்பதில் உள்ள பொருளழகில்-விரோத அணி-அதிசய அணி—முரண் அணி—என்பவற்றின் இலக்கணம் அமைந்துள்ளது.

## 42. தன் குறை கூறல்

நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே சிகனங் குறச்சிறுமான்
பணங்காட்டு மல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே.

(பொ - உ.) (நிணம் காட்டும் கொட்டிலை) மாமிசத்தால் விளங்கும் ஒதுக்கிடமாகிய (சிறு குடிலாகிய இவ்வுடலை விட்டொழித்து, (ஒரு வீடு எய்தி) ஒப்பற்ற மோக்ஷ வீட்டை அடைந்து, (நிற்க) நிலைத்திருக்க, (நிற்கும் குணம் காட்டி) நிலையாய் விளங்குகின்ற தன்மையை உடைய உபதேசப் பொருளைக் காட்டி — போதித்து (என்னை) ஆண்டருளிய குருமூர்த்தி, நம்மை ஆண்டு அருள்பவளும், குறக் குலத்தில் வந்த சிறு மான் போன்றவளுமான வள்ளியின் பணம் காட்டும்—பாம்பின் படம் போன்ற அல்குலுக்கு உருகி நின்ற குமார மூர்த்தியாம் முருகனுடைய (பத அம்புயத்தை) பாத தாமரைகளுக்கு வணக்கம் செய்யாத தலை ஒன்று வந்துஊதே (இதெங்ஙே எனக்கு இங்ஙன் வாய்த்தது) இந்த (உபயோகமற்ற தலை) எங்கிருந்து வந்து எனக்கென இங்ஙனம் ஏற்பட்டது (ஐயோ)!

(சு - உ.) குருமூர்த்தியாம் முருகனை வணங்காத தலை (ஐயோ) எனக்கு எங்கிருந்து வந்து இவ்வாறு வாய்த்தது?

(கு - உ.) [1]கொட்டில் = கொட்டகை: ஒதுக்கிடம். கொட்டில்—பசு மாடு கட்டுமிடம்—ஆன்மாவாகிய பசு கட்டப்பட்ட இடம்—இந்த உடல். 'தலையே நீ வணங்காய்' என்னும் அப்பர் திருவாக்கைப் பொருட்படுத்தாத தலை ஐயோ எப்படியோ எனக்கு வாய்த்ததே—என்று வருந்துகின்றார் அருணகிரியார். இறைவனை வணங்காத தலையை—'விட்டுந் தலைவ நின் தாள் வணங்கார் தம் விரிதலை—சும்மாட்டுந் தலை, பட்டிமாட்டுந் தலை, புன் வராகத் தலை, ஆட்டுத் தலை, வெறிநாய்த் தலை, பாம்பின் அடுந்தலை, கற்பூட்டுந் தலை, வெம்புலித்தலை, நாற்றப் புழுத் தலையே'—என்றெல்லாம் இகழ்கின்றார் இராமலிங்க அடிகள்.—(திருவருள் முறையீடு 141). 'கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை'—திருக்குறள் 9. (பணம்காட்டும் அல்குல்—'பைந் நாப்பட அரவே ரல்குல்'—திருவாசகம்-உயிருண்ணி 1. 'அரவின்பையும் அடும் அல்குல்' —சிந்தாமணி 352.

## 43. தன் குறை கூறல்

[1]கவியாற் கடலடைத் தோன்மரு கோனைக் கணபணக்[2]கட்
செவியாற் பணியணி கோமான் மகனைத் திறலரக்கர்
புவியார்ப் பெழத்தொட்ட போர்வேன் முருகனைப் போற்றியன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே யெனக்கிங்ஙன் கூடியவே.

(பொ - உ.) (கவியால்) குரங்குகளைக்கொண்டு கடலை அடைத்தவனுடைய-கடலில் அணையிட்ட திருமாலின் மருமகனை, (கணபணக்) கூட்டமான படங்களைக்கொண்டனவான (கட் செவியால்) பாம்புகளையே (பணி அணி) ஆபரணமாக அணிந்த (கோமான் மகனை) தலைவராம் சிவபிரானது

மகனை—(திறல் அரக்கர்) வலிமை வாய்ந்தவர்களாகிய அசுரர்கள் வாழும் (புவி) இடங்களில் (ஆர்ப்பு எழ) பேரொலி பிறக்க—(தொட்ட போர் வேல் முருகனை)—போர் வேல் தொட்ட முருகனை—போர் செய்ய வல்ல வேலாயுதத்தைச் செலுத்தின முருகனைப் (போற்றி) துதித்து அன்புடனே குவியாத இக் கைகள் (வந்தெங்கே) எங்கிருந்து வந்து எனக்கு இங்ஙனம் கூடினவோ (ஐயோ—தெரியவில்லையே).

(சு - உ.) முருகனை அன்புடனே கூப்பித் தொழாத இக் கைகள் எனக்கு எங்கிருந்து வந்து கூடினவோ தெரியவில்லையே.

(கு - உ.) [1]கவி = வானரங்கள்; [2]கட்செவி = பாம்பு. அரக்கர் புவி ஆர்ப்பு எழ—என்பதற்கு அசுரர்கள் இருந்த இடத்தில் (ஆர்ப்பு) போர் விளையும்படி—(வேலைச் செலுத்தின—முருகன்) எனலுமாம். ஆர்ப்பு—பேரொலி, போர்—' நிச்சரர் கூப்பிட எழுகிரி ஆர்ப்பெழ வென்ற வேலா '—திருப்புகழ் 990. அரக்கர் புவி-' நிருதர் பூமி பாழாக '-திருப்புகழ் 1052.

கவியாற் கடலடைத்த விவரம் — திருப்புகழ் 659, பக்கம் 12,; பாடல் 754, பக்கம் 248, பாடல் 844, பக்கம் 472-கீழ்க்குறிப்பு.

" கைகாள் கூப்பித் தொழீர் ' என்னும் அப்பர் திருவாக்கை அனுட்டிக் காத கைகள்—அந்தோ! எனக்கு எப்படி வந்து கூடின என்று வருந்து கின்றார் அருணகிரியார். ' பரம நின் திருமுன்னர் குவியாத வஞ்சர் கை பலியேற்கதீர் கொடுங்கை '—அருட்பா-தெய்வமணிமாலை 18. ' கட்செவி யாற் பணி அணி சோமான் '—' பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்தி '—சம்பந்தர் 2-32-6.

## 44. கதியின்மை கூறல்

தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்தியிரு
காலா லெழுப்பி வளைமுது கோட்டிக்கைந் நாற்றிநரம்
பா[1]லார்க்கையிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்பிரிந்தால்
வேலாற் கிரிதொளைத் தோனிரு தாளன்றி வேறில்லையே.

(பொ - உ.) தோல் கொண்டு சுவர் எழுப்பி, அந்தச் சுவரை (நாலாறு காலிற் சுமத்தி) பத்து வகையான காற்றில் தங்க வைத்து, (இரு காலால் எழுப்பி) இரண்டு கால்களாம் (தூண்களின்) மேல் நிறுத்தி எழுப்பி, வளையும்படியான முதுகு ஒன்றை (ஓட்டி) பொருத்தி அமைத்து, (கை நாற்றி)—இரண்டு கைகளை நால வைத்து—தொங்க அமைத்து, (நரம்பால்) நரம்புகள் என்னும் கயிறுகொண்டு(ஆர்க்கையிட்டு) (கட்டுதல் செய்து) (கட்டி வைத்து), (தசை கொண்டு) ஊன் கொண்டு (மாமிசம் கொண்டு) மேயப்பட்டுள்ள (அகம்) இந்த உடலாகிய வீடு, பிரிந்தால் உயிரினின்றும் பிரிந்தொழிந்தால், வேல்கொண்டு கிரவுஞ்ச கிரியைத் தொளை செய்த முருகவேளின் இரண்டு திருவடிகளன்றி வேறு (துணை) நமக்கு இல்லை—இல்லை.

(சு - உ.) உடலைவிட்டுப் பிரிந்த உயிர்க்கு முருகன் திருவடி தவிர வேறு துணை கிடையாது.

(கு - உ.) [1]ஆர்க்கை=கட்டுதல். "நாலாறு கால்—தசவாயுக்கள்—அவைதாம்—(1) பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன். இதயத்து இயங்கிச் சுவாசம் விட உதவும் வாயு—பிராணன்; கீழ்நோக்கும் வாயு—மலசலம் முதலியவற்றை வெளிச் செலுத்தும் வாயு - அபானன்; உண்ட உணவை ஜீரணிக்கச் செய்வது-சமானன்; மேல் நோக்கும் வாயு—நாபியில் நிற்பது—உதானன்; சரீரம் முழுவதும் வியாபித்திருக்கும் வாயு—ரத்த ஓட்டத்தை உண்டாக்கும் வாயு-வியானன்; நீட்டல், முடக்கல், (கிளக்கல்) சொல்லல் செய்வது—விக்கல் முதலியவற்றை உண்டாக்குவது—நாகன்; இமைத்தல், விழித்தல்களைச் செய்வது, ரோமம் புளகித்தலைச் செய்வது—கூர்மன்; தும்மலும், சினமும், வெம்மையும் இருமலும் விளைப்பது—கிரிகரன்; ஓட்டம், இளைப்பு, வியர்வை, கொட்டாவி விளைப்பது—தேவதத்தன்; உயிர்போகினும் உடம்பை விடாதே நின்று உச்சந் தலையில் வெடித்துப் போவது—தனஞ்சயன்.

நாலாறு கால்—ஆன்ம தத்துவம் (அசுத்த தத்துவம்) 24-எனலுமாம் அவைதாம்: பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்; மெய், வாய், கண், மூக்கு, செவி; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம், குணம்:

"கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோலுடுத் துதிரம் அட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை"

"உயிர் கொண்டு போம்பொழுது குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்குற்றார் ஆருளரோ"—அப்பர் 4-67-3, 4-9-10.

## 45. தன் அனுபவம் கூறினது

ஒருபூ தருமறி யாத்தனி வீட்டி லுரையுணர்வற்
றிரு; பூத வீட்டி லிராமலென் றனிரு கோட்டொருகைப்
பொரு [1]பூ தரமுரித் [2]தேகாச மிட்ட புராந்தகற்குக்
குரு[3]பூத வேலவ னிட்டூர சூர குலாந்தகனே.

(அந்.) இருகோட்...குலாந்தகன் பூத வீட்டில் இராமல், ஒருபூதரு... உணர்வற்றிரு என்றான்.

(பொ - உ.) (இருகோட்டு ஒரு கை) இரண்டு தந்தங்களையும் ஒரு துதிக்கையையும் கொண்டதும், (பொரு) சண்டைக்கு வந்ததுமான (பூதரம்) மலையன்ன யானையை உரித்து, அதன் தோலை (ஏகாசமிட்ட) மேற்போர்வையாகக் கொண்ட (புராந்தகற்கு) திரிபுரம் எரித்த

சிவபிராற்கு (குருபூத) குரு எனும் புனித ஸ்தானத்தைக்கொண்ட வேற்கர மூர்த்தி, (நிட்டூரம்) கொடுமை வாய்ந்த சூரனுக்கும் அவன் குலத்துக்கும் (அந்தகன்) காலனுயிருந்து அவர்களை அழித்தவன்—ஆகிய முருகவேள் (என்னைப்) பூத வீட்டில் இராமல்—பஞ்ச பூதங்களால் ஆய இந்த உடலில் இராமல் ஒரு பூதரும்—எந்த மனிதரும்—யாரும் அறிந்திராததான (தனி வீட்டில்) ஏகாந்த நிலையில் ஒப்பற்ற முத்தி நிலையில்—(உரை) வாக்கும், (உணர்வும்) (தற்போதமும்) நினைவும் அற்று இருப்பாயாக, (என்றான்) என்று உபதேசித்தான்.

(சு - உ.) சிவகுமரன், சூரசம்மாரம் செய்தவன் ஆகிய முருகன் என்னை வாக்கும் உணர்வும் அற்றதுமான பேரின்ப நிலையிற் 'சும்மா இரு' என்று உபதேசித்தார்.

(கு - உ.) [1]பூதரம் = மலைபோலும் யானை. [2]ஏகாசம் = மேற்போர்வை, [3]பூதம் = சுத்தம். புராந்தகற்குக் குரு பூதவேலவன், சூரகுலாந்தகன்; பூத வீட்டில் இராமல் ஒரு பூதருமறியாத தனி வீட்டில் உரை யுணர்வற்று இரு என்றான். சும்மா இருக்கும் மௌன நிலையே ஒரு பூதரும் அறியா நிலை என்பதை 17ஆவது பாடலிற் காண்க. உரை உணர்வு அற்று இரு என்றது "சும்மா இரு, சொல்லற' என்ற உபதேசம் (கந்தர் அநுபூதி 12), 'தனியாத சிந்தையும் அ விழ்ந்தவிழ்ந் துரையொழிந்து'-திருப்புகழ் 47, பூத வீடு—" ஐம்பூதத்தான் ஆகியதோர் ஆக்கைக் குகை '—வேல்பத்து. (தனிகைச் சந்நிதிமுறை), சிவபிரான் யானையை அட்டு அதன் தோலைப் போர்த்தது—திருப்புகழ் 286, பக்கம் 210, குறிப்பைப் பார்க்க.

## 46. பிரார்த்தனை - முருகனோடு ஒன்றுபட

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற்
[1]றோயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மநோதுக்க மானது மாய்வதற்கே.

(அந்.) சேயான......செந்திலாய்! சித்ர...மாய்வதற்கு...நீயான...நீ அருள்வாய்:

(பொ - உ.) (சேயான) சிவந்த நிறங்கொண்ட வேலேந்தும் கந்தக் கடவுளே! செந்தூர்ப் பெருமானே! (சித்ர மாதர்) அழகிய பெண்களின் அல்குலில் தோய்ந்து மனம் உருகியும்—(அந்தச் சிற்றின்பத்தைப்) பருகியும்—அனுபவித்தும், (பெருகி) அந்த இன்பத்திலேயே அதிகமாக ஈடுபட்டு, துவட்சி—சோர்வு அடையும் இந்த மாயமான விளையாட்டால் வரும் (மநோ துக்கம்) மன வேதனை (மாய்வதற்கு) அழிவதற்கு (நீ யான)

உன்னுடன் நான் ஐக்கியம் அடைவதற்குரிய ஞான விநோத நிலையை என்றைக்கு நீ எனக்கு அருள்புரிந்து உபதேசிப்பாய்.

(சு - உ.) சிற்றின்ப உணர்ச்சி நீங்க, முருகா! நீ என்று என்னை உன்னுடன் சேர்த்துக்கொள்வாய்.

(கு - உ.) 1தோயா=தோய்ந்து. நீயான ஞான விநோதம்—ஆன்மா சிவத்தொடு ஒன்றுபடுதல். "அவனே தானே ஆகிய அந்நெறி ஏகன் ஆகி"—அரனுடன் ஒன்றாகி நிற்பது—சிவஞான போதம் 10-ஆம் சூத்திரம். "ஏகபோகமாய் நீயும் நானுமாய்", "நீ வேறெனாதிருக்க நான் வேறெனாதிருக்க நேராக வாழ்வதற்கு"-திருப்புகழ் 862, 220. சேய்—செந்நிறம் "சேயுற்ற கார்நீர் வரவு"—பரிபாடல் 11-114. "சேய் எரி"—சம்பந்தர் 2-68-5. சேயான வேல்—செவ்வேல்.

## 47. தன் ஆனந்தம் கூறினது

1பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மாநந்த சாகரத்தே.

(அந்.) செயல் மாண்டடங்க......சாகரத்தே பத்தித் திருமுகம்...... அமுது கண்டேன்.

(பொ - உ.) என் செயல் ஒழிந்து ஒடுங்கின உடனே—புத்திக் கமலத்து—என் அறிவாகிய தாமரை மலரிலே—உருகியும், பெருகியும், (புவனம் எற்றி) உலக வாசனையைத் தள்ளி ஒதுக்கித், (தத்தி) பாய்ந்தும் கரை புரண்டோடின பரம ஆனந்தமாகிய பெருங் கடலினிடையே—(பத்தி) ஒழுங்காய் அமைந்த திருமுகங்கள் ஆறுடன் பன்னிரு தோள்களைக் கொண்டதாய், (தித்தித்திருக்கும்) எங்குமிலாததோ ரின்பச்சுவையைத் தருகின்றதான அமுதம் ஒன்றை நான் தரிசித்து (மகிழ்ந்தேன்).

(சு - உ.) என் செயல் ஒடுங்கின இடத்து பரமானந்தப் பெருங்கடல் வெள்ளந் தோன்ற அங்கே அறுமுகத் தமுதைத் தரிசித்தேன்.

(கு - உ.) 1பத்தி=வரிசை: "முத்தைத்தரு பத்தித் திருநகை"—திருப்புகழ் 1. பத்தித் திருமுகம்—"பத்தியதாம் ஆறுமுகம்"—திருப்புகழ் 1116.

செயல் மாண்டடங்கச் சிவானந்தம் பெருகும்:

"செயலற் றிருக்கச் சிவானந்த மாகும்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்திஉண் டாமே"-திருமந்-2319.

"என் செயல் அழிந்து அழிந்து அழிய மெய்ச் சிந்தை வர என்று நின் தெரிசனைப் படுவேனே'—திருப்புகழ் 47. ஆனந்த சாகரம்—இதனை 'அழிவின்றி நின்றதோர் ஆனந்த வெள்ளம்'—என்றார் மணிவாசகர்—திருவாசகம் 36-8.

## 48. தன் குறை கூறல்

**புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டியன்பாய்**
**முத்தியை வாங்க அறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்**
**[1]சத்தியை [2]வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்**
**குத்திய காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே.**

(அ ந்.) குவடு...காங்கேயனே! 'புத்தியை...தரமோ'—வினையேற்கு என் குறித்தனையே.

(பொ - உ.) (குவடு) கிரௌஞ்ச கிரியும் எழுகிரியும் (தவிடுபட) பொடி பொடியாய் விழ அவைதமை (வேற்படை கொண்டு) குத்திய (காங்கேயனே) கங்கா புத்திரனே! புத்தியை வாங்கி—பொறிவழியே (ஓடுகின்ற என் மனத்தை (வாங்கி) இழுத்துப் பிடித்து (நின்) உனது (பாதாம்புயத்தில்) திருவடித் தாமரையிற் (புகட்டி அன்பாய்) அன்புடனே புக வைத்து. (உன்னிடமிருந்து) முத்தி வீட்டை வாங்கும் வழியை அறிகின்றேன் இல்லை; (என் ஆணவத்தை) அடக்குதற்கு, முன்பு (முது சூர்) பழமையான சூரன் நடுங்கும்படி (சத்தியை) வேற்படையை (வாங்கு அத்தரமோ) செலுத்தி னையே அந்த வகைதானே எனக்கும்—சூரன் ஆணவத்தை அழிக்க வேலை விட்டாயே அந்த வழிதானே என் ஆணவத்தை அடக்குதற்கும்; (வினையேற்கு என் குறித்தனை)—வினைக்கு ஈடுபட்ட என்னை வழிப்படுத்த என்ன வழிதான் (நீ) குறித்துள்ளாய்!

(சு - உ.) மாயம் நிறைந்த கிரவுஞ்சத்தையும், ஆணவம் நிறைந்த சூரனையும் அடக்குதற்கு நீ வேலைப் பிரயோகம் செய்தாய்; அம் மாதிரி என் மயக்க அறிவையும் ஆணவத்தையும் அழிக்க உனது வேற்படையைத் தான் செலுத்த வேண்டி வருமோ! முருகா நீ என்னை வழிப்படுத்த எந்த வழியைத்தான் குறித்துள்ளாய்!

(கு - உ.) [1]சத்தி = வேல்; [2]வாங்குதல் = பிரயோகித்தல்; "வேல் வாங்கவே" - திருவகுப்பு 14. 'மலைபாறு கூறெழ வேல்வாங்கினானை' என்பர் பின்னும் 51. புத்தியை இறைவன் பாதாம்புயத்திற் புகட்டு தற்கும் அவன் அருள் வேண்டும் ஆதலால் 'நெஞ்சையும் தாளிணைக்கே புகட்டிப் பணியப் பணித்தருளாய்' "உனைச் சொற்றுதிக்கத்தக்க கருத்தைக் கொடுப்பை......" என்றார் 82, (திருப்புகழ்) 346 பாடல்களில். இந்தப் பாடல்-'இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும் கொன்னவில்

வேற் சூர்தடிந்த கொற்றவா! — முன்னம் பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட தனிவேலை வாங்கத் தகும்' என்னும் பாடலின் கருத்தைத் தழுவியது. [அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் பக்கம் 165 பார்க்க.]

## 49. நெஞ்சொடு கிளத்தல் - அடியார் பெருமை

சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் தொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை காண்[1]தண்டு [2]தாவடிபோய்த்
தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் [3]பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே.

(அந்.) "தண்டு தாவடி......நெடு நெஞ்சமே! சூரிற்......காண்".

(பொ-உ.) தண்டு—சேனையுடன், தாவடி போய்—போருக்கு எழுந்து—தேர் மீதும், யானை மீதும், குதிரை மீதும் ஏறித் திரியும் அரசர்களின் செல்வமெல்லாம் நீரிலே எழுதின (பொறி) எழுத்துப்போல அழியும் என்னும் உண்மையை) அறியாது பாவ எண்ணங்களையே, நெடுநேரம் எண்ணிக் கொண்டே இருக்கும் பாவி நெஞ்சமே! சூரன் மீதும் (கிரியில்) எழுகிரி, கிரவுஞ்சம் இவைகளின் மீதும் ஒளி வேலைச் செலுத்தின முருகனுடைய அடியார் கூட்டத்தைச் சார்ந்து வணங்கினாற் கதிபெறலாமே அன்றி வேறு வழி ஒன்றும் இல்லை என்னும் உண்மையை நீ அறிவாயாக.

(சு-உ.) நெஞ்சமே! அரசர் வாழ்வு கூட நிலையற்றது; முருகனது அடியார் கூட்டத்துடன் சேர்ந்தால்தான் நிலைபெற்ற முத்தி வீடு கைகூடும்.

(கு-உ.) 1தண்டு = சேனை; 2தாவடி = போர்; 'தண்டு தாவடி'—போர்ப் பயணம் எனலுமாம். 3பொறி—எழுத்து. 'கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்' [98] எனக் கலங்கின மனத்துக்கு இந்தப் பாடல் கதிபெறு வகையைக் காட்டுகின்றது. இந்தப் பாடலில் 'அடியார் பெருமையை அருணகிரியார் நன்கு எடுத்து விளக்குகின்றார்—'விண்டொழிந்தன நம்முடை மேல்வினை தொண்டரோ டினிதிருந்தமையாலே' எனச் சம்பந்தரும் [2-106-2], 'உய்யப் போந்தேனுக்கும் உண்டுகொலோ...... ஆரூர்த் திருமூலட் டானனுக்குப் பொய்யன்பிலா அடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே' என அப்பரும் [4-101-8, 9], 'அடியார்க்கும் அடியேன் எனச் சுந்தரரும்' [7-39], 'அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே' என மணிவாசகரும் [26]. 'உன் அடியரொடு கூடும் வகைமையருள் புரிவாயே' என அருணகிரியாரும் [திருப்புகழ் 121] கூறியுள்ளன காண்க. அடியரொடு கூடும்பேறு

அருணகிரியார்க்கு அவர் வேண்டியவாறே கிடைத்தது என்பதை 100ஆம் பாடலிற் காண்க. அரசர் செல்வமும் அழிவதை 'இபமாந்தர்', தினமணி சார்ங்கபாணி' எனத் துவக்கும் திருப்புகழ்ப் பாடல்களில் [816, 778] காண்க.

## 50. பிரார்த்தனை - யம பயம் நீங்க

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூர னடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே.

(அந்.) பெரும்பாம்பினின்று.........இராவுத்தனே! படிக்கும்......... அஞ்சலென்பாய்.

(பொ-உ.) பெரிய காளிங்கன் என்னும் பாம்பின் மீது நின்று நடனஞ் செய்த பெருமானும் திருமாலின் மருமகனே! கொடிய சூரன் நடுக்கம் கொள்ள (வெற்பை) அவனுக்கு அரணாயிருந்த எழுகிரியை (இடிக்கும்) பொடி செய்த (கலாபத் தனிமயில்) தோகை நிரம்பிய ஒப்பற்ற மயிலில் ஏறும் வீரனே! (படிக்கும்) கற்றோரால்—பெரியோரால்—ஓதப்படும் உனது அழகிய புகழ்களை நானும் எடுத்து எடுத்து ஓதுவேன்-(உனது திருப்புகழை மேலும் மேலும் நான் (போற்றுவேன்) பாடிப் பாடிப் போற்றுவேன்), நீ (கூற்றுவன்) எமன் (என்னைப்) பாசத்தினால்—பாசக் கயிற்றால் கட்டிப் பிடிக்கும்போது என் எதிர் தோன்றி வந்து ('அஞ்சல் என்பாய்') பயப்படாதே என்று திருவாய் மலர்ந்தருளுக.

(சு-உ.) திருமால் மருகனே! சூரனை நடுங்க வைத்த மயில்வாகனனே! உனது திருப்புகழைப் பாடுவேன்; யமன் வரும்போது நீ வந்து 'அஞ்சாதே' என்று எனக்குத் தைரியம் கூறுக.

(கு-உ.) காளிங்கன் மீது நடனம்—திருப்புகழ் 245-2 பக்கம் 114; பாட்டு 402, பக்கம் 518; பாட்டு 868, பக்கம் 544—கீழ்க் குறிப்புக்கள்.

இறைவன் திருப்புகழைப் பாடுதல் வேண்டும் :—

'திருப்புகழ் விருப்பாற் பாடிய அடியேன் படுதுயர் களையாய்'

'திருப்புகழ் விருப்பாற் பன்னலம் தமிழாற் பாடுவேற் கருளாய்'

—சுந்தரர் 7-69-2, 4.

'திருப்புகழ் முழக்குவன......பூதவேதாளம் அநேக விதங்களே'— திருவகுப்பு. முருகவேளின் திருப்புகழைப் போற்றுவதால் வரும் பயனை "வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர் சீலம் ஏத்திய சித்தப்ர சித்தரே"—(சிந்து வகுப்பு.) 'கருப்புகழாம் பிற சமயக் கதைக் கேளா தநுதினமுன் திருப்புகழை உரைப்போர்க்குச் சித்தியெட்டும் எளிதாமே'—தணிகைக் கலம்பகம் 1.

சூரன் நடுங்க இடிபட்ட வெற்பு—அவனுக்கு அரணயிருந்த எழுகிரி :— பாடல் 32-ன் குறிப்பைப் பார்க்க.

காலன் வரும்போது காத்திட "காலன் எனை நடுங்க அழைக்கும் பொழுது வந்தஞ்சலென்பாய்"—அபிராமி அந்தாதி 33. ராவுத்தன்—பாடல் 37 குறிப்பைப் பார்க்க. பாம்பை அடக்கி ஆடினர் திருமால்; பாம்பை அடக்கும் மயிலில் ஆடுகின்ருய் நீ; ஆதலால் கூற்றுவனது பாம்பன்ன பாசத்தை உனது மயிலே அடக்க வல்லது—என்பது குறிப்பு.

## 51. உலகுக்கு உபதேசம்

மலையாறு கூறெழ வேல்வாங்கி ஞனை வணங்கியன்பின்
நிலையான மாதவஞ் செய்குமி னேநும்மை நேடிவருந்
[1]தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீர்
இலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே.

(அந்.) மலையாறு கூறெழ வேல் வாங்கினனை அன்பின் வணங்கி, இலையாயினும் வெந்த தேதாயினும் ஏற்றவர்க்குப்...பகிர்ந்து நிலையான...... துணையுங் கண்டீர்.

(பொ-உ.) மலை—கிரவுஞ்சம் (ஆறு கூறெழ) ஆறு கூருகப் பிளவுபட வேலாயுதத்தை (வாங்கினனை) செலுத்தினவனை, அன்பின் வணங்கியும்—உண்மை அன்புடனே வணங்கியும், (இலையாயினும்) பச்சை வெள்ளரி போன்ற இலைக் கறிகளை—கீரைக் கறிகளையாயினும்—(அல்லது வெற்றிலை (பாக்கை) யாயினும்), வெந்த உணவு எதையேனும்—யாசிப்பவர்களுக்குப் (பகிர்ந்து) பங்கிட்டுக்கொடுத்தும், நிலையான நல்ல தவத்தைச்செய்யுங்கள்; (அங்ஙனம் செய்வது) நும்மை நேடிவரும்—உங்களைத் தேடிவரும்—(தொலையா வழிக்கு) இறந்த பின் நீங்கள் செல்ல வேண்டிய தொலையாத நீண்ட வழிக்குப் (பொதி சோறும்) கட்டுச் சோறும், உற்ற—பொருந்திய துணையுமாம் (என்பதைக்) கண்டீர்—அறிவீர்களாக.

(சு-உ.) பசித்து யாசிப்பவர்க்கு பச்சையாகவோ, வெந்ததாகவோ ஏதேனும் முருகனைத் தியானித்து உண்ணக் கொடுங்கள்; அச் செய்கை நீங்கள் இறந்த பின் போகும் நெடுவழிக்குப் பொதிசோறு போல உதவும், துணையாகவும் நிற்கும்.

(கு-உ.) 1தொலையா வழி = நீங்குதற்கரிய பிறவிகள் எனலுமாம்.

ஆறு—பக்கம் எனக்கொண்டு, கிரவுஞ்சத்தின் பாகங்களெல்லாம் கூறுபட—எனலுமாம். "நாலாறும் ஆருய்"—நாலடி 383. வேலின் ஆறு முகத்தாலும் கூறுபட்டதென்பர் வேலுக்கு ஆறுமுகம் உண்டு :—

'அந்தமில் ஒளியின் சீரால் அறுமுகம் படைத்த பண்பால்
எந்தைகண் ணின்றும் வந்த இயற்கையாற் சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையால் தனிவேற் பெம்மான்!
கந்தனே என்ன நின்னைக் கண்டுளங் கவலை தீர்ந்தேம்'
—கந்த புராணம் - 3-ஆம் நாள் பானுகோபன் யுத்தம் 212.

வாங்குதல் — செலுத்துதல் — "வாங்கினர் மதில் மேற்கணை" — சம்பந்தர் 2-26-2. 'வேல் வாங்கு வகுப்பு'-என வருவதுங் காண்க.

இந்தப் பாடல் ஈதலின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றது. பாடல்கள் 16, 18, 53, 54, 59, 66, 75, 100-ம் பார்க்க. தான தருமம் செய்யும் போதும் இறைவன் தியானம் இருக்கவேண்டும் என்பதையும் இப் பாடல் குறிக்கின்றது. "கரவா திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய் —என்றார் கந்தரநுபூதியிலும் [7].

இறந்த பின் செல்லும் வழியைத் 'தொலையா வழி' என்றார் இப்பாடலில்; "விடாய்ப்படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும் வழி" என்றார் 56-ஆம் பாடலில். 'உயிர் போம் அத்தனி வழி' என்றார் 59-ஆம் பாடலில்.

இலை—வெற்றிலை எனவும் பொருள் கொள்ளலாம். பசித்து வந்தவர்க்கு அளிக்க உணவு இல்லையாயின் வெற்றிலை பாக்கேனும் கொடுத்து உதவுவது நெடு நாளைய வழக்கு - வெற்றிலையுடன் பாக்கையும் உபலக்ஷணத்தாற் கொள்ளுதல் வேண்டும். "ஈக பாக்குடன் வெற்றிலை" (சித்து வகுப்பு). இலை - வெற்றிலை - 'இலை பிளவதனை நடித்துக் கேட்கவும்" (திருப்புகழ் 53) என வருமிடத்துங் காண்க.

"ஏற்றவர்க்கு ஏதாயினும் பகிர்ந்தளித்தலே—நிலையான மாதவம்— என்றார். "ஈதல் அறம்" என்றார் ஔவையார். 'பசியுற் றவருக் கமுதைப் பகிர்தற் கிசையாதே'-'பகிர நினைவொரு தினையள விலுமிலி' 'நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்'—என வருவதைக் காண்க. [திருப்புகழ் 249, 1009, அலங்காரம் 18.]

## 52. பிரார்த்தனை - செந்தமிழாற் பாட

[1]சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீ;பணி பாச[2]சங் க்ராம பணமகுட
[3]நிகராட் சமபட்ச [4]பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச [5]விட்சோப தீர குணதுங்கனே.

(அந்.) பணிபாச......துங்கனே' சிகராத்ரி......ஆர்வம் ஈ"

(பொ - உ.) பணி - பாம்பின் (பாசம்) தன்னைக் காக்கவேண்டும் என்கின்ற பாசத்தினுல் - பற்றினுல் (சங்கிராமம்) போர் செய்கின்ற (பனு மகுட நிகரம் - படஉச்சிகளின் கூட்டத்தின், (அக்ஷமம்) பொறுமையிழந்த கோபத்தை, பணி......அக்ஷமத்தை - பாம்பின் கோபத்தை - பட்ச(ண) பட்சி - தனது வாயால் உணவு கொள்வது போலக் கொத்தி அடக்குகின்ற (பட்சி துரங்கம்) குதிரை வாகனம் போன்ற மயிலை (வாகனமாகவுடைய) நிருப - அரசே; குமரமூர்த்தியே; குகமூர்த்தியே; ராக்ஷச பட்ச—அசுரர்கள் பக்கம் - அசுரர்கள்பால் (விட்சேர்ப - சோபம் விள்) இரக்கம் நீங்கின இரக்கம் காட்டாதிருந்த தீரனே; குண சிரேஷ்டனே; சிகராத்ரி - சிகரங்களை உடைய கிரௌஞ்ச மலையைக் கூறுசெய்த வேற்படையையும் செவ்விய கோழியையும் செந்தமிழ்ப் பாடல்களால் (பகர் ஆர்வம்) போற்றி செய்யும் விருப்பத்தை (ஈ) தந்தருளுக.

(சு - உ.) முருகா! உனது வேலையும், சேவலையும் செந்தமிழ்ப் பாவால் துதிக்கும் விருப்பத்தை எனக்குத் தந்தருளுக.

(கு - உ.) [1]சிகர - அத்ரி (மலை). [2]சங்க்ராமம் = போர். [3]நிகரம் = கூட்டம். அக்ஷமம் = பொறுமையின்மை. [4]பட்சி துரங்கம் = மயில், 'பக்ஷியெனு முக்ர துரகம்' - திருப்புகழ் 3. [5]விட்சோபம் = கலக்கமின்மை. முருகவேள் "செந்தமிழ் வடாது கலை சேர்ந்துழி உலாவும்"-கந்த புராணம் 1-14-5) எனினும் அவருக்கு உகந்தது செந்தமிழே—அவர் தமிழ்க் கடவுள் எனக் கூறப் பெறுவர். வேலையும் சேவலையும் போற்ற வேண்டும் என்று அருணகிரியார் எண்ணினபோது மனத்தில் உதித்த ஆசுகவியின் சொற்களெல்லாம் வடமொழியில் அமைந்தன; அதை உணர்ந்த அவர் தமிழ்க் கடவுளாம் முருகனிடம் செய்யவேண்டிய விண்ணப்பப் பகுதியைச் செந்தமிழில் அமைத்துக் "கூறிட்ட வேலுஞ் செஞ்சேவலும் செந்தமிழாற் பகர் ஆர்வம் ஈ" என்ருர். செய்யுளின் பிற பகுதிகள் வடமொழியில் அமைய:

தமது வழிபடுகடவுளாம் சம்பந்தப் பெருமானைப் போலச் செந்தமிழிலேயே தமது பாடல்கள் அமையவேண்டும் என்பது அருணகிரியாரின் பேரவா! 'செந்தமிழ் பாடும் புலப்பட்டம் கொடுந்தற்கும் ......... க்ருபைச் சித்தம் புரிவாயே'—'செந்தமிழ் வழுத்தியுனை அன்பொடு துதிக்க மனம் அருள்வாயே'. 'புகலியில் வித்தகர் போல அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே'—[திருப்புகழ் 34, 398, 242] என வருவன காண்க. சம்பந்தர் தம்மைச் 'செந்தமிழ் ஞான சம்பந்தன்' எனப் பல இடங்களிற் குறித்துள்ளார்.

ஈ = தந்தருள் - ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோன் மாட்டு இரக்கும் சொல். "செல்வர் பாற் சென்று ஈ எனக்கென்னும் இம்மாற்றம்"—நளவெண்பா - கலிதொடர்-71.

"ஈ, தா, கொடு எனும் மூன்றும் முறையே இழிந்தோன், ஒப்போன், மிக்கோன் இரப்புரை" - நன்னூல் சூ-407.

மயில்-பாம்பைக் கொத்தி உண்ணும்-'ஆடு வெம்பண காகோதாசனம் ஊறு கண்டிட மேல்விழ் தோகை'—திருப்புகழ் 1000. 'பணிபாச சங்க்ராமம்'-'தாக்கமருங் கொரு சாரை'-திருப்புகழ் 291. அட்சம பணி பட்ச-பணி பட்சண; பட்சண-பட்ச-கடைக்குறை.

ராட்சச பட்ச வில் சோப தீரன்—'நிசாசரர் தக'-கந்தரந்தாதி 48. "நிருதரர்க் கொரு காலா"-திருப்புகழ் 1168. வேல்-சேவலைப் பாட விரும்பினர் அருணகிரியார். 'ஆடும்பரி வேல் அணி சேவலெனப் பாடும் பணியே பணியா அருள்வாய்'-கந்தரநுபூதி-1. "தாரை வடிவேலைச் சேவல்தனை......சிந்தியேனோ"-திருப்புகழ் 525. "வெற்றி வேலதும்...... அதிர அரற்று கோழியும்...... மறவேனே"—திருப்புகழ் 169.

## 53. உலகுக்கு உபதேசம்

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினுற்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்
றேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே.

(பொ-உ.) வேடிச்சி—வேடர் குல மகள் வள்ளியின் கொங்கையை விரும்பின குமாரக் கடவுளை உண்மையான அன்புடனே பாடிக் (கசிந்து) உள்ளம் உருகி, (உள்ளபோதே) கையில் பொருள் இருக்கும் பொழுதிலேயே (கொடாதவர்) தானம் செய்யாதவர்கள், (பாதகத்தால்) பெரும் பாவ வழியிலே தாம் தேடின பொருளைத் (தங்களுக்குப் பயன்படா வகையில்) புதைத்து வைத்தும், திருட்டிலே இழந்தும், திகைப்புற்று—மயக்கம் அடைந்து, (இளைத்து) சோர்வுற்று, வாடிக், (கிலேசித்து) கவலைப்பட்டுத் (தமது) வாழ்நாள்களை வீண் பொழுதாக அழித்தவர்களாவார்கள்.

(சு-உ.) முருகனைத் தியானித்துத் தானஞ் செய்யாதவர்களின் பொருள் அவர்களுக்குப் பயன்படாமற் போய்க் கவலையை ஊட்டும்.

(கு-உ.) கொங்கையை விரும்புதல்—பாடல் 6 கீழ்க்குறிப்பு.

'உள்ளபோதே' கொடுக்கவேண்டும்—"கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ் செய்மின்"—நாலடி 2-9.

"என்னும் ஒன்றுதங் கையுறப் பெற்றக்கால் பின்னுவ தென்று பிடித்திரா...முன்னே கொடுத்தார் உயப் போவர்"—நாலடியார் 1-5.

கொடாதவர்...திருட்டிற் கொடுத்துக் கிலேசிப்பர்-"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்"-கொன்றைவேந்தன் 4. 'கொடா அது வைத்தீட்டினர் இழப்பர்'-நாலடி 1-10. பாதகத்தாற் தேடினவை பாழ்போதலை—"அழக்கொண்ட எல்லாம் அழப்போம்"—என்னும் திருக்குறளிற் (659) காண்க.

## 54. தன் குறை கூறல்

சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றித் தளர்ந்தவர்க்கொன்
[1]றீகைக் கெனைவிதித் தாயிலை யே யிலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே.

(அ·.) இலங்காபுரிக்கு...வாகனனே! சாகைக்கு...விதித்தாயிலையே.

(பொ-உ.) இலங்காபுரிக்கு-இலங்கைப் பட்டணத்துக்குப் போதற்கு நீ வழிகாட்டுவாயாக என்று (போய்) கடற்கரையை அடைந்து (வருணன் வழி காட்டாததால் கோபித்து)க் கடலைத் தீப் பற்றும்படி (தனது) (வாகை) வெற்றி பொருந்திய (சிலை) வில்லை வளைத்த ஸ்ரீராமரின் (திருமாலின்) மருமகனே! மயில் வாகனனே! சாகைக்கும்-இறந்துபோதற்கும், மீண்டு-மறுபடியும் பிறந்து (பூமியில்) வருதற்கும் என்னைப் படைத்தனையே தவிரத், (தளர்ந்தவர்க்கு) வறுமையாற் சோர்வுபட்டு வருந்துபவர்களுக்கு (ஒன்று) ஏதேனும் ஒரு பொருளை (ஈகைக்கு) கொடுப்பதற்கு—(எனை) என்னை (விதித்தாயிலையே) பிறப்பித்தாயில்லையே—அந்த நல்லெழுத்தை (விதியை) எழுதி இவ்வுலகுக்கு நீ என்னை அனுப்பவில்லையே! இதுவோ என் தலை எழுத்து—என்றபடி.

(சு-உ.) முருகா! தானஞ் செய்யும் புத்தியை எனக்கு நீ கொடுக்க இல்லையே! சாதற்கும் மீண்டும் பிறத்தற்குந் தானு நான் வந்துள்ளேன்?

(கு-உ.) 1 "ஈயமாட்டேன் என் செய்வான் தோன்றினேன் ஏழை யேனே"—அப்பர் 6-95-9; கடல்மீது ஸ்ரீராமர் பாணம் எய்தது—திருப்புகழ் 177, பக்கம் 412, பாடல் 754, பக்கம் 248 கீழ்க்குறிப்பு: கடல்மீது ஸ்ரீராமர் பாணம் விடக் கடல் பட்டபாட்டை—

"சுடுசரந் துரந்தான் ......பெய்கணை நெருப்பால்
அங்கியின் குன்ற மொத்தது கடற்குட்டம்...அளக்கர் சேறு
தீந்தெழக் காந்தின சேடன் தன் சிரங்கள்...வெந்து தீந்தன
கரிந்தன, பொரிந்தன - சில மீன்" எனக் கம்ப ராமாயணம்

வருணனை வழி வேண்டு படலத்திற் பரக்கக் காண்க 17-26.

"மீனேறு குண்டாழி தீவாய் மடுத்த தனி வில்லியார்"—முத்துப் பிள்ளைத் தமிழ்-செங்கீரை 5.

## 55. உலகுக்கு உபதேசம்

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மாநந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

(பொ - உ.) நான் என்னும் அகங்காரத்தையும் அடக்க மாட்டார்கள், மனவேகத்தை அடக்கி ஒடுங்கமாட்டார்கள், (இறைவனைத் தியானிப்பதால் வரும்) பரமானந்தத்தை நிரம்ப அனுபவிக்கமாட்டார்கள், நினைப்பு, மறப்பு என்னும் நிலைகள் அறச் 'சும்மா' இருக்கமாட்டார்கள், தினை அளவு பொழுதேனும் (ஒங்காரத்துள்ளொளிக்குள்ளே) பிரணவத்தின் உள்ளொளியாய் விளங்குகின்ற முருகவேளின் திருவுருவத்தைப் பார்த்துத் (தூங்கார்) சமாதி நிலையில் இருக்கமாட்டார்கள்; இறைவனுக்குத் (தொழும்பு) தொண்டு புரியார்கள்-இங்ஙனம் இருப்பவர்கள் (யமதூதருக்கு என் செய்வார்) யமதூதர்கள் வரும்போது என்ன செய்யக்கூடும்-ஒன்றும் செய்ய முடியாது என்றபடி.

(சு - உ.) யான் என்பது அற்றுப்போதல், புலனொடுங்குதல், பரமானந்தத்தில் நிறைவு பெற்றிருத்தல், சும்மா இருத்தல், தியானத்தால் பிரணவ மத்தியில் முருகனைத் தரிசித்தல், இறைவனுக்கும் இறைவன் அடியவர்க்கும் தொண்டு செய்தல்—இவை தம்மில் ஒரு நெறியும் இல்லாதவர் யம தூதர்கள் வரும்போது என்ன செய்ய முடியும்!

(கு - உ.) "ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமற் றூங்கிச் சுகம் பெறுவ தெக்காலம்"—எக்காலக் 3. பத்ரகிரியார், பட்டினத்தார் பாடல்களை அருணகிரியார் அடிநாளில் படித்திருப்பார் போலும். அலங்காரம் 73, 78-ம் பார்க்க. அகங்காரம் அடங்குதல்—"யான் தான் எனுஞ் சொல் இரண்டும் கெட்டாலன்றி யாவருக்கும் தோன்றாது சத்தியம்" (95).

ஒடுங்குதல்—"ஐந்தில் ஒடுங்கில் அரன்பதமாவது"-திருமந்-2035.

பரமானந்தத்தில் தேங்குதல்—பாடல் 47 பார்க்க. 'தேக்கு பரமானந்தத் தெள்ளமுதம்'-கந்தர் கலிவெண்பா 28.

நினைப்பு மறப்பு அறுதல்: "மறப்பும் நினைப்புமற்று மாண்டிருப்ப தெக்காலம்"-பத்ரகிரியார்-எக்காலக்கண்ணி 194. "நினைப்பு மறப்பற்று நிறைந்த அறிவாய்"—ஒழிவிலொடுக்கம்-விரத்தி 7.

"நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம் வினைப் பற்றறுக்கும் விமலனிருக்கும்"—திருமந்திரம் 2970. நினைப்பு மறப்பு=சகல கேவலங்கள். "கருதா மறவா நெறி" என்றார் அநுபூதியில் 21.

"ஓங்காரத் துட்பொருளை ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"—திருவாசகம்- அச்சோப் பதிகம் 7.

"தூங்கிக் கண்டார் சிவலோகமுந் தம்முள்ளே,
தூங்கிக் கண்டார் சிவயோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார்நிலை சொல்வதெவ் வாறே"
—திருமந்திரம் 129.

"உணர்வொடு தூங்குவார்க்கே விளங்கு மநுபூதி',—திருப்புகழ் 757.

ஓங்காரத்துள் இறைவனைக் காணுதல்—'ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் கண்டாய்', 'ஓங்காரத் துட்பொருளை'—அப்பர் 6-39-10; 6-63-3; 'ஓங்காரத் துள்ளொளிக்கும் உள்ளொளியாய்'—கந்தர் கலிவெண்பா 59.

தொழும்பு = தொண்டு. "என்னைத் தன் தொழும்பிற் கொண் டருளும் வானவன்"—திருவாசகம்-திருவம்மானை 14.

## 56. உலகுக்கு உபதேசம்

கிழியும் படி[1]யடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.

(அந்.) கிழியும்......இருப்பீர்! மறந்தவர்க்கே "எரிவாய்...பகரீர்"—

(பொ-உ.) (உலகோரே! நீங்கள்) கிழிந்து பிளவு படும்படி வலிய கிரௌஞ்ச மலையை (வேல் கொண்டு) எறிந்தவனாகிய முருகனைப் போற்றும் (கவி) பாடல்களைக் கேட்டு உருகி, ஏனைய இழிவான கவிகளைப் படித்து வீண்பொழுது போக்காமல், (இருப்பீர்) வாழ்வீர்களாக; (இந் நல்வழியை) மறந்தவர்க்கு—எரிவாய் நரகக் குழியும்—எரியைக் கக்கும் கும்பி பாகம் என்னும் நரகக் குழி ஒன்று இருப்பதையும், (துயரும்) அக் குழியிற் படவேண்டிய வேதனையையும், (விடாய்ப்பட) தாகம் மென்மேலே எடுக்கக் (கூற்றுவன்) யமனுடைய ஊர்க்கு-யமபுரிக்குப் போகும் (வழியும் துயரும்) வழியின் கஷ்டத்தையும் துன்பத்தையும் (பகரீர் பகரீர்) சொல்லுங்கள் சொல்லுங்கள்.

(சு-உ.) முருகன் புகழ் நூலைப் படியுங்கள்; இழிவான மற்றவற்றைப் படியாதீர்கள்; இதை மறந்தவர்க்கு நரக வேதனையை ஞாபகம் ஊட்டுங்கள்.

(கு-உ.) [1]அடற் குன்று = வலிய கிரௌஞ்ச மலை. கூற்றுவன் ஊர்க்குச் செல்லும் வழியைத் 'தொலையா வழி' என்றார் 51-ஆம் பாடலில் 'உயிர்போம் அத் தனிவழி' என்றார் 59-ஆம் பாடலில்.

## 57. உலகுக்கு உபதேசம்

பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணுது மாய வுடம்பிதுவே.

(பொ - உ.) பொரு—பொருந்தி உள்ள (பிடியும்) பெண் ஆனையும், (களிறும்) ஆண் யானையும் விளையாடுகின்ற (புனம்) மலைச் சார்பான கொல்லையில் (சிறுமான்) சிறிய மான் உருவுடன் வந்த இலக்குமி (தரு) ஈன்றெடுத்த (பிடி—) பெண் யானை அனைய வள்ளியின் (காவலனே) நாயகனே! ஷண்முக மூர்த்தியே! என்று (சாற்றி) வாய் குளிரக் கூறி (நித்தம்) நாள்தோறும் (இரு) காலம் செலுத்துக; பிடி சோறு எடுத்து (பசித்து வந்தவர்க்கு) அளித்து நீ உண்டு (இரு) வாழ்வாயாக; (வினையோம்) நல்வினை—தீ வினைக்கு ஆளாகிய நாம் இறந்தால் (நமது உடல்) (தீக்கு இரையானல்) ஒரு பிடி சாம்பல் அளவுகூடக் காணுது; அத்தகைய மாய உடம்பு இந்த உடம்பு,

(சு - உ.) வள்ளி நாயகனே! அறுமுகவா என்று நாடோறும் கூறி ஏற்பவர்க்குப் பிடிசோறு இடு; பின் உண்ணுக; தீக்கு இரையாகி ஒருபிடி சாம்பல் அளவும் கூடக் காணுது இந்த உடல்.

(கு - உ.) பிடி காவல—என்ற இடத்து, பிடி—வள்ளி: 'தினைகன் காத்த பிடி'—திருப்புகழ் 1093. புனச்சிறுமான் (வள்ளி) காவல! (தரு) கற்பகத் தருவின்கீழ் வளர்ந்த - பிடி - தேவசேனை காவல—எனவும் பொருள் காணலாம்.—அருணகிரிநாதர் நூலாராய்ச்சி-பக்கம் 166 பார்க்க. 'இருபிடி சோறு கொண் டிட்டுண்டு' எனப் பிரித்து அதற்கு 'பிடிசோறு கொண்டு இட்டு, உண்டு இரு' என அந்வயப்படுத்திப் பொருள் கூறி, இருவினையோம் இறந்தால்-எனப் பிரித்தும் பொருள் காணலாம்; பின்னும் இருபிடி சோறே இருந்தாலும் அதில் ஒருபிடி சோறு இட்டு, எஞ்சின ஒரு பிடியை நீ உண்பாயாக—எனப் பொருள் காணவும் கிடக்கின்றது.

'யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப் பிடி'-திருமந்திரம் 252. 'எமக்கென் றென் றிட்டுண் டிரும்'-ஔவையார் நல்வழி 11. இரண்டு பிடி சோறேனும் இட்டுப் பின்பு உண்—எனவும் பொருள் காணலாம். ஒருபிடி சாம்பல்—'இருவினை நீண்ட காயம் ஒருபிடி சாம்பலாகி'—திருப்புகழ் 778, பக்கம் 312 கீழ்க்குறிப்பு—'ஒருபிடி நீறும் இலாத உடம்பை" பட்டினத்தார்-உடற்கூற்று வண்ணம். உண்ணுமுன் நாம் அவசியம் அநுட்டிக்க வேண்டிய ஒரு நல்ல உபதேசத்தைக் கொண்டுள்ளது இப் பாடல். மனம், வாக்கு, காயம் எனப்படும் இம் மூன்றில் உண்ணு முன் மனம்—முருகனைச் சிந்திக்கவேண்டும் — வாக்கு — வள்ளி காவலனே! ஷண்முகா எனக் கூறுதல் வேண்டும். காயம்—(உடல்) பிடி சோறு— ஒருவர்க்கு இட்டுப் பின்பு உண்ணுதல் வேண்டும்.

இந்தப் பாடல் அன்னதான விசேடத்தையும் காட்டுகின்றது.

"பொருப்பினுள் தலைமை எய்தும் பொன்னெடுங் குடுமிமேரு.
தருக்களில் தலைமை சாரும் தண்ணறுந் தெய்வ தாரு.

விருப்புரு வேள்வி தம்முள் மேம்படும் புரவி மேதம்,
அருட்படு தானந் தம்முள் விழுமிதாம் அன்னதானம்.'
—திருவிளையாடற்புராணம்-மூர்த்தி 8

## 58. முருகன் கருணை - பெருமை

நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்றுத் தனத்திற் கினிய பிரானிக்கு முல்லையுடன்
[1]பற்றுக்கை யும்வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற்
செற்றூர்க் கினியவன் தேவேந்த்ர லோக சிகாமணியே.

(பொ - உ.) (நெற்று) முதிராத பசிய கதிர்களை உடைய, செம்மை வாய்ந்த (ஏனல்) தினைக் கொல்லையைக் காத்திருந்த (நீல வள்ளி) நீலநிற வள்ளியின் முற்றாத கொங்கைக்கு இனிய பிரான்—(வள்ளிக்கு உகந்த பிரான்) (தேவேந்த்ர லோக சிகாமணியே); (இக்கு) கரும்பு வில்லும், (முல்லை) தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் ஆகிய மலர்ப் பாணங்களும், (பற்றுக்கையும்) அம்பு கட்டும் கயிறும்—வெந்து, அவையுடன் (சங்க்ராம வேளும்) போர் செய வந்த மன்மதனும் அழிய (விழியால்) தமது கண் நெருப்பால் (செற்றூர்க்கு) அம் மன்மதனை எரித்தழித்த சிவமூர்த்திக்கு (இனியவன்) உகந்தவன்-(தேவேந்த்ர லோக சிகாமணியே)-தேவேந்த்ர உலகுக்கு ஒரு சிரோரத்தினம் போன்ற முருகவேளே.

(சு - உ.) தேவேந்த்ர உலகத்துக்குச் சிரோரத்தினம் போன்ற முருகவேள் வள்ளிக்கு உகந்தவன், சிவபிராற்கு இனியவன்.

(கு - உ.) [1]பற்றுக்கை—"பகழிந்திரயின் பெயர் பற்றுக்கை"—பிங்கலம்; அம்புகட்டும் பாசம் (கயிற்றின் பெயர்) பற்றுக்கை—சூடாமணி நிகண்டு. திருமாலின் நிறம்—பச்சை - நீலம் - கறுப்பு எனக் கூறுவது போல வள்ளியின் நிறமும் - பச்சை - நீலம் - கறுப்பு. பச்சைமால், நீல வண்ணன், கருமுகில் என்பதுபோல—'பச்சைக் குறவி' கருங் குறமின் எனப்படுவாள் நீல வள்ளி.

முல்லை முதலிய மன்மதன் பாணங்கள்—திருப்புகழ் 19, பக்கம் 60 கீழ்க்குறிப்பு. சிவபிரான் காமனை எரித்த வரலாறு—திருப்புகழ் 399, பக்கம் 510 குறிப்பு

## 59. உலகுக்கு உபதேசம்

[1]பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ
எங்கா யினும்வரு மேற்பவர்க் கிட்ட திடாமல் வைத்த
[2]வங்கா ரமுமுங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
[3]சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே.

(அ்.) கெடுவீர் !—பொங்கார ...... மடந்தையரும் உயிர்போம் அத் தனி வழிக்குச் சங்காதமோ.

(பொ - உ.) கெடுவீர் ! ஐயோ ஈயாது வைத்துக் கெட்டுப் போகிறீர் களே ! பொங்கார வேலையில்—அலைகள் பொங்கி எழுகின்றதும், (ஆரம்) முத்துக்களை உடையதுமான கடல்மீது (வேலை விட்டோன்) வேலைச் செலுத்தினவனான திருமுருகன் திருவருள்போல (உங்களுக்கு உதவ)—(எங்காயினும் வரும் ஏற்பவர்க்கு இட்டது) ஏற்பவர்க்கு—யாசித்தவர்க்கு இட்டது — நீங்கள் கொடுத்துதவின உதவி — (எங்காயினும வரும்) உங்களுக்குப் பிரதி உபகாரம் செய்ய எந்த சமயத்திலாவது வந்து உதவி செய்யும்; அங்ஙனம் இட்டு உதவி செய்யாது (நீங்கள்) சேகரித்து வைத்த (வங்காரமும்)—பொன்னும், உங்கள் (சிங்கார வீடும்)-அலங்கரிக்கப் பட்ட வீடும், (மடந்தையரும்) வீட்டு மாதர்களும் (உயிர்போம் அத் தனி வழிக்குச் சங்காதமோ) நீங்கள் இறந்தபின் உங்கள் உயிர் செல்லுகின்ற அந்த தனி வழிக்கு உங்களுக்குத் துணையாய் வருமா? துணையாய் வருவார்களா ?

(சு - உ.) ஏற்பவர்க்கு இட்டது - முருகன் திருவருள்போலத் தக்க சமயத்தில் வந்து உங்களுக்கு உதவும்; இடாது சேகரித்த மண் - பொன் - பெண்—இம் மூன்றும் உயிர் போகும் அந்தத் தனி வழிக்குத் துணையாக வாரா; ஆதலால் ஈதல் அறம் என்பதை உணர்வீர்களாக! கெட்டுப் போகாதீர்கள்.

(கு - உ.) 1பொங்கல்—கிளர்தல். 2வங்காரம் = பொன்; "வங்கார மார்பில்" — திருப்புகழ் 817. 3சங்காதம் = துணை, கூட வருதல், வேலையில் வேலை விட்ட வரலாறு :—திருப்புகழ் 905, பக்கம் 640. பாடல் 1148, பக்கம் 344-கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க. ஈதலாகிய அறமே துணை யாவது; மற்றவை துணையாக வாரா—

"மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ"—மணிமேகலை 6-103.

"இளமையும் நில்லா, யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
புத்தேள் உலகம் புலவரும் தாரார்
மிக்க அறமே வழித்துணை யாவது
தானஞ் செய்யெனத் தருமதத்தனும்...வான்பொருள் காட்டி"
—மணிமேகலை-22, 135, 140.

'இல்லும் பொருளும் இருந்த மனை யளவே;'—க்ஷேத்திரத் திருவெண்பா 14. 'உற்றார் ஆர் உளரோ உயிர் கொண்டு போம்பொழுது' —அப்பர்-4-9-10.

"அத்தமும் வாழ்வும் அகத்துமட் டே, விழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டே, விம்மி விம்மி இரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே,
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே"
—பட்டினத்தார் - பாடற்றிரட்டு-பொது 13.

## 60. தன் குறை கூறல்

சிந்திக் கிலேனின்று சேவிக் கிலேன்றண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனொன்றும் வாழ்த்து கிலேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன்பொய்யை நிந்திக்கி லேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே.

(அந்·) புந்திக் கிலேசமும் ......... போக்குதற்கே மயில் வாகனனைச் சிந்திக்கிலேன்......உண்மை சாதிக்கிலேன்.

(பொ - உ.) (புந்திக் கிலேசமும்) மன வேதனையையும் (காயக் கிலேசமும்) உடலுக்கு உறு வேதனையையும் (போக்குதற்கு) போக்க வேண்டி (நான்) (மயில் வாகனனை) மயில்வாகனக் கடவுளாம் முருகனைச் (சிந்திக் கிலேன்) தியானிக்கின்றேன் இல்லை, நின்று பணி செய்கின்றேன் இல்லை, அவனது தண்டை சூழும் சிறிய திருவடிகளை (வந்திக்கிலேன்) வணங்கு கின்றேன் இல்லை, ஒரு சிறிதளவும் - ஒரு துதி சொல் சொல்லியும்— (வாழ்த்துகிலேன்) துதிக்கின்றேன் இல்லை, (சந்திக்கிலேன்) அவனது சந்நிதியை அடைந்து அவனைத் தரிசிக்கிறேன் இல்லை ; பொய் என்பதை இகழ்ந்து - அதை விடுகின்றேன் இல்லை; உண்மையையே என்றும் (சாதிக்கிலேன்) கடைப் பிடித்து நிலையாகப் பேசுகின்றேன் இல்லை.

(சு - உ.) மன வேதனையையும் உடல் வேதனையும் ஒழிக்கவேண்டி முருகவேளை நான் சிந்தித்துச் சேவித்து, வந்தித்துத் வாழ்த்தி தரிசிக் கின்றேன் இல்லை ; பொய்யை விட்டு மெய்யையே பேசுகின்றேன் இல்லை.

(கு - உ.) மனம், வாக்கு, காயம் இவை சுத்திபெற வேண்டி— முருகனை மனத்தால் தியானித்தலும், வாக்கால் வாழ்த்துவதும், காயத்தால் சேவித்துப் பணிவதும் வேண்டும் - என்றபடி. இதனைச்—

"சிந்தம தொன்றிச், செய்கழல் உன்னிச், சிவனென்று
நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே"—எனத்
தெளிவாகச் சம்பந்தப் பெருமான் எடுத்துரைத்துள்ளார் [1-100-8].
புந்திக் கிலேசம்—கவலை, மயக்க அறிவு, அச்சம்; காயக்கிலேசம் — உடல் நோய்களால் வருந் துன்பம்.

## 61. தன் ஆனந்தங் கூறினது

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித் தவா!பஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.

(அந்.) பஞ்ச பூதமும்.....காட்சியதே! வரையற்று...போதித்தவா!

(பொ-உ.) (பஞ்ச பூதமும் அற்று) (மண், நீர், தீ, காற்று, வான் எனப்படும் - பஞ்ச பூதங்களால் வரும் சேஷ்டைகள் நீங்கி, (உரை அற்று) வாக்கு அடங்கி, (உணர்வு அற்று) உணர்ச்சிப் புலன்கள் ஒடுங்கி, (உடல் அற்று) தேக உணர்ச்சி நீங்கி, (உயிர் அற்று)—ஆன்ம உணர்ச்சி அற்று - யான் எனும் உணர்ச்சி நீங்கி, (உபாயம் அற்று)—சிந்தித் திறங்கள் அற்று, (கரையற்று) எல்லை கடந்து, (இருளற்று) அஞ்ஞான இருள் நீங்கி, (எனதற்று) எனது என்னும் மூவாசைகள் நீங்கி—இருப்பதான ஒரு காட்சி நிலையை; (வரையற்று) கிரௌஞ்சம் தொலைந்து, அவுணர் (சிரமற்று) அசுரர்களின் தலைகளெல்லாம் அறுபட்டழிந்து, (வாரிதி வற்ற) கடலும் சுவறச் (செற்ற) கோபித்தழித்த—(புரையற்ற) குற்றமிலாத - நிகரிலாத வேலாயுதப் பெருமான் (போதித்தவா) உபதேசித்த உபதேசத்தின் பெருமைதான் என்னே! இது வெகு விசித்ரமா யிருக்கின்றது.

(சு-உ.) முருகவேள் உபதேசித்த உபதேசத்தின் பெருமைதான் என்னே! யான், எனது முதலிய சகல சேஷ்டைகளும் ஒடுங்கி விட்டனவே!

(கு-உ.) கடல் சுவற வேல் விட்டது - திருப்புகழ் 905, பக்கம் 640 குறிப்பு. "உளத்தொ டுரை செயல் ஒளித்து விடுவதும்...... அறுமுக ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே"—(திருவகுப்பு 5)-உபதேசத்தின் தன்மை, அலங்காரம் பாடல் 8-ம் பார்க்க.

"உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துங்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருந்தினன் சொல்லிறந் தோமே"

—திருமந்திரம் 1593.

திருமந்திர நூலை அருணகிரியார் படித்திருப்பார் என்பது இதுபோன்ற ஒற்றுமைப் பாடல்களாற் பெறப்படும்)—பாடல் 6, 67 பார்க்க.

'உரை அவிழ, உணர்வவிழ, உளமவிழ, உயிரவிழ உளபடியை'—சீர்பாத வகுப்பு. 'என்னை மறந்திருந்தேன் இறந்தே விட்டதிவ்வுடம்பு' —அலங்காரம் 19.

## 62. வேலின் பெருமை

[1]ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை யகிலமுண்ட
மாலுக் கணிகலந் தண்ணந் துழாய்மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர் முடியுங் கடம்புங்கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனு [2]மேருவுமே.

(பொ-உ.) ஆலுக்கு-ஆலனுக்கு கல்லாலின் கீழ் வீற்றிருக்கும் சிவபிரானுக்குஅணிகலமாவது வெண்தலைமாலை; (தசைநீங்கிய தலையோடு); (அகிலம் உண்ட)-பூமியை உண்ட திருமாலுக்கு அணிகலமாவது (தண் அம் துழாய்) குளிர்ந்த அழகிய துளசி; மயில் வாகனத்தில் ஏறும் ஐயன்—பிரானுகிய முருகவேளின் திருவடிக்கு அணிகலம் ஆவன—தேவர்களின் முடியும், கடப்பமாலையும்; அவர் திருக் கையில் உள்ள வேலாயுதத்துக்கு அணிகலமாவன - கடலும், சூரனும், (மேருவும்) கிரவுஞ்ச கிரியுமே.

(சு-உ.) சிவனுக்கு வெண்தலை மாலை, திருமாலுக்குத் துளசி மாலை. முருகன் திருவடிக்குத் தேவர்களின் திருமுடியும், கடப்ப மாலையும், வேலுக்கு—கடலும், சூரனும், கிரௌஞ்சமும் - ஆபரணங்களாம்.

(கு-உ.) [1]ஆல் உ; ஆல் = கல்லால விருக்ஷம் அல்லது விஷம், உ= இறைவன்; ஆல நிழற் கடவுள், ஆலமுண்ட கடவுள்—சிவபிரான்; முல்லை உ (முல்லைநிலக் கடவுள்) என்றார் விஷ்ணுவை—கந்தரந்தாதி காப்பு 2. "பூந்துருத்தி மகிழும் ஆலனை", "நாலுவேதியர்க் கின்னரு ளன்னிழல் ஆலன்"—அப்பர் 4-88-1; 5-72-4.

[2]மேரு—மேருமலை போன்ற பொன் மலையாகிய கிரௌஞ்சம்.

வெண்டலை—யுக முடிவில் முடிவுற்ற அரி, அயனுடைய வெண்டலை. "காலாந்தரத் திருவர் தங்காலஞ் செய்யத் தரித்தனன் காண் சாழலோ"—திருவாசகம். "தலைமாலை தலைக்கணிந்து"—அப்பர் - 4-9-1.

"தலைக்குந்தலை மாலை யணிந்ததென்னே—சுந்தரர் - 7-4-1.

சிவனுக்கு வெண்தலை மாலை அணிகலம் என்றதனால் அவரே சர்வ சங்கார மூர்த்தி என்பது பெறப்பட்டது. திருமால் பூமியை உண்டது—திருப்புகழ் 267, பக்கம் 164; பாடல் 984, பக்கம் 846 குறிப்பு. யுகாந்தத்தில் உலகத்தை உண்டு தன் வயிற்றில் அடக்கிக்கொண்டு, திருமால் நித்திரை புரிவதால் அவர் உலகம் உண்டவர் எனக் கூறுவர். இப் பாட்டின் 4-ஆம் அடியை 40-ஆம் பாட்டின் 3-ஆம் அடியுடன் ஒப்பிடுக.

## 63. தன் அனுபவம் கூறினது

[1]பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத் தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே யெனக்கிங்ஙன் சந்தித்ததே.

(பொ-உ.) (பாதித் திருவுரு) தனது திருவுருவத்தில் உமாதேவியின் பாகமாகிய பாதி பச்சை நிறமாக உடைய சிவபிரானுக்குத் (தன் பாவனையை பிரணவத்தின் பொருள் இன்னதென்று தான் கொண்டிருந்த கருத்தைப் (போதித்த) எடுத்து உபதேசித்த நாதனை—நாயகனை, போருக்கு உற்ற வேல் ஏந்திய முருகனை-(சென்று)அடைந்து, போற்றி (நான்) உய்வதற்குச் (சோதித்த) அவரால் சோதிக்கப்பட்ட (மெய்யன்பு) எனது மெய் அன்பானது (பொய்யோ) பொய்யாகுமோ! (ஒருகாலும் ஆகாது என்றபடி) அவனது திரு அருளை நினைந்து அழுதும் தொழுதும் உருகியும் (சாதித்த), நிலைப்பட்ட இந்த எனது புத்தியானது (எங்கே) எங்கிருந்து என்ன புண்ணியவசத்தினுல் எனக்கு (இங்கன்) இவ்வாறு (சந்தித்தது) கிடைத்தது? (இங்ஙனம் கிடைத்தது அவனது திருவருளே என்றபடி).

(சு-உ.) சிவகுருநாதனும் முருகனை நான் போற்றி உய்ய அவரால் முன்பு சோதிக்கப்பட்ட எனது மெய்யன்பானது எங்ஙேனும் பொய் யாகுமோ! ஒருகாலும் பொய்யாகாது. அவன் திருவருளை நினைந்து அழுதும், தொழுதும், உருகும் இந்த நிலைந்த புத்தி எனக்கு எப்படிக் கூடிற்று! அவன் திருவருளால்தானே!-என வியக்கின்ருர் அருணகிரியார்.

(கு-உ.) 1 "மரகதம் பெறுகம் அயலணி சிவன் புராரி"— திருப்புகழ் 205. தனது அன்பு மெய்தாஹே என்பதை நன்கு சோதித்த பின்னரே முருகவேள் தன்னை ஆட்கொண்டனர் என்பதும், அழுதும், தொழுதும், உருகியும் தனக்குக் கிடைத்த நிலைத்த புத்தியானது அவரது திருவருளாலன்றி வேறு எப்படி தனக்குக் கிடைத்திருக்கும் என்பதாகவும் கூறி வியக்கின்ருர்—" நிலைந்த புத்திதனைப் பிரியாமற் கனத்த தத்துவ முற்று ......... நித்திய சித்தருள்வாயே"—என வேண்டினவராயிற்றே இவர். (திருப்புகழ் 294).

## 64. யமனை வெருட்டல்

[1]பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே.

(பொ-உ.) பட்டிக் கடாவில்—களவு எண்ணங்கொண்ட எருமைக் கடாவின்மேல்வரும் (அந்தகா) எமனே! உன்னை(நான்) (பார்) இவ்வுலகோர் யாவரும் அறியும்படி—(அவர்கள் முன்பு பிரத்யக்ஷமாக) வெட்டி —நீ முதுகு காட்டி ஓடும்படிச் செய்யாமல் நான் உன்னை விடப்போவ தில்லை; (அந்த) வெய்ய—கொடிய சூரனிடம்போய் அவனை (முட்டி) தாக்கிப் போர் புரிந்த செவ்விய வேற்பெருமாளின் அழகிய சந்நிதியில்

நிற்கின்றேன் நான்; (கட்டிப் புறப்படடா) நீ வீச எடுத்த பாசக் கயிறு தண்டாயுதம் முதலிய உன் ஆயுதங்களை எடுத்துக் கட்டிக்கொண்டு வந்த வழியைப் பார்த்துப் - புறப்பட்டுப் போடா! (அங்ஙனம் போகாது நீ எதிர்த்து வந்தால் உன்னை வெட்டிப் புறங்காண வைப்பேன் இது நிச்சயம் என்றபடி); (சத்திவாள் என்றன் கையதுவே)—ஞான சத்தி என்கின்ற ஞான வாள் என் கையகத்தே உள்ளது. இதைக் கவனிப்பாயாக.

(சு - உ.) அடா அந்தகா! நான் முருகவேளின் சந்நிதியில் இருக்கின்றேன்; நீ என்னை எதிர்த்தால் உன்னை வெட்டிப் புறங் காண்பேன்; ஆதலால் வந்தவழியைப் பார்த்து மரியாதையாய்ப் புறப்பட்டுப் போடா.

(கு - உ.) [1]பட்டி = களவு; "பட்டி மாடான நான்" - திருப்புகழ் 338, இந்தப் பாடலால் அருணகிரியாரின் திடபக்தி நன்கு புலப்படும். "நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்"—என்னும் அப்பர் பெருமானது திடபக்தியையும் (6 - 98 - 1). 'யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம், 'கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்'—என்னும் மணிவாசகரது திடபத்தியையும் (சதகம் - 30; அச்சப்பத்து 10) அருணகிரியார் கொண்டிருந்தனர் என்பது விளங்குகின்றது.

சத்தி வாள் - என்றது ஞான வாள். 'நமன்வரின் ஞான வாள் கொண்டே எறிவன்" என்றார் திருமூலரும் (2968). 'பரமசுக மவுன கட்கம்......யமன் முடி துணிக்க'—வேடிச்சி காவலன் வகுப்பு. இதனால் அருணகிரியார் திருமூலரைப்போல உயர்ந்த ஞான நிலையைக் கொண்டிருந்தார் என்பது பெறப்படும். அலங்காரம் பாடல் 25, 69ம் பார்க்க.

## 65. பிரார்த்தனை - யம பயம் நீங்க

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன் விடுங்கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டுங் [1]கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும்விட் டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே.

(அந்.) கராசலங்கள்......மயூரத்தனே! வெட்டுங்......வேண்டும்.

(பொ - உ.) (கராசலங்கள்) யானைகள் எட்டும் (அஷ்ட கஜங்களும்) (குலகிரி எட்டும்)—அஷ்ட பர்வதங்களையும் - (விட்டு ஓட) விட்டுவிட்டு ஓடும்படி (எட்டாத) எட்டாத - பரவெளி வரையும் (புதைய) மறையும்படி (கலாபம் விரிக்கும்) தனது தோகையை விரிக்கின்ற மயில் வாகனனே! (வெட்டுங்கடா) எதிர்த்து வெட்ட வருவதுபோல வரும் எருமைக் கடாவின்

மேல் தோன்றிவரும் கொடிய யமன் - தனது வீசும் பாசக் கயிறுகொண்டு (என்னைக்) கட்டும்பொழுது (நீ வந்து) அவன் கையினின்றும் (என்னை) மீள்விக்க வேண்டுகின்றேன்—

(சு - உ.) மயில் வாகனனே! யமன் என்னைப் பிடிக்க வரும்பொழுது என்னை அவன் கையினின்றும் மீட்டுக் காத்தருளுக.

(கு - உ.) [1]கராசலம் - (கரம் = கை; அசலம் = மலை): கைம்மலை = யானை. கராசலங்கள் எட்டு - அஷ்ட திக்குக் கஜங்கள். கராசலங்கள் = ஆன்ம தத்துவங்கள். திக் கஜங்கள் எட்டு குலகிரி எட்டு — திருப்புகழ் 554. பக்கம் 265 கீழ்க்குறிப்பு. மயில் தோகையின் விரிவை— அலங்காரம் 96ல் பார்க்கவும்.

## 66. உலகுக்கு உபதேசம்

நீர்க் குமிழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்
வேற்கும ரற்கன் பிலாதவர் ஞான மிகவுநன்றே.

(அந்.) யாக்கை நீர்க் குமிழிக்கு நிகரென்பர்; பார்க்குமிடத்து செல்வம் அந்த மின்போலும் என்பர்; பசித்து......நன்றே:

(பொ - உ.) யாக்கை-உடலானது நீரில் தோன்றும் குமிழியைப்போலத் திடீரெனத் தோன்றி மறையும் என்று சொல்வர் உலகோர்; பார்க்குமிடத்து—ஆய்ந்து பார்க்கின், செல்வம் என்பது நிலைந்திராமல் அந்த மின்னல்போல விரைவில் தோன்றி விரைவில் மறையும் தன்மையது என்று சொல்வார்கள் உலகோர்கள்; ஆனால் பசியுடன் வந்து பிச்சை எடுப்பவர்க்கு ஏதேனும் கொடுக்கவேண்டி வந்தால் (மெதுவாக எங்கேயாயினும் (நழுவி) எழுந்து போய்விடுவார்கள்; (இங்ஙனம் செய்பவர்கள்) வேற் குமரனிடம் அன்பு இல்லாதவர் - குமரனிடம் அன்பு இருந்தால் எவ்வுயிரிலும் முருகன் உளன் என்பதை உணர்ந்து, ஏற்பவர்க்கு அன்புடன் இடுவார்கள்— ஆதலால் ஏற்பவர்க்கிடாதவர் வேற் குமரர்க்கன்பிலாதவர்; அவர்கள் ஞானம் மிக நன்றாயிருக்கின்றது — என்றுதான் (பரிகசித்துக்) கூற வேண்டும்.

(சு - உ.) யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை என்பவற்றைப் பற்றி விரிவாய்ப் பேசுவார்கள்; ஆனால் பிச்சை என்று ஒருவர் வந்தால் - மெதுவாய் நழுவி எழுந்து போவார்கள்; இவர்கள் வேற்குமரனிடம் அன்பிலாதவர்கள்; இவர்கள் ஞானம் மிக நன்றாயிருக்கின்றது என்றுதான் பரிகசிக்கவேண்டும்.

(கு-உ.) "நீரிற் குமிழி இளமை-நிறை செல்வம் நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் — நீரில் எழுத்தாகும் யாக்கை" — நீதிநெறி விளக்கம் (காப்பு). 'கரவா திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்' — என்றார் கந்தரநுபூதியிலும் (7). இடுதலும், வேற்குமரனை நினைதலும் இணை பிரியாதவை: குமரனை நினைத்தே இடுதல் வேண்டும். இடாதவர் குமரனை நினையாதவர்—என்பது அருணகிரியாரின் தத்துவ உபதேசம். —பாடல் 57ம் பார்க்க.

## 67. தன் குறை கூறுதல்

[1]பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்[2]மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரச[3]வல்லி
இறுகத் தழுவுங் [4]கடகா சலபன் னிருபுயனே.

(அந்.) மதகும்ப......புயனே! பெறுதற்......கற்றிலேன்.

(பொ-உ.) (மதகும்பம்) மதம் பெருகும் (கும்பம்) மத்தகத்தை யுடையதாய், (கம்பம்) கட்டப்படும் தூணை உடையதாய், அல்லது அசையும் தன்மையை உடையதாய்—(தறுகண்) அஞ்சாமையை உடையதாய்ச், சிறிய கண்களைக் கொண்டதாய்ச், (சங்க்ராமம்) போருக்கு உற்றதான (சயிலம்) மலைபோன்ற ஐராவதத்தால் வளர்க்கப்பட்டவளும், (சரச வல்லி) இனிய குணத்தை உடையவளும், கொடி போன்றவளுமான தேவசேனை அழுந்தத் தழுவி (மகிழும்) கடகாசல—கடகத்தை அணிந்த பன்னிரு புய மலையோய்! பெறுதற்கு அரியதான பிறவியைப் (புண்ணிய வசத்தால்) நான் பெற்றும் - பெற்றிருந்தும் (அந்தோ) உனது சிற்றடியை அணுகிப் (பணிந்துப் பெற) பணிந்து (விடு பேற்றைப்) பெறும் வழியைக் (கற்றிலேன்) கற்றேன் இல்லை—(ஈதென்ன பாவம்).

(சு-உ.) தேவசேனையின் நாயகரே! அரிய பிறவியைப் பெற்றிருந்தும், நான் உன்னைப் பணிந்து விட்டின்பம் பெறும் வழியைக் கற்றேனில்லை.

(கு-உ.) [1]"பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும் பெறுதற் கரிய பிரானடி பேணார்"—திருமந்திரம் 2090. பிறவியின் அருமை-"அரிது அரிது மானிடராதல் அரிது" - ஔவையார்.

"புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போக்குகின்றோம் அவமே" - திருவாசகம்-பள்ளி எழுச்சி.

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" - தாயுமானவர்-சித்தர் 4.. பிறந்தால் இறைவனை மறவாமை

வேண்டும் - "பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்-பெரிய புராணம் காரைக்கால்-60. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" — திருக்குறள் 10.

[2]மத் * * * சயிலம் = ஐராவதம்;

[3]வல்லி = தேவசேனை. தேவசேனையைத் "தெய்வ வெள்ளைச் சிந்துர வித்தக வல்லி" "செரு, கும்ப, ராக, அயிராவதத் தெய்வ யானை" என்றார் அந்தாதியில் (70), (46).

[4]கடகாசல * * * புயனே = கடகத்தை அணிந்த புயமலையோய். கடகம் = ஒருவகை ஆபரணம். "கடகபுயமீது" — திருப்புகழ் 214. "பனிரண்டு புயமலை கிழவோனே" — திருப்புகழ் 975.

## 68. உலகுக்கு உபதேசம்

[1]சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் [2]சரணத்திலே
ஓடுங்[3]கருத்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்
றுடும் பொழுது பரமா யிருக்கு மதீதத்திலே.

(அந்.) ஒடுங் கருத்தைச் சாடுஞ் சமரத்......சரணத்திலே இருத்த வல்லார்க்கு......அதீதத்திலே பரமாயிருக்கும்.

(பொ - உ.) (ஓடுங் கருத்தை) ஒரு நிலையற்று ஓடிக்கொண்டே இருக்கும்—(எண்ணங்கள் எண்ணிக்கொண்டே இருக்கும்) மனதை—(சாடும்) கொலை புரியும் (சமரத் தனிவேல்) போருக்கு உற்ற ஒப்பற்ற வேலை ஏந்தும் முருகனுடைய (சரணத்திலே) திருவடிகளிலே - நிலைத் திருக்கும்படி செய்ய வல்லவர்க்கு—அந்த மனமானது (உகம் போய்) கால அளவு அற்றுச் (சகம் போய்) உலக வாசனை அற்றுப், (பாடுங் கவுரி பவுரி கொண்டாட) பாட்டைப் பாடும் தேவி—தனது கூத்தைக் கொண் டாடப் (பசுபதி நின்று ஆடும்பொழுது) உயிர்களுக்குத் தலைவனும் கூத்தப்பிரான் நின்று நடனம் புரியும் வேளையில்—(அதீதத்தில்) அதீத நிலையில்—மன வாசகங் கடந்த நிலையில் - (பரமாயிருக்கும்) மேலான பேரானந்த மயமாயிருக்கும்.

(சு - உ.) முருகன் திருவடியில் தமது மனதை நிலைக்க வைத்தவர்க்கு அந்த மனம் கால அளவு, உலக வாசனை என்பன நீங்கிக் கூத்தப்பிரானது திருக்கூத்தில் லயப்பட்டு ஆனந்தமயமாயிருக்கும்.

(கு - உ.) [1]"சாடுந் தனிவேல் முருகன் சரணம்"—அநுபூதி 44. [2]"சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில் தவமுறை தியானம் வைக்க"—திருப்புகழ் 214. [3]"பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் வீட்டிற் புகுதல் மிக எளிதே"—கந்தர் அலங்காரம் 85.

3 ஓடுங் கருத்து—"ஒருகால் திரிகையில் ஆயிரக்கோடி சுற்று ஓடும் உளம்" என்றார் கந்தரந்தாதியில் (34); 'குலாலன் திகிரிவருமொரு செலவினில் எழுபது செலவு வரும் மன பவுரிகொ டலமரு திருகன்"— திருப்புகழ் 1009; இறைவனது திருக்கூத்தின்போது தேவி பாடுவாள் - 'சாங்கரி பாடியிட ஓங்கிய ஞான சுக தாண்டவம் ஆடியவர்'-திருப்புகழ் 1239. மனம் இறைவன் திருவடியில் நிலைந்திருப்பவர்க்குத்தான் அவரது திருக்கூத்தில் மனம்லயப்படும்- கூத்தப்பிரானது திருக்கூத்தைக் கண்டபொழுது சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு லயப்பட்ட தன்மை அது. "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே யாகக், குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமே ஆக, இந்துவாழ் சடையானுடும் ...... தனிப்பெருங் கூத்தின் வந்த பேரின்ப வெள்ளம்"—பெரிய புராணம்-தடுந்தாட்-106.

## 69. யமனை வெருட்டல்

தந்தைக்கு முன்னந் [1]தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன் [2]வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய்ய லாஞ்[3]சத்தி வாளொன்றினுற்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோப [4]த்ரி சூலத்தையே.

(பொ-உ.) தனது தந்தைக்கு முன்பு (தனி ஞான வாள் ஒன்று) மௌன உபதேசம் என்கின்ற, ஒப்பற்ற ஞானோபதேசம் ஒன்றைச் சாதித்தருள் - அருள் சாதித்த—உபதேசித்தருளின கந்தசுவாமிக் கடவுள் (என்னை) தேற்றிய பின்னர்—என்னை (அந்த மௌன) உபதேச மொழி கொண்டு தெளிவுபெறச் செய்து திடப்படுத்தின பின்னர்-காலன் (வெம்பி) கோபித்து வந்து இப்பொழுது என்னை என்ன செய்யக்கூடும்—ஒன்றும் செய்ய இயலாது—(அப்படி என்னிடம் வருவானானால்) சத்தி வாள் ஒன்றினால்—ஞான வாள் என்கின்ற சத்தி வாள் ஒன்றுகொண்டே (சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத் த்ரிசூலத்தையே) - தணிப்பரும் - அடக்குதற்கு அடங்காத கோபத்துடன் வரும் (அந்தக் காலனது) மூத்தலைச் சூலத்தைச் (சிந்தத் துணிப்பன்) துண்டாய் விழும்படி வெட்டி விடுவேன்.

(சு-உ.) முருகனிடம் மௌனோபதேசம் பெற்று ஞான நிலையில் நான் இப்போது உள்ளேன். எமன் என்னிடம் வந்தால் எனது ஞான வாள் கொண்டு அவனது சூலத்தைத் துண்டம் செய்வேன்.

(கு-உ.) ஞான வாள்- இந்நூல் 25.—ஞானம் ஒரு வாளுக்கு ஒப்பிடப் பட்டுள்ளது, ஆணவம் ஆதிய மலங்களை வெட்டக் கூடியதாதலின். "ஞானவாளேந்துமையர்"-திருவாசகம்: திருப்படை யெழுச்சி. 'எனது

மன சிற்பரம சுக மவுன கட்கமதை யமன் முடிதுணிக்க விதியா வைத்த பூபதியும்'—வேடிச்சி வகுப்பு. 'எம்படரை மோது மோன உரையில் உபதேச வாள்'—திருப்புகழ் 828. [2]வெம்பி = கோபித்து. "வெம்ப வருகிற்பதன்று கூற்றம் நம்மேல்"—அப்பர் 6-95-2. [3]"சத்திவாளொன்றன் கையதுவே"—இந்நூல் 64. [4]த்ரிசூலம் = இயமனுயுதம்; "சூலம்பிடித் தெமபாசஞ் சுழற்றித் தொடர்ந்து வருங் காலன்"-இந்நூல் இறுதிச் செய்யுள்.

## 70. முருகன் பெருமை - உலகுக்கு உபதேசம்

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

(அ-ந்.) திருமென் மலர்ப் பாதங்கள் விழிக்குத் துணை; முருகா எனும் நாமங்கள் மெய்ம்மை குன்றா மொழிக்குத் துணை; அவன் பன்னிரு தோளும் முன்பு செய்த பழிக்குத் துணை; வடிவேலும் செங்கோடன் மயூரமும் பயந்த தனி வழிக்குத் துணை:

(பொ-உ.) (திருமென் மலர்ப் பாதங்கள்) முருகவேளின் அழகிய மென்மை வாய்ந்த திருவடிகள் (விழிக்குத் துணை) எனது கண்களுக்குத் துணை; 'முருகா', குமரா, குகா முதலான அவனது திருநாமங்கள் (நான்) உண்மை மொழியே பேசுவதற்கு உற்ற துணையாக நிற்கும்; முருகவேளின் பன்னிரு தோள்களும் நான் முன்பு செய்த பழிக்கிடமான செயல்களால் வந்த பாபத்தைப் போக்கத் துணை புரியும்; கூரிய வேலாயுதமும், திருச் செங்கோட்டு வேலனது மயிலும் நான் பயந்து செல்லவேண்டிய தனி வழிகளிலெல்லாம் துணைபுரியும் (என்க).

(சு-உ.) முருகவேளின் திருவடி எனது கண்களுக்கும், முருகா—முதலிய அவர் திருநாமங்கள் நான் உண்மையையே பேசுதற்கும், அவருடைய பன்னிரு தோள்கள் என் பழவினையை அறுப்பதற்கும், அவருடைய வேலும் மயிலும் - நான் பயந்து செல்லும் தனி வழிக்கும்—துணையாகும்.

(கு-உ.) முருகன் திருவடி, திருநாமம், பன்னிரு தோள், வேல், மயில் இவைகளுக்கு இங்குச் சொல்லப்பட்ட சிறப்பைக் கருதியே—'பக்கரை விசித்ரமணி' என்னும் திருப்புகழில் முருகவேளின் மயில், கடப்ப மாலை, வேல், சேவல், சிற்றடி, பன்னிரு தோள் இவைகளைச் செப்பிப் புகழவேண்டும் என்று அருணகிரியார்க்கு வித்தகமருப்புடைய பெருமாளின் கட்டளை பிறந்தது. திரு மென்மலர்ப் பாதங்கள் ஊனவிழி.

ஞான விழி இரண்டினுக்கும் துணை புரியும். ஊன விழிக்குத் துணை—துன்பமான காட்சிகளைக் காணுதிருக்கவும், கண் ரோகம் முதலியன வாரா திருக்கவும் துணை புரிதல்; முருகன் திரு நாமங்களில் "முருகா" என்பதே சிறந்ததாதலின்—அதனை முதலில் எடுத்துக் கூறினர்-முருகன் திரு நாமத்தை ஓதிஞல் உண்மையே நம்மிடம் துலங்கும்; நமது பழவினை பெரிதாதலின் அவரது பன்னிரு திருக் கரங்களில் உள்ள ஆயுதங்கள் அந்த வினைக் காட்டை வெட்டி எறிந்து நமக்குத் தூய்மை தரும்; 'வேலு மயிலும்' "தனித்து வழி நடக்கும் எனதிடத்தும் ஒருவலத்தும் இருபுறத்தும் அருகு அடுத்து இரவு பகல் துணையதாகும்". 'பயந்த தனி வழி' என்பது 'இறந்த பின்' உயிர்போம் அத் தனி வழியையும் (அலங்காரம் 59) குறிக்கும். திருவடியும், முருகா எனும் நாமமும்—ஆசாமிய வினையையும், பன்னிரு தோள் சஞ்சித வினையையும் பொடி படுத்தும்—எனவும், வேலும் மயிலும் என்பதில் மயில் கன்மங்களை நுகர் வித்து மல பரிபாகம் தரும் என்றும், வேல் அப்போது ஞானத்தை அருளிப் பிறவியை நீக்கும்—என்றும் ஆசிரியர் திருவிளங்கம் குறித்துள்ளார். 'வேலு மயிலும் நினைந்தவர் தந்துயர்தீர அருள்தரு கந்த'-திருப்புகழ்920. இந்த 70-ஆம் பாடல் நாம் மேற்கொண்டு அநுட்டிக்கவேண்டிய அருமை யான உபதேசத்தைக் கொண்டுள்ளது. திருவடித் தியானம், முருக நாம ஜெபம், திருவுருந் தியானம், வேலுமயிலுந் துணை யெனும் ஜெபம்—இவைகளின் சிறப்பை உணர்த்தும் உபதேசப் பாடல் இது.

## 71. உலகுக்கு உபதேசம்

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
[1]தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னுஞ்சிவ யோகமென்னுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

(பொ-உ.) (துருத்தி) தோலால் ஆய உலை ஊது கருவி என்று சொல்லும்படி, (வாயுவை கும்பித்து) பிராண வாயுவை உள்ளே நிறுத்தி அடக்கி சுற்றி முறித்து—அதை வளைத்துத் தடுத்து (அருத்தி) அதையே உடலுக்கு உண்பித்து—உள்ளே நிரப்பிப் பூரகம் செய்து அவ்வகையாக—உடம்பை (ஒறுக்கில் என்னும்) வருத்துவதால் என்ன பயன் பெறமுடியும்! சிவயோகம் என்கின்ற (குருத்தை) ஞான முளையை இன்னதென அறிந்து ஆறு திருமுகங்களை உடைய குருமூர்த்தி உபதேசித்த கருத்தை (சும்மா இரு என்னும் உபதேசத்தை) உங்கள் மனதிலே இருத்துங்கள்—அழுந்த வைத்தால் முத்தி கைகண்ட பலனுகக் கிடைப்பதைக் காணுவீர்கள்.

(சு-உ.) யோகிகளே! அடயோகத்தால் (உடம்பை வருத்தும் யோகப் பயிற்சிகளால்) பயன் கிட்டாது; சிவயோகம் இன்னதென

அறிந்து—முருகவேள் சொன்ன உபதேசப்படி 'சும்மா' இருந்தால் முத்தி கிடைக்கும்.

(கு - உ.) 1 அருத்தி = பூரகஞ் செய்து. பாடல் 85-ம் பார்க்க. குருநாதன் சொன்ன கருத்து - சும்மா இருத்தல் என்னும் உபதேசம் (அநுபூதி 12) - அல்லது (வள்ளிச் சன்மார்க்கம்)—திருப்புகழ் 317. பக்கம் 288 கீழ்க்குறிப்பு, கண்டீர்—முன்னிலை அசை எனவும் கொள்ள லாம். 'குருநாதன் சொன்ன சீலந்தை மெள்ளத் தெளிந்தறிவார் சிவ யோகிகளே'—என்றார் 26-ஆம் பாட்டிலும்.

## 72. உலகுக்கு உபதேசம்

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

(பொ-உ.) சேந்தனை - கந்தனை - திருச்செங்கோட்டு மலை முருகனை - செவ்விய ஒளி வீசும் வேலை ஏந்திய அரசை, அகப்பொருள் இலக்கணத்தின் உண்மைப் பொருளைத் தெரிவித்துச் செந்தமிழ் நூல்களுக்கு விளக்கம் தந்தவனை, விளங்கும் வள்ளி தேவியின் (காந்தனை) நாயகனை, கந்தம்-நறு மணமுள்ள கடப்பமாலை அணிந்தவனை, கார் மயில்—நீல மயில்—அல்லது கார் காலத்தில் மகிழும் மயில் வாகனனைச் (சாந்துணைப் போதும்) இறக்கும் வரையிலும், இறக்கும் பொழுதும் கூட மறவாதவர்க்கு யாதொரு (தாழ்வு இல்லை) குறையும் இல்லை.

(சு - உ.) முருகனைச் சாமளவும் மறவாதவர்க்கு ஒரு குறையும்வாராது.

(கு - உ.) சேந்தன் — செந்நிறம் உடையவன் — "பவழத்தன்ன மேனி' - குறுந்தொகை; (கடவுள் வாழ்த்து) 'செய்யன் சிவந்த ஆடை யன்'—திருமுருகாற்றுப்படை 206.

கந்தன் — ஆறு திருவுருவங்கள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டவன்—

'சேயவன் வடிவ மாறும் திரட்டிநீ ஒன்றாச் செய்தாய்,
ஆயதனாலே கந்த னென்னும் நாமம் பெற்றான்'
—கந்த புரா-1-14-17.

செந்தமிழ்நூல் விரித்தோனை — செந்தமிழ்க் கடவுளாய் அகத்திய ருக்குத் தமிழ் உபதேசித்தவர். அகத்தியர் மூலமாய்ச் செந்தமிழைப் பரவ வைத்தவர். அகப்பொருள் இலக்கண உண்மையை உரைத்தவர்— திருப்புகழ்ப் பாடல் 919, பக்கம் 676; பாடல் 350, பக்கம் 378— கீழ்க்குறிப்புகளைப் பார்க்க, செந்தமிழ்த் தேவாரப் பதிகங்களைப் பாடி

விரித்தவன் — எனலுமாம். "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்"—சுந்தரர் 7-62-8. "நல்ல செந்தமிழ்வல் லவன் ஞான சம்பந்தன்'—சம்பந்தன் 2-82-11. 'ஞானசம்பந்தன் உரைசெய் சங்கமலி செந்தமிழ்கள்'—சம்பந்தர் 3-74-11.

கார் மயில்—கார் - மேகத்தைக் கண்டு மகிழும் மயில் - எனலுமாம்— 'கார்பெற்ற தோகையோ' நளவெண்பா. கடம்பு—' மணமருத கடம்பு' —பூத வேதாள வகுப்பு. சாவுந் துணை - சாந்துணை - இடைக் குறை. துணை - (கால) அளவு. சாந்துணை, சாம்போதும்—எனப் பிரித்துப்பொருள் காண்க. சாந்துணைப் போதும் மறவாதிருக்க வேண்டி—" காலன் என தாவி தனையே குறுகி வருபோது ...... ஆதிமுருகா எனவும் ...... நினைவு தருவாயே" என்றார் திருப்புகழில். (1242)

## 73. தன் ஆனந்தம் கூறினது

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கு மநோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல் லொணுதிந்த ஆநந்தமே.

(அந்.) அறுமுகவர்! போக்கும் ...... ஆக்கும்: இந்த ஆனந்தம் சொல்லொணுது.

(பொ - உ.) ஆறுமுகப் பெருமானே! (போக்கும் வரவும்)—அழிதல் தோன்றுதல், (இரவும் பகலும்) - இரவு பகல், (புறம்பும் உள்ளும்)-வெளி - உள், வாக்கு, வடிவு, முடிவு—என்பன இல்லாததான (ஒன்று) ஒருபொருள் வந்து வந்து - இருந்திருந்து வந்து அலைபோல),ந் தாக்கும்—என்னை மோதுகின்றது; யான் எனது என்னும் நிலையை இழக்கச் செய்து என்னையும் தன் வசமாக்கிக் கொள்ளுகின்றது. இந்த ஆனந்த நிலை இத்தன்மைத்து என்று எடுத்து உரைக்க முடியாது.

(சு - உ.) பிறந்தல் - இறந்தல், இரவு பகல் - முதலானவற்றைக் கடந்த ஒரு பொருள் என்னைத் தன் வசப்படுத்தி மனேலயத்தைத் தந்துள்ளது; அதனுல் வரும் பேரானந்தம் சொல்லும் தகைமையதன்று.

(கு - உ.) 'போக்கு வரவு'—'போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர் கீதங்கள் பாடுதல்' - திருவாசகம்-திருப்பள்ளி-5. 'போக்கும் வரவும் புணர்வு மிலாப் புண்ணியனே'— திருவாசகம் - சிவ புராணம்.

(1) "போக்கும் வரவும் புறம்புள்ளு மாகி நின்று
தாக்கும் ஒருபொருளைச் சந்திப்ப தெக்காலம்"
—பத்ரகிரியார் - மெய்ஞ்ஞானப் புலம்பல் 190.

இந்த வாக்கு ஒற்றுமையைக் காணும்போது 'பத்ரகிரியார் புலம்பல்' முதலான நூல்களை அருணகிரியார் இளமையிற் கற்றிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

(2) இராப்பகல்: "இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்".
—திருமந்திரம் 331.

"போக்கும் வரவும், நினைப்பும் மறப்பும், பகலும் இரவும் கடந்து உலவா இன்பம் மருவுவித்து"—கந்தர் கலிவெண்பா 28.

(3) புறம்பும் உள்ளும் - இறைவன் உள்ளும் புறம்புமாய் நிற்பதால்- உள் என்றும் சொல்வதற்கில்லை புறம் என்றும் சொல்வதற்கில்லை.
"உள்ளும் புறம்பு நின்ற துற்றறிவ தெக்காலம்"
—பத்ரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல்-203.

(4) வாக்கு - இலாமை-"சொல்லிறந்து நின்ற தொன்மை ஆதிகுணம் ஒன்றும் இல்லான்"—திருவாசகம்-குயில் 1. "மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே"—திருவாசகம்-சிவபுராணம்.

(5) வடிவிலாதது—"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்"—கந்தரநுபூதி 51.

(6) முடிவு இலாதது—"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி"—திருவாசகம்-திருவெம்பாவை 1.

(7) மனோலயம் பெற விரும்பினது—"மவுன பஞ்சர மனோலய சுகந் தருவாயே"—திருப்புகழ் 1110.

(8) தன் வசத்தே ஆக்கும்—"தான் நின்றெனைத் தனக்குள்ளே ஒளிக்கும்"—பண்டார மும்மணி 4.

(9) சொல்லொணாதிந்த ஆனந்தமே — "சொல்லுகைக்கில்லை" என்றார் 10-ஆம் பாடலிலும் (அலங்காரம்).

## 74. உலகுக்கு உபதேசம்

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்த அன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங் கொடியஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால்
[1]இராப்பக லற்ற இடத்தே யிருக்கை யெளிதல்லவே.

(பொ-உ.) (அரா) பாம்பினை (புனை) அணிந்துள்ள (வேணியன்) சடைப் பெருமானது (சேய்) குழந்தையாகிய முருகவேளின் திருவருள் வேண்டும். (அவிழ்ந்த) நான் எனும் அகந்தை அற்ற (தன்னை) இழந்த நிலையதான அன்புடனே (முருகவேளின்)—குராமலர் அணிந்துள்ள

தண்டை விளங்கும் — அழகிய திருவடிகளைத் தொழுதல் வேண்டும்; பொல்லாத (மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஐம்பொறிகளால் ஏற்படும் (பராக்கு) பராமுகம்—குறிக்கோளை விட்டுப் பல வீண் விஷயங்களிற் பொழுது கழித்தல் என்பது முற்றும் நீங்கவேண்டும், மனத்தின் வேகக் கொதிப்பு தணிந்து ஒழியவேண்டும் (என்றால்) — இவ்வளவு இலக்கணங்களும் இருக்கவேண்டும் என்றால், இரவும் பகலும் இல்லாத (கடந்த) நிலையில் இருத்தல் எளிதன்று - (என்பது பெறப்படும்).

(சு - உ.) இராப்பகல் அற்ற இடத்தில் இருத்தற்கு, மனமும் புலனும் ஒடுங்கி, அன்புடனே முருகன் திருவருள் பெற்று அவனைத் தொழுதல் வேண்டும்.

(கு - உ.) அரா = அரவு: பாம்பு. குரா = குரவு. [1]கேவல சகலங்களற்ற அருள் நிலை. "இரவு பகலற்றவிட மெனதற விருக்கைபுரி யோகப் புராதனனும்"—திருவகுப்பு 12. "இரவும் பகலும்—இ ர வு - தத்துவங்களின் தொழிற்பாடின்றி ஆணவ மலத்தோடு மாத்திரம் கூடியிருக்கும் ஆன்மாவின் கேவல நிலை. பகல்—ஆன்ம தத்துவங்களோடு கூடி விஷயங்களை நுகரும் சகலநிலை"—ஆசிரியர் திருவிளங்கம் அவர்களின் குறிப்பு. 'இரவு பகலில்லா இடத்தில்நான் இன்ப வெளியைக் காணலாம். பாடல் 73-ன் குறிப்பும் பார்க்க.

"இரவு பக லில்லா இன்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற" - திருவுந்தியார் 20.

மனம் பதைப்பறல் வேண்டும்—"உள்ளம் அடங்கியதில்லை; உள்ளம் அடங்குறின் அல்லால் தெள்ளரிய சிவஞானம் சிவணுது" - தணிகைப் புராணம்-இராமன் அருள்பெறு படலம் 42,

## 75. நெஞ்சொடு கிளத்தல்

[1]படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலை[2]முசி யாமலிட்டு
[3]மிடிக்கின் றிலைபர மாநந்த மேற்கொள [4]விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே,

(அந்.) நெஞ்சமே! படிக்கின்றலை ...... நடிக்கின்றலை. நமக்கு இனித் தஞ்சம் ஏது?

(பொ - உ.) நெஞ்சமே! (படிக்கின்றிலை பழநித் திருநாமம்) — பழநித் தலத்தின் திருநாமத்தை நீ படிக்கின்றாய் இல்லை (பழநி, பழநி என்று ஜெபிக்கின்றாயில்லை): அங்ஙனம் படிப்பவர்களின் திருவடியை நீ உன் சிரசில்) சூடிக் கொள்கின்றாய் இல்லை; 'முருகா' என்கின்ற திருநாமத்தை ஜெபிக்கின்றாயில்லை; (முசியாமல்) மனம் பின் வாங்காது - வருந்தாது

தாராள சிந்தையுடனே - (இட்டு) வறியவர்க்கு ஈந்து - (மிடிக்கின்றிலை) நீ வறுமை அடைகின்றாயில்லை; பரமானந்தம் மேல் மேல் எழ விம்மி விம்மி—அழுதழுது - ஆனந்தக் கூத்தாடுகின்றாயில்லை: இவ்வளவு குறை பாடுகளிருந்தால் நமக்கு இனித் (தஞ்சம்) புகலிடம் எங்கே இருக்கின்றது— எங்கும் இல்லை என்றபடி.

(சு - உ.) நெஞ்சமே! நமக்குப் புகலிடமே இல்லை; ஏனெனில் நீ பழநி. என்னும் திருநாமத்தை ஜெபிக்கின்றாயில்லை; ஜெபிப்பவர்களை வணங்குகின்றாயில்லை; முருகா - என்றும் சொல்லுகிலை; தாராளமாக ஈதல் என்பதே உன்னிடம் இல்லை; முருகனை நினைந்து பேரானந்தம் கொள்கின்றாயில்லை.

(கு - உ.) 1" உனது பழநிமலையெனு மூரைச்சேவித் தறியேனே "— திருப்புகழ் 166. 2மூசியாமல் = சோர்வடையாமல். 3மிடிக்கின்றிலை = வறுமையுறுகின்றாயில்லை. 4" விம்மி விம்மி மெய்ம்மறந்து " - திருவாசகம் திருவெம்பாவை. 'பிதற்றாய் பிறைசூடி தன் பேரிடமே' என்று சம்பந்தப் பெருமான் அருளியவாறு (2-39-1) இறைவனது தலப் பெயரைக் கூறிப் பிதற்றலே பெரிய தவமாம்; ஆதலால் - பழநி, பழநி என்று கூறுவாயாக என்றார்; பழநி என ஜெபிப்போர்களின் தாளை வணங்குதலும் பெறும் பயனைத் தரும்.

'அற்றவருக் கற்ற பர மானந்தப் பெருவெள்ளம்
உற்றதிருத் தணிகைவரை உறப்பணிந்தா ரேயன்றி
மற்றவரை வணங்குநரும் வணங்கினரை வணங்குநரும்
பற்றறுத்துந் துடைத்தார்கள் பங்கயத்தோன் கையெழுத்தே'
—தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி.

(2) முருகா - என்னும் நாமத்தின் சிறப்பை பாடல் 70-ற் காண்க.

" முருகா எனஓர் தரம்ஓ தடியார்
முடிமேல் இணை தாள் அருள்வோனே " - திருப்புகழ் 851.

முருகம்மையார் வரலாற்றிலும் அறிக. வரலாறு திருப்புகழ் 573. பக்கம் 312 கீழ்க்குறிப்பு.

(3) இட்டு வறுமை அடைதலின் சிறப்பு: 'வெண்டிருநீறு புனையு மாதவர்க்கு விருந்துசெய் துறும் பெறுமிடி ...... கொடியனேற் கருளுநாள் உளதோ—சோணசைல மாலை-20.

வறியவர்க்கு ஒன்று ஈதல் முடியாதபோது சாதலும் இனிது என்றார் திருவள்ளுவர். "சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
ஈதல் இயையாக் கடை " - திருக்குறள் 230.

(4) விம்மி விம்மி நடித்தல்—

" நெக்குநெக்குள் உருகி உருகி ...... நக்கும் அழுதும்
தொழுதும் வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்து நவிற்றி "
—திருவாசகம் புணர்ச்சி 8.

## 76. தன் குறை கூறல்

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன் றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமர நின் றண்டையந்தாள்
சூடாத சென்னியு நாடாத கண்ணுந் தொழாத கையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே.

(அந்.) குன்றெறிந்த ......... குமர, கோடாத ......... குற்றமென்? நின் தண்டை ...... படைத்தனனே.

(பொ-உ.) (குன்றெறிந்த) கிரவுஞ்ச மலையைப் பிளந்தெறிந்த (தாடாளனே) ஊக்கமும் பெருந் திறலும் வாய்ந்தவனே! (தென் தணிகைக் குமர) அழகிய தணிகை மலைக் குமரனே! (கோடாத) நீதி தவறாத (வேதனுக்கு) பிரமனுக்கு, நான் செய்த குற்றம் என்? நான் ஏது குற்றம் செய்தேன் - (ஒரு குற்றமும் செய்யவில்லையே) அப்படியிருந்தும் - உனது திருவடியைச் சூடாத தலையையும், உன் திருவுருவைக் காணாத கண்ணை யும், உன் திருவடியைத் தொழாத கைகளையும், உன் திருப்புகழைப் பாடாத நாவையும் (எனக்கே தெரிந்து) எனக்கென்றே பொறுக்கி எடுத்துப் - படைத்துள்ளானே!

(சு-உ.) தணிகேசா! உன் திருவடியை வணங்காத அவயவங்களை எனக்கென்றே படைத்த பிரமனுக்கு நான் யாது குற்றம் செய்தேன்!

(கு-உ.) வேதன்=பிரமன்: தாடாண்மை=முயற்சி. "மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்" - திருமங்கை ஆழ்வார்-3-4-1. "சூழுதல் வேண்டுந் தாள்கள், தொழுதிடல் வேண்டும் அங்கை, தாழுதல் வேண்டுஞ் சென்னி, துதித்திடல் வேண்டுந் தாலு"—கந்த புராணம்- சூரபன்மன் வதைப்படலம் 444. பிரமனைக் கோடாத வேதன் - என்றார். வேதங்களைக் கற்று நீதி நெறியில் நிற்பவன் - என்பது குறிப்பு. 'நல்லியல் நான்முகத்தோன்', 'நெறி யண்ணல்', 'தருபுகழ் அயன்', 'கேடில் புகழோன்' - என்றெல்லாம் புகழ்ந்துள்ளார் சம்பந்தர் - [சம்பந்தர் 1-105-9, 2-115-9, 3-31-6, 1-10-9.]

2. சூடாத சென்னி, தொழாத கை - இவைகளைத் தாம் பெற்றதைக் குறித்து (அலங்காரம்) பாடல் 42, 43-ல் வருந்தியுள்ளார் ஆசிரியர். இங்கு நாடாத கண், பாடாத நா - இவைகளைக் குறித்தும் வருந்துகிறார்- 'ஆமாத்தூ ரம்மானைக் காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே'— 'கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே' - 'உய்வதனை வேண்டுதியேல்... பிரமபுரத் தாரமுதை எப்போதும் பன்னும்சீர் வாயதுவே, பார் கண்ணே பரிந்திடவே!—என்றார் சம்பந்தர் (2-44-4-7; 2-40-3.) 'வாயே வாழ்த்து கண்டாய்', 'கண்காள் காண்மின்களோ'—என்றார் அப்பர் (திரு அங்கமாலைப் பதிகம்). 'கர்த்தமிகு நின்மேனி காணாத கயவர்

கண் கலநீர் சொரிந்த அழகன்';—[அருட்பா-தெய்வமணி மாலை-18.] 'வாழ்த்தார்தம் வாய்த்தெரு மண்ணுண்ட வாய், பிணி கொண்ட வாய், விஷப் பிச்சுண்ட வாய், வரும் பேச்சற்ற வாய், ...... மலஞ் சோர்ந்திழி வாய்'—அருட்பா-திருவருள் முறையிடு 144, 'காணார் தம் கண் - இருள்சேர் குருட்டுக்கண் ...... கொடுங்கண், பொருமைக் கண், புண்கண், வன்கண் ...... மாலைக்கண்ணே' - ஷை 142.

மனத்தாற் கருதித் தியானிக்க திருச்செந்தூரை (கந்தரந்தாதி 33 — 'செந்தூர் கருது'), வாக்காற் செபிக்கப் பழநியை (அலங்காரம் 75), காயத்தாற் தொழுக திருத்தணிகையை (அலங்-76) - இங்ஙனம் இம் மூன்று பெருந் தலங்களையும் விசேடித்துள்ளார் அருணகிரியார்— திருப்புகழ் 289, பக்கம் 218 கீழ்க்குறிப்பைப் பார்க்க. அருணகிரியார் வரலாறு பக்கம் 167 பார்க்க.

## 77. நெஞ்சொடு கிளத்தல்

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் [1]பயோதரஞ் சேர எண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்றுன் [2]கிழத்தி கழுத்திற்கட்டு
[3]நூல்வாங்கி டாதன்று [4]வேல்வாங்கி பூங்கழல் நோக்குநெஞ்சே.

(அந்.) நெஞ்சே! சேல் வாங்கு - நோக்கு.

(பொ - உ.) நெஞ்சே! சேல் மீனைப் போன்ற (சேல்மீனை வெல்லும்) கண்களை உடைய மாதர்களின் அழகிய (பயோதரம்) கொங்கைகளைச் சேர எண்ணி, (மால் வாங்கி) காம ஆசை பூண்டு, ஏக்கமுற்று மயங்காமல், வெள்ளிமலை என்று கூறத் தக்கதாய் வெண்மை நிறமும், பார உருவுங் கொண்ட கால்களை உடையதாய் நிற்கும் (களிற்றுன்) ஐராவதம் என்னும் வெள்ளை யானையின் தலைவனை இந்திரனுடைய (கிழத்தி) மனைவியாம் சசி தேவி கழுத்திற் கட்டியிருந்த தாலி நூல் (வாங்கிடாது) நீங்காத வண்ணம் (அன்று) முன்பு (சூரன்மீது) வேலாயுதத்தைச் செலுத்தினவனை முருக வேளின் அழகிய திருவடியை நீ (நோக்கு) - விரும்புவாயாக.

(சு - உ.) நெஞ்சே! நீ காமவலையிற் படாது முருகனது திருவடியை விரும்புவாயாக.

(கு - உ.) 1 பயோதரம் = ஸ்தனம். 2 களிற்றுன் கிழத்தி = ஐரா வதத்தையுடைய இந்திரன் மனைவி: சசி: இந்திராணி. 3 நூல் = தாலி. 4 வேல்வாங்கி = வேலைப் பிரயோகித்த முருகவேள்.

"சசிதன் விளங்கிய மங்கல நூல் வாங்குகிலாள் வாழ்ந்தனள்......வேல் வாங்கவே" திருவகுப்பு 14. 'சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா பரணக்ருபாகர

[அலங்காரம் 21.] "இந்த்ராணி மங்கில்ய தந்து ரக்ஷாபரண - மயில் விருத்தம் 1.

ஐராவதந்தை - "வெண்கம்ப மால்கிரி" என்ருர் திருப்புகழில் (1105).

## 78. உலகுக்கு உபதேசம்

கூர்கொண்ட வேலனைப் போற்ரும லேற்றங்கொண் டாடுவிர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று பூண்பனவுந்
தார்கொண்ட மாதரு மாளிகையும் பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவ ரையோ கெடுவீர்நும் மறிவின்மையே.

(பொ-உ.) கூர்மை கொண்ட வேலாயுதனைப் போற்ருமல், (ஏற்றம் கொண்டு ஆடுவிர்காள்)-உங்கள் பெருமையையே பாராட்டிப் பொழுது போக்குபவர்களே! போருக்கு எழுந்து வரும் காலன் உங்கள் உயிரைக் கொண்டு போகும்பொழுது, (பூண்பனவும்) நீங்கள் அணியும் ஆபரணங்களையும், (தார் கொண்ட) பொன் ஹாரம் அணியும் மனைவிமார் முதலிய பெண்களையும், உங்கள் மாளிகைகளையும் பணப் பைகளையும் யார் எடுத்துக்கொண்டு போவார்கள்! எதையேனும் உங்களுடன் எடுத்துக்கொண்டு போகமுடியுமா? ஐயோ! வீணுகக் கெட்டுப் போகின்றீர்களே! உங்கள் பேதைமையை என்னென்று கூறுவது!

(சு-உ.) முருகனைப் போற்ருது வீண் பெருமை பேசிப் பொழுது போக்குகின்றீர்களே! இறந்து போம்போது மாதரையும், மாளிகையையும், பணப் பையையும், யார்தான் கூட எடுத்துக்கொண்டு போகமுடியும்! பேதைகாள்! இந்த உண்மை தெரியாது கெட்டுப் போகின்றீர்களே!

(கு-உ.) 59-ஆவது பாடலையும் நோக்குக. சாளிகை = பணப்பை. ஏற்றம் - உயர்ச்சி, புகழ், துணிவு.

"மனையாளும் மக்களும் வாழ்வுந் தனமும் தன் வாயில் மட்டே, இனமான சுற்றம் மயானமட்டே வழிக்கேது துணை"—பட்டினத்தார் பொது-12 பாடல் 59-ன் குறிப்பையும் பார்க்க,

"தண்டிகையும் சாவடியும் சாளிகையும் மாளிகையும் கண்டு களிக்கும் கருத்தொழிவ தெக்காலம்"-எக்காலக்கண்ணி-22-பத்திரகிரியார்.

## 79. பிரார்த்தனை - பெண்ணுசை அற

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலுஞ்
[1]சிந்தா குலந்தனைத் தீர்த்தருள் வாய்செய்ய வேல்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா இளங்குமரா! அமராவதி காவலனே!

(அந்.) செய்ய வேல் ... காவலனே! பந்தாடு ... தீர்த்தருள்வாய்.

(பொ - உ.) (செய்ய வேல் முருகா) சிவந்த வேல் ஏந்தும் முருகா! (கொந்தார் கடம்பு) பூங்கொத்துக்கள் நிறைந்த கடப்ப மரங்கள் (புடை சூழ்) சுற்றுப் பக்கங்களில் உள்ள திருத் தணிகைமலையில் வீற்றிருக்கும் கந்தப்பெருமானே! இளங்குமரனே! தேவர் ஊர் அமராவதியைக் காத்தருளும் அரசே! பந்து விளையாடும் மாதர்களின் சிவந்த கயல்மீன் போன்ற கண் பார்வையிற் பட்டுத் திரியும் (சிந்தா குலந்தனை) மனக்கவலையைத் தீர்த்து அருள்புரிதி.

(சு - உ.) தணிகேசா! பெண்ணாசையால் வரும் மனக் கவலை என்னைப் பீடியா வண்ணம் அருள்புரிதி.

(கு - உ.) 1 "சிந்தா குலமானவை தீர்த்தருள்வாய்" - அநுபூதி 46.

## 80. பிரார்த்தனை - யம பயம் நீங்க

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே
[1]தோகைப் புரவியிற் றேன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் [2]த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே.

(அந்.) சுத்த ... பாலகனே! மாகத்தை ... நிற்பாய்.

(பொ - உ.) (சுத்த) பரிசுத்தமான (நித்த முத்தி) அழிவிலாத வீட்டின்பத்தைத் (தியாகப் பொருப்பை)த் தந்தருளும் (கருணை) மேருவைத், திரிபுரத்துக்கு யமனாய் நின்று அழித்தவரை, (த்ரி—அம்பகனை) முக்கண்ணரைத் தனது (வலப்) பாகத்தே கொண்ட (பரம கல்யாணி) மேலான நித்ய கல்யாணியான பார்வதி தேவியின் குமாரனே! (மாகத்தை) ஆகாய அளவுக்கு) (முட்டி) உயர்ந்து வருகின்ற (நெடும்) நீண்ட பெரிய (கூற்றன் வந்தால்) யமன் என்னைத் தொடர்ந்து வந்தால் (அப்போது நீ) (என் முன்னே) என் முன்பு தோகைப் புரவியில்—கலாபம் கொண்ட (குதிரையாம்) மயில்மீது (தோன்றி நிற்பாய்) எதிர்தோன்றி அருள் புரிவாயாக.

(சு - உ.) பார்வதி பாலகனே! யமன் என் முன் வந்தால் நீ மயில்மீது வந்து அருள்புரி.

(கு - உ.) 1 "கார்மா மிசை காலன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்" — அநுபூதி-10.

2 த்ரியம்பகன் = முக்கண்ணன்; அம்பகம் = கண்.

## 81. யமனை வெருட்டல்

தாரா கணமெனுந் தாய்மார் [1]அறுவர் தருமுலைப்பால்
ஆரா [2]துமைமுலைப் பாலுண்ட பால னரையிற் கட்டுஞ்
[3]சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

(அந்.) அந்தகா! தாராகண ...... வாராதகல்; வந்தபோது உயிர் வாங்குவனே.

(பொ-உ.) (அந்தகா) ஓ எமனே! (தாரா கணம் எனும்) நக்ஷத்திரக் கூட்டம் எனப்படும் (தாய்மார் அறுவர்) கார்த்திகை மாதர் அறுவரும் (தரு முலைப்பால்) கொடுத்த முலைப்பாலை (ஆராது) உண்டு வயிறு நிரம்பாது உமாதேவியின் பாலையும் உண்ட (பாலன்) குழந்தையாம் முருகவேள் தமது அரையிலே கட்டியுள்ள (சீராவும்) உடைவாளும், கையில் உள்ள சிறிய வாளும், வேலாயுதமும் என் உள்ளத்தே நிலைந்து விளங்குகின்றன; ஆதலால் (வாராது அகல்) நீ என்னிடம் வராமல் அகன்று ஓடிப்போ: வந்தபோது — என் சொல்லை மீறி வந்தால் உன்னுடைய உயிரையே மாய்த்து விடுவேன்.

(சு-உ.) ஓ! யமனே! முருகவேளின் வாளும் வேலும் என் தியானத்தில் சதா உள்ளன: ஆதலால் என்னிடம் வராதே! வந்தால் உன் உயிரை வாங்கிவிடுவேன்.

(கு-உ.) 1 "சரவணப் பூம்பள்ளியறைத் தாய்மா ரறுவர்திரு முலைப் பாலுண்டான்"—சிலப்பதிகாரம்-குன்றக்குரவை.

2 உமை முலைப்பால்—பரஞானம். 3 சீரா-27-ஆம் பாடற் குறிப்பைக் காண்க, "கார்த்திகையின் முலைப்பாலும் கவுரிமுலைப் பாலுமுண்டு ...... மூவர்தொழும் திருத்தணிகை முதுகிரியில் எழுஞ் சுடரே"—தணிகைக் கலம்பகம் 1.

## 82. பிரார்த்தனை - தாளிணையைப் பணிய

தகட்டிற் [1]சிவந்த கடம்பையு நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்[2]புண்ட ரீகனண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்டவெட்டிப்
[3]பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே.

(அந்.) புண்டரீகன் ... பயங்கரனே! தகட்டிற் ... பணித்தருளாய்.

(பொ - உ.) புண்டரிகன்—தாமரைத் தவிசில் வீற்றிருக்கும் பிரமனது அண்டத்தின் உச்சியையும் பிளந்து, வளர்ந்து தேவேந்திரனுடைய உலகையும் (மூட்ட எட்டி) தாக்கி எட்டிப் பிடித்து (பகட்டில் பொருதிட்ட) (மத) யானைபோலச் சண்டை செய்த (நீட்டுரம்) கொடுமை வாய்ந்த (சூர (பயகரனே) சூரனால் ஏற்பட்ட பயத்தை நீக்கினவனே! (தகட்டில் சிவந்த) ஏடுகள்—இதழ்கள் சிவந்துள்ள கடப்ப மாலையையும், என் நெஞ்சையும் உனது திருவடி இரண்டினிடத்தே (புகட்டி) செலுத்தி உன்னைப் பணிய (எனக்கு) பணித்தருளாய்—கட்டளையிட்டு அருள் புரிவாயாக.

(சு - உ.) சூரனை அழித்த முருகா! என் நெஞ்சையும் கடப்பமாலையையும் உன் திருவடிக்கே செலுத்த அருள்புரிதி.

(கு - உ.) 1 செங்கடம்பு -"செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு"—திருப்புகழ் 368. 2 புண்டரீகன் = பிரமன்; புண்டரீகம் = தாமரை. 3 பகடு = ஆனை : பேரெருது; பகட்டில் = பகடுபோல.

(1) தகடு-பூவின் புற இதழ். 'கருந்தகட்டுளைப்பூ'-திருமுருகா 27. கடம்பே—முருகவேளுக்கு உகந்தது—கார்த்திகை மாதர் பால் கொடுத்து—ஆறு குழந்தைகளையும் சரவணப் பொய்கையில் கடப்ப மர நிழலில் துயில வைத்தனர். "அறுவராகும் ஒரு பெரு முதல்வன் தன்னைத் தண்டலை பொதுளும் நீபத் தண்ணிழற் பொய்கை தன்னில்—கஞ்ச மா மலர்ப் பள்ளி சேர்த்திக் கண்டுயில் செய்வித்தேத்த"—கந்த புரா-1-11-118. தமக்கு நிழல் தந்த பெற்றியால் கடம்பின் மலர் முருகவேளுக்கு உகந்ததாயிற்று. அவரும் 'கடம்பன்' எனப் பேர் பெற்றார்.

(2) நெஞ்சை இறைவனிடம் செலுத்திக் கடப்பமாலையைச் சூட்ட வேண்டும்; நெஞ்சொடு சேராத மலர்ப் பூஜை பயனற்றது.

"மலர்தூவிச் சிந்தம் ஒன்ற வல்லார்க்கு அருளும் சிவன்" "உமை அலரொடு சிந்தை செய்வோர் வினை சிதைவே" "மலர்தூவும் நினைந்தே"—"நறுமலர்க்கொடு—நனை நினைவொடு வழிபடும் அடியவர்"—சம்பந்தர் 2-38-1; 3-94-6; 1-34-8; 1-21-4.

(3) பணியப் பணித்தருளாய் என்றார்-'அவனருளாலே அவன் தாள் வணங்கி'—என்பது திருவாசகம் (சிவபுராணம்-28.)

(4) பகட்டிற் பொருதிட்ட — யானையின் போர்த்திறம்—"துன்னருந் திறற் கமழ்கடா அத்து, எயிறுபடையாக எயிற் கதவிடாஅ — பெருங்கை யானை", 'நளிகடல் இருங்குட்டத்து வளிபுடைத்த கலம்போலக் களிறு சென்று களன் அகற்றவும்', 'மறலியன்ன களிறு'—புறநா-3, 26, 13.

(5) 'பயங்கரனே' எனக்கொண்டால் (சூரனுக்கு அச்சத்தை (பயத்தை) விளைவித்தவனே — எனப் பொருள்படும். "அமராபதிகாவல சூர பயங்கரனே"—அநுபூதி 18. 'நிருத சங்கார பயங்கரனே'—அலங்காரம்-பாடல் 103. 'பயகரனே' என்றிருந்தால் சூரனால் ஏற்பட்ட பயத்தை ஒழித்தவனே, எனப் பொருள்படும்.

பயகரமாலை என்னும் பெயரைப் பயங்கரமாலை எனத் திருத்திவிட்டதாக டாக்டர் சுவாமிநாதையர் குறித்துள்ளார். அந்த மாலையில் 'பரதேசி பயகரனே'—என்பதற்கு யாதொரு 'துணையுமில்லாதவருடைய அச்சத்தைக் கெடுப்பவர்' எனப் பொருள் விளக்கியுள்ளார்.

## 83. முருகன் திறல்

தேங்கிய அண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளந்தனிவேல்
வாங்கி யனுப்பிடக் குன்றங்க ளெட்டும் வழிவிட்டவே.

(பொ-உ.) (தேங்கிய) மனங் கலங்கி இருந்த (அண்டத்து) (தேவ) லோகத்து (இமையோர்) தேவர்களின் (சிறைவிட) சிறையை ஒழிப்பதற்கே தனது (சிற்றடிக்கே) சிறிய திருவடிகளிலே (பூங்கழல்) அழகிய வீரக் கழல்களைக் கட்டின (பெருமாள்) முருகவேள் தமது (கலாபப் புரவி மிசை)-தோகை பெற்ற (குதிரையாம்) மயில்மீது ஏறி நடத்த (சூரன் தளம் முறிந்தது) சூரனுடைய சேனைகள் முறிபட்டு அழிந்தன; (அவர்) தமது (தனிவேல்) ஒப்பற்ற வேலாயுதத்தை (வாங்கி அனுப்பிட) எடுத்துப் பிரயோகிக்கக் (குன்றங்கள் எட்டும்) அஷ்டகிரிகளும் வழி விட்டவே-வழிவிட்டு விலகின,

(சு-உ.) முருகவேள் தேவர்களின் சிறையை ஒழிக்க மயில்மீது ஏறி நடத்தினவுடன் சூரனுடைய சேனைகள் தோற்று அழிந்தன; அவர் வேலைச் செலுத்தினவுடன் அஷ்டகிரிகளும் வழிவிட்டு விலகின.

(கு-உ.) தேங்குதல்-மனம் கலங்குதல் (பிங்கலம்); "வேல்வாங்கவே... சிகர நெடுங்கிரி குகைகள் திறந்து திகந்தமும் லோகாந்தமும் நீர் தேங்கின"—வேல்வாங்கு வகுப்பு.

கழல்-'பதமலர்மிசை கழல்கட்டாப் பாலக' என்றார் திருப்புகழில்(1152), இங்கு கழல் கட்டும் பெருமாள் என்றார். இதன் விவரம் திருப்புகழ் 1152-பக்கம் 356 கீழ்க்குறிப்பிற் காண்க.

## 84. அடைக்கலம் புகுதல்

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்து மிந்தக்
[1]கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும் போய்ப்
[2]பைவருங் கேளும் [3]பதியுங் கதறப் [4]பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே.

(பொ - உ) மை வரும் - கருநிறம் விளங்கும் (கண்டத்தர்) திருக் கழுத்தை உடைய சிவனது மைந்தனே! கந்தனே! என்று வாழ்த்துகின்ற இந்தக் (கை வரும்) ஒழுக்கமுறை அமைந்த—(தொண்டன்றி)—வழிபாடு தவிர - வேறு பணி—உய்யும் வழி ஒன்றும் அறியேன்; நான் (கற்ற கல்வி யும் போய்) படித்த படிப்பெல்லாம் மறந்துபோய்ப், (பைவரும்) துக்கிக்கும் (கேளும்) சுற்றத்தினரும், (பதியும்) ஊராரும் கதறி அழ, (என்னுடன்) பழகி நின்ற (ஐவரும்) (மெய், வாய், கண், மூக்கு, செவி எனப்படும் ஐம் பொறிகளும் (கைவிட்டு) தத்தம் தொழில்களைச் செய்யாது நழுவிப்போய், மெய் விடும்போது—(இந்த) உடலை நான் விடும்போது உன் (திருவடிகளே) எனக்கு அடைக்கலமாம்.

(சு - உ.) சிவகுமர! கந்த! என வாழ்த்தும் தொண்டுதான் எனக்குத் தெரியும்; என் உயிர் போம்போது அடியேன் உன் அடைக்கலம்.

(கு - உ.) 1 கைவருந் தொண்டு = பழகி வந்துள்ள தொண்டு; 2 பைவருங்கேள் = துன்புறும் சுற்றத்தார்; 'பையென்ற நெஞ்சத்தேம்' கலித்தொகை-118. 3 பதி = ஊரார். "உறவின் முறை கதறியழ ஊராரும் ஆசையற"— திருப்புகழ்-1143. 4 பழகிநிற்கும் ஐவர் - ஐம்புலன்கள்.

"ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவர்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே"-திருமந்திரம் 188.

மணிவாசகனர் அருளியுள்ள அடைக்கலப்பத்துப் போல அருமை வாய்ந்த பாடல் இது. பாராயணமாய் முருகனிடம் சதா முறையிடு வதற்கும் உரிய பாடல் இது. உறவினர் - நட்பினர் உயிர் விடும்போது அவர் காதிலே அடைக்கலப்பத்துப் போல ஓதவேண்டிய பாடல் இது.

"என்பெற்ற தாயரும் என்னைப் பிணமென் றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்
உன்பற் றொழிய ஒருபற்று மில்லை உடையவனே"
—பட்டினத்தார்.

அன்னை அழுது பிணமென் றெனைவிட் டகன்றுவிட்டாள்
பொன்னை அனைய மனையாள் புலம்பிப் புறம்புநின்றாள்
என்னை எமர்கொண்டு காட்டகத் திட்டங் கெரியிலிட்டார்
உன்னை ஒழிய ஒருதுணை உண்டோ உடையவனே.!

## 85. உலகுக்கு உபதேசம்

[1]காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
[2]மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.

(அந்.) விழிநாசி ...... யோகிகளே! காட்டிற் ...... எளிதே.

(பொ-உ.) (விழி) கண்ணோக்கத்தை (நாசி) மூக்கின் (நுனியில்) (வைத்து) பொருந்த வைத்து (மூட்டிக் கபால மூலாதார நேர் அண்ட மூச்சை உள்ளே ஓட்டிப் பிடித்து) - மூச்சை - பிராணவாயுவை மூலாதாரம் மூட்டி-மூலாதாரத்தினின்றும் மூண்டு எழச் செய்து கபாலம் நேர் அண்ட-கபாலத்தை நேராக அண்டும்படி உள்ளே (சுழுமுனை நாடி வழியே) ஓட்டி—செலுத்திப் பிடித்து, எங்கும் ஓடாமல்—புறத்தே வேறெங்கும் ஓடாதபடி, (சாதிக்கும்) யோகமுறையிற் சாதிக்க முயலும் யோகிகளே! (ஏன் இப்படிக் கஷ்டப்படுகின்றீர்கள்)! காட்டில்—வள்ளிமலைக் காட்டிலே வளர்ந்த குறத்தி வள்ளியின் நாயகன் - முருகனுடைய திருவடிகளிலே (உங்கள்) கருத்தைப் புகட்டின் நீங்கள் உங்கள் தியானத்தைச் செலுத்தினல் முத்தி வீட்டிற் புகுதல் மிக எளிய காரியமாகும்—(இதை அறிந்துய்ம்மின்கள்).

(சு-உ.) கடினமான யோகாப்பியாசம் செய்யும் யோகிகளே! வள்ளி நாயகன் திருவடியைத் தியானித்தால் முத்தி மிக எளிதிற் கிடைக்கும்.

(கு-உ.) இந்தச் செய்யுள் நாம் எளிதிற் கடையேற சுவாமிகள் அருளிய சுருக்க வழி உபதேசத்தைக் கொண்டுள்ளது. அவசியம் நாம் அநுட்டிக்க வேண்டியது.

பேறு பெறுதற்குச் சுருக்க வழியையே யாவரும் விரும்புவர். குமர குருபர சுவாமிகளும்—

"சரியையிற் ருழ்க்கலை, கிரியையிற் பணிக்கலை,
யோகத் துய்க்கலை, பாகமும் நோக்கலை,
நாளையின் றெனஒரு வேளையும் நவிற்றலை,
ஈண்டெனக் கருளுதி இறைவ!
பூண்டுகொண் டிருப்பவின் பொன்னடித் துணையே"

—எனப் பிரார்த்தித்துள்ளார். (பண்டார மும்மணி - 29.) "வம்பிற் சுற்றாது பரகதி அருள்வாயே"—திருப்புகழ் (945).

1 பேரின்பம் அடைதற்கு எளிதான வழி, பிரான் பதத்தே கருத்தைப் புகுத்துதல்தான் என்பதற்குச் சான்று அங்ஙனம் கருத்தைப் புகட்டின 'வள்ளியே' ஆதலின்—"காட்டிற் குறத்தி பிரான்" என வள்ளியின்

தியானச் சிறப்பையும் முருகவேளின் கருணையையும் விளக்கினர் அருணகிரியார்.

2 "கட்டி முண்ட கரபாலி அங்கிதனை முட்டி அண்டமொடு தாவி"— என்றார் திருப்புகழ் 612-ல்.

## 86. யம பயம் இன்மை

வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
[1]காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்[2]டென்
பாலா யுதம்வரு மோயம னோடு பகைக்கினுமே.

(பொ - உ.) வேலாயுதம் ஏந்திய பிரான்—சங்கையும் சக்ராயுதத்தையும் ஏந்திய திருமாலும், (விரிஞ்சன்) பிரமனும் கண்டறியாத சூலாயுத மூர்த்தியாகிய சிவபிரான் ஈன்ற கந்தச் சுவாமி—(சுடர்க் குடுமி) ஒளி பொருந்திய சிகையை (கொண்டையை) உடையதும், காலே ஆயுதமாகச் சண்டை செய்வதுமான கோழியைக் கொடியாக உடையவன் — ஆகிய முருகபிரானது திருவருள் என்கின்ற கவசம் எனக்கு உண்டு (திருவருள் என்னும் கவசத்தை நான் தரித்துள்ளேன்) — (ஆதலினால்), யமனோடு பகைக்கினும் என்பால் ஆயுதம் வருமோ—நான் யமனோடு பகைத்துப் போர் புரியினும் அவன் விடும் ஆயுதங்கள் என்னிடம் வரமுடியுமோ? வரமுடியாது; வந்தாலும் என்ன செய்ய முடியும்—(ஒன்றும் செய்ய முடியாது என்றபடி).

(சு - உ.) வேற்கடவுளின் திருவருள் என்கின்ற கவசம் என்னிடம் இருப்பதால் யமனுடைய ஆயுதம் கூட என்னை ஊறுபடுத்த முடியாது.

(கு - உ.) 1 காலே ஆயுதமாகக்கொண்டு பொருதலின் "காலாயுதம்" எனக் கோழிக்குப் பெயர் போந்தது; "காற்படைக் கொடியினன்" என்றார் கல்லாடத்திலும் (69). 2 என்பால் ஆயுதம் வருமோ - எனப் பிரிக்க.

## 87. யம பயம் இன்மை

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
[1]அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட [2]கடையேடு வந்தினி யென்செயுமே.

(பொ - உ.) குமரமூர்த்தியே நின் திருவடியே சரணம், சரணம் (அடைக்கலம் - அடைக்கலம்) என்று தேவர்களின் (குழாம்) கூட்டம்

துதிக்கின்ற (அமராவதியில்) பொன்னுலக நகராகிய அமராவதியில் விற்றிருந்தருளின பெருமாள் ஆகிய முருகவேளின் அழகிய ஆறு முகங்களையும் கண்ட (தமராகி)—முருகவேளுக்கு அனுக்கராய்—வேண்டியவராய்—அவர்க்குரியராய்—(வைகும்) இருக்கின்ற (தரியான) ஒப்பற்றவர்களான (ஞான தபோதனர்க்கு) ஞான தவசீலர்களுக்கு இங்கு எமதர்மராஜன் விட்டனுப்பின (கடை ஏடு) வாழ்க்கை முடிவைக் குறிக்கும் மரணச்சீட்டு—யமபுரிக்குப் புறப்படு என்று எழுதிவரும் சீட்டு வந்து, இனி, (அவர்களை) என்ன செய்யக்கூடும்—(ஒன்றும் செய்ய முடியாது என்றபடி).

(சு - உ.) முருகவேளைத் தரிசிக்கப்பெற்ற தவச்சீலர்களிடம் எமனோலை ஒன்றும் செல்லாது.

(கு - உ.) 1 அமராவதியில் முருகவேள் விற்றிருந்தல்: தேவசேனையை மணந்த பின்பு முருகவேள் பொன்னுலகுக்குச் சென்று பானுகோபனல் அழிபட்ட அவ்வுலகைப் புதுக்கி அலங்கரிக்க வைத்துத் தேவர்களைக் குடியேற்றினர்; "இமையவர் நாட்டினில் நிறை குடி ஏற்றிய...தம்பிரானே"—திருப்புகழ் 990. அங்ஙனம் குடியேற்றி விண்ணுலகுக்குத் தலைநகராம் அமராவதியில் சிம்மாசனத்தில் விற்றிருந்தார்.

"மடங்கலந் தவிசின் உம்பர் வென்றியந் தனிவே லண்ணல் விற்றிருந் தருளினனே"—கந்த புரா-5-3-37.

அமராவதியிற் பெருமானது திருவோலக்க தரிசனம் ஞானபோதனர்க்கே கிட்டுவது; அருணகிரியார் கிளிரூபமாகப் பாரிஜாத மலருக்காக, விண்ணுலகுக்குச் சென்றபோது அங்கே தேவலோகத் திருக்கோயிலில் முருகவேளின் திவ்ய தரிசனம் அவருக்குக் கிடைத்திருக்கும்: அண்ணலின் விசேட அனுக்கிரகமும் கிடைத்திருக்கும். இதனை "கற்பகாடவியில் வாழ்வித்த வேதியனும் வேடிச்சி காவலனே"—என வரும் வகுப்பு விளக்குகின்றது. "ஏறுமயிலேறி" என்னும் பாடலின் ஈற்றடி 'ஆதி அமராவதி அமர்ந்த பெருமாளே' என்றும் ஒரு பாடம் கொண்டுளது.-அருணகிரியார் வரலாறு பக்கம்-167 - 168.

2 கடை ஏடு = எமனோலை. "ஓலையுந் தூதருங் கண்டு"—இந்நூல் - 27.

"வருபவர்க ளோலைகொண்டு நமனுடைய தூதரென்று
மடி பிடியதாக நின்று தொடர்போது"—திருப்புகழ்-430.

## 88. பிரார்த்தனை - ஈடேற

வணங்கித் துதிக்க அறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்றுவாய் 1கொடி யுங்கழுகும்
2பிணங்கத் 3துணங்கை யலகைகொண் டாடப் 4பிசிதர்தம்வாய்
5நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே.

(அந்.) கொடியும் ...... நிர்மலனே! வணங்கித் ...... ஈடேற்றுவாய்.

(பொ - உ.) (கொடியும்) காகமும், கழுகும் (பிணங்க) ஒன்றோடொன்று (உணவுக்காக) மாறுபட்டுச் சண்டைசெய்ய, (துணங்கை அலகை கொண்டாட) அலகை — பேய்கள் — துணங்கைக் கூத்தை ஆடி விளையாடப், (பிசிதர் தம்வாய்) அசுரர்களின் வாய்கள் (நிணம் கக்க) கொழுப்பை மாமிசத்தைக் கக்கும்படி (விக்ரம) பராக்ரமம் வாய்ந்த வேலாயுதத்தை (தொட்ட) செலுத்தின நிர்மல (பரிசுத்த) மூர்த்தியே! (உன்னை) வணங்கித் துதிக்க அறியாத (மூட) மனிதர்களுடன் (இணங்கி) கூடிக் குணங் கெட்டுப்போன துஷ்டனாகிய என்னை ஈடேற்றி அருளுவாயாக.

(சு - உ. அசுரர்களைச் சங்கரித்த அண்ணலே! உன்னை வணங்காத மூடர்களுடன் கூடிக் குணங்கெட்ட என்னை ஈடேற்றி அருளுக.

(கு - உ.) [1] கொடி = காகம். [2] பிணங்க = நெருங்க, சண்டை செய்ய. [3] துணங்கை கொண்டாட = துணங்கை என்னும் கூத்தாட; அலகை = பேய். "பிள்ளை விழ விழவும் பெருந் துணங்கை கொட்டுமே" - கலிங்கத்துப் பரணி. அவதாரம் 78. "முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித் தொடக்கிய நடையது துணங்கை யாகும்" - (பிங்கலம்). [4] பிசிதர் = பிசித ஊணர்; இறைச்சி தின்பவர்; [5] நிணம் = கொழுப்பு.

இறைவனை வணங்குவாருடன் இணங்கவேண்டும்: அப்பன் ...... செறிதரு கழல்கள் ஏத்திச் சிறந்தினி திருக்க மாட்டா அறிவிலாத் தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே — (திருவாசகம் - அச்சப்-8.)

'உன்பாத கஞ்ச மலர்மீதே உரவொடு புனைதர நினைதரும் அடியரோ டொன்றாக என்று பெறுவேனோ' — திருப்புகழ் 370.

## 89. பிரமனை வெருட்டல்

[1]பங்கே ருகனெனைப் [2]பட்டோ லையிலிடப் பண்டுதனை
தங்காலி லிட்ட தறிந்தில னோதனி வேலெடுத்துப்
பொங்[3]கோதம் வாய்விடப் [4]பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே.

(அந்.) பங்கேருகன் பட்டோலையில் எனை இட ...... இருவிலங்கே.

(பொ - உ.) (பங்கேருகன்) பிரமன் (பட்டோலையில்) தான் உயிர்களைப் பற்றிக் குறிப்பெழுதும் ஓலையில் (எனை) என்னையும் (இட) சேர்த்து (எழுத) சேர்த்து எழுதினது என்ன தைரியம்; நான் முருகவேளின் அடியான் என்று அவன் அறிந்திலனோ!; (பண்டு) முன்பு ஒருமுறை (தனை) விலங்கை (முருகவேள்) தன் காலில் இட்டதை (அறிந்திலனோ) உணர்ந்திலனோ! — மறந்து விட்டானோ! (தனி) ஒப்பற்ற வேலாயுதத்தை எடுத்துப் (பொங்கு

ஓதம்) அலைகள் பொங்கி மேலெழும் கடல் கதறவும், (பொன்னஞ் சிலம்பு) பொன் மயமான கிரவுஞ்சம் (புலம்ப) அழுது ஒலி செயவும், (வரும்) போர்க்கு எழுந்த (எங்கோன்) எமது தலைவறைகிய முருகவேள் (இங்ஙனம் என்னையும் பிரமன் தன் குறிப்பேட்டிற் சேர்த்ததை அறிந்தால் இனி அந்த (நான்முகனுக்கு) பிரமனுக்கு (இருவிலங்கே) முருகவேளால் இரண்டாம் முறையும் விலங்கு இடப்படும். (அல்லது - நான்முகனுக்கு அவர் இப்போது இரட்டை விலங்கு—கால் விலங்குடன்—என்னைச் சேர்த்து எழுதின அந்தக் கைக்குக் கைவிலங்கும் மாட்டி விடுவார்):

(சு - உ.) என்னைப் பிரமன் தனது குறிப்பேட்டில் எழுதி வைத்த விஷயம் எங்கள் முருகவேள் அறிந்தால் அவர் அவனுக்கு இரு விலங்கு மாட்டிவிடுவார்.

(கு - உ.) [1]பங்கேருகன் = பிரமன். [2]பட்டோலை = குறிப்பெழுதுமோலை. "வித்தார கவித்திறத்தினர் பட்டோலை"—திருப்புகழ்-981.
[3]ஓதம் = கடல்; [4]பொன்னஞ் சிலம்பு = கிரவுஞ்சம்.

மூன்பு இட்ட விலங்கு காலில்; என்னைப் பட்டோலையில் எழுதினதை முருகவேள் அறியின், அவர் இடும் விலங்கு பிரமனது கையில்—ஆக இரண்டு விலங்கு — முன்பு ஒன்று — இப்போது ஒன்று; இருவிலங்கு—பெரிய விலங்கு—எனவும் பொருள் தரும்.

## 90. தரிசனப் பாடல்

மாலோன் மருகனை [1]மன்றுடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோ டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த [2]நான்முகனே.

(அந்.) மாலோன் மருகனை...... தொழ, அந்த நான்முகன் நாலாயிரங் கண் படைத்திலனே.

(பொ - உ.) திருமாலின் மருமகனைச்—சபையில் நிருத்தம் செய்யும் சிவனது புதல்வனை—தேவர்களுக்கு மேற்பட்ட தேவனை—மெய்ஞ்ஞான சொருபராம் தெய்வத்தை—(மேதினியில்) இப் பூமியிலே (சேல் ஆர் வயற் பொழில்) சேல்மீன்கள் நிறைந்த) வயலும் பொழிலும் சூழும் திருச் செங்கோட்டு (வேலனை) நான்போய்த் தரிசித்துத் தொழுவதற்கு அந்த (நான்முகன்) பிரமதேவன் எனக்கு நாலாயிரங் கண் படைத்தான் இல்லையே; (முருகவேளின் அழகைப் பார்க்க இரண்டு கண்கள் போதவே போதா; நாலாயிரங் கண் எனக்கு வேண்டும் என்றபடி)

(சு - உ.) திருச்செங்கோட்டு வேலனை நான் தரிசித்து மகிழ பிரமன் எனக்கு நாலாயிரங் கண் படைக்காது விட்டுவிட்டானே.

(கு - உ.) 1 மன்றுடி = நடேசுரர்.

2 நான்முகன் = பிரமன். செங்கோட்டுப் பெருமானது திவ்விய ஓலக்க விசேடம் இத்தன்மைத்து என இச்செய்யுள் விளக்குகின்றது. இதனலன்றே "செங்கோடமர்ந்த பெருமாளே - சென்றே யிடங்கள் கந்தா எனும்போ செஞ்சேவல்கொண்டு வரவேணும்" என்றார் திருப்புகழிலும் - 367. "செங்கேழடுத்த" என்னும் இந்நூற் செய்யுளையுங் காண்க.

திருச்செங்கோட்டைப் பற்றிப் பாடல் 23-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

## 91. உலகுக்கு உபதேசம்

கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேல னைக்கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே.

(பொ - உ.) கருமால் மருகனை—கரிய திருமாலின் மருமகனை, செம்மான் மகளை-செவ்விய மானுக வந்த இலக்குமியின் மகளாகிய வள்ளியைக் (களவு கொண்டு வரும்) களவாடி வந்த—(மா குலவனை) சிரேஷ்டமான குலத்தவனை—சேவலைக் (கைக்கோளனை) கையிற் கொண்டவனை, (வானம்) தேவர்கள்—பிழைத்துய்யப், போர் செய்த மாமரமாகிய சூரனை அழித்த (போர் வேலனை) போருக்கு உற்ற வேலாயுதனைக், (கன்னிப் பூகமுடன்) இளங் கமுக மரங்களுடன், (தரு மா)—மரமாகிய மாமரங்கள் (மருவு) பொருந்தி விளங்கும் திருச்செங்கோடனை வாழ்த்தித் துதித்தல் (சால நன்றே) மிக நன்றான பணியாகும்.

(சு - உ.) திருமால் மருகன், வள்ளி நாயகன், சேவற்கொடியோன், சூர்மாவை அட்டவன் ஆகிய திருச்செங்கோட்டு வேலனை வாழ்த்த நன்மைகள் கைகூடும்.

(கு - உ.) இச்செய்யுளில் ஜாதிகளைக் குறிக்கும் கருமான், செம்மான் (சக்கிலி), மாகுலவர் (வேடர்), கைக்கோளன், வேலன் (வெறியாட்டாளன்) என்னும் பதசாதுர்யம் கவனிக்கற்பாலது. 'மறையவ னரசன் செட்டி நன் தாதை வயங்குநாற் சூத்திரன் புவனம், பறைதரு நல்ல சங்கரன் வேடன் பணிசிவன் விளங்குமக் கணக்கன், அறைசெயம் பட்ட னகமது புறத்தே காலியாட் டரவமா ரிடையன், பறையனு முன்ன ரானநீ யின்று பள்ளனு னமைதெரிந்தேன் யான்"-என்னும் பேரூர்ப் புராணச் செய்யுளும் —பள்ளு-35— இத்தகைமைத்து.

கைக் கோளன் = கையிற் கொண்டவன்; சேவல் திருக்கரத்துள்ள தென்பது 'சேவலங்கொடியான பைங்கர' (103), "செஞ்சேவற் செங்கையுடைய ஷண்முக தேவே (397)-என்னுந் திருப்புகழாலும், ' பசுந்தழைத்

தோகையுஞ் செஞ்சிறைச் சேவலுந், தாங்கியு மலர்க்கரந் தங்கியு நிலைத்த, பேரொளி மேனியன் - என்னுங் கல்லாடத்தானும் (75) விளங்கும். கருமான் - செம்மான் - மூரணணி.

குலவன் = குலத்தவன்; "குலமிலாதானைக் குலவனே என்றும்"— சுந்தரர் 7-34-6; "பரிக்கதிர்க் குலவன்"—கல்லாடம்-12.

## 92. பிரார்த்தனை - திருவடியைப் பெற

தொண்டர்கண் [1]டண்டி[2]மொண் டுண்டிருக் குஞ்சுத்த [3]ஞானமெனுந்
தண்டையம் புண்டரி கந்தரு வாய்[4]சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண் டங்கொண்டு மண்டி மிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட காவலனே.

(அந்.) சண்டதண்ட...காவலனே! தொண்டர்...... தருவாய்.

(பொ-உ.) சண்ட கொடுமையும் கோபமும் கொண்டவனும், (தண்டம்) தண்டாயுதம் (அல்லது படையை) உடையவனுமான (வெம்) கொடிய சூரன் (மண்டலங்கொண்டு) பூமியின் ஆட்சியை அடைந்து, (பண்டு) முன்பு, (அண்டர்) தேவர்களின் (அண்டம் கொண்டு) அண்டத்தின் ஆட்சியையும் கைப்பற்றி, (மண்டி மிண்ட) உக்கிரத்துடன் நெருங்குதலைக் (கண்டு) பார்த்து, உருண்டு-போரில் அழிந்து புரண்டு (அண்டர்) தேவர்கள் (விண்டு ஓடாமல்) சிதறுண்டு ஓடாமல், வேலாயுதத்தைச் செலுத்தின அரசே! (தொண்டர்) அடியார்கள் (கண்டு) உன்னைத் தரிசித்து, (அண்டி) உன்னை நெருங்கி, (மொண்டு) உன் திருவருள் அமுதை (மொண்டு)—வாரிக்கொண்டு (உண்டு) பருகி, (இருக்கும்) அனுபவிக்கும், (சுத்த ஞானம் எனும்) பரிசுத்த ஞான நிலையதாகும் தண்டை சூழ்ந்த அம்—அழகிய (புண்டரிகம்) தாமரையன்ன திருவடியைத் (தருவாய்) தந்தருளுக.

(சு-உ.) சூரனை யட்ட வேலாயுத மூர்த்தியே! அடியார்கள் கண்டு அனுபவிக்கும் ஞானபீடமாம் உனது திருவடியைத் தந்தருளுக.

(கு-உ.) 1 அண்டி = நெருங்கி.

2 "அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன்" — திருவாசகம்-அடைக்கலப் பத்து 10.

3 "ஞானமென்னும் புண்டரிகம்" என்பது "ஞானபாத பத்மம்" —திருப்புகழ் 442.

4 சண்டம் = கொடுமை: கோபம்: வேகம். "சண்டக் கருமன் அண்டிக் கொளுகயி றெடுத்து"—திருப்புகழ் 585.

இச் செய்யுள் திருவடியின் பெருமையைக் கூறிற்று.

"திருவடியே சிவமாவது தேரில்
திருவடியே சிவலோகஞ் சிந்திக்கில்
திருவடியே செல்கதி யதுசெப்பில்
திருவடியே தஞ்சமுள் தெளிவார்க்கே"-திருமந்திரம் 138.

அருணகிரியார் சந்தக் கவி என்பது மெல்லோசை நிறைந்த இப் பாடலால் நன்கு விளங்கும்.

வழி எதுகை அழகு கவனிக்கத் தக்கது. வடமொழியில் அநுப் பிராசம் என்பர். யாப்பருங்கலக் காரிகை—ஒழிபியல். சம்பந்தர் தேவாரத்தில்—'சுரருலகு' எனத் துவக்கும் பதிகத்தில் [3-67.] பாடல்தோறும் வழி எதுகையை நிரம்பக் காணலாம்.

## 93. முருகன் பெருமை

மண்கம [1]ழுந்தித் திருமால் [2]வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
[3]கிண்கிணி யோசை பதினு லுலகமுங் கேட்டதுவே.

(பொ-உ.) திருமால் (மண் உண்ட வாயர் ஆதலினால்) மண்ணின் மணம் வீசும் (உந்தி) வயிற்றை உடைய அவரது வலம்புரிச் சங்காம் பாஞ்சசன்னியத்தின் ஓசை அந்த விண்ணுலகத்தில் உள்ள (கமழ்) மணம் வீசும் பொழிலிலும், நீர்நிலையிலும் கேட்டது; வேலாயுதத்தை ஏந்தி, வலிய மலைகள் சிதற, விளையாடின பிள்ளையாம் முருகனின் திரு அரையிற் கட்டியுள்ள கிண்கிணியின் ஓசையோ பதினான்கு உலகங்களிலும் கேட்டது.

(சு-உ.) திருமாலின் பாஞ்ச சன்னியத்தின் ஓசை விண்ணுலகம் ஒன்றிலே சோலையிலும் - வாவியிலும் கேட்டது; முருகவேளின் கிண்கிணி ஓசையோ பதினான்கு உலகங்களிலும் கேட்டது.

(கு-உ.) 1 உந்தி=வயிறு; புவியுண்டாராதலின் 'மண்கமழுந்தித் திருமால்' ஆயினர். "சகந்தை யகந்திடு நெடியவர்"-திருப்புகழ் 303. "படிக்கடத்தையும் வயிறடை நெடியவர்"—திருப்புகழ் 267-பக்கம் 164 குறிப்பு.

2. "இப்பியா யிரமே சூழ்ந்த திடம்புரி யென்று கூறும், ஒப்பில் சங் காயிரஞ் சூழுறு வலம் புரி யென் றேதும், அப்படி அதுவுஞ் சூழ்ந்த சலஞ்சலமாகும்"-சூடாமணி-3-73. சலஞ்சலம் ஆயிரஞ் சூழ்ந்தது-பாஞ்ச சன்னியம் (பிங்கலம்). திருமால் திருக்கரத்துப் பாஞ்ச சன்னியத்தின் பெருமையைத் திருப்புகழ் 458-ஆம் பாடல் பக்கம்-26 கீழ்க்குறிப்பிற் காண்க.

3. முருகவேளின் கிண்கிணி ஓசையின் சிறப்பை அலங்காரம் பாடல் 13-லும்பார்க்க.

## 94. நெஞ்சோடு கிளத்தல்

தெள்ளிய ஏனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட் டிலைசிறு வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச்சொல்லை நல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே.

(அந்.) சிறுவள்ளை ...... நெஞ்சே! தெள்ளிய ...... வேட்டிலை.

(பொ-உ.) (சிறு) சிறிதாய் (வள்ளை) வள்ளைக் கொடிபோன்ற காதை அணுகித் தள்ளித் துள்ளுகின்ற (கெண்டையை) கெண்டை மீன் போன்ற கண்ணையும், தொண்டையை—கொவ்வைக் கனிபோன்ற வாயிதழையும், (தோதகச் சொல்லை) வஞ்சகம் நிறைந்த பேச்சையும், நல்ல (வெள்ளிய) வெண்ணிறம் விளங்கும் (நித்தில) முத்துப் போன்ற, (வித்தார) நீடிய அல்லது விந்தையான (மூரலை) புன்சிரிப்புடன் கூடிய பற்களையும் (வேட்ட) விரும்பி நிற்கும் நெஞ்சே! (நீ) (தெள்ளிய) தெளிந்து சீரான நிலையில் இருந்த (ஏனலில்) தினைக்கொல்லையில் இருந்த (கிள்ளையை) கிளி போன்ற வள்ளியைக், (கள்ளம்) களவுப் புணர்ச்சிக்கு உட்பட்ட சிறுமியாகிய வள்ளியை (வேட்டவன்) விரும்பிச் சென்றவனை திருத்தணிகேசனது (தாள்) திருவடிகளை (வேட்டிலை) விரும்பினையில்லை! ஈதென்ன பாவம்!

(சு-உ.) மாதர் அவயவங்களை விரும்பும் நெஞ்சமே! வள்ளியை நாடிச் சென்ற திருத்தணிகை நாயகனை நீ விரும்புவாயாக.

(கு-உ.) வள்ளை=வள்ளைக் கொடிபோலும் காது. கெண்டை-மீன் போலுங் கண். வெள்ளிய நித்தில மூரல்=வெண் முத்துப்போன்ற பல். தொண்டை=கொவ்வைக் கனிபோலும் வாய். தோதகம் = வஞ்சகம். "தோதகவித்தை படித்து நடிப்பவர்"—திருப்புகழ் 197.

தெள்ளிய கிள்ளை எனக்கூட்டி—ஞானத் தெளிவுகொண்ட கிளி (வள்ளி) எனலுமாம்; கள்ளச்சிறுமி—முருகன் உள்ளத்தையே கவர்ந்தாளாதலின்; தன்னை இழந்தாள் வள்ளி—முருகன் அவளை நாடிச்சென்று மணந்தான்; நெஞ்சே! நீயும் தன்னையிழந்த நிலையில் இருந்தால் உன்னை நாடி வருவான் முருகன்—என்னும் உண்மையை வள்ளி வரலாற்றால் அருணகிரியார் இங்கு விளக்குகின்றார்.

'வள்ளை தள்ளும் கெண்டை'—'காதடருங் கயல்'—திருப்புகழ் 9. இந்தப் பாடலில் "ள" கர ஓசை மிக்குள்ளது.

## 95. உலகுக்கு உபதேசம்

யான்றா னெனுஞ்சொ லிரண்டுங்கெட் டாலன்றி யாவருக்குந்
தோன்றாது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினாற்
சான்றாரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே.

(பொ-உ.) யான் — தான் என்னும் (சொல் இரண்டும்) இரண்டு சொற்களாற் குறிக்கப்படும் துவிதநிலை (கெட்டால் அன்றி) கெட்டு அத்துவித நிலை கிடைத்தாலன்றிச், சத்தியம் — உண்மைப் பொருள் என்பது (யாவருக்கும்) எவர்க்கும்(தோன்றாது) கிட்டாது; (அந்த சத்தியம் உண்மைப் பொருள் எப்போது எங்குக் கிட்டும் என்றால்) தொல்லை - பழமை யான பெருநிலம்—பெரிய பூமியைச் (சூகரமாய்) பன்றி உரு எடுத்து, (கீன்றான்) தோண்டிச் சென்றவனை திருமாலின் (மருகன்) மருமகனாகிய முருகனும் கிருபாகரமூர்த்தியின் (கேள்வியினால்) (உபதேசம்) கேட்டதனால்— அந்த சத்தியம்—உண்மைப்பொருள் (சான்று ஆரும் அற்ற) சாட்சியாக வேறு ஒரு பொருள் இல்லாத தனி வெளிக்கே—தனியான வெட்டவெளி யிலே வந்து கூடுவதாகும்.

(சு-உ.) உண்மைப் பொருள் என்பது முருகவேளின் உபதேசத்தால் காணக் கூடியதாய்—யான்தான் என்னும் துவிதநிலை (அகங்காரநிலை) அற்றவர்க்குக் கிட்டுவதாகும்.

(கு-உ.) சத்தியம்-உண்மைப் பொருள் "தலைவிபங்கர்க்குச் சத்ய முரைக்கும் பெருமாளே"—திருப்புகழ் 460.

"எனதெனு மலமறில் ** எளிது பெறலென மறைபறை யறைவதொ ருதய மரணமில் பொருள்."—திருப்புகழ் 511.

"பாவியேற்கு முண்டாமோ *** யானென தென் றியாதுமின்றி யறுதலே."—திருவாசகம்-பிரார்த்தனைப் பத்து 5.

"சான்று யாருமற்ற தனிவெளி"-எனப் பிரித்துக்கொள்க.

ஜீவபோதம் மூண்டு நிற்கையில் சிவபோதம் மறையும், சிவபோதம் மூண்டு நிற்கையில் ஜீவபோதம் ஒழியும்.

"யானாகிய என்னை விழுங்கி வெறுந் தானாய் நிலைநின்றது தற்பரமே" —கந்தர் அநுபூதி 28.

> "தானென்றவர்முன் ஒளித்தோடித் தன்னை யிழந்தவர்முன்
> யானென்று சென்றிடுங் காசிப்பிரான்"—காசிக் கலம்பகம் 84.

> "தான்நின் றெனைத் தனக்குள்ளே ஒளிக்கும் என் தன்மைநிற்க
> யான்நின்ற போது எனக்குள்ளே ஒளித்திடும்"
> —பண்டார மும்மணி-4.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"—திருக்குறள்-346.

"நானென தென்னுஞ் செருக்கற்ற ஞானமெய் நற்றவரைத்
தானென ஆக்கிச் சிராமலைநாதன் ........ தரும் அருள்"
—சிராமலைக் கோவை-21.

இந்த அலங்காரச் செய்யுளைத் தாயுமானவர்—உடல் பொய்-65.—
"யான்தான் எனலறலே இன்பநிட்டை என்றருணைக்
கோன்தான் உரைத்தமொழி கொள்ளாயோ"
—என எடுத்தாண்டுள்ளார். சத்தியம் எழுவாய்-தோன்றுது—சந்திப்பது பயனிலைகள். 'யானெடுதானிலாத சுபோதய ஞான வார்த்தை' (திருப்புகழ் 1260) என வருவதுங் காண்க. யான் (நான்), தான் (பதி) துவைத நிலையைக் குறிப்பதாகக் கொண்டால் 'நீவே றெனாதிருக்க நான்வே றெனாதிருக்க' (திருப்புகழ் 220) என்னும் அத்துவித உண்மை விளங்கும். 'யான்' (நான்) என்கின்ற அகங்காரம்—'தான்' என்கின்ற ஆணவம் என்னும் வகையிற் பொருள் கொண்டால் ஜீவபோதம் மூளைந்து நிற்றல் அழிதல்வேண்டும்—எனப் பொருள் ஏற்படும்.

இந்தப் பாடலில் முன் பாகத்துக்கும் பின் பாகத்துக்கும் ஒரு பொருத்தம். யான்—தான் கெடாவிட்டால் சத்தியம் தோன்றுது—என்றுர்; அதற்கு உதாரணம் காட்டவேண்டித் திருமால் பூமியைத் தோண்டின வரலாற்றை எடுத்துக் காட்டினர். சத்தியப்பொருள் திருவண்ணுமலையில் சோதி ரூபமாக நின்றபோது—திருமால் வராகமாய் இந்தச் சோதியை நான் காண்பேன்—என்னுல் காண முடியும் என்னும் அகங்காரத்துடன் பூமியைத் தோண்டிச் சென்றதால் அந்தச் சோதியின் அடி தெரியாது மயங்கி நின்றுர் வரலாறு — திருப்புகழ் 319, பக்கம் 292, பாடல் 535, பக்கம் 222-கீழ்க்குறிப்பு. சூகரம் = பன்றி.

## 96. மயிலின் ஆற்றல்

திடக்கொற்ற வேள்மயி லேயிடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் ருேகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே.

(பொ-உ.) (தடம்) பெருமையும் (கொற்றம்) வெற்றியும் உடைய (வேள்) செவ்வேள்—முருகரின் (வாகனமாகிய) மயிலே! (இடர்தீர) உலகங்களின் இடர்—துன்பங்கள் தீரவேண்டி—தீர்ப்பதற்குத்—(தனி விடில்)—முருகவேள் உன்னைத் (தனிவிடில்) தனியாகப் போக ஏவி விடுத்தால்—நீ வடக்கே உள்ள மேருமலைக்கு அப்புறத்திலும் உனது தோகையின்—

கலாபத்தை வட்டமாக விரித்துங், கடலுக்கு அப்பாலும், (கதிர்க்கு) சூரிய சந்திரர்க்கு அப்பாலும், கனகசக்ரதிடர்க்கு—பொன்மயமான சக்ரவாள கிரிக்கு அப்பாலும், திசைகளுக்கு அப்பாலும், திரிந்து (உயிர்களைப் புரப்பாய்—என்றபடி).

(சு - உ.) முருகவேளின் உத்தரவு இருந்தால் மயில் எங்குள்ள உயிர்களையும் காத்து ரக்ஷிக்கும்.

(கு - உ.) தடம்—பெருமை—'தடச் சிகண்டி'—திருப்புகழ் 959, பக்கம் 783-கீழ்க்குறிப்பு. மயிலும் உயிர்களின் இடர் தீர்க்கும். அது பற்றியே "வேலும் மயிலுந் துணை" என்னும் மந்திரம் பிறந்தது. "வேலு மயிலு நினைந்தவர் தந்துயர் தீர அருள்தரு கந்த" (திருப்புகழ் 920). கந்தரலங்காரம் நூறு பாடல்களில்—முருகனையே விளித்தோ, குறித்தோ பாடின அருணகிரியார் இந்த ஒரு பாடலில் மயிலை முன்னிலைப்படுத்தி விளித்துப் பாடுகின்றார். இது மயிலுக்கு ஒரு தனிச் சிறப்பு ஆகிக், கந்தரலங்கார நூலில் மயில் அலங்காரப் பாடலாய்த் திகழ்கின்றது. ['இடர் தீரத்தனிவிடில்' என்பதை இடர்தீர்—அத்தனி—விடில்—எனப் பிரித்து—இடர்தீர்த்த அந்த ஒரு பூதருமறியாத் தனிவீட்டில் நீ என்னை விட்டால்—பின்பு எனக்காக நீ வரவேண்டிய வேலை இல்லாது—உன் இஷ்டப்படி எங்கும் திரிந்துகொண் டிருப்பாய்—என உரை காண்கின்றார் ஒருவர். நின்றோகையின்—என்பதை—நின் தோகையின் எனப் பிரிக்காமல் நின்று ஓகையின்—எனப் பிரிக்கின்றார் ஒருவர்; ஓகை—மகிழ்ச்சி.]

## 97. மயிலின் ஆற்றல்

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணாமுடி தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா யுதமும் பணிலமுமே.

(பொ - உ.) (சேலில்) சேல் மீன்களின் கூட்டத்தினால் விளங்குகின்ற வயல்களை உடைய திருச்செங்கோட்டு மலைக்கதிபனாகிய முருகவேளின் செழுமை வாய்ந்த (கலபி) மயில் (ஆலித்து) பேரொலி செய்து (அனந்தன்) ஆதிசேடனது (பணாமுடி) படங்களை உடைய முடிகளைந் தாக்க—மோதுவதால்—அதிர்ச்சியுற்று அதிர்ச்சியுற்று—சிதறிச் சிதறி—அந்த மயிலின் காலின் கீழ்க்கிடப்பனவாகும்—எவை எவை என்றால்—மாணிக்கங்களின் (ராசியும்) கூட்டமும், (காசினியை) பூமியைப் (பாலிக்கும்) ரக்ஷிக்கும் (மாயனும்) அந்த ஆதிசேடன்மேல் பள்ளி கொண்டிருந்த திருமாலும் அவருடைய சக்ராயுதமும், (பணிலமும்) சங்கமும்.

(சு - உ.) மயில் ஆதிசேடனைத் தாக்க—அந்தப் பாம்பு அஞ்சிப் புரள்வதால் அதன் முடியிலிருந்த மாணிக்கங்களும், அதன் மேல் பள்ளி கொண்டிருந்த திருமாலும், திருமாலின் கையிலிருந்த சக்ராயுதமும் சங்கமும் - யாவும் சிதறுண்டு மயிலின் காலின்கீழ் விழ்ந்து கிடப்பன வாகும்.

(கு - உ.) 'சேலார் வயல் செங்கோடு' என்றார் 90-ஆம் பாடலிலும். அநந்தன் = ஆதிசேடன். பணிலம் = சங்கு. கலபி = மயில். ராசி = கூட்டம். ஆலல் = மயிலின் குரல்: ஆலல் = ஒலித்தல். "குயில் கூவ மயில் ஆலும் ஆரூரரை"—அப்பர் 4-5-1.

'குயில்கூவக் கோலமயில் ஆல'—சுந்தரர் 7-16-8.

இந்தப் பாடல் மயிலின் ஆற்றலைப் புலப்படுத்துகின்றது. மயில் அனந்தனைத் தாக்குதல்—'சேடன் முடி திண்டாட ஆடல்புரி ...... மயில்' 'பாரப்பணமுடி அனந்தன் ...... பதைபதைத்தே நடுங்க'—என மயில் விருத்தத்திலும், 'ஆதிபகவன் துயில் அனந்தன் மணிசேர், ஆயிர மிருந்தலைகளாய் விரிபணம் குருதியாக முழுதுங் குலைய வந்தறையுமே'— என மயில் வகுப்பிலும் வருவன காண்க.

இப்பாடலின் கருத்தைத்—

"துயில்மலி திருமால் விழ்ந்து துணுக்கென எழுந்து நிற்ப
வெயில்மணி யணைமுடக்கு மெய்நிமிர்ந் தோட ஆடும்
மயில்"—எனவரும் சீகாளத்திப் புராணத்திற் காண்க.
—[நக்கிரச் சருக்கம் 117].

## 98. கதியின்மை கூறல்

கதிதனை யொன்றையுங் காண்கின்றி லேன்கந்த வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம் பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம் வேகின்றதே.

(பொ - உ.) நற்கதி பெறும்வழி ஒன்றும் எனக்கும் புலப்படவில்லையே! கந்தமூர்த்தியே! வேல் முருகனே! (நதி தன்னை அன்ன) காட்டாறு போன்ற (பொய் வாழ்வில்) நிலையற்ற இந்த வாழ்வில், (அன்பாய்) ஆசை கொண்டவனாய் (நரம்பால் பொதிந்த) நரம்புகளால் நிரம்பக் கட்டப்பட்ட (பொதிதனையும்) சுமை மூட்டையாகிய இவ்வுடலையும் (சுமந்து) கொண்டு திண்டாடும்படி (என்னைப்) (பூமியிற்) போகும்படி வைத்த விதியை (நினைத்து) நொந்து நொந்து இங்கே என்னுடைய மனம் வெந்து கொதிக்கின்றது.

(சு - உ.) முருகா! இந்த நிலையிலா வாழ்க்கையில் திண்டாடும்படி ஏற்பட்ட என் விதியை நினைந்து எம் மனம் வேகின்றது; நற்கதிபெறும் வழியைக் காண்கின்றேன் இல்லை.

(கு - உ.) நதி = ஆற்றுப் பெருக்கு. "ஆற்றில் பெருக்கானது செல்வம்"—36.

கந்தவேல் முருகா—என்றதன் கருத்து—வேல்—ஞான சக்தி ஆதலின் அடியேனுக்கு ஞானத்தை அருளி, (கந்த என்னும் சொல் சேர்க்கப்படுதல் என்னும் பொருள் படுவதாதலால்)—என்னை உன்னுடன் சேர்த்துக்கொள் – எனக் குறிப்பதாகும்.

## 99. பிரார்த்தனை - திருவடியைப் பெற

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
[1]தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் [2]கொழுகொம் பிலாத தனிக்கொடிபோற்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.

(அந்.) தூவிக் ...... பதைக்கின்றது; காவிக் ...... காத்தருளாய்.

(பொ - உ.) (தூவி) இறகுகளை உடைய (குல) சிறந்த மயில் வாகனனே! துணை ஒன்றுமே இல்லாமல், தாவிப் படர்வதற்கு—ஒரு பிடிப்புக்கு—ஒரு கொம்பில்லாத—தனியான ஒரு கொடி (தவிப்பது) போல (இந்தப்) பாவியாகிய எனது (தனி) திக்கற்ற மனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றது; ஆதலால் (காவிக் கமலக்கழலுடன்) செந்நிறமுடைய தாமரை (செந்தாமரை) போன்ற உனது திருவடியில் அடியேனைச் சேர்த்து என்னைக் காத்தருள் புரிவாயாக.

(சு - உ.) படர்ந்துபற்ற ஒரு கொம்பிலாத கொடிபோலத் தவிக்கின்ற என்னை, முருகா! உனது திருவடியிற் சேர்த்துக் காத்தருளுக.

(கு - உ.) காவிக்கமலம் = செந்தாமரை. தூவி = தோகை.

1 'தூவி நற்பீலி மாமயி லூருஞ் சுப்பிரமணியன்'-திருவிசைப்பா-7-3.

2 'கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன்'—திருவாசகம்-6-20.

## 100. தன் அனுபவம் கூறினது

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்[1]தொண் டரிற்கூட் டியவா ! கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

(அந்.) கிரௌஞ்ச ......... வேலோன் இடுதலைச் ......... கூட்டியவா ! பிறவி அற இச்சிறை விடுதலைப்பட்டது; பாசவினை விலங்கு நீங்கித் தொலைந்தது.

(பொ - உ.) கிரவுஞ்ச மலையை (அடுதலை) அழித்தலைச் (சாதித்த) செய்து முடித்த வேற்கடவுள்—இடுதலை—வறியவர்க்கு சென்று ஈதல் என்பதைக் கொஞ்சமேனும் கருத்திற்கொள்ளாத (போதமிலேனை) அறிவிலியாகிய என்னை, அன்புகொண்டு (கெடுதல் இலா)—நிலை கெட்டுப் போதலில்லாத—நிலைத்த தன்மையரான தொண்டர்களுடன் சேர்த்து வைத்தது என்ன ஆச்சரியம்! என்ன பாக்கியம்! அந்த பாக்கியத்தால் பிறவி அற—பிறவி என்பது அற்றுப்போக—இச் சிறை—இந்த உடற் சிறை என்பது விடுதலைப்பட்டது—வீடுதலை அடைந்தது—(இனி உடற் சிறை இல்லை என்றபடி); பாச வினை விலங்கு—என்னைக் கட்டிப் பிடித்திருந்த வினை என்னும் விலங்கும் விட்டது—முறிந்தொழிந்தது.

(சு - உ.) முருகன் என்னை அடியவர் கூட்டத்திற் சேர்த்துவிட்டான்; அதனால் என் வினை ஒழிந்தது, பிறவி ஒழிந்தது.

(கு - உ.) 1 "அத்த னுண்டுதன் னடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே" — திருவாசகம்-அதிசயம்-9.

தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே என்பது பேருண்மை யாதலின்—அலங்காரப் பாடல்கள் அடியார் சிறப்புடன் முடிகின்றது. அடியார் சிறப்பைப் பாடல் 49-ன் குறிப்பிற் காண்க.

## நூற்பயன்

## 101. அலங்கார நூலின் பெருமை

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே.

(அந்.) கந்தனன்னூல் ... அறிந்தவரே, சலங்காணும் ... நோயணுகார் ... புலிக்கும் ... யானைக்கும் கலங்கார்.

(பொ - உ.) கந்தபிரான்மீது பாடப்பட்ட சிறந்த நூலாகிய இந்த அலங்கார நூலில் உள்ள நூறு பாடல்களில் ஒரே ஒரு பாடல் கற்று அறிந்தவர்கூட (சலங்காணும்) கோபமே பிறக்கும் குணமுடைய அரசர்களுக்கும் பயப்படமாட்டார்; யமனுடைய சண்டைக்குப் பயப்படமாட்டார்; (துலங்கா) விளக்கமில்லாத—இருள் சூழ்ந்த நரகக்குழி என்பதை அவர் அணுகமாட்டார். கெட்ட நோய்கள் அவரை அணுகா; புலி, கரடி, யானை இவைகளுக்கு அவர்கள் கலங்கிப் பயப்பட மாட்டார்கள்.

(சு - உ.) கந்தரலங்காரத்தில் ஒரே பாடல் கற்று அறிந்தவர்கள்கூட, பொல்லா அரசர், யமன், புலி, கரடி, யானை இவைகளுக்குப் பயப்பட மாட்டார்கள்; இருள்சூழ் நரகை அவர் அணுகார்; துஷ்ட நோய் அவரை அணுகா.

(கு - உ.) சலம் = கோபம். துலங்கா நரகம் = இருண்ட நரகம்.

ஒரு கவிக்கே இத்துணை ஆற்றல் உளதாயின்—அலங்கார நூறும் வல்லவர்க்குக் கிடைக்கும் இம்மை மறுமைப் பேறுகள் சொல்லும் தகையவோ!

—: 0 :—

சில பிரதி ரூபங்களில்
அதிகமாகக் காணப்பட்ட செய்யுள்கள்

———

## 102. தரிசனப் பாடல்

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறும் மலர்க் கண்களுங்
குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

(பொ - உ.) முருகவேளின் திருவடியும், அத் திருவடியில் உள்ள தண்டையும், சிலம்பும், (சிலம்பு) கிரௌஞ்சமலை (ஊடுருவும்படி) தொளை படும்படி (பொரு) பொருத (வடிவேலும்) கூரிய வேலாயுதமும், (கடம்பும்) கடப்பமாலையும், (தடம்) விசாலமான தோள்கள் பன்னிரண்டும், (மரு) ஞான நறுமணமே உருக்கொண்டதுபோன்ற (வதனங்கள்) திருமுகங்கள் ஆறும், (அவரது) தாமரை மலர்போன்ற (பன்னிரு) கண்களும்—ஒரு குருமூர்த்தியின் உருவுடன் வந்து என்னுடைய உள்ளங் குளிரும்படி (குதி கொண்டவே) உள்ளத்திற் பதிவு பெற்றுள்ளன—நிலைத்துள்ளன.

(சு - உ.) திருவடி, தண்டை, சிலம்பு, வேல், கடப்பமாலை, பன்னிரு தோள், ஆறு திருமுகம், பன்னிரு கண்கள் இவை விளங்க வந்த

குருமூர்த்தித் திருஓலக்கக் காட்சி என் உள்ளத்தில் அப்படியே நிலைபெற்று விட்டது.

(கு-உ.) உபதேச மூர்த்தியாய் வந்த காட்சி என் உள்ளம் குளிர உள்ளத்தில் பொலிவுடன் கூத்தாடுகின்றது; நிலைபெற்று விட்டது; இத்தகைய பேறு மிகப் பெரியோர்க்கே கிட்டும்—

"வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற
சிந்தாய்"—சுந்தரர்-7-21-1.

"பொய்யா தென்னுயிருட் புகுந்தாய் இன்னம்
போந்தறியாய்"—சுந்தரர்-7-28-5.

"நெற்றியிற் கண் என் கண்ணில்நின் றகலா
நெஞ்சினில் அஞ்சிலம் பலிக்கும்
பொற்றிருவடி என் குடிமுழு தாளப்
புகுந்தன போந்தன இல்லை"—திரு இசைப்பா-16-2.

"குழைவார் சிந்தை புக்கிருந்து போகாத புனிதன்"-அப்பர்-6-79-2

## 103. பிரார்த்தனை - திருவடியைப் பெற

இராப்பக லற்ற இடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

(அந்.) கரி கூப்பிட்ட ... பயங்கரனே! இராப்பகல் ... தாளருளாய்.

கரி—கஜேந்திரன், கூப்பிட்ட நாள்—ஆதிமூலமே என்று அழைத்த அன்று, (கரா)—முதலை, பட—அழிவுபடக் கொன்று, அக்கரி—அந்த யானை போற்ற நின்ற (கடவுள்) திருமால் மெச்சும் பராக்ரமம் வாய்ந்த வேலனே! (நிருத சங்கார) அசுரர்களைச் சங்கரித்து (பயங்கரனே—பய கரனே) அவர்களுக்குப் பயம் ஊட்டினவனே! (தேவர்களின் பயத்தை ஒழித்தவனே!) இரவும் பகலும் இல்லாத இடத்தை (எனக்குக்) காட்டி அந்த நிலையில் இருந்தபடியே உன்னை நான் துதிக்கக் குராமலரைப் புனையும் தண்டை சூழ்ந்த உனது திருவடியைத் தந்தருளுக.

(சு-உ.) திருமால் மெச்சும் வேலனே! அசுரர்களைச் சங்கரித்தவனே! நினைப்பு, மறப்பு அற்ற அருள் நிலையில் இருந்து உன்னைத் துதிக்க உன் திருவடியைத் தந்தருளுக.

(கு - உ.) கரா = முதலை. கரி = ஆதிமூலம் என அழைத்த யானை.

இராப்பகல் அற்ற இடம்—பாடல் 74 குறிப்பைப் பார்க்க. கரி கூப்பிட முதலையை அட்ட வரலாறு—திருப்புகழ் 939, பக்கம் 731 கீழ்க் குறிப்பு. திருமால் மெச்சுவது—' பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள் '—திருப்புகழ்-1. குராப்புனை தாள்—' திருவிடைக் கழியிற் திருக்குரா நிழற் கீழ்நின்ற வேலுலாந் தடக்கைவேந்தன் என் சேந்தன் ''—திருவிசைப்பா—7-1. திருப்புகழ் 201—பக்கம்-16 கீழ்க்குறிப்பு.

## 104. தன் அனுபவம் கூறினது

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

(அந்.) பதும மலர் ...... நினைப்பினும் அங்கே, செங்கேழ் ... தோளும் (விளங்க) என் முன்வந் தெதிர்நிற்பனே.

(பொ - உ.) (பதுமமலர்க் கொங்கே—தரளம்) தாமரை மலர்களின் மணத்தை—(தரளம்) முத்துக்கள் சொரிகின்ற திருச்செங்கோட்டுமலைக்—குமரன் என்று நான் எவ்விடத்தில் நினைத்தாலும் அவ்விடத்தில், செங்கேழ் — சிவந்த நிறம் (அடுத்த) கொண்டதும், சினவடி வேலும் — கோபமும் கூர்மையும் கொண்டதுமான வேலாயுதமும், அழகிய முகங்களும், (பங்கே நிரைத்த) பக்கங்களில் வரிசையில் அமைந்த (நற் பன்னிரு தோளும்) சிறந்த பன்னிரண்டு தோள்களும் (விளங்க) அவர் என் முன் வந்து எதிர் நின்று அருள் புரிவார்.

(சு - உ.) அடியேன் திருச் செங்கோட்டு முருகன் என எங்கே நினைத்தாலும் அவர் முன் வந்து நின்றருளுவார்,

(கு - உ.) வேலும் முகமும் தோளும் எதிர்நிற்குமே—என்னுது எதிர் நிற்பனே என முடிவதால்—அவை விளங்க முருகன் எதிர்நிற்பன் என முடித்தல் வேண்டும். முத்து பிறக்கும் இடங்களில் ' தாமரையும் ' ஒன்று; தாமரையினின்றும் பிறந்த தரளம் (முத்துக்கள்) அந்த மலரின் மணத்தை விசின. முத்து பிறக்கும் 20 இடங்களைத் திருப்புகழ் 306—பக்கம் 260, 764 - பக்கம் 273 பார்க்க. தாமரையின், கொங்கு—மணத்தையும் தரளத்தையும் சொரியும் செங்கோட்டு மலை எனக்கொண்டு, தாமரையின் நறுமணத்தையும், மலையிடத்தே இருந்த மூங்கில், வாழை, மேகம், தாமரை, யானை, பாம்பு இவைகள் ஈன்ற முத்தையுங்கொண்ட திருச் செங்கோட்டு மலை,—எனவும் பொருள் காணலாம். கொங்கே—ஏ - அசை.

## 105. பிரார்த்தனை - வினை அற

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே.

(அந்.) வாவித் ...... சிகாமணியே ...... ஆவிக்கு ...... தீர்த்தருளாய்.

(பொ-உ.) வாவி—நீர்த் தடங்களும், தடவயல்—பெரிய வயல்களும் சூழும் திருத்தணி மாமலையில் வாழ்கின்ற சேவற் கொடிப் பெருமானே! தேவர் சிகாமணியே! (ஆவிக்கு) என்—உயிர்க்கு (மோசம்) ஆபத்து ஏற்படும் தன்மையை நான் அறிந்து, உன்னுடைய திருவருட்கிடமாகிய திருவடிகளைச் சேவிக்க (நான்) (என்றும்) ஒரு நாளும் நினைக்கின்றேன் இல்லையே; எனது வினைகளைத் தீர்த்து அருளுவாயாக.

(சு-உ.) தணிகேசா! என் உயிர்க்கு வரும் ஆபத்தை உணர்ந்து நான் உன்னை வணங்குகின்றேன் இல்லை. எனது வினைகளை நீ தீர்த்தருள வேண்டுகின்றேன்.

(கு-உ.) திருத்தணிகையில் ஐந்து நாள் இருந்து திருத்தணிகேசரை வழிபட்டால் பந்த வினை தொலையும்—முத்தி வீடு கிட்டும்.

"அஞ்சு வைகலிவ் வகன்கிரி நண்ணி யெம் அடிகள்
தஞ்ச மென்றுளந் துன்னியே வழிபடுந் தவத்தோர்
நெஞ்ச கந்தனில் வெஃகிய போகங்கள் நிரப்பி
எஞ்ச லில்லதோர் வீடுபே றடைந்தினி திருப்பார்"

—கந்த புரா-6-24-225.

"ஐந்து நாளசைந், தெந்த மிணையடி, வந்து வணங்கினோர்
பந்தம் பாற்றுவார்"—தணிகைப் புரா-விடையருள்-39.

"அந்தவரை அடித்தலத்தி லேனும்அறு முகவரா லயத்தி லேனும்
சிந்தைஒரு மித்தவராய் ஒருமுகுர்த்தம் தலவாசஞ் செய்த பேர்கள்
முந்தியசென் மங்கள்தொறும் புரிந்திடுமா பாதகங்கள் முழுதும்நீங்
சந்ததமும் அழியாத கந்தசா யுச்சியத்தைச் சார்கு வாரே" [கிச்

—தணிகாசல புராணம்-7-16.

## 106. பிரார்த்தனை - துயர் அற

கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே.

(அந்.) ஒருகோடி ...... மாணிக்கமே! கொள்ளித் ... ஒழித்தருளாய்.

(பொ - உ.) ஒருகோடி முத்தம்-ஒரு கோடிக்கணக்கான முத்துக்களைத் (தெள்ளிக் கொழிக்கும்) அலைசி ஒதுக்கும் கடல் சூழ்ந்த திருச்செந்தூரில் வீற்றிருக்கும் பராக்ரமசாலியே! வள்ளியம்மைக்குக் கணவனாய் வாய்த்தவனே! மயில் ஏறிய மாணிக்கமே! கொள்ளியின் இடையே நெருப்பில் (அகப்பட்ட) எறும்புபோலத் துடித்து அழுகின்ற என் மனத்துயரை நீக்கி அருள் புரிவாயாக.

(சு - உ.) செந்தூர்ப் பெருமானே! வள்ளி நாயகனே! மயில் வாகனனே! கொள்ளிவாய்ப்பட்ட எறும்புபோல என் மனம் குலைகின்றது. என் மனத்துயரை ஒழித்தருளுக.

(கு - உ.) இருபுறமும் நெருப்பு எரியும் ஒரு மூங்கிற் குழாயின் உள்ளே அகப்பட்ட எறும்பு போல என்பர். "இருதலைக் கொள்ளியின் உள் எறும்பு ஒத்து"—திருவாசகம்-நீத்தல்-9. முத்தம் கொழிக்கும் கடல்—முத்து பிறக்கும் இடங்களில் கடல் ஒன்று—திருப்புகழ்-764 பார்க்க. சூர சம்மாரம் செய்யச் செந்திலில் தேவசேனுபதியாய் வீற்றிருந்தபடியால் செந்தில் மேவிய சேவகனே என்றுர். "மயிலேறிய மாணிக்கமே—பாடல் 39-ம் பார்க்க.

## 107. காலனுக்கு அஞ்சாமை

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் தனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.

(அந்.) கடல் ...... துணை ...... சூலம் ...... அஞ்சேன்.

(பொ-உ.) கடலிலே மேலெழுந்த (ஆலம்) விஷத்தைக் குடித்த பெருமானுடைய குமாரராகிய அறுமுக வள்ளலின் வேலாயுதமும் திருக் கரங்களும் நமக்கு (ஒரு) ஒப்பற்ற உண்மைத் துணையாக இருக்கின்றன; ஆதலால் சூலத்தை ஏந்தி, எம பாசம் என்னும் கயிற்றைச் சுழற்றி என்னைத் தொடர்ந்து வரும் காலனுக்கு நான் ஒருகாலும் பயப்பட மாட்டேன்.

(சு-உ.) முருகவேளின் வேலும் திருக்கரமும் நமக்கு மெய்த் துணையாக இருப்பதால் நான் காலனுக்கு அஞ்சேன்.

(கு-உ.) "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்"—அப்பர்-6-98-1. யமனுடைய மந்திரியும் தூதனும் காலன், திருப்புகழ்-760-பக்கம்-262, திருப்புகழ் 996-1—பக்கம்-6 கீழ்க்குறிப்பு.

சிவபிரான் ஆலங்குடித்த வரலாறு—திருப்புகழ் 509—பக்கம்-162, திருப்புகழ்-286, பக்கம்-211-கீழ்க்குறிப்பு. வேல்—வினைகளைத் தீர்த்து விடும்-'வினையோட விடும் கதிர்வேல்'—கந்தரநுபூதி 40; திருக்கைகள்—'முன்புசெய்த பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும்'-அலங்காரம் 70-வினையற்று நின்ற நான் ஒரு பரிசுத்த ஆத்மா—ஆதலால் காலனுக்கு அஞ்சவேண்டியதில்லை.

வேலு மயிலுந் துணை.

—: 0 :—

உ

# பாட்டு முதற்குறிப் பகராதி

## கந்தரலங்காரம்


| | பாட்டின் எண் |
|---|---|
| அடலருணைத் | காப்பு |
| அராப்புனை | 74 |
| அழித்துப் | 2 |
| ஆங்காரமு | 55 |
| ஆலுக்கணி | 62 |
| ஆவிக்குமோசம் | 105 |
| இடுதலைச் | 100 |
| இராப்பகலற்ற | 103 |
| உதித்தாங் | 39 |
| ஒருபூதரு | 45 |
| ஒருவரைப் | 13 |
| ஒளியில் | 8 |
| ஓரவொட்டார் | 4 |
| ஓலையுந்தூதரும் | 27 |
| கடத்திற் | 29 |
| கண்டுண்ட | 37 |
| கதிதனை | 98 |
| கருமான்மருகனைச் | 91 |
| கவியாற்கடல் | 43 |
| காட்டிற் | 85 |
| காவிக்கமலக் | 99 |
| கிழியும்படி | 56 |
| கிளைத்துப் | 32 |
| கின்னங்குறித் | 24 |
| குசைநெகிழா | 11 |
| குப்பாச | 14 |
| குமராசரணஞ் | 87 |

| | பாட்டின் எண் |
|---|---|
| கூர்கொண்ட | 78 |
| கொள்ளித்தலையில் | 106 |
| கோடாத | 76 |
| கோழிக்கொடிய | 20 |
| சலங்காணும் | 101 |
| சளத்திற் | 7 |
| சாகைக்கு | 54 |
| சாடுஞ்சமரத் | 68 |
| சிகராத்ரி | 52 |
| சிந்திக்கிலேன் | 60 |
| சுழித்தோடு | 36 |
| சூரிற்கிரியிற் | 49 |
| சூலம்பிடித் | 107 |
| செங்கேழடுத்த | 104 |
| சேந்தனைக் | 72 |
| சேலிற் | 97 |
| சேல்பட் | 40 |
| சேல்வாங்கு | 77 |
| சொல்லுகைக் | 10 |
| சொன்ன | 19 |
| தகட்டிற் | 82 |
| தடக்கொற்ற | 96 |
| தடுங்கோள் | 16 |
| தண்டாயுதமுந் | 25 |
| தந்தைக்கு | 69 |
| தாராகணமெனுந் | 81 |

| | பாட்டின் எண் | | பாட்டின் எண் |
|---|---|---|---|
| தாவடியோட்டு | 15 | புத்தியைவாங்கி | 48 |
| திருந்தப்புவனங்கள் | 5 | பெரும்பைம் | 6 |
| திருவடியுந் | 102 | பெறுதற்கரிய | 67 |
| துருத்தி | 71 | பேற்றைத் | 1 |
| தெய்வத்திருமலைச் | 23 | பொக்கக்குடிலிற் | 31 |
| தெள்ளியவேனலிற் | 94 | பொங்கார | 59 |
| தேங்கியவண்டத் | 83 | பொட்டாக | 34 |
| தேரணியிட்டுப் | 3 | பொருபிடியுங் | 57 |
| தேனென்று | 9 | போக்கும் வரவும் | 73 |
| தொண்டர் | 92 | மண்கமழுந்தித் | 93 |
| தோலாற்சுவர் | 44 | மரணப்ரமாத | 21 |
| நாளென்செயும் | 38 | மலையாறு | 51 |
| நிணங்காட்டுங் | 42 | மாகத்தை | 80 |
| நீயான ஞான | 46 | மாலோன்மருகனை | 90 |
| நீர்க்குமிழிக்கு | 66 | மூடியாப்பிறவிக் | 33 |
| நீலச்சிகண்டியில் | 26 | மைவரும் | 84 |
| நெற்றுப் | 58 | மொய்தாரணி | 22 |
| பங்கேருகனெனைப் | 89 | யான்றானெனுஞ் | 95 |
| படிக்கின்றிலை | 75 | வணங்கித்துதிக்க | 88 |
| படிக்குந் | 50 | வரையற் | 61 |
| ப்டைபட்ட | 12 | விழிக்குத்துணை | 70 |
| பட்டிக்கடாவில் | 64 | வெட்டுங்கடா | 65 |
| பத்தித்திருமுகம் | 47 | வேடிச்சி | 53 |
| பத்தித்துறை | 35 | வேதாகம சித்ர | 17 |
| பந்தாடு மங்கையர் | 79 | வேலாயுதன் | 86 |
| பாதித்திருவுரு | 63 | வேலைவிளங்கு | 28 |
| பாலென்பது | 30 | வையிற்கதிர் | 18 |
| பாலேயனைய | 41 | | |


—: 0 :—

உ

திருத்தணிகேசன் துணை

# கந்த ரலங்கார ஆராய்ச்சி

—: 0 :—

[ " வேலர், அலங்காரத் துட்பொருளை யாய்வதுவே தேகங் கலங்கா வலங்காரம் " ......... தணிகை யுலா. ]

இந்நூல் முருகக் கடவுளுக்கு மிகவும் உகந்த பாமாலை. சிவபிரானுக்கு எங்ஙனம் தேவாரம் ருசிக்குமோ அங்ஙனம் முருகவேளுக்குத் திருப்புகழ் இனிக்கும்; சிவபிரானுக்குத் திருவாசகம் எங்ஙனம் ருசிக்குமோ அங்ஙனம் முருகவேளுக்குக் கந்தர் அலங்காரம் இனிக்கும்; முருகபிரானது திருவடிமுதல் திருமுகம் வரையும் உள்ள அங்கங்களின் சிறப்பையும், அவர் ஊர்தி, படை, கொடி இவைகளின் பெருமையையும் எடுத்தோதும் நூலாதலால் இந் நூலுக்குக் கந்தர் அலங்காரம் என்னும் திருநாமம் வாய்த்தது. உதாரணமாக :—

(i) சிற்றடி
" தாவடியோட்டு " (15)
" சேல்பட் " (40)

(ii) திருவரையிற் கிண்கிணி
" ஒருவரைப் பங்கில் " (13)
" மண்கம ழுந்தி " (93)

(iii) பன்னிரு திருக்கை
" குப்பாச வாழ்க்கை " (14)

(iv) திருமுகம்
" பத்தித் திருமுகம் " (47)

(v) ஊர்தி (மயில்)
" குசை நெகிழா " (11)

(vi) படை (வேல்)
" ஆலுக் கணிகலம் " (62)

(vii) கொடி (சேவல்)
" படைபட்ட " (12)

2. " அருணைத் திருக்கோபுரத்தே வடவருகிற் சென்று கண்டு கொண்டேன் " எனவரும் காப்புச் செய்யுளால் இந்நூல் திருவண்ணுமலையிற் புனைதல் பெற்றிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது. நூற்பயன் கூறுஞ் செய்யுளில் " அலங்கார நூற்றுள் ஒருகவி தான் கற்றறிந்தவரே " என வருதலால் இந்நூல் நூறு செய்யுள்கள் கொண்டதாயிருத்தல் வேண்டும்.

அப்போதைக்கப்போது பாடப்பட்ட தனிச்செய்யுள்கள் பின்பு ஒரு நூலாகக் கோக்கப்பட்டிருக்கலாமோ என்றும் தோன்றுகின்றது. அருணகிரியார் வரலாறு—பக்கம் 158, 159 பார்க்க. நூற்றுக்கு மேற்பட்ட ஆறு பாடல்களின் வாக்கு ஸ்வாமிகள் வாக்குப் போலச் சிறந்ததா யிருப்பதால் அவர் செய்த தனிச் செய்யுள்களோ இவை எனனும் ஐயமும் நிகழ்கின்றது.

இலகுலாம் வேற்கரத் தெமதண்ணல் தம்மை ஆட்கொண்டு உபதேசித்த பிறகுதான் இந்நூலை ஸ்வாமிகள் பாடியிருத்தல் வேண்டுமென்பது—

"பேற்றைத் தவஞ்சற்று மில்லாத என்னைப் ப்ரபஞ்ச மென்னுஞ் சேற்றைக் கழிய வழிவிட்டவா" (1)

"வெறுந் தனியைத், தெளிய விளம்பியவா முகமாறுடைத் தேசிகனே" (8)

"வள்ளிகோ னன்றெனக் குபதேசித்த தொன்றுண்டு" (9)

"எல்லா மிழந்து சும்மா இருக்கும் எல்லையுட் செல்ல எனை விட்டவா" (10)

"அடியேன் செவி நீ யன்று கேட்கச் சொன்ன குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது" (24)

"கந்தச் சுவாமி எனைத் தேற்றிய பின்னர்" (69)

—எனவருந் திருவாக்குக்களால் தெளிவாக ஏற்படுகின்றது. மேலும், திருப்புகழிற் பல இடத்தும் "முருகா! யமன் கையிற் சிக்காது அடியேனை நீயே ஆண்டு கொண்டருள்" என இரக்கும் நமது ஸ்வாமிகள் கந்தரலங்காரத்தில் அவ்வாறு இரத்தலோடு "நாம் ஆண்டவனுக்கு அடிமையாய் விட்டோம்; இனி யமன் யாது செய்யக்கூடும்" என்னும் துணிபு பெற்றவராய், அப்பர் ஸ்வாமிகள் "நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்" எனக் கூறியவாறு, தாமும்

"பெருமாள் திருமுக மாறுங் கண்ட தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங் கெமராஜன் விட்ட கடையேடு வந்தினி யென் செய்யுமே." (87)

"காலன் வெம்பி வந்திப்பொழுதென்னை என் செய்யலாம், சத்தி வாளொன்றினாற் சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோப த்ரிசூலத் தையே" (69)

என முருகன் அடியார் பெருமையையும் தமது துணிவையுங் கூறினவராகி

அமையாது, அக்காலனையே 'நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்' எனத் திருமூலர் உரைத்தாங்குத் தாமும்

"தண்டாயுதமுந் திரிசூலமும் விழத் தாக்கி யுன்னைத் திண்டாட வெட்டி விழவிடுவேன் *** ஞானச் சுடர் வடிவாள் கண்டா யடா! அந்தகா! வந்துபார் சற்றென்கைக் கெட்டவே" (25)-என்றும்,

"பட்டிக் கடாவில் வரும் அந்தகா! உனைப் பாரறிய வெட்டிப் புறங்கண் டலாது விடேன்! *** கட்டிப் புறப்படடா சத்திவா ளொன்றன் கையதுவே" (64)—என்றும்,

"வாரா தகலந்தகா வந்தபோ துயிர் வாங்குவனே" (81)—என்றும்,

விளித்து வெருட்டி வெருட்டித் திடுக்கிட்டோடும்படி அச்சுறுத்தி யுள்ளார். இதனை நோக்குமிடத்துத் திருப்புகழ் பாடிப்பாடி முருகன் திருவருள் ஊறி ஊறிச் சிந்தை தெளிந்த திண்மை நிலையில் இச் செய்யுள்கள் பாடப்பட் டிருத்தல் வேண்டும் என்பது பெறப்படும்.

"செங்கோடனைச் சென்று கண்டுதொழ நாலாயிரங் கண் படைத் திலனே அந்த நான்முகனே" (90) — என்பது செங்கோட்டு வேலவர் திவ்விய சொரூபத்தை நேரில் தரிசித்துச் சொல்லியதாதலின் திருச்செங் கோட்டைத் தரிசனம் செய்த பிறகு கந்தரலங்காரம் பாடியிருத்தல் வேண்டும்.

3. நூலாசிரியர் சந்தப்பா பாடின சதுரர் என்பது கட்டளைக் கலித் துறைகளாகிய இக் கந்தரலங்காரத்திற்—

"சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே" (4)

'உதிரக் குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்து வெற்றிக்-களத்திற் செருக்கிக் கழுதாட வேல்தொட்ட காவலனே" (7)

"உரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே" (61)

"சண்ட தண்டவெஞ்சூர், மண்டலங் கொண்டுபண் டண்டரண் டங்கொண்டு மண்டி மிண்டக், கண்டுருண் டண்டர் விண் டோடாமல் வேல்தொட்ட காவலனே" (92)

—எனவரும் உருட்டுச் சந்தப் பாக்களாற் பெறப்படும்.

4. ஸ்வாமிகள் வரகவி என்பது தென்மொழி வடமொழி ஆகிய இரு மொழிகளினின்றும் வாக்குப் பிரபாவம் தடையறத் தோற்றுவதால் நன்கு புலப்படும். வடமொழி நிரம்பிய திருப்புகழ்ப் பாக்கள் உள. அதுபோல இக் கந்தரலங்காரத்திலும்—

"சரணப் ப்ரதாப சசிதேவி மங்கல்ய தந்து ரக்ஷா
பரணக் க்ருபாகர ஞானு கரஸுர பாஸ்கரனே" (21)

"பாச சங்க்ராம பணுமகுட
நிகராக்ஷம பக்ஷ பக்ஷி துரங்க ந்ருபகுமரா
குகராக்ஷச பக்ஷ விக்ஷேப தீர குணதுங்கனே" (52)

—என வடமொழி ததும்பும் பாவடிகளு முள.

5. இந்நூலில் இரண்டு விஷயங்கள் கவனிக்கத் தக்கன: ஒன்று அவர் வயலூரைப் பற்றி ஒன்றுங் கூருதது; பிறிதொன்று ஞானசம்பந்த மூர்த்தியை முருகபிரானுகத் திருப்புகழிலும் கந்தரந்தாதியிலும் பாராட்டியவாறு இங்கு ஒன்றுங் கூருதது.

6. திருப்புகழில் எவ்வாறு சிவபிரான், உமாதேவி, திருமால், தேவசேனை, வள்ளியம்மை இவர்களின் பெருமையைக் கூறி இன்னுருக்கு மகனே, இன்னுருக்கு மருகனே, இன்னுருக்குக் கணவனே எனச் சிறப்பித்துள்ளனரோ அவ்வாறே இவ்வலங்காரத் துள்ளுஞ் சிறப்பித் துள்ளனர். உதாரணமாக:—

"செஞ்சடாடவிமேல், ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை அம்புலியின் கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்" (1)
—இது சிவகுமாரனென்பது;

"த்ரியம்பகனைப் பாகத்தில் வைக்கும் பரமகல்யாணி தன் பாலகனே" (80)—இது உமை சுதனென்பது:

"மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடு முட்டச் சேவடி நீட்டும் பெருமான் மருகன்" (15)—இது திருமால் மருகனென்பது;

"மதகும்பகம்பத் — தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி யிறுகத் தழுவுங் கடகா சலபன் னிருபுயனே" (67)
—இது தேவசேனை காதலனென்பது;

"நெற்றுப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி முற்றுத் தனத்திற் கினிய பிரான்" (58)—இது வள்ளி மணுளனென்பது.

7. இந்நூலிற் கூறப்பட்டுள்ள விசேட பிரயோகங்கள், பழமொழிகள் முதலியன :—

(1) சர்க்கரை மொக்கிய களிறு. (காப்பு)

(2) கழுத்திற் சுருக்கிட் டிழுக்கு மன்றோ கவி கற்கின்றதே. (2)

(3) வெய்யிற் கொதுங்க உதவா உடம்பு. (18)

(4) ஆழப் புதைத்து வைந்தால் வருமோ நும் அடிப்பிறகே! (20)

(5) என்றும் வாய்த்த துணை கிரணக் கலாபியும் வேலும் உண்டே. (21)

(6) முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன். (22)

(7) வந்துபார் சற்றென் கைக்கெட்டவே. (25)

(8) ஆற்றிற் பெருக்கானது செல்வம். (36)

(9) அம்பரம் பம்பரம் பட்டுழல. (39)

(10) அவன் கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே. (40)

(11) காலே மிகவுண்டு காலே யிலாத கணபணம். (41)

(12) தொலையா வழிக்குப் பொதிசோறு. (51)

(13) ஒருபிடி சாம்பருங் காணாது மாய உடம்பிதுவே. (57)

(14) கட்டிப் புறப்படடா. (64)

(15) ஐவருங் கைவிட்டு மெய்விடும்போதுன் அடைக்கலமே. (84)

(16) விதிதனை நொந்து நொந் திங்கே யென்றன் மனம் வேகின்றதே. (98)

(17) நதிதனை யன்ன பொய் வாழ்வு. (98)

(18) கொழுகொம்பிலாத தனிக்கொடிபோல். (99)

8. நூலிற் கூறியுள்ள உபதேச மொழிகளாவன :—

(1) வேலன் கவியை எழுத்துப் பிழையறக் கற்றல்வேண்டும். (2)

(2) மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம், (16)

(3) வெகுளியை விடல்வேண்டும். (16)

(4) தானம் என்றும் இடல் வேண்டும். (16), (51), (53), (54), (59), (66)

(5) ஏழைகளுக்கு நொய்யிற் பிளவளவேனும் பகிர்தல் வேண்டும். (18)

(6) மயில்வாகனனைச் சாந்துணைப் போதும் மறத்தலாகாது. (72)

9. வேறு விசேட விஷயங்கள் :—

(1) நக்கீர தேவர் குமாரக் கடவுளை "மலைகிழவோனே" என்று கூறினதற்கு மாறாக இந் நூலாசிரியர் 'குருந்து, அதைக் கிழவன் என்று கூறலாமா' என வேடிக்கையாகத் "திருந்தப் புவனங்கள் (5)" என்னும் பாட்டிற் கூறுகின்றனர்.

(2) தமிழ் மொழியில் நமது கடவுள் மிக்க ஈடுபட்டவரென்பது "மூத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன் (22)" என்பதாற் போதரும்.

10. இவ்வலங்காரத்துள்ள நூறு செய்யுள்களையும் ஆராய்ந்து அவை தமைப் பொருள்வழி பிரிவு செய்தாற் பின்வருமாறும் :—

1. முருகர் பெருமையும், திறலும், கருணையும்—8.

| | | |
|---|---|---|
| 1. | திருந்தப் | 5 |
| 2. | ஒருவரைப் | 13 |
| 3. | மொய்தாரணி | 22 |
| 4. | நாளென்செயும் | 38 |
| 5. | நெற்றுப் பசுங்கதிர் | 58 |
| 6. | விழிக்குத் துணை | 70 |
| 7. | தேங்கிய | 83 |
| 8. | மண்கமழ் | 93 |

2. நாம விசேடம்—1.

| | | |
|---|---|---|
| 9. | முடியாப் பிறவி | 33 |

3. வேல்—2.

| | | |
|---|---|---|
| 10. | தேரணி யிட்டுப் | 3 |
| 11. | ஆலுக்கணிகலம் 1 | 62 |

4. மயில்—3.

| | | |
|---|---|---|
| 12. | குசைநெகிழா | 11 |
| 13. | தடக் கொற்ற | 96 |
| 14. | சேலிற் றிகழ் | 97 |

5. சேவல்—1.

| | | |
|---|---|---|
| 15. | படைபட்ட | 12 |

6. நெஞ்சொடு கிளத்தல்—7.

| | | |
|---|---|---|
| 16. | வேதாகம | 17 |
| 17. | பாலென்பது | 30 |
| 18. | சுழித்தோடு | 36 |
| 19. | சூரிற் | 49 |
| 20. | படிக்கின்றிலை | 75 |
| 21. | சேல்வாங்கு | 77 |
| 22. | தெள்ளிய | 94 |

7. தன் குறை கூறல்—8.

| | | |
|---|---|---|
| 23. | ஓரவொட்டார் 2 | 4 |
| 24. | நினைங்காட்டுங் | 42 |
| 25. | கவியாற் | 43 |
| 26. | புத்தியை வாங்கி | 48 |
| 27. | சாகைக்கு | 54 |
| 28. | சிந்திக்கிலேன் | 60 |
| 29. | பெறுதற்கரிய | 67 |
| 30. | கோடாத | 76 |

---

1 "பூவினுக் கருங்கலம்" என்னும் தேவாரம் போன்ற செய்யுள்.

2 "மூள்வாய தொழிற் பஞ்சேந்திரியம்" என்பது அப்பர் (திருவாரூர்த்) தேவாரம்.

8. கதியின்மை கூறல்—3.
31. தோலாற் 44
32. மைவருங்[1] 84
33. கதிதனை 98

9. தன்னுறுதி கூறல்—1.
34. கண்டுண்ட 37

10. [2]பிரார்த்தனைப் பதிகங்கள் - 19.
35. சளத்திற் 7
36. [3]குப்பாச 14
37. தெய்வத் 23
38. பொக்கக் 31
39. கிளைத்துப் 32
40. பொட்டாக 34
41. பத்தித்துறை 35
42. உதித்தாங் 39
43. பாலே 41
44. நீயான 46
45. படிக்கும் 50
46. சிகராத்ரி 52
47. வெட்டும் 65
48. பந்தாடு 79
49. மாகத்தை 80
50. தகட்டிற் 82
51. வணங்கித் 88
52. தொண்டர் 92
53. காவிக் 99

11. [4]தரிசனப் பதிகம்—2.
54. ஒலியும் 27
55. மாலோன் மருகனை 90

12. தன் அநுபவங் கூறினது ; [5]அச்சோப் பத்து—10.
56. பேற்றை 1
57. ஒளியில் 8
58. தேனென்று[6] 9
59. சொல்லுகைக்கு 10
60. தாவடி 15
61. கடத்திற் 29
62. சேல்பட் 40
63. ஒருபூதரும் 45
64. பாதித் திருவுரு 63
65. இடுதலை[7] 100

13. [8]அற்புத மாலை—8.
(தன்னுநந்தங் கூறினது)
66. பெரும்பைம் 6
67. சொன்ன 19
68. கின்னங் 24
69. நிலச்சி நண்டி 26
70. வேலே 28
71. பத்தித் திருமுகம் 47
72. வரையற் 61
73. போக்கும் 73

14. பிரமனை வெருட்டல்—1.
74. பங்கேருகன் 89

1 திருவாசகத்தில் "அடைக்கலப்பத்து" போன்ற செய்யுள்.

2 திருவாசகத்தில் அருட்பத்து, பிரார்த்தனைப் பத்து இவைகளைப் போன்ற செய்யுள்கள்.

3 பிள்ளைத் தமிழிற் சப்பாணிப் பருவச் செய்யுள் போன்றது.

4 திருவாசகத்திற் "கண்டபத்து" போன்ற செய்யுள்கள்.

5 திருவாசகத்தில் "அச்சோப்பத்து" போன்றது.

6 அப்பர் ஸ்வாமிகள் திருவொற்றியூர்த் தேவாரம் "மன்னலை வின்னலை" போன்றது.

7 திருவாசகத்திற் "அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே" (அதிசயப்பத்து)—என்பது போன்ற செய்யுள்.

8 திருவாசகத்தில் அற்புதப்பத்து போன்ற பாடல்கள்.

15. யமனை வெருட்டல்; [1]காலற் கடத்தல்—7.

| | | |
|---|---|---|
| 75. | மரணப் | 21 |
| 76. | தண்டாயுதமும் | 25 |
| 77. | பட்டிக்கடாவில் | 64 |
| 78. | தந்தைக்கு | 69 |
| 79. | தாராகணம் | 81 |
| 80. | வேலாயுதன் | 86 |
| 81. | குமரா சரணம் | 87 |

16. உலகுக்கு உபதேசம்—19.

| | | |
|---|---|---|
| 82. | அழிந்துப் | 2 |
| 83. | தடுங்கோள் | 16 |
| 84. | வையிற் | 18 |
| 85. | கோழிக் | 20 |
| 86. | மலையாறு | 51 |
| 87. | வேடிச்சி | 53 |
| 88. | ஆங்காரமும் | 55 |
| 89. | கிழியும் | 56 |
| 90. | பொருபிடி | 57 |
| 91. | பொங்கார | 59 |
| 92. | தீர்க்குமிழிக்கு | 66 |
| 93. | சாடும் | 68 |
| 94. | துருத்தி | 71 |
| 95. | சேந்தனைக் | 72 |
| 96. | அராப்புனை | 74 |
| 97. | கூர்கொண்ட | 78 |
| 98. | காட்டிற் | 85 |
| 99. | கருமான் | 91 |
| 100. | யான்றான் | 95 |

11. இக் கந்தரலங்காரத்துட் கீழ்க் குறித்துள்ள பன்னிரு பாடல்களை நித்திய பாராயணப் பாடல்களாகக் கொள்ளலாம்:—

1. உபதேசப் பதிகம்
தடுங்கோள் மனத்தை ... 16

2. [2]முருகன் நாம விசேடப் பதிகம்
மூடியாப் பிறவி ... 33

3. [3]அங்கமாலைப் பதிகம்
கோடாத ... 76

4. [4]ஆத்மசுத்திப் பதிகம்
சிந்திக்கிலேன் ... 60

5. வழித்துணைப் பதிகம்
விழிக்குத் துணை ... 70

6. [5]கோளறு பதிகம்
நாளென்செயும் ... 38

7. [6]கவசப் பதிகம்
வேலாயுதன் ... 86

8. [7]தரிசனப் பதிகம்
ஓலையுந் ... 27

9. [8]பரமாநந்த பதிகம்
பத்தித் திருமுகம் 47

10. பிரார்த்தனைப் பதிகம்
தெய்வத் 23

11. ஐக்கியப் பதிகம்
உதித்தாங்கு ... 39

12. அடைக்கலப் பதிகம்
மைவருங் 84

---

1 அப்பர் ஸ்வாமிகளது கால பாராயணத் திருக்குறுந்தொகை போன்ற பாடல்கள். 2 தேவாரத்தில் நமச்சிவாயப் பதிகம், பஞ்சாக்ஷரப் பதிகம் போன்ற செய்யுள். 3 அப்பர் சுவாமிகள் 'திரு அங்கமாலைப் பதிகம்' எனப்படும் "தலையே நீ வணங்காய்' என்னும் தேவாரக் கருத்தது. 4 திருவாசகத்தில் "ஆடுகின்றலை" என்னும் ஆத்ம சுத்திப் பதிகம் போன்றது. 5 தேவாரத்தில் "வேயுறு தோளிபங்கன்" என்னுங் கோளறு பதிகம் போன்றது. 6 பிரமோத்தர காண்டத்திற் சிவ கவசச் செய்யுள் காண்க. 7 அப்பர் ஸ்வாமிகள் தேவாரத்தில் "வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்" என்ற பதிகம் போன்றது. 8 "ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடி" — திருவாசகம். சாழல்-10.

## 12. விஷய ஆராய்ச்சி


அடியார் பெருமை 49, 100
அருணகிரிநாதர் சரித்திரம்:
தமது பாவடி ஏட்டில் முருகர் திருவடித் தீக்ஷை 15
முருகர் உபதேச மகிமை 9, 26, 61, 71, 73
முருகர் தம்மை ஆண்டருளியது 1, 10, 42, 69
இந்திரன் 77
இந்திராணி 21, 77
ஈதற் சிறப்பு 51, 53, 54, 59, 66, 75, 100
ஐம்புலன்களின் சேஷ்டை 4, 74
ஐராவதம் 77
கணபதி காப்பு
சிவபெருமான் 1, 62, 63, 68, 74 84, 86, 90
காம தகனம் 58
திரிபுர தகனம் 3, 80
நாகாபரணம் 43, 74
யானையை உரித்தது 45
செல்வ நிலையாமை 36, 49, 59, 66
சேவலும் சேவற்கொடியும் 12, 20, 27, 52, 86, 91
தலங்கள்:
அருணை காப்பு
செங்கோடு 23, 36, 70, 72, 90, 91, 97
செந்தில் 25. 30, 40, 46
திருத்தணி 76, 79
பழநி 75
தேவசேனை 67
பார்வதி 5, 13, 22, 80
பிரமன் 76, 86, 89, 90
மயில் 11, 21, 50, 65, 70, 72, 96, 97
மனம் ஒடுங்கல்வேண்டும் 16, 74
மாநுடப்பிறவி விசேடம் 67
முருகர்:
அறுவர் முலையுண்டது, உமை முலைப்பாலுண்டது 5, 81
கிரௌஞ்சம் பிளந்தது 3, 5, 16, 19, 31, 32, 34, 40, 44, 48, 52, 56, 89, 93, 100
சசிதேவி மங்கல்யம் புரந்தது 21, 77
சரவணப் பாயல் 5
சிவபிரானுக்கு உபதேச குரு 45, 63, 69
சூரசம்ஹாரம் 4, 5, 16, 32, 37, 40, 45, 48, 49, 62, 82
தமிழ்க் கடவுள் 72
தமிழ்ப் பிரியர் 22
திருவடிப் பெருமை 15, 92
தேவர் சிறைமீட்டது 83
பிறவாத அருள்தருவர் 2
பெருமை 13, 14, 93
பொன்னுலகம் புரந்தது 79
மாமரத்தை யட்டது 31, 91
ராவுத்தர் 37, 50
முருகர் படை
சிறுவாள் 81
சீரா 27, 81
வேல் 81
முருகர் மாலை
கடம்பு 19, 38, 40, 62, 72, 82
குரா 74
வெட்சி 17, 27, 30
யமன் 2, 25, 50, 55, 56, 64, 65, 69, 78, 80, 81, 86, 87
யாக்கை நிலையாமை 66, 78
யோகம்
வேண்டாம் என்பது 85
வள்ளியம்மை 6, 9, 10, 22, 24, 26, 29, 42, 53, 57, 58, 72, 85, 91, 94

விஷ்ணு 86, 90
இராவணனை யட்டது 22
கடல்மீது கோபித்தது 54
காளிங்க நிர்த்தனம் 50
சேதுபந்தனம் 43
சேஷ சயனம் 41
பாற்கடல் கடைந்தது 39
புரத்தற் கடவுள் 97
பூமியை உண்டது 62, 93
மாவலிபால் மூவடி
மண் கேட்டது 15
வராகாவதாரம் 95
வேல் 3, 18, 21, 23, 27, 28, 30, 33, 36, 37, 40, 43, 48, 52, 62, 83, 88, 89, 92, 93.

—: 0 :—

# 1. சொல்லகராதி

அ (அந்த) - 11, 14, 59, 61, 103
அகம் - 44
அகல் (நீங்கு) - 81
அகிலம் - 62
அங்கு - 22
அங்கே - 104
அசட்டு க்ரியை - 7
அசரீரி - 9
அசைந்தது - 11
அசைபடு - 11
அஞ்சல் - 50
அஞ்சார் - 101
அஞ்சேன் - 107
அட்சம - 52
அடங்க - 33, 47
அடங்கார் - 55
அடல் - காப்புச் செய்யுள் 56
அடவி - 1
அடா - 25, 64
அடி (பா அடி) - 15
அடி (பாதம்) - 11, 15, 20
அடிக்கொள்ள - 12
அடியார் - 33
அடியிட - 11
அடியேன் - 24
அடுத்த - 104
அடுதல் - 100
அடைக்கலம் - 84
அடைத்தோன் - 43
அடைதற்கு - 28
அடைநத - 14
அண்ட (வீணைச்சொல்) - 85
அண்ட கடாகம் - 12
அண்டகூடம் - 15
அண்டம் - 82, 83, 92
அண்டமுகடு - 82
அண்டர் - 92
அண்டர்குழாம் - 87
அண்டரண்டம் - 92
அண்டி - 92
அண்ணல் - 10
அணி - 3, 22, 43
அணிகலம் - 62
அணியிட்டு - 3
அணுகார் - 101
அணுவாகி - 3
அத்தம் - 20
அத(தி)ரி - 52
அதிர்ந்தன - 13
அதிர்ந்து - 97
அதில் - 23
அதீதத்தில் - 68
அது - 106
அநத (காப்புச்செய்யுள்) 66, 90, 93
அந்தகன் - சூர குலாந்தகன் - 45
புராந்தகன் - 45
அந்தகா - 25, 64, 81
அநாதி - 8
அப்பு - 14
அப்புறத்தும் - 96
அம் - 92
அம்பரம் - 39
அம்புயம் - 42, 48

அம்புலி–1
அம்புலியின் கிறு - 1
அமாசிகாமணி - 105
அமராவதி - 35, 79, 87
அமுது - 47
அயர்கினும் - 37
அயன் - 40
அயில்வேலன் - 2
அரக்கர் - 3, 13, 43
அரண் - 17
அரவிந்தம் - 17
அரா - 74
அரிதாய் - 28
அரிய - 67
அருகு (காப்புச் செய்யுள்)
அருங்கோபம் - 69
அருட்பதங்கள் - 105
அருணை (காப்புச் செய்யுள்)
அருத்தி 71
அருந்தி - 5
அரும்பும் - 6
அருவு - 6
அருவுருவு - 28
அருள் (பெயர்ச் சொல்) - 16, 29, 39, 59, 74, 86
அருள் (வினைச் சொல்) - 23, 31, 69
அருள்வாய் - 46, 79
அருளாய் - 82, 99, 103, 105, 106
அரை (இடை) - 13, 81, 93
அல் - 17
அல்குல் - 29, 42, 46
அல்குற்படம் - 29
அல்லவே - 74
அல்லால் - 28
அல்லும்பகலும் - 17
அலகை - 88
அலங்காரம் - 101
அலாது - 64
அவர்க்கு - 66
அவன் - 40, 70
அவிரோத ஞானச்சுடர்வடிவாள் -25
அவிரோத ஞானம் - 25
அவிழ்ந்த அன்பு - 74
அவுணர் - 7, 11, 33, 61
அழ - 5
அழித்து - 2
அழிந்தது - 40
அழுது - 63
அழும - 5
அளவு - 18, 55
அளி - 8
அற்ற - 17, 61, 74, 95, 103
அற்று - 45, 61
அற (நீங்க) 2, 100
அற (மிகவும்)-6
அறல் - 74
அறுர் - 55
அறிகின்றிலேன் - 48
அறிந்த - 6
அறிந்தவரே - 101
அறிந்திலனே - 89
அறிந்து - 71, 105
அறிய - 64
அறியா - 45, 86, 88
அறியாத - 49
அறியின் - 89
அறியேன் - 41, 84
அறிவார் - 26
அறிவின்மையே - 78
அறுமுகவன் - 107
அறுமுகவா - 73
அறுவர் - 5, 81
அன்பாய் - 48, 98
அன்பால், 2, 43, 74, 100
அன்பிலாதவர் - 66
அன்பின் - 51
அன்பினுல் - 53
அன்பு - 2, 43, 48, 51, 66, 74, 98, 100
மெய்யன்பு - 6, 53, 63
அன்றி (அல்லால்) - 44, 49, 54, 84, 95
அன்று (அந்தினத்தில்) - 78
அன்று (முன்னொருநாள்) - 9, 15, 24, 77
அன்று (அல்ல) - 9
அன்றே (அப்பொழுதே) - 6
அன்றோ (அந்த நாளிலோ) - 2
அன்றோ (அல்லவா) - 15
அன்ன - 98
அனந்தன் - 97
அனுப்பிட - 83
அனைய - 41

ஆ

ஆக்கி - 24
ஆக்கிய - 33
ஆக்கும் - 73
ஆக - 17, 34
ஆகமம் - 17
ஆகி - 3, 28, 87

ஆகிய - 25
ஆகுலம் - 79
ஆங்காரம் - 55
ஆங்கு - 39
ஆட - 7, 37, 68
ஆடு - 79
ஆடும்பொழுது - 68
ஆடுவீர்காள் - 78
ஆண்ட - 42
ஆண்டு - 39
ஆதி - 14
ஆம் (ஆகும்) - 21, 69, 71
ஆய் - 14, 47
ஆய - 86
ஆயிரம் - 90
ஆயினும் - 51
ஆயுதம் - 25, 86, 88, 97
ஆர் - 78, 79, 90
ஆர்க்கை - 44
ஆர்ப்பு - 43
ஆர்வம் - 52
ஆரம் - 59
ஆராது - 81
ஆரும் - 95
ஆலம் - 107
ஆலித்து - 97
ஆலு (சிவன்) - 62
ஆவி - 105
ஆழ - 20
ஆற்றில் - 36
ஆறிரண்டு - 14, 102
ஆறு (வழி) - 51, 105
ஆறு (நதி) - 1, 36
ஆறு (எண்) - 8, 14, 44, 47, 51, 71, 87, 102
ஆன - 46, 87, 102
ஆனது - 17, 36, 46
ஆனந்தத் தேன் - 8
ஆனந்தம் - 6, 8, 73, 75
ஆனந்தமே - 73
ஆனந்தவாரி - 35

## இ

இ (இந்த) - 14, 19, 100
இக்கு - 58
இகல் - 10
இகல்வேலன் - 10
இங்கு - 40, 87
இங்கே - 98
இங்ஙன் - 18, 28, 42, 43, 63
இட்ட - 45, 52
இட்டது - 59, 89
இட்டு - 2, 3, 4, 44, 57, 75, 96
இட - 11, 66, 89
இடத்து - 66
இடத்தே - 74
இடம் - 103
இடம்பெற - 23
இடர் - 96
இடாமல் - 59
இடிக்கும் - 50
இடிபட்டவே - 12
இடு - 11
இடுங்கோள் - 16
இடுதல் - 100
இடைபட்ட - 12
இணங்கி - 88
இணை - 82
இதழி - 1
இது - 42
இதுவே - 57
இதெங்கே - 42
இந்தரலோகம் - 82
இந்த - 46, 73, 84
இப்பொழுது - 69
இமைப்போது - 4
இமையோர் - 83
இரட்சிப்பையே - 32
இரண்டு - 14, 23, 95, 102
இரவு - 73
இரா - 74, 103
இராமல் - 45
இராவுத்தன் - 50
இரு (இருப்பாயாக) - 45, 57
இருக்க - 17
இருக்கும் - 10, 28, 47, 61, 68, 92
இருக்கை - 74
இருகால் - 44
இருகோட் டொருகைப் பொருபூதரம் - 45
இருசோடு - 45
இருங் காமவிடாய் - 34
இருங்கோள் - 16
இருத்தவல்லார் - 68
இருத்தும் - 71
இரு தாள் - 38, 44
இருந்தபடி - 16
இருந்தே - 103
இருந்தேன் - 19
இரு நான்கு - 14

கோபித்தவனே! செவ் - சிவந்த, வேல - வேலாயுதத்தை யுடையானே! கை வேல் - கையின் வேலாயுதமும், திமிர - திமிராகும் படி, திமி - குற்றுகின்ற, ரக்க குலாந்தக - அசுரர் குலத்துக்கு யமனே! வரைத்தேன் பெருகு - மலையினின்று வீழுந் தேனுற் பெருகிய, உந்தி மிர் - கான் யாற்றையுடைய புனத்தில் வாழும் வள்ளி நாயகீ, அத்தி மிர் - அயிராவதத்தால் வளர்க்கப்பட்ட தெய்வயானை நாயகீ, அத்தனை - அவ்வளவு, ஆவி - (என்) பிராணனை, ஆளும் - ஆண்டு கொள்ளுங்கள், என் - என்றிங் கிதம் பேசும், சேவகனே - வீரனே! திமிரத் திமிர - பூசப் பூச, கனலாய - அக்கினிபோ லிருக்கின்றன, சந்தன சீதளம் - (யான் திமிர்ந்திருக்கின்ற) சந்தன முதலிய குளிர்ந்த வஸ்துக்களும், (ஆதலால் வந்து தழுவி யருளவேண்டும்.) (எ-று). தரங்க கோப முதலியன - எழுவாய் - என்னைத் தழுவவேண்டும் என்னும் பயனிலையைக் குறிப்பாய்க் காட்டி நின்றன. ஏ-அசை.

(க-உ.) திமிங்கில மீனையுடைய இருண்ட சமுத்திரத்தைக் கோபித்தவனே! வேலவனே! அசுரர் குலாந்தகனே! வள்ளி தெய்வயானை என்னும் நாயகிமார் தழுவும்படி இதம் பேசும் வீரனே! யான் பூசுஞ் சந்தன முதலிய குளிர்ந்த வஸ்துக்கள் இப்போது உன்மீதுள்ள விரக தாபத்தால் எனக்கு வெப்பத்தை விளைக்கின்றன. ஆதலால் என்னைத் தழுவ வேண்டுமென்பது குறிப்பு.

(கு-உ.) (1) முருகவேள் கடலைக் கோபித்தது:—திருப்புகழ் பாடல் 905, பக்கம் 640 கீழ்க்குறிப்பு; பாடல் 1026. (2) தேன் பெருகுமலை—வள்ளிமலை—"மட்டொழுகு சாரமதுரித்த தேனைப் பருக மர்க்கட சமூகம் அமைதொட்டு இருல் எட்டுவரை மன்றற் பைம்புனத்தாள்"—பூத வகுப்பு; 'தேன் வரைவள்ளி'—கல்லாடம் 58; உந்திமிர்—'உந்திவளத்தவள்'—அந்தாதி 16; 'உந்திவனவாசமது'—'உந்திவனேறப்பவை'—[அந்தாதி 16, 48, 89] (3) 'ஆவியை ஆண்டருள்'—என ஆண்டவன் வேண்டுவதை—'ஆவி உய அருள் பாராய்'—எனவரும் திருப்புகழிலும் (209) காண்க. (4) விரகதாபத்தால் சந்தனம் அனல்போலிருப்பதை:—சுந்தர மூர்த்தியைக் கண்டு விரகதாபங்கொண்ட பரவையின் நிலையை—'ஆர நறுஞ் சேருட்டி யரும் பனிநீர் நறுந்திவலை அருகுவீசி.........மடவார் செய்த இவை ......பேரழலின் நெய் சொரிந்தா லொத்தன' எனக் கூறுமிடத்துக் காண்க—பெரிய புரா—தடுத்தாட்—173 (ஆரம் - சந்தனம்.) (5) என்னை அணைத்தருள் என்று தேரில் வரும் இறைவனை வேண்டினளாம் ஒரு மங்கை. அப்போது

இறைவன்—' உமைக்குப் பயந்து கங்கையைச் சடையில் ஒளித்து வைத்தோம்; உமை, கங்கை இவ்விருவரும் காணு வகையில் இந்த மங்கையை நாம் எங்கே ஒளித்து வைப்போம்' என்று கருதி, ஒன்றும் பேசாமலே தமது தேரை நடாத்திச் சென்றுராம்—" அன்றடுத்த, பங்குமையை அஞ்சிப் படர்சடையில் வைத்தொளித்தாம் கங்கையினை; இவ்விருவர் காணுமல் எங்கிவளை நாமொளிப்பம் என்னு நடாத்தினன் பொற்றிருத் தேர் "—(வெங்கையுலா 264.); அவ்வாறே, தேவசேனை—வள்ளி என்னும் இரண்டு தேவிமாரிடத்திலும் எனது ஆவியை ஆண்டருள் என முருகவேள் வேண்டி நிற்க, அவரை நினைந்து ஒரு மங்கை காமவேதனைப் படுகின்றுள்; முருகவேள் எவ்வாறு அம் மங்கையை அணைவது; அது தெரியாது அந்த மங்கை வேதனைப்படுகின்றுள்; பின்வருமாறு அவள் புலம்பவும் கூடும்.

மங்கை குறத்தி வலப்பால் இடத்தை வளைந்துகொண்டாள்
நங்கை கரிப்பெண் இடப்பால் இடத்தை நயந்தணைந்தாள்
இங்கிம் மடந்தையை எங்கே இருத்திவைப் பேனெனநீ
அங்கொர் வழியின்றி யோஎனைத் தூர அகற்றினையே.

" சந்தனத்தைப் பூசுமூலை தைவரலும் நெஞ்சமூங்கி
இந்தனத்தை நீற்றுநெருப பீதென்றுள் "
— தணிகையுலா 410-மங்கைப் பருவம்.

## 8. வள்ளியாற் கிடைத்த சீதனப் பொருள்கள்

சீதனங் கோடு புயங்கைகொண் டார்தந் திருமருக
சீதனங் கோடு முடியாளர் சேய்தனக் கேதுளதோ
சீதனங் கோடு னிதருமென் பார்தொழுந் தேவிபெறுஞ்
சீதனங் கோடு கொடிவேன் மயூரஞ் சிலையரசே.

(ப-உ.) சீ—மகா லக்ஷ்மியினது, தனம்-கொங்கையையும், கோடு-சங்கத்தையும், புயம்-திருத்தோளிலும், கை-திருக்கரத்திலும், கொண்டார்தம்-தரித்த விஷ்ணுவினது, திருமருக—சிறந்த மருகனும், சீதன்—சந்திரனை, அம்—அழகிய, கோடு—கோணல் வடிவாகத் (தரித்த), முடியாளர்—பரமசிவன், சேய் தனக்கு—மைந்தனுமாகிய குமாரக் கடவுளுக்கு, ஏதுளதோ—உள்ளதென்னெனில், சீ—இகழத் தக்க, தனம்—திரவியம், கோள்—குற்றத்தையும், துனி-துன்பத்தையும், தரு-கொடுக்கத் தக்கது, என்பார்—என்று நீக்கிய அன்பர்கள், தொழும்—வணங்குகின்ற, தேவி—வள்ளி நாயகியால், பெறுஞ் சீதனம்—

கிடைத்த வரிசையாகிய, கோடு—கொம்பினேடு, கொடி—கோழிக் கொடியும், வேல்—வேலாயுதமும், மயூரம்—மயில் வாகனமும், சிலை—குறிஞ்சி நிலமாகிய மலைகளின், அரசு—ஆளுகையுமாம். (எ—று.) ஏதுளது—எழுவாய்; இவைக ளுடைமையாம்—பயனிலை. ஏ—அசை.

(க-உ.) திருமாலுக்கு மருகோனும் பரமசிவனுக்கு மைந்தனுமான குமாரக்கடவுளுக்கு வள்ளிநாயகி சீதனத்தாற் பெற்ற கொம்புடன் கோழிக்கொடியும், வேலாயுதமும், மயில் வாகனமும் மலைகளின் ஆளுகையையும் உடைமைகளாம்.

(கு-உ.) [1]முருகவேள் வள்ளி மூலமாகப் பெற்ற சீதனப் பொருள்களைத்—"திண்ணென் தடக்கை வெஞ்சிலை வேடர் குடிகொண்ட சீறூரும், ஊரூர்தொறும், செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம் சீதனக் காணிபெற்றத் தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன் சப்பாணி கொட்டி யருளே" —எனவரும் முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழிலும், 'வரைதரு பெண்ணை வேட்டு வரையெலாம் காணி கொண்ட விரைதரு கடப்பந் தண்டார் வேலவற் கன்பு செய்வாம்' —எனவரும் மண்ணிப் படிக் கரைப் புராணத்தும் காண்க. தேவசேனையின் சீதனப் பொருளை—'இடியு முனைமலி குலிசமும் இலகிடு கவள தவள விகடதட கனகட இபமும், இரணிய தரணியும் உடையதொர் தனியானைக் கிறைவ"—எனவரும் திருப்புகழில் (1008), பக்கம் 38—கீழ்க்குறிப்பிற் காண்க. ஆகவே—வள்ளியாற் பெற்ற சீதனப் பொருள்கள் ஐந்து:—(1) ஊதுகொம்பு, (2) சேவற்கொடி, (3) வேலாயுதம், (4) மயில்வாகனம், (5) மலையாட்சி: தேவசேனையாற் கிட்டியவை நான்கு—(1) இடி, (2) குலிசம், (3) ஐராவதம், (4) பொன் னுலகு. தனத்தைப் (பொருளைச்) சீ என இகழ்ந்தார்க்கே வள்ளியின் திருவருள் கூடும்.

## 9. விரக வேதனை:

சிலைமத னம்படு மாறெழுஞ் சேய்மயி லுச்சிட்டவெச்
சிலைமத னம்படு சிந்துவை யிந்துவைச் செய்வதென்யான்
சிலைமத னம்படு காட்டுவர் கேளிருஞ் செங்கழுநீர்ச்
சிலைமத னம்படு தாமரை வாவி திரள்சங்கமே.

(ப-உ.) சிலை—கருப்பு வில்லையுடைய, மதன்—மன்மதனது அம்பு—புஷ்ப பாணங்கள், அடுமாறு எழும்—கொல்லும்படி வரு

கின்றன, சேய் மயில்–குமாரக் கடவுளின் மயிலினது, உச்சிட்ட–எச்சிலாகிய, பாம்பினது, எச்சிலே–எச்சிலாகிய தென்றற் காற்றையும், மதனம்படு–கடையப்பட்ட, சிந்துவை–சமுத்திரத்தையும், இந்துவை–சந்திரனையும், யான் செய்வதென்–நானென்ன செய்து கடப்பேன்; சிலே–ஆர்ப்பரிப்போடு, மதம்–ஆங்காரத்தை, நம்படு–நம்மிடத்திலே, காட்டுவர்–அலர் தூற்றிக் காட்டா நின்றூர்கள்; கேளிரும்-சுற்றத்தாரனைவரும்; செங்கழுநீர்–குவளைமலர் நிறைந்த, சிலே–திருத்தணி மலையின்கண், மது–தேனும், அனம்–அன்னப் பட்சியும், படு–உண்டாகிய, தாமரை–தாமரைகளையுடைய, வாவி–பொய்கையில் (வாழும்) திரள்–கூட்டமாகிய, சங்கமே–சங்கினங்களே. (எ–று.). யாம்–எழுவாய்; செய்வதென்–பயனிலே.

(க–உ.) குமாரக் கடவுளினது தணிகையங்கிரித் தாமரைத் தடாகத்தில் வாழுஞ் சங்கினங்களே! என்மேல் மன்மதன் பாணப் பிரயோகஞ் செய்யா நிற்கின்றான்; தென்றலும் சந்திரனும் கடல் முழக்கமும் வருத்துகின்றன; சுற்றத்தாரது கோப தாபமும் உண்டாயிருக்கின்றன; இவற்றை என்ன செய்து கடப்பேன்.

(கு–உ.) மன்மதன், தென்றல்; கடலொலி, நிலவு இவை விரகதாபத்தை வளர்க்கும்–திருப்புகழ் 218, பக்கம் 53 கீழ்க்குறிப்பைப் பார்க்க. பாம்பு—வாயு பக்ஷணி ஆதலின்—தென்றலை—'மயில் உச்சிட்ட எச்சில்' என்ற அழகு கவனிக்கற்பாலது. மயிலின் எச்சில்—பாம்பு; பாம்பின் எசசில்—வாயு. தணிகை மலையைச் செங்கழுநீர் மலை எனத் தமிழிலும், செங்கல்வகிரி—என த் தெலுங்கிலும், தணிகை முருகனைச் செங்கல்வ ராஜன் (ராயன்) எனவும் கூறுவர். "கடிமலிந் தோங்கு கழுநீர்க் குன்றம்"—அப்பர்—6—13—4: 'திருத்தணிகைச் செங்கழநிப் பெருமாளே'–திருப்புகழ் 299. 'தணிகையங்கிரி முடியும் நண்பு தழைத்த செங்கல்வராயரே'—தணிகைக் கலம்பகம்–66.

## 10. அவையடக்கம்

**திரளக் கரக்கரை வென்கண்ட வேலன் றிசைமுகன்மால்**
**திரளக் கரக்கரை யான்பாட நாடுதல் செய்யசங்க**
**திரளக் கரக்கரை காண்பான்கைந் நீத்திசை வார்பனிக்க**
**திரளக் கரக்கரை வானீட்டு மைந்தர்புந் திக்கொக்குமே.**

(ப-உ.) திர-உறுதியான, ளக்க-லட்சமான, ரக்கரை-அசுரர்களை, வென்கண்டவேலன்-புறங்காட்டச்செய்த வேலாயுதனை, திசைமுகன்-பிரமாவுக்கும், மால்-மாயோனுக்கும், திரள்-அநேக, அக்கர்-கண்ணையுடைய இந்திரனுக்கும், அக்கர்-உருத்திராட்ச மாலையையுடைய பரமசிவனுக்கும், ஐ-சுவாமியாகிய குமாரக் கடவுளை, யான் பாட நாடுதல்—நான் பாடும்படி கருதுகின்றது, செய்ய-அழகிய, சங்கு-சங்குகள், அதிர்—முழங்கும், அளக்கர்—சமுத்திரத்தை, அக்கரை காண்பான்-கரைகாணும்படி, கைந்நீத்திசைவார்-கையினால் நீந்திப் போவாரது (புத்திக்கும்), பனிக்கதிர்-தண்கதிரையுடைய சந்திரனை, அள-பிடித்துக்கொள்ளும்படி, கரக்கரை-கையளவை, வானீட்டு மைந்தர்—ஆகாசத்திலே நீட்டுஞ் சிறுவர்களது, புந்திக்கு—புத்திக்கும், ஒக்கும்—ஒப்பாகும். (எ-று.). நாடுதல்-எழுவாய். ஒக்கும்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) அசுரர்களைச் செயித்தவரும், பிரமன் முதலியோருக்குச் சுவாமியுமாகிய குமாரக்கடவுளை யான் பாடக் கருதுதல் கையினாற் கடலை நீந்தவும், கையை நீட்டிச் சந்திரனைப் பிடிக்கவும் நினைப்போர் புத்திக்கு ஒப்பாயிருக்கின்றது.

(கு-உ.) இச் செய்யுளின் அவையடக்கக் கருத்துக்களை—

"விடை யுகத்திடு மின்னனை பாகன்மேற்
தொடை நிரம்புசொல் சூடத் தொடங்கல்யான்
நடையிடற் கரு நல்லெழின் மைந்தர்சூழ்
கடல் கடக்கக் கருதுவ தொக்குமால்" —எனவரும்

திருப்பூவணப் புராணத்தும்—"புகலிப் பெருமான் புகழை யளந்துரைப்பனென ...... வினையேனும் சமைத்தவாறு வான் கிளைத்து வரு நாண் மதியை வருகென்று மகவொன் றழைத்த வாறே யால்."—எனவரும் சீகாழிப் புராணத்தும் காணலாம்.

## 11. பிறவியற

திக்கத்திக் கோடு படிபுடைச் சூதத் தெறிபடபத்
திக்கத்திக் கோடு கடடக் கடறடி சேப்படைச்சத்
திக்கத்திக் கோடு துறைத்திறத் தற்ற குறக்குறச்சத்
திக்கத்திக் கோடு பறித்துக்கொ டாதி சிறைபிறப்பே.

(ப-உ.) திக்க-திகைக்கும்படி, திக்கோடு-திசைதோறும், படர்ந்த, படி-பூமியின்கண், புடை-நீக்கியருள்வாய், சூத-மா

மரமாய் நின்ற சூரனை, தெறி-விளங்கிய, படபத்தி-ஆயிரம் பணுமகுடத்தையுடைய ஆதிசேடனது, கத்து-தலையிலே, இக் கோடு-இந்தச் சங்குகள், உகள-ஊரும்படி யாழ்ந்த, தடக் கடல்-பெரிய சமுத்திரத்தின்கண்ணே தடி-கொன்ற, சேப் படைச் சத்தி-சிவந்த வேற்படையை யுடையவனே! கத்தி-கதறி, கோடு-மாறுபட்ட, துறைத்திறத்து-பரசமயவழியில், அற்ற-மறைந்து நிற்பவனே! குற-குறச் சாதியில் பிறந்த, குறச்சத்திக்கு-வள்ளி நாயகிக்கு, அத்திக் கோடு-ஆனைக் கொம்பை, பறித்து-பிடுங்கி, கொடு-கொடுத்த, ஆதி-முதல் வனே! சிறை பஞ்சேந்திரியங்களால் கட்டுண்டிருக்கிற, பிறப்பு-(எனது) செனனத்தை. (எ-று.). நீ-தோன்று எழுவாய். புடை-பயனிலை.

(க-உ.) சமுத்திரத்தின்கண் மாவுருக்கொண்டு நின்ற சூரனை வென்ற வேலாயுதனே! மாறுபாடுடைய பரசமய வழிக்கு எட்டாதவனே! வள்ளியம்மைக்கு யானைக்கோட்டைப் பிடுங்கி விளையாடக் கொடுத்த முதல்வனே! பூமியின்கண் என் பிறப்பை யொழித்துவிடு. ['விளையாடக்கொடுத்த'— என்பது—'குற்றுதற்குக் கொடுத்த' என இருக்கவேண்டும்.]

(கு-உ.) சூதத் தெறி-மாமரமாய் நின்ற சூரனைப் பிளந் தெறிந்த-சே-சிவந்த, படைச்சத்தி—வேற்படையை உடைய சத்தி சொரூபனே எனவும் பொருள் காணலாம். இச் செய்யு ளின் பொருள் திருத்தமாக முன்னைய பதிப்புக்களில் அச்சிடப் படவில்லை எனத் தோன்றுகின்றது. குற-குற்றுதற்கு குறச் சத்திக்கு—குறக் குலத்து வள்ளிக்கு- எனப் பொருள் கண்டிருக்க வேண்டும். (உலக்கைபோல வைத்துக்கொண்டு) குற்று தற்கு யானையின் கொம்பைப் பறித்து முருகவேள் வள்ளிக்குக் கொடுத்ததைக் "களிற்றுமருப் புலக்கையினிற் கொழித்த மணிக் கழைத்தரளத் தினைத்தினையிற் குறுவாளை" — என வரும் 797—ஆம் திருப்புகழிற் காண்க. (பக்கம் 360—கீழ்க்குறிப் புக்கள்.) வில்லிபுத்தூரார் வாய்மொழியாற் சொல்லிவந்த உரையை—அவர்பாற் கேட்டுத்தெளிந்தவர்கள் உரைமறந்து எழுதியிருக்கலாம்.

## 12. முருகன் கழலைச் சிந்தியாததால் ஐவர் சேஷ்டையிற் பட்டுத் தீகைத்தல்.

சிறைவர வாமயி லேறிச் சிகரி தகரவந்து
சிறைவர வாமையில் கூப்பிடத் தானவர் சேனைகொண்ட
சிறைவர வாமையில் வாங்கிதன் றேங்கழல் யாங்கமலாச்
சிறைவர வாமையி னெஞ்சுட னேநின்று தேங்குவதே.

(ப-உ.) சிறை—தோகையையும், வர—வரப்பிரசாதத்தையுமுடைய, வா மயிலேறு—தாவு மயிலேறி, சிகரி—கிரவுஞ்சகிரி, தகர—பொடியாகும்படி, வந்து—எழுந்தருளி, சிறை—கரையினால், வர—சூழப்பட்டும், ஆமை—ஆமைக்கு, இல்—இருப்பிடமுமாகிய (கடல்), கூப்பிட—இரங்க, தானவர் சேனை—ராக்ஷத சேனைகள், கொண்ட—கொண்டுபோன, சிறை வர—தேவர் சிறைமீளும்படி, ஆம்—தகுந்த, ஐயில் வாங்கிதன்—வேலெடுத்த குமாரக் கடவுளது, தேங்கழல்—இனிய பாத தாமரையை, யாம்—நான், கமலா—அணுகாமற் பிரிந்ததனால், சிறு—சிறிய, ஐவர்—பஞ்சேந்திரியங்களின், அவா—ஆசையாகிய, மையில்—இருளில், நெஞ்சு—என்னிருதயம், உடனே நின்று—அவ்விருளோடு நின்று, தேங்குவது—திகைக்கின்றது. (எ—று). நெஞ்சு—எழுவாய். தேங்குவது—பயனிலை. ஏ—அசை.

(க-உ.) கிரவுஞ்சகிரி பொடிபடவும், சமுத்திரம் முறையிடவும், அசுரரினின்று தேவர் சிறை மீளவும், வேற்படையெடுத்து மயின்மீ தெழுந்தருளிய குமாரக் கடவுளினது பாத தாமரையை நான் நண்ணுதலின்றிப் பிரிந்ததனால் என்னிருதயத்தில் ஐம்புல ஆசையென்னும் இருள் அகலாது நிறைந்திருக்கின்றது.

(கு-உ.) "சிகர பூதரந் தகர"—திருப்புகழ் 295.

இச்செய்யுளின் முதல் மூன்று அடிகளில் "வேல் வாங்கு வகுப்பின் முதற் பாகத்தின் கருத்துக்கள் சில அடங்கியுள்ளன. முருகனை "அயில் வாங்கி" எனக் குறித்துள்ளார். இறைவன் திருவடித் தியானம் இருந்தால் ஐம்புல ஆசைகள் அணுகா.—"ஐவர் கள்வர் ...... முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணன் பாத நீழல் உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினால் எய்யலாமே"—அப்பர்-4-77-5. 'இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந் தார்மாட்டு"—திருக்குறள் 5. இறைவன் பொருள் முருகன்; பொருள்—மகன் "தாருகனைப் பொருது பொன்று வித்த பொருளினை முன் படைத்துகந்த புனிதன"—சுந்தரர்-7-16-9; எனவே—இருள் சேராது முருகனைச் சிந்திக்கில் என்பது பெற்றும்.

## 13. இடமணித்தென்றல்

தேங்கா வனமும் மதகரி வேந்துடன் சேர்ந்தவிண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற் பணியெனுஞ் சேயிடமேல்
தேங்கா வனமுந் தளர்நடை யாயஞ்சல் செண்பகப்பூந்
தேங்கா வனமுங் கழுநீ ரிலஞ்சியுஞ் செந்திலுமே.

(ப-உ.) தேங்கு-நிறைவாகிய, ஆவன-பசுநிரைமேய்த்த திருமாலையும், மும்மத-மும்மதம் பொழியும், கரி-அயிராவதத்தையுடைய, வேந்துடன்-இந்திரனோடு, சேர்ந்த-கூடிய, விண்ணோர்-தேவர்களையும், தேம்-அத்தேவர்கட்கிடமாகிய (அம்ராபதியையும்), காவல்-காப்பது, நம்-நமது, முனைய-கூரிய, வேல்-வேலாயுதத்தின், பணி-தொழில், எனும்-என்று கட்டளையிட்ட, சேய் இடம்-குமாரக் கடவுளின் வாசஸ்தலம், மேல்-முன்னேயிருக்கின்றன, தேங்கா-திகைத்து, அனமும்-அன்னப்பட்சியும், தளர் நடையாய்-தோற்கின்ற நடையை உடையவளே, அஞ்சல்-பயப்படாதே, (அவை) செண்பக-செண்பக விருட்சத்தால், பூம்-பொலிந்த, தேங்காவனமும்-இனிய பூஞ்சோலையும், கழுநீ ரிலஞ்சியும்-செங் கழுநீர் மடுவும், செந்திலும்-திருச்செந்தூருமாம். (எ-று). நீ-தோனரு எழுவாய். அஞ்சல்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) அன்னமுந் தோற்கு நடையையுடையவளே! விஷ்ணு முதலிய தேவர்களையும்அமராபதியையும் காக்கும்படி வேலையனுப்பிய குமாரக் கடவுளினது திருச்செந்திற்பதியும் பூங்காவனமும் செங்கழுநீர்ச்சுனையும்அணித்தாயிருக்கின்றன; பயப்படாதே.

(கு-உ.) துறைப்பொருளிலன்றிப் பொதுவாகப்பொருள் கூறின் — இலஞ்சியும் செந்திலுமே — என்பது — இலஞ்சித் தலமும் செந்திற்பதியும் எனவும் பொருள் காணக் கிடக்கின்றது. இலஞ்சி என்னும் தலத்தைப்பற்றித் திருப்புகழ் 975-பக்கம் 820 பார்க்க.

"மன்னிலஞ்சி சூழு மலரிலஞ்சி யுஞ்சூழ்ந்த
தென்னிலஞ்சி வாழுந் திருக்குமரன்"-இலஞ்சி முருகன் உலா-74.

இலஞ்சி-குளம்; மலரிலஞ்சி-மகிழம்பூ; தென் இலஞ்சி-தலம்.

இடமணித்தென்றல் — என்னுந் துறைக்கு உதாரணம்— திருப்புகழ் 668 கீழ்க்குறிப்புப் பார்க்க.

## 14. அலரறிவுறுத்தல்

செந்தி லகத்தலர் வாணுதல் வேடிச் சிமுகபங்க
செந்தி லகத்தலர் துண்டமென் னநின்ற சேயசங்க
செந்தி லகத்தலர் ராசிதந் தானைச் சிறையிட்டவேற்
செந்தி லகத்தலர் தூற்றிடுங் கேடு திவாகருளே.

(ப-உ.) செம்-சிவந்த, திலகத்து-பொட்டினல், அலர்-பரந்த, வாள்-ஒளி பொருந்திய, நுதல்-நெற்றியையுடைய, வேடிச்சி-வள்ளிநாயகியினது, முகம்-வதனம், பங்கசெம்-தாமரையாகும், திலகத்து-எள்ளினது, அலர்-பூ, துண்டம்-மூக்காகும், என்ன நின்ற-என்று நலம்புனைந்துரைக்கும், சேய-குமாரக்கடவுளே! சங்க-கூட்டமாகிய, செந்து-ஜீவராசிகட்கு, இலக-இருப்பிடமான, தலராசி தந்தானை-அண்டங்களைப்படைத்த பிரமனை, சிறையிட்ட வேல்-சிறைப்படுத்திய வேலாயுதத்தை யுடைய, செந்தில்-செந்திற்பதியோனே! அகத்து-அகங்காரத்தினல், அலர் தூற்றிடும்-அலர் தூற்றுகின்ற, கேள்-சுற்றத்தாரும்; துதி-(யாவரும்) துதிக்கத்தக்க, வாகு-உனது புயததை, அருள்-கிருபை செய்யவேண்டும். (எ-று.) நீ-தோன்ற எழுவாய். அருள்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வள்ளிநாயகியினது முகத்தைத் தாமரையென்றும், மூக்கை எட்பூவென்றும் வியக்குங் குமாரக்கடவுளே! பிரமனைச் சிறையிட்ட செந்திநயகனே! சுற்றத்தார் மிகவும் அலர் தூற்றுகின்றார்கள்; (அது நீங்க) உனது திருப்புயந் தந்தருளவேண்டும்.

(கு-உ.) 'அலரறிவுறுத்தல்' என்னுந்துறை. திருக்கோவையாரில் 'அலராயிரம்' எனத் துவக்கும் 180-ஆம் பாடலைப் பார்க்க.

1. முகம்-கமலம் ஒக்கும்-'திருமுகங்கமலம்'-தணிகைப் புராணம்-களவு-43; மூக்கு-எட்பூவுக்கு உவமை—"எட்பூ ஏசிய நாசியாய் இயம்புக"—மனோன்மணீயம் 1-2-28. "ஒதியும் எள்ளும் தொள்ளைக் குமிழும் மூக்கொக்கும்"—கம்ப ராமாயணம்-நாடவிட்ட-52; நலம்புனைந்துரைத்தல்—"பொங்கிழையைப் புனைநலம் புகழ்ந் தங்கதிர்வேலோன் அயர்வு நீங்கியது"—திருக்கோவை-11.

2. வேல் பிரமனைச் சிறையிட்டது—திருப்புகழ் 571 பக்கம் 310; பாடல் 757-பக்கம்-256 கீழ்க்குறிப்பு.

3. சுற்றத்தார் அலர் தூற்றுதல்—செய்யுள் 9 பார்க்க.

## 15. உயிரை யமன் கொள்ளை கொள்ளாத வழி

திவாகர கன்ன கொடைப்பாரி யென்றுழ றீனவல்லீர்
திவாகர கன்ன புரக்குழை வல்லி செருக்குரவந்
திவாகர கன்ன சுகவா சகதிறல் வேல்கொடென்புந்
திவாகர கன்ன மறலி யிடாதுயிர்ச் சேவலுக்கே.

(ப.-உ.) திவா - பகலிலே, கரகன்ன-கன்னனைப்போற் கொடுக்குங் கரத்தோனே! கொடைப்பாரி-பாரி வள்ளலைப் போற் கொடுக்குங் கொடையோனே! என்று-(புல்லரிடஞ் சென்று) சொல்லி, உழல்-வருந்தச்செய்யும், தீன-வறுமையாகிய, அல்- இருளை, ஈர்-நீக்கும், திவாகர-ஞான சூரியனே! கன்னபுரக் குழை-கன்னபுரக் குழையென்னும் பணியணிந்த, வல்லி-வள்ளிநாயகி, செருக்கு - களிப்புறத் தழுவும், உர- மார்பையுடையோனே! அந்தி - மாலையின் செவ்வானம் போலும், வாகு-அழகையுடைய, அர-பரமசிவனது, கன்ன- திரு செவிக்கு, சுக வாசக-இனிய வசனம் உபதேசித்தவனே! திறல்-வலிமையையுடைய, வேல் கொடு-வேலாயுதத்தைக் கொண்டு, என - எனது, புந்தி - இருதயத்தில், வா - வரக் கடவாய்; கர-ஒளித்து நின்று, கன்ன மறலியிடாது-இயமனவன் கொள்ளை கொள்ளாமல், உயிர்-என்னுயிரை, சேவலுக்கு-(அவ்வுயிரைக்) காப்பாற்றும் பொருட்டாக, (எ-று.). நீ-தோன்று எழுவாய். வா-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வறுமையினுல், பிறரிடத்துக் கொடையிற் கன்னனே! பாரி வள்ளலே! யென்று புகழ்ந்து இரப்பதை யொழிக்கும் ஞான சூரியனே! வள்ளிநாயகி தழுவு மார்பனே! பரமசிவனுக்கு உபதேசித்தவனே! என்னுயிரை யமன் கைப் பற்றிக் கொள்ளாதபடி யென்னை வந்து காத்தருள்.

(கு-உ.) (1) பாரி, கர்ணன்—"கொடுக்கி லாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பாரிலை"—சுந்தரர்-7-34-2. 'வண்புகழ் பாரி'; [2]"முதிய க(ர்)னனென"—திருப்புகழ் 236, 304.

கர்ணன் பகலிலே கொடுப்பது—திருப்புகழ் 577-பக்கம் 318 கீழ்க்குறிப்பு; பாரி — திருப்புகழ்-123, பக்கம் 290; பாடல் 236, பக்கம் 90 கீழ்க்குறிப்புக்கள்.

(2) வறுமையை இறைவன் ஒழிப்பது—"மிடி தூள்பட, கனல் மால்வரை சேர் பெருமாளே"-திருப்புகழ் 563. (3

கன்னபுரம் – கர்ணபூரம் – காதணிவகை – 'கன்னபூரங் கலந்த செங்கண்ணியே'-பாரதம்-குருகுல-111. 'கன்னபூரமும் காது மள்ளியே' — தக்கயாக 504. (4) 'சிவபிரான அந்தியன்னதொர் மேனியான்''—சம்பந்தர் 2-51-11. (5) சிவனுக்கு முருகவேள் உபதேசித்தது — திருப்புகழ் 327, பக்கம் – 314 குறிப்பு. பாடல் 628, பக்கம் 462 குறிப்பு. (6) சேவல் – காப்பாற்றுதல்—'இறடியஞ் சேவற்கு எறிகவண் கூட்டியும்'– (இறடி – தினை; சேவல் – காவல்)—கல்லாடம் 87. 'சேவற் காட்டினில்'—திருப்புகழ் 557, பக்கம் 272. (7) ''வேல் கொடு......வா' என்றார்-வேல் கூற்றுவன் கொடுமையை விலக்கும் ஆதலின் (அந்தாதி 100.)

## 16. பிரிவாற்றுமை

சேவற் கொடியும் பனிசாந் தகனுந் திருக்கரத்துச்
சேவற் கொடியுங் கொடியகண் டாய்தினை சூழ்புனத்துச்
சேவற் கொடியுந் திவளத் தவளுந்தந் திக்களபச்
சேவற் கொடியு முடையாய் பிரியினுஞ் சேரினுமே.

(ப-உ.) சேவற்கு-இடப வாகனத்தையுடைய பரமசிவனால், ஒடியும் பல்-பல்லுதிர்க்கப்பட்ட, நிசாந்தகனும்-இருட் கூற்றாகிய ஆதித்தனும், திருக்கரத்து-(உனது) அழகிய கையினிடத்திலிருக்கின்ற, சேவற்கொடியும் – கொடியாகிய சேவலும், கொடிய கண்டாய்-பொல்லாதவைகளாயிருக்கின்றன; தினை சூழ் புனத்து-தினை நிறைந்த புனத்தை, சேவல்-காப்பவளும், கொடி-நீண்ட, உந்தி-கான்யாற்றின, வளத்தவளும்- வளப்பத்தை யுடையவளுமாகிய (வள்ளியம்மையையும்), தந்தி-அயிராவதம் வளர்த்த, களப-சந்தனம் அணிந்த, சே- சிவந்த, வல்-சொக்கட்டான் காய்போலுற கொங்கையையும், கொடியும்-கொடிபோன்ற இடையையுமுடைய(தெய்வயானையையும்), உடையாய்-இருபாகத்தும் வைத்திருக்கின்ற கந்தஸ்வாமியே, பிரியினும்-உன்னைப் பிரிந்த (பகல்) காலத்தும், சேரினும் – உன்னையடைந்த (இராக்) காலத்தும். (எ-று.) நிசாந்தகனும்-சேவற்கொடியும்-எழுவாய். கொடிய-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வள்ளிநாயகியையுந் தெய்வானைநாயகியையுமுடைய கந்தனே! உன்னைத் தழுவியகாலத்திரவு நீடியாமல் கோழி கூவியும், உன்னைப் பிரிந்தகாலத்து மாலை விரைந்து வராமல் பகல் நீடித்தும் கொடுமைசெய்வனவாயிருக்கின்றன.

(கு-உ.) (1) சே – இடபம்–சேவன்–இடபவாகனத்தன்–சிவன்: 'சேவ தேறிய செல்வன்' — சம்பந்தர் - 3 - 5 - 7; (2) சூரியன் பல்–தக்கயாகத்தில் உதிர்க்கப்பட்டது–திருப்புகழ் 390–பக்கம் 486-487 குறிப்பு,

"சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற"—திருவாசகம் திருவுந்தியார்.

(3) வள்ளி – 'உந்தி வனவாச மாது'; — பாட்டு 7 குறிப்பைப் பார்க்கவும்.

## 17. இறைவன் ஆட்கொள்ளுந் திறம்

சேரிக் குவடு மொழிவிழி யாடனச் செல்விகுறச்
சேரிக் குவடு விளைந்ததன் றேநன்று தெண்டிரைநீர்
சேரிக் குவடு கடைநாளி லுஞ்சிதை வற்றசெவ்வேள்
சேரிக் குவடு புடைசூழ் புனத்திற் றினைவிளைவே.

(ப-உ.) சேர்–இசைந்த, இக்கு–கரும்பையும், வடு–மாவடுவையும் (ஒத்த), மொழி விழியாள்–மொழியையும் விழியையுமுடைய வள்ளிநாயகியின், தனச்செல்வி – கொங்கையின் தன்மை, குறச்சேரிக்கு–குறவர்குடியிருப்புக்கு, வடு–(காந்தருவ மணம் நடந்ததென்னும்) குற்றமாகிய சொல்லை, விளைந்தது–உண்டாக்கினது, அன்றே–அக்காலத்திற்றானே, நன்று–நன்றாயிருந்தது, தெண்டிரை நீர் கடலனைத்தும், சேரி–ஒருமித்து, கு–உலகத்தை, அடு – அழிக்கின்ற, கடைநாளிலும்–உகாந்த காலத்திலும், சிதைவற்ற–அழிவில்லாத, செவ்வேள்–குமாரக் கடவுளது, சேரி–(தென்சேரி வட) சேரியாகிய, குவடு–மலையின், புடை–பக்கத்தில், சூழ்–சூழ்ந்த, புனத்தில்–தினைப்புனத்தில், தினை–தினை, விளைவு விளைவானது. (எ-று.) வடு, விளைவு–எழுவாய்; விளைந்தது, நன்று–பயனிலை. ஏ–அசை.

(க-உ.) குமாரக் கடவுள் ஆளுகைக்குள்ளடங்கிய மலைப் பக்கத்தில் தினை நன்றாய் விளைந்தது; உடனே கன்னல்போல் மொழியும் மாவடுப்போல் விழியுமுடைய வள்ளிநாயகியின் யௌவனத்தால் குறவர் குடிக்கு வடுவிளைந்தது.

(கு-உ.) 'பெரும்பைம்புனத்திற் சிற்றேனல் காத்த வள்ளியின் கொங்கையை விரும்பின குமரவேள் வள்ளியைக் களவு கொண்டதால் குறச்சேரிக்கு வடு விளைந்தது—

" அடுதிறல் எயினர் சேரி அளித்திடு நீயே எங்கள்
மடந்தையைப் பைங் காவில் வெளவி, வரம்லை அறிஞருந்தீரா
நெடுந் தரிப் பழியை தொன்று நிறுவினை"

எனக் கூறினர்கள் வேடர்கள். (கந்த புராணம் 6-24-191).

## 18. பிறவி ஒழியும் வகை

தினைவேத் தியன்புசெய் வேந்தன் பதாம்புயத் திற்பத்திபுந்
தினைவேத் தியமுகந் தேற்றினர் மாற்றினர் பாற்றினந்தீத்
தினைவேத் தியர்நெறி செல்லாத விந்தியத் தித்தியினைத்
தினைவேத் தியங்குயிர் கூற்றுரி லூசிடுஞ் சீயுடம்பே.

(ப-உ.) தினை-தினைப்புனத்துக்கு, ஏத்தி-இறைவியாகிய வள்ளிநாயகி, அன்புசெய்-இச்சைகொள்ளும், வேந்தன்-குமாரக் கடவுளது, பதாம்புயத்தில்-திருவடித் தாமரையில், பத்தி-அன்பையும், புந்தி-அறிவையும், நைவேத்தியம்-நைவேத்தியமாக, உகந்து-விரும்பி, ஏற்றினர்-(சமர்ப்பித்து) வணங்கின அடியார்கள், மாற்றினர்-(உண்மையாய்) ஒழித்து விட்டார்கள், பாற்றினம்-பருந்துக் கூட்டங்களும், தீ-நெருப்பும், தின்-பட்சிக்கத் தக்கதும், ஐ-அழகிய, வேத்தியர்-அறிஞர், நெறி-(விதித்த) நல்வழியில், செல்லாத-ஒழுகாதும், இந்தியம்-பஞ்சேந்திரிய வசத்ததும், தித்தியினத்தின-உணவு வகைகளினால், நைவு-கழிவாகிய (மலசலாதிகளை), ஏந்து-ஏந்திக்கொண்டதும், இயங்குயிர்-(உண்ணின்று) இயங்கும் பிராணனை, கூற்று-யமனானவன், ஆரில்-உண்டு விட்டால், ஊசிடும்-நாறிப்போகத் தக்கதுமாகிய, சீ-இகழ்ச்சிக்கு இடமான, உடம்பு-தேகத்தை. (எ-று.) ஏற்றினர்-எழுவாய்; மாற்றினர்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வள்ளிநாயகி விரும்பிய கந்தசுவாமியினது திருவடித் தாமரையில் அன்பையும் அறிவையும் செலுத்தினவர்கள் பருந்துக்குந் தீக்கும் இரையாய் நெறியொழி ஐம்புலனுகர்ச்சியையுடைய மலபாண்டமும் பிராணனை விட்டுப் பிரிந்தால் நாறிப்போவதுமாகிய உடலையொழித்து விடுவார்கள்.

(கு-உ.) இந்தப் பாடலை வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகள் மானச பூசையில் நைவேத்தியத்துக்கு உபகரணமாகக் கொண்டனர். ஊசிடும் சீ உடம்பு — 'அழுகு திரி குரம்பை' (க்ஷேத்திர வெண்பா 9). பிறவியை ஒழிக்கும் வழியைக் காட்டுகின்றது இச் செய்யுள்.

## 19. பிரமனது அறியாமையை இகழ்ந்தது

சீயனம் போதி யெனவாய் புதைத்துச் செவிதரத்தோல்
சீயனம் போதி யமலையிற் றுதை சிறுமுநிவன்
சீயனம் போதி கடைந்தான் மருகன்செப் பத்திகைத்தார்
சீயனம் போதி லரனு த்ருக்கெ ன் செயக்கற்றதே.

(ப-உ.) சீயன்-பார்வதிபாகரான சிவன், நம்-நம்மை, போதி-உபதேசி, என-என்று, வாய் புதைத்து-வாய் மூடி, செவிதர-கேட்கவும், தோல்-யானையும், சிய-சிங்கமும், நம்பு-தஞ்சமா யுறைகின்றதும், ஓதிய-கல்விக்குறைபாடுமான, மலைபற்றுதை-பொதியமலைக்கு-முதல்வரான, சிறுமுநிவன்-அகத்திய முனிக்கு, சீயன்-பாட்டனாகிய, அம்போதி கடைந்தான்-பாற்கடலைக் கடைந்த விஷ்ணுவினது, மருகன்-மருமகனான குமாரக்கடவுள், செப்ப-உபதேசிக்க, திகைத்தார்-(பிரணவப் பொருள் தெரியாமல்) தியக்கமுற்றிருந்தார், சீ-இகழ்தக்க, அனம்போதில்-அன்னவாகனத்திலும் தாமரையிற் செல்லும், அரன்-பிரமன், ஆதி முதன்மையாகிய, ருக்கு-வேதத்தை என்-என்ன, செய-செய்யும்படி, கற்றது-கற்றுக்கொண்டது. (எ-று). அரன்-எழுவாய். கற்றது-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) பார்வதிபாகரான பரமசிவன் வாய்மூடிக் கேட்கவும், திருமால் மருகனான குமாரக் கடவுள் பிரணவப் பொருளை சொல்லத் திகைத்து நின்ற பிரமா ஆதிவேதத்தை ஏன் கற்றான்?

(கு-உ.) (1) சிவபிரான் பக்தியுடன் உபதேசம்கேட்டனர் என்பது—'அரன் ......... பணிசெய அருளிய'' ''மிகுத்த பக்தியவர் கரக்க''—திருப்புகழ் 755, 1206 என வருமிடங்களிற் காண்க.

(2) அகத்தியர் பிரமதேவனுக்குப் பிறந்தவர் என்று காவிரிப்புராணம் கூறும்; ஆதலால் திருமால் அகத்தியருக்குப் பாட்டன். (3) அனம்போதில் என்பதற்கு அன்னவாகனத்திலும், போதில்-(தாமரை) மலரிலும் வீற்றிருப்பவன் எனவும் பொருள் காணலாம். அரன்-எப்பொருட்கும் இறை (சூடா). இருக்கு-வேத மந்திரங்கள்-'வேதப் புனித இருக்கை நாவில் கொண்டு''—திருவாய்மொழி 5-2-9.

சர ம்மன வ தவர்க் பா மார மான இரு
சரண மும் கூப்பி, வேழச்
சருமமும் உடுத்தி, வெ புலி தன் உடுத்தி, மூன்
த ளையும் ஒடு கி, நாகா

பரணமுந் தாழா நெடுந்துச் சுருட்டி, இரு
பங்கயக் கைகள் கட்டிப்,
பரிவர்த்தனைக் கால மாமென்ன, மான்மழுப்
பக்கத்தில் அங்க மூன்றும்
கிரண வெண் பிறையும், கடுக்கையும் முழங்குபா
கீரதியும் வீழ்வ தென்னக்
கிளர்தலை குனிந்து, ஐந்து வாயும் புதைத்த,மா
நேசன் திருச்செவி குள்
திரணமென அமுதெழும் ப்ரணவத்தின் உரைசொன்ன
திருவாயின் முத்தமருளே
செங்கண்மால் மருகனே குன்றைவாழ் முருகனே
திருவாயின் முத்தமருளே.
—(மயூரகிரிநாதர் பிள்ளைத் தமிழ்.)

## 20. இறைவன் உள்ளத்திருக்க

செயதுங்க பத்திரி போற்றும் பகீர திரசெவ்வேற்
செயதுங்க பத்திரி சூடுங் குறத்தி திறத்ததண்டஞ்
செயதுங்க பத்திரி புத்திரி பாதத்தர் செல்வதென்பாற்
செயதுங்கரி பத்திரி யத்திரி யாதிரேன் சிந்தையிலே.

(ப-உ.) செய - சிறந்த, துங்கபத்திரி போற்றும் – துங்க பத்திரியென்னும் நதி வணங்குகின்ற, பகீரதி கர - கங்காதேவி யின் கையிலிருப்பவனே! செவ்வேல்-சிவந்த வேலாயுதத்தை யுடைய, செய–செயம் பொருந்திய குமாரக் கடவுளே! துங்க பத்திரி - சுரப்புன்னை யிலையை, சூடும் – புனைகின்ற, குறத்தி திறத்த-வள்ளி பங்காளனே! தண்டம்-தண்டாயுதமும், செய-வெற்றியும், துங்க–பெருமையும், பத்தி–ஒழுக்கமுமுடைய, ரிபு – மாறுபட்ட – (காலனை), திரி - கெடும்படி (உதைத்த), பாதத்தர் - திருவடியையுடைய பரமசிவனை, செல்வ - புதல்வனே! தென்பால்-தென் திசையில், செய்–போகச்செய்வ தாகிய, அதுங்கு-யாவருமொதுங்கும், அபத்து-தீ நெறியினல், இரிய – எனது சிந்தை முறிந்தோட, திரியாது – உலாமல், இரு – நீ தங்கியருள வேண்டும், என சிந்தையில் – என் மனத்தின்கண்ணே. (எ – று.) நீ – தோன்றா எழுவாய். இரு – பயனிலை.

(க-உ.) காங்கேயனே! வேலாயுதனே! வள்ளிநாயகனே! பரமசிவனது மைந்தனே! யான் இயம தண்டனையை

விளக்கும் அவநெறியிற் சிக்காவண்ணம் நீ என் சிந்தையில் வீற்றிருக்கவேண்டும்.

இந்தப் பாடலை மானச பூஜைக்கு—'ஆவாகனத்துக்கு' உபகரணமாக வள்ளிமலை சுவாமிகள் கொண்டனர்.

சிவபிரான் காலனை உதைத்தது—திருப்புகழ் 399, பக்கம் 510 குறிப்பு. கங்கையே நதிகளுட் சிறந்தது: அது நதிகளுக்கு அரசு. "திரையிடங் கொளும் நதிகளிற் சிறந்த கங்கை"—கந்த புராணம் 6–24–218. "ஆற்றினுக் கரசாங் கங்கை"–திருவிளை தீர்த்த-2. அதனுல் துங்கபத்திர் ஆதிய பிற நதிகள் கங்கையை வணங்கும். துங்கை, பத்திரி இரண்டு நதிகளும் சேர்ந்ததால் துங்கபத்திரி எனும் பெயர் வந்தது.

## 21. அகங்காரிகள்பால் அணுகாதிருக்க அருள்புரி

சிந்தா குலவ ரிசைப்பேரு மூருநஞ் சீருமென்றோர்
சிந்தா குலவ ரிடத்தணு காதரு டீமதலை
சிந்தா குலவரி மாயூர வீர செகமளப்பச்
சிந்தா குலவரி மருக சூரனைச் செற்றவனே.

(ப.-உ.) சிந்தா—ஒருக்காலும் அழியமாட்டா, குல வரிசைப் பேரும்-நமது வமிச பரம்பரை நாமமும், ஊரும்—நமது நகரமும், நஞ்சீரும்-நமது சிறப்பும், என்று ஓர்-என்று எண்ணுகின்ற, சிந்தா குலவ ரிடத்து-வருந்து மனத்தையுடைய அஞ்ஞானிகள்பால், அணுகாதருள்-சேராதிருக்கஅநுக்கிரகிக்க வேண்டும்; தீ மதலை அக்கினியிற் பிறந்த கோழியை, சிந்தா-கொடியாகக் கொண்டவனே! குலவு-பிரகாசிக்கின்ற, அரி-பச்சை நிறம் பொருந்திய, மாயூர வீர-மயிலேறுஞ் சேவகனே! செகம்-பூமியை, அளப்ப-அளக்கும்படி, சிந்தாகு-வாமனமாகி, உலவு-உலாவின, அரி-விஷ்ணுவின, மருக-மருகனே! சூரனை-சூரனை, செற்றவனே-செயித்தவனே! (எ-று). நீ-தோன்று எழுவாய்; அணுகாதருள்-பயனிலை.

(க-உ.) கோழிக் கொடியோனே! பச்சை மயில் வீரனே! வாமனவதாரங் கொண்ட மாலை மருமகனே! சூர சங்காரனே! லௌகீக வாழ்வை நித்தியமாய் நம்பி மனம் வருந்துவோர் பாற் சேராதிருக்க எனக்கருள்செய்.

(கு-உ.) (1) தீமதலை-கோழி: சூரனொடு பொருதபோரில்-தீ-அக்கினி முருகவேளுக்குக் கோழிக் கொடியாகத் தோன்றின காரணத்தால்— கோழியைத் தீ மதலை என்றார்; கோழிக் கொடியைத் 'தீமதலை சிந்து' என்றார் — சிந்து-கொடி.

"புங்கவர் யாவரும்......தூயவன் ஏறுதேர் மீது கேதனம் இல்லை வியன்கொடி அதி நீயென றழலினை ஏவிநர்"

"ஏவலோடும் எரிதழற் பண்ணவன், வாவு குக்குட மாண்கொடி யாகியே, தேவதேவன் திருநெடுந் தேர்மிசை மேவி ஆர்த்தனன் அண்டம் வெடிபட"

—கந்தபுராணம்-4 13-205-6. ஆதி = ஆகுதி.

"அனலன் தன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன்"—பரிபாடல் 5 57.

"தீமதலைங் கொடி தேரை நேரை திகழ்திருக் கரவோனே"

(அருட்கவி சேதுராமனார் — 26-1-1956). (தானை — பெருங்கொடி. கரவாமனே — கரத்தவனே. முருகவேளுக்கு மயில் கொடியும் உண்டு.

"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ" — திருமுருகாற்றுப்படை.

(2) திருமால் வாமனராக (குறளராக) வந்த வரலாறு:— திருப்புகழ் 268, பக்கம் 166; பாடல் 458, பக்கம் 24 கீழ்க் குறிப்பு.

## 22. உயிர்விடும்போது எழுந்தருளி வந்துதவுக

செற்றை வரும்பழ னஞ்சோலை யிஞ்சி திகழ்வரைமேற்
செற்றை வரும்பழ நிக்கந்த தேற்றிடு! நூற்றுவரைச்
செற்றை வரும்பழ நாடாள நாடிகண் சேய்விடுத்த
செற்றை வரும்பழ மாங்கூடு வேமத் தினத்தில்வந்தே.

(ப-உ.) செற்றை-செற்றையென்னு மீனினம், வரும்-உலாவுகின்ற, பழனம்-வயலும், சோலை-பொழிலும், இஞ்சி-மதிலும், திகழ்-விளங்காநின்ற, வரைமேல்-பருவதத்தின் மேல், செல்-மேகம், தைவரும்-தவழுகின்ற, பழநிக் கந்த-பழநிமலைக் கந்தனே! தேற்றிடு— அபயந் தந்தருள்வாய், நூற்றுவரை- துரியோதனன் முதலிய நூறுபேரையும், செற்று-கொன்று, ஐவரும்-பாண்டவர்கள், பழநாடு-பழைய ராசியத்தை, ஆள-ஆளும்படி, நாடி-கருதிய கிருஷ்ணமூர்த்தியினது, கண் - விழியாகிய (ஆதித்தன்), சேய் - மைந்தனாகிய காலன், விடுத்த-அனுப்பிய, செற்றை வரும்-தூதர் கூட்டம் வரும், பழமாங் கூடு-வார்த்திகத்தை யடைகின்ற இவ்வுட-

லானது, வேம்-பிராணனீங்கித் தகிக்கப்படுகின்ற, அத் தினத்தில் வந்து-அந்நாளில் எழுந்தருளி வந்து. (எ-று.) நீ-தோன்று எழுவாய். தேற்றிடு-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) பழநிமலை யாதிபனே! விஷ்ணுவின் விழியாகிய சூரியனது மைந்தனாகிய காலன் விடுத்த கூட்டம் வரும் புழுக்குரம்பையாகிய என்னுடல் அழியுங்கால் நீ எழுந்தருளி வந்து அபயந் தந்தருள்.

(கு-உ.) (1) மேகம்படியும் சோலை 'கொண்டல் சூழுமஞ் சோலை ...... பழநி'—திருப்புகழ் 183.

(2) திருமாலின் கண்கள் சூரியனும் சந்திரனும் :—

"பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக ...... தீநற
விளங்கிய திகிரியோனே"—நற்றிணை-கடவுள் வாழ்த்து.

"செங்கதிரும் வெண்கதிரும் என்னத் திருவிழியும்
சங்கமும் சக்கரமும் தாங்கினோன்"
—அழகர் கிள்ளை விடுதூது 125.

"அநாதி மத்யாந்தம் அநந்த வீர்யம்
அநந்த பாஹும் சசி சூர்ய நேத்ரம்—கீதை-11-19.

"சந்த்ர சூர்யௌ ச நேத்ரே"—
விஷ்ணு சகஸ்ரநாம ஸ்தோத்ரம்-த்யான ச்லோகம்

(3) விவச்சுவான் என்னும் சூரியனுக்குச் சாயாதேவியிடம் பிறந்தவன யமன.

"ஆதித்தன் தந்த நமன்"
—ஞானவாசிட்டம்-உபசாந்தி-அருச்சுனன் கதை-8.

(4) நூற்றுவரை அழித்து ஐவர்க்கு அருளியது—

"நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்கு அருள்செய்து நின்று
பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை"
—திருவாய்மொழி-3-5-7.

## 23. வேலாயுதத்தின் பெருமை

தினகர ரக்கர தங்கெடுத் தார்குரு தேசிகர்செந்
தினகர ரக்கர மாறுடை யார்தெய்வ வாரணத்தந்
தினகர ரக்கர சத்தி பின் றுகிலத் தேவர் நண்ப
தினகர ரக்கர தந்தீர்வ ரீர்வர் செகமெங்குமே.

(ப-உ.) தினகரர் — பகன் பூடாவென்னும் இரண்டு ஆதித்தர்களுடைய, அக்க — கண்ணையும், ரதம் — பல்லையும், கெடுத்தார் — அழித்த பரமசிவனுக்கு. குருதேசிகர் — போதகாசிரியரும், செந்தினகரர் — செந்திற்பதியினரும், அக்கரம் ஆறுடையார்—சடாக்ஷரப் பொருளானவரும், தெய்வ—தெய்விகமாகிய, ஆரண — வேதம் பூசித்த, தந்தி — பாம்புபோன்ற பிரகாரத்தையுடைய, நகர்—திருச்செங்கோட்டு மலையையுடையவருமாகிய (கந்தசுவாமி)யினது, அர—அரத்தாற் கூர்மையிட்ட, கர — திருக்கையிற்றரித்த, சத்தி — வேலாயுதமானது, இலாதுகில்—இல்லாவிட்டால், அத்தேவர் நண்பதி-அத் தேவர்கள் பொருந்திய பொன்னகரமும், ந — இல்லாமற்போவது மன்றி, கர—வஞ்சக நிறைந்த, ரக்கர்—அசுரரும், அதம் தீர்வர்—இறப்பும் ஒழிவார்கள், ஈர்வர் செகமெங்கும்—உலக முழுவதையும் நிர்மூலமாக்கியும் விடுவார்கள். (எ—று.) அரக்கர் — எழுவாய். அதந் தீர்வர், ஈர்வர்—பயனிலை. ஏ—அசை.

(க-உ.) பரமசிவனுக்குக் குருவாய்ச் செந்தூரில் வாழும் சடாக்ஷரப் பொருளாகிய திருச்செங்கோட்டு மலையையுடைய கந்தசுவாமியினது திருக்கைவேல் எழுந்தருளாவிடில் அமராபதி யழிந்து போவதுமன்றி அசுரரும் ஸ்திரமாயிருந்து உலக முழுவதையும் நாசஞ் செய்துவிடுவார்கள்.

(கு-உ.) (1) பகன் என்னும் சூரியனுடைய கண்ணும், பூடா என்னும் சூரியனுடைய பல்லும் தக்கயாகத்தில் கெடுற்றன.

"பல்லிறைகப் பகலைவென்றேன்", "பகன் தாமரைக் கண் கெடக் கடந்தோன்"—திருக்கோவை-60, 184,; திருப்புகழ் 390, பக்கம் 487.

(2) சடாக்ஷரம் — திருப்புகழ் 326, 327 குறிப்பு.

(3) தெய்வ-வாரணத்-தந்து-இல்-ந-கரர்-அ-கர-சத்தி-தெய்வயானையாகிய தேவசேனைக்கு (தந்து) திருமங்கிலிய நூலை அணிந்து, (இல்) இல்லாளாகக் கொண்ட, (ந) சிறந்த—கரர்-கரத்தினருடைய (அ) அந்த (கரம்) ஒளி உடைய (சத்தி) வேல்—எனவும் பிரிக்கலாம் எனத் தோன்றுகிறது.

(4) திரு செங்கோடு — வேதம் பூசித்த மலை — பாம்பு போன்ற மலை — திருப்புகழ் — 'மறைகுலாவு செங்கோடை' — திருப்புகழ் 374, பக்கம் 446; 'செழுமறை தேர் — புஜக பூதர'—அந்தாதி-82; நாககிரி — பெயர்க் காரணம்—திருப்புகழ் 380 குறிப்பு. "தெய்வத் திருமலைச் செங்கோடு"— கந்தரலங்காரம் 23.

## 24. வெறி விலக்கல்

செகம்புர வார்கிளை யெல்லா மருண்டு திரண்டுகொண்ட
செகம்புர வாதிங்ஙன் செய்வதென் னேமயல் செய்யவன்பு
செகம்புர வாச மெனத்துயில் வார்செப்ப பங்கபங்க
செகம்புர வாமுரல் செந்தூர வென்னத் தெளிதருமே.

(ப-உ.) செகம் — உலகத்திலும், புர — ஊரிலுமுள்ள, வார்-ஒழுங்கான, கிளையெல்லாம்-சுற்றத்தா ரெல்லாரும், மருண்டு-மயங்கி, திரண்டுகொண்டு-கூடிக்கொண்டு, அசெ-ஆட்டினுடைய, கம்-தலையை, புரவாது-காப்பாற்றாமல், இங்ஙன் — இவ்விடத்தில், செய்வதென்னே — வெறியாடற் செய்ய நினைப்பதென்ன விபரீதம், மயல்-(கைக்கிளையாக மயங்கிய இம்மாதின்) விரகதாபம், செய்ய-சிவந்த, வன்-வலிய, புசெகம்-ஆதிசேடனை, புர வாசமென-ஆதியான இடமாய்க்கொண்டு, துயில்வார் — திருக்கண் வளர்கின்ற, திருமால், செப்பு-புகழ்கின்ற, அபங்க-பங்மிலாதவனே! பங்கசெ-தாமரைத் தடாகத்தில், கம்பு-சங்கினங்கள், உரவா-உரக்க, முரல்-சப்திக்கின்ற, செந்தூர-திருசெந்திற் பதியோனே, என்ன — என்று சொல்லில், தெளிதரும் — (அக்ஷணமே) தீர்ந்து விடுவது நிச்சயம். (எ-று) மயல்-எழுவாய். தெளிந்திடும்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) பந்துக்களெல்லாரும் மயங்கி வீணாய் ஆட்டைப் பலியிடுவதால் இவள் மையல் தணியுமோ? (தணியாது); திருமால் புகழத்தக்க மாசற்றவனே! செந்தூரனே! என்று சொல்லில் தணிந்திடும்.

(கு-உ.) இச்செய்யுள் 'வெறிவிலக்கல்' என்னுந் துறை.

(1) 'வெறி விலக்கல்'—என்பது-தலைவிக்குக் காமத்தால் உண்டான நோயை வேறு காரணத்தால் உண்டானதாகக் கொண்டு அந்நோயைத் தணிக்க வேண்டிச் செய்யும் வெறியாட்டைத் தடுத்து நிற்றலைக் கூறும் அகத் துறை. வெறியாட்டு-வேலனுடைய; முருகக்கடவுள் ஆவேசிப்ப வேலன் (முருக பூசனை செய்பவன்) ஆடும் கூத்து. தலைவியின் நோய்க்குத் தலைவன் உண்மைக் காரணமாக இருக்க, வீணாக ஆட்டை ஏன் வேலனைக்கொண்டு பலியிடுகின்றீர்கள்—வெறியாட்டு வேண்டாம்—எனக் கூறித் தோழி வெறியாடலை விலக்குவது வெறி விலக்கல். ஐங்குறுநூறு-241-250. குறுந்தொகை-362 பார்க்க.

"நையல் எழில், தொள்ளை கொளலுன் குறையென்ன
மன்ன கொள்ளா தெமர்ணை, வெள்ளை யறிவுற வெள்ளை
மறியற வேண்டினளே"—கழுர்குறைக் கோவை-245.

"மறியறுந் தூட்டி வெறியயர்ந்து ...... ஏருகற் றருகின்ற
வேல ற்ற சிலம்பன் ஒண்டார சகலர ர ங்
கெ லோ நின் னுருடலியே"—பாண்டிக்கோவை.

"அன்பர் தருதே ரய் என்றன்னை குறித் ளை ய்......
வெறி யொண்டனர் ......விதியோ இது"
—வெங்கைக் கோவை-228.

"திருடையான் கதிர்ந்தேள் நிற வேறு கருதுவின்லின்
மதி மையார் ...... இல்லை"—திரு கோவை- 92.

(2) திரு செந்தூரில் தாமரைத் த ாகமும் சங்கமும்:—
"சிற கு மை யோடையில் மடையில்
தரக்குஞ் சூல்வளை பால்மணி விசிய திருச்செ தூர்"
—திருப் கழ்-26.

"சங்கினம் வாவிசூழ் பங்கயம் சாரலார் செந்திலம் தி"
—திருப்புகழ் 35

## 25. சிவபிரான் முருகவேளை வணங்கிய தென்ன காரணம்?

தெளிதரு முத்தமிழ் வேதத்திற் றெய்வப் பலகையின்கீழ்
தெளிதரு முத்தமிழா நித்தர் சேவித்து நின்றதென்னுன்
தெளிதரு முத்தமிழ் தேய்நகை வாசகச் செல்வித்திலைத்
தெளிதரு முத்தமிழ் செவ்வே ளிருப்பச் செவிகுனித்தே.

(ப உ.) தெளிதரு-ஆராயப்படுகின்ற, முத்தமிழ்-இயல் இசை நாடகம் எனும் முத்தமிழிலும், வேதத்தில்-வேதத்திலும், தெய்வப் பலகையின் கீழ்-தெய்வத் தன்மையான சங்கப் பலகையிலும், தெளி-மாசற்ற, தரு-குற்றாலின் கீழும், முத்து-முந்திவருந்தருளுகின்ற, அமிழ்தா நித்தர்-அழிவில்லாத நித்தியராகிய பரமசிவன், சேவித்து நின்றதென் - பணிந்து நின்ற காரணமென்ன? நாள்-நக்ஷத்திரம் (போல), தெளிதரு பிரகாசிக்கும், முத்து-முத்தையும், அமிழ் து-தவாமுதத்தையும், ஏய்-ஒத்த, நகை-பல்லையும், வாசக-சொல்லையுமுடைய, செல்வி-மங்கையாகிய, தினை-தினையை, தெளி-கொழிக்கின்ற வள்ளிநாயகியார், தரு-முத்த-கொடுக்கு முத்தத்தினால், அமிழ்-ஆநந்தத்தி லாழ்ந்தவராகிய, செவ்வேள்-முருகவேளானவர், இருப்ப-எழுந்தருளி யுபதேசிக்க, செவி

குனித்து—செவியைத் தாழ்த்திக்கொண்டு. (எ—று). நித்தர்—எழுவாய். சேவித்து நின்றதென்—பயனிலே. ஏ—அசை.

(க-உ.) வள்ளிநாயகியின் முத்தத்தால் மகிழும் குமார வேள் இருந்து உபதேசிக்க முத்தமிழிலும், வேதத்திலும், சங்கப் பலகையிலும், குற்றாலிலே கீழு முதல்வரா யிருக்கிற நித்தியரான பரமசிவன் பணிவோடு நின்று கேட்டதென்ன காரணம்?

(கு-உ.) சிவபிரான் வணங்கி உபதேசம் பெற்றது—செய்யுள் 19 பார்க்க. இந்த 25-ஆம் பாடல் ஒரு 'வினவுரைப் பாடல்'; சிவபிரான் ஏன் நஞ்சு உண்டார்? ஏன் கானிடை ஆடுகின்றார்? ஏன் எலும்பு பூண்டார்—என்பன போன்ற வினக்களைச் சம்பந்தப்பெருமான் அவர் பாடிய பதிகங்களில் எழுப்புகின்றார்—4, 6, 7, 47, 48, 51, 137, 138, 140, 172, 173, 186, 296—எண்ணுள்ள பதிகங்களைக் காண்க. அவரைப் பின் பற்றி அருணகிரியார் இந்த அந்தாதிப் பாடலில் வினவுரை ஒன்றை எழுப்புகின்றார்.

## 26. திருப்புகழ் கேட்டதன் பயன்

செவிக்குன்ற வாரண நல்கிசை பூட்டவன் சிந்தையம்பு
செவிக்குன்ற வாரண மஞ்சலென் றுண்டது நீண்டகன்மச்
செவிக்குன்ற வாரண வேலா யுதஞ்செற்ற துற்றனகட்
செவிக்குன்ற வாரண வள்ளி போற்றுண்பற்றென் றேடுவதே.

(ப-உ.) செவிக்கு—என் காதுக்கு, உன—உனது, தவா—தவிராத, ரண—உரிமையை, நல்கு—கொடுக்கும், இசை—கீர்த்தியை பூட்ட—அணிய, வ—வலிய, சிந்தை—(என் ) இருதயமாகிய, அம்பு செ—தாமரையிலிருக்கும், வி—பட்சியாகிய ஆன்மா, குன்ற—வருந்துகையில், வாரணம்—என கோழிக்கொடி யெழுந்தருளி, அஞ்சல் என்று—பயப்படாதே யென்று, ஆண்டது—அடிமை கொண்டது, நீண்ட கன்மம்—பெரிதான முன்செய் வினையாலாகும், செ—சென்னத்துக்கு வித்தாகிய, இக்குன்று—இம் மலைபோன்ற, அவா—ஆசையை, ரண—அடர் புரியும், வேலாயுதம்—அயிலானது, செற்றது—கொன்று விட்டது, உற்றன—என் செவிமடல் வீற்றிருந்தன, கட்செவி—பாம்பு போன்ற, குன்ற—திருச்செங்கோட்டு மலையையுடைய கந்தசுவாமியே! வாரண—தெய்வயானை, வள்ளி—வள்ளியாகிய

நாயகிமாருடைய, பொற்ருள் - பொன்னடிகள், மற்றென் தேடுவது - இனி நான் சம்பாதிக்கவேண்டியது வேறென்ன இருக்கின்றது-(எ-று). யான்-தோன்ருு எழுவாய். தேடுவ தென்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) நாகமலையில் வாழுங் கந்தசுவாமியே! உன் திருப்புகழை யான் கேட்டறிந்த மாத்திரத்தில் நினது கோழிக் கொடி என் ஆத்துமாவை அபயங் கொடுத்து ஆண்டு கொண்டது! உன் வேலாயுதம் பிறப்புக்கிடமான பேராசையை யொழித்துவிட்டது; உன் தேவிமாரது திருவடியுங் கிடைத்தது; இனி யான் தேடவேண்டியது என்ன இருக்கின்றது?

(கு-உ.) வேல் வினையை ஒழிக்கும். "வினையோட விடும் கதிர் வேல்"—அநுபூதி - 40. கட்செவிக் குன்றம்— திருச்செங்கோடு - பாடல் 23 பார்க்க. இச்செய்யுளை வள்ளி மலைத் திருப்புகழ் சுவாமிகள் தமது மானசபூஜைப் பாராயண நூலில் "பூரண அநுக்ரகம்" பெற்ற நிலைக்குச் சான்ருக எடுத்துக் காட்டியுள்ளார்.

## 27. நெஞ்சுக்கு உபதேசம்: முருகன் துணையைத் தேடிக்கொள்

தேடிக் கொடும்படை கைக்கூற் றடாதுளஞ் சேவின்மைமீன்
தேடிக் கொடும்படை கோமான் சிறைபட வேறுளபுத்
தேடிக் கொடும்படை யாவெகு நாட்டன் சிறைகளையுந்
தேடிக் கொடும்படை மின்கேள்வ னற்றுணை சிக்கெனவே.

(ப-உ.) தேடிக்கொள் - இப்பொழுதே சம்பாதித்துக் கொள்வாயாக, தும்பு-பாசத்தை, அடை-பொருந்திய, கை- கையையுடைய, கூற்று - இயமன், அடாது - அழிக்காதபடி, உளம்-நெஞ்சமே, சே-இடபம், வில்-தநுசு, மை-மேஷம், மீன் - மீனம், தேள் - விருச்சிகமென்னும் இராசிகளையும், திக் கொடும்-திக்குகளையும், படை-சிருட்டித்த, கோமான-பிரம தேவனை, சிறைபட — சிறைப்படுத்தி, வேறுள புத்தேள் — மற்றைத் தேவரது, தி - பத்தியில், கொடும்பு - திருத்தலை, அடையா-சேராத, வெகு நாட்டன்-ஆயிரங் கண்ணையுடைய இந்திரனது, சிறை-சிறையை, களை - ஒழித்தவரும், உந்து- நீரிலும் (நெருப்பிலும்) சமணர் செலுத்திய, ஏடு-ஏடுகளையும், இக்கொடும் — அவர்கள் செய்த கொடுமைகளையும், படு — தாழ்த்திவிட்ட, ஐ-சுவாமியாகிய, மின் கேள்வன - தெய்வ யானை நாயகனது, நற்றுணை—நல்ல அநுக்கிரகத்தை,

சிக்கெனவே – உறுதியாக. (எ–று). நீ – தோன்ரு எழுவாய். தேடிக் கொள்–பயனிலே. ஏ–அசை.

(க–உ.) நெஞ்சமே! பாச தரனுகிய யமன் உன்னே நலிவு செய்யாதபடி பிரமாவைச சிறைப்படுத்தி, இந்திரனைச் சிறைதவிர்த்து, சமணரிட்டஏட்டையும் வாதையுஞ்செய்த்த குமாரக் கடவுளது துணையை உறுதியாகச சம்பாதித்துக் கொள்.

(கு–உ.) சமணரை —ஏட்டையிட்ட வாதத்தில் வென்றதைத்—திருப்புகழ் 181–பக்கம் 422 குறிப்பிற் காண்க.

## 28. வேலைத் துதிக்க

சிக்குறத் தத்தை வழங்கா திழந்து தியங்குவர்தே
சிக்குறத் தத்தை வடிவே லெனுர்சில ரன்பர்செந்தாள்
சிக்குறத் தத்தை கடிந்தேனல் காக்குஞ் சிறுமிகுறிஞ்
சிக்குறத் தத்தை யனகிலெப் போதுந் திகழ்புயனே.

(ப–உ.) சி–இகழ்தற்கிடமாகிய, குறு–குறைவுபடத்தக்க, அத்தத்தை–பொருளை, வழங்காது–நல்வழியிற் செலுத்தாமல், இழந்து – பலவழியாயிழந்து, தியங்குவர் – வருந்துவார்கள், தேசு–(தங்களுடைய) கீர்த்தியும், இக்குற–மங்கிப் போகும்படியாய், தத்து–பொங்கமுற்ற, ஐ–அழகிய், வடிவேல் எனுர் சிலர்–கூரிய வேலாயுதமென்று துதியாத சிலர்கள், அன்பர்–அவ் வேலைத் துதிக்கும் அடியார்கள், செந்தாள்–உனது செவ்விய திருவடியை, சிக்குற – அகலாதுறையக் கண்டும், தத்தை கடிந்து–கிளியோட்டி, ஏனல் காக்கும்–தினைப்புனங் காக்கும், சிறுமி–சிறுமியாகிய, குறிஞ்சிக் குறத்து–மலைநிலத்துக் குறவரிடம் வளர்ந்த, அத் தையல் – அந்த வள்ளிநாயகியினது, நகில் கொங்கைச் சுவட்டால், எப்போதும் – சதாகாலமும், திகழ் புயனே – பிரகாசிக்கின்ற புயத்தையுடைய குமாரக் கடவுளே. (எ–று.) சிலர்–எழுவாய். தியங்குவர் – பயனிலே

(க–உ.) வள்ளிநாயகியினது கொங்கைச் சுவடு திகழும் புயத்தோனே! அன்புற்றவர்கள் உனது திருவடியில் அகலாது உறைதலைக் கண்டும் சிலர் உனது வேலாயுதத்தைத் துதியாமல் அநித்தியமான கைப்பொருளையும் இழந்து வறுமையால் வருந்துகின்ருர்கள்.

(கு-உ.) வழங்காத செல்வம் பலவழியாய் இழக்கப்படும்:

"தொன்னே வழங்கான் பொருள்காத் திருப்பானேல்
அஆ இழந்தானென் றெண்ணப்படும்";

"கொடாஅது வைத்தீட்டி னாரிழப்பர் ......
உய்த்திட்டுந் தேனீக் கரி" — நாலடியார்-1, 9, 10.

"நம்பன் அடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்-வம்புக்காம்
கொள்ளைக்காம் கள்ளுக்காம் நோவுக்காம் சாவுக்காம்
கள்ளர்க்காம் தீக்காகும் காண்" — ஔவையார்.

(2) ஈதலின் சிறப்பையும் வேலைத் தியானித்தலின் சிறப்பையும் அருணகிரியார் ஒன்றுபடுத்தியே கூறுவார்:

"கரவா திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்-கந். அநு-7.

"காய்வேல் பாடேன் ...... தாழா தியேன்"—திருப்புகழ் 1062.

"ஏற்கு மவர்க்கிட என்னின் எங்கேனும் எழுந்திருப்பார்
வேற்கு மரற் கன்பிலாதவர் ஞான மிகவுநன்றே" கந்.அலங்-66

"வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும் பகிர்மின்காள்"
—கந்தர் அலங்காரம் 18.

(3) வள்ளியின் கொங்கையை விடாத கரத்தர் முருகவேள் என்பதை—"வேடுவச்சி ...... இளமுலை விடாத சித்ர மணிமார்பா", 'வளிநாயகியை...மா(ர்) முலை விடாத மணி மார்பா'—திருப்புகழ் 522, 644, 817.

## 29. சம்பந்தரே தெய்வம்

திகழு மலங்கற் கழல்பணி வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர் செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருளுபேன் னுவமண் சேனையுபா
திகழு மலங்கற் குரைத்தோ னலதில்லை தெய்வங்களே.

(ப-உ.) திகழும்-விளங்கா நின்ற, அலங்கல்-மாலையையணிந்த, கழல்-தனதுதிருவடியை, பணிவார்-வணங்குவோர், சொற்படி செய்ய-திருவாக்கின்படி நடக்க, ஓதி-தமிழ் வேதமென்னுந் தேவாரத்தை மொழிந்தருளினவரும், கழுமலம்-தான் அவதாரஞ் செய்த சீகாழியையும், கற்பக வூர்-தான் காத்தருளிய கற்பகத் தருவையுடைய அமராபதியையும், செருத்தணி-தான உறையுந் திருத்தணியையும், செப்பி-துதிசெய்து, வெண்பூதி—திருவெண்ணீருனது, கழும்—

போக்கடிக்கும், மலம் - மும்மலத்தையும், கற்பு – பரம்பொருளிதேயென்று நம்புங் கற்புடைமையை, அருளும் - கொடுத்தருளும், என்ன-என்று நினையாத, அமண் – சமணர், சேனை - கூட்டங்களை, உபாதி - வருத்தமான, கழு – கழுவிலேற்றி, மலங்கற்கு-கலக்கமுற்றழியும்படிக்கு, உரைத்தோனலது-வாது மொழிந்த சம்பந்தப் பிள்ளையுமாகிய குமாரக் கடவுளையன்றி, இல்லைதெய்வங்களே-பிரத்தியக்ஷமான தெய்வங்கள்வேறில்லை. (எ–று.) தெய்வங்கள்–எழுவாய். இல்லை-பயனிலை. ஏ-அசை.

(க–உ.) தன்னடித் தொண்டர்க்கு நன்னெறியாகத் தேவாரத்தை மொழிந்தருளினவரும் திவ்விய ஸ்தலங்களைத் துதியாமலும், திருநீற்று மகத்துவத்தைக் கைக்கொள்ளாமலும் இருந்த சமணர்கள் கழுவேறும்படி வாதினுல் வென்றவருமாகிய சம்பந்தாவதாரங் கொண்ட குமாரக் கடவுளேயன்றி வேறு தெய்வமில்லை.

(கு–உ.) (1) இச் செய்யுளிற் சம்பந்தப் பெருமானே தெய்வம் என உறுதியுடன் கூறி அவர் பெருமையைச் சிறப்பிக்கின்றார்.

'பித்தனை எங்கள் பிரானை அணைவ தெளிதுகண்டீர்
அத்தனை ஞானசம் பந்தனைப் பாதம் அடைந்தவர்க்கே''
—ஆளுடை பிள்ளையார் அந்தாதி-90.

எனவரும் திருவாக்கு இங்கு உணரற்பாலது.

(2) திருநீறிடும்பொழுது 'சீகாழி, அமராவதி, திருத்தணி' என்னும் மூன்று தலங்களையும் தியானித்து மொழிந்து திருநீறிடுக என்கின்றார் அருணகிரியார். சீகாழி (சம்பந்தர்) பிறந்த ஊர், அமராவதி (முருகன்) புரந்த ஊர், திருத்தணி (முருகன்) வள்ளியை மணந்து அமர்ந்த ஊர்.

(3) சம்பந்தப் பெருமானுக வந்த குகனே தெய்வம் என்கின்றார்:

"குஹாத் தேவ மந்யம் நஜாநே நஜாநே"
—சுப்ரமண்ய புஜங்கம் (ஆதி சங்கரர்).

மேலும் ஆதிசங்கர பகவத் பாதாள் (சௌந்தர்ய லஹரி 75-ல்).

"தரணி தர கன்யே! தயா வத்யா தந்தம் தவஸ்தன்யம்
பய: பாராவார: ஆஸ்வாதிய த்ரவிடசிசு ப்ரௌடானும்
கவீனும் அஜநி கமநீய: கவயதா"

(உலகீன்ற உமாதேவியே! தயவுடனளித்த அம்ருத ப்ரவாஹம் போன்ற உமது முலைப்பா லருந்தி, த்ரவிடசிசு — சம்பந்தர் பிரசித்தர்களான கவிகளுக்குள் மனோகரமான கவியாக ஆகிவிட்டார்) எனப் போற்றுகின்றனர்.

(4) சம்பந்தர் தாம் அருளிய பதிகம் ஒவ்வொன்றிலும் அப்பதிகத்தை ஓதினவர் அடையும் பயனை எடுத்துக் கூறி யுள்ளார் திருக்கடைக்காப்பில் — ஆதலினால் "சொற்படி செய்ய ஓதி" என்றார்.

(5) திருநீற்றின் பெருமையைப் 'போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு' என்றும் பிறவகையிலும் எடுத்து ஓதும் 'மந்திரமாவது நீறு' என்னும் திருப்பதிகத்தைக் காண்க. (சம்பந்தர் 2-66)

(6) சமணர் கழுவி லேற்றப்பட்டது — திருப்புகழ் 181, பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

## 30. நாம விசேடம்

**தெய்வ மணம்புணர் தீகால் வெளிசெய்த தேவரைந்த**
**தெய்வ மணம்புண ராரிக்கு மருக செச்சையந்தார்**
**தெய்வ மணம்புண ருங்குழ லாளைத் தினைப்புனத்தே**
**தெய்வ மணம்புணர் கந்தனென் னீருங்க டீதறவே.**

(ப-உ.) தெய்வ — தேவர்களையும், மண் — பூமியையும், அம்பு — சலத்தையும், உணர் — அறிவையும், தீ — நெருப்பையும், கால் — காற்றையும், வெளி — ஆகாசத்தையும், செய்த — படைத்த, தே — பிரமாவானவன, வரைந்தது — பொறித்த லிபியை, எய்வ — (குமாரக் கடவுளினது [1] நாமகீர்த்தனமானது) செயிக்கு மாதலால், மண் — மாசற்ற, அம் — அழகிய, புள் — கருடவாகனத்தை யுடைய, நராரிக்கு — நரசிங்க அவதாரமெடுத்த திருமாற்கு மருக — மருமகனே! செச்சை அம்தார் — அழகிய வெட்சி மாலையை யணிந்த, தெய்வ — கடவுளே! மணம் புணரும் — வாசனையை யணிந்த, குழலாளை — கூந்தலையுடைய (வள்ளி) நாயகியை, தினைப்புனத்தே — தினைப்புனத்திலே, தெய்வ மணம் புணர் — காந்தருவ மணமாகப் புணர்ந்த, கந்தன் — குமாரக்கடவுளே! என்னீர் — என்று தோத்திரம் பண்ணுங்கள், உங்கள் — உங்களுடைய, தீது — வினை, அற — ஒழியும்படி. (எ-று.) நீர் — தோன்றா எழுவாய். என்னீர் — பயனிலை. ஏ — அசை.

(க-உ.) 'திருமான் மருகோனே! வெட்சி மாலையை யணிந்தோனே! வள்ளிநாயகியைத் தினைப்புனத்தின் மணந்த கந்தசுவாமியே!' என்று துதித்தால் அது பஞ்சபூத முதலான வற்றைப் படைத்த பிரமாவின் விதியையு நீக்குமாதலால் உங்கள் தீவினையறும் பொருட்டு அப்படித் துதியுங்கள்.

(கு-உ.) "[1]முடியாப் பிறவிக் கடலிற் புகார் ......வேற் பெருமாள் ...... திருநாமம் புகல்பவரே"—கந். அலங்-33.

'மாமயிலோன்...கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே'—கந்தர் அலங்காரம்-40.

'கந்தன்' என்னும் நாம மந்திரத்தின் சிறப்பை "ஓம் நமோ கந்த" என்றுரையாதே ஊசலாடும் புலன்'?— திருப்புகழ் 1107, பக்கம் 232 கீழ்க்குறிப்பிற் பார்க்க.

## 31. 'அன்பு தா' என வேண்டிக் கொள்ளுங்கள்

**தீதா வசவ னுபவிக்க மண்ணிலும் விண்ணிலுஞ்செந்**
**தீதா வசவ னியாயஞ்செய் வேதிய ரேதியங்காத்**
**தீதா வசவ நிமலர்செல் வாசாக் கிரவசத்த**
**தீதா வசவன் புறப்பா ரெனுமுத்தி சித்திக்கவே.**

(ப-உ.) தீதா—பொல்லாங்காகிய, வசவு—இகழ்ச்சிச் சொல்லை, அனுபவிக்க-அனுபவித்தற்கிடமாய், மண்ணிலும்-பூலோகத்திலும், விண்ணிலும்—தேவலோகத்திலும், (புகழையும் போகத்தையும் பெற நினைத்து), செந்தீ—சிவந்த அக்கினி பகவான், தாவு-ஏறுகின்ற, அச—ஆட்டை, அனியாயம் செய்-சீவகாருணியம் இல்லாமல் வதைத்து யாகஞ் செய்கின்ற, வேதியர்ரே-மறையோரே! தியங்கா-இனியப்படித் திகைக்காத, தீ—நல்லறிவை, தா—தந்தருள்வாயென்றும், வசவ—இடப வாகனத்தையுடைய, நிமலர்—பரமசிவனது, செல்வா— மைந்தனே! சாக்கிர வசத்து—ஆன்மா சாக்கிர அவத்தையி லறிவோடிருக்கிற காலத்திலும், அதீதா—துரியாதீத அவத்தை யிற் கருவி கரணங்களொடுங்கி, வச-வசமாகுங் காலத்திலும், அன்புறப்பாரெனும்-உனக்கு எங்களிடத்தில் அன்புண்டாக்கிக் கடாக்ஷிக்க வேண்டும் என்றுந் துதியுங்கள், முத்தி-மோக்ஷ மானது, சித்திக்க—உங்களுக்குக் கிடைக்கும்படி. (எ-று.)

நீங்கள்—தோன்று எழுவாய். துதியுங்கள்—பயனிலை. ஏ—அசை.

(க–உ.) இம்மையிற் புகழையும், மறுமையிற் போகத்தையும் பெற நினைத்துப் பழிக்கஞ்சாமல் சீவனைக் கொன்று வேள்வி செய்கின்ற மறையோரே! முத்தி வேண்டுமானால் பரமசிவனது மைந்தனே! சாக்கிர அவத்தையிலும் துரியாதீதத்திலும் எங்களுக்கு நல்லறிவுண்டாக அன்பு வைத்தருளென்று துதியுங்கள்.

(கு–உ.) (1) யாகத்தில் மறையோர் அஜத்தை (ஆட்டை) வதஞ்செய்தலைக் கண்டிக்கின்றார் அருணகிரியார். "கருணைக் கருணகிரி" என்பது இதனாலும் பெறப்படும்.

(2) "அன்புறப் பார்" என முருகனை வேண்டித் துதியுங்கள் என உபதேசிக்கின்றார். "செம்மனக் கிழவோர் அன்பு தா என்றுன் சேவடிப் பார்த்திருந் தலச" — திருஇசைப்பா 14-9.

## 32. நல்லறிவு பெற: காமத்தை வெல்ல

சித்திக்கத் தத்துவ ருத்திர பாலக செச்சைகுறிஞ்
சித்திக்கத் தத்துவ ரத்தியின் மாவென்ற சேவகவிச்
சித்திக்கத் தத்துவர் வாய்மொழி மாதர்க் கெனுந்திணைவா
சித்திக்கத் தத்துவ ருத்தப் படாதுநற் சேதனமே.

(ப–உ.) சித்திக்க–அடியேனுக்குக் கிடைக்க அருள வேண்டும், தத்துவ-தத்துவ சொரூபியே! ருத்திர பாலக - சிவனது மைந்தனே! செச்சை-வெட்சிமாலை யணிந்த, குறிஞ்சித் திக்க–குறிஞ்சி நிலத் திசைக்கு இறைவனே! தத்து-அலைமோதுகின்ற, உவர்–உவர்ப்பையுடைய, அத்தியில்–சமுத்திரத்தின்கண், மா–மாவுருக்கொண்ட சூரனை, வென்ற–செயித்த, சேவக-வீரனே! இச்சித்து-விரும்பி, இக்கத்து - கரும்பும், அத் துவர் – அந்த சிவந்த பவளமும், வாய்-வாயும், மொழி-மொழியுமாகும், மாதர்க்கு - மடவார்க்கு, எனும் திணை - என்று நலம்புனைந் துரைக்குங் காமநூலை, வாசித்து-ஒழியாமற் படித்து, இக்கத் தத்து-இதற்கினமான வெகுளியினால், வருத்தப்படாது-துன்ப மடையாது, நற்சேதனம் - நல்ல ஞான அறிவு. (எ – று). நீ–தோன்றா எழுவாய்; சித்திக்க அருளவேண்டும்-பயனிலை. ஏ–அசை.

(க - உ.) தத்துவ சொரூபியே! சிவனது புத்திரனே! குறிஞ்சி நிலத்து இறைவனே! சமுத்திரத்தின்கண் சூரனை

வதைத்தவனே! மாதரது சொல்லைக் கரும்பென்றும், வாயைப் பவளமென்றும், நலம் பாராட்டும் காமநூலின் வாஞ்சையையும், வெகுளியையும் விட்டு உன்னை யறியும் நல்லறிவை எனக்குக் கிருபை செய்யவேண்டும்.

## 33. செந்தூரைக் கருதுக

சேதனந் தந்துறை யென்றுமை செப்புங் [1]குருந்துறைகாற்
சேதனந் தந்துறை யல்லிமன் வாவிச் செந்தூர்கருத
சேதனந் தந்துறை யென்றறி யார்திற நீங்கிநெஞ்சே
சேதனந் தந்துறை மற்றுமுற் றுடித் திரிகைவிட்டே.

(ப-உ.) சே-அழகிய, தனம் தந்து-திருமுலைப் பாலூட்டி, உறு-பெரும்பேறுயுற்ற, ஐ என்று-ஐயனென்று, உமை செப்பும்-பார்வதி யருமையாய் மொழியும், குருந்து – பாலகனாகிய குமாரக்கடவுள், உறை - அமர்ந்தருளிய, காற்சேது – சிவந்த காலையுடைய, அனம் – அன்னங்களும், தந்துறை – நூலோடு கூடிய, அல்லி–ஆம்பல்களும், மன்–அகலாதிருக்கின்ற, வாவி–தடாகங்கள் சூழ்ந்த, செந்தூர்–திருச்செந்திற்பதியை, கருது–நீ சிந்தைசெய், அசேதனம்–அறிவின்மையான, தம்–தங்கள் தங்கள், துறை என்று – சமயக்கோட்பாடென்று, அறியார் திறம் நீங்கி–தெளியாமலுழலும் பரசமயவாதிகள் கூட்டத்தை நீங்கி, நெஞ்சே - மனதே, சேது - சேது முதலிய, அனந்தம் துறை மற்றும்–மற்றநேக கடல் நதிகளையும், உற்றுடித் திரிகை விட்டு-போய்ப் போய்த் தானஞ்செய்தலைவதை விடுத்து. (எ - று). நீ-தோன்றா எழுவாய். கருது-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) நெஞ்சமே! பரசமயவாதிகளோடு இணங்காமல் சேது முதலிய தீர்த்தங்க ளாடக் கருதும் மனதைவிட்டுப் பார்வதி திருமுலைப் பாலுண்ட குமாரக்கடவுள் வாசஞ் செய்கின்ற திருச்செந்தூரையே நாடுக.

(கு - உ.) "[1]பாவை திருமுலைப்பால் அருந்தி — விம்மி யழுங் குருந்து"—கந். அலங் - 5. 'மரகதவல்லி கையால் மார்பில் அணைத்து அமுதந்தர வுண்டுமகிழ்ந்து'—திருவிரிஞ்சை பிள்ளைத் தமிழ்–தால–3.

"செந்திலென் றவிழவுளம்"—திருப்புகழ் 18.

"செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுற"—திருப்புகழ் 47.

"திருச்செந்திலை யுரைத்துய்ந்திட"—திருப்புகழ் 71.

## 34. உள்ளம் திருந்த

**திரிகையி லாயிர வெல்லாழி மண்விண் டருசிரபாத்**
**திரிகையி லாயிர வாநந்த நாடகி சேரிமகோத்**
**திரிகையி லாயிர மிக்குமைந் தாசெந்தி லாயொருகால்**
**திரிகையி லாயிரக் கோடிசுற் றேடுந் திருத்துளமே.**

(ப-உ.) திரிகையிலாய்—மாறுபடாத நித்தியனே! இரவு—இராத்திரியையும், எல்—பகலையும், ஆழி—கடலையும், மண்—பூமியையும், விண்—ஆகாசத்தையும், தரு மூவரின் முதல்வனுயிருந்து சிருஷ்டித்தவரும், சிர—பாத்திரி-பிரம கபாலத்தைப் பலிக் கலமாகக் கொண்டவரும், கையிலாயி—கைலாசத்தையுடையவரும், ரவு-ஆரவாரத்தையுடைய, ஆநந்த நாடகி—ஆநந்த நடனஞ்செய்கின்ற பரமசிவனுக்கும், சேர்—அவர்பாலிருக்கின்ற, இமகோத்திரி-இமய மலையின், கையில்-இடத்திலுற்பவித்து வளர்ந்த, ஆயி-பார்வதிக்கும், ரமிக்கும்-மகிழ்வை விளைக்கும், மைந்தா—புதல்வனே! செந்திலாய்-திருச்செந்திற் பதியோனே! ஒருகால்—ஒருதரம், திரிகையில்-குலாலன்[1] சக்கிரஞ்சுற்றி வருவதற்குள், ஆயிரக்கோடி சுற்றேடும்—ஆயிரங் கோடிதரஞ் சுற்றி வருவதாகிய, திருத்துளம்—(என்னுடைய) மனதைத் திருத்தியருளவேண்டும். (எ—று). நீ—தோன்று எழுவாய். திருத்து-பயனிலை. ஏ-அசை.

(க-உ). நித்தியமானவனே! சராசரங்களைப் படைத்தும் பிரம கபாலமேந்தியும், ஆநந்த நடனஞ்செய்து கயிலாசத்திலுறைகின்ற பரமசிவனுக்கும், இமயமலையின் குமாரியாகிய பார்வதிக்கு மைந்தனே! திருச்செந்திற் பதியோனே! என் உள்ளமானது குலாலன் சக்கிரம் ஒருதரம் சுற்றுவதற்குள் அநேக கோடிதரம் சுற்றி வருகின்றது; அதை அடக்கியருள வேண்டும்.

(கு-உ.) திரிகையிலான் முருகவேள் 'வரல் போக்கிலான்' —கந்த புராணம்-2-1-1.

'[1] குலாலன், திகிரி வருமொரு செலவினி லெழுபது செலவு வருமன பவுரிகொ டலமரு திருகன்'—திருப்புகழ் 1009.

மனம் அமைதிபெற, திருந்த, இச்செய்யுளைப் பாராயணஞ் செய்தல் நன்று.

## 35. விரகதாபம் - மாலைபெற வேண்டுவது

**திருத்துள வாரிகல் போதுடன் சேண்மழை தூங்குஞ்சங்க**
**திருத்துள வாரிதி கண்டுயி லாசெயன் மாண்டசிந்தை**
**திருத்துள வாரன்னை செந்தூரையன் னள்செம் மேனியென்பு**
**திருத்துள வார்சடை யீசர்மைந் தாவினிச் செச்சைநல்கே.**

(ப-உ.) திருத்துளவார்-திருத்துழாய் மாலையையணிந்த விஷ்ணுவினது, இகல்—கரிய நிறத்தைப் பகைக்கின்ற, போதுடன்-மாலைக்காலத்தோடு, சேண் - ஆகாசத்தினின்றும், மழை தூங்கும்-மழை பெய்கிறது; சங்கது-சங்கினங்களை, இருத்துள-உடையதாயிடமகன்ற, வாரிதி-சமுத்திரம், கண்டுயிலா-ஓயாமல் முழங்குகின்றது; செயல் மாண்ட சிந்தை-இந்த விரகதாபத்தினால் மெய்மறந்து கிடக்கின்ற என் மனதை திருத்து-ஆற்றுதற்கு, உள - உரியவர், ஆர் - யார்; அன்னை-தாயும், செந்தூரை அன்னள்-பகையாகிய செந்திற்பதியை யொத்திருக்கின்றாள்; செம் - சிவந்த, மேனி - திருமேனியில் என்பு-எலும்பையும், உதிருத்துள - உதிரத்தக்க திருநீற்றுப் பொடியையயுமுடைய, வார்-நீண்ட, சடை-சடாபாரத்தையு முடைய, ஈசர்-பரமசிவனது, மைந்தா-புதல்வனே! இனி-இனிமேல் சகிக்கப்படாதாதலால், செச்சை-உனது வெட்சி மாலையை, நல்கு-எனக்கு அளித்தருளவேண்டியது. (எ-று.) நீ-தோன்றா எழுவாய். நல்கு-பயனிலை. ஏ-அசை.

(க - உ.) திருமேனியில் நீறும் எலும்பும் அணிந்த நீண்ட சடாபாரத்தையுமுடைய பரமசிவனது மைந்தனே! கார்கால மும் மாலைப்போதும் ஒத்திருக்கின்றன; சமுத்திரமு முழங்கு கின்றது; என்னைத் தேற்றுபவர் யாவர்? அன்னையும் பகையா யிருக்கின்றனள்; ஆதலால் இனிச் சகிக்கமுடியாது; உனது வெட்சிமாலையைத் தந்தருளவேண்டும்.

(கு-உ.) இப் பாடலிற் குறித்த கார்காலமும் மாலைக் காலமும் முல்லைத் திணைக்கு உரியன: ''மல்குகார் மாலை முல்லைக்குரிய''—நம்பி அகப்பொருள் 15, முல்லை 'தலைவி கற்பொடும் இருத்தலைக்' குறிக்கும்.

தாய், கடல்-இவையால் உற்ற வேதனையை 'எழு கடலின் முரசினிசை ... அ(ன்)னையார் கொடுவசை' (திருப்புகழ் 145), 'மாதாவின் வார்மைப் பகையாலே ... வாடத் தகுமோதான்' (திருப்புகழ் 1032)-என வருமிடத்துக் காண்க,

தலைவனது ஊராகிய செந்தூர் தனக்கு உடனே கிடைக்கப் பெறுமையின் — செந்தூர் பகைத்து நிற்கின்ற நிலையில் உள்ளது என்றும், தன் விரகதாபத்தைத் தாய் அறிந்து உதவாத காரணத்தால் தாயும் செந்தூரை ஒத்துப் பகைமை நிலையில் உள்ளாள் – என்றும் கூறியதாம். 'இனிச் செச்சை நல்கே'—என்றது – தலைவ! நீ நேரே உடனே வராவிடினும் உனது மாலையையாவது முந்தி தந்தருள் என்றபடி.

"சத்தப் படுமைங் கடலாலே – தட்டுப்படுமப் பிறையாலே
சித்ரக் கொடியுற் றழியாதே – செச்சைத் தொடையைத்
தரவேணும்" — திருப்புகழ் 476.

## 36. திருவடியை அணுக அருள்

செச்சைய வாவி கலயில்வல் வாயிடைச் சேடனிற்கச்
செச்சைய வாவி பருகுஞ் சிகாவல செங்கைவெந்தீ
செச்சைய வாவி விடுகெனுஞ் செல்வநின் றாளணுகச்
செச்சைய வாவி னுயிர்வாழ் வினியலஞ் சீர்ப்பினுமே.

(ப–உ.) செச்சைய – வெட்சிமாலையை யுடையோனே! வாவு-தாவுதலையும், இகல்-பகைமையையும், அயில்-கூர்மையையும் பொருந்திய, வல்–வலிய, வாயிடை—வாயினிடத்தில், சேடன்–பாம்பு, நிற்க–இருக்க, செ–சிவந்த, சைய-மலையின்கண், ஆவி–அதனுயிரை, பருகும்-உண்ணுகின்ற, சிகாவல-மயில்வாகனனே செம்-சிவந்த, கை-கரத்தினிலந்தி, வெம்-வெவ்விய: தீ-அனற் பொறியை, செச்சைய–ஆட்டு வாகனத்தையுடைய அக்கினி தேவனே! வாவி – சரவணப் பொய்கையில், விடுக எனும்– (பரமசிவன்) கொண்டுபோய் விடுகென அதில் உற்பவித்த, செல்வ–பாலகனே! நின் தாள் – உன்னுடைய் திருவடிகளை அணுகச் செ–நாங்களடையக் கிருபை செய்: சை–இகழ்தற் கிடமான, அவாவின்—ஐம்புல ஆசையால், உயிர் வாழ்வு – உயிரோடு வாழ்வதை, இனி அலம்–இனியுடையேமல்லேம், சீர்ப்பினும்– செல்வம் அதிகரிககினும், (எ – று). நீ – தோன்று எழுவாய், அணுகச்செ–பயனிலை. ஏ – அசை.

(க–உ.) வெட்சிமாலை யுடையவனே! பாம்பினுயிரை யுண்ணு மயில்வாகனனே! பரமசிவனிடத்தில் அனற்பொறியாய்த் தோன்றி அக்கினி தேவனாற் சரவணப்பொய்கையில் விடப்பட்டதில் வளர்ந்த பாலகனே! இனி நாங்கள் மிகுந்த செல்வம் அடையினும், அவ்வாசையில் அழுந்தி உடலையோம்போம்; நின் திருவடியிற் சேர்த்துக்கொள்.

(கு-உ.) (1) மயிலின் வாயில் பாம்பு:—'செங்கண்வரி போகி (பாம்பு) கொண்டபடம் வீசு மணிகூர்வாய் கொண்டமயில்' திருப்புகழ் 62. பாம்பு உணவு, 'காகோதாசன...தோகை' திருப்புகழ் 1000.

(2) தீப் பொறிகளை அக்னி சரவணத்திற் சேர்த்தது:— "தீக் கடவுள் சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்ப"—கந்தர் கலிவெண்பா. "அக்நிகர மீதிற் ப்ரபாகரனும்"—வேடிச்சி வகுப்பு.

## 37. முருகன் திருவடியையே மனத்திற் பற்றுக

**சீர்க்கை வனப்பு மலர்வேங்கை யானவன் செஞ்சிலையோர்**
**சீர்க்கை வனப்பு னிதத்தவ வேடன் றினைவளைக்குஞ்**
**சீர்க்கை வனப்பு னமதுருக் காட்டிய சேய்தமிழ்நூற்**
**சீர்க்கை வனப்பு னிமிர்சடை யோன்மகன் சிற்றடிக்கே.**

(ப-உ.) சீர்க்கை-மனந் திருந்துதல், வனப்பு—அழகாகும், மலர்—புஷ்பங்களையுடைய, வேங்கையானவன்—வேங்கை மரமாய் நின்றவனும், செஞ்சிலையோர்—அழகிய வில்லையுடைய குறவர்கள், சீர்—சந்தேகப்பட்ட தன்மையை, கை—கேர்பித்து, வன—வனத்தில், புனித—பரிசுத்தமான, தவவேடன்-தவ வேடங்கொண்டவனும், தினை வளைக்கும்—தினைப்புனத்தைக் காக்கின்ற, சீர்க்கு—சிறந்த வள்ளிநாயகிக்கு: ஐவனப் புனமது—மலைநெல் விளைகின்ற புனத்தின்கண், உருக்காட்டிய சேய—தன் நிசருபத்தைக் காட்டிய குமரனும், தமிழ்நூற் சீர்க்கு—இயற்றமிழ் நூலுக்குரிய முப்பது சீருக்கும், ஐ-புலவனுகிய தேவனும், வன-கங்கையையும், புல்-அறுகையும் அணிந்த, நிமிர்—நீண்ட, சடையோன்—சடாபாரத்தையுடைய பரமசிவனது, மகன்—மைந்தனுமாகிய முருகக்கடவுளினது, சிற்றடிக்கு—சிறிய திருவடித் தாமரைகளை யடைதற்கே. (எ-று.)

சீர்க்கை—எழுவாய், வனப்பு—பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வேங்கைமரமாய் நின்றவனும், தினைப்புனத்தில் சத்தேகித்த சந்தேகத்தைக் குறவர் விடும்படி தவவேடங் கொண்டவனும், வள்ளிநாயகிக்குத் தன் நிசருபத்தைக் காண்பித்தவனும், இயற்றமிழ்ப் புலமையையுடையவனும், பரமசிவனது மைந்தனுமாகிய குமாரக்கடவுளின் திருவடியை யடைதலே அழகாகும்,

(கு–உ.) (1) வேடுவர்கள் ஐயுறுவர் என்பதற்கு—

"வெந்திறல்கொள் வேடுவர்கள் வெய்யர் இவணில்லா
துய்ந்திட நினைந்து கடி தேோடும் இனி என்றான்"

"கைதொழுது நிற்றல் கடனன்று கானவரிச்
செய்கைதனை அறியின் தீதாய் முடிந்திடுமே"

எனவரும் பாடல்களையும், முருகவேள் தனது நிஜரூபத்தைக் வள்ளிக்குக் காட்டினர் என்பதற்கு—

"கன்னி தனையோர் கடிகா வினிற் கலந்து
துன்னு கருணைசெய்து தொல்லுருவங் காட்டினனே;

முந்நான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டும்
கொன்னூர்வை வேலும் குலிசமுமே னைப்படையும்
பொன்னூர் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்னுள்கண் காண வெளிநின் றனன் விறலோன்"

எனவரும் பாடல்களையும் காண்க. (கந்த புராணம்-6-24-93, 107, 115, 116.]

(2) முருகன் இயற்றமிழ் நூலுக்கு உரிய முப்பது சீருக்கும் தலைவன்; முப்பது சீராவன:—

ஓர் அசைச்சீர் (நாள், மலர்) 2.

ஆசிரிய உரிச்சீர்—தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்-4;

வெண்பா உரிச்சீர் — தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய்-4.

வஞ்சிக்கு உரிச்சீர் — தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி-4;

பொதுச்சீர் — தேமாந்தண்பூ, புளிமாந்தண்பூ, கருவிளந் தண்பூ, கூவிளந்தண்பூ; தேமாநறும்பூ, புளிமாநறும்பூ, கருவிளநறும்பூ, கூவிளநறும்பூ; தேமாந்தண்ணிழல், புளிமாந்தண்ணிழல், கருவிளந்தண்ணிழல், கூவிளந்தண்ணிழல்; தேமாநறுநிழல், புளிமாநறுநிழல், கருவிளநறுநிழல், கூவிள நறுநிழல்; ஆக 2–4–4–4–16—சீர் 30.

## 38. முருகனது நீலோற்பல மாலை வருத்துவது

சிற்றம் பலத்தை யரன்புநெய் நூற்றிரி சிந்தைபிடுஞ்
சிற்றம் பலத்தை வரஞான தீபமிட் டார்க்குப்பரி
சிற்றம் பலத்தை யருளுஞ்செந் தூரர் பகைக்குலமாஞ்
சிற்றம் பலத்தைப் பதவரந் தோளிலிந் தீவரமே.

(ப-உ.) சிற்றம்பலத்து-ஞான வெளியாகிய, ஐயர்-சுவாமியும், அன்பு-பக்தியென்னும், நெய்-நெய்யை வார்த்து, நூல்-ஆகம நூலென்னும், திரி-திரியை, சிந்தை-இருதயமாகிய, இடும்-தீபமேற்றுகின்ற, சில்-தகழியிலிட்டு, தம்ப-ஆன்மாவுக்குப் பற்றுக்கோடாகிய, லத்தை-வர கிருபையுண்டாகும் பொருட்டு, ஞானதீபம்-மெய்ஞ்ஞான தீபத்தை, இட்டார்க்கு—ஏற்றின அடியார்களுக்கு, பரிசில்—ஈவாக, தம்பலத்தை-தமது சாயுச்சியமென்னும் பலனை, அருளும்-கிருபை செய்கின்ற, செந்தூரர்-திருச்செந்திநயகருமாகிய கந்தசுவாமியினது, பகைக் குலமாம்-சத்துருக்களாகிய அசுரக் குலத்தை வேரறுத்த, சிற்று-சிறிய, அம்பல-பாணமல்ல, தைப்பது-என்னிருதயத்தில் தைத்து வருத்துவது, அவர்-அக்கடவுளது, அம்—அழகிய, தோளில்—புயத்திலணிந்த, இந்தீவரம்—நீலோற்பலமாகிய பாணமே. (எ-று.)—இந்தீவரம்-எழுவாய், தைப்பது-பயனிலை. ஏ-அசை,

(க-உ.) இருதயத்தைத்தகழியாக்கி, அன்பாகிய நெய்யை வார்த்து, ஆகமமாகிய திரியையிட்டு, ஞானத்தை விளக்காயேற்றின அடியார்களுக்குச் சிதாகாசமான சாயுச்சிய பதவியை யருளுகின்ற திருச்செந்திநயகர் சத்துருசங்காரஞ் செய்த பாணமிருக்க, அவர் புயத்தி லணிந்த நீலோற்பல மாலையே மன்மதன் பாணத்தி லொன்ருக என் ஆகத்தில் தைக்கின்றது.

(கு-உ.) (1) "சிற்றம்பலத் தெங்கள் ஐயனை"—அப்பர் 5-2-7.

(2) ஞான விளக்கு—செய்யுள் 99-ம் பார்க்க. "மனக் கோயி லுள்ளிருத்தி யுறவாதி தனையுணரு மொளி விளக்குச் சுடரேற்றி"—பெரிய புராணம். வாயிலார் நாயனர்-8.

"உடம்பெனு மனைய கத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் யட்டி உயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள விருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே"
—அப்பர்-4-75 4.

இதன் ஈற்றடி கடம்பமர் காளை கழலடி, (அவர்) தாதை கழலடி (இரண்டும்)-காணலாம்-எனவும் பிரிந்து பொருள் தருகின்றது ஒரு மகிழ்ச்சிக்கு இடமாம். ஞானவிளக்கு ஏற்றுவர் பெரியோர் என்பதற்கு—

" அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான் "

எனவரும் பூதத் தாழ்வார் பாடலையும் பார்க்க.

## 39. நின்பதமே துணை

தீவர கந்தரி தாம்பகி ராருற வானசெம்பொன்
றீவர கந்தரி யாநொந்த போதினிற் செச்சையவிந்
தீவர கந்தரி சிந்துரை பாக சிவகரண
தீவர கந்த ரிபுதீ ருனதடி சேமநட்பே.

(ப-உ.) தீ-தீய்ந்துபோன, வரகு-வரகென்னுந்தானியத்தில், அந்து-வண்டுகளால், அரி அரிக்கப்பட்ட பதரையும், தாம் பகிரார் - தாம் பங்கிட்டுக் கொடார்கள், உறவான - உறவினராய், செம்பொன் தீவர்-சிவந்த பொன் விளையுந் தீவிலிருப்பவரும், அகம்தரியா-பாவத்தைத் தரித்து மனம் பொறுக்கக்கூடாமல், நொந்த போதினில்-வருந்துங் காலத்தில், செச்சைய-வெட்சிமாலையை யுடையோனே! இந்தீவர - செங்கழுநீர்மாலையை யுடையோனே! கந்தரி - மலைக்குகையிலிருந்த வள்ளிநாயகியையும், சிந்துரை - அயிராவதத்தினிடம் வளர்ந்த தெய்வயானை நாயகியையும், பாக - இரு பக்கத்திலுமுடையவனே! சிவகரண-சிவகரணம் புரிகின்ற, தீ-புத்தியை, வர-வரமாகக் கொடுக்கின்ற, கந்த-குமாரக் கடவுளே! ரிபு-சத்துருக்களை, தீர்-சம்மாரஞ் செய்யத்தக்க, உனது அடி-உனது திருவடித் தாமரையே, சேம நட்பு-பொக்கிஷமும் உயிர்த் துணையுமாம். (எ-று). அடி-எழுவாய், சேமநட்பு-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வெட்சிமாலையையும் செங்கழுநீர் மாலையையும் அணிகின்றவனே! வள்ளி தெய்வயானை பாகனே! சிவகரண அறிவினர்களுக்கு அநுக்கிரகஞ் செய்கின்றவனே! எனக்கு உறவென்பவர்கள் பொன் விளையுந் தீவில் இருப்பவராயினும், வறுமையால் வருந்துங் காலத்தில் அந்து-அரித்துத் தீய்ந்த வரகையாவது உதவவல்லரோ? ஆதலின் உனது திருவடியே பொக்கிஷமும் உறவுமாம்.

(கு-உ.) ஈதலின் விசேடத்தை "நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள்"—[கந். அலங். 18] என்ற இடத்துங் காண்க.

(1) 'கந்தரி சிந்துரை பாக—"பகர்தரு குறமகள் தருவமை வனிதையும் இருபுடை யுறவரு பெருமாளே" திருப்புகழ் 270.

(2) உனதடிசேம நட்பு:—

"உற்ருர் இலாதார்க் குறுதுணை யாவன *** அற்ருர்க்
கரும்பொருள் காண்க ஐயாறன் அடித்தலமே"

"பற்றற்ருர் பற்றும் பவள அடி, மணி அடி, பொன்னடி,
மாண்பாம் அடி, மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்ல அடி"

—அப்பர் 4-92-13 ; 6-6-9.

## 40. காம மிக்க கழிபடர் கிளவி

சேமர விக்கம் படையாக விசுப தேசமுன்னூற்
சேமர விக்கம் பலந்தரு வாய்செரு வாயவெஞ்சூர்ச்
சேமர விக்கந் திரித்தாய் வருத்திய வன்றிறென்றல்
சேமர விக்கம் புயவாளி விண்டிரை தெண்டிரையே.

(ப-உ.) சேம—சிவந்த, ரவிக்கு—சூரியனுக்கு, அம்—சலத்தை, படையாக-அசுரரது தடையை விலக்கும் ஆயுதமாக, வீசு-இறைக்கின்ற, உபதேசம்-உபதேசத்தையும், முன்னூல்-முப்புரி நூலையும், சேமர்-காப்போராகிய வேதியர் செலுத்தும், அவிக்கு-அவிர்ப் பாகத்திற்கு, அம்-அழகிய, பலம்-நற்பயனை, தருவாய்-அளிப்போனே! செருவாய-போரினையுடைய, வெஞ்சூர்-கொடிய சூரனுகிய, சே-வயிரம் பொருந்திய, மா-மாமரத்தினுல், விக்கம்-தேவர்கட்குண்டான விக்கினத்தை, திரித்தாய்-ஒழித்தவனே! வருத்திய-என்னைத் துன்பப்படுத்துகின்ற, அன்றில்-காமசின்னமாகிய அன்றிற் பட்சியும், தென்றல்-அவனது தேராகிய தென்றலும், சே-கழுத்தின் மணியொலியைச் செய்தலினுல் இடபமும், மரவிக்கு-கருப்பு வில்லும், அம்புய வாளி-தாமரைப் பூவாகிய அம்பும், விண்டு—ஆர்ப்பரித்து, இரை—முழங்குகின்ற, தெண்டிரை-தெளிந்த திரையையுடைய கடலும் (ஆகிய இவ்வாறும்). (எ-று). அன்றில் முதலிய ஆறும் எழுவாய்; வருத்திய-பயனிலை. ஏ-அசை,

(க-உ.) ஆதித்தனுக்கு அம்பாகச் சந்தியாவந்தனஞ் செய்யு முந்நூலாளராகிய மறையவரது வேள்விக்குத் தக்க பலனளிப்போனே! மாமரமாய் நின்ற சூரனை வென்றவனே! இடபமணியோடு காமனது சின்னங்களாகிய அன்றிலும், தென்றலும், கரும்பும், தாமரைப்பூவும், கடலும் என்னை வருத்துகின்றன.

(கு-உ.) அந்தணர் — அசுரரது தடையை விலக்கச் — சூரியனுக்கு ஜலத்தை இறைத்தல் —

"கருதி அந்தணர் யாவருந் தங்கடன் கழிப்பச்
சுருதி யென்னும்வெஞ் சாபமே லம்புகை தொடுத்துப்
பருதி தன்பெரும் பகைவர்மேல் விடுத்தலிற் பரந்த
குருதியாமென நிவந்தெழச் சிவந்தது குடபால்"

(அம்பு = ஜலம்) வில்லி = பாரதம் - கிருஷ்ண 86.

"அருக்கனை மேல் தானவர் சூழ்ந்திடு மாறெனைப் போர்செய"
— கோடிச்சுரக்கோவை 373.

இவ்வசுரர் மந்தேகர் எனப்படுவர். சூரியன் உதிக்கும் போதும் அத்தமிக்கும்போதும் அக் கடவுளைத் தினந்தோறும் தடுத்து எதிர்த்து இறந்திறந்து பிறக்கும் ஒருசார் இராக்கதர் மந்தேகர்.

"நெடும்படைகளால் உடன்ற மந்தேகர்"
—வில்லி பாரதம்-கிருஷ்ண 87.

"கதிரவன் ...... குடபால் வெற்பில் எதிருறும்
அரக்கர் என்றும் இகலுமா வேட்டையாடி."
—திருவிடைமருதூர் புராணம் வரகுண-13

தக்கயாகப் பரணி 124ன் விசேடக் குறிப்பும் பார்க்க.

காமமிக்கு விரகதாபம் கொண்டவரை அன்றில், தென்றல், விடையின் மணிஒலி, மன்மதன்வில், பாணம், கடல் வருத்துவது:-அந்தாதி பாடல் 9ம் பார்க்க. திருப்புகழ் 218 பக்கம் 53, 54 கீழ்க்குறிப்பும் பார்க்க.

## 41. நரகில் விழா வண்ணம் காத்தருள்

**தெண்டன் புரந்தர வக்குன்றில் வாழ்கந்த சிந்துவிலுத்
தெண்டன் புரந்தர லோகஞ் செருதுசெற் றேய்கனைவாய்
தெண்டன் புரந்தர நற்கேள் சிறுவ ரமச்செய்தெம்மைத்
தெண்டன் புரந்தர வின்படி நூக்கிய தீநரகே.**

(ப-உ.) தெண்டன் – வணங்குகிறேன், புரந்து – குறை வறக் காப்பாற்றி, அரவக் குன்றில்–திருச்செங்கோட்டு மலை யில், வாழ்–வாழாநின்ற, கந்த–குமாரக்கடவுளே : சிந்துவில்– சமுத்திரத்தின் கண், உத்தெண்டன்-வலிமையுடைய சூரனை, புரந்தர லோகம்-இந்திரலோகத்தை, செருது–அழிக்காதபடி, செற்றோய்-வதைத்தவனே ! களைவாய்-ஒழித்தருளவேண்டும், தெண்டன் - தெண்டாயுதத்தையுடைய காலன், புரந்தர்– தொன்றுதொட்டு வருகின்ற, அம்–அழகிய, நற் கேள்–நற் சுற்றத்தாரும், சிறுவர் - பிள்ளைகளும், அழச்செய்து - சூழ்ந்து முறையிடும்படி, எம்மை – எம் உயிரைப் பிரித்து, தெள்– தெளிந்த, தன் புரம்–தனது லோகத்திற் கொண்டுபோய், தரவின்படி - தனது கட்டளையின்படி, நூக்கிய தீ நரகு– தள்ளுதற்கிடமாகிய கொடிய நரகாக்கினியை. (எ–று.). நீ–தோன்ரு எழுவாய். களைவாய்-பயனிலை, ஏ-அசை.

(க–உ.) திருச்செங்கோட்டுமலைக் கந்தனே! தேவலோகம் அழிந்து போகாதபடி சூரனை வென்ருேனே! உன்னை வணங்கு கிறேன் ; இயமன் வந்து என் சுற்றத்தாரும் பிள்ளைகளும் சூழ்ந்து அழும்படி யென்னைத் தன்னுடைய லோகத்திற் கொண்டுபோய் நரகாக்கினை செய்யாமற் காத்தருள வேண்டும்.

(கு - உ.) அரவக் குன்று — பாடல் 23–ன் குறிப்பைப் பார்க்க. கேள் - சிறுவர் அழுதல் – " கூகா என என் கிளை கூடியழப் போகா வகை மெய்ப்பொருள் பேசியவா "—கந். அநுபூதி 11. நரகெனும் அச்சம், யமபயம்– இவை மெய்ப் பொருள் உபதேசம் பெற்று அநுபூதி நிலை அடைந்ததும் ஒழிந்தன — தெண்டன் ; புரந்து ...... தீ நரகே, களைவாய் — எனக் கூட்டுக.

## 42. கூனை நயந் துரைத்தல்

தீனந் தினத்து தரச்செல்வர் பாற்சென் றெனக்கென்பதோர்
தீனந் தினத்து முதரா னலஞ்சுடச் சேர்ந்துசுடுந்
தீனந் தினத்து நிகளைசெங் கோட்டினன் செந்திலந்நீர்
தீனந் தினத்து தவத்துப் பிரசதஞ் செய்யவற்றே.

(ப-உ.) தீ-புத்தி, நந்து - கெட்ட, இனத்து - கூட்டத்தா ருக்குள், உதர-உதாரத்துவம்பேசும்,செல்வர்பால்-அயிசுவரிய வான்களிடம், சென்று-போய், எனக்கென்பது - எனக்கு உதவி

செய்க என்று இரக்கும்படி செய்கின்றதாகிய, ஓர் - ஒப்பற்ற, தீனம் — வறுமை நோயானது, தினத்தும் — நாடோறும், உதரானலம் – வயிற்றுப் பசியாக்கினி சுட - தகிக்கும்போது, சேர்ந்து (அதனுடன் சேர்ந்து, சுடும்-தகிக்கின்றது, தீ–இக் கொடிதான, நம்-நமது, தினத்துனி-நித்தியத் துன்பத்தை, களே — நீக்குகின்ற, செங்கோட்டினன் — திருச்செங்கோட்டு முருகக் கடவுளது, செந்தில் - திருச்செந்திற்பதியின், அம் – அழகிய, நீர்–சலமானது, தீன் – இனிய, நந்தின் - சங்கினிறம் போல, அத்து–சிவப்பை, உதவ-கொடுக்கின்ற, துப்பு–பவளம் போன்ற அதரத்தில், இரசதம்–வெண்மைநிறத்தை, செய்ய வற்றே-செய்யவல்லதோ. (எ-று.) நீர்–எழுவாய், செய்ய வற்றே-பயனிலே, ஏ–அசை.

(க–உ.) திருச்செங்கோட்டு முருகக் கடவுளது திருச் செந்திற்பதியின் தீர்த்தம் நாம் நாடோறும் இரத்தலால் உண்டாகுந் துன்பத்தை யொழிக்க வல்லதாயினும் பவளம் போலும் சிவந்த இதழைச் சங்குபோலும் வெண்மையாக்க வல்லதோ?

(கு - உ.) (1) இப் பாடல் "சுனே நயந்துரைத்தல்" என்னும் துறை. தனது களவொழுக்கத்தை மறைக்கத் தலைவி சுனேயாடி வந்தேன் என, "சுனேயாடி வந்தால் நிறம் இப்படித்தான் மாறுமோ, இதழ் ஏன் வெளுத்து உளது; அப்படி மாற்றும் சுனே எது - நானும் அந்தச் சுனேயில் ஆடுவேன்" என்று தோழி கூறுவது:

"கடைக்கண் சிவந்து இதழொன்றே வெளுப்ப ...... மலர்க்
குழலாய்! சுனே யாதினுள் தோய்ந்ததனேயே"

—வெங்கைக் கோவை 68.

"மையார் குவளே சிவந்திடச் செய்ய மணிப்பவளம்
மொய்யார் தரளம தாக எமக்கு மூதிர்விக்குமோ
...... நீ குடைந்தாடும் வியன் சுனேயே"

—சிராமலேக்கோவை–72.

(2) திருச்செந்தூர்த் தீர்த்தங்கள் இருபத்து நான்கின் பெருமையைச் செந்தூர்த் தலபுராணம் விரித்தும் கூறும்: உதாரணமாக, ஒரு தீர்த்தத்தின் பெருமையைக் காண்க:—

"அல்லல் யாவையும் அகற்றி, நீக்கரும்
தொல்லே யூழறத் தொலேத்து, வேதநூற்
கல்வி காட்டிச் செங் கமலத் தாளருட்
செல்வங் காட்டுஞ்சத் தியத்தின் தீர்த்தமே"

—செயந்திபுரவைபவம் 63.

"செல்வற்பாற் சென்று எனக்கென்ப தோர் தீனம்"—
"செல்வர் சென்று ஈ எனக்கென்னும் இம்மாற்றம்......
மானம் துடைப்பதோர் வாள் — நளவெண்பா-கலிதொடர் 71.

(3) 'சுனை நயந்துரைத்தல்' — என்னும் துறைக்கு
"மைவிழி சிவப்பவும் வாய் வெளுப்பவும்
காட்டும் தண்சுனை எவ்விடை இருந்துள
தியம்புவாய்"
—எனவரும் கந்தபுராணச் செய்யுளையும் காண்க - 5-24-124.

## 43. திருவடியைக் கூட

**செய்யசெந் தாமரை யில்லாத மாதுடன் செந்தினைசூழ்**
**செய்யசெந் தாமரை மானூர் சிலம்பிற் கலந்துறையுஞ்**
**செய்யசெந் தாமரை யென்னுங் குமார சிறுசதங்கைச்**
**செய்யசெந் தாமரை சேர்வதென் றேவினை சேய்தொலைத்தே.**

(ப-உ.) செய்ய - தினைவிளை நிலத்தையுடைய, செம் - ஒழுங்கான, தாமரை — சிறுகுடியென்னு நகரத்தாருக்கு, இல்லாது-தெரியாமல், அ மாதுடன் - அப்புனங்காத்திருந்த வள்ளியம்மையை, செந்தினை சூழ் செய்-செந்தினைக்கொல்லைப் பயிரைச் சூழ்ந்துகொண்டிருந்த, அசெம்-காட்டாடும், தா-தாவுகின்ற, மரை - கடம்பையும், மான் - மானும், ஆர் - நிறைந்த, சிலம்பில்-மலையின்கண்ணே, கலந்துறையுஞ்செய்ய-காந்தருவமணம் புணர்ந்துறையுங் குமாரக்கடவுளே! செம்-அழகிய, தாமர்-கொன்றைமாலையையுடைய பரமசிவன், ஐ என்னும் குமார — ஐயனேயென்று சொல்லப்பட்ட குமாரக் கடவுளே! சிறு-சிறிய, சதங்கை - சதங்கையணிந்த, செய்ய - அழகிய, செந்தாமரை-உனது சிவந்த திருவடித் தாமரையைச் சேர்வது என்று-யானடையுங்காலம் எவ்வறைக்கு, வினை - இரு வினைகளையும், சேய்-தூரத்தில், தொலைத்து — ஒழித்துவிட்டே. (எ — று.). சேர்வது-எழுவாய், என்று-பயனிலை, ஒ-ஏ-அசை.

(க - உ.) மலையிற் குடியிருக்குங் குறவர் அறியாமல் தினைப்புனத்தில் வள்ளியம்மையை மணம் புணர்ந்தவனே! கொன்றை மாலையையுடைய பரமசிவனால் ஐயனே யென்று துதிக்கப்பட்ட குமாரக் கடவுளே! இருவினைப் பரப்பைக் கடந்து உன் திருவடியை யானடையுங் காலமென்றைக்கு?

(கு–உ.) (1) வள்ளியைக் களவிற் புணர்ந்தது :—"கனைழ செய் தோட்குற மயிலே வேட்டுயர் களவினுற் புணர் கந்த வேளே"—திருப்புகழ் 1060.

(2) முருகன் திருவடியைக் கூடுதற்கு விரும்புதல்— 'உய்யும் வகையறியேன் மலர்த்தாள் தருவாய்'—'தண்டையம் புண்டரிகம் தருவாய்'—கந்தரலங்காரம் 41, 92. 'இருதாள் வனசம் தர என் றிசைவாய்,' 'கதிகாண மலர்க்கழல் என்றருள்வாய்'—கந்தரநுபூதி-21, 35.

## 44. முத்திக்கு வழியை உபதேசித்தருளுக

சேதாம் பலதுறை வேறும் பணிகங்கை செல்வ நந்தன்
சேதாம் பலதுறை யாதசிற் றுயன் றிருமருக
சேதாம் பலதுறை செவ்வாய்க் குறத்தி திறத்தமுத்திச்
சேதாம் பலதுறை யீதென் றெனக்குப தேசநல்கே.

(ப-உ.) சேதாம்-சேது என்னுந் தீர்த்த முதலாகிய, பல துறை வேறும்–மற்றைப் பல தீர்த்தங்களும், பணி-வழிபடத்தக்க, கங்கை-பகீரதியின், செல்வ-மைந்தனே! நந்தன் சே-நந்தகோபன் பாலகனுகிய, தாம்பலது–நவநீதக் கள்வராய்க் கட்டுண்ட சுயிற்றுலன்றி, உறையாத-மற்றொன் றுலுங் கட்டுண்ணப்படாத, சிற்றுயன்-சிற்றிடையனுன கிருஷ்ணமூர்த்தியினது, திரு மருக–சிறந்த மருகோனே! சேதாம்பலது–சிவந்த ஆம்பற்பூ நிறம்போலும், உறை–உற்ற, செவ் வாய்–சிவந்த வாயையுடைய, குறத்தி திறத்த–வள்ளிநாயகி மணுளனே! முத்திச் சே-எனக்கும் முத்திக்கும் இருக்கிறதூரத்தை, தாம்-கடப்பதாகிய, பலதுறை ஈதென்று-நற்பலனைத் தரும் வழியிதுவென்று, எனக்கு–அடியேனுக்கு, உபதேச நல்கு–உபதேசம் அருளவேண்டும். (எ–று.) நீ-தோன்றுஎழுவாய். நல்கு–பயனிலே. ஏ–அசை.

(க–உ.) கங்காதேவியின் மைந்தனே! திருமான் மருகோனே! வள்ளிநாயகனே! எவற்றினுந் தூரமாயிருக்கின்ற மோக்ஷத்தைச் சேரும் நல்வழி யிஃதென்று அடியேற்கு உபதேசித்தருள வேண்டும்.

(கு-உ.) கங்கையைப் பிற தீர்த்தங்கள் வணங்குவது—பாடல் 20 பார்க்க. கண்ணன் கயிற்றுற் கட்டுண்டது—திருப்புகழ் 1172–பக்கம் 420 குறிப்பு. ஆம்பலது உறை செவ்வாய்—'வாயாம்பல் வாசம்'—திருப்புகழ் 1257.

## 45. தலைவியின் துயரை நாயகன் அறிந்திலன்

தேசம் புகல வயிலே யெனச்சிறை புக்கொருகந்
தேசம் புகல வணவாரி செற்றவ னீசற்குப
தேசம் புகல திகவாச கன்சிறி தோர்கிலன்மாந்
தேசம் புகல கமுதவி மானைச் செருச் செய்வதே.

(ப-உ.) தேசம்–எனக்குறைவிடமும், புகல–அடைக்கல ஸ்தானமும், அயிலே என–வேலாயுதமேயென்று சொல்லும்படி செய்து, சிறை புக்கு–சிறையிற்பட்டு, ஒரு கம்–ஐந்து தலையி லொனறை, தேசம்பு-இழந்த பிரம்மா, கல – மரக்கலங்களை யுடையதும், வண–அழகையுடையதுமான, வாரி செற்றவன் – வருணன் ஏவிய கடலை உக்கிரபாண்டியனாகி வற்றச் செய்தோ னாகிய, ஈசற்கு–பரமசிவனுக்கு, உபதேசம் புகல் – உபதேசஞ் செய்த, அதிக – மிகுதியான, வாசகன் – மொழியையுடைய குமாரக்கடவுளானவன், சிறிது–சற்றும், ஓர்கிலன்–அறிந்தா னில்லை; மா–மாம்பூவாகிய, தேசு–ஒளி தங்கிய, அம்பு–பாண மானது, கலகம் உதவி – கலகஞ்செய்து, மானை – மானினது விழியையுடைய இம்மங்கையுடன், செருச் செய்வது–போர் செய்கின்றதை (எ-று.) அதிக வாசகன்–எழுவாய். ஓர்கிலன்– பயனிலை. ஏ–அசை.

(சு-உ.) ஒருதலையிழந்த பிரம்மா சிறைபட்டு வேலாயுதமே உனக்கு அடைக்கலம் என்று சொல்லச் செய்தவரும், சமுத்திரத்தை வற்றச் செய்த பரமசிவனுக்கு உபதேசித்தவரு மாகிய முருகக்கடவுள் மன்மதனது மாம்பூ வாளி யிம்மங்கை மேல் தைத்துப் போர் செய்வதைச் சற்றும் அறிந்தாரில்லை.

(கு-உ.) (1) தலைவி படுந்துயரை அறிந்திலனே தலைவன் எனத் தோழி இரங்கல் :

> " குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை படுமிடர் குறிக்கொளா தழகோ "—திருவிசைப்பா 7-5.

> " வஞ்சியுற்ற மயல் தணியும்படிக்கு நினைவாயே "—திருப்புகழ் 581.

> " ஒருகொடியான ...... மயில் நெஞ்சொன்றியெ யழல் பொன்றுந் தனிமையை நினையாயோ "—திருப்புகழ் 309

(2) ஒருகம் தேசம்பு (பிரமா) – சிறைபுக்கு–புகல்–அயிலே என (அத்தகைய வேலால்) வாரி செற்றவன–ஈசற்கு உபதேசம் புகல் ...... வாசகன் ...... மானைச் செருசெய்வதை ஓர்கிலன் — என அந்வயப்படுத்தவும்.

(3) கடலை வற்றச்செய்த திருவிளையாடல் சிவபிரானுடையது—திருப்புகழ் 905-பக்கம் 640 பார்க்க.

(4) பிரமன் தலை யிழந்தது—திருப்புகழ் 285 – பக்கம் 209 கீழ்க்குறிப்பு.

(5) பிரமன் வேலாற் சிறைபெற்றது — வேலுக்கு அஞ்சுவது — திருப்புகழ் 571-பக்கம் 310 கீழ்க்குறிப்பு.

## 46. நித்தியத்துவம் பெற

**செருக்கும் பராக வயிராவ தத்தெய்வ யானைமணஞ்**
**செருக்கும் பராக தனந்தோய் கடம்ப செகமதநூல்**
**செருக்கும் பராக மநிரு பனந்தந் தெளிவியம்பு**
**செருக்கும் பராகம் விடுங்கடை நாளுந் திடம்பெறவே.**

(ப-உ.) செரு-போரினையும், கும்ப-மத்தகத்தையும், ராக-கோபத்தையுமுடைய, அயிராவத-அயிராவதத்திடம் வளர்ந்த, தெய்வயானை-தெய்வயானை நாயகியினது, மணம்-வாசனையையும், செருக்கும்-இறுமாப்பையும், பராக-மலர்த் தாதுக்களையுமுடைய, தனம்-கொங்கையில், தோய்-முழுகுகின்ற, கடம்ப-*கடப்ப மாலையையுடையவனே! செக-உலகத்திலுள்ள மத நூல்-சமயசாஸ்திரங்களின், செருக்கும்-மயக்கத்தையும், பராகமம்-இதர வேதாகமங்களையும், நிருபன-நிருமித்த தேவனே! அந்தம்-முடிவான பொருளை, தெளிவி-இவ்தென்று எனக்கு விளக்கியருள வேண்டும், அம்புசெர்-தாமரையில் வாசஞ் செய்கின்ற பிரமாக்களெல்லாம், உக்கு-இறந்து, உம்பர் ஆகம் விடும்-தேவர்களெல்லாம் அழிகின்ற, கடைநாளும்-இறுதிக்காலத்திலும், திடம்பெற-அடியேன நித்தியத்துவம் அடையும்பொருட்டு. (எ-று.) நீ-தோன்று எழுவாய், தெளிவி-பயனிலை, ஏ-அசை,

(க-உ.) அயிராவதத்திடம் வளர்ந்த தெய்வயானையைத் தழுவுங் கடப்பமாலையை யுடையவனே! உலக மயக்காகிய பரசமயவழியில் மயங்காமலும், பிரம்மாதி தேவர்கள் அழியுங் காலத்தில் அழியாமலும், நித்தியத்துவம் அடையும்பொருட்டு அவற்றின் முடிவான பொருளை எனக்கு விளக்கியருள்.

(கு-உ.) (1) ஐராவதமும் தேவசேனையும்:—"கடதட கபோல வாரண விபுதை"-"கடவிகட குஞ்சரந் தங்கும் யானை"—திருப்புகழ் 1159, 1219—கந்தரலங்காரம் 67 குறிப்பும் பார்க்க.

(2) *பழைய உரையில் வெட்சிமாலை என்பது பிழை—கடப்பமாலை என்றிருக்கவேண்டும்.

(3) நித்தியத்வம் பெறப் பகர்ந்த உபதேசத்தைத் திருப்புகழிலும் அருணகிரியார் கேட்கின்றார்—

"நித்தத்வம் பெறப் பகர்ந்த உபதேசம் சிறியேன் தனக்கும் உரைசெயிற் சற்றுங் குருத்துவங் குறையுமோதான்"
—திருப்புகழ் 723.

(4) சமய சாஸ்திரங்களை வகுத்தவர் இறைவர்:

"மறைத்திற மறத் தொகுதி கண்டு சமயங்களை வகுத்தவன்"
—சம்பந்தர் 3-79-3.

## 47. முருகனைத் துதித்தால் நித்தியராய் இருக்கலாம்

திடம்படு கத்துங் கெடீர்கன்ம லோகச் சிலுகுமச்சோ
திடம்படு கத்துந் திரித்தம்பு வாலி யுரத்தும்பத்துத்
திடம்படு கத்துந் தெறித்தான் மருக திருகுமும்ம
திடம்படு கத்துங் கநகங் குனித்தவன் சேயெனுமே.

(ப.-உ.) திடம்-உறுதிநிலை, படு-அழிகின்ற, உகத்தும்-யுகாந்தத்திலும் கெடீர்-நிலைகெடாது நித்தியராயிருப்பீர்கள், கன்ம-பூர்வ வினையால், லோக உலகத்தின்கணுண்டாகிய, சிலுகும்-ஈஷணாத்திரயங்களையும், அச் சோதிடம் படு கத்தும்-அக் கல்விச் செருக்கைத் தருங் கணிதநூலைப் பிதற்றுதலையும், திரித்து-மாற்றுதல் செய்து, அம்பு-முன் இராமபாணத்தை, வாலி-வாலியினுடைய, உரத்தும்-மார்பிலும், பத்து-பத்தென்கிற, திடம்-வலிமை பொருந்திய, கத்தும்-இராவணனுடைய தலைகளிலும், தெறித்தான்-செலுத்திய ஸ்ரீராமருடைய, மருக-மருகோனே! திருகு-மாறுபட்ட, மும்மதிள்-முப்புரங்களும், தம்படு-தோற்றிய இடத்திலேயே, உக-நீருகி விழ, துங்க-உயர்ந்த, நகம்-மகமேருவை, குனித்தவன்-வில்லாக வளைத்தபரமசிவனது, சேய்எனும்-மைந்தனாகிய குமாரக் கடவுளென்று துதியுங்கள். (எ-று.) நீங்கள்—தோன்றா எழுவாய். கெடீர். பயனிலை. ஏ-அசை.

(க-உ.) நமர்காள்! நீங்கள் ஈஷணாத் திரயங்களையும் சத்தமுஞ் சோதிடமுமாகிய நூல்களைப் பிதற்றுதலையும் ஒழித்து, இராவணனையும் வாலியையுஞ் சங்கரித்த திருமான்

மருகோனே! மேருவில்லினால் திரிபுர தகனஞ்செய்த பரமசிவனது மைந்தனே! என்று துதிப்பீர்களானால் யுகாந்த காலத்திலும் அழியாமல் நித்தியராயிருப்பீர்கள்,

(கு-உ.) முருகவேளைத் துதித்தால் நித்தியராய் இருப்பீர்கள் — என்கின்றார். "முடியாப் பிறவிக் கடலிற் புகார்" என்னும் கந்தரலங்காரம் (33), கந்தரந்தாதி (30), திருப்புகழ் 668–குறிப்புக்களைப் பார்க்க.

வாலியை அட்டது — திருப்புகழ் 231, பக்கம் 78 பார்க்க.

ராவணனை அட்டது — திருப்புகழ் 452, 507 பார்க்க.

திரிபுரம் எரித்தது—திருப்புகழ் 285, பக்கம் 206 குறிப்பு.

## 48. கோளறு பாடல்

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவென்னிற்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே.

(ப-உ.) சேய - அழகினையுடைய, அன்பு - இச்சையோடு, உந்தி–கானயாற்றின், வன–காட்டில், வாச – வாசஞ்செய்த, மாதுடன்–வள்ளிநாயகியுடன், சேர்ந்த-கூடியிருந்த, செந்தில்–திருச்செந்தூரில் வாழா நின்ற, சேய–குமாரக்கடவுளே! வன்பு–வலிமையில், உந்து–உயர்ந்த, இகல்–மாறுபாட்டையுடைய, நிசாசராந்தக–அசுரர் குலத்திற்கு இயமனே! சேந்த-கந்தனே! என்னில்–என்று துதிப்பீராகில், சேயவன் – செவ்வாய், புந்தி–புதன், பனிப்பானு–சந்திரன், வெள்ளி–சுக்கிரன், பொன்–வியாழம், செங்கதிரோன் — ஆதித்தன், சேயவன் — அவ்வாதித்தன் மைந்தன் சனியாகிய நவக்கிரகங்களின் வக்கிரோதயத்தால், புந்தி தடுமாறவே தரும்–புத்தியைச் சலனப்படுத்துகின்ற, சேதம் இன்று – கேடில்லை. (எ – று) சேதம் – எழுவாய். இன்று-பயனிலை, ஏ-அசை.

(க-உ.) கான்யாறோடும் புனத்திலிருந்த வள்ளிநாயகி பேரில் அன்புகூர்ந்த செந்தில்நாயகனே! அசுரர் குலாந்தகனே! சேந்தனே! என்று துதிக்கின்றவர்களுக்கு நவக்கிரகங்களின் வக்கிரோதயத்தாலாகுந் தீமையில்லை.

(கு-உ.) (1) இப்பாடல் அவசியம் மனப்பாடஞ் செய்ய வேண்டிய அருமைகொண்டது. நவக்ரகதோஷத்தை நீக்க வல்லது. நல்ல புத்தியையும் யுக்தியையும் கூட்ட வல்லது. ஆதலால் இது கோளறு பாடல். "நாளென்செயும்" என்னும் கந்தரலங்காரச் செய்யுளின் (38) கருத்துக்கொண்டது.

"வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ னுளமே புகுந்த அதனல்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்வெள்ளி சனிபாம்
[பிரண்டுமுடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே"

—என்னுந் தேவாரக் கோளறு பதிகம் போன்றது.

(2) உந்தி-கான்யாறு. வள்ளியும் கான்யாறும்-அந்தாதி 7, 16, 89 பார்க்க.

(3) சந்திரனைப் 'பனிப்பானு' என்பது ஒரு அழகான ப்ரயோகம். சனி-சூரியன் மைந்தன். "சூரியன்தன் தவத்தில் வரு பாலா போற்றி"—சனிபகவான் தோத்திரம், "கதிர் சேயே! காகம் ஏறும் சனியனே"—நவக்கிரக தோத்திரம், யமனும் சூரியனுடைய பிள்ளை-பாடல் 22 பார்க்க. 'யமனைத் தமையனாகவுடைய சனி"—பரிபாடல் 11-உரை. சேயவன்-செவ்வாய்(திவாகரம்); 'செந்தீவண்ணன் சேயிவை செவ்வாய் சிறந்த பெயரே' (பிங்கலம்); புந்தி-புதன் 'புந்தி மிதுனம் பொருந்த'—பரிபாடல் 11-6. "புந்தி, தூதன், பச்சை, புதனே"—பிங்கலம்.

## 49. மனம் திருவடியிற் பொருந்த

சேதக மொன்று மனுதியுந் தாதையுந் தேடரியார்
சேதக மொன்றுஞ் சதங்கையங் கிண்கிணி செச்சையந்தாள்
சேதக மொன்றும் வகைபணி யாயினித் தீயவினைச்
சேதக மொன்று மறியா துழலுயிர்ச் சித்திரமே.

(ப-உ.) சேதகமொன்று-ஒருதலை பின்னமான, மன்-நிலைபெற்ற, ஆதியும்-பிரம்மாவும், தாதையும்-அப்பிரமாவின் தாதையாகிய மகாவிஷ்ணுவும், தேடரியார்-தேடுதற்கரிதான பரமசிவனது, சே-மைந்தனே! தகமொன்றும்-தகுதியாய் முழங்குகின்ற, சதங்கை-சதங்கையையும், அம்-அழகிய, கிண்கிணி-கிண்கிணியையும், செச்சை-வெட்சிமாலையையு

முடைய, அம்-சிரேஷ்டமாகிய, தாள்-திருவடித் தாமரையில், சேது-சிவந்த, அகம்-என்னிருதயமானது, ஒன்றும் வகை-கூடும்வண்ணம், பணியாய்-அருள்செய்ய வேண்டும், இனி-இனிமேல், தீய-கொடிய, வினை-இருவினையாகிய, சேதகம்-சேற்றினுள்ளே, ஒன்றும் அறியாது-ஒரு நெறியும் அறியாமல், உழல் — கிடந்துழலுகின்ற, உயிர் — ஆவியின் வாழ்க்கை, சித்திரம் - பொய்யாயிருக்கின்றது. (எ - று.) நீ - தோன்று எழுவாய். பணியாய்-பயனிலை. ஏ-அசை.

(கு-உ.) நான்முகனுந் திருமாலும் அறியவொண்ணாத பரமசிவனது மைந்தனே! இருவினைச்சேற்றில் அழுந்தி வருந்தும் என் உயிர் வாழ்க்கை நித்தியமல்ல; ஆதலால் உன் திருவடியை யென்மனம் பற்றும் வகையருள்.

(கு-உ.) (1) பிரமன் ஒருதலை இழந்தது — பாடல் 45 ன் குறிப்பைப் பார்க்க.

(2) சிவபிரான் இருவர்க்கும் அரியராய் நின்றது — திருப்புகழ் 999, பக்கம் 14-கீழ்க்குறிப்பு,

(3) சேதகம்-சேறு "பாத தாமரைகள் சேதகத் தலர" —பேரூர்ப் புராணம்-பள்ளு 32.

(4) சிந்திரம் - பொய். 'சித்திரம் இக்கனவில்வாழ்வு' — பாடல்-50.

## 50. முத்தியை அருளுக

சித்திர மிக்க னவில்வாழ் வெனத்தெளி யுந்தவவா
சித்திர மிக்க னெறிக்கழிந் தேற்கினிச் செச்சைநல்வி
சித்திர மிக்க தனக்குறத் தோகை திறத்தமுத்தி
சித்திர மிக்க வருளாய் பிறவிச் சிகையறவே.

(ப-உ.) சித்திரம்-பொய்யாகிய, இக் கனவு-இப்போது காணுங் கனுப்போலாகும், இல் வாழ்வு-பாசபந்தங்களாற் சிக்கிய மனைவாழ்க்கையானது, எனத் தெளியும் - என்னும் நிச்சயத்தைக் கொடுக்கின்ற, தவ வாசி - தபோபலத்தின், திரம் - உறுதியை நாடாமல், இக்கன் - கருப்புவில்லையுடைய மன்மதனது, நெறிக்கு - காமநூல் வழியில், அழிந்தேற்கு-கெட்ட எனக்கு, இனி-இனிமேலாவது, செச்சை-வெட்சிமாலையைப் புனையும், நல் - திவ்வியமான, விசித்திர - அழகனே!

மிக்க-பெருத்த, தன-கொங்கையையுடைய, குறத்தோகை திறத்த-குறவர் வளர்த்த வள்ளிநாயகனே! முத்தி சித்தி-மோட்சப்பேறுனது, ரமிக்க-குறைதீர்ந்து திருப்தியாகும்படி, அருளாய்-நீ கிருபை செய்யவேண்டும், பிறவிச சிகை-எனது சனன மரண பந்தங்கள், அற-அறும் பொருட்டு, (எ-று,) நீ-தோன்று எழுவாய். அருள்வாய்-பயனிலே. ஏ-அசை.

(க-உ.) வெட்சிமாலையோனே! வள்ளிநாயகனே! ஆத்மாவுக்கு உறுதியான தவத்தை நாடாமல் சிற்றின்ப விஷயத்தில் ஆழ்ந்து பொய்யுங் களவும் போன்ற மனேவாழ்க்கையிலிருக்கின்ற எனக்கு இனியாகிலும் முத்தி எய்தும்பொருட்டும், சனனம் மரணம் அறும் பொருட்டும் அதை நாடக் கிருபை செய்யவேண்டும்,

(கு-உ.) (1) சித்திரம்-பொய்-பாடல் 49 பார்க்க.

(2) கனவு—வாழ்வு 'கனுநிகர்த்தே அழி அங்கம்'—செந்தில் நிரோட்டகம்-28.

இக்கன் நெறிக்கு அழிந்தேற்கு இனி-பிறவிச் சிகையற-முத்திசித்தி ரமிக்க—தவ வாசித் திரம்—அருளாய்.

## 51. திருமுருகாற்றுப்படையின் அருமை பெருமை

சிகைத்தோகை மாமயில் வீரா சிலம்புஞ் சிலம்பம்புரா
சிகைத்தோகை மாமயில் வாங்கிப் பொருது திசைமுகன்வா
சிகைத்தோகை மாமயில் வானில்வைத் தோய்வெஞ் செருமகள்வா
சிகைத்தோகை மாமயில் செவ்விநற் கீரர்சொற் றித்திக்கதே.

(ப-உ.) சிகை-கொண்டையையும், தோகை-தூவியையுமுடைய, மா-பெரிய, மயில் வீரா-மயிலேறும் வீரனே! சிலம்பும்-கிரவுஞ்ச கிரியையும், சிலம்பு-முழங்குகின்ற, அம்புராசி-சமுத்திரத்தின்கண், கை-ஒழுங்காக, தோகை-துவசத்தையுடைய, மா-மாமரமாய் நின்ற சூரனேயும், மய்-இருளுக்கு, இல்-இடமாகிய மாயையையும், வாங்கி-விலக்கி, பொருது-போர்செய்து வென்று, திசைமுகன்-நான்முகப் பிரமன், வாசி-பிரணவப் பொருள் அறியாமல் வாசித்த குற்றத்திற்கு, கைத்து-கோபித்து, ஓகை-மகிழ்சசியை, மாமய்-அழகுக்கு, இல்-இருப்பிடமாகிய, வானில்-தேவ

ருலகத்தில், வைத்தோய் - விளைத்தவனே! வெஞ் செரு - வெவ்விய போரிற் சிறந்த, மகள் வாசி–பாண்டியனது குதிரை முகத்தையுடைய பெண்ணுக்கு, கைத்தோ – அக் குதிரை முகத்தைத் தீர்த்தவனே! கைமா – அயிராவதம் வளர்த்த, மயில்–தெய்வயானையினது, செவ்வி–கலவிப் புதுமையினும், நற்கீரர் சொல்–நற்கீரர் சொல்லிய திருமுருகாற்றுப்படை, தித்தித்தது–(உனக்கு) இனிமையாயிற்று. (எ–று). சொல்– எழுவாய். தித்தித்தது–பயனிலை. ஏ-அசை.

(க–உ.) மயில் வீரனே! மாவாய் நின்ற சூரனையும், கிரவுஞ்சகிரியையும் மாயையையும்அறச்செற்றுஅமராபதியை யீடேற்றினவனே! பிரமாவைக் கோபித்தவனே! தெய்வயானை யின் கலவி இன்பத்தினும் நக்கீரர் துதித்த பாடல், குதிரை முகத்தையுடைய பெண்ணுக்கு அம்முகத்தை மாற்றின உனக்கு, இனிமையாயிற்று.

(கு-உ.) (1) இச் செய்யுள் திருமுருகாற்றுப்படையின் அருமையை விளக்குகின்றது.

(2) **குதிரை முகத்தை மாற்றின சரித்திரம்:** கலிங்க தேசத்தரசன் மகளாசிய **கனகசுந்தரி** தாமிர பருணி நதி மூலத்தில் ஸ்நாநஞ் செய்ய வந்தபோது அங்கே தவஞ்செய்து கொண்டிருந்த குதிரை முகமுடைய **அயக்கிரீவ** முநிவரைக் கண்டு அவமதித்து நகைத்தாள். அதுகண்ட முநிவர் ''நீ மறு பிறப்பிற் குதிரை முகத்துடன் பிறக்கக் கடவை'' எனக் கனகசுந்தரியைச்சபிக்க, அவளும் மனம் வருந்தி 'சுவாமி! இச்சாபம் என்று தீரும்' என வேண்ட, அவர், திருச்செந்தூரில் ஷண்முக நாதன் சந்நிதிக்கு நேராகவுள்ள **வதனாரம்ப தீர்த்தம்** எனப்படும் சமுத் திரத்தில் ஸ்நாநஞ் செய்யத் தீரும் எனக் கூறினர். மறு பிறப்பிற் கனகசுந்தரி உக்கிரப் பெருவழுதி என்னும் பாண்டிய ராஜன் மகளாகப் பிறந்தனள். முக மாத்திரம் குதிரைமுகம். அங்கங்கள் யாவும் வெகு அழகு. அது கண்டு மனம் வருந்தின பாண்டியன் தன் மகளுக்கு **அங்க சுந்தரி** எனப் பெயரிட்டுக் குதிரைமுகம் எங்ஙனம் தொலையும் என ஏக்கமுற்றிருக்கப், புண்ணிய தீர்த்தங்களில் முழுகவேண்டும் என ஓர் அசரீரி கேட்டது. பாண்டியனும் தன் மகளை அவ்வாறே தீர்த்த ஸ்நாநத்துக்கு அனுப்ப அவளும் கங்கை முதலிய தீர்த்தங் களில் ஆடி, ஈற்றில் திருச்செந்தூரில் சமுத்திர ஸ்நாநஞ் செய்ய, குதிரைமுகம் மாறி சுந்தரமான நல் முகம்பெற்றனள்: —**திருச்செந்தூர்ப் புராணம்.**

(3) தேவசேனையின் கலவியின்பத்தினும் அதிக இன்பத்தைத் திருமுருகாற்றுப்படை முருகவேளுக்குத் தந்தது என்கின்றார் அருணகிரியார்; கரும்பின் சுவை, அமுதின்சுவை, தேனின் சுவை இவையெல்லாம் கசப்பு என்று கூறத்தக்க அத்தனை இனிமைகொண்ட வள்ளியின் சுவைமொழியையும் புறக்கணித்துத் திருமுருகாற்றுப்படையின் தமிழைச் செவி தாழ்த்துக் கேட்டனர் – முருகவேள் என்கின்றார் சிவப்பிரகாச சுவாமிகள்.

> "வள்ளி, கன்னலும் அமுதுந் தேனும் கைக்குமின்
> தீஞ்சொல் மாற்றித், தன்னிகர் புலவன் கூறுந் தமிழ்செவி
> தாழ்த்துக் கேளா, அந்நிலை மனங்களிப்புற் றறுமுகம்
> படைத்த கோமான்" — சீகாளத்திப் புரா–நக்கீரர்–116

## 52. பிறவிக்குக் காரணம் வினைதானே

தித்திக்குந் தொந்திக்கு நித்தம் புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி பாலக தேனலைத்துத்
தித்திக்குத் தொந்திக் கிளையாய் விளையுயிர்க் குஞ்சிதைதோல்
தித்திக்குந் தொந்திப் பனவேது செய்வினைத் தீவிலங்கே.

(ப–உ.) தித்திக்கும் - தித்தியென்னுந் தாளத்துக்கும், தொந்திக்கும் – தொந்தியெனனுந் தாளத்திற்கு மேற்க, நித்தம் புரியும் – நடனஞ் செய்கின்ற, சிவன் – பரமசிவனது செவி பத்தித்திக்கு – இருசெவிகளின் புலனிடத்து, உந்து நுழையும்படி, ஓம்–பிரணவப் பொருளை, திக்கற–மயக்கநீங்க, மொழி–உபதேசித்த, பாலக–பாலகனே! தேன் அலைத்து – பலகாரநைவேத்தியத்தால் தேனொழுகி, தித்திக்கும்-இனிப்புற்றிருக்கின்ற, தொந்திக்கு — வயிற்றையுடைய கணபதிக்கு, இளையாய் – இளையானே! விளை – கருப்பையில் உருவான, உயிர்க்கும் – சீவனுக்கும், சிதை - அழிந்துபோகின்ற, தோல் தித்திக்கும் – தோற் பையாகிய உடம்புக்கும், தொந்திப்பன ஏது – சம்பந்தப்பட்டுப் பிறப்புண்டாவதற்குக் காரணம், செய்-யான் முனனியற்றிய, வினை-இருவினையினது, தீ-கொடிய விலங்க - தளை தானே? (எ–று). நீ என்னும் தோன்றா எழுவாய் சொல் என்னும் பயனிலையைக் குறிப்பாகக் காட்டி நின்றது.

(க–உ.) தித்தித் தொந்தி யென்று நடனஞ்செய்யும் பரமசிவனது திருச்செவியிற் பிரணவப்பொருளை மயக்கற

உபதேசித்த பாலகனே! தொந்தி விநாயகருக்கு இளையோனே! உடலும் உயிருஞ் சம்பந்தப்பட்டுப் பிறவி யுண்டாவதற்கு முன் செய்த வினைப் பாசந்தான் காரணமோ? நீ சொல்.

(கு-உ.) (1) தித்தி — பை. ஈண்டுத் 'தோல் தித்தி' என்றும், 54-ஆவது செய்யுளில் 'அத்தி தித்தி' என்றும் உடலைக் கூறினர்.

(2) செய்வினைத் தீவிலங்கே ஏது (காரணமாம்) எனவும் முடித்தும் பொருள் காணலாம். பிறவிக்குக் காரணம் வினை; வினையை விளைவிக்கும் பிறவி.

> "படர்தரும் வெவ்வினைத் தொடர்பாற் பவத்தொடர்பு; அப்
> பவத்தொடர்பாற் படராநிற்கும் விடலரும் வெவ்வினைத்
> தொடர்பு"
>
> —(பவம்=பிறப்பு.)-சிதம்பரச் செய்யுட் கோவை 36.

(3) சிவபிராற்கு உபதேசித்தது:— திருப்புகழ் 327 — பக்கம் 314.

## 53. உணவுக்கு அலைதல் அற: திருவடியில் நிலைபெற

> தீவிலங் கங்கை தரித்தார் குமார திமிரமுந்நீர்
> தீவிலங் கங்கை வருமான் மருக தெரிவற்றவான்
> தீவிலங் கங்கை வரவா விரைக்குத் திரிந்துழலுந்
> தீவிலங் கங்கை யமன்றொட ராமற் றிதம்பெறவே.

(ப-உ.) தீ-கரத்தில் அக்கினியையும், விலம் - புயத்தில் வில்வத்தையும், கங்கை — சென்னியிற் கங்கையையும், தரித்தார்-தரித்த பரமசிவனது, குமார-மைந்தனே! திமிர-இருணிறமான், முந்நீர்-சமுத்திரமும், தீ வறண்டுபோகத் தக்க, வில்-வில்லின், அங்கம் - வித்தையில், கைவரு - வல்லவரான, மான் மருக-திருமான் மருகோனே! தெரிவற்ற-அறிதற்கரிய, வான்-பெரிய, தீவில்-தீவுகளிலும், அங்கங்கு-மற்றும் பல இடங்களிலும், ஐவர்-பஞ்சேந்திரியங்களால், அவாவு-இச்சிக்கத்தக்க, இரைக்கு-உணவின்பொருட்டு, திரிந்துழலும்-அலைந்து திரிகின்ற, தீ-புத்தியினது, விலங்கம் - பலத்த தொடர்ச்சியை, கை-ஒழிக்கவேண்டும், யமன் தொடராமல் - இயமன் தொடர்ந்து பற்றாமல், திதம் பெற-உனது திருவடியில் இன்புற்று உறுதிப்படும்பொருட்டு (எ-று.) நீ-தோன்றா எழுவாய். கை-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) கங்கையும் வில்வமுஞ் சூடி அனலேந்திய பரமசிவனது மைந்தனே! கடலும் வறளும்படி விற்போர் செய்யுந் திருமால் மருகோனே! எமனை நமன் பிடித்துக் கொள்ளாமல யான் உன் அடியை உறுதியாய்ப் பற்றும்படி ஐம்புலன்களின் இசசையை யொழித்தருள்.

(கு-உ.) (1) விலம் – வில்லம் – வில்வம் — "வடிவுடை வில்லம்"—திருமந்திரம் 1720.

(2) கரத்தில் அக்கினியைத் தரித்தது — திருப்புகழ் 286, பக்கம் 210 குறிப்பு.

(3) கங்கை சூடிய வரலாறு :-திருப்புகழ் 446, பக்கம் 622 குறிப்பு.

(4) திருமால் கடல்மீது பாணம் எய்தது – திருப்புகழ் 177 பக்கம் 412 ; 754–பக்கம் 248 கீழ்க்குறிப்பு.

(5) பொருள் பொருட்டுப் பல இடங்களுக்குத் திரிந்து செல்லுதல் :—

"பொருள்தேடி வங்காளம், சோனம், சீனம்போய் ......
துன்பப் படலாமோ" — திருப்புகழ் 43.

## 54. உயிர்போம் நாளில் துதித்து உய்ய

தீதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாதத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே.

(ப-உ.) திதத்தத் தத்தித்த-திதத்தத் தத்தித்த என்னுந் தாளமானங்களை, திதி-திருநடனத்தாற் காக்கின்ற, தாதை-பரமசிவனும், தாத – பிரமனும், துததி - படப்பொறியினை யுடைய, ததி-பாம்பினுடைய, தா-இடத்தையும், தித–நிலை பெற்று, தத்து– தநுமபுகின்ற, அத்தி – சமுத்திரத்தையும் பாயலாககொண்டு, ததி-தயிரானது, தித்தித்ததே-தித்திக் கின்றதென்று, து - உண்டகண்ணனும், துதித்து — துதிசெய்து வணங்குகின்ற, இதத்து –பேரின்ப சொரூபியான, ஆதி – முதல்வனே! தத்தத்து - தந்தத்தை யுடைய, அத்தி – அயிரா வதத்தால் வளர்க்கப்பட்ட, தத்தை–கிளிபோன்ற தெய்வ

யானைக்கு, தாது-சப்த தாதுகளால் நிறைந்ததும், அதத்து-மரணத்தோடும், உதி - சனனத்தோடும், தத்து - பல தத்துகளோடும், அத்து – இசைவுற்றதுமான, அத்தி - எலும்புகளை மூடிய, தித்தி – பையாகிய இவ்வுடல், தீ - அக்கினியினுல், தீ தகிக்கப்படுகின்ற, திதி-அந்நாளிலே, துதி—உன்னைத் துதிக்கும் தீ – புத்தி, தொத்தது – உனக்கே யடிமையாக வேண்டும். (எ—று.) தீ-எழுவாய். தொத்தது-பயனிலை. ஏ—அசை.

(க-உ.) திதத்தத் தத்தித்த என்னுந் தாளத்தால் நடிக்கும் பரமசிவனும், பிரமாவும், தயிரையுண்டு பாற்கடலையும் ஆதிசேடனையும் பாயலாகக்கொண்ட திருமாலும் வணங்குகின்ற முதல்வனே! தெய்வயானை தாசனே! சனன மரணத்திற்கு இடமாய் எலும்பு முதலிய தாதுகள் நிறைந்த பொல்லாத இவ்வுடற்பைதீயில்வேகுங்கால் உன்னைத்துதிக்கும் என் புத்தியை உனது அடியிணைக்கு ஆட்படுத்தவேண்டும்.

(கு—உ.) 'த'-வர்க்கத்தில் அமைந்த அருமைப் பாடல் இது. இச்செய்யுளுக்கு உரைகூற முடியாது வில்லிபுத்தூரர் திகைக்க அருணகிரிநாத சுவாமிகளே உரை கூறினர்; நூல் வரலாற்றைப் பார்க்க.

**திருமால் தயிர் உண்டது:** "தெதிபட்சண க்ருதபட்சண செகபட்சணன்"—திருப்புகழ் 1216; திருப்புகழ் 1022-பக்கம் 72 கீழ்க்குறிப்பு.

## 55. நாம விசேடம்

தீதோ மரணந் தவிரும் பிறப்பறுந் தீயகற்புந்
தீதோ மரணம் பரமீது தானவர் சேனை முற்றுந்
தீதோ மரணந் தனபூசு ரர்திரண் டேத்தியமுத்
தீதோ மரண மலையாளி யென்றுரை தென்னுறவே.

(ப-உ.) தீதோ-தீங்கு மாத்திரமோ, மரணம்-இறப்பும், தவிரும்-ஒழியும், பிறப்பு சனனமும், அறும்-நீங்குமாதலால், தீய – கொடியதொழிலை, கல் – கற்கின்ற, புந்தீ – மனமே, தோம் – குற்றத்திற்கு, அரண் – இடமாகிய, அம்பரமீது – சமுத்திரத்திலே, தானவர்—அசுரருடைய, சேனை முற்றும்—சேனையனைத்தையும், தீ — தகித்த, தோமர — கைவேலையுடையோனே! ணந்தன—கிருபையாளனே! பூசுரர்—வேதியர்கள், திரண்டு – கூட்டமாகக்கூடி, ஏத்திய – வணங்கத்தக்க,

முத்து - சரவண முத்தையனே! ஈது - இந்த, ஓம ரண - மறையோர்செய் வேள்வியின் அவிர்ப்பாகததிற்கு உரியவனே, மலையாளி - குறிஞ்சி நிலத்தை யாள்பவனே! என்று உரை - என்று துதிசெய், தென்னுற - அழகுபெறும்படியாக. (எ-று.) நீ - தோன்று எழுவாய். உரை - பயனிலை. ஏ - அசை.

(க - உ.) தீமையையே கருதுகின்ற புத்தியே! சமுத்திரத்தின்கண் அசுரர் கிளையற மாய்த்த வேலையுடையவனே! வேதியர்கள் தொழத்தக்க சரவண முத்தானவனே! மறையோர் செய்யும் யாகத்தின் அவிர்ப்பாகத்திற்கு உரியவனே! குறிஞ்சி நிலத்திற்கு இறைவனான கந்தனே! என்று துதித்தால் உனது தீமை மாத்திரமல்ல, சனன மரணமும் அறும்.

(கு - உ.) (1) முருகனுடைய திருநாமங்களைக் கூறித் துதிப்பதன் பயனைக் கூறுகின்றது இப்பாடல். பாடல் 30-ம் பார்க்க.

(2) ஓமரண — முருகவேள் "யாக ரக்ஷக மூர்த்தி" எனப்படுவர், "ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" — திருமுருகாற்றுப்படை.

## 56. தலைவி வருந்துதல் :
## மன்மதோபாலம்பனம் - விரகவேதனை

**தென்ன வனங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்**
**தென்ன வனங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்**
**தென்ன வனங்கனன் னீற்றுத் திருத்திய தென்னவின்னந்**
**தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே.**

(ப - உ.) தென்ன வனம் - தென்னஞ் சோலைகளையும், கனம் - மேகங்கள், சூழ் - கவிந்திரா நின்ற, கா - பூஞ்சோலைகளையுமுடைய, திரிநக - திருத்தணி, பரங்குன்று, செங்கோடு என்னும் மூன்று மலைகளையும் உடையோனே! சூல கர - கையிற் சூலாயுதத்தையுடைய, தென்னவன் - தென்றிசைத் தலைவனாகிய யமனது, அங்க னந்த - உருவழியும்படி, பத நீட்டினன் - திருப்பாதத்தை நீட்டியுதைத்த பரமசிவனது, செல்வ - மைந்தனே! முன் - முற்காலத்தில், பின் - பின்னே கூனையுடைய, தென்னவன் - பாண்டியனது, அங்க - உடலை, நன்னீற்றால் -

நன்மையைத் தரும் விபூதியினுல், திருத்திய தென்ன—நிமிர்த்தி னதுபோல, இன்னம்—இப்போதும், தென்ன—வனப்புவாய்ந்த, அனங்கன்—மன்மதனது, அம்—அழகிய, கை—கையிற் பிடித்த, சிலை—கருப்பு வில்லினது, கூனையும்—வளைவையும், தீர்த்து— நீக்கி, அருள்—மதன் என்மேற் பாணப் பிரயோகஞ் செய்யாத படி உன் மாலையைத் தந்தருளவேண்டும். (எ—று.) நீ— தோன்ரு எழுவாய். தீர்த்தருள்—பயனிலை. ஏ—அசை.

(க-உ.) திருத்தணிகை, திருப்பரங்குன்றம், திருச் செங்கோடு என்னும் மூன்று மலைகளிலும் உறைபவனே! கூற்றை யுதைத்த பரமசிவனது மைந்தனே! முன் பாண்டிய னது கூனை நிமிர்த்தினது போல என்னை வருத்த மன்மதனது கருப்புவில்லை வளைத்தலையுந் தீர்த்தருளவேண்டும்.

(கு-உ.) (1) சிவபிரான் கூற்றை உதைத்தது—திருப்புகழ் 339, பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

(2) பாண்டியன் கூனை நிமிர்த்தின வரலாறு - திருப்புகழ் 181, பக்கம் 422 கீழ்க்குறிப்பு: அந்தாதி 96ஆம் பாடலையும் பார்க்க.

(3) இச் செய்யுளின் உரையில் ஒரு குறிப்பு கவனிக்கற் பாலது. 'முன்பின் தென்னவன் அங்கம் நீற்ருல் திருத்தியது' என வருமிடத்து முன்பின் என்றதற்கு முன—முற்காலத்தில், பின்—பின்னே கூனையுடைய எனப் பொருள் உளது, இவ் வுரையினும் சிறந்த உரை ஒன்றுளது. 'முன' என்பது காலத்தைக் குறிப்பதன்று, இடத்தையே குறிக்கும். முன்பின் என்றதற்கு முன இடத்தும் (மார்பிலும்) பின் இடத்தும் (முதுகிலும்) எனப் பொருள் கொள்ளவேண்டும். பாண்டியனுக்கு மார்பின் முன்னும், முதுகின் பின்னும் இரண்டு கூன்கள் (வளைவுகள்) இருந்தனவாம். அந்த இரண்டு கூன்களையும் சம்பந்ததப்பெருமானுர் தமது திருக்கரத்தால் திருத்தி நிமிர்த்தி அருளினர். இது,

> "ஒருகூன் மிசை வைத்த திருக்கை புறத்தொரு
> கூன்மிசை வைந்தனர் — வைந்தலுமே — இருகூனும்
> நிமிர்ந்தன. தென்னவர் கோன் முதுகுந் தடமார்பும்
> இடம்பெறவே"

எனவரும் தக்கயாகப்பரணி 216 ஆம் செய்யுளால் விளக்கம் உறுகின்றது. பரணி உரையாசிரியர்—

'முன்னும் பின்னும் ஒக்க நிமிர்ந்த வாறே தட மார்பும் அழகிய முதுகும் ஆயின' ...இதன் கருத்து: பிரத்தியட்ச சத்தி காட்டுகை; அன்றியேயும் இந்திர ஞாலமுமல்ல, பிறவுமல்ல, ஈசுவரனே வடிவுகளைப் படைத்தானென்பது பிரகாசித்தபடி' ...இக்கூன் பாண்டியனுடம்பை ஆளுடைய பிள்ளையார் திருக் கைகளால் தடவச் சரீர முழுவதும் பேதித்துக் கனக மய மாயிற்று என்கின்றார்.

(4) மன்மதனது வில்லின் கூனையும் தீர்த்தருள்—என்றது மன்மதனால் ஏற்பட்டுள்ள இவ் விரகதாபத்தை அவன் பாணப் ப்ரயோகம் செய்யாதபடி நீ கருணை கூர்ந்து உனது மாலையைத் தந்து தணித்தருள் என்றபடி

"ஆவா என்னே தென்னவர் கோற்கன் றணிசாந்தம்
நீவா நின்றுய்ப் நின்றில காமா னலமென்னே
கோவாம் வில்லி கொடுந்தனு வுங்கூன் நிமிராதால்
மூவா முதலார் மதுரையி தன்றே மொழிவாயே"

எனவரும் மதுரைக் கலம்பகத்துப் பாடல் (66)ம்.

"பாலனர், தைவந்து தென்னவர் கூன் தள்ளுதிருப் பாட்
டெடுத்தால்
கைவந்த வேள் சிலைக்கூன் காணுமோ"

எனவரும் திருவாரூர் உலாவும் (416) இங்கு நினைவுக்கு வரும்.

## 57. தோத்திரம்

தீத்தன் பரவை வெளிநீங்கிச் சேய்தொழச் செல்பதவுத்
தீத்தன் பரவை முறையிட மாங்குறை தீங்குறவே
தீத்தன் பரவை தழைக்கவிண் காவெனச் சென்னியின்மேல்
தீத்தன் பரவையில் வேலத்த னேகுரு சீலத்தனே.

(ப—உ.) தீத்தன்—கிரணங்களையுடைய சூரியன், பரவு—சஞ்சரிக்கின்ற, ஐ—அழகிய, வெளி—ஆகாசத்தையும், நீங்கி—கடந்து, சேய்-பிள்ளையாகியபிரமாவும், தொழ-வணங்கும்படி, செல்-சென்று, பத வுத்தித்தன்—பாதத்தை யூர்த்த தாண்டவ மாக எடுத்த திருமாலும், பரவை-சமுத்திரமும், முறையிட—அலறுகையில், மா—மாவுருக்கொண்டு நின்ற சூரனால், குறை—உண்டான குறைபாட்டையும், தீங்கு—தீமையையும், உறவே—முழுதும், தீத்து—அற்றுப்போகும்படி யொழித்து, அன்பர்—அடியார்களுடைய, அவை-கூட்டம், தழைக்க-அதிகரிக்கும்படி,

விண்-அமராபதியை, காவென-காப்பாற்றென்று சொல்லி, சென்னியின்மேல்-முடியின்மேல், தீத்தன்-கங்கையைச் சூடிய பரமசிவன், பரவு — துதித்த, ஐயில் — கூரிய, வேல் — வேலாயுதத்தை, அத்தனே-கரத்திலுடைய முருகக்கடவுளே! குரு சீலத்தனே — குருவாகிப் பரமசிவனுக்குப் பிரணவப் பொருளை யுபதேசித்த நற்குணக் குன்றமே! (எ-று.)

(க-உ.) திருநெடுமால் முறையிடுகின்றதைக் கண்டு சமுத்திரத்தின்கண மாவுருக்கொண்டு நின்ற சூரனை வதைத்துப் பத்தர் குழாந் துன்பமற்று வாழும்படி யமராபதியைக் காப்பாற்றென்று பரமசிவன் சொல்லுங்கால் வணங்கி யப்படியே முடித்த வேலாயுதனே! அப் பரமசிவனுக்குக் குருவாய் உபதேசித்தவனே!

(கு-உ.) (1) திருமால் – உலகளந்த வரலாறு–திருப்புகழ் 268, 458, பக்கம் 166, 24 கீழ்க்குறிப்பு. ஆகாசத்தையும் கடந்து திருமால் தமது திருவடியை நீட்டினது —

"கேசவன் கால்வீச அண்டகோளகை முகடு
கீண்டு வெள்ளருவி பொங்கிப் பொழியும்"
—மீனாட்சி பிள்ளைத்தமிழ்-பொன்னூசல் 7.

பிரமன் — "நாராயண மாமன் சேய்" – திருப்புகழ் 668. 'அயனை உந்தியின் மலர்மிசை அருளிய முகில்'—பாசவதைப் பரணி 163.

(2) பதவுத்தீத்தன் பரவை தீங்குறவே (தீங்கு உற்ற காரணத்தால்) முறையிட மாங்குறை தீத்து — என்றுவது, பதவுத்தீத்தன் பரவை குறை தீங்கு உறவே முறையிட மா தீத்து—என்றுவது பிரித்தும் பொருள் காணலாம்.

உரையில் 'உறவே — முழுதும்' என இருப்பதால் 'தீங்கறவே' என்பது சரியான பாடம் போலும். 'அறவே' = முழுதும்.

(3) சென்னியிற் கங்கை சூடிய வரலாறு—செய்யுள் 53ன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

(4) அரனுடைய சூலமும் வெல்ல வல்லதன்றென வேல் கொடு சென்று சூரனை அட்டது —

"வெங்காள கண்டர் கைச்சூலமும் ...... வெல்லா எனக்கருதியே"
—வேல் விருத்தம்-2.

தீத்தன் பரவு அயில்வேல்—சிவபிரான் புகழ்ந்து அளித்த வேல்-எனவும் பொருள்காணலாம்-செய்யுள் 61, 84ம் பார்க்க.

அந்த வேலின் பெருமையை—

"ஏவில் ஏழண்டத் தைம்பெரும் பூதமும் அடுவது, ஏய
பல்லுயிரும் ஒருதலை முடிப்பது, ஏவர்மேல் விடுகினும் அவர்தம்,
மாயிருந் திறலும் வரங்களும் சிந்தி மன்னுயிர் உண்பது,
எப்படைக்கும் நாயகமாவது, ஒருதனிச் சுடர்வேல் நல்கியே
மதலையைக் கொடுத்தான்"—எனவருமிடத்துக் காண்க.

—கந்த புராணம் 1-18-38.

## 58. பிறவியற

சீலங் கனமுற்ற பங்கா கரசல தீரக்கநி
சீலங் கனமுற்ற முத்தூர்செந் தூர சிகண்டியஞ்சு
சீலங் கனமுற்ற வேதனை மேவித் தியங்கினஞ்சீ
சீலங் கனமுற்ற விப்பிறப் பூடினிச் சேர்ப்பதன்றே.

(ப-உ.) சீலம்-தயாளத்திலும், கன-மகத்துவத்திலும், முற்று—மேற்பட்ட, அபங்கா—பங்கமில்லாதவனே! கர—கோபத்தையுடைய, சலதீ-சமுத்திரத்தின்கண், ரக்க—அசுரக் கூட்டமாகிய, நிசீ—இருளை, லங்கன-கடிந்தவனே! முற்றம்—மூன்றிலின்கண், முத்து-முத்துகள், ஊர்—இறைந்திருக்கின்ற, [1]செந்தூர—திருச்செந்தூரில் வாழ்பவனே! சிகண்டி—மயில் வாகனனே! அம்—அழகிய, சுசீ-பரிசுத்தமானவனே! லங்கனம்-பசியாகிய அக்கினியினால், உற்ற—பொருந்திய, வேதனை-வருத்தத்தை, மேவி-அடைந்து, தியங்கினம்-மயங்குகின்றேம், [2]சீசீ—இது மிகவும் இகழ்ச்சியான, லங்கனம்—பங்கமாம், முற்ற—முழுது மாதலால், இப்பிறப்பூடு-இப்படிப்பட்ட சனனத்திலே, இனி-இனிமேலும், சேர்ப்பது—சேரப்பண்ணுவது, அன்று—நன்றல்ல. (எ-று.) இக்கவி யிரண்டும், சேர்ப்பது என்னும் ஒரே எழுவாயையும், அன்று—என்னும் ஒரே பயனிலையையுங் கொண்டு முடிந்தன.

(க-உ.) பங்கம் அற்றவனே! சமுத்திரத்தின்கண் அசுரர் கிளையை மாய்த்தவனே! திருச்செந்தூர் நாயகனே! மயில் வாகனனே! பரிசுத்தமானவனே! உதராக்கினிக்கே யிரை தேடி வருந்துகின்ற இகழ்ச்சிக்கிடமான இச்சனனத்தை யின்னும் யானடையாதிருக்கும்படி யொழித்தல் நன்று.

(கு-உ.) [1] "தெருவிலேயு நித்தில மெறிஅலைவாய்ச் செந்தில்"—திருப்புகழ் 63.

"ஒருகோடி முத்தம் தெள்ளிக் கொழிக்கும் கடற் செந்தில்"—கந்தர் அலங்காரம் 106.

[2] 'கெடுவதிப் பிறவி சீசீ'—அப்பர் 4-76-10.

இந்த உடலைச் சுந்தரரும்—"பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்" என்றார். பறி—உடம்பு (7–78–1).

[3] செய்யுள் 57-ம், 58–ம் 'குரு சீலத்தனே! (57) பிறப்பூடு சேர்ப்பது அன்று (58) என ஒரே பயனிலையைக் கொண்டன.

## 59. திருவடியிற் சேர

**சேர்ப்பது மாலய நீலோற் பலகிரித் தெய்வவள்ளி**
**சேர்ப்பது மாலய முற்று ரெனப்பலர் செப்பவெப்புச்**
**சேர்ப்பது மாலய வத்தைமன் யாக்கை சிதைவதன்முன்**
**சேர்ப்பது மாலய வாசவன் செப்பிய செப்பதத்தே.**

(ப-உ.) சேர்—நெருங்கியிருக்கின்ற, பதும்-தாமரைகளும், ஆல்-அசைகின்ற, அயம்-சலத்தின்கண், நீலோற்பல—செங்கழுநீர் மலர்கின்ற, கிரி-திருத்தணியில் வாழும், தெய்வ-தெய்விகமாகிய, வள்ளி-வள்ளியம்மைக்கு, சேர்ப்ப—தலைவனே! துமால்-தும்மலினால், லயமுற்றார்-மரணமடைந்தார், என—என்று, பலர்-பலரும், செப்ப-சொல்ல, வெப்பு-வெதும்புகின்ற, சேர்ப்பது—சிலேத்துமமும், மால்—மயக்கமும், அயவத்தை-பஞ்சாவஸ்தைகளும், மன்-நிலைபெற்ற, யாக்கை-இவ்வுடல், சிதைவதன்முன்-அழிவதற்குமுன்னமே, சேர்ப்பது-என்னைச் சேர்த்தருளவேண்டும், மால்—விஷ்ணுவும், அய—பிரம்மாவும், வாசவன்—இந்திரனும், செப்பிய—புகழ்ந்தோதிய, செ-சிவந்த, பதம்-திருவடித்தாமரையில், (எ-று). நீ—தோன்றா எழுவாய். சேர்ப்பது-பயனிலை. அத்து-சாரியை. ஏ—அசை.

(க-உ.) திருத்தணி மலையோனே! வள்ளிநாயகனே! வெப்பும் சிலேத்துமமும் மயக்கமுமாகிய அவஸ்தை நிறைந்த என்னுடல் அழிந்து விடுவதன் முன்னும், தும்மினவுடனே இறந்தானென்று பலர்சொல்வதன் முன்னும், பிரமா, விஷ்ணு, இந்திரன் முதலினோர் புகழு நின் பாத தாமரையில் என்னைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

(கு-உ.) (1) இந்தப்பாடல் தணிகைநாயகர்க்கு உகந்தது- இதை அடியேனது கனவில் 'நல்ல எலுமிச்சம் பழத்தைக் கந்தரந்தாதியில் மறந்துவிட்டாய்' என்று அவர் கூறினர்— ஆதலால் இப்பாடலை 'நல்ல எலுமிச்சம் பழப் பாட்டு' எனக் கூறுதல் வேண்டும். அருணகிரிநாதர் தம்மைக் காண வேண்டிச் செலுத்தின ஓர் படிமக்கலம் (காணிக்கை எலுமிச்சம் பழம்) என்று இறைவன் கருதினர்போலும். இறைவன் அங்ஙனம் குறித்த விவரத்தைப் பின்வரும் பாடலிற் காண்க ;-

சந்நிதியில் நின்று புகழ் அந்தாதி பாடுந்
தருணத்தில் அந்தாதியில்
தணிமலைக் குரியதாஞ் 'சேர்ப்பது மாலெ'னத்
துவங்குந் தனிப்பாடலை
அந்நிலையில் ஓதுதற் கடியேன் மறந்திடலும்
அன்றிரவில் என் கனவிலே
அண்டிஒரு விப்பிரச் சிறுவனைத் தோன்றி, உடை
அங்கம் ப்ரகாசமாக
நன்னிறத் தேகத்தில் வெண்ணிறத் திருநீறு
நன்றொளிர எதிரில் நின்று
'நல்லஎலு மிச்சம் பழமொன்று கந்தரந்
தாதியில் மறந்தனை' என,
'என்னெதிரில் நிற்குநீ சிறுவனலை முருகனே'
என்றுரைத் தியான்பிடிக்க
எழுமுனே சிறிதோடி, திருவுரு மறைந்தமூரு
கேச! தணி கேச! இறையே!

(2) ஐ அவத்தை — பஞ்சாவஸ்தைகள் — சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். (1) சாக்கிரம்- விழிப்புநிலை- ஆன்மா புருவ மத்தியில் நின்று, தத்துவங்களுடன் கூடி, விஷய நுகர்ச்சியில் மெத்தென நிற்கும் நிலை. (2) சொப்பனம் — கனவு நிலை — ஆன்மா கண்டத்தில் நிற்க, மனம் வேலை செய்துகொண்டும், இந்திரியங்கள் பத்தும் தொழிலின்றியும் உள்ள நிலை. (3) சுழுத்தி — (மனமும்) புலன்களும் செயலற்று உறங்கும் நிலை. (4) துரியம்— ஆன்மா உந்திப் ப்ரதேசத்தில் பிராணனோடு லயித்து நிற்கத் தன்னையே விஷயீகரிக்கும் நான்காம் ஆன்ம நிலை. யோகியர்தன்மயமாய் நிற்கும் உயர்நிலை—"துரிய நிலையே கண்ட முத்தர்" திருப்புகழ் 148. (5) துரியாதீதம்—மூலாதாரத்தில் ஆன்மாதங்கி அவிச்சை மாத்திரையை விஷயீகரிக்கும் ஐந்தாம் ஆன்மநிலை. ஆன்மா மிகத் தூய்மையாய் நிற்கும் நிலை.

(3) தும்மலினால் மரணம் அடைந்தார் என்னும்படி அவ் வளவு நிலையாமையை இவ்வாழ்க்கை பூண்டிருப்பதால்தான் "துமிக் குமர சரண மென்னீர்"—என்றார் 97ஆம் பாடலில்.

## 60. ஈதற் சிறப்பு

செப்பத் தமதிலை மாற்றார் கொளுமுன்னஞ் செல்வர்க்கிடச்
செப்பத் தமதிலை யெங்ஙனுய் வார்தெய்வ வேழமுகன்
செப்பத் தமதிலை வாணுத லேனக்கினர் சேணில்வெள்ளிச்
செப்பத் தமதிலை வென்றார் குமாரவத் திக்கரசே.

(ப-உ.) செப்ப-நடுவுநிலைமையால், தமது-தங்களுடைய, இலை—இல்வாழ்க்கைக்குரிய மனைவியையும், மாற்றார்-பகைஞர் கள், கொளுமுன்னம்—கைப்பற்றிக்கொள்ளு முன்னமே, செல்வர்க்கு-ஐசுவரியவான்களுக்கு, இட-(வறியோர்க்கு) இட் டுண்ண, செப்பு-சிவந்த, அத்தமது-கையானது, இலை—இல்லை யாயின், எங்ஙன்—எப்படி, உய்வார்-பிழைப்பார்கள்; தெய்வ- தெய்விகமாகிய, வேழமுகன்-யானைமுக விநாயகரால், செப்பு- புகழப்பட்ட, அத்தம-(அவரது) தம்பியே! திலை – சிதம்பர நடேசரான, வாள்–ஒளிபொருந்திய, நுதல் நோக்கினர்- நெற்றிக்கண்ணை யுடையவரும், சேணில் — ஆகாசத்தில், வெள்ளி—வெள்ளியும், செப்பு-செம்பும், அத்த-பொன்னுமான மதிலை - மதிலையுடைய திரிபுரத்தை, வென்றார்-செயித்தவரு மாகிய பரமசிவனது, குமார-மைந்தனே! அத்திக்கு-தெய்வ யானை நாயகிக்கு, அரசே - தலைவனே! (எ—று). செல்வர் - தோன்று எழுவாய், எங்ஙனுய்வார்-பயனிலை. ஏ - அசை,

(க-உ.) கணபதிக் கிளையோனே! பாலலோசனரும்! திரிபுரதகனரும், தில்லை நடேசருமான பரமசிவனதுமைந்தனே, தெய்வயானை நாயகனே! செல்வமுடையார் அஃது நிலையாமை யென்றறிந்தும் அதனால் நல்லறஞ் செய்யாதிருப்பாராயின் எப்படிக் கடைத்தேறுவார்கள்.

(கு-உ.) (1) திரிபுரத்து மதில்கள் வெள்ளி, செம்பு, பொன்—என்றார் :—இரும்பு, வெள்ளி, பொன் எனப் பிற நூல்கள் கூறும்—

> "மயன் தான் மகிழ்ந்திரும்பு வெள்ளி பொன்னால்
> மனையவர்க்குச் சமைத்தான்"
>
> —ஞானவரோ-உபதேசம்-2036.

"ஆடகம், தூயவெள்ளி, அயமெனுங்கோட்டை"
—திரு அதிகைப் புராணம்-திரிபுராதிகா-பூசித்த 38.

"மூன்றிஞ்சி-பொன், அயம், வெள்ளி தன்னாற்
பொற்புடனன்வன்றே"—திருக்கூவப் புராணம் திரிபுர 7.

திரிபுரம் எரித்த வரலாறு—பாடல் 47-ன் குறிப்பைப் பார்க்க. (2) செப்ப-இட-நடுவு நிலைமையாய் இட்டுண்ண— எனச் சேர்க்க.

'வாணுதல் நோக்கினர்' என்பதற்குச் 'சிவகாமியை விரும்பினவர்'—எனவும் பொருள் கூறலாம்.

## 61. வேலின் சிறப்பு

திக்கர சத்தி தவன்சென்று முன்றி திகுமரர்வந்
திக்கர சத்தி யிடத்தோயென் செய்வ தெனத்தருநீ
திக்கர சத்தி விதிர்த்திலே யேலெவன் செய்குவரத்
திக்கர சத்தி யலைவாய் வளர்நித் திலக்கொழுந்தே.

(ப-உ.) திக்கர்-திக்குப் பாலகர்களும், அச-ஆட்டை, திதவன் - நிலைபெற்ற வாகனமாகவுடைய அக்கினியும், சென்றுமுன்-முற்காலத்திற் பரமசிவனிடத்திற் போய், திதி குமரர்-திதியின் பிள்ளைகளாகிய அசுரர்கள் செய்த, வந்திக்கு-கொடுமைக்கு, அர-சங்கரனே! சத்தி-உமையை, இடத்தோய்-இடது பாகத்தில் உடையோனே! என் செய்வது-எப்படித் தப்பிப் பிழைப்போம், என-என்று முறையிடுகையில், தரும்-அப்பரமசிவன் உமக்களித்தருளிய, நீதி-(அடியார் இடரை நீக்கும்) நெறியையுடைய, கர சத்தி-திருக்கரத்தின் வேலாயுதத்தை, விதிர்த்திலையேல்-நீ எறிந்து அவ்வசுரர் கிளையை யழிக்காவிடில், எவன் செய்குவர்-அத்தேவர்கள் என்னசெய்து பிழைப்பார்கள், அத்திக்கு-தெய்வயானைக்கு, அரசு—நாயகனே! அத்தி - சமுத்திரத்தின்கண், அலைவாய் - அலைமோதுகின்ற திருச்செந்திற் பதியில், வளர் — வளர்கின்ற, நித்திலக் கொழுந்தே-முத்தின் கொழுந்தொளி யானவனே! (எ-று). அவர்கள்-தோன்றா எழுவாய். எவன் செய்குவர்-பயனிலை. ஏ - அசை.

(க-உ.) தெய்வயானை நாயகனே! திருச்செந்திற்பதியில் வாழும் முத்தொளியானவனே! முன் தேவர்கள் முறையிடக் கேட்டுப் பரமசிவனருளிய வேற்படையை நீர் செலுத்தா விடில் அசுரர்கள் செய்த தீமையைக் கடந்து அவர்கள் பிழைப்ப தெப்படி?

(கு–உ.) (1) அசுரர்கள் செய்த கொடுமையைச் சிவபிரானிடத்தில் தேவர்கள் முறையிட்டது :—

"வெந்தகுவர்க் காற்ருந விண்ணேர் முறைக்கிரங்கி"
—கந்தர் கலிவெண்பா–76.

(2) வேலை–'நீதி சத்தி' என்ருர் 'ஆராயும் நீதி வேல்'–திருப்புகழ் 350, பக்கம் 377–கீழ்க்குறிப்பு.

(3) விதிர்த்தல் — அசைத்தல்.

"மலர்க்கமல கரத்தின் முனை விதிர்க்க"—வேல் வகுப்பு.

"திருக்கை விதிர்க்கும் தனிவேலா"—திருப்புகழ் 105.

(4) 'நித்திலத் தொத்து'—சம்பந்தர் 2-102-11; 2-104-4;

## 62. வினையால் வருந்துவது ஏன்

திலமுந் தயில முநிகர வெங்குந் திகழ்தருசெந்
திலமுந் தயில முருகா வெனுதத் திநகையினித்
திலமுந் தயிலமு தத்தா லுருகிய சித்தவென்னே
திலமுந் தயில கலவினை மேவித் தியங்குவதே.

(ப–உ.) திலமும் – எள்ளும், தயிலமும் - எண்ணெயும், நிகர-ஒப்பாக, எங்கும்-எவ்விடங்களிலும், திகழ்தரு-நிறைந்து விளங்குகின்ற, செந்தில-திருச்செந்திற் பதியோனே! முந்து ஆயுதவருக்கங்களின் முதன்மையான, அயில-வேலாயுதத்தையுடையவனே! முருகா – குமாரக்கடவுளே! எனுது - என்று துதித்து ஒலமிடாது, அத்தி - தெய்வயானை நாயகியினது, நகை - தந்தமாகிய, இன் - இனிய, நித்திலம் – முத்தானது, உந்து–செலுத்துகின்ற, அயில்–நுகரப்பட்ட, அமுதத்தால்–அதராவமுதத்தால், உருகிய–குழைந்த, சித்த–இருதயத்தையுடையோனே! என்-என்ன காரணம், ஏதிலம் - (வழியடிமையாகிய யாம்) அயலோர்போல, முந்தயில்-முற்சனனத்திஞல் வந்த, அகல-பெரிதான, வினை மேவி–தீவினையுற்று, தியங்குவது - வருந்துகின்றது. (எ - று). தியங்குவது – எழுவாய். என்-பயனிலை. ஏ-அசை.

(க – உ.) தெய்வயானை நாயகியின் அதரபானத்தால் உருகும் இருதயனே! [1]எங்கும் எள்ளும் எண்ணெயும்போல் நிறைந்து விளங்குகின்றவனே! முருகனே! வேலாயுதனே! செந்திற்பதியோனே! என்று துதியாமல் உனது வழியடிமையாகிய யாம் அயலோர் போலப் பழவினையான் மயங்குகின்றதென்ன?

(கு-உ.) [1]நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும் எள்ளு மெண்ணெயும் போனின்ற எந்தையே''—திருவாசகம் - திருச் சதகம்-46.

படைகளுள் முதன்மையானது வேல் :—''எண்ணரும் படைகட் கெல்லாம் இறைவ''—கந்தபுரா-4-5-213.

வேல் . . . . வினையை அறுக்கும் — ''வினையோட விடும் கதிர்வேல்''—கந்-அநுபூதி 40, திருப்புகழ் 786, 1200 பார்க்க.

## 63. பிரமன் கைப்படாதிருக்க

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத் தீதலு மேதியையூர்
தியங்காப் பொறியுண் டவமிலி யேயென்று செப்பலுஞ்சத்
தியங்காப் பொறியுண் டயன்கைப் படாது திரவெற்புநி
தியங்காப் பொறியுண்டை பண்டுயப் போர்செய்த சேவகனே.

(ப-உ.) தியங்கா - மயங்காத, பொறியுண்டெனும் - ஐம்பொறிகளையுடைய, தனு-உடல், தீதலும்-வெகின்றதும், மேதியை - எருமைக்கடாவை, ஊர்தி - வாகனமாகவுடைய யமன், அங்கா-(என்னைக் கொண்டுபோய்) வாயைத் திற வென்றும், பொறி-யான் செய்த பாவத்திற்காகத் தீயை, உண் - தின்னென்றும், தவமிலியேயென்று - நற்றவத்தைச் செய்யாத பாவியே யென்றும், செப்பலும் - சொல்லுதலும், சத்தியம்-உண்மையாதலால், கா-இனியாவது காத்தருளும், பொறியுண்டு - பிரமலிபி யடைந்து, அயன் கைப்படாது- பிரமதேவன சிருஷ்டிக்குள்ளாகாமற் பிறப்பொழியும்படி, திர-நிலைபெற்ற, வெற்பு-கிரவுஞ்சகிரியை, நிதியம்-சங்கநிதி பதுமநிதியும், கா-கற்பகத்தருவும், பொறியுண்டை-செல்வத் திரளையுமுடைய பொன்னுலகானது, பண்டு - பூர்வத்தில், உய-பிழைக்கும்படி போர்செய்த-போரினைச் செய்து வென்ற சேவகனே - வீரனே! (எ-று). நீ - தோன்றா எழுவாய். கா - பயனிலை. ஏ-அசை.

(க-உ.) முன் கிரவுஞ்சகிரியைப் பிளந்து தேவலோகத் தைக் காத்த வீரனே! ஐம்பொறிகளையுடைய உடல் சாம்ப லாவதும், செய்த பாவத்துக்குத் தக்கபடி தீப்பொறியை யூட்டும் யம தண்டனைக்கு நான் உள்ளாவதும் சத்தியம்! இனியாவது இவ்வுடற் சுமை கொள்ளாமற் பிறப்பறக் காப்பாற்றவேண்டும்.

(கு-உ.) பொறியுண்டு அயன் கைப்படுதல்:—பிரமனால் தலையெழுத்து எழுதப்படுதல். "என்தலைமேல் அயன் கையெழுத்தே" (கந். அலங். 40),

(2) முருகவேள் பொன்னுலகைக் காத்தது—

"இமையவர் நாட்டினில் நிறை குடியேற்றிய
......தம்பிரானே"—திருப்புகழ் 990-பக்கம் 866 குறிப்பு.

## 64. பிரமனது அறியாமை

**சேவக மன்ன மலர்க்கோமுன் னீசொலத் தெய்வவள்ளி**
**சேவக மன்ன வதனும் புயகிரி செற்றமுழுச்**
**சேவக மன்ன திருவாவி னன்குடிச் செல்வகல்விச்**
**சேவக மன்ன முநிக்கெங்ங னுணித் திகைப்புற்றதே.**

(ப-உ.) சே-இடபவாகனத்தின், அகம்-மேல், மன்னு-நிலைபெற்று வருகின்ற, அமலர்க்கு-பரமசிவனுக்கு, ஓம்-பிரணவப் பொருளை, முன்-பூர்வத்தில், நீ சொல-நீ யுபதேசிக்க, தெய்வ-தெய்விகமாகிய, வள்ளி-வள்ளிநாயகியினது, சே-சிவந்த, அகம் அன்ன-இருதய தாமரைபோன்ற, வதனும் புய-முகாரவிந்தனே! கிரி-கிரவுஞ்சகிரியை, செற்ற-பிளந்த, முழுச் சேவக-ஒப்பற்ற வீரனே! மன்ன-தலைவனே! திருவாவினன்குடிச் செல்வ-சிறந்த பழநிப் பதிவாழுங் குமாரக் கடவுளே! கல்விச் சேவகம்-வேதமோதுந் திறத்தையும், அன்னம்-அன்னவாகனத்தையுமுடைய, முநி-பிரமா, எங்ஙன்-எவ்விதத்தினலே, நாணி-வெட்கி, திகைப்புற்றது-அப்பிரணவப்பொருள் தெரியாமல் மயங்கினது. (எ-று.) திகைப்புற்றது-எழுவாய், எங்ஙன்-பயனிலை. கு-சாரியை. ஏ-அசை.

(க-உ.) வள்ளிநாயகி யிருதய தாமரைபோன்ற வதனும் புயனே! கிரவுஞ்சகிரியைப் பிளந்த வீரனே! பழநிப்பதியானே! தலைவனே! பரமசிவனுக்கு உபதேசித்த பிரணவத்திற்கு வேதமோதுந் திறத்தையுடைய பிரம்மா பொருள் தெரியாமல் நாணித் திகைப்புற்றிருந்த தெப்படி?

(கு-உ.) (1) பிரமன் திகைப்புற்றது:—

"ஓம் எனப்படும் ஓரெழுத் துண்மையை உணரான்
மாமலர்ப் பெருங் கடவுளும் மயங்கினன்"
—கந்தபுராணம் 1-16-13.

"ஓம் என அதாரம் உரையாத பிரமா"—திருப்புகழ் 987.

(2) முருகவேளைத் தியானித்துத் தியானித்து வள்ளியின் இதயதாமரையில் முருகவேளின் திருமுகம்—படம் பிடித்தது போலப் பதிந்திருந்தது போலும்; அதனல் வள்ளி சே—அகம் மன்னு — அவ்வதனம்புயம் — எனவும் பிரித்துப் பொருள் கண்டு மகிழலாம். வள்ளியின் இதய தாமரைபோன்ற முகாரவிந்தன் — என்றது — வள்ளியின் இதய தாமரையில் நிறைந்துள்ளது கருணை! அந்தக் கருணையே முருகனது முகார விந்தத்தில் விளங்குகின்றது—என்றபடி. முருகனைக் 'கருணை மேகமே! தூய கருணை வாரியே! ஈறில் கருணை மேருவே தேவர் பெருமாளே' எனமுர் (திருப்புகழ் 1048). வள்ளியையும்— "கருணை அகலாவிழிச்சி" என்றுர் திருப்புகழ் 521.

(3) 'முழுச் சேவகனே'—சேவகன் வகுப்பு.

(4) பிரமனை 'முநி' என்றது—'அருநெறிய மறைவல்ல முநி'—சம்பந்தர் 1-1-11.

## 65. நற்றுயிரங்கல்: பிறவியற

**திகைப்படங் கப்புயந் தந்தரு ளானென் படிங்கனிய**
**திகைப்படங் கத்தமை யார்செந்தி லாரேன்ப டேன்னனுய**
**திகைப்படங் கப்புகல் சேயென்பள் கன்னிகண் ணீர்தரவி**
**திகைப்படங் கத்தமை யாதெமை யாட்கொளுஞ் சீகரமே.**

(ப-உ.) திகைப்பள்-மயங்குகிருள்; தங்க-தழுவி யுயிர் பெற்றிருக்கும்படி, புயம்-தனது புயத்தை, தந்தருளான்-தந்து கிருபை செய்கின்றுனில்லை, என்பள்-என்கிருள்; திங்கள்-சந்திரனை, நியதி கைப்பள்-நித்தியமு முபாலம்பனஞ் செய்கிருள்; தம்-தமது, கத்து-இப்படி வருந்தி முறையிடுதலை, அமையார்—க்ஷமித்து ரக்ஷிக்கின்றுரில்லை, செந்திலார்-செந்திற் குமரர், என்பள்-என்கிருள்; தென்னன்-கூன் பாண்டியனது, உயதி-(சுர) வருத்தத்தின், கைப்பு-வெப்பம், அடங்க-தணியும்படி, புகல்-(தமிழ்வேதமாகிய தேவாரத்தை) மொழிந்தருளிய, சேய் என்பள்-சம்பந்தப்பிள்ளையே யென்றுஞ் சொல்லுகிருள்; கன்னி-எனதுயிராகிய பெண்ணனவள், கண்ணீர் தர-கண்ணீர் சோரும்படியாக, (ஆதலால்) விதி-பிரமனது, கைபடு—கையினுற் சிருஷ்டிக்கப்படுகின்ற அங் கத்து-உடற்பைக்குள், அமையாது-இவ்வான்மா அமைக்கப் பட்டுச்சனனம்உருதபடி, எம்-எம்முடைய, ஐ-குலதெய்வமே! ஆட்கொளும்-அடிமை கொண்டருளவேண்டும், சீகரமே-அழகிய குமாரக் கடவுளே! (எ-று.) நீர்-தோன்று எழுவாய். ஆட்கொளும்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) எங்கள் குலதெய்வமான அழகனே! என்னுயிராகிய பெண்ணனவள் 'செந்திற்பதியான் யான் முறையிடுங் குறையைத் தணிக்கின்றானில்லை, அவன் புயத்தைத் தழுவத் தரவுமில்லை' யென்றும், 'கூன் பாண்டியன் சுரந்தணித்தவனே' என்றும் சொல்லுகிறாள்; சந்திரனையுந் தினந்தோறும் வெறுத்து மயங்குகிறாள்; இனி இப்படிப்பட்ட சனனம் உற்று வருந்தாத வண்ணம் ஆண்டு கொள்ளவேண்டும்.

(கு-உ.) "பாண்டியனது வெப்பத்தைத் தணித்தது — திருப்புகழ் 181, பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

விதி கைப்படுதல் — பாடல் 63 பார்க்க.

## 66. வினை பொடிபட

**சீகர சிந்துர வுத்தவெஞ் சூர செயபுயவ**
**சீகர சிந்துர வல்லிசிங் கார சிவசுதசு**
**சீகர சிந்துர கந்தர வாகன் சிறைவிடுஞ்சு**
**சீகர சிந்துர மால்வினைக் குன்றைச் சிகண்டிகொண்டே.**

(ப-உ.) சீகரம்-அலைகளையுடைய, சிந்து-சமுத்திரத்தின் கண், ரவுத்த-இராவுத்தனான, வெம்-கொடிய, சூர-சூரனை, செய-வென்றவனே! புய-உனது திருப்புயத்தை, வசீகர வசிகரித்தலில் வாஞ்சையுள்ள, சிந்துர-திலதத்தையுடைய, வல்லி-வள்ளிநாயகிக்குரிய, சிங்கார-அலங்காரத்தையுடையவனே! சிவசுத-பரமசிவனது மைந்தனே! சுசீ-அக்கினியினது கர — கையிலிருந்தவனே! சிந்துர — வெள்ளையானையையும், கந்தர-மேகத்தையும், வாகன்-வாகனமாகக்கொண்ட இந்திரனது, சிறை-சிறையை, விடும்-களைந்த, சுசீகர-பரிசுத்தனே! சிந்து-சிதறஅடி, உர-வலிய, மால்-மயக்கத்தைத் தராநின்ற, வினை — இருவினையாகிய, குன்றை — கல் மலையை, சிகண்டி கொண்டு-மயில்வாகனரூடராய் என்முன் எழுந்தருளி (எ-று,) நீ-தோன்றா எழுவாய். சிந்து-பயனிலை. ஏ-அசை.

(க-உ,) சமுத்திரத்தின்கண் வலிய சூரனை வென்றவனே! அழகிய புயாசலனே! வள்ளி நாயகனே! பரமசிவன் மைந்தனே! அக்கினியின் கையிலிருந்தவனே! இந்திரனது சிறையைக் களைந்த பரிசுத்தனே! நீ மயிலேறி வந்து என் வினையாகிய குன்றைப் பொடிபடுத்த வேண்டும்.

(கு-உ.) (1) உன் மயில் வாகனத்தை ஏவி என் வினைக் குன்றைப் பொடிபடச்செய் — எனவும் பொருள் காணலாம். மயில் – மலையையும் பொடிபடுத்தும்—

"வெருகோடி மலைகளும் அடியினில் தகர்ந்திரு
விசும்பிற் பறக்க"

"படர் சக்ரவாளகிரி துகள்பட வையாளி வருமயில்"
—மயில் விருத்தம்-4. 7.

(2) சுசிகர-"அக்னிகர மீதிற் ப்ரபாகரனும்"—வேடிச்சி வகுப்பு.

"தீக்கடவுள் சீதப்பகிரதிக்கே சென்றுய்ப்ப"
—கந்தர் கலிவெண்பா.

## 67. நலம்புனைந்துரைத்தல் (கண்ணயந்துரைத்தல்)

சிகண்டிதத் தத்த மரவாரி விட்டத் திதிபுத்ரரா
சிகண்டிதத் தத்த நகபூ தரதெய்வ வள்ளிக்கொடிச்
சிகண்டிதத் தத்த மலர்மேற் குவித்திடை செப்புருவஞ்
சிகண்டிதத் தத்த கறபோ பலமென்னுஞ் சேகரனே.

(ப–உ.) சிகண்டி – மயில் வாகனத்தை, தத்த - சதி பாய்ந்து செல்லும்படி, தமர–முழங்குகின்ற, வாரி–சமுத்திரத் தின்கண், விட்டு - நடத்தி, அ – அந்த, திதி – திதியினுடைய, புத்ர ராசி – பிள்ளைகளாகிய அசுரக் கூட்டங்களை, கண்டித– சேதித்தவனே! தத்த–தந்தத்தையுடைய, நக பூதர–பாம்பு போன்ற திருச்செங்கோட்டுக் கதிபனே! தெய்வ – தெய்விக மான, வள்ளிக் கொடிச்சி–குறமாதாகிய வள்ளிநாயகியை, கண்டு–பார்த்து, இதத்து–இதமாக, அத்த மலர்–உன் கைக ளாகிய மலரை, மேற்குவித்து–சென்னிமேற் கூப்பி, இடை– பெண்ணே உன்னிடையானது, செப்பு–சிறப்பித்துச் சொல்லத் தக்க, உரு–வடிவமாகிய, வஞ்சி – வஞ்சிக்கொடியே; கண்– விழி, தித–நிலைபெற்ற, தத்து – ஆபத்துகளெல்லாம், அகல்– நீங்குகின்ற, தபோபலம் – (விரகாக்கினியைத் தணித்தலால் நான் செய்) தவத்தின் பயனே, என்னும்–என்று நலம்புனைந் துரைக்கும், சேகரனே–தலைவனே! (எ-று).

(க–உ.) சமுத்திரத்தின்கண் மயிலேறிச் சென்று அசுரர் கிளையை மாய்த்தவனே! திருச்செங்கோட்டு மலையதிபனே! வள்ளிநாயகியை நோக்கிச் சென்னிமேற் கைகூப்பி உன் இடை

வஞ்சிக்கொடியே, உன் கண்கள் என் தவப்பயனே என்று நலம் பாராட்டுங் குமாரக் கடவுளே!

(கு-உ.) வள்ளியை இரண்டு கைகளாலும் தொழுதது:-
"எயினர் ...... மயிலை இருகை தொழுது புணர் மார்பா"
—திருப்புகழ் 1069.

## 68. பொழுது விடிதலைக் கண்டு தலைவி வருந்துதல்

**சேகர வாரண வேல்வீர வேடச் சிறுமிபத**
**சேகர வாரண மேவும் புயாசல தீவினையின்**
**சேகர வாரண வெற்பாள நாளுந் த்ரியம்பகனூர்**
**சேகர வாரண நின்கையில் வாரணஞ் சீவனென்றே.**

(ப-உ.) சே—(அடியார்களைக்) காத்தலில், கரவா—வஞ்சித்தலில்லாத, ரண—யுத்தத்தில் வலிதங்கிய, வேல்—வேலாயுதத்தையுடைய, வீர—வீரனே! வேடச் சிறுமி—குறச் சிறுமியாகிய வள்ளி நாயகியினது: பத—பாதத்தை, சேகர—முடியிற் றரித்தவனே! வாரணம்-தெய்வயானை, மேவும்-தழுவும், புயாசல—மலைபோன்ற புயத்தையுடையவனே! தீவினையின்—கொடிய வினையின், சேகு-வயிரத்தை, அர—சங்கரிப்பவனே! ஆரண-வேதம் பூசிக்கின்ற, வெற்பாள—திருச்செங்கோட்டுமலைக் கதிபனே: நாளும்—நாடோறும், த்ரியம்பகனூர்—திரிநேத்திரங்களையுடைய பரமசிவனது, சே—இடப வாகனமாகிய விஷ்ணுவின், கர—கையிலிருக்கின்ற, வாரணம்—சங்குக்கும், நின்—உனது, கையில்—திருககரத்தி லிருக்கின்ற, வாரணம்—கொடியாகிய கோழிக்கும், சீவனென்றே—இரவு நீடியாமல் விடிதலைக்காட்டித் தொனி செய்தலாலும், கூவுதலாலும், பிராணனென்றாகவே யிருக்குமோ. (எ-று.) சீவன்—எழுவாய். ஒன்றே—பயனிலை. இவ்விரண்டு கவியுங் *குளகம்.

(க-உ.) அடியார்களைக் காக்கும் வேலாயுதத்தையுடையவனே! வள்ளிநாயகி பதசேகரனே! தெய்வ யானை தழுவும் புயனே! வயிரமான வினையை யொழிப்பவனே! திருச்செங்கோட்டு மலையையுடையவனே! பரமசிவனுக்கு இடப வாகனமாகிய விஷ்ணுவின் கையிலிருக்கின்ற சங்கும் உனது கரத்திலிருக்கின்ற கொடியாகிய கோழியும், பொழுது விடிதலைக் காட்டித் தொனி செய்தலுங் கூவுதலும் ஒன்றாயிருத்தலால் அவற்றிற்குப் பிராணனும் ஒன்றாகவே யிருக்குமோ?

(கு-உ.) (1) வேடச் சிறுமி பதசேகரன்—
"வேட பதிவ்ருதா சுசிபாத் பதும சேகரா"
—திருப்புகழ் 1050. (1107, 1174, 1217-ம்) பார்க்க.

(2) சிவனது இடபம் திருமால்—
"நவநீத் திருட்டுப்பாணி இடப முதுகிடை ...... ஏறி"
"காளை ஏறு கர்த்தன்"
"குழலூதுங் கையன் மிசை யேறும்பன்"
—திருப்புகழ் 983, 786, 389 முறையே பக்கம் 844, 333, 482
கீழ்க்குறிப்பைப் பார்க்க.

(3) பொழுது விடிதலைக் காட்டிச் சங்கந் தொனிக்கும்; கோழி கூவும்,
"கூவின கோழி ...... இயம்பின சங்கம்"
—திருவாசகம்-திருப்பள்ளியெழுச்சி-3.
"வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ"-திருப்பாவை 6
"வந்தெங்கும் கோழி அழைத்தன காண்" டை 18.

பொழுது விடிந்தால் தலைவன் தன்னை விட்டுப் பிரிவான் என்று நினைந்து தலைவி வருந்தல். அவ்வருத்தம் காரணமாக, ஒலிக்கும் இந்த சங்கத்துக்கும் கூவும் இந்தக் கோழிக்கும் உயிர் ஒன்று போலும், என்று கூறுகின்றாள்,

(4) *பாடல் 67-68 ஒருவினைகொண்டு முடிதலால் இவை குளகம் - 'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்' என்பது சூத்திரம்'' (தண்டியலங்காரம் 4).

## 69. சீவன் அவப்பொழுது போக்குவது

சீவன சத்துரு கன்பாற் பிறப்பறத் தேவருய்யச்
சீவன சத்துரு மிக்குமெய் யோன்கையிற் சேர்த்தசெவ்வேள்
சீவன சத்துருச் செய்யான் மருகவெ னுதிடையே
சீவன சத்துரு வெய்தியெய் தாப்பழி சிந்திப்பதே

(ப–உ.) சீவன்–பிராணன், அசத்து-சத்தல்லவாகையால் (சீவனுந் தநுவும் இயைந்திருக்கும்போதே), உருகு-இளகத் தக்க, அன்பால்-பக்தியினால், பிறப்பு–சனனம், அற–(சத்தின்னதென் றறிந்து) ஒழியும்படி, தேவர்–தேவர்கள், உய்ய–பிழைக்கும்படியாய், சீவன்–சீவகாரணனான பரமசிவனால், அசத்து-ஆட்டு வாகனத்தையுடைய, உருமிக்கும்–வெப்பத்தைத் தரு

கின்ற, மெய்யோன்–தேகத்தையுடைய அக்கினியினது[1], கையில் - கரத்தில், சேர்த்த–சேர்க்கப்பட்ட, செவ்வேள் - குமாரக் கடவுளே! சீ–பிரகாசம் பொருந்திய, வனசத்து–தாமரைத் தவிசையுடைய, உருச்செய்யாள்-சிவந்த திருமேனியையுடைய மகாலக்ஷ்மிக்கு, மருக-மருகனே! எனது–என்று உள்ளத்து இருத்தித் தியானிக்காமல், இடையே–மத்தியில், சீவன்–சீவனுனது (சத்தாகிய பரத்தையும் அசத்தாகிய தன்னையும் (அறிவதைவிட்டு), அசத்து–அசத்தாகிய, உரு–(மல பாண்டமாகிய) உடலை, எய்தி–அடைந்து, எய்தாப் பழி–அதற்கேற்கத் தகாத பெரும் பழிகளை, சிந்திப்பது-(என்னிருதயம்) சிந்தித்துக்கொண்டு அவமே காலங் கழிக்கின்றது. (எ–று.) இருதயம்-தோன்றா எழுவாய். சிந்திப்பது–பயனிலை. ஏ - அசை.

(க–உ.) சீவன் அசத்தாயிருந்தும் அவ்வசத்தைப் பற்றி வருந் தேகாதி முதலியபிறப்பொழியும்படி, சத்தாகியபரனே! தேவர்களைக் காத்த செவ்வேளே! இலக்குமியின் மருகோனே! என்று அன்பினுல் உருகித் துதியாமல், அத்தேகம் பிழைத்தற்குரிய சீவனத்தைப்பற்றி யடாத பழியை யென்னிருதயஞ் சிந்தித்துக்கொண்டிருக்கின்றது.

(கு-உ.) (1) அக்னிகர மீதிற் ப்ரபாகரனும் (திருவகு-12.)

முருகன் அக்கினியின் கரத்தில் விளங்கினவன்—செய்யுள் 66 பார்க்க.

(2) செய்யாள் மருக—'அரி திரு மருகோனே' 'மதனுர் அ(ன்)னை ... மருக'–திருப்புகழ் 305, பக்கம் 259 உரை; 686–பக்கம் 84.

(3) சீவன்–அசத்து என்றூர் '' அறிவினுல் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி''—சிவப்ரகாசம் 55.

'' அறிவறிந்த எல்லாம் அசத்தாகும்'' — சிவஞான போதம் 6-சூ – உதாரணம்.

## 70. விரகதாபம்

சிந்துர வித்தக வாரும் புகர்முகத் தெய்வவெள்ளைச்
சிந்துர வித்தக வல்லிசிங் காரசெந் தூரகுன்றஞ்
சிந்துர வித்தக முத்திக்கு மாய்நின்ற செல்வதுஞ்சா
சிந்துர வித்தக னம்போலு மிங்கிளந் திங்களுமே.

(ப - உ.) சிந்துர - திலதந் தீட்டிய, இத் தகவு - இத் தகைமைப்பாடு, ஆரும் - நிறைந்திருக்கின்ற, புகர் - புள்ளி பொருந்திய, முக-முகத்தையுடைய, தெய்வ - தெய்விகமான, வெள்ளைச்சிந்துர - அயிராவதத்தினிடம் வளர்ந்த, வித்தக - அற்புதமான, வல்லி - தெய்வயானைக்கு, சிங்கார —இனிமை யானவனே! செந்தூர - செந்திற்பதிக்கு நாயகனே! குன்றம்— கிரவுஞ்சகிரியை, சிந்து - பொடிசெய்த, உர - வல்லவனே! வித்தக - சர்வக்ஞனே! முத்திக்கும்-மோக்ஷத்திற்கும், ஆய்— ஆராய்ந்தருள்செய், நின்ற-அடியவர்கட்கெல்லாந் தாய்போல நின்ற, செல்வ — செல்வனே! துஞ்சா — கண்ணுறங்காமல் முழங்குகின்றது, சிந்து-சமுத்திரமும்; ரவி-சூரியனுடைய, தகனம்போலும் - காந்தியைப்போலத் தகிக்கின்றது, இங்கு— இவ்விடத்தில் (இடைவிடாமல்) இளம் - இளமை தங்கிய, திங்களும்-குளிர்ந்த சந்திரனும். (எ - று.) நீ - தோன்று எழுவாய். ஆய்-பயனிலை, ஏ-அசை.

(க-உ.) சிந்துரந் தீட்டும் புகர்முகத்தையுடைய அயிரா வதத்தினிடம் வளர்ந்த தெய்வயானை நாயகனே! முத்திக்கு வித்தகனே! கிரவுஞ்சகிரியைத் தகர்த்த செந்தில் நாயகனே! நிறைந்த செல்வனே! சமுத்திரம் முழங்கியும், சந்திரன் வெப்பத்தைத் தந்தும் என்னை வருத்துவதை நீ ஆய்ந்தருள்.

(கு - உ.) 'ஆய்' என்பது இடைநிலைத் தீபமாய்— முதலில் ஆராய்ந்து என்னும் பொருளையும், பின்னர் 'தாய்' என்னும் பொருளையும் காட்டுகின்றது. முத்திக்கு இந்த அடியான் தக்கவனு என்று ஆராய்ந்து அருள்செய்க செல்வ— என்றும், முத்தியைஅருளுதற்கு-ஆய் நின்ற-தாய்போலஅருள் பாலித்துநிற்கும் - செல்வ என்றும் பொருள் கொள்ளப்பட் டுளது. முத்திக்கும் (ஆய் நின்ற) மூல காரணனாய் நின்ற செல்வ! எனவும் பொருள் காணலாம். இந்தப் பொருளில் சிந்து-எழுவாய் 'துஞ்சா' பயனிலை; 'திங்கள்' எழுவாய் 'தகனம் போலும்' பயனிலை.

(2) கடலும், திங்களும் வேதனை கொடுப்பதை-செய்யுள் 9-ல் பார்க்கவும்.

## 71. மடற் றிறம்

திங்களு மாசுண மும்புனை வார்செல்வ னென்னையிரு
திங்களு மாசுண மாக்கும் பதாம்புயன் செந்திலன்னுள்
திங்களு மாசுண மன்போல் விழியுஞ் செழுங்கரும்பு ந்
திங்களு மாசுண நன்றுன மாற்றமுந் தீட்டினன்றே.

(ப-உ.) திங்களும்–சந்திரனையும், மாசுணமும் – அரவத்தையும், புனைவார் – தரித்துக்கொள்ளுகின்ற பரமசிவனது, செல்வன்–புதல்வனும், என்–என்னுடைய, ஐயிரு திங்களும்–பத்துமாதமென்னுங் காலவளவுக் குட்பட்டுத் தாயின் கர்ப்பத்திலுறும் பிறவித் துன்பத்தையும், மா–மிகவும், சுணமாக்கும்–நீருக்கத்தக்க மகத்துவம் பொருந்திய, பதாம்புயன்–திருவடித் தாமரையை யுடையவனுமாகிய குமாரக் கடவுளது, செந்தில்–திருச்செந்திற்பதியை, அன்னுள் - ஒத்து விளங்காநின்ற இம் மங்கையினுடைய, திங்கு - தீமைகளை, அளும் – உண்டாக்கும், மாசு-(ஆததுமகோடிகள் செய்யும் பாவங்களாகிய)குற்றத்தை உள்–ஆராய்கின்ற, நமன்போல் – யமனையொத்த, விழியும்–கண்ணையும், செழும்–செழுமை தங்கிய, கரும்பும்–கன்னலும், திம்–தித்திப்பான, களும்-தேனும், மாசுண –(ஒப்பாகாமையால்) குற்றமுறும்படி செய்கின்ற, நன்றூன-மிகவும் இனிமையான, மாற்றமும்-மொழியையும், தீட்டின்–எழுத உன்னுற் கூடுமானுல், நன்று–நன்மையாகும். (எ-று.) மடலூர்தல் - தோன்று எழுவாய். நன்று-பயனிலை. ஏ–அசை.

(க – உ.) சந்திரனையுஞ் சர்ப்பாபரணத்தையுந் தரித்த பரமசிவனது மைந்தனும், என் பிறவியை மாற்றித் தமது திருவடியை யருள்வோனுமான குமாரக்கடவுளது செந்தூரை யன்னஇம்மங்கையினது யமனையொத்தகண்ணையும்,தேனினுங் கன்னலினும் இனிய மொழியையும் உன்னுல் எழுதக் கூடுமானுலாகும்; கூடாததால் மடலூர்தல் நன்றன்று.

(கு. - உ.) (1) இது “மொழிநடை யெழுதல் அரிதென விலக்கல்” என்னுந் துறை. அவயவத் தருமை சாற்றல்,

(1) “சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா உரையை எழுதலெவ் வாறு நவின்றருனே”
—(வெங்கைக் கோவை 107).

(2) “மின் திருவாய், மொழியுறு காஞ்சி திகழுறு சீரங்கம்
மூந்திவற்றை ... எழுதுவையோ, உய்த் தெழுதுவையேற்
*கிழியெனக் கண்டோ ருரையா தெழுதக் கிழிதனையே”
—கோடீச்சுரக் கோவை 113.

[*கண்டோர் கிழி என்னுமல் உயிருள்ள பொருள் என்றே கூறும்படி; கிழித்துவிடு என்று சொல்லாதபடி — என இரு பொருள்].

(3) ‘அத்திரு மலர் வாய் மதுவூற மணம்வரத் தீட்டுவையோ’—கழுக்குன்றக் கோவை 115.

(4) "வல்லைந் தரித்த தனத்தே ரெழுதினும் வாய்மழலைச்
சொல்லைத் தரித்திட எவ்வா றெழுதுவை சொல்லெனக்கே"
—பழமலைக்கோவை 104.

(5) 'மலர்த்திருவின் உரையாரிடை யுருவன்றே எழுத லுனக்கரிதே'—சிராமலைக்கோவை 117.

மடல் எழுதுதல்-மடலூர்தல் :-(திருப்புகழ் 668 பக்கம் 32, 235 பக்கம் 87) கீழ்க்குறிப்பைப் பார்க்க,

(2) பிறை சூடிய வரலாறு :—திருப்புகழ் 415 பக்கம் 548, கீழ்க் குறிப்பு. அரவு சூடிய வரலாறு—திருப்புகழ் 286 பக்கம் 210 கீழ்க்குறிப்பு.

(3) ஐயிரு திங்களும் மாசுணம் ஆக்கும்—
"அவன் கால்பட் டழிந்ததிங் கென்தலைமேல்
அயன் கையெழுத்தே"—கந்தரலங்காரம் 40.

பத்து (10) என்னும் எண் சுண்ணம் (0) ஆகும்—என்பது கருத்து.

(4) 'செந்திலன்னாள்—திருச்செந்தூர் என் ஆருயிர்க்கு எத்துணை அருமையோ அத்துணை அருமை வாய்ந்தவள் தலைவி என்றபடி. "பாயும் விடையரன் தில்லையன்னாள்'—திருக்கோவை 3.

(5) கண்ணுக்கு உவமை நமன் :—கண்கொடுங் காலரூபம் —திருப்புகழ் 1107.

(6) 'கரும்பு—மொழிக்கு உவமை—'கரும்பான மொழி' 'கருப்பஞ் சாறெனு மொழியாலே'—திருப்புகழ் 83, 372.

## 72. பிரமனை வெருட்டல்

தீட்டப் படாவினி யுன்னாலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா சலன்சிறை விட்டவன்றாள்
தீட்டப் படாவி வனையே நினைவன் றிசாமுகனே.

(ப-உ.) தீட்டப்படா—எழுதப்படாது, இனி—இனிமேல், உன்னால்—உன்னாலே, என்—என்னுடைய, சென்னி—தலையின் விதியை, கறை-உதிர முதலியவற்றால் நிறைந்த, பிறப்பில்—கருவிற் சனித்தலினால், தீட்டப்படு—அசுசியையடைகின்ற,

ஆவியவர் - உயிர்களை யுடையவரைப்போல, அல்லன் யான் - யானுகேன், திக்கு-எட்டுத் திக்குகளிற் சென்று, நான் மருப்பு-தனது நான்கு கொம்புகளையும், தீட்டு-கூர்மையிடுகின்றதும், அ - அந்த, படா - பட்டமும், வித - சித்திர விதங்களும் பொருந்திய, முகாசலன்-முகத்தையுமுடைய மலைபோன்ற அயிராவதத்தில் ஏறுகின்ற இந்திரனது, சிறை-சிறையை, விட்டவன் - நீக்கியாண்ட குமாரக்கடவுளினுடைய, தாள் - திருவடித் தாமரையை, தீட்ட - அடைய, படா - ஒருகாலும் அழிவில்லாத, இவனையே — இப்படிப்பட்ட முருகனையே, நினைவன் - உள்ளத்திலிருத்தித் தியானிப்பேன் (ஆதலால்), திசாமுகனே — பிரமனே. (எ - று.) சென்னி — எழுவாய். தீட்டப்படா-பயனிலை. ஏ-அசை.

(க - உ.) பிரமாவே! இனி யென்னை யுதிர நிறைந்த கருக்குழியில் அழுந்துவோரைப்போல் நினையாதே! இந்திரனது சிறையைத் தவிர்த்தாண்ட குமாரக்கடவுளது பாத தாமரையை யடையும் பொருட்டு அவனையே தியானித்துக் கொண்டிருக்கிறேனுதலால் எனது தலை உன் கையால் இனி யெழுதப்படாது,

(கு-உ.) (1) சிறைவிட்டவன் தாள் (தீட்ட) தீண்ட (அடைய) நினைவன்; படா இவனையே நினைவன்-அழிதலில்லாத இந்தப் பெருமானையே நினைவன்; எனக் கூட்டிப் பொருள் காணவேண்டும்.

(2) இந்தப் பாடல் 'பங்கேருகனெனை' என்னும் கந்தரலங்காரச் செய்யுளின் (89) கருத்தைத் தழுவியது.

" போரூர்க் குகன்பதம் தொடுஞ் சென்னிக் கில்லைப் பிரமன்
துயருறக் கீறும் எழுத்துக்களே "

" போரி விசாகன் எங்கோன் — கொச்சைச் சிறியனை
யிந்நாளும் பண்ணிய கோகனதத் தச்சற்கு இனிஎ(ன்)னைப்
பண்ணக் கொடான் இது சத்தியமே "
—போரூர் சந்நிதிமுறை அலங்காரம் 41, 26.

(கோகனதத் தச்சன் - பிரமன்; 'பத்மத் தச்சன் - திருப்புகழ் 451.'

## 73. பழமுதிர்சோலையின் பெருமை

திசாமுக வேதனை யன்பாற் கரன்றிங் கடங்களவ
திசாமுக வேதனை யிறிலு மிறிலர் சிறுமம்போ
திசாமுக வேதனை வென்கண்ட வேலன் றினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதன் கார்வரை சேர்பவரே.

(ப-உ.) திசாமுக - நான்கு திக்கு முகங்களையுடைய, வேதன்-பிரமனும், ஐயன்-அவனது பிதாவாகிய விஷ்ணுவும், பாற்கரன்-சூரியனும், திங்கள்-சந்திரனும், தங்கள்-தங்கள் தங்கள், அவதி-ஆயுசு முடிந்து, சாம்-இறக்கின்ற, உகவேதனையீறிலும்-யுகாந்தத்தில் துன்புறுங் காலத்திலும், ஈறிலர்-அழியார்கள், சீறும்-கோபித்தொலிக்கின்ற, அம்போதி-சமுத்திரத்தின்கண் தோன்றி, சாமுக-சாமுகத்தை யுடையவனும், வேதனை-தேவர்கட்குத் துன்பத்தை விளைக்கின்றவனுமாகிய சூரனை, வென் கண்ட-புறங்காட்டச்செய்த, வேலன்-வேலாயுதத்தையுடைய முருகன் வாசஞ் செய்கின்ற, தினைப்புன-தினைப்புனங்களையும், தந்தி-யானைகளின், சாமுக-கூட்டங்களையும், வேதனை - மூங்கில்களையும், நண்ணு - பொருந்தியிருக்கின்ற, தண் - குளிர்ச்சி பொருந்திய, கார்-மேகங்கள் தவழாநின்ற, வரை-பழமுதிர் சோலைமலையை, [1]சேர்பவர்-அடைந்து இடைவிடாமல் தியானிப்பவர். (எ-று.) சேர்பவர் — எழுவாய். ஈறிலர்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) சமுத்திரத்தின்கண் சூரனை வென்ற வேலாயுதப் பெருமான் உறைந்தருளிய சோலைமலையை யடைபவர் பிரமா விஷ்ணு சந்திர சூரியர்கள் எல்லாம் அழியும் யுகாந்தகாலத்தினுந் துன்பமின்றி நித்தியரா யிருப்பார்கள்.

(கு-உ.) [1]சேர்தல் — இடைவிடாது நினைத்தல்; " மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார் "—(திருக்குறள் 3.)

இச்செய்யுள் பழமுதிர்சோலைத் தலத்தின் பெருமையை விளக்குகின்றது. அம்போதி - சாம் - முக - ஏதனை எனப் பிரித்து - ஏதம் செய்தவனாகிய - குற்றம் - துன்பம் இழைத்தவனாகிய சூரனை எனக் கொள்ளலாம், சாம் முகம் - அழிதலை அடைதற்கு உற்ற முகம்.

வேதனை நண்ணு வரை - வே(ய்)தனை — வேய் - மூங்கில், பழமுதிர்சோலையில் - யானைகளின் கூட்டம் என்பதும், அது - கார்வரை என்பதும், - ' உவா இனன்குடி கொண்ட தண் கார் வரை' எனவரும் முதற்பாட்டிலும்அதன் குறிப்பிலும் காண்க.

## 74. துதி

**சேரப் பொருப்பட வித்தே னிறைவன் றிரைசிறையைச்**
**சேரப் பொருப்பட வல்லவன் சூரைச் சிகரியுடன்**
**சேரப் பொருப்பட வென்றண்ட ரேத்திய சேவகன்வான்**
**சேரப் பொருப்பட வேணியிற் சேர்த்தவன் செய்தவமே.**

(ப-உ.) சேர–சேர ராசனது, பொருப்பு-கொல்லிமலைச் சாரலையும் வெள்ளிமலைச் சாரலையுமுடைய, அடவி–வனத்தில் வாழ்கின்ற, தேன்–தேன்மொழியையுடைய வள்ளிநாயகிக்கு, இறைவன்-காதலனே! திரை-அலையானது, சிறையை-கரையை சேர்–அழியும்படி, அப்பு–மோதுகின்ற, ஓர்–ஒப்பற்ற, உப்பு–உவர்க் கடலை, அட – வற்றும்படி வேல்விட்ட, வல்லவன் – வல்லவனே! சூரை - சூரனை, சிகரியுடன் - கிரவுஞ்சகிரியுடன், சேர–அடியோடு, பொரு–போர் செய்து, பட – அழியும்படி, வென்று – செயித்து, அண்டர் – தேவர்களால், ஏத்திய – துதி செய்யப்பட்ட, சேவகன்–வீரனே! வான் சேர் அப்பு–ஆகாய கங்கையை, ஒருப்பட - ஒன்றாக, வேணியில் – சடையின்கண், சேர்த்தவன் - அடங்கித் தரித்த பரமசிவன், செய் தவமே– செய்தவமாகிய மைந்தனே! (எ-று).

(க-உ.) கொல்லிமலை வெள்ளிமலைச் சாரலையுடைய வனத்தில் வாழ்கின்ற வள்ளிநாயகிக்குக் காதலனும், சமுத் திரத்தை வேலால் வற்றும்படி செய்தவனும், சூரனையுங் கிரவுஞ்சகிரியையும் நிர்மூலமாக அழித்துத் தேவர்களால் துதிக்கப்பட்டவனும், கங்காதரராகிய பரமசிவன் செய்தவ மென்னு மைந்தனுமாகிய குமாரக்கடவுளே!

(கு-உ.) (1) வள்ளி வாழ்ந்த வள்ளிமலை தொண்டை நாட்டில் இருப்பதால் — சேரப் பொருப்பு — என்பதற்குச் (சேர்)—திரட்சி – செறிவு – கொண்ட மலை (வள்ளிமலை) எனப் பொருள் காணலாம்.

சேரர் மலையான கொல்லிமலை, வெள்ளிமலை (வெள்ளியங் கிரி) போன்ற வள்ளிமலை — எனவாவது கொள்ளவேண்டும்.

(2) கடல் சுவற வேல் விட்டது — செய்யுள் 45 கீழ்க் குறிப்பைப் பார்க்க,

(3) சூரைச் சிகரியுடன் - என்றதனால் – சிகரி கிரவுஞ்சகிரி யைக் குறிக்காது; எழுகிரியையே குறிக்கும். ஏழுகிரியை அட்டது—திருப்புகழ் 257 பக்கம் 140 கீழ்க்குறிப்பு.

(4) கங்கையைச் சூடிய வரலாறு—செய்யுள் 53 குறிப்பைப் பார்க்க.

(5) செய்தவமே — "காழியர் தவமே" என்புழிப்போல (பெரிய புராணம் சம்பந்தர்-91),

## 75. சிவநெறியில் நிற்றல்

செய்தவத் தாலஞ்சு சீரெழுத் தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச் சேயுரைக் கேற்றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன மும்மலச் செம்மல்கொண்டே.

(ப-உ.) செய் தவத்தால் - அழகிய தவத்தினாலாவது, அஞ்சு சீரெழுத்து - சிறந்த பஞ்சாக்ஷரத்தை, ஓதிலம் - துதிக்கின்றோமில்லை; தீது - தீமை, அலரும் - விளையும், செய் - நரக பூமி, தவ - அழிந்துபோகவும், தாலம் - உலகம் எல்லாம், சுகம் - நன்மையை, பெற - அடையவும், சேயுரைக்கு - சம்பந்தப்பிள்ளையாக அவதரித்துத் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தினால், ஏற்றுருப்போய் - ஆணுரு மாறி, செய்த - சிவந்த, அத் தாலம் - அப் பெண்ணுருவாகிய பனை, சுவைக்கனி - இனிய பழத்தை, ஈன்றது - தந்தது, என்னேம் - என்று துதிக்கின்றோமில்லை, வினையே செய்து - தீவினையே புரிந்து, அவத்தால் - வந்த துன்பத்தினால், அஞ்சுகின்றனம் - அச்சமுற்றிருக்கின்றனம்; மும்மலச் செம்மல் கொண்டு - மும்மலமாகிய போர்வையைத் தரித்துக்கொண்டு. (எ - று.) யாம் - தோன்றா எழுவாய். அஞ்சுகின்றனம் - பயனிலை. ஏ - அசை. இவ்விரண்டு கவியுங் (74, 75) குளகம்.

(கு - உ.) நெஞ்சமே! உலகத்தார் நரகம் எய்தாமல் இன்பத்தை யடையவும், ஆண்பனை பெண்பனையாகிப் பழத்தைக் கொடுக்கவும் சம்பந்தரா யவதரித்துத் தேவாரத்தை யருளிச்செய்த குமாரக் கடவுளைத் துதியாமலும், அவரது பஞ்சாக்ஷரத்தை யநுஷ்டிக்காமலும், தவத்தில் முயலாமலும், தீவினைத் தொடர்பால் மும்மலப் பிணிப்புண்டு யாம் அவத்தின் முயன்று அஞ்சுகின்றனம்.

(1) ஐந்தெழுத்து — "சிவாயநம" தவப்பேறிருந்தால் தான் ஐந்தெழுத்து ஓதும் பாக்கியம் கிடைக்கும்.

"நானேயோ தவஞ்செய்தேன் 'சிவாயநம' எனப் பெற்றேன்"—திருவாசகம்-திருவேசறவு 10.

(2) ஆண்பனை பெண்பனையான வரலாறு: திருப்புகழ் 681 பக்கம் 68 குறிப்பு.

(3) செம்மல்-போர்வை, மூடி; செம்முதல்-மூடுதல்—"தன்செவி செம்மி"—கந்தபுராணம். இந்த்ராணி 2.

## 76. இறைவனைப் பாடு என்று பாணனுக்கு அறிவுறுத்தல்; பாணனொடு வெகுளுதல்

செம்மலை வண்டு கடரங்க மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வசவார ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தமிழ்ப் பாணதெண் டீங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு மோவிது தேர்ந்துரையே.

(ப-உ.) செம்-சிவந்த நிறத்தையுடைய, மலை-கிரவுஞ்ச கிரியையும், வண்டு—சங்கினங்கள், உகள்—உலாவுகின்ற, தரங்கம்—கடலின்கண், மா—மாவடிவாய் நின்ற சூரனை, வென்ற-செயித்த, திண்-திண்ணிய, படைவேல்-வேலாயுதத்தையுடைய, செம்மலை-கடவுளை, வண்-வளப்ப மிகுந்த, துவச வாரணத்தனை-கோழிக்கொடியையுடைய, குமாரக் கடவுளை, செப்ப-புகழ்ந்து பாட, உன்னி-நினைத்தும், செம்மலை-மனத்தைப் புதைத்து விடாதே, வண்டு-குற்றம், தவு-நீங்கிய, அம்-அழகிய, தமிழ்ப்பாண-தமிழ்ப்பாணனே! தெள்-தெளிந்தும், தீம்-இனிப்புற்றும், கையில்-கரத்தில், வாய்-வாய்ப்பினும், செம்மலை-பழமையாகிய பூவை, வண்டு-சுரும்பினங்கள், விருப்புறுமோ-இச்சிக்குமோ, இது-இதை, தேர்ந்து-ஆராய்ந்து, அக்கடவுளைப் பலகாலும் புகழ்ந்துபாடு. (எ-று.) நீ-தோனரு எழுவாய், உரை-பயனிலை, ஏ-அசை.

(க-உ.) குற்றமின்றி யின்னிசை பாடும் பாணனே! வண்டுகள் அன்றலர்ந்த மலர்களைவிட்டுப் பழமையாகிய மலர்களை விரும்புமா? அத்தன்மையள் யானென் றறிந்து நீ கிரவுஞ்சகிரியையும் சமுத்திரத்தில் மா வடிவாய் நின்ற சூரனையும் வென்ற கோழிக் கொடியோனை கந்தசுவாமியினது திருப்புகழைக் குறைவின்றிப் பலகாலும் புகழ்ந்து பாடுவாயாக.

(கு-உ.) (1) செம்மலை-மனத்தைப் புதைத்துவிடாதே-மனத்தை மூடாது-நினைத்து முருகனைப் பாடு என்றபடி. செம்முதல்-மூடுதல்—பாட்டு 75 பார்க்க,

∴ செம்மல் – பழம்பூ: 'உதிர்பூஞ் செம்மலின் ஒதுங்கினர்' சிலப்பதிகாரம்-10–72, 7–40 உரை.

. . (2) வண்டு — பழம்பூவை விரும்பாது; அதுபோல, பாணனே! நான் தலைவனுக்குப் பழையவள் ஆய்விட்டேன்— ஆதலால் அவர் என்னை இனி விரும்பார்: நீ என்னைப் புகழ்ந்து பாடவேண்டாம். அந்தத் தலைவனையே பாடு. இது "பாணனொடு வெகுளுதல்" என்னும் துறை. (வாயில் மறுத்துரைத்தல்.)

"மன்னியாழ்ப் பாணன் வாயில் வேண்ட
மின்னிடை மடந்தை வெகுண்டுரைத்தது"

. . 'பொன்மாலை மார்பன் என்புது நலமுண் டிகழ்வானோ' என்னும் அப்பர் திருவாக்கு (4–12–1) ஈண்டு நினைவுக்கு வரும்.

இது தேர்ந்துரையே — என்பது பழம்பூவை வண்டு என்றும் விரும்பாது; இந்த உண்மையை ஆய்ந்தறிந்து என்னுடன் பேசு – எனவும் பொருள் தோன்றும்.

## 77. முருகனைத் துதியுங்கள்

**தேரை விடப்பணி யேறேறி முப்புரஞ் செற்றபிரான்**
**தேரை விடப்பணி சூராரி யென்க தெரிவையர்பால்**
**தேரை விடப்பணி வாய்ப்படு மாறு செறிந்தலகைத்**
**தேரை விடப்பணித் தென்றோடி யென்றுந் திரிபவரே.**

(ப-உ.) தேரை—தேவர்களெல்லாம் கூடிச்செய்த தேரை, விட—அச்சுமுறியும்படி, பணி-செய்து, ஏறு-இடபவாகனத்தின் மேல், ஏறி—இவர்ந்து, முப்புரம்—திரிபுரத்தை, செற்ற—நகைத் தெரித்த, பிரான்—பரமசிவனுக்கு, தேர்—பிரணவப்பொருள் தெளியச்செய்த, ஐ-சுவாமியே! விள்—சொல்லத்தக்க, தப்பு— குற்றத்தால், அணி - நெருங்கிய, சூராரி – சூரசங்காரனே! என்க-என்று துதிக்கக் கடவீர்கள், தெரிவையர்பால் – காம வாஞ்சையால் பரத்தையரிடத்தில், தேரை - தேரையானது, விட—விஷத்தையுடைய, பணி - பாம்பினது, வாய் – வாயில், படுமாறு-அகப்பட்டாற்போலும், செறிந்து—சிக்கிக்கொண்டு, அலகைத் தேரை-பேய்த்தேரென்னுங் கானலை, விடு-ஊறுகின்ற, அப்பு-சலமானது, அணித்தென்று—சமீபமாயிருக்கின்ற தென்று, என்றும் ஓடி—எப்போதும் ஓடியோடி, திரிபவரே— அலைந்து திரிகின்றவர்களே. (எ – று.) நீங்கள் – தோன்றா எழுவாய். என்க-பயனிலை.

(க–உ.) பாம்பின் வாய்ப்பட்ட தேரைபோல மாதரது மயக்கத்தி லகப்பட்டுக் கானலை நீரென்றெண்ணிச் செல்பவர் போல் அவர்கள் பொய்யின்பத்தை நம்பி வருந்துவோரே! அதைவிட்டுத் தேவர்கள் கட்டிச் சமைந்த தேரை முறித்து இடபமேறித் திரிபுரம் எரித்த பரமசிவனது ஸ்வாமியே! சூரசங்காரனே! என்று துதியுங்கள்.

(கு–உ.) (1) தேவர்களே தேரானது–இடபவாகனத்தில் இருந்து – திரிபுரத்தை அழித்தது – வரலாறு திருப்புகழ் 285 பக்கம் 206 கீழ்க்குறிப்பு; தேர் – அச்சு முறிந்தது.

"அச்சிவ னுறைரதம் அச்சது பொடிசெய்த் அதிதீரா"
—திருப்புகழ்-விநாயகர் 1.

"தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற"—திருவாசகம் 14–3.

(2) தப்பு அணி சூராரி — குற்றத்தைக் கொண்டிருந்த சூரனுக்கு — (அரியே) பகைவனே — எனவும் பொருள் காணலாம். குற்றம் - தேவர்களை இழிவுபடுத்திச் சிறையில் வைத்திருந்ததும், சிறையினின்று விடாதிருந்ததும் —

"காரவுணன் வானவரை விட்டு வணங்காமையால் கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்து" – கந்–கலிவெண்பா 97

(3) சிவபிரானுக்கு உபதேசித்தது – திருப்புகழ் 327 பக்கம் 314—அந்தாதி பாடல் 52ன் கீழ்க்குறிப்பு.

(4) பாம்பின் வாய்த்தேரை; "பாம்பின் வாய்த் தேரை யாய்' – சம்பந்தர் 2–79–6.

(5) பேய்த்தேரை - ஊற்று நீர். எனமருள்வது —

'பேய்த் தேரினை நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்'

"பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக் கருதிப்
பேய்த் தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே"
—திருவாசகம் 3–79; 15–1.

"மடங்கொண்ட விரும்பியராய்ப் ...... பேய்த்தேர்ப்பின் குடங்கொண்டு நீர்க்குச் செல்வார் — சம்பந்தர் 1–118–10.

## 78. நெஞ்சறிவுறுத்தல்

திரிபுரத் தப்புப் புவிதரத் தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைப்பட நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திரமான் மருக திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா யுதவெனச் செப்புநெஞ்சே.

(ப-உ.) திரி—நீ யென்றுந் திரிவாயாக, புரத்து-பூர நாளில், அப்பு-கடல் சூழ்ந்த, புவி-பூவுலகத்தை, தர—பெற் றருளும்படிக்கு, தோன்றி—அவதரித்த உமாதேவி, சிலே—தனதுள் பாகமாகிய இடது கரத்தால் மேருவாகிய வில்லே, பிடிப்ப-பிடித்துக்கொள்ளச்செய்து, திரிபுரத்து-முப்புரத்தின் மேல், அப்புத் தலைப்பட—விஷ்ணுவாகிய பாணத்தைப் பிரயோகஞ் செய்யும்பொருட்டு, நாண்—தனது பாகமாகிய வலதுகரத்தால் வாசுகியாகிய நாணை, தொடும்—ஏறிட்ட, சேவகன்—பரமசிவனது, கோத்திரி-திருச்செங்கோட்டுமலையை, புரத்து—நகரமாகக்கொண்ட, அப் புத்திர—அந்த மைந்தனே! மால் மருக-திருமால் மருகோனே யென்றும், திருக்கை—திருக்கையென்னு மீனையுடைய, அம்போதி-சமுத்திரத்தின் கண், ரிபு-அசுரராகிய சத்துருக்களது, ரத்தப் புத்துறை—இரத்தங்களையே புதியவுறையாகத் தோய்ந்த, ஆயுத என—வேலாயுதத்தை யுடையவனே யென்றும், செப்பு-புகழ்ந்து சொல்லி, நெஞ்சே-மனமே. (எ-று.) நீ—தோன்று எழுவாய். திரி-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) நெஞ்சமே! பூரநாளிற் பிறந்த லோகமாதா வாகிய பார்வதி வில்லைப் பிடித்துக்கொள்ள நாணேற்றிட்டுத் திரிபுரத்தின் மேல், விஷ்ணுவாகிய பாணப்பிரயோகஞ்செய்த பரமசிவனது மைந்தனாகிய திருச்செங்கோட்டுமலை யதிபனே! திருமால் மருகோனே! சமுத்திரத்தில் அசுரரை வதைத்த வேலாயுதனே! என்று சொல்லிக்கொண்டு நீ திரிவாயாக.

(கு-உ.) [1] திருக்கை—ஒருவகை மீன்; "திருக்கை யம்போதி" [96]-எனவரும் செய்யுளையும் பார்க்க.

(1) **தேவியும் பூர நாளும்:** 'பகவதி நாள் . . . . பூரம்'—திவாகரம், பிங்கலம், (திருவாதிரை—அரன்நாள், திருவோணம் மாயோன் நாள், விசாகம்-முருகன் நாள்—என்பதுபோல),

(2) திரிபுரமெரித்தபோது தேவியின்திருக்கை வில்லை ஏந்திய திருக்கை :—திருப்புகழ் 686, பக்கம் 82 கீழ்க்குறிப்பு. 'மலை சிலை ஒருகையில் வாங்கு நாரணி'—திருப்புகழ் 507 பக்கம் 156 குறிப்பு. திரிபுரம் எரித்த வரலாறு-அந்தாதி 77-ன் குறிப்பைப் பார்க்க.

(3) கோத்திரி—மலை. இச் செய்யுளில் அர்த்தநாரீச னுடைய திருக்கோலம் கூறப்பட்ட காரணத்தால் 'கோத்திரி' (மலை) அர்த்தநாரீசருடைய திருவுருவம் உள்ள திருச் செங்கோட்டு மலை எனக் கொள்ளப்பட்டது.

(4) கடலினிடையே அசுரர்களை அட்டது — "வட்டத் திரைக் கடலில் மட்டித் தெதிர்த்தவரை வெட்டித் துணித்த பெருமாளே"—திருப்புகழ் 306, 1226.

## 79. அவயவங் கூறல்

செப்பா ரமுதலை மன்னே திகனங் குரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா னகைமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற் சென்ற பிரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை வான்வரைச் சீரினுக்கே.

(ப-உ.) செப்பு-சொல்லானது, ஆரமுது-ஆரமுதம் போலும்; அல்-இருள் நிறமும், ஐ-அழகும், மன்-நிலைபெற்ற, ஓதி-கூந்தலானது, கனம்-மேகம்போலும்; குரும்பை-குரும்பையையொத்த, முலை-தனமானது, செப்பு-செப்புப்போலும்; ஆர-முத்துக்களையுடைய, முது-பழமையாகிய, அலை-கடல் போலும், கண்-விழியானது; கால்-ஒளி தங்கிய, நகை-பல்லானது, முருந்து-மயிலிறகினடிபோலும்; ஈரிருகண்-நான்கு கண்களையுடைய, செ-சிவந்த, பார முதலை-பெரிய முதலை வாயிற் சிக்கிய யானையை, வாவியில்-தடாகத்தின்கண், சென்ற-ரக்ஷிக்கும்படி விரைந்துபோன, பிரான்-திருமாலின், மருகன-மருகோனும், செப்பார-மிகவுந் தன்னைப் புகழ்ந்து துதிப்பவர்களது, முதலை-பிறப்பின்மூலத்தை, வேர்களைவான்-நிர்மூலமாக்குவானு மாகிய குமாரக் கடவுளது, வரைச் சீரினுக்கு-மலையில் வாழு மங்கைக்கு, (எ-று.) செப்பு முதலிய எழுவாய். ஆரமுது முதலிய பயனிலை. ஏ-அசை,

(க-உ.) தடாகத்தின்கண் முதலை வாயிற் சிக்கிய யானையை ரக்ஷித்த திருமால் மருகோனுந் தன்னைத் துதிப்பவர்களது பிறப்பையொழிப்பவனுமான குமாரக்கடவுளினது மலையில் வாழு மங்கைக்கு மொழி அமுதமும், கூந்தல் மேகமும், தனம் செப்பும், கண் கடலும்போன் றிருக்கின்றன.

(கு-உ.) இது "அவயவங் கூறல்" என்னுந் துறை,
—(திருக்கோவையார்-108.)

(1) 'அவயவம் அவளுக் கிவை யிவை என்றது.'

(2) மொழி - அமுது—'அமுதமொழி' – திருப்புகழ் 653. கூந்தல் – மேகம் — 'கனங்கள் கொண்டகுந்தளம்' — திருப்புகழ் 61; 'குரும்பை முலை மலர்க் குழலி' – சுந்தரர் 7-16-1

முலை - செப்பு — 'செப்பெனு முலைமாதர்' — திருப்புகழ் 89; கண் - கடல் — 'கடல்போற் கணைவிழி' — திருப்புகழ் 909; பல் - முருந்து - மயில் இறகின் அடிக் குருத்து—'முருந்தொளி முருக்கிய திருந்தொளி முறுவல்'—பெருங்கதை 2-15-82.

(3) கஜேந்திர மோக்ஷம் — வரலாறு - திருப்புகழ் 939, பக்கம் 731 வரலாறு.

'ஈரிருகண் செ - பார - முதலை' என்பதற்கு நான்கு கண்களையுடைய சிவந்த பெரிய முதலை - எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. கஜேந்திரனைப் பற்றிய முதலையை — 'நுதிவைத்த கரா' (110), 'கரா நெடுவாயில்' (123), 'நீள்கர' (714) 'துங்கமா முதலை' (939), 'பருமுதலை' (1203) - எனத் திருப்புகழில் விளக்கினர். 'முதுமுதலை' (சீர்பாத வகுப்பு); சாபத்தால் முதலையாய்க் கிடந்த அந்த முதலைக்கு நான்கு கண்கள் இருந்திருக்கலாம். அல்லது, ஈர்—இரண்டு, அல்லது ஈரமுள்ள இரு — கரிய அல்லது பெரிய — கண் எனவும் பொருள் காணலாம்.

(4) புகழ்ந்து துதிப்பவர்களின் பிறவியை ஒழிப்பார் இறைவர் — "பேணுவார் பிணியொடும் பிறப்பறுப்பான்" சம்பந்தர் 3-33-9.

## 80. முருகன் கழற் சேவடியின் பெருமை

சீராம ராம சிவசங்க ராநுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத் துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம நிறந்திறக் கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர் மகுடச் சிகாவிம்பமே.

(ப-உ.) சீ - இலக்குமிக்கு நாயகனுன, ராம - அழகிய, ராம—திருமாலே! சிவசங்கரா—பரமசிவனே! நும் - உங்கள், திருமுடிக்கு - அழகிய சென்னிகளுக்கு, சீர்—சிறந்த தன்மை யாவது, ஆம்—கங்காசலத்தோடே, அரா - அரவாபரணமும், மதுகர—தேன் பொருந்திய, துழாய்—திருத்துழாய் மாலையும், என்பர்-என்று சொல்லுவார்கள்; தெள்—தெளிந்த, திரை மேல்-அலையையுடைய கடலின்கண், [1]சீரா-கவசத்தை, மராம-மாமரமாய் நின்ற சூரனது, நிறம்—மார்பை, திறக்க—பிளக்கும் படி, தொட்ட - தனது மெய்யிற்புனைந்த, சேய் கழற்கு — முருகக்கடவுளது திருவடிக்கு, சீராம்—சிறப்பாயமைந்திருக்கும்;

அரா–நெருங்கிய, மன்–நிலைபெற்ற, இமையோர் - தேவர்களுடைய, மகுட–கிரீடமணிந்த, சிகாவிம்பம்–வட்டவடிவாசிய தலைகள். (எ-று,) சிகாவிம்பம்–எழுவாய். சீராம்–பயனிலை. ஏ–அசை.

(க–உ.) பரமசிவனே! உமது திருமுடிக்குக் கங்கையும் பாம்பும் மாலையாம்; திருமாலே! உமது திருமுடிக்குச் சிறந்த திருத்துழாய் மாலிகையாம்; மெய்யிற் கவசத்தை யணிந்து சமுத்திரத்தின்கண் சூரனை வென்ற குமாரக் கடவுளது திருவடிக்கோ தேவர்களது முடித்தலைகளே மாலையாம்.

(கு–உ.) 'சீரா – கவசத்தை'—என்பது சீரா — உடைவாளினால் என இருக்கவேண்டும். [1]"சீரா" என்பதன் பொருளைக் கந்–அலங்–27ஆம் செய்யுட் குறிப்புரையிற்காண்க.

(1) திருமாலும் சங்கரரும் சூடுவன துழாயும், கங்கையொடு அரவும் என முறையாக அமையாது மாறிக் கங்கையும் அரவும், துழாயும் என வருவதால் இது முரண் நிரனிறையணி — "சுரை மிதப்ப, அம்மி ஆழ" என்னுது 'சுரையாழ அம்மி மிதப்ப' என்பது போல (மொழி மாற்றுப் பொருள்கோள்–நன்–சூ 413.)

(2) திருமாலுக்குச் சீர் துழாய்—'மாலுக் கணிகலம் தண்ணம்துழாய்'; சேய்கழற்குச் சீராம்...இமையோர்மகுடம்– "மயிலேறும் ஐயன் காலுக் கணிகலம் வானோர்முடி"—கந்தரலங்காரம் - 62.. 'விண்ணவர் மகுட கோடி மிடைந்த சேவடியர்'—அப்பர்-4–72–1.

(3) கடலின்கண் சூரனை அட்டது—'கடலூடு போய்... வளரு மா இரு கூறதாய்த் தடிந்த வடிவேலா'-திருப்புகழ் 753

(4) 'சீராம ராம' என இப்பாடலிலும், 'உண்ணமுலையுமை மைந்தா சரணம்' எனக் காப்பு (2)லும், "சிவசிவ சங்கர" என 84–ஆம் பாடலிலும், 'சிற்றம்பலத்தை' என 38–ஆம் பாடலிலும் வருவன மந்திரம்போன்ற அருமையான எதுகைத் தொடக்கங்கள்.

## 81. விரகதாபம்

**சிகாவல வன்பரி தப்பாடு செய்யுஞ்செவ் வேலவிலஞ்**
**சிகாவல வன்பரி வூரார் மதனீத் திலஞ்சலரா**
**சிகாவல வன்பரி யங்கங் குழல்பெற்ற தேமொழிவஞ்**
**சிகாவல வன்பரி யானல மன்றிலுந் தென்றலுமே.**

(ப-உ.) சிகாவல-மயில்வாகனனே! அன்பர்-தனக்கன்புள்ள அடியார்க்கு, இதப்பாடு செய்யும்-இன்னருள் செய்கின்ற, செவ்வேல-அழகிய வேலாயுதத்தை யுடையவனே! இலஞ்சி காவல-இலஞ்சிப்பதியைக் காத்தளிப்பவனே! வன்பரிவூரார்-என்னையலர் தூற்றும் இவ்வூரின ராகிய கொடியவர்களும், மதன்-மன்மதனும், நித்திலம்-முத்து விளைகின்ற, சலராசி-சமுத்திரமும், கா-சோலையும், அலவன்-சந்திரனும், பரியங்கம்-கட்டிலும், குழல்-புள்ளாங் குழலும், பெற்ற-என்னைப் பெற்றவளாகிய, தே மொழி-இனிய மொழியையுடைய, வஞ்சி-தாயின், காவு-காவலும், அல-இவைகளெல்லாம் பெரிதல்ல, வன்-வலிய, பரியானலம்-வடவாமுகாக்கினி போன்று வருத்துகின்றன, அன்றிலும்-(காமசின்னமாகிய)அன்றிற்பட்சியும், தென்றலும்-(தேராகிய தென்றற் காற்றும். (எ-று) அன்றிலும் தென்றலும்-எழுவாய். பரியானலம்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) மயில்வாகனனே! அன்பர்க்கருளும் வேலாயுதனே! இலஞ்சிப்பதியோனே! எனக்குப் பகைவராகிய ஊராராலும், காமனாலும், கடலாலும், சோலையினாலும் கட்டிலினாலும், வேய்ங்குழலாலும், தாயின் காவலாலும் உண்டாகும் இடர் பெரிதல்ல; அன்றிலும் தென்றலுமே வடவாமுகாக்கினி போன்றிருக்கின்றன; ஆகையால் எனக்கு அருள்செய்ய இது சமயம்.

(கு-உ.) (1) விரகதாபம் கொண்டாரை வருத்துவன—ஊரார் வசைப்பேச்சு, மன்மதன், கடல், பொழில், திங்கள், கட்டில், புல்லாங்குழல், பெற்ற தாயின் காவல், அன்றில், தென்றல் — அந்தாதி செய்யுள் 7, 9, 35, 40, 70 பார்க்க.

(2) இலஞ்சி — திருப்புகழ் பெற்ற தலம். இருப்பிடம் முதலியன — திருப்புகழ் 975 பக்கம் 820 தலைக்குறிப்பிற் காண்க.—அந்தாதி செய்யுள் 13 பார்க்க.

(3) பரியானலம் - பரி - குதிரை. அனலம் — நெருப்பு. வடவாமுகாக்கினி — பெண் குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தில் மேலே கிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ — வடவை - பெண்குதிரை (பிங்கலம்). தக்கயாக. உரை 475.

## 82. காம மிக்க கழிபடர் கிளவி

தென்றலை யம்பு புனைவார் குமார திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ மருக செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி போயுயிர் தீர்க்கின்றதே.

(ப-உ.) தென்–வண்டுக ளிசைபாடுகின்ற, தலை–சிரசின் கண், அம்பு–கங்கையை, புனைவார்–அணியும் பரமசிவனது, குமார–மைந்தனே! திமிர–இருணிறமுடைய, முந்நீர்–கடல் சூழ்ந்த, தென்-அழகிய, தலை–பூதேவிக்கும், அம்புயம்–செந் தாமரைப் பூவில் வாசஞ்செய்கின்ற, மின்–சீதேவிக்கும், கோ–நாயகனுகிய திருமாலினது, மருக-மருகோனே! செழு- செழுமை தங்கிய, மறை தேர்–நான்கு வேதங்களும் துதிக் கின்ற, தென்றலை-தெற்கின் கண்ணதாகிய, அம்-அழகிய, புசக-பாம்பு போன்ற, பூதர-திருச்செங்கோட்டு மலையதிபனே! எரி–அக்கினியை, சிந்தி-கொட்டிக்கொண்டு, மன்றல்–வாசனை தோய்ந்த, தென்றல்–தென்றற் காற்றுனது, ஐயம்பு - என் தேகத்தில் மன்மதனது பஞ்சபாணங்களும், படு - தைத்த, நெறி–புண்வழியே, போய்–நுழைந்து, உயிர் - என்னுயிரை, தீர்க்கின்றது-(வருத்தி) நீக்குகின்றது. (எ–று.) தென்றல்– எழுவாய். தீர்க்கின்றது – பயனிலை. ஏ–அசை.

(க-உ.) கங்கையைச் சூடிய பரமசிவனது மைந்தனே! பூதேவி சீதேவிகளின் நாயகனுன திருமால் மருகோனே! வேதங்கள் துதிக்கின்ற பாம்புபோன்ற திருச்செங்கோட்டு மலையில் வாழ்பவனே! காம பாணந் தைத்த புண்வழியே தென்றற்காற்று என்னுடலில் நுழைந்து உயிரை வருத்து கின்றது.

இச்செய்யுள் - காமமிக்க கழிபடர் கிளவி – என்னும் துறை யது, செய்யுள் [40]ம் பார்க்க. கழி படர் - மிக்க நினைவா லுண்டாகிய துன்பம்; படர் – துன்பம் கிளவி – தலைவியின் சொற்கள்.

தென்றல் – ஐ அம்பு படுநெறிபோய் உயிர் தீர்க்கின்றது – என்பது காமமிக்கார்க்குத் தென்றல் தரும் வேதனையைக் காட்டுகின்றது:—

"வன்றிறற் கொலைஞர்கள் மானிற் கூவி மான்
ஒன்றறக் கவர்தல்போல் உயிரென் காலினை
இன்றது போலவந் துள்புக் கீர்த்ததால்
தென்றலுக் கியான்செய்த தீதுண்டோ என்பான்"

எனவரும் கந்தபுராணச் செய்யுள் [குமாரபுரிப் படலம் 47]

"பெருவெங் கடலே எனைநீ இரைந்திங் கடலே"—கோடீச்சுரக்கோவை 230;

(2) கங்கை சூடுதல்—செய்யுள் 74 கீழ்க்குறிப்புப் பார்க்க.

(3) தென் தலைமின் — அம்புயமின் – எனக் கூட்டுக.

தென்றலைமின் — பூதேவி; அம்புயமின் – (சீதேவி); இலக்குமி.

(4) மறைதேர் – புசக – பூதரம்—'ஆரண வெற்பு' (68), 'அரவக்குன்று' (41), 'கட்செவிக்குன்ற' (26), 'தெய்வ ஆரணத் தந்திநகர்' (23).

## 83. ஆசைகள் அற

தீரா கமல சலிகித போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு தாததென் சேயவநூல்
தீரா கமல குகரம் பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மரவே கருகச் சிவந்தவனே.

(ப-உ.) தீரா - நீங்காது, கமல - விஷ்ணுவினது நாபிக் கமலத்தில், ச - சனித்த பிரமா, லிகித போகமென - எழுதிய தலைவிதிப் பிராப்தமென்று, தெளிந்தும்-அறிந்திருந்தும், [1]தீ-என்னறிவானது, ராகம் - இச்சையினால், அலமென – இனிய பயனுடையே மல்லேமென்று, கருதாதது-சிந்தியாதது, என்—என்ன காரணம், சேய்—குமாரக் கடவுளே! அவம்—பயனின்மையான, நூல்—சாஸ்திரங்களை, தீர்-நீங்கிய, ஆகம-பரிசுத்தமான ஆகமம் உரைத்தோனே! லகு-(அக்கினியானவன் இப்பொறி) அற்பமானது, கரம்-கையில், பொறுப்பன்-தாங்கிகொள்வேன் என-என்று சொல்ல, திருக்கண் – உனது சிறந்த விழியினாலே, தீ – அவ்வக்கினியினது, ராகம் – காந்தியோடுற்ற சிவந்த நிற மெல்லாம், அலமரவே - வருத்தமுற்றே, கருக – கருகும்படி, சிவந்தவனே – கோபித்தவனே. (எ - று.) அறிவு – எழுவாய்; கருதாததென் — பயனிலை. ஏ—அசை.)

(க-உ.) குமாரக்கடவுளே! பரிசுத்த வேதாகமமொழிந்தோனே! 'இக்கனற்பொறி லகுவானது, நான் கரத்திற் றாங்கிக்கொள்வேன்' என்று வன்மைபேசின அக்கினியின் வீறடங்கி உடல் கருகக் கோபித்த விழியையுடையவனே! கமலோற்பவனான [2]பிரமா விதித்த விதியின் அநுபவந் தவறாதென்று தெளிந்தும், எனது அறிவானது ஆசை பயன்படுவதன்றென்று கருதாததென்ன?

(கு-உ.) [1]தீ=புத்தி. "தீ தொத்ததே"—54.

[2]"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"—திருக்குறள் 377.

(3) வேதாகமம்–உரைத்தது–சம்பந்தராய்த் தேவாரம் பாடினது. சம்பந்தர் அருளிய தேவாரத்தைச்—'சுருதித் தமிழ்க்கவி', 'ஆரணகீத கவிதை', 'உபநிட மதுர கவிதை', 'நெறிகாவியச் சிவநூல்' 'ஆகமவேத புராண நூல், 'வேதக் கவி', 'மறைநூல்' என்றெல்லாம் அருணகிரியார் சிறப்பித்துள்ளார். (திருப்புகழ் 280, 1049, 1007, 655, 716, 778, 917).

(4) தீக்கடவுள் (அறுமுகப் பெருமானும்) பொறிகளைத் தாங்கமுடியாது தவித்தது,

"தீயின் பண்ணவன் வேர்த்துடல் புழுங்குற மெலிவில் தாங்கியே, பேர்த்தொரு பதமிடப் பெருது வல்லைபோய், ஆர்த்திடு கங்கையின் அகத்துய்த் தானரோ" - கந்தபுராணம் 1–11–85.

## 84. திரு அருளின் பெருமை

சிவசிவ சங்கர வேலா யுததினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில் வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட வாவொளி சேர்ந்தபின்னே.

(ப-உ.) சிவ—ஏக வஸ்துவான, சிவ—பரமசிவனிடத்தில், சம்—உற்பவித்த, கர–திருக்கரத்தில், வேலாயுத–வேலாயுதத்தையுடைய முருகோனே! தினை - தினைப்புனத்தையுடைய, வஞ்சி-பெண்ணுகிய, குறிஞ்சி–குறிஞ்சிநிலத்தில், வசி-வாசஞ்செய்கின்ற வள்ளிநாயகியினது, வசங் கரவா - பக்கத்தை விட்டகலாத, மயில்வீர—மயிலேறுஞ் சேவகனே! செகம்— உலகத்தின்கண், திரு—சிறந்த, கண்—விழியினுல், சிவ—கோபி, சிவ-கோபி, சங்கர–எல்லாரையும் அழிக்கின்ற, மாவை–சூரனுருக்கொண்ட மாமரத்தை, எனும்–என்று வேலாயுதத்தை யேவும், திறலோய்-வீரனே! பொறை வாசி-மிகுந்த பொறுமையென்னும் பாணத்தின், வசிவசம்-கூர்மையினிடத்தில், கர–கோபமுதலிய, மான் பட்ட - மிருகங்கள்

விழுந்து விட்டன, ஒளி – உனது திருவருளாகிய பிரகாசம், சேர்ந்தபின் – என்னிற் கலந்தவுடனே. (எ – று.) கரமான் – எழுவாய். பட்ட – பயனிலை. ஆ – அசை. ஏ – அசை.

(க – உ.) ஏக வஸ்துவான பரமசிவனது மைந்தனுகிய வேலாயுதத்தை யுடையோனே! தினைப்புனத்தில் வாழ்கின்ற வள்ளிநாயகனே! மயிலேறும் வீரனே! மாவடிவாய் நின்ற சூரனை வென்ற வீரனே! நின் திருவருளின் பிரகாசத்தினுல் எனது கோபமென்னும் மிருகம் பொறுமையென்னும் ஆயுதத்தால் அழிந்த தன்மையதாயிற்று.

(கு-உ.) (1) சிவன் – ஏகன். "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க – திருவாசகம்-சிவபுராணம்.

(2) வேலாயுதம் – சிவபிரான் தந்தது :—செய்யுள் 57–ன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

(3) **தினைவஞ்சி வசம் கரவா மயில்வீரன் – முருகன் வள்ளியைவிட்டுப் பிரியாதவர்:** "குறவர் பாவையே! ஈங்குனை அடைந்தனன், எனக்கு நின்னிரு பூங்கழல் அல்லது புகலொன் றில்லையால், நீங்கலன் நீங்கலன் நின்னை என்றுமே"–கந்த புரா–6–24–84.

(4) திருவருள் கூடினபின் — பொறை பொறுமைக்குணம் சேர்ந்தது; கோபக்குணம் மாய்ந்தது; 'முருகா நினதன் பருளால் ஆசா நிகளம் துகளாயின' என்றுர் அநுபூதியில் (43).

பொறுமையால் கோபம் முதலிய தீக்குணங்கள் நீங்கி நிறையுடைமை நிலைத்திருக்கும்,

> "நிறையுடைமை நீங்காமை வேண்டில் பொறையுடைமை
> போற்றி ஒழுகப் படும்"—திருக்குறள் 154.

இந்தப் பொறையுடைமை திருவருள் கூடிடவருவதாகும்.

> "செற்றமும் செருக்கும் காய்ந்தேம் ...... கற்றைவார்
> சடையான் கோலங் காட்டியாட் கொண்ட அன்றே"
> —திருவிளையாடல்-வாதவூரடிகள் 83.

(5) மான் – மா–மிருகத்தின் பொதுப் பெயர் – விலங்கின் பொது (பிங்கலம்).

(6) கரம் – கோபம்—செய்யுள் 58 பார்க்க.

## 85. மனைவாழ்க்கைச் சேறு ஒழிய

சேந்த மராத்துடர் தானவர் சேனையைத் தெண்டிரைக்கண்
சேந்த மராத்துடன் கொன்றசெவ் வேல திருமுடிமேற்
சேந்த மராத்துட ரச்சூடி மைந்த திளைத்திளைத்தேன்
சேந்த மராத்துட ரின்னரி யென்னுமிச் சேறுபுக்கே.

(ப-உ.) சேந்த - கந்தனே! மராத்துடர் - கடப்பமாலிகையைப் புனைந்து, தானவர் சேனையை—அசுரர்கூட்டங்களை, தெள் — தெளிந்த, திரை — அலையையுடைய கடலினிடத்தில், கண் சேந்து — விழிகள் சிவந்து, அ — அந்த, மராத்துடன் — மாமரமாய் நின்ற சூரனுடன், கொன்ற—வதைசெய்த, செவ் வேல — சிவந்த வேலாயுதத்தை யுடையோனே! திருமுடி மேல்—அழகிய சிரசின்கண், சே—இளமையான, இந்து—சந்திரனையும், அம் — கங்காசலத்தையும், அரா — சர்ப்பத்தையும், துள்—துள்ளலை, தர—கொடுக்கும்படி, சூடி—தரித்த பரமசிவனது, மைந்த - புதல்வனே! திளைத்து - மூழ்கி, இளைத்தேன் — மெலிந்து வருந்தினேன், சே — என்னைக் காத்தருள்வாய், தமரா—சுற்றத்தாராக, துடர்—பற்றிய, இல்—மனைவாழ்க்கையும், நாரி—பெண்ணுசையும், என்னும்—என்று சொல்லப்பட்ட, இச்சேறு-இந்தச்சேற்றில், புக்கு-பிரவேசித்து (எ-று.) நீ-தோன்ரு எழுவாய். சே-பயனிலை. ஏ - அசை.

(க-உ.) கடப்பமாலையைப் புனையுஞ் சேந்தனே! சமுத்திரத்தின்கண் மாமரமாய் நின்ற சூரனேடு அசுரர் கிளையை யழித்த வேலாயுதனே! சந்திரனையும், கங்கையையும், சர்ப்ப ஆபரணத்தையும் தரித்த பரமசிவனது மைந்தனே! என்னைச் சூழ்ந்திரா நின்ற சுற்றத்தார், மனைவி, மனை என்னும் சேற்றில் மூழ்கி வருந்துகின்றேன்; இனியாகிலும் என்னைக் காப்பாற்றவேண்டும்.

(கு-உ,) (1) மராத் துடர் – மராம் – கடம்பு; துடர் – தொடர் – பூமாலை.

(2) கடலிடையே சூரனையும் அசுரர்களையும் அட்டது—செய்யுள் 80, 78—குறிப்புக்களைப் பார்க்க.

(3) 'ப்ரபஞ்சமென்னுஞ் சேற்றைக் கழிய'-கந்.அலங். 1

## 86. வினையற

சேறலைத் தாறலைக் கப்பா லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி லாய்சிந்தை தீநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங் குமார திரியவினைச்
சேறலைத் தாறலைக் கத்தகு மோமெய்த் திறங்கண்டுமே.

(ப-உ.) சேறு-சேற்றை, அலைத்து-உழக்கி, ஆறு-ஆற்றினின்றும், அலைக்கு அப்பாலெழுந்து-அலைகளுக்கு மேல் எழும்பி, செழும்-செழுமை தங்கிய, கமுகில்-கமுகமரத்தில், சேல்-சேற் கெண்டையானது, தலை-அக் கமுகின் றலையிலிருக்கின்ற, தாறு-குலைகளை, அலைக்கும்-அலைக்கா நின்றவளப்பத்தையுடைய, செந்திலாய்-திருச்செந்திநாயகனே! சிந்தை-என் மனதானது, தீ நெறியில்-கொடிய மார்க்கத்தில், சேறலை-செல்லுதலையும், தாறு-அளவுபடாத, அலை-அஞ்ஞானவிருளையடைதலையும், தீர்க்கும்-நீக்கியருளுகின்ற, குமார-குமாரக் கடவுளே! திரிய-மாறுபடும்படி, வினை-இருவினையாகிய, சேறு-சேற்றின்கண், அலைத்து-துன்பப்படுத்தி, ஆறலைக்கத் தகுமோ—வழிப்பறிப்போர்போல் என்னுயிரைக். கவரத் தகுமோ, மெய்த்திறம்-உனதருளின் உண்மைத்திறத்தை, கண்டும்-கண்டு அதுவே பற்றாயிருக்க எண்ணுகிற வென்னை. நீ-தோன்றா எழுவாய். ஆறலைக்கத் தகுமோ-பயனிலை.

(க-உ.) சேல்மீன்கள் சேற்றையுழக்கி யாற்றினின்றும் அலைகளுக்குமேல் எழும்பிக் கமுகின் குலையை யலைக்குஞ் செந்திற்பதியோனே! அடியார்களது அஞ்ஞான இருளை நீக்கியவரை நன்னெறியிற் செலுத்துங் குமாரக்கடவுளே! உன்னருளின் திறத்தைக் கண்டறிந்த என்னை யிருவினைச் சேற்றினுட்படுத்த லாகுமோ? [தவிர்த்தாள வேண்டுமென்றல் குறிப்பு.]

(1) திருச்செந்தூரில் சேல்மீன்களின் வன்மை—அவை கமுகமரத்தின் மீது பாய்தல், 'சேல்பட்டழிந்தது செந்தூர் வயற்பொழில்'—கந்தர் அலங்காரம் 40.

"சேலொடு வாளை வரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே"
—திருப்புகழ் 75.

(2) தாறு அலைதீர்க்கும் குமார — அலை (அல்லை) – அல் – இருள் — அஞ்ஞான இருள். குமரன் — அஞ்ஞான இருளைப் போக்குவான் - ' மகமாயை களைந்திட வல்லபிரான் ' ஆதலின் (கந்-அநுபூதி 5).

(3) ஆறலைத்தல்–வழிப்பறித்தல் - '' வன்கண்ணர் ஆட்டி விட்டு ஆறலைக்கும் அத்தம் '' (ஐந்திணை ஐம்பது 34) அத்தம் — வழி.

## 87. தோழியின் கூற்று

திறம்பா டுவர்தண் புனத்தெய்வ மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக் காய்பவர் செந்தினைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி லிவர்வல் லவர்நஞ் செயல்கொள்ளவே.

(ப-உ.) திறம் - நமது வெற்றியை, பாடுவர் – துதிக்கின்றார், தண்–தண்ணிய, புன-புனத்தில் வாழும், தெய்வமே–தேவதையே, என்பர்–என்றழைக்கின்றார், (அவரியாரெனில்), சேதத்து - கேட்டையுடைய, மாந்திறம் – வலிபொருந்திய மா மரமாய்நின்ற சூரன்றன் கிளையோடு, பாடு–அழிந்தான், உவர்-உவர்ப்பையுடைய, முது-பழமையாகிய, நீர்-கடலின் கண்ணே, என–என்று (தேவர்கள் சொல்லும்படி) காய்பவர்–கோபித்தவராகும்; செம்-சிவந்த, தினைமேல்-தினைப்புனத்தின் கண், திறம்பாள்-நீங்காதிருக்கின்றவளாகிய வள்ளிநாயகியே யுனது, துவர்-பவளம்போன்ற, இதழ் கண்டு–அதரத்தைப் பார்த்துக்கொண்டே, உருகா நிற்பர்–மன முருகி நிற்கின்றார், செப்புற – ஏதோவொரு வார்த்தை சொல்லுதற்காகவே; செந்தில் – செந்திற்பதியென்னும், தம்பாடு - தம்மிடத்தில், வரில்-வருவர்ராஞல், இவர்–இப்பேர்ப்பட்டவர், வல்லவர்–சாமர்த்தியரே, நம் – நமது, செயல் - உபசாரச் செய்கையை, கொள்ள–பெற்றுக்கொள்வதற்கு. (எ-று.) இவர்–எழுவாய். வல்லவர்–பயனிலை. ஏ–அசை.

(க–உ.) நாயகியே, சமுத்திரத்தின்கண் சூரன் கிளையோடு அழிந்தானென்று தேவர்கள் சொல்லும்படி வதைத்தவர் வந்து ஏதோ ஒரு வார்த்தை சொல்லும்பொருட் டிங்கே நமது வெற்றியைப் புகழுகின்றார்; புனத்தெய்வமே யென்றழைக்கின்றார்; தினைப்புனத்திலிருக்கும் உனது பவளநிறம் போன்ற இதழைப் பார்த்து மனதுருகி நிற்கின்றார், இவர்

தமது செந்திற்பதியில் வருவாராஞல் நாம் செய்யும் உபசாரத்தைப் பெற வல்லவர்தாம்.

(கு-உ.) (1) இது தோழி "மென் மொழியாற் கூறல்" என்னும் துறை.

"ஒளிருறு வேலவன் தளர்வுறுகின்றமை
இன்மொழி யவட்கு மென்மொழி மொழிந்தது"
—(திருக்கோவை 83).

(2) வள்ளியின் துவர் இதழ் கண்டு முருகவேள் உருகி நிற்பது:—

"குறப்பெண் ... தொன்டைவாய்த் தேனூறு கிளவிக்கு
வாயூறி நின்றவன்"
—முத்துக்குமார. பிள்ளைத்தமிழ்—செங்கீரை 5.

## 88. கண்ணயந்துரைத்தல்

செயலங்கை வாளை யிறைகோயி லைச்சிவ னுரமுதைச்
செயலங்கை வாளை முனிகொண்டல் வாளியைத் தேவர்பிரான்
செயலங்கை வாளை முனைவேலை யன்னவிச் சேயுறையுஞ்
செயலங்கை வாளை யுகள்செந்தில் வாழ்பவள் சேல்விழியே.

(ப-உ.) செயல்—சேற்றிலுண்டாகின்ற, அம்-அழகிய, கை-ஒப்பற்ற, வாள்—ஒளிபொருந்திய, ஐ-சிரேஷ்டமான, இறை—பிரம்மாவின், கோயிலை—ஆலயமாகிய தாமரையையும், சிவஞர்-பரமசிவனுண்ட, அமுதை—விஷத்தையும், செய—வெற்றிபொருந்திய, லங்கை-இலங்காபுரியினது, வாளை—பிரகாசத்தினழகை, முனி-கோபித்த, கொண்டல்-மேக நிறத்தையுடைய ஸ்ரீராமரது, வாளியை-பாணத்தையும், தேவர்பிரான்-தேவர்களுக்குத் தலைவஞகிய இந்திரனது, செயல்-போர் புரிகின்ற, அங்கை—அங்கையிற்பற்றிய, வாளை—வாளாயுதத்தையும், முனை-கூர்மை பொருந்திய, வேலை—வேலாயுதத்தையும், அன்ன-ஒத்துவிளங்காநின்றன, இச்சேய் உறையும்-இக் குமாரக் கடவுளமர்ந்தருளிய, செய்-வயலை யுழுகின்ற, அலம்—கலப்பையை, கை-கோபித்துமோதி, வாளை—வாளை மீன்கள், உகள்-புரளுகின்ற (வளப்பத்தையுடைய), செந்தில்-திருச்செந்திற்பதியில், வாழ்பவள்-வாழும் பெண்ணினது, சேல்-சேற் கெண்டைபோன்ற, விழி—கண்களிரண்டும். (எ—று.) விழி—எழுவாய். அன்ன—பயனிலை. ஏ—அசை.

(க-உ.) குமாரக்கடவு ளமர்ந்தருளிய திருச்செந்திற் பதியில் வாழும் பெண்ணினது கண்கள் பிரம்மாவுக்கு உறை விடமாகிய தாமரையையும், பரமசிவனுண்ட நஞ்சையும், இலங்கையை யழித்த ஸ்ரீராமரது பாணத்தையும், இந்திரன் கைவாளையும், (முருகன் கையிலுள்ள) கூர்வேலையும் ஒத்து விளங்குகின்றன.

(1) முதல் தேவர்களான பிரமன், சிவன், திருமால் (ராமர்), இந்திரன், முருகவேள், ஆகிய ஐவர் சம்பந்தமாகவே 'கண்ணுக்கு' உவமைப் பொருள் கூறிய அழகு கவனிக்கற் பாலது.

(கு-உ.) (1) (பிரமன்) தாமரை :-'அயன் கோயில் நின்று நடுங்கும் நெடுங்க(ண்)ணுள்'- திருவாரூர் உலா 267.

(2) சிவனுண்ட நஞ்சு —'மாதேவருண் முதிய வெங் கடுவோ'— கண்—திருப்புகழ் 880.

(3) திருமால் (ராமரின் பாணம்) — 'இராம சரமாகும் விழி'—திருப்புகழ் 201.

(4) (இந்திரன்) வாள் — 'வடிகூர்வாள் ...... விழி' — திருப்புகழ் 298.

(5) (முருகன்) கை வேல்—'உனதுள் உகந்த வேலென ... விழி'' 'நீவிடு வடிவேலோ' — 'கறுத்து நீ விடு கூர்வேல்' (திருப்புகழ் 528, 880, 1154.)

(6) திருச்செந்தூரில் வாளைமீன்-செய்யுள் 86ன் குறிப்பைப் பார்க்க.

(7) ''சேல்விழி''—'சேலும் அயிலும் தரித்த கண்'— திருப்புகழ் 216.

(8) இச் செய்யுள் 'கண்ணயந்துரைத்தல்' என்னும் துறை, 'கண்ணிணை பிறழ்வன வண்ணம் உரைத்தது'— செய்யுள் 96-ம் பார்க்க. 'ஈசற்கி யான்வைத்த' எனத் துவக்கும் திருக்கோவையார் பாடல் 109. திருப்புகழ் 926, பக்கம் 698 கீழ்க்குறிப்பு.

## 89. முருகவேளின் அழகு-உள்ளங் கவர்பவர்

**சேலையி லாருந் தவன்சூல மேறச் சினத்தவன்கண்**
**சேலையி லாருந் திவனேற் பவையர சிந்திரியச்**
**சேலையி லாரும் பராபரி புக்குறச் சிக்கெனுமிச்**
**சேலையி லாருந் திறையிட் டனர்தங்கள் சித்தங்களே.**

(ப-உ.) சேலை-அசோக மரத்தை, இலார்-இல்லிடமாக வுடைய அமணர்கள், உந்து-உயர்ந்த, அ-அந்த, வன்-வலிய, சூலம்-கழுவில், ஏற-ஏறியழியும்படிக்கு, சினத்தவன்-சம்பந் தப் பிள்ளையாய்த் தேவாரம்பாடிச் செயித்தவன், கண் - விழி யானது, சேல்-சேற்கெண்டைக்கும், ஐயில்-வேலுக்கும், ஆர்- ஒப்பாகிய, உந்தி - கான்யாற்றையுடைய, வனேற்பவை - வனத்திலுற்பவித்த வள்ளிநாயகிக்கு, அரசு - தலைவனை குமாரக்கடவுள், இந்திரியச்சேலை-பஞ்சேந்திரியச்செய்கைகளை, இலார்-நீக்கிய தபோதனர்கட்கும், உம்பர் - தேவர்கட்கும், ஆப-துன்பத்தை விளைத்த, ரிபு-சத்துருவாகிய சூரனை, குற- குற்றும்படி, சிக்கெனும்-இறுக்கிக் கட்டிய, இச்சேலையில்- பீதாம்பரக் கச்சையில், ஆரும் - மாதர்களெல்லாம், திறை யிட்டனர் - கப்பமாகச் சமர்ப்பிததார்கள், தங்கள்-தங்கடங் கள், சித்தங்கள்-இருதயங்களை. (எ-று.) ஆரும் - எழுவாய். திறையிட்டனர்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) சம்பந்தப் பிள்ளையா யவதரித்துச் சமணர்களைக் கழுவேறும்படிச் செய்தவனும், வள்ளிநாயகிக்குத் தலைவனு மாகிய குமாரக்கடவுள் தேவர் முதலியோரை வருத்திய சூரனை வெல்லும்படி யழகிய அரையிற் கட்டிய பீதாம்பரக் கச்சையினிடத்தில் மாதர்களெல்லாருந் தங்கள் தங்கள் இருதயங்களைக் கப்பமாகச் சமர்ப்பித்தார்கள்.

(கு-உ.) (1) சேலை இல்லார்-அசோக மரத்தை இடமாகக் கொண்ட அமணர்கள். 'பிண்டி யேன்று பெயரா நிற்கும் ... சமணரும்' சம்பந்தர் 1-70-10,

(2) சமணர் கழு ஏறினது - வரலாறு—திருப்புகழ் 181, பக்கம் 422 கீழ்க்குறிப்பு. அந்தாதி 29-ன் குறிப்பையும் பார்க்க,

(3) உந்திவ னேற்பவை — செய்யுள் 48-ன் குறிப்பைப் பார்க்க.

(4) சேலை-பீதாம்பரக் கச்சை "கந்தவேள் மருங்கிற் சேலையும்"—கந்தர் அலங்காரம் 27.

திறையிட்டனர் – இந்நூலின் காப்புச் செய்யுள் 1-ன் குறிப்புரை காண்க.

(5) திறை கொள்ளுதல் – கப்பம் வாங்குதல் – கவர்தல். 'முனிவரையும் சித்தந் திறைகொள்ளும் செவ்வாயாள்' ஞானவுலா - வரி-361.

மாதர்கள் தங்கள் இருதயங்களைக் கப்பமாகச் சமர்ப்பித்தனர் — என்றதனுல் — மாதர்களின் உள்ளங் கவர்ந்தார் இறைவர் என்க, "வெள்ளைக் கலிங்கத்தர் ... என் உள்ளம் கவர்வரால்'—திருவாசகம்-அன்னைப்பத்து 7.

## 90. மனம் ஒடுங்குதல்வேண்டும்

**சித்தத் தரங்கத்தர் சித்தியெய் தத்திரி கின்றதென்னர்ச்**
**சித்தத் தரங்கத்தர் சந்ததி யேசெந்தி லாய்சலரா**
**சித்தத் தரங்கத்த ரக்கரைச் செற்றகந் தாதிங்களிஞ்**
**சித்தத் தரங்கத்தர் சேயா ரணத்தந் திகிரியையே.**

(ப-உ.) சித்த-இருதயமானது, தரங்கத்தர்-நிலைப்படாமல்அலைபோற் புரளுந்தன்மையுடையவர், சித்தி-மோக்ஷத்தை எய்த-அடையும்படி, திரிகின்றது.அலைந்து திரிகின்றது, என்–என்ன காரணம், அர்ச்சித்து–பூசை செய்தே; அத்தர் - சுவாமியாகிய, அங்கத்தர் - எலும்பை மாலையாகவணிந்த பரமசிவனது, சந்ததியே – மைந்தனே! செந்திலாய் – திருச்செந்திற்பதியோனே! சலராசி – சமுத்திரத்தின்கண், தத்தரம் – தங் கடங்கள் வலிமையை, கத்து - ஆர்ப்பரித்துச் சொல்லிய, அரக்கரை-அசுரரை, செற்ற – செயித்த, கந்தா – முருகனே! திங்கள்–சந்திரன், இஞ்சி - மதிலின்கண், தத்து-தவழுகின்ற, அரங்கத்தர் - திருவரங்கநாதருடைய, சேய் – பிள்ளையாகிய (பிரம்மாவின்), ஆரண–வேதம் பூசிக்கின்ற, தந்தி–பாம்பு போன்ற, கிரி-திருச்செங்கோட்டு மலையில் வாழும், ஐ – சுவாமியே! (எ–று.) திரிகின்றது-எழுவாய். என்-பயனிலை. ஏ - அசை.

(க-உ.) பரமசிவனது மைந்தனே! திருச்செந்திற்பதிக் கதிபனே! சமுத்திரத்தின்கண் அரக்கரை மாய்த்தோனே! கந்தனே! வேதம் பூசித்த திருச்செங்கோட்டு மலையில்

வாழ்கின்றவனே! சித்த நிலையற்றவர்கள் வெளிப் பூசை செய்து மோக்ஷத்தை யடையும்படி அலைந்து திரிகின்ற தென்னகாரணம்?

(கு-உ.) (1) சித்தத் தரங்கத்தர் — சித்தி எய்த — அர்ச்சித்துத் — திரிகின்றதென் — என அந்வயப்படுத்துக.

சித்தம் நிலைபெருமல் பூசை செய்வது பயன் தராது —

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே"
—பட்டினத்தார்-பொது 4.

"சித்தம தொன்றிச் செய்கழ லுன்னிச் சிவனென்று
நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே"
—சம்பந்தர் 1-100-8.

"ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக் கூனமில்லை"
—அப்பர் 4-81-2.

(2) அங்கத்தர் - எலும்பு மாலையர்-சிவபிரான் - 'அங்கம் பூணென உடைய அப்பன்'—சம்பந்தர் 2-96-4.

(3) கடலின்கண் அரக்கரை அட்டது — செய்யுள் 78-ன் குறிப்பைப் பார்க்க,

(4) திரு அரங்கத்து மதில் —

"தென்னுர் மதிள்சூழ் திரு அரங்கச்
செல்வனுர்", "மச்சணி மாட மதிளரங்கா"
—நாச்சியார் திருமொழி 11-7, 4.

(5) திருச்செங்கோடு - வேதகிரி, பாம்பு போன்றது — செய்யுள் 82-ன் குறிப்பைப் பார்க்க.

## 91. இடம் குறித்தல்

திகிரி வலம்புரி மாற்கரி யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா ரிலஞ்சிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும் படைத்தருள் சேய்தணியில்
திகிரி வலம்புரி சூடிய வாநன்று சேடியின்றே.

(ப-உ.) திகிரி-சக்ராயுதத்தை, வலம்-வலது கரத்தில், புரி-தரித்த, மாற்கு-விஷ்ணுவுக்கு, அரியார்க்கு - அறிதற்கரி

தான பரமசிவனுக்கு, உபதேசம் சொன்ன ஓங்காரப்பொருளை யுபதேசித்தருளிய, திகிரி-சுவாமிமலையென்னும் திருவேரகத் தையும், வலம்புரி-சங்கினங்கள், செய்-வயல்களின்கண், ஆர்-நிறைந்திருக்கின்ற, இலஞ்சி - திருவிலஞ்சிப்பதியையும், செந் தூர்-திருச்செந்தூரையும், கன-மேகங்கள் தவழா நின்ற, தந்தி-பாம்புபோன்ற, கிரி-திருச்செங்கோட்டு மலையையும், வலம்-திருவலத்தையும், புரிவேறும்-மற்றை ஸ்தலங்களையும், படைத் தருள் - தனக்குறைவிடமாகக் கொண்டருளிய, சேய்-குமாரக் கடவுளது, தணிகையில் - திருத்தணிகையில், திகிரி - மூங்கி லானது, வலம்புரி - நந்தியாவர்த்தத்தை, சூடியவா - சூடிய விதத்தின் குறி, நன்று-நன்ருக இருக்கின்றது, சேடி-தோழியே, இன்று - இன்றையதினம். (எ - று). சூடியவா - எழுவாய்; நன்று-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) தோழியே! பரமசிவனுக்கு உபதேசித்த சுவாமி மலை, திருவிலஞ்சி, திருச்செந்தூர், திருச்செங்கோட்டுமலை, திருவல்லம் இவை முதலாய பல வேறு ஸ்தலங்களிலும், உறைந்தருளிய குமாரக் கடவுளது திருத்தணிகைமலையில் மூங்கிலின்மேல் நந்தியாவர்த்தத்தைச் சூடியிருக்குங் குறி நன்ருயிருக்கின்றது.

(கு-உ.) இது இடங்குறித்தல் - 'தலைவி தன் துணைவிக்கு உணர்த்தல்' என்னும் துறைவகைத்து,

(1) "நேரார் தரும் அன்பர் வந்த தெமக்கு நிகழ்த்த இங்குச்
சீரார் தருபுலி மேல்யானை வாழ்ந்திடச் செய்தனரே"

—எனவரும் சிராமலைக் கோவைச் செய்யுள் (209) இங்கு ஒப்பு நோக்கற்பாலது.

திகிரி வலம்புரி சூடியவா நன்று - மூங்கிலானது நந்தியா வர்த்தத்தைச் சூடிய குறி நன்று — இது குறிப்புப் பொருள், அப்படியே சிரர்மலைக் கோவையில் "புலிமேல் யானை வாழ்ந் திடச் செய்தனர்" என்ற இடத்துப் புலி - இங்கு வேங்கை மரம்; யானை - இங்கு ஆம்பற் பூ. வேங்கை மரத்தில் ஆம்பல் பூ அடையாளக் குறி' இது குறிப்புப் பொருள்; வெளிப்படைப் பொருளில் (திகிரி) சக்கரம், (வலம்புரி) சங்கம்: சக்கரம் சங்கு சூடிய குறி; அதுபோல் புலிமேல் யானை வாழும் குறி (சிராமலைக் கோவையில்).

இந்த அந்தாதிச் செய்யுளின் அகப்பொருட்டுறையை —

" குன்றியூர் குடமூக்கிடம் வலம்புரம் குலவிய நெய்த்தானம்
என்றிவ் வூர்களிலோ மென்றும் இயம்புவர் இமையவர் பணிகேட்பார்
அன்றியூர் தமக்குள்ளன அறிகிலோம்; வலஞ்சுழி யரனுர்பால்
சென்றவ் வூர்தனில் தலைப்படலாமென்று சேயிழை தளர்வாமே"

—எனவருந் தேவாரத்திற் காணலாகும் (சம்பந்தர் 2-106-7).

(2) திருமாலின் வலது கரத்தில் சக்கரம்:

" வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு"
—பெரியாழ்வார் திருப்பல்லாண்டு.

(3) சிவபிரானுக்கு உபதேசித்த வரலாறு — செய்யுள் 52-ன் கீழ்க்குறிப்பு.

சுவாமிமலையில் உபதேசம் செய்தது —

" சிவனுர் தமக்குரிய உபதேச வித்தையருள்
திருவேரகத்தில்வரு பெருமாளே"

" குருவெற்பிலுறை சிற்பரமருக்கொரு
குருக்களென முத்தர்புகழ் தம்பிரானே"
—திருப்புகழ் 224, 215.

சிவபிரான் மாலுக்கு அரியர் – திருப்புகழ் 999, பக்கம் 14 கீழ்க்குறிப்பு,

(4) இலஞ்சி — செய்யுள் 13, 81 — (குறிப்பிற் பார்க்க.)

(5) தந்திகிரி – பாம்புமலை – திருச்செங்கோடு — செய்யுள் 90 குறிப்பிற் காண்க.

(6) வலம் — திருவல்லம் — திருப்புகழ் 669 — தலக் குறிப்பைப் பார்க்க.

(7) பலதலங்கள் முருகவேளுக்கு உரியனவாய், உகந்தனவாய் இருந்தும் அவர் தணிகையில் இடம் குறித்தார் என்றதனுல் தணிகையே முருகவேளுக்கு மிக உகந்த தலம் என்பது பெறப்படுகின்றது.

" கந்த ரக்கிரி தொல்புவி தனிற்பல எனினும்
இந்த வெற்பினில் ஆற்றவும் மகிழ்ச்சியுண் டெமக்கே"

எனப் பெருமானே வள்ளியம்மைக்கு எடுத்துரைத்துள்ளார்: கந்தபுராணம் 6-24-220.

## 92. புதல்வன்மேல் வைத்து - அணைந்தவழி ஊடல்

சேடி வணங்கு வளைத்தோ ளெனப்புணர் சேயவட
சேடி வணங்கு திருத்தணி காவல நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை யாரையென் செப்புமுலைச்
சேடி வணங்கு தலைக்களி றீந்தது செல்லநில்லே.

(ப-உ.) சேடு—அழகியதாகும், இ—இந்த, அணங்கு—மங்கையினது, வளை—வளையலணிந்த, தோள்என—தோளென்று மிகவு மகிழ்ந்து, புணர்—முன் வேண்டினகாலத்து என்னை மணம் புணர்ந்த, சேய—முருகனே! வடசேடி—வடக்கின் கண்ணதாகிய விஞ்சையருலகம், வணங்கு—வழிபடத்தக்க, திருத்தணி—திருத்தணிகைக்கு, காவல—தலைவனே! நின்—நினது, செருக்கால்—செருக்கினால், சேடி—கர்வித்திருக்கின்ற, வணங்கு—துவளாநின்ற, கொடி—கொடிபோன்ற, இடை யாரை-இடையையுடைய பரத்தையரை, என்செப்பு-நிந்தித்துப் பேசவேண்டியகாரணமென்னஇருக்கின்றது, முலைச்சேடு-எனது கொங்கையின் திரட்சியை, இவணம்-இப்படி திரட்சி யின்மையாகும்படி, குதலை-மழலைச் சொல்லையுடைய, களிறு-என் பாலன், ஈந்தது-தந்துவிட்டது, (ஆதலால்), செல்ல-என்னிடத்து வராமற் செல்லும்படி, நில்-தூரமாக நில்லு. (எ-று.) நீ-தோன்றா எழுவாய்; நில்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) தணிகைமலையில் வாழ்வோனே! பண்டென்னை மிகவும் அழகுடையவளென்று மணம்புணர்ந்த சேயோனே! நீ இப்பொழுது கலந்த களிப்பான் மிகுதியடைந்த பரத்தை யரை யான் நிந்தித்துப் பேசவேண்டிய காரணமென்ன இருக்கின்றது; எனது யௌவன பருவத்தை யிம்மழலைச் சொல்லையுடைய பாலன் வேறுபடுத்தினனாதலால்அப்பரத்தை யர்பாற் றானே செல், என்பால் வரவேண்டியதில்லை.

(கு-உ.) (1) இது 'அணைந்தவழி ஊடல்' என்னும் அகப்பொருள் துறையது.

"தெளிபுன லூரன் சென்றணைந்தவழி
ஒளிமதி நுதலி ஊடி உரைத்தது" - (திருக்கோவை 390)

'பரத்தையிற் பிரிவு — தலைவி உணர்ந்து தலைவனோடு புலத்தல்' என்னும் பகுதி. இதுபோன்ற கருத்தை —

"பண்கா ணுறுமென் மொழிப்பங்கர் வெங்கைப் பனிவரையாய்
கண்கா தளவுமக் காதேந் திளமுலை காறுமுள
பெண்கா ணெனமுன் புரைத்தது நீபெறும் பிள்ளைசுவைத்
துண்கால மென்முலை நுண்ணிடை காறு முளையென்றதே"
எனவரும் திருவெங்கைக்கோவை (393) யிற் காண்க.

(2) வடசேடி: வடசேடி தென்சேடி என்பன வித்தியா தரர்களுடைய மலையாகிய வெள்ளியம் பெருமலையில் உள்ள பெரும் பிரிவுகளின் பெயர்கள். இதனை—

" நுங்கள் வடசேடி தென்சேடியுந் தவிர
ராச ராசபுரி புகுதுமாதர் கடைதிறமினோ"

'விஞ்சை மன்னர்பாழ் வெள்ளி வெற்பு' என வரு மிடத்துக் காண்க. (தக்கயாகப்பரணி 19, 371 — விசேடக் குறிப்பு - பக்கம் 265 பார்க்க.)

'வெள்ளியம் பெருமலை யொழியவந்து ...... ஈண்டினர் ... விஞ்சையர்' (சிந்தாமணி 2361); 'வெள்ளி வெற்பின் விஞ்சையர்க் கிறைவர்' (நைடதம்-சுயம்வர-128); 'இருசேடி யுடன்கொண்ட வேதண்ட லோக விமலையரும்' — ராஜராஜ சோழனுலா.

வடசேடி வணங்கு திருத்தணி காவல: 'தணிகாசலனைத் தினம் ... பண்ணமர் விஞ்சையர் கின்னரர் ... தாவிலராய்ப் புறங்காவலராவரே"—தணிகைப் பிள்ளைத்தமிழ் காப்பு—10. 'கின்னரரும் சித்தவித்யாதரரும் ... நெருங்கிவர'—தணிகை யுலா 213.

## 93. விரக தாபம்

செல்லலை யம்பொழில் சூழ்செந்தி லானறி யானிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக் கருடிரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ மாதுயிர் சேதிப்பதே.

(ப - உ.) செல்-மேகத்தை, அலை—அசைக்கின்ற, அம்—அழகிய, பொழில் சூழ்—சோலை ஆழ்ந்த, செந்திலான்—திருச் செந்திற்பதியையுடையவன், அறியான்—அறிகின்றானில்லை; இறை-பரமசிவனது, கை—கரத்தில், செல்லல்—போகாதே, ஐயம்-பிச்சைக்கு, பொழில் எங்கணும்—உலகமெங்கும், ஏற்ப—இரக்கும்படியாய், என—என்று, தெறித்த-தமது இரத்தத்

தைப் பிரமகபாலத்திற் றெரித்தவரும், செல்லல்–துன்பத்தையும், ஐயம் — பயத்தையும், பொழில் — பெருமையுடைய, லங்கைக்கு–இலங்காபுரிக்கு, அருள்-உண்டாக்கினவருமாகிய, திருமால்–ஸ்ரீராமரது, நிறம்போல்–நீல நிறத்தைப்போல, செல்–நடக்கின்ற, அல்–இராக்காலத்தில், ஐ யம்பு–மன்மதனது பஞ்சபாணமானவை, ஒழி–அழியும்படி, லாவகம்–மிகவு நொய்யதான, மாது உயிர்-மங்கையினுயிரை, சேதிப்பது-வதைக்கின்றதை. (எ-று.) செந்திலான்-எழுவாய்; அறியான்–பயனிலே. ஏ–அசை.

(க-உ.) பரமசிவனது கையிலிருக்கின்ற பிரமகபாலத்தில் தமதிரத்தத்தைப் பலியாக வார்த்தவரும், இலங்காபுரியைச் செயித்தவருமான விஷ்ணுவின் நிறம்போ லிருண்ட இராக்காலத்திற் காமபாணங்கள் இம்மங்கையி னுயிரைப் பிளக்கின்றதைச் செந்திநுயகன் அறியானே?

(கு-உ.) (1) சிவனது (வடுகமூர்த்தியின்) பிரமகபாலத்தில் திருமால் தமது ரத்தத்தைச் சேர்த்தது : — வரலாறு — திருப்புகழ் 706, பக்கம் 130 கீழ்க்குறிப்பு; கந்தபுராணம் 6–13–167–168.

திருமாலின் செருக்கை அடக்க ரத்த பிக்ஷைக்காக அவரிடம் வந்த வைரவருக்கு அஞ்சித் திருமால் தமது மத்தகத்தைப் பிளந்து வைரவர் கையிலிருந்த பிரம கபாலத்தில் தமது இரத்தத்தை நெற்றி நரம்பின் வழியே ஒழுகவிட்டார். கபாலம் பாதிகூட நிரம்ப இல்லை. திருமாலும் மூர்ச்சித்து விழுந்தார். பின்னர், வைரவரின் திரு அருளால் தெளிவுற்று எழுந்தார்.

"உரிய நற்பலி நான் உதவுவன் என்ன ... கரியவன் ... குருதிநீர்
அருவிபோல நின்றெழுக...கபாலம் பாதியும் நிறைந்திலதன்றே"
—கூர்ம புராணம்.

(சிவபராக்ரமம் - ரத்த பிக்ஷாடன பராக்ரமம்).

"உளைந்தான் செறுதற் கரியான் தலையை உகிரொன்றினுல்
களைந்தான் அதனை நிறைய நெடுமால் கணுர்குருதி
வளைந்தான் ஒருவிரலின்றெடு விழ்வித்து"
—அப்பர் 4-84-7.

'இறையான் கையில் நிறையாத முண்டம் நிறைத்த எந்தை'—பெரியதிருமொழி–5-1-8.

'மூளையார் சிரத்து ஐயம்முன் அளித்த எம்முகில் வண்ணன்'—பெரிய திருமொழி 4-2-8.

(2) ராமர்-'அஞ்சன வண்ணத்தான்'—கம்பராமாயணம் அகலிகை-85.

(3) மன்மதனது பாணம் ஐந்து—திருப்புகழ் 19, பக்கம் 60 கீழ்க்குறிப்பு.

## 94. யமனைச் சேதிக்க

சேதிக் கனைத்து களதாக்கு நோக்கினன் செல்வசெந்திற்
சேதிக் கனைத்து நிலைபெறச் சூரங்கஞ் சீரங்கமால்
சேதிக் கனைத்து வரிதோ யயில்கொடெற் சேர்க்கவந்தாற்
சேதிக் கனைத்து வருமா மறலி திறலினையே.

(ப-உ.) சேது-சிவந்த, இக்கனை-கருப்பு வில்லையுடைய மன்மதனை, துகளதாக்கும் - சாம்பலாகும்படி யெரித்த, நோக்கினன்-நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனது, செல்வ-மைந்தனே! செந்திற்சே - திருச்செந்தூர் முருகனே! திக்கு அனைத்தும்-திசைகள் எல்லாம், நிலைபெற-நிலைபெற்றிருக்கும் படியாயும், சூர்-சூரனுடைய, அங்கம்-உடலை, சீரங்கம்-திரு வரங்கத்தில் வாசஞ் செய்கின்ற, மால்-விஷ்ணுவினது, சே-பிள்ளையாகிய பிரம்மா, திக்க - திகைக்கும்படி, னைத்து - அழித்து, உவரி-சமுத்திரத்தில், தோய்-மூழ்கிய, அயில்கொடு-வேலாயுதத்தைக்கொண்டு, எற்சேர்க்க வந்தால் - என்னை யமபடர்கள் கட்டிக்கொண்டுபோகவந்தால், சேதி-கண்டிப்பா யாக, கனைத்து வரும்-கனைத்துக்கொண்டு வராநின்ற, மா மறலி-பெரிய யமனது, திறலினை-உக்ரவல்லமையை. (எ-று). நீ-தோன்று எழுவாய்; சேதி-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) கருப்பு வில்லையுடைய மன்மதனை யெரித்த நெற்றிக் கண்ணையுடைய பரமசிவனது மைந்தனே! திருச் செந்திற்பதியில் வாழ்கின்ற சுவாமியே! என்னைக் கட்டிக் கொண்டுபோக வரும் யமனது வலியைப் பிரமன்-திகைக்கவும், திக்குக்களெல்லாம் நிலைபெறவும்,-சூரனை வென்று சமுத்திரத் தில் தோய்ந்த வேலாயுதத்தினலே நீ சேதிக்கவேண்டும்.

(கு-உ.) (1) கருத்துரையில் — வசன அமைப்பு பின் வருமாறு அமைந்திருக்கவேண்டும்—

சேது இக்கனைத் துகளதாக்கும் நோக்கினன் செல்வ! செந்திற்சே! திக்கனைத்தும் நிலைபெற, (சீரங்கமால்சே) பிரமன் திக்கச் சூரங்கம் நைத்து, உவரிதோய், அயில்கொடு, (முருகா நீ) மறலி - எற்சேர்க்க வந்தால்—(அவன்) திறலினை- சேதி;

(2) மன்மதனைச் சிவபிரான் எரித்த வரலாறு–திருப்புகழ் 399, பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

(3) கனைத்து வரும் மா மறலி—என்பதற்குக் கனைத்துக் கொண்டு வரும் (மா) எருமையை உடைய யமன் எனப் பொருள் காணலாம்—'கனைத்தெழும் பகடது பிடர்மிசை வரு...மறலி [திருப்புகழ் (5)] என்றுராதலின்.

(4) சூரனை அட்டவேல் - தீர்த்த ஸ்நாநம் செய்து, பின்பே முருகன் திருக்கரத்திற் சேர்தல்:

" சூருரம் கிழித்து - அங்கியின் வடிவம் நீங்கி
அருளுருக் கொண்டு வான்தோய் கங்கையிற் படிந்து
மீண்டு...பெருமான் செங்கை எய்தி விற்றிருந்ததவ்வேல் "
—கந்தபுராணம் 4-13-490, 491.

இங்ஙனம் தாரகனை அட்ட பின்பு வேலும், சிங்கமுகனை அட்டபின்பு குலிசமும் கங்கையிற் படிந்த பின்பே முருகன் திருக்கையிற் சேர்ந்தன. –கந்தபுராணம் 1-20-186, 4-12-456.

## 95. திருவடியே அடைக்கலம்

திறவா வனக புரிவாச னீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முனியைவென் றேய்தென் றிசைத்திருச்செந்
திறவா வனமயி லோயந்த காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனநின் றிருவான தண்டைத் திருவடியே.

(ப–உ.) திறவு–திறவுகோல், ஆ – ஆனவனே! அனக- பாவமற்ற, புரி - கயிலாயத்தினது, வாசல்–கதவை, நீக்க- திறக்க, சிகரி–கிரவுஞ்சகிரியினது, நெஞ்சம்–மார்பை, திறவு- பிளந்து, ஆ–ஆச்சரியமாக, வனச–தாமரையில் வாசஞ்செய் கின்ற, முநியை - பிரமனையும், வென்றேய் - செயித்தவனே! தென்றிசை – தெற்கின்கண்ணதாகிய, திருச்செந்தில் – திருச் செந்தூரில், தவா-நீங்காதமர்ந்தருளுகின்ற, வன-அழகிய, மயிலோய் – மயில்வாகனத்தையுடையவனே! அந்த காலம் – என்னுடல் கெடு மனித்திய கா த்தில், என் சிந்தை–எனது

சிந்தனையை, வைக்க — ஒருவழிப்படுத்திச் சேர்ப்பதற்கு, திறவாவன—அடைக்கலஸ்தானமெவையெனில், நின்-நினது, திருவான - சிறப்பையுடையனவாகிய, தண்டை - தண்டையை யணிந்த, திருவடி—திருவடியே. (எ-று.) திருவடி-எழுவாய்; திறவாவன-பயனிலே. ஏ-அசை.

(க-உ.) கயிலாயத்தின் கதவு திறக்கும்படிச் செய்கின்ற வனே! கிரவுஞ்சகிரியைப் பிளந்து பிரம்மாவையும் வென்றேனே! தெற்கின் கண்ணதாகிய திருச்செந்தூரில் வாழும் மயில்வாகனனே! என் னனித்தியகாலத்தில் உனது தண்டையணிந்த தாளே என் சிந்தையை வைக்கு மடைக்கல ஸ்தானமாம்.

(கு - உ.) (1) சிவனே அறுமுகவேள் ஆதலினுல், கயிலே யின் திறவுகோல் அறுமுகவேளிடம் உள்ளது என்கிருர். "நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும் பேதகம் அன்ருல்... போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்"— கந்தபுராணம் 1–14–19.

கயிலாயத்தின் கதவைத் திறக்கத் திறவுகோல் ஆனவனே- என்கின்ருர். திருச்செந்தூர்ப்புராண ஆசிரியர்-திருச்செந்தூர் ஞானவீட்டுக்கு ஓர் திறவுகோல் என்ருர் "ஞானவீட்டுக்கோர் திறவுகோல் ...... அமரர்சேனே காவலற்குரியதாம் செயந்தி நன்னகரம்" — வியாதர் உபதேச—6.

(2) முருகவேள் வேலால் கிரவுஞ்சத்தைப் பிளந்தது:

"குருகுபெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே"
—சிலப்பதிகாரம் – குன்றக்குரவை.

(3) 'வனசமுநியைச் சிறிது கோபித்த காவலனும்;— திருவகுப்பு 12. வனசமுநி—பிரமன்; பிரமனேக் கோபித்தது - திருப்புகழ் 212; பக்கம் 42, பாடல் 608, பக்கம் 406 கீழ்க் குறிப்பு.

(4) செந்தூரில் நீங்காதமர்கின்ற மயிலோன் — 'மயில் வீரனே! செந்தில் வாழ்கின்ற பெருமாளே'—திருப்புகழ் 93.

(5) அந்த காலம் — உடலினின்றும் உயிர் நீங்கும் அந்தக் காலம். 'அக்காலத்துக் குறவார்தான்' என்ருர் திருப்புகழி லும் - பாட்டு 1120, பக்கம் 264 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

"ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே" கந்தரலங்காரம் 84 - குறிப்பைப் பார்க்க.

"குரம்பை யிதுநா னுடைய திது பிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக் கீழோர் தலைமறைவே"
—அப்பர் 4-113-2.

"எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே"—பெரியாழ்வார் 4-10-1.

"ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்"-அப்பர் 6-99-1.

## 96. கண்ணயந்துரைத்தல்

திருக்கையம் போதிக ளோகஞ்ச மோநஞ்ச மோதிருமால்
திருக்கையம் போசெய்ய வேலோ விலோசனந் தென்னனங்கத்
திருக்கையம் போருகக் கைந்நீற்றின் மாற்றித்தென் னூல்சிவபத்
திருக்கையம் போக வுரைத்தோன் சிலம்பிற் சிறுமிதற்கே.

(ப–உ.) திருக்கை-திருக்கையென்னும் மீனையுடைய, அம் போதிகளோ – சமுத்திரங்களோ, கஞ்சமோ – தாமரையோ, நஞ்சமோ – விஷமோ, திருமால்-விஷ்ணுவினது, திருக்கை - திருக்கரத்திலிருக்கின்ற, அம்போ-பாணமோ, செய்ய-சிவந்த வேலோ-வேலாயுதமோ, விலோசனம்-கண் ; தென்னன்-கூன் பாண்டியனது, அங்கத்திருக்கை-முதுகின் கூனை, அம்போருகம்-தாமரைமலர் போன்ற, கைந்நீற்றின்–கரத்திற் றரித்த திரு நீற்றினல், மாற்றி–நீக்கி, தென்னூல்–தமிழ் நூலாகிய, சிவ பத்தி–சிவபத்தியை விளைவிக்கும், ருக்கு-ருக்குவேதசாரமாகிய (தேவாரத்தை), ஐயம்போக-பரசமய நூல்களினுலுண்டாகுஞ் சந்தேக நிவர்த்தியாக, உரைத்தோன்–சம்பந்தப் பிள்ளையா யவதரித்துத் திருவாய் மலர்ந்தருளிய குமாரக்கடவுளது, சிலம்பில் - மலையின்கண் ணிருக்கின்ற, சிறுமிதற்கு – சிறியா ளாகிய கன்னிக்கு. (எ-று). விலோசனம்–எழுவாய் ; சமுத்திர முதலிய பயனிலை. ஏ–அசை.

(க–உ.) முன் சம்பந்தமூர்த்தியா யவதரித்துத் திருநீற் ருல் சமணமதம் பூண்டிருந்த பாண்டியனது கூனை மாற்றியும், எச்சமயம் பெரிதோவென்னும் ஐயமற்றுச் சைவமே பெரி தென்று நம்பும்படித் தமிழ்வேதமாகிய தேவாரத்தை மொழிந்தருளிய குமாரக் கடவுளது மலையின்கண் வாழும் கன்னியினது கண் சமுத்திரமோ, தாமரையோ, விடமோ, அம்போ, வேலோ ?

(கு-உ.) (1) இச் செய்யுள் 'கண்ணயந்துரைத்தல்' என்னும் துறையது. செய்யுள் 88-ன் குறிப்பைப் பார்க்க.

(2) திருக்கை - செம்பழுப்பு நிறமும் 18 அங்குலம் வளர்வதுமான மீன்வகை. கடல் - கண்ணுக்கு உவமை — 'கடல் போற் கணேவிழி'—திருப்புகழ்,909. கண்ணின் பிற உவமைகள் — அந்தாதி 88 பார்க்க.

(3) தென்னன் கூன் தீர்த்தது — அந்தாதி 56 பார்க்க.

(4) சம்பந்தர் தேவாரம் - இருக்குவேத சாரம். 'இருக்கு மொழிப் பிள்ளையார்'—பெரியபுரா – ஞானசம்பந்தர் 80. 'இருக்கு முழக்குந் தேவாரத் திசையுந் துவன்றி யோங்க'— செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் - சிற்றில் 2.

(5) சிறுமி – தனக்கு – சிறுமிதற்கு.

## 97. தும்மும்போது 'குமர சரணம்' எனக் கூறுங்கள்

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரணமென் னீருய்விர் செந்தினைமேற்
சிறுமிக் குமர புரைத்துநின் றேன்சிலே வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சீறடிக்கே.

(ப-உ.) சிறு-சிறிதான, உமிக்கும்-குற்றுமியையாயினும், பகிர மர நிகர்வீர் - பிறர்க்கிட்டுண்ண மனங்கூடாமல் மரம் போன்றிருப்பவரே! சிதை-அழிந்துபோவதும், உயிர்-பிராணனுக்கு, துச்சில் - ஒதுக்கிடமுமாகிய இவ்வுடலின்கண், தும்மி- ஒரு தும்மலுண்டாகும் அக்காலையினும், குமர - குமரனே! சரணம் - உனக் கடைக்கலம், என்னீர் – என்று சொல்லுங்கள், உய்விர் – பிழைப்பீர்கள், செம் – சிவந்த, தினைமேல் - தினைப் புனத்தில் வாசஞ்செய்த, சிறுமிக்கு—வள்ளிநாயகிக்கு, மரபு— தமது மரபின் வழிகளை, உரைத்து-எடுத்துரைத்து, நின்றேன்- குறையிரந்து நின்றவனும், சிலை-வில்லையுடைய, வேட்டுவன் – வேடத் திருமேனியையுடைய கண்ணப்பநாயனுர், எச்சில் – ஊன் முதலியவற்றை முன் ருசிபார்த்து நிவேதித்த எச்சிலை, து - உவப்புடனே யுண்டவராகிய, மிக்கும் – மேன்மையாக, அரவு-சர்ப்பாபரணத்தை, அணி–தரித்த, முடியான்–முடியை யுடைய பரமசிவனது, மகன் — மைந்தனுமாகிய குமாரக் கடவுளினது, சிறடிக்கு-சிறிய திருவடியைக் கருதிக்கொண்டே. (எ – று.). நீர் - தோன்று எழுவாய். உய்விர் - பயனிலை. ஏ–அசை.

(க-உ.) சிற்றுமியும் ஈயாமல் மரம்போன் றிருப்பவர் களே! நீங்கள் பிழைப்பதெப்படி! நீர் தும்முங்காலையிலாவது தினைப்புனத்தின்கண் வள்ளியம்மையினிடத்துத் தமது மரபை யோதி நின்றவனும், கண்ணப்பநாயனுர் நிவேதித்த எச்சிலை யினிதாகக்கொண்ட பரமசிவன் மைந்தனுமாகிய கந்தஸ்வாமி யின் திருவடியைக் கருதிக் குமரனே சரணமென்பீராஞற் பிழைப்பீர்கள்.

(கு-உ.) (1) உமி - தவிடு அளவேனும் பகிர மனம் வராமை—'அணு அளவு தவிடு உமிகள் பிதிரவிட மனமிறுகி' திருப்புகழ் 862 கீழ்க்குறிப்பு. பாடபேதம்.

(2) மரம் நிகர்த்தல் — உணர்ச்சியற்று இருத்தல்.

"மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்"—திருக்குறள் 576.

"மரமனையா னுக்கிந்த மானை வருத்த பிரமனையான்
காணப் பெறின்"—ஔவையார் தனிப்பாடல்.

(3) ஒரு தும்மல் தும்மும்போதும் முருகன் திருவடியை நினைத்துக் 'குமர சரணம்' என்று சொல்லுங்கள், உய்வீர்கள் என்று அருணகிரியார் நாம் கடைத்தேற உபதேசித்துள்ள அருமை உபதேசம் இது; யாவரும் எளிதிற் கையாளக் கூடியது, பழங் காலத்தில் தும்மின உடனே "சிவாய" எனக் கூறும் வழக்கத்தை மக்கள் கையாண்டு வந்தார்கள்.

"இறைவன் உதலினன் இரங்கித் தும்மினுர் 'சிவாய' போல் தொடர்ந்து"—திரு ஆலவாயுடையார் திருவிளையாடல் 49—விடைக்குறி 10.

(4) வள்ளிக்கு முருகவேள் தனது மரபு உரைத்தது,—வள்ளியின் காதலை விரும்பி,

"மெல்லியல் வருதியால், விண்ணின் பால்வரும்
வல்லியர் யாவரும் வணங்கி வாழ்த்திடத்
தொல்லியல் வழாவளம் துய்ப்ப நல்குவேன்"
—கந்தபுராணம் 6-24-88.

—என முருகவேள் தமது உயர்நிலை மரபை வள்ளிக்கு விளங்க உரைத்தார்.

(5) கண்ணப்பரின் எச்சிலை சிவபிரான் உண்ட வரலாறு:—திருப்புகழ் 651, பக்கம் 526 கீழ்க்குறிப்பு.

எங்ஙனம் அன்புக்கு ஈடுபட்டுக் கண்ணப்பரின் எச்சிலை தந்தையார் உண்டாரோ அங்ஙனம் பிள்ளை முருகனும் அன்புக்கு ஈடுபட்டு, வள்ளியின் பேச்சுக்கு உருகி அவளிடும் பணிகளைச் செய்யக் காத்திருந்தனர்.

'குறப்பெண் குறிப்பறிந்து, அருகு அணைந்து, உன் குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக் குறையிரந்து, அவள் தொண்டைவாய்த் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்' — முத்துக்குமர. பிள்ளைத்தமிழ் — செங்கீரை 5.

## 98. வினையற

சீரங்க ராக மறமோது திகிரி செங்கைகொண்ட
சீரங்க ராக மருகந்த தேசிக செந்தினைமேற்
சீரங்க ராக தனகிரி தோய்கந்த செந்தமிழ்நூற்
சீரங்க ராக விநோதவென் பார்க்கில்லை தீவினையே.

(ப-உ.) சீரம்-கலப்பையையும், கரா-முதலையினது, கம்-தலையை, அற-அறும்படி, மோது-அமர்செய்த, திகிரி-சக்கிரத்தையும், செம்-சிவந்த, கை-கரத்தில், கொண்ட-தரித்திருக்கும், சீரங்கர்-திருவரங்கத்தையுடைய திருமாலும், ஆகமர்-ஆகம வேதத்தையருளிய பரமசிவனும், உகந்த-விரும்பத்தக்க, தேசிக-அழகனே! செம்-சிவந்த, தினைமேல்-தினைப்புனத்தில் வாழும், சீர்-சிறந்த வள்ளிநாயகியினது, அங்கராக-சாந்தணிந்த, தனகிரி-தனமாகிய மலையை, தோய்-தழுவிய, கந்த-குமாரக்கடவுளே! செந்தமிழ் நூல்-செவ்விய தமிழ்ப் பநுவலின், சீரங்க-சீர் முதலிய எட்டுறுப்புக்குரிய பாவலனே! ராக விநோத-கீதத்தி லுல்லாசனே! என்பார்க்கு-என்று நாடோறுந் துதிக்கின்றவர்கட்கு, தீவினை இல்லை-கொடிய வினை சேராது. (எ-று.) தீவினை-எழுவாய். இல்லை-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) கலப்பை யாயுதத்தையும் சக்ராயுதத்தையுமுடைய திருமால் மருகோனே! சுந்தரனே! தினைப்புனத்தில் வாழ்கின்ற வள்ளிநாயகியைத் தழுவுங் கந்தனே! இயலிசை முதலிய தமிழ் நூற்குரிய விநோதனே! என்று துதிப்பவர்கட்குத் தீவினையில்லை.

(கு-உ.) (1) சீரம்-கலப்பை: இது பலபத்திரன் படை—பலபத்திரன் — 'படையே கலப்பை; கொடிபனையாகும்'—

பிங்கலம்; பலபத்திரன் — பலராமன். திருமாலின் தசாவ தாரத்துள் கண்ணபிரானுக்கு மூத்தவராகஅவதரித்த மூர்த்தி. இவரை 'நம்பி மூத்த பிரான்' என்பர். "கொடுமிடல் நாஞ்சிலான்" — கொடிய வலியினை உடைய கலப்பைப் படையினை உடைய நம்பி மூத்த பிரா(ன்)" — (கலித்தொகை 26, 36 உரை); இவர் திருமாலின் அவதாரம் ஆதலின் திருமாலைக் கலப்பைப்படையினர் என்றார். முதலையை அட்ட வரலாறு — அந்தாதி 79ன் குறிப்புரையிற் காண்க.

(2) ஆகமர் — சிவபிரான் 'ஆகம செல்வனார்' — சம்பந்தர் 3 – 57 – 10.

(3) தேசிக — என்பதற்குக் குருமூர்த்தியே என்று பொருள் காணலரம். முருகவேள் திருமாலுக்கு உபதேசித்தது — திருப்புகழ் 1028, 1247 — பக்கம் 86, 580 கீழ்க்குறிப்பு.

சிவபிராற்கு உபதேசித்தது — செய்யுள் 91ன் குறிப்பு.

(4) சீர் முதலிய எட்டுறுப்பு :—

"எழுத்தசைசீர் பந்தம் அடிதொடை பாவினம்
கூறுவன்" — யாப்பருங்கலக் காரிகை-தற்சிறப்புப்பாயிரம்.

(1) எழுத்தென்பது — உயிரும், உயிர்மெய்யும், அளபெடையும் உட்பட்ட எழுத்து, (2) அசை என்பது அவ்வெழுத்துக் கூடின நேரும் நிரையும், (3) சீர் என்பது அவ்வசை கூடின சீர் முப்பது, (4) பந்தம் என்பது அச்சீர் கூடின தளை, (5) அடி என்பது அத்தளை கூடின அடி, (6) தொடை என்பது அவ்வடி கூடின தொடை, (7) பா என்பது அத் தொடை கூடின பா, (8) இனம் என்பது அப் பா கூடின இனம்" — (யாப்பருங்கலக் காரிகை.)

(5) முருகனை — ராகவிநோதர் — என்கின்றார். "இசைப் ப்ரிய" என்றார் திருப்புகழில். (திருப்புகழ் 173, பக்கம் 400, 1057, அடி 6 பார்க்க.)

(6) இறைவனைத் துதிக்கத் தீவினைகள் சேரா,

"காழித் தலைவா சமணர் சாக்கியர்க் கென்றும்
அறிவொண்ணு நிலையாயென்னத் தொல்வினையாய
நில்லாவே"

"பெண்ணேர்பாகா! பித்தா! பிரானே! என்பார்க்கு
நண்ணு வினைகள் – நாடொறும்
இன்பம் நணுகும்மே — சம்பந்தர் 1-102, 10, 4.

## 99. ஞான விளக்கு

தீவினை யற்ற சினந்தீ ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வநந்தா தெடுத்தனஞ் செந்தினைமேல்
தீவினை யற்ற புனமான் கொழுநன் செழுங்கனகத்
தீவினை யற்ற வடியார்க் கருள்பெறுஞ் செல்வனுக்கே.

(ப-உ.) தீ-அக்கினியானவன், வினையற்ற-தீக்ஷண்ணியமாகத்தகிக்கின்ற தன்செய்கையற்றதுபோல், சினந்தீர்-கோபநீங்கிய, அகத்துள்-நமது சாந்த இருதயத்துள், மெய்-உண்மையாகிய, தீபம்-ஞான விளக்கை, நந்தம் தீவினை-நம்முடைய தீவினையாகிய, அல்-இருளானது, தவ-கெடும்படி, நந்தாது-அவிந்துபோகாமல், எடுத்தனம்-ஏற்றிவைத்தோம், செம்-சிவந்த, தினைமேல்-தினைப்பயிர் விளைவில், தீ-தீய்ந்துபோகும், வினையற்ற-செய்கையில்லாத, புன-புனத்தில்வாழும், மான்—மான்போன்ற கண்ணையுடைய வள்ளியம்மைக்கு, கொழுநன்-நாயகனாகிய, செம்-செழுமைதங்கிய, கனகத்தீவினை-பொன்மயமாய்ப் பிரகாசிக்கின்ற மோக்ஷவுலகத்தை, அற்ற-பாச பந்தங்கள் நீங்கிய, அடியார்க்கு-தமதடியார்கட்கு, அருள்-கொடுத்தருள்கின்ற, பெறும்-பெரிய, செல்வனுக்கு-அருணிறைந்த செல்வனுக்கு (எ-று.) யாம்-தோன்றா எழுவாய். எடுத்தனம்-பயனிலை. ஏ-அசை.

(க-உ.) வளப்பமிகுந்த தினைப்புனத்தில் வாழ்கின்ற வள்ளியம்மைக்கு நாயகனும், பற்றற்ற அடியார்கட்கு மோக்ஷவுலகத்தை யளிப்பவனுமாகிய குமாரக்கடவுளுக்கு நமது சாந்த இருதயத் தகழியில் உண்மையாகிய ஞானவிளக்கை ஏற்றிவைததோம்.

(கு-உ.) (1) ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் இப்பாடலை மானசபூஜையில் முதலில் 'தீபம்' ஏற்றி வைப்பதற்குக் கூற வேண்டிய பாடலாக உபயோகப்படுத்துவர்.

ஞானதீபம்-ஏற்றிவைத்தல்—அந்தாதி 38-ம் உரைக் குறிப்பும் பார்க்க.

சினந்தீர் அகத்துள் மெய்த்தீபம்-சினம் ஒழிந்த சாந்த உள்ளத்தில்தான் ஞானம் உதிக்கும். "உள்ளம் அடங்குறின் அல்லால் ... சிவஞானம் நண்ணாது"—தணிகைப் புராணம்-இராமனருள் 42.

(2) செழுங்கனகத் தீவு — செழுமை வாய்ந்த கனகத் தீவு — பொன்னுலகம் — எனவும் பொருள் காணலாம். தீவு— தூரதேசம் (யாழ். அக.) இறைவர் — 'கனகத் தீவினை' — பொன்னுலகை அடியார்க்கு அருள்வார்.

"கோட்டூர் நற்கொழுந்தே என்றெழுவார்கள்
அம்பொனூர்தரும் உலகினில் அமரரோ டமர்ந்தினி திருப்பாரே"
—சம்பந்தர் 2-109-3.

(3) அற்ற அடியார் —
"அற்ருர்க் கரும்பொருள் காண்க ஐயாறன் அடித்தலமே"
- அப்பர் 4-92-13.

"அற்றுப் பற்றின்றி யாரையும் இல்லார்க்கு
உற்ற நற்றுணை யாவான்" - அப்பர் 5-67-6.

"அற்றவர்கள் நற்றுணைவன்" - சம்பந்தர் 3-68-2.

## 100. நெஞ்சுக்கு உபதேசம்

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில் வேறினை காத்தசெல்வி
செல்வந் திகழு மணவாள னல்குந் திருவடியே.

(ப - உ.) செல்-அங்கு சென்று, வந்தி-வணக்கஞ்செய், கழுமலம்-குமாரக் கடவுளானவர் முன் சம்பந்தப்பிள்ளையா யவதரித்தருளிய சீகாழிப்பதியின்கண், நெஞ்சமே-இருதயமே! அவன்-அவரது, தெய்வ-தெய்விகமாகிய, மின்-தெய்வயானை, ஊர்-ஏறிவருகின்ற, செல்-மேகவாகனமானது, வந்து-வந்து, இகழும்-(பிறரால்) இகழப்படும், நமது-நம்முடைய, இன்மை-இல்லாமை யாவும், தீர்க்கும் — நீக்கிவிடும்; வெம் — கொடிய, கூற்றுவற்கு-யமனுக்கு, செல்-நம்மேல் நடப்பதாகிய, வந்தி-கொடுமையை, கழும்-துடைத்துவிடும், திருக்கையில்-(முருகக் கடவுளது) திருக்கரத்தின், வேல் - வேலாயுதமானது; தினை காத்த-தினைப்புனங் காவல் பூண்ட, செல்வி-வள்ளிநாயகியி னது, செல்வம் - பெருஞ்சிறப்பாக, திகழும் - (நிறைந்து) பிரகாகிக்கின்ற, மணவாளன்-நாயகனுகிய கந்தசுவாமியான வர், நல்கும் திருவடி-தனது திருவடித் தாமரையை நமக்குத் தந்தருள்வார். (எ-று.) நீ - தோன்ரு எழுவாய். வந்தி - பயனிலே. ஏ-அசை.

(க-உ.) நெஞ்சமே! தெய்வயானையினது வாகனமாகிய மேகம் நமது வறுமையைத் தவிர்க்கும், குமாரக்கடவுளது வேலாயுதம் நமக்கு வரும் யம தண்டனையை நீக்கிவிடும், வள்ளிநாயகிக்கு மணவாளராகிய கந்தஸ்வாமி தமதுதிருவடித் தாமரையைத் தந்தருளுவார்; ஆதலால், நீ அக்கடவுள் முன் சம்பந்தப்பிள்ளையா யவதரித்த சீகாழியிற் சென்று அவரை வணங்கு.

(கு-உ.) (1) மனது சாந்தி அடைதற்கு — இப்பாடலை வள்ளிமலை சுவாமிகள் மானசபூசையில்-உபயோகித்துள்ளார்.

(2) சீகாழித் தலத்தைச் செப்புதல்வேண்டும் என்பதற்கு அந்தாதி 29-ம் பார்க்க.

(3) மேகம் — இந்திரனுடைய வாகனமாதலின் — தேவசேனைக்கும்வாகனமமோ; 'புயல்அத்தை' என்றூர்திருப்புகழில் பாடல் 478, பக்கம் 82 கீழ்க்குறிப்பு; மழையால் உலகம் நிலைபெறுகின்றது. "வானின்றுலகம் வழங்கி வருதலால்"— திருக்குறள் 11.

(4) வேல் — யமனை வெருட்டி ஓட்டும்.

"தருக்கி நமன் முருக்கவரின் எருக்குமதி தரித்தமுடி படைத்த விறல் படைத்த இறை கழற்கு நிகராகும்"— வேல்வகுப்பு.

(5) திருவடியே - என்னும் அந்தத்தில் உள்ள திரு - வை ஆதியில் உள்ள 'திரு ஆவினன்குடி'யிற் காண்க, இது அந்தாதி நூலின் இலக்கணம்.

(6) திருவடியின் சிறப்பைக் கந்தரலங்காரம் — செய்யுள் 92-ன் குறிப்பிற் காண்க.

## கந்தரந்தாதி மூலமும் உரையும்

முற்றிற்று.

—: o :—

உ

# பாட்டு முதற்குறிப் பகராதி

—:o:—

## கந்த ரந்தாதி


| | பாட்டின் எண் | | பாட்டின் எண் |
|---|---|---|---|
| உன்னுமுலை | காப்பு - 2 | செய்யசெந் | 43 |
| சிகண்டிதத்த | 67 | செருக்கும் ராக | 46 |
| சிதாவல | 81 | செல்லலை | 93 |
| சிதைந்தோகை | 51 | செல்வந்திகழு | 100 |
| சிக்குற | 28 | செவிக்குன்ற | 26 |
| சித்தத்தரங்க | 90 | செவ்வந்தி | 6 |
| சித்திக்க | 32 | செற்றைவரும் | 22 |
| சித்திரமிக் | 50 | சென்னிய | 3 |
| சிந்தாகுல | 21 | சேகரவாரண | 68 |
| சிந்துரவித்தக | 70 | சேடிவணங்கு | 92 |
| சிலைமத | 9 | சேதகமொன்று | 49 |
| சிவசிவசங்கர | 84 | சேதனந்தந்து | 33 |
| சிறுமிக்கு | 97 | சேதாம்பல | 44 |
| சிறைவர | 12 | சேதிக்கனை | 94 |
| சிற்றம்பலத் | 38 | சேந்தமரா | 85 |
| சீகரசிந்து | 66 | சேமரவிக்கம் | 40 |
| சீதனங்கோடு | 8 | சேயவன் | 48 |
| சீயனம்போதி | 19 | சேரப்பொருப் | 74 |
| சீரங்கராக | 98 | சேரிக்குவடு | 17 |
| சீராமராம | 80 | சேர்ப்பதுமால | 59 |
| சீர்க்கை | 37 | சேலையிலாருந் | 89 |
| சீலங்கன | 58 | சேவகமன்ன | 64 |
| சீவனசத்து | 69 | சேவற்கொடி | 16 |
| செகம்புரவார் | 24 | சேறலைத்தா | 86 |
| செச்சைய | 36 | திகழுமலங்கற் | 29 |
| செந்திலகத் | 14 | திகிரிவலம்புரி | 91 |
| செப்பத்தமதிலை | 60 | திகைப்படங்க | 65 |
| செப்பாரமுதலை | 79 | திக்கத்தி | 11 |
| செப்புங்கவச | 2 | திக்கரச | 61 |
| செம்மலைவண்டு | 76 | திங்களுமாசுணை | 71 |
| செயதுங்க | 20 | திசாமுக | 73 |
| செயலங்கை | 88 | திடம்படு | 47 |
| செய்தவத் | 75 | திதத்தத்தத் | 54 |

| | பாட்டின் எண் | | பாட்டின் எண் |
|---|---|---|---|
| தித்தவித்தார | 5 | தீதோமரணந் | 55 |
| தித்திக்குந் | 52 | தீத்தன்பரவை | 57 |
| திமிரத்திமிர | 7 | தீராகமல | 83 |
| தியங்கா | 63 | தீவரகந்தரி | 39 |
| திரளக்க | 10 | தீவிலங்கங்கை | 53 |
| திரிகையிலாய் | 34 | தீவினையற்ற | 99 |
| திரிபுரத்தப்பு | 78 | தீனந்தினத்து | 42 |
| திருக்கை | 96 | தெண்டன் | 41 |
| திருத்துள | 35 | தெய்வமணம் | 30 |
| திருவாவி | 1 | தெளிதரு | 25 |
| திலமுந்தயில | 62 | தென்றலையம்பு | 82 |
| திவாகர | 15 | தென்னவனங் | 56 |
| திறம்பாடுவர் | 87 | தேசம்புகல | 45 |
| திறவாவனக | 95 | தேங்காவன | 13 |
| தினகரரக்க | 23 | தேடிக்கொடும் | 27 |
| தினைவேத்தி | 18 | தேமொழி | 4 |
| திட்டப்படா | 72 | தேரைவிடப் | 77 |
| தீதாவசவ | 31 | வாரணத்தானை | காப்பு – 1 |


—: 0 :—

## கந்தரந்தாதி ஆராய்ச்சி

"இலங்கு கந்தர்
அந்தாதி மேலாசை யாவதுயிர்த் தோழியெனும்
நந்தாதி மேலான நட்பு" — தணிகை உலா 620.

தமிழ்க் கடவுளாம் முருகபிரானுக்குத் தொழும்பு பூண்ட அடியார் பலரும் பாராயணமாகப் படித்து வரும் நூல்களுள் திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தரலங்காரம், கந்த ரநுபூதி, திருவகுப்பு என்னும் ஐந்து நூல்களும் பஞ்சரத்தினம் போல்வன. ஆறுமுகப் பெருமானுக்கு உகந்த ஆறு நூல் களுள் ஒன்றாகிய இக் கந்தரந்தாதி மகா விசேடமுடையதா யிருந்தும் ஏனைய ஐந்து நூல்கள்போலப் பாராயணங்களில் வெளிவராது மறைந்து கிடக்கின்றது. இந்நூலில் அநேக அரிய விஷயங்கள் உள்ளன. இதிலுள்ள காப்புச் செய்யுள் களால் இது திருவண்ணுமலையிற் பாடப்பட்டிருத்தல் வேண்டு மெனத் தோன்றுகிறது.

(2) நூலிலுள்ள நூறு செய்யுள்களின் முதலெழுத்துக்கள் சி, சீ, செ, சே, தி, தீ, தெ, தே என்னும் எட்டெழுத்துக்களுள் அடங்குதல் கவனிக்கத்தக்கது.

(3) இந் நூல் வரலாறு :-பெரும் புலமை வாய்ந்தவரும், தம்மொடு வாது செய்து தோற்றவர்களின் காதைக் குறடு கொண்டு குடைந்து தோண்டும் வழக்கத்தைத் தமது கல்விச் செருக்காற் கையாண்டவரும், மிக அற்புதமான வாக்கிற் பாரதத்தைப்பாடியவருமான வில்லிபுத்தூரருக்கும்அருணகிரியார்க்கும் ஒருமுறை தருக்கம் உண்டாயிற்றென்றும், அப்போது ஆசுகவியாக அருணகிரியார் பாடிய நூல்தான் கந்தரந்தாதி என்றும், அந்நூலுக்கு உரை அவ்வில்லிபுத்தூரரே உடனுக்குடன் கூறிவந்தன ரென்றும், அதில் 'திதத்த' என்று தொடங்கும் 54-ஆவது செய்யுளுக்கு அவர் உரைகூற மாட்டாது திகைத்துத் தோல்வி யுற்றனரென்றும், அதற்கு அருணகிரிநாதரே உரை அருளிச் செய்தனரென்றும், பின்பு ஏனைய செய்யுள்களுக்கு வில்லிபுத்தூரரே உரைகூறி முடித்தனர் என்றும் கூறுவர். இத் தருக்கத்தில் பாடமாட்டாதோ, உரைகாண முடியாதோ தோல்வியுற்றவர் காதை அறுப்பதாக ஒட்டினதற்கு ஒத்தவாறு வில்லிபுத்தூரரது காதை அறுத்து இழிவுபடுத்தாமல், இனிக், கருணைக்கு விரோதமான இவ்வழக்கந்தை நீங்கள் விட்டுவிடவேண்டும் என அவருக்குப் புத்தி சொல்லி அவர் *கையிலிருந்த குறடை எறியச்செய்த நமது அருணகிரியாரின் பெருங் கருணையை என்னென்று கூறுவது. இக்கருணையைக் கருதியும் 'கருணைக் கருணகிரி' என்னும் வழக்கு எழுந்தது.

போட்டியிட்டுப் பாடப்பட்ட நூலாதலால், பொருள் காண்பது எளிதான முறையில் விளங்காத வழியில் அமைக்கப் பட்டுளது. அதனுற்போலும், 'கந்தரந்தாதியைப் பாராதே', 'கழுக்குன்றத்து மாலையை நினையாதே' என்ற உலகவழக்கும் ஒன்று தோன்றிற்று.—(அருணகிரிநாதர் வரலாறு பக்கும் 98, 150 பார்க்க.)

* "அக்கிளிதான்-வில்லிபுத்தூ ரான்செவியின் மேலரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண் "—தணிகை உலா 351.

"எதிரும் புலவன் வில்லிதொழ எந்தை உணக்கந் தாதி சொல்லி
ஏழைப்புலவர் செவிக் குருத்தோ டெறியுங் கருவி பறித்தெறிந்தே"
- திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்-வருகை-8.

# 4. விஷய ஆராய்ச்சி

(எண்கள் பாடலின் எண்)

அகப்பொருட் செய்யுள்கள் :
3, 6, 7, 9, 13, 14, 16, 17, 24, 35, 38, 40, 42, 45, 56, 65, 67, 68, 70, 71, 76, 79, 81, 82, 87, 88, 89, 91, 92, 93, 96.

ஆறெழுத்து - 23

உபதேசங்கள் :
ஆறு திருப்பதிகளைச் செப்புங்கள்—1
இறைவன் திருவருள் கூடப், பொறுமை என்னும் பாணத்தால் வெகுளி முதலிய மான்கள் அழியும் - 84
சேது முதலிய ஸ்நாநம் வேண்டாம் திருச்செந்தூரைக் கருதினற் போதுமானது - 33
சேவல், வேல், வள்ளி, தேவசேனை நமக்குத் துணையுள-26
தேவசேனையின் வாகனமாம் மேகம் நமது வறுமையைத் தொலைக்கும்; வேல் - கூற்றுவனை விலக்கும் - 100

ஐந்தெழுத்து — 75

கணபதி :
காப்பு, 52, 60
கஜமுகாசுரவதம்-திறைகொண்ட யானை - காப்பு 1

சிவபெருமான் :
இருப்பிடம் - 25
கங்கை சூடியது - 53, 82
கண்ணப்பரின் எச்சிலை உண்டது- 97
காலனை உதைத்தது - 20, 56
சூரியன் கண்ணைப் பறித்தது-23
சூரியன் பற்களை முறித்தது - 16, 23
தக்கன் யாகம்அழித்தது-காப்பு 1
திரிபுரம் எரித்தது - 47, 60 (செம்பு, வெள்ளி, பொன்) 77, 78
நிற்கும் இடம்-25
பஞ்சாக்ஷரம் - 75
பிரம விஷ்ணுவுக்கு எட்டாதவர் - 49
விஷ்ணு - இடபமானது - 68
விஷ்ணுவின் ரத்தம் கபாலத்தில் நிறைத்தது - 93

சேவல் :
8, 16, 21, 26, 68, 76

ஞானசம்பந்தர் :
ஆண்பனை பெண்பனையானது - 75
சமணரிட்ட ஏடு தோல்வியுற்றது 27
சமணரைக் கழுவேற்றியது - 29, 89
ஞானசம்பந்தரே தெய்வம் - 29
தேவாரம் ருக்வேதசாரம் - 86
பாண்டியனுடைய கூனை நிமிர்ந்தினது - 56, 96
பாண்டியனுடைய சுரத்தைத் தீர்த்தது - 65

தலங்கள் :
அமராவதி - 29, 57
ஆறுபடைவீடு - 1
இலஞ்சி - 13, 81, 91
கயிலை - 95
கொல்லிமலை - 74
சீகாழி - 29, 100
திருச்செங்கோடு - (வேத்கிரி, சர்ப்பகிரி) - 23, 26, 41, 42, 56, 67, 68, 78, 82, 90, 91

திருச்செந்தூர் - 1, 5, 13, 14, 23, 24, 33-35, 38, 42, 48, 58, 61, 62, 65, 70, 71, 86-88, 90, 91, 93-95
திருத்தணிகை - 9, 29, 56, 59, 91, 92
திருப்பரங்குன்றம் - 1, 56
திருவண்ணுமலை (தேயு ஸ்தலம்) காப்பு - 2
திருவரங்கம் - 90, 94, 98
திருவல்லம் - 91
திருவாவினன்குடி (பழநி) - 1, 22, 64
திருவேரகம் - 1, 3, 91
,, உபதேச ஸ்தலம் - 91
,, சோழன் திருப்பணி - 3
தில்லை - 60
பழமுதிர்சோலை - 1, 73
வள்ளிமலை - 7
வெள்ளிமலை - 74

திருமால் :
ஆதிசேடன்மீது சயனம் - 24
இடபமானது - 68
ஐவர்க்கருளியது - 22
கடல் கடைந்தது - 19
கடல்மீது பாணம் எய்தது - 53
கண் - சூரியன் - 22
கயிற்ருற் கட்டுண்டது - 44
கலப்பை ஆயுதம் - 98
கஜேந்திரமோக்ஷம் - 79, 98
சங்கு - 3, 68
சிவனது பிரமகபாலத்தில் தமது ரத்தத்தைப் பெய்தது - 93
தயிருண்டது - 54
நராரி - 30
பலபத்திரர்-98
பாரதத்தில் ஈடுபட்டது - 22
பிரமனது தந்தை - 73
முல்லை நிலத்துக் கடவுள்-காப்பு 2
ராமரவதாரம் - 93
ராவணனை அட்டது - 47
வாமனவதாரம் - 21
வாலியைச் செற்றது - 47
விசுவரூபம் - 57

தேவசேனை :
2, 5, 7, 16, 26, 39, 46, 51, 54, 60-62, 68, 70, 100

பார்வதி :
கருணை - கர்ப்பு 2
பூர நாள் - 78

பிரமன் :
ஓம் பொருள் அறியாமை - 64
தலையிழந்தது - 45, 49
திருமாலின் சேய் - 57, 73
பிரமனை இழிவு படுத்தியது - 19
வெருட்டப்படுவது - 72
வேலுக்கு அஞ்சுவது - சிறையுற்றது - 45

மயில் :
8, 9, 12, 21, 36, 51, 58, 66, 67, 81, 84, 95

முக்கியமான விஷயங்கள் :
ஈதலின் இன்றியமையாமை-28, 60, 97
ஓம் பொருள்-4
கண் வர்ணனை - 88, 96
கொல்லிமலை வெள்ளிமலை சேரனை சேர்ந்தது - 74
சங்கப்பலகை - 25
திருநீற்றின் பெருமை - 29 (நீறிடும் முறை), 56, 96
தும்மினும் மரணம் கூடும் - 59
தெய்வயானையின் கலவியின்பத்தினும் திருமுருகாற்றுப்படை முருகருக்கு அதிகமாகத் தித்தித்தது - 51
நரகதண்டனை - 63
பாம்பு எச்சில் - காற்று 9

மயில் உச்சிட்டம் - பாம்பு - 9
மயில் உச்சிட்ட எச்சில்-தென்றல் 9
மறையவர் வேள்வியில் "அஜ அதியாயம்" - 31
மணம் நிலையாமை - (குலாலன் சக்கரம்) - 34
வள்ளியின் இதய தாமரை முருகன் திருமுகத்துக்கு ஒப்பு- 64
ஜீவன் அசத்து - 69

## முருகர் பராக்ரமம் முதலிய :

அங்கிரியின் கரத்தில் திகழ்ந்தது 66, 69, 83
இசைப்பிரியர் - 98
இலக்குமி மருகன் - 69
உமை முலைப்பால் உண்டது - 33
கடல் சுவற வேல் விட்டது - 45, 74
கடல்மீது கோபம் - 7
கந்த-நாம மந்திரம் - 30
கிரௌஞ்சம் பிளந்தது - 12, 51, 63, 64, 70, 74, 76, 95
சரவணோற்பவம் - 36
சிவபிராற்கு உபதேசம் - 4, 5, 15, 19, 23, 25, 45, 52, 57, 64, 77, 91
சிவபிரான் வாய் புதைத்துச் செவி தாழ்த்தி உபதேசம் கேட்டது - 19, 25
சிவபிரான் ஏன் வணங்கிக் கேட்டார் என வினவுவது - 25
செந்தமிழ்ப்புலவர் என்பது-37, 98
சூரன் (மாமரத்தை)அட்டது-32, 40, 51, 57, 76, 84, 85, 87
தம்மை லகு என்று நினைத்த அக்கினியைக் கருகவைத்தது- 83
திருமால் மெச்சுவது-24
நாம விசேடம்-30, 47, 55
பாண்டியன் பெண்ணின் குதிரை முகத்தைச் சுந்தரமுகம் ஆக்கினது-51
பிரமனை முனிந்ததும் சிறையிட்டதும்-14, 27, 45, 51, 95
முருகர் திருமுகம் வள்ளி இதய தாமரையை ஒப்பது-64
மூவரும் வணங்கும் மூர்த்தி-54
யாகரக்ஷகர் (அவிர்ப்பாக உரிமை) 55
ருத்ர பாலகன்-32
வள்ளிக்கு உலக்கைக்காக யானைக் கொம்பைப் பறிந்துத்தந்தது- 11
வள்ளி காதலர்-28
வள்ளிபாற் பெற்ற சீதனம்-8
வள்ளியொடு விலை (குறவர் குடிக்கு வடு) முதலிய (வேங்கை மரமானது) 17, 37, 43
வேலாயுதமே சரணம் எனப் பிரமனைச் சொல்லவைத்தது 45
வேள்விக்குப் பலன் அளிப்பவர் - 40, 55

## முருகர் மாலை :

இந்தீவரம் (செங்கழுநீர்)-39
கடம்பு-46, 85
செச்சை (வெட்சி)-30, 32, 35, 36, 39, 49, 50
செவ்வந்தி-6
கருங்குவளை, நீலோற்பலம் - 6, 38, 39

## முனிவர், அரசர், தேவர் முதலியோர்:

அக்கினி (ஆட்டு வாகனம்) காப்பு-2, 36, 69
அகத்தியர் (திருமால் பேரன்)-19
இந்திரன்-66, 72
ஐராவதம்-66, 70, 72
கங்கை-20, 44, 53, 82
கண்ணப்பர்-97
கர்ணன் (பகலிற்கொடுப்பது)-15
சனி - சூரியன் பிள்ளை-48
சூரியன்-16, 23,40(அருக்கியம்) 73
சேரன்-74

சோழன்-3
துங்கபத்திரி–20
நக்கீரர் – திருமுருகாற்றுப்படை - 51
நந்தகோபாலன்–44
நவக்கிரகங்கள்–48
பாண்டியன்–56, 65, 96
பாரி–15
யமன்–சூரியன் பிள்ளை–22, 63

வள்ளியம்மை :
3, 5, 7, 8, 11, 14 – 18, 20, 25, 26, 28, 30, 37, 39 43, 44, 48, 50, 58, 59, 64, 66 68, 74, 84, 87, 89, 97, 100
கன்னபுரக்குழை–15

வேதம் :
ருக்கு–19, 96

வேல் :
7, 10-15, 20, 23, 26, 28, 45, 55, 57, 61, 62, 68, 76, 78, 81, 84 (சிவன் தந்தது), 85, 88, 94, 100
வேல் பிரமனைச் சிறையிட்டது–14

## பாடற் பாகுபாடு

[பொருள் வழி]

1. அகப்பொருள் துறைகள் :
அலரறிவுறுத்தல்–14, 17
அவயவங் கூறல்–79
இடம் அணித்தென்றல்–13
இடம் குறித்தல்-91
கன்னயந்துரைத்தல்–88, 96
காட்சி-3
காம மிக்க கழிபடர் கிளவி — (விரகதாபம்)-7, 9, 35 (மாலை பெற), 38, 40, 45, 56, 70, 81, 82, 93
சுனைநயந்துரைத்தல்–42
தலைவன் அழகில் ஈடுபடுதல்–89
தலைவியின் துயரைத் தலைவன் அறிந்திலன் என வருந்துதல் – 45, 93
தோழி இறையோற் கண்டமை பகர்தல்–87
நலம்புனைந்துரைத்தல்–67
நற்றுயிரங்கல்–65
பாணனுக்கு அறிவுறுத்தல்–76
பிரிவாற்றுமை-16
புதல்வன்மேல் வைத்துஅணைந்த வழி ஊடல் 92
பொழுது கண்டு மயங்கல்–6
பொழுது விடிதலைக்கண்டு தலைவி வருந்துதல் 68
மடல்திறம்-71
வெறிவிலக்கல்–24

2. அவையடக்கச் செய்யுள் 10

3. உபதேசம் (உலகோர்க்கு) :
ஆறு திருப்பதியை ஓதுங்கள்–1
கந்தா எனக் கூறி உய்ம்மின்–30
தும்மும்போது குமர சரணம் என்க–97
மறையோர்க்கு உபதேசம்- அஜத்தைக் கொல்லாதீர்கள்; வேள்விக்காக; சிவகுமரா எனத் துதியுங்கள்–31
முருகனுக்கு ஞான விளக்கு ஏற்றி வைத்தல்–99
முருகனைத் துதியுங்கள் (நவக்ரக பீடை வராது) 48; 77
முருகனைத் துதியுங்கள் (அழியாது நித்தியராய்இருப்பீர்கள்) 47
முருகனைத் துதியுங்கள் (தீவினை சேராது) 98

4. உபதேசம்(நெஞ்சுக்கு-புத்திக்கு)
நெஞ்சே! சீகாழியை வணங்கு - 100
நெஞ்சே! செந்தூரைக் கருதுக– 33

நெஞ்சே! முருகன் துணையைத் தேடிக்கொள்-27

5. காப்புச் செய்யுள் 1, 2

புத்தியே! நெஞ்சமே! முருகனைத் துதிப்பாயாக-55, 78

6. சிவபிரான் –

ஏன் முருகனைவணங்கி உபதேசம் கேட்டார்-25

7. ஞானசம்பந்தர் –

தெய்வம் அவரே-29

8. தம்மைப்பற்றிய

அவப் பொழுது போக்கினதை நினைத்து வருந்துதல்-69

ஆசைகள் அற, ஆசைகள்அற்று முருகன் திருவடியில் நிலைத்த புத்தி பெற-53, 83

பிரமன் கையெழுத்து என் தலையில் இனி பொறிக்கப்படாது-72

முருகன் என் பிறப்பை ஒழித்தார்-5

முருகன் திருவடி என் சென்னியது-2

முருகனிடம் வேண்டுகோள்கள். விண்ணப்பங்கள்

உன் திருவடியில் என் மனம் பற்றும்படி அருள்-49

உன் திருவடியிற்சேர்த்துக்கொள் சேர்தலே அழகு-36, 37, 59

உன் திருவடியே எனக்கு உறவு, பொக்கிஷம்- அடைக்கலம்-39, 95

உன் திருவடியை என்று சேர்வேன்-43

முருகனுக்கு ஞான விளக்கு ஏற்றி வைத்தல்-99

முருகனை வழிபடாததால் அஞ்ஞான இருள் விலகவில்லை-12

மும்மலங்களால் அவத்தை-75

முருகா –

அஞ்ஞானிகளிடம் சேராதிருக்க அருள்புரிக-21

உன்னைத் துதியாது பழவினையால் ஏன்மயங்குகின்றோம்-62

என் உயிர் பிரியும்போது காத்தருள், உன்னைத்துதிக்கஅருள், உன் திருவடியே அடைக்கலம்-22, 54, 95

என் உள்ளத்தைத் திருத்து-34

என் வினையை ஒழித்தருள்-66, 86

நரகத்தில் நான் வீழாது காத்தருள்-41

நல்லறிவைத் தந்தருள்-32

நித்யத்வம் பெற உபதேசித்தருள்-46

பிறப்பைஒழித்தருள்-11, 58, 63

மனைவாழ்க்கைச் சேற்றை ஒழித்தருள்-85

முத்திக்கு வழியை உபதேசி-44

முத்தியை அடைய அருளுக-50

யமன் என்னை அணுகாது காத்தருள் — என் உள்ளத்தில் நீங்காது இரு-15, 20, 22, 94

9. தலவிசேடங்கள் :

சீகாழி-100

செந்தூர்-33

திருத்தணி-91

பழமுதிர்சோலை-73

10. திருப்புகழ் கேட்டதின் பயன் - 26

11. திருமுருகாற்றுப்படை (நக்கீரர் பாடியது) சிறப்பு – 51

12. தோத்திரப் பாக்கள் – 57. 74

13. நீதிகள் :

ஈதலின் அவசியமும் சிறப்பும் 75

சிவநெறி விலகி அவத்தைப்படுதல்-75

பிறப்புக்குக்காரணம் வினைதானே 52

மனம் நிலைபெருத பூஜை பயனற்றது-90

முருகன் திருவடியிற் பத்தி அறிவைச் செலுத்தினவர் பிறவியை ஒழிப்பார்-18

முருகனைத் துதித்தால் தீவினை சேராது-நரகம் கிட்டாது-98

## 14. பிரமனது அறியாமை-19. 64

## 15. முருகவேள் :

செய்த உபதேசத்தின் பெருமை-4

திருவடியின் பெருமை-80

திருவருளின் பெருமை-84

வள்ளிபாற் பெற்ற சீதனம்-8

## 16. வேலின் பெருமை-23, 28, 61

## பாடற் பாகுபாடு

[பொருள் எளிது - கடுமை முறையில் - எண் - பாடலின் எண்]

1. எளிதாகப் பொருள் விளங்குவன 1, 2, 3, 5, 6, 8, 10, 17, 18, 30, 31, 41, 44, 46, 47, 48, 50, 56, 61, 63, 64, 70, 73, 75, 81, 82, 83, 90, 91, 94, 97

2. மிக எளிதாகப் பொருள் விளங்குவன காப்பு 1, 34, 96

3. சற்று எளிதாகப் பொருள் விளங்குவன - 4, 9, 13, 15, 16, 21, 22, 24, 29, 33, 39, 49, 58, 59, 60, 62, 65, 66, 67, 68, 86, 98, 99, 100

4. சற்று கஷ்டமாகப் பொருள் விளங்குவன-12, 14, 20, 23, 25, 27, 28, 32, 35, 42, 43, 45, 52, 54, 55, 71, 72 74, 76, 77, 78, 79, 80, 85, 88, 95

5. கஷ்டமாகப் பொருள் விளங்குவன-7, 11, 19, 26, 36, 37, 38, 40, 51, 53, 57, 69, 84, 87, 89, 92, 93

6. வெகு கஷ்டமாகப் பொருள் விளங்குவன : காப்பு-2

—: o :—

ஆறு கொலாம் அவர் தந்திரு மாமுகம்
ஆறு கொலாம் அவர் தோற்றிய வோரிடம்
ஆறு கொலாம் அவர் தானமு நூல்களும்
ஆறு கொலாம் அவர் மந்திரந் தாமே.

[எம்மையாளுங் கந்தபிரானுக்குத் திருமுகங்கள் ஆறு; உற்பவித்த ஒப்பற்ற இடம் (கங்கை) ஆறு; அவருக்கு உகந்த ஸ்தானங்கள் ஆறு (ஆறு படைவீடுகள்) (1) திருப்பரங் குன்றம், (2) திருச்செந்தூர், (3) பழநி, (4) சுவாமிமலை, (5) குன்றுதோருடல், (திருத்தணி முதலிய மலைக்கோயில்கள்) (6) பழமுதிர்சோலை]; அவருக்கு உகந்த நூல்கள் ஆறு (1) திருமுருகாற்றுப்படை, (2) திருப்புகழ், (3) கந்தரலங்காரம், (4) கந்தரநுபூதி, (5) கந்தரந்தாதி, (6) திருவகுப்பு; அவருக்கு உரிய மந்திர எழுத்துக்கள் ஆறு [" சரவணபவ " அல்லது " குமராயநம " அல்லது " ஓம் சிவாயநம "].

# கந்தரந்தாதி
# அரும்பத விளக்கம்


**அகம்-அகங்காரம் 14**
**பாவம் 39**
**மேல் 64**
**அங்கரம்-எழுத்து 23**
**அங்கம்-கண் 10, 23**
**அங்கத்தர்-சிவன் 90**
**அங்கம்-வித்தை 53**
**அங்கா-வாயைத்திற 63**
**அங்காரகம்-சாந்து 98**
**அசம்-ஆடு 24, 31. 69**
**காட்டாடு 43**
**அடவி-வனம் 74**
**அடு-கொல் 9**
**அணங்கு-பெண் 92**
**அணி-நெருங்கிய 77**
**அணித்து-சமீபம் 77**
**அண்-சேர்ந்திருக்கும் (காப்பு 2)**
**அதம்-இறப்பு 23, 54**
**அதுங்கு-ஒதுங்கு 20**
**அத்தமன்-தம்பி 60**
**அத்தம்-பாதி 4**
**கரம் 4, 57, 60, 67**
**பொருள் 4, 28**
**பொன் 60**
**அத்தர்-கடவுள் 90**
**அத்தனை-அவ்வளவு 7**
**அத்தி-யானை 7, 11, 54**
**கடல் 32, 54, 61**
**எலும்பு 54**
**தேவசேனை 60, 62**
**அத்து-சிவப்பு 42**
**இசைவுறுநல் 54**
**அந்தம்-முடிவு 46, 95**
**அநதி-மாலைக்காலம் 6**
**செவ்வானம் 15**
**அந்தித்தல்-பொருந்துதல் 4, 6**
**அந்து-வண்டு 39**
**அபத்து-தீநெறி 20**
**அப்பு-மோது 74**
**ஜலம் 74, 77, 78**
**அமிழாநித்தர்-அழிவிலாச் சிவன் 25**
**அமை-பொறு 65**
**அம்-ஜலம் 3, 40**
**அழகிய 8, 30, 40, 41, 49**
**சிரேஷ்டமான 49**
**அம்பகம்-கண் 68**
**அம்பரம்-கடல் (காப்பு 2), 55**
**அம்பு-ஜலம் 30, 82**
**அம்புயம்-தாமரை 40, 46, 71**
**அம்புஜம்-தாமரை 26, 82**
**அம்புராசி-கடல் 51**
**அம்போதி-கடல் 19, 73, 78, 96**
**அம்போருகம்-தாமரை 6**
**அயில்-வேல் 12, 62, 89**
**கூர்மை 36, 57**
**நுகரப்பட்ட 62**
**அர-சங்கரிப்பவனே 68**
**அரண்-இடம் 55**
**காவல்—(காப்பு 2)**
**அரம்-அரமென்னுமாயுதம் 23**
**அரன்-பிரமன் 19**
**சங்கரன் 61**
**அரா-பாம்பு, நெருங்கிய 80**
**அராக்குன்று-திருச்செங்கோடு 41**
**அரி-பச்சை நிறம் 21**
**விஷ்ணு 21**
**அரித்தல் 29**
**அலகைத்தேர்-பேய்த்தேர் 77**
**அலங்கல்-மாலை 29**
**அலமர-வருத்தமுற 83**

அலம்-கலப்பை 88
போதும் 36, 83
அலர்-பரந்த 14
பூ 14
அலர்தல்-விளைதல் 75
அலவன்-சந்திரன் 81
அலைவாய்-செந்தூர் 61
அல்-இருள் 15, 79, 93, 99
அல்லி-ஆம்பல் 33
அவசம்-மயக்கம் 2
அவதி-ஆயுள் 73
அவம்-பயனின்மை 83
துன்பம் 75
அவி-அவிர்ப்பாகம் 40
அவை-கூட்டம் 57
அளக்கர்-கடல் 10
அற்றம்-மறைவு-11
அனக-பாபமற்ற 95
அனங்கன்-மன்மதன் 56
அனல்-அக்கினி 5
அன்றில்-அன்றிற்பட்சி 81
அன்னமுனி-பிரமன் 64
ஆ-ஆச்சரியமாக 95
பசு (காப்பு 2)
ஆகமர்-சிவன் 98
ஆசு-குற்றம் (காப்பு 2)
ஆதித்தன்-சூரியன் 45
ஆய்-ஆராய்(தல்) 70
ஆயி-பார்வதி 34
ஆரணம்-வேதம் 23, 68, 90
ஆர்-ஒப்பாகிய 89
ஆல-அசைய 59
ஆவன்-திருமால் 13
ஆறலைத்தல்-வழிபறித்தல் 86
இகல்-பகை 35, 36
மாறுபாடு 48
இக்கன்-மன்மதன் 51, 94
இக்கு-கரும்பு 17
கொடுமை 27
இஞ்சி-மதில் 22, 90
இக்குற-மங்க 28
இடையே-மத்தியில் 69
இதப்பாடு-இன்னருள் 81
இதழ்-அதரம் 87
இந்தீவரம்-நீலோற்பலம் 38, 39
இந்து-சந்திரன் 9, 85
இமையோர்-தேவர் 80
இரிய-முறிய 20
இலகம்-இருப்பிடம் 14
இலஞ்சி-மடு 13
இல்-இருப்பிடம் 89
இனம்-கூட்டம் 1
ஈர்தல்-அழித்தல் 23
உக-அழிய 46
உகந்த-விரும்பத்தக்க 98
உகல்-உலாவுதல் 76
புரளுதல் 88
உகளல்-ஊர்தல் 11
உக்கு-இறந்து 46
உங்கு-உவ்விடம் 2
உச்சிட்டம்-எச்சில் 9
உண்-மிகுதி (காப்பு 2)
உதரம்-உதாரத்துவம் 42
உதரானலம்-வயிற்றுப்பசி 42
உதி-சனனம் 54
உத்தண்டம்-வலிமை 41
உத்தீத்தன்-ஊர்த்த தாண்டவன் 57
உத்துளம்-பொடி 34
உந்தி-கான்யாறு 7, 16, 48, 89
உந்து-உயர்ந்த 48, 89
உபாதி-வருத்தம் 29
உயதி-வருத்தம் 65
உரம்-மார்பு 15
வன்மை 66-70
உலைதல்-கெடுதல் (காப்பு 2)
உவரி-கடல் 94
உவா-இளமை 1, யானை 1

உன்-ஆராய் 71
உறவே-முழுதும் 57
உன்னி-நினைத்து 76
எய்வ-ஜெயிப்பன 30
எரி-அக்கினி 82
எல்-பகல் 34
என்பு-எலும்பு 35
ஏதிலம்-அயலார் 62
ஏத்தி-இறைவி 18
ஏய்-ஒத்த 25
ஏறு-ஆண் 75, இடபம் 76
ஏனல்-தினைப்புனம் 28
ஐ-அழகு (காப்பு 2, 18, 28, 78), சிரேஷ்டம் 88, கடவுள் 10, 27, 37, 65
ஐயம்-பிச்சை, பயம் 93
சந்தேகம் 96
ஐவர்-பஞ்சேந்திரியங்கள் 21
53, பாண்டவர் 22
ஐவனம்-மலைநெல் 37
ஒருப்பட-ஒன்றுக 74
ஓகம்-ஆரவாரம் 3
ஓசை-மகிழ்ச்சி 5
ஓதி-கூந்தல் 79
ஓமம்-மறையோர்வேள்வி 55
ஓம்-பிரணவம் 4, 52
ஓர்தல்-அறிதல் 45
கஞ்சம்-தாமரை 96
கட்செவி-பாம்பு 26
கண்டி-சேதி 67
கத்து-ஆர்ப்பரித்தல் 90
பிதற்றுதல் 47
வருந்திமுறையிடுதல் 64
தலை-11, 47
கந்தரம்-கழுத்து 3, மலைக் குகை 39, மேகம் 66
கம்-தலை 24, 45, 98
கம்பு-சங்கினம் 24
கரம்-கோபம் 58, 84
கரவு-வஞ்சகம் 23, 68
கரா-முதலை 98
கலம்-மரக்கலம் 45
கல்-கற்கின்ற 55
களபம்-சந்தனம் 16
களை-நீக்கு 42
கள்-தேன் 71
கழுமலம்-சீகாழி 100
கறை-உதிரம் 72
கனகம்-பொன் 99
கனம்-மேகம் 56, 79, 91
மகத்துவம் 58
கன்னபுரக்குழை-ஒருவகை
யாபரணம் 15
கன்னம்-செவி-15
கா-பூஞ்சோலை 56, 81
கற்பகத்தரு 63
காத்தருள் 63
காய்-கோபி 87
கார்-மேகம் 73
கால்-காற்று 30, ஒளி 79
காவு-காவல் 81
கிளை-சுற்றத்தார் 24
கு-உலகம் 17
குடி-மனைவி, உறைவிடம் 1
கும்பம்-மத்தகம் 46
குருந்து-பாலகன் 33
குலவு-பிரகாசிக்கின்ற 21
குவடு-மலை 17
குழல்-புல்லாங்குழல் 81
குற-குற்றும்படி 89
குனித்தல்-வளைத்தல் 47
குன்ற-வருந்த 26
கூப்பிட-இரங்க 12
கூற்றுவன்-யமன் 100
கேள்-சுற்றத்தார் 14

கை-கோபி 37, 88
ஒழுங்கு 51
தீர்தல், ஒழிதல் 51, 53
ஒப்பற்ற 88
கைத்து-கோபித்து 51
தீர்த்து 15
கைப்பு-வெப்பம் 65
கைம்மா-யானை 51
கைவரு-வல்லமையுள்ள 53
கொடி-நீண்ட 16
கொடியுங்கொடிய 16
கொடும்பு-திருகுதல் 27
கொண்டல்-மேகம் 88
கொழுநன்-நாயகன் 99
கோடு-சங்கம்-8, 11
கோணல்வடிவு 8
மாறுபாடு 11
கொம்பு 8
கோத்திரி-மலை 34, 78
கோள்-குற்றம் 8
ச-சனித்த 83
சங்கம்-கூட்டம் 14
சங்கர-அழிக்கின்ற 84
சதிர்-சதுர்ப்பாடு 1
சத்தி-வேல் 23, 61
சந்ததி-மைந்தன் 90
சமூகம் (சாமூகம்)-கூட்டம் 73
சம்-உற்பவித்த 84
சம்பு-பிரமா 45
சலதி-கடல் 58
சலராசி-கடல் 81, 90
சரம்-அம்பு (காப்பு 2)
சர்-உஷ்ணம், அக்கினி-காப்பு 2
சிகண்டி-மயில் 58, 66, 67
சிகாவளம்-மயில் 36, 81
சிகாவிம்பம்-வட்டவடிவாகிய தலை 80
சிகை-பந்தம் 50, கொண்டை 51
சிக்குற-அகலாதுறைய 28
சிக்கென-உறுதியாக 27
சித்திரம்-பொய் 49, 50
சிந்தா-அழியா 21
சிந்தாகுலம்-வருந்துமனம் 21
சிந்து-பொடிசெய் 66, 70
கடல் 9, 41, 70
கொடி 21
வாமனம்-21
சிந்துரம்-திலகம் 4, 66, 69, 70
யானை 39, 66
சித்துரை-தேவசேனை 39
சிரபாத்திரி-சிவன் 34
சிலம்பு-மலை 43, 51, 96
முழங்கு 51
சிலுகு-ஈஷணாத்திரயங்கள் 47
சிலை-மலை 8
வில் 9, 56, 78, 97
ஆர்ப்பரிப்பு 9
சில்-தகழி 38
சிவ-கோபி 83, 84
சிறை-தோகை 12
கரை 12, 74
சிற்றம்பலம்-ஞானவெளி 38
சீ-லக்ஷ்மி 8, 80
இகழ்ச்சிக்குறிப்பு 8
பிரகாசம் 69
சீகரம்-அழகு 65
அலை 66
சீதன்-சந்திரன் 8
சீதனம்-வரிசை 8
சீயம்-சிங்கம் 19
சீயன்-சிவன் 19
பாட்டன் 19
சீரம்-கலப்பை 98
சீரா-கவசம் 80

சீர்-தன்மை 37
சீர்க்கை-மனந்திருந்துதல் 37
சீர்ப்பினும்-செல்வம்
அதிகரிக்கினும் 36
சீலம்-தயாளம் 58
சுசி-பரிசுத்தம் 58, 66
அக்கினி-66
சுதன்-மைந்தன் 66
சுண்ணம்-நீறு 71
சூடிகை-கிரீடம் 4
சூதம்-மாமரம் 11
சூராரி-சூரசங்காரன் 77
சூலம்-கழு 89
செ-உற்பவித்த 2
செனனம் 5, 6, 26
சிவந்த 36, 59
செகம்-பூமி 21, 24, 46
செச்சை-வெட்சிமாலை 32, 35, 36, 39, 49, 50
ஆடு-36
செப்பம்-நடுவு நிலைமை 60
செப்பு-கவசம் 2, சொல் 79:
சிவந்த 60
செம்-ஒழுங்சான 43
அழகிய 43
செம்மல்-போர்வை 75
செம்மல்-கடவுள் 76
புதைத்தல் 76
பழையபூ 76
செய-சிறந்த 20
செயல்-சேறு 88
செய்-நிலம், வயல் 43, 75
88, 91
செய்த-சிவந்த 75
செய்ய-அழகிய 10, 43
சிவந்த 24
செய்யன்-குமாரக் கடவுள் 43
செய்யாள்-லக்ஷ்மி 69
செரு-போர் 40, 46
செருக்கு-மயக்கம்,
இறுமாப்பு 46
செல்-மேகம் 22, 93, 100
செல்லல்-துன்பம் 93
செல்வன்-புதல்வன் 20,71,94
செவ்வந்தி-ஒருவகை மலர் 6
செவ்வி-புதுமை 51, 56
செவ்வு-செம்மையாக 6
செற்ற-செயித்த 90
செற்றை-ஒருவகை மீன் 22
தூதர் கூட்டம் 22
சென்னி-சோழன் 3
சே-ரிஷபம் 2, 16, 26, 40, 64, 68
ஆண் 4
சிவந்த 11, 16, 64
அழகிய 33
வயிரம் பொருந்திய 40
பிள்ளை 44, 49, 94
காத்தல் 68, தூரம் 44
இளமையான 85
சேகரன்-தலைவன் 67, முடியிற் றரித்தவன் 68
சேகு-வயிரம் 68
சேடன்-பாம்பு 36
சேடி-விஞ்சையருலகம் 92
கர்வித்திருக்கின்ற 92
சேடு-அழகு, திரட்சி 92
சேண்-ஆகாசம் 35, 60
சேதம்-கேடு 48, 87
சேதகம்-பின்னம் 48
சேறு 49
சேதனம்-அறிவு 32
சேதி-கண்டிப்பாயாக 94
சேதித்தல்-வதைத்தல் 93
சேது-சிவந்த 33, 44, 49, 94
சேந்தன்-கந்தன் 48, 85
சேந்து-சிவந்து 85
சேம-சிவந்த 39

சேமம்-பொக்கிஷம் 39
சேமர்-காப்போர் 40
சேய-அழகினையுடைய 48
சேயவன்-செவ்வாய் 48
சேய்-குமாரக்கடவுள் 9, 47
மைந்தன் 6, 22, 47
தூரம் 43
சேர்தல்-இடைவிடாமல் தியானித்தல் 73
சேர்ப்பது-சிலேத்துமம் 59
சேர்ப்பன்-தலைவன் 59
சேலை-அசோகமரம் 89
பீதாம்பரக் கச்சை 89
சேல்-சேற்கெண்டை 88
சேவகம்-திறம் 64
சேவகன்-வீரன் 7, 74
சேவல்-காப்பாற்றுதல் 15
சேவன்-சிவன் 16
சேறல்-செல்லுதல் 86

சை-இகழ்தற்கிடமான 36
சையம்-மலை 36

தகம்-தகுதி 49
தகனம்-காந்தி 70
தகர-பொடியாக 12
தடம்-பெருமை 11
தடிதல்-கொல்லுதல் 11
தண்டம்-தண்டாயுதம் 20
ததி-தயிர் 54
தத்த-சதிபரய்ந்து செல்ல 67
தத்து-ஆபத்து 54, 67
ததும்பு 54
தத்தை-கிளி 28, 54
தநு-உடல் 63
தந்தி-யானை 16, 73
பாம்பு 23, 54, 90, 91
தந்து-நூல் 33
தப்பு-குற்றம் 77
தமர-முழங்க 67
தம்பம்-பற்றுக்கோடு 38
தம்பாடு-தம்மிடம் 87
தயிலம்-எண்ணெய் 62
தரங்கம்-கடல் 7, 76
தரம்-வலிமை 90
தரவு-கட்டளை 41
தரு-விருக்ஷம் 25
தவ-அழிய 75, 99
தவா-நீங்காத 95
தவிராத 26
தவு-நீங்கு 76
தனம்-கொங்கை 8, 46
திரவியம் 8
தா-தாவுதல், ஏறுதல்-காப்பு 2
இடம் 54
தாத-பிரமன் 54
தாதன் தொண்டன் 54
தாமம்-மாலை 43
தாமரை-சிறுகுடி 43
தாம்பு-கயிறு 44
தாரகை-நக்ஷத்திரங்கள் 4
தாரம்-மனைவி 5
தாலம்-உலகம், பனை 75
தானவர்-அசுரர் 85
தாறு-அளவுபடாத 86
குலை 86

தி-பத்தி 27
திக்க-திகைக்க 94
திக்கர்-திக்குப்பாலகர் 61
திக்கு-மயக்கம் 52
திங்கள்-சந்திரன் 70, 71, 73, 90; மாதம் 71
திகிரி-சக்கிரம் 3, 91, 98
மலை 91
மூங்கில் 91
திசைமுகன் (திசாமுகன்)-பிரமன்--10, 72, 73
திதம்-உறுதி 53
நிலைபெறுதல் 54, 67

திதி-காத்தல், நாள் 54
தித்தி-பை 52, 54; உணவு 18
திமி-திமிங்கிலமீன் 7
குற்றுதல் 7
திமிர-பூச 7
திமிரம்-இருள் 6, 7, 53, 82
தியங்குதல்-மயங்குதல் 62
திரம்-உறுதி 10, 50
திர ளக்கர்-இந்திரன் 10
திரள்-அநேக 10
திரி-கெடும்படி 20
திரிகை-குலாலன், சக்கிரம் 34
திரித்தல்-ஒழித்தல் 40
திரிநகம்-மும்மலை (திருத்தணி பரங்குன்று, செங்கோடு) 56
திரு-லக்ஷ்மி 1
திருக்கு-கூன் 96
திருக்கை - ஒருவகைமீன் 78, 96
திலகம்-பொட்டு 13, எள் 14
திலம்-எள் 62
திவா-பகல் 15
திறம்பாள்-நீங்காள் 87
திறவு-திறவுகோல் 95
அடைக்கல ஸ்தானம்-95
தினகரர்-ஆதித்தர் 23
தீ-நெருப்பு 18, 30, 54
நல்லறிவு 31, 39, 42, 53, 54, 83
கொடிய 42, தகிக்கும் 54
தீய்ந்துபோகும் 99
தீட்ட (தீண்ட) - அடைய 72
தீட்டு-கூர்மையிடு, அசூசி 72
தீட்டுதல்-எழுதுதல் 71, 72
தீத்தன்-சூரியன் 57
தீ மதலை-கோழி 21
தீர்தல்-அழித்தல் 39
தீவு-உலகம் 99
தீனம்-வறுமை 15, 42
தீன்-இனிய 42
து-உண்ட 54, 97
துங்க-உயர்ந்த 47
துங்கபத்திரி-சுரப்புன்னையிலை 20
துச்சில்-ஒதுக்கிடம் 97
துஞ்சா-கண்ணுறங்கா 70
துடர்-பூமாலை 85
துண்டம்-மூக்கு 14
துதை-நெருங்கு 54
துத்தி-படப்பொறி 54
துப்பு-பவளம் 42
துமி-தும்மல் 97
தும்பு-பாசம் 27
துவசம்-கொடி காப்பு - 1, 76
துவர்-பவளர் 32, 87
துனி-துன்பம் 8, 42
துறை-தீர்த்தம் 44
தூங்குதல்-பெய்தல் 35
தெண்டன்-வணக்கம், காலன் 41
தெரிவையர்-பரத்தையர் 77
தென்-அழகு 55, 56, 82
தென்னன் - பாண்டியன் 64, 96
தென்னவன் - பாண்டியன், யமன் 56
தென்னூல்- தமிழ்நூல் 96
தே-கடவுள் 4
தேக்கி-நிறைத்து 5
தேங்கு-நிறைவாகிய 13
தேங்குதல்-திகைத்தல் 12, 13
தேசம்-உறைவிடம் 45
தேசிகன்-அழகன் 98
தேசு-கீர்த்தி 28, ஒளி 45
தேம்-நன்மை 4, இடம் 4, இனிமை 4, 11
தேரை-77
தேள்-விருச்சிகராசி 27

தேன்-வண்டு 82
தைவருதல்-தவமுதல் 22
தொத்தது- அடிமைப்பட்டது 54
தொந்திப்பு-சம்பந்தம் 52
தோகை-தூவி, துவசம் 51
தோமரம்-கைவேல் 55
தோம்-குற்றம் 55
தோல்-யானை 19

ந-இன்மை 23
நகம்-மலை 47, பாம்பு 67
நகில்-கொங்கை 28
நகை-பல் 25, 62
நஞ்சம்-விஷம் 96
நந்தனம்-கிருபை (காப்பு 2) 55
நந்தன்-நந்தகோபன் 44
நந்தாது-அவியாது 99
நந்து-கெட்ட 42, சங்கு 42
நமன்-யமன் 71
நராரி-திருமால் 30
நாடகி-சிவன் 34
நாம்-அச்சம் (காப்பு 2)
நாள்-நக்ஷத்திரம் 25
நிசாசரர்-அசுரர் 48
நிசாந்தகன்-சூரியன் 16
நிதியம்-சங்கநிதி, பதுமநிதி 63
நித்திலம்-முத்து 61, 62, 81
நிமிர்-நீண்ட 37
நியதி-நித்தியமும் 64
நிறம்-மார்பு 80
நீலம்-கருங்குவளை, இருள் 6
நீலோற்பலகிரி-திருத்தணி 59
நுதல்-நெற்றி 60
நூக்கு-தள்ளு 41
நைத்து-அழித்து 94
நைவு-கழிதல் 18

பங்கஜம்-தாமரை 14
படாம்-பட்டம் 72
படி-பூமி 11
படு-அழிதல் 74
படுதல்-உண்டாகுதல் 9
பணி-பாம்பு 77
பண்டு-பூர்வத்தில் 63
பதுமம்-தாமரை 59
பத்தி-ஒழுக்கம் 20
பரவை-கடல் 57
பராகம்-மலர்த்தாது 46
பரி-அலர்ச்சொல் 81
பரியங்கம்-கட்டில் 81
பரியானலம்-வடவாமுகாக்கினி 81
பலம்-பயன் 38, 40, 44
பழனம்-வயல் 22
பனிக்கதிர்-சந்திரன் 10
பனிப்பானு-சந்திரன் 48
பாகம்-பககம் 39
பாறு-பருந்து 18
பாற்கரன்-சூரியன் 73

புகர்-புள்ளி 70
புகல்-அடைக்கலஸ்தானம் 45
புங்கவன் - தேவன் 2, உயர்ந்தோன் 2
புசகம்-பாம்பு 24, 82
புடை-நீக்கு 11, பக்கம் 17
புத்துறை-புதிய உறை 78
புந்தி-புதன் 48
புரத்தல் - காப்பாற்றுதல் 24, 41
புரந்தரன்-இந்திரன்-41
புரந்தர் - தொன்றுதொட்டு வருதல் 41
புரம்-ஊர் 24, பழமை 24
பூசுரர்-வேதியர் 55
பூதரம்-மலை 67, 82
பொரு-போர்செய் 74

பொருப்பு-மலை 74
பொழில்-உலகம், பெருமை 93
பொறி-எழுத்து, தீ 63
செல்வம் 63
பொறை-பொறுமை 84
பொன்-வியாழன் 48
போது-பொழுது-35
மகம்-வேள்வி (காப்பு-1)
மண்-மாசற்ற 30
மதம்-ஆங்காரம் 9
மதனம்-கடைதல் 9
மதன்-மன்மதன் 9, 81
மது-தேன் 9
மதுகரம்-தேன் 80
மராம்-கடம்பு 85
மராமம்-மாமரம் 80
மருண்டு-மயங்கி 24
மருப்பு-கொம்பு 72
மரை-கடம்பை 43
மலங்கல்-கலக்கமுற்றழிதல் 29
மலையாளி – குறிஞ்சி நிலத்தை
யாள்பவன் (முருகன்) 55
மறலி-யமன் 94
மறை-வேதம் 82
மன்-நிலைபெற்ற 79, 80
மன்றல்-வாசனை 82
மா-பெரிய 51
மாமரம் 51, 76
மாசு-குற்றம் 71
மாசுணம்-பாம்பு 71
மாமை-அழகு 51
மாயூரம்-மயில் 21
மால்-மாயோன்-10
மயக்கம் 66
மாற்றம்-மொழி 71
மான்-விலங்கின் பொது 84
மின்-தெய்வயானை 27
மீன்-மீனம் 27
மூதல்-பிறப்பின் மூலம் 79
முத்து-முத்தம் 25
முந்நீர்-கடல் 53, 82
முரல்-சப்தித்தல் 24
முருந்து-மயிலிறகின் அடி 79
முல்லை - முல்லை நிலம், கற்பு
(காப்பு 2)
முழுச்சேவ்கன்-ஒப்பற்ற
வீரன் 64
முற்றம்-முன்றில் 58
முனி-கோபி 88
முனை-கூர்மை 13
மேதி-எருமைக்கடா 63
மை-மேகம், ஆடு, அஞ்சனம்
-(காப்பு 2)
இருள் 12, 51, மேஷம் 27
மைந்து-வலிமை (காப்பு 2)
மையல்-வீரகதாபம் 24
ரக்க-ரக்ஷை 7
ரசதம்-வெண்மை 42
ரணம்-உரிமை 26, 55; யுத்தம 68
ரதம்-பல் 23
ரமிக்கும்-மகிழ்வை விளைக்கும் 34,
50
ரவி-சூரியன் 40, 70
ரவு-ஆரவாரத்தையுடைய 34
ரவுத்த-ராவுத்தனை 66
ராகம்-கோபம் 46
இச்சை 83
கீதம் 98
ராசி-கூட்டம் 67
ராம-அழகிய 80
ரிபு-மாறுபட்ட 20
சத்துரு 39, 78
ருக்கு-ருக்குவேதம் 96
லகு-அற்பம் 83
லங்கனம்-கடிதல், பசி, பங்கம் 58
லத்தை-கிருபை 6, 38
லயம்-மரணம் 59

லாவகம்-நொய்யதான 93
லிகிதம்-எழுத்து 83
வசவ-ரிஷபவாகனம் 31
வசவு-இகழ்ச்சிச்சொல் 31
வசி-கூர்மை 84
வஞ்சி-பெண் 84
வடு-மாவடு, குற்றச்சொல் 17
வணம்-அழகு 45
வண்டு-சங்கு, குற்றம், சுரும்பினம் 76
வந்தி-வணங்கு 100
கொடுமை 61, 100
வருத்தம் 6
வரகு-தானியம் 39
வரை-மலை 73, 79
வல்-சொக்கட்டான்காய் 16
வலம்புரி-நந்தியாவர்த்தம் 91
வற்று-வல்லது 42
வனசம்-தாமரை 69, 95
வனப்பு-அழகு 37
வனம்-ஜலம் (கங்கை) 37,
காடு 48, அழகு 95
வனேற்பவை-வள்ளிநாயகி 89
வன்பு-வலிமை 48
வாகன்-வாகனமாகக் கொண்டவன் 66
வாகு-புயம் 14, அழகு 15
வாசகம்-சொல் 25
வாசவன்-இந்திரன் 59
வாசி-பாணம் 84
குதிரை 51
வாரணம்-யானை, சங்கு-காப்பு (க), 68
கோழி-காப்பு (க). 26
வாரணத்தான்-இந்திரன், விஷ்ணு,
குமாரக்கடவுள்-(காப்பு க)
வாரி-கடல் 45, 67
வாரிதி-கடல் 35
வார்-ஒழுங்கான 24, நீண்ட 35
வாவி-பொய்கை 2, 9, 33, 79
வாவு-தாவு 36
வாளி-பாணம் 88
வாள்-ஒளி 14, 60, 88
வான்-பெரிய 53
வி-விசேஷமான, நல்ல(5) பக்ஷி 26
விக்கம்-விக்னம், தடை 40
விண்டு-ஆர்ப்பரித்து 40
விதி-பிரமன் 65
விதிர்த்தல்-எறிதல் 61
வித்தகம்-அற்புதம் 70
வித்தகன்-சர்வக்ஞன் 70
விலம்-வில்வம் 53
விலங்கம்-பலத்த தொடர்ச்சி 53
விலோசனம்-கண் 96
வில்-தனுசு 27
விள்-சொல்லுதல் 77
விடு-மோக்ஷம் 5
வெகுநாட்டன்-ஆயிரங் கண்ணன்-
இந்திரன்-27
வெம்-கொடிய 66, 100
வென்-புறம் 10, 73
வேணி-சடை 74
வேதனை-துன்பம், மூங்கில் 73
வேதன்-பிரமன் 73
வேத்தியர்-அறிஞோர் 18
வேழம்-யானை 60

—:o:—

உ

வேலு மயிலுந் துணை



அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய

# திருவகுப்பு

—: o :—



9 - ஆந் திருமுறை

உ

வேலு மயிலுந் துணை

# திருவகுப்பு

—:o:—

1. சீர்பாத வகுப்பு
2. தேவேந்திர சங்க வகுப்பு
3. வேல் வகுப்பு
4. திருவேளைக்காரன் வகுப்பு
5. பெருத்த வசன வகுப்பு
6. பூத வேதாள வகுப்பு
7. பொருகளத் தலகை வகுப்பு
8. செருக்களத் தலகை வகுப்பு
9. போர்க்களத் தலகை வகுப்பு
10. திருஞான வேழ வகுப்பு
11. திருக்கையில் வழக்க வகுப்பு
12. வேடிச்சி காவலன் வகுப்பு
13. சேவகன் வகுப்பு
14. வேல்வாங்கு வகுப்பு
15. புய வகுப்பு
16. சித்து வகுப்பு
17. கடைக்கணியல் வகுப்பு
18. சிவலோக வகுப்பு
19. மயில் வகுப்பு
20. கொலு வகுப்பு
21. வீரவாள் வகுப்பு
22. சிவகிரி வகுப்பு
23. திருச்செந்தில் வகுப்பு
24. திருப்பழநி வகுப்பு
25. திருப்பரங்கிரி வகுப்பு

உ

# திருவகுப்பு

—:o:—

## முன்னுரை

முதற் பதினெட்டு வகுப்புக்களே அருணகிரிநாதர் அருளினவை என்பது ஸ்ரீ ஆறுமுக நாவலர் கொள்கை. திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் பதிப்பைப் பார்த்துக் காஞ்சீபுரம் – பிள்ளைபாளையம் மணியப்ப முதலியார் அவர்கள் தாம் எழுதிய ஓலைச்சுவடியின் முதலில் அருணகிரிநாதரால் பாடப்பெற்றவை பதினெட்டு வகுப்புக்களாகவே யிருக்க வேண்டுமென்று பலருஞ் சொல்கிறுர்களென்றும், சில பிரதிகளில் இருபத்தொன்றுமுதல் முப்பத்திரண்டுவரைக்கும்அதிகமாக இருக்கின்றனவென்றும் மற்றவை சந்தச் சிதைவுடனும் சந்த மல்லாத பிற பாக்களாகவும் இருப்பதால் அவை அருணகிரியார் வாக்கல்ல என்கிறுர்களென்றும் எழுதியிருக்கிறுர். 'நின்பத யுகப்ரசித்தி என்பன வகுத்துரைக்க நின் பணி தமிழ்த்ரயத்தை அருள்வாயே' (திருப்புகழ் 1233) எனக் கேட்டுக்கொண்டவாறே - அருமையான முறையில் பதினெட்டு வகுப்புக்கள் அருணகிரிநாதர் அருளியுள்ளார். முருகன் திருவடிச் சிறப்பு (சீர்பாத வகுப்பு), முருகன் அடியார் பெருமை (தேவேந்திர சங்க வகுப்பு), முருகன் படை (வேல் வகுப்பு, வேல் வாங்கு வகுப்பு), முருகனுக்கு உகந்த நாயகி (வேளைக்காரன் வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு), முருகன் திருவாய் மலர்ந்த உபதேசமொழி (பெருத்த வசன வகுப்பு), முருகன் சேனை (பூத வேதாள வகுப்பு), முருகன் போர் வீரம் (அலகை வகுப்புக்கள், சேவகன் வகுப்பு), முருகன் உபதேசத் தாற் பெற்ற ஞானப் பிரசாதத்தின் சீரும் சிறப்பும் (திருஞான வேழ வகுப்பு, திருக்கையில் வழக்க வகுப்பு), முருகன் பன்னிரு புயங்களின் பெருமை (புய வகுப்பு), முருகன் திருப்புகழ்ப் பெருமை (சித்து வகுப்பு), முருகன் திருநோக்கச் சிறப்பு (கடைக்கணியல் வகுப்பு), முருகன் திருவருளாற் பெற்ற அன்பின் சிறப்பு (சிவலோக வகுப்பு) — ஆக இவ்வாறு பதினெட்டு வகுப்புக்களும் விளங்குவன ஆகும்.

2. முதற் பதினெட்டு வகுப்புக்களில் – 1, 3, 4, 6, 7, 9, 10, 11, 12, 14, 15, 16 ஆகிய 12 வகுப்புக்களில் திருத்தணிகை கூறப்பட்டிருப்பதால் – கிளியானபின் அருணகிரியார் திருத்தணிகைக்கு வந்து திருத்தணிகேசன் திருக்கரத்தே தங்கித் திருவகுப்புக்களிற் பல பாடி இருப்பார் எனத் தோன்றுகின்றது - அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 178-179.

3. வகுப்புக்களின் ஆற்றல் :—

(1) சீர்பாத வகுப்பு, ஞானத்தை அளித்து, யமபயத்தை நீக்கி, அருள் நெறியிற் சேர்த்து, வினைப்பகையை அழித்தொழிக்கும்.

(2) தேவேந்திர சங்க வகுப்பு, பூதம், பிசாசு ஆதிய துஷ்டப் பகைகளையும், யமனையும் வெருட்ட வல்லது.

(3) வேல் வகுப்பு, எவ்வித ஆபத்தையும் நீக்கி உயிர்த் துணையாய் நிற்பது.

(4) - (6) வேளைக்காரன் வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு, புய வகுப்பு இம் மூன்றும் பத்தித் துறையிழிந்து, ஆனந்த வாரியில் திளைத்து நிற்பதற்கு உதவும் துதி வகுப்புக்களாம்.

(7) வேல் வாங்கு வகுப்பு, போர், பூகம்பம், வெள்ளம், தீ ஆதிய பெரிய ஆபத்துக்களினின்றும் நம்மைக் காக்க வல்ல பேராற்றல் கொண்டது.

(8) கடைக்கணியல் வகுப்பு, உலகோரை முருகனிடத்தே ஆற்றுப்படுத்தி உய்யும் வழியை எடுத்துரைக்கும் 'பெருங்கருணை' வகுப்பு இது. இதைத் 'திருவருட் பிரசாத வகுப்பு' அல்லது 'திருமுருகாற்றுப்படை வகுப்பு' எனவும் கூறலாம்.

இவ்வெட்டு வகுப்புக்களும் பாராயணத்துக்கும் மனப் பாடத்துக்கும் உரியனவாம். [அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 176–198, 296.]

சீர்பாத வகுப்பு, தேவேந்திர சங்க வகுப்பு, வேல் வகுப்பு ஆக இம் முதல் மூன்று வகுப்புக்களும் முறையே 'மணிமந்திர ஔஷத' வகுப்புக்களாம்.

"சென்ன சஞ்சிதம்மேய, வும்மையே தொடுத் திம்மையே மறுமையே யுயங்கு முப்பவ நோய்க்கு, மும்மையே மணி, மந்திர, மருந்தென" முகிழும் இவ்வகுப்புக்கள்.

—அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 198 பார்க்க.

4. பிற குறிப்புக்களை நூலின் இறுதியிற் காண்க.

—: o :—

உ
வேலு மயிலுந் துணை

அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய

# திருவகுப்பு

—: o :—

## 1. சீர்பாத வகுப்பு

[ "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"—இது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. நமது அருணகிரியார் "வரிசை தரும் பதம் அது பாடி வளமொடு செந்தமிழ் உரைசெய அன்பரு மகிழ வரங்களும் அருள்வாயே" (திருப்புகழ் 962) என்றும், 'நின் பத யுக ப்ரசித்தி என்பன வகுத்துரைக்க நின்பணி தமிழ்த் த்ரயத்தை அருள்வாயே' (திருப்புகழ் 1233) என்றும் நெஞ் சுருக ஆண்டவனை வேண்டினர். முருகவேளும் அன்பன் வேண்டியவாறே அருளினர். இதுவே "சீர்பாத வகுப்பின்" வரலாறு ஆகும். ]

**சீர்பாத வகுப்பு:**—மிகப் பிரதானமான வகுப்பு இது: ஏனெனில் முருகரினும் சிறந்தது அவர் சீர்பாதம். 'நின்னிற் சிறந்த நின் தாள் இணையவை' என்பது பரிபாடல் [4 – 62]. 'வீடளிக்குங் கால் நின்னினும் சிறந்த நின் தாளிணையை உடையை' என்றார் உரை எழுதிய ஆசிரியர். 'திருவடியே வீடா யிருக்குமென்றார்' - திருமுருகாற்றுப்படை - அடி 62–63 உரை. பின்னும், திருவடியே இறைவனைக் குறிக்கும் ஓர் அரும்பதம் ஆகும்.

"செங்காட்டங் குடிமேய திருவடி தன் திருவருளே
பெறலாமோ திறத்தவர்க்கே"

எனவரும் ஸ்ரீ சம்பந்தர் திருவாக்கு [3 – 63 – 7] உணர்தற் பாலது.

'கட்ட விரும்பரவத் தானே நின் மென்மலர்த் தா ளென்றே தரும்பரவத் தானே தனே' [மதுரைக் கலம்பகம் 9], 'கட்ட விரும்பு அரவத்தானே'– கச்சாகக் கட்டிக்கொள்ளுதற்கு — அரவம் — பாம்பு. 'மலர்த்தாள் பரவத் தன்னைத் தானே தருமென்க; நின்னைப் பரவுதல் மிகை என்றபடி ... திருவடியே வீடா யிருக்குமாதலின் அவ்வடி தன்னைத் தருமென்றது முத்தியை யளிக்கும் என்னும் கரு தை உடையது' – டாக்டர் உ. வே. சா. அவர்களின் குறிப்புரை.

தனதனன தனதன்ன தனதனன தனதனன
தனதன்ன தனதனன தனதான தானதன

**உ** ததியிடை கடவுமர கதவருண குலதுரக
வுபலளித கனகரத [1]சதகோடி சூரியர்கள்

உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
யுகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்

[2]உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு [3]மநுபவன சிவயோக சாதனையில்

---

[1] சதகோடி – " சதகோடி வித தாள சதிபாய " — தக்க யாக 3. சதம் என்றது நூற்றினும் பலவினும் செல்லும் " (ஷை உரை). ' சதகோடி கூளிகள் ' — சதகோடி யென்றது நூறு கோடியையல்ல ; பலகோடியை ' – தக்கயாக 409 உரை.

நீலநிற மயிலின்மேல் செந்நிறச் செவ்வேள் தோன்றுவது நீலக்கடலில் செந்நிறச் சூரியன் எழுதலுக்கு உவமை.

" நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழனுறிக்
காலை இருள் சீக்குங் காய்கதிர்போல் – வேலை
மணித்தோகை மேற்ருேன்றி மாக்கடற்சூர்வென்ருேன்
அணிச்சே வடியெம் அரண் " —இரும்பல் காஞ்சி.

" உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ்
ஞாயிறு கடற் கண்டாஅங், கோவற இமைக்குஞ்
சேண் விளங் கவிரொளி " — திருமுரு. 1.

" ஞாயிற்றேர் நிறத்தகை " – பரிபாடல் 5–12.

சூரியனுடைய ஒளி ஏழு வகையான நிறத்தது. Violet, Indigo, Blue, Green, Yellow, Orange, Red - (VIBGYOR) என்பர். சூரியனுக்குக் குதிரைகள் ஏழு: " இரவிகள் பல்லும் தத்தம் ஈரறு தேரில் அவ்வேழ் புரவிகள் பல்லும் குத்தி " தக்கயாகப்பரணி 732. சூரியர்கள் – என்றதனல் – தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டன், எனப்படும் பன்னிரு சூரியரையும் குறிக்கும். இவரே துவாதசாதித்ரர் எனப்படுவர். சூரியனுடைய கதிர்கள் ஆயிரம் என்றும், அவற்றில் 400 மழைபொழியும், 300 மழைவளத்தை உண்டாக்கும். 300 பனி பெய்யும் என்றும், பன்னிரு சூரியர்களும் சித்திரை முதல் பங்குனி

பொழிப்புரை

உததியிடை (கடலினிடத்தே) கடவும் — செலுத்தப் படுகின்ற (மரகதம்) பச்சை நிறம், அருணம் (செந்நிறம்) முதலிய எழுவகையான நிறங்களை உடைய (அல்லது - மரகத வருணம் - பச்சை நிறம் (ஆதிய நிறங்களை உடைய), குல - சிரேஷ்டமான (துரகம்) குதிரைகள் பூட்டப்பட்ட, உப லளிதம் — ஒளிரும் அழகுடனே கூடியதான, (கனகரத)- பொன்னொளி மிளிரும் தேர்மீது வரும் (சதகோடி சூரியர்கள்) நூறு கோடிக் கணக்கான-பல கோடிக்கணக்கான சூரியர்களின்

உதயமாகும் ஒளியோ இது என்று கூறும்படி (அதிகவித) பலவகையதான — பலநிறவகைகளைக் கொண்ட (கலபம்) தோகைகளை உடைய (ககம் மயிலின்) மயில் ககத்தின் – மயில் என்னும் பறவை (மிசை) மேல் (விளங்கி), யுகாந்த காலத்தில் (எற்படும்) பேரிருள் விலகி நீங்கத் (தனது) ஒப்பற்ற ஜோதி ஒளியை வீசுவதும் – (முருகவேளின் – சீறடியே)

(உடலும்) தேகமும், உடல் உயிரும் – அந்த உடலிலுள்ள உயிரும் — அல்லது உடலும் — தேகமும், (உடல்) அந்த உடலுடன் மாறுபட்டுப் போர்புரியும் – (அதனுடன் ஒத்து வாழாது பிரிந்துபோகும்) உயிரும், நிலைபெறுதல் – அழிவு பெறாது நிலைத்திருத்தலே, பொருள் என – மோக்ஷமாம் என்று கருதி, உலகம் ஒருவி – பிரபஞ்ச விஷயங்களினின்றும் நீங்கி, வரும் — ஓங்கி வளரும், மநு — தரும சாத்திரங்களுக்கு — (மந்திரங்களுக்கு), பவனம் – இருப்பிடமான – நீதிக்கு இடமான–மந்திரங்களுக்கு இருப்பிடமான–சிவயோகசாதனையில்– சிவயோக விடாப் பயிற்சியில் —

---

வரையில் முறையே 7000, 8000, 9000, 9000, 9000, 11000, 1000, 8000, 7000, 11000, 5000, 1000 கதிர்களுடன் விளங்குவர் என்ப [அபிதான சிந்தாமணி].

"சூரியர்கள் பன்னிருவர் பன்னிரண் டாயிரம்
சுடரொடும் சூழ்வருவரே" [தக்கயாக. 78].

[2] உடலும் உயிரும் நிலைபெறுதல் பொருள் :—

"உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்"
—திருமந்திரம் 724, 725.

[3] மநுபவனம்–' மநுபவன சித்தனும் ' - என்றூர் வேடிச்சி காவலன் வகுப்பில்.

ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
[1]யுணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்
உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு
முழலுவன [2]பரசமய கலையார வாரமற
உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும்
[3]உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
வுருவுடைய மலினபவ ஜலராசி யேறவிடும்
உறுபுணையு மறிமுகமு [4]முயரமரர் மணிமுடியில்
உறைவதுவு [5]முலைவிலது [6]மடியேன் மனோரதமும்;
இதழி[7]வெகு முககககன நதியறுகு தறுகணர
இமகிரண [8]தருணவுடு பதிசேர் ஜடாமவுலி

---

[1] உணர்வு விழிகொண்டு நாடுவது :—
'ஞானக்கண் அதுகொண்டு நாடுமா றுணராதே'
—அருணைக் கலம்பகம் 1

[2] 'ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன ......
இணையடியே' — அப்பர் 4-100-7.

[3] 'பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள்'
'மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி'
—திருவாசகம்-சிவபுராணம் 7, 14.

[4] "இமையோர் முடிமேல்.
ஆணிக் கனகமு மொக்கும் ஐயாற னடித்தலமே'
—அப்பர்-4-92-16.

[5] உலைவிலது - 'எழுவாய் இறுவாய் இலாதன...ஐயாறன் அடித்தலமே'— அப்பர் 4-92-5.

[6] "எனது ஆவி கவர் சீர்பாதம்" — திருப்புகழ் 810.

[7] வெகுமுக ககனநதி – கங்கை - 'ஆயிரமுகத்து நதி'
—வேளைக்காரன் வகுப்பு.
" ஆயிர முகம தாகி ...... வந்திழி கங்கை யென்னுந்
தையலைச் சடையில் ஏற்றார் " — அப்பர் 4-65-7.

[8] தருணம் – இளமை 'தருணேந்து சேகரனே எனும்'— திருவிசைப்பா 6-4.

(ஒழுகும் அவர்) நின்று ஒழுகும் சிவயோகிகள், பிறிது பரவசம் - வேறு பராக்குகளின் வசம் (பிடிப்பு) அழிய – வேறு விஷயங்களில் கவனத்தைச் செலுத்தாமல், விழி செருகி — (ஊனக்) கண்கள் உட்புறஞ் சொருகி நிற்க, (புறப்பொருள் களைக் காணுதநிலையில் நிற்க), உணர்வுவிழிகொடு-ஞானக்கண் கொண்டு, நியதி — எப்பொழுதும் (அல்லது முறைப்படி), தமதாடு — தங்களுள்ளத்தே, நாடி நிற்பதும் — நாடி நிற்கும் அரும்பொருளானதும் (முருகவேளின் சீறடியே) :

உரு உடைய தென்றும், (அரு எனவும்) உருவம் இல்லாத தென்றும், உள்ளது என்றும், இல்லாதது என்றும், (உழலு வன) பேசித் திரிகின்ற பிறசமயங்களின் – பிற சமய சாத்திரங் களின் (ஆரவாரம்) ஆடம்பரப் பேரொலி அடங்கி ஒழிய

உரை – பேச்சு, (அவிழ) அற்று நீங்க (மௌனநிலை—சும்மா இருக்கும்நிலை உற), உணர்வு அவிழ – புலன்கள் செயல் ஒழிய, உள்ளம் அவிழ - எண்ணங்களுக்கு இருப்பிடமான உள்ளமும் ஒடுங்கி அதன் செயல் நீங்க, உயிர் அவிழ-உயிரின் ஆணவ நிலையும் ஒடுங்கி நீங்க, உளபடியை — என்றும் அழியாது உள்ளதான ஒரு தன்மையை-நிலையை, உணருமவர்—அறிகின்ற பெரியோர்களின் (அநுபூதி யானதுவும்) அனுபவ ஞானமாய் விளங்கி நிற்பதும் – சிவஞானிகள் அனுபவிக்கும் ஆனந்த அரும்பொருளானதும் (முருகவேளின் சீறடியே) :

சுற்றம் எனும் முறையில் மனைவி, (மகவு) குழந்தை என்ற (அலையில்) என்னுடைய உள்ளமே உருக்கொண்டு கிடக்கின் றதும், (மலினம்) பாவச் செயல்களுக்கு இடமானதுமான — (பவம்) பிறவி ஆகிய (ஜலராசி) கடலினின்றும் கரையேற்றும்

தக்கதான தெப்பமும் (முருகவேளின் சீறடியே) : அறி முகமும் — (ஞானத்தை) அறிவிக்கின்ற வாயிலும் (முருக வேளின் சீறடியே) ; சிறந்த தேவர்களின் (மணிமுடியில்) அழகிய (அல்லது ரத்ன) கிரீடங்களின்மீது விளங்குவதும் (முருகவேளின் சீறடியே) ; (உலைவிலதும்) அழிவிலாததும் (முருகவேளின் சீறடியே) ; அடியேன் மனோரதமும் — அடியவ னாகிய என் மனதுக்கு உகந்ததும் (முருகவேளின் சீறடியே) ;

(இதழி) கொன்றையும், வெகுமுக ககனநதி – ஆயிர முகங் களாய்ப் பரந்துள்ள கங்கை, ஆகாச கங்கை-எனப்படும்ஆறும், அறுகம்புல்லும், தறுகண் — அஞ்சாமையாகிய வீரத்தைக் கொண்ட (அர) பாம்பும், (இம கிரண) பனிபோற் குளிர்ந்த கிரணங்களை (கதிர்களை) உடையதும், தருணம் – (மூன்றாம் பிறையாய்) இளமை வாய்ந்ததும், உடு பதி – நக்ஷத்திரங் களுக்குக் கணவன் எனப்படுவதுமான சந்திரனும் – (சேர்) ஒன்றுகூடி விளங்குகின்ற (ஜடாமவுலி) சடைமுடியை உடைய

இறைமகிழ வுடைமணியொ டணிசகல மணிகலென
இமையமயில் தழுவுமொரு [1]திருமார்பி லாடுவதும்
இமையவர்கள் நகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத வுரகர்பதி [2]அபிஷேக மாயிரமும்
எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்
இனியகனி கடலைபய [3]ரொடியல்பொரி யமுதுசெயும்
இலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
[4]எழுபுவியை யொருநொடியில் வலமாக வோடுவதும்
[5]எறுழிபுலி கரடியரி [6]கரிகடமை வருடையுழை
[7]யிரலைமரை யிரவுபகல் இரைதேர்க டாடவியில்

---

[1] பார்வதி தேவியின் திருமார்பில் ஆடுவது — குழவிப் பருவத்தில்; விளையாடல் கூருவது—சற்று வளர்ந்த குழந்தைப் பருவத்தில்; கணபதியுடன் போட்டியிடுவது — பின்னும் வளர்ந்த பாலப் பருவத்தில்; வள்ளியின் புனத்தில் உலவினது வாலிப(குமர)ப் பருவத்தில்; என்று முறையாக இங்குக் கூறப்பட்டுளது எனக் காட்டி மகிழ்வர்-வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமி சச்சிதானந்தா.

[2] அபிஷேகம் – முடி. "அபிஷேக பார – முகமலர்"— திருப்புகழ் 350.

[3] ஒடியல் – பனங்கிழங்குப் பிளவு.

[4] கணபதியுடன் போட்டியிட்டு உலகை வலம் வந்தது :— வரலாறு திருப்புகழ் பாடல் 184, பக்கம் 430 கீழ்க்குறிப்பு.

[5] "வலிய சிங்கமுங் கரடியும் உழுவையும்
உறைசெழும் புனந் தினைவிளை யிதண்மிசை
மறவர் தங்கள் பெண் கொடிதனை யொருதிரு
வுளநாடி ...... அணைவோனே" - திருப்புகழ் 552.
"வெங்காடும், புனமுங் கமழும் கழலே"
—கந்தரநுபூதி 44.

[6] கடமை — கடமைமான் எனவும் கூறுவர். 'கடமை மிடைந்த துடவையுஞ் சிறுதினை'-குறுந்தொகை 392. வருடையுழை - வருடை மான்-எனலுமாம்-பட்டினப்பாலை 139 உரை. வருடை-எட்டுக்காலையுடையதொருவிலங்கு; இதற்கு முதுகிற் கால்கள் இருக்குமென்பர் — "மீமிசைக்கொண்ட கவர்பரிக் கொடுந்தாள் வரைவாழ் வருடை"—மலைபடுகடாம் 502–503 உரை : செங்குத்தான மலைகளில் ஏறும் வன்மை வருடைக்கு

(இறை) சிவபிரான் மகிழ (உடைமணியொடு) அரைமணி யுடன் அணிந்துள்ள (சகல மணி) தண்டை, வெண்டையம், கிண்கிணி, சதங்கை ஆகிய எல்லா ஆபரணங்களும், (கலென) கல்லென்று ஒலிசெய, இமயத்து வந்த மயில் அனைய பார்வதி தழுவிக் களிக்கின்ற ஒப்பற்ற அழகிய மார்பிலே விளையாடு வதும் (முருகவேளின் சீறடியே)

இமையவர்கள் நகரில் – தேவர்களின் நகராகிய பொன் னுலகில் — இறை — அந் நகர்க்குத் தலைவனுகிய இந்திரன் குடியேறவும், நிருதர் வயிறு – அசுரர்களின் வயிற்றில் (எரி புகுத) நெருப்பு குடிபுகவும், உரகர்பதி — பாம்புகளுக்குத் தலைவனுகிய ஆதிசேடனது (அபிஷேகம்) முடிகள் ஆயிரமும்,

எழுபிலமும் – பாதலம் ஆதிய கீழுலகங்கள் ஏழும், நெறு நெறு என்று முறிபட, வடகுவடு-வடக்கில் உள்ள மேருமலை, (இடிய) இடிந்து பொடிபட — (இளைய) குழந்தைகளுக்கு உரிய (தளர்நடை) ஆரம்ப நடைப் பழக்கத்துடன் விளையாடல் மிகப்பல செய்வதும் (முருகவேளின் சீறடியே);

இனிப்புள்ள (தித்திக்கும்) கனி – பழங்களையும், கடலை, பயறு, (ஒடியல்) பனங்கிழங்குப் பிளவுகள், பொரி இவைகளை (அமுதுசெயும்) உண்பவரும், இலகு – விளங்குவதும், வெகு – நிரம்பப் பெருகுவதுமான, (கடம்) மதஜலம் கொண்ட, விகட – விசித்திரமான – அழகான, தட – பெரிய, பார மேரு வுடன் – கனத்த மலைபோன்றவருமான (கணபதியுடன்)

(இகலி) மாறுபட்டு (போட்டியிட்டு) முது திகிரி – பழைய சக்ரவாளகிரி நெரிபடவும், வளைந்துள்ள கடல் கூச்சலிடவும், ஏழுலகங்களையும் ஒரு நொடிப்போதில் வலமாக ஓடி வந்ததும் (முருகவேளின் சீறடியே),

எறுழி – காட்டுப்பன்றி, புலி, கரடி, அரி–சிங்கம், கரி–யானை, கடமை-காட்டுப் பசு, வருடை - வரை ஆடு. உழை – மான், இரலை – கலைமான் (ஆண்மான்), மரை - மான்வகை – இவை இரவும் பகலும் இரைதேடும் (கடம்-அடவியில்) கடம்–காடு-அடவி–காடு) கடாடவியில் – பெருங் காட்டில் – அல்லது கடம் – அருநெறிகளைக்கொண்ட அடவி – காட்டில் —

---

உண்டு – குறுந்தொகை 187 உரை. 'வரைவாழ் வருடை' அகநானூறு 378 : 'குறுங்கால் வருடை' – ஐங்குறுநூறு 287.

[7] இரலை – ஆண்மான் – 'வன்பரல் – தெள் அறல் – பருகிய இரலை' — குறுந்தொகை 65 உரை. மரை – நெல்லிக்காயை உண்ணும் — 'நெல்லி மரையினம் ஆரும்' — குறுந்தொகை 235 உரை. மரை ய –ஒருவகை விலங்கு-புறம் 170 உரை.

எயினரிடு மிதணதனில் இளகுதினை கிளிகடிய
இனிதுபயில் சிறுமிவளர் புனமீ துலாவுவதும்;

முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால [1]தூதர்கெட

முடுகுவதும் அருணெறியில் உதவுவதும் நினையுமவை
முடியவரு வதுமடியர் பகைகோடி சாடுவதும்

மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல தீவரமும்

முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முநிவர்கரு தரியதவ முயல்வார் தபோபலமும்

[2]முருகசர வணமகளிர் அறுவர்முலை நுகருமறு
முககுமர சரணமென அருள்பாடி யாடிமிக

மொழிகுழற அழுதுதொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென அறைகூவி யாளுவதும்

---

[1] "வெந் நமனார் தூதரை ஓடத் துரப்பன ... ஐயாறன் அடித்தலமே' — அப்பர் 4-92-15.

[2] முருக சரவண ...... அழுதொழு துருகுமவர் : இதனை-

"முருக ஷடாக்ஷர சரவண கார்த்திகை
முலைநுகர் பார்த்திப என்றுபாடி மொழி
குழறுத் தொழுதழு தழுதாட்பட"

—எனவரும் திருப்புகழ்ப் பாடல் 990-உடன் ஒப்பிடுக.

எயினர் — வேடர்கள், இடும் — கட்டியுள்ள, இதண் அதனில்–பரண்மீதிலே (இருந்து) இளகு-தழைத்துள்ள, தினை–தினைக்கதிர்களை உண்ணவரும், கிளி — கிளிகளைக் ; கடிய — வெருட்டி ஓட்ட, இனிது – நன்ருகப், பயில் – பயின்றுள்ள, சிறுமி – இளம்பெண் வள்ளி, வளர் – வாழ்ந்திருந்த – புனமீது தினைப்புனத்திலே, உலாவுவதும்–உலாவித் திரிந்ததும் (முருகவேளின் சீறடியே)

முதல வினை – (பிறப்பின்) முதற்காரணமான வினையின் (முடிவில்) – வினைமுடிந்து உயிர்பிரியும் காலத்தில், இரண்டு பிறைச் சந்திரன்போன்ற எயிறு–பற்களுடனும், கயிறுகொடு–பாசக்கயிற்றுடனும், முது வடவை–பழமையதான வடவை – வடவாமுகாக்கினிபோன்ற கண்கள் சுழல வருகின்ற காலதூதர்கள் தோற்று ஓடும்படி

முடுகுவதும் — வெருட்டி ஓட்டுவதும் (முருகவேளின் சீறடியே), அருள்நெறியில்–திருவருளைப் பெறக்கூடியவழியைக் காட்டி உதவுவதும் (முருகவேளின் சீறடியே), நினைத்த காரியங்கள் அனைத்தும் நிறைவேறும்படி (வருவதும்) வந்து உதவுவதும் [முருகவேளின் சீறடியே), அடியார்களுடைய (பகைகோடி) கோடிக்கணக்கான பகைகளை — இடையூறுகளைச் (சாடுவதும்) – அடித்து ஓட்டுவதும் (முருகவேளின் சீறடியே).

மொகு மொகு என்று (மதுபம்) வண்டுகள் முரல் – ஒலி செய்து பாடும் குரவு – குராமலர், விளவினது – விளாமரத்தினுடைய – குறுமுறியும் – இளந்தளிர்கள், மலர் – மலர்களுள், வகுளம் – மகிழம்பூ, தள – தளவு – முல்லை மலர், முழுநீல - முழு நீலநிறமுள்ள, தீவரமும் — இந்தீவரம் — குவளைமலர் ஆகிய மலர்கள் —

முருகு கமழ்வதும் – நறுமணம் வீசுவதும் (முருகவேளின் சீறடியே), அகில முதன்மை தருவதும் – சகல (கலைகளிலும்) முதன்மைத்தானத்தைஅருளுவதும் (முருகவேளின் சீறடியே), நியமவிரதங்களைஅநுட்டிக்கும் முனிவர்களாலும் எண்ணுதற்கு அரிதான தவநிலையை முயன்று செய்பவர்களுடைய தவத்தின் பயனுக விளங்குவதும் (முருகவேளின் சீறடியே).

முருக ! சரவண ! கார்த்திகை மாதர் ஆறுபேர்களின் கொங்கைப் பாலை உண்ட ஆறுமுகப் பெருமானே ! குமரமூர்த்தியே ! சரணம் எனத் துதித்து அவருடைய திருவருளைப் பாடியும், ஆடியும், மிகவும்

மொழிகள் குழறும்படி அழுதும், தொழுதும், உருகுகின்ற அடியார்களின் (விழி அருவி) கண்ணீர் அருவியில் — கண்ணீர்ப் பெருக்கில் முழுகுவதும் (முருகவேளின் சீறடியே), வருக என்று (அறைகூவி) வலிய அழைத்து ஆண்டருளுவதும் (முருகவேளின் சீறடியே);

முடியவழி [1]வழியடிமை யெனுமுரிமை [2]யடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடும் ஆசுகவி
முதலமொழி வனநிபுண [3]மதுபமுக ரிதமவுன
முகுளபரி மளநிகில கவிமாலை சூடுவதும்* ;
மதசிகரி கதறிமுது [4]முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதி மூலமென
வருகருணை வரதனிகல் [5]இரணியனை நுதியுகிரின்
வகிருமட லரிவடிவு குறளாகி [6]மாபலியை
வலியசிறை யிடவெளியின் முகடுகிழி படமுடிய
வளருமுகில் நிருதனிரு பதுவாகு பூதரமும்

---

[1] "என்றனை வழிவழி யன்புசெய் தொண்டு கொண் டருள் பெருமாளே !' — திருப்புகழ் 358.

[2] " மயிலினில் வந்தெனை யாட்கொளல், ஜகமறியும்படி காட்டிய குருநாதா " — திருப்புகழ் 331.

[3] மதுப முகரித ... கவிமாலை என்பது (முனிவர்களாகிய) வண்டுகளால் (முகர்) மோந்து அநுபவிக்கப்பட்ட, இதம் — இனிமைதரும் கவிமாலை எனப் பொருள்படும்; இக்கருத்தை 'அலந்து மதுகர முனிவர் பரவ வளர் கமலம் அனைய திருவடி யிணைகள் எனவரும் சிவப்ரகாசச் செய்யுளிலும் ' முனிவராகிய வண்டுகள் ஆசைப்பட்டுத் தோத்திரம் பண்ண நிறம் வளரா நின்ற செவ்வித் தாமரை மலர்போன்ற அவனது ஸ்ரீ பாதங் கள் ' எனவரும் அதன் உரையினுங் காண்க.

—அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 180.

[4] முதலை வாயினின்றும் யானையை மீட்டது - திருப்புகழ் 939ம், பக்கம் 731, 732 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[5] இரணியனைச் சங்கரித்தது — திருப்புகழ் பாடல் 327- பக்கம் 317 கீழ்க்குறிப்பு.

[6] மாவலியைச் சிறையிட்டது — பாடல் 268, பக்கம் 166 கீழ்க்குறிப்பு.

---

[*ஜோதி வீசுவது முதல் - கவிமாலை சூடுவது வரையும் குறிக்கப்பட்ட-ஒளி, பெருமை, அருமை, ஆடல், ஆற்றல், கருணை வாய்ந்தன - என இருபத்திரண்டு வகையாக முருகவேளின் சிற்றடிகள் இவ்வகுப்பில் மங்கல வகையில் விளக்கப்பட்டுள. மங்கலச் சொற்கள் :—திரு, யானை, தேர், பரி, கடல், மலை, மணி, பூ, புகழ், சீர், மதி, நீர், எழுத்து, பொன், ஆரணம், சொல், புயல், நிலம், கங்கை, உலகம், பரிதி, அமிழ்தம்— ஆக 22 என்பதும் ஈண்டு நினைவுக்கு வரும்.]

(முடிய வழி வழியடிமை எனும் உரிமை அடிமை) அடிமை முடியவழி வழியடிமை எனும் உரிமை – அடிமை – அடிமையாகிய நான், முடிய – முற்றிலும் முற்றிலும், வழி வழி அடிமை – என் பிறவிகள்தோறும் தனக்கு நான் அடிமை, எனும் உரிமை – என்கின்ற உரிமையை (பாத்தியதையை), முழுது உலகு — உலகத்தார் யாவரும், அறிய — தெரிந்து கொள்ளும்படி, மழலை மொழிகொடு – ஆண்டவன் அருளிய மென்மொழிகள் கொண்டு, பாடும் – பாடி வந்த, ஆசுகவி – அவன் திருவருளால் முயற்சியின்றி ஊற்றென வந்த – கவி– பாடல்கள் —

முதல மொழிவன – ‘ முத்தைத்தரு ’ என்னும் பதிகத்தை முதலாகக் கொண்டு, மொழிவன — மொழிந்தனவான — சொன்னவையான — நிபுண கவிமாலை — திறம் வாய்ந்த (கவி மாலை), மதுபம் — (முனிவர்களாகிய) வண்டுகளால், முகர் - முகரப்பட்ட – மோந்து அனுபவிக்கப்பட்ட, இதம் - இனிமை வாய்ந்த (கவிமாலை), மவுன முகுள – (கவிமாலை) மௌனநிலையை விட்டு (வாய்) அரும்பி – வாய் திறந்து பாடிய (கவிமாலை), பரிமள (கவிமாலை) சொல்மணம், பொருள்மணம் தமிழ்மணம் – இவை கமழும் (கவிமாலை), நிகில கவிமாலை — (ஆக) எல்லாப் பாடல்மாலைகளையும் சூடியருளுவதும் (முருக வேளின் சீறடியே)

மதசிகரி – மதமலையாம் கஜேந்திரன் (யானை), கதறி – கூச்சலிட்டு, நெடிய - நீண்ட–பெரிய மடு நடுவில் – நீர் நிலையின் மத்தியிலே - முற்றின முதலை ஒன்று (கவர்தர) தன் காலைப் பற்றி இழுக்க, வெருவி – அச்சமுற்று, ஒருவிசை - முன்பு ஒரு நாள், ஆதிமூலம் என – ஆதிமூலமே என்றழைக்க

வரு – வந்து உதவின கருணை வாய்ந்த வரதன் – (கேட்ட வரத்தைத் தருபவனாகிய)பெருமான், இகல் - பகைமைகொண் டிருந்த இரணியன் என்னும் அசுரனை, நுதி உகிரின் – உகிர் நுதியின் – நகத்தின் நுனி கொண்டு, வகிரும் – கிழித்தெறிந்த, அடல் – வலிமை வாய்ந்த, அரி – பெருமாள்; வடிவு – தனது உருவம் குறள் ஆகி - குறிய வடிவாகி, மகாபலிச் சக்ரவர்த்தி யிடம் சென்று அவனை —

வலிய சிறையிட – பலமான சிறையில் அடைக்கவேண்டி, வெளியின் முகடு–ஆகாச உச்சியும் கிழிபடும்படி, முடிய – ஒரே நீளமாக, வளர்ந்த – விசுவரூபம் – கொண்ட முகில் - மேக வர்ணனும் திருமால், நிருதன் — அரக்கன் ராவணனுடைய இருபது, வாகு பூதரமும் — வெற்றி வாய்ந்த மலையன்ன தோள்களும் —

மகுடமொரு பதுமுறிய அடுபகழி விடுகுரிசில்*
மருகனிசி சரர்தளமும் வருதார காசுரனும்
மடியமலை பிளவுபட மகரசல நிதிகுறுகி
மறுகிமுறை யிடமுனியும் வடிவேல [1]னீலகிரி
மருவுகுரு பதியுவதி பவதிபக வதிமதுர
*வசனிபயி ரவிகவுரி யுமையாள்த்ரி சூலதரி
வநசைமது பதியமலை விசயைதிரி புரைபுநிதை
வநிதையபி நவையநகை யபிராம நாயகிதன்
மதலைமலை கிழவனநு பவனபய னுபயசதுர்
மறையின்முதல் நடுமுடிவின் மணநாறு சீறடியே.

[1] நீலகிரி — நீலோற்பல கிரி: திருத்தணி.

*அடி 25 முதல் 28 வரை அருமையான திருமால் துதி.
*அடி 30 – 31-ல் அருமையான தேவி துதி.

### சீர்பாத வகுப்பின் சுருக்க உரை

கூடலிடத்தே நூறுகோடி சூரியர்கள் உதயமாவது போல யுகாந்த காலத்தில் மயில்மீது தோன்றி ஜோதி வீசுவதும், சிவயோகத்தினர் தமது ஞானக்கண்ணூடே நாடுவதும், இறைவனுக்கு உருவம் உண்டு, உருவம் இல்லை, இறைவன் உண்டு, இல்லை என்றெல்லாம் கூறி அலையும் சமய கலைகளின் கூச்சலடங்க — உண்மைப் பொருளை உணர்ந்தவர்களின் அனுபவ ஞானமாய் விளங்குவதும், மனைவி மகவு என்னும் அலையிற் சிக்கலுறும் பிறவிக்கடலைத்தாண்ட உதவும் தோணி போன்றதும், துறைமுகம் போன்றதும், தேவர்களின் மணிமுடியில் விளங்குவதும், அழிவிலாததும், என் உள்ளத்துக்கு உகந்ததும், சிவபிரான் மகிழப் பார்வதி தழுவும் திருமார்பில் ஆடுவதும், தேவர்கள் பொன்னுலகிற் குடியேற, அசுரர்களின வயிற்றில் எரிபுக, ஆதிசேடனது முடிகள் நெறுநெறென, மேரு இடிய, விளையாடல்புரிந்ததும், கணபதியுடன் போட்டியிட்டு உலகை ஒருநொடியில் வலம்வந்ததும், கொடிய மிருகங்கள் நிறைந்த காட்டில் பரண்மீதிருந்து ஆயால் ஓட்டியிருந்த வள்ளியின் தினைப்புனத்தில் உலவி நின்றதும், காலதூதர்களை ஓட்டி வெருட்டுவதும், அருள் வழியைப்பற்ற உதவுவதும், நினைத்த காரியத்தை முடித்து உதவுவதும், அடியார்களின் கோடிக்கணக்கான பகைகளை நீக்குவதும்,

(மகுடம்) மணிமுடிகள் ஒரு பத்தும் முறிபட்டு விழும்படி அடு–கொல்லவல்ல (பகழி) - அம்பை, (விடு) ஏவின, குரிசில்– பெருமான்ஆகிய திருமாலின்மருமகன், நிசிசரர்-அசுரர்களின், தளமும் – சேனையும், வரு-போருக்கு வந்த, தாரகாசுரனும்—

மடிய – இறந்துபடவும், மலை–கிரவுஞ்சகிரி பிளவுபடவும், மகரமீன்கள் உள்ள சலநிதி - கடல் - குறுகி மறுகி – சுருங்கிக் கலக்கம்கொண்டு, முறையிட — ஓலமிடும்படி (முனியும்) — கோபித்த, வடிவேலன் - கூரிய வேலாயுதத்தை உடையவன், நீலகிரி – நீலோற்பலகிரி என்னப்பட்ட திருத்தணிகையில் —

மருவு - வீற்றிருக்கும், குருமூர்த்தி, (யுவதி) என்றும் இளையவள், (பவதி) தேவி, பகவதி, (மதுரவசனி)இனியவசனத்தை உடையவள்,பயிரவி-பயங்கரிஅல்லதுபைரவராம் சிவபிரானது பத்தினி, கவுரி, உமையவள், முத்தலைச் சூலத்தைத்தரித்தவள்

வனசை – தாமரையில் விற்றிருப்பவள், மதுபதி – காளி, அமலை — மலமற்றவள், விசையை — வெற்றி புனைந்தவள், திரிபுரை – மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள், புநிதை–பரிசுத்த தேவதை, வநிதை - பெண்ணினல்லாள், அபிநவை – என்றும் புதியவள், அநகை – பாபம் அற்றவள், அபிராம நாயகி – அழகு நாயகி - ஆகிய பார்வதி தேவியின் —

மதலை – குழந்தை, மலைகிழவன் – மலைகளுக்கு உரிமை உடையவன், அநுபவன் – அனுபவங்களுக்கு மூலகாரணன், அபயன் – அச்சம் அற்றவன் அல்லது அடைக்கலம் தருபவன் ஆகிய முருகவேளின், உபய–இரண்டாகிய (சீறடியே - சிற்றடிகளே ; சதுர்மறையின் — நான்கு மறைகளின் – வேதங்களின் (முதல்) அடி - நடு–முடி – என்னும் மூவிடத்தும், மணம் நாறு- நறுமணம் கமழ்கின்ற சீறடியே (சிற்றடிகளே) :

---

(சுருக்க உரை - தொடர்ச்சி.)

மலர்களின் நறுமணம் வீசுவதும், எவற்றிலும் முதன்மைத் தானத்தைத் தருவதும், முநிவர்களின் தபோபலமாய் விளங்குவதும், முருக, குமர — சரணம் என்று பாடி யாடி யழுகின்ற அடியார்களின் கண்ணருவியில் முழுகுவதும், வருக வருக என்று கூவி அழைத்து ஆண்டருளுவதும் – அடியேனது சுவிமாலை யாவற்றையும் சூடி யருளுவதும், எது என்றால் யானையை முதலை வாயினின்றும் மீட்டவனும், இரணியனை அட்டவனும்,மாவலியைச் சிறையிலிட நீண்டவனும், ராவணனைச் சங்கரித்தவனும் ஆன திருமாலின் மருகனும், தாருகன் கிரவுஞ்சன், கடல் இவைதமை அட்டவனும், தணிகேசனும், பார்வதியின் குமாரனுமான மலை கிழவனும் முருகவேளின் – வேதத்தின் அடி நடு முடிவில் நறுமணம் வீசுவதான — சீறடியேயாகும்.

## 2. தேவேந்திர சங்க வகுப்பு

[முருகன் திருநாமத்தை மொழிபவர் இவரென ஆராய்ந் தறிந்து அவர் தமைத் தேவேந்திர சங்கமும் வணங்கும் என்பது இதன் கருத்து.]

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன
தானந்தன தந்தன தானந்தன தந்தன

தரணியி லரணிய முர[1]ணிர ணியனுடல்
தனைநக நுதிகொடு
சாடோங்குநெ டுங்கிரி [2]யோடேந்துப யங்கரி

[3]தமருக பரிபுர ஒலிகொடு [4]நடநவில்
சரணிய [5]சதுர்மறை
[6]தாதாம்புய [7]மந்திர வேதாந்தப ரம்பரை

---

இவ்வகுப்பில் உள்ள தேவி துதிபோல அழகும் சிறப்பும் வாய்ந்த தேவி துதி தமிழ் நூல்களிற் காண்பது அரிது.

[1] இரணியன் வலிமை —
"கண்ணுதலோன் அயன் கடைமுறை காணுப்
பூதங் கண்ணிய வலியெலாம் ஒருதனி பொறுத்தான்"
—கம்பராமா - இரணியன் வதை 1.

அரண் - வேல், அரணிய - வேலை உடைய எனலுமாம்: இயம் — சொல் எனக்கொண்டு வேலின் (வலிமை) என்று சொல்லத்தக்க (முரண்) வலிமை பூண்ட இரணியன் எனலுமாம்; அரணிய - காவலைக்கொண்ட-எனலுமாம்;–'அரணிய இலங்கை' — பாரத - இரா-67.

இரணியனைச் சங்கரித்தது - திருப்புகழ் 327–1 பக்கம் 317 கீழ்க்குறிப்பு.

நரசிம்மம் – சக்தி சொரூபம். திருமாலே - பார்வதி.
'அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனுர்க்கே'
'காவியங் கண்ணளாகிக் கடல்வண்ணனாகி நின்றதேவி'
—திருப்புகழ் 458, பக்கம் 26 கீழ்க்குறிப்பு.
—அப்பர் 4-40-5 ; 4-32-7.

### பொழிப்புரை

1. தரணியில்—பூமியில், (அரணிய) காடுபோலப் பயங்கர மான (அல்லது அரணை உடைய—கோட்டை முதலிய காவலை உடைய) (முரண்) வலிமையைக் கொண்ட இரணியாசுர னுடைய (உடல்தனை) உடலை, (நக நுதிகொடு) நகத்தின் நுனி கொண்டு, சாடு ஒங்கு—கொன்று உயர்ந்த, நெடுங் கிரி— பெரிய மலையன்ன உருவத்தைக் கொண்ட நரசிம்ம உருவத் தினள், ஒடு ஏந்து—வெண்டலை ஓடு கையில் ஏந்தின பயங்கரி— அச்சத்தைத் தருபவள் அல்லது பயகரி அச்சத்தை நீக்குபவள்,

2. (தமருகம்) உடுக்கை, பரிபுரம்—கால் சிலம்பு இவைகளின் ஒலியுடன் நடனத்தை (நவில்) செய்கின்ற, (சரணிய)—(சரண்— சரணம்) பாதங்களை - திருவடிகளை உடைய (பரம்பரை); (சதுர்மறை) நான்கு வேதங்களிற் போற்றப்படும் (பரம்பரை) தாதாம்புய—தாது + அம்புய—மகரந்தப்பொடிகளைக் கொண்ட (அம்புய) தாமரையில் வீற்றிருக்கும் பரம்பரை; மந்திர பரம்பரை — மந்திரங்களின் சக்தியாகிய (பரம்பரை); வேதாந்த - வேத முடிவில் விளங்கும் பரம்பரை – பராசக்தி— சிவசக்தி

---

[1] தேவி இரணியனைக் கொன்றது:—"கொடுங் கனகன் ஆகம் இரு கூறுபடு கூர் ஏக நக நாயகி அனந்த சயனத்தினி திருந்தருளியே" எனத் தக்கயாகப் பரணியிலும் (167, 165) கூறப்பட்டுளது. "தோற்றப்பட்ட ரூபமெல்லாம் பரமேஸ்வரி யின் வடிவெனக் கொள்க" தக்கயாகப்பரணி 292-உரை.

"பொற்புயங் கத்தின்மீதே புருடோத்தமப் படிவமேவி நீ துயில்கின்ற பொழுதே"—உத்தரகோச – மங்களேசுரி பிள்ளைத்தமிழ். சப்பாணி 5. "கடலுள் வெங்கட் பணியணை மேற் றுயில் கூரும் விழுப்பொருளே' – அபிராமி அந்தாதி 35.

[2] ஓடேந்துதல் – அர்த்தநாரீசுர கோலத்தில்-ஒடு ஏந்துதல் 'பல்லில் ஒடு கையில் ஏந்தி;... வெண்டலை ஓடு கை ஏந்தி' —சம்பந்தர் 1–51–4; 1–39–7. "ஆரணர் தலைக் கலங் கொளி"—திருப்புகழ் 647.

[3] நடனத்தில் தமருக ஒலி - 'தமருக ஒலி சவு தத்திற் றத்த ...... கெத்துப் பாய்ந்து'—திருப்புகழ் 1082. தேவியும் சிவனொடு ஆடுதல் — 'நாரியொர் பாகமாக நடமாட வல்ல ... நம்பன்; உமையோடு உடனுகி ... ஆடும்' - சம்பந்தர் 2-87–1; 1–46–10.

[4] நவில் – செய்யும். நவிலுதல் - செய்தல். "நட்டமே நவில்வாய்"—சம்பந்தர் 3–1–2.

[ குறிப்புரை தொடர்ச்சி 306-ஆம் பக்கம் பார்க்க.]

[3]சரிவளை விரிசடை யெரிபுரை வடிவினள்
சததள முகுளித
தாமாங்குச மென்றிரு தாளாந்தர அம்பிகை
[4]தருபதி சுரரொடு சருவிய அசுரர்கள்
தடமணி முடிபொடி
தாளும்படி செங்கையில் வாள்வாங்கிய சங்கரி;
[5]இரணகி ரணமட மயின்ம்ருக மதபுள
கிதவிள முலையிள
நீர்தாங்கிநு டங்கிய நூல்போன்றம ருங்கினள்

---

[305-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புத் தொடர்ச்சி.]

[5] சதுர்மறை – பரம்பரை — ''எழுதாமறையின் ஒன்றும் அரும்பொருளே'' — அபிராமி அந்தாதி 10. ''பழமறைக் கொழுந்தாய புகலி நாயகி!-சீகாழிப்புராணம். 'நான்மறைத் தலைவியை'-திருமுருகன்பூண்டிப் புராணம்.

[6] தேவி அம்புயத்தில் வீற்றிருத்தல்–'முக்கண்ணி வேடம் படிகம் விரும்பும் வெண் தாமரை' — திருமந்திரம் 1067. 'அம்புய மேல் திருந்திய சுந்தரி'—அபிராமி அந்தாதி 5.

[7] மந்திர வேதாந்த பரம்பரை — தேவிக்கு வேதங்கள் சிலம்பு : 'அடிச்சூட்டு நூபுரமோ ஆரணங்கள் அனைத்துமே' 'வேத மந்திர சாகையாகிய சகசிராஸ்பதமான மந்திரங்களும் உள அல்லவோ - தேவியின் சிலம்போசையும் வேத மந்திர ஓசையும் ஒக்கும்'—தக்கயாகப்பரணி 119 உரை.

---

[3] (1) தேவி திருக்கரத்தில் வளையல் :—
'பல் வளைக்கை மடவரலாள்' (சம்பந்தர் 1-111-6.)
(2) விரிசடையள் தேவி :—''பேழைவார் சடைப் பெருந் திருமகள்'' — சம்பந்தர் 2-107-6.
'பகிர் மதியம் பூத்த தாழ் சடைச்சி'.–திருப்புகழ் 1133
(3) எரி போன்ற வடிவு — செந்நிறம்.
'உதிக்கின்ற செங்கதிர்...மாணிக்கம் மாதுளம்போது ... குங்கும தோயம் என்ன விதிக்கின்ற மேனி'
'சிந்துரவண்ணப் பெண்ணே' —
'சிந்துரவண்ணத்தினள், சிந்துர மேனியள்'
(அபிராமி அந்தாதி 1, 6, 8, 43).

(4) சததள முகுளித தாமம் (தாமரை) — தாமரை அரும்பு போன்ற கொங்கை. ''நித்திலந்தாழ் வருமுலை கமலம்'' — தணிகைப்புராணம் - களவு 43.

3. சரி – வளைவகை, வளை – வளையல் இவைகளை அணிந்த வளும், விரிந்த சடையை உடையவளும், எரிபுரை – நெருப்புப் போன்ற - உருவம் கொண்டவளும், சததளம் - நூற்றிதழ்த் தாமரையின், முகுளித - அலரும் தன்மை வாய்ந்த, தாமம் – மலர் மொட்டுப்போன்ற, அம் – அழகிய, குசம்-கொங்கை, மென்-மென்மை வாய்ந்ததும், திரு-லக்ஷ்மீகரம் பொருந்தியது மான, தாள் — திருவடிகள் இவைகளைக் கொண்டவளும், அந்தர(ம்)-பராகாசத்தில் உள்ளவளுமான, அம்பிகை–தேவி.

4. (தரு) கற்பக விருக்ஷங்களுக்குப் (பதி) தலைவனுன இந்திரன் முதலான–அல்லது கற்பக(பதி) ஊரில் உள்ள (சுர ரொடு) தேவர்களுடனே, சருவிய – போராடின அசுரர்களின் தட–விசாலமான, மணிமுடி - ரத்னக்ரீடங்கள், பொடிதான் ஆ(கு)ம்படி – பொடிபட்டுவிழத் (தனது) செவ்விய திருக்கரத் தில் இருந்த வாளாயுதத்தை (வாங்கிய) செலுத்தின சங்கரி;

5. (இரணம்) பொன் (அல்லது மாணிக்கம்) போன்ற (கிரணம்) – ஒளியைக்கொண்ட, மடமயில் – இளமயில் அனைய வள், ம்ருகமதம்–கஸ்தூரி அணிந்துள்ளதும், புளகிதம் கொண் டதுமான இளமை வாய்ந்த கொங்கையாகிய இளநீர் (இளநீர்போன்ற கொங்கையின்) பாரத்தைத் தாங்குவதால் - நுடங்கிய - துவட்சியுற்றதாய், நூல்போல மெலிந்ததான (மருங்கினள்) இடையை உடையவள்,

---

(5) தாளின் மென்மை-'பாடக மெல்லடிப்பாவை'–சம். 1-7-1.
(6) அந்தர அம்பிகை–' சுந்தரி அந்தரி '–அந்தரம்-ஆகாசம், 'பராகாசா' என்பது அம்பிகையின் திருநாமம் – 'சிதாகா சத்தில் உறைபவள் எனலுமாம்' – அபிராமி அந். 5 உரை.

[4] தேவிக்குத் தண்டாயுதம், வாள், வில், சங்கம், சக்கரம் எனப்படும் பஞ்சாயுதம் உண்டு. திரிபுர அசுரர்கள், இராவ ணன், மகிடாசுரன், இரணியாசுரன் முதலிய அசுரர்களைச் சங்கரித்தது தேவியே.—தக்கயாகப்பரணி 161 – 165.

[5] (1) தேவி — பொன்னிறத்தினளாய்ப் 'பிங்கலை' எனப் பெயர் பெறுவாள். 'பீதவர்ணு'–லலிதா 507. (2) தேவியின் சாயல் – மயிலுக்கு ஒப்பு. 'மயிலன்ன சாயல் மடமங்கை' – சம்பந்தர் 2–87-2. (3) 'இளமென்முலை' — சம்பந். 1–7–2. (4) கொங்கைக்கு – இளநீர் ஒப்பு – 'இளநீர்க் குவட்டுமுலை' – திருப்புகழ் 928. (5) கொங்கைப் பாரத்தால் இடை நுடங்கு வது :—' பார இளநீர் சுமக்கப் பண்டே பொருத இடை'— திருப்புகழ் 1006, 1010, தொகுதி 5, பக்கம் 32, 42குறிப்பு. (6) இடைக்கு நூல் உவமை :—' நூலினை ஒத்த மருங்குல்' — திருப்புகழ் 845.

[6]இறுகிய சிறுபிறை யெயிறுடை யமபடர்
எனதுயிர் கொளவரின்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்றுகொ ளுங்குயில்

[7]இடுபலி கொடுதிரி யிரவலர் இடர்கெட
விடுமன கரதல
ஏகாம்பரை யிந்திரை மோகாங்கசு மங்கலே

[8]எழுதிய படமென இருளறு சுடரடி
யிணைதொழு மவுனிகள்
ஏகாந்தசு கந்தரு பாசாங்குச சுந்தரி;

[9]கரணமு மரணமு மலமொடு முடல்படு
கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்

---

[7] இது காஞ்சியில் தேவி 32 அறங்களை வளர்த்ததைக் குறிக்கும் – திருப்புகழ் 460, பக்கப் 34–35 கீழ்க்குறிப்பு.
இந்திரை - இலக்குமி. தேவியைச் "செய்யாள் ... பசும் பெண்கொடியே' என்றார் அபிராமி அந்தாதியில் 21.

[8] (1) எழுதிய படம் அசைவற்று இருப்பதுபோலத் தமது மனத்தை அடக்கி அசைவற்ற நிலையில் சும்மா இருக்கும் மௌனிகள்.

(2) ஏகாந்த சுகம்—'இனிது இனிது ஏகாந்தம் இனிது" ஔவை. ஏகாந்தம் - தனிமை, நிச்சயம் (குறள் 563 உரை).

(3) பாசாங்குசம்—தேவி கரத்தில்—"பாசாங்குசமும் கையில் அணையும் திரிபுர சுந்தரி" - அபிராமி அந்தாதி 2.

[9] (1) மரணத்தையும் தவிர்ப்பாள் தேவி — "நாயகி தன் அடியார் மரணம் பிறவி யிரண்டும் எய்தார் இந்த வையகத்தே — அபிராமி அந்தாதி 51.

(2) வினைகெட அருள்வாள் தேவி–'கொடியவினை ஓட்டியவா ...... ஆடகத் தாமரை ஆரணங்கே' – அபிராமி அந்தாதி 80.

(3) தேவி ஊழி முடிவிலும் விளங்குபவள் —
"வேனெடுங் கண்ணியோடும் தொல்லை யூழியாகி நின்றாய்"; "அந்தமில் அணி மலைமங்கை" — சம்பந்தர் 1–51–4; 3-27–5. கந்தரி - மனக்குகையில் இருப்பவள் — 'மனத்தே கிடந்து கிளர்ந் தொளிரும் ஒளியே'—அபிராமி அந்தாதி 16. நீலாஞ்சனி — "அஞ்சனக் கண் உமை" — சம்பந்தர் 3-9–3.

6. அழுத்தமாய் அமைந்துள்ளனவும், சிறுபிறை போன்றனவுமான பற்களை உடைய யமதூதர்கள் (யமனதுஏவலாளர்கள்) என்னுடைய உயிரைக் கொள்ளை கொள்ள — கவர்தற்கு வந்தால், (அப்போது) நான் வருந்துதலைக் கண்டு என் எதிரே வந்து என்னை (ஏன்று கொள்ளும்) ஆட்கொண்டருளும் குயில் அனைய தேவி

7. இடுகின்ற (பலி) பிச்சையைக் கொண்டு திரிகின்ற (இரவலர்) யாசகர்களின் (இடர்கெட) துன்பம் ஒழிய இடும்— பிச்சையை இடுகின்ற (அல்லது இடர் கெடவிடு – இடரைத் தொலைக்கும்) (மனம்) மனத்தையும் (கரதலம்) திருக்கரத்தையும் உடைய (ஏகாம்பரை) காஞ்சி — ஏகாம்பரநாதரின் தேவியாகிய ஏலவார்குழலி, (இந்திரை) (முத்தி) லக்ஷ்மி, கவர்ச்சியான அங்கங்களை உடைய சுமங்கலி —

8. எழுதிவைத்துள்ள படமோ என்று வியந்து சொல்லத் தக்க நிலையில் இருந்து, (இருள்) அஞ்ஞான இருளை அறுத்து ஒழிக்கும், ஞான ஒளி வீசும், தனது திருவடி இரண்டையும் தொழுகின்ற மௌன ஞானிகளுக்கு, ஏக—அந்தம்—சுகம்— முடிவான ஒன்று — எனப்படும் முத்திநிலை ஆனந்தத்தை (அல்லது, ஏகாந்த தனிப்பட்ட அல்லது நிச்சயமான சுகத்தைத்) தருகின்ற (சுந்தரி) பாசம், அங்குசம் இரண்டையும் திருக்கரத்திற் கொண்டுள்ள (சுந்தரி) அழகி —

9. கரணமும் -இந்திரியங்களின் சேஷ்டைகள், மரணமும்— இறத்தல், மலமொடு - ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவகை மலங்கள், உடல்படு – இத் தேகம் படவேண்டிய – அனுபவிக்கவேண்டிய, (கடு) பொல்லாத வினை – வினைகள் இவையெலாம் கெட – கெட்டுஅழியும்படி – (நினை)—தன் மனத்தில் நினைத்து அவ்வாறே வரம்பாலிக்கும், காலாந்தரி - கால அந்தரி – யுகாந்த கால முடிவில் விளங்குபவள், கந்தரி –(அடியார்களின் நெஞ்சக்) குகையில் இருப்பவள்; நீல அஞ்சனி – கறுப்பு நிறமுள்ள மையைப் பூசிக்கொள்பவள், நஞ்சுமிழ்— விஷம் வீசுகின்ற

[10]கனலெரி கணபண குணமணி யணிபணி
கனவளை மரகத
காசாம்பர கஞ்சுளி தூசாம்படி கொண்டவள்

[11]கனைகழல் நினையலர் உயிரவி பயிரவி
கவுரிக மலைகுழை
காதார்ந்தசெ ழுங்கழு நீர்தோய்ந்த பெருந்திரு

[12]கரைபொழி திருமுக கருணையி லுலகெழு
கடனிலை பெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி தந்தவன் ;

---

[10] *(1)* இந்த அடியுடன் ''அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்த விளைந்தழல் வாய்கான்றிடு நாகாங்கதை'' எனவரும் வேல்வாங்கு வகுப்பு அடியை ஒப்பிடுக. நாக அங்கதை-நாகம்-பாம்பை - அங்கதமாக - தோள்வளையாக அணிந்துள்ளவள்.

**(2)** மரகத நிறத்தினள் தேவி —

'பச்சை மரகதக் கொடியை' — காசி காண்டம்.

தேவி - ஆடை - பொன் ஆடை 'ஹேமாம்பராடம்பரீ' — (ஏமம்-பொன்-அம்பரம்-ஆடை) அன்னபூர்ணஷ்டகம்.

[11] *(1)* நினையாதவர்களுடைய உயிரை அவிக்கின்ற பயிரவி

''வஞ்சர் உயிர் அவி உண்ணும் உயர்சண்டி
காளி ஒளிருங் கலா வயிரவி'' - அபிராமி அந்தாதி 77.

**(2)** (காதில்) தளிர் மலரணிதல்-'கொழுங்குவளைக் கோதைக் கிறைவர்' — அப்பர் 6-9-10.

''வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்''
— திருமுருகாற்றுப்படை 31.

''கர்ணைக நீலோத்பலே'' — ஸ்யாமளா தண்டகம்.

**(3)** பெருந்திரு:-இலக்குமி திருமகள் ஆதலால், பார்வதி பெருந்திரு, பெருந்திருமகள் எனப்பட்டாள்.

''பேழைவார்சடைப் பெருந்திரு மகள்தனைப் பொருந்த வைத் தொருபாகம்'' — சம்பந்தர் 2-107-6.

[12] **தேவி சகல அண்டங்களையும் புரக்கும் கருணை :—**

*(1)* 'தொல்லைமா ஞால மாதித் தொகையிலா அண்டம் நல்கிச், செல்வமாண் கருணை யாகும் சிறகரால் அணைத்துப் போற்றும், மல்லலஞ் செழுநீர் வாவி வண்கம லாலயத்துள், அல்லியங் கோதை யென்னும் அன்னத்தை அகத்துள் வைப்பாம் — திருவாரூர்ப் புராணம்.

*10.* கனல் எரி-எரிகின்ற நெருப்பையும், (கணபணம்) கூட்டமான படங்களையும், (குணம் மணி) உயர்ந்த ரத்னங்களையும் (அணி)கொண்டதான(பணி) பாம்பைக், (கனவளை) பெருமை வாய்ந்த – சிறப்பான வளை–தோள்வளையாக, அல்லது-கனம்–பொன்னுலாய வளை — தோள்வளை போல – அணிந்தவள், மரகத - பச்சைநிறத்தினள், காசா - காயாம்பூ நிறம்கொண்ட அல்லது காசம் – பொன்வண்ணத்த அம்பரம் - ஆடையையும், (கஞ்சுளி) சட்டையையும், தூசு ஆ(கு)ம்படி – தனக்கு உடைகளாகும்படி கொண்டுள்ளவள்

*11.* ஒலிக்கின்ற தனதுகழலை நினையாதவர்களுடைய உயிரை அவிக்கின்ற (ஒழிக்கின்ற) – பலியாகக்கொள்கின்ற, பயிரவி (பைரவராகிய சிவபிரானது பத்தினி), (அல்லது அச்சம் தருபவள்) கவுரி, (கமலை) இலக்குமி, குழையணிந்த காதில் (ஆர்ந்த) நிரம்பியுள்ள செங்கழுநீர் மலரைக் கொண்ட (அல்லது) குழை ஆர்ந்த காது – குழை விளங்கும் காதினைக் கொண்ட (பெருந்திரு), செங்கழுநீர் (தோய்ந்த)அணிந்துள்ள பெருந்திரு (பெருமை வாய்ந்த) தேவி

*12.* கரை பொழி - (திருவுள்ளம்) கரைந்து பொழிகின்ற — (கனிந்து) உருகிப் பொழிகின்ற, திருமுக கருணையில் — தனது திருமுகத்தினின்றும்–(திருக் கண்ணோக்காலும் - திருவார்த்தையாலும்) எழுகின்ற கருணைகொண்டு - உலகெழுகடல் – உலகு ஏழு, ஏழு கடல் – ஏழு உலகங்களையும், ஏழு கடல்களையும் (சகல உலகுகளையும் சகல கடல்களையும்) நிலைபெற - நிலைபெற்று உய்யுமாறு, (வளர்) வளர்க்கின்ற (காவு ஏந்திய) காவுதலை — சுமத்தலை - சுமைப்பாரத்தைத் தாங்குகின்ற — அல்லது கா – பாதுகாத்தல் தொழிலை, (ஏந்திய) மேற்கொண்டுள்ள பசுமை நிறங்கொண்ட கிளி, மகா சாம்பவி ஆகிய பார்வதி பெற்ற பிள்ளை ;

---

"புவனங்கள் அனைத்தும் உய்ய மன்னுபெருங் கருணை பொழி தையனுயகி"—புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்.

(2) காவேந்திய–கா–காத்தல் தொழில் : அல்லது காவுதலைக்கொண்ட — காவு — காவுதல் (முதனிலைத் தொழிற் பெயர்) சுமத்தல் – 'ஊனைக்காவி உழிதர்வர்'–அப்பர் 5-31-1.

(3) தேவியைக் கிளி என்பது :—

"நீலரத்தினம் இட்ட அறக்கிளி" – திருப்புகழ் 278.

"அன்பர் நேசமெனும் பால்பருகும் பூங்கிளியை
உலகருளி னிறுத்தும் தாயை"
—ஆதித்தபுரி புராணம்.

(4) சாம்பவி—சம்புவின் சக்தி.

[13]அரணெடு வடவரை யடியொடு பொடிபட
அலைகடல் கெடஅயில்
வேல்வாங்கிய செந்தமிழ் நூலோன்குமரன்குகன்

[14]அறுமுக னொருபதொ டிருபுய னபிநவ
னழகிய குறமகள்
தார்வேய்ந்தபு யன்பகை யாமாந்தர்கள் அந்தகன்

[15]அடன்மிகு கடதட விகடித மதகளி
றனவர தமுமக
லாமாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில்

---

'' சாம்பவி சங்கரி ''—அபிராமி அந்தாதி 50.

[13] (1) ' வடபராரை வரைகெட வேலேவி ... மகரஞ் சீறும் பரவை கூப்பிட மோதி ' — திருப்புகழ் 1153; ' வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் ' ' வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே '—கந்தரலங்காரம் 40, 62.

(2) முருகனைச் ' செந்தமிழ் நூல் விரித்தோனே ' என்றார் கந்தர் அலங்காரத்தில் (72); திருப்புகழ், கந்தரந்தாதி தவிர ஏனைய நூல்களில் ' சம்பந்தரைப் ' பற்றி வெளிப்படையாக அருணகிரியார் கூறுமையால் – செந்தமிழ் நூலோன் – நூல் விரித்தோன் – என்ற இடங்களில் தமிழ்க் கடவுளாம் முருகன் என்றே பொருள் கூறலாம். ' சேய் தமிழ் நூற் சீர்க்கு ஐ '—எனவரும் கந்தரந்தாதி (37) உரையில் இயற்றமிழ் நூலுக்கு உரிய முப்பது சீருக்கும் புலவனுகிய தேவன் ' — எனறும் ' செந்தமிழ் நூல் சீரங்க ' – எனவரும் கந்தரந்தாதி (98) உரையில் – செவ்விய தமிழ்ப் பநுவலின் சீர் முதலிய எட் டுறுப்புக்கு உரிய பாவலனே ' – என்றும் பொருள் கொள்ளப் பட்டுளது. ' பெருந்தமிழ் விரித்த அருந் தமிழ்ப் புலவனும் நீயே ' – கல்லாடம். ' நூலறிபுலவ, பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே ' – திருமுருகாற்றுப்படை. ' சங்கத்தவர்க்குள் தலையாந் தமிழ்ப் புலவன் ' – கந்த புராணம் 4-12-456.

(3) ' குமரன் குகன் ' இந்த இரண்டு திருநாமங்களையும் ' முருகன் ' என்பதை முன்கூட்டி ' முருகன் குமரன் குகன் ' என அநுபூதியிலும் (15), ' கந்தன் ' என்பதைப் பின்கூட்டி '' குமர குக கந்த '' என்று திருப்புகழிலும் (501) ஆண்டுள் ளார் அருணகிரியார்.

[14] (1) அபிநவன்–புதுமையிற் புதுமையன், புதியரிற் புதியன்

13. அரண்-கோட்டை மதில்போலஅமைந்துள்ள,(நெடு) பெரிய - வடவரை – வடக்கே உள்ள மேருமலே, அடியோடு பொடிபட்டழியவும், அலேவீசும் கடல் (வற்றி) நிலேகுலேயவும், அயில்வேல் – கூரிய வேலாயுதத்தை, (வாங்கிய) செலுத்தின செந்தமிழ் நூல்களுக்கு உரிய தமிழ்க்கடவுள், குமார மூர்த்தி, குக மூர்த்தி,

14. ஆறுமுக மூர்த்தி, (ஒருபதோடு) ஒரு பத்து என்னும் எண்ணுடன் (இரு) இரண்டு – ஆகப் பன்னிரண்டு (புயன்) திருப்புயங்களே (திருக் கரங்களே) உடையவன், (அபிநவன்) — புதுமை உடையவன், அழகுள்ள குறமகள் வள்ளி மாலே சூட்டிய (அல்லது வள்ளியினுடைய) மாலேயை அணிந்த திருப் புயங்களே உடையவன், பகைமையாம் மாந்தர்கள் - பகைமை பூண்டுள்ள மக்களே (அந்தகன்) அழிப்பவன் – அவர்களுக்கு யமன் போல்பவன்.

15. அடல்=வலிமை மிகு—மிகுந்த, கடதடம்—மதநீர் பாயும் (தடம்) இடத்தைக் கொண்டதும், அல்லது (கடம்) காட்டு (தடம்) வழியில் வள்ளியை வெருட்டவந்த, (விகடிதம்) வேடிக்கையான திருவுருவம் கொண்டதுமான (மதம்) பெருமைவாய்ந்த, அல்லது மதநீர் கொண்ட, யானேமுகத்துக் கணபதி – (அநவரதமும்) எப்போதும், அகலா – நீங்காத, மாந்தர்கள் – அடியார்களின் (கணபதியைச் சதா சிந்திக்கும் அடியார்களின்) சிந்தையிலே, வாழ்வாம்படி — தானும் வாழ்ந்து குடிகொள்பவனுய் (விளங்கியும்), திருச்செந்தூர்க்கு,

---

'முன்னேப் பழம்பொருட்கு முன்னேப் பழம்பொருளே
பின்னேப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே'
—திருவெம்பாவை 9.

'புதியனவுமாய் மிகவும் பழையான் தன்னே'
—அப்பர் 6–11–7.

(2) 'குறமகள் தார்வேய்ந்த புயன்' – குறமகள் மாலே சூட்டிய — குறமகளின் மாலேயை அணிந்த — என இருவகையிலும் பொருள் காணலாம். 'குறமங்கை விரும்பிய தம்பிரானே'—(திருப்புகழ் 1148) என்புழிப்போல.

(3) பகைமை கொண்ட மாந்தர்களுக்கு அந்தகன் முருகன்—'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' என்ருர் முருகவேளின் திருக்கரத்தை – திருமுருகாற்றுப்படை 5.

"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை நெடுவேள்" —அகநானூறு 22, 5-6. "அறுமுகன் அடுபோர் உன்னிப் போதுமேல் இமைப்பின் எல்லாப்புவனமும்பொன்றிடாவோ' —கந்தபுராணம் 4–7–36.

[16]அதிபதி யெனவரு பொருதிறல் முருகனை
அருள்பட மொழிபவர்
ஆராய்ந்துவ ணங்குவர் தேவேந்திர சங்கமே.

---

[15] (1) கணபதிக்கும் முருகவேளுக்கும் மிகப் ப்ரியம். அதனல் - கணபதியைச் சதா சிந்திக்கும் அடியார்களின் மனத்தில் முருகவேளும் மகிழ்ந்து வாழ்வார்.

"விநாயகப்ரிய வேலாயுதா"
—திருப்புகழ் 996 பக்கம் 5 உரை.

(2) சூரனைச் சங்கரிக்க முருகவேள் சேனதிபதியாய்த் திருச்செந்தூரில் தங்கினர். "செந்தூரிற்போய்க் கருணை வெள்ளமெனத் தவிசின் வீற்றிருந்து ... விசயவீரனைத் தூதாக விடுத்தோனே"–கந்தர் கலிவெண்பா. "சோதிவே லுடைய வள்ளல் ...... செந்திமா நகரம் புக்கான்"–கந்தபுரா 1-26-1.

[16] (1) முருகவேளின் அடியார்களைத் தேவர் கூட்டமும் வணங்கும் என்பர். 'மொழிபவர்' என்பதற்கு 'மொழிபவரை' எனப் பொருள் காணவேண்டும். 'கரப்பார் இரவன்மின்'—திருக்குறள் 1067-ல் கரப்பாரை இரவன்மின் - எனப் பொருள் காண்பதுபோல:

(2) சம்பந்தன் பத்தும் வல்லார்...விண்ணுலகம் எதிர்கொள்ள விரும்புவரே' [ சம்பந்தர் 3-56-11 ] என்ற இடத்துப் பத்தும் வல்லாரை விண்ணவர் எதிர்கொள்ள விரும்புவர்-என வருவதும் காண்க.

(3) அடியார்களைத் தேவர்களும் வணங்குவார்கள் —

"ஆலவாயில் அண்ணலைத் தீய் தீர எண்ணுவார்கள்
சிந்தை யாவர் தேவரே"—சம்பந்தர் 3-52-11.

"தொழப்படும் தேவர் தம்மால் தொழுவிக்கும்
தன் தொண்டரையே"—அப்பர் 4-112-5.

"அன்பிலாலந்துறை வலங்கொள்வாரை வானேர்
வலங்கொள்வரே"—அப்பர் 5-80-10.

"தாழச் செய்தார் முடி தன்னடிக்கீழ் வைத்தவரை
விண்ணேர்சூழச் செய்தான்"—திருக்கோவை 43.

"பத்தரை ... சுவையமுதூட்டி அமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வமாக்கும் ஐயாறன்"
— அப்பர் 4–92–7.

16. சேனாதிபதியாய் வந்தவனும், போர் புரிவதில் திறமை வாய்ந்தவனுமான முருகவேளை, அருள்பட-அவனது திருவருட் ப்ரசாதம் கிடைக்கும்படி, மொழிபவர்-தோத்திரம் செய்பவர் யார் யார் என்று) ஆராய்ந்து — ஆராய்ச்சி செய்து அவர் இன்னார் இன்னார் என்று அறிந்து – அப்பெரியார்களை – (வணங்குவர் தேவேந்திரசங்கமே)-தேவேந்திரசங்கத்தாரும் வணங்குவார்கள் – தேவர் கூட்டங்களும் வணங்கும் என்க.

---

குறிப்பு : இவ்வகுப்பில் முதலிலிருந்து 12அடி வரை தேவியைப் போற்றும் மிக அருமையான துதிப்பா ஆகும். இவ்வகுப்பு முழுமையுமே தேவியின் துதியாக்க வேண்டுமாயின் அடி 12-ல் 'மாசாம்பவி தந்தவன்' என்பதை 'மாசாம்பவி பிங்கலை' எனவும், அடி 16ல் 'முருகனை யருள்பட மொழிபவர் ஆராய்ந்து வணங்குவர் தேவேந்திர சங்கமே' என்பதை 'முருகனை அருளிய நிருமலி பாதாம்புயம் என்தலை மேலேய்ந்து விளங்குமே'—எனவும் பதங்களை மாற்றித் துதிக்கலாம்.

---

### தேவேந்திரசங்க வகுப்பின் சுருக்க உரை

இரணியனைச் சங்கரித்தவள், பலியோடு ஏந்தினவள், நடனம் புரிபவள், வேதாந்தத்தில் விளங்குபவள், எரி நிறத்தினள், தாமரை மொட்டன்ன கொங்கை, மெல்லிய திருவடி இவைகளை உடையவள், அசுரர்களைச் சங்கரித்தவள், மடமயில் போன்றவள், இளநீர் அன்ன கொங்கையள், நூல்போன்ற இடையை உடையவள், யமதூதர்களைக் கண்டு நான் அஞ்சும் போது என்னை அஞ்சல் என்று ஏன்று கொள்பவள், இரவலர்க்குப் பலியிடும் அறத்தினள், திருவடியைத் தியானிக்கும் மௌன ஞானிகளுக்குச் சுகம் அளிப்பவள், வினையை ஒழிப்பவள், நாகபூஷணி, நீலநிற ஆடையள், நினையாதவர்களின் உயிரை நீக்கும் பயிரவி, காதிற் கழுநீர்ப்பூ அணிந்தவள், தனது திருவருளால் உலகையும் கடலையும் புரந்தளிப்பவள் — ஆகிய - பார்வதி பெற்ற குமாரன் - மேரு பொடிபட, கடல் சுவற, வேலை ஏவினவன், செந்தமிழ் நூல் விரித்தவன், குமரன், குகன், அறுமுகன், பன்னிருபுயன், வள்ளிநாயகன், பகைவர்க்கு அந்தகன், கணபதியைச் சதாகாலமும் தியானிப்பவர்களின் சிந்தையில் வாழ்பவன், செந்திலதிபன் ஆகிய முருகனை – அவனது திருவருள் பெறும் வகையில் போற்றுபவர்கள் யார் யார் என்று தேர்ந்தெடுத்து அவர்களைத் தேவேந்திர கூட்டங்கள் வணங்கி நிற்கும் — என்க.

## 3. வேல் வகுப்பு

[ வேலின் பெருமையையும் ஆற்றலையும் கூறும் வகுப்பு இது. ]

தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தான

[1]பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தவிதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும்
[2]பணைக்கைமுக படக்கரட மதத்தவள
கசக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும்

---

[1] வள்ளியின் விழிக்கு நிகராகும் வேல் என்றார். அதனால் வள்ளிப் பிராட்டியின் கண்போலக் கூரியதாய் நீண்டு ஒளிரும் வேல்; வள்ளிப்பிராட்டியின் கண்ணோக்கால் வரும் பயன் யாவும் வேல் தரும் - என்பன பெறப்படுகின்றன. இனிப் பருத்த(முலை) முதலிய அடைமொழிகளைக் கவனிப்போம்; **பருத்த முலை** - பக்குவம் அடைந்த நிலையைப் புலப்படுத்துவதால் அது (1) **தோற்றத்தை** விளக்குகின்றது; **சிறுத்த இடை** - முலைப்பாரத்தைத் தாங்குதலால் அது (2) **திதியை** விளக்குகின்றது; **வெளுத்த நகை** - சிரித்தெரி கொளுத்துமாதலின் அது (3) **சங்காரத்தைத்** தெரிவிக்கின்றது; **கறுத்த குழல்** - இருளும் மறைப்பும் கொண்டதாதலின் அது (4) **திரோபவத்தைக்** குறிக்கின்றது; **சிவத்த இதழ்** — செம்மை வாய்ந்த வாய் மொழி—உபதேசத்தை வெளிப்படுத்துவதால் அது (5) **அநுக்கிரகத்தைக்** காட்டுகின்றது; ஆக வள்ளிபிராட்டிக்குக் கொடுத்த அடைமொழிகளினின்றும் வள்ளியின் பஞ்ச கிருத்தியசக்தி ஏற்படுகின்றது - அவ்வாறே வேலுக்குப் பஞ்ச கிருத்திய சக்தி உண்டு. 'கண்ணுடியில் தடங் கண்ட' வேல் (திருப். 908) - அதனால் **தோற்றமும்**, வீரவாகு தேவரையும், நக்கீரரையும் காத்து அளித்த காரணத்தால் - **திதியும்**, சூரசம்மாரம் செய்ததால் **சங்காரமும்**, அடியாரிடத்து வெம்மையை **மறைத்துத்** தண்ணருள் காட்டியும், பகைவரிடத்துத் தண்மையை **மறைத்து** வெம்மையைக் காட்டியும் ஒழுகுதலால் **திரோபவமும்**, குமரகுருபரர் நாவிலும், அருணகிரியார் நாவிலும் பொறித்து நலந் தந்த காரணத்தால் **அநுக்கிரகமும்** — ஆக பஞ்ச கிருத்திய சக்தி வேலிடத்தும் உண்டு - என்பது ஏற்படுகின்றது. அதனால் மறச்சிறுமி விழிக்கு நிகராகும் வேல் - என்றார், வள்ளியின்

பொழிப்புரை

1. பருத்திருக்கும் முலைகளையும், சிறுத்திருக்கும் இடையையும், வெளுத்திருக்கும்பற்களையும், கறுத்திருக்கும் கூந்தலையும், சிவந்திருக்கும் வாயிதழ்களையும் கொண்டவளான (மறச் சிறுமி) வேடர் சிறுமியாம் வள்ளியம்மையின் கண்களுக்கு ஒப்பாகும் – (தணிகைக் குகனது வேல்)

2. பனைமரம்போல நீண்டதுதிக்கையைக் கொண்டதும், முகபடாத்தை (முக அலங்காரத்துணியை) அணிந்துள்ளதும், (கரடம்) மதம்பாய் சுவட்டினின்றும் வரும் மதநீரைக் கொண்டதும், (தவளம்) வெண்ணிறம் உடையதுமான (கஜ கடவுள்) ஐராவதம் என்னும் யானையை உடைய தேவனும் இந்திரனுடைய (பதத்து இடு) கால்களில் (சூரனுல்) இடப்பட்ட (நிகளத்து) விலங்கு (முளை) கட்டப்பட்டிருந்த முளையை (ஆப்பை)ப் பிளந்தெறிவதற்கு (அரம் ஆகும்) அராவவல்ல கருவியாகும் அல்லது – வரம் ஆகும் - வரம்பாலிப்பதாகும்) - [தணிகைக் குகனது வேல்]

---

கடைக்கண் நோக்கால் கிடைக்கும் அநுக்கிரகங்கள் யாவும் வேலாலும் கிடைக்கும் என்பது உணரற்பாலது.

“ தனந்தரும் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே ”

—என்னும் அபிராமி அந்தாதியின் (69) பொருள் வள்ளி கடைக்கண் இயலுக்கும் நன்கு பொருந்தும்.

பின்னும் ஸ்ரீ சம்பந்தப்பெருமான் [3–87–1] ‘ மலைமகள் ... முலையிணையவை குலவலின் ... எரியிடில் இவை பழுதிலை மெய்ம்மையே’ என்று பாராட்டிய - தீ–அணுக–மாட்டாத - ‘ போக மார்த்த பூண்முலையாள் ’—எனத் துவக்கும் தேவாரப் பதிகத்தின் [I–49] பெருமையெல்லாம் ‘பருத்தமுலை’ எனத்துவக்கும் இவ் வேல்வகுப்புக்கும் பொருந்தும் என்க. அதுபற்றி இவ் வேல் வகுப்பின் பாராயணத்தால் வெப்பு முதலிய நோய்கள் அணுகா என்க.

[2] **யானையின் கையைப்**—பனைக்கு உவமிப்பது உண்டு.

‘பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்’–அப்பர் 5-2-1.
‘ பனைபுரை கைம் மதயானை ’—அப்பர் 4–103-6.
‘ பனைக்கைப் பகடு ’ — சம்பந்தர் 2-59–4.
‘ பனைமல்கு திண்கை மதமா ’—ஷி 2–88-10.
‘ இரும்பனையன்ன பெருங்கை யானை ’-புறநா. 340.

[ தொடர்ச்சி பக்கம் 318–ல் பார்க்க. ]

[3]பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
யிடித்துவழி காணும்

[4]பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கவருள் நேரும்;

[5]சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்குநரர் தமக்குமுறும்
இடுக்கண்வினை சாடும்

---

[317-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புத் தொடர்ச்சி.]

முகபடம்—'முகபட சிந்தூர கரி'—திருப்புகழ் 1089.

தவள கஜம்—''வெண்கரி அயிராவதம்''—திருப். 1128.

இந்திரனுக்கு விலங்கு ''அரியரி பிரமாதியர் கால்விலங் கவிழ்க்கும் பெருமாளே''—திருப்புகழ் 218.

3 ''கவிப்புலவன் இசை'' என்றது (வேத) கீதத்துடன் பாடப்பட்ட வேதமொழியாகிய திருமுருகாற்றுப்படையை.

மறையவர் வேதங் கூறுவதுபோன்ற இசையுடனும் நிறுத்திய உச்சரிப்புடனும் திருமுருகாற்றுப்படையை ஓத வேண்டும் என்பது இதனுற் பெறப்படும்.

நக்கீரரின் இசைக்கு உருகின விவரம்—முருகவேள் பன்னிரு திருமுறை-திருப்புகழ் 91, பக்கம் 212 குறிப்பு; 1191 பக்கம் 470 குறிப்பு. 'இசைக்கு உருகி' என்றதனுல் திருமுருகாற்றுப்படை இசையுடன் பாடப்பட்டது என்பது தெரிகின்றது—''கீத இசைகூட்டி வேதமொழிசூட்டு கீரர் இயல் கேட்ட க்ருபைவேளே'—திருப்புகழ் 1278 உரைபக்கம் 644 கீழ்க்குறிப்பு. 'பழுத்த-அமுது தமிழ் எனவும் பிரிக்கலாம். செம்மை நிறைந்த அமுதுபோன்ற தமிழ்-எனலுமாம்.

திருமுருகாற்றுப்படைக்கு முருகவேள் உருகினது.

வள்ளியின் பேச்சுக்கு வாயூறி நிற்கும் முருகவேள் வள்ளியின் பேச்சைக் கேட்பதை விட்டுத் திருமுருகாற்றுப்படையைத் தன் 'பன்னிரு செவியுமாரப்' பருகினராம்—

''வள்ளி கன்னலும் அமுதும் தேனும் கைக்கும்இன் தீஞ்சொல் மாற்றித், தன்னிகர் புலவன் கூறும் தமிழ்ச்செவி தாழ்த்துக்கேளா, அந்நிலை மனங்களிப்புற் றறுமுகம்படைத்த கோமான்...காளத்திப்புராணம்;

3. (பழுத்த) செம்மை நிறைந்ததும், (முது) பழமையானது மான, (தமிழ்ப்பலகை) தமிழ்ச்சங்கப் பலகையில் (இருக்கும்) வீற்றிருந்த (ஒரு) ஒப்பற்ற (கவிப்புலவன்) கவிபாட வல்ல நக்கீரர் (இசைகக்கு) இசைத்த – சொன்ன – (அல்லது இசை யுடன் பாடின) பாடலாகிய திருமுருகாற்றுப்படைக்கு (உருகி) மனம் உருகி, வரைக்குகையை) (அவர் அடைபட் டிருந்த) மலைக்குகையை இடித்துத்தள்ளி வழிதிறந்து விட்டது– நக்கீரரை அக் குகையினின்றும் வழிதிறந்து வெளியேற்றி விட்டது – [தணிகைக் குகனது வேல்]

4. (பசித்து) பசியினல்வருந்தி, (அலகை) பேய்க்கூட்டங்கள் (முசித்து) கிலேசித்து மெலிந்து, அழுது, (உணவு வேண்டும் என்று) முறையிடுதலை, (ஒழித்து) இல்லாமற் செய்து - முறை யிடாதபடி செய்து, (அவுணர்) அசுரர்களுடைய (உரத்து) மார்பிடத்தினின்று வரும் (உதிரம்) ரத்தம், (நிணம்) கொழுப்பு, (தசைகள்) சதைகள் இவைகளை (அந்தப் பேய்க் கூட்டங்களுக்கு) (புசிக்க) உண்ணும்படி (அருள் நேரும்) அருள் பாலிக்கும் (தணிகைக் குகனது வேல்) —

5. (சுரர்க்கும்) தேவர்களுக்கும், முனிவர்களுக்கும், (மக பதிக்கும்) இந்திரனுக்கும் (விதிதனககும்) பிரமனுக்கும், (அரிதனக்கும்) திருமாலுக்கும் (நரர்தமக்கும்) மனிதர்களுக் கும் (உறும்) நேரிடும் (இடுக்கண்) துன்பத்தையும் (வினை) பூர்வ கர்மத்தையும், (சாடும்) அழித்து ஒழிக்கும் (தணிகைக் குகனது வேல்)

---

4 பசியால் வருந்தி வேதனைப்பட்ட அலகைகளுக்கு (பேய் களுக்கு முருகவேள் அசுரர்களை வெட்டிப் பலியிட்டு நிரம்பப் பிண உணவு அளித்தனர்.

" சூரொடும் பொர வஞ்சி சூடிய பிள்ளையார்படை [தொட்டநாள்
ஈருடம்பு மிசைந்திரண்டுதி ரப்பரப்பும் இறைத்தனம்.

" அசும்பு தூர்வயி ருரமுன்பவர் செற்றதானவர் [அற்றநாள்
விசும்பு தூர விழும்பிணங்கள் நிணங்களூற [மிசைந்தனம் "

—தக்கயாகப்பரணி 231, 232.

5 வேல் வினைசாடும் — " வினையோட விடும் கதிர்வேல் " —கந்தரநுபூதி 40.

[6]சுடர்ப்பரிதி ஒளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை யடக்குதழல் ஒளிப்பவொளிர்
ஒளிப்பிரபை வீசும்

[7]துதிக்குமடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கினவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும்

[8]சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை
யடுத்தபகை யறுத்தெறிய வுறுக்கியெழு
மறத்தைநிலை காணும்;

[9]தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும்

---

6 வேலின் பேரொளி:—

(1) "அந்தமில் ஒளி"

—கந்த புராணம் பாநுகோப-3-ஆம் நாள் 212.

(2) 'உதய பாநு சதகோடி உருவான ஒளிவாகு மயில் வேல்'—திருப்புகழ் 207. (3) 'திவாகரர் வடிவை உருக்கி வடித்த திருக்கைவேல்' (பூத வேதாள வகுப்பு.) (4) அஞ்ஞான இருளை நீக்கி, வினை இருளை ஓட்டும் ஆற்றல் ஞான ஒளிவீசும் வேலுக்கே உண்டென அறிந்து, புற இருளை மாத்திரம் ஒட்டும் ஒளி வாய்ந்த சூரியன், சந்திரன், வடவா முகாக்கினி—இம் மூன்றும் 'ஞான பூரண சத்தி'-(திருப்புகழ் 152), மெய்ஞ்ஞான அயில் (திருப்புகழ் 167), 'வினை எறியும் வேல்' (திருப்புகழ் 1200)—எனப் புகழ்பெற்ற வேலின் ஒளி கண்டு அஞ்சி ஒளிக்கும் என்க.

(5) வடமாமுகாக்கினி என்பது பெட்டைக் குதிரையின் முகம்போலும் ஓர் அக்கினி குண்டத்திலிருத்தலாற் பெற்ற பெயர் (தக்கயாக-உரை 475). இது கடல் அலையை அடக்கும். "விரிமுகக் கடலேழ் பெருவெள்ளமும் பரிமுகத்தொரு செந் தீப் பருகவே" — தக்கயாகப்-587.

7 'சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும் ... பழிப் பவர் தமக்கும் திருப்புகழ் நெருப்பு'-திருப்புகழ் 263. இதனால் வேலை 'வஞ்சவேல்' என்றார் திருப்புகழில்-பாட்டு 750, பக்கம் 237 கீழ்க்குறிப்பு.

8 'இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர் இடுக் கினை அறுத்திடும்', 'திருப்புகழ் உரைப்பவர்கள், படிப்பவர்

6. (சுடர்ப் பரிதி) ஒளி வீசும் சூரியன் (ஒளிப்ப)—இதன் ஒளிக்கு முன் நமது ஒளி எந்த மூலை என்று அஞ்சி ஒளிந்து மறையவும், நிலவு—குளிர்ந்த கிரணங்களை (ஒழுக்கும்) வீசும் (மதி) சந்திரன் (ஒளிப்ப) அங்ஙனமே ஒளிந்து மறையவும், (அலை) கடல்நீரை (அடக்கு) அடக்கி ஆளும் (தழல்) வடவா முகாக்கினி (ஒளிப்ப) அவ்வாறே ஒளிந்து மறையவும் ஒளிர்—ஒளிவிடுகின்ற—(ஒளிப் பிரபை) பேரொளியை வீசும்—(தணிகைக் குகனது வேல்)

7. துதித்துப் போற்றும் அடியவர்களுக்கு ஒருவர் கெடுதி செய்ய, (இடர் நினைக்கின்) இடைஞ்சல் நினைத்தால், அந்தப் பொல்லாதவர்களுடைய குலத்தையே (முதலறக்களையும்) அடியோடு அழித்து ஒழிக்கும், (எனக்கு) அடியேனுக்கு ஒப்பற்றதொரு துணையாக நிற்கும் (தணிகைக் குகனது வேல்)

8. (சொலற்கரிய) சொல்லுதற்கரிதான—சொல்லில் அடங்காத பெருமையைக் கொண்ட திருப்புகழை எடுத்து உரைப்பவர்களுககு (அடுத்தபகை) நேரிடும் பகைகளை, அறுத்துத் தொலைக்க (உறுக்கி எழும்) கோபித்துக் கிளம்பும்; அறத்தை—அறநெறியை (நிலைகாணும்) நிலைத்து நிற்கும்படி உதவி செய்யும்—(தணிகைக் குகனது வேல்)

9. (தருக்கி) அகங்கரித்த ஊக்கத்துடன் (நமன்) யமன் முருக்கவரின்—கொல்ல வருவானானால் (அப்போது) எருக்கு மாலையையும், நிலவையும் சூடியுள்ள முடியை உடையவரும், (விறல் படைத்த) வெற்றி—வீரம் கொண்டவருமான (இறை) கடவுளாம் சிவபிரானது (கழற்கு) திருவடிக்கு (நிகராகும்) ஒப்பாக நின்று உதவும்—(தணிகைக் குகனது வேல்)

---

கள் மிடிப்பகைமை செயித்தருளும்'—திருப்புகழ் 271, 173—என வருவன காண்க.

அறத்தை நிலைகாணும் வேல்—தருமத்தை நிலைநிறுத்தும்—அதனால் வேலைச் 'சரதவிரத அயில்' என்றார் திருப்புகழில்(692)

9 சிவபிரானது திருவடி எங்ஙனம் மார்க்கண்டருக்காக யமனை உதைத்து அவரைக் காத்ததோ அங்ஙனம் வேலும் யமன் வரும் சமயத்தில் உதவும் என்க. 'வெந் நமனார் தூதரை ஓடத் துரப்பன ... ஐயாறன் அடித்தலமே'—அப்பர் 4-92-15. அவ்வாறே, வேலும் 'வெங் கூற்றுவர்க்குச் செல் வந்தி கழும் திருக்கையில் வேல்' (கந்தரந்தாதி 100). 'தருக்கி நமன் நெருக்கிவரில் எருக்குமதி தரித்தமுடி படைத்த இறை படைத்தவிறல் படைத்த மழு வாகும்'' — என்றும் பாடம். 'மரண ப்ரமாதம் நமக்கில்லையாம்......துணை வேலுமுண்டே'— கந்தரலங்காரம் 21.

10தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும்

11தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்

12சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்;

13திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படை ய அடைத்துதிர
நிறைத்துவிளை யாடும்

---

10 வேல் சகல சித்திகளும் கொண்டுள்ளபடியால் தலத்தில் (பூமியில்) உள்ள சகல கணங்களுக்கும் (உயிர்த் தொகைகளுக்கும்) உணவு எளிதில் அழைத்துத் தரும் — அதனால் வேலைச் 'சித்தி மன்னு செய்ய சத்தி' என்றார் திருப்புகழில் (617).

கிரவுஞ்சத்தைப் பிளந்தெறியச், சூரனை அடக்க முருகவேள் தமது திருக்கையையே (விதிர்த்து) அசைத்து வேலைவிட வேண்டி வந்தது. 'சாடு குன்றது பொட்டெழ மற்றும், சூரனும் பொடி பட்டிட ... திருக்கை விதிர்க்குந் தனிவேலா' திருப்புகழ் 105 ; அந்தாதி 61. ஆனல் கணங்களுக்கு உணவு அழைக்கக் கரத்தின் முனையை — கரத்தில் உள்ள வேலின் முனையை (விதிர்த்தலே) அசைத்தலே போதுமானது:

கணங்கள் — பதினெண் கணங்கள், பேய்கள் — எனவும் பொருள். பதினெண் கணங்கள் — திருப்புகழ் 788, பக்கம் 338 கீழ்க்குறிப்பு. பதினெண் கணங்களும் களிக்க உணவு வரவழைக்கும் வேல்; பேய்க்கூட்டங்கள் களிக்கவும் உணவு தரும் — மேலே அடி 4-ன் குறிப்பைப் பார்க்க.

11 ஞானமலை - குருடிமலை யாய காடடர்ந்த ப்ரதேசங்களில் அருணகிரியார் தனியாக வழி நடந்தபோது வழி தப்பித் திகைத்துச் 'செங்கோடைக் குமர' என ஆண்டவனைத் தியானித்தபொழுது அருணகிரியார் காணும்படி வேலாயுதம் எப்புறத்தும் - இரவும் பகலும் துணைசெய்ய — முருகவேள் வழிகாட்டியாய் வெளிப்பட்டு உதவினர்; இந்த உதவியை இந்த அடி குறிக்கின்றது. [அருணகிரியார் வரலாறு பக்கம் 76, 77.]

**10.** (தலத்தில்) பூமியில் உள்ள (கணத்தொகுதி) உயிர் வருக்கங்கள் யாவும் (களிப்பின்) மகிழ்ச்சி அடையும் அளவுக்கு, (உணவு அழைப்பதென) உண் பொருள்களை (அழைப்பதென) வரவழைக்கவேண்டி வந்தால், (தாமரை) மலரை ஒத்த இறைவன் திருக்கரத்தில் இருந்தபடியே – (முனை விதிர்க்க) — கை (வேலின் முனைப் பாகத்தை - நுனியை விதிர்க்க - (அவர்) அசைத்த மாத்திரத்தில் (வளைவு ஆகும்) — (உண்பொருள் யாவற்றையும்) சுற்றி வளைத்துக் கொண்டுவந்து சேர்த்து விடும் —(தணிகைக் குகனது வேல்)

**11.** தனிமையாக வழி நடந்து செல்லும் என்னுடைய இடதுபுறத்தும், ஒரு வலது புறத்தும், (இருபுறத்தும்) முன்னும் பின்னுமாக இரண்டு பக்கங்களிலும் – ஆக நாற்புறத்தும் (அருகு அடுத்து) சமீபத்திலேயே அடுத்திருந்து — பக்கத்திலிருந்து, இரவும் பகலும் துணை செய்வதாகும் — (தணிகைக் குகனது வேல்)

**12.** சலத்து வரும் – மிக்க கோபத்துடன் வந்த அசுரர்களின் உடலில் கொழுத்து வளர்ந்திருந்த பெரிய குடல்களைச் செந்நிற மாலைபோல தனது (சிகையில்) முடியில் ஆசையுடனே சூடிக்கொள்ளும் (தணிகைக் குகனது வேல்)

**13.** அலை வீசும் கடலை உடைப்புக் கொள்ளும்படி செய்தும், நிறைந்துள்ள (புனல்) நீரை, (கடிது) வேகத்தில் குடித்தும், உடைத்த உடைப்பு முழுமையும் அடைத்து (அங்கு) (உதிரம் நிறைத்து) –அசுரர்களின் ரத்தத்தை நிரப்பியும்-விளையாடும் (தணிகைக் குகனது வேல்)

---

‘பயந்த தனிவழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே’.—‘என்றும் வாய்த்த துணை கிரணக் கலாபியும் வேலும் உண்டே’—கந்தரலங்காரம் 70, 21.

‘அச்சம் அகற்றும் அயில்வேலும்’-கந்-கலிவெண்பா 114.

[12] குடர்மாலை — ‘முதியவுணர் அன்று பட்ட முதியகுடர் நன்று சுற்று ... வேலினன்’ — கடைக்கணியல் வகுப்பு.

‘கொடிய தானவர் குருதியிலாடி வெங் குடலெனுந் தொடைசூடி’’—திருவிரிஞ்சை பிள்ளைத் தமிழ் – காப்பு. 8.

[13] வேலாற் கடல் படும்பாடு — ‘‘மறிகட லொன்றும் கடுங்கனற் பூழி படும்படி நோக்கிய தாரை எட்டுடைய கூரிலை நெடுவேல்’’ (கல்லாடம் 61): ‘‘அலைமோது தெண் கடல் கோகோ கோவென ... நீள் வேல் ஏவிய இளையோனே’ (திருப்புகழ் 1180); ‘அலைகொண்ட வாரிதி கோ கோ கோ கோ என நின்று வாய்விடவே ... அனலங்கை வேல் விடும் வீரா தீரா’ (திருப்புகழ் 328).

[14]திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கவற
விசைத்ததிர வோடும்

[15]சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும்

[16]திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே.

---

14 மலைகளின் சிறகை இந்திரன் அரிந்தது :—வரலாறு-திருப்புகழ் 216, பக்கம் 50 கீழ்க்குறிப்பு.

15 குறைத்தலைகள் – உடலற்ற தலைகள் : போர்க்களத்தில் உடல் துண்டிக்கப்பட்ட இடத்தும் வீரர்களின் உடலற்ற தலைகள் வீரச்சிரிப்பு சிரித்தல், பற்களைக்கடித்தல், விழிவிழித்து வாய் அலறுதல் செய்யும் : அச்சுறுத்தும். 'அச்சிரம் அச்சம் உறுத்து மாலோ' 'சிரம் கோற்றவையைப் பரவு மாலோ'—கலிங்கத்துப்பரணி–கோயில் 16, 15. தலையற்ற உடல்கள் (கவந்தம்) வீரச்செயல் காட்டி ஆடும். இதை 'அட்டை ஆடல்' என்பர் ''பகைவர் சிரங்களெல்லாம் குறையுடலங் கூத்தாடக் கொய்வேன்''—வில்லி பாரதம் 17-ஆம் போர்-17; கவந்தம் ஆடுதல் — திருப்புகழ் 354, பக்கம் 394 கீழ்க் குறிப்பு. தொல்காப்பியம்-பொருள் 71–உரை.

16 மலை விருத்தன் - மலைகிழவோன் : விருத்தன்-மேலோன் எனவும் பொருள். 'வான விருத்தனே போற்றி'—திருவாசகம் சதகம் 61.

மிகப் பாராட்டத் தக்கது இந்த வேல் வகுப்பு என்பதை இவ்வகுப்பின் முதலெழுத்தையும் கடை எழுத்தையும் கூட்டிப் பார்க்கப் 'பலே' என வருதலினும் கண்டு மகிழ்வோம்.

---

### வேல் வகுப்பின் சுருக்க உரை

**திருத்தணிகை** முருகன் வேலானது—(1) வள்ளியின் விழிக்கு ஒப்பாகும், (2) இந்திரனது கால்விலங்கை முறித் தெறியும். (3) நக்கீரனை மலைக்குகையினின்று மீள்விக்கும், (4) பேய்கள் களிக்க மாமிச ஊண் அளிக்கும், (5) தேவர்கள், முநிவர்கள், இந்திரன், பிரமன், திருமால், மனிதர்கள்–ஆகிய யாவருடைய துன்பங்களையும், வினைகளையும் ஒழிக்கும், (6) சூரியனுடைய ஒளி, சந்திரனுடைய ஒளி, வடவாமுகாக்கினி

14. திசைகளில் உள்ள (கிரியை) மலைகளை (முதல்) முன்னாளில் (குலிசன்) குலிசாயுதத்தை உடைய இந்திரன்அறுத்துப் போட்ட சிறைகள் (மீண்டும் அம் மலைகளுக்கு) முளைத்து விட்டனவோ என்னும்படி, (முகட்டின் இடை) அண்டமுகட்டிலே (உச்சியிலே) பறந்து (அற) மிகவும் (விசைத்து) விசை—வேகத்துடனே - (அதிர) திசைகள் அதிர்ச்சி உற (ஓடும்) ஓடுவதாகும் (தணிகைக் குகனது வேல்)

15. (சினத்து) கோபம் கொண்டுள்ள (அவுணர்)அசுரர்கள் எதிர்த்து வந்த (ரணகளத்தில்) போர்க் களத்திலே, அவர்களுடைய (வெகு குறைத்தலைகள்) நிரம்ப உடலற்ற தலைகள் சிரிக்கவும், (எயிறு) பற்களைக் கடிக்கவும், விழி விழித்து—கண்களை விழிவிழி என்று விழிக்கவும், (அலற) வாய்கள் அலறவும்—அவர்களை (மோதும்) தாக்கும் (தணிகைக் குகனது வேல்)

16. (இத்துணைக் குணங்கள் வாய்ந்தது எது என்றால் அதுதான்) திருத்தணிகைமலையில் (உதித்து) தோன்றி விளங்கி அருள்பாலிப்பவனாகிய (ஒருத்தன்) ஒப்பற்ற மூர்த்தியும், மலை விருத்தன்—மலைகிழவோன, (மலைமேலோன்) எனப் பெயர் பெற்றவனும்,என்னுடைய உள்ளத்திலே உறையும்(கருத்தன்) திருவுள்ளத்தைக் கொண்டவனும் (அல்லது கர்த்தா – தலைவனும்), மயிலை வாகனமாக நடத்துபவனுமான – குகமூர்த்தியின் வேலாயுதமே.

---

[வேல் வகுப்பு – சுருக்க உரை தொடர்ச்சி.]

யின் ஒளி இவைகளைஅடக்கிடும்படியான பேரொளியை வீசும், (7) அடியார்க்குக் கெடுதல் நினைப்பவர்களின குலத்தையே நாசமாக்கும் - எனக்குத் துணையாய் நிற்கும், (8) திருப்புகழை உரைப்பவர்களின பகையை அறுத்தெறியும், அறததை நிலை நிறுத்தும், (9) யமன் வரும்போது சிவனார் திருவடிக்கு ஒப்பாக உதவும், (10) சகல உயிர்களுக்கும் உணவளிக்கும், (11) தனிவழி நடக்கும்போது எப்புறத்திலும் நின்று எனக்கு இரவும் பகலும் துணைபுரியும், (12) அரககர்களின் குடலைச் சிவந்தபூமாலைபோலச்சூடிக்கொள்ளும், (13) கடலைஉடைத்து எறியும், நீரைப் பருகும், உடைப்பை அடைக்கும், அடைத்து அசுர ரத்தத்தை நிரப்பி அதில் விளையாடும் : (14) சிறகைப் பெற்ற மலை பறப்பதுபோல வேகமாய்ப் பறக்கும், (15) குறைத்தலைகள் பற் கடிக்க, விழி விழிக்க, அவுணர்களைப் போர்க்களத்தில் மோதும்.

## 4. திருவேளைக்காரன் வகுப்பு

[வள்ளியம்மையொடு தமது வேளையைப் (பொழுதைப்) போக்குபவன் எனக்கூறி முருகன்பெருமையை விதந்தோதுவது. "விந்தை குறமாது வேளைக்கார", "வித்துவினை புன்றும் வேய் மூத்தீனும், வெற்பு முறையுமயில் வேளைக்காரப் பெருமாளே", "சுத்த மறவர் மகள் வேளைக்காரப் பெருமாளே" — திருப்புகழ் 41, 1025, 1026.]

தானதன தத்ததன தானதன தத்ததன
தானதன தத்ததன தனதந் தானன

[1]ஆனபய பத்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பத்தசன வாரக் காரனும்
[2]ஆரமது ரித்தகனி காரணமு தற்றமைய
ஞருடனு ணக்கைபரி தீமைக் காரனும்
[3]ஆகமம்வி ளைத்தகில லோகமு நொடிப்பளவில்
ஆசையொ டிசுற்றுமதி வேகக் காரனும்
[4]ஆணவஅ ழுக்கடையும் ஆவியை விளக்கியநு
பூதியடை வித்ததொரு பார்வைக் காரனும்

---

[1] இறைவன் திருவடியை வழிபடுதலே வீட்டின்பத்தினும் சிறந்ததென்று கொள்ளும் கொள்கையை உடைய பக்தர்கள். 'கூடும் அன்பினிற் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினர்' — (பெரிய புராணம் - திருக்கூட் 8). 'விமலன் குஞ்சித கமலம் கும்பிட வேண்டுவார் வேண்டார் விண்மிசை யுலகே' — (சிதம்பரச் செய்யுட். 50). 'நின் பதத தன்பையே வேண்டுவன் ... அந்த நல்வரம் முத்தியின் அரிய தொன்று' — (வீரவாகுதேவர் கூறுவது) கந்தபுரா. 4-11-154.
'நிகழ் பத்தசன' — 'நினை பத்தசன' என்றும் பாடம். ஆனபயபக்தி—கூடிய அளவுக்குள்ள பயபக்தி. 'அஞ்சியாகிலும் அன்புபட் டாகிலும் நெஞ்சம் வாழி ... நீ' — அப்பர் 5-23-9.

[2] கணபதியுடன் பழத்துக்காகப் போட்டியிட்ட வரலாறு — திருப்புகழ் 184, பக்கம் 430 கீழ்க்குறிப்பு.

[3] உலகை வலம் வந்தது — போட்டியிட்டு வலம் வந்தது — ஷை கீழ்க்குறிப்பு.

[4] ஆணவ அழுக்கால் ஆவி மூடப்பட்டது :—
'செம்பினிற் களிம்பேய்ந்து என்றும் அஞ்ஞானம் காட்டும்'

## பொழிப்புரை

**1.** ஆனபயபத்தி வழிபாடு–பயபத்தியான வழிபாடு–பயத்துடனும் பத்தியுடனும் ஆன வழிபாடு–பயபத்தியுடன் செய்யப்படும் வழிபாடு (ஒன்றே), தாம் பெறவிரும்பும் முத்தி என்று எண்ணி வழிபடுகின்ற–அவ் வழிபாட்டையே தமது தவ ஒழுக்கமாகக் கொண்டு வழிபடுகின்ற பக்த ஜனங்களின் மீது வாரக்காரனும்—ஆசை கொள்பவன–(எவன் எனில் அவன்தான வள்ளி வேளைக்காரனும் முருகன்).

**2.** (ஆர) நிரம்ப, (மதுரித்த) இனிமை கொண்டதான, (கனி காரணம்) மாம்பழம்-(அல்லது மாதுளம்பழம்) காரணமாக—(முதல்) முன்பொருகாலத்தே (தமையனுருடன்) தமையனும் கணபதியுடன உணக் கை–(அந்தப் பழத்தை) உண்ணும் சாமர்த்தியப் போட்டியில் (பரி) வருத்தத்தையும் (தீமை) குற்றத்தையும் கண்டவன் (எவன எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன).

**3.** ஆகமம்—வேத சாஸ்திரங்கள் (தரும நூல்கள்) (விளைத்த)–பரவியுள்ள எல்லா உலகங்களையும் ஒரு நொடிப் போதில் (மாங்கனிமேல் கொண்ட ஆசையுடன) சுற்றி வந்த மிகுந்த வேகம் கொண்டவன் (எவன எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

**4.** ஆணவம் என்கின்ற (அழுக்கு) மலம் மூடியுள்ள ஆவியை) உயிரை (விளக்கி) அந்த மலம் நீங்க விளக்கம் தந்து ஞான ஒளியைப் பரப்பி, (அநுபூதி) ஞான அனுபவத்தை (அடைவித்த) நிரம்பப் புகட்டின, ஒப்பற்ற திருக்கண் பார்வையை உடையவன் (சக்ஷு தீக்ஷை செய்தவன்–எவன் எனில் அவன்தான வள்ளி வேளைக்காரன்).

---

ஆணவம் இயைந்து நின்றே' 'தாணுவின்தன் கழலிணையத் தவிரும் மலம்' (சித்தியார் சுபக்கம் 1.0, 314).

இந்த அடி அருணகிரியாரின் வரலாற்றை விளக்குகின்றது. இறைவன் சக்ஷுதீட்சைசெய்து தனக்கு ஞானப்பேற்றை அளித்தது—கூறப்பட்டுளது. சட்சு தீட்சை செய்தார் முருகவேள் எனபது—

'தழைந்த சிவசுடர் தனைஎன மனதினில்
அழுந்த உரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமும் இருமலர் சரணமு மறவேனே'
'பரகதி பெற்றிட நோக்கிய பார்வையும் மறவேனே'

'விழியருள் தந்த பேரருள் கனவிலு மறவேனே' திருப்புகழ் 113, 751, 773. 'அநுபூதி அடைவிக்குமொரு'—என்றும் பாடம்,

[5]ஆடலைவு பட்டமரர் நாடதுபி ழைக்கஅம
ராவதிபு ரக்குமடல் ஆண்மைக் காரனும்
[6]ஆடகவி சித்ரகன கோபுரமு கப்பில்அரு
ணாபுரியில் நிற்கும்அடை யாளக் காரனும்
[7]ஆயிரமு கத்துநதி பாலனும கத்தடிமை
யானவர் தொடுத்தகவி மாலைக் காரனும்
[8]ஆறுமுக வித்தகனும் ஆறிருபு யத்தரசும்
ஆதிமுடி வற்றதிரு நாமக் காரனும்;
[9]யானெனதெ னச்சருவும் ஈனசம யத்தெவரும்
யாரும்உணர் தற்கரிய நேர்மைக்காரனும்
[10]யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
யேறவிடு நற்கருணை யோடக் காரனும்
[11]ஏரகம் இடைக்கழிசி ராமலைதி ருப்பழநி
யேரணிசெ ருத்தணியில் வாசக் காரனும்

---

[5] முருகவேள் 'அமராவதி காவலர்'—கந்தர் அலங். 79, அநுபூதி 18. 'பூத்த கற்பகப் பொன்னுல கிமையவர்க் கிரங்கிக் காத்த சேவகன்'—உபதேச காண்டம் (கோனேரி).

[6] கோபுர முகப்பில் அடையாளக்காரன் — இவரையே 'அடல் அருணைத்திருக் கோபுரத்தே அந்த வாயிலுக்கு வட அருகிற் ......கண்டுகொண்டேன் ...... கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே'—என்றார் கந்தர் அலங்காரக் காப்புச் செய்யு ளில். இவரே அருணகிரியார்க்கு உபதேசித்த குருமூர்த்தி.

[7] கங்கையை ஆயிர முகத்து நதி என்பர் ஆயிர முகமாய் அது பரந்து போதலின். 'பகீரதன் வரங்கள் வேண்ட, ஐயமில் அமரர் ஏத்த ஆயிர முகமதாகி, வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கை'—அப்பர் 4-65-7. கங்கையின் புதல்வனுதலின் முருகவேளுக்குக் 'காங்கேயன்' என்று ஒரு பெயர்.

[8] 'ஆதி முடிவற்ற திருநாமங்கள் எனலுமாம் —
'ஒருருவம் ஒருநாமம் ஒன்றுமில்லாற்குஆயிரம் திருநாமம் பாடி'—திருவாசகம்-திருத்தெள்ளேணம் 1.

[9] "யான்தான் எனுஞ்சொல் இரண்டுங் கெட்டாலன்றி ...... தோன்றாது சத்தியம்"-அலங். 95. கந்தபுரா-1-16-2.

5. (ஆடலைவுபட்ட) (சூரனால்) மிக்க அலைச்சல் அடைந்திருந்த, (அமரர்) தேவர்களின (நாடு அது) பொன்னுலகமானது, (பிழைக்க) செழிப்பு உற (அமராவதி) அவ்வுலகின் தலைநகராம் அமராவதியைப்(புரக்கும்) காப்பாற்றின (அடல்) வெற்றியுள்ள (ஆண்மை) வலிமை வாய்ந்தவன் (எவன் எனில் அவன்தான வள்ளி வேளைக்காரன்).

6. (ஆடகம்) பொன்மயமானதும் (விசித்ரம்), விசேட வேலைப்பாடு அமைந்து விநோதமானதும், (கனம்) பெருமை வாய்ந்ததும் – பெரிதானதும் – ஆன கோபுரத்தின் (முகப்பில்) வாயிலில் திருவண்ணாமலையில் (நிற்கும்) வீற்றிருந்தருளும் (அடையாளக்காரன)—நேரிற் கண்டு களிக்கப் பிரத்தியக்ஷ மூர்த்தியாய் (எனக்கு) வந்தவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன).

7. ஆயிர முகங்களாகப் பரந்து செல்லும் கங்காநதியின் குமாரன், உள்ளத்தே மெய்யடிமை பூண்டவர் அமைத்த பாமாலையை அணிபவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

8. ஆறுமுகம் கொண்ட ஞானமூர்த்தி, பன்னிரண்டு திருப்புயங்களைக்கொண்ட அரசு, முதலும் இறுதியும் இல்லாதவன என்கின்ற திருப்பெயரை உடையவன் (எவன எனில் – அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

9. யான – எனது என்கின்ற அகங்கார, மமகாரங்களைக் கொண்டு (சருவும்) போராடும் (ஈன சமயத்தவர்) இழிவான சமயவாதிகள் யாராயிருந்தாலும் அவர்களால் அறிந்துணர முடியாத (நேர்மைக்காரனும்) செம்மைவாய்ந்தவன், நுண்ணியன் (எவன் எனில் – அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

10. யாதும் — சற்றும் — கொஞ்சமேனும் — நிலைத்தல் இல்லாது அலையவேண்டி யிருக்கின்ற ஏழு பிறவி என்கின்ற கடலினின்றும் கரையேறவிட வல்ல நல்ல கருணையாம் ஓடத்தைச செலுத்துபவன (எவன் எனில் – அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

11. (திருஏரகம்) சுவாமிமலை, திருவிடைக்கழி, திரிசிராப்பள்ளி, திருப்பழநி, (ஏர் அணி) அழகு வாய்ந்த (செருத்தணி) திருத்தணி — என்னும் தலங்களில் வீற்றிருப்பவன் (எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்).

---

10 'இழித்தன ஏழேழ் பிறப்பும் அறுத்தன ... ஐயாறன் அடித்தலமே'—அப்பர் 4-92-2.

11 ஏரணி செருத்தணி — 'அழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமாளே'—திருப்புகழ் 285.

[12]ஏழையின் இரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக்காரனும்

[13]யாமளைம ணக்குமுக சாமளைம ணிக்குயிலை
யாயெனஅ ழைத்துருகு நேயக் காரனும்

[14]ஏதமற நிச்சயம ஞேலயவி ளக்கொளியும்
யாகமுநி வர்க்குரிய காவற் காரனும்

[15]ஈரிரும ருப்புடைய சோனைமத வெற்பிவரும்
யானையள விற்றுவளும் ஆசைக் காரனும்

---

[12] இந்த அடி சுவாமிகளின் உடற்சிறை நீங்கி அவர் கிளியான பின்பு திருவகுப்பு அவர் பாடினர் என்னும் கருத்துக்கு இடம் தருகின்றது. 'நியாயக்காரன்' என்னும் சொற்றொடர் கவனிக்கற்பாலது. அருணைக் கோபுரத்தில் தமது உடலைவிடுத்து, கிளி உருவிற் புகுந்து, மலர்கொண்டுவர விண் சென்று, திரும்பி வந்து, தமது உடலைக் காணுது–உடல் எரிபட்டொழிந்ததை அறிந்து—'இதுவும் ஒரு நன்மையே – இறைவன் செய்தது நன்றே – அவர் 'நியாயக்காரன் ஆயிற்றே' என உணர்ந்து மகிழ்ந்தனர் அருணகிரியார்.

தமது உடல் காணுது போனதைக் கண்டு இவ்வாறு உண்மை உணர்ந்து மகிழ்ந்த பிறிதொரு பெரியார் திருமூல நாயனுர்–'திருவருளால்அவ்வுடலைக்கரப்பிக்க, எண்ணிறைந்த உணர்வுடையார் ஈசரருள் என உணர்ந்தார்'—பெரிய புரா– திருமூலர் 23.

[13] தமது தாயை முருகவேள் 'ஆத்தே, ஆத்தே' என அழைத்து உருகுவதைப் பின்வரும் செய்யுளிற் காண்க.

"பூத்தே உலகம் புரப்பாளைப் பொய்யர் தமக்குக் கரப்பாளைப்
பொழியுங் கருணை விழியாளைப் பொற்புங் கற்பும் அழியாளைக்
கூத்தை உடையான் இடத்தாளைக் குவிமா முலைமேல் வடத்தாளைக்
குறையா எண்ணெண் கலையாளைக் குளிர்சேர் இமய மலையாளை
மாத்தே வருக்கும் தெளியாளை வணங்கும் அடியார்க்கெளியாளை
வரையைச் சிலையா வளைத்தாளை மறைக்கு முதலாய் முளைத்தாளை
ஆத்தே ஆத்தே எனுங்குமரா அடியேஞ் சிற்றில் அழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே அடியேஞ் சிற்றில் அழியேலே"
—(திருவிரிஞ்சைப் பிள்ளைத் தமிழ்.)

*12.* ஏழையாகிய அடியேனுடைய (இரு ்டை வினை) நல்வினை - தீவினை என்னும் இரண்டு வினைகளின் காரணமாய் ஏற்பட்ட ஒரு உடல் என்னும் இந்தச் சிறைச்சாலையில் இருந்து வேதனைப்படாமல் என்னை விடுவித்து ஆண்ட மகா நீதிமான் (எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக் ்காரன்).

*13.* (யாமளை) ச்யாமள நிறத்தை - ஒருவகைப் பச்சை நிறத்தை உடையவள், (மணக்கு முக -) நறுமணம் இடம் கொண்டுள்ள (சாமளை) பச்சை நிறத்தி, (மணிக் குயிலை) அழகிய குயில் போன்றவளாகிய பார்வதியை (யாய்) தாய் என்று அழைத்து விரும்பி மனம் நெகிழும் அன்பு வாய்ந்தவன் (எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்).

14. (ஏதம்) துன்பம் - கேடு (அற) ஒழிய, நிச்சயம் - திடமான (மனோலயத்தை) மன ஒடுக்கத்தை-சும்மா இருக்கும் நிலையைத் தருகின்ற (விளக்கொளியும்) ஜோதி ஒளிப்பிழம்பு, வேள்வி இயற்றும் முநிவர்களுக்கு ஆதரவான காவற்காரன் (எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்).

*15.* (ஈரிரு) நான்கு — தந்தங்களைக் கொண்டதும் (சோனை) விடாமழைபோல மதம் சொரிவதும், (வெற்பு) மலைபோன்றதுமான ஐராவதத்தின்மேல் (இவரும்) ஏறிவரும் (யானை அளவில்) தேவசேனையின் மாட்டு (துவளும்) மன நெகிழ்ச்சியுறும், ஆசை வாய்ந்தவன் (எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்)

---

14 முருகன் 'விளக்கொளி' என்பது—"அன்பர் அகத் தாமரையின் மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே" — கந்தர் கலிவெண்பா 58. யாக காவற்காரன் என்பது—"அந்தண் மறைவேள்வி காவற்கார" — திருப்புகழ் 41. 'ஒருமுகம் அந்தணர் வேள்வி ஓர்க்குமே'—திருமுருகாற்றுப்படை 96.

15 ஐராவதத்துக்கு நான்கு தந்தங்கள் :—'கொம்பு நாலுடைய வெண் கம்ப மால்கிரி"—திருப்புகழ் 1105.

ஐராவதம் தேவசேனைக்கும் உரிமை - என்பது —

'கவள தவள ... கனகட இபமும் இரணிய தரணியும்
உடையதொர் தனியானை'—(திருப்புகழ் 1008) என

வருவதிற் காணலாம். ஐராவதத்தின்மேல் தேவசேனை, சசி இருவர்களும் ஏறி வருவார் என்பது —

"புலோமசை ... அடல் அயிராவத ஆனை மேற்கொடு
மடமகள் தன்னொடும் வானத் தேகினள்"
— கந்தபுராணம் 5-2-10.

[16]ஏடவிழ்க டப்பமலர் கூதளமு டிக்கும்இளை
யோனும்அறி விற்பெரிய மேன்மைக் காரனும்;
[17]வானவர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியில்உ தித்தமுக மாயக் காரனும்
[18]வாரணப திக்குதவு நாரணனு வக்குமரு
மானும்அய னைக்கறுவு கோபக் காரனும்

---

[16] கடம்புபோலக் கூதள மலரும் முருகவேளுக்கு உகந்தது: "முடியிற் கொண்ட கூதளம் என" — "குமர சரண் என்று கூதளப் புதுமலர் சொரிந்து" — திருப்புகழ் 960, 212. [திருப்புகழ் 960, பக்கம் 784 கீழ்க்குறிப்பு].

அறிவிற் பெரியவன் முருகன் – அதனால் 'ஞான பண்டித சாமி', 'ஞான சற்குருநாதன்', 'ஞானசாரியர்' என அழைக்கப்பட்டார் [திருப்புகழ் 100, 212, 341].

[17] வானவரைப் புரக்க, அசுரர்களை அழிக்க ஐம்முகச் சிவனுரே அறுமுகவேளாக உதித்தபடியால் 'முகமாயக்காரன்' என்றார் - "முக்கட்பரஞ் சோதி ஆங்கொருநாள் வெந்தகுவர்க் காற்றுத விண்ணோர் முறைக் கிரங்கி, ஐந்து முகத்தோ டதோ முகமுந் தந்து திருமுகங்களாறுகி" — எனவரும் கந்தர் கலி வெண்பாவிற் [75] காண்க.

[18] **வாரணபதிக்கு உதவு நாரணன்:—**

இந்திரனுக்குப் பன்முறை திருமால் உதவி செய்துள்ளார்- உதாரணமாக —

(i) விருத்திராசுரன் இந்திரனது செல்வம் எல்லாவற்றையும் கவர்ந்தபொழுது திருமால்தான் அந்த அசுரனை வெல்லும் உபாயத்தை இந்திரனுக்குத் தெரிவித்தார். ததீசி முநிவருடைய எலும்பைக்கொண்டு அமைத்த குலிசாயுதத்தால் அந்த அசுரனைக் கொல்லும் வழி உரைத்தார்: 'மாயன் ஓதுவான் மற்றவன் படையினுல் மாயான், நாயகன் புரிவரத்தினுல் நற்றவத் ததீசன், தூய என்பினைக் குலிசமாச் செய்து மேற் றூண்டில், தீய தானவன் வாழுநாள் அக்கணம் தீரும்" —திருவாரூர்ப் புராணம் - இந்திர 22.

(ii) நரகாசுரன், முரன் எனபவர்களை இந்திரனுடைய வேண்டுகோளுக்கு இரங்கிச் சங்கரித்து அவனுக்கு உதவினர்:

(iii) 'அசுரர்களால் வரும் இடையூறுக்கு அளவில்லை; என் செய்வேன் என்று இந்திரன் திருமாலை வணங்கி முறையிட அவர் 'தாம் பூஜை செய்திருந்த தியாகராஜ மூர்த்தியை இந்திரனுக்குத் தந்து—'இறைவன், இறைவி, முருகவேள்

16. (ஏடு அவிழ்) இதழ்கள் விரிகின்ற கடப்ப மலரையும். கூதள மலரையும் சிரசில் அணிகின்ற இளையவன், ஞானத்திற் பெரிய சிறப்பு வாய்ந்தவன் [எவன் எனில் – அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

17. தேவர்கள் பொருட்டும், (மகவான்) இந்திரன் பொருட்டும், மலர் நிறைந்த (சரவணப்) பொய்கையில் தோன றியருளின (முக மாயக்காரன்) ஆறுமுக விசேடத்தைக் கொண்ட விசித்திர (அல்லது அழகு) உருவத்தினன் [எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

18. (வாரணபதிக்கு) — ஐராவதத்தின் தலைவனை இந்திரனுக்கு (அசுரர் வேதனை தரும்போதெல்லாம்) உதவி புரியும் (நாரணன்) திருமால் பிரியப்படும் மருமகன், (அயனை) பிரமனைக் (கறுவு) கோபித்த கோபக்காரன் [எவன் எனில் — அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

---

மூவரும் அமைந்த திருவுரு இதனைப் பூசித்து வருவாயாக - இன்னல் ஒன்றும் வாராது — என்று திடமொழி கூறி அனுப்பி உதவினர்.

"அறந்தரும் உமையொடும் அலர் கடம்பொடு
நறுங் குரவணிந்த வேல் நம்பி தன்னொடும்
உறைந்த எம் ஆவியாம் ஒப்பிலாத இச்
சிறந்தமா மூர்த்தியைப் பூசை செய்திடில்
...... தானவர் ஆக்கமும் உங்கள்பா லடைந்து நின்றநோர்
ஏக்கமும் கதிரெதிர் இருளின் நீங்குமால்",

"எனமொழிந்து உமையொடும் இளைய சேயொடும்,
கனக சிங்காதனத் துறைந்த கண்ணுதல்
அனகனை யினிதளித் தாயிரங்கணை, தனை
அரிவிடுத்தனன "–திருவாரூர்ப் புரா-தியாக 68-70.

வாரணபதி — யானையிற் சிறந்த கஜேந்திரன் எனக் கொண்டு — முதலை வாயில் அகப்பட்ட கஜேந்திரனுக்கு உதவிய நாரணன் எனவும்கொள்ளலாம். இந்த வரலாற்றைத் திருப்புகழ் 939, பக்கம் 731 கீழ்க்குறிப்பிற் காண்க.

வாரணபதிக்கு-[இந்திரனுக்கு] (ஐராவதத்துக்கு), உதவு (மருமான்) முருகன் எனவும் கூட்டிப் பொருள் கொள்ளலாம்.

(iv) நாரணன் உவக்கும் மருமான் முருகன் :—

'சகஸ்ர நாம கோபால சுதற்குநேச மாருத மருகோனே'

'ஆமை ஆனவர்க் கினியானே நமோநம'

'அரிதன் மனத்துக் காகிய மருகோனே'

—திருப்புகழ் 497, 996–1, 1138.

(v) அயனை முருகவேள் கோபித்தது :—திருப்புகழ் 212, பக்கம் 42 ; பாடல் 571, பக்கம் 308 கீழ்க்குறிப்பு.

[19]வாழியென நித்தமற வாதுபர விற்சரண
வாரிசம்அ ளிக்கும்உப காரக் காரனும்
[20]மாடமதில் சுற்றியத்ரி கூடகிரி யிற்கதிர்செய்
மாநகரி யிற்கடவுள் ஆயக் காரனும்
[21]வாளெயிற துற்றபகு வாய்தொறுநெ ருப்புமிழும்
வாசுகியெ டுத்துதறும் வாசிக் காரனும்
[22]வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப தாகைக் காரனும்
[23]மாசிலுயி ருக்குயிரு மாசிலுணர் வுக்குணர்வும்
வானிலணு வுக்கணுவு பாயக் காரனும்

---

[19] இந்த அடியில் உள்ள அருமை உபதேசத்தை நாம் கடைப்பிடித்து ஒழுகி உய்யவேண்டியது.

[20] (i) திரிகூடகிரி — என்பது குற்றாலம்: திருநெல்வேலி ஜில்லாவில் உள்ளது. நீர்வீழ்ச்சிச் சிறப்புடையது. ‘ குற்றாலத் திருநகரும், குளிர் மலர்ச்செண்பகக் காவும் ...... உடைய மலை திரிகூடத் திருமலையே ’—குற்றாலப் புராணம். (திரிகூடம் 25).

(ii) கதிர்செய் மாநகரி — கதிர்காமம். சூரனொடு பொருதற்கு முருகவேள் தங்கின பாசறைத்தலமே கதிர்காமம் (ஏமகூடம்) எனபர் பெரியோர். சூரனுக்கு அஞ்சின ‘ மாலயன் மகவானாதி உள்ள பண்ணவர்கள் ’ (தேவர்கள்) சூழ ஆறுமாமுகப் பிரான் அந்தப் பாசறையில் தங்கியிருந்தாராதலின் ‘ கடவுள் ஆயக்காரன் ’ — என்றார்.

[21] வாசுகியை எடுத்து மயில் உதறுதல் — “ சங்காரகோர நயனத் தறுகண் வாசுகி பணமுடி எடுத்து உதறும் ஒரு சண்டப்ரசண்ட மயிலாம் ’ [மயில் விருத்தம் 8.]

[22] சேவலின் ஆற்றல் – “ சேவல் சிறகடிக்கொள்ள – இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே ” எனவரும் கந்தர் அலங்காரத்திற் (12) காண்க.

[23] இறைவன் உயிர்க்குயிர்—“ ஊனாய் உயிர்க்குயிரானாய் தாலோ தாலேலோ ”-முத்துக்குமார-பிள்ளைத்தமிழ்- தால் 10
அவர் உணர்வுக்கு உணர்வு — “ உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே ”—திருவிசைப்பா 1–1.

அவர் அணுவுக்கு அணுவு :—
“ அணுவோர் அண்டமாம் சிறுமைகொண்டு ” — திருவிசைப்பா 13·6. ‘ அணுக்களெல்லாம் அண்டங்களாகச் ... சிறிதாயினும் ’—திருவிளையாடல் - பாயிரம் 6.

19. 'வாழி' என்று நாள்தோறும் மறவாமல் துதித்தால் (சரணவாரிஜம்) தனது திருவடித் தாமரையை (அளிக்கும்) தந்து அருளும் (உபகாரக் காரன்) உபகாரி [எவன் எனில் – அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

20. [மாடமதில்] மாடங்களும் — உபரிகையுள்ள வீடு களும் மதில்களும் சூழ்ந்து நிறைந்துள்ள, (திரிகூட கிரியில்) குற்றால நன்னகரிலும், [கதிர்செய் மாநகரியில்] கதிர்காம நகரிலும் [கடவுள் ஆயக்காரன்] தேவர் கூட்டத்தை உடைய வன் — கூட்டத்தினில் விளங்குபவன் — [எவன் எனில் அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

21. வாள் – வாள் போலக் கூரிய- அல்லது ஒளி பொருந் திய [எயிறு அது உற்ற] பற்கள் உள்ள (பகுவாய் தொறும்( - அகன்ற வாய்தோறும் வாய் ஒவ்வொன்றிலும், நெருப்பைக் கக்கும் வாசுகி என்ற பெரும் பாம்பை எடுத்து உதறுகின்ற [வாசி] குதிரையாம் மயில் வாகனன் [எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

22. [வாள கிரியை] சக்ரவாளகிரியைத் தன்னுடைய காலால் [இடிய] பொடியாகும்படி [பொருது] சண்டை செய்து, [வாகை] வெற்றி (புனை) கொள்ளும் [குக்குட பதாகைக்காரன்] கோழிக் கொடி கொண்டவன் [எவன் எனில் - அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

23. [மாசு இல் உயிருக்கு உயிரும்] குற்றம் இல்லாத உயிருக்கு உயிராயும், (ஆசு அல்லது மாசு இல் உணர்வுக்கு) குற்றம் இல்லாத [உணர்வுக்கு உணர்வு] அறிவுக்கு அறிவும், வானில் அணுவுக்கு அணுவும் (விண்ணில் விளங்கும்) அணுப் பொருளுக்கும் அணுப்பொருள் – நுண்மைப் பொருளுக்கும் நுண்மைப் பொருளாயும் விளங்கும் [உபாயக்காரன்] தந்திரக் காரன் — சூழ்ச்சி வாய்ந்தவன் [எவன் எனில் – அவன் தான் வள்ளி வேளைக்காரன்].

[24]வாதனைத விர்த்தகுரு நாதனும்வெ ளிப்படம
காடவியில் நிற்பதொர்ச காயக் காரனும்;
[25]மீனவனு மிக்கபுல வோருமுறை பொற்பலகை
மீதமர்த மிழ்த்ரயவி நோதக் காரனும்
[26]வேரிமது மத்தமதி தாதகிக டுக்கைபுனை
வேணியர்து திப்பதொரு கேள்விக் காரனும்
[27]வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக் காரனும்

---

[24] **வாதனை தவிர்த்த குருநாதன்** — இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிப்பது: திருப்புகழில் 'அடியென் இடைஞ்சற் பொடிபட முனபுற்று அருளயில் தொடுத்து', 'அடியேன் இருவினை தூள்படவே அயில் ஏவிய' [585, 725] என வருவன காண்க. வாதனை=வாசனை. 'பண்டுடைய வாதனை காண்' —பிரமோத்தர-20-70.

**மகாடவியில் நிற்பதொர் சகாயக்காரன்** - இதுவும் அருணகிரியார் வரலாற்றைக் குறிப்பது. வேல் வகுப்பின் குறிப்புரை 11 பார்க்க. கதிர்காமம் போம் வழியில் முருகவேள் அருணகிரி யார்க்குச் சகாயம் (உதவி) புரிந்தனர் — என அருட்கவி சேதுராமனுர் அருள்வாக்கிற் கீழ்வருமாறு வந்துளது:—

"கருணைக்குப் பாத்திரம் ஒத்தன்
றருணைக்கட் டோற்றி யவர்க்குங்
கன செச்சைச் சூட்டுடை *தட்சன் கொடியோடே
கதிரைக்குக் காட்டு வழிச்சென்
றெதிர்பட்டுக் கேட்டுதவிச்செங்
கதிர்விட்டுக் காட்டும்அயிற் செங்கையில்மேவித்
தருணத்திற் சீட்டு மளிக்கும்
சிவபத்திப் பாட்டும் உதிக்கும்
சமயத்திற் கேட்டு நயக்கும் தயையாளா!
—(6-6-1954-ல் பாடியது).

* தட்சன் = சேவல்.

[25] முருகவேள் உக்ரபாண்டியனக வந்தது:—

'வழுதியர் பெருமான் தன்பாற் கந்தனே வந்தான்' என்பர்—திருவிளை-உக்ரபாண்டியன் 19, 6 பார்க்க.

முருகவேள் புலவோர் உறையும் சங்கப்பலகையில் உருத்திர சன்மராய் வீற்றிருந்தார் — வரலாறு திருப்புகழ் 350, பக்கம் 378 கீழ்க்குறிப்பு.

24. (வாதனை) என்னுடைய – துன்ப நிலையை (அல்லது– வாசனுமலத்தை) ஒழித்த குருமூர்த்தி, (வெளிப்பட) ப்ரத்யக்ஷமாக மகா அடவியினில்) பெருங் காட்டினிடையே (நிற்பதொர்) நின்ற ஒப்பற்ற (சகாயக்காரன்) உதவி புரிந்தவன் – [எவன் எனில் - அவன்தான் வள்ளி வேளைக்காரன்].

25. (மீனவனும்) (மீன் கொடியைக் கொண்ட) (உக்ர) பாண்டியன், (மிக்க)சிறப்புமிக்க (புலவோர்) சங்கப்புலவர்கள் (உறை) வீற்றிருக்கும் (பொற்பலகை) அழகிய (சங்கப்) பலகையின் (மீது) மேல் (அமர்) வீற்றிருந்த (தமிழ்த்ரயம்) முத்தமிழ் வல்ல (விநோதக்காரன்) விசித்திரம் வாய்ந்தவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்);

26. வேரி (தேன் அல்லது வாசனை) மது, தேன் அல்லது மகரந்தப்பொடி கொண்ட ஊமத்தமலர், (மதி) நிலவு (தாதகி) ஆத்தி, (கடுக்கை) கொன்றை இவைதமை அணிந்துள்ள (வேணியர்) சடைப் பெருமான் துதிசெய்யும் தகைமை வாய்ந்த ஒப்பற்ற கலைஞானம் உள்ளவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்)

27. (வேலை) கடல் (துகள்பட்டு) தூளி-புழுதிபட்டு, மலை-எழுகிரியுடன் சூரனுடைய உடலிலும்பட்டு உருவிப் போம்படி வேலாயுதத்தைப் பொருந்திய வகையிற் செலுத்தின ஒப்பற்ற தொழில் திறமை வாய்ந்தவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்).

---

"மூங்கைதன்னைச் சிறப்பொடும் அழைத்துச் சங்கச் சுத்தமார் தவிசின் ஏற்றித் தூபதீபாதி நல்கி" — திரு ஆலவாய் திருவிளை 19-8 (பாடபேதம்).

'சங்கத்தவர்க்குள் தலையாம் தமிழ்ப்புலவன்' — கந்த புராணம் 4-12-456.

26 சிவபிரான் துதித்து வணங்குவது —

திருப்புகழ் 982, பக்கம் 840 கீழ்க்குறிப்பு.

27 கடல் – மலை – சூரன் மூவரும் வேலாற்பட்டது.

'வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே'

'வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்'

—கந்தரலங்காரம் 62, 40.

28மீனுலவு கிர்த்திகைகு மாரனுநி னைக்குமவர்
வீடுபெற வைத்தருள்உ தாரக் காரனும்
29மேனையரி வைக்குரிய பேரனும தித்ததிறல்
வீரனும்அ ரக்கர்குல சூறைக் காரனும்
30வேதியர்வெ றுக்கையும்அ நாதிபர வஸ்துவும்வி
சாகனும்வி கற்பவெகு ரூபக் காரனும்
31வேடுவர்பு னத்திலுரு மாறிமுனி சொற்படிவி
யாகுலம னத்திநெடு போம்விற் காரனும்

---

28 (i) முருகன் கிர்த்திகை குமாரன் — கார்த்திகை மாதர் முருகனைப் போற்றி வளர்த்த காரணத்தால் அவர்கள் மைந்தனாயினன் முருகன். "கந்தன்தனை நீர்போற்றிய கடனால் இவன் உங்கள் மைந்தன் எனும் பெயராகுக"; "தாயென ஆரல் போந்து தனங்கொள்பால் அருத்தலாலே ஏயதோர், கார்த்திகேயன் என்றொரு தொல்பேர் பெற்றான்" — கந்த புராணம் 1-13-30 ; 1-14-17.

(ii) முருகன் வீடு அளிப்பது:—'முத்தி விதரண உதாரக் கார'—திருப்புகழ் 1026. 'முத்தியை உதவு நோன்தாள் மூவிரு முகத்தன்'—கந்தபுராணம் 4-13-373.

'முத்தித் தடங்கரை விடுப்பவன் உனைத் தலையளிப்பான்'—முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழ் – அம்புலி 9.

29 (i) மேனை — இமயராஜன் மனைவி: பார்வதியின் தாய். 'இமயத் தண்ணல் ... மங்கல மேனை என்னும் மனைவிகைக் கொடுத்தான்'—கந்தபுராணம் 1-2-24.

(ii) முருகன் திறல் வீரன் :—

'மணிமயில் உயரிய மாறுவென்றிப் பிணிமுக வூர்தி ஒண்செய்யோன்' –'முருகொத்தீயே முன்னியது முடித்தலின்'— புறநானூறு 56.

30 'வேதியர் வெறுக்கை'—'அந்தணர் வெறுக்கை'— திருமுருகாற்றுப்படை 263.

முருகன் – அனாதி – பரவஸ்து :

"ஆரண முடிவுந் தேறா அநாதியாய் உயிர்கட் கெல்லாம் காரண னாய மேலோன்" — கந்தபுராணம் 4-1-1.

"உன்னரும் பரமாய் நின்ற ஒருவனே முகங்கள் ஆறும்
பன்னிரு புயமுங்கொண்டு பாலகன் போன்று கந்தன்
என்னுமோர் பெயரும் எய்தி யாவருங் காணவந்தான்"
—கந்தபுராணம் 3-11-23.

28. மீன் உலவு கிர்த்திகை – நக்ஷத்திரமாக உலவுகின்ற கார்த்திகை மாதர்களின் குமாரன், (தன்னைத்) தியானிப்பவர்கள் மோக்ஷ வீட்டைப் பெறும்படி வைக்கும் அருள்கொண்ட தயாமூர்த்தி-(எவன் எனில்அவன்தான் வள்ளி வேளைக்காரன்)

29. மேனை என்னும் பெயர் கொண்ட அரிவைக்கு (பர்வதராஜன் மனைவியாம்) மாதுக்குப் பேரன், (யாவரும்) மதித்துப் போற்றும்படியான (திறல்) வலிமை வாய்ந்த வீரன், அசுரர் குலத்தை அழிப்பதில் சூறைக்காற்று – (சுழற் காற்று) போன்றவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்)

30. வேதியர் — மறையவர்க்கு (வெறுக்கை) செல்வ நிதியாய் விளங்குபவன், (அநாதி) ஆதி – தொடக்கமில்லாத முதல்வன், பரவஸ்து – மேலான பொருள் – பரம்பொருள், விசாக நக்ஷத்திரத்துக்கு உரியவன், விகற்பம் - விகற்பமான வேறுபாடு உள்ளனவான பலவித–வேட்டுவக் கோலக்குமரன், வேங்கை மர உருவத்தினன், சைவநெறி நற்றவ விருத்த (கிழ)வேஷத்தினன் ஆகிய பல வேஷ உருவங்களைப்பூண்டவன் (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்)

31. வேடர்களுடைய தினைப்புனத்தில் தன் சுய உருவத்தை மாற்றிக்கொண்டு (நாரத) முநிவர் சொன்ன பேச்சைக் கேட்டு (வியாகுல மனத்தினொடு) கவலைப்பட்ட கலக்க மனத்துடன்) (போம்) சென்ற (விற்காரன்) வில் ஏந்திய வேட உருவத்தினன் — (எவன் எனில் அவன்தான் வள்ளி வேளைக்காரன்)

---

30 வெகு ரூபக்காரன் :

"இன்னே பல உருவங்கொடு யாண்டுங் குமரேசன்
நன்னேயமொ டாடுற் றுழி"
—கந்தபுராணம் 1–14-13.

பொதுவாக – வெகு ரூபங் கொண்டவன் — எனலுமாம்.

[32]மேவியபு னத்திதணில் ஒவியமெ னத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக் காரனே.

---

[31 - 32] **புனத்தில் உருமாறி முனி சொற்படி வியாகுல மனத்துடன் சென்றது :—**

'நாரதனன்று சகாய மொழிந்திட நாயகி பைம்புனம் அதுதேடி, நாணமழிந்து உருமாறிய வஞ்சக'; 'செயல் தடுமாறி மேனி தளர்ந்து உருகாப் பரிதாபமுடன் புனமேல் திருவேளை புகுந்த பராக்ரமம் அது பாடி—'—திருப்புகழ் 1261, 1003. 'வேளை புகுந்த பராக்ரமம் அது பாடி'—எனத் தாம் கூறினவாறே இந்த திருவேளைக்காரன் வகுப்பைப் பாடும் பேற்றினை அருணகிரியார் அடைந்தனர்.

வள்ளியை—ஒவியம் எனத் திகழும் குறத்தி என்றார்; திகழும் என்றதனுல் 'உயிர்ஓவியம்' என்றபடி; மீனுட்சியை 'புவனங் கடந்துநின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே'—'அத்தன்மனத் தெழு தியஉயி ரோவியம் ஆடுக அம்மனையே' என்றதுபோல—மீனுட்சி பிள்ளைத்தமிழ் வருகை 9; அம்மனை 7.

வேளைக்காரன் – பொருள் — திருப்புகழ் 624, பக்கம் 451; பாடல் 166 - பக்கம் 387 கீழ்க்குறிப்பு.

---

### திருவேளைக்காரன் வகுப்பு – சுருக்க உரை

32. வள்ளியுடன் பொழுதுபோக்கும் முருகன்–யாரெனில்–கூறுகேன் — அவன் (1) பத்தி வழியே முத்தியாம் என ஒழுகும் பக்தர்களின்மீது அன்பு கொள்பவன்; (2) தமையனும் கணபதியுடன் பழத்துக்காகப் போட்டியிட்டவன்; (3) வேத ஆகமங்களுக்குக் காரண பூதனுய் நின்று உலகை ஒருநொடியிற் சுற்றி வந்தவன் (4) ஆணவத்தை அடக்கி அநுபூதியை அளித் தவன்; (5) தேவர் உலகைப் பிழைக்க வைத்து, அவர்கள் ஊரைக் காப்பாற்றினவன்; (6) திருவண்ணுமலைக் கோபுர வாயிலில் அடையாள மூர்த்தியாய் விளங்குபவன்; (7) கங்கை யின் புத்திரன்–அடியார்கள் சூடும் கவிமாலையைப் புனைந்து கொள்பவன்; (8) அறுமுகன், பன்னிருபுயன், கணக்கிலாத திருநாமங்களை உடையவன்; (9) யான்–என்னுடையது என்னும் அகங்கார மமகாரங்களைக் கொண்டவருக்கு அகப்படாத வன்; (10) பிறவிக் கடலைத் தாண்ட உதவும் கருணை ஒடக்

*32.* மேவிய மலையிடத்தே இருந்த (புனத்து) தினைப் புனத்து (இதணில்) - பரண்மீதே, (ஓவியம் என) சித்திரப் பதுமைபோலத், (திகழும்) உயிருடன் விளங்கின — உயிர் ஓவியமாம், (மேதகு) பெருமை மிக்க (குறத்தி) குறப்பெண் வள்ளியுடன் (திருவேளைக்காரன்) — அழகாக லீலைகள் புரிந்து பொழுது போக்குபவன்.

---

காரன் ; (11) திரு ஏரகம், திருவிடைக்கழி, திரிசிராப்பள்ளி, பழநி, திருத்தணி என்னும் தலங்களில் வாசம் செய்பவன் ; (12) எனது உடற் சிறையைத் தொலைத்த நீதிமான் ; (13) பார்வதியைத் தாய் என அழைக்கும் சேய் ; (14) மனேலயத்தைத் தரும் ஒளி, யாகத்தைப் புரக்கும் காவல்தெய்வம் ; (15) தேவசேனையின் ஆசைநாயகன்; (16) கடப்பமலர், கூதளமலர் அணிபவன்; அறிவிற்பெரியோன்; (17) தேவர்கள் பொருட்டுச் சரவணத்தில் அறுமுகனய் உதித்தவன் ; (18) திருமாலின் மருகன் - பிரமனைக் கோபித்தவன் ; (19) வாழி என்று கூறி வணங்குபவர்க்குத் தனது திருவடியைத் தருபவன் ; (20) குற்ருலம், கதிர்காமம்-என்னும்தலங்களில் தேவர்கூட்டத்தில் விளங்குபவன்; (21) வாசுகி என்னும் பெரும் பாம்பை எடுத்து உதறும் மயிலை உடையவன் ; (22) சக்ரவாளகிரியை காலால் இடித்துப் பொடிபடுத்தவல்ல கோழியைக் கொடியிற் கொண்டவன்; (23) உயிர்க்கு உயிராய், உணர்வுக்குஉணர்வாய், அணுவுக்கு அணுவாய் விளங்குபவன்; (24) என் வாசனமலத்தைத் தொலைத்த குருமூர்த்தி, பெருங் காட்டில் வெளிப்பட்டு எனக்குத் துணை நின்ற சகாயமூர்த்தி ; (25) தமிழ்ச்சங்கப்பலகையில் வீற்றிருந்த விநோதன் ; (26) சிவனும் துதிக்கும்படியான ஞானமூர்த்தி ; (27) கடல் அலற, சூரன் உடல் உருவ, வேலை ஏவினவன் ; (28) கிர்த்திகை மைந்தன், தியானிப்பவர்களுக்கு வீட்டின்பம் தருபவன் ; (29) பார்வதியின் தாய் மேனையின் பேரன், திறல்வீரன், அரக்கர் குலத்தைச் சூறையாடினவன் ; (30) வேதியர்களின் செல்வம், பரமாத்மா, விசாகன், பல உருவம் கொள்பவன் ; (31) நாரதரின் பேச்சைக் கேட்டு, வேடர்களின் தினைப்புனத்தில் வேற்றுருவுடன் கவலை மனத்தனய் வில்லேந்திச் சென்றவன்.

## 5. பெருத்த வசன வகுப்பு

[இது முருகபிரான் தமக்குபதேசித்த மௌனோபதேசத்தின் சிறப்பைக் கூறுகின்றது.]

தனத்த தனதன தனத்த தனதன

[1]அருக்கன் உலவிய சகத்ர யமுமிசை
யதிற்கொள் சுவையென அனைத்து நிறைவதும்
[2]அவஸ்தை பலவையு மடக்கி யகிலமும்
அவிழ்ச்சி பெறஇனி திருக்கு மவுனமும்
[3]அசட்டு வெறுவழி வழக்கர் அறுவரும்
அரற்று வனபொருள் விகற்ப மொழிவதும்
[4]அழுக்கு மலவிருள் முழுக்கின் உழல்வதை
யடக்கி யவநெறி கடக்க விடுவதும்;
[5]எருக்கும் இதழியு முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத்தி கழுவதும்
[6]இரட்டை வினைகொடு திரட்டு மலவுடல்
இணக்கம் அறவொரு கணக்கை யருள்வதும்

---

[1] "சுவை அனைத்தும் நிறைவது" — முருகன் உபதேசித்த பெருத்த வசனம் — அதனால்தான் "மனோலயந் தானே தரும் எனைத் தன் வசத்தே ஆக்கும், அறுமுகவா! சொல்லொணு திந்த ஆனந்தமே" என்றார் கந்தரலங்காரத்தில் [73].

[2] "அகிலமும் அவிழ்ச்சிபெற இனிதிருக்கும் மவுனம்"
"மௌனத்தை யுற்று ... எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு என்னை மறந்திருந்தேன்" என்றும், "எல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லையுட் செல்ல எனைவிட்டவா" என்றும் இதை விளக்கினார் கந்தர் அலங்காரத்தில் [19, 10].

[3] அறுவகைச் சமயத்தினர் அரற்றுவது ஒழிய. "பரசமய கலை யாரவாரமற" — சீர்பாத வகுப்பு. "சிலுகிடு சமயப் பங்க வாதிகள் கதறிய வெகுசொற் பங்கமாகிய பொங்களாவும் கலைகளும் ஒழிய" — திருப்புகழ் 960. "சமயதர்க்க விரோத வாதிகள் தகர எற்றுவ — ஞானவேழ வகுப்பு.

[4] மல இருள் தொலைந்தது: "கடையேன் இருவினைநோய் மலம் மாண்டிட தீண்டிய" — திருப்புகழ் 568.

அவநெறி கடத்தல் — "அறிவினுக்குள் என்னை நெறியில் வைக்க ...... வல்ல பெருமாளே" — திருப்புகழ் 1252.

## பொழிப்புரை

**1.** சூரியன் உலவுகின்ற (சகத்ரயமும்) மூவுலகங்களும், (இசை) சொல்லப்படுகின்ற (அதில்) அவ்வுலகங்களில் (கொள்) உள்ளதான (சுவை என) இன்பங்களும் இதுவே என்னும்படி (அனைத்தும்) எல்லாப் பொருள்களும் - (நிறைவதும்) நிறைந்துள்ளதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

2. (அவஸ்தை பலவையும்) வேதனை பலவற்றையும் (அடக்கி) அடக்கி ஒழித்து, (அகிலமும்) எல்லாம் (அவிழ்ச்சி பெற) ('உரை அவிழ, உணர்வழிய, உளமவிழ, உயிரவிழ') என்று சீர்பாத வகுப்பிற் கூறியபடி சகலமும் அற்று நீங்க, (இனிதிருக்கும்) இன்பநிலையில் இருக்கும் (மவுனமும்) 'சும்மா இருத்தல்' என்னும் நிலைப்பேறும் [அறுமுகன் அருளிய பெருத்த வசனமே]

3. [அசட்டு வெறுவழி வழக்கர்] அறிவிலாததும், சத்து அற்றதுமான வழியில் வழக்கிடுவோரான புறச் சமயவாதிகள் அறுவரும் (அரற்றுவன) கூச்சலிடுவதான (பொருள்விகற்பம்) பொருள் மாறுபாடுகளை, (மொழிவதும்) எடுத்து விளக்குவதும் (அல்லது ஒழிவதும் - ஒழிப்பதும்) – (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

4. அழுக்கு மயமான ஆணவம், கன்மம், மாயை எனப் படும் மும்மல இருட்டிலே முழுகி அலைவதை (அடக்கி) ஒழித்து, (அவநெறி கடக்க) பாவ வழியைத் தாண்ட — உதவுவதும் அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

5. எருக்க மலரையும், (இதழி) கொன்றை மலரையும் முடியிற் சூடும் (இறை) பெருமானாகிய சிவபிரான் — (குரு) எமக்குக் குருமூர்த்தி (எமக்கும் இறையவன்) எமக்கும் தலைவன் (என) இந்த அறுமுக ஒருத்தனாகிய இவனே – என்று மதிக்கவைக்கத்தக்க உபதேச மொழியாய் விளங்குவதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

6. நல்வினை–தீவினை என்னும் இரண்டு வகை வினைகளால் திரட்டப்பட்ட — யாக்கப்பட்ட — மலங்களுக்கு இடமாம் இவ்வுடலின் (இணக்கம்) சம்பந்தம் (அற) ஒழியும் (ஒரு கணக்கை) ஒரு சூழ்ச்சி நிலையை – பிறப்பு அறும் வழியை – அருளுவதும் [அறுமுகன் அருளிய பெருத்த வசனமே]

---

[5] **மௌன மறையைச் சிவனாரும் படிக்க உபதேசித்தார் முருகவேள்:** "சிவனார் படிக்க மவுன மறை ஓதுவித்த குருநாதா"— திருப்புகழ் 523. [6] **இரட்டை வினை ... மலவுடல் இணக்கம் அறுதல்.** 'இரட்டை வினை யாயதொருடற் சிறை'-வேளைக்கார-வகுப்பு. 'சாதமாம் எழுகடல் கடப்பன'—ஞான வேழ வகுப்பு.

[7]இருக்கு முதலிய சமஸ்த கலைகளும்
இதற்கி தெதிரென இணைக்க அரியதும்
[8]இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொர் இயற்கை யருள்வதும் ;
[9]நெருக்கு வனவுப நிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை யுடையதும்
[10]நெருப்பு நிலம்வெளி மருத்து வனமென
நிறைத்த நெறிமுறை கரக்கும் உருவமும்
[11]நினைப்பு நினைவது நினைப்ப வனும்அறு
நிலத்தில் நிலைபெற நிறுத்த வுரியதும்
[12]நிலைத்த அடியவர் மலைத்தல் அதுகெட
நிவிர்த்தி யுறஅநு பவிக்கு நிதியமும்

---

[7] **எந்தக் கலையும் முருகன் உபதேசித்த வசனத்துக்கு இணையாகாது :** " திகழ்வேலவன் அன்று ஓவ்வாததென உணர்வித்தது "— என்றார் கந்தர் அநுபூதியில் [30].

[8] **யமபடரைக் கடக்க விடுவது :** ' கூகா என என்கிளை கூடியழப் போகா வகை மெய்ப்பொருள் பேசியவா '—கந்தர் அநு. 11.
" கந்தச் சுவாமி எனைத் தேற்றிய பின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை என் செய்யலாம் "
—கந்தர் அலங்காரம் 69.

[9] " ஆரணம் உரைக்கும் மோனக இடத்தில் ஆரும் உய நிற்கும் முருகோன் " — திருப்புகழ் 1027. " வேத நன் முடியினும் மருவிய குருநாதன் "—திருப்புகழ் 289. ஆதலின் அவர் அருளிய பெருத்த வசனம் வேத முடிவில் விளங்குவ தாகும்.

[10] ' வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று ' ' பஞ்சபூதமு மற்று . . . இருக்கும் அக் காட்சியதே ' — கந்தர் அலங்காரம் 9, 61).

[11] **நினைப்பு ... அறும் நிலம் :**
" நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம் ... விமலன் இருக்கும் "—திருமந்திரம் 2970.
' நினைப்பும் மறப்பும் அறார் '—கந்தர் அலங்காரம் 55.

[12] **அடியவரின் மலைத்தலை ஒழித்தல் :**
' பிமரம் கெட மெய்ப்பொருள் பேசியவா '–கந். அநு-8.

7. ரிக் வேதம் முதலிய சகல கலைகளும் (இதற்கு இது) அறுமுகன் அருளிய இந்தப் பெருவசனத்துக்கு (எதிரென) ஒப்பாகும் என்று (இணைக்க அரியதும்) இணை சொல்ல முடியாததும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

8. நான் இறக்கும்பொழுது (எனது எதிர்) என்முன்பே (நடக்கும்) வந்து நிற்கும் யமதூதர்களைக் (கடக்கவிடுவதோர்) வென்று விலக்க வல்லதான ஒரு (இயற்கை) நிலைமையை (மனோதிட வலிமையை) அருள்வதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

9. (நெருக்குவன) நிரம்பப் பொருள்களை எடுத்துச் சொல்வதான (உபநிஷத்துக்களின்) — வேதத்தின் ஞான காண்டங்களில் (இறுதிகள்) முடிவான பொருள்கள் (நிரப்பு கடையினில்) முடிவு கட்டும் முடிவில், (இருப்பை உடையதும்) இருப்பிடத்தைக் கொண்டு விளங்குவதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

10. தீ, மண், (வெளி) வான், (மருத்து) காற்று, (வனம்) நீர் (என) என்று - பஞ்சபூதங்கள் என்று – (நிறைத்த) நிறைவு பெறுவதான (நெறிமுறை) ஒரு தத்துவ முறையில் (கரக்கும்) அகப்படாது ஒளித்துக்கொள்ள வல்ல ஓர் உருவப்பொருளும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

11. (நினைப்பு) நினைவும், (நினைவதும்) நினைக்கப்படும் பொருளும், நினைப்பவனும் - என்னும் மூவகையும் (அறு) அற்ற (நிலத்தில்) இடத்தில் நிலைபெற்று நிற்கும்படி (நிறுத்த உரியதும்) நிறுத்தவல்ல ஆற்றலை உடையதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

12. (நிலைத்த அடியவர்) பத்தி வழியில் மனம் நிலைத்து நிற்கும் அடியவர்கள் (மலைத்தல் அதுகெட) பிரபஞ்ச விஷயங்களில் பிரமித்தல் என்பது கெட்டொழியவும், (நிவிர்த்தி உற) அவைகளின் சிக்கினின்றும் விடுதலைபெறவும், (அனுபவிக்கும்) உதவுகின்ற அனுபவ நிலையைத் தரும் (நிதியமும்) செல்வப் பொருளும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

[13]உருக்கு திருவருள் திளைத்து மகிழ்தர
உளத்தொ டுரைசெயல் ஒளித்து விடுவதும்
[14]ஒளிக்கும் ஒளியென வெளிக்கும் வெளியென
உயிர்க்கும் உயிரென நிகழ்ச்சி தருவதும்
[15]உரத்த தனிமயில் உகைத்து நிசிசரர்
ஒளிக்க அமர்பொரு சமர்த்தன் அணிதழை
[16]உடுத்த குறமகள் மணக்கும் அறுமுகன்
ஒருத்தன் அருளிய *பெருத்த வசனமே.

---

[13] **உளம், உரை, செயல்** — ஒளிப்பது; 'வேலவன் போதித்தவா! 'உரையற் றுணர்வற் றுடலற்று ... இருக்கும் அக்காட்சியதே' — கந்தரலங்காரம் 61. ''மொழியிற் றுஞ்சுருதன காரணமும் ஒழியத் தந்த ஞானம்—திருப்புகழ் 960.

[14] **ஒளிக்கும் ஒளி** — ''தூயநற் சோதியுட் சோதீ''
—திருவிசைப்பா 1-2.

**வெளிக்கும் வெளி** — ''வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத் தெளிய விளம்பியவா' — கந்தர் அலங்காரம் 8. 'நிட்கள வெளியில் நிற்பன'—ஞானவேழ வகுப்பு.

**உயிர்க்கு உயிர்** — 'உயிர்க் குயிராகி ஒழிவற்று அழிவற்று ... உயிர்ப்புறும் ஈசன்''—திருமந்திரம் 2504.

[15] **உரத்த தனி மயில்** — 'அடல் மயில்' 'பல மா மயில், தனிமயில்'—திருப்புகழ் 827, 630, 938.

[15-16] **தழை உடுத்த குறமகள்** — 'தழை உடுத்த குறத்தி'—திருப்புகழ் 296; 389—பக்சம் 236, 482 கீழ்க்குறிப்புக்கள்.

**பெருத்த வசனம்** — 'அருணை நகர்மிசை கருணையொடருளிய பரம ஒரு வசனமும் இரு சரணமும்'—திருப்புகழ் 513, 515.

*பெருத்த வசனம்: 'பேற்றைத்' (1), 'ஒளியில்' (8), 'தேனென்று' (9), 'சொல்லுகைக்கில்லை' (10), 'தந்தைக்கு முன்னம்' (69) எனவரும் கந்தரலங்காரப் பாடல்களும், 'அமரும்பதி' (8), 'கூகாவென' (11), 'செம்மான்மகளை' (12), 'செவ்வான்' (30) எனவருங் கந்தரநுபூதிச் செய்யுள்களும் கண்டு கவனிக்கற்பாலன.

*13.* உள்ளத்தை உருக்கும் திருவருளில் (திளைத்து) அனுபவித்து (மகிழ்தர) களிப்பு நிலையில் இருக்க (உளத்தொடு உரை செயல்) மனம், வாக்கு, (செயல்) காயம்-இம் மூன்றின் தொழிலையும் (ஒளித்து விடுவதும்) மறைந்து போம்படி செய்வதும் (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

*14.* (ஒளிக்கும் ஒளியென) ஜோதிக்கும் ஜோதி (ஜோதிகளுக்குள்ளும் தலைமையான ஜோதி) எனவும், (வெளிக்கும் வெளியென) வெட்ட வெளிகளுக்குள்ளும் வெட்ட வெளி என்னும்படியும். உயிர்க்கும் உயிர் என்னும்படியும் (நிகழ்ச்சி தருவதும்) செயல் புரிந்து விளக்கம் தருவதும், (அறுமுகன் அருளிய பெருத்த வசனமே)

*15.* வலிய, ஒப்பற்ற, மயிலை (உகைத்து) செலுத்தி (நிசிசரர்) அசுரர்கள், (ஒளிக்க) ஒளிந்து ஓட (அமர்பொரு) போர்புரிந்த (சமர்த்தன்) சாமர்த்யம் வாய்ந்தவனும், (அணி) அழகிய (அல்லது அலங்காரமாகத்) தழைகளை

**16.** (உடுத்த) ஆடையாகக்கொண்ட குறமகள் வள்ளியை மணந்த (அல்லது வள்ளி மணந்த) ஆறுமுகப் பெருமானாகிய (ஒருத்தன்) ஒப்பற்ற பிரான் (எனக்கு) அருளிய (பெருத்த) பெருமை வாய்ந்த (வசனமே) உபதேச மொழியே.

---

## பெருத்தவசன வகுப்பின் சுருக்க உரை

*15.* மயில்வாகனனும், அசுரன் அஞ்சி ஒளிக்கப் போர் புரிந்தவனும், குறமகள் மணாளனுமான அறுமுகவள்ளல் எனக்குப் போதித்த பெருமை வாய்ந்த உபதேச மொழியானது — (1) மூவுலகங்களும் அவற்றில் உள்ள இன்பச் சுவைகள் யாவும் இதுவே என்னும்படி நிறை பொருளாய் இருப்பது; (2) சகல வேதனைகளையும் தவிர்க்கும் இன்ப மௌன நிலையைக் கூட்டி வைப்பது (3) சமயவாதிகளின் மாறுபாடுகளைக் கடக்க வல்லது; (4) மலங்களாம் பாவ நெறியினின்றும் விலக்குவது; (5) சிவபிரானும் முருகன் உபதேசச் சிறப்பை உணர்ந்து முருகனே எமக்குக் குருநாதன் என வியக்கும் நிலையில் அவரை ஈடுபடுத்துவது; (6) வினைகளுக்கு இடமான பிறப்பை ஒழிப்பது; (7) எந்தக் கலையும் இதற்கு நிகராகாது எனத் திகழ்வது; (8) யமதூதர்களை வெருட்டவல்லது; (9) வேத முடிவுக்கும் முடிவாய் விளங்குவது; (10) பஞ்சபூதங்களின் ஆற்றலுக்கு அகப்படாது ஒளித்து நிற்பது; (11) நினைப்பு, மறப்பு அற்ற பெருநிலையில் நிறுத்துவது: (12) அடியவர்கள் மயங்கா வண்ணம் அவர்களுக்கு விடுதலையைத் தரும் செல்வப் பொருளாய் உதவுவது; (13) மனம், வாக்கு, காயம் இவைகளின் செயலை அடக்கவல்லது; (14) ஒளிக்கும் ஒளியாய், வெளிக்கும் வெளியாய், உயிர்க்கும் உயிராய் விளங்குவது.

## 6. பூத வேதாள வகுப்பு

[முருகபிரான் சூரனெடு பொருத போர்க்களத்தில் ஆடிய அநேகவித பூத வேதாளங்களின் வருணனை. இத்தகைய வருணனை திருப்புகழ் 570, 585, 906, 921, 1197-ஆம் எண்களுள்ள பாடல்களிலுங் காணலாம்.]

1. தனன தனதன தனன தனதன
   தனன தனதன தனன தனதன
2. தனன தானன தந்தன தந்தன
   தனன தானன தந்தன தந்தன
3. தத்தன தானதன தத்தன தத்தன
   தத்தன தானதன தத்தன தத்தன
4. தந்தத் தந்தனத் தான தாந்தன
   தந்தத் தந்தனத் தான தாந்தன
5. தத்தன தத்தன தத்தன தத்தன
   தத்தன தத்தன தத்தன தத்தன
6. தானதன தந்ததன தானதன தந்ததன
   தானதன தந்ததன தானதன தந்ததன
7. தனதனன தந்தனந் தந்தான தத்ததன
   தனதனன தந்தனந் தந்தான தத்ததன
8. தனதனன தானதன தத்ததன தத்ததன
   தனதனன தானதன தத்ததன தத்ததன
9. தனதன தத்த தனத்தன தத்த தானன
   தனதன தத்த தனத்தன தத்த தானன
10. தானன தான தனதன தந்தன
    தானன தான தனதன தந்தன

[பார்வதி தேவி வர்ணனை]

1 அருண கணபண புயக சூடிகையின்
அகில புவனமும் உதவு மலைமகள்

2 அமலை யாரியை யந்தரி சுந்தரி
யிமய மாமயில் அம்பைத்ரி யம்பகி

3 அச்சுதச கோதரிய னைத்துவே தத்தலைவி
யற்புதபு ராதனிவ ரப்ரகா சப்ரக்ருதி

4 அம்பொற் குண்டலப் பேதை சாம்பவி
விம்பக் கிஞ்சுகப் பூவை பூங்கொடி

5 அக்ஷர லக்ஷஜ பத்தர்க்ர மத்திடு
சக்ரத லத்தித்ரி யக்ஷிச டக்ஷரி

பொழிப்புரை
பார்வதி தேவி வர்ணனை

1. (அருணம்) செந்நிறமுடையனவும் (கணம்) கூட்டமானவையுமான (பணம்) படங்களையுடைய (புயகம்) பாம்பாகிய ஆதிசேடனுடைய (சுடிகையின்) தலைகளின் உச்சியில் தாங்கப்பட்டுள்ள (அகில புவனமும்) சகல உலகங்களையும் (உதவும்) ஈன்றருளிய (மலைமகள்) (பர்வதராஜனது புத்திரி)

2. (அமலை) மலம் அற்றவள், (ஆரியை) மேலானவள் (அந்தரி) பராகாச வடிவி, (சுந்தரி) அழகி, (இமய மா மயில்) இமயமலையில் வளர்ந்த அழகிய மயில்போன்றவள், (அம்பை) அம்பிகை, (த்ரியம்பகி) த்ரி-மூன்று, (அம்பகத்தைக்) கண்ணை உடையவள் — முக்கண்ணி,

3. (அக்சுத சகோதரி) திருமாலின் தங்கை, (அனைத்து வேதத்தலைவி) சகல வேதங்களிலும் முதன்மை ஸ்தானத்தை உடையவள், (அற்புத புராதனி) அற்புதமான தன்மையளாம் பழையவள், (வரப்ரகாச) வரமளிப்பதில் கீர்த்தி பெற்ற ப்ரக்ருதி — தன்மையள் — சுபாவத்தை உடையவள்,

4. (அம்பொன் குண்டலப் பேதை) அழகிய பொன்னுலாய குண்டலங்களை அணிந்த (பேதை) தேவி; (சாம்பவி) சம்புவின் சக்தி, (விம்பம்) ஒளி வீசுகின்ற (கிஞ்சுகம்) கிளி, (பூவை) நாகணவாய்ப் புள், (பூங்கொடி) அழகிய கொடி — இவை போன்றவள்,

5. (அக்ஷரம்) பஞ்சாக்ஷரம், சடாக்ஷரம், ஆதிய திருமந்திரங்களை (லக்ஷ) லக்ஷக் கணக்கில் (ஜபத்தர்) ஜெபம் செய்கின்ற அடியார்கள் (க்ரமத்திடு) முறைப்படி அமைக்கின்ற (சக்ர) முக்கோணம், பஞ்சகோணம், ஷட்கோணம், நவகோணம், நாற்பத்துமுக்கோணம் ஆதிய (தலத்தி) பீடங்களில் விளங்குபவள், (த்ரியக்ஷி) முக்கண்ணி, (சடக்ஷரி) ஆறெழுத்தில் விளங்கும் சத்தி

---

1 (1) ஆதிசேடன் உலகனைத்தையும் முடிமேல் தாங்குவதையும், ஆதிசேடனுக்குச் செம்முடி மணிகளின் ஒளி வீசுவதையும் — திருப்புகழ் 833, பக்கம் 448 கீழ்க் குறிப்பிற் ௦-பார்க்க. (2) தேவி உலகங்களை உதவுவது—திருப்புகழ் 459, பக்கம் 30 கீழ்க்குறிப்பு.

3 அச்சுத சகோதரி — 'மால் தங்கைச்சி'—திருப்புகழ் 763. தேவி வரம் அருளுதல் — 'கருது அன்பர்க்குச் சித்தியளிக்கும் கௌரி'—திருப்புகழ் 459. 'வேதத் தலைவி'—'வேத சிரோமணியை'—சுழியல் பிள்ளைத்தமிழ் காப்பு 4.

[குறிப்புரை தொடர்ச்சி 350-ஆம் பக்கம் பார்க்க.]

[முருகவேள் வர்ணனை]

[6]ஆயி ; திரு மைந்தன்முகம் ஆயிரம்வி ளங்கியதொர்
ஆறுதர வந்தருளும் ஆறுமுக புண்டரிகன்
[7]அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீர னுக்குதவி
[8]அரசறிய வாமனமு நிக்கொருத மிழ்த்ரயமும்
அபரிமித மாகவிவ ரித்தகட வுட்புலவன்
[9]அநுபவ சித்த பவக்கட லிற்பு காதெனை
வினவியெ டுத்தருள் வைத்த கழற்க்ரு பாகரன்
[10]ஆசிலா சார தபோதன ரின்புறும்
வாசகா தீத மனோலய பஞ்சரன்
[11]அகரு ம்ருகமத களப பரிமள
விகட முகபட கடின புளகித

---

[349-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புத் தொடர்ச்சி.]

[4]கிஞ்சுகப் பூவை—"பனிமலைக் கிஞ்சுகக் குஞ்சு"—சுழியல் பிள்ளைத்தமிழ் காப்பு 9.

'அமுதமொழிக் கிஞ்சுகமே'-மீனாட்சி கலிவெண்பா 67.

[5] [1] தேவி சக்ரதலத்தி : "உற்றநவ கோணத்தில் ரீங்காரந் தன்னி லிருப்பவளே! பாங்கான - முக்கோணத் துள்ளிருக்கு மூர்த்தியே!—மூவிரண்டாம் சட்கோணத் துள்ளிருக்கும் சத்தியே! ... நாற்பத்து முக்கோண நாயகியே! ... பஞ்சகோணத் திருந்த பைங்கிளியே!—மீனாட்சி கலிவெண்பா 11-15.

(2) சடக்ஷரி : "அவளத்தனும் மகனும் தில்லையான்"—திருக்கோவை 112, 'இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்'-திருவாசகம்-பொற்சுண்ணம் 13. எனவருதலால் மகனுக்கு உரிய சடாக்ஷரம் தேவிக்கும் உரிய தாயிற்று. அடி 1 முதல் 6-ல் 'ஆயி' வரை - திவ்யமான தேவி துதி. [6] கங்கை ஆயிரமுகம் : திருப்புகழ் 1110, பக்கம் 242 கீழ்க்குறிப்பு. [7] கற்கிமுகி வரலாறு - திருப்புகழ் 91, பக்கம் 212–214–215 கீழ்க்குறிப்பு.

[8]அரசறிய - பாண்டியன் அறிய எனலுமாம். பாண்டியன் 'வங்கிய சூடாமணி' (சண்பகமாறன்) காலத்தில் அகத்திய ரைக் கொண்டு நக்கீரருக்கு இலக்கணம் உபதேசிக்கப்பட்டது- அகத்தியர் திருத்தணிகையில் முத்தமிழ் உபதேசிக்கப் பெற்றார் - 'வேலிறைவன் இயம்பிய ஞான முற்றுணர்ந்து'- தணிகைப்புராணம்-அகத்தியர் 512.

## முருகவேள் வர்ணனை

6. (ஆயி) அம்மை – ஆகிய பார்வதியின் (திருமைந்தன்) அழகிய குமாரன், (முகம் ஆயிரம் விளங்கியது) ஆயிர முகங் களாய்ப் – பல முகங்களாய்ப் பரந்து வரும் (ஓர்) ஒப்பற்ற (ஆறு) கங்கையாறு — தர — விளக்கத்துடன் தாங்கித் தர (வந்தருளும்) தோன்றி அருளின, (ஆறுமுக புண்டரிகன் — தாமரையன்ன ஆறு திருமுகங்களை உடையவன் ;

7. (அருவரை திறந்து) அரிய மலையை இடித்து வழி கண்டு, (வன்) வலிய, சங்க்ராம–போர்க்கெழுந்த (கற்கிமுகி) குதிரைமுகங்கொண்ட பெண் பூதம் (அபயமிட) அடைக் கலம் என்று கூச்சலிட்டலற (அஞ்சலென்று – அங்கீரனுக்கு – உதவி – அங்கீரனுக்கு அஞ்சலென்று உதவி – அழகிய நக்கீர தேவரை பயப்படவேண்டாம் என்று கூறி உதவிபுரிந்தவன் —

8. (அரசு) ராஜ்யம் – (அரசறிய) நாடு அறிய-உலகறிய-(வாமன முனிக்கு) குள்ள உருவத்து முநிவராகிய – அகத்திய ருக்கு, ஒரு – ஒப்பற்ற, (தமிழ்த் திரயமும்) இயல் – இசை – நாடகம் ஆகிய முத்தமிழையும் (அபரிமிதமாக) கணக்கற்ற அளவில் (மிக நிரம்ப) விவரித்த — விஸ்தாரமாய் விளக்கி உபதேசித்த (கடவுட் புலவன்) தெய்வப்புலவன் —

9. (அநுபவசித்த) அனுபவத்தில் பெறப்பட்ட முடிவாய் (திண்ணமான வகையில்) ஏற்படுகின்ற (பவக் கடலில்) பிறப்பு என்னும் கடலிலே (புகாது என்னை) (யான்) புகுந்து விழாதபடி என்னை (வினவி —)ஆய்ந்து எடுத்து அருள்வைத்த — திருவருள்பாலித்த (கழல்) திருவடிகளை உடைய கிருபாகரமூர்த்தி — கருணைக்கிடமான — கருணை விளங்கும் மூர்த்தி,

10. (ஆசு இல்) குற்றம் இல்லாத, (ஆசாரம்) தூய்மை யான ஒழுக்கங்களை உடைய (தபோதனர்) தவசிகள்-முநிவர் கள் இன்புறும் — இன்புற்று அனுபவிக்கும் (வாசக அதீத) வாக்குக்கு எட்டாது மனோலய - மனம் ஒடுங்கி நின்ற — பஞ்சரன் – நிலையில் - இடத்தில் விளங்குபவன்

11. (அகரு) அகில், (ம்ருகமதம்) கஸ்தூரி, (களபம்) கலவைச் சாந்து (பரிமளம்) இவைகளின் நறுமணம் விளங்கு வதும், (விகடம்) அழகான (முகபடம்) முகபடமாம் – யானை யின் முகத்தில் இடப்படும் அலங்காரத் துணிபோல விளங்கும் கச்சு–ரவிக்கையை அணிந்துள்ளதும், கடின-வலிமை வாய்ந் ததும், (புளகித) புளகாங்கிதம் கொண்டுள்ளதுமான —

[12]அமிர்த பூதரி அண்டர்செ ழுங்கொடி
குமுத வாய்மயில் குஞ்சரி மஞ்சரி
[13]அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி
தக்கஅம ராவதிபு ரக்கும்ஆ னைக்கிறைவன்
[14]ஐம்பத் தொன்றில் எட்டாறில் மூன்றினில்
ஐந்திற் றங்கும்அப் பாலை வான்பொருள்
[15]அப்படி பத்தி பழுத்த மனத்தினர்
அர்ச்சனை மெச்சிய செச்சை மணிப்புயன்
[16]ஆறுநிலை யென்றுமுத லாகிய பரங்கிரியும்
ஆவின னெடுங்குடியும் ஆரண முடிந்திடமும்
[17]அருணையும் இலஞ்சியுஞ் செந்தூர் திருப்பழநி
அடியர்மன பங்கயஞ் செங்கோடி டைக்கழியும்
[18]அநவரத நீலமலர் முத்தெறிசு னைப்புனலில்
அருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்புமெனும்

---

13 ஆனை – தேவசேனை " ஆனைதன் நாயக " — திருப்-235. புரத்தல் — வணங்குதல் (பிங்க).

14 ஐம்பத்தொன்று — திருப்புகழ் 1127, பக்கம் 280 கீழ்க் குறிப்பு. எட்டு – அஷ்டாக்ஷரம்-திருப்புகழ் 453, பக்கம் 8, 9 உரையும் கீழ்க்குறிப்பும். மூ எழுத்து – " சிவாய " என்னும் முத்தி பஞ்சாக்ஷரம்–திருப்புகழ் 207, பக்கம் 28 கீழ்க்குறிப்பு.

ஐந்தெழுத்து – ஆறெழுத்து – திருப்புகழ் 327, பக்கம் 315 கீழ்க்குறிப்பு.

பொருள் – கடவுள் — " பொருளும் ஆன்மாவும் "
— கந்தர் கலிவெண்பா 27.

15 அப்படி - பொருள் - திருப்புகழ் 33, பக்கம் 97 குறிப்பு.

16 (1) ஆறு நிலை- 'அறுபதி நிலை' என்றார் திருப்புகழில்– பாடல் 449, பக்கம் 628 கீழ்க்குறிப்பு.

(2) ஆரணம் முடிந்திடம் – 'வே தநன் முடியினு மருவிய குருநா தா'—திருப்புகழ் 289,

18 திருத்தணியில் நீலமலர்ச் சுனை :
—திருப்புகழ் 272, பக்கம் 178 கீழ்க்குறிப்பு.

12. அமிர்த பூதரி – அமிர்தம் – பால் நிறைந்த, (பூதரி) மலையன்ன கொங்கையை உடையவள், (அண்டர்) தேவர்கள் போற்றி வளர்த்த (செழுங்கொடி) செழுமை பெற்ற கொடி போன்றவள், குமுதமலர் போன்ற திருவாயை உடையவள், மயில்போன்றவள் (குஞ்சரி) — பெண்யானை போன்றவள், (மஞ்சரி) பூங்கொத்துப் போன்றவள் —

13. (அக்கம்) கண்கள் (ஒருகோடி பெறும்) நிரம்பப் பெற்றுள்ள, வஜ்ரபாணி — குலிசாயுதத்தைக் கையிற் கொண்டுள்ள இந்திரனுடைய (குமரி) மகள், தக்க – மகிழத்தக்க – தகுதியுள்ள - அமராவதி - பொன்னுலகத்தவர் - தேவலோகத்தவர் — (புரக்கும்) வணங்கும் (அல்லது காத்து வளர்த்த (ஆனைக்கு) தேவசேனைக்கு (இறைவன்) நாயகன்,

14. (ஐம்பத்தொன்றில்) ஐம்பத்தொரு அக்ஷரங்களிலும், எட்டு (அஷ்டாக்ஷரத்திலும் – எட்டெழுத்து மந்திரத்திலும், (ஆறில்) சடாக்ஷரத்திலும் — ஆறெழுத்து மந்திரத்திலும், (மூன்றினில்) ''சிவாய'' என்னும் மூன்றெழுத்து மந்திரத்திலும், (ஐந்தில்) 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்திலும் - தங்கும்–இடம்பெற்று விளங்கும், (அப்பாலை) எவைக்கும் அப்பாற்பட்டதான (வான் பொருள்) பெரிய உயரிய - (பொருள்) – கடவுள்,

15. [அப்படி] மெச்சத் தகுந்த நிலையில் [பத்தி] பக்தி (பழுத்த) கனிந்த, மனங் கொண்ட அடியார்களின் அருச்சனையை–பூசையை [மெச்சிய] விரும்பி ஏற்றுக்கொள்ளும் [செச்சை] வெட்சிமாலை அணிந்த [மணிப் புயன்] அழகிய திருப்புயங்களை உடையவன் ;

16. [ஆறு நிலை] ஆறு திருப்பதிகள் எனப்படுகின்ற திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திரு ஆவினன்குடி, திரு ஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை – என்னும் ஆறு தலங்களுள் [முதலாகிய] முதல் திருப்பதியாகிய திருப்பரங்குன்றம், திரு ஆவினன்குடி என்னும் பெருந் தலம், ஆரணம் முடிந்திடமும் — வேத முடிவிடம்

17. [ அருணையும் ] திருவண்ணாமலை, இலஞ்சிப்பதி, திருச்செந்தூர், திருப்பழநி, அடியார்களின் மனமாகிய தாமரை, திருச்செங்கோடு, திருவிடைக்கழி,

18. [அனவரதம்] எப்போதும், (நீலமலர்) - நீலோற்பலம் மலர்வதும், முத்து எறி – முத்துக்களை வீசுவதுமான சுனைநீரில் அருவிகள் குதித்துப் பாய்கின்ற [செருத்தணி] திருத்தணி என்கின்ற மலை — [எனும்] ஆக இவ்வாறு சொல்லப்படும்

[19] அலகில் திருப்பதி யிற்பயில் கற்ப காடவி
அநுபவன் அத்தன்நி ருத்தன் அரத்த ஆடையன்
[20] ஆறுமா மாதர் பயோதர பந்தியில்
ஆரவே பாலமு தாருநெ டுந்தகை
[21] வருண சரவண மடுவில் வருமொரு
மதலை மறைகமழ் குதலை மொழியினன்
[22] மதுக ராரவ மந்திர சிந்துர
மணம ருத கடம்பு புனைந்தவன்
[23] மட்டொழுகு சாரமது ரித்ததே னைப்பருக
மர்க்கடச மூகமமை தொட்டிரு லெட்டுவரை

---

19 கற்பகாடவியில் முருகன் – வேடிச்சி காவலன் வகுப்பு அடி 12 பார்க்க. கந்தரலங்காரம் 87-குறிப்புரை.

அரத்த ஆடையன்=சிவந்தஆடையன்; 'செய்யன் சிவந்த ஆடையன்'—திருமுருகாற்றுப்படை.

20 அறுமாதர் பாலமுதுண்டது :—அலங். 81 குறிப்புரை.

21 (1) வருணம்=நீர் (பிங்கலம்).

(2) மறைகமழ் குதலை மொழியினன்—
'திருமழலை மொழியின்மறை பலபல முழக்குமுனி
சிறுபறை முழக்கியருளே'
— திருவிரிஞ்சைப் பிள்ளைத்தமிழ்.

22 (1) சிந்துர ... கடம்பு – செங்கடம்பு — "பராரை மரா அம் – பரிய அடியினையுடைய செங்கடம்பு"-திருமுருகாற்றுப் படை அடி 10 உரை. 'செங்கால் மரா அம்'-திருமுரு-202. சிந்துரம்=வெட்சி. 'செச்சை சிந்தூரம் வெட்சியாகும்'— திவாகரம். (2) மணமருத கடம்பு – 'தண்ணறுங் கடம்பு'– பரிபாடல் 14–3. "கந்தக் கடம்பு"—அலங்காரம் 72,

23 வள்ளிமலையில் - குரங்கும், மூங்கிலும், தேனும் —
"மந்தி குதிகொள் அந்தண் வரை"
—திருப்புகழ் 1070, பக்கம் 166 குறிப்பு.
"குரங்குலாவுங் குன்று"—திருப்புகழ் 1075, 1239.
"வான் கிட்டிய பெருமூங்கிற் புனம்"
—திருப்புகழ் 937, பக்கம் 727 குறிப்பு.
"தேன் வரை வள்ளி"—கல்லாடம் 56.
"வரைத்தேன் பெருகு உந்திமிர்"–கந். அந்தாதி 7.

*19.* (அலகில்) கணக்கற்ற, திருப்பதியில் — திருப்பதி களில் (ஸ்தலங்களில்), பயில் – பொருந்திய, (கற்பகாடவி) கற்பகத் தோப்பில் அனுபவன் – மகிழ்ச்சியுடன் வீற்றிருப் பவன், அல்லது (அலகில் திருப்பதி) கணக்கற்ற திருப்பதிகள், இல் பயில் கற்பகாடவி – இல் – இல்லாள் – தேவி–தேவசேனை– பயில் – நெருங்கிப் பழகியிருந்த – கற்பகவனம் - ஆகிய இடங் களில், அநுபவன் — மகிழ்ந்து வீற்றிருப்பவன், அத்தன் – பெரியோன் — ( நிருத்தன் ) — துடிக்கூத்து, குடைக்கூத்து ஆடினவன், (அரத்த ஆடையன்) சிவந்த உடை அணிந் துள்ளவன் —

*20.* ஆறு மா மாதர் — அறுவர் எனப்படும் சிறந்த கார்த்திகை மாதர்களின் (பயோதர பந்தியில்) கொங்கைக் கூட்டத்தில் (முலைகளில்), ஆரவே — நிரம்பவே, பாலமுதம் (ஆரும்) உண்ட (நெடுந்தகை) பெருந்தன்மை வாய்ந்தவன் (பெரியோன்)

*21.* (வருணம்) நீர் நிறைந்த சரவணம் என்னும் மடு விலே, (வரும்) தோன்றிய, ஒரு (மதலை) குழந்தை, (மறை) வேதமொழிகள் (கமழ்) மணம் வீசும் (குதலை மொழியினன்) மழலைச் சொற்களைப் பேசுபவன் —

*22.* (மதுகராரவம்) — மதுகரங்களின் — வண்டுகளின் — (அரவம்) ஒலிகொண்டதும், மந்திரம் – மந்திரமோதிச் சமர்ப் பிக்கப்பட்டதும், சிந்துரம் – செந்நிறம் உடையதும், மணம் அருத - நறுமணம் நீங்காததுமான (கடம்பு) கடப்பமாலையை அணிந்தவன் — (அல்லது, சிந்துரம் — வெட்சியையும் ...... கடம்பையும் அணிந்தவன்),

*23.* மட்டு ஒழுகு சாரம் — ஒழுகு மட்டு சாரம் — ஒழுகி வருகின்ற சாறும் ரசமும் (மதுரித்த) – தித்திக்கின்ற தேனைப், (பருக) நக்கி அனுபவிக்க, மர்க்கட சமூகம் – குரங்கு களின் கூட்டம், (அமை) மூங்கிலைத், (தொட்டு) பிடித்தேறி, (இருல்) தேன்கூட்டை (எட்டு) எட்டிப்பிடிக்க முயலுகின்ற (வரை) மலை (யாகிய வள்ளிமலையில்)

[24]மன்றற் பைம்புனத் தாள்ப தாம்புயம்
வந்திக் குந்தனிக் காம வாஞ்சையன்
[25]மத்தமு டித்தருள் அத்தர்ப்ரி யப்பட
நித்தம றைப்பொரு ளைத்தெளி வித்தவன்
[26]மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரையு டன்சுழல வாசுகிவி டம்பொழிய
[27]மகரசலி லங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்
[28]மருகன்மற வாதவர்நி னைப்பவைமு டிக்குமவன்
உருகுமடி யாரிருவி னைத்தொகைய றுக்குமவன்
[29]மறவர்பொ ருப்பில் ஒருத்திபொ ருட்ட நாளிள
வடிவமு மூக்க நரைத்தவி ருத்த வேதியன்
[30]மாதரா ரூபன் நிராகுல சிந்தையன்
ஆதிகூ தாள மதாணிய லங்க்ருதன்-

---

24 மன்றற் பைம்புனத்தாள் — 'மன்றற் கிரியோனே' — திருப்புகழ் 42. வள்ளி பதாம்புயம் வந்தித்தல் – '' வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனே' — கந்தர் அநுபூதி 6.

25 சிவனுக்கு மறைப்பொருள் உபதேசித்தது:
'' சிவனார் படிக்க மவுனமறை ஓதுவித்த குருநாதா ''
—திருப்புகழ் 523.

29 விருத்த வேதியனாகச் சென்றது :
'' குமரேசன் நாடுபுகழ் சைவநெறி
நற்றவ விருத்த வேடமது கொண்டு ''
—கந்தபுராணம் 6-24-94.

30 மாதர் – ஆரூபன் — அழகு நீங்காதவன் எனலுமாம்:
ஆரூபம்=நீங்காமை.

24. மன்றல் – நறுமணம் வீசும் (பைம்புனத்தாள்) பசிய தினைப்புனத்தில் வாசம் செய்திருந்த வள்ளி நாயகியின் (பதாம்புயம்) திருவடித் தாமரைகளை (வந்திக்கும்) வணங்கித்துதிக்கும் (தனிக் காமவாஞ்சையன்)-ஒப்பற்ற காம ஆசை பூண்டவன் (விருப்பம்கொண்ட ஆசை பூண்டவன்)

25. (மத்தம்) ஊமத்த மலரை முடித்தருளும் (அத்தர்) தந்தையாகிய சிவபிரான் பிரியப்படும்படி, (நித்தம்) என்றும் அழியாததான (மறைப் பொருளை) வேதப்பொருளைத் (தெளி வித்தவன்) தெளிவாக எடுத்து உபதேசித்தவன்

26. மாதிரமும் — திக்குகளும், மந்தரமும் — மத்தாக நிறுவப்பட்ட மந்தர மலையும், நீரும்–நீர் நிலைகளும், நிலனும் – பூமியும், கனகமால்வரையுடன் — பொன்மயமான (மால்) பெரிய மேருமலையுடன் சுழற்சி அடைய, (மத்தின் கயிறுன) வாசுகி என்னும் பெரிய பாம்பு விஷத்தைப் பொழிந்து கக்க–

27. மகர சலிலம் – மகர மீன்கள் உலவும் (கடல்) நீரைக் கடைந்து, இந்த்ராதியர்க்கு — இந்திரன் முதலான தேவர் களுக்கு, அமுது – அமிர்தம், பகிர்தரு – பங்கிட்டுக் கொடுத்த, (முகுந்தன்) திருமால், [மன்] நிலைபெற்ற(பஞ்சாயுதக்கடவுள்) [சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு (கதை) எனப்படும் ஐந்து ஆயுதங்களைக்கொண்ட மூர்த்தியாம் திருமாலின் —

28. மருகன் – மருமகன், தன்னை மறவாது போற்றுபவர் களின் நினைப்பை — போற்றுபவர்கள் நினைக்கும் எண்ணங் களை, முடிக்கும் அவன் – முடித்தருளுபவன், உருகித் துதிக்கும் அடியார்களின் (இருவினைத்தொகை) நல்வினை — தீவினைகள் அல்லது பெரிய வினையின் தொகுதியை அறுத்து அருளுபவன்–

29. மறவர்-மலை வேடர்கள் வாழ்ந்திருந்த(பொருப்பில்) வள்ளிமலையில், ஒருத்தி — ஒப்பற்றவளாகிய வள்ளியின் பொருட்டு, அந்நாள் – முன்பொரு நாளில், (இளவடிவம்) (என்றும் இளையோன் என்னும் அந்த) இளமை விளங்கும் உருவம் முழுமையும், நரைத்த உருவம் காட்டி நின்ற(விருத்த வேதியன்) கிழ மறையோன் —

30. மாதரா ரூபன் — மாதர் - ஆர் – ரூபன் – (மாதர்) அழகு, ஆர் – நிறைந்த, ரூபன் - உருவம் உள்ளவன்; (நிராகுல சிந்தையன்) கவலையற்ற உளத்தவன், ஆதிமூர்த்தி, கூதள மலரால் ஆய (மதாணி) பதக்க அலங்காரத்தை உடையவன்,

[31]வரத விதரண விரத அநுபவ
மவுன குருபரன் நிபுண குணதரன்
[32]வனஜ ஜாதனை யன்றுமு னிந்தற
வலிய பாரவி லங்கிடு புங்கவன்
[33]மட்டிலிரு நாலுதிசை கட்டுநே மிக்கிரியும்
உத்தரகு ணதிகுட தக்ஷிண திக்கிரியும்
[34]மங்கத் துங்கவிட் டேறு வாங்கிய
செங்கைப் பங்கயச் சோதி காங்கெயன்
[35]மத்தம லத்ரய மித்தைத விர்த்தருள்
சுத்தப வித்ரநி வர்த்திய ளிப்பவன்
[36]வாரணமு கன்தனது தாதையைவ லஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடிவ ருங்குமரன்
[37]மயமுறு ப்ரபஞ்சமுஞ் சங்கேத ஷட்சமய
வழியுமன முங்கடந் தெங்கேனு நிற்குமவன்

---

[32] பிரமனைக் கோபித்து விலங்கிட்டது :

'விரிஞ்சன் விலங்கது கால்பூண்டு தன்மேல் தீர்ந்தனன் ...... வேல் வாங்கவே'—திருவகுப்பு 14-9. கந்தரந்தாதி 14-ன் குறிப்பைப் பார்க்க.

[33] சக்ரவாளகிரி உலகைச் சூழ்ந்திருப்பது :—''உடுத்த நேமிக்கிரி' 'அண்டம் அனைத்தும் சூழவரும் பேராழிகள்'—தக்கயாகப்பரணி 422, 595. 'சகதண்ட முழுதும் சூழ்ந்து கொண்ட சக்கரவாள பருவதங்கள்''—உரைப்பகுதி.

[34] மங்க=மங்கிக்குலைய. துங்க=பரிசுத்தமான.

விட்டேறு=வேல்; ''வேலம்புத்தூர் விட்டேறருளி''—திருவாசகம் 2–29. ''சத்தி, எஃகம், உடம்பிடி, குந்தம், விட்டேறு, அரணம், ஞாங்கர், அயில், வேல்''—திவாகரம்.

வாங்கிய = செலுத்திய. ''வேல் வாங்கு வகுப்பு'' என்பதையுங் காண்க.

''பங்கயச் சோதி''—''வனசமேல் வரு தேவா''—திருப்புகழ் 150.

[35] முருகன் வீடு அளிக்க வல்லான் என்பது :—''சீரும் போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்''—கந்தபுராணம் 1–14-19.

31. (வரத விதரண விரத அனுபவ) வரமளிக்கும் தயாள குணமே தனக்கு விரத அனுபவமாக (இன்ப நுகர்ச்சி யாகக்) கொண்ட, மோன [மூர்த்தி], குருபர [மூர்த்தி], நிபுண குண தரன் – சாமர்த்தியம் வாய்ந்த நற்குணமூர்த்தி—

32. வனஜ ஜாதனை - திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றினவனான பிரமனை, [அன்று] முன்பு, (முனிந்து) கோபித்து(அற) மிகவும், வலிய-பலமான, பாரமானவிலங்கை அவனுக்குப் பூட்டின, புங்கவன் – சிறப்பு வாய்ந்தவன்

33. மட்டு இல் – அளவுக்கு அடங்காத, இருநாலு திசை– எட்டுத் திசைகளும், கட்டு— தழுவிச் சூழ்ந்துள்ள, நேமிக் கிரியும் - சக்ரவாளகிரியும், (உத்தரம்) வடக்கு –, [குணதி –] கிழக்கு முதல் [குட] மேற்கு, (தக்ஷிணதி) தெற்கு முதலான [எட்டுத் திக்கு] மலைகளும்—

34. மங்க – ஒளியிழந்து குலையத், துங்க – பரிசுத்தமான, விட்டேறு-வேலாயுதத்தை, வாங்கிய-செலுத்தின, செங்கைப் பங்கயச் சோதி - பங்கயச் செங்கைச் சோதி – தாமரையன்ன திருக்கரங்களை உடைய ஜோதி மூர்த்தி [அல்லது செவ்விய திருக்கரங்களை உடையவனும், தாமரையில் அவதரித்தவனு மான ஜோதி மூர்த்தி, காங்கெயன்–கங்கையில் வளர்ந்தவன் –

35. மத்தம்–மயக்க அறிவும், மலத்ரயம்–ஆணவம், கன் மம், மாயை எனப்படும் மும்மலங்கள்–ஆகிய இவையொடும் கூடிய, மித்தை–பொய்யை [பொய்வாழ்வை], தவிர்த்தருள் – நீக்கித் திருவருளொடு கூடிய, சுத்த பவித்ர – முழுத் தூய்மை யான, நிவர்த்தி – பந்த விடுதலையை (அளிப்பவன்) தருபவன்

36. வாரண முகன் — யானை முகன் — கணபதி – தன் னுடைய, தாதையை – தந்தையை, வலஞ்சுழல – வலம்வரும் வேளையில், வாகை மயில் – வெற்றி மயில் (கொண்டு) மீதேறி உலகைச் [சூழ்] வலம் செய்து, நொடி–ஒரு நொடிப்பொழுதில் வந்து சேர்ந்த குமரமூர்த்தி

37. மயம் உறு ப்ரபஞ்சமும் - பொருள்கள் நிறைந்துள்ள உலகத்தையும், சங்கேத – உறுதி மொழிகளை எடுத்து ஓது கின்ற, ஷட்சமய – ஆறு சமயங்களில் ஓதப்பட்ட வழிகளையும், மனத்தையும் (கடந்து) தாண்டி, எங்கேனும் – எவ்விடத்திலே யாயினும் நிற்கின்றவன்

---

36 முருகவேள் மயில்மீது உலகை வலம் வந்தது :
—திருப்புகழ் 184, பக்கம் 430 கீழ்க்குறிப்பு.

37 மனம் கடந்த இடத்தில் முருகர் நிற்பது :—' மோனக் இடத்தில் ஆரும் உய நிற்கும் முருகோனே '—திருப்புகழ் 1027.

[38]மதுரமொழி யால்உலக னைத்தையும் உணர்த்துமவன்
வடஅனல நேர்கொடிய குக்குடம் உயர்த்தகுகன்
[39]மரகத பக்ஷ குலத்துர கத்தி வாகரர்
வடிவையு ருக்கி வடித்த திருக்கை வேல்கொடு
[40]வாரிகோ கோஎன வாய்விட வந்தெதிர்
சூரமா சேனையை மோதுக ளந்தனில் ;

[ சூர சம்மார போர்க் களத்தில் பூத வேதாள வர்ணனை ]

[41]உருவம் இருளெழ எயிறு நிலவெழ
உலகு வெருவர அசைய வருவன
[42]உடைய நாயகி கண்டும கிழ்ந்திட
நடைவி நோதவி தம்புரி பந்திய
[43]ஒக்கலைவி டாதழுத ரற்றுபா லர்க்குமிக
உச்சிவெடி யாதுநிண மெத்தவே தப்புவன

---

38 'வட அனலம் நேர்...குக்குடம்'—வடவாமுகாக்கினி—கடல் நீரை உறிஞ்சும்—"கடல் ஏழும் நக்கி ...... தின்னும் வடவானலம்"—தக்கயாகப்-438 : சேவலுக்கும் அத்தகைய ஆற்றல் உண்டு 'தாரகை நெல்லாக் கொறித்துச் சமுத்திர நீர் அறக்குடித்து' சேவல்பத்து 9. 'மீனிறப் புணரியை விழுங்கும் கடற்றுனை வெள்ளமொடு ......அவுணக் கருங் கங்குல் விடியக் கருங்குரல் விடும் தீ நிறக் குடுமி வெண் சேவல்'-முத்துக்குமார காப்பு 7.

39 வேலின் ஒளி - 'சுடர்ப்பரிதி ஒளிப்ப ...... ஒளிர் ஒளிப் பிரபை வீசும்"—வேல் வகுப்பு.

40 வாரி கோகோ என வாய்விடல்— திருப்புகழ் 1139, பக்கம் 315 கீழ்க்குறிப்பு ; வேல் வகுப்பு அடி 13-ன் குறிப்பு.

அடி 41-80 'பரணி' நூல்களில் உள்ளவாறு அருமையான 'போர்க்களத்துப் பூத வேதாள வர்ணனை'.

42 "உடைய நாயகி" — பூத வேதாளங்கள் தேவியின் சேனை. 'பூத வேதாள கடகம் மேய மாயோளே' — தக்க யாகப்பரணி 104. கடகம் - படை; சேனை.

43 ஒக்கல் — ஒக்கலை — இடுப்பு. "செக்கர் இளம்பிறை தன்னை வாங்கி நின்கையில் தருவன், ஒக்கலை மேலிருந்து அம்ம முகந்து இனிதுண்ண நீ வாராய்"—பெரிய திருமொழி 10-4-4. 'மகவு ஒக்கல் தாண்ட அணைத்தான்'—திருவிளை-பழியஞ்சி 15

38. (தனது) இனிய வார்த்தைகளால், உலகம் முழுமையையும் உணர்த்துகின்றவன் (உலகோர் யாவர்க்கும் ஞானம் ஊட்டுபவன்): வட அனலம் — வடவாமுகாக்கினி (நேர்) போன்றதும் – [கொடிய— துவசக்கொடியில் அமைந்துள்ளதுமான — (குக்குடம்) கோழியை (கொடியில்) உயர்த்தி உள்ள குகமூர்த்தி [அல்லது கொடுமை கொண்டிருந்த சேவலை [அடக்கி] (கொடியில்) உயர்த்தி வைத்துள்ள குகன்]

39. மரகத பக்ஷ-பசுமையான தரத்தை உடைய - பசிய— பக்க ஒளி வீசுகின்ற – குலம் – அழகிய அல்லது கூட்டமான (துரகம், குதிரைகளைத் (தமது தேரிற்கொண்ட) (திவாகரர்) பன்னிரு சூரியர்களின், (வடிவை) ஒளி வடிவை–ஒளி அழகை எல்லாம் உருக்கி வடிகட்டப்பட்ட திருக்கரத்து வேல்கொண்டு

40. (வாரி) கடல் [கோ கோ] என்று, வாய்விட – வாய் விட்டலற, வந்து எதிர் – நேர்வந்து எதிர்த்த, சூரனுடைய, மா – பெரிய சேனையை, மோது – தாக்கின, களந்தனில் - போர்க்களத்திலே —

[ பூத வேதாள வர்ணனை ]

41. உருவம் – இருள்போலக் கரிய நிறத்தைத் தோற்றுவிக்கவும், (எயிறு) பற்கள், நிலவெழ-நிலவொளிபோல வெள்ளொளியை வீசவும், உலகு – உலகோர், வெருவர - அச்சம் உறவும், அசைய – கலக்குவித்து (அல்லது ஆடி அசைந்து) வருவன (அனேகவித பூத வேதாளங்கள்)

42. உடைய நாயகி – தங்களை ஆட்கொண்டுள்ள தலைவியாகிய பார்வதி தேவி (தங்களைக் கண்டு) மகிழ்ச்சிகொள்ள, நடை விநோத விதம்புரி – நடை விநோதம் விநோதமான வகைகளிற் புரிகின்ற, பந்திய – கூட்டத்தன [அனேகவித பூத வேதாளங்கள்]

43. ஒக்கலை விடாது - இடுப்பை விடாமல் - இடுப்பில் இருந்தபடியே அழுது, அரற்று – கூச்சலிடும், பாலர்க்கு – குழந்தைகளுக்கு, மிக - அதிகமாக, உச்சிவெடியாது–மண்டை உச்சி வெடி - துப்போகாதபடி, நிணம் . மாமிசம் (கொழுப்பு) இவைகளை, மெத்த - நிரம்ப, வேது – சூடான ஒற்றடத்தை– ஒத்தடத்தை–(Fomentation), அப்புவன – அப்பிச் சிகிச்சை செய்வன [அநேகவித பூத வேதாளங்கள்]

[44]உங்குக் கிங்குவிட் டாழி நான்கினும்
ஒன்றுக் கொன்றடி பாய்தல் காண்பன
[45]யுத்தக ளத்தினில் ரத்நம ணிக்குவை
ஒட்டமொ டொற்றைஇ ரட்டைபி டிப்பன
[46]யோகினிக ளும்பெரிய சாகினிக ளும்புதிய
மோகினிக ளும்பழைய டாகினிக ளும்புகழ
[47]உவணநிரை கொண்டிடுஞ் செங்காவ ணத்திடையில்
உறவுகொள வந்துதம் பெண்காறை கட்டுவன

---

46 *(1)* **யோகினிகள்** – காளிக்கு ஏவல் செய்யும் மகளிர்வகை. " யோகினிகள் பன்னிருவர் :—வித்யா யோகினி, இரேசிகை, மோசிகை, அமிர்தை, தீபிகை, ஞானு, ஆப்யாயனி, வியாபினி, மேதை, வியோமரூபை, சித்ரூபை, லக்ஷ்மியோகினி, " மகா சதுஷ் ஷஷ்டி கோடி யோகினீகண ஸேவிதா" (லலிதா ஸஹஸ்ரநாமம் 237) என்பதனுல் தேவி யைச் சூழ்ந்துள்ள யோகினி கணத்தார் 64 கோடியர் என்றும் தெரிகிறது (தக்கயாகப்பரணி 87, விசேடக்குறிப்பு பக்கம் 281, 317).

*(2)* **சாகினிகள்** – துர்த் தேவதைகள். " கொல்லுகை தவிரா இறைவி சாகினிகளே "—தக்கயாகப்பரணி 430, 89.

*(3)* **மோகினிகள்** — பெண் பேய் வகைகள். "மோக மோகினிகள்"–' பிராணி சாலங்கட்கு மோகங்களைப் பண்ணும் மோகினிகள் "—தக்கயாகப்பரணி 593 உரை.

*(4)* **டாகினிகள்** – சுடுகாட்டுப் பிணங்களைத் தின்னும் பேய் கள். 'இடு பிணந் தின்னும் இடாகினிப் பேய்'–சிலப்பதி 9-21.

இந்த 46–ஆம் அடியுடன் —

" இடி பொருும லொரு பாலதிர்வர் சாகினிகளே
எரி பொருும லொரு பால்நகுவர் டாகினிகளே
படி பொருும லொரு பால்வருவர் யோகினிகளே
பகருமா றரியர் நாயகி பதாகினிகளே "

" மோக மோகினிகள் யோக யோகினிகள்
யாக சம்மினிகள் ... நாக சங்கினிகள்
வீர பைரவி கணுத சாதகர்கள் நண்ணியே ".

" உருகுவா சகமெலாம் உடையர் சாகினிகளே
உயிரெலாம் விழியினுல் அயில்வர் யோகினிகளே
பருகியா ரமிர்தை யாடுவர்கள் மோகினிகளே
பகருமா றரியர் நாயகி பதாகினிகளே "

—எனவரும் தக்க. பரணி 433, 593, அஞ்ஞ. பரணி 135; பாடல்களையும் ஒப்பிட்டுப் பார்க்கவும்.

44. உங்குக்கு இங்கு விட்டு – அவ்விடத்துக்கும் இவ்விடத்துக்கும் இடையில் உள்ள அவ்விடத்தைஅடையவேண்டி இவ்விடத்தை, விட்டு – நீங்கவிட்டு வேறொரு இடம் செல்ல வேண்டி இருக்கும் இடத்தை விட்டுச்சென்று [அல்லது–உங்கு–உவ்விடத்தை, உக்கு - நிலைகுலைத்து, இங்கு - இவ்விடத்தை விட்டு நீங்கி இருக்கும் இடத்தை அடிக்கடி மாற்றி, ஆழி நான்கினும்–நான்கு திசைகளில் உள்ள கடல்களிலும், ஒன்றுக்கொன்று – ஒன்றோடொன்று போட்டி போட்டுக்கொண்டு, அடி பாய்தல் - (Long Jump Competition) அடி தாண்டுதலைக் (காண்பன) செய்து விளையாடுவன [அனேகவித பூத வேதாளங்கள்]

45. யுத்த களத்தினில் - போர்க்களத்தில், ரத்னமணிக் குவை — இறந்துபட்ட வீரர்களின் ரத்ன மணிமகுடங்களில் இருந்து சிதறி விழுந்து கிடந்த ரத்னமணிக் குவியல்களைக் கொண்டு, ஒட்டமொடு - பந்தயம் போட்டுக்கொண்டு, ஒற்றை இரட்டை பிடிப்பன – ஒற்றையா இரட்டையா எனப் பிடித்துக் கேட்கும் விளையாட்டை விளையாடுவன [அனேகவித பூத வேதாளங்கள்]

46. யோகினிகளும், பெரிய சாகினிகளும், புதிதாய்க் கூடிவந்துள்ள மோகினிகளும், பழமையாயுள்ள டாகினிகளும் புகழ்ந்து நிற்க —

47. உவணம் - கழுகுகள் (அல்லது கருடன்கள்), நிரை கொண்டிடும் – வரிசையாய் வந்து கூடும், செங்காவணத்து இடையில் – செவ்விய பந்தற் பரப்பின் கீழே, உறவுகொள வந்து – உறவு பாராட்ட வந்து, தங்கள் பெண்ணுக்கு – பெண் பூதங்களுக்கு, காறை கட்டுவன — தாலி (கழுத்தணியைக்) கட்டுவன [அனேகவித பூத வேதாளங்கள்]

---

46 'வெண்ணிலா நகையாளை விடாதவர், எண்ணில்கோடி இடாகினி மாதோ'—இரணிய வதைப்பரணி 104.

யோகினி, சாகினி, மோகினி, டாகினி இவையெல்லாம் தேவியின் சேனைகள் – அதனால் தேவியை 'உடைய நாயகி' என்றார் 42-ஆம் அடியில்.

47 போர்க்களத்திற் குடல் முதலிய மாமிசங்களைத் தின்ன வரும் பருந்து, கழுகு இவை ஆகாயப் பரப்பில் பந்தரிட்டது போலக் கூட்டமாய் வந்து பரவி நிற்கும் — "முதியவுணர் அன்றுபட்ட முதியகுடர் நன்று சுற்று முதுகழுகு பந்தரிட்ட வேலினன்"—என்றார் கடைக்கணியல் வகுப்பில்.

48உமிழ்குருதி யாறடைப டக்குறட டுக்கியதில்
உபவனமொர் ஏழையுமு றித்தருகொ ழுக்குவன
49உடுபட லத்தை மறைத்த குறைக்கு வாலுடல்
உதிரச முத்திர முற்று நிலைப்ப டாதன
50ஓடைமால் வாரண யூகம் அடங்கலும்
ஓரோர்பேய் நீள்கடை வாயி லடங்குவ
51உடலி னிசிசரர் மவுலி ஒலியலும்
உதடு மலைவன பதடி முலையின
52உததி யேழும டங்கவு றிஞ்சியும்
உதர வாரழல் நின்றுகொ ளுந்துவ
53உக்கிரஇ ராவணன்எ டுத்தமே ருக்கிரியும்
ஒற்றியிரு தோள்கொடுப றித்திடா தப்புவன
54ஒன்றித் திண்குரற் கூகை பாம்பொடு
வென்றிச் செந்தலைத் தாலி பூண்பன

---

48 உப வனங்களை முறித்தல்:
'பொற்பூடறக் கற்பகக் காடு சாடி'—தக்கயாக-538.
50 யானைகளைப் பேய்கள் உண்பது:—'வீழ்ந்த வேழங்கள் வயிற்று வீழ்ந் தாழ்ந்தது'—தக்கயாகப்பரணி 575. இது பேய்கள் மிக்க பசியையுடையன என்பதைக் காட்டுகின்றது.
'இரண்டு போதும் உண்டுமுண் டிலாதபோல் இருப்பவே' தக்கயாகப்பரணி 122. 'வாயினுல் நிறையாத வயிற்றின'—கலிங்கத்துப்பரணி 6–3.
52 கடல் நீரை உறிஞ்சிப் பருகுதல்: 'கட் பெருங்கடல் குடித்தன தடித்தன கழுதே' 'அலைகொள் வாரிதிகள் ஏழு நக்கி நடமாடி ஐயை கழல்பாடியே'—'கடல் குடித்தவனி தின்று'—தக்கயாகப்பரணி 395, 410, 400.
53 ராவணன் மலையை எடுத்தது:—திருப்புகழ் 188, பக்கம் 440 கீழ்க்குறிப்பு.
54 "கோம்பி பாம்பிடை கோத்தணி தாலிய"
—கலிங்கத்துப்பரணி–பேய்கள் 8.
"கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்க"
—திருமுருகாற்றுப்படை 49.

48. உமிழ் குருதியாறு - சொரிந்து விழும் ரத்த ஆறு அடைபடும்படி (குறடு அடுக்கி அதில்) திண்ணைபோல அடுக்க வேண்டி அதற்காக, உபவனம் ஓர் ஏழையும் — ஒப்பற்ற ஏழுலகத்தும் உள்ள, உபவனம் — சோலைகளை (சோலையில் உள்ள மரங்களை) முறித்து, அருகு - பக்கத்திலே, ஒழுக்குவன- ஒழுங்காக அமைப்பன [அனேகவித பூதவேதாளங்கள்]

49. உடு - நக்ஷத்திரங்களின், படலத்தை - கூட்டத்தை, மறைத்த - மறைக்கும் அளவுக்கு உயர்ந்து கிடந்த, குறைக் குவால் உடல் - உடற் குறை-தலையற்ற உடல்களின்-குவால்- குவியல்கள் இருந்த, உதிர சமுத்திரம் - ரத்தக்கடல் முழுமை யும் - ரத்தக் கடலில் எவ்விடத்தும், நிலைப்படாதன - ஒரு நிலையில் நில்லாது திரிந்தன (அனேகவித பூத வேதாளங்கள்)

50. ஓடை - நெற்றிப் பட்டம் அணிந்த, மால் - பெரிய, வாரணம் - யானைகளின், யூகம் அடங்கலும்-படைகள் முழுமை யும், ஓரொர்பேய் - ஒரு ஒரு பேயின் நீண்ட கடைவாய்க் குள்ளே அடங்கிவிடும் (அத்தகைய அனேகவித பூதவேதாளங் கள் அப் போர்க்களத்திலே இருந்தன)

51. உடல் இல் நிசிசரர் - உடலற்ற அசுரர்களின், மவுலி — தலையில் உள்ள, ஒலியல் — மாலைகளும், உதடும் அலைவன — அசையும்படிச் செய்வன; பதடி — பயனற்ற, முலையின — கொங்கைகளோடு கூடியன (அனேகவித பூத வேதாளங்கள்)

52. உததி ஏழும் - கடல் ஏழையும், அடங்க உறிஞ்சியும்- முழுமையும் உறிஞ்சி உண்டும், உதரம் - வயிற்றின், ஆர் அழல் - நிறைந்த (பசி) நெருப்பு, நின்று கொளுந்துவ — அவியாது நின்று எரிவன (பூத வேதாளங்களுக்கு)

53. உக்கிர இராவணன் - பெருங் கோபங் கொண்ட இராவணன், எடுத்த - அசைத்தெடுத்த, மேருகிரியும் - கயிலை மலையையும், ஒற்றி - தழுவி, இரு தோள்கொடு - இரண்டு கைகளாலும் பறித்திடா - பறித்துவிட்டுத், தப்புவன—பிழை படுவன—அல்லது எடுத்தபடியே வைத்துவிட்டு அப்பிழையி னின்றும் தப்பிப் பிழைப்பன, (அல்லது) பறித்திடாது - பறிக் காமல், அப்புவன — (அம்மலையை) அணைந்து கொள்வன (அனேகவித பூதவேதாளங்கள்)

54. ஒன்றி—மனம் பொருந்தி, திண்குரல் - பலத்த குரலை யுடைய, கூகை - கோட்டான், பாம்பு இவைகளுடன், வென்றி- வெற்றியே பெறும் செந்தலை - செந்தலை விரியன் என்னும் பாம்பையும், தாலியாகஅணிவன (அல்லது) கூகை பாம்பொடு அவைகளின் செவ்விய தலைகளையும் தாலியாக அணிவன (அனேகவித பூத வேதாளங்கள்)

[55]ஒக்கமி டற்றில் இறக்கு குறைத்தலை
விக்கி வெளுக்க வெளுக்க விழிப்பன

[56]யோகுபுரி யுங்குகையும் யோகபர ரும்பொருவ
ஓடைமத தந்திவயி றூடினிது றங்குவன

[57]உசிதபிசி தங்கொணர்ந் திங்கேற விற்றுமென
மதமலையெ லும்புகொண் டங்காடி கட்டுவன

[58]உதிர நிண வாள்பெருக வொட்டுவன வெட்டுவன
உடலினடு வூடுருவ முட்டுவன தட்டுவன

[59]ஒழுகுபி ணத்துநி ணத்தின் அள ற்றி லேபழு
ஒடியவு ழக்கிவ ழுக்கி யுருட்டி வீழ்வன

[60]ஊசலார் வார்குழை யோலை யிடும்படி
ஓதுசா மீகர நேமி பிடுங்குவ;

[61]கரணம் இடுவன குணலை யிடுவன
கழையை நடுவன பவுரி வருவன

---

59 நிணத்தில் வழுக்கி விழுதல் :—‘ பிணத்தின் நிணவெளி றளற்றி னிடையடி வழுக்கி விழுவன’—பொருகளத்தலகை வகுப்பு 7. ‘மூளைச் சேற்று வழுக்களில் வீழ்ந்தற மொழி பெயர்ந்தொரு கால் முடமானவும்’—கலிங்க–பேய்கள்–12.

60 மலைகள் காதணிகள் :—“ வெள்ளி வெற்பெடுத்திடுங் குதம்பை காதில் மின்னவே” —“தென்சேடி வடசேடி யென்னும் வெள்ளிமலை இரண்டும் இரண்டு காதிற்குதம்பை” தக்கயாகப்பரணி 371 உரை.

61 (1) “ கரணம் இடுதல்” — “அண்டம் பிளக்க நிமிர் அலகை கரணமிட”—திருப்புகழ் 1127. குணலை இடுவன – ‘குணலைத் திறனிற் களிக்கும் ஒரு திரள்’—செருக்களத்தலகை வகுப்பு 2. (2) கழையை நடுவன பவுரி வருவன – பேய்கள் மூங்கிலுடன் விளையாடுதல் — “அட்ட மிட்ட நெடுங்கழை காண்கிலென் அன்னை அன்னையென் றுலுங் குழவிய’—கலிங் கத்துப்பரணி 6-9.

55. ஒக்க — ஒரு சேர, மிடற்றில் — கழுத்தளவுக்கு, இறக்கு – இறக்கி வெட்டப்பட்ட (கொல்லப்பட்ட), குறைத் தலை – உடலற்ற தலைகள், விக்கி வெளுக்க வெளுக்க – விக்க லெடுத்து வெள்ளை விழி தோன்றத் தோன்ற, விழிப்பன வாகும் (அனேகவித பூத வேதாளங்கள்)

56. யோகம் செய்வதற்குரிய குகையையும் (அக் குகையி னுள்) யோகபரரும் - யோகம் செய்யும் யோகியையும் பொருவ – நிகர்ப்ப, ஓடை - நெற்றிப்பட்டம் அணிந்த, மதம் பொருந்திய (தந்தி) யானையின் (வயிறாடு) (குகைபோன்ற) வயிற்றினுள்ளே (இனிது) சுகமாக (உறங்குவன) தூங்குவன வாகும் (அனேகவித பூத வேதாளங்கள்)

57. உசிதம் - தகுதியுள்ள, பிசிதம் (மாமிசங்களை) – இறைச்சியைக், கொணர்ந்து – கொண்டுவந்து, இங்கு – இவ் விடத்தில், ஏற - நிரம்ப, விற்றும் என – விற்போம் என்று, மதமலை — (இறந்துபட்ட) மதயானைகளின் எலும்புகளைக் கொண்டு, அங்காடி – கடைகளைக் கட்டுவன – அமைப்பன, (அனேகவித பூத வேதாளங்கள்)

58. உதிர நிண வாள் பெருக–வாளினின்றும் உதிரம்– ரத்தமும், நிணம் – மாமிசமும் பெருகி விழ (ஒட்டுவன) தாக்குவன, வெட்டுவன; உடலின் நடுவே ஊடுருவும்படி (முட்டுவன) மோதுவன, தட்டுவன — அடித்து வீழ்ப்பன (அனேகவித பூத வேதாளங்கள்)

59. ஒழுகு பிணத்து – பிணத்தினின்றும் ஒழுகிவிழும், நிணத்தின் – மாமிசம் (கொழுப்பு) இவற்றின், அளற்றிலே – சேற்றினிலே, பழு - விலா எலும்புகள், ஒடிய - ஒடிந்துபோம் படி, உழக்கி – மிதித்து, (கால்) வழுக்கி உருண்டு (கீழே) விழுவன (அனேகவித பூத வேதாளங்கள்)

60. ஊசல் ஆர் – ஊஞ்சல்போல நிரம்ப அசைந்து ஆடுகின்ற, வார்குழை - நீண்ட குழையோலை–காதோலையாக, இடும்படி -- அணிவதற்கு, ஓது - சொல்லப்படுகின்ற, சாமீ கரம் – பொன் நேமி (மலை)-சாமீகரநேமி) – பொன்மலையாகிய மேருவையே பிடுங்குவன (அனேகவித பூத வேதாளங்கள்)

61. கரணம் இடுவன – தலைகீழாகப் பாய்வன, (சில பூத வேதாளங்கள்) ; குணலை இடுவன - ஆரவாரத்துடன் கூத்தாடி நடிப்பன (சில பூதவேதாளங்கள்); கழையை நடுவன - மூங்கிற் கொம்பை நடுவன (சில பூதவேதாளங்கள்) ; பவுரி வருவன – அந்த மூங்கிலைச் சுற்றிக் கூத்தாடுவன (அனேகவித பூத வேதாளங்கள்)

62ககன கூடமு டைந்துவி ழும்படி
கதறி வாயனல் கண்கனல் சிந்துவ
63கைச்சதியி னுமுறைவி தித்தவா முற்கடித
சச்சபுட சாசபுட சட்பிதா புத்திரிக
64கண்டச் சம்பதிப் பேத மாம்பல
கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி

---

63 - 64 பஞ்ச தாளங்கள் - ' சச்சபுடம் முதலான பஞ்சதாளம்' சிலப்பதி–உரை-3-16.

I (1) aஉற்கடிதமாவது – குரு 3, மமம ஆக மாத்திரை 6- இது ஈசனது ஈசான முகத்திற் பிறந்தது–சங்கிரம சாதி.

(2) oசச்சபுடம் — சச்சற்புடமாவது குரு-2, இலகு 1, புலுதம் 1, மமமி ஆக மாத்திரை 8 : இது ஈசன் சத்தியோசாத முகத்திற் பிறந்தது – பிரமசாதி.

(3) sசாசபுடம் — சாசற்புடமாவது – குரு 1, இலகு 2, குரு 1, மம ஆக மாத்திரை 6; இது ஈசன் வாம முகத்திற் பிறந்தது - அரச சாதி.

(4) xசட்பிதா புத்திரிகமாவது—புலுதம் 1, இலகு 1, குரு 2, இலகு 1, புலுதம் 1 மிமமிம ஆக மாத் திரை 12 ; இது ஈசனது அகோர முகத்திற் பிறந் தது ; வைசிய சாதி.

(5) zசம்பத்-சம்பத்து வேட்டமாவது புலுதம் 1, குரு 3 புலுதம் 1, மிமிமமி ஆக மாத்திரை 12; இது ஈசனது தற்புருட முகத்திற் பிறந்தது - வேளாள சாதி, (தமிழ் மொழி அகராதி).

aஉற்கடிதம், oசச்சற்புடம், sசாசபுடம், xசட்பிதா புத் திரிகம், zசம்பத்து வேட்டம் - (Pancha Talam).

These are varieties of time measure represented by separate Symbols. These five primary time measures are said to have originated from the five faces of Siva: (Lexicon.)

II கண்டச் சம்பதிப் பேதம்-தாளத்தின் ஆறு அங்கங்கள்: அனுத்ருதம், த்ருதம், லகு, குரு, ப்லுதம், காக பாதம், என்பன ; ஜாதி பேதங்களினுல் லகுவின் மொத்த அக்ஷர காலம் முறையே மூன்று, நான்கு,

62. ககன கூடம் – அண்டகூடம், ஆகாயத்தின் மேலிடமும் – ஆகாய முகடும் உடைபட்டு விழும்படி, கதறி – கூச்சலிட்டு, வாய் அனல் – வாய் நெருப்பையும், கண் - கண்கள், கனல்-நெருப்பையும் சிந்துவன (அனேகவித பூதவேதாளங்கள்)

63. கைச்சதியின் – கரதாளத்தின் (ஆம்) அமைகின்ற முறை – முறையிலே, விதித்தஆம் – விதிக்கப்பட்டனவாகின்ற உற்கடிதம், சச்சபுடம் (சச்சற்புடம்), சாசபுடம் (சாசற்புடம்) சட்பிதா புத்திரிகம்

64. கண்ட — தாள இலக்கணத்தார் கண்டு ஆய்ந்து அமைத்த, சம்பத் – சம்பத்து வேட்டம்-எனப் பெயர்பெறும் தாளங்கள் (இப் பேதமாம்) இவைகளின் பேதமாகும் பல வகைப்பட்ட (கஞ்சப் பஞ்சகத் தாளம்)-கஞ்சம்-கைத் தாளத்தால்அல்லது வெண்கலதாளத்தால்) பஞ்சகத்தாளம்-ஐவகைத் தாளங்களும் (ஆம்படி) பிறந்து விளங்கி ஒலிக்கும்படி

---

ஐந்து, ஏழு, ஒன்பதாக மாறும். இந்த ஐந்துவித லகுக்களின் பெயர் – திரிச்ரலகு, சதுச்ரலகு, கண்டலகு, மிச்ரலகு, ஸங்கீர்ணலகு; இவை தம்முள் கண்டலகுவின் மொத்த அக்ஷர காலம் 5; (1 தட்டு+4 விரலெண்ணிக்கைகள்); திரிச்ரலகு 3 அக்ஷரகாலம், சதுச்ரலகு 4 அக்ஷர காலம், மிச்ரலகு 7 அக்ஷர காலம், ஸங்கிர்ணலகு 9 அக்ஷரகாலம்; மிச்ரத்தையும் த்ரிசிரத்தையும் சேர்த்து கண்டித்ததே $\left(\frac{7+3}{2}=5\right)$ கண்டம். (பேராசிரியர். P. சாம்பமூர்த்தி அவர்கள் எழுதிய கர்னாடக ஸங்கீத புஸ்தகம்–முதல் பாகம்-பக்கம் 10, 11.)

III கஞ்சப் பஞ்சகத்தாளம் — கஞ்சத் தாளம் – கஞ்சம்= வெண்கலம், கைத்தாளம் (திவாகரம்).

இங்கு வரும் தாளக் குறிப்பைப்பற்றி 'மார்க்க தாளம்' எனும் நூற்றெட்டு மாத்திரைத்தாளக் கலிவெண்பா என்னும் நூலில் உள்ள சில குறிப்புக்கள் கவனிக்கத் தக்கன :—

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களில் 'மார்க்க தாளமாகிய நூற்றெட்டுத் தாளங்களை மிகுதியாக உபயோகித்துப் பாடியிருக்கின்றனர்.'

[குறிப்புரை தொடர்ச்சி 370-ஆம் பக்கம் பார்க்க.]

[65]கற்சரி யுற்சவ தர்ப்பண லக்ஷண
சச்சரி மட்டிசை யொற்றிய றுப்பன
[66]காயெரிய பங்கியொடு சேகரமி குந்தசைவ
காதுபடு சங்கவள மாலிகைபு னைந்திசைவ

---

[369-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புத் தொடர்ச்சி.]

(1) திருப்புகழுள் 'தீராப் பிணி தீர' என்னும் பாடலுக்கு (953) தாளம் 'நிச்சாருகம்' என்பது. இதன் இலக்கணம் 'தீரா' என்னும் நெடிலிணைக்கு மாத்திரை நான்கு', 'பிணி' என்னும் குறிலிணைக்கு மாத்திரை இரண்டு; தீ-ர என்னும் நெடிற் குறிலிணைக்கு மாத்திரை மூன்று - ஆக மாத்திரைகள் ஒன்பது. இதனை ஒன்பது அக்கரங்கள் என்று கூறுவர். மாத்திரைக் கிரமப்படி நிச்சாருக தாளம் இரண்டேகால் மாத்திரையாகிறது.

(51) "நிச்சா ருகமிலகு நீண்டலகு சேகரமு
மிச்சைவரு மாத்திரை யிரண்டேகால்..."

தாளத்திற்குரிய பத்துவகை உயிர்களைத் திருப்புகழ் ஆசிரியர் தமது திருப்புகழில் ஆங்காங்கு அமைத்துப் பாடியது மன்றி — "கைச்சதியினுமுறை ...... கஞ்சப் பஞ்சகத் தாள மாம்படி" எனப் பூதவேதாள வகுப்பில் பஞ்சதாள லக்ஷணங் களையும் விவரித்துள்ளார். மகா கணபதி சகஸ்ரநாம மந்திரத்துள் 'பஞ்சதாளாய நம' என்ற மந்திரம் தொனிப் பதைக் கேட்டுத் தெளிக ...; 'சிவப் ப்ரீதியின் நிமித்தம் தாளத்தைக் கைக்கொண்டாரை நெருங்கன்மின் என்று எம தூதருக்கு எச்சரிக்கை செய்கின்றார் அப்பர். 'தாளங் கைக் கொண்ட தொண்டரைத் துன்னிலும் சூழலே' (5-92-1) ஆனதால் தாளங் கைக்கொண்டார் காலபாசம் கடந்தவ ராவர்:

"சச்ச புடமிரண்டு வில் கோலும் சார் புலுதம்
இச்சையுடன் மாத்திரையும் எட்டாகும் – மெச்சவரு
சாசபுடம் ஓர்குருவாம் சாரும் லகுவிரண்டு
மாசுகுரு வொன்றுறு மாத்திரையாம் - வீசுபுகழ்
சற்பிதா வோர் புலுதம் சாரும் லகுகுருகோல்
சொற்குருவு நற்புலுதம் சொல்பனிரெண்-டிப்புவியில்
சம்பொற்கட் டம்புலுதம் சாருங் குருமூன்றும்
இன்பமுயிர் மாத்திரையும் ஈராறே - தம்பமெனும்
உத்கட் டிதத்துக் கொருமூன்று வக்கிரந்
தக்கபுகழ் மாத்திரை தானுறும் - ஒக்குமே"

—(108 மாத்திரைத் தாளக் கலிவெண்பா).

65. (கற்சரி) கல் – கல்லென்றும் ஒலியுடன் (சரி) நடை பெறுகின்ற, உற்சவம் – ஒரு திருவிழாவே, தர்ப்பண லக்ஷண– கண்ணுடியில் தோன்றும் லக்ஷணம்போல – திருவிழா ஒன்று கண்ணுடியில் தோன்றும் வகையில் — திருவிழாவின் பிரதி பிம்பம்போல விளங்க, சச்சரி மட்டு–சச்சரி என்னும் வாத்திய ஒலியின் அளவுக்கேற்ப – இசை ஒற்றி – ஒலியை அமைத்து— (அல்லது ராகத்துக்கு ஒத்தபடி) அறுப்பன – தாளங்களை அமைத்துப் போடுவன (அனேகவித பூத வேதாளங்கள்)

66. காய் – காய்ந்து, எரிய – எரிந்து விளங்குகின்ற, தீ எரிவது போன்றுள்ள, பங்கியொடு – மயிருடன், சேகரம் – தலைகளை (அந்தத் தாளத்துக்குத் தக்கபடி), மிகுந்து அசைவ– மிகவும் அசைய ஆட்டுவன (அனேகவித பூதவேதாளங்கள்); (அப்போது அங்கே), காதுபடு – காதிற் பொருந்தச் சங்கக் குழைகளையும், வளமாலிகை (மார்பில்) செழுமை வாய்ந்த மாலைகளையும், புனைந்து — அணிந்து கொண்டு, இசைவ — இசைந்து மனம் பொருந்தியிருந்தன (அனேகவித பூத வேதாளங்கள் )

---

இதன் கீழ்க்குறிப்பில் வில்=குரு ; கோல்=லகு என்றும், சதாசிவ மூர்த்தியின் ஐம்முகங்களில் வாம முகத்தில் சச்சபுடமும், சத்யோஜாதத்தில் சாசபுடமும், அகோரத்தில் சற்பிதா புத்திரிகமும், தற்புருடத்து சம்பொற்கட்டமும், ஈசானத்தில் உற்கடிதமும் தோன்றின என்பது பரதமதம்' — என்றும் குறிப்புக்கள் உள.

65 கற்சரி உற்சவம்-கற்சரி–காற்சரி என்பது கால் அணியுள் ஒன்று (பாதசரம்); பாதசரத்தின் ஒலிகள் சச்சரி என்னும் வாத்தியத்தின் இசைக்கு ஒப்பத் தாளம் அறுப்பன — எனலுமாம்.

66 காய் எரிய பங்கி — பூதம், பேய் இவைகளின் தலை மயிருக்கு நெருப்பு உவமை —

"பேய்கள் எரிதலையொடு"

"மண்டுசெந் தீயெழக் கொளுந்தியன்ன
குஞ்சிவெஞ் சிரத்தவே"

"சுடர் கிளைத்தனைய செய்யசுரி பங்கிவிரிய"

—தக்கயாகப்பரணி 58, 121, 400

[67]கருணைய திகந்துவந் தொண்கோகு லப்பெரிய
கருமுடியொ டும்படுங் கங்காள மொத்துவன
[68]கடிபயிர வாதிகள்ப்ரி யப்படுக திக்கிசைய
நடைநவிலு பாவனை யுதிக்குநட வித்தையின
[69]கடகம டுத்த இடக்கை வலக்கை வாளின
கருதிய லக்ஷிய லக்ஷண முற்று மோதுவ
[70]காலமா ருத வராளிசி கண்டிகை
பாலசீ காமர மானவி பஞ்சிகை

---

67 கோகு — தோள். "கொற்றவன்தன் கோகின்மேல் வெற்றி வாளின் வீசினன்" —சூளா அரசியல்-240. கோ—மலை. 'கோக்கள் தோறும் மின்வாள் வீசி'—வெங்கைக் கலம்பகம் 84. "உலம்தரு தோளினய்" — "உலஞ்செய்த வைரக் குன்றம் ஓரிரண் டனைய தோளான்"—சிந்தாமணி 2915.

68 பயிரவாதிகள் போரில்:—

"உலகெங்கும் ப்ரமிக்க நடம் முடுகு பயிரவர்
பவுரிகொண்டு இன்புறப் படுகளத்தில்"
—திருப்புகழ் 1127,

70-74 (i) *வராளி: புன்னுகவராளி, வஸந்தவராளி, பிரதாப வராளி, குந்தலவராளி, மோஹனவராளி, பூர்வவராளி, ஜாலவராளி, பந்துவராளி — என்பன. கலிப்பா பாடுவதற் குரிய ராகம் — பந்துவராளி. வஸந்தராகம் — புருடராகம். வைசியசாதி; அதன் மனைவிகள் — வராளி, கைசிகம், அதி தேவதை சூரியன்.

(ii) சிகண்டி — 'செய்திறம் சிகண்டி'—பிங்கலம்.

(iii) சீகாமரம் — சீகாமரம் என்னும் பண் 'காமரம்' எனவும் கூறுவர். 'காமரு தும்பி காமரம் செப்பும் தண்பணை' – தும்பி (வண்டு); சீகாமரம் என்னும் பண்ணைப் பாடும் மருத நிலம் — சிறுபாணாற்றுப்படை 77 உரை. (சீகாமரம் - நாத நாமக்ரியை என்னும் ராகம்). 'பால சீகாமரம் – பாலை, சீகாமரம்? பாலை – பாலைப்பண்).

(iv) பைரவி — புருடராகம், பிராமண சாதி, இதன் மனைவி குறிஞ்சி, அதிதேவதை ஈசன். *ஆரோஹனமும், அவரோஹனமும் ஸம்பூர்ணமாயுள்ள ஜன்ய ராகம் இது;

---

*Professor P. சாம்பமூர்த்தி அவர்கள் எழுதியுள்ள நூல் களினின்று எடுத்த குறிப்புக்கள்.

67. கருணையது இகந்து – கருணையென்பதை, இகந்து – விட்டுவிட்டு வந்து, ஒண்–ஒள்ளிய, கோகுலம், உலம்-திரண்ட கல்போன்ற, கோகு — புயங்கள் பெரிய (கரு-) வலிமை பொருந்திய முடியொடும் படும்படி–கங்காளம்–முழு எலும்பை ஒன்றேடொன்று மொத்துவன — மோதி அடிப்பனவாகும், அல்லது ஒண்கோ - விளங்கும் மலைபோன்ற, குலப் பெரிய - சிறந்த பெரிய (கருமுடியொடும்) கரு நிறத்து (அசுரர்களின்) முடியொடும் — தலைகளுடன் — படும்படி (கங்காளம்) அவர்களுடைய (உடல்) எலும்புகளை-மொத்து வன-மோதி அடிப்பனவாகும் (அனேகவித பூதவேதாளங்கள்)

68. கடி - (போர்க்களத்தே) காவலாயுள்ள பயிரவாதிகள் – அட்ட பயிரவர் முதலானோர் (ப்ரியப்படு) விரும்புகின்ற (கதிக்கு இசைய) வழிக்கு ஒத்தபடி (நடைநவிலும்) கூத்துக்களை விளக்குகின்ற (பாவனை) அடையாளங்கள் (உதிக்கும்) வெளித் தோன்றுகின்ற (நடவித்தையின) நடன வித்தைகளை நடன கலைகளைக் காட்டுவன (அனேகவித பூதவேதாளங்கள்)–

69. (கடகம்) கங்கணம் (தோள்வளை) (அடுத்த) பூண்டுள்ள இடது கையையும், (வலக்கை வாளின்) – வாள் ஏந்திய வலது கையையும் உடையன (அனேகவித பூத வேதாளங்கள்; கருதிய லக்ஷிய லக்ஷணம் - மதிக்கப்படுகின்ற நடனமுறையின் இலக்கியம், இலக்கணம் (முற்றும்) முழுமையும் ஓதுவ – படிப்பன (அனேகவித பூத வேதாளங்கள்)

70. காலம் மாருத – காலம் மாறுமல் — குறிப்பிட்ட காலத்திலேயே பாடவேண்டிய ராகமான 'வராளி' என்கின்ற ராகத்தையும் (சிகண்டிகை), பாலையாழ்த்திறன்வகையைச் சார்ந்த 'சிகண்டி' என்னும் ராகத்தையும், பால சீகாமரம் – (பால) தகுதியுள்ள (சீகாமரம்) மருதயாழ்த்திறன் வகையைச் சார்ந்த சீகாமரம் என்னும் ராகத்தையும், மான விபஞ்சிகை-மானம்-பெருமை வாய்ந்த, (விபஞ்சிகை) குறிஞ்சி யாழ்த் திறன்வகையைச் சார்ந்த "விபஞ்சி" என்னும் ராகத்தையும்

---

தாய் ராகத்தில் வராத ஸ்வரங்களை எடுத்துக்கொள்ளும் ஜன்ய ராகம் – பாஷாங்கராகம் எனப்படும்; பைரவி ஒரு பாஷாங்க ராகம்; கர்நாடக தேசிய ராகம். இந்த ராகம் எப்பொழுதும் பாடலாம்; விஸ்தாரமான ஆலாபனைக்கு இடம் கொடுக்கும் ராகம் இது; கருணை ரசத்தை உண்டாக்கும் ராகங்கள் ரக்தி ராகங்கள் எனப்படும். ராகங்களில் மிக மேன்மையான ராகம்

[தொடர்ச்சி பக்கம் 374-ல் பார்க்க.]

[71]கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி யிசைவன
[72]கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனத ஞசிவி தம்படு பஞ்சமி
[73]கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தடைவில்
உச்சமது சாதிகமெ டுத்துமேல் எட்டுவன
[74]கஞ்சக் கஞ்சநற் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழை யேந்துவ
[75]கற்றவு டுக்கையி டக்கைக ளப்பறை
மத்தளி கொட்டிய முற்றும டிப்பன

---

[ 373-ஆம் பக்கம் கீழ்க் குறிப்புத் தொடர்ச்சி.]
இது. ச்லோகங்கள், பத்யங்கள், விருத்தங்கள், கலித்துறை பாடுவதற்கேற்ற ராகம் இது; பூர்வ ப்ரசித்த ராகங்களில் இது ஒன்று; இசை நாடகங்களில் உபயோகப்படும் ராகங்களில் இது ஒன்று. 'இனித்த பயிரவி'—பொருகள-வகுப்பு 29.

(v) லளிதை :-'படமஞ்சரி' ராகத்தின் குறிப்பைப் பார்க்க.

(vi) கைசிகம் :—'வராளி' ராகத்தின் குறிப்பைப் பார்க்க. 'இதத்த கயிசிகம்'—பொருகளத்தலகை வகுப்பு 29. 'இசைதனில் இனிய கயிசிகை'—புய வகுப்பு 17.

(vii) கவுளி :—'தஞசி' ராகத்தின் குறிப்பைப் பார்க்க.

(viii) மலகரி :—இது 'பூபாள ராகத்தின் மனைவி'; பூபாளம் புருட ராகம், பிராமண ஜாதி, இதன் மனைவிகள் — மலகரி, பௌளி; அதிதேவதை – திருமால்.

(ix) பவுளி :—'மலகரி' ராகத்தின் குறிப்பைப் பார்க்க.

(x) படமஞ்சரி :—புருடராகம், அரச சாதி, இதன் மனைவி – தேசி, லலிதை; அதிதேவதை - இலக்குமி.

(xi) தஞசி :–இது வஸந்தகால ராகம்; 'பங்காளம்'–புருட ராகம் – சூத்ர சாதி; மனைவி – தஞசி, கௌளி, அதிதேவதை விநாயகர்.

(xii) தேசி :–'படமஞ்சரி' - ராகத்தின் குறிப்பைப் பார்க்க.

(xiii) குறிஞ்சி :—'பைரவி' ராகத்தின் குறிப்பைப் பார்க்க.

(i) பாலையாழ்த்திறம் :—'வராடி - பெரிய வராடி, பஞ்சமம்– தஞசி, கொல்லிவராடி ...சிகண்டி ... பாலையாழ்த்திறம் என்ப– (பிங்கலம்).

71. கவுட பயிரவி - கவுடி ?, பயிரவி என்கிற ராகங்களை யும், லளிதை, கயிசிகை என்கிற ராகங்களையும், 'கவுளி'— கௌளி என்கிற ராகத்தையும், ('மலகரி') குறிஞ்சியாழ்த் திறன்வகையைச் சார்ந்த 'மலகரி' ராகத்தையும், 'பவுளி' என்கிற ராகத்தையும் (இசைவன) பாடுவன (அனேகவித பூத வேதாளங்கள்)

72. 'கனவராடி'–பாலையாழ்த்திறன் வகையைச் சார்ந்த 'பெரிய வராடி' என்கிற ராகததையும், (அரும்) அருமை யான 'படமஞ்சரி' என்கிற ராகத்தையும், (தன தனுசி) தன்மை வாய்ந்ததும் பாலையாழ்த்திறன் வகையைச் சார்ந்த 'தனுசி' ராகத்தையும், விதம்படு-பாலையாழ்த்திறம் 'குறிஞ்சி யாழ்த்திறம் இரண்டினும் பேதப்பட்டு வரும் — (பஞ்சமி) 'பஞ்சமம்' எனனும் ராகத்தையும்

73. கைச்சுலவு கோல்முறை-கையாற் சுழற்றிக் காட்டப் படும் கோலின் வழியே–(விதித்த) அமைக்கப்பட்ட ராகத்தின் (அடைவில்) இலக்கணப்படியே, (உச்சமது சாதிகம் எடுத்து) மிக உயர்ந்த தொனியில் இசையின் தன்மையை எழுப்பி மேலே எட்டவல்ல திறத்தன (அனேகவித பூத வேதாளங்கள்)

74. (கஞ்சக் கஞ்சம்) வெண்கலத்தால் ஆய கைத் தாளத்துடன், நல் - அழகிய ('தேசி' ராகத்தையும், ராஞ்சி- (ரஞ்சி) ரஞ்சிதமான - இன்பகரமான (குறிஞ்சிப்பண்) - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்னும் நால்வகைப் பண்களுள் ஒன்ருகிய குறிஞ்சி எனப்படும் (பண் குறித்து) பண்வகையை யும் குறித்துப் பாட யாழ் வாத்தியத்தைக் கையில் ஏந்தி வருவன (அனேகவித பூத வேதாளங்கள்)

75. (கற்ற) தாம் கற்றிருந்தபடியே உடுக்கை, இடக்கை, (களப்பறை) போர்க்களத்துக்கு உற்ற பறை, (மத்தளி) மத்தளி என்னும் பறைவகை, கொட்டு இயம் - கொட்டப்படும் வாத்தியங்கள் (முற்றும்) எல்லாவற்றையும் அடிப்பன (அனேகவித பூத வேதாளங்கள்)

---

(ii) **குறிஞ்சியாழ்த்திறம் :**—மலகரி, விபஞ்சி ...... கௌடி ...... திவ்வியவராடி...பஞ்சமம் – குறிஞ்சியாழ்த்திறமாகக் கூறுவர் (பிங்கலம்).

(iii) **மருதயாழ்த்திறம் :**—' ...சீகாமரம் ...... என இவை மருத யாழ்த்திறனே' (பிங்கலம்).

75_77 உடுக்கை, இடக்கை, துடி, திமில் (திமிலை), கரடி (கரடிகை) – மத்தளி — திருப்புகழ் 404, அடி 7, பக்கம் 525– உரைப்பகுதி; திருப்புகழ் 354, அடி 6, பக்கம் 395. பஞ்ச முகி –' நாதமாம் பஞ்சானன முரசும்'–திருவாரூர் உலா 351.

[76]காரெனமு ழங்குகுர லேறுதுடி சந்த்ரவளை
வீரமுர சுந்திமில்த டாரிகுட பஞ்சமுகி
[77]கரடிபறை யங்கனந் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றெண்ரேடு கிட்டுவன
[78]கசரதப தாகினிய ரக்கர்துணி பட்டுவிழு
களமுழுதும் வாழிய திருப்புகழ்மு ழக்குவன

---

வீர முரசு — முரசு மூவகை — வீர முரசு, தியாக முரசு, நியாய முரசு என்பன. 'மூன்றிலின் முழங்கு மூவகை முரசும்' சரபேந்திர-குற 30, 35-6. 'இமிழ்குரல் முரசம் மூன்றுடன்' புறநானூறு 58 உரை; படை முரசு, கொடை முரசு, மண முரசு - எனவும் கூறுவர்.

" அடையலர் ஒடுங்க மோதும் படைமுர சதிரும் ஓதை;
இடைபடு வறுமை யோட விடுகொடை முரசி னோதை
கடைபடு வடிவேற் கண்ணார் கடிமண முரசி னோதை
முடியுடை அரசர்வீதி யெங்கணும் முழங்கக் கண்டார்"
—(சீரு. சரம் 27).

வீர முரசு, கொடை முரசு, மங்கல முரசு—எனவும் கூறப்படும்.

உடுக்கை, இடக்கை, மத்தளம், துடி, சந்திர வளையம், முரசு, திமிலை, தடாரி, குடமுழா, கரடிகை, பறை — இவை தோலாற் செய்யப்பட்ட கருவிகள் : வாத்திய வகைகள் :—

" பேரிகை படகம் இடக்கை உடுக்கை
சீர்மிகு மத்தளம் சல்லிகை கரடிகை
திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை
தமருகம் தண்ணுமை தாவி தடாரி
யந்தரி முழவொடு சந்திர வளையம்
மொந்தை முரசே கண்விடு தூம்பு
நிசாளம் துடுமை சிறுபறை யடக்க
மாசில் தகுணிச்சம் விரலேறு பாகம்
தொக்க உபாங்கம் துடிபெரும் பறையென
மிக்க நூலோர் விரித்துரைத் தனரே"

இடக்கை, கரடிகை, மத்தளம், குடமுழ — இவை 'அக முழவு' எனப்படும்; முரசு, திமிலை—இவை பண்ணமை முழவு, வீர முழவு எனப்படும்; துடி என்பது காலை முழவு; மத்தளம்— இசையிடனுகிய கருவிகட் கெல்லாம் தளமாதலால் மத்தளம் என்று பெயர்; இடக்கை — வினைக் கிரியைகள் இடக் கையாற் செய்தலின் 'இடக்கை' என்று பெயர்.

76. (கார் என முழங்கு) மேக கர்ஜனை போன்ற (குரல் ஏறு துடி) தொனியை எழுப்புகின்ற (துடி) – உடுக்கை என்னும் பறைவகை, (சந்த்ரவளை) – தோற்கருவி வாத்தியம், வீர முரசு – மும்முரசுகளுள் வீரத்தின் அறிகுறியாக முழக்கப்படும் முரசு (பறை), (திமில்) திமிலை என்னும் பறைவகை – (தடாரி) பம்பை என்னும் பறை, குடபஞ்சமுகி — குடம்போன்ற பஞ்சமுக வாத்தியம் - ஐம்முகம் உடைய முரசுவகை

77. கரடிபறை — கரடிகை—கரடி கத்தினாற்போலும் ஓசையுடைய பறைவகை, (அங்கு –) அந்தப் போர்க்களத்தில், (அனந்தம் கோடி) அளவற்ற கோடிக் கணக்கிற் கொட்டுவன– அடிபட்டு முழக்குவன ; (முறை முறை) வரிசை வரிசையாக (கவந்தம்) உடற்குகைகள் - தலையற்ற உடல்களின் அருகே நின்று ஒன்றுடன் ஒன்று அணுகுவன (அனேகவித பூத வேதாளங்கள்)

78. (கஜம்) யானைகளும், (ரதம்) தேர்களும், பதாகினி– காலாட்படையும் உள்ள அரக்கர் படை-அரக்கர் சேனை, துணி பட்டுவிழ – அறுபட்டு விழுகின்ற, (களம் முழுதும்) போர்க் களம் முழுதும்) போர்க்களம் முழுதும்–(வாழிய) 'முருகவேள் வாழ்க' எனக்கூறி அவனது திருப்புகழை ஓதி அங்கே (முழக்கு வன) ஒலி எழுப்புவன (அனேகவித பூத வேதாளங்கள்)

---

கரடிகை — கரடி கத்தினாற்போலும் ஓசையை உடைத் தாதலாற் கரடிகை என்று பெயர்.

மத்தளம் – முதலில் கரங் கொள்வது மத்தளமாதலின் இது 'முதற்கருவி'.

உடுக்கை — கடைக் கருவி – கடைக்கண் தட்டுக்கு உரித் தாதலின் இது 'கடைக்கருவி'.

—(சிலப்பதிகாரம் உரை பக்கம் 106).

77 கவந்தம் — திருப்புகழ் 354, பக்கம் 394 கீழ்க்குறிப்பு. 1127, பக்கம் 285 கீழ்க்குறிப்பு.

78 போர்க்களத்தில் முருகன் புகழைப் பூதவேதாளங்கள் முழக்கின : 'சில பாடல் படிப்பன திருப்புகழ் எடுப்பன முடிப்பன பயற்றி அலகைக் குலம்'—திருப்புகழ் 1250.

79கடியகு ணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய
80காதநூ ருயிர கோடி வளைந்தன
பூதவே தாளம் அநேகவி தங்களே.

---

79 விழித்த பார்வைய — "சுழித்து வெருவர விழித்த விழியின"—பொருகளத் தலகை வகுப்பு 18.

80 பூத வேதாளம் அனேக விதங்கள் :

"சேனையாளென அநேக பூதமொடு
செய்த பேய்களொடு செல்லவே"
—தக்கயாகப்பரணி 594.

---

பூதவேதாள வகுப்பின் சுருக்க உரை

ஆதிசேடன் தன் தலையிற் சுமக்கும் அகில உலகங்களையும் ஈன்றவளாகிய தேவியின் திருமைந்தன், காங்கேயன், நக்கீரனுக்கு உதவி புரிந்தவன், குறுமுனிக்கு முத்தமிழ் போதித்தவன், பிறவிக் கடலினின்றும் என்னை மீட்டவன், தபோதனர்களின் உள்ளக் குகையில் விளங்குபவன், தேவசேனைக்கு நாயகன், மந்திரஎழுத்துக்களில்தங்கியும், அவைகட்கப்பாலும் விளங்குபவன், பத்தர்களின் போற்றுதலை ஏற்பவன், ஆறு திருப்பதி ஆதிய கணக்கிலாத் தலங்களில் வீற்றிருப்பவன், சிவந்த ஆடையன், அறுவர் முலை உண்டவன், சரவணபவன், கடப்பமாலையன், வள்ளி காதலன், சிவகுரு, திருமால் மருகன், நினைப்பவர்தம் வினைப்பகையை அறுப்பவன், வள்ளியின் பொருட்டுக் கிழ வேதியனானவன், கூதள மாலை புனைந்தவன், குருபரன், குணதரன், பிரமனை விலங்கிட்டவன், வேற்கரத்தோன், வீடளிப்பவன், விநாயகருடன் போட்டியிட்டு உலகெலாம் ஒரு நொடியில் வலம் வந்தவன், ஆறு சமயங்களுக்கும் அப்பாற்பட்டவன், யாவும் உணர்ந்தவன், சேவற்கொடியோன்—ஆகிய முருகவேள் வேல் ஏந்திச் சூரனது சேனையுடன் பொருத போர்க்களத்தில்-இருள் நிறம் பொருந்தி அச்சத்தைத் தந்தன சில பூதவேதாளங்கள் ; நடனம் புரிந்தன சில ; தத்தம் குழந்தைகள் அழாது காத்தன சில ; கடல்களைத் தாவின சில ; போர்க்களத்தில் சிதறிக்கிடந்த ரத்னமணி

79. (கடிய குணத்த சினத்த) கொடுமையுடன் கூடிய கோப குணத்தை உடையன; [சகத்ர – சகச்சிரம் - ஆயிரக் கணக்கான (யோசனே) யோசனே எல்லேக்கு, (நெடிய கழுத்த) நீண்டுள்ள கழுத்துக்களோடும், (சுழித்த விழித்த) சுழன்று விழிக்கின்ற (பார்வைய) கண்களோடும் கூடியன (அனேகவித பூத வேதாளங்கள்)

80. இத்தகைய பூத வேதாளங்கள் (காதம் நூறுயிரம் கோடி) – நூறுயிரகோடி காதம் தூரம் – லக்ஷம்கோடி காதம் தூரத்துக்குச் (சூரசம்மாரப் போர்க்களத்தில்) சூழ்ந்து நின்றன (பூத வேதாளம் அனேக விதங்களே) (அனேகவித பூத வேதாளங்கள்.

---

களேக் கொண்டு ஒற்றையா இரட்டையா என்னும் விளேயாட்டைப் புரிந்தன சில ; திருமணம் நடத்தின சில ; ரத்த ஆற்றில் விளேயாடின சில ; யானேகளே கடைவாய்க்குள்ளே விழுங்கின சில ; எழுகடல் நீரையும் உறிஞ்சியும் பசி தீராது நின்றன சில; மலேயை அசைப்பன சில ; கோட்டான், பாம்பு இவைகளேத் தாலியிற் கோத்தணிந்தன சில; விழித்தன சில; இறந்துபட்ட யானேயின் வயிற்றிற் கிடந்து தூங்கின சில ; மாமிசக்கடை வைக்க யானேகளின் எலும்புகொண்டு கடைகளேக் கட்டின சில ; வெட்டுவன சில ; முட்டுவன சில ; மாமிசக் கொழுப்பில் வழுக்கி விழுந்து உருண்டன சில ; காதிற் குழையோலேக் காகப் பொன்மலேயையே பிடுங்கின சில ; கரணம் இட்டன சில ; கொக்கரித்தன சில ; மூங்கில் நட்டு நடனமிட்டன சில : கண்கள் தீக்கொளுந்தப் பார்த்தன சில ; பஞ்ச தாள பேதங்களேக் கைத்தாளமிட்டுக் காட்டின சில ; எரியன்ன தலேமயிர், காதிற் சங்கக் குழை, மாலேகள் விளங்க வந்தன சில ; எலும்புகளே மொத்தி மோதி விளேயாடின சில ; பலவித நடனங்களே நடித்தன சில ; வாள்வீச்சிலக்கணம் ஓதின சில ; வராளி முதலிய ராகங்களே உரக்கப் பாடி யாழ் ஏந்தின சில ; உடுக்கை ஆதிய வாத்தியங்களே முழக்கின சில ; கோடிக் கணக்கான பறையடித்தன சில; போர்க்களம் முழுதும் முருகன் திருப்புகழை முழக்கின சில ; இங்ஙனம் பொல்லாத அனேகவித பூதவேதாளங்கள் லக்ஷகோடி காத தூரம் அப் போர்க்களத்தைச் சுற்றி வளேந்தன.

## 7. பொருகளத் தலகை வகுப்பு

[முருகபிரான் அசுர சம்ஹாரஞ் செய்த போர்க்களத்துள்ள பேய்கள் வருணனை. திருப்புகழ் - 354, 404, 406, 1013, 1127, 1250-ஆம் பாடல்களைக் காண்க.]

தனத்த தனதன தனத்த தனதன

[1] அதிர்த்த பரிபுர பதத்தி பயிரவி
அமைத்த கரதலி ப்ரியத்தை யுடையன
[2] அடித்த தமருக கரத்தர் பயிரவர்
நடித்த நவரச நடத்தை யறிவன
[3] அருக்கர் பதமல வுடுக்கள் பதமள
வடுக்கு பிணமொரு குறட்டி லடைசுவ
[4] அளக்கர் உடைபட மிகுத்த குருதியை
அடைத்து மடைபட வுடைத்து விடுவன
[5] அரக்கர் முடிகளை யடுப்பு வகிர்வன
அவற்றின் உலையென இரத்தம் விடுவன

---

[1] தேவியின் பாதத்திற் சிலம்பு — 'பரிபுர ஒலிகொடு நடநவில்' -எனவரும் தேவேந்திர வகுப்பு (2) குறிப்பைப்பார்க்க. 'தமர நூபுராதார சரணி'-தக்கயாகப்பரணி 107. தேவியின் ப்ரியத்தை உடையன - தேவியிட்ட வேலைகளைப் பணிவுடன் செய்வன ஆதலின் - தேவியின் ப்ரியத்தை உடையன பேய்கள். "அடியோம் பணிசெய்யப் பணி வாழி" — தக்கயாகப். 235.

[2] பயிரவர் நடிப்பது — 'நடமுடுகு பயிரவர் பவுரிகொண் டின்புறப் படுகள(ம்)' — திருப்புகழ் 1127.

தமருக சதியுடன் பைரவர் நடம் :-

"கரதலந் தரும் தமருக சதிபொதி
கழல்புனைந்த செம் பரிபுர வொலியொடு
கலகலன் கலன் கலனென வருமொரு
கரிய கஞ்சுகன் கழலிணை கருதுவாம்"
— தக்கயாகப்பரணி-காப்பு.

'தயங்குசுடர் வலத்திருக்கைத் தமருகத்தின் ஒலிதழைப்ப' 'துடிசேர் கரத்துப் பைரவர்' — பெரியபுரா - சிறுத். 34, 43.

"பைரவர் ...... கீதமொடே தமருக இசைவழங்கி யாடுவரே" — மோகவதை 129. (தக்கயாகப்பரணி விசேடக் குறிப்பு - பக்கம் 283, பாடல் 96.)

### பொழிப்புரை

**1.** (அதிர்த்த) ஒலிசெய்யும் (பரிபுர பதத்தி) சிலம் பணிந்த பாதங்களை உடையவள், பயிரவி, (அமைத்த கரதலி) அஞ்சல் என்னும் குறிப்பைக் காட்டும்படி பொருந்திய திருக் கரத்தை உடையவள் — ஆகிய தேவியின் பிரியத்தைப் பெற்றவை (பொருகளத்தலகைகள்)

2. (தமருகம் அடித்த கரத்தர்) உடுக்கை அடித்த திருக் கரத்தர்களாகிய (அட்ட) பயிரவர்கள் நடிக்கும் நவரசக் கூத்தின் (இலக்கண இலக்கியத்தை) உணர்ந்தவை (பொரு களத் தலகைகள்)

3. அருக்கர் பதமல – சூரிய மண்டல அளவல்ல (அதற்கு மேலும் உள்ள) உடுக்கள் பதம் அளவு – நட்சத்திர மண்டல அளவு வரை, அடுக்கி வைத்துள்ள பிணங்களை ஒரு (குறட்டில்) ஒரு திண்ணைபோல (அடைசுவ) பொருத்தி (அலங்கரித்து) வைப்பன (பொருகளத்தலகைகள்)

4. (அளக்கர்) கடல் உடைபட்டால் மிக்குப் பெருகுவது போல மிக்குப் பெருகும் (குருதியை) ரத்தத்தை ஒருசேர அடைத்தும், அடைபட்டவுடன் உடைத்துவிட்டும் (விளையாடு வன) - (பொருகளத்தலகைகள்)

5. (இறந்துபட்ட) அசுரர்களுடைய முடிகளை அடுப்பாக (வகிர்வன) பங்கிட்டு அமைப்பன; அமைத்து அவற்றில் உலை நீராக ரத்தத்தைப் பெய்வன (பொருகளத்தலகைகள்)

---

நவரச நடம் — (1) வீரச் சுவை (2) பயச் சுவை (3) இழிப்புச் சுவை (4) அற்புதச் சுவை (5) இன்பச் சுவை (6) அவலச் சுவை (7) நகைச் சுவை (8) நடுவுநிலைச் சுவை (9) உருத்திரச் சுவை. (சிலப்பதிகாரம் 3, பக்கம் 83.)

3 குறடு — இறைச்சி கொத்தும் பட்டை மரம் - எனக் கொண்டு அடுக்கப்பட்ட பிணத்தை அப்பட்டை மரத்தில் வைத்து இறைச்சியைக் கொத்துவன - எனலுமாம்.

4 இங்ஙனம் (கடல்நீரை) அடைத்தும் உடைத்தும் விளை யாடும் வேல் என்றார் வேல் வகுப்பில் (அடி 13).

5-6 அசுரர் முடிகள் அடுப்பு; கரம் - அகப்பை; உலைநீர் – ரத்தம்; எயிறு – உலையிலிட அரிசிபோன்ற பொருள். இது போன்ற கருத்தை —

[6]அடுக்கல் எனுமவர் எயிற்றை யவர்கர
அகப்பை யவைகொடு புகட்டி அடுவன
[7]அமிழ்த்தி அடிவிழு பிணத்தின் நிணவெளி
றளற்றி னிடையடி வழுக்கி விழுவன
[8]அடப்பை யிடவரும் அணுக்க ருடன்வரு
தடக்கை மதமலை நடத்தி வருவன ;
[9]குதித்து மகிழ்வொடு மிதித்து நடமிடு
குறட்கு மிகுதசை கொடுத்து வருவன
[10]கொழுத்த குரகத இறைச்சி வகைவகை
குவித்து முறைமுறை அவித்து நுகர்வன
[11]குருத்து மலரினும் வெளுத்த நிணமது
கொளுத்தி அனலதில் வெதுப்பி யிடுவன

---

(i) 'ஆண்டலை அடுப்பின் வயவேந்தர் ஒண்குருதி சினத்தீயிற் பெயர்பு பொங்க...... தொடித் தோட்கை துடுப்பாக'—மதுரைக்காஞ்சி 29–24.

(ii) 'முடித்தலை அடுப்பாகப் புனற்குருதி உலைக் கொளீஇத் தொடித்தோள் துடுப்பிற் றுழந்த வல்சி'—புறநானூறு 26.

(iii) 'முடித்தலை அடுப்பில் தொடித்தோள் துடுப்பில்' —சிலப்பதிகாரம் 26-242.

(iv) 'அசுரர் சிரங்கள் அடுப்பா வைத்து'
—போர்க்களத் தலகை வகுப்பு அடி 24.

(v) 'முடித்தலை ஒப்ப அடுப்பென வைத்து'
—செருகளத் தலகை வகுப்பு 9.

—எனவரும் இடங்களிற் காணலாம்.

"அடுக்கல் எனுமவர் எயிறு"—"எயிறுகளுடைய பொருப்பை"—கலிங்கத்துப்பரணி 12-11.

எயிறு - பல் - அரிசி — "கூழினுக்கு ஆய்ந்த வெண்பல் அரிசி உரல் புகா" — கலிங்கத்துப்பரணி பேய்களை 13.

'பழ அரிசியாகப் பண்ணின கொண்மினோ', 'கூழினுக் குச் சொரியும் அரிசி வரி எயிறு' 'பல் அரிசி யாவும் மிகப் பழ அரிசி தாமாக'—கலிங்கத்துப்பரணி களம் பாடியது 53, 54, 74. 'வானவர் பல்லும் ...... தானவர் பல்லும் தீட்டி அரிசியாச் சமைத்துக் கொள்ளீர்'—தக்கயாகப்பரணி 733.

6. அடுக்கல் எனும் – மலையாகக் குவிந்துகிடந்த (அவர் எயிற்றை) அந்த அசுரர்களின் பற்களை (அவர் கர அகப்பை அவைகொடு) அவர்களின் கரங்களாகிய (கைகளாம்) துடுப்பைக் கொண்டு, (புகட்டி) (உலைநீரில்) (அரிசியென) எடுத்துப் போட்டு (அடுவன) சமையல் செய்வன (பொருகளத் தலகைகள்)

7. அமிழ்த்தி-குருதிநிணச் சேற்றில் அமிழ்ந்து போகும் படியாக, (அடி)—தங்கள் காலடியில் வந்து விழுகின்ற பிணங்களின் (நிணம்) கொழுப்பாகிய (வெளிறு) வெண்ணிறத்த (அளற்றினிடை) சேற்றிடையே (அடி) தங்கள் அடி வழுக்குதலால் கீழே விழுவன (பொருகளத் தலகைகள்)

8. (அட) அடுதற்கு – கொல்வதற்கு, பையிடவரும் – கோபித்துப் பொங்கி வருகின்ற – (அணுக்கருடன்) பக்கத்தே தம்மீது ஏறியுள்ளவர்களுடன், (வரு) வருகின்ற – (தடக்கை) பெரிய துதிக்கை உடைய (மதமலை) மதங்கொண்ட யானைகளை நடத்தி வருவன (பொருகளத் தலகைகள்)

9. குதித்து மகிழ்ச்சியுடன் (மிதித்து) கால் வைத்து – அடிவைத்து - நடனம் செய்யும் (குறட்கு) பூதத்துக்கு நிரம்ப (தசை) மாமிசச் சதைகளை (உண்பதற்குக்) கொடுத்து வருவன (பொருகளத் தலகைகள்)

10. கொழுப்புற்றிருந்த (குரகத இறைச்சி) குதிரை மாமிசத்தை (வகை வகையாக) விதம் விதமாக (குவித்து)க் கூட்டித் திரட்டி முறைப்படி முறைப்படி (அவித்து) வேவவைத்து (நுகர்வன) உண்பன (பொருகளத் தலகைகள்)

11. குருத்து மலரினும் — மலர் மொட்டினும் அதிக வெண்ணிறமுள்ள (நிணமது) கொழுப்பு — மாமிசத்தைக் கொளுத்தி (அனலதில்) நெருப்பில் அதை (வெதுப்பி யிடுவன) வாட்டிக் காய்ச்சிப் பரிமாறுவன (பொருகளத் தலகைகள்)

---

7 நிணச் சேற்றில் பேய்கள் வழுக்கி விழுவதை - 'பிணத்து நிணத்தின் அளற்றிலே ...... வழுக்கி உருட்டி வீழ்வன' எனப் பூதவேதாள வகுப்பில் (அடி 59) வருமிடத்துங் காண்க.

10 குதிரை இறைச்சியை உண்பது: 'இவுளித் துணியிட்டிருமருங்கு மடுத்துப் பிடித்துமெத் தெனவைத் தடுப்பினின்றும் இழிச்சீரே'—கலிங்கத். களம் பாடியது 81. 'பரிபிளந்து தசைமிசைந்து சிறிதவிந்த பசியவே'–தக்கயாகப்-132

[12]குதட்டி நெடியன உதட்டில் இடுதசை
கொடிக்கு முதுசின நரிக்கும் உமிழ்வன
[13]குணக்கு வளைகடல் வடக்கி யமதிசை
குடக்கு முழுவது மடக்கு வயிறின
[14]குரக்கு மிடறின கரத்தில் எழுகிரி
குலுக்கி யடியொடு பறித்து நிமிர்வன
[15]குதித்து முழுகியும் இரத்த நதியிடை
குடித்தும் உணர்வொடு களித்து வருவன
[16]குறத்தி யிறைவனை நிறைத்து மலரடி
குறித்து வழிபடு குணத்தை யுடையன ;
[17]துதிக்கை மலைகளை அடுக்கி அலகைகள்
துதிக்க அவைமிசை யிருக்கும் அரசின
[18]துளக்கம் உறுசுடர் விளக்கை யனையன
சுழித்து வெருவர விழித்த விழியின

---

[12] பேய்களுக்கு 'நெடியன உதடு' - ' தாழ்ந்து மார்பிடைத் தட்டும் உதட்டின '—கலிங்கத்துப்பரணி 6–8.

[13] யமதிசை – தெற்கு. 'தென் றிசைக் கிறைவன்'— யமன்-சிந்தா–குணமாலை 230.

[14] பேய்களுக்குக் குரக்கு வாதம் : " பாய்ந்த செம்புனல் ஆடியும் நீந்தியும் குரக்கு வாதம் பிடித்த விதத்தினிற் குடி யடங்கலும் கூன்முது கானவும்' ?—கலிங்கத்துப் பரணி பேய்களைப் பாடியது 18.

எழுகிரி – சூரனுக்கு அரணாயிருந்த ஏழுகிரி :

—திருப்புகழ் 257, பக்கம் 140 குறிப்பு.

[15] பேய்கள் ரத்தம் (குருதி) குடித்தல், குதித்தல் :—

" குருதி ......... தனித்தனி வயிறு வீங்கக் குடித்துடல் தடித்தீர் " — தக்கயாகப்பரணி 737, 738. " செந்நீர் திரைகடல் பருகலாக .........''—கலிங்கத்துப்பரணி 10, 75. " குடிப்பன ...... குருதிக் கடலிடையூடே குதிப்பன ......''— திருப்புகழ் 1250. கந்தரலங்காரம் 7.

[18] பேய்கட்குச் சுழல் விழி — " சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கு ''—திருமுருகாற்றுப்படை 48.

" சுழல் கட்பேய் ''—புறப்பொருள் வெண்பாமாலை 141.

12. (குதட்டி) வாயிலிட்டு மென்று, (நெடியன உதட்டில்) நீண்டு தொங்கும் தமது உதட்டில், (இடுதசை) இட்ட மாமிசத்தைக் (கொடிக்கும்) காக்கைக்கும் (முதுசின நரிக்கும்) பழையதும் கோபங்கொண்டுள்ளதுமான நரிக்கும் (உண்ணும்படி தமது வாயினின்றும் வெளியே) உமிழ்ந்து தள்ளுவன (பொருகளத்தலகைகள்)

13. (குணக்கு) கிழக்கு, கிழக்கில் உள்ள வளைகடல், குடாக்கடல், வடக்கு, (இயமதிசை) தெற்கு, (குடக்கு) மேற்கு (முழுவதும்) ஆக, நாற்றிசை முழுவதும் (அடக்கும் வயிறின) அடக்கவல்ல வயிற்றைக் கொண்டன (பொருகளத்தலகைகள்)

14. குரக்கு — குரக்குவாதம் பிடித்த காரணத்தால் வளைந்திருந்த (மிடறின) கழுத்தை உடையன; (கரத்தில்) கையில் ஏழுமலைகளையும் குலுக்கி அடியோடு அவைகளைப் பறித்து நிமிர்ந் தெழுவன (பொருகளத்தலகைகள்)

15. இரத்த நதியிடை குதித்தும் முழுகியும் குடித்தும் — ரத்த ஆற்றிலே குதித்தும், முழுகியும், ரத்தத்தைக் குடித்தும் (உணர்வொடு) தெளிந்த அறிவுடன் (களித்து மகிழ்வுற்று வருவன (பொருகளத்தலகைகள்)

16. (குறத்தி) வள்ளியின் — (இறைவனை) நாயகனது (நிறைத்து மலரடி குறித்து - அடி குறித்து மலர் நிறைத்து) திருவடியைத் தியானித்து மலர்கள் நிரம்ப இட்டு (வழிபடும்) பூசித்து வணங்கும் குணத்தை உடையன (பொருகளத் தலகைகள்)

17. (துதிக்கையையுடைய மலைகளை) (இறந்துபட்ட) யானைகளை (ஒன்றன்மேல் ஒன்றாக) அடுக்கி, (அலகைகள்) பேய்கள் (துதிக்க) போற்றிசெய்ய, (அவைமிசை) அங்ஙனம் அடுக்கப்பட்ட ஆசனத்தின்மேல் (இருக்கும் அரசின) அரசு வீற்றிருப்பன (பொருகளத்தலகைகள்)

18. துளக்கம் உறு - அசைதலை உற்ற (சுடர் விளக்கை) ஒளி விளக்கை (அனையன) நிகர்ப்பன; சுழிசுழித்து (வெருவர) அச்சம் ஊட்டும் வகையில் விழித்த (விழிகளை) கண்களைக் கொண்டன (பொருகளத்தலகைகள்).

[19]துதித்து வழிபட நடத்தல் குறையன
சுகித்து வெளிபட நகைத்து வருவன
[20]துணித்த கரியுடல் திணித்த மிடறிடை
துவக்கி அவசமொ டுவிக்கி நிமிர்வன
[21]தொலைத்த முடிநிரை பரப்பி வயிரவர்
சுழற்றி நடமிடு துருத்தி இடுவன
[22]துணுக்கம் உளஅவர் துணுக்கம் இலையென
எடுத்த கழிநெடில் படித்து வருவன
[23]சுரர்க்கு மகபதி தனக்கும் இனியொரு
துளக்கம் இலையென மகிழ்ச்சி புகல்வன
[24]தொகுக்கு தொகுதொகு தொகுக்கு தொகுதொகு
தொகுக்கு தொகுஎன நடித்து வருவன ;

---

[19] குறை – வேண்டுகோள். "எம்மனம் தெளியக் காட்டுதல் குறையென மீட்டவளுரைப்ப"–பெருங்கதை 3-15-37.

[20] பேய்கள் யானைகளை விழுங்குதல் - பூதவேதாள வகுப்பு அடி 50 பக்கம் (364) குறிப்பைப் பார்க்க.

[21] பைரவர் நடனம் ஆடுதல் — அடி 2–ன் குறிப்பைப் பார்க்க. அட்ட பயிரவர் – திருப்புகழ் 1, பக்கம் 20 குறிப்பு. துருத்தி — ஆற்றிடைக் குறை — அரங்கம் — நாடகம் ஆடும் இடம். துருத்தி – முழுமையும் ஆட்டுத் தோலாலாய ஒரு ஊது வாத்தியம்.

[22] கழிநெடில் — ஐந்தின் மிக்க சீரால் வரும் அடி — கழிநெடிலடி ; அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம் ஆதிய.

[23] மகபதி – இந்திரன் – மகம் - பதி –யாகங்களுக்கு அதிபதி —திருப்புகழ் 232, பக்கம் 82 கீழ்க்குறிப்பையும் பார்க்க.

[24] பரணி நூலில் 'பேய்கள் கூழுண்டு பாடுதல்' என்ற ஒரு தலைப்பு உண்டு. கூழுண்ட களிப்பால், கூழ் கிடைக்கும் களிப்பால்–பேய்கள் துணங்கைக் கூத்து ஆடி, வள்ளைப்பாட்டு பாடி மகிழும்.

" விரவியிவ் வண்ணங்கள் பாடிப்பாடி
விழுந்தும் எழுந்தும் வியந்தும் ஆடிப்
பரவிவருங் கணமான எல்லாம்
பல்வகையாக நடஞ்செயுமே

(பாசவதைப்பரணி 10–49).

19. (துதித்து) துதிசெய்து (வழிபட நடத்தல்) வழிபட்டு நடத்தலே — வழிபடுதலேயே (குறையன) தமது வேண்டு கோளாகக் கொண்டன; (சுகித்து) இன்புற்று (வெளிபட) பகிரங்கமாக — வெளியில் தெரியும்படி சிரித்து வருவன (பொருகளத்தலகைகள்)

20. (துணித்த) துணிபட்ட – வெட்டுண்ட (கரியுடல்) யானையின் உடலானது, (திணித்த) திணிக்கப்பட்ட – செறியத் துறுக்கப்பட்ட (மிடறிடை) கழுத்திடையே–தொண்டையிலே (துவுக்கி) கட்டினதுபோலச் சிக்கிக்கொண்டு (அவசமொடு) மயக்கத்துடன் விக்கி நிமிர்வன – விக்கலெடுத்து நிமிர்ந்து நிற்பன (பொருகளத்தலகைகள்)

21. தொலைத்த – அழிவு உண்ட, முடி நிரை – தலை வரிசைகளை பரப்பி - பரவவைத்து, (வயிரவர்) அட்ட பயிரவர் சுழற்றி நடமிடு – சுழன்று நடஞ் செய்வதற்கு வேண்டிய துருத்தி — நடன அரங்கை (நடனமேடையை) இடுவன — அமைப்பனவாகும் (அல்லது இடுதற்குப் பொருந்த துருத்தி இடுவன–ஊது வாத்தியம் இசைப்பனவாகும் (பொருகளத் தலகைகள்)

22. துணுக்கம் — நடுக்கம் (அச்சம்) (உள அவர்) - உள்ளவர்களும் (துணுக்கம்) அச்சம் நீங்கிவிட்ட தென்று சொல்லும்படி, எடுத்த - பாடத்தொடங்கிய (கழிநெடில்) ஆறுசீர் விருத்தம் முதலான விருத்தப் பாக்களைப் படித்து வருவன (பொருகளத்தலகைகள்)

23. (சுரர்க்கும்) தேவர்களுக்கும் (மகபதி தனக்கும்) இந்திரனுக்கும் இனி ஒருவிதமான (துளக்கம்) மனக்கலக்கமும் இல்லை என்னும்படி இன்பகரமான — களிப்பூட்டுவனவான மொழிகளைப் (புகல்வன) கூறுவன (பொருகளத்தலகைகள்)

24. தொகுக்கு தொகுதொகு ... தொகு என நடனம் புரிந்து வருவன (பொருகளத்தலகைகள்)

---

24 " குணலை யிட்டே ஏப்பமிட்டு
...... கும்பிட்டே நடம் இட்டனவே "
(கலிங்கத்துப்பரணி 13–113).

[25]எதிர்த்து மலைவன முடித்து வெளிமுக
டிடித்து விழும்இடி இடித்த குரலின

[26]இரட்டை இளமதி உதித்த எனவெளி
றெயிற்றில் நிலவெழும் இருட்டு வடிவின

[27]இயக்க முறுபல ரதத்தின் உருளைகள்
இருத்தி அணிதரு பெருத்த குழையின

[28]இடக்கை குடமுழ வுடுக்கை துடிபறை
எடுத்து முகிலென முழக்கி வருவன

[29]இதத்த கயிசிகம் இனித்த பயிரவி
எழுப்பி எழுவகை நிருத்தம் இடுவன

---

[25] குரல் — இடி இடித்தலுக்கு உவமிக்கப்பட்டது :
'உரும் இடித்தன்ன குரலினர்' — திருமுரு. 172.

[26] பேய்களின் பல்லுக்குப் பிறை உவமை :
'எப்பிறைக்கும் எட்டி ரட்டி நெட்டெயிற்றவே'
— தக்கயாகப்பரணி 128.

[28] இடக்கை முதலிய வாத்தியங்கள் – பூதவேதாள வகுப்பு அடி 75-77 பார்க்க. வாத்தியங்களின் பேரொலி முகிலொலி (இடிக்கு) உவமை :

'தேவ துந்துமியும் காளுரும் வேடர் கருந்துடியும் – ஆனை
கல்லரி சச்சரி தண்ணுமை கைச்சதி
மல்லரி துத்தரி மத்தளி — சில்லரி
ஆகுளி பேரிகை யானகம் வார்குழல்
காகுளி தாரைகள் காகளம் — நாகம்
முரசு திமிலை முருடு முழவு
பரசு பதலை படகம் — கரடியுடன்
மேகத் திடிபோல் விரியுங் கனைகடல்போல்
ஏகத் துவமாய் எழுந்தார்ப்ப ......'
— தணிகை உலா 189.

[29] கயிசிகம், பயிரவி — பூதவேதாள வகுப்பு அடி 71, 'இனிய கயிசிகை'–புய வகுப்பு அடி 17. எழுவகை நிருத்தம்– ஏழுவகைக் கூத்து : குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை, விதூடக் கூத்து (வசைக் கூத்து).

(1) குரவை : காமமும் வென்றியும் பொருளாக, எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும், கைகோத்தாடுங் கூத்து.

25. (எதிர்த்து மலேவன) ஒன்ருேடொன்று எதிர்த்துப் போர்புரிவன; முடித்து-அந்தப் போரை முடிவுசெய்து. (வெளிமுகடு) ஆகாய முகட்டையும் இடித்து விழுத்தவல்ல இடி இடித்த—இடி இடிப்பது போன்ற குரலே உடையன (பொருகளத்தலகைகள்)

26. இரண்டு இளம்பிறை (உதித்த என) தோன்றுவது போல உள்ள (வெளிறு) வெண்ணிறத்த (எயிற்றின்) பல்லின் (நிலவு எழும்) ஒளி வீசுகின்ற (இருட்டு வடிவின) இருள் நிறத்தைக் கொண்டன (பொருகளத்தலகைகள்)

27. (இயக்கம் உறு) அசைந்து ஓடுகின்ற பல (ரதத்தின் உருளேகள்) தேர்களின் சக்கரங்களே (இருத்தி) எடுத்து வைத்துப் பொருத்தி அவைகளே (அணிதரு) அழகைத் தருகின்ற பெரிய குழைகளாகக் காதில் அணிவன (பொருகளத் தலகைகள்)

28. இடக்கை, குடமுழவு, உடுக்கை, துடி, பறை எனப்படும் வாத்தியங்களே எடுத்து (முகிலென) மேக கர்ச்சனே போல முழக்கம் செய்து வருவன (பொருகளத்தலகைகள்)

29. இதத்த - இதம் - இன்பத்தைத் தரவல்ல 'கயிசிகை' என்னும் ராகத்தையும், இனிமையான 'பயிரவி' என்னும் ராகத்தையும் (எழுப்பி) பாடி எழுப்பி, ஏழுவகையான (நிருத்தம்) கூத்துக்களே ஆடுவனவாகும் (பொருகளத் தலகைகள்)

---

(2) கலிநடம்: கழாய்க் கூத்து-கழைக் கூத்து-கழை—மூங்கில் (Pole Dancing).

(3) குடக்கூத்து: பஞ்ச லோகங்களாலும், மண்ணுலும் குடம் கொண்டாடும் கூத்து.

(4) கரணம்: படிந்தாடல்.

(5) நோக்கு: பாரமும் நுண்மையும் மாயமும் முதலாயின வற்றை உடையது.

(6) தோற்பாவை: தோலாற் பாவைசெய்து ஆட்டுவிப்பது.

(7) விதூடக்கூத்து: நகைத்திறச் சுவையோடு கூடியது.

"எழுவகைக் கூத்தும் இழிகுலத்தோரை
ஆட வகுத்தனன் அகத்தியன் தானே"

—சிலப்பதிகாரம்-பக்கம் 80-81; 193.

முதலாறும் விநோதக் கூத்து என்பர். வெறியாட்டு முதலாகிய கூத்துக்களும் கூட்டி ஏழென்பதுண்டு.

[30]இறப்பும் வரும்எழு பிறப்பும் அறஇனி
திருத்தும் எனமயில் விருத்த மொழிவன
[31]இடைக்க ழியில்ஒரு செருத்த ணியிலினி
திருக்கும் அறுமுகன் ஒருத்தன் இளையவன்
[32]இளைத்து நிசிசரர் பதைத்து மடியவொர்
இமைப்பில் அமர்பொரு களத்தின் அலகையே.

---

[30] அலகைகள் 'மயில் விருத்தம்' மொழிவன – மயிலின் பிரபாவத்தை எடுத்துக் கூறும்; மயில் விருத்தத்தை எடுத்துக் கூறினல் பிறப்பு அறும் என்கின்றார். 'மயில் விருத்தம் ஒரு பத்தும் படிப்பவர்கள் ... சீர்பெறுவர், பேர்பெறுவர், அழியா வரம் பெறுவரே' — என்பதும் அருணகிரியாரின் திருவாக்கே.

[31] இடைக்கழியையும் திருத்தணிகையையும் ஒருசேர உரைப்பர் அருணகிரியார் — திருப்புகழ் 289, 800; வேடிச்சி காவலன் வகுப்பு (அடி 12), வேளைக்காரன் வகுப்பு (அடி 11), பூதவேதாள வகுப்பு (அடி 17, 18) பார்க்க. (அருணகிரிநாதர் வரலாறு – பக்கம் 38 பார்க்க).

---

## பொருகளத் தலகை வகுப்பின் சுருக்க உரை

(31, 32) திரு இடைக்கழி, திருத்தணி என்னும் தலங்களிற் ப்ரியத்தொடு வீற்றிருக்கும் முருகவேள் (முன்பு) அசுரர்கள் மடியப் பொருத போர்க்களத்தில் இருந்த பேய்க் கூட்டங்கள் :—(1) பயிரவியின் ப்ரியத்தைப் பெற்றவை, (2) பயிரவர் நடிக்கும் நடனங்களின் இலக்கணத்தை அறிந்தவை, (3) பிணங்களை எடுத்துத் திண்ணைபோல அடுக்கி வைப்பவை, (4) ரத்தக் கடலை அடைத்தும் உடைத்தும் விளையாடுவன, (5) அசுரர்களின் முடிகளை அடுப்பாக அமைத்து, உலை நீராக ரத்தத்தைச் சொரிவன, (6) இறந்துபட்ட அசுரர்களின் பற்களை, அவர்களின் கரங்களாகிய அகப்பைகொண்டு வாரி உலை நீரில் (அரிசிபோல) இட்டுச் சமைப்பன, (7) பிணங்களின் மாமிசம், கொழுப்பு இவைகளால் வழுக்கி விழுவன, (8) பொருதற்கு வரும் மத யானைகளை நடத்தி வருவன,

(9) மகிழ்ச்சியுடன் நடனம் புரியும் பூதங்களுக்கு நிரம்பச் சதைகளை அருந்தக் கொடுப்பன, (10) குதிரை மாமிசத்தைத் தக்கபடி வேகவைத்து உண்பன, (11) கொழுப்பை நெருப்பிற் காய்ச்சிப் பங்கிடுவன, (12) அந்த மாமிசத்தை மென்று தின்று காக்கைக்கும் நரிக்கும் உமிழ்ந்து அளிப்பன (13) நாலு திசைகளையும் தமது வயிற்றில் அடக்க வல்லன, (14) குரக்கு

30. இறத்தல், வரும் எழுவகைப் பிறவிகள் இவை தமை ஒழித்து, இனிது இருத்தும் – இன்பநிலையிற் கொண்டு சேர்த்து வைக்கும் (என) என்று புகழ்ந்து 'மயில் விருத்தம்' மயில்மீது துதியாம் விருத்தப் பாக்களை (மொழிவன) பாடுவன ஆகும் – (பொருகளத்தின் அலகையே); எந்தப்போர்க்களத்தில் எனில்-

31. திரு இடைக்கழியிலும், (ஒரு) ஒப்பற்ற திருத் தணிகையிலும், (இனிது) மகிழ்ந்து வீற்றிருக்கும் அறுமுகக் கடவுள், (ஒருத்தன்) ஒப்பற்றவன், (இளையவன்) என்றும் இளையவன் (ஆகிய முருகவேள்)

32. இளைத்து நிசிசரர் – நிசிசரர் இளைத்து (நிசிசரர்) அசுரர்கள் (இளைத்து) சோர்வு அடைந்து, (பதைத்து) பதை பதைத்து — துடித்து வருந்தி, (மடிய) இறந்துபட (ஓர் இமைப்பில்) ஒரு இமைப் பொழுதில் — க்ஷணப் பொழுதில் (அமர்பொரு) போர் செய்த (களத்தில்) போர்க்களத்திற் கூடியிருந்த (அலகையே) பேய்க் கூட்டங்களே.

---

வாதக் கழுத்துடன் கைகளால் ஏழு மலைகளையும் அடியோடு பறித்து வெற்றி கொள்வன, (15) ரத்த ஆற்றை அப்படியே குடித்து மகிழ்வன, (16) வள்ளிநாயகனது திருவடியைத் தியானித்து வழிபடுவன,

(17) யானைகளின் துதிக்கைகளை அடுக்கி அவைமீது அரசு வீற்றிருப்பவன், (18) அசைகின்ற சுடர் விளக்கை நிகர்ப்பன வாய் அச்சம் தரும் விழித்த விழிகளைக் கொண்டன (19) துதி யுடன் இறைவனை வழிபட வேண்டினவையாய்ச் சுகமாய் நகைத்து உலாவுவன, (20) வெட்டுண்ட யானைகளின் உடல் துண்டங்களை உண்டு, மயக்கத்துடன் விக்கல் எடுப்பன, (21) இறந்துபட்ட அசுரர்களின் தலைவரிசைகளைப் பரப்பி வயிரவர் நடமிடுதற்கு அரங்கு அமைப்பன, (22) யாவரும் அச்சம் உறுவகை கழிநெடில் விருத்தங்களைப் பாடுவன, (23) இனி இந்திரனுக்கோ தேவர்களுக்கோ பயமில்லை என்னும் களிப் பூட்டும் சேதியைக் கூறுவன, (24) தொகுக்கு தொகுதொகு என்று கூத்தாடி வருவன

(25) எதிர்த்தவரை வென்று இடி இடித்த குரலுடன் பேசுவன, (26) இரட்டைப் பிறை நிலா ஒத்த ஒளி வீசும் பற்களையும் இருள் நிறத்தையும் கொண்டன, (27) தேரின் சக்கரங்களைப் பெரிய குழைகளாக அணிவன, (28) இடக்கை, குடமுழா, உடுக்கை, துடி, பறை, இவையெலாம் மேகம் போல இடித்து முழங்கின, (29) கயிசிகை, பயிரவி எனப்படும் இசைகளைப்பாடிக் கூத்தாடுவன, (30) பிறப்பு, இறப்பு இவை களை ஒழித்து இன்பநிலையிற் சேர்ப்பிக்கும் என்று கூறி மயிலின் மீது விருத்தப்பாத் துதிகளை ஓதுவன.

## 8. செருக்களத் தலகை வகுப்பு

[ஏழாவது திருவகுப்பின் கருத்தைத் தழுவியது.]

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனத்த தனதன

[1]குதிரைத் திரள்பட் டபிணத் தையெடுத்
துதிரப் புனலிற் குளிக்கு மொருதிரள்
[2]குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கு மொருதிரள்
[3]கொடுகொட் டிபடத் துடிகொட் டிநடத்
தடமிட் டுவளைத் திருக்கு மொருதிரள்
[4]குடரைப் புயமிட் டுடலைச் சிறுகக்
குலையிட் டதிரச் சிரிக்கு மொருதிரள் ;
[5]சதையைச் சிலகைக் கொளமற் றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு மொருதிரள்
[6]தறுகட் சிறுகட் டவளக் கவளத்
தமரத் திமிரப் பனைக்கை மதமலை
[7]தலையுக் குளநற் றருணக் கிரணத்
தரளத் திரளைக் குவித்த டியெனுரல்

---

[1] பேய்கள் — குதிரை மாமிசத்தை உண்பது :
" பரிபிளந்து தசைமிசைந்து சிறிதவிந்த பசியவே "
—தக்கயாகப்பரணி 132.

[2] பேய்கள் ரத்தம் குடித்தல் - பொருகளத் தலகை வகுப்பு அடி 15, பக்கம் 384 குறிப்பைப் பார்க்க.

[3] கொடுகொட்டி – ஒருவகைப் பறை; 'கொடுகொட்டி வீணை முரல' - சம்பந்தர் 2-84-7. 'மொந்தை குடமுழவம் கொடுகொட்டி குழலும் ஓங்கப் பாடலார் ஆடலார்' – அப்பர் 6-10-2; நடத்தடம் - கூத்தாடும் அரங்கு.

[6] பனைக்கை (யானைக்கு) — 'பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்'—அப்பர் 5-2-1. யானை கவளம் மாந்துதல்— " யானை கவளம் மாந்தும் மலை "—குறுந்தொகை 170.

### பொழிப்புரை

**1.** (குதிரைகளின் (திரள்பட்ட) கூட்டமாய் இறந்து விழுந்து கிடக்கின்ற (பிணத்தை) பிணங்களை எடுத்து (உதிரப் புனலில்) ரத்தத்தில் குளிப்பிக்கும் (அல்லது எடுத்தெறிந்து ரத்தத்தில் குளிக்கும்) (செருக்களத்தில் அலகைகளின் (பேய் களின்)] ஒரு திரள் – ஒரு கூட்டம்

2. (குருதிக் கடலை) ரத்தக் கடலைப் [பெருக] நிரம்ப நிரம்ப [பருகி] குடித்துக், [குணலைத் திறனில்] ஆரவாரக் கூத்து வகைகளில், [களிக்கும்] மகிழ்ச்சிகொள்ளும் ஒரு [பேய்க் கூட்டம்]

3. கொடுகொட்டி பட – கொடுகொட்டி என்னும் பறை முழங்கத், (துடி கொட்டி) — (துடி) உடுக்கையை முழக்கி, [நடத் தடம்] நடன [தடம்] சாலை, [இட்டு] அமைத்து, (வளைத்து இருக்கும்) சூழ்ந்திருக்கும் ஒரு (பேய்க்) கூட்டம்

4. குடல்களைத் தோளில் அணிந்து (உடலை) தேகத்தைச் (சிறுக) சுருக்கிக், (குலையிட்டு) குலைத்து — நடுங்குதல்போல நடுங்கி (அல்லது உடலைக் குலை சிறுக இட்டு - உடலை மார்பின் குலை சுருங்கும்படி செய்து, (அதிர) ஆரவாரஞ் செய்து சிரிப்பன ஒரு (பேய்க்) கூட்டம்.

5. (சதையை) மாமிசத்தைச் (சில) சில பேய்கள் (கைக் கொள) கையிற் பற்ற, (மற்று அதனை) அந்த மாமிசத்தைச் (சருவி சருவி) போராடிப் போராடி, பறிக்கும் – பறித்துப் பிடுங்கும் (பிறிது) ஒரு (பேய்க்) கூட்டம்

6. (தறுகண்), கொடுமையையும், (சிறுகண்) சிறிய கண் களையும், (தவளம்) வெண்ணிறத்தையும், (கவளம்) வாயளவு கொண்ட உணவையும், (தமரம்) ஒலியையும், (திமிரம்) கரு நிறத்தையும், [பனைக்கை] பனைமரம்போல நீண்ட துதிக்கை யையும் [உடைய] மதமலை — மதயானையின்

7. [தலை] மத்தகத்தினின்று [உக்கு உள] சிதறி விழுந் துள்ள [நல்] சிறந்த [தருணம்] புதுமை வாய்ந்த [கிரணம்] ஒளி வீசும் [தரளத் திரளை] முத்துக்களின் குவியல்களைக் [குவித்து] ஒருசேரக் கூட்டிக் குவித்து, (அடி) யானைகளின் அடிகள் [என் உரல்] எனப்பட்ட உரல்

---

7-8 யானை மத்தகத்தினின்றும் உதிர்ந்த முத்துக்களை— யானைகளின் அடிகளாம் உரலில் இட்டு, தந்தங்களாம் உலக்கை கொண்டு குத்தி, (அசுரர்களின்) முடித்தலைகளால் அடுப்பு அமைத்து, எலும்புகளாம் விறகுகளை வைத்து, உலைவைத்துப் பேய்கள் சமையல் செய்தன.

[தொடர்ச்சி 394-ஆம் பக்கம் பார்க்க.]

[8]தனிலிட் டதனைத் தகுகைத் தலமுற்
றிடுநெட் டைமருப் புலக்கை முறைமுறை ;
[9]எதிரிட் டதுகுத் திமுடித் தலையொப்
பஅடுப் பெனவைத் தெலுப்பு விறகினை
[10]எரியிட் டெரியிட் டுருவத் துடனெட்
டுலைவைத் துணவைச் சமைக்கு மொருதிரள்
[11]இருள்செற் றதடித் தினையொத் திடுகட்
கமெடுத் தெறியத் தெறித்த தலைகளை
[12]இதெனக் கதுனக் கதுமற் றதனுக்
கெனமொய்த் துலவிப் பொறுக்கு மொருதிரள் ;
[13]அதரத் துவிரற் படவைத் துமிகுத்
தரவத் தொடுகொக் கரிக்கு மொருதிரள்
[14]அமுதொத் தநிணத் தசைமுக் கியறத்
தவசத் துயிலிற் கிடக்கு மொருதிரள்

---

[393-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.]

(i) முத்து — யானை மத்தகத்தினின்று சொரிதல் —
'பருக்கையானை மத்தகத்துஅரிக்குலத்து உகிர்ப்புக
நெருக்கி வாய நித்திலம் நிரக்கும்'
—சம்பந்தர் 2-101-1.

—திருப்புகழ் 764, பக்கம் 273, 274 கீழ்க்குறிப்புப் பார்க்க.

(ii) முத்துக்களை உரலிலிட்டு யானைத்தந்தமாம் உலக்கையால் குத்துதல் :—திருப்புகழ் 797, பக்கம் 360 கீழ்க்குறிப்பு. 'தரளங்கள் ...... குறவர் சிறுமிமார்கள் ... முத்துலைப் பெய் முதுகுன்றமே'—சம்பந்தர் 1-131-7.

(iii) யானை அடிக்கு உரல் உவமை: 'கறை அடி யானை' — பெரும்பாண் 351. (கறை = உரல்). 'உரற்கால் யானை'—குறுந்தொகை 232.

[9] தலைகளை அடுப்பாக அமைத்தல் — பொருகளத் தலகை வகுப்பு அடி 5 (பக்கம் 381, 382) குறிப்பைப் பார்க்க.

[13] உதட்டில் விரல் வைத்து ஒலி எழுப்புதல் :
சீழ்க்கை இடுதல்போல ஒலி எழுப்புதல் — சீழ்க்கை — நாவின் நுனியை மடித்துச் செய்யும் ஒலி.

8. [தனில் இட்டு] தன்னிற் போட்டு [உரலிலே இட்டு] அதனை — அந்த முத்துக்களைத் [தகு] தக்க [கைத்தலம் உற்றிடு] துதிக்கை இடத்தே உள்ள (நெட்டை) நீண்ட (மருப்பு) தந்தங்கள் என்னும் (உலக்கை) உலக்கைகொண்டு (முறை முறை) அந்த அந்த [பேய்களின்] முறைப்படி — வரிசைப்படி

9. எதிரிட்டு – [உரலின்] எதிரிலே வந்து (அது குத்தி) அந்த முத்துக்களைக் குத்தி, (முடித்தலை) முடியாகிய தலைகளை (ஒப்ப) பொருந்தும்படி (அடுப்பென வைத்து) அடுப்பாக அமைத்து, (எலுப்பு விறகினை) எலும்புகளாகிய விறகுகளை வைத்து

10. எரியிட்டு எரியிட்டு — நெருப்பு மூட்டி மூட்டி (உருவத்துடன்) அழகாக (நெட்டு உலை வைத்து) நெடுநேரம் (உலைவைத்து) சமையல் உலை வைத்து, உணவைச் (சமைக்கும்) சமையல் செய்யும் (ஒரு திரள்) ஒரு (பேய்க்) கூட்டம்

11. [இருள் செற்ற] இருளைக் கடிந்து போக்கும் (தடித் தினை – தடித்தை) மின்னலை (ஒத்திடு) நிகர்ப்பதான (கட்கம்) வாளை எடுத்து (எறிய) வீசுவதால் [தெறித்த] அறுபட்டுச் சிதறுண்டு வீழ்ந்த தலைகளை

12. இது எனக்கு (இந்தத் தலை என்பங்கு), அது உனக்கு– அந்தத் தலை உன் பங்கு, அது மற்றதனுக்கு – அந்தப் பிறி தொரு தலை மற்றதன் பங்கு – எனப் பங்கிட்டு, (மொய்த்து) நெருங்கிக் கூடி, (உலவி) அங்கும் இங்கும் உலாவிப், (பொறுக்கும்) போர்க்களத்தில் கிடக்கும் தலைகளைப் பொறுக் கும் (ஒரு திரள்) ஒரு (பேய்க்) கூட்டம்

13. அதரத்து – வாயிதழில் (உதட்டில்) விரலைப்படும்படி வைத்து (மிகுத்த அரவத்தொடு) மிகப்பலத்த ஒலியுடன் (கொக்கரிக்கும்) ஆரவாரக் கூச்சலிடும் ஒரு [பேய்க்] கூட்டம்

14. [அமுது ஒத்த] அமுதம் ஒந்த [நிணத் தசை] மாமிச சதைகளை [முக்கி] நிரம்ப வாயிற் பெய்து உண்டு (அறத்து] அறச்சாலையில் [அவசத் துயிலில்] மயக்குண்ட தூக்கநிலையில், கிடக்கும் (தன் வசமிழந்து தூங்கிக் கிடக்கும்) ஒரு [பேய்க்] கூட்டம்

---

14 (i) முக்கி — முக்குதல்=உண்ணுதல்.

"முத்தைக் கொக்கு முக்கிக் கக்கி விக்கும்" (தனிப் பாடற்றிரட்டு). "கங்கம் முக்கின சிறுமீ னெல்லாம்"— திருவிளையாடற்–இந்திரன் 56. "வான்மீன் வாரிமுக்கி"— தக்கயாகப்பரணி 358, விசேடக்குறிப்பு பக்கம் 311, 315.

அறம் — அறச்சாலை (Feeding house).

15அடவிப் புனமுற் றகுறத் திருவுக்
கமைவுற் றமணிப் புயத்தன் அறுமுகன்
16அடன்மிக் கதயித் தியர்பட் டுவிழப்
பொருதிட் டசெருக் களத்தில் அலகையே.

---

15 குறத்தி – வள்ளி. ' புனமுற் றகுறத் திருவைப் புணர் பொற் புயவீரா '—என்றூர் திருப்புகழிலும் 796.

---

செருக்களத் தலகை வகுப்பின் சுருக்க உரை

(15, 16) அறுமுகவேள் அசுரர்கள் அழியப் பொருத செருக்களத்தில் இருந்த பேய்க் கூட்டங்களில் :—1. ஒரு கூட்டம் குதிரையின் பிணங்களை ரத்தப் ப்ரவாகத்திற் குளிப் பிக்கும் ; 2. ஒரு கூட்டம் ரத்தத்தைக் குடித்து ஆரவாரித்து மகிழும் ; 3. ஒரு கூட்டம் நடனசாலை வகுத்துக் கொடு கொட்டி, துடி எனும் வாத்தியங்களை முழக்கிச் சூழும் 4. ஒரு கூட்டம் அசுரர் குடல்களைத் தோளில் அணிந்து தமது உடலைக் குறுகுவித்து, மார்புக் குலை அதிர்ச்சி கொள்ளச் சிரிக்கும் ; 5. மாமிசத்தைச் சில பேய்கள் கைப்பற்ற, அதைப் பிடுங்கப் போராடிப் போராடிப் பறிப்பது ஒரு கூட்டம் ; 6 – 10. யானை மத்தகத்தினின்று சிதறின முத்துக் களை யானையின் காலடியாம் உரலிற் பெய்து, யானையின் மருப்பாம் உலக்கை கொண்டு இடித்து, முடித்தலைகளால் அமைக்கப்பெற்ற அடுப்பில் இட்டு, எலும்புகளாம் விறகுகளை எரிய வைத்து, பெரிய உலை வைத்து உணவைச் சமைப்பன ஒரு கூட்டம் ; 11, 12. அறுபட்டுக் கிடந்த தலைகளை

## 9. போர்க்களத் தலகை வகுப்பு

[ஏழாவது திருவகுப்பின் கருத்தைத் தழுவியது.]

தனதன தந்தன தனதன தந்தன தத்தா தத்தன
தனதன தனந்த தாத்த தத்த தனதன்

1பகலிர வின்றியொர் புகல்திசை நந்திய பற்பா னுத்தகை
படமுதல் விசும்பு தூர்த்த டுக்கு பிணமலை
2பவுரிவ ரும்பரி புரநரல் பங்கய வித்தா ரத்தன
பயிரவி பதங்கள் வாழ்த்தெ டுத்த பசியன
3பரியகொ ழுந்தசை பயிரவர் என்றுப லிக்கா நிற்பவர்
பகரிடம் அறிந்து பாத்தி ரத்தில் இடுவன

15. [அடவிப் புனம்] காட்டில் [திணைப்] புனத்தில்— கொல்லையில் [உற்ற] இருந்த (குறத் திருவுக்கு) குறக்குல லக்ஷ்மியாம் வள்ளிக்கு, (அமைவுற்ற) பொருந்திய (மணிப் புயத்தன்) அழகிய திருப்புயங்களை உடையவன், ஆறுமுகன்

16. (அடல்) வலிமை மிக்க (தயித்தியர்) அசுரர்கள் (பட்டுவிழ] இறந்து விழும்படி (பொருதிட்ட) சண்டைசெய்த (செருக்களத்தில்) போர்க்களத்தில் (அலகையே) பேய்க் கூட்டங்களே.

---

[செருக்களத் தலகை வகுப்பு - சுருக்க உரை தொடர்ச்சி.]

எனக்கு, உனக்கு, அதற்கு என நெருங்கி உலாவிப் பொறுக் கும் ஒரு கூட்டம்; 13. விரலை உதட்டில் வைத்துக் கொக்கரிக் கும் ஒரு கூட்டம்; 14. நிரம்ப மாமிசங்களை உண்டு மயங்கித் தூங்கும் ஒரு கூட்டம். —:o:—

## பொழிப்புரை

1. (பகல் இரவு இன்றி) பகல் இரவு என்று பார்க்காமல் அதாவது-பகலும் இரவும் எப்பொழுதும் ஓர் – ஒப்பற்றன வான - புகல் - சொல்லப்பட்ட (திசை) நான்கு திசைகளிலும் (நந்திய) விளக்கம் தருகின்ற (பல்பானு) பல சூரியர்களும் (ஆதித்தர் பன்னிருவரும்), (தகைபட) தமது இயக்கமும் விளக்கமும் தடைபடும்படி (முதல் விசும்பு தூர்த்து) – விசும்பு முதல் தூர்த்து — ஆகாயம் முதல் அடிவரையும் மறைவுபடும் படி, அடுக்கு — அடுக்கியுள்ள, பிணமலை – மலைபோலக் குவிந் துள்ள பிணங்களை —

2. (பவுரி வரும்) – மண்டலமிட்டு வளைந்து கூத்தாடு வதான - (பரிபுரம் நரல் பங்கய) – பரிபுரம் – சிலம்பு, (நரல்) ஒலிக்கின்ற (பங்கய) திருவடித் தாமரையையும், வித்தார— பரந்த, தன–கொங்கைகளையும்கொண்ட (பயிரவி) துர்க்கையின் (பதங்கள்) - திருவடிகளை (வாழ்த்தெடுத்த) பசியன – துதித்து நின்று பசி பசி என முறையிட்டன (போர்க்களத்தலகைகள்)

3. (பயிரவரென்று பலிக்கா நிற்பவர் பகரிடம் அறிந்து பரிய கொழுந்தசை பாத்திரத்தில்இடுவன) பைரவர்–துர்க்கை யின் படையினரான கணங்கள் என்று – என நின்று (பலிக்கா நிற்பவர்) – பலி – பிச்சை உணவு வேண்டி நிற்பவர்கள் (பகர் இடம்) பிச்சை கேட்கும் இடம் — பிச்சை வேண்டுமென்று கூறும் இடம் (அறிந்து) தெரிந்து, அங்குப் போய்ப் பரிய கொழும்தசை — பருத்த கொழுப்புள்ள மாமிசங்களை (அவர் களின் பிச்சைப்) பாத்திரத்தில் (இடுவன) போடுவன–(போர்க் களத்தலகைகள்)

[4]பரவிவ ருங்குறள் பசிதணி யும்படி பட்டார் கைப்படு
பரிசையின் முகந்து சூட்டி றைச்சி சொரிவன

[5]படுகள மென்பதோர் செறுவில் விளைந்தன பற்கோ வைப்பயில்
பவுரிவி சைகொண்டு தீட்டி மெத்த அடுவன

[6]பரியணி திண்பணை முடியம டிந்துடல் பப்பா தித்துணி
படவிழு பெருங்கை மாக்க ருக்கல் பகிர்வன

[7]படைவிச யந்தெரி சலதிவ லம்புரி பற்ருர் பட்டுள
பலபல விதங்கள் ஆர்ப்பெ டுக்கும் உதடின

[8]பகடுபி ளந்ததன் உரிவைபு னைந்திடு குப்பா யத்தன
பதவிய ரிணஞ்செ யூட்டு டுத்த வுடையின ;

---

[5] பற்களை அரிசியாகக்கொண்டு சமைப்பது :–பொருகளத் தலகை வகுப்பு அடி 6, பக்கம் 382 குறிப்பைப் பார்க்க.

[6] பணை — குதிரை, யானைகள் தங்கும் கூடம் :

'பணைநிலைப் புரவி' — மதுரைக் காஞ்சி 660. "பணை முனிந்தா லுவ ........... புரவி - இவுளி" — சிந்தாமணி 2228; "பணையமை பாய்மான்"—கலித்தொகை 57. "பணைநிலை முனைஇக் களிறு'–புறநானூறு 23; பப்பாதி – பாதிபாதியாக, இரண்டு சமபாகமாக — "பயந்தார் வடிவிற் பப்பாதி"— வில்லிபாரதம் - இராசசூய 34.

[8] குப்பாயம் — சட்டை. 'வெங்க ணேக்கிற் குப்பாய மிலேச்சனே'—சிந்தாமணி 431; 'பள்ளிக் குப்பாயத்தர்'— திருவாசகம்-அன்னே 7.

4. பரவி – போற்றிசெய்து வருகின்ற (குறள்) பூதத்தின் பசி தணியும்படி - நீங்கும்படி, (பட்டார்) போரில் இறந்துபட்டவர்களுடைய (கைப்படு) கையிலிருந்து கீழே விழுந்து கிடக்கும் (பரிசையின்) கேடகத்தால் (shield) முகந்து - வாரி மொண்டு (சூட்டிறைச்சி) புதிய சூடுள்ள மாமிசத்தைச் (சொரிவன) பெய்து தருவன (போர்க்களத்தலகைகள்)

5. [படுகளம்] போர்க்களம் எனப்படுவதான ஒரு [செறுவில்] வயலில் (விளைந்தன) விளைந்தனவான (பல் கோவை) பற்களின் வரிசைகளை (அரிசியாகக்கொண்டு) பயில்–தாங்கள் பயின்றுவரும் (பவுரிவிசைகொண்டு) வளைந்து ஆடும் கூத்தின் வேகத்துடன் – மிக்க வேகத்துடன் – தீட்டி – குத்திப் புடைத்துச் சுத்தி செய்து (மெத்த) நிரம்ப [அடுவன] சமையல் செய்வன [போர்க்களத்தலகைகள்)

6. (பரியணி திண்பணை முடிய மடிந்து) — அணி திண் பணைப் பரி முடிய மடிந்து – அழகிய (திண்ணிதான) வலிய — பணை – கட்டப்படும் இடங்களில் – லாயங்களில் இருந்த பரி — குதிரைகள் (முடிய மடிந்து) எல்லாம் இறந்துபட்டு, உடல் – அவைகளின் உடல் (பப்பாதி) – பாதிபாதியாய்த் (துணிபட) அறுபட (அவைகளையும்), விழு – இறந்து விழுந்த பெருங் கை(ம்)மா – பெரிய யானைகளையும் (கருக்கல்) கருக்குதல் செய்து — காய்ச்சி (toast) செய்து பகிர்வன — பங்கிட்டுக் கொடுப்பன (போர்க்களத்தலகைகள்)

7. (படை) படைகளின் (விசயம்) வெற்றியைத் (தெரி) தெரிந்து, (பற்றார்) பகைவர்கள் (பட்டுள) இறந்துபட்டுள்ள (பலபல) பலபலவான (விதங்கள்) வகைகளை (சலதி) கடல் போலவும், (வலம்புரி) வலம்புரிச் சங்கம் போலவும் (ஆர்ப்பு எடுக்கும்) கூச்சலிட்டு எடுத்துரைக்கும் உதடின – உதட்டை (வாயை) உடையன — கொண்டன (போர்க்களத்தலகைகள்) அல்லது படைகளின் வெற்றியைத் தெரிந்து, சலதி — கடலை, வலம்புரி — சூழ்ந்து நின்ற (பற்றார்) பகைவர்கள் இறந்துபட்ட பலபலவான விதங்களை - வகைகளை ஆர்ப்பு எடுக்கும் — கூச்சலிட்டு உரைக்கும் உதடின — உதட்டை — வாயைக்கொண்டன (அலகைகள்) – எனலுமாம்.

8. பகடு பிளந்ததன் – பிளவுபட்ட – அறுபட்ட யானைகளின் (உரிவை) தோலை-(புனைந்திடு குப்பாயத்தன) குப்பாயமாகப் புனைவன - சட்டையாக அணிந்து கொள்வன (அலகைகள்) : பதவி அரிணஞ் செயூட்டு- அரிணம்–மானின் (தோலை) பதவி — ஒழுங்குபடுத்தி, (செயூட்டு) — செம்மைப்படுத்திய (உடுத்தஉடையின) உடுத்துக்கொண்ட உடைகளை (ஆடைகளை உடையன) கொண்டன (போர்க்களத்தலகைகள்)

[9]உகமுடி வன்றினும் வெருவவ ரும்பல உற்பா தத்தன
ஒளிமதி வகிர்ந்த கீற்றெ யிற்று நிலவின

[10]உருவம் இருண்டன திகிரிவி லங்கலின் உட்பாய் கிற்பன
உலவிநி ணமொண்டு கூட்ட மைத்து நுகர்வன

[11]உததியு றுஞ்சுவ வடவைநெ டுங்கனல் உட்கா கப்பெரு
குதிரபி சிதங்கள் பேர்த்தி றக்கி யிடுவன

[12]உருமுமி டைந்தென அதிர்குர லின்றமில் ஒப்பே றிட்டுநி
ருதர்மவு லிகொண்டு கோட்டை யிட்டு மலைவன

[13]உலகுகு லுங்கிட அரியது ணங்கையி னைச்சா திப்பன
உவணப டலங்கள் காக்கை சுற்றி வருவன

[14]உலைதரு மென்குட ரிடைபட இந்திர னுத்யா னத்தலர்
உகிர்கொடு புனைந்த சூட்டு முற்றி மலைவன

---

9 பேய்களின் பற்கள் கீற்றுப்பிறைக்கு உவமை :
"பிறைக்கும் எட்டிரட்டி நெட்டெயிற்றவே" — பிறை — பதினலாம் பக்கத்துப் பிறையும் முதற் பக்கத்துப் பிறையும்' — தக்கயாகப்பரணி 128 உரை. பொருகளத்தலகை வகுப்பு அடி 26, பக்கம் 388 குறிப்பையும் பார்க்க.

11 உறுஞ்சுவ – உறிஞ்சுவ. கடல் நீரை வடவாமுகாக்கினி உறிஞ்சுவது.

"விரிமுகக் கடல் ஏழ் பெருவெள்ளமும்
பரிமுகத் தொடு செந்தீப் பருகவே"

பரிமுகத்தீ-வடவாமுகாக்கினி —தக்கயாகப்பரணி 587.

13 துணங்கை–கந்தரலங்காரம் 88-ன் குறிப்பைப் பார்க்க. பருந்து – காக்கை பந்தரிடுவது — "முது கழுகு பந்தரிட்ட வேலினன்" — கடைக்கணியல் வகுப்பு, அடி 12.

14 சூட்டு — மாலை. 'மல்லிகை நறுஞ் சூட்டு வெள்ளிதின் விளங்க' — பெருங்கதை 1-46-233.

9. (உக முடிவு) அன்றினும், யுகாந்த காலத்தினும்— யுகம் முடிகின்ற அந்த நாளினும் மிக (வெருவ வரும்) அஞ்சும்படி வருகின்ற (பல உற்பாதத்தன) மிகக் கொடுமை யைக் கொண்டன அல்லது துர்க்குறியை - (அசுரர்களுக்குக்) கெட்டசகுனத்தைக் காட்டுவன; (ஒளிமதி) ஒளிவீசும் நிலவை (வகிர்ந்த) பிளவுபடுத்தின கீற்றுப்போன்ற(எயிற்று நிலவின) பற்களோடு கூடியன (போர்க்களத்தலகைகள்)

10. உருவம் இருள் நிறத்தன; (திகிரி விலங்கலின்) சக்ரவாளகிரியின், (உள் பாய்கிற்பன) உள்ளே பாயவல்லன; (உலவி) உலாவி (நிணம் மொண்டு) மாமிசங்களை (மொண்டு) அள்ளி, கூட்டு அமைத்து — கறிக் கூட்டுப்போல சமையல் செய்து (நுகர்வன) – உண்பன (போர்க்களத்தலகைகள்)

11. (உததி) கடலை (உறுஞ்சுவ) உறிஞ்சி நிற்கின்ற வடவை என்கின்ற (நெடுங்கனல்) பெரிய நெருப்பும் (உட்காக) உட்குதலாக – அஞ்சும்படி, (பெருகு) பெருகி விழும் (உதிர பிசிதங்கள்) ரத்தம் இறைச்சி இவைகளைப் (பேர்த்து) பிரித் தெடுத்து, இறக்கி-வடித்து, (இடுவன)பங்கிடுவன போர்க்களத்தலகைகள்

12. (உருமு) இடி, (மிடைந்தென) நெருங்கி நிறைந்து இடிப்பதுபோல அதிர் — முழங்குகின்ற (குரலின்) குரல் கொண்டு (தமில்) தம்மில்–தமக்குள்ளே (ஒப்பேறிட்டு) சமத்து வத்தை அளவிட்டுப் பார்த்து, நிருதர் – அசுரர்களுடைய (மவுலிகொண்டு) முடிகளை (அல்லது) தலைகளைக்கொண்டு (கோட்டை இட்டு) கோடு போட்டது போல அல்லது கோட்டைப்போல அமைத்து, (வரிசையாய் நின்று) மலைவன– எதிரெதிரில் நின்று ஒருகட்சியின எதிர்க் கட்சியை இழுத்துச் சண்டை செய்வன; Tug of War (போர்க்களத்தலகைகள்)

13. உலகமே குலுங்கும்படி – அசையும்படி, அருமை யான (துணங்கையினை) துணங்கைக் கூத்தினைச் (சாதிப்பன) செய்து நிறைவேற்றுவன (போர்க்களத்து அலகைகள்); (உவணம்) கழுகுகளின் படலங்கள் - கூட்டங்களும், காக்கை களும் *சுற்ற வருவன – உலவுவன (போர்க்களத்தலகைகள்)

14. (உலைதரு) உலைதல் தரு - அழிந்து கிடந்த (மென் குடர்) மெல்லியகுடல் (இடைபட) நடுவிலிருக்க – கட்டுதற்கு நார்போல் இடையில் உபயோகப்பட, இந்திரனது உத்தியா னத்து (கற்பகச் சோலையிற் பூந்தோட்டத்தில் உள்ள) – அலர் - மலர்களை உகிர்கொடு - தங்கள் நகத்தினால் (புனைந்த) அலங் கரித்த (சூட்டு) மாலைகளை (முற்றி) கட்டி முடித்து (மலைவன) சூடிக்கொள்வன (போர்க்களத்தலகைகள்)

---

13 *சுற்றி – சுற்ற — திருப்புகழ் 404, பக்கம் 524 குறிப்பு.

15உயரிப முங்குர கதகுல முங்கன பொற்றேர் வர்க்கமும்
உடைபடு கலங்கள் போற்சு ழித்து விரைபட

16ஒழுகுதி ரந்தனின் முழுகியெ ழுந்தன உச்சா டத்துடன்
உடைகடல் அதிர்ந்து கூப்பி ளக்கு நடையின;

17செகதலம் எங்கணும் அதிரமு ழங்கிய டிப்பாய் வெற்றிய
திரள்வரை பிடுங்கி நாட்டி யொட்டு குழையின

18சினமலி வெங்குறள் இனமொடு திண்டிறல் மற்போர் கற்பன
திசையள வுநின்று நீட்டி வைக்கும் அடியின

19திசைகள்தொ றும்பல குறைகள் எழுந்துது டித்தா டச்சிறை
செறிகழு கரங்கில் வீற்றி ருக்கும் அரசின

20திமிரபி லங்கிழி படவிசை கொண்டுகு தித்தா லிப்பன
சிகரவ டகுன்றி னூற்றி ரட்டி நெடியன

---

16 கூ = பூமி; "கூ காக்கைக்கு" (தனிப் பாடல்-காளமேகம்); 'கூநின் றளந்த குறளென்ப'-திருவள்ளுவமாலை 14;

17 மலே – பேய்களின் காதிற் குழைகள்: பூதவேதாள வகுப்பு, அடி 60–ன் குறிப்பைப் பார்க்க.

19 உடற்குறைகள் போர்க்களத்தில் எழுந்து ஆடுதல்— உடற்குறை – கவந்தம்—திருப்புகழ் 354, பக்கம் 394 குறிப்பு; 'மா கவந்தங்கள் கூளி வாய்ப்பறை மிழற்ற ஆடும் ஆகவம்' —கந்தபுராணம் 1-21-1; அரங்கு - போர்க்களம்;

*15.* உயர் (இபமும்) - உயர்ந்த யானைகளும், குரகத குலமும் — குதிரைகளின் கூட்டங்களும், (கன) கனத்த — பெரிய (பொன்தேர் வர்க்கமும்) அழகிய தேர்களின் கூட்டமும் (உடைபடு கலங்கள்போல்) சுழற்காற்றால் உடைபடு மரக்கலங்கள் போல, சுழித்து – சுழலுதல் உற்று, விரை – வேகமாய், பட – அழிய

*16.* ஒழுகு – அழிவுபட்ட யானை – குதிரைகளின் ஒழுகும் (உதிரம் தனில்) ரத்தப் பெருக்கில், முழுகி (எழுந்தன) எழுந்தனவாய், (உச்சாடத்துடன்) உச்சாட்டியத்துடன் (அல்லது உச்சாடனத்துடன்) ஓட்டலுடன் (கலந்த) நடையின) ஒன்றை ஒன்று துரத்தி ஓட்டுதலுடன் (கலந்த) நடையின ; (உடைகடல்) கடல் உடைபடவும், அதிர்ச்சிகொண்ட (கூ) பூமி பிளவுபடவும், (நடக்கும்) நடையைக்கொண்டன (போர்க்களத்தலகைகள்)

*17.* செகதலம் எங்கணும் – பூமியில் எல்லா இடங்களும் அதிர்ச்சிகொள்ளும்படி, முழங்கி – முழக்கம் செய்து, அடிப் பாய் — அடிவைத்துப் பாய்கின்ற, வெற்றிய – ஜெயத்தைக் கொண்டனவாய்த், திரண்டுள்ள மலைகளைப் பிடுங்கி (நாட்டி) நிறுத்தி (ஒட்டு) (தமது காதில் அந்த மலைகளை) ஒட்டு குழையன - (காதிற்) குழைகளாக ஒட்டவைப்பன (பொருத்தி வைப்பன) — போர்க்களத்தலகைகள்

*18.* சினம் மலி – கோபம் மிகுந்துள்ள, வெம் – கொடிய குறள் இனமொடு – பூத கணங்களுடன், திண்திறல் - வலிய தைரியத்துடன், மற்போர் – மல்யுத்த வகைகளைக், கற்பன - கற்றுக்கொள்வன ; திசையளவு நின்று – நான்கு திசைகள் அளவும் பரந்து நின்று, நீட்டி வைக்கும் அடியின – நீளமாக வைக்கும் அடிகளைக் கொண்டன (போர்க்களத்தலகைகள்)

*19.* திசைகள்தொறும் — (போர்க்களத்தில்) நான்கு திசைகளிலும், பல — பல, குறைகள் — உடற் குறைகள் எழுந்து துடித்து ஆட, (சிறை) இறகுகள் மிக நிறைந்த கழுகுகள் கூடியுள்ள, அரங்கில் – போர்க்களத்தில் வீற்றிருந்து தலைமை வகித்துத் தமது ஆணையைச் செலுத்துவன (போர்க்களத்தலகைகள்)

*20.* திமிரம் — இருள் நிறைந்த, பிலம் — பாதலம், கிழிபட - கிழிபட்டு உடையும்படி, விசைகொண்டு - வேகத்துடன் குதித்து, ஆலிப்பன – ஆரவாரத்துடன் ஒலிசெய்வன ; சிகரம் – உயர்ந்துள்ள, வடகுன்றின் - மேரு அல்லது இமயமலையினும், நூற்றிரட்டி – இருநூறு மடங்கு நெடியன – நீண்டுயர்ந்துள்ளன (போர்க்களத்தலகைக்கள்)

[21]சிறியன கிண்கிணி யணிகுரு வின்சர ணத்யா னத்தின
திசைபட அகண்ட சீர்த்தி மெச்சி யிரைவன

[22]திமிலைபெ ரும்பறை சிறுபறை நின்றதி ரச்சே வித்துயர்
சயமகள் விளங்கு வேற்க ரத்தை மொழிவன

[23]திரிகட தொங்கிட திரிகட திங்கிட தித்தீ செக்கண
செககண மொழிந்து கூத்த னைத்து நவில்வன

[24]சிலைமலி திண்புய அசுரர்சி ரங்கள் அடுப்பா வைத்தவர்
செறிகுடர் நிணங்கள் காய்ச்சி மிக்க அயில்வன ;

[25]நிகரில் அறம்புரி குருகுல பஞ்சவர் மெய்த்தூ துக்கொரு
நிமிடம திலன்று போய்க்க வித்த மணிமுடி

[26]நிருபர்ப யங்கொள நெறுநெ றெனும்படி பொற்பீ டத்திடை
நிலைபெற இருந்து நூற்று வர்க்கும் அவரறி

[27]நினைவுற வன்புறும் ஒருபதி னெண்குண அக்ரோ ணிப்படை
நிகிலமு மடிந்து கூற்று வற்கு நிறைவுற

---

[21] குரு - குருமூர்த்தியாம் முருகவேள் எனவே கொள்ளலாம். 'குறத்தி இறைவனை நிறைத்து மலரடி குறித்து வழிபடு குணத்தை உடையன' என்றார் பொருகளத்தலகை வகுப்பிலும் அடி 16.

[22] வேலை – 'சயமகள் விளங்கு வேல்' என்றார் – வெற்றி அயில், வெற்றிவேல், வென்றிவேல் எனவெல்லாம் திருப்புகழிலும் (36, 349, 719, 758, 1026, 1255) கந்தரலங்காரத்திலும் (11, 33) ஓதினராதலின்.

[24] அசுரர் சிரங்கள் அடுப்பாக வைத்தல் — பொருகளத் தலகை வகுப்பில் அடி 5–ன் குறிப்பைப் பார்க்க.

[25-28] (1) கிருஷ்ணபகவான் - விசுவரூபம் எடுத்த வரலாறு: நில அறை உருவியது :–திருப்புகழ் 934, பக்கம் 720 குறிப்பு. (2) 18 அக்ரோணிப்படை :–பாண்டவர் பக்கல் 7 அக்ரோணிப் படை, துரியோதனன் பக்கல் 11 அக்ரோணிப் படை ஆக 18 அக்ரோணி : பாண்டவர் பக்கல் :–" யானை, தேர், பரி, ஆள், எனுந் திறத்தினுல் இலக்கணத்தெண்பட்ட, சேனை ஏழுமக் குரோணிகள் திரண்டன திரைக்கடல் ஏழென்ன ... தருமனும் எதிர்கொண்டான் '' (தொடர்ச்சி – பக்கம் 406).

21. சிறியன கிண்கிணி – சிறிய கிண்கிணி (சதங்கை), அணி - அணிந்துள்ள, குருவின்-குருமூர்த்தியாம் முருகவேளின் சரணத் த்யானத்தின – திருவடிகளைத் தியானத்திற் கொண்டு போற்றுவன ; திசைபட — நான்கு திசைகளும் கிழியும்படி அகண்ட – கணக்குக் உட்படாத – குறைவுபடாத, (சீர்த்தி) அம் முருகவேளின் கீர்த்தியைப் — பெரும்புகழை, மெச்சி, இரைவன-கூச்சல் இட்டு உரைப்பன (போர்க்களத்தலகைகள்)

22. திமிலே – ஒருவகைப் பறை, பெரும்பறை, சிறுபறை இவைகள் நின்று ஒலி செய்யச், சேவித்து – வணங்கி, உயர் – மேலான, சயமகள்–விஜயலக்ஷ்மி விளங்கும் வேலாயுதத்தைக் கொண்ட திருக்கரத்தைப் போற்றித் துதி கூறுவன (போர்க் களத்தலகைகள்)

23. திரிகட தொங்கிட ...... செக்கண செககண எனக் கூறிக் கூத்துக்கள் யாவையும் நடித்துக்சாட்டுவன (போர்க் களத்தலகைகள்)

24. சிலேமலி – மலேபோன்ற, திண்புய – வலிய புயங்களே உடைய அசுரர்களின், சிரங்கள் - தலேகளே அடுப்பாக வைத்து (அவர்) அந்த அசுரர்களின் (செறி) நிறைந்துள்ள குடர்களே யும், நிணங்கள் – மாமிசங்களேயும் காய்ச்சி, மிக்க அயில்வன – நிரம்ப உண்பனவாகும் (எவை எனில்)

25. நிகர் இல் – ஒப்பில்லாத, அறம்புரி – தருமங்களேச் செய்த குருகுலத்தவரான பஞ்சபாண்டவர்களின் (தரும வீம அருச்சுன நகுல சகாதேவர் எனப்படும் பாண்டவர் ஐவரின்) மெய்த் தூதுக்கு - உண்மை வாய்ந்த தூதின்பொருட்டு (ஒரு நிமிடமதில்) வெகு விரைவாக (அன்று) முன்னுள் (போய்) தூதுபோய்க், (கவித்தமணிமுடி) ரத்னக்ரீடங்கள் சுவித்துள்ள (கரீடங்களேத் தலேயில் அணிந்துள்ள)

26. நிருபர் – (துரியோதனன் சபையில் இருந்த) அரசர் கள் பயம் கொள்ளும்படி (நெறு நெறெனும்படி) நெறு நெறு என்று கீழிறங்கின (பொற் பீடத்திடை) அழகிய பீடத்திலே நிலேபெற இருந்து - நிலேபெற்று வீற்றிருந்து(நூற்றுவர்க்கும்) துரியோதனுதிகள் நூறுபேரும், அவரறி - அவரவர் அறிந்து—

27. நினேவுற — நினேவில் வைத்துக் கொள்ளும்படி, வன்பு உறு – வலிமை பொருந்திய (ஒரு) ஒப்பற்ற, பதினெண் குண - பதினெட்டுவகை (அக்ரோணிப் படை) பெருஞ்சேனேத் திரள் (நிகிலமும்) எல்லாமும் (மடிந்து) இறந்து (கூற்றுவற்கு) யமனுக்கு (நிறைவுற) நிறைய (விருந்தாக)—

[28]நிலமகள் வன்பொறை கடியுமு குந்தன்மு தற்சேண் முட்டவு
நெறிபட நிமிர்ந்த ஆக்கை யற்கு மருமகன்

[29]நிமலைத்ரி யம்பகி கவுரிதி கம்பரி நிர்ப்பா வக்குண
நிருமலி யிரங்கு தாய்ப்ரி யத்தன் அறுமுகன்

[30]நிகரக னங்குல சிகரிதொ டும்பெரு வெற்பார் உற்பல
நிறையருவி கொஞ்ச ஓச்சி யத்தில் ஒளிர்சுனை

---

துரியோ தனன் பக்கல் :—" தரணிபன் தன்னைச் சூழ்ந்து, **பதினெ ரக்குரோணி** சேனை பார்மிசைப் பரந்தவன்றே "—வில்லி பாரதம் - படை எழுச்சி 8, 23.

அக்குரோணி — 21,870 தேர்கள், 21,870 யானைகள், 65,610 குதிரைகள், 1,09,350 காலாள் கொண்ட பெருஞ் சேனைவகை. பதாதி=1 யானை, 1 தேர், 3 குதிரை, 5 காலாள்.

" ஒருபெருங் களிறும் ஒருபெருந் தேரும்
புரவி மூன்றும் படைஞர் ஐவரும்
**பதாதி** என்று பகரப் படுமே"

**பதாதி** மூன்று மடங்கு கொண்டது **சேனாமுகம்** ; சேனாமுகம் மூன்று பங்கு கொண்டது **குமுதம்** ; குமுதம் மூன்று பங்கு கொண்டது **கணகம்** ; கணகம் மூன்று பங்கு கொண்டது **வாகினி**; வாகினி மூன்று பங்கு கொண்டது **பிரளயம்** ; பிரளயம் மூன்று பங்கு கொண்டது **சமுத்திரம்** ; சமுத்திரம் மூன்று பங்கு கொண்டது **சங்கம்** ; சங்கம் மூன்று பங்கு கொண்டது **அநீகம்**; அநீகம் மூன்று பங்கு கொண்டது **அக்குரோணி**. (பிங்கலம்).

பதாதியில் தேர் 1, சேனாமுகத்தில் தேர் 3, குமுதம் தேர் 10, கணகம் தேர் 30, வாகினி தேர் 90, பிரளயம் தேர் 270, சமுத்திரம் தேர் 810, சங்கம் தேர் 2430, அநீகம் தேர் 7290, அக்குரோணி தேர் 21870 எனக் கணக்கிடவும். யானை தேரின் கணக்கே 21870 ; குதிரை 3×21870=65610 ; காலாள் 5×21870=1,09,350.

(3) நிகிலமும் மடிந்தது :

" நீபாரத அமரில் யாவரையும் நீறுக்கிப்
பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணா"
—வில்லிபாரதம் – கிருஷ்ணன் தூது 34.

28. நிலமகள் — பூதேவியின், வன்பொறை — பெரிய பாரமாயிருந்தவர்களைக் (கடியும்) கடிந்து கோபித்தழித்த (முகுந்தன்) திருமால், முதல் - முன்னர், சேண் முட்டவும் — ஆகாய முகடு முட்டும்படியும் (நெறிபட) நீதிநெறி விளக்கம் உறவும், (நிமிர்ந்த) விசுவரூபம் எடுத்த (ஆக்கையற்கு) உடம்பினைக்கொண்ட பெருமான் - ஆகிய விஷ்ணுமூர்த்திக்கு மருமகன் —

29. நிமலை — களங்கம் அற்றவள், (த்ரியம்பகி) முக்கண்ணி, கவுரி, திகம்பரி - திக்குகளை அம்பரமாக - ஆடையாக உடையவள் - நிர்வாணி, (நிர்ப்பாவக்குணம்) - பாவம்-பாவனைக்கு அதீதமான — எண்ணங்களுக்கு எட்டாத — எண்ணங்கள் அற்ற குணவிசேடத்தை உடைய (நிருமலி) மலம் - குற்றமற்றவள், (இரங்கு தாய்) ஆன்மாக்களிடத்தே இரக்கம் - கருணை நிறைந்த தாயாம் பார்வதிக்குப் ப்ரியமானவன், ஆறு திருமுகங்களை உடையவன் —

30. (நிகரம்) கூட்டமான (கனம்) பொன்மயமான குல சிகரி — குலமலை — சிறந்த மலையாகிய மேரு அல்லது கயிலை மலையைத் (தொடும்) தொடும் பெருவெற்பு - பெருமையால் நிகர்க்கும் மலையில் (உற்பலம்) நீலோற்பல மலர்கள், நிறை அருவி கொஞ்ச - நீர் நிறைந்த அருவிகள் (கொஞ்ச) பாய, (ஒச்சியத்தில்) கீர்த்தியுடனே (ஒளிர்) விளங்குகின்ற சுனையில்

---

30.31 திருத்தணிகையில் சுனையில் உற்பலம் (நீலோற்பலம்)

நியதியுடன் (ஒழுங்காக) — காலை, உச்சி, மாலை மூன்று வேளையும் மலர்வது —

"காலைப் போதினில் ஒருமலர்; கதிர்முதிர் உச்சி
வேலைப் போதினில் ஒருமலர்; விண்ணெலாம் இருள்சூழ்
மாலைப் போதினில் ஒருமலர்; ஆகஇவ் வரைமேல்
நீலப் போதுமூன் றுழிவின்றி நித்தலும் மலரும்
—கந்தபுராணம் 6-24-222,

(திருப்புகழ் 272, பக்கம் 178 கீழ்க்குறிப்பும் பார்க்க.)

"கயிலை நேர் தணிகை மாமலை" — தணிகைமலைப்பத்து: கயிலை - பொன்மலை — உயர் பொன் நொடித்தான் மலை — சுந்தரர் 7-100-10.

ஒச்சியம் — ஓஜஸ் (வடமொழி) — கீர்த்தி, ஒளி, நீர் எனப்பொருள்படும்.

31நியதியின் நன்கலர் தணிகைஎ னும்பதி நிற்பான் முற்பட
நெடுமகர சிந்து தீப்ப றக்க வெகுவித
32நிபுடது ரங்கக சவிரத சங்க்ரம நிட்டு ரக்கொலை
நிருதரை முனிந்த போர்க்க ளத்தில் அலகையே.

31 - 32 சிந்து தீப்பறக்க நிருதரை முனிந்தது :
"இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
...... வென்ற வேலா" — திருப்புகழ் 990.

## போர்க்களத் தலகை வகுப்பின் சுருக்க உரை

(25 – 28) பாண்டவர்களுக்குத் தூதனாகச் சென்று (சபையிற் கூடியிருந்த) அரசர்கள் அச்சுறும்படி நெறு நெறு என்று தனக்கிட்ட ஆசனம் கீழிறங்கியும் தனது பீடத்தில் நிலைபெற வீற்றிருந்து, துரியோதனாதி நூற்றுவரும் (தமது பிழையை) ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்படி, சேனைகள் எல்லாவற்றையும் அழிவுபெறச் செய்து, பூபாரந் தீர்த்தவனும், விசுவரூபம் எடுத்தவனுமான திருமாலின் மருமகன் (29) தாயாம் பார்ப்பதிக்குப் பிரியமுள்ளவன் (30 – 31) தவறாது பூக்கும் நீலோற்பலச் சுனை விளங்கும் தணிகையில் விளங்குபவன் ஆகிய முருகவேள் (31 – 32) கடல் தீப்பட, சேனைகள் அழிபட அசுரர்களைக் கோபித்துப் பொருத போர்க் களத்தில் இருந்த பேய்கள் (அங்கு) — (1 - 2) பிணங்களை மலைபோல் அடுக்கிப் பசியுடன் பயிரவியை வாழ்த்துவன; (3) பயிரவ கோலத்தினருக்கு மாமிச பிச்சை இடுவன; (4) பூதங்களின் பசியடங்க மாமிசத்தைத் தருவன, (5) (இறந்துபட்ட அசுரர்களின்) பற்களைஅரிசியாகக்கொண்டுஅவைகளைச் சுத்திசெய்து சமைப்பன, (6) இறந்துபட்ட குதிரைகளையும், யானைகளையும் துண்டம்செய்து காய்ச்சிப் பங்கிடுவன, (7) போரின் வெற்றி கண்டு பகைவர்கள் பலபல வகையாக அழிபட்ட நிகழ்ச்சியைக் கூச்சலிட்டு உரைப்பன, (8) யானைத் தோலைச் சட்டையாகவும், மான் தோலை ஆடையாகவும் அணிவன, (9) கெட்ட சகுனங்களை (அசுரர்களுக்குக்) காட்டுவன, பிறைபோலும்

31. நியதியின் - காலை, உச்சி, மாலை என்னும்பொழுதில் மலர்வது என்னும் நியமம் தவறாது - நன்கு அலர் - நன்றாக மலர்கின்ற — மூன்று போதிலும் ஒழுங்காக (நீலோற்பலம் மலர்கின்ற) **தணிகை** என்னும் (பதியில்) ஊரில் நிற்பவன், (முற்பட) போருக்கு முற்பட்டெழுந்து, (நெடு) பெரிய மகர மீன்களைக்கொண்ட (சிந்து) கடல் (தீப்பறக்க) தீப்பட்டுப் பொறிபறக்க - (வெகுவித) பலவிதமானவையும்

32. (நிபுடம்) நெருங்கி வந்தனவுமான, (துரங்கம்) குதிரைகள், (கசம்) யானைகள் (இரத சங்க்ரமம்) தேர்களுடன் கலந்து கூடி வந்த, (நிட்டூரம்) கொடுமைச் செயல்களையும், (கொலை) கொலைகளையும் (செய்த) நிருதரை - அசுரர்களை, முனிந்த — கோபித்த போர்க்களத்தில் இருந்த அலகையே, பேய்க்கூட்டங்களே;

---

பற்களைக் கொண்டன, (10) சக்ரவாளகிரியளவும் பாய்வன; மாமிசங்களைக் கூட்டாகச் சமைத்து உண்பன, (11) ரத்தம், மாமிசம் இவைகளைப் பிரித்தெடுத்துப் பங்கிடுவன, (12) அசுரர்களின் கிரீடங்களை அல்லது தலைகளைக்கோட்டைபோல— கோடுபோல—அடுக்கி, எதிரெதிர் நின்று சண்டை செய்வன, (13) துணங்கைக் கூத்தாடுவன; கழுகுகளும், காக்கைகளும் சுற்ற வருவன; (14) பொன்னுலக நந்தவனத்து மலர்களைக் — குடல்களாம் நார் கொண்டு கட்டித் தலையிற் சூடிக்கொள்வன, (15 - 16) யானை, குதிரை அழிபட, ஒழுகும் ரத்தப் ப்ரவாகத் தில் முழுகி எழுந்து ஓட்டத்துடன் பூமி பிளவுபட நடப்பன, (17) மலைகளைக் குழைகளாகக் காதில் அணிவன, (18) பூதங்க ளோடு மல்யுத்த வகைகளைக் கற்பன, திசையளவும் நீட்டி வைக்கும் அடிகளைக் கொண்டன, (19) கவந்தங்கள் - உடற் குறைகள் ஆடத் தாம் அப் போர்க்களத்தில் அரசுபோல வீற்றிருந்து பார்ப்பன, (20) விசையுடன் குதிப்பன, ஆரவா ரிப்பன, மேருவிலும் பன்மடங்கு பெரியன, (21) முருகனைத் தியானித்துப் போற்றிக் கூச்சலிடுவன, (22) பறைகள் முழங்க ஜெயவேலைத் துதிப்பன, (23) திரிகட தொங்கிட எனக் கூத்துக்களை ஆடிப் பாடுவன; (24) அசுரர்களின் தலைகளை அடுப்பாக வைத்து, அவர்தம் குடரையும் மாமிசத்தையும் காய்ச்சி நிரம்ப உண்பன.

## 10. திருஞான வேழ வகுப்பு

[மௌனஞான விசேடத்தைக் கூறிற்று. 'சிவமயத் திரு ஞான வேழம்' என்பதிற் சிவஞானத்தை யானைக்கு ஒப்பிட்டார்.]

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தான தானன

[1]சடலை பட்டலை உடல் எனப்படு
தரும சித்திர கூட மானவை
[2]தவிர நிட்கள வெளியில் நிற்பன
சமய தர்க்கவி ரோத வாதிகள்
[3]தகர எற்றுவ, *புகர்ம னக்கிரி
தனைமு ருக்குவ, ஆசை ஆணவ
[4]தளைஇ யற்கையை விடந டிப்பன,
சனன முற்றிய சாத மாம்எழு;
[5]கடல்க டப்பன, படுகொ லைச்சமர்
கடகம் அப்படி சாய மோதுவ;

---

[1] (1) சடலை - பருத்தது; சடலம் - சடம் - பொய், வஞ்சகம்; சடம் என்பது பிறக்கும்போது ஆன்மாவில் மோதி அதன் நல்லறிவைக் கெடுக்கும் ஒருவகை வாயு.

(2) உடலெனப்படு தரும சித்திர கூடம் - என்றார்:
'' உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான் என்று
உடம்பினை யானிருத் தோம்புகின்றேனே ''
என்றார் திருமந்திரத்திலும் (725.).

[3] மனக்கிரி – 'நெஞ்சக் கனகல்' — கந்தரநுபூதி – காப்பு.

* 'புகர் மதக்கரி தனையுருக்குவ' என்னும் பாடத்தினும் 'புகர் மனக்கரி தனையுருக்குவ' என்னும் பாடமே சிறந்தது; பின்னர் அடி 11-ல் 'மதம் பறிப்பன' என வருதலைக் காண்க.

[4 . 5] சாதமாம் எழுகடல் – எழுபிறப்பு :—தேவர், மக்கள், விலங்கு புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் – இவற்றின் யோனிபேதம் – எண்பத்து நான்கு நூறுயிரம்; தேவர் 14 நூறுயிரம், மக்கள் 9 நூறுயிரம், விலங்கு 10 நூறுயிரம், புள் 10 நூறுயிரம், ஊர்வன 11 நூறுயிரம், நீர் வாழ்வன - 10 நூறுயிரம், தாவரம் 20 நூறுயிரம். '' உரைசேரும்

பொழிப்புரை

1. (சடலே) சடலம் – சடம்–பொய்யிற்பட்டு - நிலேயற்று அலேபடுகின்ற 'உடல்', அல்லது, சடலே – பருத்து வளர்தலே யுற்று அலேபடும் உடல் எனப்படுகின்றதும் – தரும விதியினுல் ஏற்பட்டதொரு (நல்லறஞ் செய்வதற்கு இடமாய் அமைந்த தான) சித்திர – அதிசயமான அல்லது பொய்யான கூடம் ஆனவை (வீட்டை)

2. தவிர – நீக்குதற்கு உதவி புரிவதாய், நிட்கள – உருவ மற்ற, வெளியில் - ஆகாசத்தில் – சிதாகாசத்தில், நிற்பன – விளங்குவன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; சமயவாதி கள் செய்யும் தர்க்கங்களில் விரோதமாய் வாதாடுபவர்களேத்

3. தகர - சிதறஅடித்து, எற்றுவ – நீக்குவ (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; புகர் – குற்றம் நிறைந்த – மனக் கிரிதனே–நெஞ்சம் என்னும் கனகல்லே - முருக்குவ – அழிப்பன; (சிவஞானக களிற்றின் ஆற்றல்கள்) ; ஆசை, ஆணவம் – அகங்காரம் என்னும்

4. தளே இயற்கையைவிட – இயற்கைத் தளேயைவிட – இயல்பாகவே உண்டாகின்ற பாசத்தை விலக்கவல்ல, நடிப் பன – கோலத்தை மேற்கொள்ள வல்லன (சிவஞானக் களிற் றின் ஆற்றல்கள்) ; சனன முற்றிய சாதமாம் எழுகடல் — பிறப்பு என்னும் முடிவான எழுவகைத் தோற்றங்களாம் ஏழு

5. கடல்களே — எழுவகைப் பிறவிக் கடல்களேயும், கடப்பன – கடக்கவல்லன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) படுகொலே – கொடுமையான கொலேகள் ஏற்படும், சமர் - போரைச் செய்யும், கடகம் - சேனேகளேயும், *அப்படி - அந்த க்ஷணமே, சாயமோதுவ-குலேந்தழியும்படி மோதித்தொலேக்க வல்லன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்)

---

எண்பத்து நான்கு நூருயிரமாம் யோனிபேதம்" - சம்பந்தர் 1–132–4; இதனுல் சாதமாம் எழுகடல் என்ருர் - திருப்புகழ் 668, பக்கம் 34 கீழ்க்குறிப்பு.

சிவஞானம் பிறப்பை ஒழிக்கும் :—

"இச்சிறைப் பவங்கள் நீங்கி இணையிலா முத்தி எய்தல்
மெய்ச்சிவ ஞானத் தன்றி வேறுள கருமத் தாகா"
—திருக்கூவப் புராணம் - நைமிசா 62.

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலேப்படுவர் மற்றீண்டு வாரா நெறி"—திருக்குறள் 356.

*அப்படி— திருப்புகழ் 33, பக்கம் 97 குறிப்பு.

[6]கருவி னைத்தரும் இருவினைத்தொடர்
கழல்ப தத்தன, யோக சாதகர்
[7]களைப றிப்பன, கிளைள னப்படு
கவலை சுற்றிய காடு சாடுவ,
[8]கருணை மெய்த்தவ திருவ ருட்கன
கவள மொக்குவ, காம ராசனை :
[9]அடல்கெ டுப்பன, அகில கற்பனை
அரண் அழிப்பன, கோப மானவை
[10]அவிய நற்பொறை எனுந திப்பிர
ளயம் இறைப்பன, லோப மோகிதம்
[11]அவைமு றிப்பன, மதமு ழுத்தறி
யடிப றிப்பன, *ராச தாதியின்
[12]அதிகு ணத்ரய மதில் இடிப்பன,
அளவில் தத்துவ தூளி வீசுவ;

---

[6] ஞானம் வினையை ஒழிக்கும் :—

"தன்னை அறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே"
—திருமந்திரம் 2611.

[3,6,9-12] "காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்" — குறள் 360.

'ஞான யோகங்களின் முதிர்ச்சி உடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சை என்னும் இக் குற்றங்கள் மூன்றனுடைய பெயரும் கூடக் கெடுதலான் அவற்றின் காரிய மாய வினைப் பயன்கள் உளவாகா; அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுத்தலைக்கட் செல்லும் கோபமும் என வட நூலார் குற்றம் ஐந்தென்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக் கண்ணும், அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான், மூன்றென்றார். இடையறுத ஞான யோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றும் காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுத் துய் போலு மாகலின், அம் மிகுதி தோன்ற இவை மூன்றன் நாமங்கெட என்றார்"—திருக்குறள் 360 உரை.

* 'ராச தாமத' என்றும் பாடம்.

6. கருவினை தரும் – பிறப்பைத் தருகின்ற, இருவினைத் தொடர் - நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினைச் சங்கிலியாம் விலங்குகளைக், கழல் - கழற்றவல்ல – நீக்கவல்ல, பதத்தன – தகுதிகொண்டன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்); யோக சாதகம் செய்துள்ளவர்கள் (பயின்றவர்களின்)

7. களை - குற்றத்தை அல்லது சோர்வை, பறிப்பன — ஒழிக்கவல்லன, பறித்து எறியவல்லன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்); கிளை எனப்படு — சுற்றம்போல வரும், (கவலை சுற்றிய காடு) சுற்றிய – சூழ்ந்து வரும், கவலைக் காடு – மனச் சஞ்சலம் என்னும் காட்டைச், சாடுவ – அழிக்கவல்லன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ;

8. கருணை – ஈசனது கருணை என்கிற, மெய்த்தவ திருவருள் – உண்மைத் தவத்தின் பேறுகக் கிடைக்கும் இறைவனது திருவருள் எனப்படும், கனம் — பெருத்த — நிரம்பிய கவளம் – உணவை – சோற்றுத் திரளை, மொக்குவ — வாரி உண்பன - ஒருசேர விழுங்கி உண்பன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; காமராசனை – காமராஜனும் – மன்மதனது

9. அடல் கெடுப்பன – வலியை அழிப்பன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; அகில கற்பனை – எல்லாவித கற்பனைகளின் – சூதுகளின் – மாயைகளின், அரண் — கோட்டைகளை, வலிமையை (அழிப்பன) அழிக்கவல்லன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; கோபமானவை – கோபச் செய்கைகள் — (அல்லது கோபம் என்கிற மால் நவை – பெரிய குற்றம்)

10. அவிய - அழியும்படி, நல்பொறை எனும் — நல்ல பொறுமை என்னும், நதிப் பிரளயம் – ஆற்று வெள்ளத்தை, இறைப்பன - வாரி வீசுவன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்); (உலோபம்) ஈயாமை, (மோகிதம்) காம மயக்கம்—

11. அவை -ஆகியவற்றை, முறிப்பன - ஒடித்துஎறிவன சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள் ; (மதம் முழுத் தறி) செருக்கு என்னும் முற்றிய தூணை (அடி பறிப்பன) அடியோடு பறித்து எறிவன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) ; ராசதாதியின் – ராஜதம் ஆதிய

12. (அதி குணத்ரயம்) மிக்கெழுகின்ற முக்குணங்களின் (ராஜதம், தாமதம், சாத்துவிகம் எனப்படும் முக்குணங்களின்) மதில் — கோட்டைச் சுவர்களை — (முக்குணங்களின் வலிமையை) (இடிப்பன) அழித்தெறிந்து, குணங்கடந்த நிலையைக் கொடுப்பன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்) (அளவிவ்) கணக்கிடுதற்கரிய — அளவிடுதற்கரிய—(தத்துவ) 'உண்மை' எனப்படும் மலரின் (தூளி) பூந் தாதுக்களை (வீசுவ) வீசி இறைப்பன (சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்)

13 திடமு டைச்சிறை மயில் உகைத்தெழு
  சிகரி குத்திய வேலை நீள்சுனை
14 தினமும் உற்பல மலர்தீ ருத்தணி
  இறைதி ருப்புகழ் பாடு நாவலர்
15 திரள்ப்ரி யப்பட இனித ளிப்பன,
  செயலொ ழித்தநு பூதி மீமிசை
16 திகழும் அற்புத மவுன நிர்க்குண
  சிவம யத்திரு ஞான வேழமே.

---

14 திருத்தணியில் தினமும் உற்பலம் மலர்தல் — போர்க்களத்தலகை வகுப்பு அடி 30–ன் குறிப்பைப் பார்க்க.

16 'மவுன நிர்க்குணம்' - கந்தர் அலங். பாடல் 19 பார்க்க.

**சிவமயத் திருஞான வேழம்:**

சிவஞானத்தைச் – செயலற்ற அநுபூதி நிலையின்மீதுற்று விளங்கும் மவுன, நிர்க்குண, "சிவமய ஞான வேழம்" என்றார். வேழம் – யானை ; களிறு: ஞானத்தைக் களிற்றுக்கு நூலோர் ஒப்பிடுவர்: 'பஞ்ச மலங் காய்ந்த சிவஞானக் கடாக் களிறு' (கந்தர் கலிவெண்பா 70.); 'முத்தி நா டெய்த வோர் ஞான வாரணம் நல்குதி' — பண்டார மும்மணிக் கோவை 2 ; 'போதகம் போதகம்' – பாசவதைப்பரணி 545; போதகம்–ஞானம், யானை : சிவஞான வேழம் என ஒருமையிற் கூறிப்பன்மையில் அதன் ஆற்றல்கள் விளக்கப்பட்டுள. மேலும் ஞானம் — அபரஞானம், பரஞானம் என இருவகைத்து:

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்"

எனவரும் பெரியபுராணச் செய்யுளில் (ஞானசம். 70) உவமையிலாக் கலைஞானம் அபர ஞானத்தையும், உணர்வரிய மெய்ஞ்ஞானம் – பரஞானத்தையும் குறித்து நின்றன என்பர்.

"மேவரு ஞானம் இரண்டு; அவற் றென்று
  விமலனார் பாத தாமரையே
ஓவரும் அன்பின் உணர்திரு அளிக்கும்
  ஒப்பிலா உயர் கலைஞானம்,
தாவரும் பவத்தை வேரொடும் களையும்
  தக்கமெய்ஞ் ஞானமொன் றிவற்றுற்
சாவதும் பிறப்பும் தணப்புறச் சிவத்தைச்
  சார்ந்ததுவாய்நிற்றல் யோகம்" –தணிகைப்புரா–அகத். 353

13. திடம் உடை - வலிமை வாய்ந்த, சிறை - சிறகுகளைக் கொண்ட மயிலை (உகைத்து) ஏறிச் செலுத்தி, (எழு சிகரி) சூரனுக்கு அரணுயிருந்த — ஏழு மலைகளைக் குத்தி எறிந்த, வேல் - வேலாயுதத்தை ஏந்திய (ஐ)–கடவுள்; நீள் சுனை - நீண்ட சுனையில்

14. தினந்தோறும் (உற்பலம் மலர்) நீலோற்பல மலர்கின்ற திருத்தணி இறை — திருத்தணிகேசரின் திருப்புகழைப் பாடுகின்ற (நாவலர்) புலவர்களின்

15. (திரள்) கூட்டம் பிரியப்படும்படி (இனிது) இனிய நற்பொருளை (அளிப்பன) தருவன – (எவை எனில்) செயல் - மனம், வாக்கு, காயம் என்பவற்றால் ஏற்படும் செய்கைகளை அழித்து (அநுபூதி) அனுபவ ஞானத்தின் சிகரமாக மேலே

16. (திகழும்) விளங்குகின்ற, அற்புதகரமான, மவுன – மௌனநிலை எனப்படும் (நிர்க்குணம்) முக்குணங்களைக் கடந்தனவான (சிவமயத் திருஞான வேழமே) சிவமயமாய் விளங்குகின்ற அழகிய "ஞானம்" என்னும் களிற்றின் ஆற்றல்களே.

---

## திருஞான வேழ வகுப்பின் சுருக்க உரை

இத் திருவகுப்பால் சிவஞான வேழம் செய்ய வல்ல பெருஞ் செயல்கள் பதினெட்டு கூறுகின்றார்:

செயல்கள் அறும்படி வாழ்வித்து அனுபவ ஞானமாய் விளங்கும் அற்புதமான சிவஞானக் களிற்றின் ஆற்றல்கள்:— 1. உடற் பிணியை நீக்கி சிதாகாசத்திற் கொண்டு போய் விடும்; 2. சமய விரோதவாதிகளைத் தோல்வியுறச்செய்யும்; 3. மனச் சேஷ்டைகளை அழிக்கும்; 4. ஆசை, ஆணவம் என்னும் பாசங்களை நீக்கும்; 5. பிறவிக் கடலைத் தாண்டச் செய்யும்; 6. பகையாம் படைகளை (சேனைகளை) மோதி அழிக்கும்; 7. வினைகளை நீக்கும்; 8. யோகிகளின் குற்றங்களையும் சோர்வையும் நீக்கும்; 9. கவலைகளை ஒழிக்கும்; 10. இறைவன் திரு அருளாம் கவளங்களை உண்ணும்; 11. மன்மதனது வலியை ஒடுக்கும்; 12. பொய்த் தோற்றங்களை (மாயைத் தோற்றங்களை) ஒழிக்கும்; 13. கோபத்தைப் போக்கிப் பொறுமையை நிரம்ப அளிக்கும்; 14. ஈயாமை, ஆசை இவைகளை விலக்கும்; 15. ஆணவத்தை அடியோடு பறித்தெறியும்; 16. முக்குணங்களைக் கடக்கும்; 17. சகல உண்மை உணர்ச்சிகளையும் வாரி அளிக்கும்; 18. மயில்மீதேறி வேலால் எழுகிரியைச் சாய்த்த திருத்தணிகேசருடைய திருப்புகழைப் பாடும் நாவலர்கள் பிரியப்படும்படி அவர்களுக்கு இனியனவற்றை அளிக்கும் – இனிது அருள்பாலிக்கும்.

## 11. திருக்கையில் வழக்க வகுப்பு

[ இது முருகன் திருப்புகழைப் படிப்பவர்க்கு அவன் திருக் கையால் வழங்கப்படுவதாய ப்ரசாத மகிமையைக் கூறிற்று. அங்ஙனம் வழங்கப்படுவது ஞானமேயாதலின் அந்த ஞானத்தை ஐராவதம் போன்ற நிருமல ஞானக் களிற்றுக்கு உவமையாக்கி ஞானவேழ வகுப்புப் போலவே அந்த ஞான சக்தியின் பெருமை யைக் கூறினர். ]

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன

[1]தருக்குவ செருக்களம் வெருக்கொள அதிர்ப்பன,
தடக்கரம் நிமிர்த்துயர் உடுக்குலம் உதிர்ப்பன,
[2]தடித்தெழு குலப்புவி நடுக்குற அதிர்ப்பன
தழைச்செவி படைப்பன, திரட்கயிலை ஒப்பன,
[3]சதுர்த்தச தலத்தையும் எடுத்தக டவுட்பணி
சகஸ்ர பணபத்தியும் ஒடுக்குற நடப்பன,
[4]சமுத்ர மதனத்தில் அமுதத்துடன் உதிப்பன,
தரத்தன, தலைச்சுர, நதிப்புனல் குளிப்பன;
[5]அருக்கர் பதம்உட்பட மிதித்திடு பதத்தன;
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன;

---

[1] தருக்குவ – தருக்குதல் - இடித்தல் – " மருப்பால் வெண் பிண்டி சேரத் தருக்கி, மதுக் கலந்து" — " திரு ஈங்கோய்" 40; அதிர்த்தல் - முழங்குதல் – ' மதித்த வேலை ... வாய்விட்டு அதிர்த்த '—கந்தபுராணம் - ததீசி உத். 325.

[2] எழுபுவி - திருப்புகழ் 1031, பக்கம் 91 கீழ்க்குறிப்பு. அதிர்ப்பன – நடுக்குவிப்பன – அதிர்ப்பு – அதிர்ச்சி–நடுங்குகை (திவாகரம்); யானையின் செவிகள் முறம்போல இருத்தலால் " தழைச்செவி " என்றார். " யானைச் செவி முறத்தால்" இரணியவதை 661. ' யானை செவிகளும் சுளகாய் '—தக்க யாகப்பரணி 736. ஐராவதம்—வெண்ணிறத்ததாதலின் — கயிலை ஒப்பிடப்பட்டது.

[3] சதுர்த்தசதலம் — 14 உலகம். திருப்புகழ் 1031, பக்கம் 91 குறிப்பு. ஆதிசேடன் ஆயிரம் தலைகளுடன் உலகைத் தாங்குதல் — பூதவேதாள வகுப்பு அடி 1. " உரக பணபந்தியபிஷேகத் தாற்றிய சகலவுலகு "-திருப்புகழ் 1172; திருப்புகழ் 833, பக்கம் 448 கீழ்க்குறிப்பு.

பொழிப்புரை

[ முருகவேளின் திருப்புகழைப் படிப்பவர்க்கு அவன் திருக்கையால் வழங்கப்படுவதான ப்ரசாத மாகிய நிருமல ஞானக் களிற்றின் செயல்களும் தன்மைகளும் கீழ்க்கண்டவாறு - 26 வகையன.]

**1.** (திருக்குவ) இடித்துப் போர்புரியும் (செருக்களம்) போர்க்களம் (வெருக்கொள) அச்சங் கொள்ளுமாறு (அதிர்ப்பன) முழங்குவன (1); (தடக்கரம்) பெரிய (துதிக்) கையை (நிமிர்த்து) உயர்த்தி, (உயர்) உயரத்திலுள்ள (உடுக்குலம்) நக்ஷத்திரக் கூட்டங்களை (உதிர்ப்பன) உதிர்ந்து விழும்படி தாக்க வல்லன (2)

2. (தடித்து) பெரிதாக (எழுகுலப் புவி) ஏழாகிய சிறந்த லோகங்களும் (நடுக்குற) நடுக்கம் கொள்ளும்படி (அதிர்ப்பன) நடுக்குவிப்பன (3); (தழைச்செவி) தழைந்த செழிப்புடன் பரந்துள்ள (செவி) காதுகளைப் (படைப்பன) கொண்டன (4); (திரட் கயிலை) திரட்சியுள்ள - பருத்த கயிலை மலைபோல - வெளுத்து உயர்ந்தன (5)

3. (சதுர் - தச - தலத்தையும்) — 4 + 10 பதினான்கு உலகங்களையும், (எடுத்த) சுமக்கின்ற (கடவுட் பணி) தெய்விக நாகமாகிய ஆதிசேடனது (சகஸ்ர) ஆயிரம் (பணபத்தியும்) படங்களின் வரிசைகளும், (ஒடுக்குற) ஒடுங்கிப் பதுங்கும்படி (நடப்பன) நடக்கவல்லன (6)

4. (சமுத்ர மதனத்தில்) கடலைக் கடைந்த காலத்தில் (அமுதத்துடன்) தேவாமிர்தத்துடன் (உதிப்பன) தோன்றின வாகும் (7); (தரத்தன) மேலாந் தன்மையன (8); (தலை) சிவபிரான் தலைமீது விளங்கும் (அல்லது தலைமையான சிறப்புற்ற) சுரநதிப் புனல் - கங்கை நீரில் (குளிப்பன) குளிப்பன வாகும் (8)

5. அருக்கர் - பன்னிரு ஆதித்தர்களின், (பதம் உட்பட) மண்டலம் உட்பட - மண்டலங்கள் சூரிய மண்டலங்கள் உட்பட (எங்கும்) மிதித்திடு பதத்தன - மிதிக்கவல்ல தகுதி - தரம் வாய்ந்தன (10); அறப் படுகொலைத் தொழில் - மிகவும் பொல்லாத கொலைத்தொழில் - (அல்லது அறநெறியை அழிக்கும் கொலைத் தொழில்) புறப்படு - ஏற்பட்டுள்ள (முகத்தன) இடத்திலே இருப்பன - அறத்தைக் காக்கும் பொருட்டு எழுந்தருளியிருப்பன (11)

---

[4] கடலைக் கடைந்தபோது அமுதத்துடன் உதித்தவைகளுள் ஒன்று 'ஐராவதம்' — திருப்புகழ் 604, பக்கம் 396 குறிப்பு.

[6]அரக்கர்படை கெட்டுமுறி யப்பொரு பதத்தன ;
அயற்கும் அமரர்க்கும் ஒருபொற்பதி யளிப்பன ;

[7]அளித்தவ முதுக்கவள மொக்குவன ; முத்தெறி
அலைக்கடல் கலக்குவ ; குலக்கிரி குலுக்குவ ;

[8]அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன ;
அதிக்ரம கமப்ரவுட விக்ரம மதத்தன ;

[9]மருக்குலவு கற்பக வனத்தலர் பறிப்பன ;
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன;

[10]மதிப்பிள வெனச்செருகி வைத்தென மணிச்சதுர்
மருப்பின ; இமைப்பற விழித்த நயனத்தன ;

[11]வளைத்த கிரியைப் பொடிபடுத்தி இபம்எட்டையு
மலைத்தவண் அடிப்பட மடப்பிடி அணைப்பன ;

[12]மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன ;
மணிக்கண கனப்பண மதத்ரயம் விதிர்ப்பன ;

---

[8] மதத்தன – மதம் - பெருமை.

[10] ஐராவதம் – நான்கு தந்தங்களை உடையது.

'ஈரிரு மருப்புடைய யானை' — வேளைக்காரன் வகுப்பு அடி 15–ன் குறிப்பு. யானைக் கொம்புக்கு மதிப்பிளவு ஒப்பிட்டார் — மருப்புக்குப் பிறை உவமை — பெரும்பாணாற்றுப் படை 412–3 (உரைப்பகுதி).

[11] திக்கஜம் 8 – திருப்புகழ் 554, பக்கம் 265 குறிப்பு.

[12] மதத் த்ரயம் — மும்மதம் — யானையின் கன்னமதம், கைமதம், கோசமதம்.

விதிர்த்தல் – சொரிதல். 'நெய் விதிர்ப்ப நந்தும் நெருப் பழல்' — நான்மணிக்கடிகை 61.

6. அசுரர்களின் சேனை தோற்று முறிந்தோடும்படி யாகப் (பொரு பதத்தன) சண்டைசெய்ய வல்ல தகுதியை உடையன (12); (அயற்கும்) பிரமனுக்கும் (அமரர்க்கும்) தேவர்களுக்கும் (ஒரு) ஒப்பற்ற - (அவரவர்க்கு உரிய) பொற் பதி - அழகிய ஊரை - லோகங்களை — (சத்தியலோகத்தைப் பிரமனுக்கும், பொன்னுலகைத் தேவர்களுக்கும் (முறையே) கொடுத்து உதவுவன (13)

7. (அளித்த) கொடுக்கப்பட்ட (அமுதுக்கவளம்) தேவா மிருத உணவை (மொக்குவன) வாரி வாய் நிறைய உண்பன (14); முத்துக்களை வீசி எறியும் அலைகளைக்கொண்ட கடலைக் கலக்குவன (15); குலக்கிரி - சிறந்த மலைகளைக் (குலுக்குவ) குலுக்க வல்லன (16);

8. அடித்தெழு பொருப்பினை — எழு பொருப்பினை அடித்து - எழுகிரிகளை மோதி அடித்து, நெருப்பு வீசும்படி விழித்துப் பார்க்கவல்லன (17); (அதிக்ரமம்) அளவு மீறின, (கமம்)— நிறைவான - நிறைந்த - (ப்ரௌடம்) கம்பீரமான (விக்ரமம்) பராக்ரமத்தைக்கொண்ட பெருமைவாய்ந்தன(18)

9. (மருக் குலவு) வாசனை விளங்கும் (கற்பகவனத்து) கற்பகத் தோப்பின் (அலர்) மலர்களைப் பறிப்பன (19); (வளைத்தெழு தருக்களை) - எழு தருக்களை — வளர்ந்தெழுந்த மரங்களை வளைத்து, மொளுக்கென்று முறிப்பன (20);

10. (மதிப்பிளவு) நிலவின் கீற்று - பிறைக்கீற்று (என) என்று சொல்லும்படி, செருகி வைத்தென — அதைச் சொருகி வைத்திருக்கின்றதென்று சொல்லும்படி உள்ள, (மணி) அழகிய (சதுர்மருப்பின) நான்கு தந்தங்களை உடையன (21); இமைப்பு அற - இமைத்தல் இல்லாது (விழித்த நயனத்தன) விழித்துள்ள கண்களை உடையன (22)

11. வளைத்த மலையைப் பொடியாக்கி, வளைவுள்ள சக்ரவாளகிரியைப் பொடியாக்கி), (இபம் எட்டையும்) அஷ்ட கஜங்களுடனும், (மலைத்து) மாறுபட்டுப் பொருது—சண்டை செய்து, (அவண்) அவ்விடத்தேயே அவைகள் (அடிப்பட) கீழ்ப்படும்படி வைத்து, (மடப்பிடி) பெண் யானையை (அணைப் பன) அணைத்து மகிழ்வன (23);

12. மழைகொண்ட (புயல்) மேகத்தைக் கிழிப்பன(24) புனல் - (கிழித்த மேகத்து) நீரை (உண்டு) பசியைத் தணித் துக் கொள்வன (25); மணி - மேலே புனைந்துள்ள மணி, 'கணகன' - 'கணகன' என்னும் ஒலியைப், (பண)பண்ண - செய்ய, (மதத் த்ரயம்) மும் மதங்களையும் (விதிர்ப்பன) சொரிவனவாகும் (26);

[13]திருத்திய புனத்திடை வனத்தழை உடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
[14]செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்த கமலச் சரவணத் தறுமுகப்பொருள்
[15]செகத்ரய முகிழ்த்த உதரத் திரிபுரைக்கொரு
திருப்புதல்வன் உற்பல கிரிப்பெயர் தரித்தருள்
[16]திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.

---

13 (1) வள்ளி தழையுடுப்பது—"தழையுடுத்த குறத்தி" திருப்புகழ் 296, பக்கம் 236 கீழ்க்குறிப்பு.

13-14 'வினைப்பகை யறுப்பவன் நினைத்தது முடிப்பவன், மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக்கடல்'— சித்து வகுப்பு. 'நினைப்புடை மனத்தவர் வினைப்பகையும் நீயே'—சம்பந்தர் 2-30-6.

15 (1) செகத்ரயம்-மூவுலகு. திருப்புகழ் 996, பக்கம் 3 கீழ்க்குறிப்பு. (2) தேவி உலகீன்றது—கந்தரலங்காரம் 5 கீழ்க்குறிப்பு. (3) வழக்கம்–ஈகை, கொடை—இப்பொருளை 'திருக்கை வழக்கம்' என்னும் நூற் பெயராலும் அறியலாம். இந் நூல்–வேளாளத் தலைவர்களின் கொடையைச் சிறப்பித்துக் கூறும் நூல், கம்பர் பாடியது. (3) திருஞான வேழ வகுப்பிற் போலவே–திருக்கையில் வழக்கம்–என் ஒருமையிற் கூறப் பட்டது-இது ஒரு நிருமல ஐராவத வெண் களிற்றுக்கு ஒப்பிடப்பட்டுளது. இந்த ஞானக் களிற்றின் ஆற்றல்கள் இவை இவை எனப் பன்மையிற் கூறப்பட்டுள.

---

### திருக்கையில் வழக்க வகுப்பின் சுருக்க உரை

வள்ளி விருப்புறும் ஐயன், வினைகளைத் தொலைத்துக் கருதிய எண்ணங்களை முடித்து வைப்பவன், அறுமுகன், பார்வதி தனயன், திருத்தணிகேசன் - ஆகும் பிரானது திருப் புகழைப் படிப்பவருக்கு அந்தப் பிரான் தமது திருக்கரத்தால் ப்ரசாதமாக அளிக்கப்படும் ஐராவதம் போன்ற நிருமல ஞானக களிறுகள் (13-16).

1. போர்க்களத்துள்ளோர் அச்சுறும்படி முழங்குவன; 2. துதிக்கையைத் தூக்கி நக்ஷத்திரங்களை உதிர்ப்பன; 3. ஏழுலகையும் நடுங்க வைப்பன; 4. தழைத்துள்ள செவி களைக கொண்டன; 5. கயிலைபோலப் பருமையும் வெண் ணிறமும் கொண்டன; 6. ஆதிசேடனையும் ஒடுக்குவன;

13. (திருத்திய) சீர்ப்படுத்தப்பட்டிருந்த (புனத்திடை) தினைப்புனத்திலே (வனத்தழை உடுத்து) காட்டுத் தழைகளை உடையாக உடுத்து (இனிது இருப்பவள்) சுகமாக வாழ்ந்திருப் பவளாகிய வள்ளி (விருப்புறு) ஆசைப்படும் (வரைப்புயன்) மலைபோன்ற தோள்களை உடையவன், வினைகள் என்னும் பகையைக்

14. கொன்று வெல்பவன், நினைத்த காரியங்களை முடித்து வைத்து அருள்பாலிக்கும் கருணைக்கடல்; சிவந்த (கமலம்), தாமரையில் (சரவணத்து) சரவண மடுவிலே, ஆறு திருமுகங்களோடு தோன்றிய (பொருள்) கடவுள்;

15. (செகத்ரயம்) மூன்று லோகங்களையும் (முகிழ்த்த) பெற்ற-ஈன்ற (உதரம்) திருவயிற்றை உடைய (திரிபுரைக்கு) பார்வதி தேவிக்கு (ஒரு) ஒப்பற்ற ஒரு திருக்குமாரன், (உற்பலகிரிப் பெயர்) நீலோற்பல மலை என்னும் பெயரை வகித்தருளும்

16. திருத்தணி மலைக்கு (இறை) தணிகைமலைக் கடவுளின் திருப்புகழைப் படிப்பவர்கள் (சிறப்பொடு) சிறப்புடனே (பெற) பெறும்படி (தரு) திருக்கையில் வழக்கமே, திருக்கையில் தரு (அக்கடவுளின்) திருக்கையால் வழங்கப்படுகின்ற (வழக்கமே) ப்ரசாதமே-ப்ரசாதமாம் ஐராவதம் போன்ற—நிருமல ஞானங்களே – மேலே கூறிய ஆற்றல்களை உடையன.

---

7. கடல் கடைந்தபோது அமுதத்துடன் பிறந்தன; 8. மேன்மை வாய்ந்தன; 9. கங்கையில் ஸ்நானம் செய்வன; 10. சூரிய மண்டலங்களிலும் உலவுவன; 11. அறத்தைக் காக்கக் கொலைத்தொழில் இடத்தும் புறப்பட்டுச் செல்வன; 12. அரக்கர் படை அழியப் போர் புரிவன; 13. பிரமன், திருமால் இவர்தம் ஊர்களை அசுரர்களிடமிருந்து மீட்டு அவர்களுக்குக் கொடுத்தருளின; 14. தேவாமிர்த உணவை வாரி உண்பன; 15-16. கடலைக் கலக்கவும் மலைகளைக் குலுக்கவும் வல்லன; 17. எழுகிரிகளையும் மோதிப் பார்க்க வல்லன; 18. அளவுகடந்த நிறை பராக்ரமத்தை உடையன; 19. கற்பகத் தோப்பு மலர்களைப் பறிக்க வல்லன: 21. கற்பக விருக்ஷங்களை வளைத்து முறிப்பன; 21. நிலவின் கீற்றைப் போன்ற நான்கு தந்தங்களைக் கொண்டன; 22. இமையாது விழிக்கும் கண்களை உடையன; 23. மலைகளைப் பொடி செய்து, அஷ்ட கஜங்களையும் தம் கீழ்ப்படுத்தி, பெண் யானையை அணைப்பன; 24. நீருண்ட மேகத்தைக் கிழிப்பன; 25. நீருண்டு பசியைத் தணிப்பன; 26. மும்மத நீரைச் சொரிவன.

## 12. வேடிச்சி காவலன் வகுப்பு

[இது வேடர் மகளாம் வள்ளி காதலராகிய முருகன் பெருமையைக் கூறும்.)

தனதனன தத்ததன தனதனன தத்ததன
தனதன்ன தத்ததன தானத்த தானதன

[1]உதரகம லத்தினிடை முதியபுவ னத்ரயமும்
உகமுடிவில் வைக்கும்உமை யாள்பெற்ற பாலகனும்
[2]உமிழ்திரை பரப்பிவரு வெகுமுக குலப்பழைய
உதகமகள் பக்கல்வரு சோதிச் சடானனனும்
[3]உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்கஅவர்
ஒருவரொரு வர்க்கவனெ ஓர்புத்ரன் ஆனவனும்
[4]உதயரவி வர்க்கநிகர் வனகிரண விர்த்தவிதம்
உடையசத பத்ரநவ பீடத்து வாழ்பவனும்

---

[1] (i) தேவியின் திருவயிறு—கமலத்துக்கு ஒப்பிடப்பட்டது:
"திருமுகம் கமலம் ......வலம்புரி யுந்தி பொற் கமலம்" — தணிகைப் புராணம் - களவு 43.

(ii) உலகங்கள் யுகாந்தத்தில் தேவி வயிற்றில் அடங்குவது:—

"பூத்தவளே புவனம் பதினுன்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின் கரந்தவளே" — அபிராமி அந். 13.

[2] கங்கையில் தோன்றியதால் முருகவேள் 'காங்கேயன்' ஆயினன்.

[3] ஒருருவாய் இருந்த குழந்தை — கார்த்திகை மாதர் அறுவரும் — தாம் தாம் பால் கொடுக்க விரும்பியதை உணர்ந்து – ஆறு குழந்தைகளாயினர்.

'மறுவறும் ஆர லாகும் மாதர்மூ விருவர் தாமும்
நிறைதரு சரவ ணத்தின் நிமலனை யடைந்து போற்ற
உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோன் ஆத லாலே
அறுமுக ஒருவன் வேருய் அறுசிருர் உருவங்கொண்டான்'
—கந்தபுரா. திருவவதாரப்படலம் 116.

## பொழிப்புரை

**1.** (உதரம்) வயிருகிய (கமலத்தினிடை) தாமரை யிடத்தே, (முதிய) பழமையாய் வரும் (புவனத்ரயமும்) மூவுலகங்களையும் (உக முடிவில்) யுகாந்த காலத்தில் - யுகம் முடியும் காலத்தில் (வைக்கும்) வைத்து அடக்கிக்கொள்ளும் (உமையாள்) உமாதேவி பெற்ற குழந்தையும் (வேடிச்சி காவலனே)

2. வெளி வீசும் திரைகளைப் பெருக்கி வருகின்றதும், பல முகமாகப் பரந்து ஓடுவதுமான, சிறப்பு வாய்ந்த, பழைய நீர் மகளாம் கங்கையின் (பக்கல்) இடத்தே அவதரித்தருளின சோதியும்; அல்லது ஜோதி நிறத்த (சடானனன்) ஆறு திரு முகங்களை உடையவனும் (வேடிச்சி காவலனே)

3. (உவகையொடு) மனமகிழ்ச்சியுடன் (கிர்த்திகையர் அறுவரும்) கிர்த்திகை மாதர் ஆறுபேரும் (எடுக்க) எடுக்க விரும்ப, (அவர்கள் ஆசையைப் பூர்த்தி செய்ய), அவர் ஒருவர் ஒருவர்க்கு - அவர்கள் ஒவ்வொருவருக்கும் (அவண்) அவ்விடத்தே - அங்கே (ஒரோர் புத்ரனனவனும்) ஒரு ஒரு குழந்தையாய் ஆனவனும் (ஆறுபேரும் எடுத்து மகிழ ஆறு குழந்தைகளாய் ஆனவனும் (வேடிச்சி காவலனே)

4. உதயரவி வர்க்கம் - உதயமாகின்ற (ரவி வர்க்கம்) சூரியர்களின் கூட்டத்தை (நிகர்) நிகர்க்கும், (வனம்) அழகு வாய்ந்ததும், (கிரணம்) ஒளி, (விர்த்தம்) ஒன்ருேடொன்று முரண்பட்ட (நிறங்களை), விதம் உடைய—விதம் விதமாகக் கொண்டதுமான, (சதபத்ரம்) மயிலாகிய, (நவ பீடத்து) புதுமை வாய்ந்த ஆசனத்திலே (வாழ்பவனும்) வீற்றிருப்பவனும் (வேடிச்சி காவலனே)

---

[4] மயிலின் இறகு பலவித நிறம் கொண்டது:
"பலநிற மிடைந்த விழுசிறை யலர்ந்த பருமயில்"
—திருப்புகழ் 164.
"சித்ரகுல கலப வாசி" — திருப்புகழ் 1026.
"ரத்னரேகை ஒக்கச் சிறக்கு மாமயில்"—திருப். 298

[5]உறைசரவ ணக்கடவுள் மடுவிலடர் வஜ்ரதர
 னுடையமத வெற்புலைய வேதித்த வீரியனும்
[6]உரைபெற வகுத்தருணை நகரின்ஒரு பத்தனிடும்
 ஒளிவளர் திருப்புகழ்ம தாணிக்ரு பாகரனும்
[7]உரககண சித்தகண கருடகண யக்ஷகணம்
 உபநிடம் உரைத்தபடி பூசிக்கும் வானவனும்
[8]ஒருவனும் மகிழ்ச்சிதரு குருபரனும் உத்தமனும்
 உபயமுறும் அக்னிகர மீதிற்ப்ர பாகரனும்;

---

[5] வேதித்த — நலிதல் செய்த.

" வேதித்த வெம் மழுவாளீ "—அப்பர் 4-111-10.

' வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை மோதுவித்து'
— திருவாய்மொழி 7-1-3.

வீரியன் – வீரன். " அசுரரை ஆவியுண்ட வீரியன் '— கம்பராமாயணம் – மராமர. 29. ஐராவதத்தை அட்டது—

" அக்கா லையயில்வேள் செலுத்துங் கணையண்டர் தம்மின்
மிக்கான் அயிரா வதநெற்றி யுள்மேவி வல்லே
புக்காவி கொண்டு புறம்போதப் புலம்பி வீழா
மைக்கார் முகில்அச் சுறவேயது மாண்ட தன்றே "
—கந்தபுராணம் – திருவிளையாட்டுப்படலம் 50.

[6] (i) முருகன் புகழை வகுத்து வகுத்து உரைக்க விரும்பினர் அருணகிரியார் என்பதைத் திருப்புகழ் 1233-ல் " நின் பதயுகப் ப்ரசித்தி என்பன வகுத்துரைக்க நின்பணி தமிழ்த்ரயத்தை அருள்வாயே " என வருமிடத்துக் காண்க.

(ii) திருப்புகழ் மதாணிக் க்ருபாகரன் — ' பலபல பைம்பொற் பதக்கம் ஆரமும், அடிமை சொலுஞ் சொற்றமிழ்ப் பனீரொடு ... அணிவோனே ' என வருவதையும் (திருப்புகழ் 186) காண்க. அருணைநகர்ப் பக்தன் எனப் படர்க்கை இடத்தில் தம்மைக் கூறினதால் இவ்வகுப்பு அருணகிரியார் கிளியான பின்பு பாடினது என்னும் கொள்கையை வலியுறுத்தும்.

[7] பதினெண் கணங்கள்: உரகர், சித்தர், கருடர், இயக்கர் இவர்கள் பதினெண் கணங்களுட் சேர்ந்தவர்கள். — திருப்புகழ் 788, பக்கம் 338 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[8] (i) மகிழ்ச்சிதரு குருபரனர்: உபதேசம் செய்து முருகவேள் தனது தந்தை சிவபிராற்கு மகிழ்ச்சி தர, அவர்

5. (உறை சரவணக் கடவுள் மடுவில் அடர்) சரவண மடுவில் உறை கடவுள் அடர் - (கங்கைச்) சரவண மடுவிலே வளர்ந்த கடவுளாம் (முருகவேளை (அடர்) நெருங்கிப்பொருத (வஜ்ரதரன்) வஜ்ராயுதம் ஏந்திய இந்திரனுடைய (மத வெற்பு) மதம்கொண்ட மலையன்ன ஐராவதம் (உலைய) அழியும்படி (வேதித்த) நலிவித்த (வீரியனும்) வீரனும் (வேடிச்சி காவலனே)

6. உரைபெற - (முருகன்) புகழ் விளங்கும் வகையில் (வகுத்து) அவனது சீர்பாதச் சிறப்பு ஆதியவற்றை வகைப் படுத்திச் சொல்லி, (அருணை நகரின் ஒரு பத்தன்) அருணசல (திருவண்ணமலை) வாசியாகிய ஒரு பக்தனுகிய அடியேன் (இடும்) அணிவித்த ஒளிவளர் புகழ் பெருகு 'திருப்புகழ்' எனப் பெயர் கொண்ட (மதாணி) பதக்கத்தை ஏற்று அணிந் துள்ள கிருபாகரமூர்த்தியும் (வேடிச்சி காவலனே)

7. உரக கணம் - நாகலோக கணத்தவரொடு, சித்தர் கூட்டமும், கருடகண - பதினெண் கணத்தவருள் ஒருவராகிய கருடர்களும், யக்ஷகணம் - குபேரன் முதலாய யக்ஷர் கூட்டமும், உபநிஷத்தில் சொல்லியுள்ள முறைப்படி பூசிக்கின்ற (வானவனும்) தேவர்பிரானும் (வேடிச்சி காவலனே)

8. (ஒருவனும்) ஒப்பற்ற தனிப் பொருளானவனும், (மகிழ்ச்சிதரு) தான் செய்யும் ஞானுேபதேசத்தால் களிப் பூட்டுகின்ற குருபரமூர்த்தியும், உத்தமமூர்த்தியும், உபயம் உறு அக்நிகர மீதில் - அக்நி உறு உபயகர மீதில் - அக்கினி தேவனுக்கு உள்ள இரண்டு கரங்கள் மீதிலும் தாங்கப்பட்டு விளங்கினவனுன (ப்ரபாகரனும்) பேரொளி கொண்ட மூர்த்தி யும் (வேடிச்சி காவலனே)

---

மகிழ்ந்து அட்டகாசம் செய்தனர் என்றும், அதனுல் சிவ பிராற்கு 'வீராட்டகாசர்' எனப் பெயர் வந்ததென்றும் தணிகைப்புராணம் கூறும்.

"தத்துவங் கேட்டலும் ... தழங்கிநின் ருடினுன்"

'ஆரமர் முடியோன் ஆர்த்தலின் ஆயதவ்விடம் வீராட்ட காசம்' — தணிகைப்புராணம் - வீராட்ட. 118, 119 (திருப் புகழ் 269, பக்கம் 170).

(ii) அக்கினியின் கரத்தில் விளங்கியது:

"தீக்கடவுள் சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்ப"

— கந்தர் கலிவெண்பா 80.

'வன்னி பூ, வன்னிகர்ப்பன், அக்கினி குமாரன், அக்கினி பூ' — என்பன முருகக் கடவுளின் திருநாமங்கள்.

[9]அதிமதுர சித்ரகவி நிருபனும் அகத்தியனும்
அடிதொழு தமிழ்த்ரயவி நோதக் கலாதரனும்
[10]அவரைபொரி யெட்பயறு துவரைஅவல் சர்க்கரையொ
டமுதுசெயும் விக்நபதி யானைச் சகோதரனும்
[11]அவுணர்படை கெட்டுமுது மகரசல வட்டமுடன்
அபயமிட விற்படைகொ டாயத்த மானவனும்
[12]அருணையில் இடைக்கழியில் உரககிரி யிற்புவியில்
அழகிய செருத்தணியில் வாழ்கற்ப காடவியில்
[13] ○அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதின் வாழ்வித்த வேதியனும்
[14]அரிபிரம ருக்குமுதல் அரியபர மற்குயரும்
அருமறை முடிப்பையுப தேசித்த தேசிகனும்

---

[9]சித்ரகவி நிருபன் - இது முருகவேள் ஞான சம்பந்தராய் ஏகபாதம், மாலை மாற்று, கோமூத்திரி, எழுகூற்றிருக்கை, சக்கரமாற்று முதலிய சித்ரகவிகள் பாடினவற்றைக் குறிக்கும். 'நிருபன்' – ராஜன் – 'அதிகவித சாமர்த்ய கவிராஜராஜனே' என்றார் திருப்புகழிலும் (423). விநோதக் கலாதரர் - சகல கலாவல்லவ ராதலின் – திருப்புகழ் 320, பக்கம் 296 குறிப்பு.

[11] (i) முருகவேள் அசுரர்களும் கடலும் ஓலமிடும்படி போர் செய்தது :

"இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட வென்றவேலா" — திருப்புகழ் 990.

"அவுணரொ டலைகடல் கோகோ கோகோ என ......
வாளால் வேலால் மடிவு செய்தருளிய முருகோனே"
—திருப்புகழ் 826.

(ii) ஆயத்தம் – போருக்குச் சன்னத்தம்,

"அன்ன காலையில் ஆயத்தம் யாவையும்
என்ன காரணத்தால் என்றி யம்பினன்"
—கம்பராமா. கும்பகர்ண – 77.

[12 - 13]இந்த இரண்டு அடிகளால் ஸ்ரீ அருணகிரியார் அறுமுகவேளின் அநுக்ரகம் பெற்ற இடங்கள் இவை இவை என்பதும், அவர் எத்தகைய மெய்ஞ்ஞானியரும், சகலகலா வல்லவரும் ஆனார் என்பதும் தெரிகின்றன.

○ 'அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே' —திருப்புகழ் 509.

9. (அதிமதுகர சித்ரகவி நிருபனும்) மிகமதுரமான — இனிமையான சித்ரகவி பாடவல்ல கவிராஜனும், (அகத்திய னும்) அகத்திய முநிவரே (அடிதொழு) வணங்குகின்ற தமிழ்த்ரய விநோதக் கலாதரனும் – முத்தமிழ் விநோதக்கலை வல்லவனும் – (வேடிச்சி காவலனே)

10. அவரை, பொரி, எள், பயறு, துவரை, அவல், சர்க்கரை, இவைகளுடன் அமுது உண்கின்ற (விக்நபதி) விக்கினராஜன் எனப்படும் கணபதியின் சகோதரனும் (வேடிச்சி காவலனே)

11. அவுணர் படை கெட்டு – அவுணர் சேனை எல்லாம் கெட்டு, முதுமகர சலவட்டம் – பழையதும், (மகரசலம்) மீன் உலவும் கடல் வட்டத்துடன் – அபயம் இட – அடைக்கலமெனக் கூச்சலிட்டு அலற – விற்படை கொடு – விற்படையை ஏந்தி (ஆயத்தம் ஆனவனும்) போருக்குத் தயாராக நின்றவனும் சன்னத்தமானவனும் (வேடிச்சி காவலனே)

12. அருணையில் – திருவண்ணுமலையிலும், திரு இடைக் கழியிலும், உரககிரியில் – சர்ப்பகிரி, நாகாசலம் எனப்படும் திருச்செங்கோட்டிலும், புவியில் – இப் பூமியில் அழகிய திருத் தணிகை க்ஷேத்திரத்திலும், தன்னுல் வாழ்விக்கப்பட்ட தேவர் களின் ஊராகிய கற்பகத் தோப்புள்ள அமராவதியிலும்

13. அறிவும் – அறிவு இன்னதென்பதையும், அறி தத்து வமும் — அந்த அறிவை அறிய வல்ல தத்துவத்தையும், உண்மை ஞானத்தையும், (அபரிமித) கணக்கற்ற – எல்லை யிலாத (வித்தைகளும்) கலைகளையும் (அறி என) அறிந்துகொள் என்று இமைப்பொழுதில் – ஒரு நொடியிலே (அடியேனுக்கு அறிவித்து அடியேனை) வாழ்வித்த (வேதியனும்) மறையோ னுகிய கடவுளும் (வேடிச்சி காவலனே)

14. அரி பிரமருக்கு – திருமாலுக்கும் பிரமனுக்கும் (முதல்) முன்பு (அரிய) அறிதற்கருமையராய்த் திகழ்ந்த பரமற்கு – சிவபிராற்கு, (உயரும்) உயர்ந்த – மேலான, (அரு மறை முடிப்பை) அரிய வேதங்களின் மறைபொருளை உபதேசஞ் செய்த (தேசிகனும்) குருமூர்த்தியும் (வேடிச்சி காவலனே)

---

14 சிவபிரானுக்கு உபதேசித்தது :
—திருப்புகழ் 327, பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

அரிக்கு, பிரமனுக்கு, முதல் இலாப் பரமனுக்கு — இம் மூவருக்கும் உபதேசித்தவர் எனவும் கொள்ளலாம்–திருப்புகழ் 1028, 1247 – (பக்கம் 86, 580) கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[15]அமலனும் எனக்கரசும் அதிகுணனும் நிர்க்குணனும்
அகிலபுவ னத்தமர சேனைக்கு நாயகனும்
[16]அநுபவனும் அற்புதனும் அநுகுணனும் அக்ஷரனும்
அருமனம் ஒழிக்கும்அநு பூதிச் சுகோதயனும்;
[17]இதமகிதம் விட்டுருகி xஇரவுபக லற்றஇடம்
எனதற இருக்கைபுரி யோகப் புராதனனும்

---

[15] அதிகுணன்–மேலான குணத்தவன். 'கதிமலி களிறது பிளிறிட உரிசெய்த அதிகுணன்'—சம்பந்தர் I-22-5.

நிர்க்குணன் – " சுத்த நிர்க்குணமான பரதெய்வமே " — தாயுமான. சுகவாரி 1.

[16] (i) மனம் அழிதல் – மனோலயம் பெறுதல். இதனைச் 'சமாதி மனோலயம்' என்றார் – திருப்புகழ் 235-ல். 'மனம் பாழ்படுக்கும் மலர்ப்பூசனை'–சம்பந்தர் 2-116-7. மநோலயம் பெற்றால்தான் துக்க சுக பேதமற்ற அருள்நிலை (சிவஞானம்) கிடைக்கும். 'மநோலய சமாதி அநுபூதி பெற நினைவாயே' என வேண்டியுள்ளார் அருணகிரியார் (திருப்புகழ் 352). 'மனமும் பதைப்பறல் வேண்டும்' (கந்தர் அலங்காரம் 74). 'உள்ளம் அடங்குறின் அல்லால் ...... சிவஞானம் சிவணுது செருத்தணியை நள்ளுவையேல் உளம் அடங்கும் ஞானமும் எய்துவை'— தணிகைப்புராணம் – இராமன் 42.

(ii) சுகோதயன் — சுகம் தோன்றுதற்கு இருப்பிடமானவன் (Fountain of happiness).

'சுத்த வம்பாரத் தனத்தி சுகோதயள்' – திருமந். 1052.

[17] (i) இதம் அகிதம் விட்டு— 'துன்பம் இன்பம் கழித்தோடுகின்றது எக்காலம்'— என்றார் (கந். அலங். 36-ல்).

(ii) இரவு பகல் அற்ற இடம்— இதன் விளக்கத்தைக் கந்தரலங்காரம் 74-ன் குறிப்புரையிற் காண்க.

" இரவு பக லில்லா இன்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற " — திருவுந்தியார் 20.

(iii) 'எனது அற'— 'யான்', 'எனது'— என்பன பாசங்கள். 'எனது எனும் மலம் அறில் ... எளிது பெறல் ... உதய மரணம் இல் பொருள்' (திருப்புகழ் 511)—கந்தரலங்காரம் 95 உரைக் குறிப்பைப் பார்க்க.

15. அமலனும் – மலம் அற்றவனும், எனக்கு (அரசும்) எனக்கு இறைவனும் தலைவனும், (அதிகுணனும்) மேலான குணம் உள்ளவனும், (நிர்க்குணனும்) குணம் அற்றவனும் (குணம் கடந்தவனும்), அகில புவனத்து நாயகனும்—சகல உலகங்களுக்கும் தலைவனும், அமரசேனைக்கு நாயகனும்— தேவசேனைகளுக்குத் தலைவனும், (அல்லது சகல அண்டங் களிலும் உள்ள தேவசேனைகளுக்குத் தலைவனானவனும்) (வேடிச்சி காவலனே)

16. அநுபவனும் – சகல நுகர்ச்சிகளுக்கும் மூல காரண னாய் இருப்பவனும், அற்புதமூர்த்தியும், (அநுகுணனும்) (சகலத்துக்கும்) தகுதியுள்ளவனும், ஏற்ப உள்ளவனும், (அக்ஷரனும்) எழுத்துக்களுக்கு மூலப்பொருளானவனும் — பிரணவ மூர்த்தியும் – (அருமனம் ஒழிக்கும்) அருமைவாய்ந்த மனத்தை அழிக்கவல்ல – மனத்தை ஒடுக்கவல்ல – மனோலயம் தரவல்ல (அநுபூதிச் சுகோதயனும்) அநுபவ ஞான சுகத்திற் கிடைப்பவனும், சுகதோற்றத்தில் விளங்குபவனும் (வேடிச்சி காவலனே)

17. (இதம் அகிதம் விட்டு) இன்ப துன்பங்களை ஒழித்து விலக்கி, (உருகி) இறைவன் திருவருளை நினைந்து உருகி, *(இரவு பகல் அற்ற இடம்) கேவல சகலங்கள் கடந்தநிலையை- இன்பவெளியை-(எனது அற) மமகாரம் நீங்க (இருக்கை) நிலையிடமாக (புரி) எனக்கு அருளின (யோகப் புராதனன்) சிவயோக முன்னவனும் (வேடிச்சி காவலனே)

---

*'இரவு பகலற எனதற ... மொழிவாயே' எனத் திருப் புகழ் பாடின காலத்துக்கும் (1007), 'இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே', 'இராப்பகல் அற்ற இடங் காட்டி ... தண்டையந் தாளருளாய்'—எனக் கந்தரலங்காரத் தில் (74, 103) முறையிட்ட காலத்துக்கும் பிற்பட்டது இந்த வேடிச்சி காவலன் வகுப்புப் பாடின காலம்; ஏனெனில் 'இராப்பகலற்ற இடம்' வேண்டுமென வேண்டின காலம் திருப்புகழ், கந்தரலங்காரம் பாடப்பட்ட காலம்; காரியம் சித்தி பெற்றபின் (இராப்பகலற்ற இடம் இருக்கையாக இறைவன் அருளின பின்) பாடினது இத் திருவகுப்பு.

[18]எனதுமன சிற்பரம சுகமவுன கட்கமதை
யமன்முடி துணிக்கவிதி யாவைத்த பூபதியும்
[19]எழுமையும் எனைத்தனது கழல்பரவு பத்தனென
இனிதுகவி யப்படிப்ர சாதித்த பாவலனும்
[20]இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதயமு மணக்குமிரு பாதச் சரோருகனும்
[21]எழுதரிய கற்பதரு நிழலில்வளர் தத்தைதழு
வியகடக வஜ்ரஅதி பாரப் புயாசலனும்

---

[18] விதி = பாக்கியம். "கற்பகத்தை ......... உளமகிழ்ந் துரைப்பவர் 'விதி' உடையவர்தாமே"—சம்பந்தர் 2-104-5. "விதியில் சாக்கியர்கள்" — திவ்விய பிரபந்தம் திருமாலை 8.

மவுன கட்கம் = மௌன வாள். மௌன வாளாகிய ஞான வாள்கொண்டு எமபடரை வெல்வது — "எமபடரை மோதுமோன உரையிலுப தேசவாளை" — என்னுந் திருப்புகழாலும் (828).

"இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொ ரியற்கை யருள்வதும்"

என்னும் பெருத்த வசன வகுப்பாலும் – "தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்" எனவருங் கந்தரலங்காரச் செய்யுளாலும் (69) விளங்கக் கிடக்கின்றது. "ஞான வாளேந்தும் ஐயர்" — திருவாசகம் 46–1.

[19] (i) எழுமை - வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பு ஏழு. பிறப்பு ஏழாவன :–1. ஊர்வ, 2. மானுடம், 3. நீர்வாழ்வன, 4. பறவை, 5. விலங்கு, 6. தேவர், 7. தாவரம்.

"ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச் — சீரிய
பந்தமாந் தேவர் பதினு லயன் படைத்த
அந்தமில்சீர் தாவரநா லைந்து" — குறள் 62 உரை.

—திருஞானவேழ வகுப்பு அடி 4, 5-ன் குறிப்புரையும் பார்க்க.

தம்மை "முடியவழி ழையடிமை" என்றார் சீர்பாத வகுப்பிலும்.

(ii) கவிப்ரசாதம் பெற்றதை — "அடியேனும் எப்படி பாட என்ற அளவில் பத்திதரு முத்திநகை அத்தியிறைவா எனப் பாடென்று சொல்லி...நாவிற் பொறித்து அவருரைத்த கவிதைப் புத்தமுது பன்னிரு செவிக்கு நிறையக் கொண்டு போதமுன் அளித்தருளி" — எனவரும் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழால் அறியலாகும்.

18. என்னுடைய மனசில் – பரமசுக மௌனம் என்னும் (கட்கமதை) வாளை – யமனுடைய முடியைத் துணிக்கவல்ல (விதியாக) பாக்கியப் பொருளாக (வைத்த) வைத்து அருளின (பூபதியும்) அரசும் (வேடிச்சி காவலனே)

19. (எழுமையும்) ஏழு பிறப்பிலும் (என்னை)த் தன்னுடைய (கழல்) திருவடியைப் (பரவும்) போற்றுகின்ற (பக்தனென) பக்தனென்று ஏன்றுகொண்டு, (இனிது) இனிமையுடனே – அல்லது இன்பம் தருவதான - (கவி) பாடல்களை (அப்படி) அற்புதவகையில் (எனக்கு) ப்ரசாதித்த–தந்தருளின (பாவலனும்) புலவரேறும் (வேடிச்சி காவலனே)

20. (இமையவர் முடித்தொகையும்) தேவர்களின் முடிக் கூட்டங்களின்மீதும், (வனசரர்) வேடர்களின (பொருப்பும்) மலையாகிய வள்ளிமலையிலும், (எனது) என்னுடைய (இதயமும்) உள்ளத்திலும் (மணக்கும்) நறுமணம் கமழும், இரு பாதச் சரோருகனும் – இரண்டு அல்லது பெருமை வாய்ந்த திருவடித் தாமரைகளை உடையவனும் (வேடிச்சி காவலனே)

21. (எழுதரிய) எழுதுவதற்கு முடியாத (அழகு வாய்ந்தவளும்) கற்பக விருக்ஷங்களின் நிழலிலே வளர்ந்தவளுமான (தத்தை) கிளிபோன்ற தேவசேனை தழுவினதும், கடகம் –வீரவளை அணிந்ததும், வஜ்ரம் – வஜ்ரம்போல் – வைரம்போலத் திண்மை கொண்டதுமான, அதிபாரமான (புய – அசலனும்) புய மலையைக் கொண்டவனும் (வேடிச்சி காவலனே)

---

'அப்படி' என்னும் சொல்லின் பொருளை — திருப்புகழ் 866, பக்கம் 538; திருப்புகழ் 33, பக்கம் 97 குறிப்பு பார்க்க.

[20] (i) இமையவர் முடித்தொகையில் இறைவன் திருவடி : சீர்பாதவகுப்பு அடி 8-ன் குறிப்பைப் பார்க்க.

(ii) வனசரர் பொருப்பில் முருகன் திருவடி ;—சீர்பாத வகுப்பு அடி 15-ன் குறிப்பைப் பார்க்க.

"சாடுந் தனிவேன் முருகன்" என்னுங் கந்தரநுபூதிச் செய்யுளையும் (44) பார்க்க.

(iii) தனது உள்ளத்தில் முருகன் திருவடி :—"நாளும் என் உளத்திலே மகிழும் குமரா" – திருப். 413.

[21] தேவசேனை தழுவும் புயம் :—'சயில சரசவல்லி இறுகத் தழுவும் ... பன்னிரு புயனே' — கந்தரலங்காரம் 67.

புயம் மலைக்கு ஒப்பு — 'கடகாசல பன்னிரு புயனே' — கந்தரலங்காரம் 67.

[22]எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளிமுகி யைப்பொருத ராவுத்த னுனவனும்
[23]எழுபரி ரதத்திரவி எழுநிலமொ டக்கரிகள்
இடர்பட முழக்கியெழு சேவற் பதாகையனும்
[24]இணையிலியும் நிர்ப்பயனும் மலமிலியும் நிஷ்களனும்
இளையவனும் விப்ரகுல யாகச் சபாபதியும்;
[25]மதுகையொடு சக்ரகிரி முதுகுநெளி யப்புவியை
வளையவரும் விக்ரமக லாபச் சிகாவலனும்
[26]வலியநிக ளத்திநெடு மறுகுசிறை பட்டொழிய
வனஜமுனி யைச்சிறிது ०கோபித்த காவலனும்

---

[22] எதிரில் புலவர் — நக்கீரர் — தனக்குத்தானே நிகரே ஒழிய வேறு நிகர் இலாத புலவர் — 'தன்னிகர் புலவன்' — காளத்திப்புராணம் நக்கீர 116.

முருகவேளின் வேல் கற்கிமுகி என்னும் பூதத்தை அட்ட விவரம் :—திருப்புகழ் 91, பக்கம் 212–15 கீழ்க்குறிப்பு.

பூதவேதாள வகுப்பு அடி 7-ன் குறிப்பு. இவுளி=கற்கி= குதிரை.

"ராவுத்தன்" — "சூர்க்கொன்ற ராவுத்தனே"; "கலாபத் தனிமயி லேறும் இராவுத்தனே" — கந்தரலங் காரம் (37, 50).

[23] சூரியன் தேர்க்கு ஏழு குதிரைகள் :—"புரவி ஏழும் மணிபூண் டியங்கும் கொடித்தேரினன்"-சம்பந்தர் 2-118-5. குதிரைகள் - காயத்திரி, பிருகதி, உட்டிணிக்கு, சகதி, திருட் டிப்பு, அநுட்டிப்பு, பந்தி - என்பன.

[24] (i) முருகன் இணையிலி "தணிகையில் இணையிலி"— திருப்புகழ் 289.

(ii) இளையவன் 'என்றும் இளையாய்'—திருமுருகாற்றுப் படை – வெண்பா.

(iii) விப்ரகுலயாகச் சபாபதி – "அந்தண்மறை வேள்வி காவற்கார" — திருப்புகழ் 41, "ஒருமுகம் அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" — திருமுரு காற்றுப்படை 96 ; 'சோமாசியா' – திருப்புகழ் 338, பக்கம் 347 குறிப்பு.

[25] மயில்மேல் உலகை வலம் வந்தது :—திருப்புகழ் 267, பக்கம் 164 கீழ்க்குறிப்பு, சூரனும் மயில் உலகை வலம் வந்த வகையை —

22. (எதிரில் புலவர்க்கு) தனக்கு நிகரில்லாத (பெரும்) புலவராகிய நக்கீர தேவருக்கு (உதவும்) உதவினவனும், (வெளிமுகடு முட்ட) ஆகாய உச்சி முட்டும் அளவுக்கு (வளர்) வளர்ந்திருந்த (இவுளிமுகியை) கற்கிமுகி என்னும் பூதத்துடன் (பொருத) சண்டை செய்தவனுமான (ராவுத்தன் ஆனவனும்) போர் வீரனானவனும் (வேடிச்சி காவலனே)

23. எழுபரி — ஏழு குதிரைகளைப் பூட்டிய, (ரதம்) தேரைக் கொண்ட (இரவி) சூரியன் (எழு) எழுந்து உலவுகின்ற (எழு நிலமொடு) ஏழு பூமிகளுடன் (அக்கரிகள்) திக் கஜங்கள் எட்டும், (இடர்பட) துன்புறும்படி முழக்கம் செய்து - ஒலி செய்து, எழு - எழுகின்ற சேவலைக் கொடியாக உடையவனும் (வேடிச்சி காவலனே)

24. (இணையிலியும்) தனக்கு நிகரில்லாதவனும், (நிர்ப் பயனும்) பயம் இல்லாதவனும், (மலமிலியும்) மலம் – (மும் மலம்) ஆணவம், மாயை, கன்மம் எனப்படும் மும்மலங் கள் இல்லாதவனும், (நிஷ்களனும்) உருவம் இல்லாதவனும், (இளையவனும்) என்றும் இளையவனும், (விப்ரகுல) மறைக் குலத்தவர் - வேதியர்கள் செய்யும் யாகங்களுக்குச் (சபாபதி யும்) சபாநாயகனும் (வேடிச்சி காவலனே)

25. (மதுகையொடு) வலிமையுடன், (சக்ரகிரி) சக்ர வாளகிரியின் (முதுகு) புறங்கள் (நெளிய) வளைந்து குலையும் படி (புவியை) பூமியை (வளைய வரும்) சுற்றி வந்த (விக்ரம) பராக்ரமம் பொருந்திய (கலாபச் சிகாவலனும்) தோகை மயிலோனும் (வேடிச்சி காவலனே)

26. (வலிய நிகளத்தினொடு) வலிமை வாய்ந்த விலங் கினுல் (மறுகு) மனக்கலக்கம் தரும் (சிறைபட்டொழிய), சிறையில் அகப்பட்டுத் தனித்திருக்கும்படி (வனஜ முனியை) பிரமனைச் (சிறிது) கொஞ்சம் கோபித்த (காவலனும்) நாயகனும் (வேடிச்சி காவலனே)

---

" நடக்கடல் உடைய, மேருத் தடவரை இடிய, மற்றைப்
படித்தலம் வெடிப்பச், செந்தீப்பதைபதைத் தொடுங்கச், சூறை
துடித்திட, அண்ட கூடந் துளக்குறக், கலாபம்வீசி
யிடித்தொகை புரள ஆர்த்திட் டேகிற்றுத் தோகைமஞ்ஞை "

' ... பணிக்கிறை பதைப்ப ... உடற்குறை அரவும் உட்க உலாயது கலாப மஞ்ஞை' என்வரும் இடத்திற்காண்க.
— கந்தபுராணம் சூர - வதை 500, 501.

26 வனசம் - தாமரை. வனசமுனி – பிரமன் ; பிரமனைச் சிறையிட்ட வரலாறு — பூதவேதாள வகுப்பு அடி 32, கந்த ரந்தாதி 14 — திருப்புகழ் 571, பக்கம் 310, பாடல் 757, பக்கம் 256 கீழ்க்குறிப்புக்கள்.

[27]வருசுரர் மதிக்கஒரு குருகுபெயர் பெற்றகன
வடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்
[28]வரதனும் அநுக்ரகனும் நிருதர்குல நிஷ்டுரனும்
மநுபவன சித்தனும நோதுக்க பேதனனும்
[29]வயிரிசை முழக்கமிகு மழைதவழ் குறிச்சிதொறும்
மகிழ்குரவை யுட்டிரியும் வேடிக்கை வேடுவனும்

---

[27] குருகு பெயர்க்குன்றம் = கிரௌஞ்ச கிரி. "குருகு பெயர்க் குன்றங் கொன்ற நெடுவேலே" — சிலப்பதிகாரம் 24. "குருகு பெயர்க் குன்றங் கொன்றோ னன்னநின் முருகச் செவ்வி" — மணிமேகலை 5-13.

கிரௌஞ்சம் — பொன்மலை. "பொன்னஞ் சிலம்பு புலம்பவரும் எங்கோன்" — கந்தரலங்காரம் 89.

[28] (i) மநுபவனம் — "மநுபவன சிவயோக சாதனை" என்றார் சீர்பாத வகுப்பில் (அடி 3), மநு - மந்திரம்.
'நெடுமறை மநுக்கள் கூறி' - கந்தபுராணம் I-10-70.
பவனம் = வீடு. மந்த்ர வீட்டுக்கு உரிய சித்தன்.
(ii) சித்தன் என்றே முருகவேளுக்கு ஒரு பெயர் —
— திருப்புகழ் 931, பக்கம் 712 கீழ்க்குறிப்பு.
(iii) மநோ - துக்க - பேதனன். பேதனன் — பேதிப்பவன். 'மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக் கடல்' - சித்து வகுப்பு அடி 95.

[29] (i) குரவை — காமமும் வென்றியும் பொருளாகக், குரவைச் செய்யுள் பாட்டாக, எழுவரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும் கை பிணைந்தாடுவது குரவை.

"குரவை என்பது கூறுங்காலைச், செய்தோர் செய்த காமமும் விறலும், எய்த உரைக்கும் இயல்பிற் றென்ப"

"குரவை யென்ப தெழுவர் மங்கையர்
செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்
தந்நிலைக் கொட்பநின் றுட லாகும்"
—(சிலப்பதிகாரம் - பதிகம் அடி 77 உரை).

"குரவைக் கூத்தே கைகோத் தாடல்" — திவாகரம். இக்கூத்து வேடர்கள் மலைநிலத்தே ஆடுவர். "தொண்டகச் சிறுபறைக் குரவை அயர" - திருமுருகாற்றுப்படை 197.

"வேலன் முருகொடு வளைஇ ... குறிஞ்சிசூடிக் கடம்பின், சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉ ...... மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறும், உரையும் பாட்டும் ஆட்டும் விரைஇ"
—மதுரைக் காஞ்சி 611.

27. [வருசுரர்] உடன் வந்த தேவர்கள், [மதிக்க] மதித்துப் போற்ற, ஒப்பற்ற [குருகுபெயர்] கிரௌஞ்சம் என்னும் பெயர்பெற்ற — [கனவடசிகரி] பொன்மயமாய் வடக்கே இருந்த மலையின்மேல் [பட்டுருவ] பட்டு ஊடுருவும் படி, [வேல் தொட்ட] வேலாயுதத்தைப் பிரயோகித்த [சேவகனும்] பராக்ரமசாலியாகிய பெருமானும் [வேடிச்சி காவலனே]

28. [வரதனும்] வரம் அளிப்பவனும், [அநுக்ரகனும்] அருள்பாலிப்பவனும், [நிருதர்குல நிஷ்டுரனும்] — அசுரர் குலத்துக்கு இடையூறு - கொடுமை செய்தவனும், [மநு] - மந்திரங்களை [பவனம்] இருப்பிடமாகக் கொண்ட சித்த மூர்த்தியும், [மநோ துக்கம்] மனத்துத் துக்கங்களை மன வேதனைகளைப் [பேதனனும்] பேதிப்பவனும்-மாற்றுபவனும், ஒழிப்பவனும் [வேடிச்சி காவலனே]

29. [வயிர்] ஊது கொம்புகளின் [இசை முழக்கம்] ஒலி முழக்கம் மிகுந்துள்ளதும், [மழை] மேகம் தவழ்கின்றதுமான [குறிச்சிதொறும்] மலைநில ஊர்கள்தோறும் மகிழ்ந்து கொண்டாடப்படும் [குரவையுள்] வேடுவர்கள் ஆடும் குரவைக் கூத்து [நடக்கும் இடங்களில்] திரிகின்ற வேடிக்கை வேடுவனும்] விநோத வேடனும் [வேடிச்சி காவலனே]

---

முருகவேளைப் புகழ்ந்து பாடுவர் வேடர்கள் :

> " உரவுநீர் மாகொன்ற வேலேந்தி யேத்திக்
> குரவை தொடுத் தொன்று பாடுகம் வாதோழி "
>
> —(சிலப்பதிகாரம் குன்றக்குரவை).

(ii) வள்ளி பொருட்டு வேடனுனராதலின் " வேடிக்கை வேடுவன் " என்றார்.

' வேட்டுவக் கோலத்தைக் கொடு குமரன் தோன்றினன் '
—கந்தபுராணம்-வள்ளி திருமணம் 66.

(iii) குரவையுள் திரியும் ...... வேடுவன் : ' வெறியாட்டிடத்தும் ... குரவைக் கூத்தாடும் இடத்தும் முருகன் வருதல்- (அடி 32-ன் குறிப்புப் பார்க்க).

> " வேலனுர் வந்து வெறியாடும் வெங்களத்து
> நீலப் பறவைமேல் நேரிழை தன்னேடும்
> ஆலமர் செல்வன் புதல்வன் வரும் "
>
> " யாம் ... ஆடும் குரவையைக் கண்டுநங்
> காதலர் கைவந்தார் "—குன்றக்குரவை - சிலப்பதி.

[30]மரகத மணிப்பணியின் அணிதழை உடுத்துலவும்
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகனும்
[31]மதனன்விடு புட்பசர படலமுடல் அத்தனையும்
மடல்எழுதி நிற்குமதி மோகத் தபோதனனும்
[32]வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதணில்
மயிலென இருக்குமொரு வேடிச்சி காவலனே.

---

[30] (i) மரகதமணிப் பணி-தழை முதலிய வள்ளி அணிதல்:
" தூசாமணியும் துகிலும் புனைவாள் " – கந்தர் அநுபூதி 43;
தருணமணி யவை பலபல செருகிய
தலையள், துகிலிடை யழகிய குறமகள் – திருப். 515;
' தழையுடுத்த குறத்தி ' — திருப்புகழ் 296-ம் பக்கம் 236 கீழ்க்குறிப்பும் பார்க்க. திருக்கையில் வழக்க வகுப்பு அடி 13-ன் குறிப்பைப் பார்க்க–பக்கம் 420.

(ii) மரகத ...... கொடிச்சி எனவும் கூட்டிப் பொருள் காணலாம். ' மரகதவனிதை ', ' மரகத வள்ளி ' எனத் திருப்புகழில் வருவதால் (511, 319).

(iii) கொடிச்சி தனை யாசிக்கும் யாசகன் :
" குறமானேடு மகிழ் கருத்தாகி ... ஆவி உய அருள் பாராய் எனுரை வெகுப்ரீதி இளையவ " — திருப்புகழ் 209;
" நும் பணிகள் முற்றும் நாடியே புரிகுவன் முனிவு கொள்ளாது சற்று நீரருள் செய்திடும் என்றனன் தலைவன் " —கந்தபுராணம் 6–24–132.
" குழைவளர் செஞ்செவி யீர் என்னை ஏவலிற்
கொள்ளுமினே "–தணிகைப்புராணம்-களவு 224;

[31] முருகவேள் மடல் எழுதினது — திருப்புகழ் 289, 423, 513, 660 பார்க்க.
' செம்பொன் நூபுர கமலமும் ... இந்த்ர நீலமு மடலிடை எழுதிய பெருமாளே ' — திருப்புகழ் 289.

[32] (i) குறவர் முருகனைப் பரவுவது; " கானவர் ...... மகிழ்ந்து தொண்டகச் சிறுபறைக் குரவை அயர " —திருமுருகாற்றுப்படை 197. ' தொண்டகம தார்ப்பக் குரவை முறை தூங்குவித்தான் ' — " வேலனை முற்கொண்டு வெறியாட்டு நேர்வித்தான் " — கந்தபுராணம் 6–24–39, 40.

(ii) வள்ளியை மயில் என்றது :—மான்தருகான மயில், தினைகாவல் மயில், குறமயில், குறக்குல மயில் எனத் திருப்புகழில் (247, 342, 1060, 1258) வருவன காண்க.

. : 30. : மரகதமணி – பச்சை மணி முதலிய [பணியின்] ஆபரணங்களுடன் [அணிதழை] அழகிய தழைகளால் ஆய உடையை, [உடுத்து] அணிந்து [உலவும்] உலவின [வனசரர் கொடிச்சிதனை] வேடுவர் மகளை, யாசிக்கும்-' என்னை மணந்து கொள்' என்று [யாசித்த] [யாசகனும்] [இரப்பவனும்]

31. [மதனன்] மன்மதன் [விடு] பிரயோகித்த [புட்பசர படலம்] புஷ்பபாணக் கூட்டம் [உடல்அத்தனையும்] உடலுதல் அத்தனையும் – போர் புரியும் வகை அவ்வளவையும் [அல்லது சரபடலம் – அம்பின் கூட்டம் – உடல் அத்தனையும் - உடல் முழுதும் [பாய்ந்திருத்தலை] [மடல் எழுதி] மடற் படத்திலே எழுதிக் காட்டி நிற்கின்ற, அதிமோகம்-மிக்க காதல் நிறைந்த அல்லது மதிமோக — மோக புத்தித் [தபோதனனும்] தவ முதல்வனும்

32. (வரிசிலை) கட்டப்பட்ட வில்லை உடைய (மலைக் குறவர்) மலை வேட்டுவர் (பரவிய) குரவை - வெறியாட்டு ஆடித் தன்னைப் பரவின, புனத்து-தினைப்புனத்தே [இதணில்] பரண்மீதிலே (மயில் என) மயிலின் சாயலுடனே (இருக்கும்) இருந்த ஒப்பற்ற வேடிச்சியின் - குறத்தி வள்ளிக்கு (காவலனே) வேளைக்காரனுய்க் காவல் காத்த அந்த அறுமுக வேள்தான்.

---

### வேடிச்சி காவலன் வகுப்பின் சுருக்க உரை

வேடிச்சி (வள்ளி) காவலன் யாரெனிற் கூறுவேன் – அவன் 1. உமாதேவியின் குழந்தை; 2. கங்கையில் வளர்ந்தவன்; 3. கிர்த்திகை மாதர் அறுவர் பொருட்டு ஆறு குழந்தைகளாய்த் திகழ்ந்தவன்; 4. மயில் வாகனப் பெருமான்; 5. ஐராவதத்தை அட்டவன்; 6. அருணை நகர்ப் பக்தன் — (அருணகிரிநாதன்) இட்ட திருப்புகழ்ப் பதக்கத்தை அணிந்த கருணைமூர்த்தி; 7. நாகலோகத்தர், சித்தர்கள், இயக்கர்கள் (ஆதிய பதினெண் கணங்களும்) வேத முறைப்படி பூசிக்கும் தேவன்: 8. ஒப்பற்றவன், குருபர மூர்த்தி, உத்தமன், அக்கினி தேவனது திருக்கரத்தில் (தீப் பொறியாய்) விளங்கினவன்; 9. சித்ரகவிராஜன், அகத்திய முநிவரும் வணங்கும் முத்தமிழ் விநோதன்; 10. அவரை, பொரி முதலிய உண்ணும் விநாயக மூர்த்தியின் தம்பி; 11. அசுரர் படை அபயமிடும்படி போருக்குச் சந்நத்தமானவன்; 12. திரு அண்ணமலை, திரு இடைக்கழி, திருச் செங்கோடு, திருத்தணி, அமராவதி ஆகிய தலங்களில்; 13. ஞானப் பொருளையும் சகல கலைகளையும் ஒரு நொடியில் அறியும்படி என்னை வாழ்வித்

[தொடர்ச்சி பக்கம் 439-ல் பார்க்க.]

## 13. சேவகன் வகுப்பு

தனதன தன்ன தனதன தன்ன
தனதன தன்ன தனத்தா தனஐ

[1]இருபிறை எயிறு நிலவெழ உடலம்
இருள்படு சொருபம் உடைக்கோ விடவே

[2]இறுகிய கயிறு படவினை முடுகி
எமபடர் பிடரி பிடித்தே கொடுபோய்;

[3]அருமறை முறையின் முறை முறை கருதி
அதரிடை வெருவ ஒறுத்தால் வகையால்

[4]அறிவொடு மதுர மொழியது குழறி
அலமரு பொழுதில் அழைத்தால் வருவாய்;

---

[1] யமன் – பிறை எயிறு — " திங்கட் பகவின் ஒளிர் வெளி றெயிறு "—திருப்புகழ் 17.

இருள் சொருபம் – 'சண்டக் கருநமன்'—திருப்புகழ் 585.

[4] திருவகுப்பு அருணகிரியார் கிளியான பின்பு – உயர்ந்த ஞான நிலையிற் பாடினது; ஆதலால் திருப்புகழ் ஆதிய பிற நூல்களில் உள்ள 'யம பயத்தை நீக்கி யருளுக', 'பெண்கள் மீதுள்ள மயக்கு அற அருள்' என்பனபோன்ற வேண்டுகோள் கள் திருவகுப்பிற் கிடையாது. இந்தத் திருவகுப்பு ஒன்றில் தான் யமபயம் கூறப்பட்டுளது. ஒரு ஓலைப் புத்தகத்தில் இந்தத் திருவகுப்பு திருப்புகழ்ப் பாடல்களுள் ஒன்ருகக் காணப்பட்டது. தவறுதலாகத் திருவகுப்புக்களுட் சேர்க்கப் பட்டதோ என்றும் ஓர் ஐயம் எழுகின்றது.

பொழிப்புரை

**1.** இரண்டு பிறைகள் போன்ற (எயிறு) பற்கள் நில வொளி வீச, உடல் இருள் நிறம் விளங்கும் உருவம் கொண்ட தலைவன் – யமன் – அனுப்புவிக்க வந்து

2. அழுத்தமாகக் கட்டும் பாசக்கயிறு வந்து பிணிக்க, வினை வேகமாய் வந்து மூட, எமதூதர்கள் எனது (பிடரியை)க் கழுத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்

3. அரிய வேதங்களிற் சொல்லியுள்ள விதிப்படி (செய்த வினைகளைத் தனித்தனி முறைப்படி சீர்தூக்கிக்) கருதி (அதர் இடை) கொண்டு போகும் வழியில், (வெருவி) பயப்படும்படி ஒறுத்தால்-வருத்தித்தண்டித்தால், வகையால்-நல்லவகையில்

4. அறிவுடனே, (மதுர மொழியது) இனிமையான சொற்களால் (குழறி) தடுமாற்றக் கூச்சலிட்டு நான் (அலமரு பொழுதில்) வேதனைப் படும்பொழுது (உன்னை நான்) அழைத்தால் (நீ) வந்தருளுவாயாக,

---

[437-ஆம் பக்கம் சுருக்க உரை தொடர்ச்சி.]

தவன்; 14. அரி, அயன் அறியா அரனுக்கு வேத முடிவை உபதேசித்த குரு; 15. அமலமூர்த்தி, எனது தலைவன், சகல குணங்களும் வாய்ந்தவன், குணமிலி, தேவசேனுபதி; 16. அநுபவன், அற்புதன், அநுகுணன், அக்ஷரன், மனச் சேட்டை அழிந்த ஞான நிலையில் இன்பம் தோற்றுவிப் பவன்; 17. இன்ப துன்பங்களை விட்டு, ஞான நிலையை, யான் எனது அற்ற நிலையை – எனக்கு அளித்தருளிய யோக மூர்த்தி; 18. யமனையும் வெருட்டி ஒட்ட வல்ல மோன ஞான நிலையில் என்னை இருத்தி வைத்த அரசு; 19. எழு பிறப்பிலும் என்னைத் தனக்குப் பக்தனும்படி இனிய கவிபாட வல்ல ஆற்றலை எனக்கு அளித்த கவியரசு; 20. தேவர்களின் முடியிலும், வேடர்களின் மலையிலும், என்னுடைய உள்ளத் திலும் நறுமணம் வீசும் திருவடித் தாமரைகளை உடையவன்; 21. தேவசேனையின் நாயகன்; 22. நக்கீரரைப் புரக்கக் கற்கி முகி என்னும் பூதத்தை அட்டவன்; 23. பூமியும் அஷ்ட கஜங் களும் அஞ்சும்படி முழங்கும் சேவலைக்கொடியாக உடையவன்; 24. இணையிலி, நிர்ப்பயன், மலமிலி, நிஷ்களன், யாகமூர்த்தி; 25. உலகை வலம்வந்த மயிலோன்; 26. பிரமனை விலங்கிட்டுச் சிறையில் இட்டவன்; 27. கிரவுஞ்சத்தை அட்டவன்; 28. வரதன், அநுக்ரகன், அசுரர்களை அட்டவன், மநுமந்திரத்தி லிருப்பவன், சித்தன், மனத்துயர் கெடுப்பவன்; 29. குரவை யாடலில் மகிழ்பவன்; 30. வள்ளியின் காதலைப்பெற இரப்ப வன்; 31. வள்ளி மீதுள்ள மோகத்தால் மடல் எழுதி நிற்பவன்;

[5]ஒருபது சிரமும் இருபது கரமும்
விழஒரு பகழி தொடுத்தோன் மருகா
[6]உரமது பெரிய திரிபுரம் எரிய
உயர்கன கிரியை வளைத்தோர் புதல்வா;
[7]மருவளர் அடவி வனிதையர் பரவ
மரகத இதணில் இருப்பாள் கணவா
[8]வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சேவகனே.

---

[5] ராவணனை அட்டது–ஒரு பகழி – திருப்புகழ் 452, பக்கம் 6 கீழ்க்குறிப்பு.

[6] திரிபுரம் எரித்தது – திருப்புகழ் 285, பக்கம் 206 குறிப்பு.

[7] வன தேவதைகள் வள்ளியை வணங்குவது:—

"அடவி வனிதையர் தனதிரு பரிபுர சரண மலரடி மலர்கொடு வழிபட......புனமதில் இனிதுறை தனிமான்" — திருப்புகழ் 516.

[8] சேவகன் = பராக்ரமசாலி. "வென்றிவேன் முழுச் சேவகன்"—(சித்து வகுப்பு). முழுச் சேவகன் = ஒப்பற்ற வீரன். — கந்தரந்தாதி 64-ஆவது செய்யுளுரையைக் காண்க. "மயிலேறிய சேவகனே", 'திதிபுத்திரர் வீறடு சேவகனே' —கந்தரநுபூதி (25, 50); "வாரணங் கைப்பிடித்த சேவகப் பெருமாளே"; "முருக மயூரச் சேவக"—திருப்புகழ் 1251, 1273. 'தேவதேவன் மெய்ச் சேவகன்'—திருவாசகம் 42-1. 'வைதிகத் தேர் ஏறிய ஏறு சேவகன்'—திருவிசைப்பா 1-10.

## 14. வேல்வாங்கு வகுப்பு

[முருகபிரான் வேலாயுதத்தைப் பிரயோகித்ததால் நேர்ந்தன இவை என இவ் வகுப்பு விளக்குகின்றது].

தனதன தந்தன தனதன தந்தன தந்தன
தானந்தன தானந்தன

[1]திடவிய நெஞ்சுடை அடியர்இ டும்பைகெ டும்படி
தீயாங்குறை போயாழ்ந்தது

5. இராவணனது ஒப்பற்ற பத்துத் தலைகளும், இருபது கைகளும் அற்று விழும்படி ஓர் அம்பைப் பிரயோகித்த (திருமாலின்) மருகனே!

6. உரமது பெரிய - வலிமை மிக்குடைய திரிபுரங்கள் எரிந்துவிழப், பெரிய (கனகிரியை) பொன்மலையாம் மேருவை (வில்லாக) வளைத்த சிவபிரானது புதல்வனே!

7. மருவளர் - நறுமணம் ஓங்கும் (அடவி வனிதையர்) வனதேவதைகள் (பரவ) போற்றி செய்ய (மரகத இதணில்) பசுமை வாய்ந்த பரண்மீதே இருந்த வள்ளியின் கணவனே!

8. வளைந்த கடல் இரைச்சல் இட, அசுரர்கள் இறக்க, (கிரௌஞ்சம், எழுகிரி ஆகிய) மலைகளுடன் சண்டை செய்த முழுவீரனே.

---

சேவகன் வகுப்பின் சுருக்க உரை

இயம தூதர்கள் என்னை வருத்தும்பொழுது நான் உன்னை அழைத்தால் — திருமால் மருகனே! திரிபுரமெரித்த சிவனுர் புதல்வனே! வள்ளி கணவனே! அசுரர்களை அட்டவனே! கிரௌஞ்சத்தை அட்டவனே! நீ வந்து உதவவேண்டும்.

—:o:—

## 14. வேல்வாங்கு வகுப்பு

### பொழிப்புரை

1. (திடவிய) திடம் - வலிமை கொண்ட (நெஞ்சுஉடை) மனதை உடைய (அடியர்)அடியார்களது, (இடும்பை) துன்பங்கள் (கெடும்படி) ஒழிந்து போகும்படி, (தீயாங்குறை) தீமை - தீயவை என்கின்ற (குறை) குறைபாடு — குற்றம் போய் ஆழ்ந்தது — மறைந்து தொலைந்தது (காங்கெயன் வேல் வாங்கவே)

---

[1] திடம் (திடன்) என்னும் சொல்லினின்றும் வந்த உரிச்சொல், 'திடமான' என்று பொருள். கடன் (கடமை) கொண்ட 'கடவிய' 'காக்கக் கடவிய நீ'—திருமுரு. வெண்பா; கனம் என்பதிலிருந்து 'கனவிய' வந்ததுபோல— "கனவிய விலை ஒலை"—திருப்புகழ் 502.

[2]செயசெய என்றிசை பரவிய எங்கள்கொ டுங்கலி
தேசாந்தர மேசாய்ந்தது

[3]செயலுரை நஞ்சுறழ் மயலுறு நெஞ்சினர் வஞ்சகர்
தீமான்கதர் தாமேங்கினர்

[4]சிகரத ரங்கித மகரநெ ருங்குபெ ருங்கடல்
தீமூண்டுதன் வாய்மாண்டது

[5]தெரியலர் சென்றடை திசைகளில் எண்கரி சிம்பெழ
மாருங்கிரி நூருந்தொளே

[6]சிகரநெ டுங்கிரி குகைகள்தி றந்துதி கந்தமும்
லோகாந்தமு நீர்தேங்கின

[7]சிறையுள் அழுந்திய குறைகள்ஒ ழிந்துசெ யங்கொடு
தேவேந்திரர் சேணுண்டனர்

---

[2] கலி - கேடு, மனத்துளக்கம் — '' கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம் '' - பரிபாடல் 2-74. தேசாந்தரம்- வெளிநாடு. தேசாந்தரமே சாய்ந்தது - புறம்பே வெகுதூரத் துக்கு வெளியேறிப்போயின. '' புறமே போந்தோம் பொய் யும் யானும் '' — திருவாசகம் - சதகம் 86.

[3] தீமான் கதர்-தீமையைக்கொண்ட கதத்தினர் - கோபத் தினர் ; மான் - உடைமையைக் காட்டும் — '' கல்விமான் '', '' புத்திமான் '', '' சீமான் '' என்புழிப்போல. தீ - தீமை, கதம் - கோபம்.

[4] கடல் தீ மூண்டது — '' இரைகடல் தீப்பட ...... வென்ற வேலா '' '' விரிதிரை எரி எழ ...... வாங்கு வேற்கார கந்த '' '' விரிகடல் தீ மூண்டிட வேல் ...... வாங்கிய பெருமாளே ''— திருப்புகழ் 990, 757, 480.

வாய் மாண்டது - ஒலிக்கு இடமான வாய் - ஒலியைக் குறிக்கின்றது - ஆகுபெயர். ' மகரம் அளறிடை புரள ...... உததி திடரடைய நுகரும் வடிவேல் ' - வேல் விருத்தம் 1.

[5] திசைகளில் எண்கரி - அஷ்ட கஜங்கள் - திருப்புகழ் 554, பக்கம் 265 கீழ்க்குறிப்பு. சிம்புதல் - ஒலித்தல், துள்ளுதல் - சிம்பெழ - அச்சத்தால் துள்ளிப் பிளிற.

[6] ' கிரி மதகு திறந்து ' என்றும் பாடம்.

2. ஜெயஜெய என்று (இசை) முருகன் (திருப்) புகழைப் (பரவிய) போற்றிப் பாடின எங்களுடைய (கொடுங்கலி) கொடிய (கலி) – வறுமையாதிய கேடுகள் (தேசாந்தரமே) அயல் நாட்டுக்கே (சாய்ந்தது) வெளி ஏறி விட்டன - எங்களை விட்டு வெகுதூரம் விலகிப் போயின (வேல் வாங்கவே)

3. (செயல்) தங்களுடைய செய்கையும், (உரை)வாக்கும், நஞ்சு உறழ் - விஷம்போன்றனவாய் (மயல்) மயக்க அறிவைக் கொண்ட நெஞ்சத்தை உடையவர்களும், வஞ்சக எண்ணத்தினர்களும், (தீ மான்கதர்) தீய கோபத்தினர்களும், (தாம் ஏங்கினர் அச்சம்) கொண்டு மனம் தளர்ந்தார்கள் (வேல் வாங்கவே)

4. (சிகரம்) மலை உச்சிபோல் எழுகின்ற (தரங்கிதம்) அலைகள் உண்டாதலையும், (மகர) மகர மீன்கள் நெருங்குதலையும் உடைய பெரிய கடல் – தீ மூண்டு – நெருப்பிற்பட்டு(–தன் வாய் மாண்டது) தனது ஒலியும் (மாண்டது) அடங்கி ஒடுங்கிற்று (வேல் வாங்கவே)

5. (தெரியலர்) பகைவர்கள், சென்று அடைந்த (திசைகளில்) திக்குகளில் இருந்த (எண்கரி) அஷ்ட கஜங்களும் — எட்டுத் திக்கில் இருந்த எட்டு யானைகளும், சிம்பெழ – சிம்பு எழ — அச்சத்தால் பிளிற (ஒலி செய்ய), (மாறும் கிரி) பகைமை பூண்டிருந்த கிரவுஞ்ச கிரி (நூறும் தொளை) தொளை நூறும் – தொளைபட்டு நூறுதல் ஆம் — பொடிபட்டு அழியும் அல்லது — தொளை நூற்றுக்கணக்காம் (வேல் வாங்கவே)

6. (சிகர நெடுங்கிரி) சிகரங்களை — முடிகளை உடைய பெரிய மலைகள் வாய்விட்டு பிளவுபட்டு – குகைகள் திறந்தன; திக்குகளின் (அந்தமும்) முடிவிடங்கள் வரையும், (லோகாந்தமும்) லோகங்களின் முடிவிடங்கள் வரையும், (நீர்) பிரளயநீர் (தேங்கின) நிறைந்தன (வேல் வாங்கவே)

7. சிறையுள், (அழுந்திய) அமுக்குண்டு கிடந்த (குறைகள் ஒழிந்து) குறைபாடு ஒழிந்து, (செயங்கொடு) வெற்றியுடனே தேவேந்திரர்கள் (சேண்) விண்ணுலகங்களில் ஆட்சி புரிந்தனர் (வேல் வாங்கவே)

---

7 தேவேந்திரர் பலர் – வெவ்வேறண்டங்களில் இருப்பவர் ''யாவரும் பரவும் இந்த்ரரும்'' — இந்திரர் என்று பன்மைபடச் சொல்லலாயிற்று பலருண்டாதலால் - தக்கயாகப்பரணி 18-உரை.

[8]திரிபுவ னங்களும் ஒருபயம் இன்றிவ ளங்கெழு
சீர்பூண்டற நேர்பூண்டன ;
[9]விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது
கால்பூண்டுதன் மேல்தீர்ந்தனன்
[10]விகசித சுந்தர விதரண ஐந்தரு வெந்தெழில்
வீவான்பொழில் பூவாய்ந்தது
[11]விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள் வாழ்ந்தனள்

---

[9] பிரமன் விஷ வசனம் சொன்னதும் விலங்கிடப்பட்டதும் —திருப்புகழ் 571, பக்கம் 308; 310 கீழ்க்குறிப்பு, கந்த ரந்தாதி 14 கீழ்க்குறிப்பு. பூதவேதாள வகுப்பு அடி 32.

"தேர்ப்பாகன் மைந்தன் மறையோடு தெருமர ...... வாங்குவேற்கார"—திருப்புகழ் 757.

[10] **விதரண ஐந்தரு** :—ஐந்தருக்கள் கொடையிற் சிறந்தன— "உம்பர்தரு ...... கசிவாகி"—திருப்புகழ் (விநாயகர் 2); புய வகுப்பு அடி 24-ம் பார்க்க.

ஐந்தரு வெந்து போனது—பின்னர் செழிப்புற்றது:
இந்திரன் மனைவி சசி தனித்திருந்த சமயத்தில் சூரன் தங்கை அஜமுகி சசியை எடுத்துச் செல்ல முயன்ருள். அப் பொழுது சசிக்குக் காவலாயிருந்த மாகாளர் அஜமுகியின் கையை வெட்டிவிட்டுச் சசியை மீட்டனர். இந் நிகழ்ச்சியை அஜமுகி சூரனிடம் முறையிடச், சூரன் இந்திரனையும் தேவர் களையும் தண்டிக்கத் தன் மகன் பானுகோபனை அனுப்பினுன். இந்திரன் மறைந்திருந்ததால், அவன் மகன் சயந்தனெடு பானுகோபன் போர் செய்து, சயந்தனைச் சிறைப்படுத்தி, விண்ணுலகை நெருப்புக்கு இரையாக்கினன். அப்பொழுது கற்பகப்பொழிலும் வெந்தது. சூரசம்மாரத்துக்குப் பின்பு விண்ணுலகத்தை முன்போலச் செழிக்க வைத்துத் தேவர்களை யும் முருகவேள் குடியேற்றினர்.

"பொன்னந் திருநகர் எல்லை எங்கும் புத்தழல் கொளுவ லோடும் பொள்ளெனப் பொடிபட்டன்றே...துறக்க மூதூர்... பூழியதானது"—கந்தபுராணம் 2-43-94, 95.

"நாயகன் ... தெய்வத் தச்சனை நோக்கினன் ... எல்லையில் வளனெடும் இருக்கும் பான்மையால் தொல்லைய தாமெனத் துறக்கம் நல்குதி வல்லையில் என்றலும் ... வான்முக வியனகர் வளமை சான்றிட நான்முகம் நாடியே நுனித்து நல்கினுன்" —கந்தபுராணம் 5-3-19-29.

8. (திரிபுவனங்களும்) மூவுலகங்களும் ஒருவித பயமும் இல்லாமல், (வளம் கெழு சீர் பூண்டு) வளப்பம் பொருந்திய சிறப்பினைக்கொண்டு, (அறம் நேர் பூண்டன) தரும நெறியை (நேர்) செவ்வையாக மேற்கொண்டன (அல்லது சீர் பூண்டு நேர் அற பூண்டன – சிறப்பினைக்கொண்டு நேர் — நல்லொழுக்கத்தை (அற) மிகவும் நன்ருக மேற் கொண்டன – (வேல் வாங்கவே)

9. விஷ வசனம் – முருகன் கைவேலுக்குச் சத்தி படைத் தவன் நான்தான் என்னும் விஷம் பொருந்திய சொற்கள் சிலவற்றைப், பறையும் — சொன்ன, விரிஞ்சன் — பிரமன், விலங்கது கால் பூண்டு — காலில் விலங்கது பூண்டு, தன்மேல் தீர்ந்தனன் – தனது (மேல்) மேன்மையை, (அல்லது மேல் – தான் மேலோன் என்னும் ஆணவ நிலை, தீர்ந்தனன் – ஒழியப்பெற்ருன் (வேல் வாங்கவே)

10. விகசித — மலர்ந்த, சுந்தர–அழகான, விதரண — கொடையிற் சிறந்த, ஐந்தரு — சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் எனப்படும் ஐவகைத் தெய்வத விருக்ஷங்களும், வெந்து — அசுரர்களால் எரிக்கப் பட்டு அதனுல், எழில் — அழகு, வீ – அழிந்துபோயிருந்த, வான் பொழில் - விண்ணுலகத்துச் சோலைகள், பூ வாய்ந்தது– பூக்கள் மலரப்பெற்றன (வேல் வாங்கவே)

11. விழைவு - ஆசையை, விருப்பத்தைத், தரும் – தரு கின்ற, பதம் – பதவியில் உள்ள, *சசி – இந்திராணி, தன் - தனது, விளங்கிய – விளக்கம் உள்ள, மங்கல நூல் - திரு மங்கிலிய நூல், வாங்குகிலாள் – கழலாதவளாய், வாழ்ந் தனள் — வாழும் பாக்கியத்தை அடைந்திருந்தாள் (வேல் வாங்கவே)

---

11 பதம் – பதவி — ‘‘பிரிவில் தொல்பதம் துறந்த’’
—கம்பராமா. கிளைகண்டு-101.

சசியின் பதவி விழைவு தரும்பதவி – ஏனெனில் அது ‘தேவேந்திர பதவி’ – நூறு அசுவமேத யாகம் முடித்தவரே இந்திர பதவிக்கும், அதனுல் சசி தேவிக்கும் உரியவர் ஆகின்றனர். (திருப்புகழ் 232, பக்கம் 82 கீழ்க்குறிப்பு.) விழைவு தரும்பத சசி - விருப்பம் – இனிமையைத்தரும் (பதம்) சொற்களைப் பேசும் சசி – எனப் பொருள் கொள்வது — அவ்வளவு சிறப்பினதன்று.

* ‘‘களிற்ருன் கிழத்தி கழுத்திற் கட்டும் நூல் வாங்கிடா தன்று வேல் வாங்கி’’—கந்தரலங்காரம் 77.

[12]வெருவி ஒதுங்கிமை யவரெவ ருஞ்சிறை வென்றித
மேலாம்படி யேமீண்டனர்

[13]விழியோரிரண்டொரு பதுசத நின்றெறி கண்டகன்
மேல்வாங்கிளை கால்சாய்ந்தது

[14]வெளிமுழு துந்திசை முழுதும்வி ழுங்கி எழுங்கன
சூர்மாண்டற ₒவேர்மாய்ந்தது

[15]விபுதர் பயங்கெட நிருதர் தளங்கெட விண்கெடு
மேடாம்படி பாடோங்கின

[16]மிடைகுறள் வெங்கொடி கழுகு பருந்து விருந்தென
ஊனுர்ந்தகல் வானுர்ந்தன ;

---

[12] தேவர்கள் சிறையினின்றும் மீண்டது — " சூரர்கொடு போயடைத்த தேவர்சிறை மீளவிட்ட பெருமாளே"
— திருப்புகழ் *1188.*

[13] *(1)* சிங்கமுகாசுரனுக்கு ஆயிரந் தலை இரண்டாயிரம் கை. இரண்டாயிரங் கண் — " அங்கை ஓரிரண் டாயிரம், ஆயிர முகமாய்ச் சிங்கமாமுகன் தோன்றினன் திடுக்கிடத் திசைகள்" — கந்தபுராணம் *2-3-21.*

*(2)* கால் சாய்தல் — அடியோடழிதல்.
" குலமுழுதும் கால்சாயப் பெயர்ப்பனன்றே"
கண்டகன் – துஷ்டன். — பிரபோத–*38-28.*

[14] சூரன் மாமரமாய்ப் பேருருவம் கொண்டான் —
" மாசறு ககனகூட வரம்பதன் அளவு மேல்போய்
ஆசையின் எல்லை காறும் அளவை தீர் உலவை ஓச்சி
... வெஞ்சூர் பராரைமால் வரையின் நின்றான்".

" வேலைகள் முழுதும் விண்ணும் தராதல வரைப்பும் எல்லாம் தண்ணிழல் பரப்பி நின்றான்" — கந்த புராணம் *4-13-469-470.*

ₒ " நிசிசரர் வேர்மாண்டிட வினையற வேல் வாங்கிய பெருமாளே"—திருப்புகழ் *480.*

[15] (அசுரர்) பிணக்குவியல் மலைபோல் விசும்பளவும் இருந்தது, முருகவேளது நெற்றிக்கண்ணின் தீயால் சாம்பராயிற்று.
" பன்னிரு விழிகளும் ... உற்று நோக்கினன், எரிந்தன
களேவரத் தோங்கல்"—(களேவரம் – பிணம்).
" வெந்து நுண்துகள் பட்டன களேவரம், விசும்பின்
உந்து சோரி நீர் வறந்தன"
—கந்தபுராணம் *4-13-148, 149.*

12. வெருவி - அசுரர்களுக்கு அஞ்சி, ஒதுங்கு - ஒதுங்கிக் கிடந்த – தாழ்ந்து நடந்து வந்த, இமையவர் – தேவர்கள், எவரும் — யாவரும், சிறை வென்று — சிறையினின்றும் ஜெயித்து, சிறை ஒழிந்து, இதம் – இன்பம், மேலாம்படியே – பெருகி மேலெழும்படியே, மீண்டனர் – தங்களுடைய விண்ணுலகத்துக்கு மீண்டு வந்து சேர்ந்தனர் (வேல் வாங்கவே)

13. விழி – கண்கள், ஒரிரண்டொருபது சதம் – $1 \times 2 \times 10 \times 100$ ஒரு இரண்டு பத்து நூறு (இரண்டாயிரமும்), நின்றெரி-நிலைத்துத்தியைக்கக்குகின்ற, கண்டகன்-கொடியோனாகிய அசுரன் — சிங்கமுகாசுரனும், மேல்வாங்கிளை — மேல் வாவும் கிளை, அவனைச் சார்ந்து படர்ந்துள்ள, (பற்றி நின்ற) பந்துக்களாம் அசுரர் கூட்டத்தினரும், கால் சாய்ந்தது – அடியோடு அழிந்தனர், அல்லது கிளையும்-பந்துக்களும், காலும்-பிள்ளைகளும் (சாய்ந்தது) அழிந்தனர் (வேல் வாங்கவே)

14. வெளி முழுதும் திசை முழுதும் விழுங்கி - வெளி முழுதும் விழுங்கி, திசை முழுதும் விழுங்கி, வெளியிடம் முழுதும் பரந்தும் - பரவி நின்றும், திசையிடங்கள் முழுதும் (பரந்தும்) பரவி நின்றும், (எழும்) (மாமரமாம்) பேருருவத்துடன் எழுந்த – கனம் – பெரிய, சூர் – சூரன், மாண்டு அற – இறந்து ஒழிய, வேர் மாய்ந்தது – அவன் சந்ததியும் அடியோடு அற்றுப்போயிற்று, மாமரம் வேரோடற்று வீழ்ந்தது எனலுமாம் (வேல் வாங்கவே)

15. விபுதர் — தேவர்களின் பயம் தீரவும், நிருதர் - அசுரர்களின், தளம் – சேனை (படை), கெட – அழிந்தொழியவும், விண் - ஆகாயமுகடும், கெடு - கெடும்படி, மேடுஆகும்படி (அசுரர்களின் பிணக்குவியல் ஆகாயமும் கெடும்படி அவ்வளவு உயரத்துக்கு, மேடிட—மேடாக, பாடு ஓங்கின-போர் நிகழ்ச்சிகள் சிறந்து விளங்கின (வேல் வாங்கவே)

16. மிடை — நெருங்கி வந்த, குறள் — பூதங்களும், வெம் – கொடிய, கொடி - காக்கைகளும், கழுகு – கழுகுகளும், பருந்துகளும், விருந்தென — இன்று விருந்துணவு (விருந்து சாப்பாடு கிடைத்ததென மகிழ்ந்து, ஊன் ஆர்ந்து – மாமிச உணவை உண்டு, அகல் – விரிந்துள்ள, வான் – ஆகாயத்தில், ஆர்ந்தன - நிறைந்தன (வேல் வாங்கவே)

---

16 போர்க்களத்தில் குறள் — காகம், கழுகு, பருந்து உண்பதற்குக் கூடுவது — போர்க்களத்தலகை வகுப்பு அடி 13 பார்க்க.

17அடவிப டுஞ்சடை மவுலியில் வெம்பணி யம்பணி
யாமாங்கதர் வாமாங்கனே

18அநுபவை அம்பிகை அநுதிதை அம்பைத்ரி யம்பகி
ஆசாம்பரை பாசாங்குசை

19அநகை அசஞ்சலை அதிகுண சுந்தரி அந்தரி
காலாந்தகி மேலாந்திரு

---

17 (1) சிவபெருமான் சடைக்காட்டிற் பாம்பு—
" மின்வீழ்ந் தன்ன விரிசடைக் காட்டிற்
பன்மான் துத்திப் பஃறலைப் பாந்தள் "
—சிதம்பர மும்மணி 17.

(2) பாம்பு – அங்கதம் – தோளணி—" தோளின் மிசை
வரி அரவம் நஞ்சழல வீக்கி "–சம்பந்தர் 3–70–3.

18 தேவி கையில் பாசம் – அங்குசம் —
" பாசாங்குசமும் கையில் அணையும்
திரிபுர சுந்தரி " — அபிராமி அந்தாதி 2.

ஆணவம் என்னும் யானையைப் பிணிக்க (கட்ட)ப் பாச மும், அதை அடக்க அங்குசமும் விநாயகமூர்த்தி தமது திருக் கரங்கள் இரண்டில் வைத்துள்ளார். " ஆணவ வெங் கரி பிணித்து அடக்கிக் கரிசினேற்கு இருகையும் ஆக்கும் அண்ணலே "—தணிகைப்புராணம். விநாயகர் தாதையைப் போலக், கங்கை, திங்கள், கொன்றை, அரவு, சடை முக்கண் இவைகளைக் கொண்டுள்ளார்'; தாயைப்போலத் திருக்கரத் தில் அங்குசம், பாசம் அணிந்துள்ளார்.

" கங்கையும் பனிவெண் திங்களும் விரைத்த
கடுக்கையந் தொங்கலும் அரவும்,
தங்குபொற் சடையும் முக்கணும் தாதை
தாணுஎன் றுணர்த்த,மென் மலர்க்கை
அங்குச பாசம் அணிந்துவெற் புயிர்த்த
ஆரணங்(கு) அன்னையென் றுணர்த்தி
வெங்கலி முழுதும் துமித்தருள் பட்டி
விநாயகன் சேவடி பணிவாம் "
—பேரூர்ப் புராணம்.

இங்ஙனம் அங்குச பாசத்தால் உயிர்களை விநாயகமூர்த்தி ஆட்கொள்ளுதற்கு மூல காரணமாயுள்ளவள் தேவியே.

17. அடவி படுஞ்சடை மவுலியில் - காடுபோன்ற சடா மகுடத்தில் — சடைமுடியில், வெம்பணி — கொடிய பாம்பு களையே, அம் பணி ஆம் - அழகிய ஆபரணமாம், (அங்கதர்) வாகுவலயமாகத் - தோளணியாகக் - கொண்டவரின் (வாம அங்கனை - வாமம் இடது பாகத்தில் விளங்கும், (அங்கனை) (பெண்) தேவி.

18. அநுபவை — யாவற்றையும் நுகர வைப்பவள்; அம்பிகை — தேவி, அநுதிதை — சொல்ல இயலாதவள் — சொற்கடங்காதவள், அம்பை - (அம்பா) தாய் (த்ரியம்பகி) முக்கண்ணி, ஆசாம்பரை - ஆசை - திக்குகளை (அம்பரமாக) ஆடையாக உடையவள் (நிர்வாணி), பாசாங்குசை – பாச மும், அங்குசமும் கையிற் கொண்டவள் —

19. அநகை — பாவமற்றவள், அசஞ்சலை — சஞ்சலம் அற்றவள், அதிகுண – மிகச் சிறந்த, சுந்தரி - அழகி, அந்தரி – ஞானவெளியில் இருப்பவள் – பராகாச வடிவை உடையவள், (காலாந்தகி) காலனுக்கு யமனுயிருந்தவள் – காலனை அட்ட வள், (மேலாந்திரு) திருவின் (இலக்குமியின்) மேலானவள் —

---

"பாசம் அங்குசம் ... அணியா ... இபமுகத்தன் ...
தொழிற்கெல்லாம் காரணமாதல் தெளித்தருள்
கொழிக்கும் கன்னியை உன்னியேத் தெடுப்பாம்"
—தணிகைப் புராணம்.

19 (1) காலாந்தகி – காலன் இறைவனது இடது காலால் உதைக்கப்பட்டான். இடது கால் தேவியின் கால். ஆதலால் தேவி – காலாந்தகி – (காலன் + அந்தகி).

"வாமச் சேவடி தன்னுல் சிறிதுந்தி, உதைத்தான்
கூற்றன் விண்முகில்போல் மண்ணுற வீழ்ந்தான்"
—கந்தபுராணம் 2-5-253.

வாமம் — இடதுபாகம்.

"கூற்று மரித்திடவே உதை பார்வதி", "கூற்றினை மோதிய பத சத்தினி", "கூற்றுவனைக் காய்ந்த அபிராமி", "பாதங்களால் வந்த காலன் விழ மோது சாமுண்டி" — திருப்புகழ் 789, 751, 760, 93.

(2) தேவியை - 'மேலாந்திரு' என்ருர்; (தேவேந்திர சங்க வகுப்பு, அடி 11 குறிப்பு) 'பெருந் திருமகள்' என்ருர் சம்பந்தர்.

"பேழை வார்சடைப் பெருந்திரு மகள்தனைப்
பொருந்தவைத் தொருபாகம்"
—சம்பந்தர் 2-107-6.

[20]அமலை அலங்க்ருதை அபிநய பங்குரை சங்கினி
மானுங்கணி ஞானுங்குரை

[21]அணிமுக பந்திகள் சிறுபொறி சிந்தவி ளைந்தழல்
வாய்கான்றிடு நாகாங்கதை

[22]அபயவ ரம்புரி உபயக ரந்திகழ் அந்தணி
யாமாங்கறி தாய்மாண்பினள்

[23]அதுலைத ருந்திரு மதலையி பங்கொள்ப யங்கொடு
பாய்மாண்கலை வாய்மாண்புன

---

20 தேவி (1) அபிநய சங்கினி – 'அத்தனுடன் ஒத்த நடநி' —திருப்புகழ் 971; "நற்பவுரி கொண்டு தொந்தம் ஆடுகின்ற பார்ப்பதியே" — மீனுட்சி கலிவெண்பா 25.

(2) தேவி – "மான் விழியாள்தேவி பாகமா"— சம்பந்தர் 1-70-1.

(3) அங்குரம்-முளை. 'தவத்தின் அங்குரம்போல் வளர்ந்தருளி'-பெரியபுரா. சம்பந்தர் 53.

21 (1) தேவி நாகத்தைப் பதக்கமாக, கங்கணமாக அணிவாள்.

"நீல கந்தரி, யோகினி, சூலி, நீலி, நாக கங்கணி, சங்கரி" — அரிச்சந்திர புராணம்.

"படல சூடி காகோடி பணி மதாணி மார்பாளே" — தக்கயாகப்பரணி 105.

"அரவபூணுரி, நாகபூஷணத்தி" என வருவன காண்க. (திருப்புகழ் 145, 889.)

(2) நாகம் விஷாக்கினியைக் கக்குவது:—

" நாகம் நஞ்சழலை யூருமே"—சம்பந்தர் 3-116-3.
" தழலுமிழ்தரு பட அரவு ஷை 1-20-1.
" பையருகே அழல்வாய ஐவாய்ப் பாம்பு–1-5-1.

22 அபய கரம்—அபயம் அளித்தலை (அடைக்கலம் தருதலைக்) காட்டும் (வலது) கைக்குறி. வரம் – கரம் - வரதம்– வரம் தருதற்கு அறிகுறியாக அமையும் (இடது) கை. " அபயமே வலம், இடம் வரதம்" — கந்தபுராணம் 3-10-4.

(2) அந்தணன், பெண்பால்- அந்தணி.

(3) ஆம் — ஆங்கு — அறிதாய் — "கருத்து அறிந்து முடிப்பான் தன்னை"—அப்பர் 6-19-8.

20. அமலை-மலம் நீங்கினவள், (அலங்க்ருதை) சிங்காரி, (அபிநயம்) நடிப்பு - நாடக இலக்கண (பங்கு) பாகங்களை (உரை) எடுத்து உரைக்கும் (சங்கினி) பெண், (மானுங்கணி) மான் ஆம் கண்ணி - மான்போலும் கண்ணை உடையவள், (ஞானங்குரை) ஞான அங்குரை - ஞானத்துக்கு முளை - வித்து போன்றவள்

21. (அணி முக பந்திகள்) அழகிய முக வரிசைகள் — படத்தின் வரிசைகள், சிறு பொறிகளைச் சிதறும்படி (விளைந்து) ஆகி, அழல் - நெருப்பை, வாய்கள் (கான்றிடு) கக்குகின்ற - வீசுகின்ற (நாகம்) பாம்பை, (அங்கதை) தோள் வளையாக அணிந்துள்ளவள்

22. (அபய வரம் புரி உபய கரம்) அபயம், வரதம் - இவைகளைக் குறிக்கும் (உபய கரம்) இரண்டு கரங்கள் (திகழ்) விளங்கும் (அந்தணி) செந்தண்மை பூண்டொழுகும் தேவி, (ஆம்-ஆங்கு-அறி) தனது அடியார்களுக்கு (ஆம்) வேண்டிய வையை - அவர்கள் விரும்பியவையை, ஆங்கு-அப்பொழுதே (அறி) அறிந்து உதவும் (தாய்) தாய்போன்ற (மாண்பினள்) பெருமையை - மாட்சியை - உடையவள்

23. (அதுலை) ஒப்பற்றவள், ஆகிய பார்வதி தேவி - தரும் - ஈன்றருளிய (திருமதலை) அழகிய பிள்ளை; (இபம் கொள் பயம் கொடு) (கணபதி) யானை தந்த பயத்தினுல், (பாய்மாண் கலை) பாய்கின்றனவும், மாண் - நிறைந்துள்ளன வும் ஆன (கலை) கலைமான்கள் (வாய்) வாழ்ந்திருந்த (மாண்) சிறந்த (புனம்) தினைப் புனத்திலிருந்த —

---

23 (1) தினைப்புனத்தில் மான்கள் பாய்தல் :—

"இரலை மரை மான்பிறவும் கொய்யாத ஏனற் குரல் கவர்ந்து கொள்ளாமல்" (ஏனற்குரல் - தினைக்கதிர்)—கந்தபுராணம் 6-24-53.

இரலை - கலைமான் ; மரை - மான் வகை.

'உழை இரலை மரை இரவுபகல் இரைதேர் கடாடவி' —சீர்பாத வகுப்பு, அடி 15.

(2) இபம் கொள் பயம் கொடு - குறமின் புணர் — அந்தணன் — எனக் கூட்டுக. வள்ளியம்மை தன் கருத்துக்கு இணங்காத பொழுது - முருக வேள் வேண்டக், கணபதி யானையாக வந்து வெருட்ட வள்ளி அஞ்சினள். (திருப்புகழ் 587, பக்கம் 348' பாடல் 608, பக்கம் 400 குறிப்பு.)

[24]அணிகுற மின்புணர் தணிகையில்அந்தணன் இந்திர
ராசாங்கம தாராய்ந்தவன் ;

[25]வடவையி டும்படி மணிமுடி பஞ்செழ விஞ்சிய
மாடாம்புடை நாடாண்டகை

[26]வசைகரு துங்குரு பதியொடு தம்பிய ரும்பட
வேபாண்டவர் தேரூர்ந்தவன்

---

[24] (1) அந்தணன்—'கொடிமாடச் செங்குன்றூர் நின்ற அந்தணனைத் தொழுவார் அவலம் அறுப்பாரே' —சம்பந்தர் I–107–1.

(2) முருகவேள் இந்திர ராசாங்கம தாராய்ந்தவன் : சூரசம்மாரத்தின் பின்பு தேவசேனையை மணந்து, அழிபட்டிருந்த பொன்னுலகைத் தேவதச்சனைக் கொண்டு சீர்ப்படுத்தித் தேவர்களைக் குடியேற்றினர் முருகவேள். அடி 10-ன் குறிப்பைப் பார்க்க: இந்திரன் முருகவேளிடம்கூறுகின்றான்:

''வளமலி துறக்க நாடு முந்துள அரசும் சீரும் முழுதொருங் களித்தி எந்தாய், உய்ந்தனன் இதன்மேல் உண்டோ ஊதியம் ஒருவர்க் கென்றான்''; ''தேவர்கள் இறைவன் தானும் சேயிழை சசியுமாக, மேவினன் இன்பம் துய்த்து விண்ணுல கரசு செய்தான்''—கந்தபுராணம் 5–3–42, 45.

[25] (1) பூபாரம் தீர்க்க வேண்டிக் கண்ணபிரான் மண்ணுலகுக்கு வந்தார். அக்காரணத்தால் பாரத யுத்தம் மூளும்படி செய்தார். யுத்தத்தில் இரண்டு பக்கத்தும் கூடிய அரசர்கள் தத்தம் சேனையுடன் மாளும்படி கண்டார். வடவைத் தீ மோதினுல் என்ன பாடுபடுமோ அவ்வாறு இரண்டு கட்சி அரசர்களின் மணிமுடிகள் சிதறி அழிய, ஒருசார் 11 அக்குரோணி, ஒருசார் 7 அக்குரோணி ஆகப் பதினெட்டு அக்குரோணி படைகளாய் மேலெழுந்த படைகள் மோதி அழிய — ஒரு போரை (நாடினர்)—வரும்படி செய்தார் அந்த ஆண்டகை (கண்ணபிரான்). இதுவே இந்த அடியின் கருத்து – கண்ணபிரான் பூலோகத்துக்கு வந்த கருத்தை —

24. (அணி) அழகிய (குறமின்) குறமின்னாள் - வள்ளி (புணர்) (யானை தந்த பயத்தினால்) இணங்கி மணந்த, (தணிகையில் அந்தணன்) தணிகைப் பெருந்தகை - திருத் தணிகேசன்; (இந்திர ராசாங்கமது ஆராய்ந்தவன்) தேவேந் திரனது அரசாட்சியைப் பரிசீலனை பண்ணினவன் — ஆய்ந்து ஒழுங்குபடுத்தினவன்;

25. (வடவை) வடவாமுகாக்கினி - வடவைத் தீயை (இடும்படி) இட்ட தன்மையில், (மணிமுடி) ரத்ன க்ரீடங்கள் தரித்த அரசர்கள் பலரும் (பஞ்செழ) எரியுண்டு பஞ்சாய்ப் பறக்க — சிதறுண்டுபோக — அழிபட, விஞ்சிய - மேல் மேல் எழுந்த - மிக அதிகமாய் இருந்த, (மாடு) பக்கங்கள் (போரின் இரு) பக்கங்களை - எதிரிகள் இரு பக்கத்தாரை (ஆம்) கொண்ட (புடை) யுத்தத்தைப் (போரை), (நாடு) நாடி நடத்தின — ஆய்ந்து நடத்தின (ஆண்டகை) நம்பி — பெருமையிற் சிறந்தோன் —

26. (வசை) பழிப்புக்கும் குற்றத்துக்கும் இடமான செய்கைகளையே (கருதும்) எண்ணத்திற் கொண்ட (குருபதி யொடு) குருகுலத் தலைவனும் - துரியோதனனோடு (தம்பியரும்) அவன் தம்பிகளும் (படவே) இறந்துபட் டொழிய, *பாண்ட வர்கள்பாலிருந்து (அருச்சுனனுக்குத்) தேரை ஓட்டினவன்—

---

"நீபா ரத அமரில் யாவரையும் நீருக்கிப்
பூபா ரந் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா"
—வில்லிபாரதம்-கிருஷ்ணன் தூது 34.

"புரவி கரிகள் தேர்ப்படை மடிய, அரசை மாய்த்து,
உயர்புவியின் விதனம் மாற்றினர்"
—திருப்புகழ் 1059, குறிப்புரை பக்கம் 146.

(2) விஞ்சிய மாடு - சேனைகள் (18 அக்குரோணியாய்) நிரம்பின (இரு) பக்கத்தார்கள்.

(3) புடை=யுத்தம். (3) நாடு=நாடின. (4) ஆண் டகை-ஆண்மையிற் சிறந்தோன்-கண்ணபிரான்.

26 பழிப்புக்கிடமான செய்கைகளையே துரியோதனன் செய்துவந்தது, *பார்த்தனுக்குச் சாரதியாய்க் கண்ணபிரான் துணை செய்தது — திருப்புகழ் 934, பக்கம் 721, பாடல் 229, பக்கம் 72 கீழ்க்குறிப்புப் பார்க்க.

[27]வளர்வில்வ ளர்ந்திடை மகளிர்கு விந்துத டங்குடை
வார்பூந்துகில் வார்பூம்புயல்

[28]வரைநிரை கன்றின முழுதும யங்கிய பண்கெழு
வேயேந்திய வாயான்கழல்

[29]மருதிடை சென்றுயர் சகடுத டிந்தடர் வெம்புளே
வாய்கீண்டொரு பேய்காய்ந்தவன்

[30]மதசயி லம்பொர வரவிடு நெஞ்சினில் வஞ்சக
மாமான்பகை கோமான்றிரு

---

[27] (1) ஆயர்பாடியில் வளர்ந்தது—"ஆயர்பாடியில் வளரு முகில்" "பொதுவியர் சேரிக்கே வளர்புயல்" —திருப்புகழ் 1159, 1273.

(2) மகளிரின் கூறைகளை (சேலைகளை) வாரிச்சென்றது: —திருப்புகழ் 1075, பக்கம் 174 குறிப்பு.

"மாதர் செழுஞ் சேலையேகோடு குருந்தேறும் மால் மாயன்"—திருப்புகழ் 1243, பக்கம் 576.

[28] (1) கோவர்த்தன வரையின் கீழ் பசுக்களைச் சேரச் செய்தது—திருப்புகழ் 678, பக்கம் 62, பாடல் 774, பக்கம் 302, பாடல் 145, பக்கம் 336 கீழ்க் குறிப்புக்கள்.

(2) குழல் ஊதி நிரை சேர்ப்பது: "வேயிசைகொடு நிரை பரவிடும் அபிராமன்"–திருப்புகழ் 1012.

(3) வரையும் உருகிற்று கண்ணன் குழலுக்கு – "நிரை மகள் வசவனொடு புவி மூலையுண-மலையுடன் உருகா ...... விரல்சேர் ஏழ் தொளைகள் விடுகழை விரல் முறை தடவிய இசைகள் பலபல தொனிதரு கருமுகில்"—திருப்புகழ் 60.

[29] (1) மருதிடைத் தவழ்ந்தது—வரலாறு-திருப்புகழ் 143 பக்கம் 332 கீழ்க்குறிப்பு.

(2) சகடு தடிந்தது—திருப்புகழ் 111, பக்கம் 264 கீழ்க்குறிப்பு.

(3) புள்ளை வாய் கீண்டவன் = விஷ்ணு. "புள்வாய் போழ்ந்து மாநிலங் கீண்ட பெருங்கடல் வண் ணனும்" —தேவாரம்— சம்பந்தர் — 1-42-9. திருப்புகழ் 987, பக்கம் 856-857 கீழ்க்குறிப்பு.

27. (வளவில் வளர்ந்து) ஆயர் மனையில் - வீட்டுப் புறத்தில் வளர்ந்து, (இடை மகளிர்) இடைச்சியர்கள் (குவிந்து) ஒன்றுகூடித் (தடம்) குளத்தில் (குடைவார்) குளித்துக் கொண்டிருந்தவர்களின் (பூந்துகில்) அழகிய புடவைகளை வார் — வாரி எடுத்துச் சென்ற (புயல்) மேகவண்ணனும் கண்ணன்

28. (வரை) கோவர்த்தனகிரியின் கீழ் (நிரை கன்று இனம் முழுதும்) பசுக்கள், கன்றுகள் இவைகளின் கூட்டம் அத்தனையும், (மயங்கிய) கூட்டமாய் ஒருசேரக் கூடுதற்கு, (பண்கெழு) இசை பொருந்திய (வேய்) புல்லாங்குழலை ஏந்திய) தாங்கிய (வைத்திருக்கும்) வாயான் – திருவாயை உடையவன் – அல்லது வரை–மலையும், நிரைக் கன்றினங்களும் (தனது இசையில்) மயங்கும்படி பண் பொருந்திய வேய்ங் குழலை ஏந்திய திரு வாயினன் ; (கழல்) தனது கால்களால்

29. (மருதிடை சென்று) மருத மரங்களின் இடையே தவழ்ந்துபோய் - உயர் – உயரமாயிருந்த (சகடு) சகடாசுரனைத் (தடிந்து) கொன்று, (அடர்) தன்னை நெருங்கி வந்த (வெம்) கொடிய (புளை) புள்ளை — கொக்கின் உருவுள்ள, பகாசுரனை, (வாய் கீண்டு) வாயைப் பிளந்து, ஒரு (பேய்) பூதகி என்னும் பேயைக் (காய்ந்தவன்) அழித்தவன்

30. (மத சயிலம்) மதம் கொண்டதும் மலைபோன்றது மான குவலயாபீடம் என்னும் யானையைப் (பொர) சண்டை செய்ய (வரவிடு) அனுப்பினவனும், நெஞ்சில் வஞ்சனை எண்ணம் கொண்டவனுமான (மாமான்) மாமா கம்சன் அல்லது கம்சனைப் பகை — பகைத்த, (கோமான்) பெருமானாகிய கண்ணனது (திருமாலின்) திரு - லக்ஷ்மீகரம் பொருந்திய

---

(4) பேயை அட்டது—திருப்புகழ் 115, பக்கம் 274; பாடல் 408, பக்கம் 534; பாடல் 1273, பக்கம் 632 கீழ்க்குறிப்பு.

30 கண்ணனைக்கொல்ல யானையைக் கம்சன் அனுப்பினது: திருப்புகழ் 120, பக்கம் 286; 882 பக்கம் 580.

(29–30) கண்ணனைக் கொல்ல சம்சன் முயற்சித்ததைக்— " கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகடம் உதைத்து வஞ்சகப் பேய்மகள் துஞ்ச வாய்முலை வைத்த பிரானே ! " " புள்ளினை வாய் பிளந்திட்டாய், பொருகரியின் கொம்பொசித்தாய் " " மாயச் சகடம் உதைத்து, மருது இறுத்து "—பெரியாழ்வார் 2-4-4; 2-7-5, 3-9-9.

[31]மருகன் நிரம்பிய மதிமுக மஞ்சரி குஞ்சரி
வாகாம்பரை தோய்காங்கெயன்
[32]மகபதி தன்பதி பகைகிழி யும்படி அன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே.

---

31 கோமானுக்கும் திருவுக்கும் மருகன் எனலுமாம். மதிமுக மஞ்சரியாகிய வள்ளியையும், வாகாம்பரையாகிய குஞ்சரி (தேவசேனையையும்) தோய் அணையும் காங்கேயன் (கங்கை மகன்) எனலுமாம்.

32 (1) மகபதி – யாகங்களுக்கு அதிபதி (இந்திரன்).
(2) அடல் வாளையும் (ஓங்கிய-கீர்த்தி மிக்க) வேலையும் (வாங்க) பிரயோகிக்க எனலுமாம்.
" வாளாலே வேலாலே சேதித் திடும்வீரா "
—திருப்புகழ் 1045.
" வாள்கொண் டமர்செய்த பெருமாளே "
" வேல்கொண் டமர்செய்த பெருமாளே "
—(திருப்புகழ் 1038, 1040).
(3) வேல் வாங்கவே — வாங்குதல்—ப்ரயோகித்தல்—செலுத்துதல். வாங்குதல் என்னும் சொற் ப்ரயோகத்தை " மலையாறு கூறெழ வேல் வாங்கினனே ", " வேல்வாங்கி பூங்கழல் ", " தனிவேல் வாங்கி அனுப்பிட " எனக் கந்த ரலங்காரத்திலும் (51, 77, 83), " நிசிசரர் வேர் மாண்டிட...வேல்வாங்கிய பெருமாளே " எனத் திருப்புகழிலும் (480) காண்க.
(4) அடி 17 முதல் 23-ல் அதுலை வரை அருமையான தேவி துதி. அடி 25 முதல் 30-ல் கோமான் வரை அருமையான கிருஷ்ணபகவான் துதி; இவை இரண்டும் ஓதி மகிழத் தக்கன.

---

## வேல் வாங்கு வகுப்பின் சுருக்க உரை

17 - 24. சடாபாரத்திலும், தோளிலும் பாம்பை அணிந்துள்ள பெருமானது இடது பாகத்தில் இருப்பவளும், முக்கண்ணியும், நிர்வாணியும், பாசாங்குச கரத்தியும், அழகியும், காலனை உதைத்தவளும், பெருந்திருவும், மான் கண்ணியும், ஞான முலையும், பாம்பை வாகுவலயமாகப் புனைந்துள்ளவளும், கருத்தறிந்து உதவுபவளும், ஒப்பற்றவளுமான தேவியின் புதல்வன், வள்ளி நாயகன், திருத் தணிகையில் வாழ்பவன், இந்த்ரலோகத்தை நிலை நிறுத்தினவன் —

31. (மருகன்) மருமகன்; (நிரம்பிய மதி) பூரண சந்திரன் போன்ற முகத்தைக் கொண்டுள்ள (மஞ்சரி) தளிர் போன்ற ஒளியினளாம், (குஞ்சரி) (ஐராவதத்தாற் வளர்க்கப் பட்டவள், (வாகாம்பரை) வாகு — அழகான அம்பரை — ஆடையை அணிந்தவ்ளாகிய தேவசேனையைத் (தோய்) அணையும் காங்கெயன் – கங்கையிற் பிறந்தோன் கந்தக்கடவுள்

32. (மகபதி தன்) இந்திரனுடைய (பதி) ஊராகிய பொன்னுலகுக்கு, பகை - பகைவனுயிருந்த சூரன், கிழியும்படி- அறுபட் டழியும்படி, (அன்று) முன்னுளில் (அடல்) வலிமை (வாள்) ஒளி - இவை ஓங்கிய—சிறந்து மேம்பட்டு விளங்கும் (வேல்) வேலாயுதத்தை வாங்கவே – செலுத்தவே.

---

25 – 32. பாரதப் போரை நடத்த வந்தவனும், துரியோதனுதியரை அழித்தவனும், பார்த்த சாரதியும், மகளிர் ஆடையைக் கவர்ந்தவனும், குழலூதி ஆ நிரை புரந்தவனும், மருதிடைத் தவழ்ந்து சகடு உதைத்தவனும், புள்ளின் வாய் கீண்டவனும், பேயை அட்டவனும், யானையை அனுப்பித் தன்னைக் கொல்ல நினைத்த மாமன் கஞ்சனைப் பகைத்தவனுமான, அல்லது கஞ்சன் பகைத்தவனுமான திரு மாலின் மருகன், தேவசேனை கணவன் – ஆகிய முருகவேள் சூரன் அழியும்படி வேலைச் செலுத்த —

1 – 16. அடியார்களின் வருத்தமும் தீவினையும் ஒழிந் தன, ஜெயஜெய எனப் போற்றிய எங்கள் கலி தீர்ந்தது, வஞ்ச நெஞ்சினர் வாடினர், கடல் தீ மூண்டு வற்றிற்று, அஷ்ட கஜங்களும் அலறின, கிரௌஞ்சம் பொடிபட்டது, மலைகள்பிளவுண்டு குகைகள் ஏற்பட்டன, இந்திரர் விண்ணுலக ஆட்சி பெற்றனர், மூவுலகிலும் அறநெறி பரவிற்று, பிரமன் சிறை பெற்று ஆணவம் அழிந்தான், தேவருலகு செழிப் படைந்தது, சசி (இந்திரன் மனைவி) சுமங்கலி வாழ்வு பெற்ற னள், தேவர் சிறையினின்றும் மீண்டனர், சிங்கமுகனும் அவன் சுற்றத்தினரும் மாய்ந்தனர், சூரன் வேரொடும், அழிந் தான், தேவர்பயம் ஒழிந்தது; பூதம், காகம், கழுகு, பருந்து இவைகளுக்கு விருந்துணவு கிடைத்தது.

## 15. புய வகுப்பு

[முருகவேளின் பன்னிரு திருக்கரங்களின் செயல்களை எடுத்துக் கூறுகின்றது. இந்த வகுப்புக்கு வித்து "சந்தாரம் சாத்தும் "புய இயல், கந்தா என் றேத்தும் படியென சந்தாபம் தீர்த் தென் றடியிணை தருவாயே" — எனத் திருப்புகழில் (1183) முன்னர் வேண்டின வேண்டுகோளே. வேண்டுவார் வேண்டு வதே ஈந்தருள்பவன் இறைவன். அருமையாய் அமைந்து பொருள் செறிந்துள்ள வகுப்பு இது. "மூற்றிய பனிருதோளும் ......வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு" என்னும் கட்டளைக்கு இணங்கியது. இவ் வகுப்பைப் பாராயணத்திற் கொள்வதால் "முன்பு செய்த பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும்" என்னும் மறைமொழிப்படி (கந்தரலங்காரம் 70), பழவினை தொலையும் என்பது தெளிவு. இவ் வகுப்பானது முதல் பன்னிரண்டு அடிகளில் திருமுருகாற்றுப்படையை அப்படியே தழுவிப், பின்னர் முருகன் திருப்புயத்தின் பிற சிறப்புக்களை எடுத்துக் கூறுகின்றது.]

தனதன தனன தனதன தனன தறுதன
தான தான தனதன தத்தன
தந்த தந்த தந்த தானத் தனந்தன

[1]விசைதவிர் ககன சரசிவ கரண மாகாவ்ருத
சீல சால வரமுநி சித்தரை
அஞ்சல் அஞ்சல் என்று வாழ்வித் துநின்றன
[2]மணிவட மழலை உடைமணி தபனிய நாணழ
காக நாடி வகைவகை கட்டும
ருங்கு டன்பொ ருந்து ரீதிக் கிசைந்தன

---

திருக்கரங்களின் செயல்களைத் திருமுருகாற்றுப்படையி லுள்ள முறையைத் தழுவிக்கூறுகின்றார்.

[1] இந்த அடி "விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை" என்னும் திருமுருகாற்றுப்படையைத் தழுவு கின்றது. "ககன சர ... வரமுநிசித்தர்" — இவரை 'விண் செலன் மரபின் ஐயர்' என்றார் திருமுருகாற்றுப்படையில்.

'ஒரு கை எக்காலமும் ஆகாயத்தே இயங்குதல் முறைமை யினை உடைய தெய்வ இருடிகளுக்குப் பாதுகாவலாக எடுத்தது ...... ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தல் ஆற்ரு என்று கருதித் தமது அருளினல் சுடரொடு திரிந்து

**பொழிப்புரை**

**1.** வசை (குற்றம்) பழிப்பு, (தவிர்) நீக்கின–இல்லாத, ககன சர - ஆகாய மார்க்கத்திற் சஞ்சரிக்கவல்ல, சிவகரண – சிவ த்யானம் நிறைந்த, மகாவ்ருத சில - மகா விரத சீலர் களும், சாலவரம் - நிரம்பின வரங்களைப் பெற்றுள்ளவர்களும் ஆன (முநி சித்தரை) முநிவர்களாம் சித்த புருஷர்களை 'அஞ்சல் அஞ்சல்' என்று - பயப்படாதீர்கள், பயப்படாதீர் கள் என்று, வாழ்வித்து – வாழ்வு தந்து, நின்றன - நிலைத்து நின்றன (முருகவேளின் வாகைப் புயங்கள்)

2. மணிவடம் — ரத்னசரம், (மழலை) மெல்லோசை செய்யும் (உடைமணி) அரையணி, (தபனிய நாண்) பொன் அரைநாண் இவைகளை அழகாக (நாடி) விரும்பி, இவை வகை வகையாகக் கட்டியுள்ள (மருங்குடன்) இடையில் (இடுப்பிற்) பொருந்து – சேரும் (ரீதிக்கு) முறைக்கு (இசைந்தன) ஒத்து விளங்கின (வாகைப் புயங்கள்)

---

அவ் வெம்மையைப் பொறுக்கின்ற முநிவரைப் பாதுகாக்கவே உலகத்தைத் தாங்கிக் காத்ததாயிற்று'.

'சுடரொடு திரிதரு முநிவரும்' – சிலப். 12 வேட்டுவ.
"நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக், கால் உணவாகச் சுட ரொடு கொட்கும், அவிர்சடை முநிவர்"
—(புறப்பாட்டு) திருமுரு. உரைப்பகுதி 107–108.

[2] (1) ஒருகை 'அஞ்சல் அஞ்சல்' என வாழ்விக்க, இந்த அடி முருகவேளின் பிறிதொரு கை அவரது இடுப்பின்மேல் சும்மா இருந்தது எனக் கூறும் "உக்கம் சேர்த்திய தொரு கை" எனவரும் திருமுருகாற்றுப்படையைத் தழுவுகின்றது. உக்கம் - மருங்கு – இடுப்பு. 'மனமும் (ஒரு) கையும் ஒரு தொழிலைச் செய்தலின் ஏனைக் கை தொழிலின்றி மருங்கிலே கிடந்தது'—திருமுரு காற்றுப்படை உரை.

'வாம மருங்கிற் கரமும்'–கந்தர் கலிவெண்பா 51.

(2) மணிவடம், உடைமணி, (தமனிய) பொன்நாண் இவை குழந்தை முருகனது அரையில் திகழ்வன. 'மொழிபுகழும் உடைமணியும் அரைவடமும்' —திருப்புகழ் 1277.

தபனியம்='விசேஷமுள்ள பொன்'–தக்க. பரணி 41 உரை.

[3]வருணித கிரண வருணித வெகுதரு ணுதப
சோதி யாடை வடிவுபெ றப்புனை
திண்செ ழுங்கு றங்கின் மேல்வைத் தசைந்தன

[4]வளைகடல் உலகை வலம்வரு பவுரி விநோதக
லாப கோப மயில்வத னத்துவி
ளங்கும் அங்கு சங்க டாவிச் சிறந்தன

[5]வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுகவி திர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப் புனைந்தன

---

3 (1) இந்த அடி 'நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசை இய தொரு கை' — ('செம்மை நிறம் பெற்ற ஆடையை உடைத்தாகிய துடையின் மேலே கிடந்தது') எனவரும் திருமுருகாற்றுப் படையைத் தழுவுகின்றது. அதன் உரைப்பகுதி யையும் பார்க்க. 'உய்த்த குறங்கில் ஒருகரமும்' - கந்தர்கலிவெண்பா 51. 'நலம்பெறு கலிங்கம்' என நக்கீரர் மொழிந்ததை விவரித்து 'வருணித கிரண அருணித வெகு தருணுதப சோதியாடை' என அருணகிரியார் விளக்குகின்றார்.

(2) அருணித ஆடை — சிவந்த ஆடை: "செய்யன் சிவந்த ஆடையன்" — திருமுருகாற். அடி 206. "குன்றி ஏய்க்கும் உடுக்கை" (குறுந்தொகை- கடவுள் வாழ்த்து); "உடையும் ஒலியலுஞ் செய்யை" — பரிபாடல் 19-97.

4 (1) இந்த அடி 'அங்குசம் கடாவ ஒருகை' எனவரும் திருமுருகாற்றுப்படையைத் தழுவுகின்றது.

தன்னை வழிபடுவாரிடத்து வருங்கால் மயில்மேல் வந்து முருகன் அருள் செய்தல் இயல்பு.

மயில் உலகை வலம் வந்ததை — திருப்புகழ் 184, 267 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

(2) கோபமயில் - 'கொடுங்கோபச் சூர்' எனக் கந்த ரலங்காரச் செய்யுளில் (16) கூறப்பட்டவனே மயில் ஆனபடியால், மயிலும் 'கோப மயில்' ஆயிற்று, 'உக்ர துரகத கலாப பச்சைமயில், 'சண்டமாருத மயில்' — (திருப்புகழ் 697, 407).

3. வருணித - வருணிக்கத் தக்க — விளக்கி விவரிக்கத் தக்க, (கிரணம்) ஒளி வீசும் (அருணித) செந்நிறத்ததான, வெகு – மிக்க, தருண ஆதப – இளஞ் சூரியனுடைய (சோதி) ஒளியைக் கொண்ட (ஆடை) உடையை (வடிவு பெற) அழகு பெறப் (புனை) அணிந்துள்ள, (திண்) திண்ணிய – வலிமை வாய்ந்த, (செழும்) செழுமை வாய்ந்த (குறங்கின்மேல்) தொடையின் மேல் வைக்கப்பட்டு அசைந்தன (வாகைப் புயங்கள்)

4. (வளை கடல் உலகை) கடல் வளை உலகை – கடல் சூழ்ந்த உலகை, வலம் வரு – வலமாக (பவுரி) மண்டலம் இட்டு வந்த, (விநோத) வியக்கத்தக்க, (கலாபம்) தோகை நிறைந்த, கோப – கோபம் நிறைந்த, மயிலின் (வதனத்து) முகத்திலே, விளங்கும்-ஒளிவீசும், (அங்குசம்) (அங்குசத்தை) (யானைத் தோட்டி போன்ற ஆயுதத்தை) தோட்டியைக் (கடாவி) செலுத்திச் (சிறந்தன) மேம்பட்டு விளங்கின (வாகைப் புயங்களே)

5. (வரை பக) கிரவுஞ்சம், எழுகிரி இவை பிளவுபட, (நிருதர் முடி பக) அசுரர்களின் முடிகள் சிதறுண்டு விழ, (மகரம்) மகர மீன் நிறைந்துள்ள (மகோததி) பெருங்கடல் (தீயின் வாயின் மறுக) நெருப்பிடையே கலங்க, (விதிர்த்து அயில்) விதிர்த்து - அசைத்து, (அயில்) கூர்மையும் (வென்றி) வெற்றியும் (என்றும்) (தங்கு) நிலைபெற்றுள்ள (துங்க) பரிசுத்தமான (வேலை) வேலாயுதத்தைப் (புனைந்தன) அலங்காரமாக-அழகாக - ஏந்தி நின்றன (வாகைப்புயங்களே)

---

(3) மயில் வதனத்து அங்குசம் – கடாவுதல் உண்டோ எனில்-இந்த மயில் அசாதாரணமான சூர்மயில்-யானைபோலத் திண்மை வாய்ந்தது. "கறுவு சமர் அங்குசஞ் சேர் கையும்'-கந். கலிவெ. 52.

5 (1) மகோததி தீயில் மறுக – 'கடல் தீ மூண்டுதன் வாய் மாண்டது' 'வேல் வாங்கு வகுப்பு அடி 4–ன் குறிப்பைப் பார்க்க பக்கம் 442.

(2) 'நிருதர் முடிபக'—வேல்வாங்கு வகுப்பு அடி 15.

(3) இந்த அடி 'இரு கை ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப' எனவரும் திருமுருகாற்றுப்படையில் "எஃகு வலம் திரிப்ப" - என்னும் பகுதியைத் தழுவியது. "அவுண மடவார் வயிற்றின் அழலும் மூள மறங்குலவு வேலெடுத்த குமர வேள்"—திருவிளை – கடவுள் வணக்கம்.

[6]மதியென உதய ரவியென வளைபடு தோல்வி
சால நீல மலிபரி சைப்படை
கொண்டு நின்று ழன்று சாதிக்க முந்தின

[7]மனகுண சலன மலினமில் துரியஅ தீதசு
காநு பூதி மவுனநி ரக்ஷர
மந்தி ரம்பொ ருந்தி மார்பிற் றிகழ்ந்தன

---

[6] மதி – ரவி - கேடகத்தின் வட்டவடிவையும் ஒளியையும் குறிப்பன: 'நீலமலி பரிசை – உழன்று' 'கருமையை உடைய பரிசையுடனே வேலை வலமாகச் சுழற்ற' என்பது திருமுருகாற்றுப்படை உரைப்பகுதி. இவை அசுரர் வந்து வேள்வியைக் கெடாமல் அவரை ஒட்டுதற்குச் சுழற்றப்படுவன. நீலம் – கறுப்பு. "செங்கை நீலக் குஞ்சி நீங்காதாகலின்'— மணிமேகலை 22-154. இந்த அடி 'ஐ இரு வட்டமொடு...... வலம் திரிப்ப' என்னும் திருமுருகாற்றுப்படையைத் தழுவியது. வட்டம் — கேடகம். "அதிர் கேடகஞ் சுழற்றும் அங்கைத் தலமும்" — கந்தர் கலிவெண்பா 53.

[7] (1) துரியம் – யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர்நிலை; ஆன்மா உந்திப் ப்ரதேசத்தில் பிராணனோடு லயித்து நிற்கத் தன்னையே விஷயீகரிக்கும் நான்காம் ஆன்ம நிலை: துரியாதீதம் – மூலாதாரத்தில் ஆன்மா தங்கி அவிச்சை மாத்திரையை விஷயீகரிக்கும் ஐந்தாம் ஆன்ம நிலை. துரியம் – சுத்த நிலை; துரியாதீதம் - ஆன்மாக்கள் மிகத் தூய்மையாய் நிற்கும் நிலை.

(2) மவுன நிரக்ஷர மந்திரம் — அக்ஷரங்கள் இல்லாத மந்திரம். இது மோன நிலையில் செய்யப்படும் உபதேசம். இதனை "நிர்வசனப் ப்ரசங்கம்" (வசனம் – பேச்சு இல்லாத உபதேசம்) என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 661, பக்கம் 16 கீழ்க்குறிப்பு.)

(3) இந்த அடி 'ஒருகை மார்பொடு விளங்க' என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியைத் தழுவுகின்றது. 'மவுன நிரக்ஷர மந்திரம்' என்பது திருமுருகாற்றுப்படை (நச்சினார்க்கினியர்) உரைப் பகுதி

6. (மதியென) நிலவுபோலவும், (உதயரவி என) உதய சூரியன் – காலைக் கதிர் - இளஞ்சூரியன் போலவும், (வளைபடு) வளைந்து வட்ட வடிவுடன் (தோல்) தோல் புனைந்தாய், (விசாலம்) அகன்றுள்ளதாய் (நீலமலி) கருநிறம் நிறைந்ததா யுள்ள, பரிசைப்படை-கேடயம்என்னும்ஆயுதத்தை, கொண்டு-ஏந்தி நின்று (உழன்று) அதைச் சுழற்றிச் சுழற்றிச் (சாதிக்க) வெற்றியை நிறைவேற்ற - ஜெயம்பெற (முந்தின) முற்பட்டு விளங்கின (வாகைப் புயங்களே)

7. (மன குண சலனம்) – மன சலனம், குண சலனம் – மனம் ஒரு நிலைபடாது நிலையற்றிருத்தல், குணம் ஒருநிலை பெறாது நிலையற்றிருத்தல்–(மலினம்) மாசு (அல்லது) பாவம்– (இல்) இவையில்லாததும், துரிய அதித – துரிய நிலைக்கு மேற் பட்டதும், சுகாநுபூதி இன்பமே பயக்கும் அனுபவ ஞானமு மான, மவுன — நிரக்ஷர — மந்திரம் — மௌனம் — சும்மா இருத்தல் என்னும் மந்திரம் – அக்ஷரங்களொடு கூடாததான மந்திரம் (பொருந்தி) அத்தகைய மௌன மந்திர நிலையினில் பொருந்தியதாய், மார்பில்–மார்பிலே, திகழ்ந்தன –விளங்கின (வாகைப்புயங்களே)

---

யின் விளக்கத்துடன் நன்கு பொருந்துகின்றது. அந்த உரைப்பகுதி பின்வருமாறு :—

"ஒருகை மார்பொடு விளங்க – "முநிவர்க்குத் தத்துவங் களைக் கூறி உரையிறந்த பொருளை உணர்த்துங் காலத்து ஒரு கை மார்போடே விளங்கா நிற்க ......; இறைவன் மோன முத்திரை யத்தனுய்த் தானுயே யிருந்து காட்ட ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்த மயமான ஒளி மாணுக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோன முத்திரை கூறிற்று". (ஊமைத் தசும்பு – வாயில்லாத குடம்).

ஒருகை மார்பொடு விளங்க-என்பதற்கு 'மார்பினிடத்தே மௌன மந்திரத்தைப் பேணு நிற்க' என்பது வேறுரை, 'மார்பகத்தில் வைத்த கரதலமும்'—கந். கலிவெண்பா 50;

[8]வகைவகை குழுமி மொகுமொகு மொகென அநேகசு
மூக ராக மதுபம்வி ழச்சிறு
சண்ப கஞ்செ றிந்த தாரிற் பொலிந்தன ;
[9]மிசைமிசை கறுவி வெளிமுக டளவு நிசாசர
சேனை தேடி விததிபெ றச்சில
கங்க ணங்க றங்க மீதிற் சுழன்றன
[10]வெருவுவ வெருவ எரிசொரி விழியுள பூதபி
சாசு போத மிகுதொனி பற்றிமு
ழங்கு விஞ்சு கண்டை வாசிக் கைகொண்டன

---

[8] (1) இந்த அடி திருமுருகாற்றுப்படையில் "ஒரு கை தாரொடு பொலிய" என்னும் பகுதியைத் தழுவு கின்றது. "ஒருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகு பெற" — நச்சினார்க் கினியர் உரைப்பகுதி. 'பூந்தொடையல் சேர அணிந்த திருக்கரமும்' — கந். கலிவெண்பா 50.

(2) சிறு சண்பகம் – சாதி மல்லிகைப் பூ–மாலதி எனவும் படும். "சாதி, மாலதி, சிறு சண்பகமே" — பிங்கலம். 'சிறு செங் குரலியுஞ் சிறுசெண் பகமும்'–பெருங்கதை 2-12–29. 'சிறு சண்பகம்' என்றதனால் இது சண்பகப்பூ ஆகாது. சண்ப கத்தை 'பெருந்தண் சண்பகம்' என்கின்றார் திரு முருகாற்றுப்படையிலும் (27), குறிஞ்சிப் பாட் டிலும் (75).

சண்பகம் என்பது அதிக மணம் கொண்ட மலர். 'மணங்கமழ் சண்பகம்' (சிந்தாமணி 1918), பரிபாடல் 12–77; சண்பகம் – வண்டுணா மலர் என்பர். "சண்பகமும் வேங்கையும் வண்டுணா மலர்மரம்"-பிங்கலம். *'வண்டணுகாச் சோலை யாய் (சண்பகச் சோலை) போற்றி' — இலஞ்சி முருகன் உலா 61; ஆயினும், வண்டுகள் சண்ப கத்தின் மணம் கருதி மல்லாடி அதை அணுகும் போலும்.

"பண்புனை குரல்வழி வண்டு கிண்டிச்
செண்பக மலர் பொழிற் சிவபுரமே"
'வண்டு சண்பகக் கானே தேனே போராரும்'
—சம்பந்தர் I-112-4, I-126-11;

8. (வகை வகை குழுமி) இனம் இனமாகக் கூடி, மொகு மொகு மொகென்று, அநேக - (சமூக) திரளான - (ராகம்) ராகங்களைப் பாடுகின்ற - (மதுபம்) வண்டுகள் (விழ) விரும்பி வந்து மேலேவிழச், (சிறு சண்பகம்) மாலதி, சாதி, மல்லிகை எனப்படும் பூ, செறிந்த - நெருங்கிக் கட்டப்பட்ட (தாரில்) மாலைமீது (பொலிந்தன) விளங்கின (வாகைப்புயங்களே)

9. (மிசை மிசை கறுவி) மேன்மேலும் கோபித்து, (வெளி முகடு அளவு) ஆகாய உச்சி அளவும் (நிசாசர சேனை) அசுரர் சேனைகளைத் (தேடி) இருக்கும் இடமெல்லாம் தேடிப் பிடித்து, (விததிபெற) அச்சேனைகளைப் பரந்தஇடமெல்லாம்-விரிந்து - சிதற அடிக்கச், (சில கங்கணம்) தொடி - வீரவளை - தோள் அணி, (கறங்க) ஒலிக்க (மீதில்) மேலே சுழன்றன (வாகைப் புயங்களே)

10. வெருவுவ - அஞ்சி ஒதுங்குவன எல்லாம் வெருவ - அஞ்சி ஒதுங்கும்படி (எரிசொரி) தீயைக்கக்குகின்ற (விழிஉள) கண்கள்உள்ள, பூத பிசாசு - பூதங்களும் பிசாசுகளும், (போத) ஓடிப்போகும்படி, மிகுதொனி — அதிக சப்தத்தைப்(பற்றி) கொண்டு, முழங்கு — ஒலித்தல், விஞ்சு — மிகுந்துள்ள, கண்டை - கண்டாமணியை, வாசிக்கை - ஓசைப்படுத்தலைக் கொண்டன - மேற்கொண்டன (வாகைப் புயங்களே)

---

[9] இந்த அடி "ஒரு கை கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப" என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியைத் தழுவுகின்றது. 'ஒரு கை தொடியொடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரை கொடுப்ப' (களம் - போர்க்களம்) என்பது நச்சினார்க்கினியர் உரை. தொடி - வீரவளை. 'சிறு தொடி சேர்கையும்' - கந்தர் கலிவெண்பா 52.

[10] (1) இந்த அடி 'ஒரு கை பாடின் படுமணி இரட்ட' என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியைத் தழுவுகின்றது. 'மற்றைக் கை ஓசை யினிதாகிய ஒலிக்கின்ற மணியை மாறி ஒலிக்கப் பண்ண' என்பது நச்சினார்க்கினியர் உரை.

(2) முருகன் திருக்கையில் 'மணி' உண்டு. கண்டை - பெருமணி - கண்டாமணி (திவாகரம்).

"ஞாங்கர்ப் படை, கேடகம், கண்டை, நளினம், சேவல், கதை, இடங்கம், ஓங்கும் பகழி, வாள், வரதம், ஒளிரும் அபயம், சிலை அவைதாம் தாங்குங் கரங்கள் ஈராறும்" — தணிகைப்புராணம் - அகத். 69. ஞாங்கர் - வேல்.

[தொடர்ச்சி 466-ஆம் பக்கம் பார்க்க.]

[11]விதமிகு பரத சுரவனி தையர்கண மேல்தொறும்
லீலை யாக விமலச லத்தினை
விண்டி றந்து மொண்டு வீசிப் பொலிந்தன
[12]விதரண தருவின் மலரிடை செருகிய கூதள
நீப மாலை விபுதர்கு லக்குலி
சன்ப யந்த செங்கை யானைக் கிசைந்தன
[13]விகசித தமர பரிபுர முளரி தொழாஅபி
ராம வேடர் விமலைதி னைப்புன
மங்கை கொங்கை கண்டு வேளைப் புகுந்தன

---

"வீறு கேதனம், வச்சிரம், அங்குசம், விசிகம்
மாறி லாதவேல் அபயமே வலம், இடம் வரதம்
ஏறு பங்கயம், மணி, மழுத், தண்டு, வில், இசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகம் கொண்டு வேள்அடைந்தன்"
—கந்தபுராணம் 3-10-4.

"மணி சேர்ந்த தடங் கையும்"—கந்தர்கலிவெண்பா 52.

முருகன் திருக்கரத்தின் மணி ஓசை கேட்கின் பூத பிசாசு கள் அஞ்சி ஒடிப்போகும் என்னும் அருமையான விஷயம் இந்த அடியால் தெரிகின்றது. பிசாசு சேஷ்டை, பூத சேஷ்டை உள்ள இடங்களில் இந்தத் திருவகுப்பை ஓதுதல் சிறந்ததொரு தந்த்ர மந்த்ர முறையாகும்.

11 இந்த அடி 'ஒருகை நீனிற விசும்பின் மலிதுளி பொழிய' என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியைத் தழுவுகின்றது. 'ஒருகை நீல நிறத்தை உடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்வியா நிற்க' 'இல்வாழ்க்கை நிகழ்த்துதற்கு மழையைப் பெய்வித்தது ஒரு கை'—என்பது நச்சினார்க்கினியர் உரை. "ஓவாது மாரி பொழிந்த மலர்க் கரமும்"—கந்தர் கலி வெண்பா 50. முருகன் தேவ மங்கையர் மீது நீரை எறிந்து விளையாடுவதால் உலகில் இல்வாழ்க்கை இனிதே நடைபெறும் என்க.

12 (1) இந்த அடி 'ஒருகை வானர மகளிர்க்கு வதுவை சூட்ட' என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியைத் தழுவு கின்றது. 'ஒருகை தெய்வ மகளிர்க்கு மணமாலையைச் சூட்ட'- 'ஒருகை இல்வாழ்க்கை நிகழ்த்தற் பொருட்டு மணமாலையைச் சூட்டிற்று என்றவாறு'-நச்சினார்க்கினியர் உரை. (2) 'விதரண

11. விதமிகு – பலவிதமான, பரத – பரதநாட்டியத்தில் வல்ல, சுரவனிதையர் கணம் – தேவ மங்கையர்களின் கூட்டத்தில், மேல்தொறும் – ஒவ்வொருவரின் மேலேயும், லீலையாக – விளையாட்டாக, விமல சலத்தினை — பரிசுத்தமான நீரை, (விண் திறந்து) விண்ணை – ஆகாயத்தில் திறந்து, வழிகண்டு (ஆகாச கங்கையினின்றும்) மொண்டு – கங்கை நீரை மொண்டு வீசி — வீசுவதாய்ப், பொலிந்தன — விளங்கின (வாகைப் புயங்களே)

12. விதரண தருவின் – கொடையிற் சிறந்த கற்பக விருக்ஷத்தின், மலரிடை செருகிய – மலர்கள் இடையிடையே செருகப்பட்ட கூதளமாலை, (நீபம்) கடம்புமாலை இவைகளை விபுதர் குலம் – தேவர் குலத்து, குலிசன் – குலிசாயுதனுன இந்திரன், பயந்த — பெற்ற, செவ்விய கைகளை உடைய, யானைக்கு — தேவசேனைக்குச் சூட்டுவதற்கு (இசைந்தன) உடன்பட்டன — ஒத்துக்கொண்டன (வாகைப் புயங்களே)

13. (விகசித) மலர்ந்துள்ளதும், (தமரம்) ஒலிசெய்கின்ற (பரிபுரம்) பாதகிங்கிணி (அணிந்ததுமான) (முளரி) தாமரை யன்னதிருவடிகளைத், (தொழா) தொழுது, (அந்த) (அபிராம) அழகு வாய்ந்த (வேடர் விமலை) வேடர்களின் பரிசுத்தமான பெண், தினைப்புனத்திலிருந்த (மங்கை) பெண் ஆகிய வள்ளியின் கொங்கை கண்டு – கொங்கைகளைத் தரிசித்து வணங்க (வேளைப்புகுந்தன) சமயம் அறிந்துசென்றன (தழுவுதற்கு) (வாகைப்புயங்களே)

---

தரு' கொடையிற் சிறந்த கற்பக விருக்ஷங்கள் — 'சந்தானம், தேவதாரம், கற்பகம், மந்தாரம், பாரிசாதம் எனப்படும் தெய்வ மரங்கள்' — பிங்கலம். தேவதாரத்துக்குப் பதில் அரிசந்தனம் கூறப்படும். 'உம்பர்தரு' – திருப். விநாயகர் 2. (3) நீபம் (கடம்பு), வெட்சி, குரா இவைகட்கு அடுத்தபடி முருகருக்குப் ப்ரியமான மலர் 'கூதளம்' — திருப்புகழ் 960, பக்கம் 784 கீழ்க்குறிப்பு.

13 (1) விகசித முளரி; தமர பரிபுர முளரி – வள்ளியின் திருவடிக் கமலத்தைக் குறிக்கும். 'பிடிநடைத் தாள்களும் கமலம்' — தணிகைப் புராணம் – களவு 43. (2) வேளைப் புகுந்தன – 'வேளை எனப்புக்கு நிற்கும் வித்தக', 'வேளை யெனும்படி சென்றிறைஞ்சிய பெருமாளே' – திருப்புகழ் 1186; 1179, திருப்புகழ் 166, பக்கம் 387 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

[14]விதிர்தரு சமர முறிகர கமல நகாயுத
கோழி வீற விதரண சித்ரஅ
லங்க்ரு தம்பு ஊனந்து பூரித் திலங்கின
[15]விரகுடை எனது மனதுடன் அகில்பனி நீர்புழு
கோட ளாவி ம்ருகமத கற்புர
குங்கு மங்க லந்து பூசித் துதைந்தன
[16]வினைபுரி பவனி தொழுதழு துருகிய கோதையர்
தூது போக விடுமது பக்ஷண
வண்டி னந்தி ரண்டு சூழப் படிந்தன ;
[17]இசைதனில் இனிய கயிசிகை கவுட வராளித
ஞசி தேசி பயிரவி குச்சரி
பஞ்சு ரந்தெ ரிந்து வீணைக் கிசைந்தன

---

14 (1) விதிர்தரு சமரம் முறிகர கமலம்—முருகனுடைய திருக்கரங்களாம் தாமரை : 'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை'–திருமுருகாற்றுப்படை 5. 'நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை' பதிற்–52–10. அழித்தற்கு உரியாரை அழித்த - கை. (2) நகாயுத கோழி – 'காலாயுதம்' என்றார் கந்தர் அலங்காரத்தில் (86). (3) முருகன் கரகமலத்திற் கோழிக்கொடி - 'சேவலங் கொடியான பைங்கர'-திருப். 103. 'செஞ்சேவற் செங்கையுடைய ஷண்முக தேவே' - திருப். 397. 'சேவற் கைக் கோளன்'—கந்தரலங்காரம் 91.

15 அகில், பன்னீர் முதலியவற்றுடன் மனதையும் கலத்தல் என்றார். இது (மனது) கருத்தை வைத்துக் கடவுட்பணி செய்வதே பலன்தரும் - என்பதை அறிவிக்கின்றது. அதனால் தான் – 'எனையு மனதொ டடிமை கொளவும் வரவேணும்' எனத் திருப்புகழிலும் (131), 'கடம்பையும் நெஞ்சையும் தானிணைக்கே புகட்டிப் பணியப் பணித்தருளாய்' எனக் கந்தரலங்காரத்திலும் (82) குறித்துள்ளார்.

16 முருகனது பவனியை (உலாப்போதலைக்)க் கண்டு காதல் கொண்ட மாதர்கள் - தூதாக விடுத்த வண்டுகளின் கூட் டத்தை முருகனது வாகைப்புயங்களில் (உள்ள மாலைகளில்) காணலாகும். இது வண்டு விடு தூதினைக் குறிக்கும்.

14. (விதிர்தரு) நடுங்கச் செய்கின்ற (சமரம்) போரை (போரிற் பகைவர்களை) (முறி) முறியடித்து அழிக்கவல்ல (கரகமலம்) (முருகனது) கை (கரங்களாம்) தாமரையில் - (நகாயுதம்) தனது கால் நகங்களையே ஆயுதமாகக்கொண்டு போர் செய்யவல்ல (கோழி) கோழிக்கொடி (வீற) மேம்பட்டு விளங்க, (விதரண) கொடையிற் சிறந்த (சித்ர) அழகிய (அலங்க்ருதம்) அலங்காரத்தைப் (புனைந்து) மேற்கொண்ட தாய்ப் (பூரித்து) நிறைவு காட்டி - கம்பீரத்துடன் (இலங்கின) விளங்கின (வாகைப்புயங்களே)

15. (விரகுடை) தந்திரம் உடைய எனது மனதுடனே, அகில், பன்னீர், புனுகுசட்டம் இவைகளையும் (அளாவி) கலந்து (ம்ருகமதம்) கஸ்தூரி, (கற்பூரம்) பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ — இவைதமையும் கலந்து (அக் கலவையைப்) பூசிப் படிந்தன (வாகைப்புயங்களே)

16. (வினைபுரி) (தன்னைத்தொழும் மாதர்களின் உள்ளத்திலே காமப்போரை விளைக்கும்) பவனியை—உலாப்போதலைத் (தொழுது) வணங்கி, அழுது உருகிய (கோதையர்) பெண்கள், (தூது போகவிடும்) தூது போகும்படி அனுப்பியுள்ள (மது பக்ஷண) மலர்த் தேன் உண்ணும் வண்டின் கூட்டம் (திரண்டு) ஒன்று சேர்ந்து (சூழப் படிந்தன) மொய்த்துப் படிய இருந்தன (வாகைப்புயங்களே)

17. (இசைதனில்) ராகங்களிய் (இனிய) இனிமைதரும் (கயிசிகை), கவுட வராளி - கவுட, வராளி, (தனுசி) தன்யாசி, தேசி, பயிரவி, குச்கரி, பஞ்சுரம் என்பனவற்றின் இலக்கணம் தெரிந்து அவைதமை வீணைக்குப் பொருந்த வாசிப்பன (வாகைப்புயங்களே)

---

• 17 (1) இசைதனில் இனிய கயிசிகை — 'இதத்த கயிசிகம்' என்றார் பொருகளத்தலகை வகுப்பில் (அடி 29). 'கவுட வராளி'—பூதவேதாள வகுப்பு (அடி 71)ல் 'கவுட பயிரவி' என்றார். 'கவுட' என்பதற்கு (Homely) 'பயிலுதற்குப் பொருந்திய' எனப் பொருள் கொள்ளலாம். கவுடி - என்றொரு ராகம் உளது (திருப்புகழ் 354). கயிசிகை, வராளி, தனுசி, தேசி, பயிரவி, குச்சரி, பஞ்சுரம் இவை ராக வகைகள். பயிரவி, கயிசிகை - கயிசிகம் - பூதவேதாள வகுப்பு (அடி 71), பொருகளத்தலகை வகுப்பு (அடி 29) பார்க்க. வராளி, தனுசி - பூதவேதாள வகுப்பு (அடி 70, 72) பார்க்க. தேசி - 'சாதாரி தேசி நாமக்ரியை'—திருப்புகழ் 351. குச்சரி — 'குச்சரி மெச்சும்படி பாடி'—திருப்புகழ் 459. பஞ்சுரம் — குறிஞ்சியாழ்த்திறன் வகைய் பண் இது.

[18]இறுதியில் உதய ரவிகண நிகரென ஆறிரு
காது தோயும் இலகும ணிக்கன
விம்ப குண்ட லங்கள் மேவிப் புரண்டன

[19]எதிர்படு நெடிய தருஅடு பெரிய கடாம்உமிழ்
நாக மேகம் இடிபட மற்பொரு
திண்சி லம்ப டங்க மோதிப் பிடுங்கின

[20]எழுதரும் அழகு நிறமலி திறல்இசை யாக.உ
தார தீரம் எனஉரை பெற்ற.அ
டங்க லுஞ்சி றந்து சாலத் ததும்பின

---

(2) முருகவேள் தணிகைமலையில் வீணை, புல்லாங்குழல் முதலிய வாசித்து விளையாடுவர் :

"கோடு இயம்பியும், வேய்ங்குழல் ஊதியும், குரலால்
நீடு தந்திரி இயக்கியும், ஏழிசை நிறுத்துப்
பாடியும், சிறுபல்லியத்து இன்னிசை படுத்தும்
ஆடுதும், விளையாடுதும் இவ்வரை அதன்கண்"
—கந்தபுராணம் 6-24-219.

(முருகன்) 'குரல் வீணைகள் பயிலும்' ஷ்டி 1-14-12.

சிவபிரானும் வீணை வாசிப்பர் — 'எம் இறை நல்வீணை வாசிக்குமே' (அப்பர் 4-112-7). 'விடமுண்ட கண்டன் மிக நல்ல வீணை தடவி'—சம்பந்தர் 2-85-1.

(3) இதனல் முருகர் 'இசைப்ரியர்', 'ராக விநோதர்' என்பது பெறப்படுகின்றது. (திருப். 173, கந்தர் அந். 98).

[18] உதயரவியின் செந்நிறம் உதயகாலம் தாண்டினதும் மாறும். முருகவேளின் செந்நிறம்அங்ஙனமன்றி-இறுதியிலாத உதயரவியின் ஒளியை வீசும்.

முருகவேளின் காதில் குண்டலங்கள் :—

"கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காதும் அசைந்தாட"

"குழையொடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீச"
—முத்துக்குமார. பிள்ளைத்தமிழ்-செங்கீரை 6, 7.

"முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமும் கண்ணும்
குண்டல நிரையும் செம்பொன் மவுலியும்"
—கந்தபுராணம் 4-1-235.

18. (இறுதியில்) (ஒளி) முடிவு இல்லாததாய் (ஒளிநிலை பெற்றதான) (உதயரவி கணம்) உதய சூரியர்களின் கூட்டத்தை (நிகர் என) ஒக்கும் என்று சொல்லத்தக்கனவாய் (ஆறிருகாது) பன்னிரண்டு காதுகளிலும் (தோயும்) பொருந்தி (இலகும்) விளங்கும், (மணி)ரத்னமயமான (கன) பொன்மயமான (விம்பம்) ஒளி வீசுகின்ற குண்டலங்கள் (மேவி) பொருந்திப் புரண்டன வாய் விளங்கின (வாகைப்புயங்களே)

19. (எதிர்படும்) எதிரில் உள்ள (நெடிய) நீண்ட (தரு) மரங்களை (அடு) அழிக்கும் பெரிய (கடாம்) மத நீரை (உமிழ்) வெளிவிடும் (நாகம்) (திக்) கஜங்கள் (ஏகம்) ஒன்ருெடொன்று (இடிபட) மோதுண்டு இடியுண்ண — அல்லது (மேகம்) மேகம்போல – அல்லது மேகமும் - (இடிபட) கர்ஜித்து இடி என ஒலி செய்ய, மல்பொரு - மற்போருக்குத் தக்கனவாய் விளங்கித், திண்ணிய (வலிய) சிலம்பு அடங்க மலைகள் யாவற்றையும் — அஷ்டகுல கிரிகளையும் மோதிப் பிடுங்கி எறிய வல்லன (வாகைப்புயங்களே)

20. எழுதுதற்கு இயலாததான அழகும், (நிறமும்) ஒளியும், (மலி) மிகுந்த (திறல்) பராக்ரமமும் – (இசையாக) கீர்த்திபெற்று விளங்க, (உதார தீரம் என) தயாளகுண வீரம் என்று (உரைபெற்ற) புகழ்பெற்ற (அடங்கலும்) சகவ நற்குண விசேடங்களும் (சிறந்து) மேம்பட்டு (சால) நிரம்ப, (ததும்பின) மேலோங்கி விளங்கின (வாகைப்புயங்களே)

---

" மின்குலவு நவரத்ன மகரகுண்டலமாட "
க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ்-செங்கீரை 1.

[19] (1) திசையானைகளை ஒன்ருய் இடிபட வைத்தனர் முருகவேள்: " ஆசையங் கரிகள் தம்மை அங்கைகொண் டொன்ருெடொன்று பூசல்செய்விக்கும் "–கந்தபுரா. 1-14-25 (2) மலைகளைப் பிடுங்கி விளையாடினர் முருகவேள்: " குலகிரி யனைத்தும் ஓர்பாற் கூட்டிடும் அவற்றைப் பின்னர்த் தலைதடுமாற்ற மாகத் தரையிடை நிறுவும் "–கந்தபுரா. 1-14-23.

[20] முருகன் அழகு, நிறம் முதலிய எழுத அரியன;
" எழுதரிய அறுமுகமும் " — திருப்புகழ் 1277.
" பழுதுருத பாவாணர் எழுதொணுத தோள்வீர "
— திருப்புகழ் 1051.
" அறிவும் உரமும் அறமும் நிறமும்
அழகும் உடைய பெருமாளே "—திருப். 1068.
" இலகு கமல முகமும் அழகும்
எழுத அரிய பெருமாளே "—திருப்புகழ் 1067.

[21]இருள்பொரு கிரண இரணிய வடகுல பாரிய
மேரு சாதி இனமென ஒத்துல
கங்கள் எங்க ணும்ப்ர காசித்து நின்றன

[22]இயன்முநி பரவ ஒருவிசை அருவரை யூடதி
பார கோர இவுளிமு கத்தவள்
கொங்கை கொண்ட சண்ட மார்பைப் பிளந்தன

[23]இபரத துரக நிசிசரர் கெடஒரு சூரனே
மார்பு பீறி அவனுதி ரப்புனல்
செங்க ளந்து ளங்கி ஆடிச் சிவந்தன

[24]எவையெவை கருதில் அவையவை தருகொடை யால்மணி
மேக ராசி சுரபிய வற்ருெடு
சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன;

---

[21] முருகன் புயம் – பெரிய மலைக்கு ஒப்பு:
"மால்வரைத் தோளண்ணல்"
"கடகாசல பன்னிருபுயனே"—கந்தரலங். 10, 67.
"வஜ்ரவதி பாரப் புயாசலனும்"
—வேடிச்சி-வகுப்பு அடி 21.

[22] (1) இயல் – நல்லொழுக்கம், தகுதி எனலுமாம்.
(2) நக்கீரரைப் பூதத்தினின்றும் காத்த வரலாறு:
—வேடிச்சிகாவலன் வகுப்பு அடி 22 பார்க்க.

[24] இந்த அடி முருகவேளின் தியாகாங்க சீலத்தைக் (கொடைப் பெருமையை) மிக அருமையாக எடுத்து விளக்குகின்றது. 'அடியவர் இச்சையில் எவை எவை உற்றன அவை தருவித்தருள் பெருமாளே' என்னும் திருப்புகழ்க் (727) கருத்து. பஞ்ச சாலம் – ஐந்தின் கூட்டம் (மணி, மேகம், சுரபி, சங்க நிதி, பதுமநிதி) எனப்படும் ஐந்தின் கூட்டம் என்ருவது, சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் எனப்படும் ஐவகைத் தெய்வ விருக்ஷங்கள் என்ருவது பொருள் கொள்ளலாம். இங்குக் கூறப்பட்டனவற்றுள் மணி, சுரபி, சங்கநிதி, பதுமநிதி, என்பன தம்மை அடைந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரவல்லன. திருப்புகழ்—

21. (இருள் பொரு) இருளொடு மாறுபட்டு இருளை விலக்கும் (கிரணம்) ஒளியைக்கொண்ட (இரணிய) பொன் மயமானதும், வட—வடக்கே உள்ளதும் (குல) சிறப்புள்ளதும், (பாரிய) பருத்த, (மேரு சாதி இனமென ஒத்து) மேருமலைக் கூட்டத்தைச் சார்ந்த வகையதைப் போன்று, உலகங்களில் எவ்விடத்திலும் (ப்ரகாசித்து நின்றன) ஒளிவீசி நின்றன (வாகைப்புயங்களே)

22. இயல் – இயற்றமிழாதிய முத்தமிழ் வல்ல (முநி) நக்கீரதேவர் (பரவ) திருமுருகாற்றுப்படை என்னும் அருமைப் பாவைப் பாடி வணங்க, (ஒருவிசை) முன்பொரு கால், (அருவரையூடு) பெரிய மலையிடத்தே (அதிபாரகோர) மிகப் பெரிய கோரவுருவினதான, (இவுளி) குதிரைமுகம் கொண்டதான, 'கற்கிமுகி' என்னும் பூதத்தின் (கொங்கை கொண்ட) கொங்கைகளைக் கொண்ட (சண்டம் – வலிமை வாய்ந்த மார்பைப் பிளவு செய்தன (வாகைப்புயங்களே)

23. (இபம்) யானை, (ரதம்) தேர், (துரகம்) குதிரை — ஆகிய படைகளைக்கொண்ட (நிசிசரர்) அசுரர் கூட்டம் (கெட) அழிந்து போகும்படி, (ஒரு) ஒப்பற்ற சூரனுடைய மார்பைப் (பீறி) கிழித்து, அவனுடைய (உதிரப் புனல்) குருதி நீரை (ரத்தம்) செங்களம் — செந்நிறம் பூண்ட போர்க்களத்தில் (துளங்கி யாடி) கலங்கி ஆடுவதால் சிவப்பு நிறத்தை அடைந்தன (அல்லது) ஆட (அலை வீசச்) சிவந்தன – கோபித்தன (வாகைப்புயங்களே)

24. (எவை எவை கருதில்) எவை எவை வேண்டுமென நினைத்து விரும்பினாலும், அவைஅவை தம்மைத் (தருகொடையால்) தருகின்ற கொடைச் சிறப்பால், (மணி) சிந்தாமணியையும், (மேகராசி) மேகக் கூட்டங்களையும், (சுரபி) காம தேனுவையும், (அவற்றொடு) அவையுடன் (சங்கம்) சங்கநிதியையும், கஞ்சம்–பதுமநிதியையும், (பஞ்சசாலத்தை) தெய்வ விருக்ஷங்கள் ஐந்தின் கூட்டத்தையும் வென்று மேம்பட்டு விளங்குகின்றன (வாகைப்புயங்களே)

---

விநாயகர் துதி 2 பாடல், பக்கம் 10 அடிக்குறிப்பு. மேகம் – கைம்மாறு கருதாது மழையைத்தந்து உலகைப் புரக்கின்றது. ('மாரிமாட் டென்னாற்றும் கொல்லோ உலகு'—குறள் 211).

[25]அசைவற நினையும் அவர்பவம் அகலவெ மேல்வரு
கால தூதரை யுடையும் அப்படி
அங்கும் இங்கும் எங்கும் ஓடத் துரந்தன
[26]அகிலமும் எனது செயலல திலையென யானென
வீறு கூறி அறவுமி குத்தெழும்
ஐம்பு லன்தி யங்கி வீழத் திமிர்ந்தன
[27]அனலெழு துவசம் உடுகுலம் உதிரவி யோமமும்
ஏழு பாரும் அசலமும் மிக்கபி
லங்க ளுங்கு லுங்க ஆலித் ததிர்ந்தன
[28]அடல்நெடு நிருதர் தளமது மடிய வலாரிதன்
வானை ஆள அரசுகொ டுத்தப
யம்பு குந்த அண்ட ரூரைப் புரந்தன

---

[25] 'வருகால தூதர்கெட முடுகுவதும் ......... மணநாறு சீறடியே' என்றார் சீர்பாதவகுப்பில்.

[26] (1) 'அகிலமும் எனது செயல்' என்னும் பஞ்சேந்திரியங்களின் வீறு: 'சுவை ஒளியூ றோசை நாற்றத் துறுப்பினது குறிப்பாகும் ஐவீர் நுங்கள், மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க்கு ஐயோ வையகமே போதாதே'.

"மூள்வாய தொழிற்பஞ் சேந்திரிய வஞ்சமுகரிகாள்
முழுதும் இவ் வுலகை ஓடி நாள்வாயும்
நும்முடைய மம்மர் ஆணை நடாத்துகின்றீர்"
—அப்பர் 6-27-4, 9.

(2) ஐவர் சேட்டையை இறைவன் ஒழித்து ஆள்வர்.

"மெய்வரை யான்மகள் பாகன்தன்னை விரும்ப,
உடல் வாழும்
ஐவரை ஆசறுத் தாளும் என்பர்
அதுவும் சரதமே" — சம்பந்தர் 3-105-2.

[27] (1) அனலெழு துவசம் - இங்கு அக்கினி பகவானும் கோழிக்கொடி என்பதற்கில்லை - ஏனெனில் உடுக்குலம் உதிரச் செய்து, உடுக்களைக் கொறித்த கோழி (சூர)பத்மனும் கோழி. இதனைப் "போழ்படக் கிடந்த ஒருபங் கெழுந்து ... வாரணக் கொடும்பகையாகி ...... வான்மிடை உடுத்திரள் பொரியிற் கொறிப்ப ...... கைம்மருங் கமைத்தோய்" எனவரும் கல்லாடத்திற் காண்க.

25. (அசைவற நினையும்) சலனமின்றித் தியானிக்கும் - நிலைத்த மனத்துடன் தியானிக்கும் (அவர்) அடியார்களின் (பவம்) பிறப்பு (அகலவே) ஒழிய, (மேல்வரு) அவர்களைப் பிடிக்க அவர்மேல் வரும் (கால தூதரை) யம தூதர்களை - (உடையும் அப்படி) சிதறும் வண்ணம் (அவர்களை) அங்கும் இங்கும், எங்கும் - பல திசைகளிலும் ஓடும்படி (துரந்தன) முயன்று அகற்றி வெற்றி கொண்டன (அல்லது ஓடச்செய்யும் பொறுப்பை ஏற்றன) (வாகைப்புயங்களே)

26. (அகிலமும்) எல்லாச் செயல்களும் (எனது செயல் அலது) என்னுடைய முயற்சியால் நிறைவேறின அல்லாமல் (இலை என) வேறொருவர் உதவியால் அல்ல என்று பெருமிதம் பேசி ('யான்' என வீறு-நான் என்னும் அக்ங்கார வீறுப்பு — இறுமாப்பு (கூறி) பேசி, (அறவும் மிகுத்து எழும்) முற்றும் மேலோங்கி எழுகின்ற – துள்ளுகின்ற (ஐம்புலன்) பஞ்சேந்திரியங்கள் (தியங்கி வீழ) சோர்ந்து ஒடுங்கும்படி (திமிர்ந்தன) மேல் விழுந்து அடர்ப்பன (வாகைப்புயங்களே)

27. (அனல் எழு துவசம்) உஷ்ண வேகத்துடன் (சினத்துடன்) தோன்றின (துவசம்!) (கொடியாம்) கோழி (உடு குலம் உதிர) நக்ஷத்திர கூட்டங்கள் சிதறுண்டு விழ, (வியோமமும்) ஆகாயமும், ஏழு உலகங்களும், (அசலமும்) மலைகளும் - எண்கிரிகளும், (மிக்க) சிறந்த (பிலங்களும்) பாதாள லோகங்களும் (குலுங்க) அசைவுகொள்ள (ஆலித்து) ஒலிப்பதால் (அதிர்ந்தன) ஆரவாரம்பெற்றன (வாகைப் புயங்களே)

28. (அடல்) வலிமை வாய்ந்த (நெடு நிருதர்) பெரிய அசுரர் (தளமது) சேனையை (மடிய) இறந்தொழிய வைத்து, வலாரிதன்-இந்திரன் தன்னுடைய,வானை—வானுலகை, ஆள— ஆளும்படி (அரசு கொடுத்து) அவனுக்கு அரசாட்சியைக் கொடுத்து, (அபயம் புகுந்த) தம்மிடம் அடைக்கலம் புகுந்த (அண்டர்) தேவர்களின் (ஊரை) பொன்னுலகைப் (புரந்தன) காப்பாற்றின (வாகைப் புயங்களே)

---

28 இந்த அடியின் கருத்தை - வஞ்சக ராக்ஷதர் குலமாள வாசவன் சிறை மீட்டவன், ஊரும் அடங்கலும் மீட்டவன் வானுலகும் குடியேற்றிய பெருமாளே' எனவரும் திருப் புகழிற் காண்க (1003).

[29]அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாடல் அளிமுரல் செச்சைய
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன
[30]அரியதொர் தமிழ்கொ டுரிமையொ டடிதொழு தேகவி
மாலே யாக அடிமைதொ டுத்திடு
புன்சொல் ஒன்று நிந்தி யாமற் புனை ந்தன
[31]அழகிய குமரன் உமைதிரு மதலை பகீரதி
மாதர் வாழும் அறுவர் ப்ரியப்படு
கந்தன் எந்தை யிந்த்ர நீலச் சிலம்பினன்
[32]அநுபவன் அநகன் அனனியன் அமலன் அமோகன் அ
நேகன் ஏகன் அபினவன் நித்தியன்
அஞ்ச லென்ப்ர சண்ட வாகைப் புயங்களே.

---

[29] முருகவேளுக்குப் ப்ரீதியான மலர்கள் - கடம்பு, வெட்சி, குரா மூன்றும் கூறப்பட்டுள. பாடல் அளி — பாடுகின்ற வண்டு எனலுமாம்.

[30] " அடிமைசொலுஞ் சொற் றமிழ்ப் பனீரொடு பரிமள மிஞ்சக் கடப்ப மாலேயு மணிவோனே "—திருப்புகழ் 186.

' வழியடிமை ... பாடும் ... நிகில கவிமாலே சூடுவதும் ' சீர்பாதவகுப்பு. கந்தர் அலங். 15, பக்கம் 17 குறிப்புரை. 'அடியேன் உரைத்த புன்சொல்அதுமீது நித்தமுந்தண்அருளே தழைத் துகந்து வரவேணும்' எனத் திருப்புகழ் (203) பாடின காலத்தில் முருகவேளே வேண்டிக்கொண்டஅருணகிரியார்-இந்தப் புயவகுப்புப் பாடினகாலத்தில் தாம்பாடியபாக்களை முருகவேள் அன்பாக ஏற்றுக்கொண்டார் என்பதை நன்குஉணர்ந்து ' அடிமை தொடுத்திடு புன்சொல்லே நிந்தியாமற் புனைந்தன பெருமானது புயங்கள்' எனத் திடமுடன் உரைக்கின்ருர்.

[31] தணிகை மலேயில் இந்திரன் ஒரு சுனே கண்டு, அதில் விண்ணுலகத்துக் கற்பகப் பொழிலினின்றும் கொண்டுவந்த நீலோற்பல மலர்க்கொடி ஒன்றை நட்டு, அந் நீலோற்பல மலர்களே முருகனே அருச்சிக்க உபயோகித்த காரணத்தால் தணிகைமலே " இந்த்ர நீலச் சிலம்பு " எனவும், அத்தீர்த்தம் ' இந்திர தீர்த்தம் ' என்றும் பெயர்பெற்றன.

" தேவ தேவன் அருச்சனேப் பணிசெய்ய என்னி விசும்பிடை ...... கற்பகப் பொழிலூடு பூத்த ...... உற்பலக்கொடி கொணர்கென்றனன் " ..." இந்திர தீர்த்தமென்ன இருஞ்சுனே நாமம் எய்திற்று " — தணிகைப்புராணம் - இந்திரன் அருள் பெறு படலம் 14-29.

29. (அடவியில்) காட்டில் வளர்கின்ற (விளவு) விளா இலை - வில்வ இலை (கருவிளம், கூவிளம்), (தளவலர்) முல்லை மலர், துளசி, குராமலர், மகிழம்பூ, (கோடல்) வெண்காந்தள், (பாடல்) பாடலம் - பாதிரிப்பூ, (அளி முரல்) வண்டுகள் ஒலிக்கின்ற (செச்சை அலங்கல்) வெட்சிமாலை, செங்கடம்பு ஆகிய மலர்மாலைகளை (நேசித்து) விரும்பி அணிந்தன — (வாகைப்புயங்களே)

30. (அரியதொர்) அருமையான - ஒப்பற்ற (தமிழ் கொடு) தமிழால், (உரிமையொடு) வழியடிமை என்னும் உரிமையுடன், (அடி தொழுதே) திருவடியைத் தியானித்து வணங்கியே, (கவி மாலையாக்) பாடல்மாலையாக, (அடிமை) அடிமையாகிய நான் (தொடுத்திடு) புனைந்து சூட்டுகின்ற, (புன்சொல் ஒன்று) அற்பச் சொல் ஒன்றை (அல்லது புன் சொல் - அற்பச் சொல்லை, ஒன்றும் - கொஞ்சமேனும், (நிந்தியாமல்) இகழாமல், புனைந்தன-அணிந்துகொண்டன(வாகைப் புயங்களே)

31. அழகு நிறைந்த குமாரக் கடவுள், உமாதேவியின் செல்வப் புதல்வன், (பகீரதி) கங்கையும், மாதர் வாழும் அறுவர் - பெண்களாக (அல்லது அழகுடன்) விளங்கி வாழும் கார்த்திகை மாதர் அறுவரும் பிரியப்படுகின்ற கந்தசுவாமி, என் தந்தை, இந்திர நீலமலர் மலரும் (சிலம்பினன்) மலையாம் திருத்தணிகையில் வீற்றிருப்பவன் —

32. (அநுபவன்) இன்ப துன்பங்களை நுகர்விப்பவன், (அநகன்) பாபம் அற்றவன், (அனனியன்) வேறொருவர்க்கு உரிமையாகாதவன், அமலன்-மலம் நீங்கினவன், (அமோகன்) மோகம் இல்லாதவன், (அநேகன்) பல ஆனவன், (ஏகன்) ஒருவன், அபினவன் — சிதைவு இல்லாதவன், (அல்லது புதியன்) (நித்தியன்) சாசுவதமாய் இருப்பவன் - அழிவிலாதவன் — (ஆகிய முருகவேள்) அஞ்சல் — அஞ்சுதல் (பயப்படுதல்) வேண்டாம் (என்) என்று (காட்டும்) ப்ரசண்ட (வலிமை வாய்ந்த), (வாகை) வெற்றி தங்கும் (புயங்களே) பன்னிரு திருக்கரங்களே.

---

32 (1) 'அநேகன் - ஏகன்' — ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க' — திருவாசகம் - சிவபுராணம் 5.

(2) அஞ்சல் (என்கின்ற) புயம்:

" வெருள்கால் உளத்தோர்க்கு அஞ்சலெனா
விரவும் பயம்சாடு அபயமெனத்
தெருள் கால் ஒருகை வலத்தமைத்து"
— தணிகைப்புராணம் - அகத்திய. 67.

### புய வகுப்பின் சுருக்க உரை

31 - 32. அழகன், குமரன், உமை மைந்தன், கங்கைக்கும், கார்த்திகை மாதர்க்கும் உகந்தவன் ஆகிய திருத்தணிகை நாயகனது வெற்றிப் புயங்களில்

1. ஒன்று விரதசீல முநிவரை வாழ்வித்து நின்றது; 2. ஒன்று இடையிலே பொருந்தி விளங்குகின்றது; 3. ஒன்று தொடையின் மேல் அமைந்துளது; 4. ஒன்று அங்குசத்தைச் செலுத்துகின்றது; 5. ஒன்று வேலாயுதத்தை ஏந்துகின்றது; 6. ஒன்று கேடயத்தைப் (பரிசைப்படையைச்) சுழற்றுகின்றது; 7. ஒன்று மௌன மந்த்ர நிலையில் அவர் மார்பிலே திகழ்கின்றது; 8. ஒன்று மாலைமீது பொருந்தி ஒளிர்கின்றது; 9. ஒன்று தோளணி ஒலிக்க மேலே சுழலுகின்றது; 10. ஒன்று கண்டாமணியை ஒலிக்கின்றது; 11. ஒன்று தேவமங்கையர் மீது ஆகாய கங்கை நீரை வீசிப் பொலிகின்றது; 12. ஒன்று தேவசேனைக்கு மாலை சூட்டுகின்றது. இங்ஙனம் பன்னிரு கையும் தொழில் செய்ய, அத்திருப் புயங்கள் பின்னும் கீழ்க் காட்டிய செயல்களைச் செய்து திகழ்ந்தன.

13. வள்ளியொடு லீலைகள் விளையாடின; 14. சேவற் கொடியை ஏந்தி விளங்கின; 15. அகில், பன்னீருடன் எனது மனதையும் ஏன்றுகொண்டன; 16. மாதர்கள் தூதாகவிட்ட வண்டுகள் தோள் மாலையிற் சூழப் பொலிந்தன; 17. இனிய இசைகளை வீணையில் எழுப்பி வாசித்தன; 18. ரத்ன குண்டலங்கள் தம்மீது புரள விளங்கின; 19. திக்கஜங்களை ஒன்றோடொன்று மோதுண்ண இடித்தன, அஷ்டகிரிகளையும் மோதிப் பிடுங்கி எறிந்தன; 20. அழகு, ஒளி, வீரம், கொடை, தீரம் இவை யாவும் சிறந்து விளங்கின; 21. மேருமலை போலத் திண்ணியதாய் ஒளிவிட்டு நின்றன; 22. நக்கீரருக்கு உதவ, குதிரைமுகப் பூதத்தின் மார்பைப் பிளந்தன; 23. சூரனது மார்பைக் கிழித்து அவனது ரத்தத்தில் துளைந்து சிவந்தன; 24. கொடைத்திறத்தில் சிந்தாமணி, மேகம், காமதேனு, சங்கநிதி, பதுமநிதி, கற்பகத் தருக்கள் ஆகிய இவைதமை வென்றன; 25. அடியார் பிறப்பு ஒழிய, அவர்பால் வரும் யம தூதர்களை வெருட்டி ஓட்டின; 26. 'எல்லாம் எனது செயல்' என்று 'நான்' என எழும் முனைப்பை அடக்கின; 27. கோழியால் நக்ஷத்திரங்கள் உதிர, ஏழுலகங்களும், மலைகளும், கீழுலகங்களும் குலுங்கும் ஆரவாரத்தைப்பெற்றன; 28. அசுரர்சேனைகளை மடிவித்து, இந்திரனுக்கு ஆட்சி தந்து, பொன்னுலகைக் காத்தன; 29. விளா, முல்லை, துளசி, குரா, மகிழ், காந்தள், பாதிரி, வெட்சி, கடம்பு இவைகளை விரும்பி அணிந்தன; 30. அடியேனது கவிமாலைகளை அன்புடன் ஏற்று அணிந்தன.

# 16. சித்து வகுப்பு

[பல சித்திகள் பெறும் வழியைக் கூறி, முருகன் திருப்புகழைக் கற்றவரே சித்தருக்குள் மேலான சித்தரென்றது. அருணகிரியார் காலத்தில் — "ரசவாதத்தில்" (லோகங்களைப் பொன்னுக்க விரும்புதலில்) மக்களுக்குப் பேராசை மிகுந்திருந்தது போலும். பயனற்ற அவ்வாசையை அற ஒழிக்கவும், உண்மைப் பெருநிலையைத் தருதற்கு உற்ற வழி முருகன் திருப்புகழைக் கற்பதே என உலகர்க்குக் கற்பிக்கவும், எழுந்த உபதேச வகுப்பு இது. இந்த சித்து வகுப்பை ராஜாங்க நூல் நிலையத்திலிருந்த மூன்று பிரதிகளுடன் ஒத்திட்டுப் பார்த்துப் 'புலவர் அரசு' திருவாளர் ஜ. ராஜு முதலியார் அவர்கள் பல பாடபேதங்களை அன்புடன் தெரிவித்தனர்; அப் பெரியார்க்கு என் பேரன்பும், நன்றியும். அவர் குறித்தனுப்பின பாடபேதங்களை ஆய்ந்து பார்த்து, இதுவரையில் அச்சிட்ட பாடத்தில் பிழை எனத் தெளிவாகத் தெரிந்தவை திருத்தப்பட்டன; பிழையிலாத வேறு பாடங்கள் இங்குக் குறிக்கப்பட்டுள; விளங்காத பாடங்கள் விடப்பட்டன. பொருட் பண்பு நூல் (Materia Medica) குணபாடம் முதலிய பலநூல்களின்று மூலிகை, பச்சிலை விவரங் களும், இவ் வகுப்புக்கு திரு அருணை மகான் ஈசுவர சுவாமிகள் அருளிய கருத்துரையும்-அநுபந்தங்களாகச் சேர்க்கப்பட்டுள.]

1. தனன தந்த தான தனன தந்த தான
   தனன தந்த தான தனன தந்த தான
2. தனன தனதான தானன தந்த
   தனன தனதான தானன தந்த
3. தான தானன தனதன தந்தன
   தான தானன தனதன தந்தன
4. தனன தானன தனதன தானன
   தனன தானன தனதன தானன
5. தனதன தந்தன தந்தன தானன
   தனதன தந்தன தந்தன தானன
6. தானன தனதன தானந் தந்தன
   தானன தனதன தானந் தந்தன
7. தனதன தனதன தனன தத்தன
   தனதன தனதன தனன தத்தன
8. தத்த தந்த தான தத்தாதன
   தத்த தந்த தான தத்தாதன
9. தனன தந்தான தனதன தந்தன
   தனன தந்தான தனதன தந்தன
10. தானதன தான தானந்தன
    தானதன தான தானந்தன
11. தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
    தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
12. தான தாத்தன தத்தன தத்தன
    தான தாத்தன தத்தன தத்தன

சித்து வகைகள் (1 - 36)

[1] அடல்பு னைந்த வேலு மயிலும் என்றும் வாழி
அரிய தொன்று கூற அருகி ருந்து கேண்மின்
[2] அளவில் ○பலகாய மோடாடி யண்டர்
அறிய விளையாட லாமூலி ஒன்றில்
[3] ஆசை வேறில்லை அறுமுக வன்திரு
ஆணை மேருவை அடிதலை கண்டனம்
[4] அகில லோகமும் அடைவடை வேமுதல்
அருளி னேம்அது சிவனறி யாதல
[5] அமையும் எனும்படி xநின்ற மநோரதம்
அவைமுழு துந்தரு வம்பத ருதுகொள்

---

[1] அரிய உபதேச மந்திரம் இவ்வகுப்பில் இருப்பதால் 'நமச்சிவாய வாழ்க' என்னும் திருமந்திரத்துடன் திருவாசகம் தொடங்குவதுபோல, இவ்வகுப்பு "வேலுமயிலும் வாழி" என்னும் திருமந்திரத்துடன் தொடக்கம்பெறுகின்றது. வேலு மயிலும் வாழி - என வாழ்த்த, வேலின் துணையால் வினை நீங்கவும் - வினை நீங்குவதால் பிறப்பு ஒழியவும், மயிலின் துணையால் ஆணவம் அழுங்கவும், இவ்வகுப்புப் பாராயணம் உதவி புரியும். இக் கருத்துப்பற்றியே மந்திர நூலாகிய கந்த ரநுபூதி - 'ஆடும்பரிவேல்' எனத் தொடங்குகின்றது.

ரசவாதி இப்படி இப்படிக் கூறுவான் என்பதை அருண கிரியார் எடுத்துக் கூறி 'நான் சொல்லுவதைக் கேளுங்கள்' என எச்சரிக்கை பண்ணுகின்றார்.

[2] இது முதலாகச் சித்தன் தனது ஆற்றலை எடுத்துக் கூறுகின்றான்:

(1) 'வெந்தழலின் இரதம் வைத் தைந்து
லோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
விண்ணவரை ஏவல் கொளலாம்'
—தாயுமானவர் (தேசோமயானந்தம்).
'ஓட்டினை எடுத் தாயிரத்தெட்டு மாற்றுக
ஒளிவிடும் பொன்னுக்குவீர்' - ஷை சித்தர்கணம்.

(2) மூலி = மூலிகை. மருந்தாக உபயோகப்படும் பூடு: பச்சிலைக் கொடிவகை; ஔஷதி.

○ 'பலகாய மூடாடி', 'பரகாய மூடாடி' - வேறுபாடங்கள்.

பொழிப்புரை

**1.** (அடல்) வலிமை (புனைந்த) வாய்ந்த 'வேலும்மயிலும்' எஞ்ஞான்றும் வாழ்வதாக; (அரியதொன்று) அருமையான விஷயம் ஒன்று(கூற) நான் சொல்லப்போகிறேன்; அதை (அருகிருந்து) என் பக்கத்தே இருந்து (கேண்மின்) கேட்பீர்களாக.

2. மூலி ஒன்றில் – ஒரு பச்சிலை மூலிகை ஒன்றின் உதவி கொண்டே, (அளவில்) கணக்கற்ற (பலகாயமோடு) பலவித தேகத்துடன், (ஆடி) உலகில் திரிந்து (அண்டர்) தேவர்கள் அறிய விளையாடலாம்—

3. (ஆசை வேறிலை) எமக்கு வேறு ஆசை கிடையாது; (அறுமுகவன் திரு ஆணை) ஆறுமுகக் கடவுள்பால் சத்தியம் செய்து உரைக்கின்றேன்; (யாம் கூறுவதெல்லாம் உண்மை என்றபடி) மேருவை அடிதலை கண்டனம் – (பொன்மயமான) மேருமலையை (அடிதலை கண்டனம்) அடியைத் தலையாக – தலையை அடியாகத் தலைகீழாகப் புரட்டிப் பார்த்திருக்கின்றோம்;

4. [அகில லோகமும்) எல்லா உலகங்களையும் (அடைவடைவே) முறை முறையாக – வரிசை முறையாக (முதல் அருளினோம்) முதலிலே சிருஷ்டித்தோம் - (உண்டாக்கினோம்); அச்செய்கை சிவபிரான் அறியாத தொன்றன்று; அவர் அறிந்ததே – சிவபிரான் அறிய சகல லோகங்களையும் முறைப்படி படைத்தோம் - என்றபடி

5. (அமையும் எனும்படி) போதும் போதும் என்று சொல்லும்படி, நின்ற— நிலைத்துள்ள திருப்தியை அடைய, (மனோரதம் அவைமுழுதும்) மனத்திலே நீ ஆசைப்பட்டவை எல்லாவற்றையும், (தருவம்) கொடுப்போம்; பதறுதுகொள் – நீ நிதானமாய்ப் (ஆத்திரப்படாமல்) பெற்றுக்கொள்.

---

[3] முருகன்மேல் ஆணையிட்டுச் சித்தன் தமது வல்லமைகளை எடுத்துக் கூறுகின்றான். அவ் வல்லமைகள் பின்வருமாறு:— 1. மேருமலையையே தலைகீழாகப் புரட்டிப் பார்த்திருக்கிறேன்– "ஒரேழு கடலையும் பருகவல்லீர், இந்த்ரன் உலகும் ஐராவதமுமே கைக்கெளிய பந்தா எடுத்து விளையாடுவீர்" (தாயுமா. சித்தர்கணம் 1) என்பதுபோல.

[4] பஞ்ச கிருத்தியத்தில் 'படைத்தல் தொழிலையும்' செய்ய வல்லோம் என்றபடி.

[5] இறைவனைப்போல 'வேண்டிய போகமது' தருவோம் என்றபடி.

x 'நின்றன் மனோரதம்' என்றும் வேறுபாடம்.

[6]ஆதியு முடிவுமி லாநந் தந்தரும்
ஆறிரு கரதல நாதன் தந்தவை

[பச்சிலை மூலிகைகள், மருந்து வகைகள் 7 – 36]

[7]அவுஷதம் உளசில கிலுகி லுப்பைகள்
அரசிலை நறுவிலி கரிய கக்கரி
[8]அத்தி செம்பி ராகை முட்காவளை
oதுத்தி சங்கம் ஓரி தழ்த்தாமரை
[9]அவுரி கற்ருழை யொடுவைகு றிஞ்சிலி
சிவிறி கத்தாரி பொடுதலை சண்பகம்
[10]ஆரைகொடு வேலி வேல்காஞ்சிரம்
வீரையிரு வேலி பேரீந்திலை

---

[6] ஆறுமுகப் பிரானிடத்திலிருந்தே நேரே பெற்றேன் இந்தச் சித்தி வகைகளையும், மருந்து வகைகளையும் என்றபடி.

[8] o 'துத்தி சங்க மூலி கற்ருமரை'–என்றும் வேறுபாடம். (கற்ருமரை – மலையில் உற்பத்தியாகும் தாமரை யிலைபோன்ற ஓரிலை. இது சுக்கிலத்தையும் பலத்தையும் விருத்தியாக்கும். குட்டத்தை நீக்கும். காரீயத்தைச் செம்பாக்கும். "காரீயத்தை — நற்ரும்பரமாக்கும் நங்காய் அடுக்கலுறை, கற்ருமரை யதனைக் காண்".

[9] குறிஞ்சிலி – காதில் அணிதற்குரிய பூவகை.
"காதிடைக் குற்றமில் குறிஞ்சிலிக் கொத்தும்"
–திருவாலவாய்ப்புராணம் 54-20, அநுபந்தமும் பார்க்க.

[10] (1) (ஆரை)–ஒரு காலில் நாலிலை கொண்ட கீரைவகை. (கம்பன் பொருமையால் ஔவையை அடீ என்று சொல்ல விரும்பி, 'ஒரு காலடீ, நாலிலைப் பந்தலடீ' என்று சிலேடையாகச் சொல்லிப் பொருள் கேட்டபோது ஔவையார் —
"எட்டேகால் லட்சணமே ஏமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே–முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
'ஆரை' யடா சொன்னு யடா"—(ஆரைக்கீரையை நீ சொன்னுயடா)–யாரை 'அடீ' எனச் சொன்னுயடா - என்னும் இருபொருள் விடையைக் கூறினர் என்ப. அநுபந்தம் பார்க்க.

(2) கொடுவேலி – சித்திர மூலம் என்னும் கொடிவகை. 'கொடுவேரி' எனவும்படும். 'குறிஞ்சி, வெட்சி செங்கோடு வேரி' – குறிஞ்சிப் பாட்டு 64-65. (அநுபந்தமும் பார்க்க.)

(3) வீரை - மரவகை. முந்திரிகை, வட்டத் திருப்பி, மயிர் மாணிக்கம், வாழை, நெல்லி இவையும் வீரை எனப்

6. ஆதியம் முடிவும் - ஆதி அந்தம் (இல்) இல்லாத - முடிவற்ற (ஆனந்தம் தரு) பேரானந்தத்தைத் தருகின்ற (ஆறிரு கரதலநாதன்) பன்னிருகைப் பிரானாகிய முருகவேள் (தந்தவை) எமக்கு உபதேசித்துக் கொடுத்தவையான

7. (அவுஷதம் உளசில) *மருந்து வகைகள் சில உண்டு; (கூறுகின்றேன்); கிலுகிலுப்பைகள்-ஒரு செடிவகை (1), (அரசிலை) அரசமரத்தின் இலைகள் (2), (நறுவிலி) சிறு நறுவிலி, பெரு நறுவிலி, நாய் நறுவிலி என வகைப்படும் சிறு மரவகை, (3), (கரிய) பசுமை நிறைந்த பசிய, (கக்கரி)முள்வெள்ளரி (4),

8. (அத்தி) அத்தி மரத்து இலை வேர் (5), செம்பிராகை - செம்பை (6), ராகி என்பன (7), முள்காவெளை என்னும் பூடு (8), (துத்தி) துத்திக்கீரையின் இலை (9), (சங்கம்) இசங்கு எனப்படும் சங்கஞ்செடி (10), ஓர் இதழ்த் தாமரை) எனப்படும் சிறு பூண்டு (11),

9. (அவுரி) நீலிச்செடி (12), கற்ருழை - ஒரு பூடு (13), (ஒடுவை) ஒடு எனப்படும் நிலப்பாலை (14), (குறிஞ்சிலி) காதில் அணிதற்குரிய பூ வகை (15), (சிவிறி) விசிறி என்னும் செடிவகை (16), (கத்தரி) கத்தரிச்செடி (17), (பொட்டுதலை)- ஒரு பூண்டு வகை (18), சண்பக மரம் (19)

10. ஆரை - கீரை வகை (20), (கொடுவேலி) கருங்கொடிவேலி (21), (வேல்) வேலமரம் (22), காஞ்சிரம்-எட்டி மரம் (23), (வீரை) ஒரு மரவகை (24), (இருவேலி) வெட்டி வேர் (25), (பேரீந்து) பேரீச்ச மரத்தின் இலை (26)

---

படும். வட்டத்திருப்பி என்பது ஆடுதின்னப் பாளை, அரிவாள் மணைப் பூண்டு எனப் பொருள்படும். 'பொரிந்த காரை, கரிந்த சூரை, புகைந்த வீரை' — கலிங்கத்துப்பரணி 3-2. (அநுபந்தமும் பார்க்க.)

(4) இருவேலி - இருவேரி - வெட்டிவேர். 'நறையும் நானமும் நாறிரு வேரியும்', -பெருங்கதை 2-18-47; 3-17-137 'கோழிரு வேரியும் பேரில வங்கமும்' (அநுபந்தம் பார்க்க).

(5) பேரீந்தின் இலை - வேற்படையின் முனையை ஒத்த கூர்மையினை உடைய நுனிகொண்ட நெறித்த இலையினை உடையது ஈந்து - பேரீச்சின் இலையால் குடில்கள் வேயப்படும். "கருவி நுதிகொள் நெறியிலை ஈந்தின் முற்றிய பெரு நறவு" —கல்லாடம் 24-10. 'வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தகர் ஈத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை' — பெரும்பா. 87. (அநுபந்தமும் பார்க்க). * அடி 7 முதல் - அடி 36 வரையில் உள்ள பச்சிலை, மருந்து வகைகளின் விவரத்தைக் குறிப்புரையிலும், இந்த வகுப்பின் அநுபந்தத்திலும் காண்க.

[11]அமுக்குர வெருக்கிலை முருக்கிதழ் செருப்படை
அகத்தி தமரத்தை மதமத்தமொடு பித்திகை
[12]ஆலம் ஆத்தி கடுக்கை கொடிக்கழல்
கோலி தேட்கடை நெய்க்கொடை வக்கணை -
[13]அகில்ப ரம்பை காரை துடரி தும்பை சூரை
அலரி சம்பு நாவல் மருது சிந்து வாரம்
[14]அறுகு தழுதாழை oமாபாலை புன்கு
புரசு பழுபாகல் பூலா அழிஞ்சில்
[15]ஆயி லாவிரை இறலி இரும்பிலி
ஆடி ஆவணி xபுடமிட என்றழை
[16]அவனி பாடல மனல மகீருகம்
இவைச மூலமும் எழுபது சாலடை

---

[11] **பித்திகை** - சாதிமல்லிகை (பிங்கலம்) ; சிறு செண்பகம் (பிங்கலம்).

[12] **கோலி**-இலந்தை, திப்பிலி, புன்கு, சிற்றழிஞ்சில் என்னும் மரவகை - எனவும் பொருள்படும் ; அநுபந்தமும் பார்க்க.

[13] *(1)***காரை** – சுடுகாட்டுச்செடிவகை. "காரைகள் கூகை முல்லை ... சூரைகள் பம்மிவிம்மு சுடுகாடு"—சம்பந். 2-84-1. "சூரை காரை படர்ந்தெங்குஞ் சுட்ட சுடலை"—காரைக்காலம்மை – மூத்த திருப்பதிகம் 2–1. "முட்காற் காரை முது பழன்" – புறநானூறு 258. (அநுபந்தமும் பார்க்க.)

(2) துடரி – முட்செடி வகை. 'தீம்புளிக் களாவொடு துடரி'—புறநானூறு 177. இது 'தொடரி' எனவும்படும். 'கடுவுந் தான்றியும் கொடுமுள் தொடரியும்' — பெருங்கதை 1–52–38. புலிதடுக்கு, புலி தொடக்கி எனவும்படும்.

(3) சூரை - இதுவும் காரைபோலச் சுடுகாட்டு மரம் – குறிப்பு 13 (1) பார்க்க. தூதுளையும் சூரை எனப்படும். (அநுபந்தமும் பார்க்க).

(4) சிந்துவாரம் - கருநொச்சி. 'சிந்துவாரமும் இதழி யும் ...... அணிதரு செஞ்சடாதரர்' — திருப்புகழ் 289, பக்கம் 220 கீழ்க்குறிப்பு. (அநுபந்தமும் பார்க்க).

[14] o 'ஆடாலை புன்கு' என்றும் பாடம்.

[15] இரும்பிலி – இரும்பைப் பொன் ஆக்குவதற்கு, ரசவா தத்தில் உபயோகப்படுத்தப்படும் செடிவகை.

*11.* (அமுக்குரவு) அமுக்கிஞங்கிழங்கு, எருக்கஞ்செடியின் இலை (*29*), (முருக்கிதழ்) பலாமரத்தின் இதழ்-இலை (*30*) (செருப்படை) படர் கொடிவகை (*31*), (அகத்தி) அகத்திக் கீரைச்செடி (*32*), தமரத்தை-ஒருமரவகை (*33*), (மதமத்தம்) பொன்னூமத்தை (*34*) - இவைகளுடன் (பித்திகை) சாதி மல்லிகை (அல்லது சிறு சண்பகம்) (*35*)

*12.* (ஆலம்) ஆலமரம் (*36*), (ஆத்தி) ஆத்திப்பூச்செடி (*37*), (கடுக்கை) கொன்றை (*38*), (கொடிக்கழல்) கழற்சிக் காய் கொடி (*39*), (கோலி) இலந்தை (*40*), (தேட்கடை) ஒரு மருந்துப் பூடுவகை (*41*); (நெய்க்கொடை) – நெய்க் கொட்டை – ஒரு மரவகை – பூவந்தி மரம் (புன்கு எனலுமாம்) (*42*), (வக்கணை) மலைப்புன்கு (*43*)

*13.* (அகில்) ஒருவகை வாசனை மரம், (*44*), (பரம்பை) வன்னிமரம் (*45*), (காரை) காட்டுச் செடிவகை (*46*), (துடரி செடிவகை (*47*), தும்பை (*48*), (சூரை) செடிவகை (*49*), அலரிச்செடி (*50*), சம்பு – சம்பு நாவல் (*51*), நாவல் – கரு நாவல் (*52*), (மருது) மருத மரவகை (*53*), (சிந்து வாரம்) நொச்சி (*54*)

*14.* அறுகு (*53*), (தழுதாழை) வாதமடக்கி (*56*), (மா) மாமரம் (*57*), (பாலை) மரவகை (*58*), புன்கமரம்) (*59*), புரசு - பூவரசுமரம் (*60*), (பழுபாகல்) கொடிவகை (*61*), (பூலா) செடிவகை (*62*), (அழிஞ்சில்) மரவகை (*63*)

*15.* (ஆயில்) மதகரி வேம்பு (*64*), (ஆவிரை) செடி வகை (*65*), (இறலி) இத்திமரம்–கல்லால் (*66*), (இரும்பிலி) செடிவகை, (*67*), (ஆகிய இவைகளின் உறுப்புக்களை) ஆடி, ஆவணி மாதத்தில் (புடம் இட) (நெருப்பில்) சுடவைத்துப் பக்குவப் படுத்துவதற்கு என்று (அழை) வரவழைத்து (அவையுடன்)

*16.* அவனி - நிலத்துப்(பாடலம்) பாதிரி (*68*), அனலம்- செங்கொடிவேலி என்னும் கொடிவகை (*69*), (மகீருகம்) பூமியில் விளைவனவாய (கிழங்குகள்) (*70*), (இவை) இந்த எழுபது பொருள்களின் (சமூலமும்) வேர் முதல் இலை யீருகவுள்ள எல்லாவற்றையும், எழுபது சால்களுக்குள் (மிடாக்களுள்ளே) பானைகளுள் (அடை) அடைத்து வைப்பாயாக (அல்லது – இவ்வாறு எழுபது மிடாக்கள் நிறைய – (அடை) பச்சிலை வகைகள்; பின்னும்)

---

15 x "புடமிடவின் றழை" என்றும் பாடம்.

[17]அதிம துரந்தக ரஞ்சிறு பாலடை
பதிமுக வெந்தய மின்கய மோதகம்
[18]ஆறிடை அபினரி தாரங் கந்தகம்
நூறிடை திரிபலை யோரொன் றெண்பலம்
[19]அதிவிட யமுமொழி கிருமி சத்ருவும்
அனல்முறு கலுமற முறுகு துத்தமும்
[20]அற்பம் ஒன்று கீரை வித்தேழிடை
யத்தில் ஒன்று பாதி தக்கோலமும்
[21]அடவி கச்சோல நிமிளை நறும்பிசின்
அரிதம் வெட்பாலை அரிசி கருங்கணி
[22]ஆமலகம் ஏலம் நான்மூன் றிடை
சேமசிலை கூட zலோகாஞ்சனம்

---

17 "அதிமுக வெந்தய மிங்கச (மிங்குச) மோதகம்" என்றும் பாடம்.

20 "அற்ப மன்று கீரை" என்றும் பாடம்.

தக்கோலம் — வால்மிளகு, தாம்பூலம், சிறுநாவல், திப்பலி "தக்கோலம் தின்று தலைநிறையப் பூச்சூடி" — நாலடி 43. அநுபந்தமும் பார்க்க.

22 (1) சேமசிலை — சிலா சத்து என்பதாய் இருக்கலாம். சூரிய வெப்பத்தால் மலைகளில் தாதுசாரம் கரைந்து மெழுக்குப் போல ஆகும்; அது சிலாசத்து. சுத்தி செய்த சிலாசத்தால் பாண்டு, சுரம், மார்வலி, காமாலை முதலியன போம். (அனுபோக வைத்தியம் 7-ஆம் பாகம், பக்கம் 40, 41).

(2) அஞ்சனம் - (மை) - பூதாஞ்சனம் (பேய்க்கோளைக் கண்டுபிடிக்க உதவும் மை), பாதாளாஞ்சனம் (மறைபொருளைக் காண உதவுவது), சோராஞ்சனம் (களவுபோன பொருளைக் காட்டும் மந்திர மை வகை) என மூவகையது (Magic Black Pigment). அஞ்சன வித்தை-காணாதுபோன பொருள், களவுபோன பொருள், ஒளித்து வைக்கப்பட்ட பொருள் — ஆகிய மறைபொருள்களை மையிட்டுக் காணும் வித்தை. பின்னும், அனுபோக வைத்திய நூல் — ஏழாம் பாகத்தில் (பக்கம் 35) ஐந்து வகை அஞ்சனங்கள் கூறப்பட்டுள.

(i) **புஷ்பாஞ்சனம்** — வெண்ணிறத்தது. சகல நேத்திர வியாதிகளைப் போக்கும்.

(ii) **நீலாஞ்சனம்** — கரு நிறத்தது. நேத்திர தோஷம், க்ஷயம் இவைகளைப் போக்கும்.

17. அதிமதுரம்–பூடுவகை, (தகரம்) வாசனை மரவகை, (சிறு பாலடை) ஒரு பூடுவகை, (பதிமுக வெந்தயம் - பதிய வைக்கப்பட்டு – விதைக்கப்பட்டு, முகம் - முகத்தைக் காட்டு கின்ற — முளைக்கின்ற (வெந்தயம்) செடிவகை, இன் கய (அல்லது மின் கய)–இனிய அல்லது ஒளிவிடும் பெருமை உள்ள (மோதகம்) மோதகவல்லி என்னும் மரத்துப்பட்டை

18. ஆறிடை அபின் - ஆறு எடை அபின் – ஆறு எடை அளவுக்கு அபின், அரிதாரம் – தாளக பாஷாணம், கந்தகம் - கந்தகம் என்னும் பொருள், நூறு எடை அளவுக்குத் திரிபலை, (ஓர் ஒன்று எண் பலம்) ஒரு ஒரு எட்டு பலம் அளவு

19. அதிவிடயம்-அதிவிடயம் என்னும் மருந்து, மொழி சொல்லப்படும், கிருமி சத்ரு – கிருமி நாசம் எனப்படும் மர மருந்து, (அனல்) நெருப்பில் (முறுகலும்) காய்ந்து கரிந்ததும், (அற) மிகவும், முறுகு – முதிர்ந்ததுமான (துத்தமும்) துத்தம் என்னும் பாஷாணமும்

20. அற்பம் - சிறுமை, (ஒன்று) பொருந்தியதான கீரை யில் (வித்தேழிடை) ஏழு எடை அளவு விதையும், (அத்தில்) அதனில் ஒரு பாதி (அளவு) தக்கோலமும்

21. (அடவி) காடுகளிற் கிடைக்கும் (கச்சோலமும்) கிச்சிலிக் கிழங்கும், (நிமிளை) செவ் வெண்மையான கல்வகை யும், நறும்பிசின் என்னும் வாசனைப் பிசினும், (அரிதம்) பசுமையான — பொன்னிறமுள்ள வெட்பாலை மரத்தின் உறுப்புக்களும், அரிசியும், (கருங்கணி) பருத்தி வகையும்,

22. (ஆமலகம்) நெல்லி, ஏலம் இவை நான்மூன்று எடை பன்னிரண்டு எடை அளவு, (சேமம்) பத்திரமான இடத்தில் வைப்பதற்குச் (சிலை) மருந்து செய்யும் கலுவமும் (மருந்து அரைக்கும் குழி அம்மி), அல்லது (சேமம்) நன்மை தரும் (சிலை) சிலாசத்து என்னும் மருந்து - (கூட லோகாஞ் சனம்) அதனுடன், லோகம் - உலகத்தில் உள்ள மறைபொருள் களைக் காட்டும் (அஞ்சனம்) மையும்

---

(iii) **ரசாஞ்சனம்** — பச்சை நிறத்தது, விஷ தோஷங்களை யும், நேத்திர தோஷங்களையும் போக்கும்.

(iv) **ஸ்ரோதோஞ்சனம்** — கபில நிறத்தது. சகல ரோகங் களையும் போக்கும்.

(v) **சௌவீராஞ்சனம்** — சிவப்பு நிறத்தது. கண் நமையை யும், விஷ தோஷங்களையும் நீக்கும்.

z " மோகாஞ்சனம் " என்றும் பாடம்.

23 o அரப்பொடி கடிப்பகை விடத்திர ணமப்பிர
கசத்தைசத குப்பிவிதை கொத்தமலி திப்பிலி
24 ஆலி கோட்டம் எலிப்பகை x சச்சிலே
நீலி காய்ச்சு நிலப்பனே கற்பிசின்;
25 z மடல்சி வந்த தாழை மணவ சம்பு நீலம்
வருகு ரும்பை கோடல் துருசு சம்பி ராணி
26 மரிசி வசவாசி காகீச மஞ்சள்
மகிழ விதைமேதை மாமேதை குன்றி
27 வாரி வாய்நுரை சயில சலம்புரி
பூரி வா துமை சணவுபெ ருங்குமிழ்
28 *வடுவில் சீரக பலமயி ரோசனே
கடுகு ரோகணி சிவதைம ஞ்சிலே
29 வகைவகை கொண்டொரு ‖ மண்டல மோரொடு
குகையினில் எண்பது செம்பினில் ஊறவை

---

23 அரப்பொடி – வலிப்பு நோய்க்குப் பயன்படும் 'சோதிரிஷ தைலத்துக்கு' வேண்டிய மருந்துகளுள் ஒன்று. அநுபோக வைத்தியம் 4 – ஆம் பாகம், பக்கம் 30, 31. கடிப்பகை இருவகை — அரவாய்க் கடிப்பகை; ஐயவிக் கடிப்பகை; கடிப்பகை – வேப்பிலே, வெண் சிறுகடுகு; கடிப்பகை - பேய்க்குப் பகையாக உள்ளதென்று பொருள். அரவாய்க் கடிப்பகை அரம் போன்ற வாயினே உடைய வேப்பிலே; ஐயவிக் கடிப்பகை – வெண்சிறு கடுகு; இதுவும் பேய்க்குப் பகை. பேய் முதலியவைகள் அணுகாதிருப்பதற்கு இருவகைக் கடிப்பகையும் கூறப்பட்டன. பேய் தீண்டி வருத்தா வண்ணம் குழந்தைகளின் மயிர் முடியில் நெய் யணிந்து வெண்சிறு கடுகை அப்புதல் மரபு. வெண்சிறு கடுகுக்குக் கடிப்பகை என்னும் பெயர் வந்ததற்குக் காரணம் இதுவே. கடி=பேய். (மணிமேகலே 7-73; 3-134 உரைப்பகுதி).

o அரப்பொடு என்றும் பாடம்.

24 x பச்சிலே என்றும் பாடம்.

25 z மடலொசிந்த என்றும் பாடம்.

28 *வடமகீருக பல, வடமகிரிகை பல-என்றும்பாடங்கள்.

29 மண்டல மோரொரு என்றும் பாடம்.

23. (அரப்பொடி) இரும்புத் தூள், (கடிப்பகை) வேப்பிலே, (விடத்திரணம்) விஷப் புல், அப் ப்ரகசத்தை – அந்த விஷத்தை, (பிரகசம்) கொல்லுதலே உடையவை, சதகுப்பி என்னும் (மருந்துப் பூண்டுவகையின்) விதை, கொத்தமல்லி, திப்பிலி

24. (ஆலி) கள், (கோட்டம்) ஒரு வேர், (எலிப்பகை) சச்சிலே) எலிப்பகை இலே – சச்சு இலே – எலிப்பகை இலே–பூனே வணங்கி என்னும் குப்பைமேனி இலே, (சச்சு இலே) நீர்ச் சுண்டியின் இலே, (நீலி) அவுரி, (காய்ச்சு) காய்சசுக் கட்டி (காசுக்கட்டி), நிலப்பனே (செடி வகை), (கற்பிசின்) பிசின் பட்டை (?) (பட்டை – ஓர் அங்குல கனம்).

25. மடல்கள் சிவந்த தாழை, மணமுள்ள வசம்பு, (நீலம்) கருங்குவளே, வரு - எழுகின்ற, (குரும்பை) தெங்கு - பனேகளின் இளங்காய், (கோடல்) வெண்காந்தள், (துருசு) மயில் துத்தம் (மருந்து வகை), (சம்பிராணி) தூபவர்க்கப் பிசின்

26. (மரிசி) செடிவகை, (வசவாசி) வசம்பு, (அடி 25-ல் வசம்பு வந்துள்ளபடியால் இது வசுவாசி – சாதிபத்திரி, காகீச மஞ்சள் – காகி – விளா – (ச) அதனுடன் மஞ்சள், மகிழம் பூவின் விதை, (மேதை) பொற்றலேக்கை யாந்தகரை என்னும் மருந்துப் பூடுவகை (மஞ்சள் கரிசிலாங்காணி), (இது) மா – சிறந்த, (மேதை) அறிவைத் (தருவது) பேரறிவைத்தருவது; (குன்றி) குன்றிமணி (குண்டுமணி)

27. (வாரிவாய் நுரை) கடல்நுரை, (சயிலம்) மலேயில் (சுனேகளில் உள்ள) (சலம்புரி) சங்கு, (பூரி) ஆனே புளியமரம், வாதுமை, (சணவு) சணுவு–கையாந்தகரை–கரிசலாங்கண்ணி, (பெருங்குமிழ்) மரவகை:

28. வடுவில் - குற்றமில்லாத, சீரகம், (பலம்) சாதிக் காய், (மயிரோசனே)என்பது கோரோசனே, (கடுகுரோகணி), (சிவிதை) சிவதைப் பூண்டு, (மனேசிலே) பாஷாண மருந்து,

29. மேற்சொன்னவையை வகைவகையாக எடுத்துக் கொண்டு ஒரு மண்டலம் (40, 41, அல்லது 45, 48 நாள் கொண்ட கால அளவு) மோரொடு – மோருடன் சேர்த்துக், (குகையினில்)உலோகங்களே உருக்கும் பாத்திரத்தில், எண்பது (செம்பினில்) பாத்திரங்களில் ஊற வைப்பாயாக;

[30]வாதநல் வழிகள் அநேகம் பண்டையில்
வாகடம் அலகுரு நாதன் தந்தது
[31]வழிபடும் அரியர பிரம ருட்பட
மொழிகிற வகையிது oசிறிது பெற்றிலர்
[32]மற்றும் இந்த்ர சாலம் உச்சாடனம்
xமுற்று மிங்ங னேத ரத்தாழ்விலே
[33]மதலை யர்க்கீது மொழிவது பண்பல
zகதவி னிற்ருழை யிடுபயம் ஒன்றிலை
[34]*வாலுமுழவை யோரி காராம்பசு
வாலின்மயிர் கீரி தேவாங்கழை

---

31 o "சிறிது பெற்றனம்" என்றும் பாடம்.

32 x "முற்றும் அன்பனே" என்றும் பாடம்.

இந்திரசாலம் — அறுபத்து நான்கு கலைஞானங்களுள் ஒன்று; மாயவித்தை. (திருப்புகழ் 1127. பக்கம் 280 குறிப்பு).
"இந்திர சாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரத்திற் சாராது சார்வதுபோல்"–கந்தர் கலிவெ. 8.
"இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்"—திருவாசகம் 2-43.

உச்சாடனம் - பேயோட்டுகை. அஷ்ட கருமத்துள் இருப்பிடத்தை விட்டு ஒட்டும் தொழில். அஷ்ட கருமமாவன;— 1. வசியம், 2. மோகனம், 3. தம்பனம், 4. உச்சாடனம், 5. ஆகர்ஷணம், 6. வித்துவேஷணம், 7. பேதனம், 8. மாரணம்

**வசியம்** — மக்களை, சுர, பூத, கிரகம் ஆவேசம், முதலிய வற்றை வசம்செய்யும் வித்தை. 64 கலைகளில் ஒன்று.

**மோகனம்** — பிறரை மயங்கச் செய்யும் வித்தை; 64 கலைகளுள் ஒன்று.

**தம்பனம்** - இயக்கத்தைத் தடுத்துத் தம்பிக்கச் செய்கை. (வாயுத் தம்பனம் முதலிய). ஒருவன் இயக்கத்தை மந்திரத்தால் தடுத்துக் கட்டுகை – 64 கலைகளுள் ஒன்று.

**உச்சாடனம்** – (பேய் முதலியவற்றை) இருப்பிடத்தை விட்டு ஓட்டுதல். 64 கலைகளுள் ஒன்று.

**ஆகர்ஷனம்** – இழுக்கை, அழைத்தல். 64 கலைகளுள் ஒன்று.

**வித்வேஷணம்** – சினேகமான இடத்து விரோதம் செய்விப்பதாகிய செயல். 64 கலைகளுள் ஒன்று.

**பேதனம்** - மக்களுள் வேற்றுமை விளைப்பதான வித்தை.

**மாரணம்**-ஒருவனை மந்திரத்தால் இறக்கச்செய்யும் வித்தை.

z "கதவினைத் தாழை" என்றும் பாடம்.

30. வாதம்-ரசவாதம்செய்யும், நல்வழிகள்—நல்ல வகைகள் (அநேகம்) பல உண்டு ; பண்டையில்-முன்பு, (வாகடம்) வைத்திய நூல் (அல) மாத்திரம் அன்று (குருநாதன்) குருமூர்த்தியாம் முருகவேள் (தந்தது) எனக்கு உபதேசித்தது;

31. வழிபடுகின்ற (அரி) திருமால், (அரன்) சிவன், (பிரமர்) பிரமா(உட்பட) முதலானவர்கள் (கூட), மொழிகிற வகை — எனக்கு முருகவேளால் உபதேசிக்கப்பட்டு யான் எடுத்துக் கூறும் இந்த (ரசவாத தந்திரவகையை) சிறிது - கொஞ்சம்கூட (பெற்றிலர்) உபதேசிக்கப்பெற்றிலர்;

32. மற்றும் - இது மாத்திரம் அன்று; இந்த்ரசாலம் மாய வித்தைகள் (அற்புதங்காட்டும்) வித்தை, (உச்சாடனம்) பேயோட்டுகை-பேய் ஓட்டுதல் முதலிய, (முற்றும்) எல்லாவித அஷ்ட கருமங்களையும் (இங்ஙனே) இவ்விடத்திலே தரத், (தாழ்வு இலை) ஒரு தடை இல்லை - ஒரு குற்றமும் இல்லை;

33. மதலையர்க்கு — குழந்தைகளுக்கு, ஈது — இவையெல்லாம் (மொழிவது) எடுத்துச் சொல்வது, பண்பு அல - முறையன்று; கதவினில் - கதவுக்குத், [தாழை] தாழ்ப்பாளை [இடு] போடும்படியான, பயம் ஒன்றும் இல்லை — அச்சம் ரகசியம் ஒன்றும் இல்லை (அறைக்குள் ரகசியமாகச் செய்ய வேண்டியதில்லை (பகிரங்கமாகச் செய்யலாம் – என்றபடி)

34. வாலுழுவை — உழுவை வால் — புலியின் வால், (அல்லது வாலுளுவை என்னும் கொடியுடன் (ஓரி) முது நரி, (காராம்பசு) நாக்கும், முலைக் காம்பும் கருநிறமாக உள்ள தெய்வப் பசு – மறு நிறம் கலவாத கறுத்த பசு – அத்தகைய பசுவின் வாலின் மயிர், கீரிப்பிள்ளை, தேவாங்கு (அழை) இவைகளை வரவழைப்பாயாக ;

---

34 இங்குக் கூறியதுபோல – முடக்கு, சூலை, பேய், பில்லி சூனியம் இவைகட்கு 'விஷ முஷ்டித்தைலம்' தரவேண்டும் என 'அனுபோக வைத்தியம் 4 பாகம், பக்கம் 28 என்னும் நூல் கூறுகின்றது. அந்தத் தைலத்துக்கு வேண்டிய மருந்துவகைகளில் 'வன்னி, புன்கு, சண்பகப்பூ, கருங்காலி, ஆத்தி, அவுரி, வெள்ளறுகு முதலான 38 பூண்டு வகைகளுடன், கழுகு, ஆமை, தேவாங்கு, பச்சை தவளை, மனிதர் மண்டை ஓடு, கழுதை மண்டை ஓடு, பன்றிலத்தி முதலான 16 பொருள்களும் கூறப்பட்டுக் குழித்தயிலம் இறக்குதல் வேண்டும் – எனவும் விவரங்கள் கூறப்பட்டுள. வலிப்புகளை நீக்கும் சோதிரிஷ தைலத்துக்கு வவ்வால், கள்ளிக்காக்காய், ஒணான், முயல், உடும்பு, நல்ல பாம்பின் கண்டம் முதலிய சேருமாம்.

*" வாலுளுவையோடு " என்றும் பாடம்

[35]மரித்தவர் சனித்தகுழி உப்புறு சலத்தினை
வடித்தினி தெடுத்தொரு *குடத்தினில் நிறை த்துவை
[36]oமாறில் தோத்திர வித்தை பலித்திடின்
மாடை சேர்க்க வருத்தம் உனக்கிலை -

ரசவாதி கேட்பன (37 - 72)

[37]xமணம மின்று நாளை எனமொ ழிந்து கேளு
மனைகள் எங்கும் ஓடி இனிவி ரைந்து தேடு
[38]வளையல் குழைபீலி காலாழி தண்டை
மணிவ யிரவீடு மேலீடு செம்பொன்
[39]வாளி பாடக மணிபிறை சங்கிலி
பாளை சூடக மயிலம் இலம்பகம்
[40]மவுலி நூபுர மயில்திரு வாசிகை
சவடி தோள்வளை முகவளை மேல்வளை

---

35 * " குடத்தினில் அடைத்துவை " என்றும் பாடம்.

36 o " மாறில் கோத்திரம் " என்றும் பாடம்.

37 x " மணமு மின்று நாளை " என்றும் பாடம்.

38 மணிவயிரம் — " மத்தகமணியொடு வயிரம் "—சிலப்பதிகாரம் 6-91.

39 மணி - ' மாணிக்கத் திரு ' என்னும் நகை ; பிறை - சந்திரப்பிறை – மகளிர் தலையில் அணியும் ' சந்திரப்பிரபை ' என்னும் ஆபரணம்.

" புதையிருள் துரக்கும் வெய்யில்மணித் திருவும்
தண்ணம் பிறையும் தலைபெற நிறுத்துக "
—கல்லாடம் 14.

சங்கிலி — சங்கிலிச்சரம். " கரத்திடுவளைச் சங்கிலிச்சரம் ஒலித்தும் ", ' சங்கிலிக் கொத்தும் '—திருப். 262, 602.

40 மவுலி - கிரீடம். " குண்டல நிரையும் செம்பொன் மவுலியும் ", " மணி படுத்திய மவுலி " — கந்தபுராணம் 4-4-235, 270 ; சவடி — திருப்புகழ் 280 ; தோள்வளை - ' தூமணித் தோள்வளை தோளுக் கணிந்து '—சிலப். 6–90.

35. (மரித்தவர்) இறந்தவர்கள் (சனித்த) புதைத்துள்ள குழி – அடக்கப் பள்ளத்தில் இடப்பட்டுள்ள உப்பு ஊறிய ஜலத்தை (வடித்து இனிது எடுத்து) இனிது – நன்ருக வடித் தெடுத்து, ஒரு குடத்தினில் நிறையும்படி வைப்பாயாக.

36. மாறில் - வேறுபாடில்லாத வகையில் – சரியாகத் தோத்திரம் - தோத்திரங்களைக் கூறுவதால், வித்தை-(ரசவாத வித்தை) (பலித்திடின்) பயன்பட்டுப் பலன் கொடுக்குமாயின் [மாடை] பொன், [சேர்க்க] சேர்க்கும் வகையில், வருத்தம் – வருத்தமே (உனக்கொன்றும்) இலை – இருக்காது,

37. மணம இன்று நாளை – ஒரு கலியாணம் இன்றே செய்யவேண்டி யிருக்கின்றது, நாளையே செய்யவேண்டி யிருக் கின்றது [என மொழிந்து] என்று கூறிக் [கேளு] [நீ] கேட்பா யாக! (அதாவது வெகு அவசரமாகத் திருமணம் ஒன்று நிறைவேறவேண்டி யிருக்கின்றது. அதற்கு நிரம்பப் பொன் வேண்டியிருக்கின்றது — என நீ கேட்பாயாக. கேட்டால் உனக்கு வேண்டிய பொன் அவ்வளவும் உடனே கிடைக்கும் வழியைக் கூறுகின்றேன் - அதற்காக [நீ என்ன செய்யவேண்டு மென்ருல்] உன் [மனைகள்] உனது வீடுகளில் எல்லா இடத்தும் ஓடிப்போய், இனி வேகமாய்த் தேடுவாயாக (தேடிக்கொண்டு வர வேண்டுவன கூறுவேன், கேள்) —

38. வளையல்கள், குழைகள், பீலிகள், காலாழிகள், தண்டைகள், ரத்னம், வயிரம், வீடு – வீட்டில் (மேலீடு) நிரம்பி யுள்ள செம்பொன்கள்,

39. [வாளி] ஒருவகைக் காதணி, [பாடகம்] மகளிர் காலணி, மணி – 'மாணிக்கத்திரு' என்னும் பணி [ஆபரணம்] (பிறை) மகளிர் தலையில் அணியும் நகை, [சங்கிலி] வயிரச் சங்கிலி என்னும் அணி, சங்கிலிச் சரங்கள், [பாளை] பாலப் பருவத்துக்கு முன் பருவக் குழந்தைகள் அணியும் [சூடகம்] கை வளையல்கள், [மயிலம்] மயிலிறகு போன்ற அழகுள்ள [இலம்பகம்] தலைக்கோலம் என்னும் அணி

40. [மவுலி] மணிமுடி [க்ரீடம்], [நூபுரம்] சிலம்பு, மயில் திருவாசிகை – மயில் தோகை போன்ற விரிந்துள்ள திருவாசி என்னும் ஆபரணம், [சவடி] பொற் சரடுகளின் கொத்தாக அமைந்த கழுத்தணிவகை, (தோள்வளை) தோளில் அணியும் வளைவகை (முகவளைக்) முக வட்டத்தின் [வளை] தாழ்ந்து விளங்கும்

[41]மரகத குண்டலம் வெண்டய மேகலை
அரசிலை கம்பி குறுங்குணி சாலகம்
[42]வாரணி யுடைமணி ஆரங் கிங்கிணி
வாகுவ லயநெளி பீடங் கண்டிகை
[43]மணிமக ரிகைவளை திகிரி பட்டிகை
பணிகளில் அழகிய பணிகள் கொக்கிகள்
[44]வட்ட அம்பொ னேலை முத்தாவளி
சுட்டி சந்து காறை கைக் காறைகள்

---

[41] வெண்டையம் – 'தண்டையணி வெண்டையம்'-திருப். 16. மேகலை – பவளக் கோவை எட்டினுற் செய்தது.

" எண்கோவை மேகலை, காஞ்சி எழுகோவை
பண்கொள் கலாபம் பதினறு - கண்கொள்
பருமம் பதினெட்டு, முப்பத் திரண்டு
விரிசிகை என்றுணரற் பாற்று "
—சிலப்பதிகாரம் 4–30 உரை.

குறுங்குணி – இது 'குறுங்கணியோ'? குறுங்கணி–முடியிற் சூட்டும் மாலை — கூனல் திங்கள் குறுங்கண்ணி — சம்பந்தர் 2-116–1.

சாலகம் — இது ஜாலகம்; யாகபத்தினிகள் அணியும் அணி விசேடம் — " அறநூல் புகழப்பட்ட சாலகத்தைச் சூடி "—புறநானூறு 166 உரை.

o 'கறங்கணி சாலகம்', 'களங்கணி சாலகம்' என்றும் பாடம்.

[42] உடைமணி - குழந்தைகளின் அரையணி - கந்தர் அலங். 13 குறிப்புரை. வாகுவலயம் – ' மேகலை காஞ்சி வாகுவலயம் எல்லாம் கவரும் இயல்பிற்றுய்' — பரிபாடல் 7–47.

நெளி – ' அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய் '— குற்ருலக் குறவஞ்சி 66–2.

[43] மகரிகை – குறங்கு செறியணி. (குறங்கு=தொடை), மகரம் எனவும்படும். ' மாதின் மகரிகை வயங்கு பொற்பூண் சூழுறு கவானேபோலும் " — கந்தபுராணம் 2–1–56.

" மாழைகொள் மணிமகரம் கௌவி வீற்றிருந்தனவே "
— சீவகசிந்தாமணி 174.

41. மரகத குண்டலம் - பச்சை ரத்னக் குண்டலங்கள், [வெண்டையம்] வீரர் காலணி, மேகலை - இடையில் அணியும் அணி, [அரசிலை] அரைமுடி [சிறுபெண் பிள்ளைகள் அரையில் தரிக்கும் ஒரு ஆபரணம், [கம்பி] காதணி வகை, [குறுங்குணி] குறுங்கண்ணி? — குறுங்கணி — முடியில் அணியும் மாலை; [சாலகம்] நெற்றியில் அணியும் அணிவிசேடம்

42. [வார்] கச்சு [ரவிக்கை] மேலணியப்பட்ட [அணி] ஆபரணங்கள், உடைமணி — குழந்தைகளின் அரையணி; ஆரம் - முத்து மாலை அல்லது ரத்னமணி மாலை; (கிங்கிணி) சதங்கை; [வாகுவலயம்] தோளணி; [நெளி] வளைந்தவிரலணி வகை; பீடம் - ரத்னபீடம், செம்பொற் பீடம் முதலிய, கண்டிகை - கழுத்தணி (Necklace)

43. [மணி] ரத்னத்தாலாய [மகரிகை] சுறுமீன் வடிவுள குறங்கு செறி அணி, [வளை] சங்கு வளை - கை வளை: [திகிரி] வட்ட வடிவுள்ள [அணி], [பட்டிகை] ஒட்டியாணம்- [பணிகளில் அழகிய பணிகள்] ஆபரணங்களுள் அழகுள்ள ஆபரணங்கள், (கொக்கிகள்) ஹாரம் - சங்கிலி பிணைக்கும் கொக்கிகள்

44. வட்டவடிவானதும் (அம்பொன்) அழகியபொன்னு லாயதுமான (ஓலை) காதணி, (முத்தாவளி) முத்து மாலை, (சுட்டி) குழந்தைகளும் மகளிரும் அணிந்துகொள்ளும் நெற்றியணி, (சந்து காறை) ஒருவகைக் கைவளை; (கைக்காறைகள்) ஒருவகைக் கையணிகள்;

---

44 ஓலை - காதணி. 'புதுவிரி பொன்செய் ஓலை ஒருகாது' — அப்பர் 4-8-10.

" சுட்டி - " நெற்றியில் ...... நித்திலச் சுட்டி சாத்தி"
—மீனுட்சி பிள்ளைத் தமிழ் - செங்கீரை 1.

" நுதலில் இட்ட பொட்டும் சுட்டியும் "
—முத்துக்குமார - செங்கீரை 1.

சந்து - சந்துகாறை - கைவளை; கைக்காறை - ஒருவகைக் கையணி — காறை — பெண்களும் குழந்தைகளும் கழுத்தில் அணியும் ஒருவகை அணி. 'பெண்காறை கட்டுவன'—பூத வேதாள வகுப்பு-அடி 47.

[45]வடக முத்தோலை அரைவட முஞ்செறி
கடகம் வித்தார மகர நெடுங்குழை
[46]மாதரணி தாலி நூல்காஞ்சனம்
மாலிகை மதாணி பீதாம்பரம்
[47]மதிப்பரிய கைச்சரி சரப்பணி யிலேச்சினை
பதக்கம் இவையுட்பட அணிப்படலம் இட்டுவை
[48]மாடை பாட்டிபு தைத்த குடப்பண
மோடு கூட்டியு ருக்கவி ருப்புடன் ;
[49]இடுப்ர சங்கி யாமல் உலை அ நந்தகோடி
எரியில் வெந்தி டாத கரிநி ரம்ப வேணும்
[50]இதுபழைய கவுரி பாஷாண வுண்டை
யிடுசகல வேதி பூநாக செம்பின்

---

[45] வடகம் - உடை விசேடம்; அத்தவாளம் (மேலாடை). 'வடகமும் துகிலும் தோடும் மாலையும் மணியும் முத்தும்' —சிந்தாமணி 462. சிலப். 14-108 உரை.

(2) முத்தோலை — (முத்துக்கம்மல்) திருப்புகழ் 981. அரைவடம் - 'உடைமணியும் அரைவடமும்' — திருப். 1277.

(3) 'மகர மொடுறுகுழை' – மகரக்குழை—திருப்புகழ் 650, 808.

[47] (1) 'கைச்சரி சொலிவர'—திருப்புகழ் 279.

(2) இலச்சினை — முத்திரை மோதிரம். 'யாவருங் காணத் தன் ஏற்றிலச்சினையும் இட்டான்'' — — திருவாலவாய்ப் புராணம் 24-7.

'இந்து சேகரன் விடை இலச்சினை யிட்டவாறு விளம்புவாம்' — திருவிளையா. 34–1.

[50] (1) கவுரி பாஷாணம் – (arsenic); பாஷாணம் – பிறவிப் பாஷாணம், வைப்புப் பாஷாணம் என்னும் இருவகைத்து– அநுபந்தம் பார்க்க. கவுரி பாஷாணம்-வைப்புப் பாஷாணம்-பிறவிப் பாஷாணம் என்னும் இரு வகுப்பிலும் உளது. வெள்ளைப் பாஷாணம் — சீத சுரக் குளிகைக்கு உபயோகப் படுத்தப்படுகிறது. அனுபோக வைத்திய நூல் 4–38.

(2) வேதி — தாழ்ந்த பொருளை உயர் பொருளாக மாற்றுகை. "குளிகை கொடு பரிசித்து வேதி செய்து" —(தாயுமா. சின்மயா. 7).

(3) பூநாகம்-இது பூநீறு, ஒருவகை மருந்துப் பொடி.

45. (வடகம்) மேலாடை—துகில் வகைகள்; முத்தோலை—முத்துக் கம்மல், (அரைவடம்) அரைச் சதங்கை, செறி-பொருந்திய (கடகம்) கங்கணம், (வித்தாரம்) மிக்குவிளங்கும் (மகர நெடுங்குழை) மகரமீன் வடிவுள்ள நீண்ட குழைகள்

46. (மாதரணி தாலி நூல்) பெண்கள் அணியும் தாலிக் கயிறு, (காஞ்சன மாலிகை) பொன் மாலைகள், (மதாணி) கழுத்தணியின் தொங்கல், (பீதாம்பரம்) பொன்னுடைகள்

47. (மதிப்பரிய) விலை மதித்தற் கரிதான (கைச்சரி) மகளிர் கையணி வகை, (சரப்பணி) வயிரம் அழுத்தின கழுத் தணி வகை, (இலச்சினை) இலச்சினை - முத்திரை மோதிரம், பதக்கங்கள் இவை யாவும் உட்பட அணிப்படலம்-ஆபரணக் குவியல்களை — கூட்டத்தை. இட்டு வை — கொண்டு வந்து வைப்பாயாக.

48. (மாடை) பொன் வகைகள், தங்க நாணய வகை கள், (பாட்டி) பாட்டியார் புதைத்து வைத்துள்ள குடப்பணம்—குடத்துள் சேமித்து வைத்த பணக் குவியல் இவைகளை ஒன்று கூட்டி (உருக்க விருப்புடன்) விருப்புடன் உருக்க - விருப்பத் துடனே-ஆசையுடனே, (உருக்க) (நெருப்பில்) உருக்குவதற்கு

49. (இடு) கொண்டுவந்து சேர்ப்பாயாக (பிரசங்கி யாமல்) வேறு பேச்சு - வீண்பேச்சுப் பேசாமல், (உலை அனந்த கோடி) அனந்தகோடி - கணக்கற்ற (உலைகளை) அடுப்புக்களை; எரிந்து சத்துப்போகாத கரியும் நிரம்பவேண்டும்.

50. (இது) இதோ பார் - இந்த உண்டையாயிருக்கும் பொருள் பழைய கவுரி பாஷாண உண்டை என்பது; இடு சகலவேதி — இடப்படும் எல்லாப் பொருள்களையும் இது வேதிக்க வல்லது (பொன்னுக்க வல்லது); (பூநாகம்) பூநீறு என்னும் மருந்து, செம்பினோடு

[51]ஈயம் ஆனதொர் இரதமும் எண்பலம்
ஏழு கோடியும் இரவு சிவந்திடும்

[52]யமுனை நீர்கொடு குகைபதி னுயிரம்
இறுக வேசமை நிலஅறை யூடுவை

[53]எழுபதொ டெண்பது வண்டியி லேபதர்
இடுகொடு வந்து சொரிந்து குவாலிடு

[54]யாமொழி படரச வாதந் தந்தன
நீசிவ குருவுப காரங் கண்டிரு

[55]இரதமொ டுருகிய சருகு பித்தளை
இவைஇவை குகைதொறும் இடை நறுக்கிவை

[56]எற்ற வந்தி ராது பொய்க்காளல
०எட்டி ரண்டு மாறு தப்பாதுகொள்

[57]எழுப தக்ரோணி புடமுள செங்களம்
ரணமு கத்தானை படையொடு வந்திரு

---

52 - 55 குகை – உலோகங்களை உருக்கும் கலம்.

" திரட்டி யாவையும் ஒருரு வாக்கினன் செழும்பொன்
இரட்டி தூக்கிய இரதமாங் கொருசிலை யிட்டு
மருட்டி ஆடக முழுவதும் உரைத்தவை வலிதா
உருட்டி மட்பெருங் குகையினில் மருந்தையுள்
ஞுறுத்தான் "
— கந்தபுராணம் 2-5-132.

54 " யாம் வெளிவிட ரசவாதம் " என்றும் பாடம்.

56 ० ' பத்திரண்டு மாறு தப்பாதிது ' என்றும் பாடம்.

57 அகரோணி – பக்கம் 406 கீழ்க்குறிப்பு.

51. ஈயம் ஆனது — ஈயமும் அதற்கு வேண்டிய ஓர் இரதமும் எண்பலம் - இரதம் - பாத ரசம் — எட்டு — எட்டு பலம் (சேர), அவை ஏழுகோடியாக (இரவு) ஓர் இரவுக்குள் (சிவந்திடும்) செந்நிறம் (செம்பொன் நிறம்) அடையும் ;

52. (அதற்காக) (நீ) யமுனையாற்று நீரைக் கொண்டு (வா), (குகைபதினுயிரம்) பதினுயிரம்(குகைகளை) லோகங்களை உருக்கும் பாத்திரங்களை - (இறுகவே) கெட்டியாகவே (சமை) அமைப்பாயாக ; (அமைத்து அந்தப் பாத்திரங்களை) நில அறையூடு) - பூமிக்குள் அமைக்கப்பட்ட அறைகளுள் (வை) வைப்பாயாக ;

53. எழுபதொடு எண்பது (70+80) 150 வண்டியில் பதர்-உமியை, (இடு) இட்டு நிரப்பிக் (கொடுவந்து) கொண்டு வந்துசொரிந்து, (குவால் இடு) மேடாகக் குவிப்பாயாக.

54. (இங்ஙனம்) யாம் - சித்தராகிய யாம் (மொழிபட) பொருள் விளங்கும்படி, ரசவாதம் — ரசவாத வழிகளைத் (தந்தனம்) விளக்கினேம்; நீ (சிவகுரு) சிவனுக்குக் குருமூர்த்தி யாம் முருகவேளின் (உபகாரம்) உதவியை - திருவருள் துணை யைக் (கண்டிரு) நம்பியிருப்பாயாக ;

55. (இரதமொடு) பாதரசத்திஞெடு உருகின (சருகு) உலர்ந்த இலை, பித்தளை - இவை இவை - இவை வகைகளை (குகைதொறும்) வேதிக்கும் பாத்திரங்கள்தோறும் (இடை) மத்தியில், நறுக்கி வை - துண்டுபடுத்தி வைப்பாயாக ;

56. எற்ற வந்து வந்து - எற்ற - அவசரப்பட்டுக் (குகை களைத்) தாக்கி (திறந்து) எடுக்க, இராது - பொன் கிட்டாது - (ரசவாதம்) வெற்றி பெருது - நிதானித்துத்தான் குகைகளைத் திறந்து எடுக்கவேண்டும், பொய்க்கு ஆள் அல - நான் பொய் சொல்லும் பேர்வழி அன்று ; (எட்டு - இரண்டும் - ஆறு) 8×2 +6 - பதினுறும் ஆறும்-இருபத்திரண்டுநாள் கழித்துத், (தப் பாது), ரசவாத வித்தை பிழையாகாத வகையில், (கொள்) - (வித்தையால் கிடைத்த) பொன்னைக் கொள்வாயாக — அடைவாயாக.

57. எழுபது அக்ரோணி — எழுபது பெருஞ் சேனைக் கணக்குள்ள (புடமுடன்) புடமிடும் கலங்களுடன் - (சுத்தி செய்து பக்குவப்படுத்துதற்கு வேண்டிய ப்ாத்திரங்களுடன்) (செங்களம்) போர்க்களத்துக்கு வரும் (ரணமுகத்து) புண் முகம்கொண்ட (ஆனை படையொடு) ஆனை, தேர், குதிரை காலாள் என்னும் நால்வகைப் படைகளுடனே (வெ(ப கோடிப் பொன்னை எடுத்துச் செல்ல) வந்திருப்பாயாக.

[58]ஈழம்வெகு கோடி யாமீந்திட
ஏழுநிலை மாட நீமேய்ந்துகொள்

[59]இபத்திரள் உரித்தன பருத்தன துருத்திகள்
oஇலக்கற உனக்கரு கடுக்கிவை சடக்கென

[60]யாவும் வாய்ப்பது சத்யம் உனக்கிவை
ஏழு நாட்டரும் மெத்த விளைத்தனம்

[61]இறைவர் குன்ற மானை மணமகிழ்ந்த நாளில்
இணையில் அண்ட ரோடும் உணவு கொண்ட தாகும்

[62]எமது பசிதீர மாராச இந்த்ர
அமுது படைபோத ஆகாச கங்கை

[63]ஆறு போலநெய் சொரிவட கம்படை
நூறு சாலொடு xபொரியலை இங்கழை

[64]இடுக zமாவடு வடையிடை கீரையி
லவணம் ஊறிய கறியடை வேபடை

---

58 'ஈழம் ஒரு கோடி', 'ஏழு நிலை வீடு' என்றும்பாடங்கள்.

59 துருத்தி — தோல் பை. "துருத்தியாம் குரம்பை தன்னில்" — அப்பர் 4-25-4.

o 'இலக்கறஅமைத்துலை யிலிட்டுவை சடக்கென' என்றும் 'இலக்கற உலைக்கரு கடுக்கிவை சடக்கென' என்றும்பாடங்கள்.

62 'எமது பசிபோக ஆக்ார இன்ப' என்றும் பாடம்.

இந்திரம் – மேன்மையானது.

"அச்சுதற் காமெனும் இந்திரத் திருமாமுடி ஏந்தியே"
—கந்தபுராணம் 2-16-6.

போத – நன்ருக. "போதத் தன்செவித் தொளைஇரு கைளாற் பொத்தி" — கம்பராமாயணம் – இரணி 22.

63 x 'பொரியலை இங்கனம்' என்றும் பாடம்.

64 z 'மாவடு வகிர் கடை', 'லவ்ண மீறிய' என்றும் பாடங்கள்.

58. (ஈழம்) பொன் (வெகு கோடி) நிரம்பக் கோடிக் கணக்கில் (யாம்) நாம் (ஈந்திட) எடுத்துத் தர, (அந்தப் பொன்கொண்டு) ஏழு நிலை மாடம் - ஏழடுக்கு மெத்தை (உபரிகை உள்ள மாளிகையை) நீ மேய்ந்துகொள் – நீ கட்டி வாழ்வாயாக.

59. (நான் கொடுக்கப்போகின்ற பொன்திரளை பத்திரப் படுத்துவதற்கு நீ) இபத்திரள் — யானைக் கூட்டங்களின் (தோலை) உரித்தன போன்றவையும், பருத்தன–மிகப்பருமை யுள்ளவையுமான (துருத்திகள்) தோல்பைகளை, இலக்கு அற – ஒரு குறிப்பிலாக் கணக்கில் – கணக்கற்ற வகையில், உனக்கு (அருகு) சமீபத்தில் அடுக்கி வைப்பாயாக; (சடக்கென) திடீ ரென்று – விரைவில்

60. யாவும் – நீ விரும்பிய எண்ணங்கள் யாவும் (பொன் எல்லாம்) (உனக்கு) வாய்ப்பது - கிடைப்பது (சத்தியம்) திண்ணம்; உனக்கு (இவை) இப் பொற்குவியல்களை, (ஏழு நாட்டரும்) ஏழு உலகினரும் மெத்த – மிக்குள என (நிரம்ப உளஎன்று சொல்லும்படி) விளைத்தனம்-உண்டு பண்ணினோம்;

61. இறைவர்–சிவபிரான், (குன்றமானை) இமயமலையின் (மான்போன்ற) மகளை – பார்வதியை, (மணம் மகிழ்ந்த நாளில்) திருமணம் புரிந்து மகிழ்ந்த அந்தத் தினத்திலே, (இணையில்) தமக்கு நிகரிலாத (அண்டரோடு) தேவர்களுடனே இருந்து நாம் (உணவு கொண்டதாகும்) நாம் உணவு கொண் டோம் - (அன்று முதல் இன்றளவும் உணவு உண்ணாது இருக் கின்றேம்; ஆதலால் எமக்கு மிக்க பசி)

62. எம்முடைய பசி தீரும்படி, (மாராச) மகாராஜருக்கு இடும்படியான அத்துணைச் சிறந்ததான, (இந்திர), இந்த்ர போகமான — மிக மேன்மையான (அமுது) உணவை (படை) படைப்பாயாக — அளிப்பாயாக, போத - செவ்வையாக; ஆகாச கங்கை

63. ஆற்றின் (வீழ்ச்சி) போல, நெய்யைச் (சொரி) சொரிவாயாக; (வடகம் படை) வற்றல்களைப் படைப்பா யாக – வைப்பாயாக; நூறு சாலொடு – நூற்றுக் கணக்கான சால்களில் - பானைகளில் அடங்கிய – (பொரியலை) பொரித்த கறிவகைகளை, இங்கு (அழை) வரவழைப்பாயாக.

64. (இடுக மாவடு) மாவடு (ஊறுகாய்) வைப்பாயாக; வடை யிடை கீரையில் - வடையும் (இடை) அதனுடன் கீரை யும், (லவணம்) உப்பு (ஊறிய) ஊறியுள்ள கறி-கறிவகைகளை யும், (அடைவே) முறைப்படி-அல்லது கறிவகைகள் எல்லா வற்றையும், (படை) கொண்டுவந்து வைப்பாயாக.

[65]இருபது தண்டை யுடும்பு குவால்சமை
  ○துருவைகள் பன்றி சமைந்தள லாம்அழை
[66]யாமைஅ வியல்முயல் ஆணங் கண்டறி
  யோமிது சிவசிவ மேலெங் கும்படை
[67]இடைவெளி யறமிகு விடுக ருக்கலே
  யிறவகை கயல்கெளி றிவைபொ டித்தன
[68]எட்டு வண்டி வாளை யிற்பீலியில்
  இட்ட முண்டு xதீயன் முற்பாடழை
[69]இடைகொ ழுப்பாடில் இளையஎ லும்புடன்
  அடைசு ரைக்காயில் அடுபடை முன்கறி
[70]ஈறுபுளி வார்வி டாய்போம்படி
  ஏடு பிரியாத பால்தேன்சொரி
[71]இருக்கிற சருக்கரை வருக்கை கதலிக்கனி
  ரசத்தினை யனைத்தையும் இலைக்குள் அடையப்படை
[72]ஈக பாக்குடன் வெற்றிலை கர்ப்புரம்
  யாரு மேத்த இனிச்சுகம் உற்றிரு;

---

65 ○ 'துருவல் கலந்து சமைந்த தெலாமமை' என்றும்பாடம்.
66 அவியல் - உணவு. ''செந்தினையின் அவியல்''
—கூர்ம புரா. கண்ணன் மண-145.
67 கலை – சுறுமீன் (பிங்கலை): கெளிறு – எட்டு அங்குல நீளமுள்ள மீன் விசேடம். ''கேவேடராகிக் கெளிறது படுத்தும்'' — திருவாசகம் 2–17.
68 'தீயின் முற்பாடமை' (தீயின்முன்புவை) வேறுபாடம்.
69 'இடை கொழுத் தாட தினைய எலும்புடன்' என்றும் பாடம். சுரைக்காய் – அநுபந்தம் பார்க்க.
62–72 சித்து செய்வோன் பசிதீர உணவு கேட்பது:

''துயரம் அறும் நின் வறுமை தொலையும்
மொழியும் அமிர்த சுரபானம்
சுரபி குளிகை எளிது பெறுக
துவளும் எமது பசிதீரத்
தயிரும் அமுதும் அமையும் இடுக
சவடி கடகம் நெளிகாறை ...
தருக தகடொ டுறுக எனுமிவ்
விரகு தவிர்வ தொருநாளே''
—எனவரும் திருப்புகழை நோக்குக;
(1068) - பக்கம் 162 கீழ்க்குறிப்பு.

65. [மேற்சொன்ன மரக்கறி வகைகளுடன் இனி எமக்கு வேண்டிய மாமிச உணவு கூறுவேன்] — இருபது (தண்டை) வாலுடன் கூடிய உடும்புகளின் (குவால்) கூட்டத்தை – (சமை) சமையல் செய்க ; (துருவைகள்) செம்மறியாடுகள், (பன்றி) பன்றிகள் (சமைந்த எலாம்) சமையலாகித் தயாராய் (வைப் பதற்குச்) சித்தமாயிருப்பவை யாவற்றையும் (அழை) வர வழைப்பாயாக.

66. ஆமை அவியல்-ஆமை உணவை, முயலின் (ஆணம்) குழம்பைக் (கண்டறியோம்) இதுவரையும் கண்டதில்லை ; சிவ சிவ ! பேஷ்-பேஷ் - மேல் எங்கும் படை – இனிமேல் இதை எவ்விடத்தும் (எமக்குப்) படைப்பாயாக – இடுவாயாக.

67. இடைவெளி – மத்தியில் ஒய்வு (அற) இல்லாமல் — (எப்போதும் நிரம்ப என்றபடி) மிகு இடு – அதிகமாக இடுவா யாக — பரிமாறுவாயாக ; கரு — முட்டை, கலை — சுறுமீன் இறவகை – இறுவகை - இறுல் மீன்வகை, (கயல்) கயல் மீன் வகை, (கெளிறு) கெளிற்று மீன்கள் – இவை, பொடித்தண – பொடிசெய்து சமைக்கப்பட்டவையை

68. எட்டு வண்டிகள் (நிறைய) (வாளையில்) வாளைமீன் களிலும், (பீலியில்) மயில்களிலும் (இட்டமுண்டு) எனக்கு இஷ்டமுண்டு (ஆதலால்) (தீயணுகிய) கொடியணுகிய எனது (முற்பாடு) முன்னிலையில் (அழை) அழைப்பாயாக ;

69. இடை – மத்தியிலே (கொழுப்பாடு – இல் – இளைய – எலும்புடன்) உடல் கொழுப்படைதல் இல்லாது எலும்புடன் இளைத்துப்போனபடியால், (அடை), இலையுடன்-(சுரை)சுரைக் காயை (அடு) சமைத்துப் (படை) படைப்பாயாக – வைப்பா யாக, (முன்கறி) முதலில் அந்தக் கறியை ;

70. (ஈறு) ஈற்றில் — கடைசியில், புளி — புளிங்கறியை (புளிச்சாறு இட்டுச் சமைத்தவையை) பச்சடி போன்றவையை (வார்) வார்ப்பாயாக - வைப்பாயாக ; விடாய் போம்படி – தாகம் தீரும்படி – ஏடு பிரியாத – ஏடு நீங்காத பாலையும், தேனையும் (சொரி) சொரிவாயாக – ஊற்றுக.

71. இருக்கின்ற சர்க்கரை, (வருக்கை) பலாப்பழம், (கதலிக்கனி) வாழைப்பழம் இவைகளின் ரசம் எல்லாவற்றை யும், இலையிலே (அடைய) நிரம்பப் (படை) படைப்பாயாக – வைப்பாயாக.

72. ஈக - தருக-பாக்குடனே வெற்றிலையையும், கர்ப்பூர தீபாராதனையையும் ; (இங்ஙனம் எல்லாம் செய்து) யாரும் ஏத்த – யாரும் துதிக்கும்படி – புகழும்படி, இனி சுகம் உற்று இரு – சுகத்துடனே வாழ்வாயாக.

முருகன் பெருமை: சித்தர்களுள் ப்ரசித்தி பெற்றவர்
முருகன் திருப்புகழைக் கற்றவரே (73 - 96)

[73]மிடைத ரும்ப்ர வாள சடைபெ ரும்ப்ர வாக
விமலர் கொன்றை மாலை தருண சந்த்ர ரேகை

[74]விரவு மணநாறு பாதார விந்த
விதரண விநோத மாதாவின் மைந்தன்

[75]மீன கேதனன் உருவின் மிகுந்தருள்
தான வாரிதி சரவண சம்பவன்

[76]விகிர்தி வேதனன் மவுன சுகாதனன்
அகில காரணன் அகில கலாதரன்

[77]விகசித சுந்தர சந்தன பாளித
ம்ருகமத குங்கும கஞ்சப யோதரி

[78]வேழமு முழைகளும் ஆரும் பைம்புனம்
மேவுறு குறமகள் மேவுந் திண்புயன்

---

73 சந்த்ரரேகை — "அம்புலியின் கீற்றை" என்றார் கந்தரலங்காரத்தில் (1).

73 _ 74 சிவபிரான் தேவியின் ஊடலைத் தீர்க்க வணங்குவதால் அவர் சடையில் அணிந்துள்ள கொன்றை, பிறை இவைகள் தேவியின் திருவடியிற்பட, அவற்றின் மணம் தேவியின் திருவடியில் வீசும். 'பிறை கரந்தை - கொன்றையும்...மணக்கும் சரணி'—திருப்புகழ் 457, பக்கம் 22 குறிப்பு.

'திங்கட் பகவின் மணநாறுஞ்சீறடி' – அபிராமி அந். 35.

'கூன்பிறைக் கோடுழுத பொலன் சீறடி'
—மீனாட்சி - முத்தம் 3.

'பிறைநாறுஞ் சீற்றடியைப் பாடுவனே'
—மீனாட்சி - குறம் 45.

'பிள்ளைப் பிறைநாறும் சீறடி எம்பேதாய்'
—சிவகாமி - இரட்டைமணி 19.

75 மன்மதனிலும் அதிக அழகர் முருகவேள்:

"ரத்தின பணு நிருத்தன் மெய்ச்சுதனு நாடு மிக்க
லக்ஷண குமார சுப்ர மணியோனே"
—திருப்புகழ் 1256.

"வேளையும் வென்று மேவிய பெருமாளே"
—திருப்புகழ் 1227, பக்கம் 544 கீழ்க்குறிப்பு.

"மீன கேதனன் அழகை முனிந்தருள்" என்றும் பாடம்.

[ எனது சித்துக்கள் இங்ஙனம் இருக்கட்டும், பேருண்மை ஒன்றைக் கூறுவேன் கேள் ] :

73. மிடைதரும்-நெருக்கமுள்ளதும், ப்ரவாளம்-பவளம் போலச் சிவந்ததுமான சடையில் (பெரும் ப்ரவாக) பெரு வெள்ளமான கங்கை (தங்கும்) விமலர் — பரிசுத்தமூர்த்தி, கொன்றை மாலையும், தருண - இளமை வாய்ந்த சந்ரரேகை- பிறைக்கீற்றும்

74. விரவு – கலந்து (மணம் நாறு) மணம் வீசும் பாதார விந்த-(பாத அரவிந்தத்தை) திருவடித் தாமரைகளை உடைய வளும், (விதரண விநோதம்) கொடையழகை — கருணை அழகைக் கொண்டவளும் ஆகிய (மாதாவின்) பார்வதிதேவி யின் (மைந்தன்) குமாரன்

75. (மீன கேதனன்) மீன் கொடியை உடைய மன்மத னுடைய (உருவின்) உருவ அழகிலும் (மிகுந்து) மிக்கவனாய் (அருள்) அருள்பாலிக்கின்ற, (தானவாரிதி) கொடையில் (வேண்டுவார் வேண்டியதைத் தருதலில்) கடலனையவன், சரவண சம்பவன் – சரவண மடுவில் அவதரித்தவன்

76. (விகிர்தி) வேறுபாடுகளை (வேதனன்) அறிந்தவன் ; (மவுன சுகாதனன்) சுக – ஆதனன் – மௌன நிலை என்னும் சுகநிலையில் (ஆசனம்) இடம் கொண்டவன்; (அகிலகாரணன்) சகலத்துக்கும் மூலகாரணனாயிருப்பவன், (அகில கலாதரன்) சகல கலைகளையும் கொண்டுள்ளவன் (அறிந்துள்ளவன்)

77. (விகசித) மலர்ந்து விரிவுள்ளனவும், சுந்தர – அழகு உள்ளனவும், (சந்தன) சந்தனம், பாளிதம்-பச்சைக்கர்ப்பூரம், (ம்ருகமதம்) கஸ்தூரி, (குங்குமம்) இவைகளை அணிந்துள்ளன வும், (கஞ்சம்) தாமரை மொட்டு போன்றனவுமான பயோதரி- கொங்கைகளை உடையவளாய் —

78. (வேழமும்) யானைகளும், (உழைகளும்) மான்களும் (ஆரும்) நிறைந்துள்ள (பைம்புனம்) பசிய தினைப்புனத்தில் (மேவுறு) வீற்றிருந்த (குறமக்கள்) குறப்பெண் – வள்ளியை - மேவும் - விரும்பி அணைந்த (திண்புயன்) திண்ணிய (வலிய) திருப்புயங்களை உடையவன்.

---

76 "அகிலதராதரன்" வேறு பாடம்.

78 "வேழமு முழைகளு மேயுந் தண்புனம்" "மேவிய குறமகள் தோயுந் திண்புயன்" வேறுபாடங்கள்.

[79]விரிகடல் துகள்எழ வெகுளும் விக்ரமன்
அரிதிரு மருமகன் அறுமு கத்தவன்

[80]வெட்சி கொண்ட தோளன் வெற்பூடுற
விட்ட வென்றி வேல்மு ழுச்சேவகன்

[81]வெருவு நக்கீரர் சரணென வந்தருள்
முருக னிஷ்க்ரோத முநிகுண பஞ்சரன்

[82]மேதகுபு ராண °வேதாங்குரன்
ஓதரிய மோன ஞானங்குரன்

[83]மிகைத்தவர் புரத்ரயம் எரித்தவர் ப்ரியப்பட
அகத்திய முநிக்கொரு தமிழ்த்ரயம் உரைத்தவன்

[84]வேத மூர்த்தி திருத்தணி வெற்புறை
சோதி கார்த்திகை பெற்ற விளக்கொளி

---

79 (1) முருகவேள் கடலைக் கோபித்தது:
"மகரசல கோபக்கார"—திருப்புகழ் 1026, பக்கம் 83 கீழ்க்குறிப்பு; பாடல் 905, பக்கம் 640 கீழ்க்குறிப்பு.
திருமால் கடலைக் கோபித்தது — கந்தர் அலங். 54 உரை.
'விரிகடல் அளறெழ' என்றும் பாடம்.

80 கிரவுஞ்சத்தை அட்டது — தாரகனையும் கிரவுஞ்சத்தையும் ஒரே சமயத்தில் வேல் விட்டு மாய்த்தனர் முருகவேள்.
"தாரக னென்பதோர் பேரோனைச் சஞ்சல முறுகிரவுஞ் சத்தை, ஒரிறை செல்லுமுன் உடல்கீறி உள்ளுயிர் உண்டு புறத்தேகி...வருகென்றே வேற்படைதன்னை விடுத்திட்டான்"
"தாரகன் மார்ப மென்னும் தடம்பெரு வரையைக் கீண்டு, சீரிய கிரவுஞ்சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று ... துண்ணெனன் மீண்ட தன்றே" — கந்தபுரா. 1-20,-180, 185.
"தாரகா சுரனும் மடிய, மலை பிளவுபட, மசுர சலநிதி குறுகி மறுகி முறையிட முனியும் வடிவேலன்"-சீர்பாதவகுப்பு.
(2) முழுச் சேவகன்: 13. சேவகன் வகுப்பு, அடி 8 பக்கம் 440 பார்க்க.

81 நக்கீரருக்கு அருளினது — வேடிச்சி காவலன் வகுப்பு, அடி 22, பக்கம் 432 பார்க்க.

79. விரிந்த கடலும் (துகளெழ) வற்றித் தூள் பறக்க (வெகுளும்) கோபித்த (விக்ரமன்) பராக்ரமசாலி; (அரிதிரு மருமகன்) திருமாலின் அழகிய மருமகன் (அல்லது) கடலைக் கோபித்த பராக்ரமனும் திருமால், இலக்குமி இவர்கள் மருமகன்), ஆறு திருமுகங்களை உடையவன்,

80. வெட்சி மாலையை அணிந்த புயங்களை உடையவன், (வெற்பு) கிரவுஞ்சகிரி (ஊடுற) ஊடுருவும்படி (விட்ட) செலுத்தின (வென்றி) வெற்றியை உடைய (வேல்) வேலாயுதத்தை ஏந்திய (முழுச் சேவகன்) அதி பராக்ரமசாலி,

81. வெருவு — பூதம் இட்ட குகையில் அஞ்சியிருந்த நக்கீரர் நீயே சரணம் என்று (பாடிப்) பரவ, அவரிடம் வந்து திருவருள் புரிந்த முருகவேள், (நிஷ்க்ரோத முநி) குரோதம் கோபமே இல்லாத முநி - பெருமான், குண பஞ்சரன் - நற்குணங்களுக்கு இடமானவன்,

82. (மேதகு) மேன்மை வாய்ந்த புராணங்களுக்கும் வேதங்களுக்கும் (அங்குரன்) முளைபோன்றவன் (புராணங்களிலும் வேதத்திலும் வெளிப்படுபவன்), ஓதுதற்கு அருமையான மௌன ஞானத்தில் (அங்குரன்) வெளிப்பட்டுத் தோன்றுபவன்,

83. (மிகைத்தவர்) செருக்கு மிக்கிருந்தவர்களுடைய (புரத்ரயம்) புரங்கள் மூன்றையும் எரித்தவராம் சிவபிரான் ப்ரியப்படும்படி அகத்திய முநிவருக்கு ஒப்பற்ற இயல்-இசை-நாடகம் எனப்படும் முத்தமிழையும் போதித்தவன்,

84. வேதத்திற் போற்றப்பட்ட மூர்த்தி, திருத்தணிகை மலையில் வீற்றிருக்கும் ஜோதி மூர்த்தி, கார்த்திகை மாதர் பெற்ற விளக்கொளி போன்ற மூர்த்தி.

---

81 'வெருவி நக்கீரர்', 'விரவு நக்கீரர்' என்றும் பாடங்கள்.

குணபஞ்சரன் — "குருபுங்கவ எண்குண பஞ்சரனே" —கந்தரநுபூதி 15.

பஞ்சரம் — கூடு, இடம். 'வெஃகாவும், பாடகமும், ஊரகமும் பஞ்சரமா நீடிய மால்" — யாப். வி. 95 உரை.

82 0 'வேதாந்திகள் ஓதரிய மோன' என்றும் பாடம்.

83 (1) திரிபுரம் எரித்த வரலாறு: திருப்புகழ் 285, பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

(2) சிவபிரான் விரும்ப அகத்தியர்க்குத் தமிழுரைத்தது: திருப்புகழ் 441, பக்கம் 609 குறிப்பு.

84 கார்த்திகை பெற்றது: வேடிச்சி...வகுப்பு அடி 3.

[85]வெகுளி வென்ற வேள்வி முநிவர் சங்கம் ஏற
விரவும் ०இந்த்ர லோக வழிதி றந்த மீளி
[86]மிகவிருது கூறு மேவார்கள் கண்டன்
விகட அசுரேசர் சாமோது சண்டன்
[87]மேக வாகன மிகுமத வெண்கய
பாக சாதன னகரி புரந்தவன்
[88]விபுத தாரகன் விபுத திவாகரன்
விபுத தேசிகன் விபுத சிகாமணி
[89]விபரித கஞ்ச விரிஞ்ச பராமுகன்
அபிநவ கந்தன் xஅடைந்தவர் தாபரன்
[90]மேருவை யிடிபட மோதுஞ் சங்க்ரம
தாரகன் மகுட விபாடன் புங்கவன்
[91]வெயிலுமிழ் கொடியொடு வினைமு கத்தினின்
மயில்மிசை வருமொரு வரதன் நிர்ப்பயன்

---

85 முநிவர் வேள்வியைக் காப்பவர் முருகர் :
" யாக முநிவர்க்குரிய காவற்காரன் ".
—வேளைக்காரன் வகுப்பு, அடி 14.
" அந்தணமறை வேள்வி காவற்கார "—திருப்புகழ் 41.
० 'இந்த்ர லோகபதி' என்றும் பாடம்.
89 (1) விரிஞ்ச பராமுகன் — பிரமனை விலங்கிட்டதால் — வேல்வாங்கு வகுப்பு, அடி 9, பக்கம் 444.
(2) அபிநவ கந்தன் — " முன்னிலான் பின்னிலான் "
கந்தபுராணம் 2–1–1.
" முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே "
—திருவாசகம் 7–33.
(3) அடைந்தவர் தாபரன் — " தஞ்சமாய தலைவன் "
—சம்பந்தர் 2–59–10.
x 'அடைந்தவர் ஆதரன்' என்றும் பாடம்.
90 மேரு - கிரவுஞ்சம். கந்தரலங்காரம் 62 உரைக்குறிப்பு. மேருவைச் செண்டாலடித்தது — திருப்புகழ் 2, பக்கம் 23 கீழ்க்குறிப்பு.
91 வெயில் உமிழ்கொடி – " ரவி உமிழ் கொடி " – சேவற் கொடி. திருப்புகழ் 387, பக்கம் 474 கீழ்க்குறிப்பு.
வினை - போர் - வினைமுகம் - போர்க்களம். 'செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்'—புறநானூறு. 6.

85. வெகுளி வென்ற - கோபத்தை வென்றவர்களும், வேள்விகளை — யாகங்களைச் செய்பவர்களுமாகிய (முநிவர் சங்கம்) முநிவர்களின் கூட்டம், ஏற-அச்சம் ஒழிந்து முன்னேறி விளங்க, (விரவும்) பொருந்திய (இந்த்ரலோகம்) தேவேந்திர லோகம் - பொன்னுலகத்தில் (வழி திறந்த) குடியேறும்படி வழியைத் திறந்துவிட்ட — தடைகளை நீக்கிக் குடிபுக வழி தந்த, (மீளி) சேனைத் தலைவன் - பெருமையிற் சிறந்தோன்

86. (மிக) நிரம்ப, (விருது) தங்கள் வெற்றிப் பெருமை களை எடுத்துக் கூறும் (மேவார்கள்) பகைவர்களைக் (கண்டன்) கண்டித்த வீரன், (விகடம்) தொந்தரை செய்த (அசுரேசர்) அசுரர் கூட்டத் தலைவர்கள் (சா) சாவும்படி (மோது) தாக்கின (சண்டன்) பெருங்கோபம் உடையவன்

87. மேகத்தை வாகனமாகக் கொண்டவனும், மிக்க மதத்தை உடைய வெண்ணிறத்த யானையாம் ஐராவதத்தை உடையவனுமான (பாகசாதனன்) இந்திரனுடைய (நகரி) நகரம் - அமராவதியைப் (புரந்தவன்) பாதுகாத்தவன்

88. (விபுத) தெய்வத்தன்மை வாய்ந்த (தாரகன்) பிரணவசொரூபன், (விபுத திவாகரன்) ஞான சூரியன், (விபுத தேசிகன்) ஞானகுரு, (விபுதசிகாமணி) ஞானசிகாமணி

89. விபரிதம்-மாறுபாடான உணர்ச்சிகொண்டவனும், (கஞ்சம்) தாமரையில் வீற்றிருப்பவனுமான (விரிஞ்சன்) பிரமனைப் (பராமுகன்) அலட்சியம் செய்தவன், (அபிநவ கந்தன்) என்றும் புதியனும் கந்தசுவாமி, (அடைந்தவர்) தம்மைச் சரண் அடைந்தவர்களுக்குத் (தாபரன்) ஆதாரமா யுள்ளவன்

90. மேரு மலையை இடிபடும்படி (மோதும்) மோதிச் சென்டால் அடித்த (புங்கவன்) (சங்க்ரம) சங்கிராமம் — போர்க்கு வந்த தாரகாசுரனுடைய (மகுடம்) கிரீடத்தை (விபாடன்) பிளந்து தள்ளினவன்; அல்லது மேருவை - கிரவுஞ் சத்தை (இடிபட) பொடிபடும்படி (மோதும்) தாக்கின (சங்க்ரம) போர் வல்லவன் ; தாரகன் மகுடத்தைப் பிளந்து தள்ளினவன் ; (புங்கவன்) கடவுள்.

91. வெயில் உமிழ் கொடி — சூரியனைக் கக்குகின்ற சேவற்கொடியுடன் (வினை முகத்தினில்) போர்க்களத்தில், மயில்மீது எழுந்தருளும் ஒப்பற்ற வரதன், (நிர்ப்பயன்) பயமில்லாதவன்.

92வித்தகன் சுவாமி நிர்ப்பாவகன்
சத்தியன் ப்ரதாப oவித்யாதரன்
93விரத நட்பாளர் பரியும் அசஞ்சலன்
நிருத நிட்டூரன் நிருதர் பயங்கரன்
94வீரமத லோக வேள்காங்கெயன்
சூரரண சூர சூராந்தகன்
95வினைப்பகை அறுப்பவன் நினைத்தது முடிப்பவன்
மனத்துயர் கெடுத்தெனை வளர்த்தருள் க்ருபைக்கடல்
96வேலன் வாய்த்த *திருப்புகழ் கற்றவர்
சீலம் ஏத்திய சித்தப்ர சித்தரே.

---

92 (1) பாவகம் - தியானம். 'பாவகமாயிருந்து'—திருப்புகழ் 84. பாவகம்-உருவம். 'வேடனும் பாவகம் கொடு நின்றது போலும்' — சம்பந்தர் 2-3-1.
(2) ப்ரதாப வித்யாதரன் - பேர்பெற்ற சகலகலா வல்லவன் — (கல்வி கரைகண்டவன்) திருப்புகழ் 320, பக்கம் 296 கீழ்க்குறிப்பு.

o 'சத்ய சம்ப்ரதாய வித்யாதரன்', 'சத்தி சம்ப்ரதாய வித்யாதரன்' என்றும் பாடங்கள்.

93 விரவு நட்பாளர் பரவும சஞ்சலன் என்றும் பாடம்.
'நிட்டூரன்' நிருதர் பயங்கரன் - 'நிட்டூர சூர பயங்கரனே', 'நிருத சங்கார பயங்கரனே' - கந். அலங். 82, 103.

94 சூராந்தகன் – திருப்புகழ் 64.

95 வினைப்பகை அறுப்பவன் — 'வினைப்பகை செகுப்பவன் நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்' – திருக்கையில் வழக்க வகுப்பு. 'எத்தொழில ரேனும் நினைப்புடை மனத்தவர் வினைப்பகையும் நீயே'–சம்பந்தர் 2–30–6. நினைத்தது முடிப்பவன் – 'கருத்தறிந்து முடிப்பான் தன்னை'–அப்பர் 6-19-18.
'மனத்துயர் கெடுத்து எனை வளர்த்தருள் க்ருபைக்கடல்' —இது தனது வரலாற்றை அருணகிரியார் கூறுமிடம்.
'நினைப்பவை முடிப்பவன்' என்றும் பாடம்.

96 சீலம் – நல்லுணர்வு. "காமத்தாற் கனலும் வெந்தீ சீலத்தால் அவிவ தன்றி"—கம்பராமா. மாரீசன் 104.

குறிப்பு: ரசவாதம் ஆதிய சித்திகள் பயனற்றவை; முருகவேளின் திருவருளே சகல சித்திகளையும் கூட்டுவிக்கும் என்னும் இந்தச் சித்து வகுப்பின் சாரத்தை —

92. (வித்தகன்) பேரறிவாளன்; சுவாமி; நிர்ப்பாவகன்- உருவம் இல்லாதவன் அல்லது தியானத்துக்கு எட்டாதவன், (சத்தியன்) மெய்ப்பொருளானவன், (ப்ரதாப வித்யாதரன்) பேர்பெற்ற கலைஞன் – கலைச்செல்வன்

93. விரத நட்பாளர் — விரதங்களை அநுட்டிப்பதில் பிரியமுள்ளவர்கள், (பரியும்) காதல் கொள்ளும் (அசஞ்சலன்) சஞ்சலம் அற்றவன் – அசையாதவன், சலிப்பு (கவலை) அற்றவன், நிருதர் – அசுரர்களிடம் (நிட்டூரன்) கொடுமை காட்டினவன்; நிருதர் பயங்கரன் – அசுரர்களுக்கு அச்சம் (பயம்) தருபவன்

94. வீர மத லோக வேள் — வீரம் – மேன்மையான, மதம் – (பக்திக் களிப்பை) மகிழ்ச்சியை உடைய (லோகம்) நன்மக்கள் — பெரியோர் (போற்றும்) வேள் - முருகவேள், (காங்கெயன்) கங்கையில் தோன்றியவன், சூர ரண – அச்சம் தரும் (ரணம்) போரில் வரும், சூர – சூரத்தனம் (வீரமுள்ள) சூர் - சூரபத்மாவுக்கு (அந்தகன்) யமனாய் விளங்கினவன்

95. வினை - வினை என்னும் பகையை (அறுப்பவன்) அழிப்பவனும், (நினைத்தது) அடியார்கள் நினைத்த எண்ணங்களை முடிப்பவன்-கூட்டி வைப்பவனும்-நிறைவேற்றுபவனும், மனத்துயர் - மனவேதனைகளைக் (கெடுத்து) தொலைத்து (எனை) என்னை (வளர்த்து அருள்) விருத்திக்குக் கொண்டு வந்து – உயர் நிலைக்குக் கொண்டுவந்து - திருவருள் பாலித்த கிருபைக் கடலானவனும் ஆன

96. (வேலன்) வேலாயுதக் கடவுளுக்கு (வாய்த்த) உள்ள - அடியேனால் பாடப்பட்டு அமைந்துள்ள (திருப்புகழை) திருப்புகழ்ப் பாடல்களைக் (கற்றவர்) ஆய்ந்து படித்தவர்கள் சீலம் ஏத்திய – சீலத்தால் (நல்லறிவால்) புகழ்பெற்ற அல்லது சீலம் உடையவர் புகழ்கின்ற — சித்தப்ர சித்தரே – சித்தர்களுள் (பிரசித்தம்) பேர்பெற்ற சித்தர்களாம், சகல சித்திகளும் கைவந்த பிரசித்தர்களாம் (புகழாளர்களாம்).

---

"வரதா மணிநீ என ஓரில், வருகாதெதுதான் அதில் வாராது; இரதாதிகளால் நவலோகம் இடவே கரியாம் இதில் ஏது?" — என்னும் திருப்புகழ்ப் பாடலிற் (192) காண்க.

* "கருப்புகழாம் பிறசமயக் கதைகேளா தநுதினமுன்
திருப்புகழை யுரைபோர்க்குச் சித்தியெட்டும் எளிதாமே"
[தணிகைக் கலம்பகம்–1.]

### சித்து வகுப்பின் சுருக்க உரை

1. வேல் மயில் வாழி! (நான் ஒரு சித்தன்); ஓர் அருமையான விஷயத்தைச் சொல்வேன், கேளுங்கள்: 2. ஒரு மூலிகையின் உதவிகொண்டே பலவித தேகத்துடன் திரிந்து விளையாடலாம். 3. ஆறுமுகன்மேல் ஆணை; எனக்கு வேறு ஆசை கிடையாது; மேருமலையையே நான் தலைகீழாகப் புரட்டி இருக்கின்றேன். 4. சகல லோகங்களையும் சிவனார் அறிய முறைப்படி சிருட்டித்திருக்கின்றேன். 5. நீ விரும்பினவை யாவற்றையும் நீ போதும் என்று சொல்லும் அளவுக்கு உனக்கு நான் தருவேன்; அவசரப்படாது பெற்றுக்கொள். 6. இந்த வல்லமை எல்லாம் எனக்குப் பன்னிருகைக் கோமான் தந்தவை. 7-15-16. சில மருந்து வகைகள் உள; அவைதாம்— கிலுகிலுப்பை, அரசிலை, நறுவிலி, கக்கிரி முதலாகக் கிழங்கு வகைகள் வரை; இவைதமை ஆடி, ஆவணி மாதத்தில் தீயில் புடம் இட என்னை அழைப்பாயாக; எழுபது சால்களில் (பானைகளில்) இவைதமை அடைப்பாயாக.

17-29. அதிமதுரம், தகரம் முதலாகச் சிவதை, மஞ்சிலை வரையில் மருந்து சாமான்கள்; இவைகளை வகைப்படி எடுத்து, எண்பது பாத்திரங்களில், ஒரு மண்டலம் (45 நாள்) கால அளவு மோரினில் ஊறவைப்பாயாக. 30. ரசவாதம் பல உண்டு, வைத்ய நூல் மாத்திரமன்று எனக்குக் குருமூர்த்தி (முருகவேள்) உபதேசித்தது. 31. மும்மூர்த்திகளுட்பட யாரும் நான் சொல்லும் முறைகளை உபதேசிக்கப்பெற்றாரில்லை. 32. மாய வித்தை, பேயோட்டுதல் முதலிய சகல மந்திரவித்தைகளையும் உடனே சொல்லித்தரத் தடையில்லை. 33. சிறுவர்களுக்கு இது சொல்வது நன்றன்று; கதவு அடைத்துக்கொண்டு சொல்லவேண்டிய ரகசியம் என்று பயப்படவேண்டாம். 34. புலிவால், நரி, காராம்பசுவின் வாலின் மயிர், கீரி, தேவாங்கு இவைகளை வரவழைப்பாயாக. 35. பிணங்கள் புதைக்கப்பட்ட குழியில் உள்ள உப்பு ஊறிய ஜலத்தை எடுத்து வடித்து ஒரு குடத்தில் நிறைத்து வைப்பாயாக. 36. சரியாக மந்திர தோத்திரம் கொண்டு செய்யும் இந்த வித்தை பலித்திட்டால், பொன் சேர்ப்பதில் உனக்கு யாதொரு கஷ்டமும் இல்லை. 37. இன்றோ, நாளையோ திருமணம் செய்யவேண்டும்; உடனே பொன் வேண்டும் எனக் கேள்; உன் வீடு முழுமையும் இனி உடனே தேடுவாயாக; தேடி— 38-47. வளையல், குழை, பீலி முதலிய நகைவகைகளையும், உயர்ந்த பீதாம்பரம் ஆதிய ஆடைவகைகளையும் குவியல் குவியலாகக் கொண்டு வந்து வைப்பாயாக. 48. இவைக

ளுடன் கூட்டி உருக்க உன் பாட்டி புதைத்து வைத்திருக்கும் குடங்களில் உள்ள பணத்தையும் கொண்டு வா. 49. வேறு பேச்சுபேசாமல், கணக்கற்ற அடுப்புக்களேயும், தீ இட்டு மூட்ட நிரம்பக் கரியையும் கொண்டு வந்து சேர்.

50. கவுரி பாஷாணம், பூநாகம் முதலிய ரசவாத மருந்துகள் உள; இவை எவற்றையும் பொன்னுக்கும். 51. செம்பு, ஈயம், பாதரசம் இவை சேர, எல்லாம் இரவுக்கே செந்நிறமாகும். 52. அதற்காக, யமுனேயாற்று நீர் கொண்டு வா; வேதிக்கும் பாத்திரங்கள் பதினுயிரம் தயார் செய்து பூமியில் அடியில் அமைக்கப்பட்ட அறைகளில் வைப்பாயாக. 53. எழுபது எண்பது வண்டி உமி கொண்டு வந்து குவித்து வை. 54. சித்தனுகிய யான் ரசவாத வழிகளே வெளிப்படச்சொல்லி விளக்கினேன்; நீ (இந்த ரசவாதம் பலிக்கவேண்டுமென்று) சிவகுருவாகிய முருகவேளின் திருவருட் டுணையை நம்பி எதிர் பார்த்திரு. 55. பாதரசத்துடன் உருகிய சருகுகள், பித்தளே இவைகளே குகைதொறும் நறுக்கி வை. 56. அவசரப்படாமல் 22 நாள் கழித்துப் பார் – எனது வித்தை தவருது - நிச்சயமாக நீ பொன்னே எடுத்துக் கொள்வாய்; நான் பொய் சொல்லும் பேர்வழி யன்று.

57. எழுபது அக்ரோணி (பெருஞ் சேனேக்) கணக்குள்ள புடமிடும் கலங்களுடனும், யானே முதலிய படைகளுடனும் வந்து இரு. 58. நான் பல கோடி பொன் எடுத்துக் கொடுப்பேன், அது கொண்டு நீ ஏழடுக்கு மெத்தை மாளிகை கட்டிக் கொள். 59. பொன் குவியல்களேப் பத்திரப்படுத்தக் கணக்கற்ற தோல் பைகளே உடனே கொண்டு வந்து உன் அருகே அடுக்கி வை. 60. நீ விரும்பிய சகல பொருள்களும் உனக்குக் கிடைப்பது சத்தியம்; ஏழுலகினரும் மிக்குள எனும்படி செய்துள்ளோம். 61. நான் கடைசியாய்ப் பார்வதி திருமணத்தின்போது தேவர்களுடன் விருந்து உண்டது; ஆதலால் 62. எனது நெடும்பசி நீர, விசேஷ அமுது உண்ணக் கொடு. 63. ஆறுபோல நெய் வார், வற்றல் வை, நூறு பானே பொரியலே இங்கு வரவழைப்பாயாக. 64. மாவடு, வடை, உப்புள்ள கீரை எல்லாம் வை. 65 - 68. மாமிச உணவில் உடும்பு, ஆடு, பன்றி, ஆமை வேண்டும், கண்டறியாத முயல் குழம்பு, மீன் வகைகள் இஷ்டமாக உண்பேன்; நிரம்ப வை. 69 - 70. சுரக்காய் கறி, புளிக்கறிகள் வேண்டும்; தாகம்தீரப் பால், தேன் நிறைய வார்ப்பாயாக. 71 - 72. சர்க்கரை, பலாப்பழம், வாழைப்பழம் நிறைய இலேயில் வை; ஈற்றில் வெற்றிலே பாக்குக் கொடுத்துத் தீபாராதனே செய்; இவ்

வாறு எல்லாம் செய்து யாரும் போற்றச் சுகமாக நீ வாழ்வா யாக. (இந்த சித்துகள் எல்லாம் பெரிதல்ல. ஒரு உண்மையை உனக்கு இதோ தெரிவிக்கின்றேன், அதுதான்) —

73 - 84. பார்வதி மைந்தன், மன்மதனிலும் அழகன், ஈகைக் கடல், சரவணபவன், அறிஞன், மௌன சுகாசனன், மூலகாரணன், சகலகலா வல்லவன், வள்ளி நாயகன், கடலைக் கோபித்த(வன்) திருமால் மருகன், அறுமுகன், வெட்சி மாலை யன், கிரவுஞ்சத்தை வேலால் அட்டவன், நக்கீரருக்கு அபயம் அளித்தவன், கோபமற்ற குணப்பெருஞ் செல்வன், வேத புராணங்களுக்கு உற்பத்தி ஸ்தானமானவன், மௌன ஞான நிலையினன், சிவனுர் மகிழ அகத்தியருக்குத் தமிழ் போதித் தவன், வேதமூர்த்தி, திருத்தணியில் வீற்றிருக்கும் கார்த்தி கேயன்.

85-96. வேள்வி காவலன், பொன்னுலகில் தேவர்கள் குடியேற வழி திறந்தவன், பகைவர்களையும் அசுரர்களையும் தண்டிப்பவன், அமராவதியைக் காத்தவன், ஞானசொரூபன், ஞான சூரியன், ஞானகுரு, தேவர் சிகாமணி, பிரமனைப் புறக் கணித்தவன், என்றும் புதியன், அடைந்தார்க்கு அருள்பவன், மேருவை அட்டவன், தாருகனைப் பங்கப்படுத்திய பிரான், சிறந்தோன், சேவற் கொடியுடன் போர்க்களத்தில் மயில்மிசை வந்த வரதன், பயமிலி, பேரறிஞன், சுவாமி, கருத்துக்கு எட்டாதவன், சத்ய சொரூபன், புகழ்பெற்ற கலைச்செல்வன், அடியாரால் விரும்பப்படுபவன், கவலையற்றவன், அசுரர் களுக்குப் பயம் ஊட்டுபவன், செவ்வேள், கங்கையின் புத் திரன், சூரனை அட்டவன், வினையை அறுப்பவன், நினைத்ததை அளிப்பவன், என் மனத்துயர் ஒழித்து, என்னை முன்னுக்குக் கொண்டுவந்த க்ருபைக்கடல் — ஆகிய வேலாயுதக் கடவுளின் திருப்புகழைக் கற்றவரே, உண்மையில், ஞானிகள் போற்றும் சகல சித்தர்களினும் பிரசித்திபெற்ற மஹா சித்தர் ஆவார்.

—:o:—

## சித்து வகுப்பு

## அநுபந்தம் 1

[ பெரும்பாலும் "பொருட்பண்பு நூல், பயிர் வகுப்பு, குண பாடம், மூலிகை வகுப்பு"—என்னும் நூலினின்றும், அனுபோக வைத்தியம் என்னும் நூலிலிருந்தும் எடுத்த குறிப்புக்கள். ஒவ்வொரு பொருளின் பக்க எண்கள் வகுப்பின் எந்த அடியில் அப்பொருள் வருகின்றது என்பதை விளக்குகின்றது. விவரம் அவ்வந் நூல்களிற் காண்க.]

**அகத்தி–11 :** இதன் இலை, பூ, பட்டைகள், வேர் நான்கும் உபயோகப்படும். (1) அகத்தி இலை இடு மருந்தின் தோஷத்தை நீக்கும்; பித்தத்தைத் தணிவிக்கும்; உணவைச் செரிப்பிக்கும்; கடுவனையும், வாயுவையும் உண்டாக்கும். அடிக்கடி புசித்தால் சொறி, சிரங்கு வரும்; ரத்தம் குறையும்; கழிச்சல் உண்டாகும். ஆனால் வயிற்றுப் புழு ஒழியும். (2) அகத்திப் பூ — இதன் சாற்றைக் கண்ணிற் பிழிய கண் நோய் நீங்கும். பூவைச் சமைத்து உண்ண வெப்பு தணியும். (3) வேர்ப்பட்டை மேகம், மெய்யெரிவு இவைகளைப் போக்கும்.

**அகில்–13 :** அகிற் கட்டையை நீர் விட்டுச் சந்தனம்போல அரைத்துப் பூசிக்கொண்டு வர, தளர்ந்த உடல் இறுகும். இதன் புகை மணத்தால் சில சுரம் நீங்கும்.

**அத்தி–8 :** அத்திக்காயைச் சமைத்து உண்டுவரின், பிணிகள் நீங்கும்; மலம்போம். அத்திப் பால்–நீரிழிவு, சூலை இவைகளைப் போக்கும். அத்திப் பிஞ்சு–ரத்தமூலத்தைப் போக்கும்,

**அதிமதுரம்–17 :** இது ஒரு செடியின் வேர். புண், நீர் வேட்கை, விக்கல், எலும்பு பற்றிய நோய், காமாலை, வெப்பு என்னும் நோய்களின் வன்மையைக் குறைக்கும். கோழையை இளகச்செய்யும்.

**அதிவிடயம்–19 :** செடி வகுப்பைச் சேர்ந்தது. பயன்படும் உறுப்பு - வேர். இது புண், முறைச்சுரம், கோழை, வாந்தி இவைகளைப் போக்கும்.

**அபின்–18 :** (அபினி) கசகசாக் காயைக் கீறி அதினின்று வடியும் பால் உறைந்திருப்பதற்கே 'அபின்' எனப் பெயர். இதனால் குன்மம், காதுநோய், பல்வலி போகும்: உடலுக்கு வன்மை தரும். அதிக அளவில் செலுத்தினால் கொல்லும்.

**அமுக்கினுங்கிழங்கு–11:** (அமுக்குரவு) இக்கிழங்கு சுரப்பான், சுரம், வீக்கம், இவைகளைப் போக்கும்; பசியை உண்டாக்கும். கிழங்கைப் பொடி நெய் முதலியன செய்து பயன்படுத்தில் அழகு, உறுதி, நீண்ட ஆயுள் பெறலாம். 'அமுக்கிணை' என்பது 'அமுக்கிரி' என இருக்கவேண்டும் போலும்.

**ஆசு–7:** இலைக்கொழுந்து உடல் வன்மையைப் பெருக்கும். மரப்பட்டை, வேர்ப்பட்டை புண்களை ஆற்றும். மரத்தினின்று வடியும் பால் பாதத்துப் பித்த வெடிப்புக்குத் தடவலாம்.

**அரிசி–21:** கார் அரிசி, சம்பா அரிசி முதலிய; பச்சை அரிசி பித்த எரிச்சலை நீக்கும். புழுங்கல் அரிசி குழந்தைகள் மருந்துண்போர் இவர்களுக்கு உதவும்.

**அரிதாரம்–18:** தாளக பாஷாணம். "குன்மம் எட்டும் பேருங்காண் .......... அரிதாரத்தால்"—பதார்த்த. 1157. கஸ்தூரி– "மான் வயிற்றின் ஒள்ளரிதாரம் பிறக்கும்"— நான்மணி. 6.

**அலரி–13:** பூ - காய்ச்சல், பித்தநோய் நீக்கும். வேர்ப் பட்டை - உயிரைப் போக்கும். நல்லெண்ணெயுடன் காய்ச்சி காதில் 2 துளி விட காது சீ, வலி, புண் இவைபோம்.

**அவுரி–9:** (நீலி) இச் செடியினின்றும் நீலம் (நீலமருந்து) எடுக்கப்படுகிறது. வேர் – நஞ்சுகளை முரிக்கும். காமாலை, கீல்வாதம் இவைகளைப் போக்கும். 'எல்லா விஷங்களுக்கும் ஏற்ற முறிப்பாகும் ... குன்ம முதல் பன்னோய் ஒழியும் அவுரி தரும் வேருக் கறி'.

**அழிஞ்சில்–14:** (செம்மரம்) விதை, பட்டை உபயோகப் படும். அழிஞ்சில் வேர்ப்பட்டை - பூரான்கடி முதலிய நஞ்சுகளை நீக்கும்.

**அறுகு–14:** ஈளை, கண்ணோய், தலைநோய் இவைகளைப் போக்கும். அறுகின் கிழங்கால் வெப்பம் நீங்கும்.

**அனலம்–16:** இது 'கொடுவேலி'. கொடுவேலி பார்க்க.

**ஆத்தி–12:** திருவாத்தி—போக காமிக்குப் பல் விளக்க உரியது. 'சம்பு மகிழ் ஆத்தி' (சைவ சமய–பொது 29).

**ஆமலகம்–22:** இது நெல்லி. பகலில் உண்ண நெல்லிக் காயால் வாந்தி, மயக்கம், மலபந்தம் போம்.

ஆயில்–15: இது பூதிகம் என்றும் வழங்கும் மரம். பட்டை உபயோகப்படும். வாதாதி முத்தோஷங்களையும் பழைய சுரத்தையும் போக்கும். பட்டையை இழைத்து மேல் பூச, வெளுத்த தோல் (வெண்குட்டம்) கறுக்கும்,

ஆரைக்கீரை–10: ஒரு தண்டில் நான்கு இதழ்கள் கூடிய பூண்டு. இது சமைத்துண்ண நீரிழிதல், அழல்நோய் போம்; குறிப்புரையும் பார்க்க.

ஆல்–12: இலை, பழம், விழுது, பால், பூ - உபயோகப் படும். பால் அசைகின்ற பல்லை இறுக்கும், விந்துவைப் பெருக்கும். பட்டை குடிநீரிட்டு வாய் கொப்புளித்தால் வாய்ப்புண் போம்; இலை - வதக்கிக் கட்ட மேகக் கட்டி உடைந்து சீ(ழ்) நீங்கும்; ஆலங்குறிச்சி - பல் உறுதிக்கு நல்லது.

ஆவிரை–15: இதுதான் ஆவாரம்செடி - இலை, பூ, பட்டை உபயோகப்படும். நீரிழிவு, உட்சூடு, புண், எலும்பைப்பற்றிய சுரம் இவைபோம். பூவை வதக்கிக் கண்ணுக்கு ஒற்றடம் இடலாம். பூவைக் குடிநீரில் இட்டுப் பால் சேர்த்துச் சாப்பிட உட்சூடு தணியும்.

இரும்பிலி–15: குறிப்புரையிற் பார்க்க (பக்கம் 484).

இருவேலி-10: வெட்டிவேர், குறுவேர் எனப்படும்; காமாலை, சுரம், தலைநோய், கழுத்து நோய், கண்ணோய் - நீக்கும். குறிப்புரையும் பார்க்க (பக்கம் 483).

இறலி–15: இது 'இத்தி' எனப்படும், இது கழிச்சல், பெரும்பாடு, உட்சூட்டுப் பிணி இவைகளைப் போக்கும்.

எருக்கிலை–11: எருக்கிலையினால் எலிக்கடி நஞ்சு, பாம்பு நஞ்சு, வயிற்றுப் புழு, மலக்கட்டு இவைபோம். இலையை வதக்கிக் கட்டிகளுக்குக் கட்ட அவை பழுத்து உடையும். இலையை உலர்த்திப் பொடி செய்து ஆறாத புண்களுக்குப் போடப் புண்கள் உலரும்.

எலிப்பகை இலை–24: பூனை வணங்கி எனப்படும் குப்பை மேனியின் இலை' இந்த இலையால் பல்லடி நோய், வயிற்று வலி, கோழை, திமிர்வாதம் நீங்கும்.

"தந்தமு லப்பிணிதீத் தந்திடுபுண் சர்வவிடம்
உந்துகுன்மம் வாதம் உதிரமூ - லந்தினவு
சூலஞ் சுவாசம் தொடர்பீந சங்கபம்போம்
ஞாலங்கொள் மேனியத னால்" —(தே. கு.)

ஏலம்–22: (1) பெரிய ஏலம், (2) சிற்றேலம், (3) காட்டு ஏலம். (4) மலை ஏலம் என்னும் வகையது. (1) இருமல், நீர்ச் சுருக்கு, கோழைக்கட்டு இவைகளைப் போக்கும். (2) நீர் வேட்கை, கபம் இவைகளைப் போக்கும். (3) வாந்தி, கழிச்சல் இவைகளைப்போக்கும். (4) நாவறட்சி, சொறி, நீர்ச்சுருக்கு இவைகளைப் போக்கும்.

ஒடுவை–9: 'தான்றியும் ஒடுவையும்' — மணிமே-6-80. இது நிலப்பாலை; 'ஒடு மரக் கிளவி' (தொல். எழுத். 262) Lexicon. இது 'ஒடுக்கன், ஒடுக்கு' மரம் எனின் கட்டிகளை யும் அரையாப்புக் கட்டிகளையும் கரைக்கும்.

ஓரிதழ்த்தாமரை–8: வேறுபெயர் – 'சூரியகாந்தி' 'ரத்ன புருஷ்' என்பன; சிறு செடி. இதன் குணம்: சுக்கிலம் கட்டும், உடலுக்கு அழகு தரும்.

கக்கரி–7: இது முள் வெள்ளரிக்காய்.

'' கக்கரிக்காய் பித்தம் கடியும் கபம் உயர்த்தும்
மெய்க்குக் குளிர்ச்சிதரும் மென்னுதலே - முக்குகின்ற
மூல அழல் தணிக்கும் மூடிரத்த பித்தத்தைச்
சால அகற்றிவிடும் சாற்று ''
—(அகத்தியர் குணபாடம்).

கச்சோலம்–21: இது கிச்சிலிக் கிழங்கு. 'பூலா' என்றும் பெயர். இதனுல் கபநோய், கீல் பிடிப்பு நீங்கும். 'கிச்சிலி யின் ஒண்கிழங்குக்கபமும் பூட்டு முடமும் புண்ணும்போம்'— (அகத்தியர் குணபாடம்).

கடிப்பகை-23: வேம்பு, வெண்கடுகு. விளாமரத்துக்கும் கடிப்பகை என்று பேர். விளாங்காய் கழிச்சல் வகைகளைப் போக்கும். விளாம்பழம் ஈளை, இருமல், கோழை இவைகளைப் போக்கும்; பசியை உண்டாக்கும்; உடலுக்கு நன்மைசெய்யும்.

'' எப்போதும் மெய்க்கிதமாம் ஈளை இருமல் கபமும்
வெப்பாரும் தாகமும்போம் மெய்ப்பசியாம் – இப்புவியில்
என்ருகி லுங்கனிமேல் இச்சைவைத்துத் தின்னஎண்ணித்
தின்ருல் விளாங்கனியைத் தின் ''–குறிப்புரையும்பார்க்க.

கடுக்கை-12: என்பது கொன்றை. இதன் இலை மலத் தைக் கழிக்கும்; படர் தாமரையைப் போக்கும்; இதன் பூ வயிற்றுப் புழு, நீரிழிவு, குடல்நோய் இவைகளைப் போக்கும். இதன் வேர்ப்பட்டை வண்டுகடி, சொறி இவைகளைப் போக் கும். கடுக்காயைக் கடுக்கை என்று கூறியிருந்தால் - கடுக்கா

யின் குணங்கள் :- துவையல் அரோசகத்தைப் போக்கும்; காலை யில் கடுக்காயை ஓராண்டு சாப்பிட்டால் நரைதிரை மாறும்; பச்சைக் கடுக்காயைப் பாலில் அரைத்துச் சாப்பிட இருமல், ஈளை நீங்கும்.

**கடுகுரோகணி-28 :** ஒரு செடி. இதன் வேர் பயன்படுவது. மாந்தம், சுரம், சீதக் கழிச்சல் இவைகளைப் போக்கும். "புண் வயிறு நோயிவை போம் பொற்கொடியே! பேதியுண்டாம் திண்கடுகு ரோகணிக்குத் தேர்" – (அகத்தியர் குணபாடம்).

கடுகுரோகணி – கறுப்பு இனம். இதனால் சூதகக் கட்டு, காக்கை வலி, வெறி இவை போம்; பச்சை இனம்-இது சுரம். பிள்ளைத்தாய்ச்சிக்கு உண்டாகும் வலி இவைகளைப் போக்கும்.

**கத்தாரி-9 :** (கத்தரி) பிஞ்சு — பித்தம், கபம் இவைகளைப் போக்கும். காய் – சிரங்கை விளைவிக்கும்.

"கத்தரிக்காய் பித்தம் கனன்ற கபம் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடும் –
மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத்தோஷம்போக்கும்
மஞ்சார் குழலே வழுத்து"—(அகத். குணபாடம்.)

**கந்தகம்-18 :** ஒருவகைத் தாதுப் பொருள்; முருங்கை, வெண்வெங்காயம், வெள்ளைப்பூண்டு இவைகளையும்குறிக்கும்.

**கருங்கணி-21 :** பருத்திவகை – இதனால் சீழ்வெள்ளை, குருதி வெள்ளை, புண், வீக்கம் போம்.

**கற்பிசின்-24 :** இது பிசின்பட்டையாயிருக்கலாம். பட்டை ஓர் அங்குல கனம் உடையது. உடலின் வெப்பத்தைத் தணிக்கும்.

"வாய்வை – நிசமாகக் கொல்லும், உடம்பின்
கொதிப்பை ஒருநொடியில் வெல்லும் பிசின்பட்டை"
—(அகத்தியர் குணபாடம்).

**கற்றுழை-9 :** கற்றாழை வற்றல் பிணியைக் கண்டிக்கும்; மேகம், பெரு வியாதி, மூலம், குன்மம் இவைபோம்.

**காஞ்சிரம்-10 :** இது 'எட்டி'; நரம்புகட்கு வன்மைதரும். வாந்தி, கழிச்சல் இவைகளை உண்டாக்கும்.

**காரை-13:** இந்தச் செடிக்கு முள் உண்டு. காரைப் பழம் குருதிப் போக்கையும் கழிச்சலையும் நீக்கும். இலைக்குக் குருதிக் கடுப்பு நீங்கும். குறிப்புரையும் பார்க்க (பக்கம் 484).

**கிருமி சத்துரு-19:** பலாசம்விதை, கிருமிநாசம் எனப்படும். இம் மரத்தின் இலை, பூ, விதை, பட்டை, பிசின் பயன்படும். புரசு பார்க்க (பக்கம் 528).

**கிலுகிலுப்பை-7:** இது நரி மிரட்டி, பேய்மருட்டி எனப்படும் பூண்டு. காய் காய்ந்திருக்கும்போது, காற்றுவீசக், காய்களின் விதைகள் கிலுகிலு என்று ஒலிக்கும். ஒலியைக் கேட்கும் நரி மிரண்டு ஓடுமாம். இது உமிழ்நீர்ப் பெருக்கைக் குறைக்கும்; சொறி, சிரங்குகளைப் போக்கும்.

**கீரி-34:** கீரிப் பூண்டு – பசியைத் தூண்டிக் கழியச் செய்யும். தூக்கத்தை உண்டாக்கும். கடி நஞ்சுகளைப் போக்கும். ஆனால் இங்குக் 'கீரிப்பிள்ளை'யைத்தான் குறிக்கும்.

'மங்கலான சிவப்பு நிறத்தில் கொத்துக் கொத்தாக மலர்கள் பூத்து நிற்கும் சர்ப்பகந்தி எனப்படும் சின்னஞ்சிறு செடிகளின் இலைகளை மிகப் பிரியத்தோடு கீரிப்பிள்ளை சாப்பிடும். இது நமது நாட்டு மலைகளில் ஏராளமாக வளரும். இந்த மூலிகையைப் பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு ஜெர்மன் டாக்டர் நுட்பமாக ஆராய்ந்து அதன் அதிசய சக்திகளை வைத்ய உலகுக்கு எடுத்துக் கூறினர். அதன் பயனாக இம் மூலிகையிலிருந்து உருவானதே ஸர்பெண்டனு எனும் மருந்து. பொதிகைமலை நாடுகளில் வசிக்கும் மக்கள், குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும்போதே பாம்பு வேர் என்னும் இம் மூலிகையின் வேரைப், பாலுடன் கரைத்துக் கொடுப்பதால் கொடிய 'பாம்பு விஷம்' பின் இவர்களைப் பாதிப்பதில்லை. இச்செடிகளில் மூன்று வகை இருக்கின்றன. பைத்தியம், விஷம், ரத்தக் கொதிப்பு, ரணம் முதலியவைகளை குணப்படுத்தும் அபூர்வ மூலிகை'. — கல்கி – ரவிசந்திரிகா.

**கீரை-23:** முளைக் கீரை — இருமல், சுரத்தை நீக்கும்; கலவைக்கீரை - குடல் வாயுவைப் போக்கும்; சிறுகீரையால் கண் புகைச்சல், புண் இவைபோம்; பசலையால் நீரடைப்பு, வாந்தி போம்; வசலை – மலத்தை இளக்கும்; பருப்புக்கீரை – குளிர்ச்சிதரும்; குடல் நோய் போம்; புதினா — வாந்தி, செரியாமை போக்கும்; புளியாரையால் மயக்கம், மூலம் போம்; கீரைத்தண்டால் வயிற்றுக்கடுப்பு போம்.

குறிஞ்சிலி-9: குறிப்புரை பார்க்க. (குறிஞ்சான் என்னும் கொடி – சந்நி சுரம் போக்கும்; வாதம், சீதம் நீக்கும்) – சிறு குறிஞ்சான் வேர் விஷத்தைத் தீர்க்கும்.

குன்றி-26: குண்டுமணி-சிவப்புக் குன்றிமணிப் பருப்பினல் கண்ணோய், காமாலை நீங்கும், சுக்கிலம் பெருகும்.

கொடிக்கழல்-12: (கழற்சிக் கொடி) இது கஜ்ஜக்காய். இதன் இலை அண்ட வாயுவை ஒழிக்கும்.

"விரைவாதம் சூலையறும் வெட்டையன லேகும் ...
கழற்சியிலை என்றுரைக்குங் கால்" —(அ. கு.)

கழற்சிப் பருப்பால் விரை வீக்கம் போம்.

"கழற்காய் விதைக்குக் சுன அண்ட வாதம்
தழற்பக்கச் சூலை குன்மம் சாந்தி"—(அ. கு.)

கொடுவேலி-10: இது 'சித்ரமூலம்' என்னும் கொடி. கருங் கொடிவேலி, செங்கொடிவேலி, வெண்கொடி வேலி என மூவகைத்து. கட்டி, புண், மூலம், பெருவயிறு, நச்சுச் சுரம் போம். "கனத்த பெருவயிறும் அட்டுங் கொடுவேலியாம்" (அ. கு.). 'விஷமச் சுரந்தான் பொட்டெனப் பறந்துபோகும் புகழ்கொடி வேலி கண்டால்' (ஏடு) - குறிப்புரையும் பார்க்க.

கொத்தமலி-23: (கொத்துமல்லி) சிறுசெடி வர்க்கம். உட்சூடு, நளிர் சுரம், வாந்தி, பெரு ஏப்பம், புண் – இவை போம்.

'கொத்துமல்லிக் கீரை யுண்ணில் கோர அரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்' — (அ. கு.)

விதையை வாயிலிட்டு மெல்ல, வாய் நாற்றம் நீங்கும்.

கோட்டம்-24: ஒரு வேர். வெண் கோட்டம், செங் கோட்டம் என இருவகை. இதன் புகையால் தூக்கம் உண் டாகும். இதன் வேர் பூச்சி கடிக்காமல் இருக்கவும், அதன் மணத்திற்காகவும் பயன்படுத்தப்படுகிறது. இதனல் கண், தாடை, வயிறு, கழுத்து, தலை, நா, வாய் இவ்விடங் களில் உண்டாகும் நோய்கள், சுரம், இரைப்பு, எலி, பாம்பு முதலியவைகளின் நஞ்சுகள், பயித்தியம் இவைபோம்.

கோலி-12: 'திப்பிலி' — திப்பிலி - பார்க்க. கோலி — இலந்தைக்கும் பெயர். "பித்த மயக்கருசி பேராப் பெரு வாந்தி ......... முடிந்திடுங்காண் - மெத்த உலர்ந்த வெறும் வயிற்றில் உண்டால் எரிவாம் இலந்தை நறுங்கனியை எண்" (அ. கு.); குறிப்புரையும் பார்க்க (பக்கம் 484).

**கௌரி பாஷாணம்-50 :** பாஷாணம் இருவகைத்து:

I. **வைப்புப்பாஷாணம்**–செயற்கைப்பாஷாணம்–Prepared arsenic : முப்பத்திரண்டு வகை :

(1) அமரசிலைக் கந்தகம், (2) அயத் தொட்டி, (3) இந்திர பாஷாணம், (4) இரசித பாஷாணம், (5) இரத்த பாஷாணம், (6) இலவண பாஷாணம், (7) எருமை நாத் தொட்டிப் பாஷாணம், (8) கருமுகிற் பாஷாணம், (9) காக பாஷாணம், (10) குங்கும பாஷாணம், (11) கோடா சொரிப் பாஷாணம், (12) கோழித் தலைக் கந்தகம், (13) கவுரி பாஷாணம், (14) சௌவீரம், (15) சாதிலிங்கம், (16) சூதம், (17) செப்புத்தொட்டி, (18) சோரபாஷாணம், (19) தீ முறுகல், (20) துத்தம், (21) துரிசு, (22) தொட்டி, (23) நாக பாஷாணம், (24) நீல பாஷாணம், (25) பஞ்ச பட்சிப் பாஷாணம், (26) பவளப் புற்றுப் பாஷாணம், (27) பூரம், (28) பொற்றொட்டி, (29) மிருதார சிங்கி, (30) வாண கந்தகம், (31) வெள்ளைப் பாஷாணம், (32) வைப்பரிதாரம்.

II. **பிறவிப் பாஷாணம்** – Mineral poison, especially arsenic in its natural state : முப்பத்திரண்டு வகை :

(1) அங்கிரமாதி பாஷாணம், (2) அஞ்சன பாஷாணம், (3) அப்பிரக பாஷாணம், (4) அவுபல பாஷாண்ம், (5) இலிங்க பாஷாணம், (6) கந்தக பாஷாணம், (7) கரட்டுத் தாளகம், (8) கர்க்கடக பாஷாணம், (9) கற்பரி பாஷாணம், (10) கற் பாஷாணம், (11) காய்ச்சற் பாஷாணம், (12) காந்த பாஷர்ணம், (13) கார்முகிற் பாஷாணம், (14) குதிரைப் பற் பாஷாணம், (15) கோளக பாஷாணம், (16) கௌரி பாஷாணம். (17) சங்க பாஷாணம், (18) சர காண்ட பாஷாணம், (19) சாலாங்க பாஷாணம், (20) சிலாமத பாஷாணம், (21) சீதாங்க பாஷாணம், (22) சீர்பந்த பாஷாணம், (23) சூத பாஷாணம், (24) தகட்டரி தாரம், (25) தாலப பாஷாணம், (26) துத்தபாஷாணம், (27) தொட்டிப் பாஷாணம், (28) பலண்டுறுக பாஷாணம், (29) பறங்கிப் பாஷாணம், (30) மஞ்ஞசிலை, (31) மிருத பாஷாணம், (32) வெள்ளைப் பாஷாணம்.

**சங்கம்-8 :** சங்கஞ் செடி – இதன் இலை வேர் - கரப்பான், வெப்பம், குன்மம், பித்தநோய், நஞ்சுகள்இவைகளை நீக்கும். கண் துலக்கமும், மிகு பசியும், குருதிப் பெருக்கமும் உண்

டாகும். இதன் வேர்ப்பட்டை கோழை, இருமல், உட்சுரம், வயிற்றுப் புழு இவைகளைப் போக்கும்.

"சங்கம் வேர்ப்பட்டை சளியிரும லைச்சுரத்தை ......
கிருமியை ...... ஒழிக்குமால்" (8)—(அ. கு.)

**சச்சு இலை-24 :** சச்சு – என்பது நீர்ச்சுண்டி என்னும் நீர்ப் பூடு; ஆற்று நெட்டி; குளக்கரை ஓரங்களில் பயிராகும். இலையைச் சமைத்துண்பார்கள். இலை தீண்டினவுடனே சுணங்கும். இலையை வதக்கி ஒற்றடமிட்டாலும், கட்டினாலும், வலி, வீக்கம் போகும்.

**சண்பகம்-9 :** மரம் – இதன் பூ சுரம், கண் அழலைப் போக்கும்; பூக்களிலிருந்து நறுமணமுள்ள அத்தர் செய்யலாம்.

**சணவு-27 :** (சணுவு) கையாந்தகரை – கரிசிலாங்கண்ணி – இது நீலம், மஞ்சள், சிவப்பு, வெள்ளை – நாலு இனம். இதனால் காமாலை, குட்டம், பாண்டு, பல் நோய் போம். 'மேதை' என்பதைப் பார்க்க.

"குரற்கம்மல் காமாலை குட்டமொடு சோபை,
உரற்பாண்டு பல்நோய் ஒழியும்" —(அ. கு.)

**சதகுப்பி-23 :** (சதகுப்பை) பூண்டு வகுப்பைச் சேர்ந்தது. இதனால் தலைவலி, காதுவலி நீங்கும்; பசி உண்டாகும். இது சூட்டுடம்புக்கு ஆகாது. சதகுப்பி விதையை இடித்து 1 தோலா முதல் 3 தோலா வரை எடுத்துப் பத்துபலம் வெந்நீரில் ஊறவைத்துக் கொடுக்க, குழந்தைக்கு உண்டாகும் மாந்தம், பெரியவர்க்கு உண்டாகும் வயிற்றுவலி முதலிய போம்.

**சம்பிராணி-25 :** (i) (சாம்பிராணி) ஒருவகைச் செடியின் பட்டையிலிருந்து வடிந்து, உலர்ந்துபோன ஒருவித நறுமணமும் கார்ப்பும் உள்ள பிசின். இதில் Benzoic acid என்கின்ற சத்து இருக்கின்றது. நாள்பட்ட இருமல், மார்சளி இவைகளைப் போக்கும். இதன் புகை நுண் புழுக்களையும் கெட்ட நாற்றத்தையும் போக்கும். சாம்பிராணித் தைலம்-தலைவலி, நீரேற்றம் இவைகளைப் போக்கும்.

(ii) சாம்பிராணிப் பூண்டு அல்லது பிரமிய வழுக்கை, (சப்தளை) எனப் பெயரிய ஒருவகைக் கொடிப் பூண்டு உண்டு, இது கால்பிடிப்பு, கைகால் எரிவு, மலபந்தம் முதலியவற்றைப் போக்கும்.

**சம்புநாவல் – 13 :** கருநாவல் — சம்புநாவல் எனப் பல வகைகள் உள்ளன. இதன் பழம் வளி, தீக் குற்றங்கள், மிக வெப்பம் உண்டாக்கும். நீர் வேட்கை நீங்கும். கொட்டையை மிகுந்த அளவில் உண்டால் நஞ்சாம். இத் தீங்கை முறிக்க நெல்லிக் கனியை மென்று தின்று குளிர்ந்த நீர் குடிக்க வேண்டும்.

**சிந்துவாரம்–13 :** இது நொச்சி. இதன் இலையை வதக்கி ஒற்றடமிட வீக்கம், கீல்வாயு முதலியன தீரும். நொச்சிஇலையை நீரிலிட்டுக் காய்ச்சிப் பிள்ளை பெற்றவர்களைக் குளிப்பாட்டுவதுண்டு. வெந்நீரில் இலையை வேகவைத்து நீராவி பிடிக்க, வியர்வை உண்டாகிச் சுரம் தணியும். குறிப்புரையும்பார்க்க.

**சிவிதை-28 :** இது சிவதைப் பூண்டு. இதனால் உள்மூலம், பித்தவாத நோய்கள் போம். வெள்ளைச் சிவதை வயிற்றுப் புழுக்களை வெளியாக்கும். கருஞ் சிவதை கழிச்சலை உண்டாக்கும்.

**சீரகம்–28 :** சீரகச் செடி — இதன் விதை பயன்படும். இதனால் வயிற்றுவலி, காசம், வளிநோய்கள் விலகும். இது உடலுக்கு வலுவைத் தந்து கண்ணுக்குக் குளிர்ச்சி தரும்.

"வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காயம் நெகிழாது கண் குளிரும் – தூய மலர்க்
காரளகப் பெண் மயிலே! கைகண்ட தித்தனையும்
சீரகத்தை நீ தினமும் தின்" — (அ. கு.)

**சுரைக்காய்-69 :** கொடி, இலை, காய், விதை பயன்படும். கொழுந்து, இலை இவற்றால் நீர் இறங்கும், வீக்கம்போம்.

"நீரிழியும் வீக்கம் போம் நேரே மலமிறங்கும்
பாரமுறு சோபை பறக்குங் காண் – தீராத்
திரிதோஷம் போகும் செறிந்த சுரையின்
உரிய கொழுந்திலையை உண்" — (அ. கு.)

**சூரை–13 :** இது 'காரை' இனத்தைச் சேர்ந்த ஒருவகை எனக் கூறலாம். இதனால் மந்தம், குடல்வலி உண்டாகும்.

"மந்தம் அதிகரிக்கும் வன்சீ தளஞ்சேரும்
உந்து குடல்வலியும் உண்டாங்காண் - முந்துநவில்
காரைப் பழத்தில் கதித்ததொரு பேதமுமாம்
சூரைப் பழத்திற்குச் சொல்"

குறிப்புரையும் பார்க்க (பக்கம் 484).

**செம்பிராகை-8 :** இது விளங்கவில்லை. செம்பை — ராகி என்றிருக்கலாம். கருஞ் செம்பை இலையால் புண், கட்டி கரப்பான்போம். பூவால் தலைக் குத்தல், சலதோஷம் நீங்கும். ராகி-(8) என்பது கேழ்வரகு. கேழ்வரகின் கூழால் பெருவயிறு குணமாகும். எளிதில் செரிக்காது – உடலுக்கு வலுவைக் கொடுக்கும். உழைப்பாளிக்கு ஏற்றது.

**செருப்படை-*11* :** ஒரு படர்கொடி. மந்தம், குன்மம், சூலை இவை தமை நீக்கும்.

> செருப்படைக்கு வாதமந்தம் சேர்வான மேகம் ......
> ... சூலையொடு வாத குன்மம் தோற்று ...... (அ. கு.)

**தக்கோலம்-*20* :** பாண்டு, சுரம் போக்கும். "பாண்டு சுரம் போகும் பகரிற் பலஞ் சேரும் ...... தாது விர்த்தியாகும் தளர்ந்த மலமும் கட்டும், கோதகலும் தக்கோலம் கொள்' (அ. கு.). குறிப்புரையும் பார்க்க (பக்கம் 486).

**தமரத்தை-*11* :** இதன் பழம் உபயோகப்படும்

> "வாதபித்தம் வாதகபம் வாந்தி குரல்கம்மல் கண்ணோய்
> தாதுநஷ்டம் பித்தந் தலைநோயோ - டோதுசித்தத்
> துற்ற பிரமையும்போம் ஒண்டொடியே ! மாபுளிப்பாம்
> நற்றமரத் தம்பழத்தை நாடு"

பழச்சாறு துணிகளில் உள்ள கறையைப் போக்கும்.

**தழுதாழை-*14* :** இது வாதமடக்கி; இலையும், வேரும் உபயோகப்படும். பக்கவாதம் முதலிய 80 வாத நோய்கள், மூக்கடைப்பு நோய்கள், குடைச்சல் நீங்கும். ஆனால் அழலை உண்டாக்கும்.

**தாழை-*25* :** இதன் சோற்றினால் சூதகம் முறை தப்பாது உண்டாகும்; பூ–பசித் தீயை உண்டாக்கும்; விழுது-குருதிப் பெருக்கை உண்டாக்கும்: சோகையைப் போக்கும். தாழம் பாயில் படுப்பார்க்கு வாந்தி, தலை சுழற்றல், விலகும். பூவிலிருந்து எடுக்கும் எண்ணெய் தலைவலியைப் போக்கும். காது வலிக்கும் இரண்டொரு துளி விடலாம்.

**திப்பிலி-*23* :** இது கொடிவகை. உலர்ந்த திப்பிலி - இருமல், குன்மம், பாண்டு, மயக்கம், மூக்கு-காது-கண் நோய்கள் ஆகிய நோய்களைப் போக்கும்.

**திரிபலை–18:** கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய் – ஆகிய இம் மூன்றின் கூட்டுறவே திரிபலை. கீழ்வாய்ப் புண், தோலைப்பற்றிய நோய்கள், குத்திருமல் இவைகளைப்போக்கும்.

**துடரி–13:** குறிப்புரையைப் பார்க்க (பக்கம் 484).

**துத்தம்-19:** வைப்புப் பாஷாண வகை. கண் மருந்தாக உதவும் துரிசு, நாய்ப்பாகல், நாணல், நீர்முள்ளி இவைகளை யும் குறிக்கும்.

**துத்தி-8:** செடி. துத்தி இலை மூலம், கட்டி, புண், இவை களைப் போக்கும்.

> " மூலநோய் கட்டி முளைபுழுப்புண் ணும்போகும்
> சால வதக் கிக்கட்டத் தையலே – மேலுமதை
> எப்படியே னும்புசிக்க எப்பிணியும் சாந்தமுறும்
> இப்படியில் துத்தியிலை யை." — (அ. கு.)

**தும்பை–13:** இலை, பூ உபயோகப்படும். இலை - தலைவலி, மூக்கில் உண்டாகும் நோய்கள், இருமல், ஈளை இவைகளைப் போக்கும். தும்பைப் பூவால் – சுரம், கண் நோய் போம்.

**தேட்கடை-12:** தேட் கொடுக்கு எனவும்படும். இலை, பூ உபயோகம்: சிறுதேட் கொடுக்கு, பெருந்தேட் கொடுக்கு என இரு வகை. சிறுதேட் கொடுக்கால் கரப்பான், எலும்புருக்கு இவைபோம். தேள் கொட்டிய நஞ்சு நீங்கக், கொட்டிய வாயில் பெருந்தேட் கொடுக்கின் இலைச் சாற்றைப் பூசலாம். பெருந்தேட் கொடுக்குக்குச் 'சுடுகாடுமீட்டான்' என்றொரு பேர் உண்டு.

**நறும்பிசின்-21:** இது குந்திரிக்கம், பறங்கிச் சாம்பிராணி, குந்துருக்கம், குந்திலிங்கம் எனப்படும். Frank incense என்னும் மரத்தினின்றும் வடிகிறபிசின். நல்ல மணம் உள்ளது.

> " காச சுவாசம் கனத்தமே கக்கட்டி
> வீசு விஷக்கடிவி றுச்சுகுட்டம் – பேசு
> படர்தா மரைசிரங்கு பண்டைவிர ணங்கள்
> இடர்செய்யிற் குந்திரிக்கம் ஏந்து" — (அ. கு.)

**நறுவிலி–7:** மரம். இதன் இலை, பழம், கொட்டை, பட்டை வேர் உபயோகப்படும். இலை – இரைப்பை நீக்கும்; வேர் – எலும்புருக்கியைப் போக்கும்; பழத்துக்கு வெள்ளை போம்.

> " நறுவிலியி லைக்கிரைப்பு நாசம்,அவ் வேர்க்கு
> மறுவில் எலும்புருக்கி மாறும்; - நறுவிலியின்
> தன்பழமி ரத்தபித்தம் சார்மேக முந்தீர்க்கும்
> இன்புற யாவர்க்கும் இசை" — (அ. கு.)

நிமிளை--21: (அம்பரை) Bismuth. பொன் நிமிளை, வெள்ளி நிமிளை, வெண்கல நிமிளை, செம்பு நிமிளை என நான்கு வகை. பொன் நிமிளையும் வெள்ளி நிமிளையும் ஔஷதங் களுக்கு உபயோகப்படும். பொன் நிமிளை (பற்பம்) பஸ்மம் சுக்கில விருத்தி செய்யும், கண்ட ஓசையை சுத்தி செய்யும், கண்ணோயைப் போக்கும்; வீக்கம், மூலம், குட்டம், பாண்டு, காமாலை இவைகளைப் போக்கும். (அனுபோகவைத். ஏழாம் பாகம்).

நிலப்பனை–24: இதன் கிழங்கு, வேர் பயன்படும். இதனால் நீரிழிவு, வெப்பம், வெண்குட்டம், விலாக் குத்தல், கண்நோய் விலகும்.

"மேக அனல் தணியும் வெண்குட்டம் தான்விலகும் ...
சூலைமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போம்
சால நிலப்பனைக்குத் தான்" — (அ. கு.)

நீலி: அவுரி - பார்க்க.

நெய்க்கொடை–12: இது நெய்க்கொட்டையாயிருக்கலாம்; மரவகை; (Soap-nut tree) பூவந்தி, மணிப் புன்கு எனப்படும். இதனால் வயிற்று நோய், தலைநோய், சூதக நோய் விலகும். இதன் காயை (சவுக்காரம) சோப்புக்குப்பதிலாக வழங்கலாம். நெய்க்கொட்டான் மூலத்தைப் பாலிற்கொள்ள விஷக்கடிகள் தீரும்.

பரம்பை–13: இது 'வன்னி மரம்'. இதனால் 'வளிசன்னி, முப்பிணி, நஞ்சு, சொறி நீங்கும். 'வாத சந்தி தோடமறும்... 'விடமும் கபமும் சொறியும்போம்' — (அ. கு.)

பலம்–28: (சாதிக்காய்) 'வசவாசி' என்பதைப் பார்க்க; இதனால் தலைவலி, இரைப்பு, இருமல் போம். ஆனால் மயக் கத்தைத் தரும்.

பழுபாகல் - 14: பாகல் ஆனது — பழுபாகல் அல்லது காட்டுப் பாகல், கொம்புப் பாகல், வேலிப் பாகல் (கொல்லம் பாகல்), நரிப்பாகல், நாய்ப்பாகல், நிலப்பாகல், மிதிப்பாகல் என்னும் வகையது. இதனுள் - பழுப்பாகலால் புழுநோய், தலைவலி, மூலம், தோலைப் பற்றிய நோய்கள் தீரும்.

பாடலம்–16: இது பாதிரி. இலை, பூ, பட்டை, வேர் பயன்படும். பூவினால் சுரம், மேகம் போம்; வேரினால் நீரிழிவு சொறி, சிரங்கு, வயிற்று மந்தம் போம்.

பாலை-14 : கொடிவகையில் ஊசிபாலை; மரவகையில் - ஏழிலைப்பாலை, குடசப்பாலை, தீம்பாலை, மலைப்பாலை, வெட் பாலை முதலியன. ஏழிலைப்பாலையால் சூலை, குன்மம்போம். குடசப்பாலையால் நீரிழிவு, சிரங்கு போம் ; ஊசிப் பாலையால் கண்குளிர்ச்சி உண்டாம், நீர் எரிச்சல் போம் ; தீம்பாலையால் வாந்தி, பித்தம் போம் ; மலைப்பாலையால் விக்கல், வாந்தி, மந்தம் போம் ; வெட்பாலை விதை குடலைப்பற்றிய நோயை நீக்கும்.

பித்திகை-11 : (சாதிமல்லிகை) குறிப்புரையும் பார்க்க.

புரசு-14 : வாதம், பித்தம், கபம் போக்கும். விதையால் வயிற்றுப் புழு, வயிற்றுவலி நீங்கும். இலையை அரைத்துப் பூசக் கட்டிகள் அமுங்கும். பட்டைச் சாற்றையும் இஞ்சிச் சாற்றையும் கலந்து சாற்றையும் கலந்து சாப்பிட, பாம்புகடி நஞ்சு நீங்கும். புரசு மூலத்தைப் பாலிற் கொள்ள எலி விஷம் போம்.

புன்கு-14 : இதன் இலை, பூ, விதை, வேர், எண்ணெய் பயன்படும். விதையினல் கால் புண், காது நோய், கண்ணேய் நீங்கும் ; மலத்தைக் கட்டும். வேர் - வாதக் குடைச்சல், பாம்பு நஞ்சு இவைகளை நீக்கும்.

பூரி-27 : பூரி மரம் - இது 'ஆளைப் புளியமரம்' - இதன் விதைப் பருப்பை அரைத்து மோருடன் கலந்து குடிக்க அதிசாரம், சீதபேதி குணப்படும். பூரி மரத்தின் பட்டையின் சத்தை குவைனுவிற்குப்(quinine) பதில் உபயோகிக்கிருர்கள்.

பூலா-14 : (1) நீர்ப்பூலா-இதன் இலை, வேர் பயன்படும். இதனல் மாந்தம், கணச்சூடு, சொறி, சிரங்கு தீரும்.

"சொரி சிரங்குந் தீருங்காண் ...... நீர்ப் பூலாப்
பூண்டை நினை" — (அ. கு.)

(2) கச்சோலம் - என்பதையும் பார்க்க.

பெருங்குமிழ்-27 : குமிழ் மரம். இதன் பழம் அதிக வெப் பத்தையும், தலையில் உண்டாம் சுண்டுகளையும் போக்கும். பெருங்குமிழ் மூலத்தைப் பாலிற் கொள்ள மேக எரிவு, பித்த சுரம், வாத சுரம் போம்.

பேரீந்திலை 10 : பேரீச்சு மரம். குருத்தால் சிலேத்தும குன்மம் போம். காய்க்கு-கர்ச்சூரக்காய் எனப்பெயர். காய் நீரிழிவையும், கழிச்சலையும் போக்கும். பழம் - பித்தம், மல பந்தம் இவைகளைக் கண்டிக்கும். குறிப்புரை-பக்கம் 483.

**பொடுதலை-9 :** ஒரு பூண்டு, இதன் காய் திப்பிலியை ஒத்திருக்கும். சீதக் கழிச்சல், இருமல், சூலை இவைபோம். 'பொடுதலையின் பேருரைத்தால் ...... அடுதலைசெய் காசமும் அடங்கும் - கடுகிவரு பேதியொடு சூலைநோய் பேசரிய வெண் மேகம் வாதமும் போம்'. பொடுதலையின் இலையைத் துவையல் செய்து உண்ண உள் மூலம் தணியும்.

**மகிழ்-26 :** இலஞ்சி, வகுளம் எனப்படும். மகிழம்பூவைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடல் அனல் தணியும்; விதைக் குடிநீர் சுரத்தைத் தணிக்கும். விதையைச் சுட்டுப் பல்துலக்க பல்நோய் போம்.

**மகீருகம்-16 :** (நிலத்தில் தோன்றும் கிழங்கு வகை).

**மஞ்சள்-26 :** உடலிற் பூசிக் குளிக்க உடலுக்குப் பொன் நிறம் தரும்; புலால் நாற்றத்தை நீக்கும்.

"பொன்னிறமாம் மேனி புலால் நாற்ற மும்போகும்
மன்னு புருட வசியமாம் – பின்னி யெழும்
வாந்தி பித்தம் தோடமையம் வாதம்போம் தீபனமாம்
கூர்ந்த மஞ்ச ளின்கிழங்குக் கு" — (அ. கு.)

**மதமத்தம் - 11:** பொன் ஊமத்தையால் பித்த சுரம், கருப்பாதி சுரம் நீங்கும்; ஊமத்தை காயால் - மயக்கமும், வெறிநோயும் உண்டாகும். 'வன்னி, கொன்றை, மதமத்தம்' —சம்பந்தர் 2-7-1.

**மயிரோசனை-28 :** (கோரோசனை) பசுவின் வயிற்றினின்று எடுக்கப்படும் மஞ்சள் நிறமுள்ள வாசனைப் பண்டம். மயிரோசனை – மயிர்மாணிக்கம் எனவும் பொருள்படும்; கோரோசனை, மயிர்மாணிக்கம் இரண்டையும் 'பல மயிரோசனை' என்றிருக்கலாம். மயிர்மாணிக்கம் – செடி. இதன் இலை, வேர்–மேகத்தை நீக்கும்.

**மரிசி-26 :** கொடி. மரீசம் – மிளகு. இதனுல் வளி, சளி, கபம் நீங்கும்.

**மருது-13 :** 'அருச்சுனம்' என்றும்பெயர். இதனுல் நீரிழிவு, மயக்கம், பெருநோய், புழுநோய்கள், வறட்சூலை, வயிற்று வலி போம்.

"மயக்கமொடு தாகம் மாருச் சுரத்தின்
தயக்கமறுக் கும்மருதம் சாற்று –
குட்டரோ கம்கிருமி கோர வயிற்றுவலி
துட்டவறட் சூலை தொலையுங்காண் ...
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து" (அ. கு.)

பட்டையைப் பொடி செய்து மூக்கிலிட தலைவலி போம். பொடியால் பல் துலக்கி வர, பல்வலி தீரும்.

**மனேசிலை-28:** (மனேசிலம்) ஒரு மருந்து. இது விளைவு (பிறவிப்) பாஷாணம் முப்பத்திரண்டி லொன்று.

மனேசிலை - மூன்று வகை: (1) ஸ்யாமாங்கி – லிங்கம் போலச் சிவப்பாயும் கொஞ்சம் பச்சை நிறமாயும் ப்ரகாச மற்று இருக்கும், (2) கரவீரம் - சிவப்பாயும், சூரணமாயும், பளுவாயும் இருக்கும், (3) திவிகண்டம் - கொஞ்சம் சிவப்பாயும், பச்சை நிறமாயும் பளுவாயும் இருக்கும். கரவீர மனேசிலைதான் ஔஷதங்களில் உபயோகப்படுத்துவது, மனேசிலையைக் கல்வத்திலிட்டு பசு மோரால் ஒரு ஜாமம் அரைத்தால் சுத்தியாகும். சுத்திசெய்த மனேசிலையால் சுரம், நேத்திர ரோகம், இரைப்பு, இருமல், கபரோகம், மூத்திர அடைப்பு, விஷம், குஷ்டரோகம், பூதபீடை நீங்கும். (அனுபோக வைத்தியம் ஏழாம் பாகம் (பக்கம் 36, 37).

**மா-14:** மாம்பிஞ்சு (வடு) - வாந்தி, மந்தம் போம்.

" கவை வாத பித்தம் கபமருசி வாந்தி
சுவை மறுத்த மந்தமெனும் தோஷம்-இவையெல்லாம்
காதத்துக் கப்புறம்போம் கான மடமயிலே!
சூதத்தின் புன்வடுவைத் துய்" — (அ. கு.)

மாம்பழம் – மார்பு எரிச்சல், கண்ணோய், புண் பெருக்கும், பசி நீங்கும்; மாங்காய் – சிரங்கு, வாயு, தோல் வெடிப்பு உண்டாக்கும்; பசியை விலக்கும்; மாங்கொட்டை பருப்பு – சீதக் கழிச்சல், வயிற்றுப் புழு போக்கும்; மா இலையைத் தீயிலிட்ட புகை - தொண்டைக் கம்மலை நீக்கும்; விக்கலை நிறுத்தும்; மாம்பூ உலர்த்திய பொடியின் புகை பட்டால் கொசுக்கள் ஓடிவிடும்.

**முட்காவேளை-8:** இது முட்காவேளை. இதனல் மார்பு நோய், மாந்த சுரம், வளி நீங்கும்.

**முருக்கிதழ்-11:** இது பலாசு, கிருமிநாசம் எனப்படும். கிருமிசத்துரு; புரசு பார்க்க.

**மேதை-26:** இது பொற்றலைக் கையாந்த கரை – கரசனங் கண்ணி. இதனைக் கறியாகச் செய்து உண்ண அறிவின் தெளிவும், திருவும் சேரும். குன்மக் கட்டியைப் போக்கும். விழிக்கு ஒளியைத் தரும்.

'பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிறமாக் கும்முடலை
சுத்தமுறக் கட்குச் சுகங் கொடுக்கும்'—(அ. கு.)

"திருவுண்டாம் ஞானத் தெளிவுண்டாம் மேலே
உருவுண்டாம் உள்ளதெல்லாம் உண்டாம்"
(தே. வெ.)

**மோதகம்-17:** (ஓதிமரம்). இதன் வேரால் புண், கழிச்சல் விலகும்; இலையை மிளகுடன் சேர்த்து அரைத்து வீக்கங்களுக்குக் கட்டிவர வீக்கம் குணமாகும்.

மோதகவல்லி அல்லது கொழுக்கட்டை என்று ஒரு பெரு மரம் உண்டு. இதனுல் குருதிக் கழிச்சல், சீதக் கழிச்சல், பெரும்பாடு நீங்கும்; மோதவல்லித் தைலத்தால் எலும்புருக்கி நோய் போகும்.

**ராகி-8:** செம்பிராகை பார்க்க.

**வக்கணை-12:** இது மலைப் புன்கு. நீண்ட மர வகை. 'புன்கு' பார்க்க. வக்கணையின் மூலத்தைப் பாலிற் கொள்ளச் சில விஷம், வண்டுகடி தீரும் — அனுபோக வைத்தியம் 6-ம் பாகம், பக்கம் 13 பார்க்க.

**வசம்பு-25:** ஒருவித பூண்டு. இதன் வேர் பயன்படும்; வசம்பினுல் நஞ்சுகள், புண் வகைகள், ஐவகை வலி, சூலை இருமல், யானைக்கால் நீங்கும். வசம்புத் தூளைத் தேனிற் குழைத்து காலையில் உட்கொண்டால் தெத்துவாய் நீங்கும்; செரியாமை, கழிச்சல், சிரங்கு, சுரம் இவைகள் நீங்கும்.

**வசவாசி-26:** வசுவாசி-ஜாதிபத்திரி என்பது. சாதிக்காய் மரத்தின் காய் பழுத்த பின், சதைப்பற்றுள்ளதாய் இருக்கும் கொட்டையின் ஒட்டின் மேல் சற்றுச் சிவந்து மெல்லிய தோல் போல இடைவிட்டுப் பதிந்து இருப்பது சாதிப்பத்திரி; ஒட்டினுள்ள பருப்பு ஜாதிக்காய். இதனுல் சுரம், நீர்க் கழிச்சல் போம். "சாதிதரும் பத்திரிக்குத் தாபச் சுரந்தணியும்
ஓதுகின்ற பித்தம் உயருங்காண் – தாதுவிர்த்தி
உண்டாம் ......" —(அ. கு.)

**வாதுமை-27:** இது அடம்பு எனவும் பெயர் பெறும்; இதன் பருப்பும், நெய்யும் பயன்படும். கைப்பு வாதுமை, இனிப்பு வாதுமை என இரு வகைத்து. கைப்பு வாதுமைப் பருப்பை நீரில் அரைத்துத் தலையில் தடவப் பேன்கள் சாகும்; இனிப்பு வாதுமைப் பருப்பினுல் கண் படலம் போம்.

"அடப்பவிதை யாம்வாது மைப்பருப்பி னுலே
மடற்பெரிய கண்படலம் மாறும்" — (அ. கு.)

வாதுமைப் பிசின் அரை வராகனெடை வீதம் உட்கொள்ள இருமல், நீர் எரிச்சல் நீங்கும். வாதுமை ஒட்டைச்

சுட்டுக் கரியாக்கிப் பல் துலக்கலாம். வாதுமை நெய் வெப்பத்தைத் தணிக்கும்.

வாலுழுவை-34: வாலுளுவை என்றும் பாடம். இது மர மேறும் கொடி வகுப்பைச் சேர்ந்தது, இதன் இலை, விதை, நெய் பயன்படும். இதனால் வயிற்றுக்கடுப்பு, குருதிக்கழிச்சல், கைகால் குத்தல் போம்.

விசிறி - 9: (சிவிறி) Box leaved ivory wood - செடிவகை. விசிறி வாழை என்றும் ஒரு வாழை உண்டு.

வீரை-10: குறிப்புரையிற் பார்க்க.

வெட்பாலை-21: இது 'குடசம்'. இலை, பட்டை, வித்து (அரிசி) பயன்படும். வெட்பாலை மரம் வலி நோய்களையும், முப்பிணிப் பெருக்கையும் நீக்கும். வெட்பாலை அரிசி கழிச்சல் வகையைப் போக்கும்.

'' வெட்பாலை தன்னரிசி வீறு பித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாதம்-உப்பிசத்தை
...... கண்டிக்கும் '' —(அ. கு.)

வெந்தயம்-17: கீரை. இதனால் வயிற்றுஉப்பிசம், மாந்தம், இருமல் போம்.

'' பொருமல்மந்தம் வாயுகபம் போராடு கின்ற
இருமல் அருசியிவை ஏகும் - தரையிலே
தீதி லுயர்நமனைச் சீறும் விழியணங்கே
கோதில்வெந்த யக்கீரை கொள் '' —(அ.கு.)

வேல்-10: மரம். இது கருவேல், வெள்வேல், குடை வேல், பீக்கருவேல் என நான்கு வகையது. பற்களில் உண்டாகும்நோய்களைப் போக்கும்.

'' பல்லுக் கடுத்த பலநோ யகற்றியதைக்
கல்லுக்கு நேராகக் கட்டுமே '' – தேரன் வெண்பா.

வேலம்பட்டை - இதனால் பல் இறுகும்.

'' தந்தம் இறுகும் தனிச்சூதப் புண்ணுறும்
வந்தசுரம் பித்தம் மடியும் ......
கருவேலம் பட்டைக்குக் காண் '' —(அ. கு.)

வெள்வேலுக்கு - மயக்கம், சந்துக் குடைச்சல் நீங்கும்.

'' பித்த மயக்கமறும் பேருலகின் மானிடருக்
குற்ற சுரவாதம் ஒடுங்காண் - குத்துகின்ற
சந்துக் குடைச்சலுடன் சர்வாங்க வாதம்போம்
கொந்துலவும் வெள்வேலுக் கு. '' —(அ.கு.)

பீக்கருவேல் – இதனால் வெள்ளை, வெட்டை, ஈற்றுப்புண் தீரும்.

# சித்து வகுப்பு

## அநுபந்தம் 2

[திரு அருணை மகான் ஸ்ரீலஸ்ரீ ஈஸ்வர சுவாமிகள் கருணையுடன் அருளிய கருத்துரை.]

சித்தர் இருவகை. முதலாமவர் மெய்ப்பொருளல்லாத பொய்யுடல், பொன், ஐம்புல சுகம், இவற்றைத் தள்ளி ஜீவ சிவ ஐக்கியத்தைப் பெற்று ஆனந்தமயராய்த் திகழ்பவர். இரண்டாமவர் அதனில் மாறுபட்டவர். இவர் கற்பகோடி காலம் உடலுடன் வாழ விரும்பி, காயசித்தி பெற்று ரசத்தை வேதித்து தாழ்ந்த உலோகங்களைத் தங்கமாக்கி உலகில் சித்தாடல் வேண்டுமென்னும் அவாவுடையவர். அருணகிரிநாத ஸ்வாமிகள் இவர்கட்கு அறிவு புகட்டவே இச் சித்து வகுப்பை நகைச்சுவை புதைபொருள் கலந்தருளியுள்ளார்.

உதாரணமாக ஒரு கதை :

அரண்மனையில் திருடவந்து கட்டிலடியில் பதுங்கியிருக்கும் ஒரு திருடனை நல்வழிப்படுத்தக் கருதிய கருணை அரசன் ஒருவன் "நம்மூர் ஆற்றோரத்தில் ஒரு வருடம் நியமத்தோடு தவம் புரியும் தவசி ஒருவர்க்கு எனது ராஜ்ஜியத்தைத் தானம் செய்து காட்டிற்குத் தவத்துக் கேகுவே" னென்று மகிஷியிடம் தெரிவித்தான். இதுகேட்ட திருடன் நதிக்கரையில் திறந்தவெளியில் போலியாகத் தவத்திலமர்ந்தான். நாளடைவில் இன்பத்தை உணர்ந்த அக் கள்வன் மெய்த் தவசியாகி அரசனிடம் ராஜ்ஜியம் பெற மறுத்து ஞானியானன் என்னும் கதை இதற்குப் பொருந்தும்.

முதலாவதாக திருக்கயிலாயத்திலிருந்து வந்த ஒரு ரச சித்தபுருடராகத் தம்மை மாற்றிக்கொண்டு, தமதுபக்தருக்கு உபதேசிக்கும் முறையில் இவ் வகுப்பைத் தொடங்குகிறார் :—

வேலு மயிலும் வாழி! ...... திருப்புகழ் கற்றவர் சீல மேத்திய சித்த ப்ரசித்தரே! கேண்மின்! எண்ணற்ற சரீரம் தரித்து தேவர் காண சித்து விளையாடுவிக்கும் மகா மூலிகை ஒன்றுள்ளது. நீர் அதனைப் பெற்றுப் பயனடையவேண்டும் என்கிற ஆசையைத் தவிர்த்து அறுமுகவன் மேலாணையாக வேறு ஆசை எமக்கில்லை; போதுமெனத் தக்கவாறு நினது மனோரத முழுதும் தருவேம், பதறுது கொள்வீராக.

ஔடத வகைகளை மூலத்தில் காண்க. இவைகளை எண்பது செம்பினில் ஊறவை. [எண்பதுடன் முடிக்கின்றார். அதற்குமேல் அங்கு அவற்றிற்குச் செயலில்லை. இவற்றின் உபயோகம் வைத்தியத்துக்கா, வாதத்திற்கா என்று தெளிவு படுத்தவில்லை. ஏனெனில் அடிகள் குறிப்பு அதல்லவே!]

இங்கு "வாத நல்வழிக ளனேகம்" என்று சிலேடை யாகக் கூறுகிறார். ரசவாதம் ஒன்றே ஆயினும் அடைவு நோக்கிப் பலவாம். ஈயத்தில் நீரெடுத்தால் வெள்ளியாம். தாமிரத்தில் களிம்பை நீக்கினால் தங்கமாம். என்பன போலாம். மந்திர ஜப தியான யோகமென்பனவாதி மற்றொன்று. இது பழைய வாகடமல்ல. பண்டு எம் குருநாதன் தந்தது (ஞான ரசவாதம்); அவரிடம் வழிபட்டுப் பெற்ற அரியர பிரமருள்பட இதனை உச்சரிக்கும் வகையைச் சிறிதும் பெற்றாரில்லை (இந்திரிய மனவாயிலை அடை என்கிற கருத்தில்) ஆகவே கதவைத் தாளிடு; பயத்தை விடு; மற்றும் இந்திர ஜாலம், உச்சாடனம் அனைத்தும் தாழாது தரும். "மாறில் (முருகன்) தோத்திர வித்தை பலித்திடின் மாடை சேர்க்கும் வருத்த முனக்கிலை" என்னும் அடியை ஊன்றிக் கவனித்தால் இவ் வகுப்பு எதைப்பற்றியதென்பது விளங்கும்.

பின்பு வசூலிக்க வேண்டிய தட்டுமுட்டு அணிபணி சாமான்களை நாளை கலியாணமென்று சாக்குச் சொல்லி வாங்கிப், பாட்டியார் சம்பாதித்துப் புதைத்துவைத்திருக்கும் பொற் பணத்தையும் கூட்டிச் சத்தமிடாமல் உலைக்களம் தோண்டிக் கரிநிரப்பி, யானைத்தோல் துருத்திகளை சேகரித்துப் பதர் எண்பது வண்டி குவித்துக்கொள் என்கிறார். வைத்திய சாத்திரத்தில் உயிர்ச்சரக்கு முப்பத்திரண்டு. இதில் ரசகந்தகங்கள் முதலியன அடங்கும். வைப்புச் சரக்கு (32)—இதில் கௌரி பாடாணம் அடங்கும். நாட்பட்ட கௌரிபாடாணக் கட்டானது எல்லா லோகங்களையும் வேதிக்கும். ஈயத்துக்கும் ரசத்துக்கும் குணம் ஒன்றே. மேற்சொன்னவற்றை (குகையில்) உருக்கும் பாத்திரத்திலடைத்து சரிகைப்பித்தளையை அதன்மேல் நறுக்கி வை என்று முடிக்கிறார்; இதற்குமேல் செயலில்லை.

அங்கு மூலிகைகளை அந்தரத்தில் விட்டார். இங்கு அணிபணி தட்டுமுட்டு பணம் தங்கம் முதலியவற்றை மூசையி விட்டு விட்டுவிட்டார். மேலும் சொல்லுகிறார்:

அப்பனே, நாம் வெள்ளைச் சொல்லில் ரசவாதவித்தையை உனக்குத் தந்துவிட்டோம்; நீ எமக்குக் குருதட்சணை கொடு. இவ் வாத வித்தையைக்கொண்டு ஏழடுக்கு வீடு கட்டிக்கொள் என்று மாமிச உணவுகளைச் சாப்பிட்டுத் தாம்பூலம் பெற்றுக் கொண்டுவிட்டார். இதில் ரசவாத வித்தை எங்குளது என்பதை ஆராய்வோம். நாம் பொய்க்கு ஆளில்லை என்று சத்தியம்செய்கிறார். மெய்யான ஞான பண்டித ரசவாதத்தை இச் சித்து வகுப்பின் இடையில் ரத்னச் சுருக்கமாக மூன்று நான்கிடங்களில் புதைபொருளில் சிலேடைப்பொருள் வகையில் சுவாமிகள் கூறி முடிக்கிறார்.

1. மாமூலி: மாண்டாரெலும் பணியுஞ்சடை ஆண்டார் இறைஞ்ச மொழிந்தது.

2. ''மாறில் (முருகன்) தோத்திரவித்தை பலித்திடில்'' (நிபந்தனையுடன் கூடியது). அதாவது அவனருள் ப்ரசாதம் கைவந்தால் (பிறகு) மாடை சேர்க்க வருத்த முனக்கிலை'' என்கிற சத்திய ரசவாதத்தைக் கூறியருளினர்.

3. ரசவேதியைக் குறிக்கிறார்: அதாவது ''எட்டும் இரண்டும் ஆறு தப்பாதுகொள் என்று, ஓம் சரவணபவ...... ஓம்வசத்புவே நம...; என்று,

4. ''எட்டிரண்டும் ஆறு தப்பாது கொள் யாவும் வாய்ப்பது சத்தியம் ஏழு நாளில் சித்தியாகும்'' அதாவது எட்டு(அ), இரண்டு (உ) சேர்ந்து ஓங்காரம்; ஆறு சடாக்ஷரம். எனவே பிரணவத்தோடு கூடிய சடாக்ஷரம் ஓம்சரவணபவ. ரஸவாத மந்திரத்தை ஏழு நாள் இமைப் பொழுதும் விடாமல் கையாளுவையாகில் மூசையில் வைத்த அணிபணி யாவும் தங்கமாய்விடும்; உன் மனதும் தங்கமாய்விடும். ஏன்? நீயே தங்கமாகி விடுவாய், இதுதான் ஸ்வாமிகளின் சித்து வகுப்பிலுள்ள புதைபொருள்.

—:o:—

## 17. கடைக்கணியல் வகுப்பு

[முருகக் கடவுளின் *கடைக்கண் நோக்கின் பெருமையை விளக்கிற்று.]

தனதன்ன தந்த தத்த தனதன்ன தந்த தத்த
தனதன்ன தந்த தத்த தானனு

[1] அலைகடல் வளைந்து டுத்த எழுபுவி புரந்தி ருக்கும்
அரசென நிரந்த ரிக்க வாழலாம்
[2] அளகைஅர சன்த னக்கும் அமரரர சன்த னக்கும்
அரசென அறஞ்செ லுத்தி யாளலாம்
[3] அடைபெறுவ தென்று முத்தியதிமதுர செந்த மிழ்க்கும்
அருள்பெற நினைந்து சித்தி யாகலாம்
[4] அதிரவரும் என்று முட்ட அலகில்வினை சண்டை நிற்க
அடல்எதிர் புரிந்து வெற்றி யாகலாம்;

---

* " நின்னருட் கண்ணால் நோக்காதா ரல்லாதாரே "
(தேவாரம் - அப்பர் - 6-25-1.

" தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந் தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள் அபிராமி கடைக்கண்களே. "
(அபிராமி அந்தாதி 69).

[1] நிரந்தரம் – இடைவிடாமை - முடிவிலாத காலம் - எப்பொழுதும் — " நின்றன் வார்கழற்கு அன்பெனக்கு நிரந்தரமாயருளாய் ", " நிரந்தரமாய் நின்ற ஆதி " — திருவாசகம் 5-1-6 ; 26-2.

[2] அளகை – அளகாபுரி – குபேரன் நகர். குபேரன்-இவன் ஐசுவரியத்துக்குத் தேவதை. அதனால் 'தனதன்' என்று பெயர். " அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும் நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர் " — தாயுமான. பரிபுர 10.

[3] முருகன் செந்தமிழ்ப் ப்ரியன் ஆதலால், முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பவன்' ஆதலால், செந்தமிழறிவை அவன் திருவருளாற் பெற்று, 'ஓதிய கல்வியும் அறிவும் வேலவர் தந்ததென உணர்ந்து – அங்ஙனம் பெற்ற செந்தமிழினால் அவனையே பாடிப் புகழ – அடையப் பெறுவதாகும் 'முத்தி' என்பது. முத்தமிழில் விளங்க வீற்றிருக்கின்றார் சிவபிரானே — கந்தரந்தாதி 25.

## பொழிப்புரை

முருகவேளின் மயில், அவர் திருக்கை வேல், அவர் கடைக் கண் பெருமை ஆக - இம் மூன்றையும் நாம், தியானிப்போம். உலகோரே வாருங்கள் என அழைத்து, அங்ஙனம் அவைதமைத் தியானஞ் செய்வதால் இன்ன இன்ன பேறுகள் கிடைக்கும் என்பதை இவ்வகுப்பில் விளக்குகின்றார் அருணகிரியார்.

**1.** அலை வீசும் கடல் சூழ்ந்து ஆடை உடுத்தது போல அமைந்துள்ள ஏழு உலகங்களையும் (புரந்திருக்கும்) காத்து ரக்ஷிக்கின்ற (அரசென) சக்ரவர்த்தி என்று (யாரும்) புகழ, (நிரந்தரிக்க) நிரந்தரமாக — எக்காலத்தும் (நீங்கள்) வாழ முடியும்.

2. (அளகை அரசன் தனக்கும்) - அளகாபுரிக்கு அரசனான குபேரனுக்கும், (அமரர் அரசன் தனக்கும்) தேவர்களுக்கு அரசனான இந்திரனுக்கும் (அரசென) நீயே (தலைவனும்) அரசன் என்னும்படி, (அறம் செலுத்தி) தருமவழியிற் செங்கோல் நடத்தி (நீங்கள்) ஆள முடியும்.

3. (அடை பெறுவதென்று முத்தி) ( - அடை பெறுவது முத்தி என்று — அடையப் பெறுவது - பெற வெண்டியது - முத்தி என்றுணர்ந்து, (அதற்காக) (அதி மதுர) மிக்க இனிமையான (செந்தமிழ்க்கும்)—செந்தமிழ் அறிவு கிடைப்பதற்கும் (அருள் பெற) - முருகன் திருவருளையே நாடிப் பெறுதற்கு (நினைந்து) கருத்துக் கொண்டு நினைக்க (சித்தி ஆகலாம்) எண்ணிய எண்ணம் கைகூடப் பெறலாம் (நீங்கள்): (அல்லது—என்றும் அடைபெறுவது முத்தி—என்றும் அடையத்தக்க (அரும் பொருள்) முத்தி; ஆதலால் அதை அடைய செந்தமிழ்க்கு-செந்தமிழ் அறிவுபெறுவதற்கான திருவருளைப் பெற நினைந்து—எண்ணம் கைகூடப் பெறலாம்—என்றுமாம்.

4. அதிரவரும் என்று—மன நடுக்கம்கொள்ள வரும் என்று கூறும்படி, (முட்ட) தாக்க வருகின்ற (அலகில்) - அளவற்ற—கணக்கற்ற, (வினை)வஞ்சகம், தந்திரம் கூடிய (சண்டை)போர்கள் (நிற்க) வந்து எதிர் நின்றாலும் (அடல் எதிர் புரிந்து) எதிர் அடல் புரிந்து—(அப்போர்களை) எதிர்த்து—அடல் புரிந்து—போர் செய்து, (எதிர் போர் செய்து) வெற்றி (ஜெயம்) பெறலாம் (நீங்கள்).

---

[4] வினை என்பதற்குத் தொழில் எனப் பொருள் கொண்டு—'அதிர்ந்து தாக்கும் தொழில் நிறைந்த, கணக்கிலாச் சண்டைகள் வந்தாலும் வன்மையுடன் எதிர் பொருது நீங்கள் வெற்றி அடையலாம்' - எனவும் பொருள் காணலாம்.

[5]இலகிய நலஞ்செய் புட்ப கமுமுடல் நிறம் வெளுத்த
இபஅர செனும்பொ ருப்பும் ஏறலாம்
[6]இருவரவர் நின்றி டத்தும் எவர்எவர் இருந்தி டத்தும்
ஒருவன்இவன் என்று ணர்ச்சி கூடலாம்
[7]எமபடர் தொடர்ந்த ழைக்கில் அவருடன் எதிர்ந்துள் உட்க
இடிஎன முழங்கி வெற்றி பேசலாம்

---

5 (1) புட்பகம் - குபேரனது விமானம். குபேரன் இயக்கர்கள் வேந்தன். புட்பகம் - வான ஊர்தி. பிரமன் குபெரனுக்கு அளித்தது, மிக ஒளி வாய்ந்தது, ஆயிரகோடி (கண்டை) பெரு மணிகள் கட்டியது.

"இயக்கர் வேந்தனுக்கருமறைக் கிழவனன் றீந்த
துயக்கி லாதவர் மனமெனத் தூயது சுரர்கள்
வியக்க வான்செலும் புட்பக விமானம் உண்டு"

"அண்ட கோடிகள் அனந்தம் ஒத்து ஆயிரம் அருக்கர்
விண்ட தாமென விசும்பிடைத் திசையெலாம் விளங்கக்
கண்டை ஆயிர கோடிகள் ஒலிப்புற"

"அனைய புட்பக விமானம்வந் தவனியை அணுக"
— கம்பராமா. மீட்சிப்படலம் 144-146.

(2) இப அரசு - ஐராவதம். "கொம்பு நாலுடைய வெண்கம்ப மால்கிரி' – திருப்புகழ் 1105. "அயிராவதத்து விழியாயிரத்தன்" — திருப்புகழ் 1072. ஐராவதம் - மலை போலப் பெருத்த உடலினது ஆதலின் 'பொருப்பு' என்றார். 'சிகரவெண்கரி அயிராவத மிசை வரு புரந்தரன்' திருப்புகழ் 1128 (சிகரம்=மலை).

6 'ஒருத்தனும் வகைதிரு அருளாலே' — திருப்புகழ் 173. 'உலகத் தொருநீ யாகத் தோன்ற விழுமிய பெறலரும் பரிசில் நல்குமதி' – திருமுருகாற்றுப்படை 293. உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்குவீடளித்தற்கு உரியையாய்க், கேடின்றித், தோன்றும்படி சீரிய, பிறராற் பெறுதற் கரிய வீடு பேற்றினை (முருகன் (உனக்கு) அருள்புரிவான்)-என்பது நச்சினார்க்கினியர் உரை. 'ஒருவன் இவன் என்று உணர்ச்சி கூடலாம்' என்பதற்கும் இப்பொருள் பொருந்துவதாகும். "ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே" என்பது திருமந்திரம் 1467.

7 'பட்டிக் கடாவில்' (64), தாராகணமெனும் (81), தண்டாயுதமும் (25), தந்தைக்கு முன்னம் (69) எனத் துவக்கும் கந்தரலங்காரச் செய்யுள்களைப் பார்க்க. இறைவனது

5. (இரண்டாவது அடியில் குபேரனுக்கும் இந்திரனுக்கும் மேலான அரசு ஆளலாம் என்றதனுல்)—இலகிய – விளங்கும், (நலம் செய்) இன்பத்தைத் தருகின்ற (புட்பகமும்) குபேரனது விமானத்திலும், நிறம் வெளுத்த (வெண்ணிறமுள்ள) இப அரசு எனும் பொருப்பும் – கஜராஜன் ஆம் ஐராவதம் எனப்படும் (பொருப்பும்) மலை போன்ற வாகனத்திலும் (எளிதாக) ஏறலாம்.

6, (இருவரவர் நின்றிடத்தும்) இரண்டே பேர்கள் நிற்கும் இடமாயினும், (எவரெவர் இருந்திடத்தும்) யார் யாரோ இருக்கும் இடமாயினும் (பலர் இருக்கும் இடமாயினும்), ஒருவன் இவன் என்று-இதோ இருக்கின்ருனே இவனே (ஒருவன்) ஒப்பற்றவன் (மகான்) – ஞானி என்று - என்று தன்னைப் பார்த்தவர்கள் சொல்லி வியக்கும்படியான (உணர்ச்சி) அறிவை – ஞான தேஜஸை (கூடலாம்) அடைதல் கூடும்.

7. (எம படர்) யம கிங்கரர்கள் -- ஏவலாளர் – தூதுவர்) (தொடர்ந்து) என்னைப் பின் தொடர்ந்து (அழைக்கில்) வா – என்று கூப்பிட்டால் (அவருடன்) அத்தூதர்களை (எதிர்ந்து) முன்னின்று அவர்களை எதிர்த்து, (உள்) அவர்களுடைய நெஞ்சம், (உட்க) திடுக்கிட்டுப் பயப்படும்படி – (இடி என) இடி முழக்கம் போன்ற குரலுடன் (முழங்கி) (வெற்றி பேசலாம்) அவர்களை வேருட்டவல்ல – அவர்கள் (பயந்து ஒடும் படியான) ஜெயகரமான பேச்சுக்களை (வெற்றி மொழிகளைப்) பேச முடியும்.

---

பாதாரவிந்தத்தில் அழுந்தின நெஞ்சத்தினரான பக்தர்கள் யமனுக்கு அஞ்சமாட்டார்கள். அவர்களுடைய உளத்தின் திண்மையையும், வீரமொழிகளையும் கீழ்க்குறிக்கும் செய்யுள்களிற் காண்க ;—

(1) யமன் வெருட்டி அழைத்தபோது மார்க்கண்டேயர் கூறும் வீரமொழி.

“ உன்னை எண்ணலர் உம்பரை எண்ணலர்
மன்னை எண்ணலர் மாமலர்ப் பண்ணவன்
தன்னை எண்ணலர் தண்டுளவோனையும்
பின்னை எண்ணலர் பிஞ்ஞகன் அன்பிஞேர் ;
“ பேதாய் பேதாய் நீ யிவண் நிற்கப் பெறுவாயோ
போதாய் போதாய் என்றுரை செய்தான்
புகரில்வான் ”

(கந்தபுராணம் 2-5-243, 248).

[ தொடர்ச்சி 540-ஆம் பக்கம் பார்க்க. ]

[8]இவையொழிய வும்ப லிப்ப தகலவிடும் உங்கள் வித்தை
யினையினி விடும்பெ ருத்த பாருளீர் ;
[9]முலையிடை கிடந்தி ளைப்ப மொகுமொகென வண்டி ரைப்ப
முகையவிழ் கடம்ப டுத்த தாரினன்
[10]முதலிபெரி யம்ப லத்துள் வரையசல மண்ட பத்துள்
முநிவர்தொழ அன்று நிர்த்தம் ஆடினன்

---

(2) தன்னைப் பிடிக்க வந்து வெருட்டின காலனை நோக்கிச் சுவேதன் என்னும் அரசன் கூறும் வீரமொழி :—
"வேரொடா கெட வந்த தென்ன விசாரம் என்னைவெருட்டநீ யாரடா கடிதோடடா கொலையந்தகா ! கொலை யந்தகா !
"வஞ்சி பங்கன் அகண்ட பூரணன் வள்ளல் என்னை வளர்த்தனன், அஞ்சுவேனலன் வந்துபாரினி யந்தகா கொலையந்தகா!
" பூதநாயகர் தாளெனக் குளதாதலால் ......... அச்சுறுத்துவ தென்னடா கொலை யந்தகா கொலை யந்தகா ! — திருவெண் காட்டுப் புராணம் – சுவேத. 13, 16, 17.

[8] இவை யொழியவும் = மேற் கூறியனவே யன்றி ; பலிப்பது=தோன்றி விருத்தியாவது; பிறவி விருத்தி என்பதை அகலவிடும்=நீங்கச் செய்யும், அதாவது பிறவி யொழியும் ; உங்கள் வித்தையினை இனி விடும்.

பலிப்பது — அகலவிடும் – வினையிட்டங்கள் தோன்றிப் பெருகுதல் விலகும் எனலுமாம். 'பரமேசர் ஒரு சற்றும் உணரார் ...... என் ஊழ்வினை பலித்ததுவுமே' — மதுரைக் கலம்பகம் 20.

இறைவனது கடைக்கண் நோக்கால் – பலிப்பது அகலும் பிறப்பு ஒழியும். " கருவெந்து வீழக் கடைக்கணித்து "— திருவாசகம் 11-5.

உலக கலை துக்கத்துக்கு ஏதுவாகிய பிறவியை ஒழிக்காது. ஆதலால் உலக கலை வேண்டாம். இறைவன் திருவருள்தான் பிறவியை ஒழிக்கும் - என்றபடி.

'சிவகலை யலதினி உலக கலைகளும் அலம் அலம்' என்றார் திருப்புகழில் (912).

[9] வண்டு இரைப்ப (ஒலிசெய) மலர் மொட்டு மலரும் :— " வண்டறைய விண்டமலர் " " குவளை கண்திறக்க வண்டு அரற்றும் " — சம்பந்தர் 3-82-9, 2–71–4.

[10] பெரியம்பலத்துள் முநிவர் தொழ நிர்த்தம் ஆடினன் – அருணகிரியார் தில்லையில் தரிசித்தபொழுது – முருகவேள் அவருக்கு நிர்த்த தரிசனந் தந்தனர். அந்த நடனத்தைக்

8. (இவை ஒழியவும்) மேற் சொன்ன பேறுகள் மாத்திரம் அல்ல; பின்னும் (பலிப்பது) - உலகில் தோன்றி முளைப்பது – பிறப்பது - பிறவி என்பது (அகலவிடும்) அகன்று போம் – நீங்கும் - பிறப்பு ஒழியும் – என்றபடி; உங்கள் வித்தையினை – உங்களுடைய உலக வித்தைகளை – உலக கலைகளை - இனி விடும் - இனி விட்டுவிடுங்கள். பெருத்த பாருளிர்– பரந்துள்ள இப்பூமியில் உள்ளவர்களே! (மயிலையும், அயிலையும், முருகன் கடைக்கண் இயலையும் நினைந்திருக்க வாரும் (யான் சொல்லும் இந்த வழியைக் கடைப் பிடித்து மேற் சொன்ன பேறுகள் யாவற்றையும் பெறுவீர்களாக.)

9. (முருக வேளின் மார்பில் உள்ள கடப்ப மலர் மாலையானது அவர் வள்ளியைத் தழுவுதலால்) (முலையிடை) வள்ளியம்மையின் கொங்கை யிடத்தே (கிடந்து) படிந்து (இளைப்ப) கசக்குற-(கசங்க)–அதனால்–(வண்டு) அந்த மாலையில் இருந்த வண்டுகள் (மொகு மொகு என இரைப்ப) மொகு மொகு என்று ஒலிசெய்து(ஓடும்படி), முகை அவிழ் – மொட்டுகள் மலர்கின்ற (கடம்பு அடுத்த–கடப்ப மலர்கள் அமைந்துள்ள (தாரினன்) மாலையை உடையவனும்,

10. (முதலி) - முழு முதற் பொருளாம் நடராஜப் பெருமானது (பெரியம்பலத்துள்) திருக்கூத்தாடும் பெரிய திரு அம்பலத்துள், (வரை அசலம்) பெரிய மலை போன்ற (சபா) மண்டபத்தில் (முநிவர் தொழ) பதஞ்சலி, வியாக்ர பாதர் ஆதிய முநிவர்கள் தொழுது வணங்க (அன்று) நடனம் ஆடினவனும்.

---

கண்ட பதஞ்சலி வியாக்ரபாதரும் (நடராஜப்பெருமான்ஆடிய நிர்த்தத்தினும் இந்த நிருத்தம் அருமை, அருமை என்று கூறி மகிழ்ந்தனர். 'அரிதுயில் சயன வியாள மூர்த்தனு மணி திகழ் மிகுபுலி யூர்வியாக்ரனும் அரிதென முறைமுறை ஆடல் காட்டிய பெருமாளே' — திருப்புகழ் 650. உரையும், பக்கம் 524 கீழ்க்குறிப்பும் பார்க்க. தில்லை மன்றுளாடும் பெருமான் சிவனே – சிவனார் மகன் முருகனே என வேற்றுமை தெரியா நிலையில் அந்த நிருத்தம் நிகழ்ந்தது. அருணகிரியாரும் தமது பாடலில் – "மலைமகள் உமைதரு வாழ்வே மனோகர மன்றுளாடும் சிவசிவ ஹரஹர தேவா நமோ நம ... *திரிபுரம் எரிசெய்த கோவே நமோ நம" என நடராஜப் பெருமான் வேறு, முருகன் வேறு என்னும் வேற்றுமை காட்டாது பாடியுள்ளார். திருப்புகழ்-611-ம், பக்கம் 416 கீழ்க்குறிப்பும்.

*உமைதரு வாழ்வே — முருகா; திரிபுரம் எரிசெய்த கோவே - சிவா.

[தொடர்ச்சி பக்கம் 542-ல் பார்க்க.]

[11]முனைதொறு முழங்கி யொற்றி முகிலென இரங்க வெற்றி
முறைநெறி பறந்து விட்ட கோழியான்
[12]முதிஅவுணர் அன்றுபட்ட முதியகுடர் நன்று சுற்று
முதுகழுகு பந்தர் இட்ட வேலினன்;
[13]மலைமருவு பைம்பு னத்தி வளருமிரு குன்ற மொத்தி
வலிகுடி புகுந்திருக்கு மார்பினன்

---

(1) வரையசல மண்டபம் — பெரிய மலைபோன்ற நடன சபாமண்டபம். வரையசலம் — 'அடவி காடே' என்பதுபோல் ஒரு பொருட் பன்மொழி.

(2) பெரியம்பலம் - பேரம்பலம்.

" பேரம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான் "
—சிதம்பரச் செய்யுட்கோவை 47.

[11] கோழியின் குரல் — " இடிக்குரல் காட்டும் சேவலே "— " அவுணர் பட இடிநேர் குரல்காட்டும் சேவல் " — சேவல் பத்து 4, 9. பறந்துவிட்ட - பறந்துவிடுதலைச்செய்த பறந்து சென்ற; பறந்த: கோழி - போர்முறைஅறிந்தது. ஆதலால் வெற்றிமுறை நெறி எனவும் பிரித்து - வெற்றி கிடைக்கக் கூடிய முறை வழியில் பறந்து தாக்கும் கோழி எனலுமாம். அத்தகைய திறம் கொண்ட காரணத்தால் ஒரு ஆனையுடன் போர் செய்து கோழி வெற்றி பெற்றது. அந்த இடம்தான் 'கோழியூர்' என்னும் திருமுக்கீச்சரத்தலம், இதுவேஉறையூர். திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 1 மைலில் உள்ள தலம்.

" முறஞ் செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ் சிறை வாரணம் "—சிலப்பதி. 10-247.

" சூட்டுடை சேவலொன்று தொளைக் கைமால் யானையோடு
மூட்டுபோர் புரிந்த தானம் " - உறையூர்ப்புரா. நகர. 28

(2) இனி, கோழி உரு ஆவதற்கு முன்பு சூரன் முறை நெறி (நெறிமுறை) நீதிமுறையை விட்டிருந்தான், ஆதலின்— 'பறந்து நெறிமுறை விட்ட கோழி' (சூர) பதுமனும் கோழி எனலுமாம். வேலால் பிளவுண்டு மயில் - சேவலானவுடன் சூரன் நெறிமுறை விட்டுப் பறந்துவந்து வேளைத் தாக்க வந்தான். அப்போது முருகவேளின் அருள் நோக்கால் ஞான நிலையை அக் கோழியும் (மயிலும்) பெற்றன.

' சேவலு மயிலுமாகிச் சினங்கொடு தேவர்சேனை
காவலன் தன்னை நாடி அமர்த்தொழில் கருதிவந்தான் '
' எந்தை அருள்கெழு நாட்டம் சேர்த்த ஆங்கவன் இகலை நீங்கித், தெருள்கெழு மனத்தனுகி நின்றனன் '-கந்தபுராணம் 4-13-492, 495;

11. (முனை தொறும்) போர் முனை தோறும் (முழங்கி) ஒலி செய்து, (ஒற்றி) தாக்கி, (முகில் என) மேக கர்ச்சனை போல—இடிபோல, (இரங்க) எற்றி – பேரொலி எழ மோதி, (முறை நெறி) போர் முறை வழியே பறத்தலைச் செய்த கோழியைக் கொடியாகக் கொண்டவனும்.

12. முதியவுணர் (முதுமை அவுணர்) கொடுமை – (வன்மை) முற்றின அசுரர்களின்–அல்லது பழைமை வாய்ந்த அசுரர்களின், (அன்று) போர் புரிந்த அந்நாளில் (பட்ட) கிழியுண்டு வெளிவந்த (முதிய குடர்) முற்றின குடல்களை (நன்று சுற்று) (வேலாயுத மானது தனது சிரமாலையாக அக் குடல்களை) நன்ருகச் சுற்றியுள்ள காரணத்தால் — (அந்தக் குடல் மாலை மாமிசத்தை உண்ண விரும்பி) முது கழுகு–வயது சென்ற கழுகுகள் பந்தர் இட்ட – பந்தல் போட்டது போலக் கூட்டமாகப் பறந்து வந்து மேலே சூழும் (வேலினுன்) வேலா. யுதத்தை உடையவனும்.

13. (மலை மருவு பைம்புனத்தி) - வள்ளி மலையில் இருந்து பசிய தினைப் புனத்தைக் காத்திருந்த வள்ளி நாயகி யின் (வளரும்) பெருத்து மேலெழும் (இரு குன்றம்) இரண்டு இரண்டு மலை போன்ற கொங்கைகள் (மொத்தி) மொத்தின தால்—தாக்கினதால், (வலி) நோய், குடி புகுந்திருக்கும்–சதா குடி கொண்டிருக்கும் – சதா இடம் பெற்றிருக்கும் (திரு) மார்பை உடையவனும்.

---

[12] (1) அசுரர் குடலை வேல் சிரமாலையாகச் சூடியுள்ளது – "சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர் பெருத்த குடர் சிவத்ததொடை எனச் சிகையில் விருப்பமொடு சூடும்— ...... குகன்வேலே"—வேல் வகுப்பு 12.

(2) கழுகு பந்தரிட்ட வேலினுன்: "உவணநிரை கொண் டிடும் செங்காவணம்"—பூதவேதாள வகுப்பு, அடி 47.

[13] '(வளிநாயகி) முலைவிடாத (கர) மணிமார்பன்' என்ருர் திருப்புகழில் (522, 644, 817). ஆதலால் முருகன் மார்பில் வள்ளியின் கொங்கைச் சுவடு (தழும்பு) உண்டு; அந்தத் தழும்பிருக்கும் மார்பில் வலி இருந்துகொண்டே இருக்கும். அங்ஙனமே பார்வதியின் கொங்கைச் சுவடு சிவனுர் மார்பிலும் உண்டு — (1) "சுரிகுழல் மடந்தை துணைமுலைக் கண்கள் தோய் சுவடு ... இரண்டு பொங்கொளி தங்கு மார்பினனே" —திருவாசகம்-அருட்பத்து 5.

(1) "யாமெலாம் வழுத்தும் துறவி என் றிருந்தும், ஒருத்திதன் இளமுலைச் சுவடு தோமுறக் கொண்டார்"—காஞ்சிப்புரா. நகரம் 109.

14மழலைகள் விளம்பி மொய்த்த அறுவர்முலை யுண்டு முற்றும்
வடிவுடன் வளர்ந்தி ருக்கும் வாழ்வினன்
15மலையிறை மடந்தை பெற்ற ஒருமதலை யென்று தித்து
மலையிடிய வுந்து ணித்த தோளினன்
16மயிலையும் அவன்தி ருக்கை அயிலையும் அவன் கடைக்கண்
இயலையு நினைந்தி ருக்க வாருமே.

---

(2) 'தழுவுமையால் முன்னும் தமிழிறையாற் பின்னும்
தொழுமிறையால் மேலும் சுவடு—கெழுமுவ; கீழ்
இன்றால் எனுங்குறைபோம் என்மனஞ்சேர் வாட்
அன்றால் அமர்ந்தாய் அடி' [போக்கி
—வாட்போக்கிக் கலம்பகம் 7.

14 (1) "தாராகணமெனும் தாய்மார் அறுவர் தருமுலைப்
பால் ... உண்ட பாலன்"—கந்தரலங்காரம் 81.

(2) முற்றும் வடிவுடன் – "முழுதும் அழகிய குமர"—
திருப்புகழ் 1277, பக்கம் 642 கீழ்க்குறிப்பு.

15 மலையரசன் —(இமயமலையின் மகள் வயிற்றுப் பேர
னுயிற்றே நாம்; நமது பாட்டன் - மலையாயிற்றே; ஆதலால்
மலைகள் எல்லாம் நமக்கு உறவு ஆயிற்றே; கிரவுஞ்சம் ஒரு
மலை, ஏழுமலை – மலைகள் – ஆதலால் இவை தமக்கு ஊறுசெய்ய
மாட்டேன் நான் என்று பக்ஷபாதம் காட்டாமல்– "துஷ்ட
நிக்ரகம்' என்னும் தருமத்தைக் கைவிடாது அம்மலைகளை
அழிவுபடுத்தின நீதிமான் முருகவேள் –என்று முருகரின் நடுவு
நிலைமை விளக்கம் பெறுகின்றது.

தமக்கு வேண்டிய அடியாராயிருந்தாலும் பிழை செய்
தால் முருகவேள் தண்டிப்பார்; தண்டித்து நன்னெறியைக்
காட்டுவார். "நின்பணி பிழைக்கிற் புளியம் வளரால்
மோதுவிப்பாய்" என்றார் அப்பர் 4-99-1.

16 மயில், அயில், கடைக்கண் – இம் மூன்றின் பெருமை
களைக் கூறி, இவை மூன்றையும் தியானியுங்கள் என்று
பேராதரவுடன் உலகோரை அழைக்கும் அருணகிரியாரது
பெருங்கருணையைப் பாருங்கள். 'நான்பெற்ற இன்பம் பெறுக
இவ் வையகம்' என்னும் அருணகிரியாரின் பெருங்கருணை
இத் திருவகுப்பால் புலப்படுவதால் 'கருணைக்கு அருணகிரி'
என்னும் முதுரையின் உண்மை தெளிவாக விளக்குகின்றது;
அதுபற்றி, இவ் வகுப்பைப் 'பெருங்கருணை வகுப்பு' எனப்
பெயரிட்டு அழைக்கலாம். மேலும், [தொடர்ச்சி பக்கம் 545.]

*14.* (மழலைகள் விளம்பி) குழந்தையாய் மழலைச் சொற்களைப் பேசி, (மொய்த்த) தன்னைச் சூழ்ந்து நின்ற (அறுவர் முலை) கார்த்திகை மாதர் ஆறுபேர்களின் கொங்கைப் பாலைப் பருகி, (முற்றும் வடிவுடன்) அங்கங்கள் யாவும் அழகு விளங்க வளர்ந்திருக்கின்ற வாழ்வை உடையவனும்.

*15.* மலை யிறை – மலைகளுக்கு அரசான – இமயமலையின் மடந்தை – மகள் பார்வதி பெற்ற (ஒரு மதலை) ஒப்பற்ற குழந்தை (என்று உதித்தும்) எனத் தோன்றியிருந்தும், (மலை இடியவும் துணித்த) – (ஒரு) மலையையே பொடிபடப் பிளந்து தள்ளின (தோளினன்) தோள்வீரம் கொண்டவனும் (ஆன முருகவேளின்).

*16.* மயிலையும், (அவன்) அவரது திருக்கரத்தில் உள்ள (அயிலையும்) வேலாயுதத்தையும், (அவன்) அவரது கடைக்கண்ணின் (இயலையும்) கருணை, பெருமை ஆதிய தன்மைகளையும் நினைந்திருக்க – தியானித்திருக்க (வாருமே) வருவீர்களாக — வருவீர்களாக.

---

முருகன் மயில், முருகன் வேல், முருகன் கடைக்கண் ஆகிய இம் மூன்றையும் தியானியுங்கள்; இன்ன இன்ன பலன் பெறுவீர்கள் என்றுகூறி, உலகினரைக் கூவி அழைத்து முருகன் மாட்டு ஆற்றுப் படுத்துவதால் (வழிகாட்டுதலால்) இவ் வகுப்பு ஒரு 'முருகாற்றுப்படை' வகுப்பு: ஆகவே இவ்வகுப்பு (அருணகிரியார் பாடி உலகுக்கு அளித்த) ஒரு "திருமுருகாற்றுப்படை"யாம் எனத் துணிவுபெறக் கூறி மகிழ்வோமாக. பாராயணம் செய்து உய்வோமாக. அன்பர்களுக்கும் இவ் வுண்மையை எடுத்துக் கூறுவோமாக.

---

### கடைக்கணியல் வகுப்பு - சுருக்க உரை

அடி 8 பெருத்த இப்பூவுலகில் வாழ்பவர்களே!

அடி 9-16: கடப்ப மாலை அணிந்தவனும், தில்லையம்பலத்துள் நடனம் ஆடினவனும், போர் முறைவல்ல கோழிக் கொடியனும், அவுணர் தம் குடல் மாலையைச் சூடியுள்ள வேற் படையை உடையவனும், வள்ளியை இறுகத் தழுவின மார்பை உடையவனும், கார்த்திகை மாதர்தம் திருமுலைப் பாலை உண்டு அழகுடன் வளர்ந்திருப்பவனும், மலையரசன் பெற்ற மகளின் குழந்தையாயிருந்தும் ஒரு மலையை இடித்துப் பொடித்தவனும் ஆன முருகவேளின் மயில் வாகனத்தையும், அவன் திருக்கையில் உள்ள வேலாயுதத்தையும், அவன் கடைக் கண்களின் திருவருள் பாலிக்கும் இயலையும் (தன்மையையும்) நினைந்திருக்க வாருங்கள், வாருங்கள். அங்ஙனம

வந்து நினைந்திருப்பீர்களானால் உங்களுக்குக் கிடைக்கும் பேறுகளைக் கூறுகின்றேன் கேளுங்கள்:

அடி 1–8: (1) நீங்கள் ஏழுலகங்களையும் புரக்கும் அரசாக எக்காலமும் வாழலாம்.

(2) குபேரன், இந்திரன் இவர்கள் இருவர்க்கும் மேலான அரசாக நீங்கள் அறம் செலுத்தி ஆளலாம்.

(3) முத்தி, செந்தமிழ் அறிவு இவைதலைமைப் பெற நினைத்து அவை தமைப் பெறும்படியான திருவருளைப் பெறலாம்;

(4) எத்தகைய சண்டையிலும் வெற்றி பெறலாம்.

(5) குபேரனது புட்பக விமானத்தின் மீதும், இந்திரனுடைய வெள்ளை யானை மீதும் நீங்கள் ஏறலாம்.

(6) மிகச் சிறு கூட்டமோ, மிகப் பெருங் கூட்டமோ எதில் இருந்தாலும் ஒப்பற்ற தனிஞானி இவன் எனப் பிறர் பாராட்டும்படியான ஞான உணர்ச்சியைப் பெறலாம்.

(7) யம தூதர்கள் 'வா' என அழைக்க வந்தால் அவர்களை வெருட்டி ஓட்டி வெற்றி பேசலாம் நீங்கள்.

(8) இவை மட்டும் அல்ல, (ஒழிப்பதற்கு அரிய) பிறவியையும் நீங்கள் ஒழிக்கலாம்.

ஆகவே, நீங்கள் வாருங்கள், உங்கள் உலக கலைகளை விட்டு நான் சொன்ன உபதேசப்படி நடப்பீர்களாக; நடந்து மேற்சொன்ன பயன்களை அடைவீர்களாக.

### கடைக்கணியல் வகுப்பு – அநுபந்தம்

குறிப்புரையில் (அடி 16) - கடைக்கணியல் வகுப்பு - ஒரு திரு முருகாற்றுப் படையாகும் என்பதை விளக்கினோம். ஆற்றுப்படை என்பது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. (முருகவேள்திருமுறை தொகுதி 5 பக்கம் 684). கடைக்கணியல் வகுப்பின் உருவாக 'ஆற்றுப்படை' பாடின அருணகிரியார் பின்னும் பிரபந்த வகைகளுள் என்ன என்ன பிரபந்த இலக்கணங்களை இலை மறைவு காய் மறைவாகக் குறிப்பித்துள்ளார் என்பதை ஒரு சிறிது ஆராய்ந்தால், சிற்சில பிரபந்தங்களின் சிற்சில இலக்கணங்கள் ஆங்காங்கு புலப்படுகின்றன – அவை தாம்:—

(1) **பிள்ளைத் தமிழ் :** (1) முத்தப் பருவம் – திருப்புகழ் 199; பக்கம் 12 கீழ்க் குறிப்பு (2) சப்பாணிப் பருவம்— கந்தரலங்காரம் 14 பக்கம் 16-குறிப்புரை.

(2) பரணி: (போர்க்களவர்ணனை) பூதவேதாள வகுப்பு, அலகை வகுப்புக்கள்; திருப்புகழ் 1013 அடி 5–7; 1250 அடி 5–8;

(3) கலம்பகம்: கலம்பகத்தின் உறுப்பாய புய வகுப்பு, சித்து இவைகளைப் புயவகுப்பிலும், சித்து வகுப்பிலும் காண்கின்றோம்.

(4) அகப்பொருட் கோவை: கந்தரந்தாதியில் செய்யுள்கள், 3, 6, 7 முதலான 31 செய்யுள்களைப் பார்க்க (அந்தாதி பக்கம் 271).

(5) ஐந்திணைச் செய்யுள்: (குறிஞ்சி (மலை) திருப்புகழ் 357 அடி 8; 246 அடி–7. முல்லை (காடு) திருப்புகழ் 552 அடி 6; மருதம் (வயல்) திருப்புகழ் 912 அடி 8; நெய்தல் (கடல்) திருப்புகழ் 17, 31 அடி 8; பாலை (சுரம்) திருப்புகழ் 844 அடி 5.

(6) அங்கமாலை: கந்தரலங்காரம் 42, 43, 76 பாடல்கள்;

(7) நாம மாலை: திருப்புகழ் 661 அடி 3, 4; 668 அடி 2-4; கந்தரலங்காரம் 33, அந்தாதி 30, 55.

(8) பல் சந்த மாலை: திருப்புகழ் நூலே பல சந்தம் கொண்டது.

(9) பெரு மகிழ்ச்சி மாலை: முருகன் அழகு, குணம் – சிறப்பு அநுபூதி 2.

(10) மெய்க்கீர்த்தி: திருப்புகழ் 880 அடி 7, 8.

(11) உலா: கந்தரந்தாதி 2; 89 திருப்புகழ் 962. அடி 1-4.

(12) மடல்: திருப். 668–அடி 2, 1020; கந்தர் அந். 71.

(13) ஆற்றுப் படை: (முருகனிடத்தில் ஆற்றுப் படுத்தல்) கடைக்கணியல் வகுப்பு.

(14) ஊர் நேரிசை, ஊர் வெண்பா (ஊரைச் சிறப்பித்தல்) கந்தரந்தாதி 73, 91, பக்கம் 253 குறிப்பு).

(15) கேசாதி பாதம்: திருப்புகழ் 354, 653,

(16) கைக்கிளை: (ஒருதலைக் காமம்) கந்தரந்தாதி 45;

(17) தூது: (நாரை விடுதூது) திருப்புகழ் 821.

(18) குறம்: (குறத்திப் பாட்டு) திருப்புகழ் 1243 அடி 8.

(19) எழுகூற்றிருக்கை: முருகவேள் திருமுறை தொகுதி 5, பக்கம் 684 பார்க்க.

(20) முதுகாஞ்சி: (அறிவு மிக்கோர் அறிவிலார்க்குக் கூறுவது) கந்தரலங்காரம் 2, 16, 18, 20, 51, 53, 55, 56, 57, 59, 66, 68, 71, 72, 74, 78, 85, 91, 95, கந்தரநுபூதி–17.

## 18. சிவலோக வகுப்பு

[மௌன யோக நிலையால் வரும் பேரின்ப அன்பெனப் படுஞ் சிவலோகந் தருவதான சிறப்புக்களை எடுத்துக் கூறிற்று.]

தனதன தனதன தனதன தனதன தந்தன
தந்தம் தாத்தன தந்தந் தன்தானன

[1]உரகமும் இதழியும் உதகமும் உடுபதி யும்புனை
யும்பஞ் சாட்சரர் பங்கின் கொடிதாளினில்
[2]உலகமு மலைகளும் உததியும் உயிரும டங்கவொ
டுங்கும் பார்ப்பதி மைந்தன் ०கமலாலயன்
[3]உபநிட முடிவினும் இடபம தனிலுமு யங்கிவ
யங்குஞ் சீர்ப்பதி யொன்றென் றவிதாஎன
[4]உறைவிடு படையினன் அடலுடை நிசிசரர் தண்டமு
டைந்தங் கார்ப்பெழ வங்கம் பொருசேவகன் ;

---

[1] (1) பாம்பு, கொன்றை, கங்கையாறு, பிறை – இந்த நான்கையே 'ஆற்றைப், பணியை, இதழியை, அம்புலியின் கீற்றைப் புனைந்தவன்' என்றார் கந்தரலங்காரம் முதற்செய்யுளில்.

(2) பஞ்சாட்சரர் – 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்துக்கு உரியவர். "நமசிவாய" என்னும் ஐந்தெழுத்தைத் தமது நாமமாக உடையவர். 'நாதன் நாமம் நமச்சிவாயவே' —சம்பந்தர் 3-49-1.

[2] தேவி தாளில் உலகம், உயிர் யாவும் ஒடுங்குதல் :—

'உதர கமலத்தி னிடை முதிய புவனத்ரயமும்
உகமுடிவில் வைக்கும் உமையாள்'
—வேடிச்சி - வகுப்பு, அடி 1.

'புவனம் பதினான்கையும் கரந்தவளே'-அபிரா.அந்.13.

० கமலாலயன் — சரவணத்திற் பதுமப்பாயலில் இருந்த முருகன், "வனசமேல் வருதேவா" — திருப்புகழ் 150, "சரவணை தனில் முளரியின் வரு முருகோனே" – திருப். 133.

[3] (1) உபநிடம் - (உபநிடதம்) இங்கு வேதம்.

'உகநான்கும் பொருள் நான்கும் உபநிடதம் ஒரு நான்கும் முகநான்கும் படைத்துடைய முதல்வனையாம் பரவுதுமே' — கலிங்கத்துப்பரணி-கடவுள் வாழ்த்து 5.

(2) சிவனே முருகன் என்னும் கருத்தில், இடபம் அதனில் வயங்கும் (சீர்ப்பதி) கடவுள் - முருகன் எனவும் கொள்ளலாம். அங்ஙனம் கொண்டு, உபநிடத முடிவினும் ரிஷபத்திலும் விளங்கும் (சீர்ப்பதியே) கடவுளே! ஒன்றே

## பொழிப்புரை

**1.** (உரகமும்) பாம்பையும், (இதழியும்) கொன்றையையும், (உதகமும்) (கங்கை) நீரையும் (உடுபதியும்) நக்ஷத்திரங்களுக்கு நாயகனான சந்திரனையும் (புனையும்) தரித்துள்ளவரும், (பஞ்சாட்சரர், ஐந்தெழுத்துக்கு உரியவருமான சிவபிரானது (பங்கின்) இடது பாகத்தில் விளங்கும் (கொடி) கொடி போன்ற பார்வதிதேவி - (தாளினில்) தனது திருவடியில்

2. (உலகமும்) உலகங்களும், மலைகளும், (உததியும்) கடலும், (உயிரும்) சகல உயிர் வர்க்கங்களும் (அடங்க) எல்லாம் (ஒடுங்கும்) கடையூழியில் ஒடுங்கி நிற்கின்ற—பார்வதி தேவியின் (மைந்தன்) குமாரன், (கமலாலயன்) தாமரைத் தவிசில் வீற்றிருந்தவன்

3. (உபநிட முடிவினும்) வேதத்தின் முடிவினும் (இடபம் அதனிலும்) ரிஷபவாகனத்தின் மீதும் (முயங்கி) பொருந்தி, (வயங்கும்) விளங்கும் (சீர்ப்பதி) கடவுளாகிய சிவபிரான் (ஒன்று) மதித்தற்குரிய அரும் பொருளே (என்று) அழைத்து, (அவிதா) (தேவர்களைக்) காப்பாற்றுவாயாக (என்) என்று கூற (அல்லது வேத முடியினும் ரிஷபத்தின் மீதும் பொருந்தி விளங்கும். சீர் – சீர்மைச் (சிவனுக்கும்) (பதி) குருவாம் (ஒன்று) ஒன்றே – ஒப்பற்ற ஒருவனே என்று (அவிதா என) அபயச் கூச்சலிட்டு (தேவர்கள்) முறையிட.

4. (உறைவிடு படையினன்) உறையை விட்ட (உறையினின்றும் கழற்றப்பட்ட) (படையினன்) - வேற்படையினன், (அடல்) வலிமை (உடை) உடைய - கொண்ட (நிசிசரர்) அவுணர்களுடைய (தண்டம்) சேனை – படை (உடைந்து) சிதறுண்டு (அங்கு) அப்போர்க் களத்தில் (ஆர்ப்பு எழ) கூச்சல் எழ (அங்கம்) போர் (பொரு சேவகன்) பொருத வீரன்—

---

(ஒப்பற்ற மூலப்பொருளே) என்று கூறி - அவிதா என – காத்தருளுக என்று முறையிட — எனலுமாம். (3) சீர்ப்பதி— கடவுள். (4) அவிதா – ஆபத்தில் முறையிட்டுக் கூறும் சொல்: 'ஆவ எந்தா யென் றவிதாவிடு நம்மவர்'—திருவாசகம் 5–4.

4 (1) உறைவிடு – விடுதல் - நீங்குதல்.

'விடுங்கோள் வெகுளியை'-கந்தரலங்காரம் 16.

வேற்படைக்கும் உறை உண்டு – 'வேலை யுறை நீட்டி'— திருப்புகழ் 905, பக்கம் 640 குறிப்பு.

(2) தண்டம் – படை, சேனை (திவாகரம்): அங்கம்= போர். 'தாபதர் தம்மோடு எம்மோடு அங்கம் வந்துற்றதாக' —கம்பராமா. கும்பகர்ண 15.

[5]வரபதி சுரபதி சரவண மடுவினில் வந்தருள்
கந்தன் கார்த்திகெ யன்செங் கழுநீர்மலர்
[6]மழுவிய குருபரன் வனசரி பதயுக கஞ்சம்வ
ணங்கும் பாக்யக தம்பன் கருணாகரன்
[7]வடதரு இலையிலும் வெகுமுக மவுலி அனந்தனெ
னுஞ்செஞ் சேக்கையி லுங்கண் துயில்மால்திரு
[8]மருமகன் இமையவர் வழிபடு மணியணி *கிங்கிணி
பண்கொண் டார்த்திசை கொஞ்சும் பதசூடிகை ;
[9]அருவுரு ஒழியஒ ரபிநவ வடிவரு ளுந்தனி
யந்தந் தீக்ஷையெ னுங்குண் டலபூஷணம்

---

[5] செங்கழுநீர் மலர் மருவிய குருபரன் — இது தணிகைக் குருமூர்த்தி – தணிகையில் முருகவேள் சிவனுக்கு உபதேசித்த சாமிநாதர் — திருப்புகழ் 261, பக்கம் 148 கீழ்க்குறிப்பு.

செங்கழுநீர் மலர் அணியும் குருபரர் – திருத்தணிகைச் 'செங்கல்வ ராயர்'. "திருத்தணிகைச் செங்கழநிப் பெருமாளே "—திருப்புகழ் 299. "சறுகிலாத செங்கழுநீரும் ... புனையும் மார்பதென் தணிகைமேவு செங்கதிர்வேலா"— திருப்புகழ் 295.

வரபதி - சிவபிரான் தேவர்களுக்குத் தந்த வரத்தின் பலனாகத் தோன்றிய கடவுள் எனலுமாம். வரோத்யன் – 'மந்தாகினி தந்த வரோதயனே'—கந்தரநுபூதி 33.

[6] முருகவேள் வள்ளி பதங்களைப் பணிபவர்.
"பணியா என வள்ளி பதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே '-கந்தர்அநுபூதி. 6.
கதம்பம்=கடம்பு (திவா).

[7] அனந்தன் ஆயிர பணமகுடம் உடையவனாதலால் 'வெகுமுக மவுலி' என்றார். கங்கையை, 'வெகுமுக ககன நதி' (சீர்பாதவகுப்பு) என்றதுபோல; ஆதிசேடனுக்குஆயிரம் மணிமுடி - மயில் வகுப்பு, அடி 4.

[8] சூடிகை - மணிமுடி (பிங்கலம்) : அன்பெனப்படும் சிவலோகம் முருகவேளின் திருவடி தீக்ஷையைத் தரும் ;
'மணவாளன் நல்கும் திருவடியே'—(கந். அந். 100).

*கிண்கிணி பண் கொண்டு ஆர்த்து இசை கொஞ்சும் ; முருகபிரானது திருவடியிலுள்ள கிண்கிணி, தண்டை முதலிய ஒலித்துக் கீத பேதங்களைக் காட்டும் ; மேற்கோள் :—

5. (வரபதி) வரங்களைத் தரும் தலைவன், (சுரபதி) தேவர்களுக்குத் தலைவன், சரவண மடுவிலே தோன்றி அருளிய – கந்தசுவாமி, (கார்த்திகேயன்) கிருத்திகை மாதர்களின் மைந்தன், செங்கழுநீர் மலர் (மாலையை)

6. (மருவிய) சூடியுள்ள குருபரமூர்த்தி, (வனசரி) வள்ளி மலையில் வனம் காட்டில் (சரி) வாசஞ் செய்தவளாம் வள்ளியின் (பதயுக) இரண்டு திருவடிகளாகிய (கஞ்சம்) தாமரை மலர்களை வணங்கின (பாக்ய கதம்பன்) புண்ணிய மூர்த்தி – கடப்ப மாலையை அணிந்தவன், கருணாகர மூர்த்தி,

7. (வடதரு) ஆலமரத்தின் (இலையிலும்), வெகுமுக – ஆயிரக் கணக்குள்ள மவுலி – முடிகளை உடைய (அனந்தன் எனும்) ஆதிசேடனும் (செஞ்சேக்கையிலும்) செவ்விய படுக்கையிலும், (கண் துயில்) துயில் கொள்ளும் (மால்) திருமாலின் அழகிய (அல்லது திருமால், இலக்குமி – இவர்தம்)

8. மருமகன் ஆகிய முருகவேளின் (இமையவர் வழிபடு) தேவர்கள் வழிபடுகின்ற (மணியணி கிங்கிணி) ரத்னங்கள் பதிக்கப்பெற்ற (கிங்கிணி) சதங்கை (பண்கொண்டு) இசையுடன் (ஆர்த்து) ஒலித்து இசை கொஞ்சும் – ராகவகைகளைக் (காட்டும் பதசூடிகை) திருவடி என்கின்ற கிரீடத்தையும் – மணிமுடியையும் (1),

9. அருவுரு ஒழிய-உருவம் இல்லாமை, உருவம் உடைமை எனப்படும் நிலை இரண்டும் இல்லாததாய், ஓர் – ஒரு, (அபிநவ வடிவு) அதிசயிக்கத் தக்க – புதுமையான வடிவை – உருவ நிலையை (அல்லது அழகை) அருளும் – தந்தருளும் (தனி) ஒப்பற்ற (அந்தம்) முடிவான - அழகான "தீக்ஷை" உபதேசமாம் குண்டல பூஷணம் – தவத்தோர் காதணியாம் குண்டலம் எனும் ஆபரணத்தையும் (2),

---

" இசைத்திடுஞ் சந்தபேத மொலித்திடுந் தண்டை "— திருப்புகழ் 15. " கீத கிண்கிணி பாதா "—திருப்புகழ் 100, 'சதங்கைதரு கீதம்' ஷெ 204, 'நாதகீத கிண்கிணி' ஷெ 236.

[9] அன்பெனப்படும் சிவலோகமானது முருகவேளே நமது செவியில் உபதேசிப்பதாகிய ஒரு பேற்றினையும் தரும். தீக்ஷை உபதேசிப்பது செவியில் ஆதலால், 'அந்த அருமை வாய்ந்ததும் செவிக்கு அணி தருவதுமான தீக்ஷையானது செவிக்கு அணி தரும் ' குண்டல பூஷணத்துக்கு ' ஒப்பாகும்.

[10]அணிமய மெனுமொரு சிவிகையொ டதிகுணமஞ்சினு
மஞ்சொன் ருக்கிய தென்பொங் கரியாசனம்

[11]அறநெறி முறைமையில் ஒழுகிய அழகிய பண்பெனும்
அம்பொன் சேர்த்தக லிங்கஞ் சயசாரமும்

[12]அவனவள் அதுஎன மொழியவும் இலதொரு வன்பிணி
யுங்கொண் டாக்கமும் இன்பங் களுமேதரும்;

[13]இரவலர் மிடிகெட உதவிய விதரண கங்கணம்
இங்கங் காப்பில் எனுஞ்சுந் தரகாகளம்

[14]எனதறு துறவினும் உயர்கொடை யவிரத சங்குல
கெங்குங் கேட்டுவ ழங்கும் பொறைமாமுர

[15]சிமையவர் கணமுனி கணமுடன் இனிதுப்ர பஞ்சம்இ
றைஞ்சுங் கீர்த்திது ரங்கந் திறல்வாரணம்

---

10-12 சிவிகை, சிம்மாசனம், பொன்னுடை, வெற்றிப்பேறு, அத்துவித நிலையாற் பெறக்கூடிய ஆக்கம் இன்பம் ஆகிய சகல சீர் சிறப்புக்களையும் அந்த அன்பின் சிவலோகம் தரும்.

13-15 மேலும் — அரசர்களுக்கும், கடவுளுக்கும் உரிய தசாங்கம் போல "கொடை" என்னும் ஊது கருவியாம் எக்காளத்தையும், சங்கையும், பொறை என்கின்ற முரசு வாத்தியத்தையும், கீர்த்தி என்கின்ற குதிரையையும், திறல்—வீரம் என்கின்ற யானையையும், மவுன ஞான நிலையையும் தசாங்க உறுப்புக்களாக அந்த அன்பின் சிவலோகம் தரும் என்க. அதாவது பெருநிலையையும், பெருங்கீர்த்தியையும், பெரும்புகழையும் அது தரும் – என்றவாறு.

14 (1) துறவு நிலையினும் "ஈதல்" சிறப்பைத் தரும். 'சாதலின் இன்னாததில்லை யினிததூஉம் ஈதல் இயையாக் கடை' — "அருளிலார்க் கவ்வுலகமில்லை" என்றுராதலின் குறள் 230, 247). (2) அவிரதம்—என்றும் (உரிச்சொல்நிகண்டு)

பொறை—இங்கு முரசுக்கு ஒப்பிடப்பட்டது—கந்தரந்தாதி 84-ஆம் பாட்டில் 'பாணத்துக்கு' ஒப்பிடப்பட்டது.

10. "அணிமயம்" — அலங்காரமயம் — அழகு மயம் (எனும்) என்று வியக்கத்தக்க (ஒரு) ஒப்பற்ற (சிவிகையொடு) பல்லக்கையும் (3), அதனுடன் (அதிகுணம்) அதிக லக்ஷணமானதும் — மேன்மையானதும், (மஞ்சினும் மஞ்சு) அழகினும் அழகு (ஒன்று) ஒன்றுதல்-பொருந்துதல், (ஆக்கிய) அமைக்கப் பெற்றது - (என் பொங்கு) என்று கூறும்படி விளங்குகின்ற (அரியாசனம்) சிம்மாசனத்தையும் (4)

11. (அறநெறி முறையில்) தருமநெறி ஒழுக்கத்தில் (ஒழுகிய) நடைபெற்ற (அழகிய பண்பு எனும்) அழகிய குணத்துககு (அடையாளம்) எனும் - எனக் காட்டும் (அம் பொன்) அழகிய பொன் (சேர்த்த) பொன் சரிகை கலந்த (கலிங்கம்) ஆடையையும் (5), (சய சாரமும்) ஜய மேடையை யும் அல்லது ஜய மரத்தையும் - ஜயத் தம்பத்தையும் - அல்லது வெற்றியின் இனிமையையும் (6)

12. அவள் அவர் அது என - அவன், அவள், அது என்று குறிப்பிட்டு (மொழியவும்) சொல்லுதற்கும் (இலது ஒரு) இல்லாததான (ஒரு) ஒப்பற்ற ஒரு (வன்) வலிமை வாய்ந்த (பிணியும்) பற்றினையும் - அத்துவித நிலையையும் (கொண்டு) பூண்டு, அந் நிலையாற் பெறக் கூடிய (ஆக்கமும்) செல்வத்தை யும் (7), (இன்பங்களுமே) சுகத்தையும் - (8) தரும் - தந்து உதவும் 'இன்பம் தேக்கிய அன்பின் சிவலோகம்' (அல்லது - தரும் - தருவதான ...... விதரண கங்கணம்)

13. இரவலர் - யாசகர்களின் (மிடிகெட) வறுமை நீங்க (உதவிய) உதவி புரியும் (விதரண கங்கணம்) கொடை என்கின்ற (கங்கணம்) விரதக் கொள்கை (இங்கு) தங்கும் (அம்) அழகிய (காப்பு) (காப்புக்கு) பாதுகாவலுக்கு (இல்) இடம் (எனும்) என்று குறிக்கும் (சுந்தர காகளம்) அழகிய எக்காளத்தையும் (9)

14. எனது அறு துறவினும் - எனது என்ற பற்று அற்ற துறவு நிலையிலும் (உயர்கொடை) உயர்ந்த கொடையாகிய (அவிரத) எப்போதும் (முழங்கும்) சங்கு - சங்கினையும் (10); (உலகு எங்கும்) உலகில் எவ்விடத்தும் (கேட்டு வழங்கும்) கேட்கும்படியாக இயங்கும் — நடைபெறும் "பொறை" பொறுமை எனப்படும் (மா) சிறந்த (முரசு) முரசு எனும் பறை வாத்தியத்தையும் (11)

15. (இமையவர் கணம்) தேவர்கூட்டம், (முனி கணம்) முநிவர் கூட்டம் (உடன்) இவர்களுடன் (இனிது) மகிழ்ச்சி யுடன் (ப்ரபஞ்சம்) உலகினர் (இறைஞ்சும்) போற்றி வணங் கும் கீர்த்தி என்கின்ற (துரங்கம்) குதிரையையும் (12), (திறல்) பராக்ரமம் எனப்படும் (வாரணம்) யானையையும் (13)

[16]இருவினை கெடஒரு நிரமய பரமவு னந்தரும்
இன்பந் தேக்கிய அன்பின் சிவலோகமே.

## 19. மயில் வகுப்பு

[ மயிலின் ஆற்றலைக் கூறுவது. ]

தானதன தந்ததன தானதன தந்தத்ன
தானதன தந்ததன தந்த தனன

[1]ஆதவனும் அம்புலியும் மாசுறவி ழுங்கியுமிழ்
ஆலமரு வும்பணியி ரண்டும் அழுதே

[2]ஆறுமுகன் ஐந்துமுகன் ஆனைமுகன் எங்கடவு
ளாமெனமொ ழிந்தகல வென்று விடுமே

---

[16] அன்பின் சிவலோகமே —

"அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்,
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்"

"அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை எய்த ஒண்ணாதே"
—திருமந்திரம் 270, 272.

இவ் வகுப்பால் அன்பின் சிறப்பு விளங்குகின்றது. இவ் வுண்மையைக் கண்டே காரைக்காலம்மையார் சிவபிரானிடம் கேட்ட முதல் வரம் — "இறவாத இன்ப அன்பு" (பெரிய புரா. காரைக்கால் 60). இறவாத-அழிதலில்லாத. இதுதான் 'இன்பம் தேக்கிய (நிறைந்த) ன்பு' – இதுவே சிவலோகம்.

[1-2] ராகு கேதுக்கள் சிவகுடும்ப அடியார் எனத் தெரிந்ததும் அவைகளை மயில் ஊறுபடுத்தவில்லை. சூரிய சந்திரரை ராகு கேதுக்கள் விழுங்கி உமிழ்வதை,

"ஞாயிற்றையுந் தண்கதிர்க் கோளையும் ... கௌவிச்
சுட்டுக்கொல், கூசிக்கொல் விட்டும் பிடித்தும்
தொடர்ந்திராகு கேதுக்கள் சிலந் தொலைத்தே"
என்வரும் இடத்துக் காண்க.
—தக்கயாகப்பரணி 555.

16. (இருவினை கெட) நல்வினை - தீவினை இரண்டும் ஒழிய (ஒரு) ஒப்பற்ற (நிரமய) நோயற்றதான, (பரம மவுனம்) மேலான மவுன ஞான நிலையையும் (14) (தரும் இன்பம் தேக்கிய அன்பின் சிவலோகமே) இன்பம் தேக்கிய - பேரின்பம் நிறைந்த அன்பு எனப்படும் சிவலோகம், (தரும்) அளிக்கும் - என்க.

---

### சிவலோக வகுப்பின் - சுருக்க உரை

பார்வதி மைந்தன், தாமரைமேல் விளங்கினவன், வேற் படையினன், போர்வீரன், வரபதி, சுரபதி, சரவணபவன், கந்தன், கார்த்திகேயன், தணிகைக் குருமூர்த்தி, வள்ளியை வணங்கும் காதலன், கடம்பன், கருணுகரன், மால் திருமருகன் ஆகிய முருகவேளின் திருவடிச் சூட்டினையும், அவர் செய்யும் தீக்ஷை என்னும் குண்டலத்தையும், அணிமயமாம் சிவிகையை யும், பேரழகு கொண்ட சிம்மாசனத்தையும், பொன்னுடை யையும், ஜய சாரத்தையும், அத்துவித நிலையாற் பெறக்கூடிய ஆக்கத்தையும், இன்பத்தைத்தரும் கொடை விரதமாம் எக் காளத்தையும், 'எனது' என்னும் மமகாரம் அற்ற நிலையிலும் 'கொடை'க் குணமாம் சங்கையும், பொறை என்றும் முரச வாத்தியத்தையும், கீர்த்தி என்னும் குதிரையையும், வீரம் என்னும் யானையையும், மஹா மவுனத்தையும் - இன்பம் நிறைந்த அன்பாம் சிவலோகம் தருவதாகும்.

### பொழிப்புரை

1. (ஆதவனும்) சூரியனையும் (அம்புலியும்) சந்திரனையும் (ஆசு உற) துன்பம் உறும்படி (விழுங்கி) கவர்ந்து (பின்பு) உமிழ் - வெளிவிடுகின்ற, ஆலம் மருவும் - விஷம் பொருந்தும் (பணி இரண்டும்) ராகு, கேது என்னும் பாம்புகள் இரண்டும் (அழுதே) பயந்து அழுது

2. ஆறுமுகக் கடவுளும், ஐந்து முகத்தனும் சிவபிரா னும், ஆனைமுகக் கடவுளாம் கணபதியும் தாம் (எங் கடவு ளாம்) நாங்கள் இருவரும் வணங்கும் தெய்வங்களாம் (என) என்று (மொழிந்து) மயிலிடம் சொல்லி (அங்ஙனமாயின் உங்களை விட்டுவிடுகிறேன் என்று மயில் அந்தப் பாம்புகள் இரண்டையும் (அகல) பிழைத்தோம் என அகன்று போம்படி (வென்று) அப் பாம்புகளைச் ஜெயித்து (விடுமே) அவைகளைப் போகட்டும் என்று விட்டுவிடும் (செந்திற் குமரனது மயில் (1)

[3]ஆர்கலிக டைந்தமுது வானவர்அ ருந்தஅருள்
ஆதிபக வன்துயில்அ நந்தன் மணிசேர்
[4]ஆயிரம் இருந்தலைக ளாய்விரிப ணங்குருதி
யாகமுழு துங்குலைய வந்த றையுமே;
[5]வேதமுழு தும்புகல் இராமன்ஒரு தம்பிமிசை
வீடணன் அருந்தமையன் மைந்தன் இகலாய்
[6]வீசும்அர வஞ்சிதறி யோடவரு வெங்கலுழன்
மேல்இடி எனும்படிமு ழங்கி விழுமே
[7]மேதினிசு மந்தபெரு மாசுணம யங்கநக
மேவுசர ணங்கொடுல கெங்கு முழுமே
[8]வேலியென எண்டிசையில் வாழும்உர கந்தளர
வேஅழலெ னுஞ்சினமு டன்ப டருமே;
[9]போதினில் இருந்தகலை மாதினைம ணந்தவுயர்
போதனை யிரந்துமலர் கொண்டு முறையே
[10]பூசனைபு ரிந்துகொடி யாகிமகிழ் ஒன்றுதுகிர்
போல்முடிவி ளங்கவரும் அஞ்சம் அடுமே

---

3-4 (1) திருமால் கடல் கடைந்தது — திருப்புகழ் 509, பக்கம் 162; திருப்புகழ் 604, பக்கம் 396; திருப்புகழ் 1003, பக்கம் 24 கீழ்க்குறிப்பு.

(2) ஆதிசேடனை மயில் தாக்குவது – கந். அலங். 97.

5-6 இந்திரஜித் செலுத்திய நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குமணனைக் கருடன் விடுவித்தது:

"வானுறை கலுழன் வந்தான்; அன்னவன் வரவு காணு அயில்எயிற் ரறவமெல்லாங் சின்ன பின்னங்க ளான" – கம்பராமாயணம் நாகபா. 294-295.

6 கருடனை – மயில் அட்டது – அடி 10-ன் குறிப்பு பார்க்க.

7 ஆதிசேடன் உலகங்களைத் தாங்குவது:

'அருண கணபண புயக சுடிகையின் அகில புவனமும்'
—பூதவே தாள வகுப்பு, அடி 1.

8 எண்டிசையில் வாழும் உரகம் – 'இரு சதுர திசையில் உரகமும் வீழ ... கலப ககமயில் கடவி' — திருப்புகழ் 1095.

10 அஞ்சம்=ஹம்ஸம்: அன்னப்பக்ஷி (பிரமன் வாஹனம்).

(1) அன்னத்தை மயில் அட்ட வரலாறு: ஒருமுறை, நாம்

[தொடர்ச்சி 558-ஆம் பக்கம் பார்க்க.]

3. (ஆர்கலி) கடலைக்கடைந்து, அமுதத்தை, வானவர்—தேவர்கள் (அருந்த அருள்) உண்ணும்படி அருளின (ஆதி பகவன்) ஆதிமூர்த்தியாம் திருமால் (துயில்] படுத்துத்தூங்கும் அநந்தன்—ஆதிசேடனுடைய (மணிசேர்) ரத்னமணிகள் உள்ள

4. ஆயிரம் இருந்தலைகளாய்-ஆயிரம் பெரியமுடிகளாய், விரிந்துள்ள (பணம்) படங்கள் (குருதியாக) ரத்தப்ரவாகம் எடுக்க, முழுதும்—உடல் முழுதும் (குலைய) குலையும்படி – நடுங் கும்படி வந்து (அறையும்) ஓங்கி அடிக்கும் (செந்திற் குமரனது மயில்) (2)

5. வேத முழுதும் – வேதங்கள் யாவற்றையும் (புகல்) சொன்ன (இராமன் ஒரு தம்பி மிசை) இராமனுடைய ஒப் பற்ற தம்பியாகிய லக்ஷ்மணன்மீது (வீடணன் அருந்தமையன்) விபீஷணருடைய அருமை வாய்ந்த தமையனும் ராவண னுடைய (மைந்தன்) பிள்ளையாகிய இந்திரஜித் (இகலாய்) பகைமை பூண்டு

6. (வீசும் அரவம்) எறிந்த நாகபாசம் என்னும் படை (சிதறி ஓட) அஞ்சி விழுந்து (ஓட) ஓடும்படி (வரு) வந்த (வெங்கலுழன்மேல்) கடுமை வாய்ந்த கருடன் மீது (இடி எனும்படி) இடி விழுந்தது போல (முழங்கி) ஒலிசெய்து (விழுமே) விழும் (செந்திற் குமரனது மயில்) (3)

7. மேதினி சுமந்த — உலகைச் சுமந்து தாங்குகின்ற (பெரு) பெரிய (மாசுணம்) ஆதிசேடன் என்னும் பாம்பு (மயங்க) மயக்கம் கொள்ளும்படி, (நகமேவு சரணங்கொடு) நகங்கள் உள்ள பாதங்களால் (உலகெங்கும்) உலக முழுமை யும் (உழுமே) நிலத்தைக் கிளைக்கும் - கிண்டும் (செந்திற் குமரனது மயில்) (4)

8. வேலியிட்டது போல எட்டுத் திசைகளிலும் வாழ் கின்ற (உரகம்) அஷ்ட நாகங்கள் (தளரவே) அஞ்சி ஒடுங்கி மெலிய (அழல் எனும் சினமுடன்) நெருப்புப்போன்ற கோபத் துடன் (படரும்) செல்லும் (செந்திற் குமரனது மயில்) (5)

9. (போதினில் இருந்த) வெண் தாமரை மலரில் வீற் றிருக்கும் (கலைமாதினை) சரஸ்வதியை (மணந்த) திருமணஞ் செய்த உயர் போதனை - மேன்மைமிக்க பிரமனை (இரந்து) வேண்டி – விரும்பி நின்று மலர்கொண்டு முறைப்படி

10. பூஜை செய்து, (அந்தப் பிரமனுக்குக்) கொடியாகி நின்று (மகிழ் ஒன்று) மகிழ்ச்சிபொருந்திய, (துகிர்போல்முடி) பவளம் போன்ற தலை உச்சி விளங்க வருகின்ற (அஞ்சம்) அன்னப் பறவையை (அடுமே) வருத்தி வெல்லும் (செந்திற் குமரனது மயில்) (6)

[11]பூதரொடு கந்தருவர் நாதரொடு கிம்புருடர்
பூரணக ணங்களொடு வந்து தொழவே
[12]போரிடுவ வென்றுவெகு வாரணக ணங்களுயிர்
போயினம் எனும்படிஎ திர்ந்து விழுமே;
[13]கோதகலும் ஐந்துமலர் வாளிமத னன்பொருவில்
கோலவுட லங்கருகி வெந்து விழவே
[14]கோபமொடு கண்டவிழி நாதர்அணி யும்பணிகள்
கூடிமனம் அஞ்சிவளை சென்று புகவே
[15]கூவியிர வந்தம்உணர் வாழியென நின்றுபொரு
கோழியொடு வென்றிமுறை யும்ப கருமே
[16]கோலமுறு **செந்தில்நகர்** மேவுகும ரன்சரண
கோகனதம் அன்பொடுவ ணங்கு **மயிலே.**

---

இருவரும் முருகவேளின் வாகனமும் கொடியுமாயிருந்தும், பிரமனது வாகனமாகிய அன்னமும் திருமாலின் வாகனமாகிய கருடனும் நம்மை வணங்கவில்லையே என்று மயிலும் சேவலும் கோபித்து அவைகளுடன் போர் புரிந்து அவைகளை வெருட்டித் துரத்தி ஊறுபடுத்தின – என்பது வரலாறு.

"முருகன் விறற்பதாகை, கடவுபரி என வணங்கிற்றில்லையெனச் சென்று ...... வெடிபடப் பாய்ந்து இடித்து அயன்தன் ஊர்தியையும் வதைத்து ... கருடனையும் உட்குருதி கக்க வீட்டி" — உபதேசகாண்டம்-ஞானவரோ 70, 71.

[11] கந்தருவர், கிம்புருடர், பூதர் - பதினெண் கணத்தைச் சேர்ந்தவர்கள். நாதர்–நந்திநாதர் நால்வர், நாதர் எண்மர், நவநாதர்கள். திருப்புகழ் 788, பக்கம் 338 கீழ்க்குறிப்பு, பாடல் 718, பக்கம் 155, அடி 2 உரை.

[13] மன்மதனது பாணம் ஐந்து – திருப்புகழ் 19, பக்கம் 60.

[14] மன்மதனை எரித்த வரலாறு: திருப். 399, பக்கம் 510.

[15] கூவி, இரவின் முடிவைக் கோழி காட்டுவது :—' புறத்திருளை அகற்றுதற்குப் புணரி யெழுஞ் சூரியனைப் புலரிக் காலை ... சிறையடித்து ... அழைத்துலவும் சேவலே '–சேவல்பத்து 3.

---

**மயில் வகுப்பின் சுருக்க உரை**

செந்திற் குமரனது பாதாம்புயத்தை வணங்கி நிற்கும் மயில் — (1) முருகன், சிவன், விநாயகன் - இம் மூவர் தாம் யாம் வணங்கும் கடவுள் என்று கூறிப் பணிந்த காரணத்தால் ராகு, கேது என்னும் பாம்புகளை ஊறுபடுத்தாது விட்டு விடும். (2) திருமால் துயில் கொள்ளும் ஆதிசேடனை

*11.* பூதர்கள், கந்தர்வர்கள், (நாதரொடு) நவநாதர் களாம் சத்தியநாதர், ஆதிய பிரதான சித்தர் ஒன்பதின்மர், கிம்புருடர் ஆகிய இவர்கள், பூரண கணங்கள்–சகல பதினெண் கணங்களுடனும் வந்து (தொழவே) தொழுது வணங்கிநிற்க—

*12.* போர் இடுவ - இடுகின்ற போர்களை (எல்லாம்) வென்று வெகு வாரண கணங்கள் – பல யானைக்கூட்டங்களும் (உயிர் போயிணம்) உயிரையே இழந்தோம் (எனும்படி)என்று சொல்லும்படி (எதிர்ந்து விழும்) அவைகளின் மேலே தாக்கி விழும் (செந்திற் குமரனது மயில்) (7)

*13.* கோது அகலும் – நெறி தவறுதல் இல்லாத (ஐந்து மலர்வாளி) ஐந்து மலர்ப் பாணங்களைக் கொண்ட (மதனன்) மன்மதனுடைய (பொருவில்) நிகரில்லாத (கோல உடலம்) அழகிய உடம்பு, கருகி – வெந்து கருகி விழும்படி

*14.* கோபத்துடன் (கண்ட) பார்த்த (விழி) நெற்றிக் கண் கொண்ட (நாதர்) சிவபிரான் அணிந்துள்ள (பணிகள்) பாம்புகள் (கூடி) ஒன்று கூடி, மனம் அஞ்சி – உள்ளம் நடுங்கி வளைகளுட் சென்று புகும்படி

*15.* கூச்சலிட்டு, (இரவு அந்தம்) இராப் பொழுது முடிவதை – சூரியன் எழுவதை (உணர்) உணர்த்தும் (நண்ப) வாழி - நீ வாழ்வாயாக என்று கூறி நின்று, (பொரு கோழி யொடு) தன்னொடு பொருந்தி நிற்கும் கோழியுடன் (வென்றி முறையும்) தான் (பொருது) வெற்றியடைந்த போர்முறை களையும் (பகருமே) விளங்கக்கூறும் (8)

*16.* (கோலம் உறு) அழகுள்ள திருச்செந்திற் பதியில் (மேவு) வீற்றிருக்கும் (குமரன்) குமாரக்கடவுளது (சரண கோகனதம்) திருவடித் தாமரையை (அன்பொடு) அன்புடனே வணங்கி நிற்கும் மயிலே.

---

நடுங்கச் செய்து அதன் உடலில் ரத்தம் பெருக அறையும். (3) இலக்குமணனைப் பிணித்த நாகபாசத்தை விலக்கின கருடன்மேல் இடிபோல் முழங்கி விழும். (4) பூமியைச் சுமக் கும் ஆதிசேடன் நடுங்க பூமி எங்கும் கிண்டும். (5) அட்ட நாகங் களும் அஞ்சக் கோபத்துடன் செல்லும். (6) பிரமனது வாகன மாம் அன்னத்தை அடும். (7) பூதராதியர் தொழ யானை களும் தமது உயிர் போச்சு என்று அஞ்சும்படி அவைகளின் மீது எதிர்த்து விழும். (8) மன்மதனை எரித்த சிவபிரான் மீதுள்ள பாம்புகள் அஞ்சி வளையிற் புகும்படி – தான் ஜெயித்த முறையைப் – பொழுது விடிதலைத் தெரிவிக்கும் கோழியுடன் கூறிற்று.

## 20. கொலு வகுப்பு

[முருகன் கொலு விற்றிருக்கும் திரு ஓலக்கக் காட்சியைக் கூறுவது.]

### கொலுக் கூட்டத்தினரின் வர்ணனை

தனதன தனதன தனதன தனதன
தனந்த தனனு தனந்த தனனு

[1] அருமறை யவன்முதல் அரிஅரன் மகபதி
அநங்கன் இமையோர் இனங்கள் ஒருபால்
[2] அருணனு மதியமும் அனல்எழு கனலியும்
அணங்கி னுெடுசூழ் கணங்கள் ஒருபால்
[3] வருணனும் நிருதியும் வழியொடு தனதனும்
மகிழ்ந்து மிகவே புகழ்ந்த தொருபால்
[4] வயிரவ ரொடுபடர் உவணரும் உரகரும்
வரங்கள் பெறவே இரங்க ஒருபால்
[5] இருடிகள் எவர்களும் இனியகி னரர்களும்
இணங்கி எதிரே வணங்க ஒருபால்
[6] இபமுக வனும்எழில் இளவல்கள் அனைவரும்
இயன்ற நெறியே முயன்ற தொருபால்

---

[1] முருகவேளை மூவரும் துதித்துப் பரவுபவர்:
"அரகர சிவனரி அயனிவர் பரவிமுன் அறுமுக சரவண பவனே என்றனுதினம் மொழிதர" - திருப். 270.

[2] அணங்கினுெடு - தத்தம் தேவிமாருடன் - எனப் பொருள் காண வேண்டியதில்லை; தெய்வமகளிர் கூட்டம் அடி 16-18ல் கூறுவதால்.

[3] வழி — வழிபாடு. "வையங் காவலர் வழிமொழிந் தொழுக" – "ஒன்றுபட்டு வழி மொழிய"—புறநா. 8, 17.

[4] வயிரவர் – அட்ட பைரவர் — திருப்புகழ் 1, பக்கம் 20 கீழ்க்குறிப்பு. துர்க்கையின் படையினராகிய கணங்கள்:
"குமுதவாய் இறைவி பைரவர்களே"-தக்கயா. 429.
'உவணர் – உரகர்', இவர்கள் பதினெண் கணங்களைச் சேர்ந்தவர்கள். பதினெண் கணங்கள் — திருப்புகழ் 788, பக்கம் 338 குறிப்பு.

[5] கின்னரர் — பதினெண் கணத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் மனித உடலும் குதிரை முகமும் உடையவர்;

பொழிப்புரை

**1.** அரு மறையவன் — அருமை வாய்ந்த மறைவல்ல பிரமன் முதலாக (அரி) திருமால், (அரன்) சிவன், (மகபதி) இந்திரன், (அனங்கன்) மன்மதன், (இமையோர் இனங்கள்) தேவர் கூட்டங்கள் (ஒருபால்) ஒருபுறம் விளங்க —

**2.** (அருணனும்) சூரியனும், (மதியமும்) சந்திரனும், (அனல் எழு) நெருப்பு வீசும் (கனலியும்) அக்கினியும், (அணங்கிளெடு) அச்சத்துடன் (சூழ்) சுற்றி நிற்கும் (கணங்கள்) கூட்டங்களும் (அல்லது பதினெண் கணத்தைச் சார்ந்தவர்களும்) ஒருபால்) ஒருபுறம் விளங்க

**3.** வருணபகவானும், (தென்மேற்குமூலைத் திக்குப் பாலகனும்) நிருதியும், (வழியொடு) வழிபாட்டுடன் (தனதனும்) குபேரனும், (மிக) மகிழ்ச்சியுடன் (அல்லது) (மிகவே புகழ்ந்து) நிரம்பப் போற்றிப் புகழ்ந்து - சொல்லும் புகழ் மொழிகள்) ஒருபுறம் விளங்க

**4.** வயிரவரொடு — அட்ட பயிரவர்களுடன் (படர்) உடன் வந்த உவணரும் - கருடரும், (உரகரும்) நாகரும் வரங்கள் பெறவே — வரங்கள் பெறும்பொருட்டு (இரங்க— வேண்ட வேண்டி) ஒருபுறம் நிற்க

**5.** இருடிகள் எவர்களும் — ரிஷி கணங்கள் யாவரும், இனிய - இன்னிசை பாடி இனிமை யூட்டும் கின்னரர்களும் (இணங்கி) ஒன்றுகூடி எதிர் நின்று ஒருபுறம் வணங்கி நிற்க—

**6.** (இப முகவனும்) யானை முகங்கொண்ட கணபதியும், (எழில்) அழகு வாய்ந்த (இளவல்கள்) வீரவாகு ஆதிய தம்பிமார்கள் யாவரும் (இயன்ற நெறியே - கூடிய வழியே அக் கூட்டத்தில் (முயன்றது) முயற்சித்து ஒருபால் இருக்க —

---

யாழிசை வல்ல தேவசாதியர் — "நல்யாழ் தொட்டெழீஇப் பண்ணெறிந்தாள் கின்னரரும் மெய்ம்மறந்து சோர்ந்தாரன்றே" — சிந்தாமணி 647.

முருகவேள் இசைப்ரியராதலின் அவர் சந்நிதியில் முநிவர்களுக்கும் இசை பாடுபவர்களுக்கும் முதலிடம் உண்டு; ஆதலின் அவர்கள் 'எதிரே வணங்க' என்றூர். ∴ 'முநிவர் முற்புக ...... யாழ் நவின்ற ...... மென்மொழி மேவலர் இன் நரம்பு உளர" — திருமுருகாற்றுப்படை 137, 141.

[6] இளவல்கள் அனைவரும் - வீரவாகு ஆதிய நவவீரர்களும், இலக்கரும் - ஆகிய தம்பியர்கள்.

"ஒவிலா விறல் வீரர்கள் இலக்கர் வந்துதித்தார்"
"வீர ரொன்பதின்மரும் ... உதித்தார்"
— கந்தபுராணம் 1-12, 11, 34.

[7]உருமலி குறளின மொடுவசு முசுமுகன்
உறைந்து பரிவாய் நிறைந்த தொருபால்
[8]உடுவொடு நடவுப னிருவரு முறைமுறை
உகந்து தொழவே மிகுந்த தொருபால்;
[9]அடல்விடை முகன்அறை கதையுற வெகுசனம்
அதுங்கி அருகே ஒதுங்க ஒருபால்

---

[7] உருமலி குறளினம் – (குறள் - பூதகணம்) அசுரர்களுடன் போர்புரிய முருகவேளுடன் சென்ற பூதங்கள் பல உருவத்தன.

"நெடியர் சிந்தினர் குறியினர் ஐம்பெரு நிறனும்
வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வார் சடைக் கற்றை
முடியர், குஞ்சியர், பல வதனத்த ரோர் முகத்தர்"
—கந்தபுராணம் 1-19-7.

முசுகுந்த சக்ரவர்த்தி – முருகன் அடியார்களுட் சிறந்தவர். இவர் வரலாறு: இறைவனும் அம்பிகையும் கயிலேயில் ஒரு பொழிலில் வீற்றிருந்தபொழுது அங்கிருந்த வில்வ மரத்தின் மீதிருந்த (முசு) கருங் குரங்கொன்று நிரம்ப வில்வ இலேகளேப் பறித்து அவர்கள்மீது இட்டது. இறைவன் அம் முசுவுக்கு ஞான உணர்வு தந்து – 'நீ உலகிற் பிறந்து ஆளுக' என்னும் வரத்தையும் தந்தனர். அங்ஙனம் பூவுலகில் தோன்றி ஆண்ட அரசே – 'முசுகுந்தர்'; கருவூர் அவருடைய ராஜதானி, இவரே திருவாரூர்த் தியாகேசப் பெருமானே இந்திரனிடம் பெற்றுத் திருவாரூரில் எழுந்தருள வைத்தவர். தேவசேனேயின் திருமணத்துக்கு அழைக்கப்பெற்றவர். வீரவாகு முதலானோர் முருகவேளின் ஏவலால் மாநுடராய் முசுகுந்தரிடம் துணைவீரராய் அமர்ந்தனர். முசுகுந்தர் வீரவாகு முதலானோரைவிட முருகவேளிடம் அதிக அன்பு பூண்டவர்.

"நோற்றல் கூடிய முசுகுந்தன் நும்மினும் எம்பால்
ஏற்றமே தரும் அன்பினன் எழுகடற் புவியும்
போற்ற வைகுவான் நீவிர்கள்ஆங்கவன் புடைபோய்
ஆற்றல் சான்றிடு துணைவராய் இருத்திர் என்
றறைந்தான்"
6-23-29.

முசுகுந்தர் வரலாற்றைக் கந்தபுராணம் – கந்த விரதப் படலம் 6 – 23 – 1 - 124, தெய்வயானே திருமணப் படலம் 5-2–31-57 பார்க்கவும்.

[8] *[1]* பன்னிருவர் ஆதித்தர் [சூரியர்] — சீர்பாத வகுப்பு அடி 1-ன் குறிப்பு.

7. (உருமலி குறளினமொடு) பல உருவங்களுடனிருந்த பூதகணங்களுடன், (வசு) அஷ்ட வசுக்களும், (முசுமுகன்) முசுகுந்த சக்ரவர்த்தியும் (உறைந்து) இருந்து (பரிவாய்) அன்புப் பத்தியுடன் (நிறைந்தது ஒருபால்) நிறைந்திருந்தனர் ஒருபுறத்தில்

8. (உடுவொடு) நக்ஷத்திரங்களும், (நடவு) செல்கின்ற சூரியர் பன்னிருவரும் (அல்லது கணத் தலைவர்கள் – கணுக்கிர கண்ணியர் – பன்னிருவரும்) (அல்லது பன்னு – சொல்லப்படு கின்ற (இருவர்) மருத்துவர் அசுவினி தேவர்கள் இருவரும்) (முறைமுறை) தத்தமக்கு உரிய முறைப்படி - (தரிசித்து) (உகந்து) மகிழ்ந்து தொழவே, (மிகுந்தது ஒருபால்) அவர்கள் வணக்கமும் மிக்கு நின்றது ஒருபுறத்தே

9. (அடல்) வலிமை வாய்ந்த (விடைமுகன்) இடபத்தின் முகத்தை உடைய நந்திகேசுரர் (அறை கதை உற) (கூட்டத்தை விலக்கி ஒழுங்குற நிறுத்தவேண்டி) (அறை) மோதும் கதை — (கதாயுதம்) தண்டாயுதம் (உற) மேலே படுதலால் — (வெகுசனம்) மிக்க ஜனக்கூட்டம் எல்லாம் (அதுங்கி) ஒதுங்கி (அருகே) அருகிலேயே (ஒதுங்க ஒருபால்) (ஒருபால் ஒதுங்க) ஒருபுறமாய்த் தள்ளி நிற்க

---

[2] இரண்டாவது அடியில் "அருணன்" சூரியன் சொல்லியிருக்கிறபடியால், சூரியர் பன்னிருவரில் ஒருவர் போக — எஞ்சின பதினொருவர் எனக் கொள்ளலாம்.

[3] அடி 1 முதல் 8 வரை ஒரு பாடலுக்கு உரிய எதுகை கள் வந்துள ; அங்ஙனமே அடி 9 முதல் 16 வரை, 17 முதல் 24 வரை, 25 முதல் 32 வரை, 33 முதல் 40 வரை, 41 முதல் 48 முடிய தனித்தனி எதுகை கள் வந்துள.

கணுக்கிர கண்ணியர் பன்னிருவர் :—

(1) தண்டதரர், (2) தண்டமாதர், (3) தண்டவாகு, (4) பிரசண்டர், (5) பிரசண்டார்ச்சிதர், (6) பிரசண்டகாவர், (7) பலர், (8) பல விகரணர், (9) சுமாலியர், (10) சர்வ பூதர், (11) தமனர், (12) மனோன்மனர்.

9 [1] விடைமுகன் — நந்திகேசுரர் — கந்தபுராணம் 1-18-23. இவர் கயிலை காவலர் ; பிரம்பு கொண்டும், வாள் கொண்டும் கயிலையில் – சிவசந்நிதியில் அரி அயனாதிய கூட்டங் களை விலக்கி ஒழுங்குபட நிறுத்துவர். முருகவேளின் கொலு விலும் அங்ஙனம் கூட்டங்களை ஒழுங்குபெற நிறுத்திவைப்பர் போலும் :

[தொடர்ச்சி பக்கம் 564 பார்க்க.]

[10]அயன்முடி திருகிய வயவனு நியமமொ
டடங்கி வலமே தொடங்க ஒருபால்

[11]மடல்புனை புகரொடு வருபதி னொருவரும்
மருங்கின் உறவே நெருங்க ஒருபால்

[12]மருவொடு துவர்இரு வருமிசை வலமொடு
வசிந்து மனமே கசிந்த தொருபால்

[13]மிடலிறை விறலரி விமலர்கள் அருள்சுதன்
வியந்து விரைவாய் நயந்த தொருபால்

[14]வெயில்விரி சுடரவன் மகனெடு மதிமகன்
விளம்பு முறையே கிளம்ப ஒருபால்

---

" நாதனுர் ஆதிதேவனுர் கோயில் நாயகன் நந்தியெம் பெருமான் ...... " — " தலைமையாம் பணியும் மலர்க் கையிற் சுரிகையும் பிரம்பும் ... பெற்ருன் காப்பதக் கயிலை மால்வரை தான் " — பெரிய புராணம்–திருமலை 10, 11.

[2] அதுங்குதல் — ஒதுங்குதல். " அதுங்கு அபத்து " —கந்தரந்தாதி 20.

[10] பிரமன் முடியை வயிரவர் திருகினது - திருப்புகழ் 285, பக்கம் 209 கீழ்க்குறிப்பு.

[11] பதினொருவர்; ருத்திரர் பதினொருவர் — திருப்புகழ் 1221, பக்கம் 533 குறிப்பு. இவர்தாம் - மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன் இவர் ஏகாதச ருத்திரர் எனப்படுவர்.

[13] திருப்பாற்கடல் கடந்து பங்கிடும்போது மோகினி வேடம் பூண்ட திருமாலுக்கும் சிவனுக்கும் பிறந்தவர் ஹரி ஹர புத்திரன். இவர் சாத்தனுர், ஐயனுர் எனப்படுவர். இவருக்கு ஆயுதம் – செண்டு, கொடி – கோழி, வாகனம் – வெள்ளை யானை, ஊர்தி - காரிக் குதிரை, நிறம் – கடல்நிறம், தேவிமார் – பூரணை, புட்கலை. ஆதலால் இவர் செண்டாயுதர், கோழிக் கொடியோன், வெள்ளை யானை வாகனன், காரி, கடனிற வண்ணன், பூரணை கேள்வன், புட்கலை மணுளன் எனப் பெயர் பெறுவர்.

" மைக் கருங்கடல் மேனியும் வானுலாம்
செக்கர் வேணியும் செண்டுறு கையுமாய்
உக்கிரத்துடன் ஓர்மகன் சேர்தலும் ...... "

10. அயன் முடி—பிரமனது தலையைத் (திருகிய) கிள்ளித் திருகிப் பறித்த (வயவனும்) வீரனாகிய வயிரவரும் (பைரவரும்) (நியமமொடு) ஒழுக்க முறைப்படி, அடங்கி—ஒடுங்கி, வலமே-வலது பக்கத்தில் ஒருபால் தொடங்க—ஒருபுறத்தே முன் நிற்க

11. மடல் புனை-பூவிதழ் அணிந்துள்ள (புகரொடு) சுக்கிரனோடு (வரு) வந்த (பதினொருவரும்) பதினொரு ருத்திரர்களும் (மருங்கின் உறவே) பக்கத்தில் இருந்து (ஒருபால் நெருங்க) ஒருபுறம் நெருங்கி நிற்க—

12. (மருவொடுதுவர்) நறுமணம் பூசியுள்ள இருவரும் (தும்புரு, நாரதர் இருவரும்) (இசை) ராக வகைகளை (வலமொடு) திறலுடன்—வெற்றியுடன் (வசிந்து) கூறுபடுத்திப் பாடி - அல்லது—இசை வலமொடு வசிந்து-ராகத் திறல் காட்டி இருந்து—மனமே கசிந்தது—உள்ளம் உருகி நிற்பது ஒருபால் ஒருபுறத்தில்

13. (மிடல் இறை) வலிமை வாய்ந்த இறைவன்—சிவனும், (விறல் அரி) வீரம் வாய்ந்த திருமாலும் ஆகிய இரண்டு (விமலர்கள்) பரிசுத்த மூர்த்திகளும் (அருள்) பெற்ற (சுதன்) ஹரிஹரபுத்திரனும்—சாத்தனார் (வியந்து) முருகவேளின் திரு ஓலக்கத்தை மெச்சி (விரைவாய்) உடனே (நயந்தது) பாராட்டி நின்றது ஒருபுறத்தில்

14. வெயில் விரி—வெயிலை வீசும் (சுடரவன்) சூரியனுடைய (மகனொடு) மகனும் சனியும், (மதி) சந்திரனுடைய மகன்—புதனும் (விளம்பும் முறையே) (கதிர்மகன், மதிமகன் என்று) சொல்லப்பட்ட அந்த முறைப்படி கிளம்ப ஒருபால்—ஒருபுறம் தோன்றி நிற்க

---

"அத்தகுந் திரு மைந்தற் கரிகர
புத்திரன் எனும் நாமம் புனைந்து"
—கந்தபுராணம் 2-32-49, 50.

"பூரணை புட்கலை பூம்புற மேவ
வாரணம் ஊர்ப்பவன்"—ஷெ 2-32-58;

"பையரா அமளியானும் பரம்பொருள் முதலும் நல்கும்
ஐயனே ஓலம்"—ஷெ 2-36-1;

15உடலொளி மவுனிகள் உடன்உப னிடதரும்
உளங் குளிரவே விளங்க ஒருபால்
16உமைதிரு மகள் நில மகள்கலை மகளொடும்
உகந்தெ வருமே தொகுந்த தொருபால் ;
17அதிபகி ரதிபயி ரவிபக வதிசசி
யரம்பை யருமே நிரம்ப ஒருபால்
18அழகிய கவுரியொ டிலகிய வலவையும்
அடைந்து தயவாய் மிடைந்த தொருபால்
19மதியர சருநிறை வசியரும் வினைஞரும்
மலிந்து முகமே பொலிந்த தொருபால்
20வருசிவன் அடியவர் அரகர எனமுறை
வழங்கு கடல்போல் முழங்க ஒருபால்
21விதிமுறை கருதியை வகைபுரி கருவிகள்
விளைந்த ஒலிவான் அளைந்த தொருபால்
22விதமுடன் அபிநய வனிதையர் சதிமுறை
விரிந்த நடமே புரிந்த தொருபால்
23உதிர்தரு மலர்விரை யுறுபுகை ம்ருகமதம்
உமிழ்ந்த மணமே கமழ்ந்த தொருபால்

---

15 (1) மோன சமாதி நிலையில் உடலின் நினைவு அற்றுப் போதல்: " நீடு ஊனும் அழிந்து உயிரும் அழிந்து ... மனமும் அழிந்து பின் நானும் அழிந்தமை நானறியேனே " — திரு மந்திரம் 2951.

" உரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே"
— கந்தரலங்காரம் 61. (2) உபநிடதர் — உபநிடதம் — வேதம். சிவலோக வகுப்பு, அடி 3 குறிப்பு.

17 பகவதி-தருமதேவதை (பிங்.) 18 கவுரி-பார்வதி, காளி. வலவை – விநாயகரின் தேவி, காளி, இடாகினி.

19 வசியர் – வைசியர் (சூடா). " அன்பார் வசியர்க்கே ஆம் " — சைவ சமயநெறி-பொது 95.

23 முருகவேளுக்கு நறும்புகை மிகப் ப்ரீதி.
' நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி ' – முருகாற் 239.
" குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின் " — சிலப் பதிகாரம்-குன்றக்குரவை. " நறையி னறும்புகை நனியமர்ந் தோயே "—பரிபாடல் 14–20.

15. உடல் ஒளி மவுனிகளுடன் - தேகத்தை ஒளித்த - தேக ஞாபகம் அற்ற - (அல்லது தேகத்தின் தேஜசு கொண்ட) மௌன ஞானிகளுடன் (உபநிடதரும்) வேதம் வல்லோரும், (தமது) உள்ளம் குளிர (இருந்து) ஒருபுறம் விளங்க

16. (உமை) உமாதேவி, பார்வதியானவள் (திருமகள்) இலக்குமி, (நிலமகள்) பூதேவி, (கலைமகள்) சரஸ்வதி ஆகிய இவர்களுடன் (உகந்து) மகிழ்ந்து (எவருமே தொகுந்தது ஒருபால்) எல்லாரும் ஒன்றுகூடி இருந்தது ஒருபுறத்தில்

17. (அதி) மேம்பட்ட (பகிரதி) பாகீரதி - கங்கை, (பயிரவி) துர்க்கை, (பகவதி) தருமதேவதை, (சசி) இந்திரன் மனைவி — இந்திராணி, (அரம்பையருமே) தெய்வமகளிர் (நிரம்ப ஒருபால்) ஒருபுறம் நிறைந்திருக்க

18. அழகிய (கவுரியொடு) அழகிய காளிதேவியுடன் (இலகிய) இருந்து விளங்கும் (வலவையும்) டாகினியும் (அல்லது கவுரியுடன் - பார்வதியுடன் விளங்கும் (வலவையும்) காளியும்) அல்லது கணபதியின் தேவியாகிய வல்லபையும் (அடைந்து) அங்கு வந்து சேர்ந்து (தயவாய்) அன்புடனே (மிடைந்தது ஒருபால்) ஒருபுறம் கலந்து நிற்க

19. (மதி அரசரும்) அறிவு நிறை வேந்தரும் (க்ஷத்திரியரும்), (நிறை வசியரும் நீதிமான்களாகிய வைசியர்களும், வினைஞரும்-தொழிலாளிகளும் (மலிந்து) நிரம்பிக்கூடி (முகமே பொலிந்தது ஒருபால்) மலர்ந்த முகத்துடன் ஒருபால் இருக்க

20. வருசிவன் அடியவர் - அங்குக் கூடிய சிவனடியவர்கள் எல்லாம் 'ஹரஹர' என்று (முறை வழங்கு கடல்போல்) முறையீடு செய்பவர்கள்போல — ஓலமிடுபவர்கள் போலக் கடல் ஒலிபோல முழக்கஞ்செய்து ஒருபுறம் இருக்க

21. விதிமுறை கருதி - (இசை நூல்களின்) விதிகளின் இலக்கணமுறையைக் கவனித்து, (ஐவகை புரி கருவிகள்) பஞ்ச வாத்தியங்களும் — தோற்கருவி, தொளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்ற ஐவகை இசைக் கருவிகளும் (விளைந்த ஒலி) எழுப்பின ஒலி (வான் அளைந்தது) ஆகாயத்தை எட்டிக் கலந்தது ஒருபுறம்

22. விதமுடன் - பலவகையில் (அபிநய வனிதையர்) நடனப் பெண்கள் (சதிமுறை) தாள ஒத்து இலக்கணத்துக்குப் பொருந்த (விரிந்த) விரிவான வகையில் நடனங்களை ஆடினது ஒருபுறத்தே

23. உதிர்ந்து விழுந்த மலர்களின் (விரை) நறுமணம் பொருந்திய புகை (மணமும்), (ம்ருகமதம்) கஸ்தூரி(உமிழ்ந்த) வெளிப்படுத்தின மணமும் வீசினது ஒருபுறத்தே

[24]ஒழுகிய கிரிதொடு பணிதம தடுசுடர்
உவந்த ஒளியே நிவந்த தொருபால்;
[25]அரியக டெனமுக டளவிய ஒருகுடை
அமர்ந்த நிழலே சமைந்த தொருபால்
[26]அருமட அனமென இருபுடை கவரிகள்
அசைந்த அழகே யிசைந்த தொருபால்
[27]வரிசைசெய் துயலொடு வனமயில் சிவிறியின்
வயங்கு சிறுகால் இயங்க ஒருபால்
[28]மறுகட லினில்எழு நிறைமதி அமுதென
வரிந்து பனிநீர் சொரிந்த தொருபால்

---

[24] ஒழுகிய கிரி — அஷ்ட கிரிகள் (எண் மலைகள்) இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம். (திருப்புகழ் 554, பக்கம் 265 கீழ்க்குறிப்பு.)
.. பணி — அஷ்ட நாகங்கள். வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். (திருப்புகழ் 1095, பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

கிரிதொடுபணி - மலைகளைப் பாம்புடன் பிணைத்து ஆபரணமாக அணிதல். "குலப்பொருப்பொ ரெட்டுடன் கலந்துகொண் டவ்வழிப் புயங்கம் எட்டும் அம்புயத் திருத்தியே" —தக்கயாகப்பரணி 382.

[25] குடைக்கு - அண்டகோளகை உவமை. (அளவிய — அளவு உடைய - போன்ற - என்னலாம். 'விண்ணிலே ஆதபத்ரமும் அண்ட கோளமும் ஒத்து மம்மர் அளிக்கவே'— ஆதபத்திரம் - குடை. தக்கயாகப்பரணி 257.

[26] பெண்கள் கவரி வீசுவது:
"இடமற மிடைதரு கடவுளர் மடவியர்
எறிதரு கவரி நிழல்" — காசிக்கலம்பகம் 5;
"மணிப் பொற்கவரி முறையாலே ... பாவையர் சூழ"
—அப்பர் 4-21-1;
"இனவளை பூண்கையார் கவரியிட" —திருப்புகழ் 778, அடி 3.

வெண்சாமரம் வீசுவது - வெள்ளை அன்னம் அசைதலுக்கு உவமை. இதைத் திருப்பாற்கடலின் திரைக்கும், திங்களின் கிரணங்களுக்கும் வெண்மைக்காக உவமை கூறுவர். (திருப்புகழ் 1185, பக்கம் 452 கீழ்க்குறிப்பு.

24. (ஒழுகிய) பரந்திருந்த (கிரி) அஷ்டகிரிகளையும் (தொடு) தொட்டிருந்த பரிசித்திருந்த (பணி) அஷ்ட நாகங்கள் (தமது தமது ரத்னங்களால்) (அடு) கொடுத்த — வீசின (சுடர்) ஜோதியின் உவந்த ஒளியே — இன்பகரமான ஒளியே (நிவந்தது ஒருபால்) ஒருபுறம் மேம்பட் டெழுந்தது

25. அரி அகடு என — உட்டுளையை உடைய வயிறுபோல (முகடு அளவிய) ஆகாய உச்சியை எட்டுகின்ற - ஆகாய விரிவு போன்ற — அண்டமுகடுபோல விரிந்த ஒரு குடையின் (அமர்ந்த நிழலே) பொருந்தின நிழலே (சமைந்தது ஒருபால்) ஒருபுறம் அமைந்து நிரம்பியது

26. அருமை வாய்ந்த (மடம் இளமைகொண்ட (அனம் என) அன்னப்பட்சிகள் அசைவதுபோல இரண்டு பக்கத்திலும் (கவரிகள்) (வெண்) சாமரங்கள் அல்லது - அன்னப்பட்சிகள் போன்ற பெண்கள் இரண்டு பக்கத்திலும் வீசின சாமரங்கள் அசைந்த அழகானது (இசைந்தது ஒருபால்) ஒருபுறம் பொருந்தியிருந்தது

27. வரிசை செய் — வரிசையாகப் பொருந்தின — ஒழுங்காக அமைந்த — (துயலொடு) அசைவுடனே (வீசப்பட்ட) வனம் — அழகிய மயில் சிவிறியின் — மயில் விசிறிகளினின்றும் (வயங்கு) தோன்றும் — வெளிப்படும் (சிறுகால்) மெல்லிய காற்றுனது (இயங்க ஒருபால்) ஒருபுறம் (இயங்க) அசைய

28. மறு கடலினில் — (கடையும்போது) மறுகுதலை (சுழலுதலைக் கொண்ட (திருப்பாற்) கடலினின்றும் (எழு) எழுந்த (நிறைமதி) பூரணசந்திரன் தரும் (அமுதென) அமுதம்போல (வரிந்து) மூடிப் பொதிந்து வைத்திருந்த பன்னீரைச் (சொரிந்தது ஒருபால்) ஒருபுறம் சொரிந்து நிற்க

---

"திருப்பாற் கடற்றிரை இரண்டு வந்தன ... என இரு மருங்கும் கவரி யிரட்டவே" — தக்கயாக. 284.

"வெண்மதிக் கதிர் பெய் கற்றை போலிவர் கவரி வீச"

"திங்கட் பொழிகதிர்க் குப்பை போலும் நல்லெழிற் கவரியூட்ட" — சிந்தாமணி 541, 355.

27 மயில் சிவிறி — மயில் தோகையால் அமைந்த ஆலவட்டம். சிவிறி - விசிறி.

28 (மறுகடல்) மறுகு கடல் - கடையும்போது கலக்குண்ட கடல்; மதி அமுது - சந்திரகலையைத் தேவர்கள் உண்பார்கள். "ஓர் கலைமதிக் கலச அமுதுக்கு இரைக்கும் பெருந்தேவர்" — மீனாட்சிபிள்ளைத்தமிழ்-அம்மானை 1.

[29]விரியிருள் வலிதரு கிரணம தெனநல
மிகுஞ்சு ழலில்வீ சுகுஞ்ச மொருபால்
[30]வியன்மர கதமணி மிளிர்தரு களசெதிர்
விரைந்து நிரையாய் நிரைந்த தொருபால்
[31]உரியவெ ளிலையுடன் உயரிய கமுகினில்
உகுந்த கனியே பகுந்த தொருபால்
[32]உலகுள வனிதையர் அவரவர் விரதமொ
டுணர்ந்து கனியே கொணர்ந்த தொருபால்

[ முருகவேளின் திருக்கோல வர்ணனை ] கேசாதி பாதம்.

[33]அறுகதி ரவரென அறுமணி மவுலிகள்
அடர்ந்து வெயிலே படர்ந்த தொருபால்
[34]அறுமதி எனஅறு திருமுக சததள
அலர்ந்த மலரே மலர்ந்த தொருபால்

---

[29] குஞ்சம் - ஈயை ஓட்டுவதற்காக அரசசபையில் உபயோகப்படுத்துவதும், கவரிமானின் அடர்ந்த வால் மயிராலாயதும், அலங்காரமான கைப்பிடியைக் கொண்டதுமான விசிறி போன்ற ஒரு கருவி. இதற்கு ஈயோட்டி, ஈயோப்பி, ஈச்சோப்பி எனவும் பெயர்.

" ஏறுமால் யானையே சிவிகை ... ஈச்சோப்பி "
— சம்பந்தர் 2-79-7.

[30] களசு – இது களாசி, களாஞ்சி, காளாஞ்சி எனப்படும். " ஓங்கிய மகவான் கொண்டான் களாசி " — கந்தபுராணம்–2 – 16–9. " உருப்பசி களாஞ்சி தாங்க " — குற்றாலத் தவ புராணம் – திருமண. 131. " பைம்பொனில் திகழ் ...... காளாஞ்சி "—பிரபோத. 11-31. " யாரும், பரவ வெண் குடை காளாஞ்சி பகடு சாமரை ... நல்கி " — திருவாலா. திருவிளையாடல் 30–53. காளாஞ்சி – தாம்பூலம் துப்பும் கலசம்; தாம்பூலம் எடுக்கும் கலம்.

[31] வெள்ளிலை – வெற்றிலை. கனி - கமுகின் கனி.

" பாளை மென் கமுகின்பழம் வெள்ளிலை "
—சிந்தாமணி 132.

" மேவருங் கோபமன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார் "
—கம்பராமாயணம்-வரைக்காட்சி 49.

29. விரிந்த (இருளில்) வலிதரு) பலமாய் விளங்கும் (கிரணமதென) ஒளி போல (நலமிகும்) இன்பத்தை மிகுதி யாகத் தரும் (சுழலில் வீசு) சுழற்றி வீசப்படுகின்ற (குஞ்சம்) ஈயோட்டி ஒருபுறம் (வீசப்பட)

30. வியன் – அதிசயிக்கத் தக்க மரகத ரத்னம் ஒளிவீசும் (களசு) தாம்பூலம் எடுக்கும் கலங்கள் எதிரிலே (விரைந்து நிரையாய் – வேகத்துடன் ஒழுங்காகக் கொண்டுவரப்பட்டு வரிசையாய் அமைந்தன ஒருபுறத்தில்

31. உரிய - தகுதியான (வெளிலையுடன்) வெள்ளிலை யுடன் – வெற்றிலையுடன் (உயரிய) உயர்ந்த (கமுகினில்) பாக்குமரத்திலிருந்து (உகுந்த கனியே) உதிர்ந்த பழங்களின் (பகுந்தது) பிளவுகள் (பாக்கு) ஒருபுறம் இருக்க

32. உலகில் உள்ள (வனிதையர்) பெண்கள் (அவரவர் விரதமொடு) தாம் தாம் கொண்ட விரதப்படி (உணர்ந்து) ஞாபகமாய்த் தெளிவுடனே (கனியே) பழவர்க்கங்களைக் (கொணர்ந்தது ஒருபால்) ஒருபுறம் கொண்டுவந்து வைக்க:

(இவ்வாறெல்லாம் கொலு அலங்காரங்க்ள் விளங்க —

**முருகன் கொலு வீற்றிருந்த அழகு பின் வருமாறு:**

1. கேசாதிபாதம் [அடி 33 முதல் 41 முடிய]

33. (அறு கதிரவரென) ஆறு சூரியர்கள் போன்று (அறு மணி மவுலிகள்) (பெருமான் அணிந்திருந்த) ஆறு ரத்னக் க்ரீடங்களும் (அடர்ந்து) நெருங்கி (வெயிலே) ஒளியே (படர்ந் தது) பரவி நின்றது ஒருபுறத்தே

34. (அறு மதியென) ஆறு சந்திரன் போன்று (அறு திருமுக) ஆறு அழகிய திருமுகங்களாகிய (சததள) நூறு இதழ்களைக்கொண்டு [அலர்ந்த] மலர்ந்துள்ள தாமரை மலர் கள் [மலர்ந்தது] பொலிந்து நின்றன ஒருபுறம்

---

[34] முருகவேளின் திருமுக ஒளி மதிக்கு ஒப்பிடப்பட்டது — ''முழுமதியன்ன ஆறு முகங்களும்'' — கந்தபுரா. 1-20-126.

முருகவேளின் திருமுகம் மலர்ந்த தாமரைக்கு ஒப்பிடப் பட்டது. ''முண்டகம் மலர்ந்த தன்ன மூவிரு முகமும்'' — கந்தபுராணம் 4-4-235.

[35]மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்
[36]வனைதரு மகரமு மணியணி பணிகளும்
வயங்கு குழையே தயங்க ஒருபால்
[37]இறுகுபொன் மலையொடும் இடறுப னிருபுயம்
இசைந்து நெடுவான் அசைந்த தொருபால்
[38]எழிலியை அனையப னிருகையில் அயில்முதல்
இலங்கு படையே துலங்க ஒருபால்
[39]உறுவரை யருவியை நிகர்தரும் உரமிசை
யுடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால்

---

[35] கடலெனப் பரந்து நின்றது முருகன் கண்களினின்றும் பொழிந்துவழிந்த திருவருள். இது அவரது கருணைப்பெருக்கை விளக்குகின்றது.

"கருணை மேகமே தூய கருணை வாரியே, ஈறில் கருணை மேருவே தேவர் பெருமாளே" (1048) என்றார் திருப்புகழில்.

[36] மகரம் – குறங்கு செறியணி — (குறங்கு = தொடை). "மாழைகொள் மணிமகரம் கௌவி வீற்றிருந்தனவே" — சிந்தாமணி 174; மகரம் - மகரக் குழை, மகர குண்டலம் (காதணிகள்) எனலுமாம். 'மகரக்குழைக் காதனை மைந்தனை" — பெரிய திருமொழி 7-3-2. 'உரு அமைந்த செயிர் மகர குண்டலமும்' — சிந்தாமணி 168.

[37] முருகவேளின் தோளை மலைக்கு ஒப்பிட்டார் — 'மால்வரைத் தோள்'...என்றார் கந்தரலங்காரத்தில் (10)

[38] (1) 'கருணை மேகமே' என்றார் திருப்புகழில் (1048); கொடுப்பது திருக்கரமே ஆதலின் முருகன் திருக்கரம் மேகத்துக்கு ஒப்பிடப்பட்டது. 'தருகொடையால்...மேகராசி(யை) வென்றன வாகைப்புயங்களே' என்றார் புயவகுப்பு அடி 24ல்.

(2) பன்னிரு கையிலும் வேல் முதலான படைகள் — என்றார். பதினொரு ருத்திரர்களும் பதினொரு படைகளாயினர்; வேல் ஒன்று இறைவன் தந்தது; ஆகப் பன்னிரு திருக் கரங்களிலும் பன்னிரண்டு படையொடு முருகவேள் சூரனுடன் போர்க்கு எழுந்தனர் என்ப. பன்னிரு படைகளாவன: 1. (தோமரம்) கைவேல், 2. கொடி, 3. வாள், 4. குலிசம் 5. (பகழி) அம்பு. 6. அங்குசம், 7. மணி, 8. தாமரை, 9. தண்டம், 10. வில், 11. மழு, 12. சிவனார் தந்தவேல்.

35. மறு அறு – குற்றம் அற்ற – மாசு இல்லாத கடல் போலப் பரந்துள்ளது என்று சொல்லும்படி பொருந்திய பன்னிரண்டு கண்களினின்றும் வழிந்த திரு அருளே பொழிந்து விளங்கின ஒருபுறத்தே

36. (வனைதரு) அணிந்துள்ள (மகரமும்) குறங்கு செறி யணியும், அல்லது மகரக் குழையும், மகரகுண்டலமும், மணி யணிபணிகளும் – ரத்தினமயமான ஆபரணங்களும், (வயங்கு) ஒளிவிடும் (குழையே) பொற் குழைகளும் (தயங்க ஒருபால்) ஒருபுறம் பிரகாசிக்க —

37. (இறுகு பொன் மலையொடும்) திரண்டு இறுகியுள்ள– உறுதியாயுள்ள மேருமலையையும் (இடறு) மீறி நிற்கின்ற பன்னிரண்டு புயங்களும் பொருந்தி பெரிய வானத்தின் அளவுக்கு (அசைந்தது ஒருபால்) ஒருபுறம் அசைந்து விளங்கி நிற்க —

38. எழிலியை அனைய (கொடையில்) எழிலியை — மேகத்தை ஒத்தனவான (பன்னிரு கையில்) பன்னிரண்டு திருக்கரங்களிலும் (அயில்) வேல்முதலான (இலங்குபடையே) விளங்குகின்ற ஆயுதங்களே (துலங்க ஒருபால்) ஒருபுறம் விளங்க —

39. உறுவரை அருவியை – (வரையுறு அருவியை) மலை யினின்று ஒழுகும் அருவியை (நிகர்தரும்) ஒத்து விளங்குகின்ற (உரமிசை) மார்பின் மீது (உடன்கொள்) பொருந்தியிருந்த (புரிநூல்) முப்புரிநூல் – பூணூல் (கிடந்தது ஒருபால்) ஒருபுறம் கிடந்து விளங்க —

---

"பதினோர் உருத்திரர் தமையும் ... இவன் கையிற் படை யாய் இருத்திரென் றவரைப் பல படையாக்கி ஈந்தனன் எம்பிரான் கரத்தில்.

"உருத்திர கணத்தோர் ...... தோமரம், கொடி, வாள், வன்திறற் குலிசம், பகழி, அங்குசமும், மணி, மலர்ப் பங்கயம் தண்டம், வென்றிவில், மழுவுமாகி வீற்றிருந்தார் விறல் மிகும் அறுமுகன் கரத்தில்", "எப்படைக்கும் நாயக மாவ தொரு தனிச் சுடர்வேல் நல்கியே மதலை கைக்கொடுத்தான்" —கந்தபுராணம் I–18–36, 37–38.

39 மலைவீழ் அருவி மார்பிற்புரளும் புரிநூலுக்கு உவமிக்கப் பட்டது. "வாலிதாகிய வான் அருவித் திரள், நீலமேக நிரையொடு தாழ்தலில், தோலும் நூலும் துயல்வரு மார் புடை, நாலு மாமுகன் போலுமந் நாகமே"—கந்தபுராணம் 6–24–5. அருவிக்குப் புரிநூலும், மேகத்திற்குத் தோலும் உவமை: நாகம்=(வள்ளி)மலை.

40உருமென இகலிமுன் எதிர்பொரும் அவுணருள்
உடைந்த உடைவாள் சிறந்த தொருபால்

41அநவர தமுமறை முறையிடு பரிபுரம்
அலங்கும் இருதாள் குலுங்க ஒருபால்

தேவியர்

42அளவறு கலவியின் முழுகிய குறமகள்
அமர்ந்துள் ஒயிலாய் நிமிர்ந்த தொருபால்

43வனதரு வினிலுறை சதமகன் அருள்மகள்
வதிந்து மணமே பொதிந்த தொருபால்

அடியார்கள்

44வருமடி யவரிடம் வலியச நதம்வர
வளர்ந்த சபையே கிளர்ந்த தொருபால்

45நினைவொடு பணிபவர் வினைதுகள் படஎதிர்
நினைந்து திருநீ றணிந்த தொருபால்

46நிறைமல ரொடுநல கலவையும் உயர்குரு
நினைந்து தரவே புனைந்த தொருபால்

---

41 பரிபுரம் முதலிய காலணிகள் மறை முறையிடுதல் :—
'மறை விதங்கள் கொஞ்சிய சிலுசதங்கை'-திருப். 1219.
'மறை சதுர்விதந் தெரிந்து வகைசிறு சதங்கைகொஞ்சும்' —திருப்புகழ் 50.

43 சதமகன் - நூறு அசுவமேத யாகம் செய்தால் இந்திர பதவி கிடைக்கும் என்பது மரபாதலின் - இந்திரன் - சதமகன் எனப் பெயர் பெற்றான். (திருப்புகழ் 232, பக்கம் 82 கீழ்க் குறிப்பு.

44 வலிய சன்னதம் வர - பலமாக (தெய்வ) ஆவேசம் வர.

45 திருநீறு — வினையை நீக்கும்;—"வெள்ளை நீறு பூசி வினையாயின கோதுவித்து"—சம்பந்தர் 2-117-2.

40. (உரும் என) இடிபோல (இகலி) பகைத்து, முன்பு எதிர்வந்து (பொரும்) சண்டை செய்த, அவுணர்களுடைய (உள்) உள்ளம் (உடைந்த) உடையும்படி செய்த (உடைவாள்) சிறந்தது ஒருபால் – ஒருபுறம் சிறப்புற்றிருந்தது.

41. (அநவரதமும்) எப்போதும் (மறை முறையிடு) வேத ஒலியை வெளியிடுகின்ற (பரிபுரம்) சிலம்பு (அலங்கும்) அசைகின்ற இரண்டு திருவடிகளும் (குலுங்க ஒருபால்) ஒரு புறம் அசைந்து விளங்க

## தேவியர்

42. (அளவு அறு) அளவு கடந்த (கலவியில்) காம நுகர்ச்சியில் முழுகிய (குறமகள்) வள்ளியம்மை (அமர்ந்து உள்) உள் அமர்ந்து – உள்ளம் விரும்பி – உள்ளத்தில் விருப்பத் துடன் ஒயிலாய் – ஒய்யாரமாய் – உல்லாச நிலையுடன் (நிமிர்ந் தது ஒருபால்) உயர்வுடன் விளங்கி நின்ற நிலை ஒருபுறம்

43. வன தருவினில் – அழகிய கற்பக விருக்ஷ நிழலில் அல்லது கற்பக (வன) சோலை நிழலில் (உறை) அமர்ந்திருக் கும் (சதமகன்) இந்திரன் (அருள்மகள்) வளர்த்த மகள் தேவ சேனை (வதிந்து) பக்கத்திலிருக்க (மணமே) மகிழ்ச்சியே–நறு மணமே (பொதிந்தது ஒருபால்) ஒருபுறம் நிறைந்திருக்க —

## அடியார்கள்

44. வரும் அடியவரிடம் – வந்து கூத்தாடும் அடியார் உள்ளத்திலே (வலிய) பலமான (சந்நதம் வர) தெய்வ ஆவேச உணர்ச்சி (பத்திக் குதூகலம்) வரும்படி (வளர்ந்த) விருத்தி யடைந்துள்ள (சபைகள்) (பஜனை) சபைகள் (கிளர்ந்தது ஒரு பால்) ஒருபுறம் பிரகாசித்து ஒங்கின

45. நினைவொடு – மறதியின்றி – கருத்துடன் பணிபவர்- வணங்குவோருடைய வினைகள் (துகள்படு) பொடிபடும்படி (எதிர் நினைந்து) அவர் கருத்தை முன்னதாக மனத்திற் கொண்டு திருநீற்றுப் ப்ரசாதத்தை (அணிந்தது ஒருபால்) தந்து ஒருபுறம் அணிவிக்க

46. நிறை மலரொடு — நிரம்ப மலர்களுடன் (நல்ல) கலவையும் நறுமணமுள்ள சந்தனக் குழம்பையும் (உயர்குரு) மேன்மையாளரான குருவை (நினைந்து தரவே) முருகவேளின் திருவடிகளைத் தியானித்துத் தர, (குரு – பிரகஸ்பதி தர) அவற்றைப் (புனைந்தது ஒருபால்) அணிந்து நிற்பது (அணிந்து நிற்பவர்) ஒருபுறத்தே விளங்க

[47]தினகரன் உலவுச நிதியினில் இரவலர்
தெளிந்த தமிழே பொழிந்த தொருபால்
[48]சிவபர கிரியினில் ஒருசிவன் வடிவொடு
திருந்த முருகோன் இருந்த கொலுவே.

---

47 இரவலர் — இவர்கள் "உறுகுறை ........ பெறுமுறை கொண்மார்" வந்தவர்கள் – (திருமுருகா. 173).

48 இமயத்துக் (கயிலையிற் போல) அரன், அரி, அயன் ஆதிய சகல தேவர்களும் திருப்பரங்குன்றில் கூடுவதால் திருப் பரங்குன்றத்தைச் 'சிவ பரங்கிரி' என்றார். பரங்குன்றம் — தேவாரம் பெற்ற ஸ்தலம்.

"புள்மிசைக் கொடியோனும், புங்கவம் ஊர்வோனும், மலர்மிசை முதல்வனும் ... பதின்மரும், இருவரும், மருந்துரை இருவரும் ... எண்மரும்... நாதர் ப்ன்னொருவரும் ... திசைகாப் போரும், யாவரும் பிறரும் அமரரும் அவுணரும் ... விழுத்தவ முதல்வவம் பற்று கின்றுநின் காரணமாகப் பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்" — பரிபாடல் 8.

குறிப்பு: தேவசேனை திருமணமும், வள்ளி திருமணமும் ஆன பின்னர் முருகன் திருப்பரங்குன்றத்துக்கு வந்து அங்கு கொலு இருந்த திருக்கோல வர்ணனை.

---

### கொலு வகுப்பின் சுருக்க உரை

1. அயன், அரி, அரன், இந்திரன், மன்மதன், தேவர் கூட்டங்கள்; 2. சூரியன், சந்திரன், அக்கினி, பதினெண் கணத்தினர்; 3. வருணன், நிருதி, குபேரன்; 4. வயிரவர், கருடர், நாகர்! 5. ரிஷிகள், கின்னரர்; 6. கணபதி, வீர வாகு ஆகிய தம்பியர்; 7. பூத கணங்கள், அஷ்ட வசுக்கள், முசுகுந்தர்; 8. நக்ஷத்திரங்கள், பன்னிரு ஆதித்தர் - இவர்க ளெல்லாம் கூடி ஒவ்வோர் புறத்திலிருக்க, 9. நந்தி இக் கூட்டத்தை ஒழுங்குபடுத்தி ஒதுக்க, 10. பைரவர், 11. சுக் கிரன், பதினொரு ருத்திரர்கள் ஒருபுறம் விளங்க, 12. நாரதர், தும்புரு இருவரும் கீதம் பாட, 13. ஹரிஹர புத்திரன் – சாத்தனார், 14. சனி, புதன், 15. மவுனிகள், வேதம் வல்

47. (தினகரன்) சூரியன் ஒளி (உலவு) பிரகாசிக்கின்ற (சநிதியினில் - சந்நிதியினில்) முருகவேளின் முன்னிலையிலே (இரவலர்) முருகன்பால் குறை வேண்டி நிற்பவர்கள் (தெளிந்த தமிழே) தெளிவான செந்தமிழ்ப் பாடல்களைப் (பொழிந்தது ஒருபால்) பாடிப்பொழிதல் ஒருபுறத்தே விளங்க

48. (சிவபரகிரியினில்) சிவஸ்தலமாகிய திருப்பரங் குன்றத்திலே (ஒரு சிவன் வடிவொடு) ஒப்பற்ற சிவபிரானது திருக்கோலத்துடனே (திருந்த) செவ்விய நிலையிலே - அழகு பெற, (முருகோன்) முருகவேள் (இருந்த) வீற்றிருந்த கொலுவே - கொலுவானது இங்ஙனம் விளங்கிப்பொலிந்தது.

---

லோர் இவர்கள் ஒருபுறம் குழுமி நிற்க, 16. பார்வதி, இலக்குமி, பூதேவி, சரஸ்வதி, 17. கங்கை, துர்க்கை, தரும தேவதை, இந்திராணி, அரம்பையர்கள், 18. காளி, டாகினி அல்லது கணேசர் மனைவி வல்லபை - இவர்கள் ஒருபுறம் கூடி நிற்க, 19. அரசர், வைசியர், தொழிலாளர் இவர்கள் ஒவ் வோர் புறத்திலிருக்க, 20. சிவனடியவர்கள் ஹரஹர எனக் கடல் போல் முழங்க, 21. இசைக் கருவிகள் வானளாவி ஒலிக்க, 22. மகளிர் தாளத்துக்கு ஒக்க பலவகை நடனங்கள் நடிக்க, 23. நறும்புகை கமழ, 24. அஷ்ட நாகங்களின் ரத்ன ஒளி வீச, 25. குடை நிழல் பரவ, 26. சாமரம் அசைய, 27. மயில் விசிறிகள் வீசப்பட, 28. பன்னீர் சொரியப்பட, 29. ஈயோட்டி வீசப்பட, 30. தாம்பூலக் கலன்கள் 31. வெற்றிலை, பாக்குடன் எடுக்கப்பட, 32. பழவகைகள் தரப் படத், 33. தமது ஆறு கிரீடங்கள் ஒளி வீசவும், 34. ஆறு திருமுகங்கள் மலர்ந்து விளங்கவும், 35. பன்னிரு விழிகள் கருணை பொழியவும், 36. குழை முதலிய அணிகள் விளங்க வும், 37. பன்னிரு தோள்கள் உயர்ந்து பொலியவும், 38. வேல் முதலிய படைகள் பன்னிரு கைகளில் விளங்கவும், 39. திருமார்பிற் புரிநூல் பொலியவும், 40. உடைவாள் இலகவும், 41. திருவடியிற் சிலம்பு ஒலிக்கவும், 42. வள்ளி யும், 43. தேவசேனையும் பக்கத்தே சிறந்து திகழவும், 44. அடியார்கள்மீது ஆவேசம் வரவும், 45. திருநீற்றுப் ப்ரசாத மும், 46. பூவும், சந்தனக் குழம்பும் வழங்கப்படவும், 47. வேண்டி நிற்கும் அடியார் செந்தமிழ்ப் பாடல்களைப் பொழிய வும் - திருப்பரங்குன்றத்திலே (எங்கள்) முருகவேள் சிவ வடிவு திகழ இவ்வாறு கொலு வீற்றிருந்தருளினர்.

## 21. வீரவாள் வகுப்பு

[வீரவாகு தேவரின் வாட்படையின் சத்தியைக் கூறிற்று.]

தானன தத்ததன தானன தத்ததன
தானன தத்ததன தந்ததாத் தனன

[1]பூவுளோ னுக்குமுயர் தேவர்கோ னுக்குமெழு
பூவில்யா வர்க்கும்வரு துன்புதீர்த் திடுமே

[2]பூதசே னைக்குள்ஒரு கோடிசூர் யப்பிரபை
போலமா யக்கரிய கங்குல்நீக் கிடுமே

[3]பூதிபூ சிப்பரமர் தோலைமேல் இட்டதொரு
போர்வைபோல் நெட்டுறைம ருங்குசேர்த் திடுமே

[4]போரிலே நிர்த்தம்இடு வீரமா லக்ஷ்மிமகிழ்
பூசைநே சித்துமலர் தும்பைசாத் திடுமே ;

---

1 பிரமன், இந்திரன் முதலானோர்க்குச் சூரனால் உற்ற துயரை நீக்க, முருகவேள் போருக்கு எழுந்து, தேவர்களுடைய சிறையை சூரன் விடுவானோ என அறிந்து வர, யாரைத் தூது அனுப்புவது என்று, திருமால், பிரமன் முதலானோரைக் கேட்கப், பிரமதேவன் —

" ஒன்னலர்க் கடந்து மீள வல்லவன் இனைய வீரவாகுவே
ஆகு மென்றான் "—கந்தபுராணம் 3-1-9.

வீரவாகுவை நோக்கி —
" ஐய வெஞ்சூர் மேவரு நகர்சென் றெங்கள்
வியன் துயர் அகற்றுகென்றார் "
—கந்தபுராணம் 3-1-48.

3 வீரவாகு தேவரின் வாளுக்கு உறை —
" ஒண்தழல் புரையும் ஒள்வாள் உறைகழித்து "—என வருமிடத்துக் காண்க – கந்தபுராணம் 3–7–40.

4 (1) வீரர்கள் போருக்குப் போதற்கு முன்பு சிங்க வாகனத்தளாகிய வீர காளியை–துர்க்கையைப் பரவித் தங்கள் வாளைப் பூசிப்பர்.

" வன்திறல் அரிமானூர்தித் தெய்வதம் வழிபட் டேத்தி
வென்றிவாள் பரவி "—திருவிளை. அங்கம் வெட்டி. 14

போரில் வெற்றி அடைந்த பின்பு கொற்ற வாளினைக் கொற்றவை மேல் நிறுத்தி நீராட்டுவர்.

பொழிப்புரை

**1.** (பூவுளோனுக்கும்) தாமரைப் பூவில் வாசம்செய்யும் பிரமனுக்கும், (உயர்) உயர் பதவியிலுள்ள (தேவர்கோனுக்கும்) தேவராஜனுகிய இந்திரனுக்கும், [எழுபுவியில்] ஏழுலகத்தில் உள்ள யாவர்க்கும் [வரு] வந்த [துன்பு] கஷடத்தை — வருத்தத்தை [தீர்த்திடுமே] நீக்கும் [வீரவாகுதேவரின் வாள்]

2. (பூத சேனைக்குள்) பூதகண சேனைகளுக்குள் (ஒரு கோடி) ஒரு கோடிக்சுணக்கான (சூர்யப் பிரபைபோல) சூரிய ஒளிபோன்று விளங்கி (மாயக் கரிய கங்குல்) மாயை — அஞ்ஞானம் என்கின்ற கரிய இருளை (நீக்கிடுமே) விலக்கும் [வீரவாகு தேவரின் வாள்]

3. பூதிபூசி - விபூதி பூசியுள்ளவரான (பரமர்)சிவபிரான் (தோலை மேலிட்டதொரு போர்வை) யானைத்தோலை மேலே போர்த்துள்ளதான போர்வை போன்றதான (கருநிறத்த தான) நெட்டுறை (பெரிய உறையின்) மருங்கு — உள்புறத்தே (சேர்த்திடுமே) சேர்ந்து விளங்கும் [வீரவாகு தேவரின் வாள்]

4. (போரிலே) யுத்தகளத்திலே (நிர்த்தமிடு) நடனமிடுகின்ற (வீரமா லக்ஷ்மி) மகாவீர லக்ஷ்மி மகிழும்படி செய்யப்படும் பூஜையை (நேசித்து) விரும்பி தும்பை மலரைச் சூடிக் கொள்ளும் [விரவாகுதேவரின் வாள்]

---

" செற்றவர் செங்குருதி யாடற்கு வாள்சேர்ந்த
கொற்றவை மற்றிவையும் கொள்ளுங்கொல் —
முற்றியோன்
பூவொடு சாந்தும் புகையவி நெய்ந் நறைத்த
தேவொடு செய்தான் சிறப்பு "–இது புறத்தோன் வாள்மங்கலம். (தொல்காப்பியம் பொருளதி. புறத்திணை 68 உரை.)

" புண்ணிய நீரிற் புரையோ ரேத்த
மண்ணிய வாளின் மறங்கிளந்தன்று "

" தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
கூர்த்த வாள் மண்ணி "

" தீர்த்த நீரும் மலரும் சொரிந்து திக்குவிளங்கக் கூரிய வாளினை மஞ்சனம் ஆட்டி ...... " — புறப்பொருள் வெண்பாமாலை–121 வாள் மண்ணு நிலை.

(2) தும்பை — இது போர்ப்பூ ஆகும்; பெரு வீரச் செயல் புரிவதன் குறியாக வீரர் போரில் அணியும் அடையாளப் பூ.

[5]பாவரூ பக்கொடிய சூரனர் பெற்றபல
பாலர்மா ளத்தசைகள் உண்டுதேக் கிடுமே
[6]பானுகோ பப்பகைஞன் மேனிசோ ரக்குருதி
பாயவே வெட்டியிரு துண்டமாக் கிடுமே
[7]பாடுசேர் யுத்தகள மீதிலே சுற்றுநரி
பாறுபேய் துய்த்திடநி ணங்களூட் டிடுமே
[8]பாடிஆ டிப்பொருத போரிலே பத்திரக
பாலிசூ லப்படையை வென்றுதாக் கிடுமே;
[9]ஆவலா கத்துதிசெய் பாவலோர் மெய்க்கலிக
ளாமகோ ரக்களேக ளைந்துநீக் கிடுமே
[10]யாருமே அற்றவன்என் மீதொர்ஆ பத்துறவ
ராமலே சுற்றிலும்இ ருந்துகாத் திடுமே

---

5, 6 சூரனுடைய பிள்ளைகள் வச்சிரவாகு, பானுகோபன் இவர்கள் வீரவாகு தேவரின் வாளுக்கு இரையானவர்கள்.

(1) வச்சிரவாகு-பத்துத் தலையன்; வீரவாகு தேவரின் வாள் அவன் கையையும், தலைகளையும் அறுத்தது.

'' அறிவரில் அறிவன் ... தன் வாளினல் கடிது தடிந்து
வீட்டினன் அவுணர்கோன் நாந்தகத் தடக்கை...''
' ஐயிரண்டவாம் தலையையும் வாளினல் அறுத்தான் ... '
—கந்தபுராணம் 3-17-97, 98.

(2) பானுகோபன் வீரவாகு தேவரின் வாளால் மாண்டனன் :

'' தன் வாட்படை வீசியே விரைந்து துன்னலன்
வலத் தோளினை வலியொடு துணித்தான்
தூயவாள்கொடே அன்னவன் இடக்கையும் துணிப்ப
......... அவன் தலை அறுத்தான்
வாளில் அங்கவன் அடுதலும் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன ''
—கந்தபுராணம் 4-11-141-143, 144.

7 போரில் இறந்தவர்களின் மாமிசத்தை – நரி, பருந்து – கழுகு, பேய், காகம் இவை உண்ணும். 'ஈ, எறும்பு, நரி, நாய், கணம், கழுகு, காகம் உண்ப உடல்' — (கணம்=பேய்) திருப்புகழ் 902. (பாறு—பருந்து, கழுகு).

8 சூரனுடையபிள்ளை அக்கினிமுகாசுரன் பத்திரகாளியைத் தன் வசப்படுத்தி வைத்திருந்தான் : போரில் அவன் அவள்

5. (பாபரூப) பாவமே உரு எடுத்தாற் போன்ற (கொடிய) பொல்லாத [சூரனுர்] சூரபத்மா [பெற்ற] பல [பாலர்] பிள்ளைகள் [மாள] இறந்து போம்படி [தசைகள் உண்டு] அவர்தம் மாமிசங்களைஉண்டு, தேக்கிடும்-தெவிட்டும் ஏப்பமிடும் [வீரவாகுதேவரின் வாள்]

6. பாநுகோபனும் பகைவனுடைய உடலினின்றும் [சோரக் குருதி பாயவே] [குருதி சோர-பாய] ரத்தம் சொரிந்து பெருகிப் பாயும்படி அவனை வெட்டி இரண்டு துண்டங்களாக ஆக்கிவிட்டது [வீரவாகு தேவரின் வாள்]

7. [பாடுசேர்] பட்டு அழிதல் உண்டாகும் அல்லது போர்த்தொழில் நிறைந்த [யுத்தகளம் மீதிலே] போர்க்களத்திலே [உணவுக்குச்] சுற்றிவரும் நரி, [பாறு] பருந்து, பேய்க் கூட்டம் இவை [துய்த்திட] உண்ண' [நிணங்கள்] மாமிசத்தை [ஊட்டிடும்] உண்ண அளிக்கும் [வீரவாகுதேவரின் வாள்]

8. பாடி ஆடி - [வீரப்பேச்சுகளைப்] பேசியும் ஆடியும் போரிட்ட யுத்தத்தில் [பத்திர கபாலி] பத்திரகாளியுடைய சூலாயுதத்தை வென்று தாக்கிற்று [வீரவாகுதேவரின் வாள்]

9. ஆவலாக (ஆசையுடன்) துதிக்கின்ற (பாவலோர்) கவிவாணர்களுடைய (மெய்க் கலிகளாம்) உண்மையான வறுமையாம் (அகோரம்) உக்கிரமான (களை) சோர்வை-அயர்வை (களைந்து நீக்கும்) போம்படி நீக்கி உதவும் (வீரவாகு தேவரின் வாள்)

10. (யாருமே அற்றவன்) யாருமே துணையில்லாதவனை (என்மீது) என்மேல் (ஓர் ஆபத்து உறவராமலே) ஒரு ஆபத்துக் கூட தொடர்ந்து வராதபடி, (சுற்றிலும் இருந்து) என்னைச் சுற்றிலும் இருந்து காத்து உதவும் (வீரவாகு தேவரின் வாள்)

---

துணையை நாடினன். காளியும் தன் படையுடன் வந்து வீரவாகு தேவருடன் போர் செய்தனள். தனது சூலப் படைகளை அவர்மேல் எறிந்தனள். அந்த சூலப் படைகளை வீரவாகு தேவர் துண்டமாக்கிக் காளியை அடக்கினர். காளி அவரைப் பணிந்து போர்க்களத்தை விட்டு அகன்ருள்.

'அடித்தனன் காளி வீழ்ந் தவச மாயினள்';

"புந்தியிலா திவட் புக்கனன் எனுச்
சிந்தைசெய் தெழுந்தனள் வன்மை தீர்ந்துளாள்"
கந்தபுராணம் 4-8-120, 126.

[11]ஆடல்வேள் நற்படைகள் ஆணையா வுக்குமுதல்
ஆணையா வைத்துவலம் வந்துபோற் றிடுமே
[12]ஆலகா லத்தைநிகர் காலசூ லத்தையும
ருதபா சத்தையும்அ ரிந்துபோட் டிடுமே;
[13]மேவலார் முப்புரமும் நீறவே சுட்டஒரு
மேருவாம் விற்பரமர் தந்தபாக் கியவான்
[14]வேடர்மா னுக்குமுயர் தேவயானைக்கும்இசை
வேலர்தா ளைத்தொழுது யர்ந்தவாழ்க் கையினன்
[15]வீறுசேர் மிக்ககண நாதனுர் எட்டுவகை
வீரர்நேயத்தமையன் என்றதோட்டுணைவோன்

---

[11] முருகவேளின் வேல், குலிசம் ஆதிய படைகளைப் பணி தலே தனது முதற் கடமை என்று கொண்டு அவைதமைப் பணியும் வீரவாகு தேவரின் வாள்—என்க.

[12] காலனுக்குச் சூலமும் பாசமும் ஆயுதங்கள் :—
'கோரப் பாரச் சூலப் பாசச் சமனுர்'—திருப்புகழ் 712.

[13] திரிபுரம் எரித்த வரலாறு—திருப்புகழ் 285, பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

[14] வீரவாகு தேவருக்கு முருகவேளின் திருவடிமீது இருந்த அன்புக்கு அளவே கிடையாது—பானுகோபனை வதைத்து வந்து வீரவாகு தேவர் முருகவேளை வணங்கினர். முருகவேள் உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்; தருவோம் என்றனர்; வீரவாகுதேவர் அப்போது வேண்டுகின்ற வரத்தைப் பாருங்கள் :

"கோல நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறும் பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்"
—கந்தபுராணம் 4-11-154.

[15] (1) வீரவாகு தேவர் ஆதிய நவ வீரர்களும் நந்திகண வகையினர்.

இலக்கர், நவ வீரர்களின் வரலாறு :

சிவபிரானது நெற்றிக் கண்ணிலிருந்து தீப் பொறிகள் வெளிவர, பொறிகளின் வெப்பம் தாங்க முடியாமல் உமை அஞ்சி ஓடினள். அப்போது அவளது சிலம்பினின்றும் நவ மணிகள் சிதறின. அம் மணிகளில் உமையின் உருவைக் கண்டு சிவபிரான் வருக என்றழைக்க நவ சத்திகள் வந்தனர்.

11. (ஆடல்) வெற்றி விளங்கும் (வேள்) முருகவேளின் படைகள் (ஆயுதங்களை) ஆணை – ஆக்ஞை – கட்டளைகள் (யாவுக்கும்) எல்லாவற்றுக்கும் - (முதல் ஆணையா வைத்து) முதலிற் போற்ற வேண்டிய கட்டளையாகப் பாவித்து, வலம் வந்து அப்படைகளைப் போற்றும் (வீரவாகு தேவரின் வாள்)

12. (ஆல காலத்தை) ஆலகால விஷத்தை (நிகர்) ஒத்ததான (கால சூலத்தையும்) காலனது சூலாயுதத்தையும் (அருத) அவன் கையினின்றும் நீங்காத (பாசத்தையும்) பாச மாம் கயிற்றையும் (அரிந்து போட்டிடுமே) அறுத்துத் தள்ளி விடும் (வீரவாகு தேவரின் வாள்),

13. (மேவலார்) பகைவர்களது (முப்புரமும்) திரிபுரங் களும் (நீறவே) பொடியாகும்படி (சுட்ட) சுட்டெரித்த (ஒரு) ஒப்பற்ற (பரமர்), மேரு என்கின்ற மலையை (வில்) வில்லாகக் கொண்ட பரமர் – சிவபிரான் தந்த – பெற்ற (பாக்கிய வான்) புண்ணியமூர்த்தி,

14. வேடர்கள் வளர்த்த மான் போன்ற வள்ளி நாய கிக்கும், (உயர் தேவயானைக்கும்) மேம்பாடுடைய தேவ சேனைக்கும் (இசை) – மணவாளனாக இசைந்த (வேலர்) வேற் பெருமான் – ஆகிய முருகரின் (தாளைத் தொழுது) திருவடிகளைப் பணிந்து (உயர்ந்த) அப்பணிவினால் மேம்பட்ட வாழ்க்கையை உடையவன்,

15. (வீறு சேர்) பெருமை வாய்ந்த, (மிக்க) மேலான, (கண நாதனார்) நந்திகணத்தவர்களான (எட்டு வகை வீரர்) எண்வகையான வீரர்களின், நேயம் - அன்புமிக்க தமையன் என்ற தோள் துணைவன் – தோளை ஒத்த சகாயன்,

---

நவ சத்திகள் பரமனைக் கண்டு விருப்பங்கொள்ளக் கருப்ப முற்றனர். உமை இதனைக் கண்டு எமக்கு மாறாக இவர்கள் கர்ப்பம் கொண்டார்களே எனக் கருதி – நவ சத்திகளையும் 'கருப்பமோ டிருத்திர் பலகாலம்' எனச் சாபம் உரைத்தனள்; இதைக் கேட்டு அவர்கள் அஞ்சி வியர்த்தனர். அந்த வியர்ப் பில் சிவனருளால் 'விறல் வீரர்கள் இலக்கர் வந்துதித்தார்' இவர்கள் முருகவேளுக்குப் படைவீரர்களாயினர். பின்பு பலகாலம் கழிய, நவசக்தியின் கருவினுள் நந்தியங் கணத்தவர் போந்து பரமனைத் தியானித்து யோகில் இருந்து "உமை யுடன் பரமனைப் பணிந்தார்". சிவபிரான் கேட்டுக்கொண்ட படி உமை தானிட்ட சாபத்தை விலக்க, நவ சத்திகளும்

[தொடர்ச்சி 584-ஆம் பக்கம் பார்க்க.]

[16]மேன்மையாம் லக்ஷரத வீரர்பூ சிக்கவரு
வீரவா குத்தலைவன் வென்றவாட் படையே.

---

நவ வீரர்களை என்றனர். (1) செம்பணிப் பாவையிடம் வீரவாகுவும், (2) தரளவல்லி (முத்தம்மை) பால் வீரகசேரியும், (3) புட்பராகத்திபால் வீர மகேந்திரனும், (4) கோமேதக மங்கைபால் வீர மகேசுரனும், (5) வைடூரிய மங்கைபால் வீர புரந்தரனும், (6) வைரமங்கைபால் வீர ராக்கதனும், (7) மரகதத்திபால் வீர மார்த்தாண்டனும், (8) பவள மங்கைபால் வீராந்தகனும், (9) நீலமணி மங்கைபால் வீரதீரனும் உதித்தனர். சிவனார் தேவியை நோக்கி இவர்கள் ' நம் மைந்தர், புதியரலர், நந்தி தனிக் கணத்தவர்' என்றார்; அவர்க்கெல்லாம் 'வெவ்வேறுதாவில் சுடர் வாள்' உதவினர். உதவி ' நுங்கட் கிறையவனுகிய சேயை நீங்க லின்றி ஏவலவன் பணித்தன செய் தொழுகுதிர் ' என்றார். — கந்தபுராணம் I-12 பார்க்க.

'' என்பொ னே ! முருக னே ! இறை வா ! என்
றன்பி னேடுநிதம் ஆறு முகத்தன்
தன்பி னேதொடரும் தம்பிய ராமவ்
வொன்ப தின்மர்கழல் ஓதுக நாவே ''

—என நவவீரர்களை நாம் துதித்து உய்வோமாக.

(2) தோள் துணைவன் — *'' தோட்டுணைவனும் இளவல் '' —கந்தபுராணம் I-22-37.

*'' சமயத்தில் விரைந்து வந்து உதவுதற்குத் தோள் உவமை கூறப்படும். 'தோளுற் றொர் தெய்வம் துணையாய்த் துயர்தீர்த்த வாறும்' என்ற சிந்தாமணியையும் ' உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே யிடுக்கண் களைவதாம் நட்பு ' என்ற திருக்குறளையும் காண்க. அன்றியும் சகோதரன் தோளுக்கு ஒப்பாதல் 'ஒதினுடன் வந்தோன் மரிந்துவிடில் வாகுவலி போம்' என்பது கொண்டும் அமையும்; தம்பி தோளெனப் படுதலை ' எனது தோள்களில் இளையவன் தனக்கு வேறியாதெனும் எண்ணுடை மனத்தான்' என வில்லிபுத்தூரார் பாரதத்திலும் காண்க. சூரபதுமனது தம்பியரான சிங்கமுகனுக்கும் தாரகனுக்கும் சிவபிரான் வரந் தந்த பொழுது 'சூரனென்பவன் தோளிணை போலவே, வீரம் எய்தி விளங்கி ' என்றதனுல் சூரனுக்குத் தம்பியர் இருவரும் இருதோள் போன்று உதவுமாறு கூறியுள்ளமையுங் கொண்டு 'தோட்டுணைவனும் இளவல்' என்றார் ''.
—வை. மு. சடகோப ராமானுஜாசாரியர் - கந்தபுரா. உரை.

16. (மேன்மையாம்) பெருமை வாய்ந்த லக்ஷரத வீரர் - ரதங்களை உடைய இலக்க வீரர்கள் (பூசிக்க) போற்றிப் பணிய (வரு) எழுந்தருளும் (வீரவாகுத் தலைவன்) வீரவாகு என்னும் பெயர் கொண்ட நாயகன் - ஆகிய பெருமான் - வென்ற - செய்த (பல போர்களிலும்) வெற்றி கொண்டதான (வாட்படையே) வாளாயுதமே.

---

16 லக்ஷ ரத வீரர் — இவர்கள் (அடி 15-ல் குறித்த) இலக்கம் வீரர்கள், ரத வீரர் — அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத் தேர்வீரர் நால்வகைப்படுவர். **அதிரதர்**— முழுத் தேரரசர் - அவராவார் ஒரு தேரில் ஏறி நின்று தம் தேர், குதிரை, சாதிகளுக்கு அழிவு வாராமல் காத்துப் பல ஆயிரம் தேர் வீரரோடு எதிர்த்து வேறு துணை இல்லாமலே போர் செய்து வெல்லும் வல்லமை உடையார்; அவரிற் சிறிது தாழ்ந்தவர் - **மகாரதர்** - இவர் பதினோராயிரம் தேர் வீரரோடு பொருபவர்; **சமரதர்** - ஒரு தேர் வீரனோடு தாமும் ஒருவராய் எதிர்க்க வல்லவர்; **அர்த்த ரதர்** - அவ்வாறு எதிர்க்குமளவில் தம் தேர் முதலியவற்றை இழந்துபோம்படியானவர்; இவர் இருவர் சேர்ந்தால், ஒரு சமரதனுக்கு ஒப்பாவர். [வில்லிபாரதம் 13-ஆம் போர்-6; வை.மு. சடகோபராமாநுஜாசாரியார் உரை.] பாரதம் அணிவகுப்புச் சருக்கம் 1-3.

---

## வீரவாள் வகுப்பின் சுருக்க உரை

13-16 சிவபிரானது மைந்தன், முருகவேளைத் தொழுது நிற்கும் பெரும் பேறுடையவன். நவவீரருக்குள் முன்னோன், இலக்கராம் ரதவீரர்களால் பூசிக்கப்படுபவன்—ஆகிய வீரவாகு தேவரின் வெற்றி வாட்படையானது —

1. பிரமன், இந்திரன் ஆதிய யாவர் துயரையும் தீர்த்தது; 2. கோடி சூரிய ஒளியதாய், மாயைகளை விலக்கும் வன்மை வாய்ந்தது. 3. உறைக்குள் விளங்குவது; 4. வீரலக்ஷ்மி மகிழப் பூசைகளை ஏற்றுத் தும்பை மலர் அணியப் பெறுவது; 5. சூரன் புதல்வர் பலரை மாய்த்தது; 6. பானுகோபனைத் துண்டமாக்கியது; 7. போர்க்களத்தில் நரி, பருந்து, பேய் உண்ண மாமிச உணவைத் தந்தது; 8. பத்திரகாளியின் சூலத்தை வென்றது; 9. பாவலோரின் சோர்வை நீக்குவது; 10. கதியற்ற என்னை ஓர் ஆபத்தும் வராமல் காத்தருளுவது; 11. முருகவேளின் படைகளை வலம் வந்து போற்றுவது; 12. காலனது சூலம், பாசம் இவைகளை அரிந்து எறிய வல்லது.

## 22. சிவகிரி வகுப்பு

[சிவகிரி - பழநி என்றுவது சிவகிரி என்னும் தனித்தலமாக வாவது கொள்ளலாம்.]

தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதானன

[1]மெத்த மெத்த அக்ர மத்தின்
மெத்த மெத்த விக்ர மத்தின்
மெத்த மெத்த உக்ர வெற்றி மிகுபாசமே-
[2]விட்டு விட்டு றுக்கு றுக்கு
கட்டு கட்டு குத்து குத்து
வெட்டு வெட்டெ னச்சி னத்து நமனடியே;
[3]சத்த மிட்ட தட்டி நெட்டெ
யிற்றி னேக்க டித்து றுக்கு
தர்க்க மிட்டெ னைப்பி டிக்க வருபோதிலே-
[4]தத்த ளிக்கு புத்தி யைத்தி
டப்ப டுத்தி யொத்தி டத்த
ணிப்பு றுத்தி மெய்த்து னைக்கு வரவேணுமே;
[5]எத்த லத்து மெப்ப திக்கும்
எப்ப டிக்கும் எச்ச ரித்து
நற்ப தத்தை யுச்சரிக்கும் நினைவாகியே-

---

1,3 அக்கிரமமாக நடப்போரை நமன் வெருட்டிப் பாசக் கயிற்றாற் கட்டிக் கொண்டு போவான். நல்லோரை நல்லபடி உபசரித்துக் கொண்டு போவான். 'இறுக்கிப் பிடித்துக் கட்டி உதைத்துத் துடிக்கப் பற்றி, இழுத்துத் துவைத்துச் சுற்றி யமதூதர்' கொண்டு போவார்—திருப்புகழ் 346.

"நல்வினை புரிவோர் தம்மை நடுவன் வன் தூத ரானோர்
பல்வினை யுபசா ரத்திற் படர்தரக் கொண்டுய்ப்பார்"
—திரு ஆனைக்காப் புராணம் - நாட்டுச் சிறப்பு. 85

## பொழிப்புரை

**1.** (மெத்த மெத்த) மிக அதிகமாக (அக்ரமத்தின்) அக்ரமம் – அநீதியான செயல்களைச் செய்தோரிடம், (மெத்த மெத்த) மிக அதிகமான (விக்ரமத்தின்) பராக்ரமத்துடனே – (மெத்த மெத்த) மிக அதிகமான (உக்ர வெற்றி) உக்ரமும் – கடுங் கோபமும், ஜெயமும் மிக்குள்ள (பாசமே) பாசக் கயிற்றையே,

2. விட்டு விட்டு – எறிந்தெறிந்து, (உறுக்கு உறுக்கு) கோபித்து அதட்டுக அதட்டுக, கட்டுக கட்டுக, குத்துக குத்துக, வெட்டுக வெட்டுக, (என) – என்று கூறிச் (சினந்து) கோபம் கொண்டுள்ள (நமன்) எமன் (நாடியே) (என்னைத்) தேடி வந்து,

3. (சத்தமிட்டு) கூச்சலிட்டு (அதட்டி) வெருட்டிப் பயப்படுத்தி (நெட்டு எயிற்றினை) நீண்ட பற்களைக் கடித்து (உறுக்கு) கோபத்துடன் (தர்க்கமிட்டு) வாது செய்து (எனைப் பிடிக்க) என்னைப் பிடிக்க வரும் அந்த சமயத்திலே,

4. (தத்தளிக்கு புத்தியை) தடுமாறுகின்ற எனது புத்தியைத் (திடப்படுத்தி) தைரியப்படுத்தி (ஒத்திட) அதற்கேற்பத் (தணிப்பு உறுத்தி) மன அமைதியைப் புகட்டி (மெய்த் துணைக்கு) உண்மைத் துணை செய்ய (நீ) வந்தருள வேண்டும்.

5. (எத்தலத்தும்)எவ்விடத்தும், (எப்பதிக்கும்) எல்லா ஊர்களிலும், (எப்படிக்கும்) எல்லா நிலையிலும் (எச்சரித்து) எச்சரிப்பு - ஜாக்கிரதையுடன் (நற்பதத்தை) நல்ல பதம் - சிறந்த எழுத்தாகிய உனது ஆறெழுத்தை (உச்சரிக்கும்) ஜெபிக்கின்ற (நினைவாகியே) நினைவு தவறாது,

---

3, 4 'கார்மாமிசை காலன்வரிற் கலபத் தேர்மாமிசைவந் தெதிரப் படுவாய்'—கந்தரநுபூதி 10.

5 (எப்போதும்) பதத்தை உச்சரிக்கு நினைவாகி, பதம் – எழுத்து — " அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" சுந்தரர் 7–83–1.

[6]இட்டம் வைத்த வர்க்க நுக்ர
கச்ச முத்ர வித்தை யிற்ப்ர
சித்த நித்ய முத்த மிழ்க்கும் அருள்போதனே;
[7]அத்ர பத்ர சித்ர மிட்ட
யிற்ப டைத்த யிற்கி ணேத்த
லர்க்க ணுற்ற பொற்கு றத்தி மணவாளனே-
[8]அத்த னுக்கு மைக்கி தத்த
புத்ர சித்தி முத்தி யைச்செ
யற்பு தச்சி வக்கி ரிக்குள் முருகேசனே.

---

6 சமுத்ர வித்தை — கல்வியைக் கடலுக்கு ஒப்பிடுதல் உண்டு. 'கடலே அனையம் யாம் கல்வியால்'—நன்னெறி 7.

7 வாளும் வேலும் வள்ளியின் கண்ணுக்கு உவமை— "மறச் சிறுமி விழிக்கு நிகராகும்......குகன் வேலே"—வேல் வகுப்பு. வாள் – கண்ணுக்கு உவமை "பத்ர வாட்கண்" திருப்புகழ் 491.

8 முருகர் - சிவனுக்கும் பார்வதிக்கும் பிரியமான குமாரர். 'மதனுரைக் கரிக்கோல மிட்டார் க(ண்)ணுக்கான முத்தே' திருப்புகழ் 424. 'பரிவினெடு கவுரி கொஞ்சக் கலகலென வருகடம்பத் திருமார்பா'—திருப்புகழ் 400.

குறிப்பு: 22, 23, 24, 25 எண்ணுள்ள திருவகுப்புக்கள் தலங்களைப் பற்றியனவாய் 'முருகேசனே' என முடிவதாய் இருக்கின்றன; இதுவே அருணகிரியார் வாக்கல்ல இவை என்பதற்கு இடம் தருகின்றது.

## 23. திருச்செந்தில் வகுப்பு

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தனதான

[1]சந்த பந்த முந்து விந்தை செஞ்சொ லின்ப்ர பந்த நந்து
சங்க மங்க லம்பொ ருந்து தமிழ்பாடியே-

---

1 (1) பாடல்களிற் சந்தப் பாக்களுக்குத் தனிப்பெருமை உண்டு. சிவபிரான் யமனை உதைத்தபோது மார்க்கண்டேயர் 'சந்தப் பாவினுல்' ஆண்டவனைப் பரவி நின்றாராம்:

6. (இட்டம் வைத்தவர்க்கு) விருப்பம் வைத்த அடியார்களுக்கு (அநுக்கிரகம்) திரு அருளுடனே (சமுத்ர வித்தையில்) கடலனைய கல்வியில் - கல்விக் கடலிலே (ப்ரசித்தம்) கீர்த்தி கொண்டதும் (நித்யம்) அழியாததுமான (முத்தமிழ்க்கும்) இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்அறிவும் கைகூட அருள் புரிகின்ற (போதனே) குரு மூர்த்தியே!

7. அத்திர பத்திர சித்திரம் இட்ட - (அத்திரம்) படையாகிய (பத்திரம்) அம்பு அல்லது வாளுக்கும், (சித்திரம் இட்ட) அழகு வாய்ந்த அல்லது அலங்காரத்தோடு கூடியதும் (அயில் படைத்த) கூர்மை கொண்டதுமான (அயிற்கு) வேலுக்கும், (இணைத்து) ஒப்பாக (அலர்) மலர்ந்துள்ள (கண் உற்ற) கண்களைக் கொண்ட பொற் குறத்தி – அழகிய குறப் பெண் – வள்ளியின் மணவாளனே!

8. (அத்தனுக்கு) சிவபிரானுக்கும் (உமைக்கு) பார்வதிக்கும் (இதத்த) இன்பம் தருகின்ற (புத்ர) புதல்வனே! (சித்தி முத்தியை) அஷ்ட சித்திகளையும், மோக்ஷ வீட்டையும் (செய்) தந்து உதவும், அற்புத மூர்த்தியே! சிவகிரி என்றும் தலத்தில் (வீற்றிருக்கும்) முருக மூர்த்தியே! (அல்லது) சித்தியையும் முத்தியையும் கூட்டுவிக்கும் அற்புதகரமான சிவகிரியில் வீற்றிருக்கும் முருகேசனே!

---

### சிவகிரி வகுப்பின் சுருக்க உரை

1–4. யமன் எனை வெருட்டிப் பிடிக்க வரும்போது நீ என் புத்தியைத் திடப்படுத்தித் துணை புரிய வரவேணும். 5, 6. ஆறெழுத்தை நினைத்து ஓதும் அன்பர்களுக்கு முத்தமிழ் போதிக்கும் குருமூர்த்தியே! 7, 8. வள்ளி மணவாளனே! சிவனுக்கும் உமைக்கும் ப்ரியவேளே! சித்தி முத்தி தரும் சிவகிரி முருகனே!

### பொழிப்புரை

**1.** சந்த பந்தம் – சந்தங்களின் திரட்சி (அல்லது) சந்த அழகு – முந்து, முற்பட்டு விளங்கும் (விந்தை) அற்புதம் வாய்ந்த செஞ்சொற்களால் ஆகிய (ப்ரபந்தம்) பாமாலையாய் (நந்து) வளர்ச்சியுற்று, (சங்க மங்கலம்) சங்க நூல் போன்ற மங்களகரமான மதிப்புப் பொருந்தியதான தமிழைப் பாடி,

---

" அந்தக் காலத் தெம்முயிர் காப்பான் அரனுண்டால்
வந்தக் கூற்றன் என்செய்வன் என்னு வடதொன்னூல்
சந்தப் பாவிற் போற்றுதல் செய்தே தனிநின்ற
மைந்தற் காணூஉ எம்பெரு மானும் மகிழ்வுற்றுன் "
—கந்தபுராணம் 2-5-256.

[2]தஞ்ச மென்று சென்று சென்று நஞ்சு விஞ்சு நெஞ்ச வஞ்சர்
தங்கண் முன்பு நின்று நின்று மெலிவோதியே;

[3]சிந்தை நொந்து நொந்து நைந்து நைந்து வெம்பி வெம்பி யங்கி
சிந்தி யிந்த வெங்கு டம்பை அழிபோதுமா-

[4]சிங்க முன்பு குந்த தந்தி யின்கு லங்க லங்கு பண்பொ
சிந்த துன்ப மென்ருெ ழிந்து கரையேறுவேன்;

[5]அந்த ரங்கள் அண்டர் அண்டம் மண்ட லங்கு லுங்க நின்ற
சைந்த சைந்து பந்தெ ழும்ப அசுராதியோர்-

[6]அங்க டங்கள் துண்ட துண்ட கண்ட பந்தி சண்டை வந்த
லைந்து ருண்டு மண்டை சிந்த அடர்கோபனே;

[7]கந்த சந்த நுங்கு கும்ப கொங்கை யிந்தி ரன்ம டந்தை
கங்க ணம்பு ரந்த வென்றி அணிநேயனே-

---

(2) சங்கமங்கலம் பொருந்து தமிழ் – சங்கத்தமிழ் — உயர்ந்ததனித்தமிழ் - செந்தமிழ். சம்பந்தப்பெருமான்கூடத் தமது தமிழைச் 'சங்கமலி செந்தமிழ்கள்' என்கின்ருர். 'ஞான சம்பந்தன் உரைசெய் சங்கமலி செந்தமிழ்கள் பத்தும்'—3-74-11.

1.4 இவ்வடிகளின் கருத்தை 'உடையவர்கள் ஏவர்' எனத் துவக்கும் திருப்புகழிலும் (273) பின்னும் பல திருப்புகழ்ப் பாக்களிலும் காணலாம்.

6 கடம் – உடல்: 'இக்கடத்தை நீக்கி'—திருப்புகழ் 651.

7 **சசியின் மங்கலக் காப்பைக் காத்தது:** இது 'சசிதன்...மங்கல நூல் வாங்குகிலாள் வாழ்ந்தனள்...வேல் வாங்கவே' என்னும் வேல்வாங்கு வகுப்பின் கருத்தது. (9-திருமுறை பக்கம் 445 குறிப்பு பார்க்க.

தேவசேனேக்கு மங்கலக் காப்பைப் புரத்தல் — இங்கு புரத்தல்=அனுக்கிரகித்தல். இங்கு திருமணம் செய்தல்.

"மகோதராதிகள் புரக்க வாயில் ...... புகுதுவார்"
—தக்கயாகப்பரணி 138.

2. (நீயே) தஞ்சமென்று புகலாவாய் - அடைக்கல ஸ்தானம் ஆவாய் என்று கூறிச் (சென்று சென்று) அடிக்கடி போய் (நஞ்சு விஞ்சு) விஷம் மிக்க நெஞ்சத்தை உடைய (வஞ்சர் தங்கள் முன்பு) வஞ்சகர்கள் முன்னிலையிற் போய் (நின்று நின்று) அடிக்கடி வெகு நேரம் நின்று (காத்து நின்று) (மெலிவு ஓதியே) என்னுடைய (வறுமை) வருத்தங்களை எடுத்துச் சொல்லி,

3. (சிந்தை) உள்ளம் (நொந்து நொந்து) மிக வருந்தி, (நைந்துநைந்து) மிகத்தளர்ந்து, (வெம்பி வெம்பி) மிக வாடி, (அங்கி சிந்தி) கனல் மூச்சு - நெருப்பு வீசும் (கவலை மூச்சுக்களை) விட்டு, இந்த (வெம்) கொடிய (குடம்பை) கூடாகிய உடல் (அழிபோது) அழிகின்றபோது - (உடலை விட்டு உயிர் போகும்பொழுது), (மா) பெரிய

4. சிங்கத்தின் முன் புகுந்து அகப்பட்ட (தந்தியின் குலம்) யானைக் கூட்டம் (கலங்கு பண்பு) கலக்கமுறுகின்ற தன்மையில் (ஓசிந்த துன்பம்) வருத்தம் தரும் துன்பமானது என்று-எப்போது (ஒழிந்து) நீங்கி (நான்) கரையேறுவேன்.

5. (அந்தரங்கள்) தேவ லோகங்கள் (அல்லது வெளியிடங்கள்), (அண்டரண்ட மண்டலம்) பகிரண்டங்களாம் ப்ரதேசங்கள் குலுங்க நின்று - குலுங்க நின்று, (அசைந்து அசைந்து) அடிக்கடி அசைவுற்று (பந்து எழும்ப) பந்து எழுவது போல மேலே எழும்பவும், அசுரர் முதலானோருடைய

6. (அம் கடங்கள்) நல்ல உடல்கள் (துண்ட துண்ட கண்ட) துண்டம் துண்டமாகக் கண்ட - துண்டு பட்டழியக் கண்ட, பந்தி - சூரசம்மாரம் எனக் கீர்த்தி பெற்ற, சண்டை போரில் (வந்து) அலைந்து உருண்டு - அலைபட்டு உருண்டு மண்டை உடைந்து (சிந்தும்படி) சிதறும்படி அவர்களை (அடர்) எதிர்த்துத் தாக்கின கோபம் கொண்டவனே!

7. (கந்த சந்தம்) சந்தம் - நறுமணமுள்ள சந்தனத்தை (அல்லது—கந்தனே! சந்தம் — சந்தனத்தை — (நுங்கு) அணிந்துள்ள (கும்பம்) குடம் போன்ற கொங்கைகளை உடைய (இந்திரன் மடந்தை) இந்திரனுக்கு உரிய மாது - சசிதேவியின், கங்கணம் புரந்த - மங்கலக் காப்பைக் காத்த, அல்லது இந்திரன் குமாரியான தேவசேனைக்கு (கங்கணம்) மங்கலக் காப்பு வளையல்களை (புரந்த) அநுக்கிரகித்த - தேவசேனையை மணந்த - வென்றி அணி - வெற்றி புனையும் (நேயனே) நேசனே - நண்பனே!

[8]கம்பு மஞ்ச முந்தி கழ்ந்தி ருந்தி டுந்தி றஞ்செ றிந்து
கஞ்ச நன்ற லர்ந்த செந்தின் முருகேசனே.

## 24. திருப்பழநி வகுப்பு

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததன தந்ததன தனதானன

[1]எந்தவினை யும்பவமும் எந்தவிட மும்படரும்
எந்தஇக லும்பழியும் எந்தவழு வும்பிணியும்
எந்தஇகழ் வுங்கொடிய எந்தவசி யுஞ்சிறிதும்
அணுகாமலே-
[2]எந்தஇர வுந்தனிமை எந்தவழி யும்புகுத
எந்தஇட முஞ்சபையில் எந்தமுக மும்புகலும்
எந்தமொழி யுந்தமிழும் எந்தவிசை யும்பெருமை
சிதருமலே;
[3]வந்தனைசெய் துன்சரண நம்புதல் புரிந்தஅருள்
வந்தநுதி னந்தனிலும் நெஞ்சில்நினை வினபடிவ
ரந்தரஉ வந்தருள்இ தம்பெறுவ தன்றிநெடு
வலைவீசியே-

---

[8] திருச்செந்தூரில் — தாமரையும் சங்கும் — "பங்கசெ, 'கம்பு உரவா முரல் செந்தூர்'—கந்தரந்தாதி 24.
"சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயம்
சாரலார் செந்திலம்பதி"—திருப்புகழ் 35.
"கம்பூர் சிந்தார் ... செந்தில்"—திருப்புகழ் 43.
திருச்செந்தூரில் அன்னம் நீர்ப் பூவில் — "கால்சேது அ(ன்)னம் தந்துறை அல்லி மன்வாவி செந்தூர்" — கந்தரந்தாதி 33.

[2] இரவிலும் தனிவழியிலும் போம்போது - வேல் துணையாகும் என்றார் 'வேல் வகுப்பில்' (அடி 11).
(1) சபைக்கு அஞ்சினவன் — "சபைதனில் வராத கோழை' எனத் தம்மையே இகழ்ந்துள்ளார்–திருப்புகழ் 1268
(2) தமிழும் இசையும் பாட அருள்புரிவாய்–'இயலிசை பாடத் தரவேணும்' எனத் திருப்புகழிலும் [1085] வேண்டியுள்ளார் அருணகிரியார்.

8. (கம்பும்) சங்குகளும் (அஞ்சமும்), அன்னமும் (திகழ்ந்து இருந்திடும்) விளங்கி நிற்கும் (திறம்) தன்மை (செறிந்து) மிகுந்துள்ள (கஞ்சம்) தாமரை (நன்று அலர்ந்த) நன்கு மலர்ந்து திகழும் திருச்செந்தூர் முருகேசனே!

---

### திருச்செந்தில் வகுப்பின் சுருக்க உரை

1-4. வஞ்ச மனத்தர்பால் பொருள் வேண்டி என்வறுமையைக் கூறித் தமிழ் பாடி மனம் நொந்து இறவாது நான் என்று கரை ஏறுவேன்; 5-6. அசுரரை அட்டவனே! 7. சசியின் மங்கலக்காப்பைக் காத்தவனே! (அல்லது தேவசேனையை மணந்தவனே!) 8. திருச்செந்தில் முருகேசனே!

### மொழிப்புரை

**1.** (எந்த வினையும்) எவ்விதமான வினையும், (பவமும்) பிறப்பும் அல்லது பாவமும் (எந்த விடமும்) எவ்விதமான விஷமும், (படரும்) துன்பமும், (எந்த இகலும்) எவ்விதமான பகையும், பழியும், (எந்த வழுவும்) எவ்விதமான குற்றமும், (பிணியும்) நோயும், (எந்த இகழ்வும்) எவ்விதமான இகழ்ச்சியும் - நிந்தையும், கொடிய - கொடிதான - பொல்லாததான எந்த (வசியும்) தன் வசப்படுத்தும் வசிய வித்தை எதுவும் - (அல்லது தாழ்ச்சியும்) (சிறிதும்) சிறிதளவும் (அணுகாமலே) அணுகாமலும்,

2. எந்த (இரவும்) இரவிலும், (தனிமை) தனியாக எந்த வழியினும் (புகுத) புகவும் - செல்லவும், (எந்த இடமும்) எந்த இடத்திலும் (சபையில் எந்த முகமும்) சபையிலே எந்த இடத்தும் (புகலும்) பேசும் (எந்த மொழியும்) எந்த பாஷையும், தமிழும், (எந்த விசையும்) எந்த தருணத்திலும் (அல்லது எந்த இசையும்-எந்த வகையான இசையைப் பாடுதலிலும்) (பெருமை) என்னுடையகீர்த்தி, (சிதறுமலே) சிதறுண்ணுமலும் - கெடாமலும் சேதப் படாமலும் - (நான் இருக்க வேண்டி)

3. (வந்தனை செய்து) உன்னை நான் வந்தித்து (வணங்கி) உன் சரணம் நம்புதல் புரிந்த - உன் திருவடியை நம்பினதால், (அருள் வந்து) உன் திருவருள் வரப் பெற்று, (அநுதினம்தனிலும்) தினம்தோறும், (நெஞ்சில்) உள்ளத்தில் (நினைவின்படி) நினைத்த நினைவின்படியே (வரம்தர) வரத்தைத் தர (உவந்து அருள்) மகிழ்ந்து நீ திருவருள் பாவிக்கும் (இதம் பெறுவதன்றி) இன்பத்தைப் பெறுவதுடன் பின்னும், (ஒரு)பெரிய (வலைவீசியே) பாசக்கயிறு என்னும் வலையைவீசி,

[4]வஞ்சவிழி சண்டன்உறு கின்றபொழு துங்குமர
கந்தஎன நன்கறைய வுந்தெளிவு தந்துயிர்வ
ருந்துபய முந்தனிமை யுந்தவிர அஞ்சலென
வரவேணுமே;

[5]தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி
குண்டமட குண்டமட மண்டமென நின்றுமுர
சந்திமிலை பம்பைதுடி திண்டிமமு ழங்கும்ஒலி
திசைவீறவே-

[6]தண்டஅமர் மண்டசுரர் மண்டைநிண மென்றலகை
யுண்டுமிழ்தல் கண்டமரர் இந்திரன் வணங்குபத
தண்டைசிறு கிங்கிணி புலம்பிடவ ரும்பவனி
மயில்வாகனு;

[7]செந்தளிரை முந்துபடம் என்றுளம ருண்டுநிறை
சந்தனவ னங்குலவு மந்திகுதி கொண்டயல்செ
றிந்தகமு கின்புடைப துங்கிடவ ளைந்துநிமிர்
மடல்சாடவே-

---

[4] *(1)* இந்த அடியின் கருத்தை 'காலன் வருபோது - ஆதி முருகாதி முருகாதி முருகா எனவும் ஆதி முருகா நினைவு தருவாயே' எனவரும் திருப்புகழிற் காண்க *[1242]*.

" அஞ்சலென வலிய மயில்மேல் நீ ... வருவாயே "
—திருப்புகழ் 70.

*(2)* உயிர் வருந்து பயம் - தனிமை.

" கூற்றுவன் ஊர்க்குச் செல்லுப் வழியும் துயரும் "
—கந்தரலங்காரம் 56.

" உயிர்போம் அத் தனி வழிக்கே "—கந்.'அலங். 59.

" பயந்த தனி வழி "—ஷை-70, 8-திருமுறை குறிப்புரை பக்கம் 69.

[5] பம்பை, துடி — திருப்புகழ் 585, பக்கம் 339 உரைப் பகுதி பார்க்க. முரசு - பறைப்பொது. திமிலை – ஒருவகைப் பறை. திண்டிமம் - ஒருவகைப் பறை. திண்டிமம் முழக்கிக் கொண்டு வாதம் செய்யும் கவி 'திண்டிமகவி' எனப்படுவான். 'பெருங்கவிப் புலமைக்கு நீ சொன்னபடி திண்டிமம் கொட்ட', 'பாவாணர் மங்கலக்கவி வாழி பாடிப் பரிந்து திண்டிமமுழக்க' செந்தூர் பிள்ளைத் தமிழ் சப்பாணி 2, சிறுபறை 4.

4. வஞ்சவிழி – வஞ்சக எண்ணத்தைக் காட்டும் கண்களை உடைய (சண்டன்) யமன் (உறுகின்ற பொழுதும்) என்னைப் பிடிக்க வருகின்றபோதும், ''குமர'', ''கந்த'' என்று (உன் திருநாமங்களை) நன்ருக (அறையவும்) சொல்வதற்கும், தெளிவு தந்து) மனத் தெளிவை எனக்கு நீ கொடுத்து, (உயிர் வருந்துபயமும்) யமனைக் கண்டு என் உயிர் வருந்தும் பயமும், தனிமையும் – தனியாய் அவன் கையிற் சிக்கிப் போகும் துணையற்ற நிலையும் (தவிர) நீங்கும்படி, (அஞ்சலென) நீ பயப்படாதே என்று கூற வந்தருள வேண்டுகின்றேன்.

5. ''தந்தன்ன தந்தன்ன ... குண்டமட மண்டம் என்று ஒருங்கே நின்று முரசு, திமிலை, பம்பை, துடி, திண்டிமம் எனப்படும் (வாத்தியங்கள்) (முழங்கும் ஒலி) சப்திக்கும் ஒலியானது (திசை வீறவே) – திசைகளில் பெருகிமிக,

6. (தண்டம்) படையாக வந்த (அமர்) போரில் அல்லது — தண்ட அமர் — அனுவசியமான போரில் (மண்டு) நெருங்கின (அசுரர்) அசுரர்களுடைய (மண்டை நிணம்) தலைப்பாகத்துகொழுப்புஇறைச்சியை, மென்று–மென்றுதின்ற அலகை-பேய் (இது வேண்டாம் என்று) உண்டதை உமிழ்தலைக் கண்ட அமரர்-தேவர்களும், இந்திரனும் வணங்குகின்ற (பத) திருவடிகளில் தண்டையும், சிறிய பாதகிங்கிணியும்(புலம்பிட) ஒலிக்க (வரும் பவனி – பவனி வரும்) திருவுலா வருகின்ற மயில்வாகன மூர்த்தியே!

7. செந்தளிரை – முளைக்கும் பருவத்துச் (சந்தன மரத்து) மெல்லிய இலையை, முந்து – முற்படுகின்ற (படம் என்று) பாம்பின் படம் என்று, உளம் மருண்டு – உள்ளம் பயந்து (வெருவி), நிறை சந்தனவனம் – நிறைந்த சந்தனக் காட்டிற் (குலவு) உலவும் (மந்தி) குரங்கு, (குதிகொண்டு) குதி குதித்து ஓடி, (அயல்) பக்கத்தில் (செறிந்த) நெருங்கி இருந்த (கமுகின் புடை) கமுக மரம் (பாக்கு மரத்தின் புடை) இடத்திலே (பதுங்கிட) போய் ஒளித்துக் கொள்ள, (அந்த மந்தி குதித்தலால்) வளைந்து – தாழ்ந்து நிமிர்ந்த (அந்தக் கமுக மரத்தின்) மடல் - கிளை (சாடவே) தாக்கினதால் – மோதினதால்,

---

7, 8 (1) **சந்தன வனமும் சிறு சண்பக வனமும்** : 'சந்தனக் காவு சூழ்ந்து சண்பக மலர்ந்த சோலை'—சிந்தாமணி 1253.

சிறு சண்பகம் – புயவகுப்பு அடி 8-ன் குறிப்பைப் பார்க்க-பக்கம் 464.

[8]சிந்தியஅ ரம்பைபல வின்கனியில் வந்துவிழ
மென்கனியு டைந்தசுளை விண்டநறை கொண்டுசிறு
செண்பகவ னங்கள்வளர் தென்பழநி யம்பதியின்
முருகேசனே.

---

(2) இவ்வடிகளில் உள்ள வர்ணனை போன்றதை 'தாழை இளநீர் முதிய காய் கமுகின் வீழ, நிரைதாறு சிதறிவாழையுதிர் வீழ் கனிகள் ஊறிவயல் சேறு செயும்'— சம்பந்தர் 3-71-1 என வருமிடத்துக் காண்க.

**திருப்பழநி வகுப்பின் சுருக்க உரை**

1. எவ்விதமான வினையோ, பாவமோ — பிறப்போ, விஷயோ, துன்பமோ, பகையோ, பழியோ, குற்றமோ, நோயோ, இகழ்ச்சியோ, வசிய மந்திரங்களோ, மருந்துகளோ சற்றேனும் என்னைச் சேராமலிருக்கவும்; 2. இரவிலேயோ, தனிமையாயோ எந்த வழியிலும் போகவும், எந்த சபையிடத்திலும் பேசவும், எந்தமொழியோ இசையோ எனக்குக் கைவரவும், என்பெருமை சிதறுண்ணுமல் இருக்கவும்; 3. நான் உன்னை வந்தித்துக் கேட்ட வரத்தை நீ தர, நான் மகிழ்ச்சி பெறுவதுடன்; 4. யமன் வரும்பொழுது குமர! கந்த என நான் கூறத் தெளிவு தந்து, என் பயம் நீங்க அஞ்சலென வர வேணும்; 5-6. பறைகள் ஒலிக்க, திருவடியிற் தண்டை, கிங்கிணி ஒலிக்கப் பவனி வரும் மயில் வாகனனே! 7-8. செந்தளிரைப் பாம்பின் படமென்று அஞ்சின குரங்கு கமுகின் மடல்மேல் குதிகொள்ள, மடல் தாக்குதலால் வாழை பலாப்பழத்தின் மேல்விழ, உடைந்த பலாப்பழத்தின்சாற்றில் சிறு செண்பகம் வளரும் பழநி முருகனே!

## 25. திருப்பரங்கிரி வகுப்பு

தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன
தனதானனு

[1]சாதியுங்குலம் ஆவதுங்குடி ஆவதுஞ்சனம் ஆவதுங்கிளை
தாரமுந்திர பாலரும்பிர தானமும்பெரு காண்மையும்பெறு
தானமும்பகு மானமுஞ்சிவ ஞானமும்பல கோலமும்புரி
தொழிலோடுமே-

2தாழ்வகன்றிடு வாழ்வும்வெம்பிணி நோயும்அங்கதி லாதுரந்தனி
லாவதுந்தளர் சாவொழிந்திடு யோகமுஞ்சிவ பேறும் எந்தநி
தானமுஞ்செய்த ராசுகண்டது போல்வரும்பொது வாகுமென்றுன
திருதாளையே

8. சிந்திய - சிதறி விழுந்த (அரம்பை) வாழையானது பலாமரத்தின் பழத்தின் மேல் வந்து விழ, (அதன்) மென் கனி—மெதுவான பழம் (உடைந்த) உடைபட்ட சுளை (விண்ட) வெளியிட்ட (நறை கொண்டு) தேனைப் பருகி சிறு செண்பக மல்லிகைக் காடுகள் வளர்கின்ற (தென்) அழகிய பழநிப்பதியில் வீற்றிருக்கும் முருகேசனே!

## மொழிப்புரை

**1.** சாதி குலம் (ஆவதும்) என்பன, (குடி ஆவதும்) குடும்பம் — குடித்தனம் என்பது, (சனம் ஆவதும்) ஜனக்கட்டு என்பது, (கிளை) சுற்றத்தார் — (தாரம்) மனைவி (திரபாலர்) ஸ்திரம் (நிலை) என நம்புகின்ற மக்கள், (பிரதானம்) விசேஷ நிலை, (பெருகு ஆண்மை) ஓங்கி வளரும் ஆண்மைக் குணம் (மனோதிடம்), (பெறுதானம்) பெறுகின்ற தானப் பொருள்கள், (பகுமானம்) மிக்க பெருமை, சிவ ஞானம், (பல கோலம்) பல வகைத்தான அலங்காரங்கள் (புரி) இவை எல்லாம் ஏற்படுவதான தொழில்களுடனே — செய்கைகளுடன்,

2. (தாழ்வு அகன்றிடு) அவமானம் - குற்றம் இல்லாத வாழ்க்கையும், (வெம்பிணி நோயும் அங்கு அது இலாது) கொடிய பிணி நோய்கள் இல்லாமல் (உரம்தனில் ஆவதும்) (மனம், தேகம் இவை) வன்மையைப் பெற்றிருத்தலும், (தளர் சாவு ஒழிந்திடு) தளர்ச்சியும் சாவும் இல்லாததான (யோகமும்) பாக்கிய நிலையும், (சிவபேறும்) சிவனரது திருவருட்பேறும், (எந்த நிதானமும்) எல்லா விதமான சமநிலையைச் (செய்) காட்டித் தருகின்ற (தராசு கண்டது போல்) துலாக் கோலைக் கண்டது போன்ற நிலையும் (வரும்) வந்து கூடும். (பொது ஆகும்) அந்நிலை யாரும் பகிரங்கமாகப் பார்க்கக் கூடியதாய் இருக்கும் — என்று — என அறிந்து, உனது (இருதாளையே) இரண்டு திருவடிகளையே

---

[2] தராசு — இதைச் 'சமன் செய்து சீர் தூக்கும் கோல்' என்றார் திருவள்ளுவர் - 'சமன் செய்து சீர் தூக்கும் கோல் போல் அமைந்தொரு பாற் கோடாமை சான்றோர்க் கணி' —திருக்குறள் 118.

3 ஓதிநெஞ்சய ரார்தினந்திரி காலமுந்தொழு வோர் விரும்பிய
தேதும் அன்புட னேதருங்க்ருபை யர்கவந்தநு பூதிதந்துமு
னூல்கடந்திட வேபுரந்தருள் கூரும்இங்கித சேவைநம்பிய
படிகாணவே

4 ஒகைவந்தணை யாய்வணங்கிய ஏழைசிந்தையு ளேநினைந்திடு
வேளைவந்தினி தாய்வரந்தர வேணுமென்றக மேவருந்தியும்
ஓதினன்தினம் நான்விளம்புதல் நீஅறிந்தும் இதேன் இரங்கிலை
யறிவேன் ஐயா

5 ஆதியந்தம ஓதிவிந்துவு நாதமும்பிரி யாநிறைந்தவ
ரூபஇன்பசொ ரூபசுந்தர சோதிமின்பொலி நீதியம்பொரு
ளாகநின்றப ராபரன்கரு ணாலயன்புல வோர்இறைஞ்சிட
எதிர்காளிவர

---

3 நூல் கடந்த ஞானம் – இதைக் "கதறிய கலை கொடு சுட்டாத் தீர்பொருள்"; "வாசித்துக் காணொணாதது ...... கண்டு நாயேன் சேருமாறு மெய்ஞ்ஞானத்தைப் போதியாய்" எனவருமிடத்துக் காண்க. (திருப்புகழ் 1152, 343).

5–6 காளி வாதாட நடனமாடினது: திருப்புகழ் 678, பக்கம் 63 குறிப்பைப் பார்க்க. மகிடாசுரனைச் சங்கரித்த பின்பு பத்திர காளி கோபாவேசம் அடங்காமல் உலகத்தையே அழிக்கத் தொடங்க, அவள் செருக்கை அடக்கச் சிவபிரான் பலவகைய நடனம் செய்ய, அவளும் அங்ஙனமே ஆடிவரச், சிவபிரான் தனது காதிற் கழன்ற குண்டலம் தானே சேரும்படி ஊர்த்துவ பாதமாக நடனம் புரிந்தனர். காளி அங்ஙனம் தானும் காலைத் தூக்கி ஆட நாணங் கொண்டு அடங்கி நின்றாள்.

"தேன்புக்க தண்பணைசூழ் தில்லைசிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ"
—திருவாசகம்-சாழல் 14.

"அடிபெயர்த் தாடல்செய்ய அருகுறுங் காளிநோக்கி
ஒடிவுறு நாணின்மேவி ஒளிமுகம் இறைஞ்சிஒல்கி
வடிவுறு பாவைபோலச் செயலற மயங்கிநின்றாள்"
—திரு ஆலங்காட்டுப் புராணம்-நடனச் சருக்கம் 33.

"குழை நக்கும் பிஞ்ஞகன்தன் கூத்து"–திருவள்ளுவர்.

3. (ஓதின்) ஓதுவதால், (நெஞ்சு அயரார்) மனம் சோர் வடையாதவராய்த், தினந்தோறும், (திரிகாலமும்) காலை, உச்சி, மாலை ஆக மூன்று வேளைகளிலும் (தொழுவோர்) உன்னைப் பணிபவர்கள் (விரும்பியது ஏதும்) விரும்பின எல்லாப் பொருள்களையும் அன்புடனே தருகின்ற — கிருபையுடனே (நீ) வந்து (அநுபூதி) அனுபவஞானம் என்னும் செல்வத்தை (அவர்களுக்குத்) தந்து (முன்) பழைமையதான (நூல்) சாஸ்திரங்களை — கலைஞானங்களைக் (கடந்திடலே) கடந்த நிலையில் (அவர்கள்) கூடுமாறு (அவர்களைப்) (புரந்து) நீ காப்பாற்றி (அருள்கூரும்) அருள்மிக்கு நீ தருகின்ற (இங்கித சேவை) இனிமையான தரிசனத்தை (நான்) நம்பின வண்ணமே காணும்படி

4. (ஓகை) மகிழ்ச்சியுடனும் (வந்தனையாய்) நன்றி பாராட்டுடனும் (உன்னை) வணங்கின (இந்த) ஏழையாகிய என்னுடைய (சிந்தையுளே) மனதிலே, (உன்னை) நான் நினைக்கும் (வேளை) சமயத்தில் (நீ) வந்து (இனிதாய்) மகிழ்வுடன் வரம் தந்தருள வேண்டுமென்று (அகமே) உள்ளத்திலே நான் வருத்தப்பட்டு (ஓதினன்தினம்) தினந்தோறும் ஓதி வேண்டினேன்: அங்ஙனம் நான் (விளம்புதல்) முறையிடுவது நீ அறிந்தும்-நீ அறிந்திருந்தும்–(இது ஏன் இரங்கிலை) இவ்விஷயத்தில் நீ ஏன் இரக்கம் கொள்ளவில்லை! (அறிவேன் ஐயா) நீ இரங்க இல்லை என்பதை நான் அறிவேன், ஐயனே!

5. ஆதி-முதல், அந்தம்-முடிவு, (அனாதி) ஆதியின்மை, விந்துவும் (சுக்கிலம்) நாதமும் (சோணிதம்) பிரியா நிறைந்த — பிரியாமல் நிறைந்ததாய், அரூபம் இன்ப சொரூபம் — ஆக இரண்டு நிலையுங் கொண்ட (சுந்தர சோதி) அழகிய ஜோதியாகவும், (மின்பொலி) ஒலி விளங்கும் நீதியம் பொருள் — அம் நீதிப் பொருள் — அழகிய நீதிப் பொருளாகவும் நின்ற பராபர மூர்த்தி, (கருணாலயன்) கருணைக்கு இடமான மூர்த்தி, (புலவோர்) தேவர்கள் (இறைஞ்சிட) வணங்க, எதிர் — எதிர்த்து நின்ற காளி.

தோடலின்செக சேகிணங்கிண சேகுடண்டம டாடமண்டம
தாகிணங்கிண தோதிணங்கின தாதிமிந்திமி தோளனுந்தொனி
யார்சிலம்பொலி தாளமிஞ்சிட வேநடம்புரி பாதநம்பரன்
அருள்பாலனே ;

7மாதிரந்திசை யாகவந்திக டாசலந்திரை மாசலம்புவி
மாகமண்டக டாகமும்பொரின் மேருவின்தலை யேகுலுங்கிட
வாசமொன்றிய கால்பொருந்துகள் வான்நிரம்பிட வேவருங்கதிர்
வடிவேலனே-

8வானரங்கதிர் தாவுதண்டலை மேவுகொண்டலை யூடுநின்றலை
மா இனங்களி கூருநண்பொடு கோகநஞ்செறி வாவிசிந்திய
பால்அருந்திய பேர்சிறந்திரு மூவர்விஞ்சையர் சூழ்பரங்கிரி
முருகேசனே.

---

[7] மாதிரம் - யானை (பிங்கலம்); முருகன் வேல் பாயும் ஆற்றலை விளக்குகின்றது :

"மண்டல நிலத்தின் வைப்பும் வாரிதி ஏழும் மற்றைத்
தெண்டிரைக் கடலும், வானும், சேணுயர் பிறங்கல் முற்றும்
எண்டிசைப் புறமும் அண்டத் தேணியின் பரப்பும் ஈண்ட
ஒண்டழற் சிகையின் கற்றை உமிழ்ந்ததால் ஒருங்கு ஞாங்கர்"
(ஞாங்கர்=வேல்) —கந்தபுராணம் 4-13-485.

[8] (1) மா - வண்டு, மா இனம் - வண்டின் கூட்டம்.
"மாவுடைத்தார் மணி வண்ணன்"—புறப்பொருள் வெண்பா - 101. (2) "கோகனஞ் செறிவாவி — கங்கைச் சரவண வாவி - கோகனம் - செந்தாமரை.
'கமலம் பூத்த சரவணம்', 'சரவணத்தின் வெறி கமழ் கமலப்போது'—கந்தபுராணம் 1-11-90, 96.

(3) பால் அருந்திய (இரு மூவர்) அறுவர் சூழ் பரங்கிரி :
பராசர முநிவரின் புதல்வர் அறுவர் - தக்கன், அனந்தன், நந்தி, சதுர்முகன், பரிதிப்பாணி, மாலி என்பவர். கங்கையில் சரவண மடுவில் மீன்களை அலைத்து விளையாடுதலைக் கண்ட அவர்கள் தந்தை பராசரர் - நீங்கள் மீன்களாகுக எனச் சபித்தனர். நாங்கள் உய்யும் நாள் எப்போது என்று அவர்கள் கேட்கப் பராசரர் — "அறுமுகவேளுக்கு உமை அம்மை பால் ஊட்டுவள். அப்போது சரவணத்திற் சிந்துகின்ற அந்தப் பாலை நீங்கள் அருந்திப் பழைய உருவை அடைவீர்கள்" என்றார். அப்படியே உண்டு பழைய நிலையை அடைந்ததும் இந்த ஆறு பேரும் சிவபிரானைச் சரவணத்தில் வணங்க, அவர் நீங்கள் திருப்பரங்குன்றத்தில் தவஞ் செய்துகொண்டிருங்கள், முருகவேள் வந்து அருள்புரிவார் என்றனர்.

6. (வாதாடலின்) தன்னுடன் வாதாடின போது செகசே கிணங்கிண...தாதிமிந்திமிதோ என்னும் (தொனியார்) ஒலி நிறைந்த (சிலம்பொலி) சிலம்பின் ஒலியும், தாளமும் (மிஞ்சிடவே) மிகும்படி நடம்புரி – நடனம் புரிந்த (பாதம்) திருவடிகளை உடைய நமது பரன் - சிவபிரான் அருளிய (பாலனே) குழந்தையே!

7. (மாதிரம்) யானைகள் (திசை) எண் திசைகளிலும் (அந்தி) பொருந்தி, (கடாசலம்) மதசலம் விடவும், (திரைமாசலம்) கடலின் பெருநீரும், (புவி) உலகும், (மாகம்) விண்ணும், (அண்டகடாகம்) அண்டகோள ஒடும், (பொனின்மேரு) பொன் மலையாகிய மேருமலையுடன் (தலை) சிகரங்களும் குலுங்கிட—குலுங்கவும் கலங்கிக் குலுங்கவும் (வாசம் ஒன்றிய) மலர்களின் நறுமணம் பொருந்திய, கால் - காற்று (பொருந்துகள்) எழுப்பும் தூசி (வான் நிரம்பிட) ஆகாயத்தை அளாவி நிரம்பவும் வருகின்ற ஒளியும் கூர்மையும் கொண்ட வேலாயுதனே!

8. (வானரம்) குரங்குகள் (தாவு) தண்டலை (சோலைகளில், கதிர் தாவு தண்டலை - சூரிய ஒளி பரவும் சோலைகளில் (மேவு) பொருந்திய (கொண்டல் ஐயூடு) காற்றின் அழகிடையே, நின்று அலைகின்ற, (மா இனம்) வண்டின கூட்டம் (களி கூரும்) மகிழ்ச்சி மிக்க (நண்பொடு) ஆசையுடன் (கோகநம்) செந்தாமரைகளில், செறி–நெருங்கும், (வாவி) சரவணப் பொய்கையில் (சிந்திய) நீ உமையம்மையின் முலைப்பால் உண்டபொழுது சிந்தின (பால்) பாலை (அருந்திய) மீன்களாயிருந்து உண்ட (பேர் சிறந்த) கீர்த்தி மிக்க (பராசர முனிவர்களின் குமாரர்களாகிய (இரு மூவர்) தவத்தினர் ஆறுபேரும், விஞ்சையர் – வித்தியாதரர்களும் (சூழ்) சென்று வணங்கும் (பரங்கிரி) திருப்பரங்கிரி முருகேசனே!

---

அறுவரும் அங்ஙனமே பரங்குன்றில் தவம் புரிந்து இருந்தனர். முருகவேள் சூர சம்மாரத்துக்காக வருவதை உணர்ந்து அவரைக் கண்டு வணங்கி அவருடன் இருந்து சூர சம்மாரம் ஆன பின்பு திருப்பரங்குன்றில் இவர்கள் முருகன்பால் உபதேசம் பெற்று விளங்கினர். (கந்தபுராணம் I-13-32-34; I-25-24-40; 5-1-23-34. சுப்பிரமணிய பராக்ரமம் 71 'பராசர குமாரோபதேச மூர்த்தி'—பக்கம் 315.

## திருப்பரங்கிரி வகுப்பின் சுருக்க உரை

சாதி, குலம், குடி முதலிய இம்மைச் சிறப்புக்களும், சிவ ஞானமும், மேலான வாழ்வும், நோயின்மையும், சோர்வு, இறப்பு இவை இலாத பாக்கியமும், சிவபோகமும், சமநிலை யும் கூடும் என்று அறிந்து உன்னுடைய இரண்டு திருவடி களையே ஓதிப் புகழ்ந்து உள்ளம் சோர்வடையாமல் தொழு பவர் விரும்பியவற்றை அன்புடனே தந்து, அனுபவ ஞானத் தையும், கலைகடந்த ஞானத்தையும் அவர்களுக்கு நீ ஊட்டி அருள்புரியும் உனது தரிசனத்தை நான் நம்பின வண்ணமே கண்டு உனது திரு அருளைப் பெறவேண்டி உன்னைத் தியானிக் கும்போது நீ வந்து வரம் தரவேண்டும் என நான் முறையிடு வதை நீ அறிந்தும் இரங்குகின்றாயில்லை; நீ இரங்கவில்லை என்பதையும் நான் அறியேன், ஐயனே! பராபரன், கருணா லயன், காளியுடன் வாதாடி நடனம் செய்தவன் ஆகிய பரமனது குமரனே! வேலாயுதனே! பராசரர் குமாரர் அறுவ ரும், விஞ்சையரும் தொழுதுவணங்கும் பரங்கிரி முருகேசனே!

—:o:—

## திருவகுப்பு ஆராய்ச்சி

திருப்புகழ் போலச் சந்தப்பாவால் அமைந்த இந்நூல் முருகக் கடவுளின் சீர்பாதப் பெருமை, அடியார் பெருமை, வேலாயுதத்தின் பெருமை, உபதேசப் பெருமை, பிரசாதப் பெருமை, திருப்புகழ்ப் பெருமை, கடைக்கணக்கப் பெருமை, திருக்கரங்களின் சிறப்பு ஆதிய இவை தமை வகுத்து எடுத்து ஓதுவதால் நூலுக்குத் திருவகுப்பு என்னும் பெயர் வாய்ந்தது. "ஏழையி னிரட்டைவினை யாயதொ ருடற்சிறை, யிராமல் விடுவித்தருள் நியாயக் காரனும்" என வேளைக் காரன் வகுப்பிற் கூறிய திருவாக்கால் சுவாமிகள் மாநுட தேகம் நீந்துக் கிளிரூபம் பெற்ற பிறகு திருவகுப்புப் பாடல் களைப் பாடி யிருத்தல் வேண்டும் எனத் தோற்றுகின்றது. இதனுண்மை திருப்புகழின் முக்கிய கருத்தாக உள்ள பெண் ணாசை யறுதலைப் பற்றி இத் திருவகுப்பில் எங்குங் கூறி யில்லாமையானும், யம பயம் நீக்கிக் காத்தருள வேண்டும் எனத் திருப்புகழிற் பல இடத்தும் வேண்டினவாறு வேண் டாமல் வகுப்பிற் பெரும்பான்மைய முருகன் பெருமையையே

கூறி உலகத்தாருக்கு உபதேசங்களையே எடுத்தோதும் உயர்நிலைப் பாடல்களா யமைந்துள்ள காரணத்தாலும் நன்கு பெறப்படும். மேலும், வேடிச்சி காவலன் வகுப்பில், "உரைபெற வகுத்தருணை நகரினொரு பக்தனிடும் ஒளிவளர் திருப்புகழ் மதாணிக்ருபாகரனும்" என்பதில் தம்மைப் படர்க்கையிடத்திற் குறித்ததும், தாம் மாநுடப் பிறவியில் ஓதிய திருப்புகழைச் சுட்டியுள்ளதும் கவனிக்கற்பாலன.

2. திருப்புகழிலுங் கந்தரந்தாதியிலும் சம்பந்த மூர்த்தி சுவாமிகளை முருகக் கடவுளெனப் போற்றிப் புகழ்ந்தது போலக், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு என்னும் இம்மூன்று நூல்களில் அவ்வாறு எங்குங் கூறாததும், திருப்புகழிற் கூறிய "வயலூர்" வேறு நூல்களில் கூறப்படாததும் கவனிக்கற்பாலன.

3. சித்தாந்தம்—மலர் 10. இதழ் 2 (1937 – பிப்ரவரி) பக்கம் 71, 91 இந்த இதழில் திருவாளர் M. P. S. துரைசாமி முதலியார் அவர்கள் ஒரு பழைய ஏட்டுப் பிரதியில் உள்ளன என்று கீழ்க்காட்டிய பாடல்களை வெளியிட்டு அவை அருணகிரி நாதர் வாக்கு என்று ஊகிக்க வேண்டி இருக்கின்றது எனக் குறித்துள்ளார்.

(1) அருள் முருகாற்றுப் படை (2) பொருள் முருகாற்றுப்படை (3) அணி முருகாற்றுப் படை (4) வரு முருகாற்றுப்படை (5) சத்தி வகுப்பு (6) களவகுப்பு (7) சொரூப வகுப்பு (8) கரவகுப்பு; இவற்றுள் 5, 6 சந்தப்பாக்கள். மற்றவை ஆசிரியப்பாக்கள். சத்தி வகுப்பு சந்தப்பாவாக யாக்கப்பட்டு முதல் எட்டு அடிகளில் முருகனைக் கூறி பின் எட்டு அடிகளில் தேவியை வர்ணித்து அந்தத் தேவி முருகனைக் காக்கவே என முடிகின்றது; உதாரணம் —

அரவின் மணிகளும் அருண கிரணமும்
அழிய ஒளிவிடு தோற்றனே
* * *
விபுதர் புகழ்கர புரியில் வரும்அறு
முகனை அணிதரு நீற்றனே
* * *
மலையி னுடைமகள் வருநன் மரகத
வலிய மயிலவள் காக்கவே

இந்தப் பாடல் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழில் காப்புப் பருவத்தில் உள்ளது; ஓலையில் எழுதினோர் 'சத்தி வகுப்பு' என இதற்குப் பெயரிட்டனர் போலும். இவ்வாறு பல கலப்பு வாக்குகள் திருப்புகழ் ஏடுகளிற் கலந்துள்ளன; செந்திற் கலம்பகத்திலிருந்து கலந்தது ஒரு பாடல் என முன்னர்க் குறித்துள்ளோம். திருப்புகழ் 54 தொகுதி 1 – பக்கம் 138 பார்க்க.

## 4. விஷய சிற்றுராய்ச்சி (1-18 வகுப்புக்களுக்கு)

[முதல் 18 வகுப்புக்களே ஆராயப்பட்டுள. விஷயத்தை அடுத்துள்ள எண்களில் முதல் என் வகுப்பின் எண்; இரண்டாவது எண் அந்த வகுப்பின் அடியின் எண்; (ப) பக்கம்.]

### 1. அகத்தியர்

அகத்திய முநி 16-83
அகத்தியன் 12-9
வாமனமுநி 6-8
அகத்தியர் முருகவேளை வணங்குவது 12–9
முருகவேளிடம் முத்தமிழ் உபதேசிக்கப் பெற்றது 6–8, 16–83

### 2. அகப்பொருள்

வண்டு விடுதூது 15–16

### 3. அடுக்குத்தொடர் இரட்டைக்கிளவி

அஞ்சல் அஞ்சல் 15–1
எரியிட் டெரியிட்டு 8–10
எவர் எவர் 17–16
கோகோ 6–40
செய செய 14–2
மொகு மொகென 1-19

### 4. அரக்கர், அசுரர், அரசர்

இரணியன் 1-26, 2–1
இராவணன் 1-27, 6-53 (மலையை எடுத்தது)
கம்ஸன் (வஞ்சக மாமன்) 14-30
சண்பகமாறன் 350 (ப)
சிங்கமுகன் — விழியோரிரண் டொருபது சதநின் றெரி கண்டகன் 14-13
சூரன் 4-27, 6 40, 14–14, 15–23, 16-94
தாரகாசுரன் 1-28
நரகாசுரன் 332 (ப)
மாவலி 1–26

முரன் 332 (ப)
விருத்திராசுரன் 332 (ப)

5. அருணகிரிநாதர்

அருணகிரியாரின் திருப்புகழை முருகன் மதாணியாக அணிந்தது 12-6
ஆசுகவி பாடினது 1-23
இதயத்தில் முருகன் திருவடி மணப்பது 12-20
இரவு பகல் அற்ற இடத்தை முருகவேள் அருளியது 12-17
உடற்சிறையை ஒழித்தது 4-12, 5-6
கவிபாட வரம் பெற்றது 12-19
கவிமாலையை முருகர் ஏற்றுச் சூடிக் கொண்டது 1-24, 15-30
காட்டில் முருகரின் சகாயம் 4-24
கோபுரத்திலேயனுர் (அருணை) அருள்பாலித்தவர் 4-5
சக்ஷுஷ தீக்ஷை பெற்றது 4-4
தத்துவஞானம், வித்தை இவைதமைமுருகவேள் உபதேசித்த தலங்கள் 12-13
தமது பிறவியை முருகவேள் ஒழித்தது 6-9
தமது மனத்தை முருகவேள் கொண்டுள்ளது 15-15
தமது வர்தனை தீரப்பெற்றது 4-24
திருப்புகழ் பாடினது 12-6
துயர்கெடுத்து முருகன் தம்மை ஆண்டது 16-95
தேவி பக்தர் அருணகிரியார் 2-6
மவுன-ஞானத்தை முருகன் அளித்தது 12-18
முருகன் தமக்கு அருளிய உபதேசத்தின் பெருமை 5
(வழிநடக்கும்போது)வேலின் துணை பெற்றவர் 3-7, 11
வழியடிமைப் பத்தர் அருணகிரியார் 1-23, 12-19

6. அரும்பதங்கள். சொற்றொடர்கள்

அப்படி 6-15, 10-5, 12-19
அரியாசனம் 18-10
அலமருதல் 13-4
அவிதா 18-3
இந்த்ரசாலம் 16-32
உச்சாடனம் 16-32
உபநிடதம் 12-7
ஒக்கல் - இடுப்பு 6-48
கழிநெடில் 7-22
காகளம் 18-13
கீர்த்தி துரங்கம் 18-15
குப்பாயம் 9-8
சய சாரம் 18-11
செந்தலை 6-54
ஞான வேழம் 10-16
திருக்கையில் வழக்கம் 11
திறல் வாரணம் 18-12
தீட்சையெனும் குண்டல பூஷணம் 18-9
துணங்கை 9-13
துருத்தி (அரங்கு) 7-21
தேசாந்தரம் 14-3

பப்பாதி 9-9
பனிநீர் 15-15
பொருள் (கடவுள்) 11-14
ராவுத்தன் 12-22
வாங்குதல் (வேல்வாங்குதல்) 14-32

### 7. ஆதிசேடன்

ஆயிரம் முடி —
(1) உரகர் பதி அபிஷேகம் ஆயிரம் 1-11
(2) கடவுட்பணி சகஸ்ர பணபத்தி 11-3
(3) வெகுமுக மவுலி அனந்தன் 18-7
உலகங்களைத் தாங்குதல் :
அருணகணபண புயக சுடி கையின் அகில புவனமும் 6-1
சதுர்த்தச தலத்தையும் எடுத்த கடவுட்பணி 11-3

### 8. இந்திரன்

அக்கமொருகோடிபெறுவஜ்ர பாணி 6-13
அமரர் அரசன் 17-2
குலிசன் 3-14, 15-12
குலிசாயுதன் 6-13
தவள கசக்கடவுள் 3-2
தேவேந்திரர் 14-7
பாகசாதனன் 16-87
மகபதி 7-23, 14-32
மேகவாகனன் 16-87
வலாரி 15-28
வஜ்ரதரன் 12-5
வஜ்ரபாணி 6-13
இந்திரன் மலைகளின் சிறகை அரிந்தது 3-14
இந்திரனுக்குத் திருமாலின் உதவி 332 (ப)

### 9. உணவு வகைகள் 16 (62-72)

### 10. ஐராவதம்

ஈரிரு மருப்புடைய சோனை மதவெற்பு 4-15
சதுர் மருப்பு 11-13
நிறம் வெளுத்த இப அரசு 17-5
பனைக்கை முகபடக் கரட மதத் தவள கஜம் 3-2
மிகுமத வெண்கயம் 16-87
வஜ்ரதரனுடைய மதவெற்பு 12-5

### 11. கங்கை

ஆயிர முகத்து நதி 4-7
தலைச்சுர நதி 11-4
முகம் ஆயிரம் விளங்கிய தொராறு 6-6
வெகுமுக ககனநதி 1-9
வெகுமுக குலப்பழைய உதக மகள் 12-2

### 12. கணபதி

(1) தாதையை வலம் வந்தது 6-36
(2) அடல்மிகு கடதட விகடித மதகளிறு 2-15

கடவிகட தடபார மேரு 1-13
வாரணமுகன் 6-36
விக்னபதியானை 12-10
(3) உணவு :
அவல் 12-10
அவரை 12-10
எள் 12-10
ஒடியல் 1-13
கடலை 1-13
கனி 1-13
சர்க்கரை 12-10
துவரை 12-10
பயறு 1-13, 12-10
பொரி 1-13, 12-10

13. கிருஷ்ணலீலை

(தலைப்பு 33 'பாரதம்' பார்க்க)

கஞ்சன் வஞ்சத்தை வென்றது 14-30
கன்றுகள் மயங்கக் குழல் ஊதியது 14-28
குவலயாபீடம் என்னும் யானையை அட்டது 14-30
சகடு தடிந்தது 14-29
புள்ளின் வாயைக் கீண்டது 14-29
பேயை அட்டது 14-29
மகளிர் ஆடையை வாரிச் சென்றது 14-27
மருது இறுத்தது 14-29

14. குபேரன்

அனகை அரசன் 17-2
விமானம்-புட்பகம் 17-5

15. கொடையிற் சிறந்தன

கற்பகம் முதலிய பஞ்ச தருக்கள் 15-24
காமதேனு 15-24
சங்கநிதி 15-24
சிந்தாமணி 15-24
பதுமநிதி 15-24
மேகம் 15-24

16. சிவபிரான்

(1) சூடுவன :
அரவு 1-9, 14-17, 18-1
அறுகு 1-9
ஆத்தி 4-26
எருக்கு 3-9, 5-5
கங்கை 1-9, 16-73, 18-1
கொன்றை 1-9, 4-26, 5-5, 16-73, 18-1
நிலவு 1-9, 3-9, 4-26, 16-73, 18-8
மத்தம் 4-26, 6-25
(2) அணிவன :
அரவு-தோள்வளை 14-17
(3) இருப்பிடம் :
உபநிட முடிவு 18-3
(4) சடை — ப்ரவாள சடை 16-73
(5) திருநாமம் :
இறைவன் 16-61
சிவன் 16-4
பஞ்சாட்சரன் 18-1
பரமன் 12-14

விமலர் 16–73
வேணியர் 4–26
(6) பராக்ரமம் :
அரிபிரமருக்கு அரியர் 12-14
திரிபுரம் எடுத்தது 13–6, 16–83
மேருவை வளைத்தது 13–6
(7) வாகனம் :
இடபம் 18-3

## 17. சூரியன்

எழுபரி ரதத்திரவி 12–23
கதிர்களின் விளக்கம் 1 – 1, 292 (ப)

## 18. சேவல், சேவற்கொடி

குக்குட பதாகை 4–22
சக்ரவாளகிரியை இடித்தது 4–22
சேவலின் ஆற்றல் 4–22, 12-13
நகாயுத கோழி 15–14
வட அனலம் நேர் கொடிய குக்குடம் 6–38
வெயிலுமிழ் கொடி 16-91
வெற்றி முறை நெறி பறந்து விட்ட கோழி 17–11

## 19. தமிழ்

அதிமதுர செந்தமிழ் 17–3
அரியதொர் தமிழ் 15- 30
செந்தமிழ் 2–13
பழுத்தமுது தமிழ் 3-3
தமிழ்த்ரயம் 4–25, 6–8, 12–9

## 20. தலங்கள்

(முருகன் இருப்பிடங்கள்)

அருணை (திரு அண்ணுமலை) 4-6, 6-17, 12–12
ஆவினன்குடி 6-16
ஆறு நிலை (படைவீடு) 6–16
இலஞ்சி 6-17
கதிரை (கதிர்காமம்) 4–20
கற்பகாடவி 6 19, 12–12
செங்கோடு 6–17, 12–12
செந்தில் 2–15, 6–17
திரிகூடகிரி (குற்ருலம்) 4–20
திரிசிராமலை 4–11
திரு இடைக்கழி 4–11, 6–17, 7–31, 12–12
திரு ஏரகம் 4–11
திருத்தணி 1 - 29 (நீலகிரி), 3–16, 4-11, 6-18 (நீலோற்பலம்) 7-31, 9–30 (நீலோற்பலம்) 10 – 14 (நீலோற்பலம்) 11–15, 12–12, 14–24 (இந்திரநீலம்) 15–31, 16–14
திருப்பரங்குன்றம் 6–16
பழநி 4–11, 6–17
வள்ளிமலை (வர்ணணை) 6–23

(பிற இடங்கள்)

அடியார் மன பங்கயம் 6–17

அப்பாலேவான்பொருள் 6-14
ஆரணமுடிந்திடம் 6-16

## 21. தாளம்

ராகம் – தாளம் – ஆடல் என்னும் தலைப்பு (51) பார்க்க.

## 22. திருப்புகழ்

திருப்புகழ் 3-8, 6-78, 10-14, 11-16, 12-6, 16-96
திருப்புகழ் கற்றவர் சித்தரிற் ப்ரசித்தர் 16-96

## 23. திருமால்

[பாரதம், ராமாயணம், கிருஷ்ண லீலை (தலைப்பு 13, 33) பார்க்கவும்.]
ஆதிசேடனிற் பள்ளி 18-7
ஆலிலையிற் பள்ளி 18-7
இந்திரனுக்கு உதவினது 4-18
இரணியனை அட்டது 1-25
கடல் கடைந்து அமுதம் பகிர்ந்தது 6-27
கஜேந்திரனுக்கு உதவினது 1-25, 4-18
திரிவிக்ரம சொரூபம் 1-26
பஞ்சாயுதக் கடவுள் 6-27
மால் 18-7
மாவலியைச் சிறை யிட்டது 1-26
முகுந்தன் 6-27

## 24. தேவசேனை

இந்திரன் மகள் 6-10, 15-12
எழுதரிய கற்பதரு நிழலில் வளர் தத்தை 12-21
ஐராவத வாகனம் 4-15
குஞ்சரி 14-31
தேவசேனை வர்ணனை 6-10
யானை 15-12

## 25. தேவர்கள், தேவதைகள் முதலிய

அருக்கர் 7-3, 11-5
சசி (விழைவுதரும் பத சசி) 14-11
சயமகள் 9-22
சாகினிகள் 362 (ப), 6-46
டாகினிகள் 362 (ப), 6-46
பயிரவர் 7-2
பயிரவாதிகள் 6-68
பயிரவி 7-1, 9-2
மன்மதன்—
காமராசன் 10-8
மதனன் 12-31
மீனகேதனன் 16-75
மோகினிகள் 362 (ப), 6-46
யோகினிகள் 362 (ப), 6-46
வயிரவர் 7-21

## 26. தொகை வகைய

2. இரட்டை வினை 5-6
இருவினை 10-6, 18-16
3. சகத்ரயம் 5-1, 11-15
தமிழ்த்ரயம் 6-8, 12-9
திரிபுவனங்கள் 14-8
புரத்ரயம் 16-83
மதத்ரயம் 11-12
5. ஐந்தரு 14-10
ஐம்புலன் 15-26
பஞ்ச பூதங்கள் 5-10

6. அநுசமயம் 5–3, 6–37
ஆறுநிலை (படைவீடு) 6-16

7. எழுகடல் 10-4
எழுநிலம் 12-23
எழுபரி 12-23
எழுபார் 15–27
எழுபிறப்பு 7–29
எழுபுவி 17–1
எழுவகை நிருத்தம் 7–29

8. இபம் எட்டு 11–11
எண்கரி 14–5

9. நவரசம் 7–2

14. சதுர்த்தச தலம் 11–3

18. கணங்கள் 322 (ப)

27. நக்கீரர்

நக்கீரர் கற்கிமுகியி னின்றும் மீள்விக்கப் பட்டது 6–7, 12–22, 15–22

நக்கீரர் சரண் அடைந்தது 16-81

நக்கீரர் பாடிய திருமுரு காற்றுப்பாடலின் இனிமை 318 (ப)

நக்கீரரை வேல் மீட்டது 3–3

28. நகை வகைகள்

அரசிலை, அரைவடம், ஆரம், இலச்சினை, இலம்பகம், உடைமணி, ஓலை, கடகம், கண்டிகை, கம்பி, காஞ்சன மாலிகை, காலாழி, காறை, கிண்கிணி, கைச்சரி, குண் டலம், குழை, குறுங்குணி, கைக்காறை, கொக்கிகள், சங்கிலி, சந்துகாறை, சரப் பணி, சவடி, சாலகம், சுட்டி, சூடகம், தண்டை, திகிரி, தாலிநூல், தோள்வளை, நூ புரம், நெளி, பட்டிகை, பதக் கம், பாடகம், பிறை, பீலி, மகரநெடுங்குழை, மகரிகை, மதாணிமணி, மணிவயிரம், மயில் திருவாசிகை, மவுலி, முத்தாவளி, முத்தோலை, மேகலை, வடகம், வளை, வளையல், வாகுவலயம், வாரணி, வாளி, வெண்டை யம் 16 (38–47)

29. நாரதர் (முனி) 4-31

30. நூல்கள்

திருமுருகாற்றுப்படை 3–3

31. பச்சிலை வகைகள்

மருந்து வகையன 16 (7–28)
[சித்து வகுப்பின் அநுபந்தம் பார்க்க.]

32. பார்வதி

(1) ஆடை-ஆபரணம் :
அம்பொற் குண்டலம் 6–4
ஆசாம்பரை 14–18
நாகாங்கதை 14–21
பாசாங்குசை 14-18

(2) திருநாமம் முதலிய :
அசஞ்சலை 14–19
அதிகுண சுந்தரி 14-19
அதுலை 14–23
அந்தணி 14–22
அந்தரி 6–2, 14–19
அநுதிதை 14–18
அநுபவை 14–18
அபிநவை 1–31
அபிராம நாயகி 1–31
அம்பிகை 14–18

அம்பை 6-2, 14-18
அமலை 1-31, 6-2, 14-20
அலங்க்ருதை 14-20
அனகை 1-31, 14-19
ஆயி 6-6
ஆரியை 6-2
இந்திரை 2-7
இமய(மா)மயில் 1-10, 6-2
உமை(யாள்) 1-30, 15-31
ஏகாம்பரை 2-7
கந்தரி 2-9
கமலை 2-11
கவுரி 1-30, 2-11, 9-29
காலாந்தகி 2-9, 14-19
கிஞ்சுகப் பூவை 6-4
குன்றமான் 16-61
சடக்ஷரி 6-5
சாம்பவி 2-12, 6-4
சாமளை 4-13
சுந்தரி 6-2
சுமங்கலை 2-7
த்ரிசூலதரி 1-30
த்ரியம்பகி 6-2, 9-29, 14-18
த்ரியக்ஷி 6-5
திகம்பரி 9-29
திரிபுரை 1-31, 11-15
நிமலை 9-29
நிருமலி 9-29
நீலாஞ்சனி 2-9
பகவதி 1-30
பயிரவி 1-30, 2-11
பவதி 1-30
பார்ப்பதி 18-2
புநிதை 1-31
பூங்கொடி 6-4
பேதை 6-4
பைங்கிளி 2-12
பெருந்திரு 2-11
மணிக்குயில் 4-13
மதுபதி 1-31
மதுரவசனி 1-30
மலையிறைமடந்தை 17-15
மேலாந்திரு 14-19
யாமளை 4-13
யுவதி 1-30
வனஜை 1-31
வனிதை 1-31
விஜயை 1-31

(3) துதி, பராக்ரமம் முதலிய:

துதி 1 (30-31), 2 (1-12) 6 (1-6), 9-29, 14-(17-23)
அசுரர்களை அட்டது 2-4
அபிநய பங்குரை சங்கினி 14-20
ஆடை : கஞ்சுளி 2-11
காசா நிறம் 2-10
இரணியனை அட்டது 2-1
உலகைக் கரத்தல் (அழித்தல்) 12-1, 18-2
உலகை ஈன்றது-புரப்பது 2-12, 6-1, 11-15
எரிநிறம் 2-3
காலனை அட்டது 14-19
சக்ரதலத்தி 6-5
சடைச்சி 2-2
சடையில் பாம்பு 14-17
சிவபிரான் தலையில் உள்ள கொன்றை, பிறைதேவியின் பாதத்தில் மணப்பது 16-78
சிவபிரானது இடது பாகத்தினள் 14-17
செங்கழுநீர் மலர் (காதில்) 2-11

ஞானங்குரை 14-20
திருமாலின் தங்கை 6-3
நடனம் 2-2
நினையாதவர் உயிரை அவித்தல் 2-11
பலி ஓடு ஏந்துவது 2-1
பாம்பாபரணம் 2-10
பாம்பு வளையல் 14-21
மானங் கண்ணி 14-20
வேதத் தலைவி 6-3

### 33. பாரதம்

கண்ணபிரான் நூற்றுவரை மாள்வித்தது 14-26
கண்ணபிரான் பாண்டவர்க்குத் தேர் ஊர்ந்தது 14-26
கண்ணபிரான் பாரதப் போரை விளைவித்தவர் 14-25
கிருஷ்ணன் தூது 9-25
கிருஷ்ணபிரான் விசுவரூபம் 9-26-28
குருகுல பஞ்சவர் 9-25
பாரதப் போரில் யாவரும் மாண்டது 9-27
பாரதப்போரின் சேனைக் கணக்கு 9-27

### 34. பிரமன்

விஷ வசனம் பேசினது 14-9
அயன் 4-18
பிரமர் 12-14
வனஜமுநி 12-26
வனஜ ஜாதன் 6-32
விரிஞ்சன் 14-9, 16-89

### 35. பூதவேதாள கணங்கள், பேய்கள்

பூத கணங்கள் :

அசுரர் குடர் நிணங்களைக் காய்ச்சி உண்பது 9-24
அசுரர் பற்களை (அரிசிபோல) தீட்டிச் சமைத்தல் 9-5
அசுரர் முடிகளை அடுப்பாக அமைத்து ரத்தம் உலையாகவும், எயிறு அரிசியாகவும், கரம் அகப்பையாகவும், எலும்புவிறகாகவும் கொள்வது 7-5, 6, 8-9, 9-24
உதட்டில் விரலை வைத்துக் கொக்கரித்தல் 8-13
குழை ஓலைக்காக மேருமலையைப் பிடுங்குதல் 6-60
திருப்புகழ் முழக்குவது 6-78
தேர் உருளையைக் குழையாகக் கொள்வது 7-27
தேவிக்குப் படை 6-42
மயில் விருத்தம் மொழிதல் 7-30
முத்துக்களை (அரிசி போல) உலையிலிடுவது 8-7
யானையின் அடியை உரலாகக் கொள்வது 8-7
யானையின் எலும்பு கொண்டு மாமிசக் கடை ஒன்று கட்டு 6-57
யானையின் மருப்பை உலக்கையாகக் கொள்வது 8 (8-10)
யானையின் உரியை (தோலை) (குப்பாயம்) சட்டையாகக் கொள்வது 9-8

ரத்னமணிக் குவியல்களைக் கொண்டு ஒற்றை இரட்டை பிடித்துவிளையாடுவது 6-45
யோகினி, சாகினி, மோகினி, டாகினி 6–46

### 35 (a). பேய்கள்

பேய்கள் குதிரைஇறைச்சியை உண்பது 7–10
பேய்கள் முருகனைப் பூசிப்பது 7–16
பேய்கள் யானைகளை உண்பது 6-50
பேய்களுக்குக் குரக்கு வாதம் 7-14
பேய்கள் ரத்தம் குடித்தல் 7–15
பேய்களுக்குச் சுழல் விழி 7–18

### 36. போர்க்கள வர்ணனை

அலகை (பேய்களின்) செயல்கள் 7, 8, 9
பூத வேதாளங்களின் வர்ணனை 6 (41–80)
போர்க்களத்தில் கவந்தங்கள் குறைத்தலைகள் 3-15, 6-55, 77; 9–19

### 37. மந்திரங்கள்

ஐம்பத்தொன்று (எழுத்து) 6–14
ஆறெழுத்து 6–5, 14 (சடக்ஷரம்)
எட்டு எழுத்து 6–14
ஐந்தெழுத்து 6–14
சடக்ஷரம் 6–5
பஞ்சாட்சரம் 18-1
மவுன நிரக்ஷர மந்திரம் 15–7
மூன்றெழுத்து 6-14
வேலு மயிலும் என்றும் வாழி 16-1

### 38. மயில்

அதிகவித கலபகக மயில் 1–2
உரத்த தனிமயில் 5-15
உலகை வலம் வந்தது 15–4 (உலகை வலம்வரு பவுரி விநோதகலாப கோபமயில்)
திடமுடைச்சிறைமயில் 10-13
மயில் 3–16, 16-91,
மயில் விருத்தம் 7–30
மயிலைத் தியானிக்க வரும் பயன் 17
வாகைமயில் 6–36
வாசுகியை உதறுவது 4–21
விக்ரம கலாபச் சிகாவளம் 12–25

### 39. முக்கியமான விஷயங்கள்

உபநிடதம் 5–9
கடல் கடைந்தது 6–26, 11-4
கலைகள் இருக்கு முதலிய 5-7
கவந்தம்(குறைத்தலை) 324(ப)
சமயவாதம் ஒழிய 5-3
பச்சிலை வகைகள் 16
பத்தி வழிபாடே பெறும்படியான முத்தி 4-1
மவுன சிவஞான வேழத்தின் சிறப்பு 10
முருகவேளின் திருக்கைப் ப்ரசாதத்தின் ஆற்றல் 11

யான்–எனது அறல் 4–9
வடவாமுகாக்கினி 3-6, 6-38, 320 (ப), 360 (ப)

40. முருகர் திருநாமங்களைக் குறிக்கும் சொற்கள்

(சிறப்பும் பொதுவும்)

அசஞ்சலன் 16–93
அந்தணன் 14–24
அநகன் 15–32
அநுபவன் 1–32, 15–32
அநேகன் 15–32
அபயன் 1–32
அபிநவன் 2–14, 15-32
அமலன் 15–32
அமோகன் 15–32
அறுமுகத்தவன் 16–19
அறுமுகவன் 16–3
அறுமுக(ன்) 1–21, 2-14, 9–29
அனனியன் 15–32
அனுக்கிரகன் 12–28
ஏகன் 15–32
கந்தன் 15–31, 18–5
கமலாலயன் 18–2
கருணாகரன் 18–6
காங்கேயன் 6 – 34, 14–31, 16-94
கார்த்திகேயன் 18–5
குகன் 2–13, 3–16, 6–38
குமர(ன்) 1–21, 2–13
குருபதி 1–30
குருபரன் 18–5
சத்தியன் 16-92
சரவணபவன் 6–21
சுரபதி 18–5
சுவாமி 16–92
சேவகன் 12-28, 18-4
நித்தியன் 15–32
நிர்ப்பயன் 16–91
நிர்ப்பாவகன் 16–92
புங்கவன் 16–90
(முருக)ன் 1-21, 16-81
வடிவேலன் 1–29
வரதன் 12–28, 16–91
வரபதி 18–5
விசாகன் 4–30
வித்தகன் 16–92
வேலன் 16-96
வேள் 16–94

41. முருகனைக் குறிக்கும் சொற்றொடர்கள்

(சிறப்பும் பொதுவும்)

அகில கலாதரன் 16-76
அகில காரணன் 16-76
அடைந்தவர் தாபரன் 16-89
அதிமோகத் தபோதனன் 12–31
அபிநவ கந்தன் 16–89
அரிதிரு மருமகன் 16–19
அறுமுகப்பொருள் 11–14
ஆறிருகரதலநாதன் 16–6
குணபஞ்சரன் 16–81
குறத்தி திருவேளைக்காரன் 4–32

சூராந்தகன் 16-94
நிருத நிட்டூரன் 16-93
நிருதர் குல நிஷ்டூரன் 12-28
நிருதர் பயங்கரன் 16-93
நினைத்தது முடிப்பவன் 16-95
நிஷ்க்ரோதமுநி 16-81
பிரதாப வித்யாதரன் 16-92
புராண வேதாங்குரன் 16-81
மநுபவ சித்தன் 12-28
மலை கிழவன் 1-32
மலை விருத்தன் 3-16
மவுன குருபரன் 6-31
மவுன சுகா தனன் 16-76
மனோதுக்கபேதனன் 12-28
முழுச்சேவகன் 13-8, 16-80
மேவார்கள் கண்டன் 16-86
மோன ஞானங்குரன் 16-81
வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும் யாசகன் 12-30
விகிர்தி வேதனன் 16-76
விபுதசிகாமணி 16-88
விபுததாரகன் 16-88
விபுத திவாகரன் 16-88
விபுத தேசிகன் 16-88
விளக்கொளி 16-84
வினை அறுப்பவர் 6-28
வினைப்பகை அறுப்பவன் 16-95
வேடிக்கை வேடுவன் 12-29
வேடிச்சி காவலன் 12-32
வேதமூர்த்தி 16-84

## 42. முருகனைப்பற்றிய விஷயங்கள்

அக்கினியால் ஏந்தப்பட்டவன் 12-8
அகத்தியர் தொழுவது 12-9
அகத்தியருக்கு முத்தமிழ் போதித்தது 6-8, 12-9, 16-83
அசுரரை அட்டது 4-29, 16-86
அடியவருடைய கவி மாலையைச் சூடுதல் 4-7
அணுவுக்கு அணுவு முருகன் 4-23
அதிமதுர சித்ரகவி நிருபன் 12-9
அமரசேனைக்கு நாயகன் 12-15
அரத்த ஆடையன் 6-19
அரி, பிரமன், பரமன் இவர்களுக்கு மறைமுடிவை உபதேசித்தது 12-14
அறுவர் முலை உண்டது 1-21, 17-14
இந்திரலோகத்தைப் புரந்தவர் 16-85, 87
இந்திர ராஜாங்கமதாராய்ந்தவன் 14-24
இந்திரனுக்கு அரசளித்தது 15-28
உணர்வுக்கு உணர்வு முருகன் 4-23
உபதேசத்தின் சிறப்பு 5-10
உயிர்க்கு உயிர் முருகன் 4-23
உருத்திர ஜன்மலீலை 4-25

உலகை வலம் வந்தது (மயில் மேல்) 1-14, 4-3, 6 36, 12-25
ஐராவதத்தை அட்டது 12-5
கங்கை பிரியப்படுதல் 15-31
கங்கையின் புதல்வன் 4-7, 6-6, 12-2
கடலை அட்டது 1-29, 2-13, 4-27, 6-40, 13-8, 14-4, 16-79
கணங்கள் பூசிப்பது 12-7
கணபதியுடன் (பழத்துக்காக) போட்டியில் (உலகை வலம் வந்தது) 1-14, 4-2, 6-36
கணபதியைப் பூசிப்பவர் நெஞ்சில் முருகவேள் உறைவார் 2-15
கருணை ஓடக்காரன் 4-10
கார்த்திகைக் குமாரன் 4-28, 12-3, 16-84
கார்த்திகை ப்ரியப்படுதல் 15-31
கார்த்திகை மாதரிடம் பால் உண்டது 1-21, 6-20, 17-14
கிரௌஞ்சத்தை அட்டது 1-28, 4-27, 12-27, 13-8, 14-5, 16-80, 17-15
குக்குட பதாகைக்காரன் 4-22
குரவைக் கூத்தை மகிழ்பவர் 12-29
குறத்தி வேளைக்காரன் 4-32
கொடைக்கடல் 16-75
கொடைச்சிறப்பு 15-24
சகலகலா வல்லவன் 16-76
சங்கப் பலகையில் வீற்றிருத்தல் 4-25
சரவண (பவன்-சரவண) மடுவில் வந்தவன் 4-17, 6-21, 11-14, 16-78, 18-5
சிங்கமுகனை அட்டது 14-13
சிவந்த ஆடையன் 6-19
சிவபிரான் போற்றுவது 4-26
சிவபிரானுக்கு உபதேசித்த குரு 5-5, 6-25, 12-14
சூரனை அட்டது 4-27, 14-14, 15-23, 16-94
செந்தமிழ் நூலோன் 2-13, 12-9
சேவற் கொடியோன் 4-22, 12-23
தாமரைமலரில் வீற்றிருந்தது 18-2
தாரகனை அட்டது 1-28, 16-90
திருப்புகழின் சிறந்பு 3-8, 11-16
தேவசேனாபதி 12-15
தேவசேனை கணவன் 6-13
தேவசேனையிடம் காதல் 4-15
தேவர் உலகைப் புரந்தது 1-11, 4-5, 14 (10-12), 15-28, 16-85
தேவர் சிறை மீட்டது 14-7
நடனம் பெரியம்பலத்தில் 17-10
நினைத்தவை முடித்தருள் க்ருபைக் கடல் 11-14
நினைப்பவைமுடிப்பவன் 6-28

பகையாம் மாந்தர்கள் அந்தகன் 2–14
பார்வதிக்குப் பிரியமானவன் 9–29
பார்வதி குமாரன் 1–32, 4–13, 6–6, 14–23, 15–31, 17-15, 18-2
பார்வதியை 'ஆத்தேஆத்தே' என அழைப்பது 330 (ப)
பிரமனைக் கோபித்தது, விலங்கிட்டது 4–18, 6-32, 12–26, 14–9, 16-89
மஞ்சனம்-அன்பர்விழி அருவி 1-22
மயில்வாகனன் 3-16, 12–4, (சதபத்ரநவபீடம்) 12-25, 16–91
மன்மதனினும் அழகன் 16–75
மனோலய பஞ்சரன் 6–10
முகமாயக்காரன் 4-17
முத்தமிழ் விநோதன் 12–9
முத்தியளிப்பவர் 4–28, 6–35
முருகன் அடியார்களைத் தேவர் சங்கம் வணங்கும் 2–16
முருகன் பெருமை 12 – 16, 24, 28
முருகனைத் தியானிப்பதால் வரும் பயன்கள் 17
மேருவை அட்டது 2-13, 12-27, 16-90
மேனையின் பேரன் 4-28
யாக காவலர் 4–14, 16-85
யாக சபாபதி 12–24
வள்ளி (பாதத்தை) வணங்குதல் 6-24, 18–6
வள்ளியிடம் கிழவேடம் பூண்டு வந்தது 6–29
வள்ளியிடம் முருகன் யாசித்தல் 12-30
வள்ளியின்பொருட்டு முருகர் மடல் எழுதினது 12-31
வள்ளியைத் தழுவி மார்பில் வலி குடி கொண்டவன் 17–13
வள்ளி வாழ்ந்த புனத்தில் (உரு மாறி - வேடனாய்) உழன்றது 4–31, 1–16
வாழி என்பவர்க்கு உதவுவது 4–19
வினைப்பகை செகுப்பவன் 11–13
வெகு ரூபக்காரன் 4–30
வேதியர் வெறுக்கை 4-30
வேலின் பெருமை 3, 14
வேலை (வாங்கினது) செலுத்தினது 6-34
வேள்வி காவலர் — யாகம் பார்க்க.

## 43. முருகவேளின் ஆபரணம், அணிவன

கடகம் 12–21
கிங்கிணி 18–8
குண்டலங்கள் 15–18
பதகுூடிகை 18–8
அகில், பனிநீர், புழுகு, ம்ருகமதம், கற்பூரம், குங்குமம்-கலவை 15–15

## 44. முருகவேளின் திருப்புயங்கள் (திருக்கரங்களின் செய்கை முதலிய)

திருப்புயம் :

கடக அதிபார புயாசலம் 12–21

ப்ரசண்ட வாகைப் புயங்கள் 15–32

திருப்புயங்களின் செய்கை முதலிய :

புய வகுப்பு (15) சுருக்க உரை பார்க்கவும்.

45. முருகவேளின் திருவடி

திருவடிச் சிறப்பு 1, 291 (ப).

திருவடியின் இருப்பிடம் :

அருணகிரியாரின் இதயம் 12-20

இமையவர் முடித்தொகை 12–20

வனசரர் பொருப்பு 12–20

பார்வதி திருமார்பில் விளையாடுதல் 1–10

யமனை ஓட்டிவிடும் 1–17

வேதத்தின் முதல், நடு, முடிவில் விளங்குவது 1–32

46. முருகவேளின் படை, கொடி. வாகனம் முதலிய

அனலெழுதுவசம் 15–27

சேவற்கொடி 4-22, 12–23

பரிசைப்படை 15-6

பூத, பிசாசுகளை வெருட்டும் கண்டாமணி 15–10

மயில்வாகனம் 3-16, 4–21, 12–4, 25, 16-91

47. முருகவேளுக்கு உரிய மலர்கள், மாலைகள்

அருணகிரியாரின் பாமாலை 1-24, 15-20

கடம்பு 4-16, 6–22, 15-12, 15–29 (செங்கடம்பு), 17-9

கதம்பம் 18–6

குரவு 1–19, 15-29

கூதளம் 4–16, 6-30, 15–12

கோடல் 15–29

சிறு சண்பகம் 15–8

செங்கழுநீர் மலர் 18–5

தளவு (முல்லை) 1–19, 15- 29

தீவரம் (குவளை) 1–19

துளவு 15-29

வகுளம் (மகிழ்) 1–19, 15–29

விளவு, விளவின்குறு 1–19, 15–29

வெட்சி (செச்சை) 6–15, 15–29, 16–80

48. முநிவர் - சித்தர்

முநி கணம் 18-15

முநிவர், சித்தர் 15-1

முநிவர் வண்டாக வழிபடுதல் 1–24 (குறிப்புரை)

வேள்வி முநிவரை முருகர் புரந்தது 16–85

49. யமன் - யமதுதர்

இருள்படு சொருபம் 13–1

கயிறு 1-17

காலன் – நமன் – யமன் 1–17, 3–9, 12-18

காலனது தூதர் (யமபடர்) 2–6, 13-1, 17–7, 15–25
நமன் 3–9
பிறை எயிறு 1–7, 2–6, 13–1
முது வடவை விழி 1–17
யமபடர் பிடரி பிடித்துக் கொண்டு போதல் 13-2
யமபுரிக்கு போம் வழியில் தண்டனே 13-7

## 50. ரசவாதம்

ரசவாத வழிகள் 16 30-60
வாதவழிகள்அனேகம்(16-30)

## 51. ராக வகைகள் - தாள வகைகள் - ஆடல் முதலிய

(1) எழுவகை நிருத்தம் 7–29
(2) இசை வகைகள் :
கயிசிகை 6–71, இதத்த கயிசிகை 7–29, இனிய கயிசிகை 15–17
கவுட பயிரவி 6–71
கவுளி 6–71
குச்சரி 15–17
குறிஞ்சி(ராஞ்சிகுறிஞ்சி) 6–74
சிகண்டிகை 6–70
சீகாமரம் 6–70
தனுசி (தனதனுசி) 6-72, 15–17
தேசி 6–74, 15–17
பஞ்சமி (விதம்படு பஞ்சமி) 6–72
பஞ்சுரம் 15-17
படமஞ்சரி (அரும்பட மஞ்சரி) 6-72
பயிரவி (கவுட பயிரவி) 6–71, 15–17
இனித்த பயிரவி 7–29
பவுளி 6-71
மலகரி 6–71
லளிதை 6–71
வராடி (கனவராடி) 6-72
வராளி – கவுடவராளி 15–17, (காலமாருத வராளி) 6–70
விபஞ்சி(கை) 6–71 (மான விபஞ்சிகை)
(3) தாளங்கள் :
உற்கடிதம், சச்சபுடம், சட்பிதா புத்திரிகம், சாசபுடம் – 6-63
சம்பத் (வேட்டம்) 6–64
பஞ்சகத் தாளம் 6–64

## 52. ராமாயணம்

ராவணசம்மாரம் 1–27, 13-5

## 53. வள்ளியம்மை

அழகிய குறமகள் 2–14
ஓவியம் போன்றவள் 4-32
குறத்திரு 8-15
குறமகள் 5–16
குறமின் 14–24
தழை உடை 5-16, 11-13, 12–30
தினைப்புன மங்கை 15-13

மயிலென இருக்கும் ஒரு வேடிச்சி 12–32
மலை மருவு பைம்புனத்தி 17-13
மறச்சிறுமி 3-1
மன்றற் பைம்புனத்தாள் 6–24
யானைக்குப் பயந்தது 14–23
வள்ளியை வன தேவதைகள் வணங்குவது 13–7
வள்ளி வர்ணனை 16 (77-78)
வனசரர் கொடிச்சி 12–30
வனசரி 18-6
வேடர் விமலை 15–13

## 54. வாசுகி

கடல் கடையப்பட்டபோது விஷம் கக்கியது 6–26
மயில் எடுத்து உதறுவது 4–21

## 55. வாத்தியங்கள்

இடக்கை 6–75, 7–28
உடுக்கை 6–75, 7–28
கரடி(கை) 6–77
களப்பறை 6–75
குடபஞ்சமுகி 6-75
குடமுழ 7-28
கொட்டியம் 6-75
கொடுகொட்டி 8–3
சந்த்ரவளை 6-75
சிறுபறை 9-22
தடாரி 6–75
தமருகம் 2–2
திமிலை 6–75, 9–22
துடி 6-75, 7–28, 8–3
பறை 6–75, 7-28
பெரும்பறை 9–22
மத்தளி 6–75
முரசு 6–75
வீணை 15-17

## 56. வேல்

அரக்கரை அடுதல் 3 (12, 15)
இந்திரனை மீட்டது 3–2
உணவு அளிக்கும் 3-4, 9
கடல் நீரில் திளைத்தல் 3-13
சிவபிரானது திருவடிக்கு நிகர் 3-9
திருப்புகழ் படிப்பவருக்கு உதவுவது 3-8
துங்க விட்டேறு 6-34
நக்கீரரை மீட்டது 3-3
பிரமனுக்கு விலங்கிட்டது 14–9
பேய்களுக்கு உணவு அளிக்கும் 3-4
வள்ளி விழிக்கு நிகர் 3–1
வாளோங்கிய வேல் 14-32
வென்றிதங்கு துங்க வேல் 15–5
வென்றி வேல் 16-80
வேல் வர்ணணை 6–39
வேலின் ஆற்றல் 3, 14, 15–5, 17-12
வேலின் ஒளி 3-6, 6–39
வேலின் வேகம் 3–14

வேலுமயிலும் என்றும் வாழி 16-1
வேலைத்தியானிப்பதால்வரும் பயன் 17

## 57. ஜீவராசிகள்

அரி 1-15
ஆமை 16-65
இரலை 1-15
உடும்பு 16-65
உழுவை 16-34
உழை 1-15
எருழி 1-15
ஓரி 16-34
கடமை 1-15
கயல் 16-67
கரடி 1-15
கரி 1-15
கழுகு 17-12
காராம்பசு 16-34
கிரி 16-34
கூகை 6-54
களிறு 16-67
செந்தலை (விரியன்) 6-54
தண்டை 16-65
துருவை 16-65
தேவாங்கு 16-34
பன்றி 16-65
பாம்பு 6-54
புலி 1-15
மரை 1-15
முயல் 16-65
வருடை 1-15
வாளை 16-68

—:o:—



பத்தாம் திருமுறை

அருணகிரிநாத ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# கந்தரநுபூதி

—:o:—

[ அந்.-அந்வயம்; பொ-உ.-பொழிப்புரை; சு-உ.-சுருக்க உரை; கு-உ.-குறிப்புரை.]

## காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக் கரவானை பதம் பணிவாம்.

(பொ-உ.) நெஞ்சம் எனப்படும் (கனகல்லும்) கனத்த-இளகாத-கல்லும் நெகிழ்ந்து-இளகி, உருகும்படி (தஞ்சத்து) அபயம் என்று தன்னைச் சரண் அடைந்தவர்க்கு (அருள்) அருள்பாலிக்கின்ற (சண்முகனுக்கு) சண்முகப்பெருமானுக்கு (உரியதாய) (இயல்சேர்) இயற்றமிழின்பாற்பட்ட (அல்லது உழுவல் அன்பாற் பிறக்கும் (செஞ்சொற் புனை) செவ்விய சொல் மலரால் புனையப்பட்ட-அலங்கரிக்கப்பட்ட (மாலை) இப் பாமாலையானது (சிறந்திடவே) சிறப்புடன் (என்றும் பூவுலகில்) விளங்கவேண்டிப் (பஞ்சக் கர) ஐந்து திருக் கரங்களை உடைய (ஆனை) விநாயகமூர்த்தியின் (பதம்) திருவடிகளைப் (பணிவாம்) பணிந்து போற்றுவோம்.

(சு-உ.) சண்முகப்பெருமான் அணியும்படி யாக்கப்படும் இப் பாமாலை (உலகிற்) சிறந்து விளங்கவேண்டி விநாயகப் பெருமானை பணிவோமாக.

(கு-உ.) நெஞ்சத்தைக் கனத்த கல்லுக்கு ஒப்பிடுவர்; கல் நெகிழ வேண்டுமெனின் இறைவன் திருவருள் வேண்டும்; அதனால்தான் —

" கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்டு
என்னை நின்கழற்கு அன்ப னாக்கினாய் "

" கல் நார் உரித்தென்னை யாண்டுகொண்டான் "
—திருவாசகம் 5-94, 13-9;

" கல்நார் உரித்த என் மன்னா " — திருப்புகழ் 908
—எனக் கடவுளை வியந்தனர்.

முருகன் மலைகளில் வாசம் செய்பவன். மலை – கல்; என் நெஞ்சம் ஒரு கல்; அதனால்தானோ முருகன் என் நெஞ்சத்தை யும் இடமாகக் கொண்டான்! என அருமையாக வினவிப் பாடியுள்ளார் — சீகாளத்திப் புராணமுடையார்.

" வளர்செழுங் குருதிச் சூட்டு வாரணம் வலனுயர்த்த
ஒளிகெழு பரிதி வைவேல் ஒருபெருங் கருணைமூர்த்தி
களிமகிழ் சிறந்து தான்வாழ் கற்களின் ஒருகல் என்றோ
அளியஎன் மனத்தினுள்ளும் அகன்றிலன் இருக்கு
மன்னோ "

மஹா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் திரு வாட்போக்கிக் கலம்பகத்தில் – 'இறைவனே! உன்னை உமை தழுவினதால் உன் முன் புறத்தில் உனக்குத் தழும்பு ஏற்பட் டது; தமிழரசன் பாண்டியன் பிரம்பு கொண்டு உன் முதுகில் அடித்ததால் (மண் சுமத்த திருவிளையாடலில்) உன் பின் புறத் தில் உனக்குத தழும்பு ஏற்பட்டது; தவஞ்செய்து தொழுத அருச்சுனன் வில் கொண்டு உன் தலையில் அடித்ததால் உன் (தலையின்) மேலே ஒரு தழும்பு ஏற்பட்டது; உன் கீழ்ப்புறத்தில் தழும்பு இல்லை என்ற குறை நீங்கிவிடும் — நீ என் மனம் (நெஞ்சு) என்னும் கல்லின்மீது வீற்றிருப்பாயானால்' எனச் சாதுர்யமாகத் —

" தழுவுமையாள் முன்னும் தமிழிறையாற் பின்னும்
தொழும் இறையால் மேலும் சுவடு – கெழுமுவ ; கீழ்
இன்றால் எனுங்குறைபோம் எனமனஞ்சேர்; வாட்போக்கி
அன்றால் அமர்ந்தாய் அடி " (7) — எனப் பாடியுள்ளார்.

(2) தஞ்சத்தருள் சண்முகன் — தன்னைச் சரண் அடைந்தவர்க்கு அருள்பவன் —

" எவ்வுயிர்க்கும் தஞ்சமென நிற்கும் தனிப் பொருளாய் " — கந்தர் கலிவெண்பா 6.

" அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி " — திருவாசகம் 4-161.

" தஞ்சமாய தலைவன் " — சம்பந்தர் 2-59-10.

(3) பஞ்சக்கர ஆனை - பஞ்சக் கரம் - பஞ்ச அக்ஷரம் — ஐந்து எழுத்து. பஞ்சாக்ஷரத்தின் மூலப் பொருளானவன் எனலுமாம். பிரணவமே பஞ்சாக்ஷரம். ' ஓங்காரமாம் ஐந்தெழுத்தால் புவனத்தை உண்டு பண்ணிப் பாங்காய் நடத்தும் பொருளே அகண்ட பரசிவமே ' — தாயுமானவர் பாயப்புலி-9.

விநாயகமூர்த்தி பிரணவ சொரூபர் — ' அகரமென அறிவாகி, உலகம் எங்கும் அமர்ந்து அகர, உகர, மகரங்கள் தம்மாற் பகருமொரு முதலாகி " — விநாயக புராணம்.

(4) தமது வழிபடு கடவுளாம் முருகவேளுக்கு உரிய இந் நூல் சிறக்கும்பொருட்டே விநாயகரை வணங்குவதாக இச் செய்யுள் கூறுகின்றது. தன் நாயகன் பொருட்டன்றிப் பிறரை வணங்காப் பத்தினிப் பெண் போல, முருகன் பொருட்டன்றி வேறு மூர்த்திகளை நேரே வழிபடார் அருணகிரியார் என்பது இதனாலும் இவர் அருளிய திருப்புகழாதிய பிற நூல்களாலும் விளங்கும்.

1. ' மயில், வேல், சேவல் ' எனப் பாடும் பணிபெற

ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியானை சகோதரனே.

(அந்.) தேடும் கயா மா முகனை ......... சகோதரனே ! ஆடும்பரி ...... அருள்வாய்.

(பொ-உ.) தேடும்-போரைத் தேடிவந்த(கய மா முகனை) யானையின் பெருத்த முகத்தைக் கொண்டிருந்த கஜமுகா சுரனைச் (செருவில்) போரில் (சாடும்) மோதி அடக்கி ஒடுக்கின (தனி) ஒப்பற்ற (யானை) கணபதியின் (சகோதரனே) தம்பியே! (ஆடும்பரி) ஓங்கார உருவில் தனது தோகையை விரித்து ஆடும் மயில் ஆன (உன் வாகனமாம் மயிலைத் துதித்தும்), வேல் என – உன் திருக்கரத்துப் படையாம் வேலாயுதத்தைத் துதித்தும், சேவல் என– உன் கொடியாம் சேவலைத் துதித்தும் (பாடும்பணியே) பாடுகின்ற தொண்டே (பணியா) பணியாக - நான் மேற்கொள்ளும் தொண்டு ஆகும்படி(அருள்வாய்) நீ திருவருள் பாலிப்பாயாக.

(சு–உ.) கணபதியின் தம்பியே! உனது மயில், வேல், சேவலைப் பாடும் தொண்டினையே நான் கொள்ள அருள்வாயாக.

(கு-உ.) (1) ஆடும்பரி – மயில் தோகையை விரித்தாடும் போது ஓங்கார ரூபம் வெளிப்படையாம் – இதனுல் 'ஆன தனி மந்த்ர ரூபநிலை கொண்டது ஆடு மயில்' என்ருர் (திருப்புகழில் 444, பக்கம் 614).

(2) வேலின் சிறப்பு உலகறிந்ததாதலின் அடைமொழியின்றிக கூறி அதன் ஏற்றத்தை விளக்கினர். 'யாரே அழகுக் கழகு செய்வார்'. திருக்கோவையார் முதற் செய்யுளில் 'குரு வளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள்' என்னும் பகுதியின் உரையில் 'கோங்கிற்கு அடைகொடுக்கக் கடவதன்ருே எனில், அடை கொடுப்பிற் பிற உறுப்புக்களுடன் இதனையும் ஒப்பித்த தாம். ஆகலான் இதற்கு அடை கொடாமையே முலைக்கு ஏற்றத்தை விளக்கி நின்றது ...... திருக்கோயில், திருவாயில், திரு அலகு என்று, அவற்றிற்கு நாயகராகிய நாயனுரைத் திரு நாயனுர் என்னுதது போல எனக் கொள்க' — என்ருர் உரையாசிரியர்.

வேலின் சிறப்பு — 'தனிவேற் பெம்மான் கந்தனே என்ன நின்னைக் கண்டுளக் கவலை நீத்தேம்' — என வேல் கந்தனுக்கு நிகர் என வீரவாகுதேவர் துதிக்கின்றதாற் பெறப்படும் (கந்தபுராணம் 4-6-212); வேல்வகுப்பு, வேல்வாங்கு வகுப்பையும் பார்க்க. தொகுதி 5 - அநுபந்தம் பக்கம் 39–ம் பார்க்க.

வேல், மயில், சேவலைப் பாட அருள்புரி எனப் பிற இடத்தும் அருணகிரியார் வேண்டியுள்ளார் —

"வேல் பாடாதே ... நாயேன் வாணுள் வீணே போகத் தகுமோதான்"—திருப்புகழ் 820.

"வேலுஞ் செஞ்சேவலும் செந்தமிழாற் பகர் ஆர்வம் ஈ"—கந்தர் அலங்காரம் 52;

"குக்குடமும் மயிலும் உட்பரிவாலே படிய மனதில் வைத்து"—திருப்புகழ் 675.

(3) கந்தரநுபூதியை 'மந்த்ர நூல்' என்பர். அநுபூதி 51 பாடல்களில் 25 பாடலில் **வேல்** வெளிப்படையாகக் கூறப் பட்டுள்ளது. வேல்-மந்த்ரவேல் - திருப்புகழில் 'மந்திர வேல்' என்றார் 787. 'புட்பெயர்க் குன்றமும் எழுவகைப் பொருப்பு மேல் கடற் கவிழ்முகப் பொரியுடன் மாவும், நெடுங்கடற் பரப் பும் அடுந்தொழில் அரக்கரும், என்னுளத் திருளும் இடைபுகுந் துடைத்த **மந்திரத் திருவேல்**' - என்றார் (கல்லாடம் 70). மந்த்ர வேல் நிரம்பக் கூறப்பட்ட காரணத்தால் அநுபூதி - மந்த்ர நூலாயிற்று - பின்னும் மந்திர நூல் என்பதற்கு ஏற்ப இம் முதற் செய்யுளின் முதல் இரண்டு அடிகளில் 'வேலுமயிலும் துணை' என்னும் திருமந்திரம் மறைபொருளாயிருக்கின்றது. சேவல் என்னும் சொல்லுக்குத் 'துணை, காவல்' எனப் பொருள் உண்டு. 'உயிர்ச் சேவலுக்கே' எனவரும் கந்த ரந்தாதி (15) யையும், "இறடியஞ் சேவற்கு" எனவரும் கல்லாடத்தையும் (85) காண்க (தொகுதி 6, பக்கம் 162). 'பாடும்பணி' என்பது உருப்போடும் பணி – ஜெபிக்கும் பணி; பாடுதல் – உருப்போட்டுச் சொல்லுதல் — 'அறம் பாடிற்றே' —புறநானூறு 34. 'ஆறெழுத் தடக்கிய அருமறைக்கேள்வி நாவியன் மருங்கில் நவிலப் பாடி'–திருமுருகாற்றுப்படை 187; ஆகவே, முதல் இரண்டடி ஆடும்பரி, வேல் இவை யிரண்டுமே 'அணிசேவல்' – 'அழகிய துணை' என உருப்போடும் பணி— 'வேலு மயிலுந் துணை' என 'உருப்போடும் பணி' எனத் தெளிவான பொருளைத்தரும். (அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 173 பார்க்க). 'வேலு மயிலுந் துணை' என்னும் திரு மந்திரத்தைச் சித்துவகுப்பு முதல் அடியிலும், திருப்புகழ் 920 அடி 8–லும் காண்க.

(4) கந்தரநுபூதி பாடின பின்பு திருவகுப்பு பாடப்பெற்ற தென்றால் ஒரு வேடிக்கையான கருத்து புலப்படுகின்றது. பூத வேதாள வகுப்பின் அடி 14-ல் 'ஐம்பத்தொன்றில் எட்டாறில்

மூன்றினில், ஐந்தில்...தங்கும் பொருள்' என்பதற்கு 51 பாடல்களாலாய கந்தரநுபூதியிலும், எட்டாறில் – அதில் 48-ஆம் பாடலாய 'அறிவொன்றற' என்பதிலும், 3-ஆம் பாட்டாகிய 'வானேபுனல்' என்பதிலும், அல்லது 8, 6-ல் எனக்கொண்டு 8-ஆம் பாடல் 'அமரும்பதி', 6-ஆம் பாடல் 'திணியான' 5-ஆம் பாடல் 'மகமாயை', என்பவற்றிலும் குறிக்கப்பட்ட உட்பொருளுமாயுள்ளவன் – எனவும் கொள்ளலாம் போலத் தோன்றுகின்றது. அநுபூதி 51 பாடலும் 51 அக்ஷரத்தைக் குறிக்கும் என்றும் ஆருதாரச் சக்கரங்கள் அதனுள் அடங்கும் என்றும்–அதனுலும்அது ஒரு மந்திர நூல் என்று கூறுவாருளர்.

(5) இச்செய்யுளின் அரிய பெரிய பொருளை — பிரமஸ்ரீ கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள் விரிவாக விளக்கியுள்ளார் (திருப்புகழ் அமிர்தம் மலர் 17, இதழ் 11, பிப். 1953, பக்கம் 306).

கீழ்க் காட்டுவன அவர் எழுதியுள்ள குறிப்புக்கள் :—

"கந்தர் அநுபூதியில் அருணகிரி முநிவர் இரண்டு வகையில் பிரணவத்தை இணைத்தார் — சொல்லாலும் பொருளாலும் ...... 'ஆடும்' அந்தச் சொல்லில் பிரணவம் அடங்கி இருக்கிறது. 'ஆ' என்பதில் அகரம் அடங்கியிருக்கிறது. இது ஒன்ருய்ப் பிணைந்த நுட்பமான இணைப்பு; 'டு' இந்த எழுத்தில் (ட்+உ) உகரம் அடங்கியிருக்கின்றது. இது ஒட்டியும் ஒட்டாமல் உள்ள இணைப்பு. மூன்ருவது எழுத்து 'ம்' ஓங்காரத்தின் மூன்ருவது எழுத்து–அதை அப்படியே சொல்லிவிட்டார். இறைவன் ஒன்றியும், உடனுகியும், வேருகியும்நிற்பதுபோலப் பிரணவத்தின் பகுதிகள் ஆடும் என்னும் சொல்லின் பகுதிகளோடு ... காணமுடியாதபடி ஒன்றியும், உடனுக இணைந்தும், தெளிவாகக் காணும்படி தனித்தும் நிற்கின்றன. பொருளிலும் பிரணவத்தின் நினைப்பை உண்டாக்கும்படி கந்தர் அநுபூதியின் ஆரம்பம் இருக்கிறது. 'ஆடும் மயில்தான் தனி மந்திரமாகிய ஓங்காரத்தின் திருவுருவ நிலை கொண்டது. 'ஆன தனி மந்த்ர ரூப நிலை கொண்டது ஆடுமயில்'—திருப்புகழ். பிரணவமே அழகிய திருக்கோலங் கொண்டு மயிலாக ஆடுகிறது.

(6) கஜமுகாசுரனைக் கணபதி அடக்கிய வரலாறு :—
திருப்புகழ் 551, பக்கம் 254 கீழ்க்குறிப்பு.

"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை அவனுற்கொல் வித்தார் போலும்"
—அப்பர் 6-53-4.

## 2. யான் எனது அற - எல்லாம் அற - உபதேசித்தருள்

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனு நீ யலையோ
எல்லாம்அற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா சுரபூ பதியே.

(அந்.) முருகா! (சுரபூபதியே!) உல்லாச...சொல்லாய்.

(பொ–உ.) முருகனே! சுரபூபதியே – தேவர்களின் அரசே! (உல்லாசம்) உள்ளக் களிப்பு, (நிராகுலம்) கலக்க மின்மை இவைகளுடன் கூடிய (யோகவித) எண்வகை யோக விதங்கள் – யோக மார்க்க வழிகள் சம்பந்தமான (சல்லாபம்) வினு விடைப் பேச்சுக்களில் (விநோதனும்) ஈடுபட்டு மகிழ்ச்சி யுடன் பொழுது போக்குபவனும் (நீ அலையோ) நீ அல்லவா – நீதான் – நீ ஒருவனே; (எல்லாம் அற) சகல பந்தங்களும் நீங்கிஒழியும்படி, (என்னை) யான்–எனது எனப்படும் அகங்கார மமகாரங்கள், (இழந்த) ஒழிந்து தொலையும் (நலம்) மேலான நன்மை நிலையைச் (சொல்லாய்) உபதேசித்தருளுக!

(சு–உ.) முருகா! சகல பாசங்களும் தொலையும்படி எனக்கு உபதேசித்தருளுக.

(கு–உ.) (1) உல்லாச விநோதன், நிராகுல விநோதன், யோகவிதச் சல்லாப விநோதன் அல்லது யோகவித விநோதன் (அல்லது யோக விநோதன், இதவிநோதன்) எனக் கூட்டியும் பொருள் காணலாம். உல்லாசம், நிராகுலம், யோகம், இதம் (இனிமை, நன்மை) சல்லாபம், விநோதம் என்னும்ஆறு தன்மைகளைக் கொண்டவன்-முருக! நீ ஒருவனே எனலுமாம். இறைவனை 'இன்பன், கவலை ...யில்லார், நலந்தான் அவன், பரமயோகி' என்றார் சம்பந்தரும் (2–88–3; 1–87–1; 2–19-3; 1-119-3.)

(2) எல்லாம் அறுதல்—'சொல்லுகைக் கில்லை யென் றெல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லை'—கந். அலங். 10; 'என்னை முழுக்க இழந்த இடத்தே தன்னை விளக்கிய சால் இளசைக்கோன்'—இளசைப் பதிற்றுப்பந்தந்தாதி 47.

(3) இப்பாடலிற் கேட்ட வரம் சித்தித்ததைக் கந்தரலங் காரம் 10, 19, 61 எண்ணுள்ள செய்யுள்களிற் காண்க.

## 3. எது பொருள்

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டஇடந்
தானோ பொருளா வதுசண் முகனே.

(அந்.) சண்முகனே! பொருளாவது வானோ ......... இடந்தானோ.

(பொ-உ.) ஷண்முகப் பெருமானே! பொருளாவது — உண்மைப் பொருள் – நித்தியப் பொருள் எனக் கூறுகின்றார்களே அது (வானோ) ஆகாயமோ, (புனலோ) நீரோ, (பாரோ) நிலனோ, (கனலோ) நெருப்போ, (மாருதமோ) காற்றோ (ஞானோதயமோ) ஞானம் உதயமாகும் – தோன்றும் நிலை தானோ, (நவில்) சொல்லப்படுகின்ற (நான்மறையோ) நான்கு வேதங்களோ (யானோ) 'நான்' என்று கூறுகின்றேனே அதுவோ, (மனமோ) மனம் எனப்படுவதோ, (எனை ஆண்ட இடம்தானோ) என்னை ஆண்டருளிய இடமாகிய திருவண்ணாமலைதானோ!

(சு-உ.) 'பொருள்' என்பது எது?

(கு-உ.) (1) பொருள் என்பது எது – பஞ்ச பூதங்களா, அதுவா இதுவா என்று இங்கு எழுப்பியுள்ள வினவுக்கு விடை கந்தரலங்காரம் 9-ஆம் பாடலில் – 'வானன்று, காலன்று, தீயன்று, நீரன்று, மண்ணுமன்று, தானன்று, நானன்று, அசரீரி அன்று, சரீரி யன்று' என்னும் இடத்தில் எதிர்மறை முகத்தாற் காண்கின்றோம் (தொகுதி 6, பக்கம் 11).

பொருள் இன்னதென்பதை 'அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே' (509) என்னுந் திருப்புகழால் விளக்கினார். (தொகுதி 3, பக்கம் 164-165 பார்க்க).

இவ்வாறு தெளிவுற விளக்கின காரணத்தால் —

"ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்—
வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றுர் தன்னையாய்முக்கணெந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னன்"
என்றார் தாயுமானவரும்-உடல்பொய் 26.

(2) எனை ஆண்ட இடம் தானே — அருணகிரியாரை ஆண்ட இடம் திருவண்ணுமலே. 'அருணையிற் சித்தித்தெனக் குத் தெளிவருள் பெருமாளே'—திருப்புகழ் 550. அயனும் அரியும் ஆணவம் ஒழியப்பெற்ற இடம் திருவண்ணுமலே. ஆதலின் ஆணவமற்ற நிலேதான் பொருளோ! என வினவின தாம். 'யான்' 'தான்' கெட்டால் 'பொருள்' இன்ன தென்று புலப்படும் என்ருர் கந்தரலங்காரம் 95–ஆம் செய்யு ளில் (தொகுதி 6, பக்கம் 92, 93 குறிப்புரையைக்காண்க.

## 4. மனை, மக்கள் எனும் பந்தம் அற

வளைபட்ட கைம் மாதொடு மக்க ளெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூர் உரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

(அந்.) கிளைபட்டெழு......வேலவனே! வளைபட்ட...... தகுமோ.

(பொ–உ.) (கிளைபட்டு எழு) சுற்றத்தினர் சூழப் (போருக்கு) எழுந்த (அல்லது கிளைகளோடு கூடிய மாமரமாய் எழுந்த), (சூர்) சூரபத்மனது (உரமும்) மார்பும், (கிரியும்) அவனுக்கு அரணுயிருந்த எழுகிரியும், (தொளைபட்டு) தொளை படும்படி (உருவ) ஊடுருவிச் செல்லத், (தொடு) பிரயோகித்த வேலாயுதனே! (வளைபட்ட) வளையலே அணிந்த (கை) கரங் களைக் கொண்ட (மாதொடு) மனைவியோடு, (மக்கள் எனும்) குழந்தைகள் என்னப்பட்ட (தளை) பந்தத்திற் (பட்டழிய) அகப்பட்டு (நான்) அழிந்துபோதல் (தகுமோ தகுமோ) நீதியா! நீதியா! (நீதி அன்று என்றபடி)

(சு–உ.) வேலவனே! மனை மக்கள் என்னும் பாசத்தில் நான் மாட்டிக்கொண்டு கெடாதவண்ணம் காத்தருளுக.

(கு–உ.) (1) வளைபட்ட கை – வளையல் கையைச்சூழ்ந்து நிற்பதுபோல, மாது மக்களாம் பாசம் நம்மைச் சூழ்ந்து நிற்கின்றது என்பது குறிப்பு: 'பழவினை புகுந்த பாடகம் போல' (கல்லாடம் 8) என்புழிப்போல.

(2) தளைபட்டழிதல் – ' நிலையாத சமுத்திரமான சமுசார துறைக்கணின் மூழ்கி...தவியாமல்' என்றார் (திருப்புகழ் 293).

(3) தகுமோ – தக்கது ஆகுமோ? 'தகுமோ இவளுண் மெலிவே'—சம்பந்தர் 2-18-1; தகுமோ தகுமோ – அடுக்கு – அச்சத்தையும் அவலத்தையும் காட்டும் – நன்-சூ 395.

(4) கிளைபட்டெழுசூர் – ' கிளைத்துப் புறப்பட்ட சூர் '— கந்தரலங்காரம் 32 (தொகுதி 6, பக்கம் 32), திருப்புகழ் 257, பக்கம் 140, 141 கீழ்க்குறிப்பு.

" துன்னுபல் கவடு போக்கிச் சூதமாய் அவுணன்
நின்றான் "—கந்தபுராணம் 4-13-468.

" திரையெறி மலைகளிற் கவடு பல போக்கி நின்றமா "
—கல்லாடம் முருகர் துதி.

(5) சூர், கிரி – ஆணவம், மாயை இவைதமை வேல் கொண்டு அழித்தனையே! என் ஆணவத்தையும் மாயைச் சூழலையும் தொலைக்கக் கூடாதா? என்பது முன் இரண்டடிக்கும் பின் இரண்டடிக்கும் உள்ள சம்பந்தம் – சூர் உரமும் கிரியும் என்றதனால் கிரி – எழுகிரி, கிரௌஞ்சம் அன்று.—கந்தர் அலங்காரம் 32-ன் குறிப்பு; திருப்புகழ் 257 பக்கம் 140 குறிப்பு.

## 5. மாயை அற

மகமாயை களைந்திட வல்லபிரான்
முகமாறு மொழிந்து மொழிந் திலனே
அகமாடை மடந்தையர் என் றயருஞ்
சகமாயையுள் நின்று தயங்குவதே.

(அந்.) மகமாயை – மொழிந்தும், அகம் மாடை ......... தயங்குவது ... ஒழிந்திலனே.

(பொ–உ.) (மகமாயை) மகாமாயைகளை–வலிமைமிக்க மிகப் பெரிய மாயைகளை எல்லாம் (களைந்திட வல்ல) நீக்க வல்ல (பிரான்) ஆறுமுகப்பிரானுடைய (முகம் ஆறு) ஆறு திருமுகங்களையும் (மொழிந்தும்) என் நாவானது 'ஆறுமுகம், ஆறுமுகம்' என்று அடிக்கடி கூறி வந்தும், (அகம்) வீடு,

(மாடை)பொன், (மடந்தையர்)மாதர்கள் என்று இவை தமை நினைத்து (அயரும்) சோர்வு அடையச் செய்கின்ற (சகமாயையுள்) உலகம் என்னும் மாயைக்குள் - பிரபஞ்ச மாயையில், நின்று (தயங்குவது) கலக்குண்பதை (ஒழிந்திலனே) விட்டு விலகப்பெற்றேனில்லையே.

(சு–உ.) ஆறுமுகம் எனச் செபித்தும் ஜகமாயையை வெல்ல முடியவில்லையே, என்னே அதன் வன்மை !

(கு–உ.) (1) மொழிந்தும் ஒழிந்திலன்–என்பது பிரபஞ்ச மாயையின் வன்மையைப் புலப்படுத்துகின்றது. 'அநுபவம் இது சற்றும் விடவோ இயலாது இயலாதே'-திருப்புகழ் 1140. ஆறுமுகம், ஆறுமுகம் என்றுஜெபித்தால் மாத்திரம்போதாது. மனமும் ஒன்றுபடவேண்டும்; ஒன்றுபட்டுப் பன்னுள் ஜெபித்த பின்னரே, பன்னுள் ஜெபிக்கின்றுனே என முருகவேள் திருவருள் சுரந்து வந்து மெய்ப்பொருளை (குருவாக நின்று) உபதேசிப்பர்; குரு உபதேசம் பெற்ற பின்புதான் ஜகமாயை ஒழியும். இதனை அநுபூதி 8–ஆம் பாடலில் 'அமரும்பதிகேள் அகமாம் எனுமிப் பிமரம் கெட மெய்ப்பொருள் பேசியவா'– என வருவதால் துணிந்தறியலாகும். பன்னுள் அழைத்தால் தான் இறைவன் எதிர்ப்படுவான் என்பதை —

> "பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்துபன் னுளழைத்தால்
> இவன் எனைப் பன்னுள் அழைப்பொழி யானென் றெதிர்ப்
> படுமே"

—எனவரும் அப்பர் திருவாக்கால் (4–112–9) அறியலாம்.

'களைந்திட வல்லபிரான்' தயக்கத்தை நீக்காததன் காரணம் நாம் மொழிந்தது போதாது என்பதை உணர்த்தும்: 'துடைக்கினும் போகேன்' எனத் துணிதல் வேண்டும்; பன்னுள் அழைத்தல் வேண்டும்; கருணுகரமூர்த்தி – சோதித்தே ஆட்கொள்வர்; ஆட்கொள்வது திண்ணம் – ஆனல் பத்தி உறுதி நம்மிடத்தே அழுந்தின வகையில் இருத்தல்வேண்டும். நாயன்மார்களின் வரலாற்றிலும் மணிவாசகர் வரலாற்றிலும் இவ்வுண்மை நன்கு புலப்படும்.

இனி, முகம்ஆறும் மொழிந்து மொழிந்திலனேஎன்பதற்கு ஆறுமுகம் ஆறுமுகம் என்று (மொழிந்து மொழிந்து) சொல்விச் சொல்லி – உருப்போட்டு உருப்போட்டுச் சொல்லுகின்றேன் இல்லையே! ஐயோ! சகமாயையுள் நின்று தயங்குவதோ என் தலை எழுத்து எனவும் பொருள் காணலாம்.

(2) அகம் – **நான்;** மாடை அல்லது ஆடை – மடந்தையர்– இதுவே '**யான் எனது**' என்று அயரும் பிரபஞ்சமாயை.

## 6. திருவடித் தியானம் உற

திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியார் அரவிந்தம் அரும்புமதோ
பணி யா என வள்ளி பதம் பணியுந்
தணியா அதிமோக தயா பரனே.

(அந்.) பணியா என ... தயாபரனே! திணியான ...... அரும்புமதோ!

(பொ-உ.) பணியா என—(எனக்கு இடும்) கட்டளைகள் எவையோ என(வினவி),வள்ளியின் (பதம்பணியும்)பாதத்தில் விழுந்து வணங்கும் (தணியா) குறைவுபடாத (அதிமோக) மிக்க காதல் கொண்டுள்ள தயாபர மூர்த்தியே! (கருணைக் கடலே)! (திணியான) திண்ணியதான – கடினமான (மனோ சிலை) (எனது) நெஞ்சக் கனகல்லின் மீது – மனம் என்னும் கல் லின் மீது (உன்) உன்னுடைய (தாள்) திருவடி என்னும் (அணி ஆர்) அழகு நிரம்பிய (அரவிந்தம்) தாமரை (அரும்புமதோ) அரும்புவிட்டு மலருமோ!

(சு-உ.) வள்ளிகாதலனே! உனது திருவடி என்மனத்தில் மலருமா!

(கு-உ.) (1) திணியான மனோசிலை – காப்புச் செய்யுளில் 'நெஞ்சக் கனகல்' என்பதன் குறிப்பைப் பார்க்க.

சேற்றில் முளைக்கும் தாமரை - என் மனம் எனும் கல்லில் முளைக்குமா என்றதனால் என் மனத்தைச் சேறுபோல நெகிழச் செய் என வேண்டினதாகும்.

(2) பணி யா என வேண்டி நின்றதை — 'தெய்வக் குறப் பெண் குறிப்பறிந் தருகணைந்துன் குற்றேவல் செய்யக் கடைக் கண் பணிக்கெனக் குறையிரந்து ... நின்றவன்' என்றார் குமர குருபரரும். இங்ஙனம் பணிந்தது — பத்தி செய்வோர்க்கு ஏவல் செயும் பணியாளன் ஈசன் என்னும் பெருண்மையைப் புலப்படுத்தும்.

"வேடிச்சிக்காக மாமய லாகிப் பொற்பாதமே பணி கந்தவேளே"—திருப்புகழ் 343.

"நின் ஆர்வலர் தொழுதகை அமைதியின் அமர்ந்
தோயும் நீயே! அவரவர் ஏவலாளனும் நீயே"
—பரிபாடல் 4–70–72.

"கூம்பித் தொழுவார்தம் குற்றேவலைக்
குறிக்கொண்டிருக்கும் குழகா போற்றி"
—அப்பர் 6–5–4

என வருவன காண்க.

வள்ளி பதம் பணிதல் – 'வனசரி பதயுக கஞ்சம் வணங்கும் பாக்ய கதம்பன்'—திருப்புகழ் 18–6.

## 7. கதிபெறும் வழி

**கெடுவாய் மனனே கதிகேள் கரவா**
**திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்**
**சுடுவாய் நெடுவே தனைதூள் படவே**
**விடுவாய் விடுவாய் வினையா வையுமே.**

(அந்.) மனனே! கெடுவாய் கதிகேள் ...... நினைவாய், நெடுவேதனை ......... சுடுவாய், வினை யாவையுமே விடுவாய் விடுவாய்.

(பொ–உ.) (மனனே கெடுவாய்) ஏ மனமே! நீ கெட்டொழிய நிற்கின்றாய்! (கதிகேள்) நீ நற்கதி பெறும் வழியைக் கூறுகின்றேன் கேட்பாயாக. (கரவாது) உள்ளத்தில் ஒளித்தல் இல்லாது (இடுவாய்) தானம் செய்வாயாக; (வடிவேல்) கூரிய வேலை ஏந்திய (இறை) கடவுள் முருகவேளின் (தாள்) திருவடிகளை (நினைவாய்) தியானிப்பாயாக; (அங்ஙனம் நீ செய்தால்) (நெடு வேதனை) பெரிய வருத்தம் நோய்களெல்லாம் தூள்பட்டொழியச் (சுடுவாய்) சுட்டு எரிப்பாய்; (வினையாவையுமே) வினைகளெல்லாவற்றினின்றும் (விடுவாய் விடுவாய்) விரைவில் நிச்சயமாக விடுதலை பெறுவாய்.

(சு–உ.) வினை, வேதனை தொலைய வேண்டில் – கரவாது இடுக; முருகன் திருவடியைத் தியானிக்க.

(கு–உ.) (1) இச்செய்யுளில் உள்ள உபதேசம் உணர்ந்து அநுட்டிக்கத் தக்கது.

(2) கரவாது இடுதல் வேண்டும் - ஏன் எனில் ‘ கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியான் இறைவன் ’—அப்பர் 4–7–1.

‘ தானமென்றும் இடுங்கோள் ’—கந்தரலங்காரம் 16.

தானம் இடும்போது இறைவனைக் குறித்த சிந்தனையும் வேண்டும் - கந்தரலங்காரம் 66 கீழ்க்குறிப்பு பக்கம் 65 பார்க்க; கந்தரந்தாதி 28 – ன் குறிப்பையும் பார்க்க – தொகுதி 6, பக்கம் 176.

“ பரவப் படுவான் பரமனை ஏத்தார்
இரவலர்க்கு ஈ தலையாயினும் ஈயார் ...
நரகத்தில் நிற்றிரோ ”—திருமந்திரம் 264.

## 8. மையல் நீங்க உபதேசம் பெற்றது

அமரும் பதிகேள் அகமாம் எனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம்பொரு தானவ நாசகனே.

(அந்.) குமரன் ... நாசகன் அமரும்பதி ... பேசியவா.

(பொ–உ.) குமாரமூர்த்தி, இமயமலை அரசனது மகள் - ஆகிய பார்வதியின் மகன், (சமரம்பொரு) போர் புரிந்த (தானவர் நாசகன்) அசுரர்களை வதம் செய்தவன் – ஆகிய முருகவேள் (அமரும்பதி) யான் வசிக்கும் ஊர், (கேள்) உறவினர், (அகம்) வீடு (அல்லது நான்) ஆம் எனும் – என்று சொல்லப்படுகின்ற (இப் பிமரம்) இந்த மயக்க அறிவு (கெட) ஒழிந்து போம்படி (மெய்ப்பொருள்) உண்மைப் பொருளை எனக்குப் (பேசியவா) உபதேசித்த விசித்திரம் ஆச்சரியகரமா யிருக்கின்றது.

(சு–உ.) முருகவேளின் உபதேசச் சிறப்பே சிறப்பு ; அது சக மாயையை அறவே ஒழித்து விட்டது.

(கு–உ.) (1) இச் செய்யுள் அருணகிரியார் உபதேசம் பெற்ற வரலாற்றைக் குறிக்கின்றது. முருகவேள் உபதேசித்த வுடன் கேள், அகம் எனும் இம்மயக்கம் நீங்கிஒழிந்தது. இதை ‘ இல்லே எனுமாயை ’ என்றார் 29-ஆம் பாடலில்.

(2) ஒருவனுக்கு அவன் இருக்கும் ஊர் மீது, சுற்றத்தார் மீது, வீட்டின்மீது (அல்லது) தன்மீது தான் 'மயக்க ஆசை' அதிக ஆசை, அதனுல்தான் — 'ஊர், பெற்றதாய், சுற்றமா யுற்ற தாள்'—என்ருர் திருப்புகழில் (1036).

(3) பிமரம் – பிரமம் (கலக்கம்) என்பதன் மரூஉ (நன் னூல் சூத்திரம், 239, 267.

(4) "தானவ நாசகன்" — "நிசாசராந்தகன்" என்ருர் அந்தாதியில் (48).

## 9. மையல் ஒழிய

மட்டூர்குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டூசல் படும் பரிசென் ருெழிவேன்
தட்டூ டறவேல் சயிலத் தெறியும்
நிட்டூர நிராகுல நிர்ப் பயனே.

(அந்.) சயிலத்துத் தட்டூடற வேல் எறியும் ...... நிர்ப் பயனே! மட்டூர் ... என்ருெழிவேன்.

(பொ-உ.) (சயிலத்து) கிரௌஞ்சகிரியின்மீது (அதன்) (தட்டு ஊடு அற) அதன் நடுவிடம் எல்லாவற்றிலும் ஊடுரு விச் செல்லும்படி வேலாயுதத்தை (எறியும்) செலுத்தின (நிட்டூர) கடுமை வாய்ந்தவனே! (நிராகுல) கலக்கம் அற்றவனே! (நிர்ப்பயனே) பயம் அற்றவனே! மட்டு ஊர் – வாசனை கமழுகின்ற (குழல்) கூந்தலை உடைய (மங்கையர்) பெண்கள் என்னும் (மையல் வலை) மோகவலையில் – காமவலை யில் – (பட்டு) அகப்பட்டு – சிக்கி (ஊசல்படும்) உள்ளம் தடு மாற்றம் - அலைச்சல் - அடையும் (பரிசு) தன்மையை (என்று) எக்காலத்தில் (ஒழிவேன்) நான் விட்டு நிம்மதி அடைவேன்.

(சு–உ.) கிரௌஞ்சத்தை அட்ட வேலனே! மங்கையர் மீதுள்ள என் மோகம் என்னை விட்டு என்று அகலும்.

(கு–உ.) (1) சயிலம் தட்டூடற வேல் எறிதல் - இது 'கிரியும் தொளைபட்டுருவ' (அநுபூதி 4) என்ற கருத்ததே.

(2) நான்காவது செய்யுளிற்போல முதல் இரண்டடிக்கும் பின் இரண்டடிக்கும் பொருத்தம் உளது. கிரௌஞ்சத்தின் மாயையை வேல் கொண்டு ஒழித்தனையே; மாதர் மீதுள்ள என் மோக மாயையை ஒழித்தருள உன் திருவருள் என்று எனக்குக் கிடைக்குமோ என்றபடி.

## 10. யமபயம் நீங்க முருகன் எழுந்தருள

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார்ப வலாரி தலாரி எனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே.

(அந்.) தார் மார்ப! வலாரி ... வேலவனே! கார்மா மிசை ... எதிரப்படுவாய்.

(பொ–உ.) (தார் மார்ப) (கடம்பு, வெட்சி ஆதிய) மாலைகளை அணிந்த மார்பனே! வலாரி – வலாசுரனுக்கு(அரி) பகைவனான இந்திரனுடைய (தலாரி) ஸ்தலமாம் பொன்னுலகுக்கு (அரி) பகைவன் (எனும்) என்றிருந்த (சூர்மா) சூரனும் மாமரம் (மடிய) அழிவுபடும்படி (தொடு) செலுத்தின (வேலவனே) வேலாயுதக் கடவுளே! (கார்மாமிசை) கரிய எருமை மேலே (காலன்) யமன் (வரின்) என்னைப் பிடிக்க வந்தால் (நீ) (கலபத் தேர் மாமிசை) கலப மா தேர்மிசை-தோகைப் பரியாம் வாகனத்தின் மீது (வந்து) எழுந்தருளிவந்து (எதிரப் படுவாய்) என் எதிரே தரிசனம் தந்தருளுவையாக.

(சு–உ.) சூரனைச் செற்றவனே! யமன் என்முன் வந்தால் நீ மயில்மீது என்முன் எழுந்தருளுக.

(கு–உ.) (1) இந்தப் பாடலின் கருத்தைப் 'பகடதுமுதுகினில் யமராஜன் அஞ்சவே வரும் அவதரமதில் ... நடமிடும் அந்த மோகர மயிலினில் இயலுடன் வரவேணும்' - எனவரும் திருப்புகழிற் (79) காண்க. பின்னும், இக் கருத்தை கந்தரலங்காரத்திலும் செய்யுள் 50–80 (தொகுதி 6 பக்கம் 48, 78), 'அந்தகனும் எனை அடர்ந்து வருகையினில் அஞ்சல் என வலிய மயில்மேல் நீ ... வருவாயே' எனவரும் திருப்புகழிலும் (70), 'எந்தை நீ எனை நமன் தமர் நலியில் இவன் மற்றென் அடியான் என விலக்கும் சிந்தையால் வந்துன் திருவடி அடைந்தேன்'— எனவரும் தேவாரத்திலும் (7–55–1) காண்க – அநுபூதி 41-ம் பார்க்க.

(2) கார்மா — கரிய பெரிய எருமை (திருப்புகழ்) 129.

(3) கலபத் தேர் — தேர் பொதுவாக வாகனம் என்னும் பொருளில் வந்துளது. இங்ஙனம் கூறுதல் ஒரு பழைய

வழக்கு – நீலக்ரீப கலாபத் தேர்விடு......சேவக '–திருப்புகழ் 68 'அன்னத் தேர் ஏறி அயன் வலப்பால் ... போத'—கைலாய ஞான உலா வரி 73. 'அன்னத்தேர் அயன் முடிசேர் அடிகள் போலும்'—அப்பர் 6-53-5. 'அன்னத் தேரினன் அயன்'—திருவிளையாடல்.

கலபத்து ஏர் மா எனப் பிரித்து - தோகையை உடைய அழகிய மயிற்பரி எனவும் பொருள் காணலாம். 'பக்ஷி எனும் உக்ர துரகம்'–திருப்புகழ் விநா. 3. துரகம் – குதிரை.

(4) வலாரி — இந்திரன்; வலன் என்னும் அசுரனுக்கு (அரி) பகைவன் – திருப்புகழ் 1132. வலன் என்னும் அசுரன் சிவபூசை செய்து, தான் இறப்பின் தன்னுடல் நவமணிகள் ஆகவேண்டும் என வரம் பெற்றனன். இந்திரன் இவனுடன் செய்த போரில் தோல்வி அடைய உனக்கு என்ன வரம் வேண்டும் என வலனைக் கேட்க, வலன் உனக்கு என்ன வரம் வேண்டும் என்று இந்திரனைக் கேட்டான். இந்திரன் எனக்கு நீ யாகப்பசு ஆகவேண்டும் என்று வேண்டி, அங்ஙனமே வரப் பெற்று வலனைக் கொன்றனன். முன்பு பெற்றிருந்த வரத் தின்படி இறந்த வலனுடைய உடல் விலையுயர்ந்த ரத்னங்கள் ஆயின; வலன் ரத்தம் மாணிக்கங்கள் ஆயிற்று; பற்கள் முத்துக்கள் ஆயின; மயிர்கள் வைடூரியம் ஆயின; எலும்புகள் வைரம்ஆயின; பித்தம் மரகதம் ஆயிற்று; நிணம் கோமேதகம் ஆயிற்று; தசை கள் பவளம் ஆயின; கண்கள் நீலம் ஆயின; கபம் புஷ்பராகம் ஆயிற்று.

"வாசவன் வேள்விக் கிரங்கியோர் பசுவாய் வந்திடும் வலவனைச் சிரத்தால், ஆசற அரிந்த உறுப்பு...மண் விழுந்தன ... காசறு வித்தாய் மலையினும் சிறந்த கடலினும் தீவினும் ... நாட்டினும் பிறந்து விளைந்தன பிறங்கிட அன்றே ..."

"பரியவாள் என்பு வயிரம், நீடிறைச்சி பவழம், மென் கருவிழி நீலம், பொருவரும் ஒளிசேர் கவம்புரு டராகம், பொருந்துசெங் குருதி மாணிக்கம், மருவிய மயிர்வை டூரியம், நிணம்கோ மேதகம், வாணகை முத்தம், குருவளர் பித்து மரகதம் என்று கூறுவர் குலமணிப் பிறப்பே"—திருவாலவா யுடை. திருவிளை. மாணிக்கம் விற்ற ஆடல் 25 (9, 10).

"அத்தகை ஆலின்சோரி மாணிக்கம்ஆம், பல்முத்தம்
பித்தைவை டூயம், என்பு வச்சிரம், பித்தம் பச்சை
நெய்த்தவெண் நிணம்கோமேதம், தசைதுகிர். நெடுங்கண் நீலம்.
எய்த்த ஐ புருடராகம் இவைநவ மணியின் தோற்றம்"
—பரஞ்சோதி 17 – திருவிளை. மாணிக்கம் விற்ற. 35.

முசுகுந்தர் உதவியைக்கொண்டு இந்திரன் குலிசாயுதத்தால் வலனைக் கொன்ருன் எனக் கந்தபுராணம் கூறும்.

" மகவான் ... போர்செய்து ... குலிசத்தினுல் அவனுயிர் குடித்தான், மன்னுதொல்புகழ் வலனுயிர் கோறலால் வலாரி, என்ன ஓர்பெயர் பெற்றனன் "—கந்தபுராணம் 6–23, 53, 54.

## 11. உறவினர் அழப், போகாவகைக்கு உபதேசம் பெற்றது

கூகா எனஎன் கிளைகூ டிஅழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
[1]நாகாசல! வேலவ! நாலுகவித்
தியாகா! சுரலோக சிகாமணியே.

(அந்.) நாகாசல ...... சிகாமணியே! கூகா என ...... பேசியவா!

(பொ–உ.) (நாகாசல!) சர்ப்பகிரியாம் திருச்செங்கோடனே! (வேலவ) வேலாயுதனே! (அல்லது நாகாசல வேலவ-திருச்செங்கோட்டு வேற்கடவுளே); நாலு கவி – ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடும் திறத்தை உனது அடியார்களுக்கு அளிக்கும் பெருமாளே! (சுரலோகம்) தேவலோகத்துச் (சிகாமணியே) சிரோ ரத்னமே! (கூகாஎன) கூ கா என்று கூச்சலிட்டு (என்) எனது (கிளை) சுற்றத்தார் (கூடி அழ) ஒன்றுகூடி அழப் (போகாவகை) நான் இறந்து போகாதவண்ணம் (மெய்ப்பொருள்) உண்மை ஞானப் பொருளைப் (பேசியவா) நீ எனக்கு உபதேசித்த அற்புதம் தான் என்னே! உன் கருணையை என்னென்று வியப்பேன்!

(சு–உ.) உறவினர் அழ யான் போகா வகைக்கு நீ எனக்குச் செய்த உபதேசம் வியக்கத் தக்கதாயிருக்கின்றது.

(கு–உ.) (1) உறவினர் (கூ–கா என) அழுதல்:

" கூகா என்று குரைப்ப தல்லாற் சமன்
வாவா என்னில் வரேம் என வல்லிரே "
—சிதம்பரம் செய்யுட்கோவை 75.

' கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார் '–நாலடியார் 25.

(2) 8-ம் செய்யுளைப் போல இச் செய்யுளும் அருணகிரியார் மெய்ப்பொருளை உபதேசிக்கப்பெற்ற வரலாற்றைத் தெரிவிக்கின்றது.

(3) நா கா ச ல ம் — திருச்செங்கோடு — திருப்புகழ் 380, பக்கம் 460 கீழ்க்குறிப்பு.

நாகாசலம் = திருச்செங்கோடு. "கொங்கின் புஜக கோத்திரி"—திருப்புகழ் 1181.

(4) நாலு கவித் தியாகமூர்த்தி — முருகர். நாலு கவி மாத்திரம் அன்று, அபரிமித வித்தைகளையும் அறிவித்தருளும் மூர்த்தி முருகவேள்—12. வேடிச்சி காவலன் வகுப்பு அடி 13.

நாலு கவி :—

(1) **ஆசுகவி வகை** – கொடுத்த பொருளை அடுத்தபொழுதிற் பாடும் பாட்டு.

"பொருள், அடி, பா, அணி முதலிய கொடுத்து மற்றொருவன் பாடுவது ஆசு கவி".

(2) **மதுரகவி வகை** – இனிமை பெருகப் பாடுங் கவி.

"பொருட் செல்வம், சொல்லாற்றல், தொடை, தொடை விகற்பம் செறிய, உருவகம் முதலிய அலங்காரத்தோடு, இன்னோசைத்தாய், ஆராய்வோர் மனங்கட்குஅமுதம்போல் இனிமை பயப்பப் பாடுவது மதுரகவி".

(3) **சித்திரகவி வகை** — சித்திரத்தில் அமைத்தற் கேற்பப் பாடும் மிறைக்கவி.

"மாலை மாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதை கரப்பு, கரந்துறை, தூசங் கொளல், வாவன் ஞாற்று, பாதமயக்கு, பாவின் புணர்ப்பு, கூட சதுக்கம், கோமூத்திரி, ஒரெழுத்தினம், ஒற்றெழுத்துத் தீர்ந்த ஒரு பொருட் பாட்டு, சித்திரப்பா, விசித்திரப்பா, விகற்பநடை, வினுவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்து வருத்தனம் இவை முதலியவற்றை வடநூற் பரப்பில் முற்ற ஓதி வைத்த உதாரணங்களை ஆராய்ந்து விரிவுபடக் கூறியவற்றினியலால் மிறைக்கவியில் விளக்கிப் பாடுவது சித்திரகவி".

**(4) வித்தார கவிவகை** - விரிவாகப் பாடும் பிரபந்தம்.

'மும்மணிக்கோவை, பன்மணி மாலை, மறம், கலி வெண்பா, மடலூர்தல், இயல், இசை, நாடகம், பல்வகைக் கவி, கூத்து, கிரீடை, பாடாண்டத் துறை, வகுப்பு, விருத்த கவிதை இவை முதலிய வற்றை விரித்துப் பாடுவது வித்தார கவி '-(பிங்.)

## 12. மௌனுபதேசம் பெற்றது

**செம்மான் மகளைத் திருடுந் திருடன்**
**பெம்மான் முருகன் பிறவான் இறவான்**
**[1]சும்மா இருசொல் லறஎன் றலுமே**
**அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே.**

(பொ-உ.) செம்மான்-செவ்விய (இலக்குமியாம்) மான் ஈன்ற - மகளை — மகளாம் வள்ளியைத் (திருடும்) திருடின களவிற் கொண்டு சென்ற (திருடன்) கள்வன், பெருமானாகிய முருகன் (அவன்) பிறவான் இறவான் - அவனுக்குப் பிறப்பு, இறப்பு இல்லை (அத்தகைய பெருமான்) சும்மா இருப்பாயாக, (சொல் அற) மௌன நிலையில் இரு, என்றலுமே (என்று எனக்கு உபதேசித்த உடனே) அம்மா! என்ன ஆச்சரியம் - பொருள் ஒன்றும் அறிந்திலனே — பிரபஞ்ச விஷயங்கள் ஒன்றும் நான் உணரவில்லை — உலக விஷயங்கள் யாவும் அற்றன.

(சு-உ.) முருகவேள் ' சும்மா இரு ' என்று உபதேசித்த வுடன் பிரபஞ்ச விஷயங்கள் யாவும் என்முன் மறைந்தன.

(கு-உ.) (1) செவ்விய (மால்) திருமாலின் மகள் எனவும் பொருள் காணலாம், வள்ளி ( சுந்தரவல்லி ) திருமாலின் மகள் ஆதலின். செம்மான் சக்கிலி என்றும் பொருள் இருப்ப தால் சக்கிலி மகளை எனவும் ஒரு திட்டு தொனிக்கும் (வஞ்சப் புகழ்ச்சி). ' கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவு கொண்டு '—எனவரும் கந்தரலங்காரத்தையும் (91) காண்க.

(2) திருடன் - என்றது இகழ்ந்ததுபோல் புகழ்ந்ததாம் (வஞ்சப் புகழ்ச்சி). 'அரிவையை ... லீலைகள் செய்து நாடிய திருடா அருள்தரு கந்தவேளே '—திருப்புகழ் 741.

(3) முருகன் பிறவான் இறவான்—'வரல் போக்கிலான்... கடவுளாய் என்னுளே நின்ருன்'—கந்தபுராணம் 2-1-1.

(4) 'சும்மா இரு'—இது ஒரு பெரிய உபதேசம்.

'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம்அரிது' —(தேசோம-8).

'' சும்மா இருக்கச் சுக உதயம் ஆகுமே
இம்மாய யோகமினி யேன்...'' (உடல்பொய். 52).

'' சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணம்என்
றெம்மா லறிதிற் கெளிதோ பராபரமே''
—(பராபரக். 70).

'' சும்மா இருக்கச் சுகஞ்சுகமென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவும்''
—(பாயப்புலி 36) என்கின்ருர் தாயுமானுர்.

'' சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த - எம்மான்
அருணகிரி நாதன் அநுபவநா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு''
—திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

'' சும்மா இருக்கும் எல்லையுட் செல்ல எனை விட்டவா'' —கந்தரலங்காரம் 10.

'' என்னுணே என்னுணே என்னுணே ஏகமிரண்
டென்னுமற் சும்மா இருவென்று - சொன்னுன்
திருஞான சம்பந்தன் சீகாழி நாடன்
அருளாளன் ஞானவிநோ தன்''
—ஒழுவி லொடுக்கம் 5-14.

'' சும்மா இருக்கவைத்தான் சூத்திரத்தை நானறியேன்
அம்மா பொருளிதென அடைய விழுங்கினண்டி''—
பட்டினத்தார்—அருட்புலம்பல் 41.

இதனுல் 'பொருளொன்றும் அறிந்திலன்' என அருண கிரியார் கூறினது—'நான் என்பது அற்றுப் போயிற்று, என்னைத் தானுக்கிக் கொண்டான்' முருகன் என்னும் கருத் ததாம்; பின்னர் 28-ஆம்பாடலில் 'யானுகிய என்னை விழுங்கி வெறுந் தானுய் நிலை நின்றது தற்பரமே' என்றதும் அக் கருத்தே.

## 13. மெய்ப்பொருள் எளிதில் அறியும் தரத்ததன்று

முருகன் தனிவேல் முநிநம் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
[1]றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

(அந்.) உருவன்று ......நின்றதுவே ...... முருகன்......... அறியுந்தரமோ!

(பொ-உ.) (உருவன்று) உருஉடையதன்று, (அருவன்று) உருவம் இல்லாததும் அன்று, (உளது அன்று) உள்ளதோர் பொருளும் அன்று; (இலதன்று) இல்லாத பொருளும்அன்று- இருள் அன்று – இருள் சூழ்ந்த பொருளும் அன்று, (ஒளியன்று) பிரகாசம் பொருந்திய பொருளும் அன்று (என) என்னுந் தன்மையில் (நின்றது) (நின்ற அது) நின்றதான அம் மெய்ப் பொருளை – முருகன் (தனி) ஒப்பற்ற (வேல் முநி) வேலாயுதத்தை ஏந்திய பெருமான் தான் (நம்குரு) நமது குரு என்று (அருள்கொண்டு) அந்த முருகவேளின் திருவருளைக் கொண்டு அறியார் — அறியாதவர் — அவன் திருவருளைப் பெறுதவர் அறியுந்தரமோ–அறியும்தன்மையதோ! அறியமுடியாததாம்.

(சு-உ.) முருகன் திருவருள் இல்லையேல் மெய்ப்பொருளை யாராலும் அறியமுடியாது.

(கு-உ.) (1) முதல் இரண்டடியின் கருத்தை —

" காட்டுவித்தால் ஆரொருவர் காணுதாரே
காண்பாரார் கண்ணுதலாய்! காட்டக் காலே "

—என்னும் அப்பர் திருவாக்கிற் காண்க (6–95-3).

" பிரான்அருள் உண்டெனில் உண்டு நன்ஞானம் "
—திருமந்திரம் 1645.

(2) உருவன்று அருவன்று உளதன்று இலதன்று — என இங்குச் சொன்ன இவர் பின்னர் ' உருவாய்அருவாய் உளதாய் இலதாய் ' என்றுர் 51–ஆம் பாடலில்.

" மண்ணல்லை விண்ணல்லை வலயம் அல்லை
மலையல்லை கடலல்லை வாயு அல்லை
எண்ணல்லை எழுத்தல்லை யெரியும் அல்லை
இரவல்லை பகலல்லை யாவும் அல்லை

பெண்ணல்லை ஆணல்லை பேடும் அல்லை
பிறிதல்லை ஆனுயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
உணர்வரிய ஒற்றியூர் உடைய கோவே''
அப்பர் 6-45-9.

"இருளென்பதுவுமன்றி ஒளியென்பதுவுமன்றி எவையுந் தனுளடங்க ஒருமுதலாகும், உளதென்பதுவுமன்றி இலதென் பதுவுமன்றி உலகம் தொழ இருந்த"—தாயுமா. வண்ணம்.

—எனவருவன இங்கு நினைவுக்கு வரும்.

## 14. ஆசைகள் அற

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழி நாசியொடும் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே.

(அந்.) மனனே! கைவாய் ... உய்வாய், மெய்வாய் ... அவாவினையே, ஒழிவாய் ஒழிவாய்.

(பொ-உ.) மனனே! ஏ! மனமே! (கைவாய்) கை யிடத்தே (கதிர்வேல்) ஒளி பொருந்திய வேலை ஏந்திய முருக வேளின் (கழல்பெற்று) திருவடியை அடைந்து (உய்வாய்) உய்தி-பிழைப்பை-நற்கதியைப் பெறுவாயாக; மெய் (உடல்), வாய், (விழி) கண், (நாசி) மூக்கு இவையுடன் (செவி) காது ஆகின்ற (ஐவாய்) ஐந்து பொறிகளின் வழியாக (செல்லும்) ஏற்படும் – உண்டாகும் (அவாவினை) ஆசைகளை (அல்லது – அவா – ஆசை, வினை – வினைகள் இவைதமை) ஒழிவாய் ஒழிவாய் - நிச்சயமாக நீ விடுவாய், விடுவாய்.

(சு-உ.) வேல் முருகன் திருவடியைப் பெற்று அதனால் உய்தி பெறுவாய், ஆசைகளை விடுவாய்.

(கு-உ.) அவாவினை ஒழிவாய் ஒழிவாய் — ஆசைகளை விடுவாயாக விடுவாயாக எனலுமாம்.

## 15. முருகா என்று உருக

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங்கவ எண்குண பஞ்சரனே.

(அந்.) பொருபுங்கவரும் ... குணபஞ்சரனே! முருகன் குமரன் ... அருள்வாய்.

(பொ—உ.) (பொரு) பக்தி பொருந்தி நிற்கும் (புங்கவரும்) வானோரும் (விண்ணுலகத்தவரும்), (புவியும்) மண்ணுலகத்தவரும் (பரவும்) துதித்துப் போற்றும் (குரு புங்கவ) குரு சிரேஷ்டனே; (எண்குண பஞ்சரனே) எண் குணங்களும் இடங்கொண் டிருப்பவனே! (உன்னை நான்) முருகா என்றும், குமரா என்றும், குகா என்றும் (மொழிந்து) ஜெபித்து உருகும் படியான (செயல்) ஒழுக்க நிலையைத் (தந்து) எனக்கு அருளி (உணர்வு) ஞான நிலையை என்று அருள்வாய் — எப்போது எனக்கும் பிரசாதிப்பாய்—எப்போது அருள்புரிவாய் என்றபடி.

(சு-உ.) குருமூர்த்தியே! முருக, குமர, குக என உருகும் பத்திநிலையைத் தந்து ஞான உணர்வை எனக்கு அருள்புரி வாயாக.

(கு-உ.) (1) முருகா, குமரா, குகா, கந்தா, சேந்தா, கடம்பா இவை ஆறுமே முருகருக்கு உகந்த மந்திர நாமங்களாம்; ஜெபிக்கப் பலன் தருவனவாம்.

(i) முருகா என ஓர் தரம் ஓதடியார் முடிமேல் இணை தாள் அருள்வோனே! (திருப்புகழ் 851).

'ஒருகால் – முருகா பரமா குமரா உயிர் கா என ஓதருள் தாராய்'—திருப்புகழ் 851.

(ii) 'குமார சரணஞ் சரணம் என்று அண்டர் குழாம் துதிக்கும்'—கந்தரலங்காரம் 87.

'குமர சரண் என்று கூதளப், புதுமலர் சொரிந்து கோமளப், பதயுகளபுண்டரீகமுற்றுணர்வேனோ'
—திருப்புகழ் 212.

'செங்கோடைக் குமரன் என எங்கே நினைப்பினும் அங்கே என் முன்வந் தெதிர் நிற்பனே'
—கந்தரலங்காரம் 104.

'குமர! குக! கந்த'—திருப்புகழ் 501.

(iii) குகா – 'ஆறெழுத்தை நினைந்து 'குகா குகா' என வகை வராதோ'—திருப்புகழ் 326.

(iv) கந்தா – 'கந்தா என்றேத்தும்படி'-திருப்புகழ் 1183 'கந்தா எனும்பொ செஞ்சேவல் கொண்டு வர வேணும்'—திருப்புகழ் 367.

(v) சேந்தா – 'சேந்த என்னில் ...... புந்தி தடுமாறவே தரும் சேதமின்றே'—கந்தரந்தாதி 48.

'வேந்தா கடம்பு புனைந்தருள் சேந்தா சரண் சரண் என்பது வீண்போம தொன்றல'—திருப். 1187.

'வேந்தன் என் சேந்தன் என்னும் என் மெல்லியல் இவளே'—திருவிசைப்பா 7–1.

(vi) கடம்பா – 'கந்தமுருக கடம்ப தனிமயில் கொண்டு பார்சூழ்ந்தவனே'—திருப்புகழ் 64.

'தகட்டிற் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாளிணைக்கே புகட்டி'—கந்தரலங்காரம் 82.

'கடம்ப வேலா'—திருப்புகழ் 209.

'சேந்தனைக், கந்தனைக், கடம்பனை'–கந். அலங். 72.

(2) பொரு புங்கவர் — அசுரர்களொடு பொருகின்ற—போர் செய்கின்ற புங்கவர் – தேவர்கள் எனலுமாம்; போர் செய்த வீரவாகு ஆதிய சிரேஷ்டர்கள் எனவும் பொருள் கூறுவார் உளர்.

(3) எண்குண பஞ்சரன் – எண் குணங்கள்—திருப்புகழ் 766, பக்கம் 282, திருப்புகழ் 876, பக்கம் 561 கீழ்க்குறிப்பு.

எண் குணங்கள் — அநந்த ஞானம், அநந்த வீரியம், அநந்த தரிசனம், அநந்தசுகம், நிர்ந்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், அழியா இயல்பு என இவை (சிலப்பதிகாரம் 10-188 உரை.

பஞ்சரம் — இடம்: கூடு. ''முருகன் ......... முநி குண பஞ்சரன்''—சித்து வகுப்பு அடி 81.

## 16. பேராசை அற

பேராசை எனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையேன் உழலத் தகுமோ
வீரா முதுசூர் படவேல் எறியுஞ்
சூரா சுர லோக துரந்தரனே.

(அந்.) வீரா! முதுசூர் ... துரந்தரனே; பேராசை ...... தகுமோ!

(பொ–உ.) வீரனே! பழமையான சூரன் (பட) இறந்துபட, வேலாயுதத்தை (எறியும்) செலுத்தின (சூரா) சூரனே! (சுரலோகம்) தேவர் உலகின் (துரந்தரனே) பொறுப்பை மேற்கொண்டு அதைக் காப்பாற்றினவனே! பேராசை என்கின்ற (பிணியில்) நோயில் (பிணிபட்டு) கட்டுண்டு (ஓரா) நல்லது இன்னதென்பதைத் தெளியாத (வினையேன்) செயலாளனாகிய நான் (உழல) இவ்வாறு இங்கு அலைச்சல் உறல் (தகுமோ) நீதியோ! தகுதியோ! (தகுதியன்று–ஒரு லோகத்தின் க்ஷேமப் பொறுப்பைத் தாங்கின நீ இந்த ஏழை ஒருவனைப் புரக்கும் பொறுப்பை மேற்கொள்ளல் ஆகாதா என்றபடி).

(சு–உ.) தேவர் உலகைப் புரந்தவனே! ஆசை என்னும் பிணியில் யான் துன்புறலாமா?

(கு–உ.) (1) இந்தச் செல்யுளில் முதல் இரண்டடிக்கும் பின் இரண்டடிக்கும் பொருத்தம் உண்டு: சூரன் என்னும் பிணியில் வேதனைப்பட்ட தேவர்களை அப்பிணியை நீக்கிக் காப்பாற்றின நீ, ஆசை என்னும் பிணியில் வேதனைப்படும் என்னை அப்பிணியை நீக்கிக் காப்பாற்றுதல் ஆகாதா! தயைகூர்ந்து என்னையும் புரத்தருள் என்றதாம்.

(2) ஒருவாற்றானும் ஒருகாலும் நிரம்பாத இயல்பினை உடையது அவா (பேராசை) அதனால் அதை 'ஆரா இயற்கை அவா' என்றார் திருவள்ளுவர். அந்தப் பேராசையை ஒருவன் நீக்குவானாயின் அந் நிலையே 'பேரா இயற்கை தரும்' என்றார்–அதாவது ஒரு நிலையதான வீட்டின்பத்தை அவன் பெறுவான் என்றார். களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களும் முதலாயின இன்றி உயிர் நிரதிசய இன்பத்ததாய் நிற்றலின் வீட்டினைப் 'பேரா இயற்கை' என்றார் (திருக்குறள் உரை 370). மேலும் பேராசையே (அவாவே) பிறப்பினும் வித்து ஆதலின் அவா ஒழியில் பிறப்பு ஒழியும் என்றபடி; பிறப்பு ஒழியின் துன்பம் ஒழிந்தது. 'அவா என்ப ... பிறப்பீனும் வித்து'; 'அற்றவர் என்பார் அவா அற்றார்' 'அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்' 'இன்பம் இடையறாது ஈண்டும் அவா ... கெடின்'—என்றெல்லாம்வரும் திருக்குறட் பாக்களைக் காண்க (361, 365, 368, 369).

(3) 'முதுசூர்' ஞானசக்தியாலன்றி வேறுவகையால்அழிவுபடாமல் சூரன் இருந்ததுபோலப் பேராசையும் முருகன் திருவருளாம் ஞானோபதேசத்தாலன்றி வேறுவகையால் ஒழியாது

என்பதாம். சூரன் நீண்ட ஆயுளைக் கொண்டிருந்தான் ஆதலின் 'முதுசூர்' என்றார். ஆசையும் அளவற்றதாதலின் முதுசூருக்கு நிகராயிற்று.

(4) ஆராய்ந்து நல்லது இது என்று தெளிந்துணரவிடாது 'பேராசை'; அது நல்லறிவை மறைக்கும்; அதனால் 'ஓரா வினையேன்' என்றார். ஓர்தல் – ஆராய்ந்து தெளிதல்.

## 17. அறத்தை, மெய்ம்மையைப் பற்றுக

யாமோதிய கல்வியும் எம்மறிவுந்
தாமேபெற வேலவர் தந்ததனாற்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
[1]நாமேல் நடவீர் நடவீர் இனியே.

(பொ–உ.) (யாம்) நாம் (ஓதிய) கற்று அறியும் கல்வியும், எம்அறிவும் (தாமேபெற வேலவர் தந்ததனால்)வேலவர்–வேலாயுதப் பெருமான் தாமே பெற — தாம் பெறுவதற்காகவே, (தந்ததனால்) நமக்கு அளித்துள்ள காரணத்தால் உலகினரே! நீங்கள் செய்யவேண்டியதென்ன என்றால்) பூ (மேல்) பூமியில் உள்ள அளவும், (மயல்போய்) ஆசை மயக்கங்களை நீக்கி, (அறம்) அறச் செயல்களையும், (மெய்) உண்மையையும் (புணர்வீர்) கடைப்பிடித்து அந்நெறியிற் சேருங்கள்; (நாமேல் நடவீர் நடவீர் இனியே) இனி–இனிமேல் (இறைவன் உங்களுக்குக் கொடுத்த நாவைக்கொண்டு (நடவீர் நடவீர்) அவன் புகழைப் பாடுங்கள், பாடுங்கள்.

(சு–உ.) முருகவேள் நமக்குக் கல்வியும் அறிவும் தாம் பெறவே தந்துள்ளாராதலின் அவர் புகழையே பாடுங்கள் பாடுங்கள்.

(கு–உ.) (1) இறைவன் நமக்குக் கொடுத்த கல்வியையும் அறிவையும் அவருக்கே ஒப்படைத்தல் ஞான நெறியாகும். இக் கருத்தை "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே' — எனவரும் திருமந்திரம் 81–ல் காண்க. இறைவன் நமக்கு அளித்த கண்ணும், கையுமே அவருக்குப் பயன்படவேண்டியன — 'எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க, கங்குல் பகல் எங்கண் மற்றொன்றும் காணற்க' — திருவாசகம் 7–19.

'சிவபிரானும் புகழ்ச்சி விருப்பன் போலும்' எனப் பெரியோர் கூறியபடி தாம் அளித்த ஆற்றல்கொண்டு தம்மை அடியார் பாடுதலே இறைவனுக்கு மகிழ்ச்சி தருவதாம்— என்பது ஒருண்மை. 'தம்மையே பேசிப் பிதற்றப் பெருமை தருவார்'—சம்பந்தர் 2-60-8.

"ஆரூரர் இனிதமர்ந்தார்......

"தாம் படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ்மாலைகளால்
நாம் படிமக்கலம் செய்து தொழுதுய்மடநெஞ்சமே"
—அப்பர் 4-102-3.

"அர்ச்சனைபாட்டே ஆகும்......... சொற்றமிழ் பாடு
கென்றார் தூமறை பாடும் வாயார்"
—பெரியபுராணம்-தடுத்தாட். 70.

"நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்"
—(அப்பர் 5-90-5).

"சொல்லும் நா நமச்சிவாயவே"—சுந்தரர் 7-48.

என வருவன காண்க.

(2) 'இனி நாம் மேல் நடவீர்' எனப் பிரித்து 'நாம்' என்பதற்கு நீங்கள் (நீவிர்) எனவும் பொருள் கொள்ளலாம். நாம் என்பது முன்னிலையில் நீ, நீங்கள் எனவரும் இடங்களும் உண்டு (திருக்கோவையார் 164 உரை). மேலே சொன்ன 'நாம் படிமக்கலம் செய்து தொழுதுய் மடநெஞ்சமே' என்ற இடத்து 'நாம்' என்பது 'நீ' எனப் பொருள்படும்: 'நெஞ்சமே நீ...தொழுது உய்' என்பது பொருள். படிமக்கலம்- சிறியோர் பெரியோர்க்குச் சமர்ப்பிக்கும் காணிக்கைப் பொருள்.

அற மெய்ப் புணர்வீர் அந்த அறநெறியாம் உண்மை நெறியினில் இனிமேல் பொருந்தி நடப்பீர்களாக, நடப்பீர் களாக எனப் பொருள் கூடும்.

(3) நாம் ஏன் - அச்சம் ஏன்? நாம்—அச்சம் - எனவும் பொருள் காண்கின்றனர்.

(4) அற மெய்ப் புணர்வீர் - என்பதற்கு அற - நன்றாக, மெய் - உண்மை நெறியைப் புணர்வீராக எனவும் பொருள் காணலாம்.

நாமேல் நடவீர்-என்பது நாவைப் பெற்றதின் பயன்பெறு மாறு முருகன் புகழை நாவைக்கொண்டு ஓதுமின் என்றபடி ; 'நாமே நடவீர்' என்றும் பாடம்.

## 18. துதி

உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா
அதிகா அநகா அபயா அமரா
பதிகா வலசூர பயங் கரனே.

(பொ-உ.) உதியா — உதியாமலும் — பிறவாமலும், மரியா – இறவாமலும், (உணரா) உணராமலும், (மறவா) மறவாமலும், (விதி, மால்) பிரமனும் திருமாலும் (அறியா) அறியாமலும், (விளங்குகின்ற) விமலன்-பரிசுத்தமூர்த்தியாம் சிவபிரானது புதல்வனே! (அதிகா) யாவரினும் மேம்பட்டவனே! (அநகா) பாபமற்றவனே! (அபயா) அபயம்(புகலிடம்) அளிக்கும் மூர்த்தியே! (அமராபதி) தேவர்கள் ஊராகிய அமராவதியைக் (காவல) காத்தருளும் பெருமானே! (சூர பயங்கரனே) சூரனுக்கு அச்சம் தந்தவனே!

(சு-உ.) பிறப்பிறப்பு, நினைப்பு மறப்பு இல்லாதவனும், பிரமன் மாற்கு எட்டாதவரும் ஆகிய சிவபிரானது குமாரனே! மேலோனே! பரிசுத்தனே! புகலிடமே! தேவரூரைப் புரந்தவனே! சூரனுக்கு அச்சம் விளைவித்தவனே!

(கு-உ.) (1) சிவபிரான் உதித்தல் மரித்தல் இல்லாதவர். 'பிறவா யாக்கைப் பெரியோன்'—சிலப்பதிகாரம் 5–169.

"சோணேசர் — இல்லிற் பிறந்த கதையும் கேளேம் பேருலகில் வாழ்ந்துண் டிறந்த கதையும் கேட்டிலேம்"
—அருணகிரி அந்தாதி 70.

"உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்பெண் ணத்தொலையா தே"—காளமேகம்.

"பெண்ணமரும் சடைமுடியார் ...... பிறப்பிலார் இறப்பிலார்"—அப்பர் 6–10–8.

(2) உணரா மறவா – நினைப்பு மறப்பு அற்றவர் நெஞ்சம் தான் விமலனுக்கு இருப்பிடம்.

"நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றிருக்கும் விமலன் இருக்கும்"
—திருமந்திரம் 2970.

கந்தரலங்காரம் 55 குறிப்பைப்பார்க்க. தொகுதி 6, பக்கம் 54.

(3) விதிமால் அறியா விமலன் – அரியும் அயனும் சிவனது அடி முடி தேடி அறியாமல் நின்ற வரலாறு — திருப்புகழ் 319 (பக்கம் 292); 535 (பக்கம் 222) கீழ்க்குறிப்பு.

(4) உதித்து மரித்து உணர்ந்து மறந்து – இருக்கும் நிலையுள்ள காரணத்தால் விதியும் மாலும் விமலனை அறிய இயல இல்லை என்பதும் தொனிக்கும்.

(5) அதிகன்–கடவுள். 'பெரியார்கட் கெல்லாம் பெரியாய் நீயே'—அப்பர் 6-38-5.

(6) சூர்மாவின் உயிரைக் குடித்த காரணத்தால் சூர பயங்கரன். "மாஉயிர் வௌவலில் தீவிழிக் கூற்று"

—கல்லாடம் 56.

## 19. வறுமையின் கொடுமை

வடிவுந் தனமும் மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வேல் அரசே
மிடியென்றொரு பாவி வெளிப் படினே.

(அந்.) அடியந்தம் ... வெளிப்படினே, வடிவும் ... குடி போகியவா.

(பொ–உ.) (அடி அந்தம்) ஆதியும் அந்தமும் - முதலும் முடிவும் இல்லாத (அயில்வேல்) கூரிய வேலை ஏந்திய அரசே! மிடி–வறுமை, என்ற–என்கின்ற ஒரு பாவி வெளிப்பட்டால் (தோன்றினுல்) வறுமை என்கின்ற ஒரு பாவி பிடித்தால் அப்போதே, (வடிவும்) அழகும், (தனமும்) செல்வமும், (மனமும்) நல்ல மனமும், (குணமும்) நல்ல குணமும், (குடியும்) பிறந்த குடியின் பெருமையும், (குலமும்) பிறந்த குலத்தின் பெருமையும், குடிபோகியவா–விட்டுவிட்டு வேறுஇடத்துக்குக் குடிபோய் விட்டன - விட்டு அகன்றன (ஆ) வியப்புக் குறிப்பு.

(சு–உ.) வறுமை தோன்றின் வடிவு, தனம், மனம், குணம், குடி, குலம் என்ற ஆறும் நம்மைவிட்டு ஓடிப்போம்.

(கு–உ.) வறுமையின் கொடுமையை அறிந்தவர் அருணகிரியார். 'வறுமையாகிய தீயின்மேற் கிடந்து நௌியு நீள் புழுவாயினேற்கிரங்கி அருள்வாயே' என்ருர் திருப்புகழிலும் 753, பக்கம் 244 கீழ்க்குறிப்பு.

"வறுமை போல இன்னாது வறுமை யன்றி வேறில்லே, மறுவின் மொழிகள் சோர்வுபடும், வாய்த்த குடிநற் செயல் மொழிகள், இறுதிபடும் மற்றிரப்பாதி எல்லாத்துயரும் உடனுகும்"—விநாயக புராணம்-அரசியற்கை 152. "முழுதுங் கெடுக்கும் மிடி"—கந்தர் அலங்காரம் 33 (பக்கம் 33).

'இன்மை என ஒரு பாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும்'—எனவரும் திருககுறளும் 1042, 'அழுக்காறென ஒருபாவி' என்ற திருக்குறள் (168) உரையில் அழுக்காற்றினைப் பாவி என்றார் கொடியானைப் பாவி என்னும் வழக்குண்மையின்' என்றதும் ஈண்டு கவனிக்கற்பாலன.

## 20. உபதேசம் பெற்றதை நினைந்து வியத்தல்

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேசம் உணர்த் தியவா
விரிதாரண விக்ரம வேள்இமையோர்
புரிதாரக நாக புரந் தரனே.

(அந்.) விரிதாரண ... நாகபுரந்தரன் (ஏ) அரிதாகிய ... உணர்த்தியவா!

(பொ-உ.) (விரி தாரண) மிகவும் உறுதியான, நிலையானதான (விக்ரமம்) பராக்ரமத்தை உடைய (வேள்) செவ்வேள் – முருகன் (இமையோர்) தேவர்கள் (புரி) விரும்பித் தியானித்துச் சொல்லும் (தாரக) பிரணவப் பொருளே! (நாகபுரம்) தேவருலகைத் (தரனே) தாங்குபவனே – தாங்கிக் காப்பாற்றுபவனே! (அரிதாகிய) கிடைத்தற்கு அருமையான (மெய்ப்பொருளுக்கு) உண்மைப் பொருளைப் பெறுதற்கு (அடியேன்) அடியவனுகிய நான், (உரிதா) தகுதியுள்ளவனுகக் கருதி உபதேச மொழியை (உணர்த்தியவா) போதித்த முறை வியக்கத் தக்கதே.

(சு-உ.) தேவருலகைப் புரக்கும் நீ அடியேனைத் தகுதியுள்ளவனுகக் கருதி மெய்ப்பொருளை உபதேசித்தது ஆச்சரியமானதே.

(கு-உ.) (1) பின் இரண்டடிக்கும் முன் இரண்டடிக்கும் பொருத்தம்:—மகா பெரியவன் நீ; தேவருலகைத் தாங்கும் சிறந்தோன் நீ — அத்தகைய நீ இழிபொருளாம் என்னை ஓர் பொருளாகக் கருதி மெய்ப்பொருளை உபதேசித்தது வியக்கத் தக்கதே.

"அயன் தேட அங்ஙனே பெரிய நீ சிறிய என்னை யாள் விரும்பி என் மனம் புகுந்த எளிமையை என்றும் நான் மறக்கேன்" — என்புழிப்போல—திருவிசைப்பா 13–1.

இச் செய்யுளும் — செய்யுள் 8, 11, 12 போல – அருணகிரி யாரின் வரலாற்றுக்கு விளக்கம் தருவது.

(2) முருகன் - தாரகன்; பிரணவத்துள் விளங்குபவன். 'ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகன் உருவம்"—கந்த ரலங்காரம் 55 குறிப்புரை, தொகுதி 6, பக்கம் 55 பார்க்க. "தாரகத் துருவமாம் தலைமை எய்திய ஏரகத் தறுமுகன்"— கந்தபுராணம்–கடவுள் வாழ்த்து 15.

புரி — புரிதல் – எப்பொழுதும் சொல்லுதல்–விரும்புதல். "இறைவன் ... புகழ் புரிந்தார்"—திருக்குறள் 5.

## 21. திருவடி தீக்ஷை பெற

கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூர விபாட ணனே.

(அந்.) வரதா ... விபாடணனே! கருதா ... இசைவாய்.

(பொ–உ.) வரதா — கேட்ட வரங்களை அளிக்கும் மூர்த்தியே, முருகனே! மயில் வாகனக் கடவுளே! (விரத அசுர சூர) விரத - அருவருப்புக்கு உரிய அசுரனாகிய சூரனை (விபாடணனே) (வேல்கொண்டு) பிளந்தவனே! கருதா மறவா நெறி - நினைப்பு மறப்பு அற்ற வழியைக் (காண) கண்டுகொள்ள எனக்கு (நீ உன்) (இருதாள்) இரண்டு திரு வடிகளாம் (வனசம்) தாமரையைத் தருதற்கு (என்று) (இசைவாய்) மனம் இரங்குவாய்; (நான் என்று உன் திருவடி தீக்ஷை பெறுவேன் என்றபடி).

(சு–உ.) சூரனை அட்டவனே! நீ என்று எனக்குத் திருவடி தீக்ஷை செய்வாய்!

(கு-உ.) (1) கருதா மறவா நெறி - 'உணரா மறவா' என்றார் 18–ஆம் பாடலில். 'நினைப்பும் மறப்பும் அறார்'— கந்தரலங்காரம் 55 குறிப்பைப் பார்க்க (பக்கம் 54). 'நிர்க் குணப்பூண் டென்னை மறந்திருந்தேன்' — என்பதும் இதுவே. —(அலங்காரம் 19, பக்கம் 21).

(2) இருதாள் தர : "யான் எனதென் றற்ற இடமே திருவடி" என்றுராதலின் (கந்தர் கலிவெண்பா 34) அகங்கார மமகாரம் அற்ற நிலையை என்று தருவாய் எனலுமாம்.

(3) விரதம் – அருவருப்பு. 'விரதமாயை புரி சகுனி'— வில்லிபாரதம்–நாடுகர் 32 (Lexicon). விரதா – அடியாரைப் புரக்கும் விரதம் (நோன்பு) பூண்டவனே — "தன் கடன் அடியேனையுந் தாங்குதல்"—அப்பர் 5–19-9. சுர–தேவனே! எனவும் பிரித்துப் பொருள் காண்பர்.

(4) விபாடணன் – விபாடம் - பிளக்கை ; விபாஷணன் — நட்புக்கு உரிய பேச்சு இல்லாதவன், பகைவன்! (பாடணம் – பேச்சு) எனவும் பொருள் காண்பர். வி - இன்மை குறிக்கும் 'விராகம்' என்பதிற்போல.

சூர் – அவி – பாடணன் – சூரனுடைய ஆண்மையை (அவி) குலைக்கவல்ல பாடணன் – பேச்சை உடையவனே எனலுமாம்.

## 22. தன் தவப் பேற்றை நினைந்து மகிழ்தல்

காளைக் குமரேசன் எனக்கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல் வள்ளி பதம்பணியும்
வேளைச் சுரபூ பதி மேருவையே.

(அந்.) பாளைக் குழல் ... மேருவையே காளைக் குமரேசன் ... எய்தியவா.

(பொ–உ.) (பாளை) கமுகின் பாளை - தென்னம் பாளை போல நீண்ட (குழல்) கூந்தலை உடைய (வள்ளி பதம்) வள்ளி யின் பாதங்களைப் (பணியும்) பணிகின்ற (வேளை) செவ்வேள் முருகனை, (சுர பூபதி) தேவர்களுக்குத் தலைவனாய் - அரசாய் (மேருவை) மேருமலை ஒத்தபெருமை கொண்டவனை, 'காளைக் குமரேசன்' - காளைப் பருவத்துக் குமாரமூர்த்தி என்று (கருதி) தியானித்துத் (தாளை) அவரது திருவடியைப் (பணிய)பணியும் படியான (தவம்) தவநிலையை (எய்தியவா) நான் அடைந்த பேறு என்ன அற்புதகரமானது!

(சு–உ.) வள்ளி பாதம் பணிந்த பெருமானது பாதத் தைப் பணியும் தவம் எனக்குக் கிடைக்க நான் என்ன தவம் செய்தேனோ!

(கு-உ.) (1) பாளைக் குழல் — " பசும்பாளை பொலிந்து பிடித் தடக்கை பின்னிவிட்ட கூந்த லெனப் பேசு "
—இரத்தினச் சுருக்கம் 19.

(2) இந்தச் செய்யுளிலும் முதல் இரண்டடிக்கும் பின் இரண்டடிக்கும் பொருத்தம் உண்டு. வள்ளியானவள் 'தலைப் பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்ற நிலையிற் பத்திசெய் ததனால் அவளைப் பணிந்து அவளிட்ட குற்றேவலையும் செய்யக் காத்திருந்தார் முருகவேள். அத்தகைய கருணைக் கடலின் திருவடியை ஒருவாறு பணியும் தவநிலை எனக்குக் கிடைத் ததே! நானும் ஒரு பாக்கியசாலிதான் – ஏனெனில் முருகன் வள்ளியின் அடியான் என்றால், நான் முருகனைப் பணிந்ததால் வள்ளியின் அடியார்க் கடியனாய் விட்டேன் என்றவாறு.

## 23. திருவடியை நினையாது கெடலாமோ

அடியைக் குறியா தறியா மையினான்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேல் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே.

(அந்.) வடிவிக்ரம...பூதரனே! அடியைக்...முறையோ!

(பொ-உ.) (வடி) கூர்மை கொண்டதும், (விக்ரமம்) பராக்ரமம் கொண்டதுமான வேல் ஏந்திய (மகிபனே)அரசே! (குறமின்) குறமின்னாள் வள்ளியாம் (கொடியை) கொடி போன்ற நங்கையைப் (புணரும்) சேர்ந்த (குணபூதரனே) குணமலையே! (அடியை) உனது திருவடியைக் (குறியாது) குறித்துத் தியானிக்காமல், (அறியாமையினால்) அறிவின்மை யால் (முடியக்கெடவோ) அடியோடு நான் அழிந்துபட லாமோ! (முறையோ முறையோ) இது நீதியோ! நீதியோ! (நீதியன்று என்றபடி).

(சு-உ.) வேலனே! வள்ளி நாயகனே! உன் திருவடியைத் தியானியாது நான் அழிதல் நீதியோ.

(கு-உ.) (1) முறையோ முறையோ – அடுக்குத்தொடர் இது. 'அவலக்' குறிப்பில் வந்த அடுக்குத் தொடர்' — நன்னூல் சூ. 395. அவலம் – வருத்தம்; கிலேசம்.

(2) மலைச்சாரல்களிற் கொடி படரும், மின்னற்கொடியும் படரும்; முருகன் என்னும் குணமலை மீது வள்ளி என்னும் மின்கொடி படர்ந்தது என்க.

(3) வள்ளிக்கு அருள் பாலித்த நீ என் அறியாமையைக் கெடுத்து என்னையும் ஆட்கொள்ளல் ஆகாதா என்றபடி.

## 24. திருவருளைப் பெற

கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வேன் அருள் சேரவும் எண்ணுமதோ
சூர்வே ரொடு குன்று தொளைத்தநெடும்
போர்வேல புரந்தர பூ பதியே.

(அந்.) சூர்வேரொடு ...... பூபதியே! கூர்வேல் ......... எண்ணுமதோ!

(பொ-உ.) (சூர்) சூரனாகிய மாமரத்தை வேரளவுக்கும், (குன்று) அவனுக்கு அரணாயிருந்த எழுகிரியையும் தொளைத்த-ஊடுருவித் தொளைத்த, (நெடும்போர்) பெரிய போர் செய்ய வல்ல, (வேல) வேலாயுதத்தை ஏந்திய கடவுளே! புரந்தரபூ-இந்திரனுடைய உலகத்துக்குப் (பதியே) அரசே! தலைவனே! (நான்) (கூர் வேல் விழி) கூரிய வேல் போன்ற கண்களை உடைய (மங்கையர்) மாதர்களின் கொங்கையிலே (சேர்வேன்) சேரும் புத்தியை உடையவனா யிருக்கின்றேன்; அத்தகைய என் மனம் (அருள் சேரவும்) உனது திருவருள் கூடுமாறு (எண்ணுமதோ) (எண்ணுமோ) எண்ணும் பாக்கியத்தைப் பெறுமோ!

(சு-உ.) சூரனை அட்ட வேற் பெருமானே! மங்கையர் கொங்கையை எண்ணும் என் மனம் உன் திருவருளை நாடாதோ!

(கு-உ.) (1) மாயையில் வல்ல சூரனை அடக்கிய நீ-மாதர் மாயையிற் படும் என் புத்தியை நன்னெறிப் படுத்தலாகாதா! எனப் பின் இரண்டடிக்கும் முன் இரண்டடிக்கும் பொருத்தம்.

(2) சூர் வேரொடு - சூரனை அவனுடைய சுற்றத்துடன் — எனவும் பொருள் காணலாம். 'கிளைபட் டெழுசூர்' என்ற இடத்திற்போல (அநுபூதி 4.)

(3) மங்கையர் மீது வைத்த எண்ணத்தைத் திருப்பி இறைவன் திருவடியில் வைத்தால், இறைவன் பெரும்பேறு அளிப்பான் : அங்ஙனம் திருப்ப வல்லது இறைவன் திருவருள் தான். இதனைத் 'தத்தை அங்கனையார் தங்கள்மேல் வைத்த தயாவை நூறுயிரங் கூறிட், டத்தில் அங்கொரு கூறு உன்கண் வைத்தவருக்கு அமருலகளிக்கும் நின்பெருமை' என்ற திருவிசைப்பாவாலும் (13-8), 'மடவார் திறத்தழுந்தும் என துளத்தைத் திருப்பித் தன்சீர்க் கொழும்புகழி னினிதழுத்திப் புதுக்கியருள் தணிகைவரைக் குமரன்'—எனவரும் தணிகைப் புராணத்து ஈற்றுச் செய்யுளாலும் அறிகின்றோம். தமக்கிருந்த பெண்ணாசை முருகன் திருவருளால் தொலைந்தது என்று அருணகிரியார் கந்தரலங்காரம் 29-ஆம் பாடலில் தெளிவுறக் கூறியுள்ளார் (தொகுதி 6, பக்கம் 29-30).

## 25. வினை வாழ்வு அலைச்சல் அற

மெய்யே எனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ அடியேன் அலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலேறிய சேவகனே.

(அந்.) கையோ அயிலோ ... சேவகனே! மெய்யே ...... தகுமோ.

(பொ-உ.) (கையோ) திருக்கரங்கள் மாத்திரமோ, (அயிலோ) கையில் ஏந்தும் வேல் மாத்திரமோ, (கழலோ) திருவடிகள் மாத்திரமோ, (முழுதும்) எல்லா உறுப்புக்களும், (செய்யோய்) செந்நிறத்தில் அமைந்தவனே! மயில் ஏறிய (சேவகனே) பராக்ரமசாலியே! (மெய்யே என) சதமான உண்மை வாழ்வென்று (வெவ்வினை) கொடிய வினைக்கு ஈடான (வாழ்வை) இந்த வாழ்வில் (உகந்து) களித்து மகிழ்ந்து, ஐயோ! அடியேன் அலைதல் (தகுமோ) நீதியாமோ! ஆகாது என்றபடி.

(சு-உ.) மயில் வீரனே! இந்தக் கொடிய வினை வாழ்வில் நான் அலைச்சல் உறல் நீதியா!

(கு-உ.) (1) நீ முழுதும் செம்மை (சீர்) வாய்ந்தவன்; அந்த செம்மையை எனக்கு அளிக்க உன்னால் ஆகாதா— என்பது தொனிக்கும்.

(2) முருகன் முழுதும் செய்யோன் (செந்நிறத்தவன்), முழுதும் அழகன் என்பது —

"செய்யன் சிவந்த ஆடையன்"—திருமுருகா. 206.

"உடையும் ஒலியலும் செய்யை மற்றுங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவும் உருவத்தீ ஒத்தி, முகனும்
விரிகதிர் முற்று விரிசுடர் ஒத்தி"
—எனவரும் பரிபாடலாலும் (19–97).

"சிவப்பின் செக்கர் நிறமாயிருக்கும் பெருமாளே"
"முழுதும் அழகிய குமர"—எனவரும் திருப்புகழாலும் (275, 1277) அறியக் கிடக்கின்றது.

## 26. திருவருள் பெற

ஆதாரம் இலேன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்று நினைந்திலையே
வேதாகம ஞான விநோதமனோ
தீதா சுரலோக சிகாமணியே.

(அந்.) வேதாகம ...... சிகாமணியே! ஆதாரம் ......... நினைந்திலையே.

(பொ–உ.) (வேத ஆகம) வேதங்களிலும் ஆகமங்களிலும் சொல்லப்பட்டவனே! வேத முதல்வனே! வேதம் தொகுத்தவனே! ஆகமம் வகுத்தவனே! ஞான விநோத மூர்த்தியே! (மனோதீதா) மனத்துக்கு எட்டாதவனே! (சுரலோக சிகாமணியே) தேவலோகத்தின் நாயக மணியே! (ஆதாரம் இலேன்) நான் ஒரு துணையும் இல்லாதவன், அத்தகைய நான் உனது திருவருளைப் பெறுமாறு, நீதான் (ஒரு சற்றும்) ஒரு சிறிதளவேனும் (நினைந்திலையே) நினைக்கவில்லையே! (ஈதென்ன பாவம்)

(சு–உ.) ஞான மூர்த்தியே! ஆதாரமற்ற நான் உனதருளைப் பெறுமாறு ஒரு சற்று நீ நினைத்தலாகாதா!

(கு–உ.) (1) இறைவன் — வேத முதல்வன் — சம்பந்தர் 1–32–4. வேதம் தொகுத்தவன், ஆகமம் வகுத்தவன்—

'தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்' —சம்பந்தர் 3-23-6.

(2) ஞானவினோதன் — 'நீயான ஞான விநோதம்' —கந்தரலங்காரம் 46.

(3) மனோதீதன்-இறைவன். 'மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே'—திருவாசகம் 1-45.

(4) சுரலோக சிகாமணி — கந்தர் அநுபூதி 11 பார்க்க.

## 27. வாழ்வை வெறுத்தல்

மின்னே நிகர்வாழ்வை விரும்பிய யான்
என்னே விதியின் பயன்இங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலேறிய வானவனே.

(அந்.) பொன்னே மணியே ... வானவனே! மின்னே... இதுவோ.

(பொ-உ.) (பொன்னே) பொன்போல அருமை வாய்ந்தவனே! (மணியே) மணிபோல ஒளி வீசுபவனே! (பொருளே) உண்மைப் பொருளாய் விளங்குபவனே! செல்வம் போல இன்றியமையாதவனே! (அருளே) வினைகளை ஒழித்து வீடளிக்கும் கருணை மூர்த்தியே! (மன்னே!) நிலைபெற்ற அரசே! (மயிலேறிய வானவனே) மயில்வாகனம் கொண்ட தெய்வமே! (மின்னே நிகர் வாழ்வை) மின்னைப்போலத் தோன்றி உடனே மறையும் (அநித்யமான) வாழ்வை, (விரும்பியயான்) விரும்பினவனாய் உள்ள நான்; (இங்ஙனம் இருப்பதற்குக் காரணம்) (என்னே) நான் என்ன என்று சொல்வேன் — எனக்கு விளங்க இல்லையே! (விதியின் பயன் இங்கு இதுவோ) என் தலைவிதியின் பயன்தானோ இங்கு இது (இவ்வாறிருத்தல் என் தலைவிதியின் காரணமோ நான் இந்த மின்னல் வாழ்வில் ஆசைப்பட்டிருத்தல்!

(சு-உ.) மயில் வாகனப் பெருமானே! இந்த நிலையற்ற வாழ்வை நான் விரும்பியிருப்பதற்குக் காரணம் என் தலைவிதி தானோ!

(கு-உ.) (1) வாழ்வு மின்னலுக்கு உவமை - தோன்றின உடனே கெடுதல். 'மின்னு மொக்குளும் என நனிவீயினும்

வீயும்' — சிந்தாமணி 2754. 'இன்பம் ...... மின்னின் ஒத்திருக்கும்' — சிந்தாமணி 1537. 'மின்னை ஒத்திலக ... யமன் வந்தடிக்கும் ஒரு மட்கலம்' — தாயுமானவர்–சிற்சுகோ. 1.

(2) விதியின் பயனிங்கு இதுவோ ...... மயிலேறிய வானவனே — அருளே — அருள்புரிவாயாக எனவும், பொருளே அருளே – உண்மைப் பொருளை அருள்புரிவாயாக எனவும் கூட்டிப் பொருள் காணவும் இடமுளது.

## 28. பேரின்ப நிலை

ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.

(அந்.) ஆனா அமுதே ...... ஞானாகரனே, யானாகிய ...... தற்பரமே; நவிலத் தகுமோ.

(பொ–உ.) (ஆனா அமுதே) கெடுதலில்லாத அமுதன்ன சுவைப் பொருளே! (அயில்வேல்) கூரிய வேல் ஏந்திய அரசே! (ஞான ஆகரனே) ஞானத்துக்கு இருப்பிட மானவனே! (யானாகிய என்னை) யான், யான் எனறு ஆணவ நிலையிற் சொல்லும் என்னை (விழுங்கி) தன்னுட்கொண்டு (வெறும் தானாய்) தனித்த பரமாய் – எல்லாம் தானாகி (நிலைநின்றது) நிலைத்திருப்பதான (தற்பரம்) மேலான நிலையை இத்தன்மையது என்று (நவிலத் தகுமோ) எடுத்து விளக்கிச் சொல்ல முடியுமோ – முடியாது என்றபடி.

(சு–உ.) 'யான்' என்பது அற்ற மேலான நிலை அனுபவத்தை இத்தன்மைத்து என்று சொல்ல இயலாது.

(கு–உ.) (1) யான்–என்பதுஅற்ற நிலையின் அனுபவத்தை எடுத்துச் சொல்ல இயலாது. இதைச் 'சொல்லுகைக் கில்லையென்று எல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லை' என்றார் கந்தரலங்காரத்தில் (10); "அவ்வா றறிவார் அறிகின்றதலால் எவ்வா றொருவர்க் கிசைவிப்பதுவோ" என்றார் பின்னும் (அநுபூதி 30).

(2) ஜீவபோதம் முனைந்து நிற்கையில் சிவபோதம் மறையும்; சிவபோதம் முனைந்து நிற்கையில் ஜீவபோதம்

ஒழியும். "தன்னை யிழந்தவர்முன் யான் என்று சென்றிடுங் காசிப்பிரான்"—காசிக்கலம்பகம் 84. "தான் நின்றெனைத் தனக்குள்ளே ஒளிக்கும், யான் நின்றபோது எனக்குள்ளே ஒளித்திடும்"—பண்டார மும்மணி 4.

(3) 'என்னை விழுங்கி' —

"முழுமுதலாய் இப்போது வந்தான் காண் – எனை
விழுங்கிக் கொண்டான் காண்"

"பாலின்கண் நெய்யிருந்தாற் போலப் பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய் தற விழுங்கிக் கொண்டாண்டி"
—பட்டினத்தார்-அருட்புலம்பல் 113, 114.

## 29. அறியாமையைப் பொறுத்தருளுக

இல்லே எனுமாயையில் இட்டனை நீ
பொல்லேன் அறியாமை பொறுத்திலையே
மல்லே புரி பன்னிரு வாகுவில்என்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே.

(அந்.) மல்லே புரி ... வேலவனே! இல்லே ... பொறுத் திலையே.

(பொ-உ.) (மல்லே புரி) மற்போர் செய்தற்கு உற்ற தான (பன்னிரு வாகுவில்) பன்னிரண்டு தோள்களிலும் (என் சொல்லே) அடியேனது சொற்களையே — பாடல்களையே (புனையும்) ஏற்று அணிந்துகொள்ளும் (சுடர் வேலவனே) ஒளி வீசும் வேலாயுதனே! (இல்லே எனும்) இல்வாழ்க்கை என்னும் (மாயையில்) மாய வாழ்வில் (இட்டனை நீ) நீ இட்டனை — நீ என்னைச் சிக்க வைத்துள்ளாய்; (பொல்லேன்) கொடியவ னாகிய எனது (அறியாமை) அறிவீனத்தைப்(பொறுத்திலையே) பொறுத்து மன்னித்தாயில்லையே.

(சு-உ.) வேலவனே! என்னை மாயையிற் சிக்க வைத் தனையே! என் அறியாமையைப் பொறுத்தலாகாதா?

(கு-உ.) (1) இல்லே எனும் மாயை — இதனை "அக மாயை மடந்தையர் என்றயரும் சகமாயை" என்றூர் 5–ஆம் பாடலிலும்.

(2) மல்லே புரிதோள் – இறைவன் புயத்தை அங்ஙனம் கூறுவது வழக்கு.

" மற்பொரு திரள்புய மதயானை "—திருப். விநா. 1.
" ஆனை யுரிவை மற்புரி புயத்தினிது மேவுவர் "
—சம்பந்தர் 3–78–2.

(3) என் சொல்லே புனையும் ...... வேலவன் — " அடிமை தொடுத்திடு புன்சொல் ஒன்று நிந்தியாமற் புனைந்தன "— புயவகுப்பு 30. " அடிமை – ஆசுகவி – கவிமாலை சூடுவதும் " —சீர்பாத வகுப்பு 24. " அடிமை சொலுஞ் சொற்றமிழ்ப் பனீரொடு பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே " —திருப்புகழ் 186. 'வேலவனே' என்றார் வேலே மாயையை நீக்கவல்லதாதலின்.

## 30. உணர்த்திய ஞானம் சொல்ல இயலாது

செவ்வான் உருவில் திகழ்வே லவன்அன்
றொவ்வா ததென உணர்வித் ததுதான்
அவ்வா றறிவார் அறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே.

(பொ–உ.) (செவ்வான் உருவில்) சிவந்த வானத்தின் (செக்கர் வானத்தின்) உருவத்துடன் (திகழ்) விளங்கும் (வேலவன்) வேற்பெருமான், (அன்று) அடியேனுக்கு முதனாளில் (ஒவ்வாததென) ஒப்பாகாதது என – நிகரில்லாதது என இவ்வுபதேசத்துக்கு இணையானது வேறொன்று இல்லை என்று சொல்லும்படியாய் (உணர்வித்த அதுதான்) எனக்கு உபதேசித்த அந்த ஞான அனுபவ நிலைதான் (அவ்வாறு) அங்ஙனம் உபதேசம் பெற்று (அறிவார்) அறிபவர்கள் (தங்கள் உள்ளத்தில்) (அறிகின்றதலால்) அறிகின்றது அல்லால் அறிந்து அனுபவிக்க முடியுமேதவிர, (எவ்வாறு) எங்ஙனம் (ஒருவர்க்கு) பிறரொருவர்க்கு (இசைவிப்பது) அதைச் சொற்களால் சொல்ல இயலும்–சொல்ல இயலாது என்றபடி.

(சு–உ.) முருகவேள் உணர்த்திய ஞானோபதேச நிலையை அநுபவிக்கலாமே ஒழிய பிறருக்கு எடுத்துச்சொல்ல இயலாது.

(கு–உ.) (1) முருகன் செந் நிறத்தவன்; வேலும் செந் நிறத்தது: அநுபூதி 25–ன் குறிப்புரையைப் பார்க்க.

(2) 'எங்ஙனிருந்த தென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙனிருந்ததென் றுந்தீபற'–திருவுந்தியார் 4.
—அநுபூதி 12–ன் குறிப்பையும் பார்க்க.

## 31. மாயையில் இட்டனை - நீ வாழ்க

பாழ்வாழ் வெனுமிப் படுமாயையிலே
வீழ்வா யென என்னை விதித்தனையே
தாழ்வா னவைசெய் தனதாம் உளவோ
வாழ்வாய் இனிநீ மயில்வா கனனே.

(அந்.) மயில் வாகனனே! பாழ்வாழ் ...... வாழ்வாய் இனி நீ.

(பொ–உ.) மயில்வாகனக் கடவுளே! (பாழ் வாழ்வு எனும்) பாழ்படுவதான இந்த வாழ்க்கை என்கின்ற (இப் படு மாயையிலே)இந்தப் பெரிய மாயைச்சூழலிலே (வீழ்வாய் என) நீ விழுவாயாக என்று (என்னை விதித்தனையே) என் தலையில் எழுதிவிட்டாயே! (தாழ்வானவை) (இழிவான செய்கைகள்) குறைநேரும்படியான செய்கைகள், (செய்தன) நான் முன்பு செய்தவைதாம் (உளவோ) ஏதேனும் இருக்கின்றனவோ — நீ என்னை இங்ஙனம் மாயை வாழ்வில் தள்ளிச் சிக்கவைத்தற்குக் காரணம்; எது எப்படி இருக்கினும் இருக்கட்டும்: நான் எக்கதி பெறினும் பெறுக, பெருமானே! நீ வாழ்வாய் இனி— நீ இனி மேலும் வாழ்வாயாக.

(சு-உ.) முருகா—நான் ஏதோ குறைசெய்தேன் போலும்; அதனல் என்னைப் பாழ் வாழ்வில் தள்ளிவிட்டாய்; ஆயினும் நீ வாழ்க என்றுதான் நான் உன்னைத் துதிப்பேன்.

(கு–உ.) (1) படு-மிகுதிப்பொருளைக் குறிக்கும் கொடிய என்னும் பொருளது. 'படுமுளி', 'படுபாவி' என்புழிப் போல — திருப்புகழ் 291, 310.

(2) வாழ்வு – மாய வாழ்வு — 'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' என்றார் சுந்தரர் (7–78-1). 'ஒரு பிடி சாம்பரும் காணது மாய உடம்பிதுவே' (கந்.அலங். 57) 'மின்னே நிகர் வாழ்வு'—அநுபூதி 25, 27–ம் பார்க்க.

(3) நான் எக்கேடு கெட்டாலும் – அது என் குற்றமே ஆதலின் அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. நீ கருணாகர மூர்த்தி ஆதலால் நீ இனியும் வாழ்க என்றபடி.

இனி, என்னை இப் பாழ் வாழ்விற் சிக்கவைத்தாயே! நீதான்வாழ்ந்திரு ஐயா! என்று வசைகூறுவதும் தொனிக்கும். 'காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே'

'மனத்தால் வாடி அடியார் இருந்தால் வாழ்ந்து போதீரே' என்புழிப்போல (சுந்தரர் 7-95). என்னை இப்படிச் செய்து விட்டாயே! வாழ்வாய் இனி நீ? நீ வாழ்வையோ இனி? என வினவாகக்கொண்டு— நீ இனி வாழமாட்டாய் என்ற விடையையும் அதனின்றே கொள்வதும் ஒரு நிந்தாஸ்துதியாகும்.

## 32. கலைஞானம் போதும் போதும்

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரி வேடர்குலப் பிடிதோய்
மலையே மலைகூறிடு வாகையனே.

(அந்.) கொலையே...வாகையனே! கலையே...விடவோ.

(பொ—உ.) (கொலையே) கொலைத் தொழில்களையே (புரி) செய்கின்ற (வேடர்களின்) குலத்தில் வளர்ந்த (பிடி) பெண் யானை போன்ற வள்ளி (தோய்) புணரும் மலையே! மலையன்ன உன்னத நிலையனே! (மலை) கிரௌஞ்ச கிரியைக் கூறிடு-பிளவுசெய்த, வாகையனே—வெற்றிவேலனே! (கலையே) கலை நூல்களையே (பதறிக் கதறி) கலக்கத்துடன் விரைந்து உருப்போட்டுக் கற்று (தலையூடு அலையே படுமாறு) தலை வேதனை படும்படி — தலையுள் மூளையே கலங்கும்படியான (அது வாய்) அத்தன்மையனாய் — அந் நிலையனாய் (விடவோ) ஆய் விடவோ! அந் நிலை வேண்டாம் என்றபடி.

(சு—உ.) வேற்கடவுளே! நான் கலைகளைக் கற்று அச் சூழலில் அலைச்சலபட வேண்டுமா! வேண்டாமே என்றபடி.

(கு—உ.) (1) கலைகளைக் கதறி (முக்கியமாய்ச் சமய நூல்களைக் கதறிப் படித்து) அலைச்சல் உறுவதை அருணகிரியார் வெறுக்கின்றார்:

'சமய விரோத சாங்கலை வாரிதியை நீந்த ஒணுது'

'கதற்றும் அநேகம் கலைக்கட லூடுஞ் சுழலாதே'

'சிவகலை அலதினி உலக கலைகளும் அலம் அலம்', 'கலகக் கலைநூல் பலகொண் டெதிர் கதறிப் பதரு, 'கதறிய கலை கொடு' எனத் திருப்புகழில் வருவன காணலாம் (247, 257, 912, 1142, 1152.)

(2) மலையே – இறைவனை 'மலை' என்பது ஒரு வழக்கு — மலைபோற் பெரியராதலின்— 'மத்தமும் ஆடரவுடன் வைத்த மலையை'—சம்பந்தர் 2-110-4. 'காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே'—சுந்தரர் 7-47-1.

(3) மலை கூறிடு வாகையனே - இங்கு 'வாகை' (வெற்றி) ஆகுபெயராய் வெற்றிக்கு உரிய வேலைக் குறிக்கின்றது. (கந்தரலங்காரம் 27, பக்கம் 28 குறிப்பு.)

பிடிதோய் மலை - மலை – கைம்மலை – யானை எனக்கொண்டு பிடிதோய் களிறே எனலாம். யானை – கிரிசரம், நதிசரம், வனசரம் எனும் மூவகைய; வள்ளியம்மை மலையில் இருந்த தால் அவள் கிரிசரப்பிடி ; அதனால் பிடிதோய் மலையே என்றார்.

## 33. சமுசார வாழ்க்கை என்று தொலையும்

சிந்தா குலஇில் லொடுசெல் வமெனும்
விந்தா டவி என்று விடப் பெறுவேன்
மந்தா கினிதந்த வரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே.

(அந்.) மந்தாகினி ...... கருணாகரனே! சிந்தாகுல ...... விடப்பெறுவேன்.

(பொ-உ.) (மந்தாகினி) கங்காநதி, (தந்த) ஈன்ற, (வரோதயனே) வரத மூர்த்தியே - வரத்துக்குப் பிறப்பிட மானவனே! (கந்தா) கந்தமூர்த்தியே! முருகனே! கருணைக்கு இருப்பிடமானவனே! சிந்தாகுலம் - (சிந்தா ஆகுலம்) மனத் துக்கு வருத்தம் தருவதான (இல்லொடு) சமுசாரத்துடன் (செல்வம்) செல்வம் என்கின்ற (விந்தாடவி) விந்தமலைக்காடு போன்ற சிக்கற் சூழலை என்று நான் விடப் பெறுவேன்.

(சு-உ.) சமுசாரம், செல்வம் என்கின்ற கவலைக்கிடமாம் சிக்கல் என்று ஒழியும்.

(கு-உ.) (1) விந்தாடவி – விந்திய மலையை அடுத்திருக்கும் காடு. ''மலையைத் தடவிய விந்தத் தடவி''–தமிழ்நா. 134- தக்கயாகப்பரணி 62 உரை, விசேட உரை பார்க்க.

விந்தியமலைக் காடு — உள்ளே சென்றால் திரும்ப வழி தெரியாத மயக்கம் தரும் பெருங்காடு. சமுசாரம் அத்தகை

யதே ; அதனல் ' இல் எனும் மாயை ' என்றுர் அநுபூதி 29-ல்: இல் - என்னும் விந்தாடவி என்றுர் இப் பாடலில்.

விந்தாடவி என்பதற்கு விந்தை - அடவி-ஆச்சரியகரமான காடு எனவும், வரோதயன் — வர உதயன் — சிறப்பான தோற்றம் உடையவன் எனவும் பொருள் காண்பர். செல்வமும் போல்லாதது — "செல்வ மென்னும் அல்லல்" — திருவாசகம் 4-39.

(2) மந்தாகினி — கங்கை. ' மந்தாகினி யணி வேணிப் பிரான் '—வெங்கைக் கோவை 107.

## 34. காமம் அற

சிங்கார மடந்தையர் தீநெறிபோய்
மங்காமல் எனக்கு வரந் தருவாய்
சங்க்ராம சிகாவல சண் முகனே
கங்கா நதி பாலக்ரு பாகரனே.

(அந்.) சங்க்ராம ... க்ருபாகரனே! சிங்கார ... தருவாய்.

(பொ-உ.) (சங்க்ராமம்) போரில் வல்ல (சிகாவல) மயில் (வாகனத்தை) உடையவனே! சண்முகமூர்த்தியே! கங்கா நதியின் (பால) குமாரனே! கிருபாகர மூர்த்தியே! (சிங்கார மடந்தையர்) அலங்காரமான மாதர்கள் பொருட்டுத் (தீநெறி போய்) கெட்ட வழியிற் சென்று (மங்காமல்) என் மனம் குலைந்து போகாத வண்ணம் எனக்கு வரம் தந்தருளுக.

(சு-உ.) முருகா! தம்மை அலங்கரித்துக் கொள்ளும் பொது மகளிர் வழியிற் சென்று கெடாதபடி அருள்புரிக.

(கு-உ.) மடந்தையர் தீநெறி என்றது — காமத்தால் வரும் கேட்டினைக் குறிக்கும்.

" தீமையுள்ளன யாவையுந் தந்திடும், சிறப்பும்
தோமில் செல்வமும் கெடுக்கும், நல்லுணர்வினைத்
தொலைக்கும்,
ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும் இதனல்
காமம் அன்றியே ஒருபகை உண்டுகொல் கருதில் "
—கந்தபுராணம் I-24-62.

" காமமே நரகபூமி காணியாக் கொடுப்பது "
—திருவிளையாடல், 26 மாபாதகம் 27.

'' மங்கையரால் வரும் காமமில்லை யெனிற் கடுங்
கேடெனும் நாமமில்லை நரகமும் இல்லையே ''
—கம்பராமா. மந்தரை 21.

'' நிறையும் உண்டோ காமங் காழ்கொளில் ''
—மணிமேகலை 5–20.

## 35. கதி காண

விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழல் என் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியைஅல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே.

(அந்.) மதிவாணுதல் ...... பூபதியே! விதிகாணும்...... அருள்வாய்.

(பொ-உ.) (மதி) பிறை போன்றதும், (வாள்) ஒளிவீசுவதுமான (நுதல்) நெற்றியை உடைய (வள்ளியை அல்லது) வள்ளியைத் தவிர (பின்) பின்னர் வேறு யாரையும் (துதியா) துதிக்காத (விரதா) நோன்பு பூண்டவனே! (சுரபூபதியே) தேவர்களுக்கு அரசே! (விதி) பிரமன் (காணும்) படைக்கும், (உடம்பை) உடலுக்கிடந்தரும் பிறப்பை (விடா) விடாத (வினையேன்) வினை நிறைந்த அடியேன் (கதிகாண) நல்ல கதியை அடையும்படி (மலர்க்கழல்) தாமரையன்ன உனது திருவடியை (என்று) அப்போது (அருள்வாய்) அருள்புரிவாய்.

(சு-உ.) முருகா! பிறப்புக்களை ஒழிக்காத நான் நற்கதி காண என்று அருள்புரிவாய்.

(கு-உ.) (1) விதி காணும் உடம்பை - பூர்வ வினையால் ஏற்படும் உடம்பை எனலுமாம். உடம்பை விடுதல் - தேகாபிமானத்தை விடுதல் - ' என்னில் ஆரும் எனக்கினி யாரில்லை '— அப்பர் 5-21-1; கழல் பெறுதல் - திருவடி தீக்ஷை பெறுதல் - அது தேகாபிமானத்தையும், பிற பற்றுக்களையும் நீக்கும்.

'' இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன் ''

'' நின் கழலிணை காட்டிக் காய மாயத்தைக்
கழித்தருள் செய்யாய் ''
—திருவாசகம் 13-1; 23-5.

(2) வள்ளியைத் துதித்தல், வணங்குதல் முருகனது கடமை என்றார் அருணகிரியார். அநுபூதி 36-ன் குறிப்பைப் பார்க்க – திருப்புகழ் 563 (பக்கம் 284). 'குறமாதுடன் மால் கடனும் எனவே அணைவோனே' என்றதன் குறிப்பிற் பார்க்க.

## 36. சிவபிராற்கு உபதேசித்தது எது

நாதா குமரா நம என் றரனார்
ஓதாய் என ஓதியதெப் பொருள்தான்
வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே.

(அந்.) வேதா ... சேகரனே! நாதா ... பொருள்தான்.

(பொ – உ.) (வேதா முதல்) பிரமன் முதலான (விண்ணவர்) தேவர்கள் (சூடு) உச்சிமேற் புனையும் (மலர்ப் பாதா) தாமரையன்ன திருவடிகளை உடையவனே! (குறமின்) குறமினனாள் – வள்ளியின் (பாதசேகரனே) திருவடியை முடிமேற் கொள்பவனே! (நாதா! குமரா நம என்று) நாதனே! குமராய நம என்று வணங்கி, (அரனார்) சிவனார் (ஓதாய் என) எனக்கு உபதேசிப்பாயாக என்று கேட்க, (ஓதியது) நீ உபதேசித்தது எப் பொருள்தான் – என்ன ரகசிய உபதேசம் அது! அடியேனுக்கும் அதை வெளிப்பட உரைத்தருள வேண்டும்.

(சு-உ.) வள்ளி தாசனே! நீ சிவபிராற்கு உபதேசித்த உபதேசம் யாதோ – அதை எனக்கு உபதேசித்தருளுக.

(கு-உ.) (1) சிவபிராற்கு முருகவேள் எப்பொருளை உபதேசித்தனரோ அப்பொருளைத் தமக்கும் முருகவேள் உபதேசித்தருள வேண்டும் என்பது அருணகிரியாரின் அவா. ஆதலால், அந்த ஆசையைத் திருப்புகழிற் பல இடங்களில் வெளிப்பட உரைத்துள்ளார்.

"உருத்திரனும் அநுக்கிரகி எனக் குருகி உரைக்க மறை யடுத்து பொருள் உணர்த்து நாள் அடிமையும் உடையேனோ'; 'உமை பங்காளர்க் கன்று பகர்பொருள் அருள்வாயே'; 'நம்பர் உரை மாள — பகர்ந்த உபதேசம் சிறியேன் தனக்கும் உரைசெயிற் சற்றுங்குருத்துவம் குறையுமோ தான்', 'புரத்ரயம் எரித்த பெருமானும் ...... பரவ அருளிய மவுன

மந்த்ரம்தனை — நினது வழியடிமையும் விளங்கும்படிக் கினி துணர்த்தி அருள்வாயே'; 'வேணியர்க் கருள்கூரும் ...... சத்ய வாசகம் புற்புதப் பிராணனுக் கருள்வாயே — திருப்புகழ் 173, 397, 723, 1127, 1251. "நாதா குமரா நம என்றரனர் ஓதாய் என ஓதிய தெப்பொருள்தான்" — எனக் கேட்ட வினவுக்கு விடை பின் இரண்டடிகளிற் குறிப்பாக உள்ளது. எங்ஙனம் எனில்: வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப் பாதனைய் நீ இருந்தும் - நீ குறமின் பதசேகரன்' என்றாரே அதுதான் விடை. எப்படி என்றால் 'யான், எனது' என்னும் இரண்டும் எங்கே அற்றுள்ளனவோ அங்கே இறைவனைக் காணலாம். வள்ளி அந் நிலையில் நின்ற காரணத்தால் முருகன் வள்ளியை நாடித் தானே வள்ளியிடம் சென்றார்; "குறமின் பாதசேகரர்" ஆனார். ஆதலால், தன்னை இழந்தால் தலைவனைக் காணலாம் என்பதே ரகசியப்பொருள். 'தன்னை மறந்தாள்...தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என அப்பர் பெருமான் (6-25-7) கூறினதும் இதுவே. இதுவே 'வள்ளி அநுட்டித்த சன்மார்க்க நெறி'-வள்ளிச் சன்மார்க்கம் எனப்படும் இது. இந்த ரகசியத்தைத்தான் முருகவேள் சிவபிரானுக்கு உபதேசித்தனர். இவ்வுண்மையை 'வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க வல்லைக்குள் ஏற்றும் இளையோனே' — எனவரும் திருப்புகழிற் காண்க. இதன் விவரமெல்லாம் - திருப்புகழ் 317 (பக். 288), 723 (பக். 166), 1107 (பக். 234), 1187 (பக். 460, 461) கீழ்க்குறிப்புக்களையும், கந்தரலங்காரம் 24 (தொகுதி 6-பக். 25 குறிப்பு), அருணகிரி நாதர் நூலாராய்ச்சி பக்கம் 120, 162, 175, 299 - 302 பார்க்கவும்.

சிவபிரான் உன்னை வணங்குகின்றார்; நீ வள்ளியை வணங்கி நின்றாய் - பிறிதொருவரை நீ துதியாய் (அநுபூதி 35) என்றதனால் முருகன் 'அடியார்க் கெளியன், நச்சினார்க் கினியன்' என்பது தெளிவு — 'ஆதிநாதன் தொழும் தேசிகா' 'பைம்புன மேவும் வஞ்சியம் சீதபாதம் படுஞ்சேகரா' என்ற திருப்புகழும் (1107), 'குறப்பெண் ...... குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக் குறையிரந்து ... நின்றவன்' —என வரும் முத்துக்குமார. பிள்ளைத் தமிழ் (செங்கீரை 5-ம்) இங்கு நினைவுக்கு வரும்.

'யான் எனது அற்ற நிலையில்தான் உண்மை அறிவு துலங்கும்' (கந்தரலங்காரம் 95). அந்த உண்மை அறிவை அறிவதுதான் 'ரகசியப் பொருள்'; இதனையே சிவபிராற்கு

உபதேசித்தார் என்பதும் மேற்சொன்ன கருத்தோடு பொருந்தும். 'அரவு புனைதரு புநிதரும் வழிபட'... அறிவைஅறிவது பொருளென அருளிய பெருமாளே' என்றார் திருப்புகழில் 509 (பக்கம் 164) கீழ்க்குறிப்பு.

(2) 'குமராய நம' என்பது ஆறெழுத் தென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

## 37. முருகன் கணங்களைக் கூட

கிரிவாய் விடுவிக் ரமவேல் இறையோன்
பரிவா ரம்எனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோடும் அகந்தையையே.

(அந்.) மனமே! கிரிவாய் ... புரிவாய்; அகந்தையையே பொறையாம் அறிவால் அடியோடும் அரிவாய்.

(பொ–உ. மனமே! கிரிவாய்–கிரௌஞ்ச கிரியின் மீது (விடு) செலுத்தின (விக்ரம) பராக்ரமம் உள்ள வேல் (இறையோன்) வேலை ஏந்திய இறைவன் முருகவேளின் (பரிவாரம் எனும் பதம்) (அடியார்) கணத்தைச் சேர்ந்தவன் என்னும் பதவியை (மேவலையே) அடைதலையே (புரிவாய்) நீ விரும்புவாயாக: அகந்தையையே (நான் என்னும்) ஆணவத்தையே, பொறையாம் அறிவால்–பொறுமை எனகின்ற அறிவைக்கொண்டு (அடியோடும் அரிவாய்) வேருடனே அரிந்து தள்ளுவாயாக.

(சு–உ.) மனமே! 'முருகன் அடியாரொடுசேர விரும்புக; அகந்தையைப் பொறையால் அரிந்து எறிக.

(கு–உ.) (1) இறைவன் அடியாரொடு கூடுதல் முக்கியமான வேண்டுகோள். இந்தப் பாக்கியத்தை முருகன் அருணகிரியார்க்குப் பிரசாதித்தனர். 'வேலோன்–போதமிலேனை... கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா!' எனவரும் அலங்காரம் 100–ஆம் செய்யுளையும் குறிப்புரையையும் காண்க; (பக்கம் 97).

(2) அகந்தையை அகற்றுவது பொறையே - கந்தரந்தாதி பாடல் 84, பக்கம் 243 குறிப்புரையைக் காண்க.

## 38. ஆட்கொள்ளப்பட்டது

ஆதாளியை ஒன் றறியே னை அறத்
தீதாளியை ஆண் டதுசெப் புமதோ
கூதாள கிராதகுலிக் கிறைவா
வேதாள கணம் புகழ் வேலவனே.

(அந்.) கூதாள ........ வேலவனே! ஆதாளியை ...... செப்புமதோ.

(பொ-உ.) (கூதாள) கூதள மாலையை அணிந்தவனே! (கிராதகுலிக்கு) வேடர் குலத்தவளாம் வள்ளிக்கு (இறைவா) தலைவனே! (வேதாள கணம்) பேய்க் கூட்டங்கள் புகழ்கின்ற வேலாயுத மூர்த்தியே! (ஆதாளியை) டம்பப் பேச்சு பேசுபவன், நல்லது ஒன்றும் அறியாதன், (அற) மிகவும் (தீதாளியை) தீக் குணம் - கெட்ட குணம் உடையவன் ஆகிய என்னை (ஆண்டது)-என்னை ஒரு பொருளாகக் கருதி நீ ஆண்டருளிய கருணை (செப்புமதோ) சொல்லும் தரத்ததோ - தரத்ததன்று - என்றபடி.

(சு-உ.) குற்றம் நிறைந்த என்னை, முருகா! நீ ஆண்ட கருணை சொல்லுந் தரத்ததன்று.

(கு-உ.) (1) ஆதாளி வாயன் - திருப்புகழ் 611.
'ஆதாளிகள்'—திருப்புகழ் 118.

(2) இப் பாடல் அருணகிரியாரின் வரலாற்றை விளக்குவது. அநுபூதி 3, 5, 8, 11, 12, 20, 22, 28, 28, 30, 42, 43, 44, 49 எண்ணுள்ள பாடல்களும் அத்தகையனவே.

(3) கூதளமலரை அணிந்த வள்ளி எனவும் கூட்டிப் பொருள் காண்பர். முருகவேளுக்குக் கூதளமலர் பிரியமாதலால் - கூதாள என முருகவேளையே விளித்துப் பொருள் காணலாம். 'முடியிற் கொண்ட கூதளம் என'-திருப். 960. 'கூதள கந்த மாலிகை தோய்தரு, கழல்' ஷை 99. (திருப்புகழ் 960, பக்கம் 784 கீழ்க்குறிப்பைப் பார்க்க.)

(4) குலம் என்பதிற் பிறந்த ஆண்பாற் பெயர் குலவன்; பெண்பால் குலி — "குலமிலாதானைக் குலவனே என்று கூறினும்" — சுந்தரர் 7-34-6. "கிராத குலி" — மயில் விருத்தம் 3.

(5) வேதாள கணம்—சூர சம்மாரத்தின்போது நிறையப் பிணங்களைப் பசியடங்கப் பெற்ற காரணத்தால், முருகனை நிரம்பப் புகழ்ந்தன: வேதாளம்-பேய் (திவாகரம்).

'சூரொடும்பொர வஞ்சி சூடிய பிள்ளையார் படைதொட்ட நாள், ஈருடம்பு மிசைந்திரண்டுதி ரப்பரப்பும் இறைத்தனம்' 'வயிருர முன்பு அவர் செற்ற தானவர் அற்ற நாள் விசும்பு தூர விழும் பிணங்கள் நிணங்களூற மிசைந்தனம்'—பூத வேதாள வகுப்பு, அலகை வகுப்புக்களையும் பார்க்க—தக்க. பரணி 231, 232. வேல் வகுப்பு அடி 4-ன் குறிப்பு, பக். 319.

## 39. ஆசைகள் அற

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவேடணை என்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங்கர தேசிகனே.

(அந்.) கோவே...தேசிகனே! மாவேழ்...முடிந்திடுமோ!

(பொ-உ.) கோவே - அரசே ! (குறமின் கொடி) குறக் குலத்தவளும், மின்னற் கொடிபோன்றவளுமான வள்ளியின் (தோள் புணரும்) தோள்களை அணையும் (தேவே) தேவனே! சிவசங்கரனுக்குத் (தேசிகனே) குருமூர்த்தியே! மா ஏழ் சனனம்- பெரிய, ஏழ்வகையதான, பிறப்பு கெட, மாயை விடா - மாயை விடாத- ஆசை மயக்கம் நீங்காத-(மூ ஏடணை) மூன்று ஈஷணைகளும் - மண்ணாசை, பெண் ஆசை, பொன் ஆசை எனப்படும் மூன்றுவகை ஆசைகளும் (என்று)எப்போது தான் (முடிந்திடுமோ) முடிவுற்று ஒழியுமோ (அறிகிலேன்) என்றவாறு.

(சு-உ.) சிவகுரு மூர்த்தியே! பிறப்பு என்பது ஒழிய மூவாசைகள் என்றுதான் முடிவுறுமோ! தெரியவில்லையே.

(கு-உ.) (1) ஏழ் பிறப்பு; தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம். திருப்புகழ் 668, பக்கம் 34; 743, பக்கம் 218 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

(2) மூ வேடணை — ஏடணை — ஈடணை, மனைவி, மக்கள், பொருள் இவை பற்றிய ஆசை எனலுமாம். 'மனைவி, மக்கள், அர்த்த ஏடணைகள் மூன்று' — கைவல்ய நவநீதம்—

தத்துவ விளக்கம் 13. அர்த்தேடணை, புத்திரேடணை, லோகேடணை எனவும் கூறுவர். (களத்திரேடணை அல்லது தாரேஷணை, புத்திரேடணையுள் அடங்குமாதலால் லோகேடணை மூன்றாவதென்பர்.

(3) சிவ சங்கார தேசிகன் - முருகன் — திருப்புகழ் 327, பக்கம் 314, 628, பக்கம் 462 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

மூவேடணை-மூன்று ஏடணை; மூவாசை. இதண்-பரண்.

## 40. மனை மயக்கம் அற

வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே.

(அந்.) சுனையோடு ... திரிந்தவனே! வினையோட...... மயங்கிடவோ.

(பொ-உ.) (சுனையோடு) சுனைகள் மாட்டும், (அருவித் துறையோடு) அருவிகளின் துறைகளின் மாட்டும், பசும் தினை யோடு) பசிய தினைப்புனத்தின் மாட்டும், (இதணோடு) (புனத்தில் இருந்த) பரண் மாட்டும் (வள்ளியின்பொருட்டுச் சென்று) திரிந்தவனே! (வினை ஓட விடும்) வினையை வெருட்டி ஓட்டும் (கதிர்வேல்) ஒளி பொருந்திய வேலாயுதத்தை மறவேன் — நான் மறக்கமாட்டேன்; (அத்தகைய நான்) மனையோடு — சமுசார வாழ்வில் (தியங்கி) கலங்கி, (மயங்கிடவோ) அறிவு மயக்கம் கொள்ளலாமா! கொள்ளலாகாது என்றபடி —

(சு-உ.) முருகா! வேலை மறவாத நான் இல் வாழ்வில் மயங்குதல் தகுதியோ!

(கு-உ.) (1) வேல் - வினையை ஓட்டும்; 'வினை எறியும் வேல்'—திருப்புகழ் 1200 (பக்கம் 490) குறிப்பு.

(2) வள்ளியின் பொருட்டு முருகவேள் பல இடங்களில் திரிந்தது — அநுபூதி 44, திருப்புகழ் 552, அடி 6-ம் பார்க்க.

## 41. சாகா வரம்பெற

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனர் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னபதே சிகனே.

(அந்.) வாகா ... தேசிகனே! நமனர் கலகம் செயுநாள்—சாகாதெனையே...காகா.

(பொ–உ.) (வாகா) வெற்றி வேலனே! முருகா! மயில் வாகனனே! யோக மூர்த்தியே! சிவனுக்கு ஞானேபதேசம் செய்த குருமூர்த்தியே! (நமனர்) யமன் (கலகம் செயுநாள்) என் உயிரைக் கலக்கிப் பிடிக்க வரும் அந் நாளில் (சாகாது) நான் இறந்துபடாது, (எனையே) என்னை, (உன்) சரணங்களிலே திருவடிகளிலே, (காகா) காப்பாற்றுவாயாக, காப்பாற்றுவா யாக (உன் திருவடியிற் சேர்த்துக்கொள் என்றபடி).

(சு-உ.) யமன் வரும் அன்று, முருகா! என்னைக் காத் தருள் – உன் திருவடியிற் சேர்த்துக்கொள்.

(கு-உ.) (1) இப் பாடல் — அநுபூதி 10-ன் கருத்தது.
(2) சாகா நிலை — கந்தரலங்காரம் 26-ன் குறிப்பைப் பார்க்க (பக்கம் 27).
(3) வாகு – அழகு. வாகா – அழகனே எனலுமாம்.
(4) முருகன் யோகமூர்த்தி. 'யோகத் தாறுபதேசத் தேசிக'—திருப்புகழ் 68. சிவயோகிகள் காலத்தை வென் றிருப்பார் (கந்தரலங்காரம் 26). அதனல் 'யோகா' என முருகனை விளித்து - அவரருளால் சிவயோகி ஆக சாகா வரம் பெறுவர்.
(5) சிவஞானேப தேசிகன் — அநுபூதி 39 பார்க்க.

## 42. பெற்ற உபதேசத்தின் பெருமை

குறியைக் குறியாது குறித்தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியாமையும் அற்றதுவே.

(பொ–உ.) (குறியை) தியானிக்கப்படும் பொருளைக் (குறியாது) பசு ஞானம், பாச ஞானம் கொண்டு தியானிக்

காமல், (குறித்து) பதிஞான வழியில் தியானித்து, (அறியும்) அறிகின்ற (நெறியை) வழியைத் (தனிவேல் ஐ) ஒப்பற்ற வேற் கடவுள் - முருகவேள் (நிகழ்த்திடலும்) சொல்லிய உடனே – உபதேசித்த உடனே, (செறிவு அற்று உலகோடு) உலகோடு செறிவு அற்று — உலகத்தாருடன் நெருங்கும் உறவுகள் நீங்கி, (உரை) வாக்கும், (சிந்தையும்) மனமும், (அற்று) நீங்கி ஒழிந்து, (அறிவு அற்று) அறிவு என்பதும் நீங்கி, (அறியாமையும்) அஞ்ஞானமும் (அற்றதுவே) நீங்கிற்று.

(சு–உ.) தியானிக்க வேண்டிய வழியை முருகவேள் உபதேசித்தவுடன் வாக்கு, மனம், அறிவு, அறியாமை யாவும் நீங்கின.

(கு-உ.) (1) குறியை – தியானிக்கவேண்டிய பொருளைக், குறியாது குறித்து அறியும் நெறி–தியானிக்கின்றோம் என்கின்ற நினைப்பற்ற நிலையில் (குறித்து) தியானித்து அறியும் வழி என்பதாம்.

(2) வேலை - வேல் ஐ – வேற் கடவுள். ஐ – தலைவன், கடவுள் (கந்தரந்தாதி–காப்பு 2 — 'நாம் உலையும் ஐ' எனவரு மிடத்திற் காண்க. நெறியை தனி வேலை – வழியையும், ஒப்பற்ற வேலாயுதத்தையும் (நிகழ்த்திடலும்) யான் சொல்லிப் பயின்றவுடன் எனலுமாம். நிகழ்த்துதல் - சொல் லுதல் — 'நேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்'—கந்தபுராணம் 4–13–74.

(3) இந்தச் செய்யுளிற் குறித்த நிலையை —

"அறியாமை அறிவகற்றி அறிவின் உள்ளே
அறிவுதனை அருளினன் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாம் தானய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதாரனயே"

எனவருமிடத்துக் காண்க.

(பொருள்: ஆசிரியன் திருவருளால் அறியாமையும் அறிதலுமாகிய இருவகைப் பாசங்களும் நீங்கி, அறிவினுள்ளே

அறிவுதனை அறியாதே அறிந்து, குறியாதே குறித்து, சிந்திக்கும் முறைமையிற் சிந்தித்து, அன்பு செய்து அந்தக் கரணங்களிற் சேராது அடங்கி நிற்க ...... சிவன் ...... நிராதாரனுய்த் தோன்றிடுவன்), சித்தியார் - சுபக்கம் செய்யுள் எட்டாம் சூத்திரம் 30.

(4) ' அறிவும் அறியாமையுங் கடந்த அறிவு திருமேனி '— எனவரும் திருப்புகழையும் (1019) அதைப்பற்றிய குறிப்புரையையும் (பக்கம் 63) பார்க்க.

## 43. அநுபூதி நிலையைப் பெற்றது

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே.

(பொ-உ.) (தூசா) தூசாக - ஆடை அலங்காரமாக, (மணியும்) முத்து மணி, மரகத மணி முதலிய மணிகளையும், (துகிலும்) ஆடையும் (புனைவாள்) அணிபவளாகிய(குறமகள்) வள்ளியின் நேசனே - நண்பனே ! முருகா ! உனது அன்பும் அருளும் எனக்குக் கிடைத்த பாக்கியத்தால், (ஆசா நிகளம்) ஆசை என்னும் விலங்கு (துகளாயின பின்) பொடிபட்டபின்பு (பேசா அநுபூதி) மௌனம் என்னும் அனுபவ ஞான நிலை பிறந்தது.

(சு-உ.) முருகா ! உனது திருவருளால் எனக்கு மௌன ஞான நிலை கிடைத்தது.

(கு-உ.) (1) தூசு ஆம் அணி எனப் பிரித்து (தூசு) தூய்மையான ஆபரணங்கள் எனலுமாம். மணி - மரகத மணி. ' மரகத மணிப் பணியின் அணி தழை உடுத்து உலவும் வனசரர் கொடிச்சி '—வேடிச்சி வகுப்பு, அடி 30.

வள்ளி — மணி, துகில் அணிவது :

'' தருண மணியவை பலபல செருகிய
தலையள் துகிலிடை அழகிய குறமகள் ''
—திருப்புகழ் 515 (பக்கம் 181) குறிப்பு.

(2) ஆசைகள் அற்றால் ஆனந்தம் உண்டாகும்.

'' ஆசைபடப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தம் ஆமே''—திருமந். 2615.

(3) பேசா அநுபூதி நிலை என்பது — மௌன ஞான நிலை, கிடைத்த அநுபூதியின் தன்மை இத் தன்மைத்து என்று பிறருக்கு எடுத்துச் சொல்ல ஒண்ணாத நிலை. அநுபூதி 12, 28, 42, 49 எண்ணுள்ள பாடல்களைப் பார்க்க.

"பேசா அநுபூதி பிறக்க எனதுளத்தில்
ஆசா பசாசை அகற்றுவாய் – தேசாரும்
சிற்பரா னந்தா திருவால வாயுறையுந்
தற்பரா சொக்கநா தா"
—சொக்கநாத வெண்பா 9.

## 44. திருவடி தீக்ஷையின் சிறப்பு

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே.

(அந்.) சாடும் முருகன், வீடும் ... கழலே ... சரணம் ... சொல்லுமதோ.

(பொ–உ.) (சாடும்) பகைவர்களைத் துகைத்துக்கொன்ற (தனி) ஒப்பற்ற (வேல்) வேலாயுதத்தை உடைய முருகன் — (வீடும்) மோட்ச நிலையிலும், (சுரர் மாமுடி) தேவர்களின் சிறந்த தலையிலும், (வேதமும்) நான்கு வேதங்களிலும், (வெங்காடும்) கொடிய காட்டிடையும், (புனமும்) தினைப் புனத்திலும், (கமழும்) விளங்கும், (கழல்) தமது திருவடியைச் (சரணம்) அடைக்கல ஸ்தானமாகச் (சூடும்படி) அடியேன் சிரசிற் சூடும்படி (தந்தது) தந்தருளிய கருணை (சொல்லுமதோ) எடுத்துச் சொல்லும் தரத்ததா. (தரத்ததன்று என்றபடி)

(சு–உ.) பெருமையும் அருமையும் வாய்ந்த தன் திருவடியை அடியேன் சூடும்படி வேல் முருகன் தந்த கருணை எடுத்துரைக்கும் தரத்ததன்று.

(கு–உ.) (1) சரணம்–திருவடி எனக்கொண்டு, சரணம் – திருவடிஅது எத்தன்மைத்து எனில் வீடும், முடியும், வேதமும், காடும், புனமும் கமழும் கழல்; அதை அடியேன் சூடும்படி தந்தது எனவும் பொருள் காணலாம்.

(2) சூடும்படி தந்தது - திருவடி தீக்ஷை செய்தது:
இறைவனது திருவடி தீக்ஷை பெற்ற அடியார்களிடம் யமன் அணுகான்; தெய்வத் தன்மை கூடுவதாகும்.

"கோவாய் முடுகி அடுதிறற் கூற்றம் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவ டென்மேற் பொறித்து வை"
—என வேண்டினர் அப்பர் 4-96-1.

"பூவார் அடிச்சுவ டென் தலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ"
—திருவாசகம் 11-7.

திருவடி தீக்ஷை பெறுவது பெரும்பேருதலின் முருகன் கருணை சொல்லுந் தரத்ததன்று என்றார்.

(3) வீடும் சுரர் — இறந்துபடும் சுரர் எனவும் பொருள் காண்பர். சுரர்கள் அநித்யர் என்பது.

(4) மோக்ஷ நிலையிலும், தேவர் சிரசிலும், வேதத்தும் விளங்கும் அத்துணைப் பெருமை வாய்ந்த கழல், பத்தியில் தனக்கு இணையில்லா வள்ளியின் பொருட்டு அவள் இருந்த காட்டிலும் புனத்திலும் திரிந்த கழல் - என்னை ஒரு பொருளாகக் கருதி, என் தலையில் சூட்டப்பட்டதே இது என்ன ஆச்சரியம். நான் அடைந்த பாக்கியத்தை என்னென்று எடுத்து உரைப்பேன்: முருகன் கருணையை என்னென்று எடுத்துரைப்பேன் என்றவாறு. 'தேவர் தலையிலும் என் பாவடி ஏட்டிலும் பட்டதன்றே' எனக் கந்தரலங்காரத்திலும் (15) வியந்துள்ளார் அருணகிரியார்.

(5) முருகன் காடும் புனமும் திரிந்தனர் — அநுபூதி 40 குறிப்புரையும், வேடிச்சி காவலன் வகுப்பு அடி 20-ம் பார்க்க.

## 45. மெய்ப்பொருள் வேண்டல்

கரவா கியகல்வி யுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருள் ஈகுவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோக தயாபரனே.

(அந்.) குரவா ......... தயாபரனே! கரவாகிய ......... ஈகுவையே.

(பொ–உ.) (குரவா) குருமூர்த்தியே! (குமரா) குமரப் பெருமானே! (குலிசாயுத) குலிசாயுதத்தை உடையவனே! (குஞ்சரவா) பிணிமுகம் என்னும் யானையை வாகனமாகக் கொண்டவனே! (சிவயோக தயாபரனே) சிவயோகத்தைப் பாலிக்கும் கருணை மூர்த்தியே! (கரவாகிய கல்வியுளார்) தாம் கற்ற கல்வி அறிவைப் பிறருக்குப் பயன்படும்படி எடுத்துச் சொல்லாது — ஒளி பொருளாக வைத்துக்கொண்டிருப்பவர் களின் (கடை சென்று) இடங்களிற் சென்று (இரவா வகை) அக் கல்வி ஞானத்தை (நான்) இரந்து கேளாவண்ணம் (நீ) (மெய்ப்பொருள்) உண்மை ஞானப் பொருளை (எனக்கு) (ஈகுவையோ) — கொடுத்து அருள்புரிவையோ! (அருள்புரி என்றபடி).

(சு–உ.) பிறருக்குத் தமது கல்வியைப் பயன்படத் தராத கல்வியாளரிடம் சென்று நான் யாசியாதபடி நீ எனக்கு மெய்ஞ்ஞானத்தை அருள்புரியமாட்டாயோ!

(கு–உ.) (1) கரவாகிய கல்வியுளார் — வித்யாதானம் செய்ய மனம் வராத வஞ்சகர்: இத்தகையோர் இறைவனைக் காணமுடியாது. ' கரவாடும் வன் னெஞ்சர்க்கு அரியானை ' — அப்பர் 4–7–1.

(2) வேண்டிய இம் மெய்ப்பொருள் அருணகிரியார்க்குக கிட்டியது—அநுபூதி 8, 11, 20 பார்க்க.

(3) குலிசாயுத குஞ்சரவா — என்பதற்கு இந்திரனது குலிசாயுதத்துக்கும், ஐராவதம் என்னும் குஞ்சரத்துக்கும் (யானைக்கும்) உரியவளாகிய தேவசேனைக்கு உரியவனே என்றும் பொருள் காணலாம். அநுபூதியில் தேவசேனை வரும் இடம் இது ஒன்றே. இதுவும் குறிப்பாக உளது. வள்ளி யம்மை–குறிப்பாகவும் வெளிப்படையாகவும் 12 இடங்களிற் சொல்லப்பட்டுளது.

தந்தைக்கு உரிய வாகனம் (மேகம்) மகளார் தேவசேனைக் கும் உரியது என்பதைக் கந்தரந்தாதி செய்யுள் 100 பார்க்க.

குலிசம் — வஜ்ராயுதம் இந்திரனுக்கும் உரியது. இடி, குலிசம், ஐராவதம்–இவை மூன்றும் தேவசேனைக்கும் உரியன என்பதற்கு —

' இடியும் முனைமலி குலிசமும் இலகிடு
கவள தவளவி கடதட கனகட
இபமும் இரணிய தரணியும் உடையதொர் தனியானை'

எனவரும் திருப்புகழ் 1008–ம், கந்தரந்தாதி செய்யுள் 100–ம் சான்றும்.

(4) குலிசாயுத — முருகவேளுக்கும் குலிசாயுதம் உண்டு. சிங்கமுகாசுரனை அட்டது குலிசமே. 'குலிச சத்தியை விட்டருள் கொர்ச்சித மயில் வீரா'—திருப்புகழ் 296.

" கஞ்சம தனைய ஓர்கைக் காமரு குலிசந் தன்னை
வஞ்சகன் உயிருண் டொல்லை வருகென விடுத்தான்
மன்னோ "—கந்தபுராணம் 4-12-453.

குஞ்சரம் – பிணிமுகம் என்னும் யானை முருகவேளுக்கு உரியது. 'ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி'—திருமுருகாற்றுப்படை 247. 'பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ'—பரிபாடல் 17-49. 'சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து' —ஷை 5-2.

(5) மெய்ப்பொருள் ஈகுவையோ என ஞானப் பொருளைக் கேட்டாராதலின் 'குரவா, (குருவே) என்றும் 'தயாபரனே' (கருணைமூர்த்தியே) என்றும் சொற் ப்ரயோகங்கள் வந்துள.

ஈ — இது கீழோர் மேலோரை இரக்க வரும் சொல்; தா — தனக்கு ஒப்போன் மாட்டுக் கேட்க வரும் சொல்; கொடு – மேலோர் கீழோரைக் கேட்க வரும் சொல்—நன்னூல்-சூ. 407, கந்தரலங்காரம் 52 குறிப்புரை-பக்கம் 51.

(6) சிவயோகம் பாலிக்க வல்லவர் முருகவேள். அவரை 'யோகவிதச் சல்லாப விநோதன்' என அநுபூதி (2) லும், 'யோகத்தா றுபதேசித் தேசிக' எனத் திருப்புகழிலும் (68) அருணகிரியார் கூறியுள்ளார். அநுபூதி 41-ம் பார்க்க.

## 46. கவலை தீர

எந்தாயும் எனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே.

(அந்.) கந்தா ... நாயகனே! எந்தாயும் ... எனையாள்.

(பொ-உ.) (கந்தா) கந்தப் பெருமானே! (கதிர் வேலவனே) ஒளி வீசும் வேலாயுதனே! உமாதேவியின் மைந்தனே! குமரமூர்த்தியே! (மறை நாயகனே) வேதமூர்த்தியே! (எந்தாயும்) எங்கள் தாயும் அல்லது என் தாயும், எனக்கு

அருள்செய்யும் தந்தையும் நீ; (சிந்தாகுலமானவை) என் மன வருத்தங்கள் யாவற்றையும் (தீர்த்து) ஒழித்து என்னை ஆண்டருளுக.

(சு-உ.) முருகா! என் மனக் கவலைகளை ஒழித்து என்னை ஆண்டருளுக.

(கு-உ.) என் தாய் – எதுகை நோக்கி 'என்றாய்' என்பது 'எந்தாய்' என வந்தது. இறைவனைத் தாய் என்றும், தந்தை என்றும் பெரியோர் அழைப்பர்:

'தாயு நீயே தந்தை நீயே சங்கரனே'—சம்பந். I–50–7.

'அப்பன்நீ அம்மைநீ'—அப்பர் 6-95–1.

'அத்தா ஆலங்காடா', 'அம்மா ஆலங்காடா' 7-52–1, 9.

'தாயவளாய்த் தந்தையாகி...என்னைப் பொருந்தவைத்த வேயவனார்'—7-17-7.

"அத்தா உனக்காளாய்", "ஆயா உனக்காளாய்", "அன்னே உனக்காளாய்"—7–1-1, 2, 3.

'யாவர்க்கும் தந்தை தாய்'—திருவாசகம் 5–5–47.

(2) சிந்தா குலம் – ஆனவை — மனக் கவலைகளானவை; சிந்தாகுலம் – மால்–நவை எனப் பிரித்து – மனக்கவலை, மயக்க ஆசைகள், (நவை) குற்றங்கள் எனவும் பிரிந்து பொருள் தரும்.

(3) மறை நாயகன் — "வேதமூர்த்தி" என்றார் சித்து வகுப்பில் அடி 84.

"என் நாயகன் விண் ணவர் நாயகன் யானை நாம
மின் நாயகன் **நான் மறை நாயகன்** வேடர் நங்கை
தன் நாயகன் வேல்தனி நாயகன்"
—கந்தபுராணம் 6-24-265.

## 47. தத்துவங்களைக் கடந்த நிலையைப் பெற

ஆறா றையுநீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே.

(அந்.) சீறா ...... குளிர்வித்தவனே! ஆறாறையும் ...... பெறுமாறுளதோ.

(பொ-உ.) (சீறு) சீறிக் கோபித்து, (வருசூர்) வந்த சூரனைச், (சிதைவித்து) அழிவுசெய்து, (இமையோர்) தேவர்களின் (கூறு) கூறுக-பங்காகும்படி, உலகம் அவர்களின் பொன்னுலகத்தைக் (குளிர்வித்தவனே) இன்பநிலை வரும்படி குளிர வைத்தவனே! (ஆறுறையும்) முப்பத்தாறு தத்துவங்களையும் (நீத்து) கடந்து (அதன்மேல் நிலையை) (அதன்மேல்) அதற்கப்பால் உள்ள நிலையைப், (பேறு) பெறும்பேறுக (அடியேன்) அடியேன் பெறும் ஆறு - (பெறுகின்ற வழி) பெறுகின்ற பாக்கியம் (உளதோ) எனக்கு உண்டோ (உரைத்தருளுக).

(சு-உ.) பொன்னுலகைப் புரந்தவனே! தத்துவங் கடந்த நிலை எனக்குக் கிட்டுமா ?

(கு-உ.) தத்துவம் 36: ஆன்ம தத்துவம் 24, வித்யா தத்துவம் 7, சிவ தத்துவம் 5 - ஆக 36. அசுத்த தத்துவம் 24, சுத்தா சுத்த தத்துவம் 7, சுத்த தத்துவம் 5 ஆக 36 எனலுமாம். திருப்புகழ் 157, பக்கம் 336; திருப்புகழ் 294, பக்கம் 232 கீழ்க்குறிப்புக்கள்.

1. **அசுத்த தத்துவம் 24:** ஆன்ம தத்துவம் இவை-*(பஞ்ச பூதம்) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்(5), (ஞானேந்திரியம்) மெய், வாய், கண், மூக்கு, செவி (5), (கருமேந்திரியம்) வாக்கு, பாதம், பாணி, *பாயு, *உபத்தம் (5), (தன்மாத்திரை) சத்தம், பரிசம், உருவம், ரசம், கந்தம் (5), (அந்தக்கரணம்) மனம், புத்தி, அகங்காரம், சித்தம் (4) ஆக 24; (*பாயு=குதம் - மலவாயில்; உபத்தம்=பெண்குறி- திருப்புகழ் 578).

பஞ்ச பூதம் — The five elements.

ஞானேந்திரியம் — Sensory organs.

கருமேந்திரியம் — Organs of motor action.

தன்மாத்திரை — Rudimentary or subtle elements from which the five maka-putam are produced பஞ்ச மகா பூதங்கட்குக் காரணமான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற மூலப் பொருள்கள்.

அந்தக் கரணம் — Inner seat of thought feeling and Volition Consisting of four aspects, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் - உட்கருவி.

2. சுத்தா சுத்த தத்துவம் 7: கால தத்வம், நியதிதத்வம், கலா தத்வம், வித்யா தத்வம், அராக தத்வம், புருடதத்வம், மூலப் பகுதி என்று ஏழு பிரிவினதாய்ச் சுத்தமும் அசுத்தமும் கலந்த தத்வபேதம்.

(1) கால தத்துவம்: ஆன்ம போகங்களை அளக்கும்காலம் – Category of time, which determines the duration of soul's experiences.

(2) நியதி தத்துவம்: ஒவ்வோர் ஆன்மாவும் தன் கன்ம பலனை அனுபவிக்கச் செய்வது — Category of destiny which makes each soul experience the fruits of its own Karma.

(3) கலா தத்துவம்: ஆணவ மலத்தின் வன்மையைச் சற்று குறைப்பது — That which slightly reduces the power of Anava malam (which acts as a veil on the soul) So as to enable the soul to act.

(4) வித்யா தத்துவம்: ஆன்மாக்களுக்குப் பகுத்தறிவைத் தரும் தத்துவம் — Category which enables the soul to discriminate.

(5) அராக தத்துவம்: இச்சையை எழுப்புவது – That which excites desire in the soul.

(6) புருட தத்துவம்: ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்ற மும் மலங்களோடு கூடியது — a Category of the soul, having all the three malams.

(7) மூலப் பகுதி — முக்குணங்களுல் சமநிலையடையப் பெற்றதும், எல்லாவற்றுக்கும் மூல காரணமும், நித்தியமுமான பிரகிருதி தத்துவம். போக்கிய ரூபமாய் நின்ற தத்துவப் பிரபஞ்சங்கட்கெல்லாம் மூல காரணமாவதும் கலா தத்துவத் தன் விகுதியாவதுமான பிரகிருதி — The unmanifest primordial Cause of the material world in the form of objects of experience — Considered an evolute of Kala-tatuvam. (1-7 Lexicon).

(7) மாயை — எனவும் கூறுவர்; மயக்குவது மாயை.

3 சுத்த தத்துவம் (சிவ தத்துவம்) 5: இவை சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஞானம். ஏறிக் கிரியை குறைந்தது சுத்த வித்தை; ஞானம் குன்றிக் கிரியை உயர்ந்தது ஈச்சுரம், ஞானம் கிரியை ஒத்தது சாதாக்கியம், கிரியை நாடல் சத்தி, ஞானம் ஒன்றல் சிவம். (தமிழ்மொழி யகராதி).

சிவ தத்துவம் - நாதம் எனவும், சத்தி தத்துவம் விந்து எனவும், சாதாக்கிய தத்துவம் - சதாசிவம் என்றும், ஈசுர தத்துவம் மகேசுவரம் என்றும், சுத்த வித்தை - உருத்திரம் எனவும் சொல்லப்படும்.

" சுத்தவித்தை ஞானமிகும் தொன்மையாம்; ஈசுரந்தான்
அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும் - ஒத்தல் இவை
சாதாக் கியமென்றும், சத்தி சிவங், கிரியை
ஆதார ஞானஉரு வாம்"—உண்மை விளக்கம் 21.

(4) 36 தத்துவங்களேயும் கடந்த நிலேயில் இறைவன் திருவருள் விளங்கும். 'வேணி மௌலியன் ......... பதினைந்து மூவேழும் நீக்க வரந்தருமே'—கம்பரந்தாதி 61.

II. பொன்னுலகிற் குடியேற்றிஅவ்வுலகைக்குளிர்வித்தார் முருகவேள். 'இமையவர் நாட்டினில் நிறை குடி ஏற்றிய தம்பிரானே'—திருப்புகழ் 990. வேல்வாங்குவகுப்பு-அடி 7, 10-12 பார்க்க.

III. 108 யுகம் 1008 அண்டங்களே ஆணவத்துடன் ஆண்ட சூரனேச் சிதைவித்து அவனுக்கு மயில்வாகனமாம் மேலாம் பதத்தைத் தந்த நீ, என்னேப் பிணித்துள்ள 36 தத்துவங்களேச் சிதைவித்து எனக்கு ஒரு மேலாம் பதவியைத் தந்து உதவுதல் ஆகாதா என்று முற்பாதிக்கும் பிற்பாதிக்கும் ஒரு பொருத்தம் உளது.

## 48. பிரானது பெற்றி

அறிவொன் றறநின் றறிவார் அறிவிற்
பிறிவொன் றறநின்ற பிரான் அலேயோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே.

(அந்.) செறிவொன்றற ...... வேலவனே ... அறிவொன்றற ... அலேயோ.

(பொ-உ.) (செறிவு ஒன்று அற வந்து) (உலக)-பந்தமான நெருக்க உறவுகள் அற்றுப்போகும் நிலை வந்து, (அதனால்) (இருளே) அஞ்ஞானம் என்னும் இருள் (சிதைய) சிதைபட்டு ஒழியும்படி, (வெறி)கலக்க மயக்கத்தை (வென்றவரோடு) வென்ற ஞானியர்களுடனே (உறும்) பொருந்தும் (வேலவனே) வேற் கடவுளே! (அறிவு ஒன்று அற நின்று) ஜீவபோதம் ஆகிய ஒன்று அற - ஜீவபோதம் கடந்த நிலை வர, அந் நிலையில் நின்று, (அறிவார்) சிவபோதத்தால் (அறிவார்) உன்னை அறியும் பெரியோர்களின் (அறிவில்) ஞான நிலையில், (பிறிவு ஒன்று அற) பிரிவு என்னும் ஒன்று இல்லாது - பிரிதலின்றி என்றும் கூடி நிற்கும் (பிரான்அலையோ) பெருமான் அன்றோ நீ. (பெருமான் நீயே என்றபடி).

(சு-உ.) வேலவனே! ஜீவபோதம் நீங்கின ஞானிகள் அறிவிற் பிரியாது விளங்கும் பெருமான் நீயே.

(கு-உ.) "யான் எனதென் றற்ற இடமே திருவடி" யாதலின் — ஜீவபோத நிலை அழிந்தால்தான் சத்தியப் பொருளை அறியக்கூடும். 'யான்தான் எனுஞ்சொல் இரண்டுங் கெட்டாலன்றி யாவருக்கும் தோன்றாது சத்தியம்'—கந்தர் அலங்காரம் 95-ன் குறிப்புரையைப் பார்க்க.

## 49. பேரின்பப் பொருளை எடுத்துரைக்க இயலாது

தன்னந் தனிநின் றதுதான் அறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
[1]கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே.

(அந்.) மின்னும் ...... சுடரே! தன்னந் ...... இசைவிப் பதுவோ!

(பொ-உ.) (மின்னும்) ஒளி வீசும் (கதிர்வேல்) கிரணங்களை உடைய வேலை ஏந்திய (விகிர்தா) வேறுபாடுடையோய்! (நினைவார்) உன்னை நினைத்துத் தியானிப்பவர்களின் (கின்னம்) துக்கங்களைக் (களையும்) நீக்கும் (கிருபைசூழ் சுடரே) கருணை விளங்கும் பேரொளியே! (தன்னம் தனிநின்றதுதான்) ஒரு சார்பும் இல்லாது தனித்துவிளங்கும் பொருள் இத்தன்மைத்து

என்று அறிய — அறியும்படி (இன்னம்) பின்னும் எடுத்து (ஒருவர்க்கு) பிறிது ஒருவர்க்கு (இசைவிப்பதுவோ) சொல்ல இயலுமோ - இயலாது என்றபடி.

(சு-உ.) சார்பற்ற அப் பெரும் பொருளை இன்னது-இத் தன்மைத்து என்று எடுத்துரைக்க இயலாது.

(கு-உ.) (1) மின்னும் கதிர்வேல் - (கதிர்) சூரிய ஒளி வீசும் வேல் எனலுமாம். 'உதயபானு சதகோடி உருவான ...... வேல்'—திருப்புகழ் 207. 'திவாகரர் வடிவை உருக்கி வடித்த திருக்கை வேல்'—பூதவேதாள வகுப்பு 39.

(2) தன்னது தனி நின்றது - இதனைக் 'கந்தழி' என்பர். 'கந்தழியாவது ஒரு பற்று மற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள்; அது 'சார்பினுல் தோன்ருது தானருவாய் எப்பொருட்கும், சார்பெனநின் றெஞ்ஞான்றும் இன்பம் தகைத்தரோ, வாய்மொழியால், மெய்யால், மனத் தான் அறிவிறந்த, தூய்மையதாம் மைதீர் சுடர்' என்பதாம்; இதனை *'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல், பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' என அதனை உணர்ந்தோர் கூறியவாற்ருன் உணர்க'—திரு முருகாற். நச்சினுர்க்கினியர் உரை. *திருவாச. 26-9.

(3) இசைவிப்பதுவோ - அநுபூதி 12, 30 - கந்தரலங்காரம் 9, 10 குறிப்பைப் பார்க்க.

(4) விகிர்தன் — ஒருபடித் தல்லாது வேறுபாடு உடையவன்; இளையவன், குமரன், கிழவன், வேங்கைமரம், வண்டு, வேடன், செட்டி ஆகிய வேறுபாடான வேடங்களைப் பூண்டவன். உலகினின்றும் வேறுபட்டவன்.

'தமிழ்க்கூடல் விகிர்த கேண்மோ'—மதுரைக் கலம் பகம் 96. விகிர்தன் - கடவுள். 'மின்னு ருருவ விகிர்தா போற்றி'—திருவாசகம் 4-96.

(5) கின்னம்=துயரம்; "கின்னங் குறித்து" — கந்தர் அலங்காரம் 24.

## 50. கேடு அற

மதிகெட் டறவா டிமயங் கி,அறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திர ஞான சுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே.

(அந்.) நதிபுத்திர ........ சேவகனே! மதிகெட்டு ......... கடவேன்.

(பொ-உ.) (நதிபுத்திர) கங்காநதிக்கு மைந்தனே! (ஞான சுகஅதிப) ஞான சுகநிலைத்தலைவனே! அத் திதிபுத்திரர் அந்த (திதி என்பவளின் புத்திரர்களாம்) அசுரர்களின் (வீறு) பெருமையை (அடு) கெடுத்து அழித்த (சேவகனே) பராக்ரம சாலியே! (மதிகெட்டு) என் அறிவு குலைந்து, (அற) மிகவும் (வாடி) உள்ளம் சோர்வுற்று (மயங்கி) மயக்கஉணர்ச்சிபூண்டு, (அற) மிகவும், கதிகெட்டு நற்கதி பெறும் வழியை இழந்து (அவமே) வீணுகக் (கெடவோ) கெட்டழிதலோ (கடவேன்) என் தலைவிதி.

(சு-உ.) முருகா! அறிவிழந்து கெட்டழிதலோ என் தலை எழுத்து.

(கு-உ.) அறக் கதிகெட்டு - தருமவழியை யிழந்து எனலுமாம். ஞானசுக – ஞானசுகத்தி லிருப்பவனே! (அதி பவ திதி புத்திரர்) அதிக (பவம்) பாவங்களைப் பண்ணியுள்ள திதி புத்திரர் அசுரர்களை-எனவும் பொருள் காண்பர்,

(2) திதி - காசிபர் மனைவி; அசுரர்களின் தாய் – அதனுல் திதியின் புத்திரர்கள் – அசுரர்கள் தைத்தியர் எனப்பட்டார். தேவர்களின் தாய் அதிதி (காசிபர் மனைவி) அதிதியின் புத்திரர்கள் – ஆதித்தர் (தேவர்).

(3) சேவகன் – கந்.அலங். 106, சேவகன்வகுப்பு பார்க்க.

## 51. குருமூர்த்தீ வர

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

(அந்.) உருவாய் ... விதியாய் ...... (விளங்கும்) குகனே! குருவாய் வருவாய் அருள்வாய்.

(பொ-உ.) (உருவாய்) உருவுள்ளவனுயும், (அருவாய்) உருவம் இல்லாதவனுயும், (உளதாய்) உள்ள பொருளாயும், (இலதாய்) காண்பதற்கு இல்லாத பொருளாயும், (மருவாய்) நறுமணமாயும், (மலராய்) அந் நறுமணத்தை வீசும் மலராகவும், (மணியாய்) ரத்னமாகவும், (ஒளியாய்) அந்த ரத்னம்

வீசும் ஒளியாகவும், (கருவாய்) உயிர் இடம்பெறும் கருவாக வும் (உடலாகவும்), (உயிராய்) அக் கருவிருக்கும் உயிராகவும், (கதியாய்) நற்கதியாய்ப் - புகலிடமாகவும், (விதியாய்) அந்தக் கதிக்குச் செலுத்துகின்ற விதியாகவும் (ஊழாகவும்), (விளங்கும்) (குகனே) குகமூர்த்தியே! (நீ) (குருவாய்வருவாய் அருள்வாய்) குகமூர்த்தியாய் எழுந்தருளிவந்து(அடியேனுக்கு) அருள்புரிவாயாக.

(சு-உ.) உரு, அரு, உளது, இலது, மரு-மலர், மணி-ஒளி, கரு-உயிர், கதி-விதி (என நிற்கும்) குகனே! குருவாய் வந்து அருள்புரிக.

உரு-அரு, உளது-இலது, மரு, மலர், மணி, ஒளி, உயிர், கதி, விதி, குரு என்றெல்லாம் விளங்குபவனே! குகனே! அருள்வாய் எனலுமாம்.

(கு-உ.) I ''உருவாய் அருவாய் உளதாய் இலதாய் ... விதியாய்''—'சிவன் அருவுருவும் அல்லன் சித்தினோடசித்தும் அல்லன்'—சித்தியார் சுபக்கம் 1, சூ 1, சூ 1-90.

''அருவும் ஆகுவன் உருவமும் ஆகுவன் அருவும்
உருவும் இல்லதோர் தன்மையும் ஆகுவன ஊழின்
கருமம் ஆகுவன் நிமித்தமும் ஆகுவன் கண்டாய்
பரமன் ஆடலை யாவரே பகர்ந்திடற் பாலார்''
—கந்தபுராணம் 3-21-126.

''அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும்கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய''
ஷை 1-11-92.

''அருவாய் அருவுருவாய் உருவாகிய அண்ணல்''
—சிராமலைக்கோவை 266.

II (1) உருவாய் அருவாய்—'அருவனாய் ...உமை உருவனாய்'—அப்பர் 5-35-1.

(2) உளதாய் இலதாய்—'உண்டிலை என்றேநின்றே'—சம்பந்தர் 1-97-10.

(3) மருவாய் மலராய்—'வாசமலரெலாம் ஆனாய் நீயே'—அப்பர் 6-38-1. 'துணரின் மலர்க் கந்தம் துன்னி நின்றானே'—திருமந்திரம் 3035.

(4) மணியாய் ஒளியாய் — 'வைத்த நிதியே மணியே'— சம்பந்தர் 2-64-5. 'தூ ஒளியாய்' ஷை 2-21-4.

(5) கருவாய் உயிராய் — 'உடலே உயிரே'—சம்பந்தர் 2-20-2. 'உணர்வும் அவனே உயிரும் அவனே'—திருமந். 3035. 'கருவின்றி நின்ற கருவாய்'—கந்தர் கலிவெண்பா 9. 'கருவினுலன்றியே கருவெலாம் ஆயவன்'—சம்பந். 3-35-3.

(6) கதியாய் விதியாய் — 'விதியாய சோதி கதியாகநின்ற கடவுள்'—சம்பந்தர் 2-87-4. 'விதியாய்' என்றதனுல்— பிரமன் விதித்த ஆயுள் நாளையும் நீட்டிக்க வல்லார் முருகவேள் என்பது அநுபவத்தால் அறியலாகும். விதியையும் விலக்க வல்ல விதியாய் அருள்புரிவர் முருகவேள் என்க.

இதன் உண்மையை 'அவன் கால்பட் டழிந்ததிங் கென் தலைமே லயன் கை யெழுத்தே' என்னும் கந்தரலங்காரச் செய்யுளாலும் (40), 'என் ஐயிரு திங்களும் மாசு(ண்)ணம் ஆக்கும் பதாம்புயன்' எனவரும் கந்தரந்தாதிச் செய்யுளாலும் (71) அறிக. அங்ஙனம் பிரமன் எழுதின எழுத்தை அழிக்கும் காரணத்தால் இறைவனே 'விதி'யாகின்முர். 'விதியான வேத விகிர்தன்' என்முர் சம்பந்தர் (2-86-2).

(7) குருவாய் வருவாய் — என அநுபூதி முடிகின்றதால் இந்த 51-ஆம் பாடல்–'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந் தெனத், தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்(டு) அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே'—எனவரும் சிவஞானபோதம் 8-ஆம் சூத்திரத்தை நினைவூட்டும்.

இறைவனே குருவாய் எழுந்தருளி அருளுவ ரென்பது ஆகம நூற்றுணிபு.

"அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர ணுகி யருளிய பெருமையை"
—திருவாசகம் 4-75.

"கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக் குருபர னென் ருேர்திருப்பேர் கொண்டு – திருநோக்கால் ஊழ்வினை யைப் போக்கி ........ஆணவ மான படலங் கிழித்தறிவிற் காணரிய மெய்ஞ்ஞானக கண்காட்டி"-கந்தர்கலிவெண்பா 24.

III. உருவாய் — வருவாய். முருகவேளின் உருவ வழிபாடுகள் பதினறு வகையன; *பிறவும் உள: "ஈரெண்ணுருவமே யன்றி வேண்டி முருகன் எடுத்தருளும் வெவ்வே றுருவம் அமைப் போரும்"—தணிகைப்புராணம்-அகத்திய. 80.

---

*"Corresponding to the various names of SUBRAMANYA, are images whose descriptions are found in almost all the

(குறிப்பு தொடர்ச்சி - பக்கம் 690 பார்க்க)

பதினறு வகையாவன :

(1) ஞான சத்திதர மூர்த்தி : ஒருமுகம், இரண்டு திருக்கரம். வலது திருக்கரத்தில் சத்திவேல் - இச்சை, ஞானம், கிரியை எனும் மூன்று இலை கொண்ட வேல்; பகைவரை அழிக்கும் இடது கை தொடையில் அமைந்திருக்கும். இதுவே திருத் தணிகை முருகன் மூலவர் திருவுருவம், "இச்சா ஞான கிரியை எனும் இவை மூன்றிலையாய்க் கிளைத்தெழுந்திட்(ட)... அயில்வேல் ஒரு கை வலத்தமைத்து, நச்சாதவரைத் தெறும் ஒருகை ... குறங்கின் அமைத்து ...... ஞானசத்தி தரன துருவம்" —தணிகைப்புராணம்–அகத்தி–64.

(2) ஸ்கந்த மூர்த்தி : ஒரு திருமுகம்; இரண்டு திருக்கரம். மழுப்படை போன்ற கோவணத் தண்டு வலக் கரத்தில்; இடுப்பில் இடது கரம் அமைந்திருக்கும். இது பழநித் தண்டாயுதபாணியின் திருக்கோலம் போலும். "வைவாய்க் கணிச்சிப் படையென்ன வதிவித் திடுங்கோ வணத் தண்டு கைவாய் வலத்தின் அமைத்தருளிக், கடியில் இடக்கை பதித்தருளி ......... கந்தன் உருவம்" — தணிகைப் புராணம்- அகத்தி. 65. "சேரலமோர் கரனும் ஒக்கல் சேர்த்திய தோர் கரனும்"—பழநிப் புராணம்-கடவுள் வாழ்த்து 7.

(3) ஆறுமுக தேவசேனு பதி : ஆறு திருமுகம், பன்னிரண்டு திருக்கரங்கள். ஒருகை வலதுதொடையில் – தேவசேனையைத் தழுவி மார்பை அணைப்பதுபோல; ஒருகை–அபயத் திருக்கை. ஏனைய பத்துத் திருக்கரங்களில் — கேடயம், வாள், சூலம், குலிசம், வேல், வில், கதை, சேவல், தாமரை, அம்பு.

"ஒருகை தனது வலக் குறங்கின் அணங்கைத் தழுவி யுகளமுலை
மருவ அபயம் ஒன்றுருக வளர்தோல் வாள் சூலங் குலிசம்
பொருவேல், வாள்வில், கதை,புள், அம்புயம், கோல், பத்தும் கரம்பத்தின்
இருவும் ஆறு முகத் தேவ சேனு பதிசீர் இழைப்போரும்"
—தணிகைப் புராணம் அகத்தி. 66.

---

(689-ஆம் பக்கம் குறிப்புத் தொடர்ச்சி)

Agamas ......" — HINDU ICONOGHRAPHY (Page 432). மேலும், மைசூர் மகாராஜா க்ருஷ்ணராஜ ஸார்வ பௌமர் நவநிதிகளின் சாராம்சத்தை ஆகமங்களாக வெளியிட்டருளியுள்ளார். அவைகளுள் ஸ்ரீ தத்வ நிதி என்பது முருகரது பல உருவ அமைப்புக்களைக் கூறும். குமாரதந்தி ராகமத்திலும், ஸ்ரீ தத்வநிதியிலும் கூறப்பட்டுள்ள உருவங்களில் பல வேறுபாடுகள் உள. அவை (வடமொழிமூலமும், குறிப்புக்களும்) அநுபந்தத்திற் குறிக்கப்பட்டுள. (பதிப்பாளர்).

(4) சுப்பிரமண்ய மூர்த்தி: ஒரு திருமுகம், இரண்டு திருக் கரம். இடதுகை இடுப்பில்; வலதுகை அபயம். இது திரு விடைக்கழி முருகன் திருவுருவம் போலும்.

" இருள்கால் சீக்கும் மணிக்கடக இடக்கை கடியிற் கொள இருவி
வெருள்கால் உளத்தோர்க் கஞ்சலெனு விரவும் பயஞ்சா டபயமெனத்
தெருள்கால் ஒருகை வலத்தமைத்துத் திகழ்ந்து பணிவோர் தமக்கெல்லாம்
அருள்கால் விழிச்சுப் பிரமணிய அண்ணல் உருவம் அமைப்போரும் "

—தணிகைப் புராணம்–அகத்தி. 67.

(5) களிற்றூர்திப் பெருமான்: (கஜாரூட மூர்த்தி). ஒரு திரு முகம்; இரு விழிகள்; நான்கு திருக்கரங்கள்; இடப்பக்கம்– வரதம் ஒரு திருக்கரம், சேவல் ஒரு திருக் கரத்தில்; வலது புறத்தில் – வேல் ஒரு திருக்கரத்தில், வாள் ஒரு திருக்கரத்தில்.

"ஒற்றை முகமும் இணைவிழியும் மும்மைப் பயனும் ஒருங்களிக்கும்
கொற்ற வரத மூன்றலைக் குக் குடமோரிரண்டும் இடங்கதிர்ப்ப
மற்றை வலப்பால் மணிவேலும் வாளுங் கதிர்ப்பக் கரநான்கும்
பெற்ற மதவெங் களிற்றூர்திப் பெருமான் உருவம் சமைப்போரும்"

—தணிகைப் புராணம் அகத்தி. 68.

(6) சர்வணபவ மூர்த்தி: திருமுகம் ஆறு; திருக்கரங்கள் பன்னிரண்டு. திருககரங்களில் விளங்குவன: வேல், கேடயம், கண்டாமணி, தாமரை, கோழிக்கொடி, கதை, உளி, அம்பு, வாள், வரதம், அபயம், வில்.

'' ஞாங்கர்ப் படைகே டகங் கண்டை
நளினம் சேவல் கதை இடங்கம்
ஓங்கும் பகழி வாள் வரதம்
ஒளிரும் அபயம் சிலையவை தாம்
தாங்கும் கரங்கள் ஈராறும்
தயங்கும் வதனம் ஓராறும்
ஆங்க விளங்க அருட்சரவ
ணபவன் உருவம் ஆக்குநரும்''

—தணிகைப்புராணம்–அகத்தி. 69.

(7) கார்த்திகேய மூர்த்தி: திருமுகம் ஆறு; திருக் கரங்கள் ஆறு; இடது திருக்கரங்களில் – குலிசம், கேடகம், வரதம்; வலது திருக்கரங்களில் – வேல், வாள், அபயம், இம் மூர்த்தி பயம் (பிறவிப்) பிணி இவைகளை நீக்குவர்.

'சீர்த்த குலிசம் கேடகமே செழித்த வரதம் இடப்பாலும்
கூர்த்த மணிவேல், வாளபயம் குலாவு வலப்பா லும் கவின
ஏர்த்த ஆறு மலர்க்கரமும் இலங்கும் வதனம் ஓராறும்
ஞூர்த்தபிணிகள் தபுங்கார்த்திகேயன் உருவம்தொகுப்போரும்'

—தணிகைப் புராணம்–அகத்தி. 70.

(8) குமாரசுவாமி: ஒரு திருமுகம்; நான்கு திருக்கரம்; வலதுபுறத்தில் வேலும் வாளும்; இடது புறத்தில் சேவற் கொடியும், கேடயமும். நகைமுக வள்ளி சமேதர்.

"வைத்த சுடர்வேல் வாளிரண்டும்
வலப்பால்; இடப்பால் வாரணப்புள்
பைத்த மணித்தோல் ஓரிரண்டும்
பயில அலர்ந்த நாற்கரமும்
முத்த முறுவற் குறமாது
விளங்க முன்வந் தடுத்து மலக்
கொத்து விளியக் கடைக்கணிக்கும்
குமாரன் உருவம் குயிற்றுநரும்"
—தணிகைப் புராணம்-அகத்தி. 71.

(9) ஆறுமுக சுவாமி: ஆறு திருமுகங்கள்; பன்னிரண்டு திருக்கரங்கள், மயில்வாகனம், தேவசேனை-வள்ளி சமேதர். வலது திருக்கரங்கள் ஆறில் - வேல், அம்பு, வாள், திகிரி (சக்கரம்), பாசம், அபயம்; இடது திருக்கரங்கள் ஆறில்— குலிசம், வில், கேடயம், சேவல், அங்குசம், வரதம்.

"படைவேல், பகழி, வாள், திகிரி,
பாசம், அபயம் வலத்து; இடத்துச்
சுடர்வார் குலிசம், சிலை, தோல், புள்,
தோட்டி வரதம் இவைபரித்த
தடவான் கரமும் முகம் ஆறும்,
தனிமா மயிலும், இருமாதர்
உடனும் எழிலும், தரும்ஆறு
முகவன் உருவம் உஞற்றுநரும்"
—தணிகைப் புராணம்-அகத்தி. 72.

(10) தாரகாந்தக மூர்த்தி: ஆறு திருமுகம். பன்னிரண்டு திருக்கரங்கள்; வரதம், சேவற்கொடி, கேடகம், அங்குசம், பாசம், குலிசம், அபயம், வாள், சூலம், சக்கரம், தண்டம், வேல் திருக்கரங்களில் விளங்கும்.

"வரதம், கொடி, கேடகம், தோட்டி
வார்ந்த எறுழ்ப்பா சங்குலிசம்
பரவும் அபயம் வாள் சூலம்
பரிதி, முசலம், வேல் முந்நாற்
கரமும் விளங்க அறுமுகமும்
கதிர்ப்ப விழிகள் கருணைமழை
தரவென் றருளும் தாரகாந்
தகன்சீர் உருவம் சமைப்போரும்"
—தணிகைப் புராணம்-அகத்தி. 73.

(11) சேனுபதி மூர்த்தி: ஆறு திருமுகம், பன்னிரு திருக்கரம்: அபயம், முசலம், வாள், சூலம், வேல், அங்குசம்-வலது திருக் கரங்களில்; வரதம், குலிசம், வில், தாமரை, தண்டம், (கதை) (பாசம் ?) (அம்பு?). — இடது திருக்கரங்களில்

"அபயம், முசலம், வாள், சூலம்
அயில்வேல், தோட்டி, வலம்; வரதம்
தபுசிர் குலிசம், சிலை, பதுமம,
தண்டம், கதை, மற் றிடமாக
உபய இராறு கரதலமும்
ஒளிர்வித் தாறு முகந் தோற்றிச்
சுபநன் கருளி யிடர் துமிக்குஞ்
சேனு பதி சீர் தொகுப்போரும்"
—தணிகைப்புராணம்-அகத்தி. 74.

(12) பிரம சாத்த மூர்த்தி: ஒரு திருமுகம், நான்கு திருக கரம். வரதம், குண்டிகை (கமண்டலம்) — இடது கரங்கள் இரண்டில்; அபயம், ருத்ராக்ஷமாலை (அக்கவடம்) வலது திருக்கரங்கள் இரண்டில்.

"வரத மணிக் குண் டிகை யிரண்டும்
வாமத் திருக்கைத் தலமாக்கிப்
புரவு புரியும் அபயமொடு
புரைதீர் அக்க வடம்வலப்பால்
இரவை யிரிக்கும் வலத்தமைத்திட்
டெல்லா உலகும் இனிதளித்துப்
பிரம சாத்தன் எனப் பொலிந்த
பெருமான் உருவம் பிறக்குநரும்"
—தணிகைப் புராணம்-அகத்தி. 75.

(13) வல்லி கல்யாண மூர்த்தி: ஒரு திருமுகம், நான்கு திருக் கரம்; வல்லி வலது பாகத்தில்; வலக் கரங்கள் – அபயம், (அக்கவடம்) ருத்ராக்ஷமாலை; இடக்கரங்கள் ஒன்றில் (ரத்ன கும்பம்); ஒருகரம் (கடியில்) இடுப்பில்; திருமால் நீர் வார்த் துத் தத்தம் செய்வது.

"அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்கள்
அபயம் அக்க வடந்தாங்க
வெல்யாப் புறுத்த மணிக்கடமும்
கடியும் இடக்கைத் தலஞ்சேரச்
சொல்யா ழனைய வள்ளிவலந்
துன்ன மணிநீர் அரிவாக்கக்
கல்யா ண தின் எழில்வாய்ந்த
கடவுள் உருவம் காண்போரும்
—தணிகைப் புராணம்-அகத்தி. 76.

(14) **பால சுப்பிரமணிய மூர்த்தி:** ஒரு திருமுகம்; இரண்டு திருக்கரம். இடது கை இடுப்பில் அமைந்திருக்கும்; வலது கையில் தாமரை மலர்; திருவடியிற் கிண்கிணி; பாலஉருவம்.

'' கடியில் இடக்கைத் தலம்இருவிக்
கமலம் வலக்கைத் தலம்ஏந்தி
அடியில் மணிக்கிண் கிணிகவைஇ
அமரும் பால உருத்தோற்றி
முடிகள் உரிஞ எதிர்வணங்கும்
முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்
படியில் எழிற்சுப் பிரமணிய
பகவன் உருவம் பயிற்றுநரும் ''

—தணிகைப்புராணம்-அகத்தி. 77.

(15) **கிரவுஞ்சபேத மூர்த்தி:** ஆறு திருமுகம்; எட்டு திருக்கரங்கள். வலது நாலு கரங்களில் வேல், வாள், அம்பு, அபயம்; இடது நாலு திருக்கரங்களில் குலிசம், கேடகம், வரதம், வில்.

'' அழலும் நெடுவேல் வாள்பகழி
அபயம் வலநாற் கரத்தமைத்துத்
தழல்வச் சிரங்கே டகம்வரதம்
சாபம் இடம்நாற் கரத்தாக்கி
எழில்மிக் கொழுகு முகம்ஆறும்
இலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்
புழைபட் டழியப் படைவிடுத்த
புத்தேள் உருவம் பொறிப்போரும் ''

—தணிகைப்புராணம்-அகத்தி. 78.

(16) **மயில் வாகன மூர்த்தி:** ஒரு திருமுகம்; நான்கு திருக்கரங்கள். வலது இரண்டு திருக்கரங்கள்—வேலும் அபயமும்; இடது இரண்டு திருக்கரங்கள்-வரதம், குலிசம்; மயில் ஊர்தி.

'' புலிங்கம் கதிப்பத் தீத்தும்மும்
பொருவேல் அபயம் வலத்திருகைத்
தலங்கொண்டு, இடப்பால் இருகரத்தும்
தக்க வரதம் வச்சிரமும்
இலங்க அணிந்து திரைக்கடலும்
எழுபல் வரையும் உலகனைத்தும்
குலுங்கக் கடவும் மயிலூர்திக்
கோமான் உருவம் இயற்றுநரும் ''

—தணிகைப்புராணம்-அகத்தி. 79.

## *அநுபந்தம் (HINDU ICONOGRAPHY யில் கண்டபடி) குமாரதந்திரத்தில் கூறப்பட்ட திருவுருவங்கள்

### 1. சக்திதர :

ஏகாஸ்யம் த்விபுஜம் வாமே [1]வஜ்ரம் தக்ஷிணஜே கரே
இச்சா ஞான க்ரியா சக்தி ரூபம் சக்திதரம் பஜே.

### 2. ஸ்கந்த :

கல்பத்ருமம் ப்ரணமதாம் கமலாருணாபம்
ஸ்கந்தம் புஜத்வய மனாமய மேக வக்த்ரம்
காத்யாயநீ ஸுதமஹம் கடிபத்ததாம
கௌபீனதண்டதர தக்ஷிண ஹஸ்தமீடே.

### 3. ஸேநாபதி :

நௌம்யாதித்ய ப்ரதீப்தம் த்விதசநயனகம் ஷண்முகம் மந்தஹாஸம்
வாமாங்கே ஸுஸ்திதாயாஸ் ஸரஸிருஹத்ருதா லிங்கிதாயா: ப்ரியாயா:
உத்துங்கோ ருஸ்தானுக்ரே விஹிதகரதலோ பீதிகேடாதி சூல
ஷ்ராதின்யுத்தீப்த சக்திஷ்வஸன கனகதா குக்குடாப்ஜேஷு ஹஸ்தம்.

### 4. ஸுப்ரஹ்மணிய :

ஸிந்தூராருணமிந்துகாந்திவதனம் கேயூர ஹாராதிபிர்
திவ்யைராபரணைர் விபூஷித தனும்ஸ்வர்க்காதி ஸௌக்யப்ரதம்
அம்போஜாபய சக்தி குக்குடதரம் ரக்தாங்க ராகாம்சுகம்
ஸுப்ரஹ்மண்ய முபாஸ்மஹே ப்ரணமதாம் பீதிப்ரணாசோத்யதம்.

(வேறு)

ஏகவக்த்ரம் த்விநேத்ரம் தண்டம் கடிபத்தாபயாந்விதம்
தருணாருண ஸங்காசம் ஸுப்ரமஹ்மண்ய முபாஸ்மஹே.

### 5. கஜவாஹன :

ஏகானனம் த்விநயனம் வரகுக்குடௌ ச
வாமத்வயே நிசிதசக்தி அபயத்வயம்ச
பிப்ராணம் ஈச்வரஸுதம் தபனாயுதாபம்
நித்யம் நமாமி கஜவாஹனம் இஷ்டஸித்யை.

---

* இவை பதிப்பாளர் சேர்த்த குறிப்புக்கள்.

[1] "வஜ்ரம்" என்பதற்குப் பதில் "கடிம்" என்றும் பாடபேதம்; கடி = இடுப்பு.

### 6. சரவண பவ:

சக்திம் கண்டாம் த்வஜ ஸரஸிஜே குக்குடம் பாசதண்டௌ டங்கம் பாணம் வரதம் அபயம் கார்முகம் சோத்வஹந்தம் பீதம் ஸௌம்யம் த்விதசநயனம் *தேவஸங்கை ருபாஸ்யம் ஸத்பி: பூஜ்யம் சரவணபவம் ஷண்முகம் பாவயாமி.

### 7. கார்த்திகேய:

வரதகுலிசகேடம் வாமஹஸ்த த்ரயேச
ததத மபய சக்திம் கட்க மந்ய த்ரயேச
தருணரவி ஸமாபம் ஸாதுபி: பூஜ்யமானம்
கமலவதன ஷட்கம் கார்த்திகேயம் நமாமி.

### 8. குமார:

ஸவ்யத்வயே நிசிதசகத்யஸி மாததானம்
வாமத்வயே பிமதகுக்குட கேடகம் த்வாம்
வல்லீபதிம் விபுத லோசன பூர்ணசந்த்ரம்
கல்யாண தானநிரதம் கலயே குமாரம்.

### 9. ஷண்முகம்

வந்தே ஸிந்தூர காந்திம் சரவிபினபவம் ஸ்ரீமயூராதிருடம் ஷட்வக்த்ரம் தேவஸைன்யம் மதுரிபுதனயா வல்லபம் த்வாதசாக்ஷம் சக்திம் பாணம் க்ருபாணும் த்வஜமபிச கதாம் ச அபயம் ஸவ்யஹஸ்தே சாபம் வஜ்ரம் ஸரோஜம் கடகமபி வரம் சூலம் அன்யைர் ததானம்.

### 10. தாரகாரி

வரத மங்குசத்வஜே ச கடகௌ சாபவஜ்ரம்
அபய பாச சக்ர கட்க முஸல சக்திம் அந்வஹம்
த்விதச பாணிபிர் ததாநமருண கோடி ஸந்நிபம்
பஜத தாரகாரி மத்ர பவவிநாச காரணம்.

### 11. ஸேநாநீ

அபயம் அஸிரதாங்கம் ச அங்குசம் சக்திசூலம்
வரதகுலிச பாசம் பத்மதண்டௌ கதாம்ச
தததம் உபயபக்ஷ த்வதசா யாமஹஸ்தைர்
த்விதச கமல நேத்ரம் தேவ சேனான்யமீடே.

*'தேவசங்கை ருபாஸ்யம்' என்பதற்குப் பதில் 'கேநயம் சைஸ்நர்யை ...... சமீந்த்ரை' என்று பாடபேதம்.

## 12. ப்ரம்ம சாஸ்தா

வாமே கரே ச யுகலே கரகுண்டிகே ச
ஸவ்யேக்ஷ ஸூத்ரமபயம் தததம் விசாகம்
வல்யா யுதம் வனஜ லோசன மேகவக்த்ரம்
வந்தாமஹே வனஜ ஸம்பவ சாஸிதாரம்.

## 13. வல்லீ கல்யாண சுந்தரர்

ஹஸ்த த்வந்த்வே அக்ஷமாலாம் அபயமபித்ருதம் குண்டிகாம் ச்ரோணிபந்தம்
ஸவ்யேவாமே நிஷண்ண: ஸ்ருவத்ருதவிதினு ஹூயமானேன யுக்தம்
ஸர்வாலங்கார யுக்தம் ஜலகலசத்ருதா விஷ்ணுனு சருணுபம்
வல்லீகல்யாணமூர்த்திம் ஸகலஸுரகணை: ஸ்தூயமானம் ப்ரபத்யே.

## 14. பால ஸ்வாமீ

பத்மஸவ்ய கடி ஸம்யுதவாமம் பத்மகாந்தி நிபம் ஏக முகம் ச
பால வ்ருத்திகரம் ஈச்வரஸூநும் பாலம் உன்னதபுஜம் ப்ரணதோஸ்மி

(வேறு) ஏகவக்த்ரம் த்விநயனம் பத்மத்வய கரத்வயம்
ப்ரியப்ரியகரம் வந்தே பால ரூபம் ரவிப்ரபம்.

## 15. கிரௌஞ்ச பேத்தா

அபயசித க்ருபாணௌ சக்திபாணௌ ச ஸவ்யே
வரதகுலிச சாபம் கேடகம் ச அன்ய ஹஸ்தே
தத்த மமரஸேநா நாயகம் ச அஷ்டபாஹூம்
கமல வதன ஷட்கம் க்ரௌஞ்சபேத்தாரம் ஈடே.

## 16. சிகிவாஹனர்

வித்ரும ப்ரபமேகமுகம் விபும் வஜ்ரசக்தி வரதாபய பாணிம்
தேவலோகரி புக்னம் அவிக்நதம் நௌமி ருத்ரபவம் சிகிவாஹம்
தாடிமீ புஷ்ப ஸங்காசம் குஞ்ஜாபம் குங்குமாக்ருதிம்
ஷட்வக்த்ர ஸ்ஹிதம்தேவம் த்வாதசாக்ஷம் ஸுயௌவனம்

சதுர்புஜ முதாரங்கம் யஞ்ஞஸூத்ரேண ஸம்யுதம்
வரதாபய ஸம்யுக்தம் கமண்டல் வக்ஷதாரிணம்
நக்ரகுண்டல ஸம்யுக்தம் கரண்ட மகுடோஜ்வலம்
ஹாரகேயூர கடக கடிஸூத்ரைர் விபூஷிதம

ரத்நவித்ரும பூஷாட்யம் நவ (சன்ன) வீரஸமாயுதம்
பாதநூபுர ஸம்யுக்தம் ஸர்வாபரண பூஷிதம்
ஸர்வலக்ஷண ஸம்யுக்தம் குமாரம் சங்கராத்மஜம்
மஹாவல்லீ தேவஸேநா யுக்தம் சுரகணப்ரியம்
இத்தம் ரூபம் யஜேந்நித்யம் ஸர்வலோகா ஹிதாவஹம்
சதுர்புஜம் பாலவேஷம் ஸ்கந்தம் கனகஸப்ரபம்
சக்தி குக்குட ஹஸ்தம் ச வரத அபய ஸம்யுதம்

வித்ருமநிப த்விதசஹஸ்த ரவீநேத்ர சக்தி சர கட்கம் அபயத்வஜ கதாம்ச
வாமகர சாபகுலிச அப்ஜ வரசூல கேடதர ஸவ்யகர ஷண்முக நமஸ்தே

ஷட்வக்த்ரம் சிகிவாஹனம் த்ரிநயனம் ரக்தாம்பரா லங்க்ருதம்
சக்திம் சர்ம ச கட்க சூல விசிகா பீதிம் தநுஸ் சக்ரகம்
பாசம் குக்குடம் அங்குசம் ச வரதம் தோர்பிர் ததானம் ததா
த்யாயேத் ஈப்ஸித ஸித்திதம் சசிதரம் ஸ்கந்தம் சுரா ராதிதம்
லோகா லோகாந்தகார ப்ரதிஹத கிரணைர் பாநுகோடிப்ர காசம்
பூமின்யஸ்தைக நோடிஷ்வஸநமபி சரம் லம்பமா னோர்த்வ காயம்
ஹஸ்தாப்யாம் சேதராப்யாம் த்ருதமத குலிசம் சக்திம் அம்போருஹாக்ஷம்
ஸர்வாலங்கார யுக்தம் பஜத சுர புரி பாலகம் பாஹு லேயம்

—[குமாரதந்திராகமம் இரண்டாவது படலம்.]

## குமாரதந்திரம் 42-வது படலத்தில் கூறப்பட்ட வேறு அமைப்பு

—:o:—

ஸௌமித்திரர் என்பவர் மூன்று ஜன்மாக்களில் தொடர்ந்து விதிப்படி முருகனை பூசித்ததால் குஹனால் கூறப்பட்ட உருவம்.

### ஸௌமித்ரர்

"த்ரிஜன்மஸௌ புரா ஸ்கந்தம் ஸமப்யர்ச்ய யதாவிதி
உத்தமம் நவதாலேன ஸௌமித்ரம் காரயேத் புத:
த்விநேத்ரம் த்விபுஜம் ரக்தம் ஸௌவக்ரம் ச ஸௌயௌவனம்
தக்ஷிணே சக்தி ஹஸ்தம் ச வாமம் ச கடி பந்தனம்
அலகம் ஜ்யோதிஸம்யுக்தம் தம்ஷ்டிரிணம் ருசிராननம்
கரண்டமகுடம் வாபி ஜடாமகுட மேவவா
ஹஸ்தௌ முகுலவத் பத்தௌ தக்ஷிணம் சக்திஸம்யுதம்
ஸர்வாபரண ஸம்யுக்தம் ஆஸனம் ஸ்தானகம் துவா:
யஞ்ஞோபவீத ஸம்யுக்தம் பத்ம பீடோபரிஸ்திதம்
இத்தம்ரூபம் ஸௌமித்ரஸ்ய குஹேன விஹிதம்புரா"

இரு கண்கள், இரு கைகள், செவ்விய ஆடை, யௌவனப் பருவம், வலக் கையில் சக்திவேல், இடக் கை இடுப்பில், ஜ்யோதிர் மயமான கூந்தல், தெத்துப்பல், சுவைமிக்க முகம், புஷ்பக் கூடைபோன்ற அடர்ந்த அழகிய ஜடையில் கிரீடம், ஸர்வ ஆபரணங்களும் அணிதல், பூணூல், பத்மபீடத்தில் வீற்றிருத்தல்.

—: o :—

## ஸ்ரீ தத்வநிதியில் கூறியுள்ளபடி

(உருவ வேறுபாடுகள் கவனிக்கற்பாலது)

### 1. ஞானசக்தி ஸுப்ரமணியர்

ஏகவக்த்ரம் த்விநேத்ரம் ச ஜடாமகுட ஸம்யுதம்
ச்வேதார்க்க புஷ்பமாலம்ச ஹேமரத்ன கிரீடினம்
சதுர்புஜைர் வஜ்ரசக்தி குக்குடா அபய தாரிணம்
திவ்யகந்தாநு லிப்தாங்கம் சுக்ல யஞ்ஞோப வீதினம்
சிவசக்தி ஞானயோகம் ஞானசக்தி ஸ்வரூபகம்
ச்வேதவர்ண :

ஒருதிருமுகம், இரு கண்கள், ஜடை, வெள்ளெருக்குமாலை: ரத்நங்களிழைத்த பொன் கிரீடம், நான்கு திருக்கரங்களில் முறையே வேல், வஜ்ரம், கோழிக்கொடி, அபயம்; வெண்மை நிறம்.

### 2. ஸ்கந்த சுப்ரமணியர்

சதுர்புஜம் த்விநேத்ரம் ச ச்வேத பத்மாஸன்ஸ்திதம்
குக்குட அபய வஜ்ராணி தததம் வரதம் கரே
கிஞ்சித் கேசா சிகாபத்த புஷ்பமாலாபி ராவ்ருதம்
மேகலாம்பர சம்வீதம் ரத்ன பூஷண பூஷிதம்
தூம்ரவர்ண ப்ரபம் ஸ்கந்தம் ப்ரபாமண்டல மண்டிதம்
ஸ்கந்தரூபம் இதம் ப்ரோக்தம் ......... தூம்ரவர்ணம் :

இருகண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே கோழிக் கொடி, அபயம், வரதம், வஜ்ரம்; வெண்தாமரை ஆஸனத்தில் வீற்றிருத்தல்; தலைமயிரைச் சுற்று தவழும் பூமாலை; அரையில் மான்தோல் அரைஞாண், ரத்ன ஆபரணம், புகைநிறம், ப்ரபைமுழுவதும் சூர்ய ஒளி வட்டம். புகை—சாம்பல் நிறம்.

### 3. தேவ ஸேநாபதி

ஏகவக்தரம் த்விநயனம் சங்க சக்ர வரா அபயாந்
சர்வாபரண சம்யுக்தம் திவ்யகந்தாநு லேபனம்
ச்யாம வர்ணம் ப்ரபும் சைவ சுக்லயஞோபவீதினம்
சுச்மிதம் சாருவதனம் தேவசேநாபதிம் பஜே
ச்யாமவர்ணம்

ஒரு திருமுகம், இருகண், நான்கு திருக்கரங்களில் சங்கு, சக்ரம், வரதம், அபயம், ஸர்வாபரணபூஷிதர், மணமுள்ள சந்தனப் பூச்சு, சாம்பல் நிறம், வெள்ளைப் பூணூல், அழகிய சிரிப்பு தவழும் முகம்.

### 4. சரவணபவர்

ஷட்புஜம் ச ஏகவதனம் பாலசூர்ய சமப்ரபம்
சர்வாபரண சம்யுக்தம் ஸிம்ஹாசதம் ததம் பஜே
த்ரிநேத்ரம் பலிநோத்தூலம் புஷ்பபாண இக்ஷுகார்முகம்
கட்கம் கேடம் ச வஜ்ரம் ச குக்குடத்வஜ தாரிணம்
சரஜன்ம சமாக்யாதம் (ரக்தவர்ணம்)

ஒரு திருமுகம், ஆறு திருக்கரங்களில், முறையே கரும்புவில், மலர் அம்பு, கத்தி, கேடயம், வஜ்ரம், கோழிக்கொடி, உதய ரவியின ஒளி, ஸர்வ ஆபரண மணிதல், சிங்க வாஹனம், மூன்று கண், வீபூதிப் பூச்சு, நாணலில் உதித்தவர். ரத்த வர்ணம்.

### 5. கார்த்திகேயர்

த்ரிநேத்ரம் தசஹஸ்தம் ச மச்தகே பில்வதாரிணம்
சக்திம் சூலம் ததாசக்ரம் அங்குசம் அபயம் அன்யேக
வரதம் தோமரம் பாசம் சங்கம் வஜ்ரம் ச வாமகே
மயூர வாகனாரூடம் சர் வாபரண பூஷிதம்
பால சூர்ய ப்ரதீகாசம் கார்த்திகேயம் சிவாத்மஜம்

ஒரு சிரத்தில் வில்வம் தரித்திருப்பது, மூன்று கண்கள், பத்து கரங்களில் முறையே வலப் பக்கத்தில் வேல், சூலம், சக்ரம், அங்குசம், அபயம், இடதுபக்கத்தில் வரதம், தோமரம் எனும் ஆயுதம் (ஈட்டிபோல), பாசம், சங்கு, வஜ்ரம்; மயில் வாகனம், சகல ஆபரணங்கள், உதயரவியின் ஒளி. ரக்த வர்ணம்.

## 6. குமார :

சதுர்புஜம் ச ஏகவக்த்ரம் கரண்ட மகுடாந்விதம்
சக்திம் ச அபயதம் தக்ஷே சவ்யே வரத வஜ்ரகே
பத்மபுஷ்பம் தரம் கண்டே தேவம் பாலஸ்வருபகம்
(ரக்தவர்ணம்)

ஒரு திருமுகம், அழகிய பூக்கூடை போன்ற கிரீடம், நான்கு திருக்கரங்களில் இடது பக்கத்தில் சக்திவேல், அபயம், வலது கரங்களில் வரதம், வஜ்ரம்; கழுத்தில் தாமரைப்பூ மாலை, குழந்தை உருவம்.

## 7. ஷண்முகர்

சக்திம் சரம் ச கட்கம் ச சக்ரம் பாச அபயௌ ததா
குக்குடம் ச தநு: கேடம் சங்கம் தத்தே ஹலம் வரம்
மயூர வாஹனோபேதம் சர்வலக்ஷண சம்யுதம்
ஜ்யாச விஜயாசைவ வாம தக்ஷிண பார்ச்வயோ:
சர்வாலங்கார சம்யுக்தம் சர்வாபரண பூஷிதம்
ஷண்முகம் ச இதி விக்யாதம் ரக்தவர்ணம்

ஆறு திருமுகம், பன்னிரு கைகளில் முறையே வேல், அம்பு, கத்தி, சக்ரம், பாசம், அபயம், சேவல், வில், கேடகம், சங்கு, கலப்பை, வரதம். ஸர்வ லக்ஷணராய், வலத்திலும் இடத்திலும் ஜயை விஜயை எனனும் இரு பத்நிமாருடன் மயில் வாஹனத்தமர்ந்து திவ்யாபரணாலங்க்ருதராய் வீற்றிருக்கும் கோலம்.

## 8. தாரகாரி

ஏக வக்த்ரம் த்ரிநயனம் கஜப்ருஷ்டோபரி ச்திதம்
(ஷண்முகம்?) ச அபயம் கட்கம் சக்திம் வாமதரே ததம்
கேடகம் ச அக்ஷமாலம் ச குக்குடம் வாமஹ்ச்தகே
தாரகாரிம் பஜே க்யாதம் ரக்தவர்ண :

ஒரு திருமுகம், மூன்று கண்கள், யானை முதுகில் அமர்ந் திருத்தல், வலது மூன்று கைகளில் அபயம், கத்தி, சத்திவேல், இடது மூன்று கைகளில் கேடயம், ருத்ராக்ஷ மாலை, கோழிக் கொடி.

## 9. க்ரௌஞ்சபேத்தா

சதுர்புஜம் த்ரிநேத்ரம் ச ஸ்திதம் ஸிம்ஹாஸனேபரி
வரத அபய ஸம்யுக்த புஷ்பபாண இக்ஷு கார்முகம்
மயூரவாகனரூடம் நமஸ்யே ரக்ஷண உன்முகம்
க்ரௌஞ்சபேத கரத்வந்த்வம் கிரௌஞ்சபேதிச்வரூபகம்

நான்கு திருக்கரங்களில் முறையே வரதம், அபயம், மலர்ப் பாணம், கரும்பு வில்; மூன்று கண்கள், மயில் வாஹனத்தில் ஸிம்ஹாசனத்தில் வீற்றிருத்தல், ரக்ஷித்தலே நோக்கமாகக் கொண்ட திருமுகம், கிரௌஞ்சத்தைப் பிளந்த இரு கைகள், கிரௌஞ்ச பேதி சொரூபம், ரக்த வர்ணம்.

## 10. சிகிவாஹனர்

சதுர்புஜம் ச ஏகவக்த்ரம் த்ரிநேத்ரம் அபயம்வரம்
பாசாங்குச ததம் சைவ ஜ்வாலகேச சிகண்டகம்
இந்த்ரநீல ரதாரூடம் ரக்தோத்பல ஸமப்ரபம்
சதுர்தசாதி பிபவனம் சிகிவாஹனம் ஆசரேத்
ரக்தவர்ண :

ஒரு திருமுகம், மூன்று கண்கள், நான்கு திருக்கரங்களில் முறையே அபயம், வரதம், பாசம், அங்குசம் ஜ்வலிக்கும்; தோகையையுடைய மயில், இந்த்ரநீலரதத்தில் வீற்றிருந்து, செந்தாமரை ஒளி, பதினான்கு உலகங்களிலும் பவனி.

## 11. அக்நிஜாத ஸுப்ரமண்ய :

த்விமுகம் சஅஷ்டபாஹும் ச ச்வேதம்வா ச்யாமகந்தரம்
ஸ்ருவா அக்ஷமாலாம் கட்கம் ச ஸ்வஸ்திகம் தக்ஷிணேகரே
குக்குடம் கேடகம் வஜ்ரம் ஆஜ்யபாத்ரம்து வாமகே
அக்நிஹோத்ரவிதிம் தேவம் அக்நிஜாதஸ்வரூபகம்
நீலவர்ண:

இரு முகம், எட்டு கைகள், வலது நான்கு கைகளில் முறையே ஹோமம் செய்யும் கரண்டி, அக்ஷ மாலை, கத்தி, ஸ்வஸ்திகம்; இடது நான்கு கரங்களில் கோழி, கேடகம், வஜ்ரம், நெய் பாத்திரம்; அக்நியிற் ஜனித்த உரு. அக்நி ஹோத்ர விதியின் தேவர்.

## 12. ஸௌரபேய சுப்ரமணியர்

சதுர்வக்த்ர அஷ்டநயனம் புஜாஷ்ட கமலாஸனம்
குஞ்சிதம் வாமபாதம் ச ஸுஸ்திதம் தக்ஷிணம்பதம்
சச்த்யுத்பலே புஷ்பபாணம் அபயம் தக்ஷிணே கரே
வஜ்ரம் ச இக்ஷுதநு: சூலம் வரதம் வாமகே ததம்
பத்ம புஷ்ப நிபம் சைவ ஸௌரபேய ஸ்வரூபகம்
பாடலவர்ணம்

நான்கு முகம், எட்டு கண்கள், தாமரையில் வீற்றிருத்தல், இடது கால் சற்று வளைவாகவும், வலக்கால் ஊன்றியும், வலது நான்கு கரங்களில் சத்தி, தாமரை, மலர்ப்பாணம்; அபயம்; இடது நான்கு கரங்களில் வஜ்ரம், கரும்பு வில், சூலம், வரதம்; பாதிரிப்பூ வர்ணம்.

## 13. காங்கேய சுப்ரமணியர்

ஏகவக்த்ரம் த்ரிநயனம் தாடிமீ குஸும ப்ரபம்
கரண்ட மகுடோபேதம் குக்குடத்வஜ தாரிணம்
நீலோத்பலதரம் வந்தே மகராரூட மவ்யயம்
பரசும் பூர்ணகும்பம்ச ஸவ்யஹஸ்தேது தாரிணம்
அரணிம் குக்குடம் வாமே காங்கேய ஸமரூபகம்
பாடலவர்ணம்

ஒரு முகம், மூன்று கண்கள், மாதுளம்பூ நிகர் ஒளி, அடர்ந்த மகுடம், கோழிக்கொடி தரித்தல், நீலோற்பலம் தரித்தல், அழிவில்லாதல்; வலது இரு கரங்களில் கோடலி, பூர்ணகும்பம், இடது கரங்களில் அரணிக் கட்டை, கோழி; பொன்மய உரு (பாதிரிப்பூவர்ணம்).

## 14. குஹ சுப்ரமண்ய:

சதுர்புஜம் த்ரிநேத்ரம் ச ஹேமரத்ந கிரீடினம்
சூலம் வஜ்ரம் தரம் ஸவ்யே வரம் அபயகம் அன்யகே
ச்வேதவஸ்த்ரதரம் தேவம் ஸர்வேஷாம் ரக்ஷண உன்முகம்
ஜாயயா வாம பார்ச்வேது கல்யாணோத்ஸவ விக்ரஹம்
பாதாம்புஜம் ஹ்ருதி த்யாத்வா குஹரூபம் ஸமாச்ரயே

இரத்னங்க ளிழைத்த பொன் கிரீடம், மூன்று கண்கள், நான்கு திருக்கரங்கள், வலது இரு கைகளில் சூலம், வஜ்ரம்;

இடது கரங்களில் வரம், அபயம், வெள்ளை வஸ்த்ரம், அனைத்தையும் ரக்ஷித்தலையே நோக்காகக் கொண்டுள்ளவர், பத்நி இடது பக்கத்தில், கல்யாண உற்சவ விக்ரஹர். ச்யாம (சாம்பல்) நிறம்.

## 15. ப்ரம்மசாரி சுப்ரமணியர்

த்விநேத்ரம் த்விபுஜம் சைவ பாலஸூர்யதரம் ப்ரபும்
தக்ஷபாகே தண்டஹஸ்தம் வஜ்ரவாமோருஹஸ்தகம்।
சவ்ய அபசவ்ய பாதம் துஸ்திதம் வா குஞ்சிதம் து வா
சிகாய ஞ்ஞோபவீதாட்யம் மௌஞ்சீ கௌபீன சம்யுதம்
மேகலோபரி வட்யாணம் ரக்தபத்மோபரி ஸ்திதம்
திவ்யரூபதரம் தேவம் ப்ரம்மசாரிணம் ஆச்ரயே
ரக்தவர்ண :

உதய ரவியின் ஒளியுள்ள ப்ரபு, இரு கண்கள், இரு கரங்கள், வலக்கையில் தண்டம், இடது கையில் வஜ்ரம், வலது பாதம் ஊன்றியும், இடது பாதம் சற்று வளைந்தும், குடுமி, பூணூல், மான்தோல், கோவணம், இடுப்பில் ஒட்டியாணம், சிவந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரம்மசாரி.

## 16. தேசிக சுப்ரமணியர்

ஷட்புஜம் ச ஏகவதனம் கரண்ட மகுடாந்விதம்
சக்திஹஸ்த த்வயம் ச ஏவ ஜப மாலாதரம் சுபம்
மயூரவாஹனாரூடம் வர அபய காராம்புஜம்
இத்யேவம் விதிவத் த்யாயேத் சிவதேவச்ய தேசிகம்
ரக்தவர்ண :

ஆறு திருக்கரங்கள், ஒரு திருமுகம், பூக்கூடை கவிழ்த்தது போன்ற அடர்ந்த கிரீடம் தாமரைத் திருக்கரங்களில் சக்தி வேல், ருத்ராக்ஷ மாலை, வரதம், அபயம்.

—:o:—

# பாட்டு முதற்குறிப் பகராதி

## கந்த ரநுபூதி

—:o:—


| | | | | | |
|---|---|---|---|---|---|
| அடியைக் | 23 | கிரிவாய் | 37 | பாழ்வாழ் | 31 |
| அமரும் | 8 | குறியைக் | 42 | பேராசை | 16 |
| அரிதாகிய | 20 | கூகாவென | 11 | மகமாயை | 5 |
| அறிவொன் | 48 | கூர்வேல் | 24 | மட்டூர் | 9 |
| ஆடும் | 1 | கெடுவாய் | 7 | மதிகெட் | 50 |
| ஆதார | 26 | கைவாய் | 14 | மாவேழ் | 39 |
| ஆதாளியை | 38 | சாகா | 41 | மின்னே | 27 |
| ஆருறையு | 47 | சாடுந் | 44 | முருகன்கும | 15 |
| ஆனாவமுதே | 28 | சிங்கார | 34 | முருகன்றனி | 13 |
| இல்லை | 29 | சிந்தாகுல | 33 | மெய்யே | 25 |
| உதியா | 18 | செம்மான் | 12 | யாமோதிய | 17 |
| உருவாய் | 51 | செவ்வா | 30 | வடிவுந் | 19 |
| உல்லாச | 2 | தன்னந் | 49 | வளைபட் | 4 |
| எந்தாயு | 46 | திணியான | 6 | வானோ | 3 |
| கரவாகிய | 45 | தூசா | 43 | விதிகாணு | 35 |
| கருதா | 21 | நாதா | 36 | வினையோட | 40 |
| கலையே | 32 | நெஞ்சக் | காப்பு | | |
| காமா | 10 | | | | |
| காளைக் | 22 | | | | |


—:o:—

## கந்தரநுபூதி ஆராய்ச்சி

—: o :—

"கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொன்ன
எந்தையருள் நாடி யிருக்குநாள் எந்நாளோ"—தாயுமானவர்.

ஸ்ரீ கந்தபிரான் செய்த உபதேசச் சிறப்பையும் அப்பிரானது திருவருட் பிரசாதத்தின் பெருமையையும் பேசும் நூலாதலின் இந் நூலுக்குக் **கந்த ரநுபூதி** என்னும் பெயர் போந்தது. (அநுபூதி - திருவருட் பிரசாத அனுபவஞானம்). முருகபிரான் தடுத்தாட்கொண்டு திருவடி சூட்டி மௌனோபதேசஞ் செய்த பிறகு இந் நூலை ஆசிரியர் இயற்றினர் என்பது—

"எனையாண்ட இடந்தானே பொருளாவது" (3), "மெய்ப்பொருள் பேசியவா" (8), (11); "முருகன் ...... சும்மா இரு சொல்லற என்றலுமே" (12), "உபதேசம் உணர்த்தியவா" (20), "வேலவன் அன்று ஒவ்வாததென உணர்வித்தது" (30), "தீதாளியை யாண்டது" (38), "நினதன்பருளால் ...... பேசா அநுபூதி பிறந்தது" (43), "முருகன் சரணம் சூடும்படி தந்தது" (44)—எனவருந் திருவாக்குக்களால் அறியக் கிடக்கின்றது. இந் நூல் ஐம்பத்தொரு செய்யுள்கள் கொண்ட அற்புதச் சிறு நூல். பொருட் சிறப்பில் இந் நூலுக்கிணையாம் நூல் பிற இல்லை யென்பது சரதம். ஐம்பத்தொரு செய்யுள்களுக்கு மேற்பட்டனவாய் அச்சிடப்பட்டுள்ள பாடல்கள் அருணகிரியாருடைய் திருவாக்கு அல்ல என்பதில் ஐயமில்லை. இனி, ஒரு சாரார் "பேசா வநுபூதி பிறந்ததுவே" என்னும் 43-ஆவது செய்யுளொடு நூல் முடிவுபெறுகின்றது எனவுங் கூறுவர்; எனினும், மேற்கொண்ட எட்டுச் செய்யுள்களின் வாக்கும் விசேடமாகவே தோன்றுவதால் இவ் வாராய்ச்சியில் 51 செய்யுள்களைக் கொண்டது இந் நூல் எனக் கொள்ளப்பட்டுளது. இக் கொள்கை "அநுபூதி ஐம்பதுமே யாருயிர் பேரின்ப வநுபூதி நல்கு மணி" என வருந் தணிகையுலாவினுலும் வலியுறுகின்றது.

2. பொருள்வழிப் பிரிவு செய்தால் இவ் வைம்பத்தொரு செய்யுள்களும் பின் வருமாறும்.

### 1. பிரார்த்தனைப் பதிகங்கள் (10)

1. ஆடும் 1
5. கார்மா 10
3. முருகன் குமரன் 15
4. கருதா 21
5. சிங்கார 34
6. விதிகாணும் 35
7. சாகாது 41
8. கரவாகிய 45
9. எந்தாயு 46
10. உருவாய் 51

### 2. தன்குறை கூறித் தன்னெஞ் சழுங்கிக் கதியிலி தனக்குங் கதியுளதோ எனல் (16)

11. வளைபட்ட 4
12. மகமாயை 5
13. திணியான 6
14. மட்டூர் 9
15. பேராசை 16
16. அடியைக் 23
17. கூர்வேல் 24
18. மெய்யே 25
19. ஆதாரம் 26
20. மின்னே 27
21. கலையே 32
22. சிந்தாகுல 33
23. மாவேழ் 39
24. வினையோட 40
25. ஆருறை 47
26. மதிகெட் 50

### 3. யான் செய்த பிழையென்னோ என நைந்து தொழுதிரங்கள் (2)

27. இல்லேயெனு 29
28. பாழ்வாழ்வு 31

### 4. நெஞ்சொடு கிளத்தல் (3)

29. கெடுவாய் 7
30. கைவாய் 14
31. கிரிவாய் 37

### 5. வறுமையின் கொடுமை (1)

32. வடிவுந் தனமும் 19

### 6. உலகுக்கு உபதேசம் (1)

33. யாமோதிய 17

### 7. சிவபிராற்கு உபதேசம் (1)

34. நாதா குமரா 36

### 8. முருகன் பெருமை (2)

35. உதியா 18
36. அறிவொன் 48

9. தான் பெற்ற உபதேசப் பெருமையும் ஆநந்தப் பேறும் (15)

37. உல்லாச 2
38. வானோ 3
39. அமரும் 8
40. கூகா 11
41. செம்மான் 12
42. முருகன் தனி 13
43. அரிதாகிய 20
44. காளைக் 22
45. ஆனாவமுதே 28
46. செவ்வான் 30
47. ஆதாளி 38
48. குறியைக் 42
49. தூசா 43
50. சாடும் 44
51. தன்னம் 49

இந் நூல் முழுவதையும் நித்திய பாராயணத்துக்கு வைத்துக்கொள்வது மிக விசேடம் என்று ஆன்றோர் கூறுவர். அங்ஙனம் கொள்ள இயலாதார் பின் வரும் ஆறு திருப்பதிகளை யேனும் நித்திய பாராயணத்துக்கு வைத்துக்கொள்வது மிகவும் உத்தமம்.

1. திருப்பணிப் பதிகம்: ஆடும்பரிவேல் (1)
2. கதிதரு பதிகம்: கெடுவாய் மனனே (7)
3. கூற்றெழி பதிகம்: கார்மாமிசை (10)
4. பிறவியொழி பதிகம்: மாவேழ் சனனம் (39)
5. அவா அறுபதிகம்: கைவாய் (14)
6. குருமூர்த்தப் பதிகம்: உருவாய் (51)

மேற் காட்டிய ஆராய்ச்சிப் பாகுபாட்டால் தமது குறைகளை எடுத்துக் கூறியும், தாம் தவநிலையால் பெற்ற பேற்றினை எடுத்து ஓதியும், தாம் பெற்ற மெய்ஞ்ஞான உபதேசத்தின் சிறப்பு, மௌன நிலையிற் கூடுகின்றதும், சொல்லுதற்கரியதுமான பேரின்பநிலை இவைகளை எடுத்துஓதியும், இவ்வின்பத்தை நீங்களும் வழிபாட்டாற் பெற்று உய்யுங்கள் என உலகுக்கு எடுத்து ஓதி — உலகை உய்விக்கின்றார் அருணகிரியார் இவ் வநுபூதிப் பாடல்களால் என்பது தெளிவுபெற விளங்கும்.

3. 'பேசா அநுபூதி' கிடைத்தவுடனே இயற்றினது கந்தரநுபூதி யென்றும், திருப்புகழ்ப் பாடி முருகன் திருவருள் பெரிதும் ஊறியூறிப் பேராநந்தம் முதிர்ந்து ததும்பின நிலையிற் பாடினது கந்தரலங்காரம் என்றும் கொள்ளுவதற்கு இடம் ஏற்படுகின்றது. கிளி ரூபம் பெற்றபின் திருவகுப்புப் பாடினர் என்பதற்குச் அகச் சான்று உளது. இதனைத் திருவகுப்பு ஆராய்ச்சியிற் காண்க. கிளி ரூபம் பெற்ற பின் இவ் வநுபூதி பாடினர் எனும் கொள்கைக்கு இடம் ஒன்றும் நூலில் ஏற்படவில்லை; எனினும், அருணகிரியார் கிளியான பின்பு கந்தரநுபூதி பாடினர் என்பது பெரியோர் கொள்கை. 'கந்த

ரநுபூதி சொன்ன கிளி ... நீ பிடிக்க எய்துமோ' என்பது இலஞ்சி முருகன் உலா (கண்ணி 205); ஆனல், பொருள்வழி ஆயுமிடத்துக் கந்தரலங்காரம் போலவே அநுபூதியும் சுவாமிகள் அப்போதைக்கப்போது தமக்கிருந்த மன நிலைக்கும், பத்தி நிலைக்கும், ஞான நிலைக்கும் ஒத்தவாறு தனித்தனிப் பாடிய பாடல்களின் தொகுதியாமோ இந் நூல் என எண்ணவும் இடம் ஏற்படுகின்றது.

உதாரணமாக :—

(1) சாந்தி பெருது கலக்கமுற்ற நிலையிற் பாடினவை (22) — 4, 5, 9, 10, 16, 19, 23-27, 29, 31-35, 39, 41, 45, 46, 50.

(2) தவங் கிடந்த நிலையிற் பாடினவை (13) — 1, 2, 3, 6, 15, 18, 21, 36, 37, 40, 47, 48, 51.

(3) பேறு பெற்ற ஞான நிலையிற் பாடினவை (13) — 8, 11-13, 20, 22, 28, 30, 38, 42-44, 49.

(4) உபதேசப் பாடல்கள் (நெஞ்சுக்கும் உலகுக்கும் உபதேசம்) (3) — 7, 14, 17.

மேலும், திருத்துருத்தி என்னும் தலத்தில் இறைவன் 'அநுபூதி பாடுக' என்று கட்டளையிட்டனர். 'அநுபூதியென் அருட்டிருப்புகழ் ஓதுக வேல் மயில் அருள்வோனே'—திருப்புகழ் 850. இந்தக் கட்டளையின் பின்பு சில பாடல்கள் பாடப் பட்டிருக்கலாம். அநுபூதியிற் பல பாடல்கள் தம் குறைகூறுவனவும், வேண்டுகோள்கள் கொண்டனவாயும் உள்ள காரணத்தால் — பல குறைகளுக்கும் ஆளாய் உள்ள நம் போலியர் முருகனைப் போற்றி உய்வதற்கு — நித்திய பாராயண நூலாகக் கொள்வதற்கு மிகப் பொருத்தமான நூலாகக் கந்தரநுபூதி திகழ்கின்றது. நூலோ சிறிய அளவினது, ஆனல் பொருளோ மிக மிகச் சிறந்தது. இச் சிறப்பை உணர்ந்தே தாயுமானவர் 'கந்தரநுபூதி சொன்ன எந்தை அருள்நாடி இருக்குநாள் எந்நாளோ' என்றுர். பிறிதொரு பெரியார் முருகவேள் இருக்கும் இடங்களுள் அருணகிரியாரின் வாக்கும், அவர் அடைந்து அனுபவித்த 'அநுபூதியும்' இடங்களாகக் கூறினர்.

'மதுரம் பொழியும் அருணகிரி வாக்கினிடத்தும், அவன் இனிதிற் றிளைத்த அநுபூதியினும், மறைச்சிரத்தும் ... முளைத்த பவள இளங்கிளையின் முளையே வருக வருகவே, முழுது மயிலா சலமுகந்த முருகா வருக வருகவே' — (மயிலம் முருகன் பிள்ளைத் தமிழ்). (அருணகிரிநாதர் நூலாராய்ச்சி—பக்கம் 169-176, 298 பார்க்க).

## 4. விஷய ஆராய்ச்சி

—:o:—

அருணகிரிநாதர் சரித்திரம் :
தமது பாமாலையை முருகர் சூடினது 29
முருகர் தம்மை யாண்டருளி உபதேசித்தது 3, 8, 12, 20, 38, 38, 42, 43, 44
இந்திரன் 10
ஈதற்பெருமை 7
உபதேசம் 7, 17, 37
ஐம்பொறி 14
கணபதி காப்பு
கஜமுகாசுர சம்ஹாரம் 1
சிவபிரான் :
பிரம விஷ்ணுக்களுக் கெட்டாதவர் 18
சேவல் 1
தலம் :
நாகாசலம் 11
தேவசேனே 45
நிந்தாஸ்துதி 31
பார்வதி 46
பிரமன் 35, 36
மயில் 1, 10
மாயையின் வன்மை 5, 39
முருகர் :
அசுர சம்ஹாரம் 50
அடியார்க் கருள்பவர் 49
கங்கா புத்திரர் 33, 34, 50
கிரௌஞ்சம், எழுகிரிபிளந்தது 4, 9, 24, 32, 37
சிவபிராற்கு உபதேசித்தது 36, 39, 41
சூரசம்ஹாரம் 4, 10, 16, 24, 47
நாலு கவித்தியாகர் 11
பிறவான் இறவான் 12
பொன்னுலகத்தைப் புரந்தது 16, 18, 20, 47
மாமரத்தை யட்டது 10
முழுதும் செய்யோன் 25
வள்ளியைத் திருடினது 12
வள்ளியைத் துதிப்பது 35
வள்ளியை நாடி அலேந்தது 40, 44
வள்ளியைப் பணிந்தது 6, 22, 36
முருகர் படை :
குலிசம் 45
முருகர் மாலே :
கூதளம் 38
முருகர்-யானே வாகனம் 45
யமன்-காலன் 10, 41
வள்ளியம்மை 32, 38, 43
வறுமையின் கொடுமை 19
வேல் 1, 4, 13, 14, 16, 23, 24, 30, 40, 42, 44, 46, 49

# கந்தரநுபூதி - சொல்லகராதி

—:o:—


அ (அந்த) 50
அகந்தை 37
அகம் 5, 9
அசுரசூரன் 21
அடவி 33
அடி (திருவடி) 23
அடி (ஆதிமூலம்) 19, 37
அடியேன் 20, 25, 47
அடியோடும் 37
அடு 50
அணி 1, 6, 43
அதன் 47
அதிகா 18
அதிப 50
அதிமோகம் 6
அதீத(ன்) 26
அதுவாய் 32
அந்தம் 19
அநகா 18
அநுபூதி 43
அபயா 18
அம்மா 12
அமராபதி காவல 18
அமரும் பதி 8
அமுது 28
அயரும் 5
அயில் 19, 25, 28
அயில் வேல் 19, 28
அயில் வேலரசு 28
அரசு 19, 28
அரசே 19, 28
அரவிந்தம் 6
அரனர் 36
அரி (பகைவன்) 10
அரி தாகிய 20
அரிது 20
அரிவாய் 37
அரு 13, 51
அரும்புமதோ 6
அருவி 40
அருவித்துறை 40
அருள் (காப்பு) 13, 24, 26, 27, 43, 46
அருள் கொண்டு 13
அருள்வாய் 1, 15, 35, 51.
அருளே 27
அ(ல்)லது 35
அ(ல்)லால் 30
அ(ல்)லையோ 2, 48
அலை 32
அலைய 25
அலையே படுமாறு 32
அலையோ (அல்லையோ) 2, 48
அவ்வாறு 30
அவமே 50
அவா 14

அழ 11
அழிய 4
அற்றது 42
அற்று 42
அற (மிகவும்) 17, 38, 50,
அற (நீங்க) 2, 9, 12, 17, 48
அறம் 17
அறிகின்றது 30
அறிந்திலன் 12
அறிய 49
அறியா 18
அறியாமை 23, 29, 42
அறியார் 13
அறியுந்தரம் 13
அறியும் 42
அறியேனை 38
அறிவார் 30, 48
அறிவு 17, 37, 42, 48
அன்பு 43
அன்பு அருள் 43
அன்று 13, 30
அன்றும்

ஆக - என்பது ஆ எனக் குறுக்கம்
உரிதா (உரிதாக) 20
கூறு (கூறுக) 47
பணியா (பணியாக) 1
பேறு (பேறுக) 47
ஆகம(ம்) 26
ஆகரன் 28
ஆகிய 20, 28, 45,
ஆகுலம் 33, 46
ஆசா நிகளம் 43
ஆசை 16
ஆடும் பரி 1
ஆடை 5
ஆண்ட 3
ஆண்டது 39
ஆதாரம் 26
ஆதாளி 38
ஆம் 8, 37, 43
ஆப் 28, 32, 51
ஆயின 43
ஆயுதம் 45
ஆர் 6
ஆவது 3
ஆள் 46
ஆறுறு (36) 47
ஆறு(வழி) 32, 47
ஆறு(எண்) 5, 47
ஆனவை 31, 46
ஆனு அமுது 28
ஆனை (காப்பு) 1

இ (இந்த) (இப் பிமரம்) 8, 31
இங்கு 27
இசைவாய் 21
இசைவிப்பது 30
இட்டனை 29
இடம் 3
இடு 32
இடுவாய் 7
இதண் 40
இதம் 2
இதுவோ 27

இமையோர் 20, 47
இமையோர் புரி 20
இயல் (காப்பு)
இரவா வகை 45
இரு 12
இரு தாள் 21
இருள் 13, 48
இல் (வீடு) 29, 33
இல் (உவமைப் பொருள்) 30
இ(ல்)லது 13, 51
இ(ல்)லா 19
இல்லே எனும் மாயை 29
இ(ல்)லேன் 26
இலது 51
இழந்த 2
இறவான் 12
இறை 7
இறையோன் 37
இறைவா 38
இன்னம் 49
இனி 17, 31
இனியே 17

ஈகுவையோ 45
ஈடணை 39

உகந்து 25
உடம்பு 35
உணர்த்தியவா 20
உணர்வித்தது 30
உணர்வு 15
உணரா 18
உதயம்(ன்) 3, 33
உதியா 18
உபதேசம் 20
உபதேசிகன் 41
உமையாள் 46
உமையாள் மைந்தா 46
உய்வாய் 14
உயிர் 51
உரம் (மார்பு) 4
உரிதா(க) 20
உரு 13, 30, 51
உருக – காப்பு
உருகுஞ்செயல் 15
உருவ 4
உரை 42
உல்லாச 2
உலகம் 47
உலகு 42
உழல 16
உள் 5
உ(ள்)ளது 13, 51
உளது 13, 51
உளதோ 47
உளவோ 31
உறும் 48
உன(உன்னுடைய) 6

ஊசல்படும் 9
ஊடற 9
ஊடு 9, 32
ஊர் (வினைச்சொல்) 9

ஏ (எந்த) 36
எண்குண பஞ்சரன் 15

எண்ணுமதோ 24
எதிரப்படுவாய் 10
எந்தாய் 46
எப்பொருள் 36
எம் 17, 46
எய்தியவா 22
எல்லாம் 2
எவ்வாறு 30
எழு 4
எறியும் 9, 16
என் 11, 29, 46
என்றலும் 12
என்று (என்ற) 19
என்று (எப்பொழுது) 9, 15, 21, 33, 35, 39
என்று (என்று சொல்லி) 5, 15, 36
என்று (என) 13, 19
எ(ன்)னும் 4, 8, 10, 16, 29, 31, 33, 37
என்னே 27
எ(ன்)னை 2, 3, 28, 31, 41, 46
என்னையிழந்த நலம் 2
என (என்று) 1, 6, 11, 13, 22, 25, 30, 31
என (என்று கேட்க) 36
எனக்கு 21, 34, 46
எனை (என்னை) 3, 41, 46

ஏடணை 39
ஏர் 10
ஏழ் 39
ஏறிய 25, 27
ஏன் 17

ஐயோ 25
ஐவாய் 14

ஒடு 4
ஒடும் 14
ஒரு 19, 26
ஒரு சற்றும் 26
ஒருவர்க்கு 30, 49
ஒவ்வாதது 30
ஒழிந்திலன் 5
ஒழிவாய் 14
ஒழிவேன் 9
ஒளி 13, 51
ஒன்று 38, 48
ஒன்றும் 12

ஓட 40
ஓடவிடும் 40
ஓடு (உடன்) 24, 40, 42, 48
ஓதாய் 36
ஓதிய 17
ஓதியது 36
ஓரா 16

கங்காநதி 34
கங்காநதி பால 34
கடவேன் 50
கடை (இடப்பொருள்) 45
கணம் 38
கதறி 32
கதி 7, 35, 50, 51
கதிகெட்டு 50
கதிர்வேல் 14, 40, 46
கதிர்வேலவன் 46

கந்தா 33, 46
கமழும் 44
கயமாமுகன் 1
கரம் – காப்பு
கரவாதிடுவாய் 7
கரவாது 7
கரவு 45
கரு 51
கருணகரன் 33
கருதா மறவா நெறி 21
கருதி 22
கல் – காப்பு
கல்வி 17, 45
கல்வியுளார் 45
கலகம் 41
கலபத்தேர்மா 10
கலபம் 10
கலை 32
கவி 11
கழல் 14, 25, 35, 44
களைந்திட 5
களையும் 49
கனம் – காப்பு
கனல் 3

கா (காவாய்) 41
காடு 44
காண 21, 35
காணும் 35
கார் 10
கார்மா 10
காலன் 10
காவல 18
காளை 22

கிராதகுலி (வேடர் குலப் பெண்–வள்ளி) 38
கிரி 4, 37
கிரிராஜ குமாரி 8
கிருபாகரன் 34
கிருபை 49
கிருபைசூழ் சுடர் 49
கிளை 4, 11
கிளைபட்டெழுசூர் 14
கின்னம் 49

குகன் 15, 51
குஞ்சரம் 45
குஞ்சர(வன்) 45
குடி 19
குடிபோகிய(வா) 19
குணபூதரன் 23
குணம் 19
குமரன் 8, 15
குமரா 36, 45, 46
குமரா நம 36
குமரேசன் 22
குமாரி 8
குரவா 45
குரு 13, 15, 51
குருபுங்கவன் 15
குலப்பிடி 32
குலம் 19
குலி 38
குலிசம் 45
குலிசாயுத 45
குலிசாயுத குஞ்சரம் 45 (தேவசேனை)

குழல் (கூந்தல்)
பாளைக் குழல் 22
மட்டூர் குழல் 9
குளிர்வித்தவன் 47
குறமின் 23, 36, 39
குறமின்கொடி 23, 39
குறமின் பதசேகரன் 36
குறி 42
குறித்தறியும் 42
குறித்து 42
குறியாது 23, 42
குன்று 24
கூகா 11
கூடி 11
கூதாள 38
கூர் 24
கூர்வேல் 24
கூர்வேல் விழி 24
கூறிடு 32
கூறு 32
கெட்டு 50
கெட 8, 39
கெடவோ 23, 50
கெடுவாய் 7
கேள் (கேட்பாயாக) 7
கேள் (சுற்றம்) 8
கை 4, 14, 25
கொங்கை 24
கொடி 23, 39
கொலை 32
கோவே 39
சகமாயை 5
சகோதரன் 1
சங்க்ராம 34
சங்கர 39
சங்கரதேசிகன் 39
சண்முகன் – காப்பு, 3, 34
சமரம் 8
சயிலம் 9
சரணங்கள் (திருவடிகள்) 41
சரணம் 44
சல்லாப (விநோதன்) 2
சற்றும் 26
சன்னம் 39
சாகாது 41
சாடும் 1, 44
சிகாமணி 11; 26
சிகாவல 34
சிங்கார(ம்) 34
சிதைய 48
சிதைவித்து 47
சிந்தாகுல இல் 33
சிந்தாகுலம் 33, 46
சிந்தை 42
சிலை 6
சிவ 39, 41, 45
சிவசங்கர 39
சிவசங்கர தேசிகன் 39
சிவஞானோபதேசிகன் 41
சிவஞானம் 41
சிவயோகம் 45
சிவயோக தயாபரன் 45

சிறந்திட(வே) காப்பு
சீரு(சீறி) 47

சுகாதிப 50
சுடர் 29, 49
சுடர்வேல் 29
சுடுவாய் 7
சும்மா 12
சும்மா இரு சொல்லற 12
சுர 11, 2, 16, 21, 22, 26, 35
சுரபூ 2, 22, 35
சுர பூபதி 2, 22, 35
சுரர் 44
சுரலோக சிகாமணி 11, 26
சுரலோக துரந்தரன் 16
சுனை 40

சூடும் 36
சூடும்படி 44
சூர் 4, 10, 16, 24, 47
சீருவரு சூர் 47
முதுசூர் 16
சூர் மா 10
சூர பயங்கரன் 18
சூரவிபாடணன் 21
(விபாடணன்-பிளந்தவன்)
சூரா 16
சூழ் 49

செஞ்சொல் காப்பு
செப்புமது 38
செம்மான் மகள் 12
செய்தன் 31
செய்தனதாம் 31
செய்யோய் 25
செயல் 15
செயும் 41
செரு 1
செல்லும் 14
செல்வம் 33
செவ்வான் 30
செவ்வான் உரு 30
செவி 14
செறிவு 42, 48
சென்று 45

சேகரன் 36
சேர் காப்பு
சேர்வேன் 24
சேரவும் 24
சேவகன் 25, 50
திதிபுத்திரன் வீறடுசேவகன் 50
மயிலேறிய சேவகன் 25
சேவல் 1

சொல் 12, 29
சொல்லற 12
சொல்லாய் 2
சொல்லுமதோ 44

ஞான சுகாதிப 50
ஞான(ம்) 26, 41, 50
ஞானவிநோத 26
ஞாளுகரன் 28
ஞானோதயம் 3
ஞானோபதேசிகன் 41

தகுமோ 4, 16, 25, 28
தஞ்சத்தருள்சண்முகன்காப்பு
தஞ்சத்து காப்பு
தட்டு 9
தட்டூடற 9
தணியா (அதிமோகம்) 6
தந்ததனுல் 17
தந்த 33
தந்தது 44
தந்து 15
தந்தை 46
தயங்குவது 5
தயாபரன் 6, 45
தர 21
தரம் 13

தரன் 20
தரமோ 13
தருவாய் 34
தலாரி (தலாஅரி) 10
தலையூடு 32
தவம் 22
தளை 4
தளைபட்டு 4
தற்பரம் 28
தன்னந்தனி 49
தன்னந்தனி நின்றது 49
தனம் 19
தனி 1, 13, 42, 49
தனி நின்றது 49
தனிவேல் 13, 42, 44

தாம் 17, 31
தாமே 17
தாய் 46
தார் 10
தாரக 20
தாரண 20
தாழ்வானவை 31
தாழ்வு 31
தாள் 6, 7, 21, 22
தாள்வனசம் 21
தான் 26, 30, 36, 49
தான் (கடவுள்) 28
தானவ நாசகன் 8
தானே 3

திகழ் 30
திணியான (மனேசிலை) 6
திதி 50
திதிபுத்திரர் (அசுரர், 50
தியங்கி 40
தியாகா 11
திரிந்தவன் 40
திருடன் 12
திருடும் 12
தினை 40

தீதாளி 38
தீநெறி 34
தீர்த்து 46

துகள் 43
துகளாயின 43
துகில் 43
துதியா (த) 35
துரந்தரன் (ரக்ஷித்தவன்) 16
துறை 40

தூசாமணி 43
தூசு 43
தூள்படவே 7

தேசிகன் 39
தேடும் 1
தேர் 10
தேவ 39

தொடு 4, 10
தொளை 4
தொளைத்த 24
தொளைபட்டு 4
தோய் 32
தோள் 39

நங்குரு 13
நடவிர் 17
நதி 34, 50
நதிபால 34
நதிபுத்திர(ன்) 50
நம் 13
நம 36
நமனர் 41
நலம் 2
நவில் 3
நவில 28
நவை 46

நா 17
நாகபுரம் 20
நாகபுரந்தரன் 20
நாக(ம்) - [தேவலோகம்] 20
நாகாசலம் (திருச்செங்கோடு) 11
நாசகன் 8

நாசி 14
நாதா 36
நாம் (அச்சம்) 17
நாயகன் 46
நாலு 11
நாலுகவித் தியாகன் 11
நாள் 41
நான்மறை 3
நிகர் 27
நிகழ்த்திடல் 42
நிகளம் 43
நிட்டூர 9
நிர்ப்பயன் 9
நிராகுல 2. 9
நிலை 28, 47
நிலை நின்றது 28
நின்ற 48
நின்ற-அது-தான் 49
நின்றது 13, 28, 49
நின்று 5, 48
நினது 43
நினைந்திலையே 26
நினைவாய் 7
நினைவார் 49
நீ 2, 26, 29, 31, 46
நீத்து 47
நுதல் 35
நெகிழ்ந்து - காப்பு
நெஞ்சம் - காப்பு
நெடும் போர்வேல 24
நெடுவேதனை 7
நெறி 21, 34, 42
நேசா 43
பசுந்தினை 40
பஞ்சக்கர ஆனை - காப்பு
பஞ்சக்கர(ம்) - காப்பு
பஞ்சரன் 15
பட்ட 4
பட்டு 4, 9
பட (தூள்பட, அழிய) 7, 16
படி (சூடும்படி) 44
படும் 9
படுமாயை 31
படுமாறு 32
பணி (வேலை) 1, 6
பணிய 22
பணியா(க) 1
பணியும் 6, 22
பணிவாம் - காப்பு
பதசேகரன் 36
பதம் (திருவடி) காப்பு 6, 22, 36
பதம் (பதவி, நிலை) 37
பதறி 32
பதி (ஊர்) 8
பதி (தலைவன்) 22
பயங்கரன் 18
பயன் 27
பரவும் 15
பரி 1
பரிசு 9
பரிவாரம் 37
பன்னிருவாகு 29
பாடும் 1
பாதம் 36
பாதா 36
பார் 3
பால(ன்) 34
பாவி 19
பாழ் 31
பானை 22
பிடி 32
பிணி 16
பிணிபட்டு 16
பிமரம் 8
பிரான் 5, 48

பிரிவு 48
பிறந்தது 43
பிறவான் 12
பிறிவு 48
பின் 35, 43

புகழ் 38
புங்கவ (சிரேஷ்ட) 15
புங்கவர் (தேவர்) 15
புணர்வீர் 17
புணரும் 23, 39
புத்திர 50
புதல்வா 18
புரந்தர(ன்) 20, 2, 4
புரி 20, 29, 32
புரிவாய் 37
புவி 15
புனம் 44
புனல் 3
புனை - காப்பு
புனையும் 29
புனைவாள் 43

பூ(பூமி) 2, 17, 22, 24, 36
பூ தரன் 23
பூபதி 2, 22, 24, 36

பெம்மான் 12
பெற்று 14
பெற 17, 26
பெறும் 47

பெறுவேன் 33
பேசா அநுபூதி 43
பேசியவா 8, 11
பேராசை 16
பேறு 47

பொரு 8, 15
பொருள் 3, 8, 11, 12, 20, 27, 36
பொருளாவது 3
பொருளே 27
பொல்லேன் 29

பொறுத்திலை 29
பொறை 37
பொன்னே 27

போகா வகை 11
போகியவா 19
போய் 17, 34
போர்வேல 24

மக்கள் 4
மகமாயை 5
மகள் 12
மகன் 8
மகிபா 23
மங்காமல் 34
மங்கையர் 9, 24
மட்டு 9
மட்டூர் குழல் 9
மடந்தையர் 5, 34
மடிய 10
மணி 27, 43, 51
மணியே 27
மதி(நிலவு) 35
மதி(அறிவு) 50
மதிகெட்டு 50
மதிவாணுதல் 35
மந்தாகினி 33
மயங்கி 50
மயங்கிடவோ 40
மயல் 17
மயில் 21, 25, 27. 31, 41
மயில் வாகனன் 21, 31, 41
மயிலேறிய சேவகன் 25
மயிலேறிய வானவன் 27
மரியா 18
மரு 51
மல் 29
மலர் 35, 36, 51
மலர்க் கழல் 35

மலர்ப்பாதா 36
மலே 32
மலேயே 32
மறவா 18, 21
மறவேன் 40
மறை 3, 46
மறை நாயகன்46
மன்னே 27
மனம் 3, 6, 19, 26
மனனே 7, 14, 37
மனே 40
மனேசிலே 6
மனேதீதா 26
மா 10, 39, 44
மாடு (பொன்) 5
மாயை 5
மாது 4
மாயை 5, 29, 31, 39
மார்ப 10
மாருதம் 3
மால் (திருமால்) 18
மால் (மயக்கம்) 46
மாலே காப்பு
மான் 12
மான்மகள் 12
மிசை 10
மிடியென் ஞெருரு பாவி 19
மின் 23, 27, 36, 39
மின்கொடி 23, 39
மின்னும் 49
மின்னேநிகர் வாழ்வு 27
மீது 6
முகம் 5
முடி 44
முடிந்திடும் 39
முடிய 23
முதல் (முதலான) 36
முதுசூர் 16
முருகன் 12-15, 44
முருகா 2, 21, 33, 41, 43
முழுதும் 25
முறையோ 23
முனி 13
மூவேடணே 39
மெய் (உடல்) 14
மெய் (உண்மை) 8, 11, 17, 20, 25, 45
மெய்ப் பொருள் 8, 11, 20, 45
மெய்யே 25
மேரு 22
மேல் 17, 47
மேல் நிலே 47
மேவல் (மேவுதல்) 37
மைந்தா 46
மையல்வலே 9
மொழிந்து 15
மொழிந்தும் 5
மோகம் 6
யா (எவை) 6
யாம் 17
யாவையும் 7
யான் 27, 28
யானே – ஆனே பார்க்க
யானே 3
யோகம் 45
யோகவித விநோதன் 2
யோகா 41
ராஜகுமாரி 8
லோக(ம்) 11, 26
வகை 11, 45
வடிவிக்ரம வேல் 23
வடிவு 19
வடிவேல் 7
வடிவேல் இறை 7
வந்த 10, 48
வரதா 21

வரம் 33, 34
வரில் 10
வரு 47
வருவாய் 51
வரோதயன் 33
வல்ல 5
வலாரி தலாரி 10
வலை 9
வலைப்பட்டு 9
வழி 14
வள்ளி 6, 22, 35
வள்ளி பதம் பணியும் தயாபரன் 6
வள்ளிபதம் பணியும் வேள் 22
வளை 4
வளைபட்ட கை 4
வனசம் 21

வாகனன் 21, 31
வாகா 41
வாகு 29
வாகை(யன்) 32
வாடி 50
வாணுதல் 35
வாய் (அவயவம்) 14
வாய் (வாய்ந்த) 14
வாய் (இடப்பொருள்) 14, 37
வாய்விட 32
வாழ்வாய் 31
வாழ்வு 25, 27, 31
பாழ்வாழ்வு 31
மின்னே நீகர்வாழ்வு 27
வினைவாழ்வு 25
வெவ் வினைவாழ்வு 25
வாள் (ஒளி) 35
வான் 3, 30
வானவன் 27

விக்ரம(ம்) 20, 23, 37
விக்ரமவேல் 23, 37
விகிர்தன் 49
விட 33
விடப்பெறுவேன் 33
விடவோ 32
விடா(த) 35, 39
விடு 37
விடும் 40
விடுவாய் 7
விண்ணவர் 36
விதம் 2
விதி 18, 35, 51
விதிகாணும் உடம்பு 35
விதித்தனை 31
விதியின் பயன் 27
விந்தாடவி 33
விநோத(ன்) 2, 26
விபாடனன் 21
விமலன் 18
விரதா 21, 35
விரி 20
விரிதாரண 20
விரும்பிய 27
விழி 14, 24
விழுங்கி 28
வினை 7, 25, 40
வினையேன் 16, 35
வினைவாழ்வு 25

வீடும் 44
வீடுஞ்சுரர் 44
வீரா 16
வீழ்வாய் 31
வீறு 50

வெங்காடு 44
வெம் (வெம்மை) 44
வெவ்வினை வாழ்வு 25
வெளிப்படின் 19
வெறி 48
வெறிவென்றவர் 48
வெறும் (தானும்) 28
வென்றவர் 48

வேடர் குலப்பிடி 32
வேதம் 26, 44
வேதனை 7
வேதா 36
வேதாகம(ம்)26
வேதாள கணம் 38
வேர் 24
வேல் 1, 7, 9, 13, 14, 16, 19, 23, 24, 29, 37, 40, 42, 44, 46, 49,
அயில்வேல் 19
கதிர்வேல் 14, 40, 46, 49
கூர்வேல் 24
சாடுந்தனிவேல் 44
சுடர்வேல் 29
தனிவேல் 13, 42, 44
நெடும் போர்வேல் 24
போர்வேல் 24
மின்னுங் கதிர்வேல் 49
வடிவிக்ரமவேல் 23
வடிவேல் 7
விக்ரமவேல் 23, 37
வேல்முனி 13
வேல 24, 37
வேலரசு 19, 28
வேலவ 11
வேலவர் 17
வேலவன் 4, 10, 29, 30, 38, 46, 48
வேலிறையோன் 37
வேள் 20, 22

(1) அடுக்குத் தொடர்

ஒழிவாய் ஒழிவாய் 14
காகா 41
தகுமோ தகுமோ 4
நடவீர் நடவீர் 17
முறையோ முறையோ 23
விடுவாய் விடுவாய் 7

(2) ஆச்சரியக் குறிப்பு—ஆ : முடிவு

உபதேசம் உணர்த்தியவா 20
குடியும் குலமும் குடி போகியவா 19
தாளைப் பணியத் தவம் எய்தியவா 22
மெய்ப் பொருள் பேசியவா 8, 11

ஓ : முடிவு (தகைமையதா—என்னும் பொருள்)

அரவிந்தம் அரும்புமதோ 6
அருள்சேரவும் எண்ணுமதோ 24
ஆண்டது செப்புமதோ 38
இசைவிப்பதுவோ 49
சொல்லுமதோ 44

(3) எதிர் மொழிகள்

அடி அந்தம் 19
இருள் ஒளி 13
உருஅரு 13, 51
உளது இலது 13, 51

(4) கடைக்குறை

ஆக – ஆ எனக் குறுகியது:

உரிதா (உரிதாக) 20
கூறு (கூறுக) 47
பணியா (பணியாக) 1
பேறு (பேறுக) 47

(5) த – குறுகியது :

இலா (இல்லாத) 19
ஓரா (ஓராத) 16
கருதா (கருதாத) 21
தணியா (தணியாத) 6
துதியா (துதியாத) 35
பேசா (பேசாத) 43
மறவா (மறவாத) 21
விடா (விடாத) 35, 39

ஐந்து பூதங்கள் :

வான், புனல், பார், கனல், மாருதம் 3

ஐந்து பொறிகள் :

மெய், வாய், விழி, நாசி, செவி 14

—:o:—

உ
திருத்தணிகேசன் துணை



அருணகிரிநாத ஸ்வாமிகள் பாடினவெனச் சொல்லப்படும்
(1) வேல் விருத்தம், (2) மயில் விருத்தம், (3) சேவல் விருத்தம்

—:o:—

# வேல் விருத்தம்

———:o:———

## 1

[1]மகரம்அள றிடைபுரள உரககண பணமவுலி
மதியும்இர வியுமலையவே
[2]வளரெழிலி குடருழல இமையவர்கள் துயரகல
மகிழ்வுபெறு மறுசிறையவாஞ்
[3]சிகரவரை மனைமறுகு தொறுநுளைய மகளிர்செழு
செநெல்களொடு தரளம் இடவே
[4]செகசிரப கிரதிமுதல் நதிகள்கதி பெறஉததி
திடர்அடைய நுகரும் வடிவேல்
[5]தகரமிரு கமதமென மணமருவு கடலுகழி
தருகவுளும் உறுவள்எயிறுந்
[6]தழைசெவியும் நுதல்விழியும் உடையஒரு கடவுள்மகிழ்
தருதுணைவன் அமரர்குயிலுங்
[7]குகரமலை எயினர்குல மடமயிலும் எனஇருவர்
குயமொடமர் புரியுமுருகன்
[8]குமரன்அறு முகன்எதிரும் விருதுநிசி சரர்அணிகள்
குலையவிடு கொடியவேலே.

## வேல் விருத்தம்

### 1

(பொ-உ·) (மகரம்) மகர மீன்கள், (கடலில் வேலின் வெம்மையால் நீர் வறண்டுபோன காரணத்தால்) அளறிடை புரள - கடற் சேற்றிலே புரளவும், (அதனுல் பாதலம் தெரிய, பாதலத்தின்கண் உள்ள) (உரகம்) ஆதிசேடன் என்னும் பாம்பின் (கணபண மவுலி) கூட்டமான - ஆயிரக்கணக்கான (பணமவுலி) படங்களின் உச்சியை, (மதியும்) சந்திரனும் (இரவியும்) சூரியனும், (மலேயவே) தமது கிரணங்களால் தாக்கவும்,

2. (வளர் எழிலி) மேலோங்கி வரும் மேகங்களின், (குடர் உழல்) உட்பாகங்கள் சுழற்சியுறவும், (இமையவர்கள்) தேவர்களின் (துயர் அகல) வருத்தங்கள் நீங்கவும், (மகிழ்வு பெறு) மகிழ்ச்சி பெற்றவையும், (அறுசிறையவாம்) இந்திர ஞல் தமது சிறை அறுபட்டனவான,

3. (சிகரவரைதொறும்) சிகரங்களே உடைய மலேயகம் தோறும், (மனேதோறும்) வீடுகள்தோறும், (மறுகுதொறும்) தெருக்கள்தோறும், நுளேய மகளிர் -(நெய்தல் நிலப் பெண் கள்) கடற்கரையில் குடியிருக்கும் பெண்கள், (செழு) செழிப் புள்ள, செந்நெல்களோடு, (தரளம்) முத்துக்களேயும் (இடவே) உலேயில் இடும்படியாகவும்,

4. செக(ம்) உலகில், (சிர) நதிகளுள் தலேமைகொண் டுள்ள (பகிரதி முதல்) கங்கையாறு முதலான ஆறுகள் (கதி பெற) தமது ஓட்டம் தடைபெருது முன்போல் ஓடவும், (உததி) கடல் (திடர் அடைய) நீர் வற்றி மேடாம்படி, (நுகரும்) கடல் நீரை உறிஞ்சி உண்ட (வடிவேல்) கூரிய வேலானது (யாருடைய வேல், எந்த வேல் என்ருல்)

5. (தகரம்) வாசனே மயிர்ச் சாந்து, (மிருகமதம்) கஸ்தூரி (என) போல் (மணம் மருவு) நறுமணம் கமழும் (கடகலுழி) மதநீர்ப் பெருக்கை - ஊற்றெழுக்கைத் தருகின்ற (கவுளும்) கன்னத்தையும், (உறு) பொருந்தியுள்ள, (வள்) வலிமையும் வளமும் கொண்ட (எயிறும்) தந்தங்களேயும்,

6. (தழை செவியும்) தழைத்து விரிந்துள்ள காது களேயும், (நுதல் விழியும்) நெற்றிக் கண்ணேயும் (உடைய) கொண்ட (ஒரு) ஒப்பற்ற (கடவுள்) விநாயகக் கடவுள் (மகிழ் தரு) மகிழ்ச்சிகொள்ளும் (துணேவன்) சகோதரன், (அமரர்) தேவர்களால் வளர்க்கப்பட்ட (குயிலும்) குயில்மொழியை உடைய தேவசேனே

7. (குகரமலை) குகைகளை உடைய (மலை) வள்ளிமலையில் வாழ்ந்த (எயினர்குல) வேடர்குலத்து வளர்ந்த (மடமயிலும்) இள மயில்போன்ற வள்ளி-(என இருவர்) எனப்பட்ட இருவர் தம் (குயமொடு) கொங்கைகளுடன் (அமர் புரியும்) போர் செய்யும் முருகவேள்,

8. குமரமூர்த்தி, ஆறுமுக அண்ணல், (எதிரும்) தன்னை எதிர்த்து (விருது) வெற்றிச் சின்னங்களுடன் வந்த (நிசிசரர்) அசுரர்களின் (அணிகள்) படை வகுப்புக்கள் (குலைய) குலைபட்டழிய (விடு) பிரயோகித்த (கொடிய) கடுமை வாய்ந்த (வேலே) வேலாயுதமே.

(க-உ.) குமரன் ......... விடு கொடிய வேலே மகரம் அள றிடை புரள ...... உததி திடரடைய நுகரும் வடிவேல்.

(கு-உ.) அடி 1, 4: கடல் வேலால் பட்டபாடு – வேல் வாங்கு வகுப்பு அடி 4, 6 பார்க்க.

அடி 2: (1) இமையவர் துயர் நீங்கியது ஷெ அடி 7, 12 பார்க்க.

(2) வரை சிறை அறுபட்டது — வேல் வகுப்பு– அடி 14-ன் குறிப்பைப் பார்க்க.

அடி 3: (மகளிர்) செந்நெல்லொடு (தரளம்) முத்தை உலையிலிடுதல்: "சிறுமிமார்கள் ...... முத்துலைப்பெய் முது குன்றமே"—சம்பந்தர் 1-131-7.

அடி 5: "ஊற்றிருக்கும் மதக்கலுழி"
—தணிகைப்புராணம் – கடவுள் வாழ்த்து.

யானை மதத்துக்கு மணம் உண்டு — கலித்தொகை 21, 48, 66.

அடி 6: "தழைமடற் செவித் தந்தி" — கோனேரி – உபதேச காண்டம்-கடவுள் வாழ்த்து.
"நெற்றிவிழியும் திரண்ட குறுந்தாளும்"
—ஆதிபுரி புராணம்-கடவுள் வாழ்த்து.

அடி 7: கிரவுஞ்சம் என்னும் ஒருமலையுடனும், சூரபதுமனெடு வந்த ஏழுமலைகளுடனும் பொருதது போதாதென்று வள்ளி, தேவசேனைகளின் நான்கு (முலையெனும்) மலைகளுடனும் குமரவேள் பொருதனர் என்க.

குருகு மலையெனும் ஒருமலை யுடனமர் புரிகோவே!
ஒருப துமனெடு வருமெழு மலையொடு பொருதேவே!
பெரும! குறமகள் சுரமகள் எனவரு மடவாரீர்
இருமு லைகளெனு மலைகளொ டமர்புரி பெருமானே!
ஆறிரண் ட டுக்கலை, ஊறு செய்த உத்தம!
நீறு சேரு நெற்றிய, பேறு தந்து பேணுதி.

## 2

[1]வெங்காள கண்டர்கைச் சூலமுந் திருமாயன்
வெற்றிபெறு சுடர்ஆழியும்
[2]விபுதர்பதி குலிசமுஞ் சூரன் குலங்*கல்லி
வெல்லா எனக்கருதியே
[3]சங்க்ராம நீசயித் தருளெனத் தேவருஞ்
சதுர்முகனும் நின்றிரப்பச்
[4]சயிலமொடு சூரனுடல் ஒருநொடியில் உருவியே
தனிஆண்மை கொண்ட நெடுவேல்
[5]கங்காளி சாமுண்டி வாராகி இந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
[6]கன்னிநா ரணிகுமரி த்ரிபுரைபயி ரவிஅமலை
கௌரிகா மாக்ஷிசைவ
[7]சிங்காரி யாமளை பவாநிகார்த் திகைகொற்றி
த்ரியம்பகி அளித்த செல்வச்
[8]சிறுவன்அறு முகன்முருகன் நிருதர்கள் குலாந்தகன்
செம்பொற் றிருக்கை வேலே.

(பொ-உ.) (1) வெம்-கொடிய, காளகண்டர்-விஷத்தை ஏந்திய கழுத்தினராகிய சிவனது (கைச்சூலமும்) திருக்கையில் உள்ள சூலாயுதமும் (திருமாயன்) அழகிய திருமாலது (வெற்றிபெறு) ஜெயம்பெறும் (சுடர் ஆழியும்) ஒளிவீசு சக்கரமும்,

2. (விபுதர் பதி) தேவர்களுக்குத் தலைவனான இந்திரனுடைய குலிசாயுதமும் சூரனையும் அவனுடைய (குலம்) குலத்தினரையும் (கல்லி) அடியோடு பெயர்த்து அழித்து (வெல்லா) வெல்லுந் தரத்தன அல்ல என்று (கருதியே) எண்ணியே —

3. (சங்க்ராம) போர் வீரனே! நீ (சென்று) ஜெயித்து வந்தருள் என்று தேவர்களும் (நான்முகன்) பிரமனும் நின்று வேண்டிக்கொள்ள,

---

*கல்வி என்பது பாடமாயின் ' மாயைவித்தைகள் ' எனப் பொருள் காண்க.

4. (சயிலமொடு) எழுகிரிகளுடன் சூரனுடைய உடலை ஒரு நொடிப் பொழுதில் உருவிச்சென்று (தனி) ஒப்பற்ற (ஆண்மையை) வீர வலிமையைக் (கொண்ட) கொண்டதான (நெடுவேல்) பெரியவேல் – எது என வினவில் – அது

5. (கங்காளி) கங்காளம் – எலும்பு மாலையை அணிந்தவள், (சாமுண்டி) (மகிடாசுரன் தலைமேல் நின்றகோலத்துத்) துர்க்கை, (வாராகி) வராகவதாரத்தின் சத்தி, (இந்த்ராணி) சத்தமாதர்களில் இந்திரசத்தி, (கௌமாரி) சத்தமாதர்களில் குமாரமூர்த்தியின் சத்தி, (கமலாசன) தாமரையை ஆசனமாக- இருப்பிடமாகக் கொண்டுள்ள,

6. (கன்னி) கன்னிப் பருவம் அழியாதவள், (நாரணி) திருமாலிடத்திருந்து காத்தல் தொழிலை நடத்தும் சத்தி (வைஷ்ணவி) (அல்லது நாராயணன் தங்கை), (குமரி) என்றும் இளையவள், த்ரிபுர – மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள், (பயிரவி) அச்சம் தருபவள் அல்லது பைரவ மூர்த்தியின் பத்தினி, (அமலை) மலமற்றவள், கௌரி, காமாட்சி (சைவ) சிவத்திற் பற்றுடைய

7. (சிங்காரி) அழகி, (யாமளை) சியாமள (ஒருவகை பச்சை) நிறத்தை உடையவள், (பவாநி), (கார்த்திகை) துர்க்கை, (கொற்றி) வெற்றிக்கு உரிய துர்க்கை (த்ரியம்பகி) முக்கண்ணி (அளித்த) பெற்ற, செல்வம் நிறைந்த

8. (சிறுவன்) மகன், ஆறுமுகன், முருகன், (நிருதர்கள்) அசுர்களின் (குலாந்தகன்) குலத்துக்கு யமன் போன்றவன் — ஆகிய கந்தப்பெருமானது திருக்கரத்தில்விளங்கும் **வேலாயுதமே.**

(க–உ.) உமை மகன் முருகன் திருக்கை வேல் – சூர சம்மாரம் செய்த ஆண்மை வேல் என அறிக.

(கு–உ.) (1) அடி 1, 2: வேல் – 'எப்படைக்கும் நாயகம் ஆவது'—கந்தபுராணம் 1–18–38.

(2) சிவனது சூலம், திருமாலின் சக்கரம், இந்திரனுடைய குலிசம் இவை ஒன்றேனும் சூரனை வெல்லுந் தரத்த அல்ல; வேல் ஒன்றே அவனை வெல்லக்கூடும் என்னும் இப் பாடலின் கருத்தைக் கீழ்க்காட்டிய திருவுத்தரகோசமங்கை பிள்ளைத் தமிழிலும் காண்க :

> பூவில்வரு திசைமுகக் கடவுளா லுந்,தேவர்
> புயபலத் தாலும்,இந்த்ரன்
> போர்கொண்ட வச்சிரப் படையாலும், அந்தகன்
> பொருகால தண்டினாலும்,

காவலர் துழாய்முடிக் கண்ணியான் விடுசக்
கரப்படையி னுலும்,நீல
கண்டன்விடு சூலத்தி னுலும்,ஒரு காலத்தி
னுலுமே கால்சாய்வுரு
மாவினெடு முடிகுலைய நெட்டுடல் பிளந்துதிர
மடமடத் தடிபெயர்க்க
வழியப் பெருங்குருதி விரிதலைப் பேயுண்ண
வடிவேல் திரித்துவாங்கு
தேவசே னுபதி ஒருத்தனை வளர்த்தமயில்
செங்கீரை ஆடி அருளே
தென்மங்கை நகர்வந்து தன்மங்கை வளர்மங்கை
செங்கீரை ஆடி அருளே. (4)

அடி 6 : 'திரிபுர பயிரவி' — திரிபுரா என்பதும் பைரவி என்பதும் தேவியின் திருநாமங்கள் — தக்கயாகப்பரணி 431, பக்கம் 316.

3

[1]வேதாள பூதமொடு காளிகா ளாத்ரிகளும்
வெகுளுறு பசாசகணமும்
[2]வெங்கழு குடன்கொடி பருந்துசெம் புவனத்தில்
வெம்பசி ஒழிக்கவந்தே
[3]ஆதார கமடமுங் கணபண வியாளமும்
அடக்கிய தடக்கிரியெலாம்
[4]அலையநட மிடுநெடுந் தானவர் நிணத்தசை
அருந்திப் புரந்தவைவேல்
[5]தாதார் மலர்ச்சுனைப் பழநிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகம்
[6] தணிகைசெந் தூரிடைக் கழிஆவி னன்குடி
தடங்கடல் இலங்கைஅதனிற்
[7]போதார் பொழிற்கதிர் காமத் தலத்தினைப்
புகழும்அவ ரவர்நாவினிற்
[8]புந்தியில் அமர்ந்தவன் கந்தன்முரு கன்குகன்
புங்கவன் செங்கைவேலே.

3

(பொ-உ.) (1) (வேதாள பூதமொடு) பிசாசு, பூதம் இவைகளுடன் (காளி, காளாத்ரிகள்) காளி, காளாத்ரி எனப் பெயர்பெற்ற விஷப்பற்களை உடைய பாம்புபோல (வெகுளுறும்) பசிக்கு உணவு கிடைக்கவில்லை என்று) கோபம் கொள்ளும் (பசாசகணமும்) பேய்க் கூட்டங்களும்

2. (வெங்கழுகுடன்) கொடிய கழுகுகளுடன்; (கொடி) காக்கைகளும், பருந்துகளும் (செம்புவனத்தில்) ரத்தத்தாற் சிவந்த பூதலத்தே, (வெம்பசி) தமது கொடிய பசியை ஒழிக்கும் பொருட்டு வந்து —

3. (ஆதார) ஆதாரமாய் — மந்த்ரமலையைத் தாங்கின (கமடமும்) ஆமையும், (கணபணம்) (பூமியைத் தாங்கும்) கூட்டமான படங்களை உடைய (வியாளமும்) பாம்பும் (அடக்கிய) தமது பாரச் சுமையிற் கொண்டுள்ள (தடக்கிரி எலாம்) விசாலமான பெரிய மலைகளில் எல்லாம்

4. (அலைய நடமிடும்) அலைந்து நடமாடும், அலைந்து திரிந்து உலவின (நெடுந்தானவர்) பெரிய அசுரர் கூட்டங்களின் (நிணத்தசை) மாமிச சதைகளை (அருந்தி) உண்டு (அசுரர்களைச் சங்கரித்து என்றபடி) (புரந்த) தேவர்களைக் காத்த (வை) கூரிய வேல்-வேலாயுதம்-எதுஎன வினவில்-அது

5. (தாது ஆர் மலர்) மகரந்தப் பொடிகள் நிறைந்த பூந்தாது நிறைந்த மலர்களைத் தரும் சுனைகளை உடைய பழநிமலை, (சோலைமலை) பழமுதிர்சோலை, தனி - ஒப்பற்ற (பரங்குன்றம்) திருப்பரங்குன்றம், (ஏரகம்) திருவேரகம் - சுவாமி மலை —

6. திருத்தணிகை, திருச்செந்தூர், திருவிடைக்கழி, திரு ஆவினன்குடி, (தடம்) பெரிய கடலாற் சூழப்பட்ட இலங்கையில் —

7. (போதார்) மலர்கள் நிறைந்த, (பொழில்) சோலைகள் சூழ்ந்த கதிர்காமம் ஆகிய ஸ்தலங்களைப் (புகழும்) போற்றித் துதிக்கும் (அவரவர் நாவினில்) அந்த அந்த பக்தர்களின் நாவிலும்,

8. (புந்தியில்) அறிவிலும் - மனத்தினிலும், (அமர்ந்தவன்) வீற்றிருப்பவன், கந்தபிரான், முருகவேள், குகமூர்த்தியாம் (புங்கவன்) கடவுளின் செவ்விய திருக்கரத்தில் விளங்கும் **வேலாயுதமே.**

(க-உ.) முருகன் செங்கை வேல் அசுரர்களைச் சங்கரித்த வேல் என அறிக.

(கு-உ.) அடி 1: காளி, காளாத்திரி, யமன், யமதூதி— இவை பாம்பின் விஷப் பற்கள். பூதகணம்-பசாசகணம்- பூதகணம் பதினெட்டுத் திறம்; பசாசகணம்-நாற்பத் தெண்ணுயிரம் திறம். (தக்கயாகப்பரணி 336 உரை).

'ஆதார கமடம்'—'காத்த ஆமை' என்ருர் தக்கயாகப் பரணியில். கடல் கடைகிற காலத்து மந்த்ர பருவதத்துக்கு அடைகல்லாய் நின்ற கூர்மராாசன் விழ, ஆமை வடிவாய்ப் புகுந்து கடலிலே ஆகாசமே நின்று மந்தர பருவதத்தை முதுகில் தாங்கி ரட்சித்த ஆமை — தக்கயாகப்பரணி 341–ன் உரை. ஆதிசேடன் பூமியைத் தாங்குவது — பூத வேதாள வகுப்பு - அடி 1-ன் குறிப்பு.

3 – 4. மலைகளில் இருந்த தானவர்(அசுரர்கள்) வேலால் மாய்ந்தது — "மலை நிருதர் உக மலை தொளைசெய்த கதிர் வேலா"—திருப்புகழ் 177.

6. தணிகை வருமிடத்து அருணகிரியார் திருவிடைக் கழியைக் கூறுவது வழக்கம் — பொருகளத்தலகை வகுப்பு— அடி 31 (பக்கம் 390) குறிப்பு.

## 4

[1]அண்டர்உல குஞ்சுழல எண்திசைக ளுஞ்சுழல
அங்கியும் உடன்சுழலவே
[2]அலைகடல்க ளுஞ்சுழல அவுணருயி ருஞ்சுழல
அகிலதல முஞ்சுழலவே
[3]மண்டல நிறைந்தரவி சதகோடி மதியுதிர
மாணப் பிறங்கியணியும்
[4]மணிஒலியி னிற்சகல தலமுமரு ளச்சிரம
வகைவகையி னிற்சுழலும் வேல்
[5]தண்டமுட னுங்கொடிய பாசமுட னுங்கரிய
சந்தமுட னும்பிறைகள் போல்
[6]தந்தமுட னுந்தழலும் வெங்கணுட னும்பகடு
தன்புறம் வருஞ்சமனையான்
[7]கண்டுகுலை யும்பொழுதில் அஞ்சலென மென்சரண
கஞ்சம்உத வுங்கருணைவேள்
[8]கந்தன்முரு கன்குமரன் வண்குறவர் தம்புதல்வி
கணவன் அடல் கொண்டவேலே.

4

(பொ-உ.) (1) (அண்டர் உலகும் சுழல) தேவலோகம் சுழல, எட்டுத் திசைகளும் சுழல, (அங்கியும்) அக்கினி பகவானும் கூடச் சுழல,

2. அலை வீசும் கடல்கள் சுழல, (அவுணர்) அசுரர்களின் உயிர்கள் சுழல, (அகில தலமும்) எல்லா உலகங்களும் சுழல,

3. (மண்டலம் நிறைந்த) வட்ட வடிவம் பூரணமா யுள்ள (ரவி) சூரியன், (சதகோடி மதி) நூறுகோடி சந்திரன், இவைகளின் நிறமும் ஒளியும் கொண்டு (ரத்தம்) அசுரர்களின் ரத்தம், (மாணப் பிறங்கி) நிறைந்து விளங்க, (அணியும்) அணிந்துள்ள

4. மணிகளின் ஒலியில், (சகலதலமும்) எல்லா உலகங் களும் (மருள) அச்சம் கொள்ள, (சிரம வகையினில்) ஆயுதப் பயிற்சி செய்யும் வகையில் சுழன்று செல்லும் வேல், எது என வினவில் அதுதான் —

5. (த்ண்டம் உடனும்) தண்டாயுதத்துடனும், (கொடிய பாசமுடனும்) கொடுமை வாய்ந்த பாசக் கயிற் றுடனும், (கரிய சந்தமுடனும்) கருநிறமான வடிவுடனும், பிறைச் சந்திரன் போன்ற

6. (தந்தம் உடனும்) பற்களுடனும், (தழலும்) எரி வீசும் (வெம்) கொடிய, (க(ண்)ணுடனும்) கண்களுடனும், (பகடு தன் புறம்) எருமையின் முதுகின்மேல், (வரும்) வருகின்ற (சமனை யான்) எமனை நான்

7. (கண்டு) பார்த்து (குலையும்பொழுதில்) உள்ளம் நடுங்கிச் சோர்வு கொள்ளும்போது, (அஞ்சல் என) (பயப் படாதே என்று (மென்) மெல்லிய (சரண கஞ்சம்) திருவடித் தாமரையை (உதவும்) எனக்கு அருளும் கருணை வாய்ந்த செவ்வேள்,

8. கந்தக்கடவுள், முருகபிரான், குமாரமூர்த்தி, (வண்) வளப்பம் பொருந்திய (குறவர் தம் புதல்வி) குறவர்களின் மகள் வள்ளியின் நாயகன் ஆகிய கடவுளின் (அடல்கொண்ட) வலிமையும் வெற்றியும் கொண்ட **வேலாயுதமே.**

(க-உ.) யமன் வரும்போது அஞ்சல் எனத் தனது திருவடியை உதவும் கருணை முருகன் — வள்ளி கணவரது வேல் எங்கும் ஆட்சி செயும் வேல் என அறிக.

(கு-உ.) (1) 'அங்கியும் உடன் சுழல' – 'தீயழற் சிகழி கான்று சென்றிட'—கந்தபுராணம் 4-13-465.
''தேயுவின் எடுத்த அண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிரகோடி அண்டத் தங்கியும் ஒன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகி ஆன்றோர் வெருவரும் தோற்றம்கொண்டு
நாயகன் தனது தெய்வப் படைக்கலம் நடந்த தன்றே''
—கந்தபுராணம் 4–13–481.

அடி 3: ரவி சதகோடி - மாணப்பிறங்கி — ''முருகன் தொட்ட இருதலை படைத்த ஞாங்கர் ஆயிரகோடி என்னும் அருக்கரில் திகழ்ந்து தோன்றி'—ஷை 4–13–465.

அடி 4: வேலுக்கு மணியுண்டு – 'மணி அயில்' - 'மணிக் கதிர் வேல்'—திருப்புகழ் 112, 286, 867, 'மணிவேற் குமரன்' — கல்லாடம் 48.

அடி 5-8: யமன் வருணனை — திருப்புகழ் 17 – அடி 1 பார்க்க.

## 5

[1]ஆலமாய் அவுணருக் கமரருக் கமுதமாய்
ஆதவனின் வெம்மைஒளிமீ
[2]தரியதவ முநிவருக் கிந்துவி ற்றண்ணெண்
றமைந்தன்ப ருக்கு முற்று
[3]மூலமாம் வினையறுத் தவர்கள்வெம் பகையினை
முடித்திந்தி ரர்க்கு மெட்டா
[4]முடிவிலா நந்தநல் கும்பத மளித்தெந்த
மூதண்ட மும்புகழும் வேல்
[5]ஏலமா யானையின் கோடதிற் சொரிமுத்து
மின்பணைக ளுமிழு முத்தும்
[6]இனிவாடை மான்மதம் அகிலோடு சந்தனம்
இலவங்க நறவமாருந்
[7]தாலமா மரமுதற் பொருள்படைத் திடும்எயினர்
தருவநிதை மகிழ்நன் ஐயன்
[8]தனிநடம் புரிசமர முருகன்அறு முகன்குகன்
சரவணக் குமரன் வேலே.

5

(பொ-உ.) (1) (ஆலமாய் அவுணருக்கு) அசுரர்களுக்கு விஷம்போல நின்றும், (அமரருக்கு அமுதமாய்) தேவர்களுக்கு அமுதம்போல உதவியும், (ஆதவனின்) சூரியன்போன்ற – அல்லது சூரியனைக் காட்டிலும் அதிகமான (வெம்மை ஒளி) விரும்பத்தக்க (ஞான) ஒளியை(மீது) மேற்கொண்டுள்ள

2. அருமையான தவம் செய்யும் முநிவர்களுக்கு (இந்து வில்) சந்திரன்போல (தண் என்று அமைந்து) குளிர்ந்த தண்ணருளுடன் பொருந்தியும், அன்பர்களுக்கு (முற்று) முடிவுபெறாத

3. (மூலமாம் வினையறுத்து) மூலகாரணமாய் வந்து மூளும் பழவினைகளை அறுத்து, அவர்களுடைய (வெம் பகையினை) கொடிய பகைகள் யாவற்றையும் (முடித்து) ஒழித்து, இந்திரர்களுக்கும் எட்டாததும்

4. முடிவு இல்லாததுமான ஆனந்தத்தை (நல்கும்) தருகின்ற (பதம் அளித்து) பதவியைத் தந்தும் (அதனால்) (எந்த மூதண்டமும்) பழையதான உலகங்கள் எல்லாம் புகழ்கின்ற வேல் - எது என வினவில் அதுதான் —

5. (ஏல, மா) பொருந்திய-சிறந்தயானையின் (கோடதில்) தந்தத்தினின்றும் (சொரி) உதிரும் முத்தும், இன்பணைகள் இனிய ஒளிவிடும் மூங்கில்கள் உதிர்க்கின்ற முத்தும்,

6. (இனி) இனிய (வாடை) வாசனை வீசும் (மான்மதம்) கஸ்தூரி, அகிலுடன் சந்தனம் (இலவங்கம்) கிராம்பு, (நறவம்) தேன் (ஆரும்) இவைகளை அநுபவிப்பவர்களும்

7. (தாலமாம் மரமுதல்) பனைமரம் முதலான. (பொருள்) செல்வத்தைப் (படைத்திடும்) பெற்று அநுபவிப் பவர்களுமான (எயினர்) வேடர்கள் (தரு) வளர்த்த (வநிதை) தேவி வள்ளி நாயகியின் (மகிழ்நன்) கணவன் (ஐயன்) மேலோன்

8. (தனி நடம்புரி) ஒப்பற்ற குடைக்கூத்து, துடிக் கூத்து இவைகளை ஆடின (சமரமுருகன்) போர் முருகன், ஆறுமுகவன், குகமூர்த்தி, சரவணத்தில் தோன்றிய குமாரக் கடவுளின் வேலாயுதமே.

(க-உ.) குமரன் வேலே அழிவிலாத ஆனந்தத்தைத் தரவல்லது என அறிக.

(கு-உ.) (1) ஆலம் அவுணருக்கு, அமுதம் அமரருக்கு — 'வஞ்சவேல்'—திருப்புகழ் 750, (பக்கம் 237) கீழ்க் குறிப்பு.

(5) யானை தந்தத்தின் முத்து, மூங்கில், பாம்பு ஈனும் முத்து — "கழை முத்து, கரிமுத்து ......... அரவீனும் அழல் முத்து" – திருப்புகழ் 764. 'இன்பணிகள்' பாடமாயின் — பாம்புகள் உமிழ்கின்ற ரத்ன முத்தும் – மின்பணிகள் – ஒளி விடும் பாம்புகள்.

## 6

[1]பந்தாட லிற்கழங் காடலிற் சுடர்ஊசல்
பாடலினொ டாடலின்எலாம்
[2]பழந்தெவ்வர் கட்கம் துணித்திந்தி ரற்கரசு
பாலித்த திறல் புகழ்ந்தே
[3]சந்தாரு நாண்மலர்க் குழல்அரம் பையர்களும்
சசிமங்கை அனையர்தாமுந்
[4]தன்னைஅன் பொடுபாடி ஆடும்ப்ர தாபமும்
தலைமையும் பெற்ற வைவேல்
[5]மந்தா கிநித்தரங் கச்சடில ருக்கரிய
மந்த்ரஉப தேச நல்கும்
[6]வரதேசி கன்கிஞ்சு கச்சிகா லங்கார
வாரணக் கொடி உயர்த்தோன்
[7]கொந்தார் மலர்க்கடம் புஞ்செச்சை மாலையுங்
குவளையுஞ் செங்காந்தளுங்
[8]கூதாள மலருந் தொடுத்தணியு மார்பினன்
கோலத் திருக்கைவேலே.

(பொ-உ.) (1) பந்தாட்டத்திலும், (கழங்கு) கழற்சிக் காய் ஆட்டத்திலும் (சுடர் ஊசல்) ஒளிவிடும் ஊ(ஞ்)சல் ஆடும்பொழுதும் (பாடலினொ டாடலின் எலாம்) பாடல், ஆடல் என்னப்பட்ட எல்லாவற்றிலும் —

2. பழைய (தெவ்வர்) பகைவர்களாம் அசுரர்களின் (கட்கம்) வாளைத் (துணித்து) பிளந்து கூறுக்கி இந்திரனுக்கு (அரசு) விண்ணுலக ஆட்சியைப் (பாலித்த) தந்து உதவின (திறல்) பராக்ரமத்தைப் புகழ்ந்து

3. சந்து ஆரும் (சந்தம் ஆரும்) அழகு நிறைந்துள்ள (நாள்மலர்) புது மலர்களைக்கொண்ட (குழல்) கூந்தலை உடைய (அரம்பையர்களும்) தெய்வ மகளிரும், (சசிமங்கை) இந்திரன் மனைவி இந்திராணி (அனையர் தாமும்) போன்ற மங்கையர்களும், அல்லது — அ(ன்)னையர்தாமும் — கௌரி, கங்கை, கார்த்திகை மாதர் - ஆகிய தாய்மார்களும்,

4. தன்னை அன்புடனே பாடி யாடும் (ப்ரதாபமும்) கீர்த்தியையும் (தலைமையையும்) மேலாந் தன்மையையும் பெற்றுள்ள வேல் - எது என வினவில் அதுதான் —

5. (மந்தாகினி) கங்கையின் (தரங்கம்) அலைகளைக் கொண்ட (சடிலருக்கு) சடாபாரத்தை உடைய சிவ பிரானுக்கு, மந்திர உபதேசத்தை (நல்கும்) அருளின

6. (வரதேசிகன்) சிரேஷ்டமான குருமூர்த்தி, (கிஞ்சுகம்) சிவப்பு நிறமுள்ள (சிகா அலங்கார) அலங்கார சிகா — அலங்காரமான - அழகான — உச்சிக் கொண்டையை உடைய (வாரணக்கொடி) கோழிக்கொடியை உயர்த்தோன்- ஏந்திப் பிடித்தவன்

7. (கொந்து ஆர் மலர்க்கடம்பும்) பூங்கொத்துக்கள் நிறைந்த கடப்ப மலர்களையும், (செச்சை மாலையும்) வெட்சி மாலைகளையும்.குவளைமலர்களையும், செங்காந்தள் மலர்களையும்

8. கூதள மலர்களையும் (தொடுத்து அணியும்) மாலைக ளாகக் கட்டப்பட்டு அணிந்துள்ள மார்பை உடையவனும் முருகவேளின் (கோலத் திருக்கை) அழகிய திருக்கரத்தில் உள்ள வேலே.

(க-உ.) முருகன் திருக்கை வேலே இந்திரற்கு அரசு கொடுத்தது என்று மங்கையர் பாடிப் புகழும் கீர்த்தியை உடையது என அறிக.

(கு-உ.) முருகவேளின் திருக்கைவேலின் பிரதாபத்தை யும் மேன்மையும் பாடல்களில் அமைத்துப் பெண்கள் தாம் பந்தாடும்பொழுதும், கழங்கு ஆடும்பொழுதும், ஊ(ஞ்)சல் ஆடும்பொழுதும் பாடி ஆடினார்கள் — இது அருணகிரியார் அவர் காலத்திற் பெண்களிடம் கண்ட காட்சி ஆதலால் அத்தகைய எளிய பாடல்களை அமைத்துப் பெண்களை இப்போதும் அவர்கள் பந்தாடும்பொழுதும், கழங்காடும் பொழுதும், ஊ(ஞ்)சல் ஆடும்பொழுதும் பாடப் பழக்குவது இம்மை மறுமை இன்பத்தைத் தருவதாகும்.

## 7

[1] அண்டங்கள் ஒருகோடி ஆயினுங் குலகிரி
அநந்தமா யினுமேவினல்
[2] அடையவுரு விப்புறம் போவதல் லதுதங்கல்
அறியாது சூரனுடலைக்
[3] கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடியகொலை புரியு[x]மதுசெங்
[4] கநகா சலத்தைக் கடைந்துமுனை யிட்டுக்
கடுக்கின்ற துங்க நெடுவேல்
[5] தண்டந் தநுத்திகிரி சங்குகட் கங்கொண்ட
தான்வாந் தகன்மாயவன்
[6] தழல்விழிக் கொடுவரிப் பருவுடற் [o]பஃறலைத்
தமனியச் சுடிகையின்மேல்
[7] வண்டொன்று கமலத்து மங்கையுங் கடல்ஆடை
மங்கையும் பதம்வருடவே
[8] மதுமலர்க் கண்துயில் முகுந்தன்மரு கன்குகன்
வாகைத் திருக்கைவேலே.

(பொ-உ.) (1) (அண்டங்கள் ஒரு கோடி ஆயினும்) ஒரு கோடி அண்டங்கள் எதிரில் இருந்தாலும், (குலகிரி அனந்த மாயினும்) சிரேஷ்டமான மலைகள் கணக்கில்லாதன எதிரில் இருந்தாலும், (மேவினல்) எதிர்த்து வந்தால்

2. (அடைய உருவி) முழுதும் (உள்ளே) உருவிப் (புறம் போவதல்லது) வெளியே போகுமே ஒழிய (தங்கல் அறியாது) ஓரிடத்தில் எடுத்த காரியத்தை முடிக்காமல் தங்குதல் என்பதே தெரியாததும், சூரனுடைய உடலைக்

3. (கண்டம் பட) பிளவுபட — துண்டம்படும்படி (பொருது) போர்செய்து, (காலனும்) யமனும் (குலைவுறும்) நடுக்கமுறும் (கடிய கொலை) கடுமையான கொலைகளை (புரியுமது) செய்கின்றதும், (செம்) செவ்விய —

---

x அதிசெங் - வேறுபாடம். o பல்+தலை=பஃறலை.

4. (கனக அசலத்தை) பொன்மலையாம் மேருமலையைக் கடைந்தது போன்ற பொன் ஒளியையும், (முனையிட்டு) கூர்மையையும் கொள்ளும்படி அமைத்ததற்கு (கடுக்கின்ற) ஒப்பான (துங்க) பரிசுத்தமான (நெடுவேல்) நீண்ட வேலாயுதம் - எது எனில் அதுதான் —

5. (தண்டம்) கௌமோதகி என்னும் கதையையும் (தண்டாயுதத்தையும்), (தநு) சாரங்கம் என்னும் வில்லையும், (திகிரி) சுதர்சனம் என்னும் சக்கரத்தையும், பாஞ்ச சன்யம் என்னும் சங்கையும், (கட்கம்) நாந்தகம் என்னும் வாளையும் கொண்டுள்ள (தானவ அந்தகன்) அசுரர்களுக்கு யமனுயிருந் தவன், மாயம் வல்லவன்

6. (தழல்விழி) நெருப்பை வீசும் கண்களையும், (கொடு வரி) வளைந்த வரிகளையும் (பரு உடல்) பருத்த உடலையும், (பஃறலை) பல தலைகளையும், (தமனியச் சுடிகையின்மேல்) பொன்னிறமான முடிகளையும் கொண்ட (ஆதிசேடன்) மேல்

7. (வண்டு) வண்டுகள் (ஒன்று) பொருந்தும் (கமலத்து மங்கையும்) செந்தாமரையில் வாசம் செய்யும் இலக்குமியும், (கடலாடை மங்கையும்) கடலை ஆடையாகக்கொண்ட பூதேவி யும் (பதம் வருடவே) தமது கால்களை (வருட) பிடிக்க

8. (மதுமலர்) தேன் நிறைந்த செந்தாமரை போன்ற (கண்துயில்) கண்கள் துயில்கின்ற (முகுந்தன்) திருமாலின் மருமகன், குகமூர்த்தி ஆகிய முருகவேளின் (வாகை) வெற்றி விளங்கும் திருக்கையில் உள்ள வேலாயுதமே.

(க-உ.) திருமால் மருகன் - முருகன் திருக்கை வேலே சூரசம்மாரம் செய்தது என அறிக.

(கு-உ.) (4) கனகாசலத்தைக் கடைந்தது போன்ற பொன் ஒளியை வேல் கொண்டிருப்பதால்தான் வேல் – 'தங்க வேல்' 'மாழைக்கதிர் வேல்' (திருப்புகழ் 608) எனப் பெயர் பெற்றது. 'கனகாசலத்தைக் கடந்து முனையிட்டுக் கடுக் கின்ற' என்ற பாடத்துக்கு – கனகாசலம் – கிரௌஞ்சத்தைக் (கடந்து) வென்று (முனையிட்டு) போர் செய்து (கடுக்கின்ற) கோபித்த – எனப் பொருள்காண்க.

(1 – 4) வேலின் வீரத்தைப் பாடல் 2-ன் முதல் நான்கு அடிகளிலும் பார்க்க.

(5) திருமாலின் பஞ்சாயுதங்கள் கூறப்பட்டன- திருப்புகழ் 668, 722 பார்க்க,

(6 – 8) பஃறலைப் பாம்பின் மேல் திருமகளும் பூதேவியும் கால் வருடத் திருமால் கண் துயில்வது :—

"சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும் நீர்பூத்த திருமகளும் நிலமகளும் அடிவருட ......... பருமணிச் சூட்டு ஆயிரவாய்ப் பாம்பணைமேல் அறிதுயிலின் இனிதமர்ந் தோய்" — திருவரங்கக் கலம்பகம் 1.

## 8

[1] **மா** முதல் தடிந்து* தண் மல்குகிரி யூடுபோய்
வலியதா னவர்மார்பிடம்
[2] வழிகண்டு கமலபவ னத்தனைச் சிறையிட்டு
மகவான் தனைச்சி றைவிடுத்
[3] தோமவிரு டித்தலைவர் ஆசிபெற் றுயர்வானில்
உம்பர்சொற் றுதிபெற்றுநா
[4] உடையகீ ரன்தனது பாடல்பெற் றுலகுதனில்
ஒப்பில்புகழ் பெற்ற வைவேல்
[5] சோமகல சப்ரபா லங்கார தரஜடா
சூடிகா லாந்தகாலர்
[6] துங்கரக்ஷ கத்ரோண கட்ககுலி சஞ்சூல
துரககே சரமாம்பரச்
[7] சேமவட வாம்புயப் பரணசங் காபரண
திகம்பர த்ரியம்பகமகா
[8] தேவநந் தனகஜா நநசகோ தரகுகன்
செம்பொற் றிருக்கை வேலே.

(பொ–உ.) (1) (மா முதல் தடிந்து) முதல்வனாய் மா மரமாய் நின்ற சூரனை அட்டு, (தண்) குளிர்ந்த, (மல்கு) எழு கிரி என நிறைந்திருந்த, (கிரியூடு போய்) கிரிகளை ஊடுருவிச் சென்று (அம்மலைகளில் இருந்த) வலிய (தானவர்) அசுரர் களின் மார்பிடத்தில்

---

* "கண்" பாடபேதம் — கண்=பிளப்பிடங்கள்.

2. (வழிகண்டு) வெளிவர வழி கண்டு, (கமல பவனத்தனை) தாமரையை வீடாகக் கொண்ட பிரமனைச் சிறையிலிட்டு, (மகவான் தனை) இந்திரனைச் சிறையினின்றும் மீட்டு

3. (ஓம இருடித்தலைவர்) ஓமம் — வேள்வி செய்யும் முனிபுங்கவர்களின் (ஆசி பெற்று) வாழ்த்தைப் பெற்று, (உயர் வானில்) உயர்ந்த மேலுலகில் உள்ள (உம்பர்) தேவர் களின் (சொல்–துதி) புகழ்ச்சியாம் தோத்திரங்களைப் பெற்று, நா - (தோத்திர) வார்த்தை – பொலிவு —

4. கொண்ட நக்கீரருடைய பாடலைப் பெற்று, உலகில் நிகரில்லாத புகழினை அடைந்துள்ள வேல் — எது எனில் அதுதான் —

5. (சோமகலசம்) கலச சோம - கிண்ணம் போன்ற பிறைச் சந்திரனுடைய (ப்ரபா அலங்கார) ஒளி அலங்கா ரத்தை (ஜடா) சடையில் (சூடி) சூடியுள்ளவர், (காலாந்த காலர்) கால அந்த காலர் – காலனுக்கு (யமனுக்கு) அந்த காலர் – அந்த காலத்தை முடிவுவேளையைக் காட்டுவித்தவர்

6. (துங்க) பரிசுத்தமானதும், (ரக்ஷகம்) காப்பாற்று வதுமான (துரோணம்) வில், (கட்கம்) வாள், (குலிசம்) வஜ்ராயுதம் இவைகளைத் தாங்குபவரும், (துரக) குதிரை முகத்துடன் (கேசரம்) சிங்கம் போன்று (அம்பரம்) கடலிலே (அக்கடல் கரை கடவாதபடி)

7. (சேமம்) காப்பை அளிக்கின்ற — காப்பாற்றுகின்ற (வடவா) வடவாமுகாக்கினியை அம் புயம் (திருமஞ்சன) நீராகப் (பரண) தாங்குபவரும், (சங்காபரண) சங்க வெண் குழையை அல்லது தமது இடது கரத்தில் (சங்கு) தேவியின் கைவளைகளை (ஆபரணமாக) அணிகலமாகக் கொண்டவரும், (திகம்பர) திக்குகளையே ஆடையாகக் கொண்டவரும் (நிர் வாணரும் — நக்கரும்), (த்ரி அம்பகம்) மூன்று கண்களை உடையவருமான, மகா

8. தேவமூர்த்தியின் (நந்தன) பிள்ளையும், (கஜானன) கஜ – ஆனன - யானையின் திருமுகத்தை உடையவருமான கணபதியின் சகோதரருமான குகமூர்த்தியின் (செம்பொன்) செவ்விய, பொன்னிறமுள்ள திருக்கரத்து வேலாயுதமே.

(க–உ.) குகப் பெருமான் திருக்கை வேலே சூர்மாவை அட்டு, பிரமனைச் சிறையிட்டு, இந்திரனைச் சிறையினின்றும் விடுவித்து, முனிவர்களின் ஆசிபெற்று, நக்கீரரின் பாடலைப் பெற்றதென அறிக.

. .(கு-உ.) (2) பிரமனை வேல் சிறையிட்டது — வேல் வாங்கு வகுப்பு, அடி 9 (பக்கம் 444) குறிப்பு.

(3) ஓமம் — வேள்வி (திவாகரம்):

(4) (i) கீரனது பாடல் — திருமுருகாற்றுப்படை, அதில் வேல் பின் வருமாறு புகழ்பெற்றது :

'சூர் முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்'—46.
'கை ... எஃகு வலம் திரிப்ப'—111.
'வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ'-265;

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் — வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
தொளைத்தவேல் உண்டே துணை"—தனிப்பாடல்.

(ii) நக்கீரருடைய பாடலைப் பெற்ற வரலாறு :—திருப்புகழ் 91, பக்கம் 212; திருப்புகழ் 1191, பக்கம் 470 கீழ்க் குறிப்புக்கள்.

(iii) ஒப்பில்புகழ் பெற்றது – வேல் விருத்தம் 2 பார்க்க.

(5) அந்தகாலம் - முடிவு நாள். 'ஆர் வினவிலும் வாய் திறவாதே அந்த காலம் அடைவதன் முன்னம்' — பெரியாழ்வார் 4–5–3. "அக்காலத்துக் குறவார்தான்"—திருப்புகழ் 1120, பக்கம் 264 குறிப்பு. அந்தம்-முடிவு ; காலனுக்கு அந்தகனுயிருந்த காலினர் எனலுமாம்.

(6 - 7) வடவாமுகாக்கினி – பெட்டைக்குதிரையின் முகம் கொண்டது. வேல் வகுப்பு அடி 6, பக்கம் 320 கீழ்க்குறிப்பு; "பரிமுகத் தொரு செந்தீ" — தக்கயாகப். 587.

வடவாமுகாக்கினியே மகாதேவருக்கு அபிஷேக நீர் — "மகாதேவர் திருமஞ்சனமான வடவாமுகாக்கினி"—தக்கயாகப்பரணி 379 உரை.

'சுட்ட நெருப்பு ஈசுவரனுடைய திருமஞ்சனம்' — ஷை 380 உரை. 'ஆடுமஞ்சனம் அக்கினி – அங்கமே பூண்டாய் அனலாடினுய்' — (அப்பர் 6-99–2) என்னும் திருப்பாட்டிற் கண்டு கொள்க — ஷை 332 உரை.

சிங்கம் எனப் பொருள்கொண்ட 'மடங்கல்' என்னும் பதம் வடவாமுகாக்கினியையும் குறிக்கும். 'மடங்கல் நடுங்கும் தனைச்சுடும் ஈதென்று'—தனிப்பாடல்.

(7) சங்காபரணம் — 'சங்கார்குழை', 'சுரிசங்க வெண் குழையாய்' — சம்பந்தர் 1–71-4, 2-49–3;

9

[1]தேடுதற் கரிதான நவமணி அழுத்தியிடு
செங்கரனை யமுதம் வாய்கொள்
[2]செயமளித் தருளெனக் கெனஉவப் பொடுவந்து
சேவடி பிடித்ததெனவும்
[3]நீடுமைக் கடல்சுட்ட திற்கடைந் தெழுகடலும்
நீயெமைக் காக்க எனவும்
[4]நிபிடமுடி நெடியகிரி எந்தமைக் காவெனவும்
நிகழ்கின்ற துங்கநெடுவேல்
[5]ஆடுமைக் கணபணக் கதிர்முடிப் புடையெயிற்
றடலெரிக் கொடிய உக்ர
[6]அழல்விழிப் படுகொலைக் கடையகட் செவியினுக்
கரசினைத் தனியெடுத்தே
[7]சாடுமைப் புயலெனப் பசுநிறச் சிகரியிற்
0ருய்திமித் துடனடிக்குஞ்
[8]சமரமயில் வாகனன் அமரர்தொழு நாயகன்
சண்முகன் தன்கை வேலே.

(பொ-உ.) (1) தேடி அடைவதற்கு அரியனவான (நவ மணி) கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வைரம் ஆகிய ஒன்பது வகை ரத்னங்கள் (அழுத்தியிடு) பதித்து வைத்தது போன்ற (செங்கரனை) செவ்விய கிரணங்களை உடைய சூரியனை (அமுதம்) கரிய மேகங்கள் - மழையானது (வாய்கொள்) வாயாற் கௌவி உண்டு மறைக்கும்படியான

2. (செயம்) வெற்றியை) (அளித்தருள் எனக்கு என) எனக்குத் தந்தருள் என்று கேட்டு (உவப்பொடு வந்து) மகிழ்ச்சியுடன் வந்து தனது சேவடியைப் பிடித்ததுபோலவும்-

---

0 " தாதிமித் " என்பது பாடமாயின் " தாதிமித் " என்னும் நடன ஒலியுடன் — எனப் பொருள் காண்க.

3. நீண்ட (மைக்கடல்) கரிய கடல் (சுட்டதற்கு) சூடு பட்ட காரணத்தால் (அடைந்து) தன்னை இப்போது சரண் அடைந்து ஏழு கடல்களும் (வேற்பிரானே! நீ) எங்களைக் காத்தருளுக என்று கூறவும்,

4. (நிபிடமுடி) நெருங்கிய சிகரங்களை உடைய (நெடிய கிரி) நீண்ட மலைகள் யாவும் (எந்தமை) எங்களைக் (கா எனவும்) காத்தருளுக எனவும், வேண்டும்படி (நிகழ்கின்ற) விளங்கி நிற்கும் (துங்க நெடுவேல்) பரிசுத்தமான நீண்ட வேல்-எது எனில் அதுதான் —

5. (ஆடும்) ஆடுகின்ற (மை) பசிய (அல்லது ஐ-அழகிய) (கணபணம்) கூட்டமான படங்களையும் (கதிர்முடி) ஒளிவீசும் உச்சிகளையும் (புடை) வாயின் பக்கங்களில் (எயிற்று) பற்களில் (அடல் எரி) பலத்த நெருப்பையும், கொடியதும் உக்ர மானதுமான

6. (அழல்விழி) நெருப்புக் கண்ணையும், (படுகொலை) கொடுங்கொலைக்கு (கடைய) இடமான (கட்செவியினுக்கு) பாம்புகளுக்கு (அரசினை) அரசாகிய ஆதிசேடனைத் (தனி) தனியாக எடுத்துத் தூக்கிச்

7. (சாடும்) அடித்துதறுவதும், (மைப்புயல் என) கரிய மேகம் என்று சொல்லும்படி (பசுநிறச் சிகரியில்) பச்சைமா மலைபோல (தாய் மிதித்துடன்) தாவி அடியிட்டு நடனதாளத் துடன் (நடிக்கும்) நடனம் செய்வதும்

8. (சமர மயில்) சூரசம்மாரப் போரில் மயிலாக வந்ததுவுமான வாகனத்தை உடையவன், (அமரர் தொழு நாயகன்) தேவர்கள் வணங்கும் தலைவன், ஷண்முகன் ஆகிய முருகவேளின் திருக்கரத்து **வேலாயுதமே.**

(க-உ.) ஷண்முகன் திருக்கை வேலே கடலும் மலையும் சரண்புக விளங்கும் வேல் என அறிக.

(கு-உ.) (1-4) சூரியனது செவ்வொளியை மழைகள் கௌவி வாய் கொண்டு மூட, இம்முறை எங்களுக்கு வெற்றி யைக் கொடு என்று கடல் கேட்பதுபோலக், கரிய எழுகடலும் செவ்வொலியுள்ள வேலின் சேவடியைச் சரணெனப் பிடிக்கின்றன.

(6) பாம்புக்கு அரசு — ஆதிசேடனை மயில் சாடுவது — கந்தரலங்காரம் 97 ; மயில் வகுப்பு அடி 4.

## 10

[1]வலாரியல லாகுலமி லாதகல வேகரிய
மாலறியு நாலு மறைநூல்
[2]வலானலை விலானசி விலான்மலை விலானிவர்
மநோலய உலாசம் உறவே
[3]உலாவரு கலோலமக ராலய சலங்களும்
உலோகநிலை நீர்நிலையிலா
[4]வொலாவொலி நிசாசரர் உலோகம தெலாமழல்
உலாவிய நிலாவு கொலைவேல்
[5]சிலாவட கலாவிநொ தவாசிலி முகாவிலொச
ஞசின சிலாத ணிவிலா
[6]சிலாமலர் எலாமதிய மோதிமதி சேலொழிய
சேவக சராப முகிலாம்
[7]விலாசகலி யாணகலை சேரபசு மேலைமுலை
மேவிய விலாச அகலன்
[8]விலாழியி னிலாழியகல் வானில்அனல் ஆரவிடு
வேழம்இளை ஞன்கை வேலே.

(பொ-உ.) (1) (வலாரி) வலாசுரனுக்குப் பகைவனான இந்திரனுடைய (அலல்) அல்லல்- துன்பங்கள், (ஆகுலம்) கலக்கம் வருத்தம் (இலாது அகலவே) இல்லாமல் ஒழிந்துபோகவும், கருநிறமுடைய மால் (திருமாலும்), அறியும் - திருமால் அறிந்துள்ள நான்கு (மறைநூல்) வேத சாத்திர நூல்களில்

2. (வலான்) வல்லவனாகிய பிரமன், (அலைவிலான்) அலைச்சல் இல்லாதவனும், (நசிவு இலான்) அழிவு இல்லாதவனுமான (மலைவிலான்) மேருமலையை வில்லாகக்கொண்ட சிவன், (இவர்) ஆகிய இவர்கள் (மநோலய) மன அமைதியாம் (உலாசம்) உள்ளக் களிப்பு (உறவே) அடையும்படியும்,

3. (உலாவரு) உலாவி வரும் (கல்லோலம்) அலைகளையும் (மகர) மீன்களையும் உடைய (ஆலயம்) இடமாகிய கடலின் (சலங்களும்) நீரும், (உலோகநிலை) பூமி நிலையுற்றிருத்தலும் (இலா) இல்லாத வண்ணம் (பூமியிலும் நீரிலும் உள்ள உயிர்கள் கலங்கும்படி)

4. (ஒல்லா ஒலி) தகாத கூச்சல் செயும் (நிசாசரர்) அசுரர்கள் வாழ்ந்த (உலோகம தெலாம்) உலகமெல்லாம் (அழல் உலாவிய) நெருப்பு உலவும்படி (நிலாவு) உலவி வந்ததும், (நிசிசரர்களைக்) கொலை செய்ததுமான வேல் - எது எனில் அதுதான்.

5. (சிலாவட) வடசிலா - வடக்கே கந்தமாதனகிரியில், (கலாவிநோதவா) கலா - விநோதவ - தவ கலாவிநோத - மிகுந்த சகலகலை விநோதனும், அல்லது சிலா - மலைகளுக்கு உரியவனும், வடகலா — வடகலை முதலிய கலைகளில் தவ விநோத-மிக்க விநோதம் உடையவனும் (சிலிமுகா) வண்டின் உரு எடுத்தவனும் (விலொசன) கண்கள் பன்னிரண்டெனும் விசேடம் உடையவனும், (சின சிலாதணி) சின தணிசிலா- (சின = சின்ன) சிறிய மலையாகிய திருத்தணியை உடையவனும், (விலா) வில்லை ஏந்தினவனும் (அல்லது) (சிலா) சின தணி சிலா — சினம் (கோபம்) தணிந்த இடமாகிய (தணிகை) மலையை இருப்பிடமாகக் கொண்டவனும்

6. (மலரெலாம்...சேவகசிலா) மலர் எல்லாம் (சுனையில் உள்ள) மலர்கள் எல்லாம் (மதியம் மோதி) சந்திரனைத் தொட்டுமோதி (மலையின் உயரம் மதியத்தைத் தொட்டது என்றபடி) அதனால்மதி - சந்திரனிடத்திருந்த (சேல்) சேல் மீன் போன்ற களங்கம் (ஒழிய) விலகும்படி (சேவகம்) திறமையைக் காட்டிய (சிலா) வள்ளிமலையில் (சராபமுகிலாம்) சரபம் ஆம் — முகில் யானைக்கன்று போன்றவரும் - சரபப்புள் போன்றவரும் - மேக நிறத்தவரும் ஆனதிருமால் —

7. (விலாச கலியாணகலை) கலியாண விலாசகலை— விலாசமான மங்களகரமான (இலக்குமி) மானை (மேலைசேர) மேலை — முன்பொருகால் (சேர) புணர (பசு) அப்போது தோன்றிய உயிராகிய வள்ளியின் (முலை) கொங்கையை (மேவிய) விரும்பி அணைந்த (விலாச) அழகிய (அகலம்) மார்பை உடையவனும்

8. (விலாழியினில்) தனது துதிக்கை உமிழும் நீரால், (ஆழி) கடலிடத்தும், (அகல் வானில்) பரந்த ஆகாயத்தும் (அனல்) உள்ள சூட்டை (ஆர) நிரம்ப (விடு) நீக்கும் (வேழம்) கணபதி யானையின் (இளைஞன்) தம்பியுமான முருகவேளின் (கைவேலே) திருக்கரத்து வேலாயுதமே.

(க-உ.) முருகன் திருக்கைவேலே அசுரர்களுக்குப் பகையாயிருந்த கொலைவேல் என அறிக.

(கு-உ.) (1-8) இந்திரனுடைய துக்கம் ஒழியவும், பிரமன், திருமால், சிவன் இவர்தம் உள்ளங் களிக்கவும், (கடலையும் பூமியையும்கலக்கின) அசுரர்களின் உலகில் நெருப்பு வீசி அவர்களை மடிவித்த வேல் - எது எனில் – கலாவிநோதரும், வண்டுரு எடுத்தவரும், தணிகை மலையில் இருப்பவரும், சுனைமலர்கள் மதியின் களங்கத்தை விலக்கும் வள்ளிமலையில் திருமாலுக்கும் இலக்குமிக்கும் தோன்றிய வள்ளியை வேட்டவரும், கணபதிக்குத் தம்பியுமான முருகவேளின் திருக்கை வேலே என்றபடி.

(2) மலைவு இல்லான் – மயக்கம், மாறுபாடு இல்லாதவன் எனலுமாம்.

(5) முருகர் வண்டின் உரு எடுத்தது — திருப்புகழ் 628, பக்கம் 462 – 463 கீழ்க்குறிப்பு.

(6) சந்திரனிடத்துள்ள களங்கத்தை மீன் என்றூர். 'மான், முயல்' என்பதும் உண்டு. 'மதிசேல் ஒழிய' என்பதற்கு சந்திரனும் (சேல்) விண் மீன் நக்ஷத்திரங்களும் மறைய எனலுமாம்.

மலர்-மதியத்தை ஒழிய மோதிய சேவகம் விளங்கும் சிலை-வள்ளிமலை. இங்கு முகில் (திருமால்) கலை – இலக்குமி மானைப் புணர்ந்தார்; வள்ளி பிறந்தாள்.

(8) – (1) கஜமுகன் (கணபதி) தன் துதிக்கையிற் கொண்ட நீரால் கடலின் வெப்பத்தையும் வானின் வெப்பத்தையும் தணிக்கின்றூர் 'ஆறவிடு' எனவும் கொள்ளலாம்.

(2) ஆழி அகல்வான் என்பதற்கு வட்டமாய் அகன்றுள்ள ஆகாயம் எனலுமாம்; விலாழி — யானைக்கை உமிழ்நீர்.
'' அங்கையின் விலாழியாக்கி ''—தாயுமானவர் – மௌன– 1.
'' வேணி முடிப் பகீரதிநீர் புழைக்கை வாங்கி விடுத்து '' — சேதுபுராணம்.

—:o:—

உ

# மயில் விருத்தம்

——:o:——

காப்பு

[1]சந்தன பாளித குங்கும புளகித சண்பக கடகபுயச்
[2]சமர சிகாவல குமர ஷடாநந சரவண குரவணியுங்
[3]கொந்தள பாரகி ராதபு ராதநி கொண்க எனப்பரவுங்
[4]கூதள சீதள பாதம் எனக்கருள் குஞ்சரி மஞ்சரிதோய்
[5]கந்தக்ரு பாகர கோமள கும்ப கராதிப மோகரத
[6]கரமுக சாமர கர்ண விசால கபோல விதானமதத்
[7]தெந்த மகோதர மூஷிக வாகன சிந்துர பத்மமுகச்
[8]சிவசுத கணபதி விக்ந விநாயக தெய்வ சகோதரனே.

1. சந்தனம், (பாளிதம்) பச்சைக் கற்பூரம், குங்குமம் இவைகள் பூசியதாய், (புளகித) பெரு மகிழ்ச்சியை ஊட்டுவதாய், (சண்பக) சண்பகமாலை அணிந்ததாய்க், (கடகம்) கங்கணம் – வீரவளை அணிந்ததாயுள்ள புயம் – திருப்புயத்தை உடையவனும்

2. (சமர) போர் செய்பவனும், (சிகாவல) மயில் வாகனத்தை உடையவனும் ஆன (குமர) குமாரக்கடவுளே! (ஷடாநந) ஆறு திருமுகங்களை உடையவனே! சரவணத்தில் தோன்றியவனே, குராமலர் அணியும் —

3. (கொந்தளபார) கூந்தற்பாரத்தை உடைய (கிராத) வேடர் குலத்தவளான (புராதனி) பழையவளாம் வள்ளியின் (கொண்க) நாயகனே! என்று (பரவும்) போற்றப்படும்

4. (கூதள) கூதளமலர்அணிந்துள்ளதும் (சீதள) குளிர்ந் துள்ளதுமான (பாதம்) திருவடியை (எனக்கு அருள்) எனக்குத் தந்தருள்வாயாக; (குஞ்சரி) ஐராவதத்தால் வளர்க்கப் பட்டவள், (மஞ்சரி) தளிர் போன்ற ஒளியினள் ஆகிய தேவ சேனை (தோய்) அணையும்

5. கந்த மூர்த்தியே! கிருபைக்கு இடமானவனே! (கோமள) அழகுவாய்ந்த (கும்பகர) குடம் போன்ற மத்தகத்தை உடைய (அதிப) தலைவரும், (மோகரத) ஆசையை விளைவிக்கும்

6. (கரமுக) துதிக்கையோடு கூடிய முகத்தை உடையவரும், (சாமர கர்ண) சாமரம் போன்ற காதை உடையவரும், (விசால கபோலம்) அகன்ற கன்னத்தில் வரும் (விதான மதத்து) விரிவான மதத்தை உடையவரும்

7. (எந்தம்)எங்களுக்குகந்த (மகோதர) பெருவயிறரும், (மூஷிக வாகன) பெருச்சாளி வாகனத்தவரும், (சிந்துர) சிவந்த (பத்மம்) தாமரை முகம் செந்தாமரைபோலச் சிவந்த திருமுகத்தை உடையவரும் ஆன —

8. (சிவசுத) சிவகுமாரனும் கணபதி, விக்ந விநாயகராம் கடவுளுக்குச் சகோதரனே!

(கு-உ.) (8 - 4) விக்நவிநாயக தெய்வ சகோதரனே ...... சீதள பாதம் எனக்கருள் எனக் கூட்டுக.

அடி 4: குஞ்சரி மஞ்சரி — "மஞ்சரி குஞ்சரி" — வேல் வாங்கு வகுப்பு அடி 31,

அடி 6-7: "சாமர கர்ண" — "மூஷிக வாகன" — "மூஷிக வாஹன மோதக ஹஸ்த சாமர கர்ண" — என வருவதும் காண்க.

யானையின் காது — சாமரத்துக்கு (கவரிக்கு) உவமை.
"மெய்ச் செவி கவரி தூங்க"—கந்தபுராணம்.

## நூல்.

### 1

[1]சந்தான புஷ்பபரி மளகிண் கிணீமுகச்
சரணயுக ளமிர்தப்ரபா
[2]சந்த்ரசே கரமூஷி காரூட வெகுமோக
சத்யப்ரி யாலிங்கனச்
[3]சிந்தா மணிக்கலச கரகட கபோலத்ரி
யம்பக விநாயகன்முதற்
[4]சிவனைவலம் வருமளவில் உலகடைய நொடியில்வரு
சித்ரக் கலாபமயிலாம்
[5]மந்தா கிநிப்பிரப வதரங்க விதரங்க
வனசரோ தயகிர்த்திகா
[6]வரபுத்ர ராஜீவ பரியங்க தந்திய
வராசலன் குலிசாயுதத்
[7]திந்த்ராணி மங்கில்ய தந்து ரக்ஷாபரண
இகல்வேல் விநோதன் அருள்கூர்
[8]இமையகிரி குமரிமகன் ஏறுநீ லக்ரீவ
ரத்னக் கலாபமயிலே.

1. (சந்தான) கற்பக விருக்ஷங்கள் ஐந்தனுள் ஒன்றுகிய 'சந்தானம்' என்னும் விருக்ஷத்தின் (புஷ்ப) மலர்களின் (பரிமள) நறுமணம் வீசும், கிண்கிணிமுகச் சரண யுகள அமிர்தப்ரபா – பாதகிண்கிணி இடங்கொண்ட திருவடிகள் இரண்டென்னும் அமுத ஒளி கொண்டவரும் —

2. பிறைச் சந்திரனைச் சூடியுள்ளவரும், [மூஷிகாரூட] பெருச்சாளி மீது ஏறி வருபவரும், [வெகுமோக] மிக்க ஆசையுடன் (சத்யப்ரியாலிங்கன) உண்மையையே தழுவி உள்ளவரும் —

3. [சிந்தாமணி] தேவலோகத்துச் சிந்தாமணி போலக் கேட்டதைத் தருபவரும், [கலசகர] தமது தாய்தந்தையருக்கு அபிஷேகம் செய்வதற்காகத் துதிக்கையில் ரத்ன கலசத்தை

ஏந்தி உள்ளவரும், [கட கபோலம்] மதம் பாயும் கன்னத்தை உடையவரும், [த்ரியம்பக] மூன்று கண்களைக் கொண்டவரும் ஆகிய விநாயக மூர்த்தி, (முதல்) முன்பொருகால்! . . . ;

4. சிவபிரானை வலம் வந்த நேரத்துக்குள் (உலகடைய) சகல உலகங்களையும் [நொடியில் வரு] ஒரு நொடிப்பொழுதில் வலம் வந்த [சித்ர] அழகிய [கலாப மயிலாம்] தோகை மயிலாம், அது எது எனில் - அதுதான் —

5. [மந்தாகினி] கங்கையாற்றில் [பிரபவ] பிறந்தவன்; [தரங்கம்] மனக் கவலைகளை [விதரங்க] பிளந்தெறிபவன்! வனசரோதய — [வள்ளிமலைக்] காட்டில் வேடனுய்த் தோன்றினவன்! அல்லது சரவணத்தில் தோன்றியவன், கிர்த்திகை மாதர்களின்

6. [வரபுத்ர] சிரேஷ்டமான குமாரன்! ராஜீவ [இரா சிவம்] தாமரை மலரை [பரியங்க] துயிலிடமாக-கட்டிலாகக் கொண்டவன்! (தந்தி-அ-வர-அசலன்) தந்தி — பாம்பின் உருவமுள்ள அந்த சிரேஷ்டமான மலையாகிய திருச்செங் கோட்டில் வாழ்பவன், (குலிசாயுதத்து) குலிசப் படை கொண்ட [இந்திரனுடைய மனைவியாகிய]

7. [இந்திராணி] சசிதேவியின் [மங்கில்ய] திருமங்கிலிய மாம் [தந்து] நூலை [ரக்ஷாபரண] காத்துத் தாங்கிய [இகல்] வலிமை வாய்ந்த வேல் ஏந்திய [விநோதன்] அழகன், [அருள் கூர்] அருள் மிக்க

8. [இமயகிரி குமரி] இமயமலை அரசனது மகளாகிய பார்வதியின் [மகன்] குமரனாகிய முருகவேள் [ஏறும்] நீல க்ரீவ - நீல நிறக் கழுத்தை உடைய ரத்னமயமான தோகையை உடைய மயிலே.

(க–உ.) முருகன் ஏறி வரும் மயில்தான் விநாயகருடன் போட்டியில் உலகை ஒரு நொடியில் வலம் வந்த மயில்.

(கு-உ.) (2) விநாயகரும் பிறைசூடியுள்ளார் – '' குழவி வெண்பிறை மிலைச்சி ''–கோனேரி–உபதேசகாண்டம். மூஷிக வாகனம் – '' கணேசர் ஆகுவாகனர் ''—திருப்புகழ் 441.

(3) 'சிந்தாமணி விநாயகர்' என்றே ஒரு திருநாமம் உண்டு. '' ஐந்தார் கரத்தில் கோடு, கனி, கலசம், பாசாங் குசம் அவிரச் சிந்தாமணியை அணிபுலிசைத் தெய்வக் களிற்றை வணங்குவாம் ''–திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்;

• • கலசம் — விநாயகர் திருக்கரத்திற் கலசம் ஏனெனில் அவர் அக் கலச நீரால் தனது தாய்தந்தையருக்கு அபிஷேகம் செய்வர். "அரதனக் கலச வியன் கரம் தந்தை தாய்க்கு ஆக்கி"—தணிகைப்புராணம்.

(4) விநாயகர் சிவனை வலம் வந்தது — திருப்புகழ் 184 பக்கம் 430 உரை.

(5) பிரபவம் - பிறப்பு: தரங்கம் — மனக்கவலை.

"சூரனென் றொருபேர் பெற்றநீ தரங்கம தடைவதும் தலைமைக் கேற்பதோ, இரங்கலை இரங்கலை என்று தேற்றினன்"—கந்தபுராணம் 3-20-16. வனசரம் - காடு; வனசரன் - வேடன். வனசரம் - (சரவனம்) நாணற் காடு.

(6) ராஜீவம் - இராசீவம்=தாமரை மலர். பரியங்கம்= துயிலிடம், கட்டில். தந்தி அசலம் — பாம்பு மலை - திருச் செங்கோடு. குலிசாயுதத்து — விநோதன் எனவும் கூட்டி குலிசாயுதம் ஏந்திய முருகன் எனவும் பொருள் காணலாம்.

## 2

[1]சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்துவெளி
 பட்டுக் ரவுஞ்ச சயிலந்
[2]தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
 தனிவெற்பும் அம்புவியும் எண்
[3]திக்குத் தடங்குவடும் ஒக்கக் குலுங்கவரு
 சித்ரப் பதம்பெயரவே
[4]சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
 திடுக்கிட நடிக்கு மயிலாம்
[5]பக்கத்தில் ஒன்றுபடு பச்சைப் பசுங்கவுரி
 பத்மப் பதங் கமழ்தரும்
[6]பாகீ ரதிச்சடில யோகீ சுரர்க்குரிய
 பரம உபதேசம் அறிவிக்
[7]கைக்குச் செழுஞ்சரவ ணத்திற் பிறந்தஒரு
 கந்தச்சுவாமி தணிகைக்
[8]கல்லார கிரியுருக வருகிரண மரகத
 கலாபத்தில் இலகு மயிலே.

1. சக்ரப் ப்ரசண்ட கிரி - சக்ரவாளம் என்கின்ற வலிய மலை, [முட்ட] அடியோடு, (கிழிந்து) வெளிபட்டு பிளவுண்டு வெளியிற் சிதறவும், கிரவுஞ்ச சயிலம் - கிரவுஞ்ச மலை

2. தகர - பொடிபடவும் (நெறிபடவும்), பெருங்கனக— பெரிய பொன்னிறத்த சிகரங்களை உடைய (சிலம்பும்) மேரு மலையும், எழு தனி வெற்பும் - தனி - ஒப்பற்ற ஏழு கிரிகளும், அம்புவியும் - பூலோகமும், எண் - எட்டுத்

3. திக்குகளில் உள்ள தடங்குவடும் — இடம் அகன்ற கிரிகளும், ஒக்க - ஒன்றுபோலக், குலுங்க - அசைவு உண்ண வருகின்ற, சித்ரப்பதம் - அழகிய அடிகள் (பெயரவே) இடம் விட்டு நீங்க - அடி எடுத்து வைக்க —

4. (சேடன்முடி) ஆதிசேடனுடைய தலைகள்(திண்டாட) கலக்கமுற, (ஆடல்புரி) போர்செய்யும் (வெஞ்சூரர்) கொடிய அசுரர்கள் திடுக்கிடும்படி நடனம் புரியும் மயிலாம் எது - எனில் - அதுதான் —

5. (பக்கத்தில்) தமது ஒருபாகத்தில் (ஒன்றுபடு) பொருந்தும் (பச்சைப் பசுங்கவுரி) மிகப் பச்சை நிறம்கொண்ட பார்வதியின், (பத்மப் பதம்) தாமரையன்ன திருவடி, (கமழ்தரும்) மணம் வீசும்,

6. [பாகீரதி] கங்கை சேர் [சடில] சடாமுடியையும் உடைய யோகீசமூர்த்தியாம் சிவபிரானுக்கு (உரிய) ஏற்ற தான, (பரம உபதேசம்) மகா மேன்மையான உபதேசத்தை (அறிவிக்கைக்கு) தெரிவிப்பதற்கு

7. (செழும்) செழுமை வாய்ந்த (சரவணத்தில்) சரவணமடுவில் பிறந்த - உதித்த (ஒரு)ஒப்பற்ற, கந்தசுவாமி, திருத்தணிகை எனப்படும்

8. (கல்லாரகிரி) செங்கழுநீர்மலை (உருக) நெகிழ்ச்சி கொள்ளும்படி (வரு) வீசுகின்ற (கிரணம்) ஒளிகளையுடையதும், மரகத — பச்சை நிறத்ததுமான (கலாபத்தில்) தோகைகளைக் கொண்டு (இலகும்) விளங்கும் மயிலே.

(க-உ.) தணிகை முருகன் மயில்தான் — ஆதிசேடன் அஞ்சவும் - அசுரசூரர் திடுக்கிடவும் நடிக்கும் மயில்.

(கு-உ.) (1-4) ''அடியிட எண்திசை வரை தூள் பட்ட''—கந்தரலங்காரம் 11 குறிப்புரை பார்க்க. (பக். 13).

(2) சேடன்முடி திண்டாட — கந்தரலங்காரம் 97 குறிப்புரை, பக்கம் 95 பார்க்க.

அடி 5, 6: சிவபிரானது முடியும், தேவியின் திருவடியும் — சித்து வகுப்பு-அடி 73, 74, பக்கம் 504 குறிப்பு பார்க்க.

அடி 8: ''ரத்னரேகை ஒக்கச் சிறக்கு மாமயில்'' 'மரகத கிரணப் பீலி மாமயில்' 'மரகத கலப சித்ரக்ககம்' —திருப்புகழ் 298, 943, 1221.

3

[1] ஆதார பாதளம் பெயரஅடி பெயரமூ
தண்டமுக டதுபெயரவே
[2]ஆடரவ முடிபெயர எண்டிசைகள் பெயரஎறி
கவுட்கிரி சரம்பெயரவே
[3]வேதாள தாளங்க ளுக்கிசைய ஆடுவார்
மிக்கப் ரியப்படவிடா
[4]விழிபவுரி கவுரிகண் டுளமகிழ விளையாடும்
விஸ்தார நிர்த்த மயிலாம்
[5]மாதாநு பங்கியெனு மாலது சகோதரி
மகீதரி கிராத குலிமா
[6]மறைமுநி குமாரிசா ரங்கநந் தனிவந்த
வள்ளிமணி நூபுர மலர்ப்
[7]பாதார விந்தசே கரனேய மலரும் உற்
பலகிரி அமர்ந்த பெருமாள்
[8]படைநிருதர் கடகமுடை படநடவு பச்சைப்
பசுந்தோகை வாகை மயிலே.

(பொ-உ.) (1) ஆதாரமாயிருக்கின்ற பாதாள பூமியே (பெயர) அசைவுண்ணவும், (அடிபெயர) அடி எடுத்து வைத்தால் (மூதண்ட முகடு) பிரமாண்டத்தின் முகடு—ஆகாய உச்சியியே (பெயரவே) அசைவுறவும்

2. (ஆடரவு) ஆடற் பாம்பின் – சேடனுடைய முடிகள் அசைவுறவும், எட்டுத் திசைகளும் அசைவுறவும், (எறி) வீசி வெளிவருகின்ற (கவுள்) மதம் பாயும் இடத்தைக் கொண்ட (கிரிசரம்)— அஷ்டதிக்கஜங்கள் (பெயர) கலங்கி இடத்தை விட்டு நீங்கவும்

3. வேதாள தாளங்களுக்கு – பேய்களின் தாளங்களுக்கு இசைய - பொருந்த (ஆடுவார்) நடனம் புரியும் நடராஜப் பெருமான் (மிக்கப் ப்ரியப்பட) அதிக ஆசைப்படவும், விடா விழி(யுடன்) விடாத – வைத்த கண் வைத்தபடியே

4. விடா விழியுடன் – அங்கு இங்கு விட்டு நீங்காத கண்களுடன், (பவுரி) தனது கூத்தை - நடனத்தை (கவுரி கண்டு) பார்வதிதேவி பார்த்து (உளமகிழ) மனம் களிக்கும் படியும் விளையாடுகின்ற (விஸ்தாரம்) பலதிறப்பட்டு விரிந்த நிர்த்தங்களைச் செய்யும் மயிலாம் - அது எது எனில் அது

5. (மாதானுபங்கி எனும்) திருவள்ளுவராக வந்த பிரமன் என்னும், மால் – பெருமை உடையோனது சகோதரி– தங்கை, மகீதரி — மலையிடத்துப் பெண், கிராதகுலி — வேடர்குலப் பெண், (மா) சிறந்த,

6. (மறைமுநி) வேதம் வல்ல சிவமுநிவரின் குமாரி, சாரங்கம — நம் — தனிவந்த — சாரங்கம் தனிவந்த நம் — (சாரங்கம்) மானிடத்திருந்து — ஒப்பற்ற வகையில் வந்து தோன்றிய - நம் - வள்ளி — நமது வள்ளித் தாயின், மணி நூபுரம் – ரத்னச் சிலம்பணிந்ததும், (மலர்) தாமரை மலர் ஒப்பதுமான —

7. (பாதார விந்த சேகரன்) பாத அரவிந்த சேகரன் - பாத தாமரையை, முடியிற் சூடியவனுக்கு (நேயம்) பிரியம் தருவதாய் (அல்லது ஏய - பொருந்தி உபயோகப்படும்படி) மலர்கின்ற (உற்பலம்) நீலோற்பலங்கள் உள்ள (கிரி) தணிகை மலையில் (அமர்ந்த) வீற்றிருக்கின்ற பெருமாள்

8. படை நிருதர் - படைகளுடன் வந்த அசுரர்களுடைய (கடகம்) சேனைகள் எல்லாம் (உடைபட) அடியுண்டு சிதறுண்ண (நடவு) நடத்தின பச்சைப் பசுந்தோகை வாகை மயிலே — மிக்க பச்சைக் கலாபத்தை உடைய வெற்றி விளங்கும் மயில்தான்.

(க-உ.) தணிகை முருகன் மயில்தான் – சிவனும் உமையும் மகிழ நடனம் புரியும் மயில்.

(கு-உ.) (2) கிரிசரம் – யானைகள் மூன்று இனத்தின: (1) நதிசரம் – ஆற்றுச் சார்பிலே பிறந்த யானைகள், (2) வனசரம் – காட்டிற் பிறந்த யானைகள், (3) கிரிசரம் – மலைகளிற் பிறந்த யானைகள்.

> ''கிரிசரம் வனசரம் நதிசரம் அடுத்துப்
> பெறுமே யானை பிறந்த நிலப்பெயர்''–திவாகரம்.

(3) சிவபிரான் பேய்கள் தாளமிட ஆடுதல்: 'பல்லியல் பாணிப் பாரிடம் ஏத்த ...... நடஞ்செய் ஈசன்' — 'பாரிடம் பாணி செய்ய – பாடலாடல்'—சம்பந்தர் 1-101-3; 3–57–2.

(3-4) சிவபிரான் மகிழ மயில் நடனம் செய்வது :—
" நடனமிடும் இறைவர் மகிழ் கருதரிய விடமொடழ
குடனுடும் கலபகக மயில் "—திருப்புகழ் 1099.

(5) மாதாநுபங்கி — மாதா அநுபங்கி - தாயை ஒத்து நடக்கின்ற ஒழுங்கினர் எனப் பொருள். தாய்போல உயிர்களுக்கு அருள் செய்பவர் மாதாநுபங்கி – திருவள்ளுவருடைய பெயர்களுள் ஒன்று, திருவள்ளுவர் பிரமதேவனது அம்சமாகப் பிறந்தவர், ஆதலால் அவருக்கு 'நான்முகனர்' என்று ஒரு பெயர் உண்டு. " நான் முகத்தோன் தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த நூல்" " தந்தான் உலகிற்குத் தான் வள்ளுவனாகி அந்தா மறைமேல் அயன் "—திருவள்ளுவ மாலை 4, 28.

மாதாநுபங்கி எனும் மால் (பெரியோன்) பிரமன். பிரமனது சகோதரி – வள்ளி. " விதியானவன் இளையாள் என துளமேவிய வளி நாயகி " — திருப்புகழ் 1185.

∴ மால் – பெருமையுடையவன். " மஞ்ஞை யூர்ந்து நின்ற மால் " — சிந்தாமணி 286. கிராதகுலி – " கூதாள கிராத குலிக்கிறைவ "—கந்தரநுபூதி 38.

(6) மறை முனி குமாரி சாரங்கம் ...... தனிவந்த வள்ளி.
" முனிபெறு புனமான் ", " மான்தரு கானமயில் "
—திருப்புகழ் 513, 247.

(7) (வள்ளி) பாதாரவிந்த சேகரன் — கந்தரநுபூதி 6.

(8) உற்பலகிரி — திருத்தணிகை. " தினமும் உற்பல மலர்திருத்தணி "—ஞானவேழ வகுப்பு அடி 14. " உற்பல கிரிப்பெயர் தரித்தருள் திருத்தணி " — திருக்கையில் வழக்க வகுப்பு அடி 15.

4

[1]யுககோடி முடிவின் மண் டியசண்ட மாருதம்
உதித்ததென் றயன் அஞ்சவே
[2]ஒருகோடி அண்டர்அண் டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்
[3]வெகுகோடி மலைகளும் அடியினில் தகர்ந்திரு
விசும்பிற் பறக்க விரிநீர்
[4]வேலைசுவ றச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப் பறக்கு மயிலாம்

[5]நககோடி கொண்டவுணர் நெஞ்சம் பிளந்தநர
கேசரி முராரி திருமால்
[6]நாரணன் கேசவன் சீதரன் தேவகீ
நந்தனன் முகுந்தன் மருகன்
[7]முககோடி நதிகரன் குருகோடி அநவரதம்
முகிலுலவு நீலகிரிவாழ்
[8]முருகன்உமை குமரன்அறு முகவன்நடவு விகடதட
மூரிக் கலாப மயிலே.

1. (யுககோடி முடிவில்) யுகம் - கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் எனப்பட்ட யுகங்களின், கோடி முடிவில் - எல்லை முடிவிலே, மண்டிய - நெருங்கிவரும், சண்ட மாருதம் - பெருங் காற்றுதான், உதித்தது - வந்து தோன்றி யுளது, என்று - என எண்ணி, அயன் - பிரமன், அஞ்சவே - அச்சமுறவும்,

2. ஒருகோடி-ஒருகோடிக் கணக்கான, அண்டர் அண்டங் களும் — தேவர்களின் அண்டங்களும், பாதா ளலோகமும், பொற்குவடு உறும் - பொன்மயமான சிகரங்களைக் கொண்ட,

3. வெகுகோடி மலைகளும் — பல கோடி மலைகளும், அடியினில்-அடி எடுத்து வைத்தவுடனே-மயில் அடி வைத்துப் போகும்போது, நகர்ந்து - நொறுங்கி, இருவிசும்பில் - பெரிய ஆகாயத்தில், பறக்க - பறந்து சிதறுண்ணவும், விரி நீர்-விரிந்த நீர்ப் பரப்பை உடைய,

4. வேலை - கடல், சுவற - வற்றிப்போகவும், சுரர் — தேவர்கள், நடுக்கம் கொள - நடுங்கி அஞ்சவும், சிறகை — தனது சிறகுகளை, வீசிப் பறக்கின்ற மயிலாம் - மயிலாகும் — எந்த மயில் என்றால் அது —

5. நககோடி கொண்டு - கோடிக் கணக்கான நகங்களைக் கொண்டு, அவுணர் — இரணியாசுரன் ஆதிய அசுரர்களின் நெஞ்சம் - நெஞ்சத்தை பிளந்த, நரகேசரி - நரசிங்கமூர்த்தி, முரன் என்னும் அசுரனுக்கு (அரி) பகைவனுயிருந்த மூர்த்தி— முரனைக் கொன்ற மூர்த்தி, திருமால்,

6. நாராயண மூர்த்தி, கேசவ மூர்த்தி, சீதரன் — லக்ஷ்மியை மார்பில் தரித்தவன், தேவகியின் (நந்தனன்) குமாரன், முகுந்த மூர்த்தி ஆகிய பெருமாளின் மருகன் —

7. முக கோடி — பல முகங்களாகப் பரந்து செல்லும், நதிகரன் — கங்கை தாங்கிய ஜோதி - (ஒளி), (குருகு) வெண்ணிறத்துடன், ஒடி — பரவிச்சென்று, அநவரதம் — எப்போதும், முகில் - மேகங்கள் உலவுகின்ற, நீலகிரி — நீலோற்பலம் மலர்கின்ற திருத்தணிகை மலைமேல் வாழ்கின்ற,

8. முருகன் - உமாதேவியின் பிள்ளை ஆறுமுகன், நடவு - செலுத்துகின்ற, விகட - அழகுள்ள, தட - பெருமைவாய்ந்த, மூரி - வலிமை வாய்ந்த, கலாப - தோகைகளைக் கொண்ட **மயில்**தான்.

(க-உ.) முருகன் மயில்தான் மலைகள் அசையக் கடல் அலறச் சிறகை வீசிப் பறக்கும் மயில்.

(கு-உ.) (3) மயில் அடியிட (அடி எடுத்து வைக்க) மலைகள் தூளுண்டு பறக்கும், கடல் சுவறும் :— "அடியிட எண்திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே" —கந்தரலங்காரம் 11, பக்கம் 13 கீழ்க்குறிப்பு.

"மால்வரை தூளியாக அத் தூளியால் ஆழி ஏழும் நிரம்பி மேடுபட"—திருவிரிஞ்சை பிள்ளைத்தமிழ்-காப்பு 9.

(5) (i) நரசிம்ம மூர்த்தி பல்வேறு அவுணரையும் கொன்றார் : "பல்வேறவுணரானவரை எல்லாம் நினை வதன் முன்னம் கொன்று நின்றதந் நெடுங்கட் சீயம்"—கம்ப ராமா-இரணியன் 143. நரசிங்கமூர்த்தியின் வரலாறு — திருப்புகழ் 327 - 1, பக்கம் 317 பார்க்க. (ii) முராரி வரலாறு — திருப்புகழ் 522, பக்கம் 196 கீழ்க்குறிப்பு.

(6) தேவகி - கண்ணபிரான் தாய் ; வசுதேவன் மனைவி; கண்ணனைத் தான் பெற்றும், கண்ணனை வளர்க்கும் பாக்கியம் தனக்கும் வசுதேவருக்கும் இல்லாது போனதைக் குறித்தும், அந்தப் பாக்கியம் கண்ணனை வளர்த்த நந்தகோபனுக்கும் யசோதைக்கும் கிடைத்ததை நினைத்தும் தேவகி புலம்பு கின்றாள் :

"உந்தையாவன் என்றுரைப்ப நின் செங்கேழ் விரலினும் கடைக்கண்ணினும் காட்ட நந்தன் பெற்றனன், நல்வினை இல்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே"

"திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே"

"எல்லையில் பிள்ளை செய்வன காணுத் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்"—பெருமாள் திருமொழி 7, 3, 5, 11.

(7) முககோடி நதி – கங்கை — வேளைக்காரன் வகுப்பு, அடி 7 குறிப்பு, பக்கம் 328. குருகு – வெண்மை (திவாகரம்).

முகில் (குருகு ஓடிப் பரவுதல்) வெண் முகிலாய்ப் பரவுதல் — "ஒளிகொள் வெண் முகிலாய்ப் பரந்தெங்கும் பெய்யுமாமழை" —சுந்தரர் 7–55–2. நீலகிரி – திருத்தணி – சீர்பாத வகுப்பு பக்கம் 302 குறிப்பு.

(8) தடமயில் — "தடக்கொற்ற வேள் மயில்" — கந்த ரலங்காரம் 96.

## 5

[1]சோதியிம வேதண்ட கன்னிகையர் தந்தஅபி
நயதுல்ய சோம வதன
[2]துங்கத்ரி சூலதரி கங்காளி சிவகாம
சுந்தரி பயந்த நிரைசேர்
[3]ஆதிநெடு மூதண்ட அண்டபகி ரண்டங்கள்
யாவுங், கொடுஞ்சிறகினல்
[4]அணையுந்த னதுபேடை அண்டங்கள் என்னவே,
அணைக்குங் கலாப மயிலாம்
[5]நீதிமறை ஓதண்ட முப்பத்து முக்கோடி
நித்தரும் பரவு கிரியாம்
[6]நீலகிரி வேலவன் நிராலம்பன் நிர்ப்பயன்
நிர்வியா குலன்சங்குவாள்
[7]மாதிகிரி கோதண்ட தண்டந் தரித்தபுயன்
மாதவன் முராரி திருமால்
[8]மதுகைட வாரிதிரு மருகன்முரு கன்குமரன்
வரமுதவு வாகை மயிலே.

1. சோதி – சோதிஉருவினளாய் (அல்லது ஒளிஉள்ள), இம வேதண்டம் — இமயமலையிடத்தே, கன்னிகையர் — மாதர்கள், தந்த – தோழியராய்ப் பாதுகாத்துத் தந்த, அபிநயம் - அலங்கரிப்புள்ள, துல்ய - சுத்தமான, சோமவதன- சந்திரன் போன்ற தண்ணொளிவீசும் முகமுள்ள,

2. துங்க – பெருமைவாய்ந்த, த்ரிசூலதரி – முத்தலைச் சூலத்தை ஏந்தினவள், கங்காளி - கங்காளன்மனைவி, எலும்பா பரணராம் சிவனது தேவி - அல்லது எலும்பாபரணி, சிவகாம சுந்தரி – ஆகிய பார்வதி, பயந்த — பெற்ற, (படைத்த) நிரைசேர் – வரிசையாய் அமைந்துள்ளனவும்,

3. ஆதி - பழமையானவையும், (நெடு— நீண்டுப் பரவியுள்ள, மூதண்ட அண்ட பகிரண்டங்கள் – பழையனவான அண்டங்கள், வெளிஅண்டங்கள் (யாவும்) எல்லாவற்றையும், கொடும், சிறகினால் - தனது வளைந்த சிறகால்,

4. அணைகின்ற தனது பெட்டை மயிலின், அண்டங்கள் என்னவே - முட்டைகள் என்று சொல்லும்படி, (பெட்டை மயிலின் முட்டையை அணைவது போல (அண்டங்கள் யாவற்றையும்) அணைக்கும் - அணைக்கின்ற, (கலாப மயிலாம் - தோகை மயிலாம் – அது எது எனில் அது —

5. நீதிகள் நிறைந்த (மறை) வேதங்கள் (ஓது) சொல்லுகின்ற (அண்டம் முப்பத்து முக்கோடி) அண்டங்களில் உள்ள முப்பத்து முக்கோடி (நித்தரும்) நித்ய சூரிகளாகிய பெரியோர்களும் (பரவு) போற்றும் மலையாகின்ற

6. (நீலகிரி) நீலோற்பலகிரி - திருத்தணிகையில் வாசம் செய்யும், வேற்கடவுள், (நிராலம்பன்) – ஒரு பற்றுக்கோடும் இல்லாதவன், (நிர்ப்பயன்)பயமில்லாதவன், (நிர்வியாகுலன்) வியாகுலம் – துக்கம்–கவலை இல்லாதவன், (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்கையும், (நாந்தகம் என்னும்) வாளையும்

7. (மா) சிறந்த, (சுதர்சனம் என்னும்)சக்கரத்தையும், கோதண்டம் (சாரங்கம் என்னும்) வில்லையும், (கௌமோதகி என்னும்) தண்டத்தையும் (தரித்த) ஏந்திய (புயன்) திருக்கைகளை உடையவன், மாதவன், முராரி, திருமால்,

8. (மது, கைடவாரி) மது, கைடவர் என்னும் அசுரர்களுக்கு (அரி) பகைவன் ஆகிய பெருமானுக்கும் (திரு) இலக்குமிக்கும் மருகன் (அல்லது பெருமானின் அழகிய மருகன்), முருகன் ஆகிய குமரனுடைய மயில், வரம் உதவு— ('வேலு மயிலும் துணை' என்னும் மந்திரப் பொருளாய் நின்று) அடியார்கள் விரும்பும் வரத்தைத் தந்து உதவும் (வாகை) வெற்றி **மயில்**தான்.

(க-உ.) முருகனது வெற்றி மயிலே அண்டங்கள் அனைத்தையும் தனது கலாபத்தால் அணைக்க வல்ல மயில்.

(கு-உ.) (1) இமயமலையில் கன்னியர் பலர்சூழத் தவஞ் செய்தாள் தேவி — "மடவார் பல்லோர் பாலுறு பணியிற்

சூழப் பரமனை உன்னி ...... தவத்தினை இழைக்க லுற்றாள்''— கந்தபுராணம் 1–2–35௩

(2) தேவி அண்டங்களைப் பெற்றது — திருப்புகழ் 456, பக்கம் 18 குறிப்பு.

(3) மயிலின் விரிந்த சிறகு அண்டகூடத்தை அளாவினது — ''அண்ட கூடம் துளக்குறக் கலாபம் வீசி ........... ஆர்த்திட்டு ஏகிற்றுத் தோகை மஞ்ஞை'' — கந்தபுராணம் 4–13–500.

. . (5) நித்தர் — தேவர்கள் முப்பத்து முக்கோடியர் உண்டு. ''மருத்துவர் வசுக்கதிர் உருத்திரர் எனப்பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்கவே,'—முத்துக்குமாரபிள்ளைத்தமிழ் 11.

. . . (6-7) திருமாலின் பஞ்சாயுதம்–வேல் விருத்தம் பாடல் 7.

. . (8) மது கைடவர் இவர்கள். விஷ்ணுமூர்த்தியின் காதினின்றும் தோன்றி, அவருடன் போர்செய்து தோல்வி அடையாது நின்று, என்ன வரம் வேண்டும் என்று திருமாலை இவர்கள் கேட்க, அவர் நீங்கள் எம்மால் இறக்கவேண்டுமென அவ்வாறே திருமாலின் கதையால் கொல்லப்பட்டனர்.

## 6

[1]சங்கார காலமென அரிபிரமர் வெருவுறச்
சகல லோகமு நடுங்கச்
[2]சந்த்ரசூ ரியரொளித் திந்த்ராதி அமரருஞ்
சஞ்சலப் பட உமையுடன்
[3]கங்காளர் தனிநாட கஞ்செய்த போதந்த
காரம் பிறந்திட நெடுங்
[4]ககனகூ டமுமேலை முகடுமூ டியபசுங்
கற்றைக் கலாப மயிலாஞ்
[5]சிங்கார குங்கும படீரம்ருக மதயுகள
சித்ரப் பயோதரகிரித்
[6]தெய்வவா ரணவநிதை புனிதன் குமாரன்
திருத்தணி மகீதரன்இருங்
[7]கெங்கா தரன்கீதம் ஆகிய சுராலய
க்ருபாகரன் கார்த்தி கேயன்
[8]கீர்த்திமா அசுரர்கள் மடியக்ர வுஞ்சகிரி
கிழிபட நடாவு மயிலே.

6

(பொ-உ.) (1) (சங்கார காலம்) யுக முடிவில் சகலமும் அழிக்கப்படும் காலம் வந்துவிட்டதோ என்று (அரி பிரமர்) திருமாலும், பிரமனும் (வெருவுற) அஞ்ச, சகல லோகங்களும் நடுக்கம் உற,

2. சந்திரனும் சூரியனும் ஒளிந்துகொள்ள, இந்திரன், முதலான தேவர்களும் (சஞ்சலப்பட) கவலைப்பட, உமா தேவியுடன்

3. (கங்காளர்) எலும்பாபரணராம் சிவபிரான் (தனி) ஒப்பற்ற தமது நடனத்தை செய்தபோது - செய்த அந்த வேளையில், (அந்தகாரம் பிறந்திட) பேரிருள் சூழ்ந்து கொள்ளும்படி, (நெடும்) பரந்த

4. (ககன கூடமும்) ஆகாயவெளியும் (மேலை முகடும்) ஆகாய உச்சியும் ஆக இரண்டையும் மூடினதான பசிய (கற்றை) தொகுதியான (கலாபம்) தோகையைக் கொண்ட (மயிலாம்) மயில் எது எனில் அது —

5. (சிங்கார) அலங்காரமான (குங்கும) குங்குமம் அணிந்துள்ள, (படீர) சந்தனம் அணிந்துள்ள, (ம்ருகமத) கஸ்தூரி அணிந்துள்ள (யுகளம்) இரண்டு (சித்ர) பேரழகுள்ள (பயோதர கிரி) கொங்கை மலைகளை உடைய

6. (தெய்வ) தெய்விகம் நிறைந்த (வாரண வநிதை) யானை மகளாம் - தேவசேனையை (மணந்துள்ள) புனிதமூர்த்தி, குமாரமூர்த்தி, திருத்தணி (மகீதரன்) மலையில் வீற்றிருப்பவன், (இரும்) பெரிய

7. கங்கையை (முடியிற்) சூடியுள்ளவன், (கீதம் ஆகிய) இசையைத் தரும் (சுரம்) உதாத்தம், அனுதாத்தம், சுவரிதம், என்ற மூவகை (வேத) இசைகளில் (அல்லது, சட்சம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் - ச, ரி, க, ம, ப, த, நி — என்னும் ஏழிசைகளில் (ஆலய) இருப்பிடம் கொண்டுள்ள (கிருபாகரன்) கருணைமூர்த்தி, (கார்த்திகேயன்) கிருத்திகை மைந்தன்

8. (கீர்த்தி) புகழுடன் (மா அசுரர்கள்) பெரிய அசுரர்கள் சூரனாதி அவுணர்கள் (மடிய) இறந்துபடவும், (க்ரவுஞ்சகிரி) கிரவுஞ்ச மலை (கிழிபட) துண்டுபடவும் (நடாவும்) நடத்தப் பட்ட மயில்தான்.

(க-உ.) கார்த்திகேயனது மயில்தான் ஆகாயமுகட்டைத் தனது கலாபத்தால் மூட வல்லது.

(கு-உ.) *(1-3)* சங்கார காலத்தில் சிவபிரான் கங்காளராய் இருத்தல். "பெருங் கடல் மூடிப் பிரளயம் கொண்டு பிரமனும் போய், இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும், கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய் ......... எம் இறை நல்வீணை வாசிக்குமே" — அப்பர் *4-112-7*.

உமையுடன் நடனம் — "இருள் ......... மங்கையொடும் நடம்புரி கொள்கையினன்" — சம்பந்தர் *3-62-5*.

*(4)* மேலே முகடு மூடிய கலாபம் — மயில் விருத்தம் பாடல் 5 குறிப்பு, அடி *3*.

*(7)* சுராலயன் — இறைவன். "இசையானவன்", "ஏழிசையோன்" — சம்பந்தர் *1-16-6 ; 1-128*.

## 7

[1]தீரப் பயோததி (க)திக்குமா காயமுஞ்
செகதலமு நின்று சுழலத்
[2]திகழ்கின்ற முடிமவுலி சிதறிவிழ வெஞ்சிகைத்
தீக்கொப் புளிக்க வெருளும்
[3]பாரப் பணாமுடி அநந்தன்முதல் அரவெலாம்
பதைபதைத் தேநடுங்கப்
[4]படர்சக்ர வாளகிரி துகள்பட வையாளிவரு
பச்சைப்ர வாள மயிலாம்
[5]ஆரப்ர தாபபுள கிதமதன பாடீர
அமிர்தகல சக்கொங்கையாள்
[6]ஆடுமயில் நிகர்வல்லி அபிராம வல்லிபர
மாநந்த வல்லி சிறுவன்
[7]கோரத்ரி சூலத்ரி யம்பக ஜடாதார
குருதரு திருத்தணிகைவேள்
[8]கொடியநிசி சரர்உதரம் எரிபுகுத விபுதர்பதி
குடிபுகுத நடவு மயிலே.

(பொ-உ.) *(1)* தீர — நன்றாக, மிகவும், பயோததி — கடலும், திக்கும் — எண்திசைகளும், ஆகாயமும் (அல்லது —

மா காயமும்) பெரிய ஆகாயமும், (செகதலமும்) பூதலமும் — பூமியும், நின்று சுழல — நின்று சுழற்சி அடையவும்,

2. திகழ்கின்ற — விளங்குகின்ற, முடிமவுலி — தலையிலுள்ள கிரீடங்கள் (மணிமுடிகள்) சிதறுண்டு விழவும், (வெஞ்சிகை) கொடிய உச்சியில் உள்ள படங்கள் எல்லாம் (தீ) நெருப்பைக் (கொப்புளிக்க) கக்க, வெருளும் — மருண்டு அஞ்சுகின்ற,

3. பார - கனத்த, பணமுடி - படங்களை உடைய தலைகளைக் கொண்ட, அனந்தன் – ஆதிசேடன் முதலான, அரவு எலாம் — பாம்புகள் எல்லாம், துடிதுடித்து — நடுக்கம் கொள்ளவும்,

4. படர் — படர்ந்துள்ள சக்ரவாளகிரி தூள்படவும், (வையாளிவரு) பாய்ந்து சவாரி (சுற்றுப்பயணம்) வரும், பச்சை நிறமும் (ப்ரவாளம்) பவளநிறமும் கொண்டுள்ள (மயிலாம்) மயில் எது என்றால் அது

5. ஆர–மிகவும், ப்ரதாப-கீர்த்தியுள்ளதும், புளகிதம்—புளகாங்கிதம் கொள்வதும், மதன - பெருமிதம் உள்ளதும், பாடீர - சந்தனம் அணிந்துள்ளதும், அமிர்த கலசம் – அமுதம் பொதிந்துள்ள குடம் போன்றதுமான (கொங்கையாள்) கொங்கையை உடையவள்

6. ஆடுமயில் — நடனம் செய்கின்ற மயிலை, நிகர் — ஒத்த (வல்லி) கொடிபோன்றவள், அபிராமவல்லி - அழகு வாய்ந்த கொடிபோன்றவள், பரமானந்தவல்லி - பரமானந்த நிலையில் உள்ள கொடிபோன்றவள் ஆகிய பார்வதியின் (சிறுவன்) குமாரன்

7. கோர - பயங்கரமான, த்ரிசூல – முத்தலைச் சூலத்தை உடையவரும், த்ரியம்பக - மூன்று கண்களை உடையவரும், ஜடாதார – சடையை உடையவருமான, (குரு) குருமூர்த்தியாம் சிவபிரான் (தரு) பெற்ற திருத்தணிகை(வேள்) முருகன்

8. கொடிய — பொல்லாத, நிசிசரர் — அசுரர்களின் (உதரம்) வயிற்றில் (எரிபுகுத) எரிபுகவும், (விபுதர்)தேவர்கள் (பதி) தங்கள் ஊராகிய பொன்னுலகில் (குடிபுகுத) குடியேறவும் அல்லது விபுதர்பதி - தேவர் தலைவனும் இந்திரன் — (தனதுஉலகில்) குடியேறவும் (நடவும்)செலுத்தின மயில்தான்.

(க-உ.) தணிகேசன் மயில்தான் அரவெலாம் நடுங்க, மலைகள் பொடிபட வையாளி (சுற்றுப்பயணம்) வரவல்லது.

(கு-உ.) (1-4) மயில் வையாளிவரும் வேகத்தைத் திருப்புகழ் 1097 பார்க்க. கதிக்கும் – சிறக்கும்.

(4) வையாளி - விருத்தம் 9-ன் குறிப்பிற் பார்க்க.

(6) 'மூலை மலைவல்லி, கர்ப்பூரவல்லி, அபிராமவல்லி, மாணிக்கவல்லி, மரகதவல்லி, அபிடேகவல்லி சொற்றமிழ் தழையவே'–(மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்–கணபதி துதி).

(8) "இமையவர்கள் நகரில் இறை குடிபுகுத நிருதர் வயிறெரி புகுத"—சீர்பாத வகுப்பு.

## 8

[1]செக்கரள கேசசிக ரத்நபுரி ராசிநிரை
சிந்தப் *புராரி யமிர்தந்
[2]திரும்பப் பிறந்ததென ஆயிரம் பகுவாய்கள்
தீவிஷங் கொப்புளிப்பச்
[3]சக்ரகிரி சூழவரு மண்டலங் கள்சகல
சங்கார கோர நயனத்
[4]தறுகண்வா சுகிபணு முடியெடுத் துதறுமொரு
சண்டப்பர சண்டமயிலாம்
[5]விக்ரம கிராதகுலி புனமீ துலாவிய
விருத்தன் திருத்தணிகைவாழ்
[6]வேலாயு தன்பழ வினைத்துயர் அறுத்தெனை
வெளிப்பட வுணர்த்தி யருளித்
[7]துக்கசுக பேதமற வாழ்வித்த கந்தச்
சுவாமிவா கனமானதோர்
[8]துரககஜ ரதகடக விகடதட நிருதர்குல
துஷ்டர்நிஷ் டூரமயிலே.

(பொ-உ.) (1) (செக்கர்) செந்நிறத்ததாய், (அளகேச) குபேரசம்பத்துப் போன்றதான (சிக) சிகா – உச்சியிலுள்ள (ரத்நம்) ரத்னங்கள் (புரி) விளங்கும் (ராசி நிரை) கூட்டத்தின் வரிசைகள் (சிந்த) சிதறிச் சிந்தும்படி, (புராரி) திரிபுரத்தை எரித்த சிவன் (அமுதம்) அமுதம் என்று உண்ட ஆலகாலவிஷம்

---

* 'புராரி யமிர்தம்' என்றது ஆலகால விஷத்தை.

2. (திரும்ப) மறுபடியும் (பிறந்ததென) தோன்றி எழுந்து வந்ததோ என்று சொல்லும்படி ஆயிரம் பகுவாய்கள் தீ விஷம் கொப்புளிப்ப – தனது ஆயிரம் (பகு) பிளந்த வாய்களும் நெருப்புப் போன்ற (கொடிய) விஷத்தைக் கக்கி வெளிப்படுத்த

3. சக்ரகிரி சூழ வரும் மண்டலங்கள் — சக்ரவாள கிரி சூழ்ந்த பூமியின் இடங்கள் (சகல சங்கார) யாவற்றையும் அழிக்கவல்ல (கோர) பயங்கரமான (நயனம்) கண்களை உடையதாய்

4. (தறுகண்) கொடுமை கொண்டதான (வாசுகி) வாசுகி என்னும் பாம்பின் (பணமுடி) படங்களை உடைய முடிகளை (எடுத்து உதறும்) தூக்கி உதறுகின்ற (ஒரு) ஒப்பற்ற (சண்ட) கொடுமை வேகம் உள்ளதும் (பிரசண்ட) வீரமுள்ளதுமான மயிலாம் - அந்த மயில் எது என்றால் அது —

5. விக்ரம – பராக்ரமம் உடைய, கிராதகுலி - வேடர் குலத்தவளாகிய வள்ளியின் புனமீது — தினைப்புனத்தில் உலாவின (விருத்தன்) கிழ உருவம் கொண்டவன் (அல்லது மேலோன்), திருத்தணிகை மலையில் வாழ்கின்ற

6. வேலாயுதக்கடவுள், பழவினை என்னும் (துயர்) துன்பத்தை (அறுத்து) நீக்கி (என்னை) எனக்கு (வெளிப்பட) புலப்படும்படி நான் அறிந்துகொள்ளும்படி (உணர்த்தி அருளி) உபதேசித்தருளி 'நான் யார்' என்பதை உணர்த்தி அருளித்

7. துக்க - சுக பேதம் அற — துன்பம் இன்பம் என்னும் பேதநிலை தெரியாத வகையில் (என்னை) வாழ்வித்த கந்த சுவாமியின் வாகனமானதாம் (ஓர்) ஒப்பற்றதும்,

8. துரக – குதிரை, கஜ – யானை, ரத - தேர், கடகம் – காலாள் எனப்படும், விகட — மிகுந்த அளவுள்ள, தட — பெருமை மிக்க, நிருதர்குல - அசுரர் கூட்டமாகிய, துஷடர் – பொல்லாதவர்களிடம், நிஷடூரம் - கொடுமை காட்டுகின்றதுமான மயில்தான்.

(க–உ.) கந்த சுவாமியின் மயில்தான் வாசுகியையும் எடுத்து உதற வல்லது.

(கு-உ.) (1) அளகேசபுரி — குபேரனது அளகாபுரி என்னும்படி உளது ஆதிசேடனது (சிகையில்) உச்சியில் உள்ள ரத்னக் குவியல்கள்;

(4) மயில் வாசுகியை எடுத்து உதறுவது — "வாள் எயிற துற்ற பகு வாய்தொறும் நெருப்பு உமிழும் வாசுகி எடுத்துதறும் வாசிக் காரனும்"—வேளைக்காரன் வகுப்பு.

(5) கிராதகுலி — மயில் விருத்தம் 3 - அடி 5-ன் குறிப்பு. விருத்தன் - வேல் வகுப்பு அடி 16-ன் குறிப்பு (பக்கம் 324).

(7) துக்க சுக பேதம் அற்ற வாழ்வு — "துன்பமின்பம் கழித்தோடுகின்ற தெக்காலம்"—கந்தரலடகாரம் 36, பக்கம் 36 குறிப்பு.

## 9

[1]சிகரதம னியமேரு கிரிரசத கிரிநீல
கிரியெனவும் ஆயிரமுகத்
[2]தெய்வநதி காளிந்தி யெனநீழல் இட்டுவெண்
திங்கள்சங் கெனவும்ப்ரபா
[3]நிகரெனவும் எழுதரிய நேமியென உலகடைய
நின்றமா முகில்என்னவே
[4]நெடியமுது ககனமுக டுறவீசி நிமிருமொரு
நீலக் கலாப மயிலாம்
[5]அகருமரு மணம்வீசு தணிகைஅபி ராமவேள்
அடியவர்கள் மிடியகலவே
[6]அடல்வேல் கரத்தசைய ஆறிரு புயங்களில்
அலங்கற் குழாம் அசையவே
[7]மகரகன கோமளக் குண்டலம் பலஅசைய
வல்லவுணர் மனம்அசைய மால்
[8]வரைஅசைய உரகபிலம் அசையஎண் டிசைஅசைய
வையாளி வேறுமயிலே.

(பொ-உ.) (1) சிகரம் - சிகரங்களை உடைய, தமனிய - பொன்மயமான, மேருகிரி - மேருமலை, ரசதகிரி - வெள்ளி மலை, நீலகிரி — நீல நிறமுள்ள மலை, எனவும் — என்று சொல்லும்படியும், ஆயிரமுகங்களாய்ப் பரவி வரும்

2. தெய்வ நதி - கங்கை, காளிந்தி - யமுனை, என - என்று சொல்லும்படியும், நீழலிட்டு - ஒளி வீசி, வெண்

திங்கள் - வெண்ணிலா, சங்கு (வெண்) சங்கம் எனவும் – என்று சொல்லும்படியும், (பிரபா) பிரபை – பிரபைக்கு – திருவாசிக்கு

3. நிகர் எனவும் – விரிந்த தோகை ஒப்பாகும் என்றும், எழுதரிய நேமியென (கலாபம்) எழுதுதற்கு அரியதான சக்கரம் போல வட்ட வடிவுள்ளதெனவும், (உலகடைய) உலகு முழுமையும், நின்ற - பரவி நின்ற, முகில் என்னவே – மேகத்துக்கு ஒப்பாகும் என்றும் – கூறத்தக்க வகையில் —

4. நெடிய - நீண்ட, முது - பழமையான, ககன முகடு – ஆகாய முகட்டினை, உற – பொருந்தும்படி, வீசி நிமிரும் – வீசி நிமிர்ந்து விளங்கும், ஒரு – ஒப்பற்ற நீலத் தோகையை உடைய மயிலாம் – அந்த மயில் எது எனில் அது —

5. அகரு — அகிலும், மரு — மரு என்னும் வாசனைக் கொழுந்தும் மணம் வீசுகின்ற (அல்லது நறுமணம் மிக வீசும்) திருத்தணிகையில் (வீற்றிருக்கும்) அபிராம வேள் – அழகிய முருகவேள், (அடியவர்கள்) தனது அடியார்களின் (மிடி அகலவே) தரித்திரம் — வறுமை ஒழிய — வறுமை நீங்க

6. அடல் வேல் – வெற்றி வேல், கரத்தசைய – திருக் கரத்தில் அசையவும், ஆறிரு புயங்களில் – பன்னிரு திருப்புயங் களிலும், அலங்கல் குழாம் – மாலைக் குவியல்கள் அசையவும் -

7. மகர — மீன் வடிவுள்ள, கன — பொன்னுலாய, கோமள – அழகிய, குண்டலம் - குண்டலங்கள் பலவும் அசை யவும், வல் அவுணர் - வலிய அசுரர்களின், மனம் அசைய - மனம் கலக்கம் அடையவும், மால் – பெரிய

8. வரை – மலைகள் அசையவும், உரக பிலம் – நாகலோக பாதாளம் அசையவும், எட்டுத் திசைகளும் அசைதரவும், வையாளி – சவாரிச் சுற்றுப்பயணத்தின் பொருட்டு, ஏறு – ஏறி, (முருகவேள்) பவனி வருகின்ற மயில்தான்.

(க–உ.) அடியார்க்கு உதவ தணிகைக் குமரன் எழுந் தருளும் மயில் தனது கலாபத்தைப் பல நிறம் பொலிய வீசி நிமிரும்.

(கு–உ.) (1) அடி 1: மயிலின் தோகையின் நிறம் – பல நிறம் என்பதை — " பலநிற மிடைந்த விழுசிறை யலர்ந்த பருமயில் "—என வருவதைக் காண்க (திருப்புகழ் 164).

(2) ஆயிரமுகத் தெய்வ நதி – கங்கை — வேளைக்காரன் வகுப்பு-அடி 7 குறிப்பு (பக்கம் 328).

அடி 1, 2: (a) தமனிய மேரு கிரி – ரசத கிரி – கங்கை – யமுனே. இந்த உவமையை —
"இரணிய சயிலம் ரசித சயிலம் ... என விமலே என யமுனே என நிழல் வீசி"– எனவரும் திருப்புகழ் (1095) காண்க (பக்கம் 206 குறிப்புரை).

(b) திங்கள் – சங்கென – இந்த உவமையை – 'மதி முதிய பணிலமென'–எனவரும் திருப்புகழில் (1096) காண்க.

அடி 3: "நேமியென" — "திகிரியென" எனவரும் திருப்புகழ் 1096, அடி 6 பார்க்க.

"நின்ற மாமுகில் என்னவே" — "வளரு முகிலென" எனவரும் திருப்புகழை (1096) காண்க.

அடி 4: "ககன முகடுற வீசி நிமிரும் - ககன முகடுற நிமிரும்"—திருப்புகழ் 1096.

இவ்வாறு இந்தப் பாடலில் உள்ள மயிலின் வர்ணனை சொல்லும் பொருளும் ஒக்கத் திருப்புகழ்ப் பாடல்கள் 1095, 1096 உள்ள வர்ணனையை ஒத்திருப்பது கண்டு மகிழத் தக்கது.

அடி 6, 7: முருகன் சிற்சில உறுப்புக்கள் அசைய வருதல். "அரையில் வடம் அசைய அழகுபெறு குடுமி அசைய உமை மகிழ வருகவே" — திருவிரிஞ்சைப் பிள்ளைத் தமிழ் 9.

அடி 8: வையாளி — குதிரையை நடத்தும் இடம்.
"வீதிநகர் வையாளி அலங்கரித்து"
— திருவாலவா-திருவிளை. 27-69.

"வையாளிப் பரிவாகனமாகொளு ... மயில்வாழ்வே" —திருப்புகழ் 771. 'வையாளிவரு...மயிலாம்'—இந்நூலில் (செய்யுள் 7 அடி 4).

## *10

1 நிராசத விராசத வரோதய பராபர
னிராகுல னிராமய பிரா

* இந்தப் பாடலுக்குச் சரியான பாடங் கிடைக்கவில்லை.

[2]னிலாதெழு தலாலற மிலானெறி யிலானெறி
நிலாவிய உலாசஇ தயன்
[3]குராமலி விராவுமிழ் பராரை யமரா நிழல்
குரா நிழல் பராவு தணிகைக்
[4]குலாசல சராசரம் எலாமினி துலாவிய
குலாவிய கலாப மயிலாம்
[5]புராரிகும ராகுரு பராஎனும் வரோதய
புராதன முராரி மருகன்
[6]புலோமசை சலாமிடு பலாசன வலாரிபுக
லாகும் அயி லாயுதனெடுந்
[7]தராதல கிராதர்கள் குலாதவபி ராமவல
சாதனன் விநோத சமரன்
[8]தடாரி விகடாசுரன் குடாரித படாதிகழ்
ஷடா நநன் நடாவு மயிலே.

(பொ-உ.) (1) நிராசத — முக்குணங்களில் ஒன்றுன ரஜோகுணம் இல்லாதவன், விராசத — ராஜத குணத்துககு மாறுபாடான சாத்விக குணத்தை உடையவன், வரோதயன் — வரங்களுக்கு இருப்பிடமானவன், பராபரன் — பரமேசுரன், நிராகுலன் - (ஆகுலம் - கவலை) வருத்தம் அற்றவன், நிராமயன் - நோயற்றவன், பிரான் - தலைவன்.

2. நிலாதெழுதலால்-(இலாதெழுதலால்) அறமிலான், நெறியிலான் - அறமிலான் - நெறியிலான் நிலாதெழுதலால்- அறமில்லாதவனும், நன்னெறியில்லாதவனும் தம்மிடத்தே (நில்லாது) (இல்லாது) சாராமல், எழுதலால் - விளங்குதலால், நெறி நிலாவிய - நன்னெறியில் (நிலாவிய) விளங்குகின்ற, உல்லாசமான - சந்தோஷமான, இதயன் - உள்ளத்தொடு கூடியவனுக்கு (உரியதாய்) —

3. குராமலி — குராமரத்தில் நிறைந்து, விராவு — கலந்து, உமிழ் - வெளித் தோன்றும், பராரை - பருத்த அடிப்பாகத்தில் (திருவிடைக்கழி என்னும் தலத்தில்) அமரா - அமர்ந்து, நிழல்குரா - ஒளி பொருந்திய குரா மரங்களின், (நிழல்) (பராவு) பரவு - மிக்குள்ள தணிகை என்கின்ற,

4. குலாசலம் – சிறந்த மலைமுதலாக, சராசரம் எலாம்– உலகங்களில் எங்கும் இனிமையுடன் உலாவிக், குலாவிய – களித்த, தோகை மயிலாம்; அந்த மயில் எது எனில் அதுதான் —

5. புராரி – திரிபுரத்தை எரித்த பரமசிவன் ‘ குமரனே, குருமூர்த்தியே ’ எனும் – என்று புகழ்ந்த (வரோதய) வரங் களுக்கு இருப்பிடமானவனும், புராதன(ன்) பழையோனும் ஆகிய (முராரி மருகன்) திருமால் மருகன்

6. புலோமசை சலாமிடு பலாசன வலாரி — பலாசன புலோமசை சலாமிடு வலாரி — பலாசன — கிளி போன்ற புலோமசை - இந்திராணி, சலாமிடு – வணங்கும், வலாரி – இந்திரனுக்குப், புகலாகும் — அடைக்கல ஸ்தானமான (அயிலாயுதன்) வேலாயுதன், (நெடும்) நீண்ட

7. தராதலம் - பூமியில் உள்ள, கிராதர்கள் – வேடர் களின், (குலாத வபிராம - குல – ஆதவ – அபிராம) குலத்துக்கு (ஆதவ அபிராம) சூரியன்போல (மாப்பிள்ளையாய்) விளங்கும் அழகனும் (வல சாதனன்) வல்லமையைச் சாதித்தவன் — (விநோத சமரன்) சமர் விநோதன் – போரை விளையாடலாகக் கொண்டவன்

8. (தடாரி) தடம் – (கிரவுஞ்ச) மலைக்கு, (அரி) பகை வனாயிருந்தவன். (விகடாசுரன்) தொந்தரவு தந்த அசுரன் சூரனை - சூர்மாவை வெட்டித் தள்ள (குடாரி) கோடாலி போல இருந்தவன், (இதபடா) இதம்பட்டு – மகிழ்ச்சியுற்றுத் (திகழ்) விளங்குகின்ற, ஷடாநந – ஆறு திருமுகத்தன் ஆகிய (முருகன்) (நடாவு) நடத்தும் - செலுத்தும் மயில்தான்.

(க–உ.) ஆறுமுகவேள் செலுத்தும் மயில் உலகெலாம் உலவிக் களிக்கும் மயில்.

(கு–உ.) அடி 5 : முராரி - திருமால் — திருப்புகழ் 522, பக்கம் 196 கீழ்க்குறிப்பு.

அடி 6 : பலாசனம் – பழத்தை உண்பது கிளி. வலாரி – இந்திரன் – வலாசுரனுக்குப் பகைவன். வலாசுரன் வரலாறு: கந்தர் அநுபூதி 10, பக்கம் 638 குறிப்பு பார்க்க. அடி 8 : தடம் - மலை.

## 11

[1]எந்நாளும் ஒருசுனையில் இந்த்ரநீ லப்போ
திலங்கிய திருத்தணிகைவாழ்
[2]எம்பிரான் இமையவர்கள் தம்பிரான் ஏறும்ஒரு
நம்பிரானை மயிலைப்
[3]பன்னாளும் அடிபரவும் அருணகிரி நாதன்
பகர்ந்தஅதி மதுர சித்ரப்
[4]பாடல்தரு மாசறு விருத்தம்ஒரு பத்தும்
படிப்பவர்கள் ஆதி மறைநூல்
[5]மன்னன் முகம்பெறுவர் அன்னம் ஏறப்பெறுவர்
வாணிதழு வப்பெறுவரால்
[6]மகரால யம்பெறுவர் உவணம் ஏறப்பெறுவர்
வாரிச மடந்தையுடன்வாழ்
[7]அந்நாயகம் பெறுவர் அயிராவ தம்பெறுவர்
அமுதா சனம்பெறுவர்மேல்
[8]ஆயிரம் பிறைதொழுவர் சீர்பெறுவர் பேர்பெறுவர்
அழியா வரம்பெறுவரே.

(பொ–உ.) (1) (எந்நாளும்) எல்லாத் தினங்களிலும் ஒப்பற்ற (சுனையில்) சுனையில், (இந்த்ர நீலப் போது) இந்திர நீலம் எனப்படும் நீலோற்பலப், போது–மலர் (இலங்கிய) விளங்கும் திருத்தணிகை மலையில் வாழ்கின்ற —

2. (எம்பிரான்) எமது தலைவன், இமையவர்கள்தம் பிரான் - தேவர்களின் தலைவன் ஆகிய முருகவேள் ஏறுகின்ற ஒப்பற்ற (மயிலை) நமக்குத் தலைவனாகிய மயிலைப்,

3. (பன்னாளும்) பல நாள்களாக, (அடி பரவும்) அடி போற்றும் அருணகிரிநாதன் (பகர்ந்த) சொன்ன (அதிமதுர) மிக இனிமையான (சித்ர) விசித்திரமான

4. (பாடல் தரும்) பாடல்களாக விளங்குகின்ற, ஆசறு (மாசறு) விருத்தம் – குற்றமற்ற விருத்தங்கள் ஒரு பத்தையும் படிப்பவர்கள், ஆதியான (மறைநூல்) வேத நூல்கள் (தம்மிடத்தே)

5. (மன்) நிலைபெற்று விளங்கும் (நான்முகம்) பிரமனது நான்கு முகங்களையும் பெறுவர், (நான்முகன் ஏறும்) அன்ன வாகனத்தின் மீது ஏறப் பெறுவர் — ஏறும் பாக்கியத்தைப் பெறுவர், (வாணி) (பிரமன் தழுவும்) சரஸ்வதி தேவியைத் தழுவப் பெறுவர்-(பிரமனுடைய பதவியைப் பெறுவர் என்றவாறு).

6. (மகராலயம்) மகர மீன்கள் உலவுதற்கு இடமான கடலை இடமாகப் பெறுவர் (வருணதேவனுடைய பதவியைப் பெறுவர்), (உவணம்) கருடவாகனத்தில் ஏறப் பெறுவர்; (வாரிச மடந்தை) தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியுடன் வாழும்படியான

7. (அந் நாயகம்) அந்தத் தலைமைப் பதவியைப் பெறுவர் – (திருமாலின பதவியைப் பெறுவர் என்றபடி): அயிராவதம் - ஐராவதம் என்னும் வெள்ளை யானையின்மீது ஏறப்பெறுவர் — (இந்திரபதவியை அடைவர் (என்றபடி), அமுதாசனம் பெறுவர் – அமுத அசனம் – அமுத உணவைப் பெறுவர் (தேவர்களாவர் என்றபடி) மேல் – பின்னும்

8. (ஆயிரம் பிறை தொழுவர்) சதாபிஷேகம் செய்து கொள்ளும் பாக்கியத்தைப் பெறுவர், (சீர்பெறுவர்) சகல நன்மைகளைப் பெறுவர், (பேர்பெறுவர்) புகழ்பெறுவார்கள், (அழியா வரம்) என்றும் அழியாத வீட்டின்ப வரத்தைப் பெறுவார்கள்.

(க-உ.) அருணகிரிநாதன் பாடின இம் மயில் விருத்தத்தைப் படிப்பவர்கள் சகல பதவிகளையும், அழியா இன்பத்தையும் பெறுவர்.

(கு-உ.) இம் மயில் விருத்தம் திருத்தணிகையிற் பாடப்பெற்றது என்பது 'தணிகை' பல பாடல்களில் வருவதால் விளங்குகின்றது.

(1) நீல மலர் எந்நாளும் திருத்தணியில் மலர்வது — 'கடவுள் நீலம் மாறுத தணிகை' — என்ற திருப்புகழிற் காண்க (பாட்டு 272, பக்கம் 178–179 கீழ்க்குறிப்பு.

(8) ஆயிரம் பிறை தொழுவர் (சதாபிஷேகத்துக்கு உரியவராவர்) சதாபிஷேகம் என்பது - எண்பது வயதுக்கு மேற்பட்டு வாழ்ந்து ஆயிரம் பிறை கண்டவர்க்குச் செய்யும் சடங்கு.

—: o :—

உ

# சேவல்  விருத்தம்

இதுவரையும் வெளிவராத இந் நூலின் ஓலைச் சுவடி ஒன்று அடையாறு Theosophical Society கட்டடத்தில் உள்ள தாக்ஷிணாத்ய கலாநிதி மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயர் புத்தக நிலையத்திற் (Accession No. 914) கிடைத்தது. ஓலை ஆங்காங்கு மிகவும் சிதைவுற்ற நிலையில் இருந்தது. இந் நூலை ஓலையினின்றும் பிரதி செய்து கொடுத்தும், பிரசுரிக்க அநுமதி தந்தும் எமக்கு மிக உதவின ஷை நூல் நிலையத் தலைவரவர்களுக்கு எமது நன்றியும் பேரன்பும் உரியன ஆம்.

2. பதினொரு பாடல்கள் உள்ள இந் நூலில் ஒரு பாடலாவது சிதைவுறாமல் இல்லை. பல சொற்கள் சிதறுண்டு காணாது போய்விட்டன. அதனால் பதிகங்கள் திருத்தணிகேசன் திருவருளின் துணைகொண்டு, ஒருவாறு செப்பஞ் செய்யப்பட்டுள. அத்தகைய இடங்களுள் முக்கியமானவை [ ] என்னும் குறிப்பினுள் காட்டப்பட்டுள.

3. பூத பிசாசுகளின் சேஷ்டையை விலக்கச் சேவல் துணை செய்யும் என்பது இவ் விருத்தப் பாக்களால் விளங்குமாதலால் பூத பிசாசுகளை ஓட்டி விலக்க இந் நூற் பாராயணம் உதவும் என்பது தெளிவு.

—:o:—

காப்பு

[1]கொந்தார் குழல்வரி வண்டோ லிடுமியல்
கொண்டேழ் இசைமருளக்,
[2]குதலை மொழிந்தருள் கவுரி சுதந்தரி
குமரன் இதம்பெறு பொற்
[3]செந்தா மரைகடம் நந்தா வனமுள
செந்தூர் எங்குமுளான்

[4]திலக மயிலில்வரு குமரன் வரிசைபெறு
சேவல் தனைப் பாட

[5]வந்தே சமர்பொரு மிண்டா கியகய
மாமுக னைக்கோறி

[6][வன்கோ டொ]ன்றை ஒடித்துப் பாரதம்
மாமே ருவிலெழுதிப்

[7]பைந்தார் கொடுபல ராவணன் அன்பொடு
பணிசிவ லிங்கமதைப்

[8]பார்மிசை வைத்த விநாயகன் முக்கட்
பரமன் துணையாமே.

(பொ-உ.) (1) பூங்கொத்துக்கள் நிறைந்து, குழல் வாத்தியம் போல (அல்லது பூங்கொத்துக்கள் நிறைந்த கூந்தலில்) வரி—இசைப் பாட்டுக்களைப் பாடும் வண்டுகள் ஒலிசெயும் தன்மைகொண்டு, ஏழிசைகளும் மருட்சி அடையும் படியாக,

2. மழலைக் குதலைப் பேச்சுக்களைப் பேசி அருளும் கவுரி, தன் வயத்தினள் ஆகிய பார்வதியின் குமாரன், இனிமையைக் கொண்டுள்ள அழகிய

3. செந்தாமரைக் காடு பொலியும் நந்தவனங்கள் உள்ள (அழியாத சோலைகள் உள்ள) திருச்செந்தூரிலும் பிற தலங்கள் எங்கிலும் விளங்குபவன்,

4. சிறந்த மயில்மீது எழுந்தருளும் குமரமூர்த்தி, ஆகிய முருகவேளின் கீர்த்திபெற்ற சேவலைப் பாடுதற்கு—

5. எதிர்த்து வந்து போர்புரிந்த மதம் கொண்ட கஜ முகாசுரனைக் கொன்றும்,

6. வலிய தமது தந்தம் ஒன்றை ஒடித்து அதுகொண்டு பாரதக் கதையை மேருமலையில் எழுதியும்,

7. பசுமை கொண்ட மாலைகளைச்சூட்டி வலிய ராவணன் அன்பொடு பணிந்துபூசித்த சிவலிங்கமாம்(மகாபலேசுரரைப்)

8. பூமியில் (கோகர்ணத்தில்) வைத்தவரும் மூன்று கண்களை உடையவரும் ஆன விநாயக மூர்த்தி துணை புரிவார்.

(க-உ.) முருகவேளின் சேவற்கொடியைப் பாட கஜ முகாசுரனைக்கொன்றவரும், பாரதத்தைத் தமது கொம்பால் எழுதினவரும், ராவணன் ஏந்தி வந்த லிங்கத்தைப் பூமியிற் (கோகர்ணத்தில்) வைத்தவருமான விநாயகமூர்த்தி துணை செய்வார்.

(கு-உ.) (5) கயமுகனைக் கொன்றது — கந்தரநுபூதி 1, பக்கம் 627 கீழ்க்குறிப்பு.

(6) விநாயகர் கோடொடித்துப் பாரதம் எழுதினது — திருப்புகழ் 441, பக்கம் 608 கீழ்க்குறிப்பு.

(7) ராவணன் கொண்டு வந்த லிங்கத்தைப் பூமியில் வைத்தது: சிவபிரானிடம் பெற்ற லிங்கத்தை ராவணன் இலங்கையில் ஸ்தாபிக்க வேண்டிக் கொண்டு வரும்போது தேவர்களின் வேண்டுகோளின்படி, விநாயக மூர்த்தி ஒரு பிராமணச் சிறுவன்போல அவன் எதிரே தோன்ற அவன் இந்த லிங்கத்தைப் பிடித்துக்கொள் - நான் சற்று வெளிக்குப் போய் வாங்கிக் கொள்ளுகிறேன்; கீழே வைக்காதே எனச் சொல்லிக் கொடுக்க, ராவணன் கால் கழுவி வருவதன் முன் விநாயகர் அவனைக் கூப்பிட்டு, அவன் வருவதற்குள் லிங்கத்தையும் கீழே வைத்துவிட்டார் - ராவணன் வந்து அந்த லிங்கத்தைத் தூக்க அது பசுவின் காதுபோலக் குழைந்ததேயன்றி எடுக்க இயலாது இருந்தது. இந்த ஸ்தானமே கோகர்ணம், லிங்கம் மகாபல லிங்கம்.

## நூல்.

### 1

[1]உலகிலநு தினமும்வரும் அடியவர்கள் இடரகல
உரியபர கதிதெரியவே
[2]உரகமணி எனவுழலும் இருவினையும் முறைபடவும்
இருள்கள்மிடி கெட அருளியே
[3]கலகமிடும் அலகைகுறள் மிகுபணிகள் வலிமையொடு
கடினமுற வரில் அவைகளைக்
[4]கண்ணைப் பிடுங்கியுடல் தன்னைப் பிளந்துசிற
கைக்கொட்டி நின்றுடுமாம்
[5]மலைகள்நெறு நெறுநெறெென அலைகள்சுவ றிடஅசுரர்
மடியஅயில் கடவு முருகன்

[6]மகுடவட கிரியலைய மலையுமுலை வநிதைகுற
வரிசையின மகளவளுடன்
[7]சிலைகுலிசன் மகள்மருவு [புயன்இலகு சரவணச்
சிறுவன்அயன் வெருவ] விரகிற்
[8]சிரமிசையில் வெகுசினமொ டடியுதவும்அறுமுகவன்
சேவற் றிருத்துவசமே.

(பொ-உ.) (1) உலகில் நாள்தோறும் வருகின்ற அடியார்கள் இடர் நீங்கித் தக்கதான மேலாங் கதியை அறியும்படி வைத்தும்

2. (மணி உரகம்) ரத்னமேந்தும் பாம்பு போலத் திரிந்து அச்சம் தந்து வரும் நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் முறைபட்டு ஒப்பாக அஞ்ஞான இருள்களும் வறுமையும் தொலையும்படி அருளியும்,

3. வேதனை தரும் பேய்ப் பிசாசுகள், (விஷம்) மிக்க பாம்புகள் பலத்துடன் கொடுமை செய வந்தால், அவைகளின்

4. கண்ணைப் பறித்தும், உடலைப் பிளந்தும் (வென்று) தனது சிறகுகளைக் கொட்டி நின்று ஆடல்புரியும்; அது எது என்றால்

5. மலைகள் நெறு நெறு என்று பொடிபட, கடல்கள் வற்றிப்போக, அசுரர்கள் இறக்க வேலாயுதத்தை ஏவிய முருகன்

6. சிகரங்களை உடைய வடமலை - மேரு அலைவுறும்படி அதனொடு எதிர்த்துப் பொரவல்ல கொங்கைகளை உடைய பெண், குறவர்களின் (இசை இனம்) புகழ்பெற்ற கூட்டத்தில் வந்த மகள் – ஆகிய வள்ளியும்

7. (சிலை) வில், (வஜ்ரம்) குலிசாயுதம் முதலியன கொண்டுள்ள இந்திரனுடைய (அல்லது - சிலை - கோபித்து எழும் குலிசாயுதனும் இந்திரனுடைய) மகள் – தேவசேனையும் அணைகின்ற திருப்புயங்களை உடையவன், விளங்கும் சரவணத்தில் வந்த சிறுவன், பிரமன் அஞ்சும்படி சாமர்த்தியத்துடன்

8. (அவனது) தலைமேல், மிக்க கோபத்துடன், (அடி உதவும்) அடித்துக் குட்டின ஆறுமுகவன்–ஆகிய முருகவேளின் அழகிய கொடியாக விளங்கும் சேவல்தான் அது.

(க-உ.) கடல் சுவறவுல், அசுரர்கள் மடியவும் வேல் விட்டவன், வள்ளி - தேவசேனையின் கணவன், பிரமனைக்

குட்டியவன் ஆன முருகவேளின் கொடியாகிய சேவல், அடியார்களின் இடரை நீக்கியும், அவர்களுக்குப் பரகதி காட்டியும், இருவினை ஒப்பாக ஞான உணர்ச்சியை அருளியும், பூத பிசாசுகளை அடித்து விலக்கியும் உதவிபுரிந்து மகிழும்.

(கு-உ.) பிரமனைக் குட்டிய வரலாறு — திருப்புகழ் 608, பக்கம் 406 பார்க்க.

## 2

[1]எரியனைய வியனவிரம் உளகழுது பலபிரம
 ராட்சதர்கள் மிண்டுகள்செயும்
[2]ஏவற் பசாசுநனி பேயிற் பசாசுகொலை
 ஈனப் பசாசுகளையும்
[3]கரிமுருடு பெரியமலை பனையெனவும்முனையின்உயர்
 ககனமுற நிமிரும் வெங்கட்
[4]கடிகளையும் மடமடென மறுகியல றிடஉகிர்க்
 கரத்தடர்த் துக்கொத்துமாம்
[5][தரணிபல இடமென்]வன மதகரிகள் தறிகள்பணி
 சமணர்கிடு கிடென நடனம்
[6]தண்டைகள் சிலம்புகள் கலீன்கலினெ னச்சிறிய
 சரணஅழ கொடுபுரியும் வேள்
[7]திரிபுரம தெரியநகை புரியும்இறை யவன்மறைகள்
 தெரியும்அரன் உதவு குமரன்
[8]திமிரதின கரமுருக சரவண பவன்குகன்
 சேவற் றிருத்துவசமே.

(பொ-உ.) (1) நெருப்புப் போன்ற விரிந்த மயிர்களை உடைய பேய்கள், பலவகைய பிரம ராட்சதர்கள், வேதனைக் குறும்புகள் செய்யும்

2. (பகைவர்களால்) ஏவப்பட்ட மிக்க பேய் பிசாசுகள், கொலைபுரிய வல்ல இழிவான பிசாசுகள்

3. கரு நிறமும், கரடுமுரடும் கொண்ட பெரிய மலை போலவும், மூங்கில் போலவும், முனையின் — வேண்டுமானால் உயர்ந்த ஆகாய அளவுக்கு வளர வல்லனவும், கொடிய கண்களை உடையனவுமான

4. பேய்கள் ஆகிய இவைகளை அவை கலக்குண்டு அலறும்படி மடமட என்று தன்னுடைய கை நகங்களாற் பிடுங்கிக் கொத்தும்; அது எது என்றால் —

5. மலைகள் பலவற்றை இடமாகக் கொண்டு, மதம் பிடித்த காட்டானைகளும், தூண்களும் இவர்க்கு முன் தாம் எம்மாத்திரம் எனப் பணியும்படி உள்ள சமணர்கள் கிடுகிடு என்று அஞ்சும்படி, நடனத்தை

6. தண்டைகளும் சிலம்புகளும் கலின் கலினென்று ஒலிக்கத், தனது சிறிய திருவடியின் அழகுடன் புரியும் செவ்வேள் —

7. திரிபுரங்கள் எரிந்து விழச் சிரித்த இறைவன், வேதங்கள் அறிந்து போற்றும் சிவபிரான் பெற்ற குமர மூர்த்தி —

8. (அஞ்ஞான) இருளை நீக்கும் ஞான சூரியன், முருகன், சரவணபவன், குகமூர்த்தி ஆகிய செவ்வேளின் அழகிய கொடியாக விளங்கும் சேவல்தான் அது.

(க-உ.) சமணர்களை அழித்து நடனம் புரிந்த முருகனது கொடியாகிய சேவல் எத்தகைய பேய் பிசாசுகளையும் வெருட்டி ஓட்டிவிடும்.

(கு-உ.) (1) கழுது - பேய்; நவிரம் - மயிர்: பேய்களின் மயிர் எரி உருவம். 'பேய்கள் எரிதலையொடு', 'செந்தீ எழக் கொளுந்தியன்ன குஞ்சிவெஞ் சிரத்தவே'—தக்கயாகப் பரணி 58, 121. (4) கடி=பேய்.

(5) தரணி = மலை (பிங்கலம்): சமண குருமார் யானைகள் போல மலையிடங்களில் வசித்தார்கள். தூண்போல நிர்வாணமாயிருந்தார்கள் என்பதைக் குறிக்க, 'மதகரிகள், தறி' எனப்பட்டார் — தறி=தூண்.

" மா கதக் கரிபோல் திரிந்து "—சம்பந்தர் 3-39-2.

" தறிபோலாஞ் சமணர் "—சம்பந்தர் 1-115-10.

" ஆனை மாமலை ஆதியாய இடங்களிற் பல அல்லல்சேர் ஈனர்கள் " — சம்பந்தர் 3-39-1.

சமணர்களைச் சம்பந்தப் பெருமான் அச்சமுறும்படி செய்த லீலை குறிப்பிடப்பட்டுளது,

3

[1]கரிமுரட் டடிவலைக் கயிறெடுத் தெயிறுபற்
கலையிறுக் கியு முறைத்துக்
[2]கலகமிட் டியமன்முற் கரமுறத் துடருமக்
காலத்தில் வேலு மயிலும்
[3]குருபரக் குகனுமப் பொழுதில்நட் புடன்வரக்
குரலொலித் தடியரிடரைக்
[4]குலைத்தலறு மூக்கிற் சினப்பேய்க ளைக்கொத்தி
வட்டத்தில் முட்ட வருமாம்
[5]அரியகொற் கையனுடற் கருகும்வெப் பகையையுற்
பனமுரைத் ததமிகவுமே
[6]வமணரைக் கழுவில்வைத் தவருமெய்ப் பொடிதரித்
தவனிமெய்த் திட அருளதார்
[7]சிரபுரத் தவதரித் தவமுதத் தினமணிச்
சிவிகைபெற் றினியதமிழைச்
[8]சிவனயப் புறவிரித் துரைசெய்விற் பனனிகற்
சேவற் றிருத் துவசமே.

(பொ–உ.) (1) கருநிறத்துடனும் (முரட்டடி) முரட்டுத் தனத்துடனும், பாசவலைக் கயிறுடனும் வந்து (எயிறுபற்களை) எல்லாப் பற்களையும் கடித்து, முறைத்துப் பார்த்து

2. கலக்கம் உறச்செய்து யமன் என் முன்பு தொட்டுத் தொடரும் அந்த முடிவு காலத்தில், வேலும், மயிலும்,

3. குருபரனும் குகனும் அப்பொழுது அன்புடன் எதிர் வரும்படி குரல்கொண்டு கூவி அழைத்து, அடியார்களின் வருத்தத்தைச்

4. சிதற வைத்து ஒழித்தும், சினங்கொண்ட பேய்களை அலறு மூக்கில் – கூச்சலிடும் மூக்கினால் கொத்தி, வட்டமிட்டு முட்டுதற்கு வரும்; அது எது என்றால் —

5. அருமை வாய்ந்த (கூன்) பாண்டியனது உடல் கருகும்படி காய்ந்த வெப்புச் சுரமாம் பகையின் அடிப்படைக் காரணத்தை வெளியிட்டுரைத்தவரும், (அதம் மிகவும் மேவு) கீழ்மைக் குணத்தை அதிகமாகக் கொண்ட – அல்லது அதம் மிகவும் – கெடுதற் செய்கைகள் பலவும் (ஏவு) செலுத்தின

6. சமணர்களைக் கழுவில் ஏற்றினவரும், அவர்களிற் (பலரை) உண்மைத் திருநீற்றை அணியும்படி செய்தவரும், உலகு உண்மை கண்டு உய்ய அருள் நிரம்பப் பாலித்தவரும்,

7. (சிரபுரம்) சீகாழியில் அவதரித்தவரும், அந்தஅமுத—தினமணி — அந்த அமுதம்போலக் குளிர்ச்சி தருவதும், சூரியன்போல ஒளி வீசுவதுமான (முத்துப்) பல்லக்கை (ஈசனிடம்) பெற்றவரும், இன்பமூட்டும் தமிழைத் (தேவாரத்தைச்)

8. சிவபெருமான் விரும்பிக் கேட்க விரிவாகப் பாடியருளின (விற்பனன்) பெருந் தமிழ்ப் புலவரும் ஆகிய முருகவேளின் வலிமை வாய்ந்த அழகிய கொடியாகிய சேவல்தான் அது.

(க-உ.) பாண்டியனது சுரத்தைத்தீர்த்துச், சமணரைக் கழுவேற்றித், திருநீற்ருல் உலகுய்ய வைத்துத் திருநெறித் தமிழ் பாடிச் சிவபிரானை மகிழ்வித்து, அவரிடம் முத்துச் சிவிகை பெற்ற மகா கலைஞுன முருகவேளின் கொடியாகிய சேவல் என்னை யமன் தொடரும் வேளையில், மயில்மீது முருகவேள் வேலுடன் என்முன் வரும்படியாக கூவித் துணை புரியும்.

(கு-உ.) அடி 5: கொற்கையன் = பாண்டியன்.
அடி 7: அமுதத்து இனமணி எனப் பிரித்து அமுதத்தின் இனம்போலக் குளிர்ந்த மணி – முத்து எனலுமாம்.
அடி 5-8: சம்பந்தப் பெருமானது லீலைகளைத் திருப்புகழ் 181 (தொகுதி 1, பக்கம் 420), திருப்புகழ் 762, தொகுதி 4, பக்கம் 268 கீழ்க்குறிப்புக்களிற் காண்க.

## 4

[1] அச்சப்ப டக்குரல் முழக்கிப் பகட்டியல
 றிக்கொட்ட மிட்டமரிடும்
[2] அற்பக் குறப்பலிகள் வெட்டுக்கள் பட்டுகடி
 அறுகுழை களைக்கொத்தியே
[3] பிச்சுச் சினத்துதறி எட்டுத்திசைப் பலிகள்
 இட்டுக் கொதித்து விறலே
[4] பெற்றுச் சுடர்ச்சிறகு தட்டிக் குதித்தியல்
 பெறக்கொக் கரித்து வருமாம்

[5]பொய்ச்சித் திரப்பலவும் உட்கத் திரைச்சலதி
பொற்றைக் கறுத் தயில்விடும்
[6]புத்திப்ரி யத்தன்வெகு வித்தைக் குணக்கடல்
புகழ்ச்செட்டி சுப்ரமணியன்
[7]செச்சைப் புயத்தன்நவ ரத்னக்ரி டத்தன்மொழி
தித்திக்கு முத்தமிழினைத்
[8]தெரியவரு பொதிகைமலை முநிவர்க் குரைத்தவன்
சேவற் றிருத்துவசமே.

(பொ-உ.) (1) (பகைவர்கள்) அஞ்சும்படி குரலை எழுப்பி, வெருட்டிப் பெருங் கூச்சலிட்டு (கொட்டம் இட்டு) ஆர்ப்பாட்டத்துடன் போர் செய்யும்

2. அற்பமான குறவரிடும் பலிகளில் வெட்டுண்டு, அவை கடித்திருந்த இலை தழைகள் அறுபட்டு விழுந்தவைகளைக் கொத்தியும்

3. பிய்த்து (கிழித்து)க் கோபத்துடன், எட்டுத் திசைகளிலும் பலியிடுவதுபோல உதறிக், கிளர்ச்சியுற்று, வீரம்–வெற்றி

4. பெற்று, ஒளிவீசும் தனது சிறகுகளைப் புடைத்தும், குதித்தும், ஒழுங்குடன் கொக்கரித்தும் வரும்; அது எது என்றால் —

5. பொய், கற்பனையான செயல்கள் பலவும் அச்சம் உறவும், அலைவீசும் கடல் மீதும், கிரௌஞ்சகிரி மீதும் கோபித்து வேலாயுதத்தைப் பிரயோகித்த

6. அறிவும் அன்பும் பூண்டவன், சகல கலைகளிலும் குணத்திலும் கடல் போன்றவன், புகழ் நிரம்பின செட்டி, சுப்ரமண்யன் எனப் பெயர் பூண்டவன்

7. வெட்சி மாலையை அணிந்த திருப்புயங்களை உடையவன், நவரத்னங்கள் இழைத்த கிரீடத்தைத் தரித்தவன், மொழிகள் இனிப்பதான முத்தமிழை —

8. அதற்கு வேண்டி வந்த பொதிகைமலை முநிவராம் அகத்தியர்க்குப் போதித்தவன் ஆகிய முருகவேளின் அழகிய கொடியாக விளங்கும் சேவல்தான் அது —

(க-உ.) அகத்திய முநிவர்க்குத் தமிழை உபதேசித்த முருகவேளின் கொடியாகிய சேவல் வேட்டுவரிடும் பலிக்களத்தில் இழை தளிர்களைக் கொத்திக் கூத்தாடிக் கொக்கரிக்கும்.

(கு-உ.) (5) வேல்-கடலைக்கோபித்தது, கிரௌஞ்சத்தை, ஏழுமலையை அட்டது — திருப்புகழ் 740. பக்கம் 210 குறிப்பு.

(8) அகத்தியர்க்குத் தமிழ் போதித்தது – திருப்புகழ் 958, அடி 7.

5

[1]தாஞ யிடும்புசெயு மோகினி இடாகினி
தரித்தவே தாளபூதம்
[2]சருவசூ னியமுமங் கிரியிஞ லுதறித்
தடிந்துசந் தோடமுறவே
[3]கோஞகி மகவானும் வாஞள வாஞடர்
குலவுசிறை மீள அட்ட
[4]குலகிரிகள் அசுரர்கிளை பொடியாக வெஞ்சிறைகள்
கொட்டியெட் டிக்கூவுமாம்
[5]மாஞகம் அக்கறுகு மானுடையன் நிர்த்தமிடு
மாதேவ னற்குருபரன்
[6]வானீர[ம் அவ]னியழல் காலாய் நவக்கிரகம்
வாழ்நாள் அனைத்தும் அவஞம்
[7]சேஞ பதித்தலைவன் வேதா விளைச்சிறைசெய்
தேவாதி கட்கரசுகட்
[8]டேஞன மைக்கடவின் மீஞ[ன வற்கினியன்]
சேவற் றிருத்து வசமே.

(பொ-உ.) (1) ஒருவர் தம்மைத் தூண்டாமலே தாஞகவே பிறர்க்குத் துன்பத்தைச் செய்கின்ற மோகினி, டாகினி அவையுடன் பொருந்திய பேய்கள், பூதங்கள்

2. (சகலவித சூனியங்கள்) ஆகிய இவைகளை (அங்கிரி யிஞல் (தனது) காலால் உதறிப் புடைத்தும், மகிழ்ச்சி யுறும்படி

3. இந்திரன் தலைவஞய் வாஞளவும், (வானவர்கள்) தேவர்கள் தாம் இருந்த சிறையினின்று மீளவும், எட்டுத்

4. திசைகளிற் சிறந்து நிற்கும் மலைகளும், அசுரர் கூட்ட மும் பொடிபடவும் தனது கொடிய சிறகுகளைக் கொட்டி, எட்டிக் குதித்துக் கூவும்; அது எது என்ருல்

5. (மால்நாகம்) பெரிய வாசுகிப் பாம்பையும், (அக்கு) எலும்பு (அல்லது ருத்ராக்ஷ) மாலையையும், அறுகம்புல்லையும், (மான்) திருக்கரத்தில் மானையும் (அல்லது மான் தோல் உடையையும் உடையவன், நடனம் புரியும் மஹாதேவ மூர்த்தி ஆகிய சிவனுக்குக் குருபர மூர்த்தி

6. (வான்) ஆகாயம், (நீரம்) நீர், (அவனி) பூமி, (அழல்) நெருப்பு, (கால்) காற்று (எனப்படும்) பஞ்ச பூதங்கள், நவக்கிரகங்கள், வாழ் நாள் ஆகிய எல்லாம் தானாயவன்,

7. (தேவ) சேனாபதித் தலைவன், பிரமனைச் சிறை செய்தவன், தேவாதிகளுக்கு அரசு, கள்,

8. (தேனான மீனானவன்) மைக் கடலின் மீனானவன் — மதுவும் தேனும்போல இனிமை வாய்ந்தவன்; கருங்கடலில் மீனாய் உதித்தவன் ஆகிய நந்தி யெம்பெருமானுக்கு (அல்லது மச்சாவதாரத் திருமாலுக்கு) (இனியன்) இனித்தவன் — உகந்தவனான முருகவேளின் அழகிய கொடியாகிய **சேவல்** தான் அது.

(க–உ.) சிவனுக்குக் குருமூர்த்தி, எல்லாம் ஆயவன், தேவசேனாபதி, பிரமனைச் சிறையிட்டவன், நந்திக்கு (திருமாலுக்கு) இனியவன் ஆகிய முருகவேளின் சேவல் பூத பிசாசுகளை வெருட்டி, இந்திரனுக்கு அரசு அளித்துத், தேவர்களின் சிறையை நீக்கித் தனது சிறகுகளைக் கொட்டி ஆர்ப்பரித்துக் கூவும்.

(கு–உ.) (1) மோகினி, டாகினி, பேய் வகைகள் — பூதவேதாள வகுப்பு, அடி 46, தொகுதி 6, பக்கம் 362 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

(2) (சூனியம்) ஏவல் சூனியம் (மாரணவித்தை) Witch-craft causing evil).

அங்கிரி – பாதம் (பிங்கலம்).

(5) சிவபிரானுக்கு மான் தோல் உடையும் உண்டு.

'கருமானின் உரியதளே உடையா வீக்கி'–அப்பர் 6-1-3.

'புள்ளி மான் உரி உடையீரே'—சம்பந்தர் 1-54-2.

'உழைமான் உரித்தோல் ஆடையீர்'—ஷை 2-54-2.

(7) முருகவேள் பிரமனைச் சிறையிட்டது — திருப்புகழ் 1131, பக்கம் 294 கீழ்க்குறிப்பு.

(8) நந்திதேவர் கடலில் மீனானது — திருப்புகழ் 303, பக்கம் 252, திருப்புகழ் 1165-1, பக்கம் 400 கீழ்க்குறிப்பு. திருமால் :மச்சாவதாரம்–திருப்புகழ் 245, பக்கம் 108 குறிப்பு.

## 6

[1]பங்கமா கியவிட புயங்கமா படமது
பறித்துச் சிவத்தருந்திப்
[2]பகிரண்ட முழுதும் பறந்துநிர்த் தங்கள்புரி
பச்சைக் கலாப மயிலைத்
[3]துங்கமா யன்புற்று, வன்புற் றடர்ந்துவரு
துடரும் பிரேத பூதத்
[4]தொகுதிகள் பசாசுகள் நிசாசரர் அடங்கலும்
துண்டப் படக் கொத்துமாம்
[5]மங்கையா மளைகுமரி கங்கைமா லினிகவுரி
வஞ்சிநான் முகிவராகி
[6]மலையரையன் உதவமலை திருமுலையில் ஒழுகுபால்
மகிழ அமுதுண்ட பாலன்
[7]செங்கணன் மதலையிடம் இங்குளான் என்னுநர
சிங்கமாய் இரணியனுடல்
[8]சிந்தஉகி ரிற்கொடு பிளந்தமால் மருமகன்
சேவற் றிருத் துவசமே.

(பொ-உ.) (1) பங்கம் ஆகிய-கெடுதி தரும் விஷத்தை உடைய பாம்பின் பெரிய படத்தைத் துண்டப்படும்படிப் பறித்துச் சிவத்து அருந்தி - கோபித்து உண்டு

2. வெளி அண்டங்கள் முழுதும் பறந்து நட்டமிடு கின்ற பச்சைத்தோகை மயிலுடன்

3. சுத்தமான அன்பு பூண்டும், வன்மை வாய்ந்து நெருங்கித் தொடர்ந்து வரும் பிணப் பேய்களின்

4. கூட்டங்களையும், பிசாசுகளையும், அசுரர் யாவரையும், துண்டமாகும்படி கொத்தும் - அது எது என்றால் —

5. மங்கை, யாமளை, குமரி, கங்கை, மாலினி, கௌரி, வஞ்சி, (நான்முகி) பிராமி, வராகி,

6. மலைராஜனும் இமவான் உதவு அமலை - ஈன்ற அமலை (தேவி) ஆகிய பார்வதியின் திருமுலையில் ஒழுகிய பாலை மகிழ்ச்சியுடன் உண்ட குழந்தை

7. (செங்கணன்) செந்தாமரைக் கண்ணன் ஆகிய திருமால், (மதலையிடம்) தூணாகிய இடத்தில் இங்கு உள்ளான் (எனும்) என்று பிரகலாதனாற் சொல்லப்பட்ட நரசிங்க மூர்த்தியாய் (வெளி வந்து) இரணியனுடைய உடல்

8. (சிந்த) சிதறுண்ண, (உகிர்கொண்டு பிளந்த) நகங்களிற் பிளந்த (மால்) மாயவன் ஆகிய விஷ்ணுமூர்த்தியின் மருமகனாகிய முருகவேளின் அழகிய கொடியாகிய சேவல் தான் அது.

(க-உ.) பார்வதியின் திருமுலைப்பால் உண்டு மகிழ்ந்தவன், திருமாலின் மருகன் ஆகிய முருகவேளின் கொடியாகிய சேவல் - மயிலிடம் நட்பு பூண்டு பூத பிசாச அசுரர்களைக் கொத்தித் துண்டம் செயும்.

(கு-உ.) (2), (3) - மயிலுக்கும் சேவலுக்கும் நட்பு — "கோழியொடு வென்றி முறையும் பகருமே"—மயில் வகுப்பு அடி 15 பார்க்க.

(6) "உமைமுலைப் பாலுண்ட பாலன்"

—கந்தரலங்காரம் 81;

(7) மதலை = தூண். "மதலை யூடெழுந்த கோப அரி நாரசிங்கன்"—திருப்புகழ் 327-1.

திருமால் இரணியனை அட்டது — திருப்புகழ் 1137, பக்கம் 310 கீழ்க்குறிப்பு.

## 7

[1]வீருன காரிகதி முன்னோடி பின்னோடி
வெங்கட் குறும்புகள் தரும்
[2]விடுபேய்க ளேகழுவன் கொலைசாவு கொள்ளிவாய்
வெம்பேய் களைத்துரத்திப்
[3]பேருன 'சரவண பவா' என்னு மந்திரம்
பேசியுச் சாடனத்தாற்
[4]பிடர்பிடித் துக்கொத்தி நகநுதியி னலுறப்
பிய்ச்சுக் களித்தாடுமாம்
[5]மாருத முயலகன் வயிற்றுவலி குன்மம்
மகோதரம் பெருவியாதி

[6]வாதபித் தஞ்சிலேற் பனங்குட்ட முதலான
வல்லபிணி களைமாற்றியே
[7]சீறுத ஓராறு திருமுக மலர்ந்தடியர்
சித்தத் திருக்கு முருகன்
[8]சிலைகள்உரு விடஅயிலை விடுகுமர குருபரன்
சேவற் றிருத் துவசமே.

(பொ-உ.) (1) பெருமை வாய்ந்த (காரி) பைரவர் (செல்லும்) வழியில் அவர் முன்பு ஓடியும், பின்பு ஓடியும், கொடிய கண்களை உடையனவும், (குறும்பு) சேஷ்டைகள் புரிவனவுமான

2. தனித்த பேய்களையும், (கழு) கழுகுகளையும், கொடிய கொலைகளுக்கும், சாவுகளுக்கும் (காரணமாய் நிற்கும்) கொடிய கொள்ளிவாய்ப் பேய்களையும் துரத்தி ஒட்டி

3. (பேறு) வரம் தரவல்ல 'சரவணபவா' என்னும் மந்திரத்தை ஓதி, (உச்சாடனத்தால்) ஓட்டும் வகையால்

4. (அவைகளின்) புறக் கழுத்தைப் பிடித்துக் கொத்தியும், நகத்தின் நுனி கொண்டு அழுத்திப் பிய்த்தும் மகிழ்ந்து ஆடும்; அது எது என்றால் —

5. நீங்காத முயலகன் என்னும் வலிப்பு (Epilepsy), வயிற்று வலி, (குன்மநோய்) வயிற்று உளைவு - Chronic dyspepsia, (மகோதரம்) பெருவயிறு, (பெருவியாதி) தொழு நோய் - குட்டநோய் வகை

6. வாதம், பித்தம், சிலேத்துமம், குட்டம் முதலான வலிய நோய்களைப் போக்கி

7. (சீற்றம்) கோபம் இல்லாத ஒப்பற்ற ஆறு திரு முகங்களும் மலர்ந்து விளங்க அருளி, அடியார்களுடைய உள்ளத்தில் வீற்றிருக்கும் முருகன்

8. கிரௌஞ்சம், எழுகிரி முதலான மலைகளில் ஊடுருவிச் செல்லும்படி வேலைப் பிரயோகித்த குமர குருபர மூர்த்தி ஆகிய (வேற் பெருமானது) அழகிய கொடியாக விளங்கும் **சேவல்தான் அது;**

(க-உ.) சரவணபவா என்னும் மந்திரத்தை ஓதிப் பூத பிசாசுகளை அடித்துக் கொத்தி மகிழ்ந்தாடுவது முருகனது அழகிய கொடியான சேவல்தான்;

8

[1]வந்தார்ப் பரிக்குமம் மிண்டுவகை தண்டதரன்
வலியதூ துவர்ப்பில்லி பேய்
[2]வஞ்சினற் [பேதுற] மகாபூதம் அஞ்சிட
வாயினும் காலினுலும்
[3]பந்தாடி யேமிதித் துக்கொட்டி வடவைசெம்
பவளமா கதிகாசமாப்
[4]பசுஞ்சிறைத் தலமிசைத் [தனியயிற் குமரனைப்]
பார்த்தன் புறக்கூவுமாம்
[5]முந்தா கமப்பலகை சங்காக மத்தர்தொழ
முன்பேறு முத்தி முருகன்
[6]முதுகா னகத்தெயினர் பண்டோ டயிற்கணை
முனிந்தே தொடுத்த சிறுவன்
[7]சிந்தா குலத்தையடர் கந்தா எனப்பரவு
சித்தர்க் கிரங்கறுமுகன்
[8]செயவெற்றி வேள்[புநிதன் நளினத்தன்முடி]குற்றி
சேவற் றிருத் துவசமே.

(பொ-உ.) (1) வந்து ஆரவாரம் செய்து, அந்த மதத்துடன் அடர்த்து நெருங்கும் வகையில் வரும் தண்டேந்திய யமனுடைய வலிய தூதர்களும், (பில்லி பேய்) பேய்வகைகளும்

2. (வஞ்சினல்) வஞ்சினத்தால் — தனது சூளுறவால், பெருங் கோபத்தால் (பேதுற) மதிமயங்கும்படியும், மகா பூதங்கள் அஞ்சும்படியும், தனது வாயினுலும், காலினுலும்

3. (கால்) பந்து (Foot Ball) ஆடுவதுபோல மிதித்து (கொட்டி) அடித்து, (வடவை) வடவாமுகாக்கினியையும் ஒரு (செம்) (பவளமாக) பவள மணிபோல (அவ்வளவு சிறிய அற்பமான பொருளாக மதித்து, (அதிகாசமாக) பெருநகை புரிந்து

4. தனது பசிய (சிறைத் தலமிசை) சிறகுகளாம் இடத்தின்மீது (முதுகில்) வீற்றிருக்கும் (தனி அயில்) ஒப்பற்ற வேலாயுதம் ஏந்திய முருகவேளைப் பார்த்து அன்புடன் கூவுமாம்; அது எது என்றால்

5. (முந்து) மேம்பட்டு விளங்கும், (ஆகமப் பலகை) கல்வி அளக்கும் பலகையாகிய சங்கப்பலகையில், (சங்காகமத்தர்) சங்கக் கல்வியாளர்களாம் (நாற்பத் தொன்பது) புலவர்களும் தொழுது வணங்க (முன்பு ஏறு) முன் ஏறி வீற்றிருந்தவனும், முததி தரும் ப்ரபுவும் ஆகிய முருகன்

6. (முது) பழமையான காட்டு (எயினர்) வேடர்கள் (பண்டு) முன்பு (ஓட) அஞ்சி ஓட, (அயிற்சுணை) வேலாயுதப் படையை (முனிந்தே) கோபித்து (தொடுத்த) செலுத்தின (சிறுவன்) இளையோன் —

7. (சிந்தாகுலத்தை) மன வருத்தங்களை (அடர்) தாக்கி ஒழிக்கும் கந்தபிரானே என்று போற்றித் தொழுகின்ற (சித்தர்க்கு) உள்ளம் உடையவர்களிடத்தே (இரங்கும்) மன மிரங்கிக் கருணைபுரியும் ஆறுமுகப்பிரான்

8. மிகவும் வெற்றியே விளங்கும் செவ்வேள், பரிசுத்த மூர்த்தி, (நளினத்தன்) தாமரையில் வீற்றிருக்கும் பிரமனது (முடி) தலையில் (குற்றி) இடித்துப் புடைத்தவனாகிய குக மூர்த்தியின் அழகிய கொடியாகிய சேவல்தான் அது.

(க-உ.) உருத்திர சன்மனாய் சங்கப்பலகையில் ஏறின வன், வேடருடன் போர் புரிந்தவன், பக்தர்க்கு அருள் புரிபவன், பிரமனைக் குட்டினவன் ஆகிய முருகனது கொடி யாகிய சேவல், மகா பூதங்களும் அஞ்சும்படி வெருட்டி ஓட்டிவிட்டு முருகனைப் பார்த்து அன்புடன் கூவும்.

(கு-உ.) (3) அதிகாசம்=பெருநகை. (5) ஆகமம்=கல்வி. முருகவேள் சங்கப் பலகையில் ஏறி வீற்றிருந்தது—திருப். 350, பக்கம் 378 கீழ்க்குறிப்பு.

(6) வேடரொடு பொருதது – திருப்புகழ் 341, பக்கம் 354 கீழ்க்குறிப்பு.

(8) பிரமன் முடியிற் புடைத்தது — திருப்புகழ் 608, பக்கம் 406 கீழ்க்குறிப்பு.

## 9

[1] உருவாய் எவர்க்குநினை வரிதாய் அனைத்துலகும்
உளதாய் உயிர்க் குயிரதாய்

[2]உணர்வாய் விரிப்பரிய உரைதேர் பரப்பிரம
ஒளியாய் அருட்பொருளதாய்
[3]வருமீச னைக்களப முகனு தரித்திசையை
வலமாய் மதிக்க வருமுன்
[4]வளர்முருகனைக்கொண்டு தரணிவலம் வந்தான்முன்
வைகுமயி லைப்புகழுமாம்
[5]குருமா மணித்திரள் கொழிக்கும் புனற்கடக்
குன்றுதோ ருடல்பழனம்
[6]குலவுபழ முதிர்சோலை ஆவினன் குடிபரங்
குன்றிடம் திருவேரகம்
[7]திரையாழி [முத்தை]த் தரங்கக்[கை] சிந்தித்
தெறித்திடுஞ் செந்தி னகர்வாழ்
[8]திடமுடைய (அடியர்தொழு)பழையவன் (குல)வுற்ற
சேவற் றிருத் துவசமே.

(பொ-உ.) (1) உருவுடையதாய், எவர்க்கும் நினைக்க அரியதாய், எல்லா உலகிலும் நிலைபெற் றிருப்பதாய், உயிர்க் குயிராய் நிற்பதாய்

2. (உணர்வாய்) அறிவாய், விரித்துப் பேசுதற்கு அரியதான (உரை) வேத மொழிகள் (தேர்) ஆயும் பரப்பிரம ஒளியாய் (ஜோதியாய்) அருள்பாலிக்கும் (பொருளதாய்) கடவுளாய்

3. விளங்கிவரும் ஈசனிடம் (களபமுகன்)யானைமுகத்தை உடைய விநாயகமூர்த்தி (ஆதரித்து திசையை) அன்பு பூண்டு எண்டிசைகளையும் வலம் வந்து (மதிக்க வருமுன்) யாவரும் மதித்துப் பாராட்டுதற்கு வாயெடுக்கு முன்பாகவே —

4. விளங்கும் முருகவேளைத் (தன் முதுகின்மேற்) கொண்டு வந்து பூமியை வலம் வந்த அந்தப் பெருமானது முன்னிலையில் (வைகும்) இருக்கும், மயிலைப் புகழுமாம்; அது எது என்றால் —

5. (குரு) நிறமுள்ள, (மா) சிறந்த ரத்னத் திரள்களைத் கொழித்து (தள்ளி)ச் செல்லும் (புனல்) அருவிகளையும் (கடம்) காட்டையும் கொண்ட (குன்றுதோருடல்) பல மலைகளிலும், (பழமை) வயல்கள்

6. (குலவு) விளங்கும் (பழமுதிர்சோலை) சோலைமலை, திரு ஆவினன்குடி, திருப்பரங்குன்றத்தலம், (திரு ஏரகம்) சுவாமிமலை

7. (திரை ஆழி) அலைகடல் முத்துக்களைத் (தரங்கக் கை) தனது அலைகளாம் கைகளால் சிதறி வீசும் திருச்செந்தூரிலும் வாழ்கின்றவனும்

8. (திடம் உடைய) திட பக்தியை உடைய அடியார்கள் தொழுகின்ற பழம் பொருளாகிய முருகவேளிடத்தில் (குலவுற்ற) விளங்கும் அழகிய கொடியாகிய சேவல்தான் அது:

(க-உ.) ஆறு திருப்பதிகளிலும் வாழும் முருகவேளின் கொடியாகிய சேவலானது (விநாயகர் ஈசனை வலம்வந்து மதிக்கப்படும் நேரத்துள் உலகெலாம்) வலம் வந்த மயிலைப் புகழ்ந்து கொண்டாடும்.

(கு-உ,) (3-4) களபம் — யானை. கணபதி கலங்கிப் பிளிற மயில் உலகை வலம் வந்த வேகத்தைத் திருப்புகழ் — 1098, பக்கம் 215 கீழ்க் குறிப்பிற் காண்க.

(7) திருச்செந்தூரில் கடல் முத்தை வீசுவதை — திருப்புகழ் 17, 63 பார்க்க.

## 10

[1]மகரசல நிதிசுவற உரகபதி முடிபதற
மலைகள்கிடு கிடுகிடெனவே

[2]மகுடகுட வடசிகரி முகடுபட படபடென
மதகரிகள் உயிர்சிதறவே

[3]ககனமுதல் அண்டங்கள் கண்டதுண் டப்படக்
கர்ச்சித் திரைத்தலறியே

[4]காரையா ழிந்நகரர் மாரைப் பிளந்துசிற
கைக்கொட்டி நின்ருடுமாம்

[5]சுகவிமலை அமலைபரை இமையவரை தருகுமரி
துடியிடைய னங்கையசலையாள்

[6]சுதன் முருகன் மதுரமொழி (உமைவநிதை)
இபவநிதை துணைவனென திதயநிலையோன்

[7]திகுடதிகு டதிதிகுட தகுடதித குடதிகுட
செக்கண செகக்கணஎனத்
[8]திருநடனம் இடுமயிலில் வருகுமர குருபரன்
சேவற் றிருத் துவசமே.

(பொ-உ.) (1) மகர மீன்கள் நிறைந்த (சலநிதி) கடல் சுவறவும், (உரகபதி) பாம்பாகிய ஆதிசேடனது தலைகள் (பதற) நடுங்கவும், மலைகள் கிடுகிடு கிடென்று அசைவு உறவும்,

2. (மகுடம்) சிகரங்களை உடையதும் (குடம்) திரட்சை உடையதுமான (வட சிகரி) மேருமலையின் (முகடு) உச்சி படபடபட என்று கலக்கமுறவும், மதயானைகளின் உயிர்கள் சிதறவும்,

3. (ககனம்) சுவர்க்கமாதிய அண்டங்கள் (கண்ட துண்டப்பட) சின்னபின்னமாக — பல துண்டங்களாகவும் (கர்ச்சித்து இரைத்து அலறியே) பேரிரைச்சலிட்டு

4. (காரை ஆழி நகரர்) கடலாற் சூழப்பட்ட (காரை நகரர்) (இலங்கைத் தீவில் உள்ள) காரை நகர் ஆதிய இடங்களில் இருந்தவர்களும் (ராவணனுடைய) இனத்தவருமான அசுரர்களின் மார்பைப் பிளந்திட்டுத் தனது சிறகை அடித்து நின்று ஆடுமாம்; அது எது என்றால் —

5. சுக சொரூப விமலை, அமலை, பராசத்தி, இமவான் ஈன்ற குமாரி, துடிபோன்ற இடையை உடைய (அனகை) பாபமற்றவள், (அசலையாள்) மலையாள் ஆதிய தேவியின்

6. குமாரன், முருகன், இனிமையான பேச்சை உடைய (உழைவனிதை) மான் மகள் வள்ளி, (இப வனிதை) யானை வளர்த்த தேவசேனை இவர்தம் (துணைவன்) கணவன், (என்னுடைய இதயத்தில்) உள்ளத்தில் நிலைபெற்றிருப்பவன்

7. திகுடதிகு டதிதிகுட ......... என்ற ஒலிகளுடன்

8. அழகிய நடனத்தைச் செய்கின்ற மயில்மீது வரும் குமர குருபர மூர்த்தியின் அழகிய கொடியாக விளங்கும் சேவல்தான் அது.

(க-உ.) பார்வதியின் குமாரனும், வள்ளி, தேவசேனையின் கணவனும், நட்டமாடும் மயில்மீது வரும் குமாரனு

மாகிய முருகனது கொடியாகிய சேவலானது கடல் அலற, ஆதிசேடனது முடிகள் நடுக்குற, மலைகள் கிடுகிடு என, யானைகளின் உயிர்கள் சிதற, அண்டங்கள் சிதறுண்ண சிறகைக் கொட்டி ஆடும்.

(கு-உ.) (1-4) சேவலின் ஆற்றல் கூறப்பட்டது - கந்தர் அலங்காரத்தில் "படைபட்ட வேலவன்" (12) என்னும் செய்யுளைப் பார்க்க.

4 – (1) காரை நகர் — இலங்கையில் யாழ்ப்பாணத்துக்கு அருகில் உள்ள ஒரு ஊர். காரை நகரர் – இலங்கை யரசனும் ராவணனுடைய வழிவந்த அசுரர்களைக் குறிக்கும். அசுரர்கள் இடர் செய்பவர்கள் — "ஏழ்கடல் சூழ் இலங்கை அரையன் தனொடும் இடரான வந்து நலியா"—சம்பந்தர் 2-85-8 என வருவதையும் காண்க.

(2) மார்=மார்பு. "இப்பாதகன் மாரின் எய்வன்" — கம்பராமாயணம் - ராவணன் வதை 192.

## 11

[1]பூவிலயன் வாசவன் முராரிமுநி வோரமரர்
பூசனைசெய் வோர்மகிழவே
[2]பூதரமும் எழுகடலும் ஆட அமு தூற அநு
போகபதி ஞாலுலகமும்
[3]தாவுபுகழ் மீறிட நிசாசரர்கள் மாளவரு
தானதவ நூல்தழையவே
[4]தாள்வலிய தான(பல பேய்கள் அஞ்சச்)சிறகு
கொட்டிக் குரற்பயிலுமாம்
[5]காவுகனி வாழைபுளி மாவொடுயர் தாழைகமு
காடவிகள் பரவுநடனக்
[6]காரணமெய்ஞ் ஞானபரி சீரணவ ராசனக்
கனகமயில் வாகனனடற்
[7]சேவகன் இராசத (இலக்கண உமைக்கொரு)
சிகாமணி சரோருகமுகச்
[8]சீதள குமாரகிரு பாகர மனோகரன்
சேவற் திருத் துவசமே.

## 11

(பொ-உ.) (1) (பூவில் அயன்) தாமரைப் பூவில் வாசம் கொள்ளும் பிரமன், (வாசவன்) இந்திரன், (முராரி) முராரி என்னும் அசுரனுக்குப் பகைவனும் திருமால், முநிவோர்கள், (அமரர்) தேவர்கள், (பூசனை செய்வோர்) பூசை செய்யும் அடியார்கள் ஆகியோர் மகிழ்ச்சி கொள்ளவும்,

2. மலைகளும், ஏழு கடல்களும் ஆடவும், (அமுதூற) இன்பமுற, (அனுபோக பதினாலுலகமும்) அனுபவித்து வாழும் பதினாலுலகங்களிலும் —

3. பரவும் புகழ் மேம்படவும், அசுரர்கள் இறக்கவும், பெருகி எழும் தானதவ (அற நூல்கள்) செழிக்கவும்

4. (தாள்) முயற்சி வலியதான — பல பேய்கள் அஞ்ச வும், சிறகுகளை அடித்துக் குரல் எடுத்துக் கூவுமாம்; அது எது என்றால்

5. (காவு) சோலைகளிலும், (கனிவாழை) கனிதரும் வாழைமரம், புளியமரம், மாமரம் இவைகளுடன் உயர்ந்து வளரும் (தாழை) தென்னை, (கமுகு) பாக்கு மரம் இவைகளைக் கொண்ட (அடவி) காடுகளிலும், பரவிச் செய்கின்ற நடனத்தை உடையதும்

6. (காரண மெய்ஞ்ஞானபரி) முருகவேள் ஆட்கொண்ட காரணத்தால் மெய்ஞ்ஞானத்தை அடைந்ததான (பரி) வாகனமாம் (சீர் அணவு) புகழ் அடைந்துள்ளதும், (அர அசனம்) பாம்பை உண்வாக உடையதுமான பொன்மயிலை வாகனமாகக் கொண்டவன், (அடல்) வலிமை உடைய

7. (சேவகன்) பராக்ரமசாலி, (இராசத இலக்கண உமைக்கு ஒரு) ராஜதலக்ஷணம் நிறைந்தவளான (உமைக்கு) பார்வதிக்கு ஒப்பற்ற சிரோரத்னம் போன்றவன், (சரோருக முக) தாமரைபோன்ற திருமுகத்தை உடைய

8. தண்மை வாய்ந்த குமார கிருபாகர மனோகரன் அழகு வாய்ந்தவன் ஆகிய முருகவேளின் அழகிய கொடி யாகிய சேவல்தான் அது.

(க-உ.) முருகவேளின் சேவல் — தேவர்கள் மகிழ, அறந் தழையக் குரல் காட்டும்.

(கு-உ.) (7) "ராஜத லக்ஷண லக்ஷ்மி" — என்றார் உமையை. திருப்புகழ் 197 பார்க்க.

—:o:—

உ

# பதினோராந் திருமுறை

## பொருளடக்கம்

—:o:—


| | நூல் | பாட்டு எண் |
|---|---|---|
| 1. | திருமுருகாற்றுப்படை | 1 |
| 2. | பரிபாடல் | 2–8 |
| 3. | குறுந்தொகை | 9 |
| 4. | கல்லாடம் | 10 |
| 5. | சிலப்பதிகாரம் | 11–14 |
| 6. | இரும்பல் காஞ்சி | 15 |
| 7. | தொல்காப்பிய உரை | 16 |
| 8. | திருமந்திரம் | 17-19 |
| 9. | திருவிசைப்பா | 20–30 |
| 10. | யாப்பருங்கல விருத்தி | 31 |
| 11. | கந்தபுராணம் | 32–69 |
| 12. | உபதேசகாண்டம் (கோனேரி) | 70 |
| 13. | ஷ (ஞானவரோதய) | 71 |
| 14. | கந்தபுராணச்சுருக்கம் | 72–73 |
| 15. | பரங்கிரிப் புராணம் | 74–80 |
| 16. | செந்தூர்ப் புராணம் | 81–83 |
| 17. | பழநிப் புராணம் | 84-95 |
| 18. | திரு ஏரகப் புராணம் | 96–97 |
| 19. | (1) தணிகைப் புராணம் | 98–104 |
| | (2) தணிகாசலப் புராணம் | 105 |
| | (3) மயூரகிரிப்புராணம் | 106 |
| 20. | திருவிளையாடற் புராணம் | 107 |
| 21. | திருக்கூவப் புராணம் | 108 |
| 22. | காஞ்சிப் புராணம் | 109 |
| 23. | திருவாதவூரர் புராணம் | 110 |
| 24. | திருவிரிஞ்சைப்புராணம் | 111 |
| 25. | சேக்கிழார் புராணம் | 112 |
| 26. | நல்லாப்பிள்ளை பாரதம் | 113 |
| 27. | சைவ சமய நெறி | 114 |
| 28. | தாயுமானவர் பாடல் | 115 |
| 29. | திருச்செந்தூர் நிரோட்டக யமக அந்தாதி | 116 |
| 30. | கந்தர் கலிவெண்பா | 117 |
| 31. | செந்திற்கலம்பகம் | 118-120 |
| 32. | முத்துக்குமாரசுவாமி திரு அருட்பா | 121, 122 |
| 33. | திருச்செந்தூர் அகவல் | 123 |
| 34. | போரூர்ச் சந்நிதிமுறை | 124-129 |
| 35. | இலஞ்சி உலா | 130 |
| 36. | தணிகைப் பதிற்றுப்பத் தந்தாதி | 131–133 |
| 37. | தணிகை ஆற்றுப்படை | 134 |
| 38. | தணிகைத் திரு விருத்தம் | 135–136 |
| 39. | தணிகாசல அநுபூதி | 137 |
| 40. | தணிகைச் சந்நிதிமுறை | 138–140 |
| 41. | தணிகை உலா | 141 |
| 42. | பிள்ளைத் தமிழ்கள் | 142–168 |
| 43. | தனிப் பாடல்கள் | 169–170 |
| 44. | வாழ்த்து | 171 |

உ

வேலு மயிலுந் துணை.



# பதினோராந் திருமுறை

சைவத் திருமுறைகளுட் பதினோராந் திருமுறைபோல — முருகவேளின் சிறந்த அடியார்கள் அருளிய பாடல்கள் இப் பதினோராம் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள. விரிவஞ்சி, சிலவற்றின் பகுதிகளே ஆளப்பட்டும், பல விடப்பட்டுர், பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் இருந்த பெரியோர்களின் பாடல்களொடு நிறுத்தப்பட்டும் - ஒருவாறு தொகுக்கப்பட்டதாகும் இப் பதினோராம் திருமுறை. பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், பின்னரும் வாழ்ந்த பெரியோர்களின் பாடல்கள் உரிய காலத்தில் 11-ஆம் திருமுறையின் இரண்டாம் பகுதியாக இணைக்கலாம். குறைகள் பலவற்றையும் எம்பெருமானும், எம்பெருமானுடைய அடியார்களும் பொறுத்தருள வேண்டும்.

—: o :—

கந்தரந்தாதி 51-ஆம் பாடலிலும், திருப்புகழ் 91, 203, 1191, 1278 எண்களுள்ள பாடல்களிலும் அருணகிரிநாத ஸ்வாமிகளாற் பாராட்டப்பட்டுள்ள

நக்கீர தேவர்

திருவாய்மலர்ந்தருளிய

# 1. திருமுருகாற்றுப்படை

—: o :—

## 1. திருப்பரங்குன்றம்

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு

ஒவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
5. செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை

மறுவில் கற்பின் வாணுதல் கணவன் ;
கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்
10. திருள்படப் பொதுளிய பராரை மராஅத்து

உருள்பூந் தண்டார் புரளு மார்பினன் ;
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
15. கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்

பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
20. துணையோர் ஆய்ந்த இணையீ ரோதிச்

செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
25. மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்

துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
30. இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக

வண்காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண்பூண் ஆகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
35. குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்

---

2, 3 : "காலை இருள் சீக்கும் காய்கதிர்போல் – சோலை மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற் சூர் வென்றோன்" — இரும்பல் காஞ்சி.

வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
*கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
40. சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச்

சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியும் அறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்;
45. பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்

சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
50. பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட்

டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்டொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
55. வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா

நிணந்தின் வாயள் துணங்கை தூங்க
இருபேர் உருவின் ஒருபே ரியாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
60. மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்

தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
65. நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப

இன்னே பெறுதிநீ முன்னிய வினையே;
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
70. றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து

---

* 'சேவலங் கொடியோன் காப்ப, ஏம வைகல் எய்தின்றால் உலகே' — குறுந்தொகை-கடவுள் வாழ்த்து.

மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
75. கண்போன் மலர்ந்த காமர் சுனைமலர்
அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலும் உரியன்; அதா அன்று—

## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
80. படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக்
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
85. மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
90. மனனேர் பெழுதரு வாணிற முகனே;
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம்; ஒருமுகம்
ஆர்வல ரேத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத்தன் றே; ஒருமுகம்
95. மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை யேமுற நாடித்
திங்கள்போலத் திசைவிளக் கும்மே; ஒருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
100. கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே; ஒருமுகங்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே; யாங்கம்
மூவிரு முகனும் முறைநவின் றொழுகலின்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
105. செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு

வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபின் ஐயர்க் கேந்திய தொருகை;
உக்கஞ் சேர்த்திய தொருகை;
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய தொருகை;
110. அங்குசங் கடாவ வொருகை; யிருகை

ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப; ஒருகை
மார்பொடு விளங்க; ஒருகை
தாரொடு பொலிய; ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப; ஒருகை
115. பாடின படுமணி யிரட்ட; ஒருகை

நீனிற விசும்பின் மலிதுளி பொழிய; ஒருகை
வானர மகளிர்க்கு வதுவைசூட்ட; ஆங்கப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி
அந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
120. வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல

உரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்
125. அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே; அதா அன்று—

## 3. திருவாவினன்குடி

சீரை தைஇய வுடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்,
மாசற விமைக்கு முருவினர், மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பின்
130. என்பெழுந் தியங்கு மியாக்கையர், நன்பகற்

பலவுடன் கழிந்த வுண்டியர், இகலொடு
செற்ற நீக்கிய மனத்தினர், யாவதுங்
கற்றோ ரறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர், காமமொடு
135. கடுஞ்சினங் கடிந்த காட்சியர், இடும்பை

யாவது மறியா இயல்பினர், மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்,
புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
140. செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்

நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர், மாவின்
அவிர்தளிர் புரையு மேனியர், அவிர்தொறும்
145. பொன்னுரை கடுக்குந் திதலையர், இன்னகைப்

பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
150. பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்

புள்ளணி நீள்கொடிச் செல்வனும், வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்,
155. நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்

வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பின் எழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
எருத்த மேறிய திருக்கிளர் செல்வனும்,
160. நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய

உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவருந் தலைவ ராக
ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
165. நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்

பகலிற் றோன்றும் இகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரோ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்,
மீன்பூத் தன்ன தோன்றலர், மீன்சேர்பு
170. வளிகிளர்ந் தன்ன செலவினர், வளியிடைத்

தீயெழுந் தன்ன திறலினர், தீப்பட
உருமிடித் தன்ன குரலினர், விழுமிய
உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
175. தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவினன்குடி யசைதலும் உரியன்; அதா அன்று,

## 4. திருவேரகம்

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
180. டாறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
185. உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலும் உரியன்; அதா அன்று

## 5. குன்றுதோருடல்

190. பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
195. நீடமை விளைந்த தேக்கட் டேறற்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர
விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
200. இணைத்த கோதை யணைத்த கூந்தன்
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்குல் திளைப்ப வுடீஇ
205. மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு
செய்யன், சிவந்த ஆடையன், செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்,
கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்,
குழலன், கோட்டன், குறும்பல் லியத்தன்,

210. தகரன், மஞ்ஞையன், புகரில் சேவலங்
கொடியன், நெடியன், தொடியணி தோளன்,
நரம்பார்த் தன்ன இன்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்,
215. முழவுறழ் தடைக்கையின் இயல ஏந்தி
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே; அதாஅன்று

## 6. பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
220. ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
225. சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பி யைதுரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
230. முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
235. சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னனனகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
240. இமிழிசை யருவியோ டின்னியங் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனகர்

245. ஆடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலு மறிந்த வாறே
250. ஆண்டாண் டாயினு மாகக் காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமயத்து நீலப் பைஞ்சுனை
ஐவரு ளொருவ னங்கை யேற்ப
255. அறுவர் பயந்த ஆறமர் செல்வ!
ஆல்கெழு கடவுட் புதல்வ! மால்வரை
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி!
260. வானோர் வணங்குவிற் றானைத் தலைவ!
மாலை மார்ப! நூலறி புலவ!
செருவி லொருவ! பொருவிறன் மள்ள!
அந்தணர் வெறுக்கை! அறிந்தோர் சொன்மலை!
மங்கையர் கணவ! மைந்த ரேறே!
265. வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே!
அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக!
270. நசையினர்க் கார்த்து மிசைபே ராள!
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்!
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்!
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்!
275. சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி!
போர்மிகு பொருந! குரிசில் எனப்பல
யானறி யளவையின் ஏத்தியா னாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையின்
நின்னடி யுள்ளி வந்தன னின்னொடு
280. புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்

சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் தானே முதுவா யிரவலன்
285. வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றுன்வந் தெய்தி
அணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
290. மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி
அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
அன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகத் தோன்ற விழுமிய
295. பெறலரும் பரிசி னல்குமதி; பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
300. தண்கமழ் அலரிறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
305. முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
310. மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
315. டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

(கு-உ.) நச்சினார்க்கினியர் முதலிய பெரியோர்களின் உரை யிருப்பதால் உரை எழுதப்படவில்லை.

—:o:—

உ

குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர் தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் — என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் னுள்ளத் துறை. (1)

குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் — இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவு
மெய்விடா வீரன்கை வேல். (2)

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் — வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
தொளைத்தவே லுண்டே துணை. (3)

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்குங்
கொன்னவில்வேற் சூர் தடிந்த கொற்றவா — முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். (4)

உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன் — பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. (5)

அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்
[1]வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் — நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன். (6)

1 'வெஞ்சம ரந்தோன்றில் வேல் தோன்றும்' என்றும் பாடம்.

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே — யொருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான் (7)

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா — பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்கா யினி (8)

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதங்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு — சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே யணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். (9)

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினல் — முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த வெல்லாந் தரும். (10)

வேலு மயிலுந் துணை.

—: o :—

ஒருமுரு காஎன்றன் உள்ளங் குளிர உவந்துடனே
வருமுரு காஎன்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காஎன்று தான்புலம்பாநிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

— (தனிப் பாட்டு).

—: o :—

வீடு பெற்றான் ஒருவன், வீடுபெற விரும்பிய ஒருவனை முருகனிடத்தே ஆற்றுப்படுத்தப் பின்வருமாறு கூறுகின்றான் :—

| நூலின் அடிகளின் எண். | |
|---|---|
| 1: 1-3 | [1]பேரொளி வாய்ந்தவனும், [2]தம்மை உற் |
| 2: 4 | றவரைக் காப்பவனும், [3]செற்றவரை அழிப்பவ |
| 3: 5 | னும், [4]தேவசேனைக்கு நாயகனும், [5]கடப்ப |
| 4: 6 | மாலை யணிந்தவனும், [6]காந்தள் மாலையைச் |
| 5: 11 | சிரசிற் சூடினவனும் ஆகிய [7]செவ்வேற் சேயின் |
| 6. 44 | சேவடியைச் சிந்திக்கும் செவ்விய உள்ளத் |
| 7: 61-66 | துடன் செல்லும் செலவை நீ விரும்பினால், |
| | உன் நெஞ்சத்தில் விழைந்த இனிய வீடு |
| | பேறு என்னும் கதியைத் தப்பாமல் இப் |
| | பொழுதே பெறுவை, அங்ஙனம் நீ வீடு |
| | பேற்றைப் பெறுதற்கு அச் சேய் யாண்டுறையும் |
| 8: 71, 77 | என்னிற் கூறுகேன :—அச் சேய் [8]மதுரைமா |
| | நகர்க்கு மேற்கிலுள்ள திருப்பரங்குன்றத்தில் |
| | அமர்ந்துறைதலும் உண்டு; அதுவன்றிச் |
| 9: 124-125 | [9]சீரலைவாய்ச் சேறலாம் திருச்செந்தூரில் |
| 10: 176 | நிலைத்திருத்தலும் உண்டு; அதுவன்றித், [10]திரு |
| | ஆவினன்குடி (பழநி) யில் வீற்றிருத்தலும் |
| 11: 189 | உண்டு; [11]அதுவன்றித் திருவேரகம் (சுவாமி |
| | மலை) என்னும் தலத்தில் உறைதலும் உண்டு; |
| 12: 217 | அதுவன்றிக் [12]குன்றுகளில் எல்லாம் நின்று |
| 13. 220-226 | விளையாடுதலும் உண்டு; அதுவன்றி; [13]அவ் |
| | வத் தலங்களில் நடக்கும் திருவிழாக்களிலும், |
| | அடியார் துதித்து ஏத்தும் இடங்களிலும், |
| | வேலன் வெறியாடு களத்திலும், காட்டிலும், |
| | சோலையிலும், யாற்றிடைக் குறையிலும், |
| | நதிகளிலும், குளங்களிலும், பல தலங்களிலும், |
| | முச்சந்தி, நாற்சந்தி, ஐஞ்சந்திகளிலும், |
| | புது மலர்க் கடம்பிலும், ஊர்ப் பொது |
| | மரத்தடியிலும், அம்பலத்திலும், ஆ தீண்டு |
| | குற்றியை யுடைய இடத்திலும் விளங்கும் |
| 14. 238-245 | பெருமையும் வாய்ந்தவன், [14]திருநகர்த் திருக் |

கோயிலில் இனிய வாத்தியங்கள் ஒலிக்கப் பாடிப் போற்ற ஆண்டும் உறைதல் உரியன். இஃதெல்லாம் யான் அறிந்த படியே கூறினேன்,

15. 249-276 இனி, [15]யான் மேற்சொன்ன இடங்களிலேயாயினும், பிற இடங்களிலே யாயினும் நீ அச் சேயைக் கண்டபொழுது மலர்ந்த முகத்துடன் கையைத் தலைமேலே வைத்து,

" மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
பழையோள் குழவி! வெறுக்கை!
சொன்மலை! மைந்தர் ஏறே! புலவர்ஏறே!
சேயே! வேளே! இயவுளே! மதவலி!
புலமையோய்!,

எனக் கூறி எதிர்முகமாக ஏத்திப் பின்னர் அச் சேயின் திருவடி உன் தலையிலே உறும்படி தண்டனிட்டு வணங்கி,

' ஆறமர் செல்வ! கடவுட்புதல்வ! கொற்றவை சிறுவ! தானைத் தலைவ! மாலை மார்ப! நூலறி புலவ!' செருவி லொருவ! மங்கையர் கணவ! வேற் செல்வ! குறிஞ்சிக் கிழவ! இசை பேராள! மள்ள! முருக! பொருந!'

16. 277-280 என்று [16]யானறிந்து நினக்குக் கூறியவாறும் பின்னும் பலவாறுகவுங் கூறிப் புகழ்ந்து ' நின்னை அளந்து அறிதல் மன்னுயிர்க்கு அரிது. நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்து வந்தேன். நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை உடையோய்' என்று சொல்லி நீ கருதிய வீடுபேற்றினை நீ விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே,

17. 282-285 [17]அருகிற் சேவித்து நிற்பார் பலரும் அச் சேயை நோக்கிப் ' பெரும! நினது வளவிய புகழை வாழ்த்தி வத்துள்ளான்; இவன் உனது திருவருளைப் பெறத் தக்கவன்' எனக் கூறுவர்.

18. 317 அது கேட்டுப் [18]பழமுதிர்சோலை மலை கிழவனுங் குரிசிலும் உன்மீது கருணைவைத்து,

19. 290 [19]தெய்வ மணங் கமழுந் தமது இளைய வடிவைக் காட்டி

20. 291 [20]" நீ வீடுபெற நினைத்து வந்த வரவை யான் முன்னரே அறிவேன். அது எய்துதல் அரிது என்று அஞ்சற்க" என அன்புடன் திருவாய் மலர்ந்து கூறிப்

21. 265 [21]பிறராற் பெறுதற்கரிய வீடுபேற்றைத் தந்தருளுவர்.

—:o:—

# 2. பரிபாடற் பகுதிகள்

—: o :—

குறிப்பு : *5, 8, 9, 14, 17, 18, 19, 21* — எண்ணுள்ள பாடல்கள் செவ்வேளுக்கு உரியன. தோத்திர பாகங்கள் மாத்திரமே இங்கு குறிக்கப் பட்டுள. முழுப்பாடல்களை பரிபாடல் நூலிற் காண்க.

—: o :—

## 5

**1-2-4.** பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப் புக்குச்
சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கி ........
நோயுடை நுடங்கு சூர் மாமுதல் தடிந்து ........

**9 - 13.** குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை
மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள் ........

**71-81.** நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
மன்குணம் உடையோர் மாதவர் வணங்கியோர் அல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சினநீடி னோரும்
சேரா அறத்துச் சீரிலோரும்
அழிதவப் படிவத் தயரியோரும்
மறுபிறப் பில்லெனும் மடவோருஞ் சேரார்
நின்னிழல்; அன்னோ ரல்ல தின்னோர்
சேர்வா ராதலின் யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே. (2)

— (கடுவன்இள வெயினனார் பாட்டு).

(சு—உ.) பரிமேலழகர் உரையைத் தழுவியது:

கடல் துகள்படப்புக்கு, உனக்குஉரிய பிணிமுகம் என்னும் யானைமீதேறி, சூரனைச் சங்கரித்து, கிரௌஞ்ச மலையைப்

பொடி செய்து வழிகண்ட ஆறுமுகத்து அண்ணலே! பன்னிரு கையனே! சூரியனது அழகிய ஒளியுடன் தாமரையில் தோன்றியவனே! (காயும்) அழிக்கும் சிவனது சேயே (குழந்தையே)! செந்நிறச் செவ்வேளே! நின்னைக் கடவுளாகப் போற்றி அறவழியில் நிற்பவரும், வீடுபெறுங் குணமுடைய மாதவர்களால் வணங்கப்பட்டவரும் நின் நிழலைச் சேர்வர்; சினத்தை உடையவரும், அறநெறியில் நில்லாதவரும், தவ ஒழுக்கம் கெட்டவரும், மறு பிறப்பு இல்லை என்னும் அறிவிலிகளும் நின் தாள் நிழலை அடையமாட்டார்கள். ஆதலால், "நின்னை யாம் இரப்பவை — நுகரப்படும் பொருள்களும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டானும் நுகரும் நுகர்ச்சியும் அல்ல; எமக்கு வீடு பயக்கும் நின் அருளும், அதனை உண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும், அவ்விரண்டானும் வரும் அறனுமாகிய இம் மூன்றுமே (யாம் இரப்பவை)".

## 8

மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
[1]புண்மிசைக் கொடியோனும் [2]புங்கவம்ஊர்வோனும்
மலர்மிசை முதல்வனும் மற்றவன் இடைத்தோன்றி
உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும்
5. மருந்துரை யிருவரும் திருந்து நூல் எண்மரும்

ஆதிரை முதல்வனிற் கிளந்த
[3]நாதர்பன் னொருவரும் நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரும் அமரரும் அவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
10. பற்று கின்றுநின் காரணமாகப்

பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை
மின்னீன்ற விளங்கிணை ரூழா

---

1 புண்மிசைக் கொடியோன் — திருமால்.
2 புங்கவம் — ஏறு. 3 நாதர் — உருத்திரர்.

15. ஒருநிலைப் பொய்கையோ டொக்கும் நின்குன்றின்
அருவிதாழ் மாலைச் சுனை

* * * * *

125. உடம்புணர் காதலரும் அல்லாருங் கூடி
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோள், தந்த
நெறிநீ ரருவி யசும்புறு செல்வம்
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுக, மா
130. தண்பரங் குன்றம் நினக்கு. (3)

— (ஆசிரியர் நல்லந்துவனுர் பாட்டு).

அடி 4–7: ஆதித்தர் முதலாக உருத்திரர் ஈருக முப்பத்து மூவரையும் கூறினுர். ஆதித்தர் 10+2 – பன்னிருவர்: மருத்துவர்-இருவர் (அசுவினி தேவர்கள், வசுக்கள் எண்மர்) நாதர் – உருத்திரர் பதினெருவர்.

அடி 7: இந்திரன் முதலிய திசை காப்பாளர் எண்மர்.

அடி 9: விழுத்தவ முதல்வர் — முனிவர்கள்.

அடி 10-11: ‘ நின்னைக் காண்டல் காரணமாக மண்மிசை வந்து உறையும் இடமாகா நின்றது; ஆதலாற் பரங்குன்று அவர் பழைய இடமாகிய இமயக் குன்றத்தை ஒக்கும் ”.

அடி 12-16: “ அவ் விமயக் குன்றின்கண் சிறப்பெய்தி நின்னை யீன்ற தாமரையினது மின்போலும் இணர் உதிராத வற்ருப் பொய்கை ஒக்கும் நினது குன்றின் அருவி தங்கும் ஒழுங்குபட்ட சுனை ”.

அடி 125-130: “ பரங்குன்றமே! தம்முட் பிரியாத மகளிரும் மைந்தரும், அல்லாத வரம் வேண்டுவோரும் கூடி மறுமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த (சிவபிரானுக்கு உமையாள் தந்த) கடம்பமர் செல்வன் கடி நகரை வழிபட ... மண் வருந்த மழை வறந்ததாயினும் நெறிநீர் அருவி அகம்பு மிகுஞ் செல்வம் நினக்கு மன்னுவதாக ”. ‘ மா ’ வியங் கோளசைச் சொல். முருகற்கு இடமாகிய பரங்குன்றை வருணித்த முகத்தால் எதிர்முகமாக்கியும் படர்க்கையாக்கியும் அவனையே வாழ்த்தி முடித்தமையிற் கடவுள் வாழ்த்தாயிற்று.

9

81-85. கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர !
வாழ்த்தினேம் பரவுதும் தாழ்த்துத்தலை நினையா
நயத்தலிற் சிறந்தஎம் அடியுறை
பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே. (4)
—(குன்றம் பூதனார் பாட்டு).

கற்புப் பொருந்திய நெறியை யுடைய தேவியரது அன்பு பொருந்திய அவ்வூடலுரிமையை நயத்தற் கேற்ற பண்பினை உடைய குமர ! யாம் நின்னை வணங்கி வாழ்த்தி வேண்டிக் கொள்ளா நின்றேம் ; அன்பாற் சிறந்த எம் அடிக்கணுறைவு நாடோறும் பொலிந்து பயன்தருதலொடு சிறக்க என்று.

14

18-32. சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே !
கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையில் நறும்புகை நனியமர்ந் தோயே !
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே !
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே !
பிறந்த ஞான்றே நின்னை உட்கிச்
சிறந்தோர் அஞ்சிய சீருடை யோயே !
இருபிறப் பிருபெயர் ஈர நெஞ்சத்
தொருபெயர் அந்தணர் அறனமர்ந் தோயே
அன்னை யாகலின் அமர்ந்தியாம் நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்
இன்னும் இன்னும் அவை யாகுக
தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே. (5)
—(கேசவனார் பாட்டு).

சூரைக் கிளையொ டறுத்த வேல ! கார் காலத்து வெண் மேகம் கிளர்ந்தாலன்ன நறிய அகில் முதலியவற்றால்

புகைத்த நறும் புகையை மிக விரும்பினேய்! ஆறு முகத்தை யும் ஆறிரு தோளையும் உடையையாய், அழகாற் பிற மகளிரை வென்ற வெற்றியை உடைய வள்ளியது நலத்தை நயந்தோய்! மகளிர் யாழை யெழுவி நின்னைப் பாடுகின்ற பாட்டை விரும்பினேய்! இந்திரன் முதலிய தேவர்கள் (அஞ்சின (சிறப்பினை உடையோய்!) இரண்டு பிறப்பினையும், அப் பிறப்பான் வந்த இரண்டு நாமத்தினையும், ஈர நெஞ்சத்தினை யும், ஒப்பிலாத புகழினையுமுடைய அந்தணரது வைதிக அறத்தைப் பொருந்திலேய்! நின்னை யாங்கள் மேவி அடுத் தடுத்து வழிபடுவதன் பயம், இன்னும் இன்னும் நின் புக ழினும் பலவாக அவ் வழிபாடுகள் தாமே யாகுக.

## 17

48–53. மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!
பணியொரீஇ நின்புகழ் ஏத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதும் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்
ஏம வைகல் பெறுகயாம் எனவே. (6)

— (நல்லழிசியார் பாட்டு).

மணி நிற மஞ்ஞையினையும், உயர்ந்த கோழிக்கொடி யினையும், பிணிமுகம் (என்னும் யானையை) ஊர்ந்து செய்யப் பட்ட வெல்போரையும் உடைய தலைவ! மக்கள் மாட்டுப் பணிமொழியை ஒழிந்து, நின் புகழை ஏத்தி பிறவித் துன்பம் சாராத வைகலைப் பெறுக என்று, யாமும் எம் சுற்றமும் வேண்டிக் கொள்ளா நின்றேம்.

(மக்களைப் பணிந்தொழுகாமல் ... நின் பரங்குன்றத்தை பாடுவோம், தொழுவோம்).

## 18

51-56. புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து
சுருதியும் பூவும் சுடருங் கூடி
எரியுரு வகிலோ டாரமுங் கமழும்
செருவேற் றானைச் செல்வநின் னடியுறை
உரிதினி னுறைபதிச் சேர்ந்தாங்குப்
பிரியா திருக்களஞ் சுற்றமோ டுடனே. (7)

— (குன்றம் பூதனர் பாட்டு)

செருவேற் றானைச் செல்வ ! நின் பூசைக்கண் புரிதலுற்ற நரம்பினது ஒலியும், புலவர் பாடிய இயற் பாட்டுக்களும் பொருந்தி வேத ஒலியும், உபசாரமாகிய பூவும் தீபமும் கூடி, எரியின்கண் உருகும் அகிலும், சந்தனமும் தூபமாய்க் கமழா நிற்கும் நின் அடியின்கண் உறைதலை எமக்கு உரித்தாக — உறையும் பதியைச் சேர்ந்தாற்போல எம் சுற்றத்தோடு கூடி யாம் பிரியாதிருப்பேமாக.

## 19

95-105. குறப்பிணுக் கொடியைக் கூடியோய்வாழ்த்துச்
சிறப்புணுக் கேட்டி செவி.
உடையும் ஒலியலும் செய்யை ! மற்றுங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவும் உருவத்தீ யொத்தி, முகனும்
விரிகதிர் முற்று விரிசுடர் ஒத்தி
எவ்வத் தொவ்வா மாமுதல் தடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவேல் அழுத்தி
அவ்வரை யுடைத்தோய் நீ, இவ்வரைமருங்கிற்
கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்
உடங்கமர் ஆயமோ டேத்தினம் தொழுதே.(8)

— (நப்பண்ணனார் பாட்டு).

குறப் பெண்ணாகிய வள்ளியை மணந்தோய் ! எம் வாழ்த்தினை நின் செவிக்குச் சிறப்புணவாகக் கேட்டல் வேண்டும். நின் ஆடையும் மாலையும் சிவந்த நிறம் உடையன ; அவ்வாறே, நின் வேற்படையும் பவழக்கொடியின் நிறத்தைக் கொள்ளும் ; நின் திருவுருவ நிறமும் எரிகின்ற தீயை ஒக்கும். திருமுகமும் இளஞ் சூரியனை நிகர்க்கும். உலகுக்குத் துன்பம் செய்த சூரனும் மாமரத்தை அட்டவனே ! பகையாய் நின்ற கிரவுஞ்ச மலைமீது வேலைச் செலுத்தி அம் மலையைப் பிளந்தவனே ! நீ இந்தப் பரங்குன்றத்தில் கடம்ப மரத்தின்கண் அமர்ந்துள்ள நல்ல நிலையை உடன் மேவிய சுற்றத்தாரோடு துதித்துத் தொழுது வாழ்த்தினேம். (எம் வாழ்த்து இது).

21

15–11. தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம்
குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வநிற் றொழுது;

66-70. மாறமர் அட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை
நன்றமர் ஆயமோ டொருங்குநின் னடியுறை
இன்றுபோல் இயைகெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வ! நிற் றொழுதே. (9)

—(நல்லச்சுதனார் பாட்டு).

தரையின்கண் நின்று விசும்பையுற ஓங்கியது பரங்குன்றம்; வென்றிக்கொடியை ஏந்திய செல்வனாகிய நின்னைத் தொழுது இக் குன்றத்து அடியின்கண் உறைதல் மறுபிறப்பினும் இயைக என்று பரவுகின்றேம். மாற்றாரை அமரின்கண் கொன்ற வீர வேலை உடையை; பன்னிரு தோளை உடையை; ஆறுதிருமுகங் களுடன் விளங்குவை; பகைவரை அழித்த செல்வ; உன்னைத் தொழுது, எமக்கு விரும்பின சுற்றந்தோடு கூடி நின் அடிக்கண் உறைதல் இன்றுபோல என்றும் இயைக என்று பரவு கின்றேம். (அருள்புரிவாயாக).

# 3. குறுந்தொகை

—: o :—

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே. (10)

—(பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது).

தாமரை மலரைப் போன்ற அழகிய செம்மையாகிய திருவடியையும், பவழத்தை ஒத்த சிவந்த நிறத்தையும்,

விளங்கா நின்ற ஒளியையும், குன்றிமணியை ஒக்கும் சிவந்த ஆடையையும், கிரவுஞ்ச மலையினது நடு இடம் பிளக்கும்படி வீசிய அழகிய ஒளியை உடைய நெடிய வேற்படையையும், கோழிச் சேவலை வரைந்த கொடியையும் உடைய முருகக் கடவுள் பாதுகாத்தருளுதலால் உலகத்தில் உள்ள உயிர்கள் இன்ப மயமாகிய நாட்களை அடையா நின்றன; ஆதலின் உலகுக்கு இடையூறில்லை - என்றவாறு.

— (டாக்டர் உ. வே. சுவாமிநாதையர் உரை):

## 4. கல்லாடம்

—:o:—

பாய்திரை உடுத்த ஞால முடிவென்ன
முடங்குளை முகத்துப் பஃறே ளவுணனொடு
மிடையுடு உதிரச் செங்களம் பொருது
ஞாட்பினுள் மறைந்து நடுவறு வரத்தால்
5. வடவை நெடு நாக்கின் கிளைகள்விரிந் தென்னச்
செந்துகிர் படரும் திரைக்கடற் புக்குக்
கிடந்தெரி வடவையில் தளிர்முகம் ஈன்று
திரையெறி மலைகளிற் கவடுபல போக்கிக்
கற்செறி பாசியிற் சினைக்குழை பொதுளி
10. அகல்திரைப் பரப்பிற் சடையசைந் தலையாது
கீழிணர் நின்ற மேற்பகை மாவின்
ஒருடல் இரண்டு கூறுபட விடுத்த
அழியாப் பேரளி உமைக்க ணின்று
தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த
15. அமையா வென்றி அரத்தநெடு வேலோய்!
கீழ்மேல் நின்றஅக் கொடுந் தொழிற் கொக்கின்
கூறிரண் டாய ஒருபங் கெழுந்து
மாயாப் பெருவரத் தொருமயி லாகிப்
புடவிவைத் தாற்றிய பஃறலைப் பாந்தள்
மண்சிறுக விரித்த மணிப்படந் தூக்கி
விழுங்கிய பல்கதிர் வாய்தொறும் உமிழ்ந்தென

மணிநிரை சிந்தி மண்புக அலைப்பக்
கார்விரிந் தோங்கிய மலைத்தலைக் கதிரென
ஓவறப் போகிய சிறைவிரி முதுகிற்
25. புவனங் காணப் புகழொடு பொலிந்தோய்!

போழ்படக் கிடந்த ஒருபங் கெழுந்து
மின்னன் மாண்ட கவிரலர் பூத்த
சென்னி வாரணக் கொடும்பகை யாகித்
தேவர்மெய் பனிப்புற வான்மிடை உடுத்திரள்
30. பொரியிற் கொறிப்பப் புரிந்த பொருள்நாடித்

தாமரை பழித்த கைம்மருங் கமைத்தோய்!
ஒருமையுள் ஒருங்கி இருகைநெய் வார்த்து
நாரதன் ஓம்பிய செந்தீக் கொடுத்த
திருகுபுரி கோட்டுத் தகர்வரு மதியோய்!
35. முலையென இரண்டு முரட்குவடு மரீஇக்

குழற்காடு சுமந்த யானைமகட் புணர்ந்தோய்!
செங்கட் குறவர் கருங்காட்டு வளர்த்த
பைங்கொடி வள்ளி படர்ந்தபுய மலையோய்!
இமயம் பூத்த சுனைமாண் தொட்டில்
40. அறிவிற் றங்கி அறுதாய் முலையுண்(டு)

உழல்மதில் சுட்ட தழல்நகைப் பெருமான்
வணங்கிநின் றேத்தக் குருமொழி வைத்தோய்!
ஓமெனும் எழுத்திற் பிரமம் பேசிய
நான்மறை விதியை நடுங்குசிறை வைத்துப்
45. படைப்புமுதல் மாய வான்முதற் கூடித்

தாதையும் இரப்பத் தளையது விடுத்தோய்!
கூடஞ் சுமந்த நெடுமுடி நேரி
விண்தடை யாது மண்புகப் புதைத்த
குறுமுநி தேற நெடுமறை விரித்தோய்!
50. ஆறுதிரு எழுத்தும் கூறுநிலை கண்டு

நின்ருட் புகழுநர் கண்ணுட் பொலிந்தோய்!
மணிக்கால் அறிஞர் பெருங்குடித் தோன்றி

இறையோன் பொருட்குப் பரணர் முதல்கேட்பப்
பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவனும்
55. பாய்பார் அறிய நீயே யாதலின்
வெட்சிமலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்
குழந்தை அன்பிெனொடு சென்னிதலைக் கொள்ளுதும்
அறிவுநிலை கூடாச் சின்மொழி கொண்டு
கடவுட் கூரு உலவா அருத்தியும்
60. சனனப் பீழையும் தள்ளாக் காமமும்
தற்படு துயரமும் அடைவுகெட் டிறத்தலும்
தென்புலக் கோமகன் தீத்தெறு தண்டமும்
நரகொடு துறக்கத் துழல்வரு பீழையும்
நீளா திம்பரின் முடித்து
65. மீளாக் காட்சி தருதியின் றெனவே. (11)

— (கல்லாடர் பாடினது).

1–3. பரந்த கடலினை உடுத்த (ஞாலம்) உலகத்தார் யுக முடிவு என்னுமாறு பல தோள்களை உடைய (முடங்கு உளை முகத்து அவுணனொடு) சிங்கமுகாசுரனுடனே (மிடை) ஆகாயத்தில் நெருங்கின, (உடுக்கணங்கள்) நக்ஷத்திரங்கள் உதிரும்படி போர்க்களத்திற் போர் செய்து,

4-6. (நடுவறு வரத்தால்) சாவாது பாதியில் அரசுரிமை அறுதற்குக் காரணமாகிய வரத்தால், (ஞாட்பினுள்) செருக்களத்தில் மறைந்து, வடவாமுகாக்கினியின நெடிய நாக்கின் கிளைகள் விரிந்தாற்போல, (செந்துகிர்) கண்ணுக்கினிய பவளம் படருதற்கிடமாகிய திரைக்கடலில் புகுந்து,

7–11. (அகல்திரைப் படப்பிற் கிடந்து) அகன்ற அக் கடலிற் கிடந்து எரியா நின்ற வடவைபோலத் தளிரை (முகமின்று) தன்னிடத்து ஈனப்பட்டுத் திரை எறிகின்ற மலைகளைப்போலக் (கவடுபல) பல கோடுகளை உண்டாக்கப் பட்டு — கல்லிற் செறிந்த பாசிபோல (சினை) கோடுகளில் (குழை பொதுளி) இலை செறியப்பட்டு (சடையலைந்து) வேர் அலையப்பட்டு (இணர்) பூங்கொத்துக்கள், அலையப்படாது கீழாக நின்ற (மேற்பகை) முற்பகையாகிய மாவினது

12–15. ஒருடலானது இரண்டு கூறும்படி, அழியாத பேரளியை - பெருங்கருணையை உடைய பார்வதி (கண்ணின்று) எதிர் நின்று, (தற்பெயர் புணர்த்தி) சக்தி என்று தன் திரு

நாமம் சாத்திக் (கற்பினெடு) சூரனை வெல் என்று கற்பித்த லுடனே (கொடுப்ப) விடுத்ததனல் வந்த (அமையாவென்றி) ஒடுங்காத வென்றியினையும் (அரத்தம்) குருதியினையும் உடைய (அந் நெடுவேலோய்) நெடிதாகிய அவ் வேலினை உடையாய்!

16–18. கீழ்ம்மேலாக நின்ற அக் கொடிய தொழிலினை உடைய – இரண்டு கூருகிய (கொக்கின்) மாவின் ஒரு பங்கு எழுந்து பெரிய வரத்தினல் (மாயா) அழியாத ஒருமயிலாகி

19–22. (புடவி) பூமியைத் தலையில் வையா நின்று (ஆற்றிய) தாங்கிய (பஃறலைப் பாந்தள்) சேடன், (மண் சிறுக) மண்ணும் சிறுகும்படி (விரித்த) பரப்பிய மணிப்படத்தைத் (தூக்கி) கொத்தித் தூக்கி முன் விழுங்கிய பல கதிர்களை வாய்தோறும் உமிழ்ந்தாற்போல நிரையாகிய மணிகளை மண்ணிற் புகும்படி சிந்தி அலைத்தலினல்

23–25. (கார் விரிந்தோங்கிய மலைத்தலை) நீலவரை யிடத்தில் (கதிரென) ஞாயிறு பொலிவு பெற்ருற்போல் (ஒவற) ஒழிவற – போகிய – நீண்ட சிறை விரியா நின்ற அதன் முதுகில் உலகம் காணும்படி புகழோடு பொலிவு பெற்ரோய!

26-28. (போழ்படக் கிடந்த) பிளவுபடும்படி கிடந்த (ஒரு பங்கு எழுந்து) மற்ருெரு கூறு எழுந்து, கொடிய பகை யாகிய (மின்னன் மாண்ட) விளங்கா நின்ற அழகு மாட்சிமைப் பட்ட (கவிரலர்) முருக்கினது பூப்போலும் (பூத்த) செஞ் சூட்டுப் பொலிவு பெற்ற (சென்னி வாரணமாகி) தலையினை உடைய கோழியாகி —

29–31. தேவர் மெய் நடுங்கும்படி, (பொரியில்) பொரி போல, (வான்மிடை) ஆகாயத்தில் நெருங்கிய, (உடுத்திரள்) மீன் கணங்களைக் (கொறிப்ப) கொறித்தலினல் (புரிந்த) அது விரும்பிய (பொருள் நாடி) கருமத்தைக் கருதித் தேவர்க்கு இடுக்கண் இல்லாது தாமரையைப் பழித்த கையின் வலப்பாகத்து (அமைத்தோய்) கொடியாக அமைத்தோய்!

32–34. (ஒருமையுள் ஒருங்கி) ஐம்பொறியும் ஒரு வழி யாக உள்ளத்தைச் சென்ற இடத்துச் செலவிடாது ஒருவழிப் படுத்தி, நாரத முநிவன் இரு கையினல் நெய் வார்த்து ஓம்பிய (செந்தீக் கொடுத்த) வேள்வியில் உண்டான — திருகுதலை யுடைத்தாய்; (புரிகோட்டு) முறுக்கோடு கூடின கொம்பினை உடைய (தகர்வரும்) கடாவில் வரும் மதியினை உடையாய்,

35-36. (முரண்) மாறுபாட்டினை உடைய, (இரண்டு குவடென) இரண்டு மலையென்னும்படி (முலை மரீஇ) முலையினை மருவி, (குழற்காடு) குழற்பரப்பைச் சுமந்த (யானை மகள்) தெய்வயானையைப் புணர்ந்தோய்!

37-38. சிவந்த கண்ணினை உடைய குறவரால் கருங் காட்டில் வளர்க்கப்பட்ட, வள்ளியாகிய செவ்விக் கொடி. (படர்ந்த) பொருந்திய புயமாகிய மலையினை உடையாய்!

39-42. இமயவரையிற் பூத்த மாட்சிமையை உடைய (சுனை) சரவணப் பொய்கையின்கண் உண்டாகிய (தொட்டில்) பூவாகிய தொட்டிலில் (அறிவில் தங்கி) அறிவோடு கூடிப் பொருந்தி (அறுதாய் முலையுண்டு) ஆறு தாய் முலைப்பாலை உண்டு, (உழல்) ஓரிடத்திராது திரிதரும் (மதில்) முப்புரத்தைத் (தழல்நகை) நகைத்தழலால் (சுட்ட) எரித்த பெருமான் — (வணங்கி நின்றேத்த) வணங்கி நின்று புகழக் (குருமொழி வைத்தோய்) உபதேசம் வைத்தோய்,

43-46. (பிரமம் பேசிய) பிரமமாகப் பேசிய (நான் மறை) விதியை — நான்கு மறையினை உடைய பிரமனை ஓமென்னும் எழுத்தினுல் (நடுங்கு சிறை) நடுங்குகின்ற அரிய சிறையில் வைத்து, படைத்தல் முதலிய தொழில்கள் (மாய) நடவாமையாலே, (கூடி) அவை நடக்கும்படி (பிரமனைக் கூடும்படி), (வான்முதல்) தேவர்களும், (தாதையும்) சிவனும், (இரப்ப) வேண்டத், தளையது (விடுத்தோய்) விலங்கு விடுத்தோய்!

47-49. கூடமானது தாங்கிய நெடிய குவடுகளை உடைய நேரி மலையானது (விண் தடையாது) ஆகாய விழி யினைத் தடுக்காமல், (மண்புக) மண்ணில் அழுந்தும்படி, (புதைத்த) மறைத்த, (குறுமுனி) அகத்திய முநிவர், (தேற) தெளிய, (நெடுமறை) பெரிதாகிய வேதப் பொருளை விரித்தோய்!

50-51. (ஆறு திரு எழுத்தும்) 'குமாராய நம' என்னும் ஆறு திரு எழுத்தும் (கூறு நிலை கண்டு) சொல்லுகின்ற நிலையை அறிந்து, உனது திருவடியைத் துதிப்போரது கண்ணி லுள்ளே பொலிவு பெற்றோய்!

52-55. (மணிக்கால் அறிஞர்) இந்த ரத்தினம் இந்த இடத்தில் பிறந்ததென்று அதன இடம் அறிந்த மதுரை வாணிகரது பெருங் குடியிற் பிறந்து, (இறையோன் பொருட்கு) *இறையோன் கூறிய பொருட்கூற்றிற்கு பரணர்

---

* இவ் வரலாற்றைத் திருப்புகழ் 350, பக்கம் 378 கீழ்க் குறிப்பிற் காண்க.

முதலாகிய கடைச் சங்கத்தார் நாற்பத் தொன்பதின்மரும் கீழிருந்து கேட்பப், பெருந்தமிழாகப் (பாய்பார்) பரந்த உலகில் உள்ளார் அறியும்படி, (விரித்த) பொருள் விரித்த அரிய தமிழ்ப் புலவனும் நீயே ஆதலால்,

56-65. (அறிவு நிலை ...... தருதியின்றெனவே — வெட்சி மலர் ......கொள்ளுதும்:) அறிவு நிலை பெருத சில வாய் சொற்கொண்டு, கடவுளாய நின்னைக் கூருத (உலவா அருத்தியும்) கெடாத ஆசையும், (சனனப் பீழையும்) பிறவித் துன்பமும், (தள்ளா) ஒருவராலும் நீக்கப்படாத (காமமும்) காம நுகர்ச்சியும், (தற்படு) தன்னால் உண்டாகிய துயரமும் – துக்கமும், (அடைவு கெட்டு) முறைகெட்டு, (இறத்தலும்) அதிலே மிகுத்தலும் – கெட்ட முறையில் மிகுதியாக நடத்தலும், (தென்புலக் கோமகன்) இயமராசன், (தீத்தெறு) நெருப்புப்போல வருத்துகின்ற (தண்டமும்) தண்டிக்கும் துன்பமும், (நரகொடு துறக்கத்து) நரகத்தினும் சுவர்க்கத்தினும், (உழல்வரு) சென்று மீளும் (பீழையும்) துன்பமும், (நீளாது இம்பரின்) நீட்டியாது இம்மையிற்றானே (முடித்து) முடிவு செய்து, (இன்று) இப்பொழுதே, (மீளா) சுவர்க்காதிகள் போல மீளாமல், (காட்சி) காணப்படுவதாய முத்திப் பேற்றை (தருதி என) தருவை என்று கருதி, வெட்சி மலர் மாலை அணியப்பெற்ற நின்னிரண்டு கழற்காலையும் (குழந்தை அன்பினெடு) குழந்தை அன்பினால், சென்னிதலைக் கொள்ளுதும் - யாம் சென்னியின்கண் ஏற்றுக்கொள்வோம்.

# 5. சிலப்பதிகாரம்

## (இளங்கோ அடிகள்)

—: o :—

1. சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே! [12]

2. அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்தியவே லன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ண
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே! (13)

3. சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்
திருமுலைப்பால் உண்டான் திருக்கைவே லன்றே
வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றங் கொன்றநெடு வேலே! [14]

4. வேலனுர் வந்து வெறியாடும் வெங்களத்து
நீலப் பறவைமேல் நேரிழை தன்னேடும்
ஆலமர் செல்வன் புதல்வன் வரும் வந்தான்
மால்வரை வெற்பன் மணஅணி வேண்டுதுமே. [15]

(24–குன்றக் குரவை):

# 6. இரும்பல்காஞ்சி

—:o:—

நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழனுறிக்
காலை யிருள்சீக்குங் காய்கதிர்போற் - சோலை
மணித்தோகை மேற்ருேன்றி மாக்கடற்சூர் வென்ருேன்
அணிச்சே வடியெம் அரண். (16)

# 7. தொல்காப்பியம்

[ செய்யுளியல் உரை-153 ]

—:o:—

செஞ்சுடர் வடமேரு இருமருங்கின் திரிகின்ற
வெஞ்சுடரும் மதியமும்போல் வேலொடுகே டகஞ்சுழல
மாயிரு மணிப்பீலி மணியெருத்தில் தோன்றுங்கால்
சேயொளி கடற்பிறந்த செந்தீயிற் சிறந்தெறிப்ப
மறுவருந்தம் மனத்துவகைத் தழைச்சியான் வளர்த்தெடுத்த
அறுவருந்தம் முலைசுரந் தகடருந்தா றமுதூட்ட
வாருருவத் தெரிமூன்றும் ஒருங்கவித்தோன் வியப்பெய்த
ஈருருவத் தொரு பெருஞ்சூர் மருங்கறுத்த இகல்வெய்யோய்!

ஆங்கு, வினையொழி காலத்து வெவ்வெயிற் கோலத்
தனைவருந் தத்தம் அறம்புரிந் தாங்கு
முனையடு தோற்றத்து முந்நான் குருவிற்
கனைகடல் சுட்டது கண்;
தேவரும் மக்களும் சீற்றத்தான் அஞ்சாமைக்
காவல் புரியும் கதிர்மதி போலும்
மூவிருந் தோன்றல் முகம்;
மடமகள் வள்ளி மணிக்கும் பலம்போல
இடையிடை சுற்றுத லின்றுந் தவிரா
தொடையமை தார்க்கடம்பன் தோள்;

அவ்வழி, அடியிணை சேரா தவுணர் நுடங்கிப்
பொடிபொடி யாகிய போர்ப்பொடு மாய
இடியுமிழ் வானத் திடைநின்றுங் கூஉங்
கொடியணி கோழிக் குரல்.
விழுச்சீர் அமரர் விசும்பிடைத் தோன்றிப்
பழிச்சிநின் ஞூர்த்தார் பலர்.
உருகெழு முருகியம் உருமென அதிர்தொறும்
எரிசிற கொடுமினை தபவரு மணிமயில்;
பெருகள வருமறை பெறுநெடு மொழியொடு
பொருகள ஒளியிசை புகல்வன சில குறள்;
சிவந்தன திசை சிலம்பின மலை—
நிவந்தன தலை நிரம்பின குறை;
ஆர்த்தன மறை ஆடினர் பலர்
போர்த்தன துகள் பொழிந்தன மலர்,
ஆங்கனந் தோற்றிய அடுபோர் வென்றியின்
வீங்கிருந் தொடித்தோள் விடலை நினக்கே—
யாமறி அளவையில் தமிழ்புனைந் தேத்துக
நின்னி தக்கக மாயினும் நின்னெதிர்
நாணில மாகல் வேண்டும் யாணர்க்
கடம்பும் களிமயிற் பீலியுந் தடஞ்சுனை—
நீரொடு நின்வயின் மாந்த—
வாராப் புலமை வருகமா ரெமக்கே. (17)

# 8. திருமந்திரம்

[ திருமூலர் ]

—:o:—

520. எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே. 18.

1026. எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னேயச் சண்முகம் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலால்
மைந்தன் இவனென்று மாட்டிக்கொள்ளீரே. 19.

2758. ஆறு முகத்தில் அதிபதி நா னென்றும்
கூறு சமயக் குருபரன் நா னென்றும்
தேறினர் தெற்குத் திருஅம் பலத்துளே
வேறின்றி அண்ணல் விளங்கி நின்றானே. 20.

# 9. திருவிசைப்பா

( சேந்தனார் )

—:o:—

திருவிடைக்கழி (பண் – பஞ்சமம் – அந்தாதித் தொடை) நற்றுயிரங்கல்

1. மாலுலா மனந்தந் தென்கையிற் சங்கம்
வவ்வினான் மலைமகள் மதலை
மேலுலாந் தேவர் குலமுழு தாளும்
குமரவேள் வள்ளிதன் மணாளன்
சேலுலாங் கழனித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தனென் சேந்தன்
என்னும்என் மெல்லியல் இவளே. (21)

2. இவளைவா ரிளமென் கொங்கைபீர் பொங்க
எழில்கவர்ந் தான்இளங் காளை
கவளமா கரிமேல் கவரிசூழ் குடைக்கீழ்க்
கனகக்குன் றெனவருங் கள்வன்
திவளமா ளிகைசூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்கண் நங்கையா னைக்கும்
குழகன்நல் அழகன்நங் கோவே. (22)

3. கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள்சூழ் கோழிவெல் கொடியோன்
காவல்நற் சேனை என்னக்காப் பவனென்
பொன்னைமே கலைகவர் வானே
தேவினற் றலைவன் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயி லூரும்
சுப்பிர மண்ணியன் தானே. (23)

4. தானமர் பொருது வானவர் சேனை
மடியச்சூர் மார்பினைத் தடிந்தோன்
மானமர் தடக்கை வள்ளல்தன் பிள்ளை
மறைநிறை சட்டறம் வளரத்
தேனமர் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கோனமர் கூத்தன் குலஇளங் களிறென்
கொடிக்கிடர் பயப்பதும் குணமே. (24)

5. குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
படுமிடர் குறிக்கொளா தழகோ
மணமணி மறையோர் வானவர் வையம்
உய்யமற் றடியனேன் வாழத்
திணமணி மாடத் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கணமணி பொருநீர்க் கங்கைதன் சிறுவன்
கணபதி பின்னிளங் கிளையே. (25)

6. கிளையிளஞ் சேயக் கிரிதனைக் கீண்ட
ஆண்டகை கேடில் வேற் செல்வன்
வளையிளம் பிறைச்செஞ் சடையரன் மதலை
கார்நிற மால்திரு மருகன்

திளையிளம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
முளையிளங் களிறென் மொய்குழற் சிறுமிக்
கருளுங்கொல் முருகவேள் பரிந்தே. (26)

7. பரிந்தசெஞ் சுடரோ பரிதியோ மின்னே
பவளத்தின் குழவியோ பசும்பொன்
சொரிந்தசிந் துரமோ தூமணித் திரளோ
சுந்தரத் தரசிது என்னத்
தெரிந்தவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை அஞ்சொல்
மையல்கொண் டையுறும் வகையே. (27)

8. வகைமிகும் அசுரர் மாளவந் துழிஞை
வானமர் விளைத்ததா ளாளன்
புகைமிகும் அனலிற் புரம்பொடி படுத்த
பொன்மலை வில்லிதன் புதல்வன்
திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தொகைமிகு நாமத் தவன்திரு வடிக்கென்
துடியிடை மடல்தொடங் கினளே. (28)

9. தொடங்கினள் மடலென் றணிமுடித் தொங்கற்
புறஇத ழாகிலும் அருளான்
இடங்கொளக் குறத்தி திறத்திலும் இறைவன்
மறத்தொழில் வார்த்தையும் உடையன்
திடங்கொள் வைதிகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
மடங்கலை மலரும் பன்னிரு நயனத்
தறுமுகத் தமுதினை மருண்டே. (29)

10. மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப்
பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழியார்க் கருள்செயா விடுமே
விடலையே எவர்க்கும்மெய் யன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடிமுக்
கண்ணுடைக் கோமளக் கொழுந்தே. (30)

11. கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாகத்
தூய்மொழி அமரர்கோ மகளைச்
செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்
வாய்ந்தசொல் லிவைசுவா மியையே
செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதி ரொளியை ஏத்துவார் கேட்பார்
இடர்கெடும் மாலுலா மனமே. (31)

# 10. யாப்பருங்கல விருத்தி

(ஒழிபியல்)

—: o :—

"பூவார் பொய்கைப் பொற்போதிற்
தேவார் செங்கட் சேயா நீ
ஆவா வென்று தென்றே சூர்
மாவா னைக் கொன்றானே" (32)

# 11. கந்த புராணம்

(கச்சியப்ப முநிவர் பாடியது)

—: o :—

(1) மூவிரு முகங்கள் போற்றி, முகம்பொழி கருணைபோற்றி
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலு மயிலும்போற்றி திருக்கைவேல்போற்றிபோற்றி.

(ஆறு திருப்பதி)

(2) இருப்பரங் குறைத்திடும் எஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம். (34)

(3) சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடும் எஃகம் ஏந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம். (35)

(4) காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர, விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம். (36)

(5) நீரகத் தேதனை நினையும் அன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடும்
தாரகத் துருவமாம் தலைமை எய்திய
ஏரகத் தறுமுகன் அடிகள் ஏத்துவாம். (37)

(6) ஒன்றுதொ ருடலை ஒருவி ஆவிமெய்
துன்றுதொ ருடலைத் தொடங்கி ஐவகை
மன்றுதொ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதோ ருடிய குமரற் போற்றுவாம். (38)

(7) எழமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம். (39)

(8) ஈறுசேர் பொழுதினும் இறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசேர் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரான் அடிகள் போற்றுவாம். (40)

—(கடவுள் வாழ்த்து).

(திரு அவதாரம்)

(9) அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய. (41)
(1-11-92).

(சிவபிரான் தேவிக்கு உரைப்பது)

(10) நன்முகம் இருமூன் றுண்டால் நமக்கவை தாமே கந்தன்
தன்முக மாகி உற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்தம் மூவிரண் டெழுத்தும் ஒன்றாய்
உன்மகன் நாமத் தோரா றெழுத்தென உற்ற அன்றே.

(11) ஆதலின் நமது சத்தி அறுமுகன், அவனும் யாமும்
பேதகம் அன்றால், நம்போற் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான், சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான் (43)
(1-14-18, 19)

( தேவர்கள் துதிப்பது )

(12) கந்தநம! ஐந்துமுகர் தந்தமுரு கேசநம! கங்கை உமைதன்
மைந்தநம! பன்னிரு புயத்தநம! நீபமலர் மாலைபுனையும்
தந்தைநம! ஆறுமுக ஆதிநம! சோதிநம! தற்பரமதாம்
எந்தைநம! என்றும்இளை யோய்நம! குமாரநம!
(என்று தொழுதார்). (44)
(1-14-82)

( துதி )

(13) ஊரி லான்குணங், குறியிலான், செயலிலான், உரைக்கும்
பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான். (45)
(2-1-1)

( துதி )

(14) விரிஞ்சன்மால்தேவரா லும் வெலற்கரும் விறலோனாகிப்
பெருஞ்சுரர் பதமும்வேத ஒழுக்கமும் பிறவும் மாற்றி
அருஞ்சிறை அவர்க்குச்செய்த அவுணர்கோன் ஆவிகொள்வான்
பரஞ்சுடர் உருவாய்வந்த குமரனைப் பணிதல்செய்வாம்.
(3-1-1) (46)

( இந்திரன் மகன் சயந்தன் கனவில் முருகவேள் அடைதல் )

(15) வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
மாறி லாத வேல் அபயமே வலம்; இடம் வரதம்
ஏறு பங்கயம் மணிமழுத் தண்டுவில் இசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள் அடைந்தான்.
(3-10-4) (47)

வீரவாகுதேவர் சூரனுக்கு உரைப்பது

(16) ஈசனே அவன் ஆடலால் மதலையா யினன்காண்
ஆசிலா அவன் அறுமுகத் துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனெடு பேதகன் அல்லன்
தேசுலா அகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல். (48)

(17) ஆதி யாகிய குடிலையும் ஐவகைப் பொறியும்
வேதம் யாவையும் தந்திரப் பன்மையும் வேரு
ஓத நின்றிடு கலைகளுமம அவ்வவற் றுணர்வாம்
போதம் யாவையும் குமரவேள் பொருவிலா உருவம். (49

(18) எங்கணும் பணி வதனங்கள் எங்கணும் விழிகள்
எங்கணும் திருக் கேள்விகள் எங்கணும் கரங்கள்
எங்கணுந் திருக் கழலடி எங்கணும் வடிவம்
எங்கணுஞ் செறிந் தருள்செயும் அறுமுகத் திறைக்கே.
(3-12-129, 132, 133) (50)

சிங்கமுகாசூரன் சூரனுக்கு உரைப்பது

(19) வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்கும் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்கு மூ தக்கவன் முடிவிற்கு முடிவாய்
ஆதிக் காதியாய் உயிர்க்குயி ராய்நின்ற அமலன். (51)
3-21-127.

( துதி )

(20) நாரணன் என்னும் தேவும் நான்முகத் தவனும் முக்கட்
பூரணன் தானுமாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
ஆரண முடிவுந் தேரு அநாதியாய் உயிர்கட் கெல்லாம்
காரண னய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.
(4-1-1) (52)

(சூரன் மகன்) இரணியன் சூரனுக்கு உரைப்பது

(21) வாசவன் குறையும் அந்தண் மலரயன் குறையும் மற்றைக்
கேசவன் குறையும் நீக்கிக் கேடிலா வெறுக்கை நல்க
ஆசிலோர் குழவி போலாய் அறுமுகங் கொண்டான் எண்டோள்
ஈசனே என்ப தல்லாற் பிறிதொன்றை இசைக்க லாமோ. (53)

(22) கங்கைதன் புதல்வன் என்றும் கார்த்திகை மைந்தன் என்றும்
செங்கண்மால் மருகன் என்றும் சேனையின் செல்வன் என்றும்
பங்கயன் முதலோர் தேருப் பரஞ்சுடர் முதல்வன் தன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றே. (54)
(4-7-29-30)

இலக்கரில் ஒருவனுகிய விசயன் முருகரைத் தியானித்தல்

(23) ஆறுமா முகப்பிரான் அன்றி இவ்விடை
வேறொரு துணையிலை மெய்ம்மை ஈதெனத்
தேறினன் அவனடி சிந்தை செய்தனன்
மாறிழி அருவிநீர் வழியுங் கண்ணினன். (4-9-76) (55)

### முருகவேளின் வீரத்தைப் பானுகோபன் சூரனுக்கு உரைப்பது

(24) ஆர ணன் தனை உலகொடும் உண்டுமுன் அளித்த
காரணன் தனி ஆழியைக் களத்திடை அணிந்த
தாரகன் தனை நெடியமால் வரையொடு தடிந்த
வீர வீரனை யாவரே வன்மையால் வெல்வார். (56)
(4-11-15)

### வீரவாகுதேவர் முருகரிடம் விண்ணப்பிக்கும் வேண்டுகோள்

(25) கோலம் நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன். (57)
(4-11-154)

### சூரன் முருகவேளின் விசுவரூபத்தைக் கண்டு வியத்தல்

(26) கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாட் பரிசிவை உணர்ந்திலேன் யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூல காரண மாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தியன்றோ.
(4-13-433) (58)

### சூரன் பேரிருள் வடிவம் கொண்டு வருதலைக் கண்டு தேவர் முருகவேளிடம் ஓலமிடுதல்

(27) நண்ணினர்க் கினியாய் ஓலம்! ஞான நாயகனே ஓலம்!
பண்ணவர்க் கிறையே ஓலம்! பரஞ்சுடர் முதலே ஓலம்!
எண்ணுதற் கரியாய்ஓலம்! யாவையும் படைத்தாய்ஓலம்!
கண்ணுதற் பெருமான் நல்கும் கடவுளே ஓலம் ஓலம். (59)

(28) தேவர்கள் தேவே ஓலம்! சிறந்த சிற் பரனே ஓலம்!
மேவலர்க் கிடியே ஓலம்! வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்!
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம். (60)
(6-13-460, 461)

### சூர சம்மாரம் ஆனதும் தேவர்கள் முருகனைத் துதித்தது

(29) கார்தடிந்து துய்க்கும் கனைகடலின் நீர்வறப்பப்
போர்தடிந்து செல்லும் புகர்வேல் தனைவிடுத்துச்
சூர்தடிந்தாய் அன்றே தொழுமடியேம் வல்வினையின்
வேர்தடிந்தாய் மற்றெமக்கு வேறோர் குறையுண்டோ;

(30) மாறுமுகங் கொண்டுபொரு வல்லவுணர் மாளாமல்
நூறு முகமெட்டு நோதக் கனபுரியத்
தேறு முகமின்றித் திரிந்தோமை ஆளஅன்றோ
ஆறுமுகங் கொண்டே அவதரித்தாய் எம்பெருமான்!
(4–14–3, 4) (62)

( துதி )

(31) துய்யதோர் மறைகளாலும் துதித்திடற்கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலும் மயிலும்வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க, வாழ்கஇப் புவனம் எல்லாம். (63)
(5-4-6)

( துதி )

(32) மாயையின் வலியோ ஞகி மால்முத லோரை வென்றே
ஆயிரத்தோரெட் டண்டம் அரசுசெய் துகநூற் றெட்டுக்
காயம தழிவின் ருகிக் கடவுளர்க் கலக்கண்செய்த
தீயசூர் முதலைச்செற்ற குமரன்தாள் சென்னி வைப்பாம்
(6–1–1) (64)

( வள்ளியிடத்தே முருகனுடலின் உண்மை )

(33) உலைப்படு மெழுக தென்ன உருகியே ஒருத்தி காதல்
வலைப்படு கின்ருன் போல வருந்தியே இரங்கா நின்ருன்
களைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலில் தோன்றி
அலைப்படு தன்மைத் தன்றே அறுமுகன் ஆடல் எல்லாம்;
(6–24–73) (65)

( வள்ளிக்குத் தரிசனம் தந்தது )

(34) முந்நான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டும்
கொன்னுர்வை வேலும் குலிசமுமே னைப்படையும்
பொன்னுர் மணிமயிலும் ஆகப் புனக்குறவர்
மின்னுள்கண் காண வெளிநின் றனன்விறலோன். (66)
(6–24–116)

( வள்ளி – தேவசேனையுடன் முருகன் வீற்றிருத்தல் )

(35) கல்லகம் குடைந்த செவ்வேற் கந்தனேர் தருவதாகி
வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்பர்
எல்லவர் தமக்கும் முத்தி இருங்கனி உதவும் என்றும்;
(6–24–258) (67)

(துதி)

(36) புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கிமேலாம்
நன்னெறி ஒழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடிய னாக்கி இருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள்போற்றி.
(6-24-262) (68)

கந்த புராணத்தின் பெருமை

(37) என்னு யகன்விண் ணவர்நாயகன் யானை நாமம்
மின்னு யகனுன் மறைநாயகன் வேடர் நங்கை
தன்னு யகன்வேல் தனிநாயகன் தன் புராணம்
நன்னு யகமாம் எனக்கொள்க இஞ் ஞாலமெல்லாம். (69)
(6-24-265)

வாழ்த்து

(38) ஆறிரு தடந்தோள் வாழ்க, அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க, யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க, வாழ்கசீர் அடியார் எல்லாம்.
(6-24-261) (70)

# 12. உபதேச காண்டம்

(கோனேரியப்பர்)

—: o :—

பூத்த கற்பகப் பொன்னுல கிமையவர்க் கிரங்கிக்
காத்த சேவகன் கடம்பணி பன்னிரு தடந்தோள்
ஏத்த நாடொறும் தழும்புசென் னுத் தட வரலாற்
சேத்த கிண்கிணிச் சீரடி சென்னி சேர்த் துதுமே. (71)

# 13. உபதேச காண்டம்

(ஞானவரோதயர்)

—:o:—

கதழெரிகூர் அமலனுதல் விழியுதித்துத்
தழலுதவக் கங்கை பாற்போய்ப்
பதுமமிசைச் சரவணத்தின் வளர்ந்தறுவர்
முலையொடுபார்ப் பதி முலைப்பால்
உததிபரு கிக்கொடுஞ்சூர்த் தொலைத்தரசு
மகவானுக் குதவி யன்னோன்
புதல்வியொடு குறமகள்வேட் டொருகுமரன்
இருசரணம் போற்றல் செய்வாம். (72)

# 14. கந்த புராணச் சுருக்கம்

—:o:—

(1) தேவர் குலப் பெருங்கமலம் இடுக்க ணென
திமிரமகன் றளியோடு சிறந்து வாழ
மாவலிசேர் அவுணர் குலக் குவளை வாடி
மண்ணினிடைச் சுருங்கியிட வந்த பானு
தூவடிவேற் குமரேசன் அடிய னேன்புன்
சொல்லினுக்கும் இரங்கியருள் சுரக்கும் பெம்மான்
பூவடியாம் இருபோதும் மூன்று போதும்
பூசைபுரிந் தன்பினொடு புகழ்ந்து வாழ்வாம். (73)

(2) வேல்வாழி, மயில்வாழி, சேவல் வாழி,
வேறுமுள படைவாழி: விளங்கு தண்டைக்
கால்வாழி, அருள்பொழியும் விழிகள் வாழி,
கவின்குலவும் ஈராறு கரங்கள் வாழி,
மால்வாழி வாழியெனப் பணிந்து வாழ்த்தும்
மலைமாது தருமுருகன் மகிழ்ந்த ஆறு
பால்வாழி; எனைஆளுங் கருணை வாழி
பங்கிருந்த மங்கையர்தம் பதங்கள் வாழி. (74)

# 15. திருப்பரங்கிரிப் புராணம்

—:o:—

(1) ஞாலம் போற்ற யான் விரும்பி
நாடும் பொருளை அளித்தருள்வான்
மாலை எனவே கடம்பணிந்த
மார்பன் வரிவண் டிசைபாடும்
சோலை உடுத்த பழநிமலைத்
தூயன் மகரஞ் சுலவியிடும்
வேலை தனிலே வேலையிட
வேலை புரிந்தான் பதம்பணிவாம்.
(பாயிரம்) (75)

(2) பனிவரையின் மகளுதவ உண்டருளும் செங்கனிவாய்ப்
பாலா போற்றி
குனிசிலைவேள் மிகநாண வடிவழகு கொண்டருளும்
குமரா போற்றி
வினயமெழுஞ் சூர்கிளையை வேரறுக்க உளத்தில்வைத்த
விருத்தா போற்றி
முனிவருளம் கனியமிக வரங்குலவு பரங்கிரியின்
முருகா போற்றி. (76)

(3) நஞ்சு போலெழு நமன்வரும் அந்தநாள் உன்றன்
கஞ்ச மாம்பதம் இரண்டுமுன் றியகருத் தேனல்
அஞ்சு மாறுசெய் யாவகை ஏழையை அளிப்பாய்
மஞ்சும் எட்டிட வளர்பரங் கிரிக்குக போற்றி.
(நக்கீர. 17, 19) (77)

(4) கோல மீராறு ஞாயிறு போலும்
குண்டலக் காதுளாய் சரணம்
சால நீள் திங்கள் வதனனே சரணம்,
தயங்குசெவ் வாயனே சரணம்
மேலவே யன்பு தனதென வியாழம்
இறைஞ்சிய வெள்ளியங் கிரியான்
பாலனே சூரற் கசனியே சரணம்
பரங்கிரிக் குமரனே சரணம். (78)

(5) ஆருயிரே புத்தமுதே அரசேகண் மணியேயென்
றழைக்குந் தோறும்
பாரமுலை உமைமடியிற் பதறிவந்து பாய்ந்தேறும்
பதுமம் போற்றி

தாரெனவே குமுகுமென நறையொழுகும் கடம்பிருந்த
சைலம் போற்றி
கூரியதோர் வேலணிந்த குமரபரங் கிரியின்மணக்
கோலம் போற்றி. (79)

(6) மத்தமணிச் சடைப்பதுமர் எடுத்திறுகத் தழுவிஎழில்
மடிமேல் வைத்து
முத்தமிடத் திரும்பியெதிர் தாவியெட்டிக் காட்டியசண்
முகங்கள் போற்றி
சித்திரப்பா எனவடித்த தமிழ்க்குருகிச் சாற்றுதிருச்
செவிகள் போற்றி
கொத்திருந்த கடம்பணிவோய் பரங்கிரியி லிருந்தமணக்
கோலம் போற்றி. (80)

(7) கையிலணி வேல்போற்றி, கருதிவரு மயில் போற்றி,
கனக தண்டைச்
செய்யமல ரடிபோற்றி, திருச்சேவற் கொடிபோற்றி,
திகழுஞ் சோதி
மெய்யிலகும் எழில்போற்றி, விளங்கியசண் முகம்போற்றி
மேன்மை போற்றி
கொய்யுமலர்க் கடம்பணிவாய் பரங்கிரியில் இருந்தமணக்
கோலம் போற்றி.
—(திருக்கலியாண. 57, 63-65.) (81)

# 16. திருச்செந்தூர்த் தல புராணம்

—:o:—

(1) உலகத்தின் முதலாய் நின்ற ஒருதனிப் பொருளேபோற்றி
கலைகட்கும் உணர ஒண்ணுக் கருணைவா ருதியே போற்றி
மலைவிற்கைப் பெருமான் கண்ணின் வந்தமா மணியே போற்றி
புலமைக்கும் தலைமையான புண்ணியா போற்றிபோற்றி.

(2) பேரழ குடைய தெய்வப் பிடிபுணர் களிறே போற்றி
கோரவெஞ் சிலைக்கை வேடர் குலமுய்ய வந்தாய் போற்றி
ஆரமு தனைய எம்மான் அருளுமான் கணவா போற்றி
சூருடற் குருதி மாருச் சோதிவேற் கடம்பா போற்றி.
— (வள்ளி கல்யாணம் 40, 41) (83)

(3) பன்னிரு கரத்தாய் போற்றி
பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை யாறு
முகப்பரம் பொருளே போற்றி
கன்னியர் இருவர் நீங்காக்
கருணைவா ருதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணுள்
இருக்குமா மணியே போற்றி. (84)
—(சுகப்பிரம. 61)

# 17. ஆவினன்குடி—பழநித் தல புராணம்

—:o:—

(1) [1]வன்பணநா கரவரையான் மதலை [2]சூ கர வரையான்
[3]இன்ப மயில் வாகனத்தான் ஏற்று மயில் வாகனத்தான்
[4]அன்பருள மலைவேலான் அணிகொள் [5]சிவமலை வேலான்
நன்கெழுமோ வினன்குடியான் நலங்கெழுமா வினன் குடியான். (85)
(திருவாவினன்-2.)

(2) பான்மொழிப் பசும் பாவை சேய் போற்றி
பூஞ்சரவண பவ போற்றி
வான்சுரர்க் கருள் கந்தவேள் போற்றி
புள்வரை பொடித்தவ போற்றி
தேன்மலர்ப் பொழிற் சிவாசல போற்றி
சேவலங் கொடியோய் போற்றி
நான்மறைப் பொருள் நாயக போற்றி
மெய்ஞ்ஞான தேசிகா போற்றி. (86)
—(அகத்திய. 44)

---

[1] பாம்பணிந்த சிவனது குமாரன்.

[2] வராக மலையை உடையவன்.

[3] இலக்குமி குடியிருக்கும் மார்பனும் திருமால்; அன்ன வாகனப் பிரமன் போற்றும் மயில் வாகனத்தன்.

[4] அன்பர் உள்ளத்தில் மலைவு(கலக்கம்) வராமல் காப்பவன்.

[5] சிவமலை - பழநி. [6] ஆவினன் – இடபவாகனச் சிவனது குடியிற் தோன்றியவன்.

(3) போற்றி எந்தை தந்த கந்த போற்றி கார்த்தி கேயனே !
போற்றி கங்கை மைந்த பைந்த ளிர்க்கை நாரிபு தல்வனே!
போற்றி பூத ரம்பொடித்த பூமணிச் செவ் வேலனே !
போற்றி தென் சிவாசலேச புனித போற்றி போற்றியே!

(சேரர்கோன் 18) (87)

(4) மாமணிச்செவ் வேற்சேய்நின் வாசச் சரோருகச் செந்
தேமலர்ப்பொற் றுள்வணங்கா சென்னியுஞ்சென்னியோ!
தூமலர்த்தோல் லோனுதற்கட் டோன்றுமுன்றன் சோதியுருக்
காமரெழில் காணுப்புண் கண்களுங் கண்களோ ! (88)

(5) வேள்வி தருதகரூர் வேலோய் நின் ஆறெழுத்தின்
கேள்வி நற அருந்தாக் கேள்வியும் கேள்வியோ !
மூளு நிருதர் முரண் அடக்கி நின் றேய் நின் தாள்
நாளம் புயமுகவா நாசியும் நாசியோ !

(கேள்வி — காது) (89)

(6) அண்டர்சே னுதிபநின் சீர்பாடி ஆரணமும்
தண்டமிழும் நுவலாத தாலுவுந் தாலுவோ !
பண்டை மறைதொடராப் பண்ணவ நின் பாதமலர்
கண்டுசிரம் முகிழாத கைகளும் கைகளோ ! (90)

(7) பன்னிருதோட் சேவற் பதாகையெஃகு வேற்செவ்வேள்
நின்னிருபூந் தாட்கிரங்கா நெஞ்சமும் நெஞ்சமோ !
பொன்னிவர்பூங் கோயிற் புறஞ்சூழ் அறங்காவற்
கன்னிமதில் சூழாத கால்களுங் கால்களோ ! (91)

(8) பைங்கண்மயி லோய்நிற் பரச நா வாய்குவிப்ப
அங்கை எழில் காணக்கண் ஆயிரம் ஆயிரமாய்
உங்குவைபெற் றேரிருப்ப ஓர்வாயு மிவ்விரண்டு
செங்கையும்க ணும்படைத்தோர் செல்வமும் செல்வமோ!

(9) தோளா மணிநின் தொழும்பெந்த ஞான்றுமுற்றும்
தாளாளர் தேவர் முடிவாழ்த்தத் தலைசிறந்தாய்
கோளார வன்னெஞ்சம் குழையாதிந் நாள்காறும்
வாளா திருந்தவ! என் வாழ்க்கையும் வாழ்க்கையோ. (93

(10) பாயொளி யொண் கோனல்கிப் பச்சிமத்து வாரமணிக்
கோயிலிடங் கொண்டெனையும் குடிகொண்டெ னுளம்புக்காய்
சேயொளிவேற் சேய்நின்செய லிதுவென்று லீனப்புன்
நாயு மரியணையில் நண்ணியுல காளாவோ. (94)

(சேரர் 42-48)

பழநித் தண்டாயுதபாணி சுவாமி

(11) ஆரநூ புரஅடியும் முடிமிசையொண்
மீக்குடுமி யழகும் அந்தண்
சேரலமோர் கரனும் ஒக்கல் சேர்த்தியதோர்
கரனும்,எழில் சிறக்க மென்தார்ப்
பாரணு திபர்விபுதர் பரவு சிவ
கிரிவருபச் சிமத்து வாரச்
சேரர்கோன் ஆலயத்தில் நின்றிலகு
பரஞ்சுடரைச் சிந்தை செய்வாம். (95)

(அலம் — மழுப்படைபோன்ற கோவணத் தண்டு).

பழநி ஆறுமுக நாயனர்

(12) ஆறுமணி மவுலியுங்கண் ணீராறும் குழைகளீ
ராறும் பாலம்
ஆறுநற் பவளவாய் ஆறுமா ருஎழுத்
தாறு மானேன்
ஆறுமிளிர் துண்டமும்தோ ளீராறும் கரங்களீ
ராறுஞ் சோதி
ஆறுவத னமுந்தொழுவோர் ஆருத பிறவியிளேப்
பாறு வாரே. (96)

# 18. திரு ஏரகப் புராணம்

—:o:—

(1) காந்திமுக மலர்போற்றி, கற்பதரு என அருளும் கருணை போற்றி
வாய்ந்ததுணைப் பதம்போற்றி, வாமகரம் இடைசெறிந்த மாண்புபோற்றி
சேர்ந்ததண்ட கரம்போற்றி, கோவணநீ டெழில்போற்றி, சித்தாந்தத்திற்
போந்தபொரு ளருளுமலைக் குமரநா யகன்திருத்தாள் போற்றிபோற்றி.

(2) பாரகமும் துயர்நீங்க, விண்ணகமும் குடியேறப், படரு முள்வாட்
சூரகமும் மலையகமு மலையகமுந் துகள்படுத்திச் சுடர்வேல் தாங்கி
நேரகமும் கற்பகநன் னிழலகமும் இந்திரற்கு நிறுத்தி நாளும்
ஏரகமும் என்னகமும் பிரியாத இளையானை இறைஞ்சல் செய்வாம். (98)

# 19. (1) திருத்தணிகைப் புராணம்

—:o:—

1. ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலும்
தனதியல்பை உருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தொள்
ளொளிபடர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம். (99)
—(கடவுள் வாழ்த்து).

தெறுதழற் பிணிகள் மண்ணும் சிவகங்கை யானாய் போற்றி
வெறிகமழ் கயிலைக் கங்கைத் தீர்த்தமாய் விரிந்தாய் போற்றி
பிறவிதீர் ஞான சத்தி தரனெனும் பெயராய் போற்றி
அறிஞர்சூழ்ந் தேத்துஞ் சீபூ ரணகிரிக் கதிப போற்றி. (100)
(நந்தி-உபதே-58)

3. பாருடு செங்களத்துப் பற்றார் திரள் முருக்கி
ஆருடு கண்ணீர் அமரர் சிறை மீட்டோன்
நீருடு மேனி நிமலன் வலத்துயிர்த்த
தேருத வேதற் சிறையிட்டோன் போலும்
தேவியுமை கண்களிக்கும் செல்வமே போலும்.
(நாரணன் 17) (101)

4. இல்லறத் திருப்பினும் தணிகை எம்பிரான்
நல்லருட் குரியவர் நவையி னீங்கினார்
வெல்லலர் வினைதுற வறத்தின் மேவினும்
வல்லிதன் கேள்வனை மனத்துன் னார்களே. (102)
(இராமன் 1)

5. காக்குங் கடவுள் கரந்து சிலம்பனாய்
வாக்குங் கரக மணிநீர் கரந்தேற்றுப்
பூக்கும் பொலங்கொம் பனையாட் கருளின்பம்
தேக்குந் தணிகைச் சிலம்பற் றொழப்பெற்றேன்

சீந்தும் வினையும் செருக்கும் விடைகொண்ட
ஏந்தல் அறிவின் எனதறிவு மாய்ந்ததே. (103)
(வள்ளி திருமணம் 1)

6. தடவரை மணிஒளிர் தணிகையங் கிரியினை
கடவுளர் சிறைதபு கருணையங் கடலினை
கடவுளர் சிறைதபு கருணையை யாதலின்
இடர்தப எளியமு மிணையடி பரவுதும். (104)

7. மகளிர்கள் இருவரின் வதிதரும் எழிலினை
துகளறு துறவியர் துறவியென் றிலகினை
துகளறு துறவியர் துறவியை யாதலின்
இகலற எளியமும் இணையடி பரவுதும். (105)
(நாரதன் 27, 28)

## 19. (2) தணிகாசல புராணம்

போற்றி போற்றி சடானனு போற்றி போற்றி புராதனு
போற்றி போற்றி வரோதயா போற்றி போற்றி நிராமயா
போற்றி போற்றி சிலாதலா போற்றி போற்றி நிராகுலா
போற்றி பார்வதி நந்தனு போற்றிகாங்கெய போற்றியே.(106)

## 19. (3) மயூரகிரிப் புராணம்

(குன்றக்குடி)

திருப்பரங் குன்றுநற் செந்தி மாநகர்
அருட்டிரு வேரகம் ஆவி னன்குடி
பருப்பதப் பன்மைகள், பழம்பெய் சோலையம்
பொருப்பினும் உறைபவன் சரணம் போற்றுவாம்.

# 20. திருவிளையாடற் புராணம்

—: o :—

கறங்குதிரைக் கருங்கடலும் காரவுணப்
பெருங்கடலும் கலங்கக் கார்வந்
துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ரரப்பொருப்பும்
பிளப்பமறை யுணர்ந்தோர் ஆற்றும்

அறங்குலவு மகத்தழலும் அவுணமட
வார்வயிற்றின் அழலும் மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
சேவடிகள் வணக்கம் செய்வாம். (108)

## 21. திருக்கூவப் புராணம்

—: o :—

நான்குமுகன் தொழுமைந்து முகனீன்ற
ஆறுமுக நாதன் தன்னை,
வான்குலவும் ஒருகடவுள் யானையின்பா
கனைப்,புனத்து வடிவு கூர்ந்த
மான்குறுக வேங்கையுரு எடுத்தானை,
அசுரர்குலம் மாய்த்துப் பேய்கட்
கூன்குருதி யொடுமளவிப் புதுவிருந்திட்
டானை, நம துளத்துள் வைப்பாம். (109)

## 22. காஞ்சிப் புராணம்

...: o :...

முருகோட்டந் தரப்பாயும் மும்மதமும்
ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும்
ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு
முதுகளிரு உலவக் காட்டிப்
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்டத்
தடிகள் குலத்தாள் போற்றி. (110)

## 23. திருவாதவூரர் புராணம்

—: o :—

துங்கமத கும்பவுயர் தும்பிமுகர் தம்பிசீர்
தங்குஞெகி ழுஞ்சிறுச தங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகும் அன்புடன் இறைஞ்சுவாம்.

# 24. திருவிரிஞ்சைப் புராணம்

—:0:—

அந்திப்போ தழகுறவே நடித்தருளும்
வழித்துணைவர் அருளுங் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி
அயிலெடுத்து வருஞ்செவ் வேளைச்
சந்திப்போம் மலர்சொரிவோம் புகழ்ந்திடுவோம்
அவன்கமலத் தாளும் தோளும்
சிந்திப்போம் ஆதலினால் நமதுபழ
வினைகளெல்லாம் சிந்திப் போமே. (112)

# 25. சேக்கிழார் புராணம்

...:0:...

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகம் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் திருவடித்தா மரையிணைகள் அவைகள் போற்றி.

# 26. நல்லாப்பிள்ளை பாரதம்

—:0:—

வந்த வேளை எரித்த மலர்க்கணன்
தந்த வேளைத் தயித்தியர் காலனை
எந்த வேளையும் எம்முளம் நீங்கலாக்
கந்த வேளைக் கருத்து ளிருத்துவாம். (114)

# 27. சைவ சமய நெறி

—:0:—

அமரரிடர் தீர்த்தே அவர்க்கருளும் வென்றிக்
குமரனடி சிந்திப்பாம் கூர்ந்து. (115)

# 28. தாயுமானவர் பாடல்

—: o :—

அஞ்சுமுகங் காட்டாமல் ஆறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ! (116)

# 29. திருச்செந்தூர் நிரோட்டக யமக அந்தாதி

(உதடு ஒட்டாது பாடக்கூடிய பாட்டு)

—: o :—

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற்செந்திற் கந்தநெற்றிக்
கணக்காக னார்தந்த நின்றனை யேயினிக் காதலினாற்
கணக்காக னநிகர்த் தேயழி அங்கத்தின் காதலற்றே. (117)

(கணக்காகம், நாய்கள் தின் காயம் நிலையெனக் கண்ணி (நினைத்து), என்ன கணக்காக நான் அலைந்து எய்த்தேன், எழிற் செந்திற் கந்த, நெற்றிக் கண், அக்கு ஆகனார் தந்த நின்றனையே, இனிக் காதலினால் க(ண்)ண (நினைக்க) கா (காத்தருள்), கன நிகர்த்தே அழி அங்கத்தின் (உடல்மீது) காதல் அற்றே.)

# 30. கந்தர் கலிவெண்பா

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்தது

—: o :—

பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும் — தேமேவு 1
நாதமும்நா தாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் — ஆதிநடு 2
அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய் — வந்த 3

குறியும் குணமும்ஒரு கோலமுமற் றெங்கும்
செறியும் பரம சிவமாய் — அறிவுக் 4

கணுதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மணுதிகளுக் கெட்டா வடிவாய்த் — தணுதருளின் 5

பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் — எஞ்சாத 6

பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் — தாரணியில் 7

இந்திரசா லம்புரிவோன் யாவரையும் தான்மயக்கும்
தந்திரத்திற் சாராது சார்வதுபோல் — முந்தும் 8

கருவின்றி நின்ற கருவாய் அருளே
உருவின்றி நின்ற உருவாய்த் — திரிகரணம் 9

ஆகவரும் இச்சை அறிவியற்ற லால்இலய
போகஅதி காரப் பொருளாகி — ஏகத் 10

துருவும் அருவும் உருவருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய் — இருள்மலத்துள் 11

மோகமுறும் பல்லுயிர்க்கு முத்திஅளித் தற்குமல
பாகமுற வேகடைக்கண் பாலித்துத் — தேகமுறத் 12

தந்த அருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து — மந்த்ரமுதல் 13

ஆறத்து வாவு மண்டத் தார்ந்த அத்துவாக் களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து — மாறிவரும் 14

ஈரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனிஎண்பான்
ஆரவந்த நான்குநூ ருயிரத்துள் — தீர்வரிய 15

கன்மத்துக் கீடாய்க் கறங்கும் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து — வெந்நிரய 16

சொர்க்காதி போகமெலாம் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்கா ரணஞ்சிறிது நண்ணுதலும் — தர்க்கமிடும் 17

தொன்னூற் பரசமயந் தோறும் அதுவதுவே
நன்னூல் எனத்தெரிந்து நாட்டுவித்து — முன்னூல் 18

விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித் — தருள்பெருகு 19

சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை அகற்றுவித்து — நால்வகையாம் 20

சத்திநி பாதம் தருதற் கிருவினையும்
ஒத்துவருங் காலம் உளவாகிப் — பெத்த 21

மலபரி பாகம் வருமளவிற் பன்னுள்
அலமருதல் கண்ணுற் றருளி — உலவா 22

தறிவுக் கறிவாகி அவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப் — பிறியாக் 23

கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றேர்திருப்பேர் கொண்டு – திருநோக்கால் 24

ஊழ்வினையைப் போக்கி உடலறுபத் தெட்டுநிலம்
ஏழுமத்து வாக்கள் இருமூன்றும் — பாழாக 25

ஆணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப் — பூணும் 26

அடிஞானத் தாற்பொருளும் ஆன்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி — முடியாது 27

தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகிஎங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப் — போக்கும் 28

வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவும் கடந்துலவா இன்பம் — மருவுவித்துக் 29

கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றும் தாழ்சடையும்
வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல்-மின்னிடத்துப் 30

பூத்த பவளப் பொருப் பொன்று வெள்ளி வெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி — மூத்த 31

கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்துண்ணின்
றொருமலத்தார்க் கின்பம் உதவிப் — பெருகியெழு 32

மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேஇருத்தி
ஆன்றபர முத்தி யடைவித்துத் — தோன்றவரும் 33

யானெனதென் றற்ற இடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக — ஞானம் 34

திருவுருவா இச்சை செயலறிவு கண்ணு
அருளதுவே செங்கை அலரா — இருநிலமே 35

சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே! எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே! — மின்னுருவம் 36

தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்த பைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும் — தேய்ந்தபிறைத் 37

துண்டம்இரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும் — விண்ட 38

பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள் பொழியும் கண்மலர் ஈராறும் — பருதி 39

பலவும் எழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும் — நிலவுமிழும் 40
புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய் தீர்க்கும் திருமொழியும் — வின்மலிதோள் 41
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூர னைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்தும் திருமுகமும் — எவ்வுயிர்க்கும் 42
ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும் — சூழ்வோர் 43
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்குங் கமல முகமும் — விடுத்தகலாப் 44
பாச இருள் துரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும் — நேசமுடன் 45
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் — தாகமுடன் 46
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையும் — கொந்தவிழ்ந்த 47
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும் — ஆரமுதம் 48
தேவர்க் குதவுந் திருக்கரமும் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமும் — ஓவாது 49
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும் — மார்பகத்தில் 50
வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமும்
உய்த்த குறங்கில் ஒருகரமும் — மொய்த்த 51
சிறுதொடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையும்
கறுவுசமர் அங்குசஞ்சேர் கையும் — தெறுபோர் 52
அதிர்கே டகஞ்சுழற்றும் அங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்குங் கரமும் — முதிராத 53
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூண் அகன்மார்பும் — பைம்பொற் 54
புரிநூலும் கண்டிகையும் பூம்பட் டுடையும்
அரைஞாணும் கச்சை அழகும் — திருவரையும் 55
நாதக் கழலும் நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமும் — சோதி 56
இளம்பருதி நூறு யிரங்கோடி போல
வளந்தருதெய் வீக வடிவும் — உளந்தனிற்கண் 57

டாதரிப்போர்க் காருயிராய் அன்பரகத் தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே! — ஓதியஐந் 58

தோங்காரத் துள்ளொளிக்கும் உள்ளொளியாய் ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே! — தாங்கரிய 59

மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப் — பந்தனையால் 60

ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா — வைத்த 61

கலையே அவயவமாக் காட்டுமத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய்! — பலகோடி 62

அண்டம் உருவாகி அங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் கரணமாய்த் — தொண்டுபடும் 63

ஆவிப் புலனுக் கறிவளிப்ப ஐந்தொழிலும்
ஏவித் தனிநடத்தும் எங்கோவே! — மேவ 64

வருமட்ட மூர்த்தமாம் வாழ்வே! மெய்ஞ் ஞானம்
தருமட்ட யோகத் தவமே! — பருவத் 65

தகலாத பேரன் படைந்தோர் அகத்துட்
புகலாகும் இன்பப் பொருப்பும் — சுகலளிதப் 66

பேரின்ப வெள்ளப் பெருக்காறும் மீதானம்
தேரின்ப நல்குந் திருநாடும் — பாரின்பம் 67

எல்லாங் கடந்த இருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த அணிநகரும் — தொல்லுலகில் 68

ஈறும் முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமும் — ஏறுமதம் 69

தோய்ந்து களித்தோர் துதிக்கையினூற் பஞ்சமலம்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும் — வாய்ந்தசிவ 70

பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தெடையும் — காரணத்துள் 71

ஐந்தொழிலும் ஓவா தளித்துயர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசும் — சந்ததமும் 72

நீக்கமின்றி ஆடி நிழலசைப்பான் போற்புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும் — தேக்கமழ்ந்து 73

வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே! — தேசுதிகழ் 74

பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையும் முக்கட் பரஞ்சோதி — ஆங்கொருநாள் 75

வெந்தகுவர்க் காற்றுத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோ டதோமுகமும் — தந்து 76
திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறிஆ றுய்ப்ப — விரிபுவனம் 77
எங்கும் பரக்க இமையோர்கண் டஞ்சுதலும்
பொங்குந் தழற்பிழம்பைப் பொற்கரத்தால் — அங்கண் 78
எடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென்றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுப்போய் — அடுத்ததொரு 79
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப் — போதொருசற் 80
றன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய் — முன்னர் 81
அறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன் — குறுமுறுவற் 82
கன்னியொடும் சென் றவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள்கண் டவ்வுருவம் ஆறினையும் — தன்னிரண்டு 83
கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறும் ஒன்றாக மேவுவித்துச் — செய்ய 84
முகத்தில் அணைத்துச்சி மோந்து முலைப்பால்
அகத்துண் மகிழ்பூத் தளித்துச் — சகத்தளந்த 85
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ளம் உவப்ப உயர்ந்தோனே! — கிள்ளைமொழி 86
மங்கை சிலம்பின் மணிஒன் பதிற்றோன் றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து — தங்கள் 87
விருப்பால் அளித்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு — நெருப்பிலுதித் 88
தங்கட் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கட் கிடாயதனைச் சென்றுகொணர்ந் — தெங்கோன் 89
விடுக்குதிஎன் றுய்ப்பஅதன் மீதிவர்ந்தெண் திக்கும்
நடத்தி விளையாடு நாதா! — படைப்போன் 90
அகந்தை உரைப்பமறை ஆதி எழுத்தென்
றுகந்த பிரணவத்தின் உண்மை — புகன்றிலையால் 91
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறைஇருத்துங் கோமானே! — மட்டவிழும் 92
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே! — கொன்னெடுவேல் 93

தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே! — சீரலைவாய்த் 94
தெள்ளு திரை கொழிக்கும் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ளம் எனத்தவிசின் வீற்றிருந்து — வெள்ளைக் 95
கயேந்திரனுக் கஞ்சல் அளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச் — சயேந்திரனும் 96
சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே — காரவுணன் 97
வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்துப் — பானுப் 98
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்! — சகமுடுத்த 99
வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலம் கீண்ட சுடர்வேலோய்! — போரவுணன் 100
அங்கமிரு கூறாய் அடல்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும் — அங்கவற்றுள்
சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்தும் இளையோனே! — மாறிவரு 102
சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே — மூவர் 103
குறைமுடிந்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே — மறைமுடிவாம்
சைவக் கொழுந்தே! தவக்கடலே! வானுதவும்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே! — பொய்விரவு 105
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப் — பூமருவு 106
கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத் தினிதிருந்து — மேன்மைபெறத் 107
தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே! — உள்ளமுவந் 108
தாறு திருப்பதிகண் டாறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே! — நாறுமலர்க் 109
கந்திப் பொதும்பர்எழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளே! — சந்ததமும் 110
பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும் — பல்கோடி 111

பாதகமும் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும் — தீதகலா 112
வெவ்விடமும் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம் வந்தெம்மை எதிர்ந்தாலும் — அவ்விடத்திற் 113
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் — கச்சைத் 114
திருவரையும் சீறடியும் செங்கையும் ஈரா
றருள்விழியும் மாமுகங்கள் ஆறும் — விரிகிரணம் 115
சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற — வந்திடுக்கண் 116
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்
துல்லாச மாக உளத்திருந்து — பல்விதமாம் 117
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும் — ஓசை 118
எழுத்துமுத லாமைந் திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித் — தொழுக்கமுடன் 119
இம்மைப் பிறப்பில் இருவா தனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் – தம்மைவிடுத் 120
தாயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச் — சேய 121
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்
டடியேற்கு முன்னின் றருள். 122

திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா முற்றிற்று.

(பெரியோர்கள் எழுதிய உரை இருப்பதால் உரை எழுதப்படவில்லை.)

## கந்தர் கலிவெண்பா - கருத்துரை

பரம்பொருளின் தன்மையை அடி 1 முதல் 10 வரையிற் கூறி, நமது பிறப்பையும் நாம் பல பிறவிகளில்உழலுவதையும், பின்னர் நல்வழியில் நம்மை இறைவன் கூட்டி வைப்பதையும் அடி 11 முதல் 21 வரையிற் சொல்லி, இறைவன் குருவாக வந்து ஆட்கொண்டு பேரின்ப நிலையைத் தருவதை அடி 22 முதல் 36 வரை விவரித்து, ஆறுமுகப் பெருமானைத் தரிசனம் தந்து விளங்குவதை அடி 37 முதல் 58 வரை எடுத்துரைத்து, இறைவனது பெருமையையும் தசாங்கத்தையும் அடி 59 முதல் 74 வரையும் விளங்க வைத்து, அடி 75 முதல் 108 வரையும்

கந்தபுராணத்தின் சுருக்கமாய் ஆறுமுகக் கடவுளின் தோற்ற முதல் வள்ளி திருமணம் வரையில் அழகாகச் சுருங்க உரைத்து, இறுதியாக அடி 109 முதல் 122 வரையிற் பின் வருமாறு துதித்து விண்ணப்பிக்கின்றார் :

ஆறு திருப்பதிகளைத் தரிசித்து, ஆறெழுத்தை ஓதுபவர் தம் சிந்தையிற் குடிகொண்டவனே! செந்தூர்ப் பெருமானே! பகை, அவமிருத்து, விக்கினங்கள், பிணிகள், பாதங்கள், வினை, பாம்பு, பிசாசு, பூதம், தீ, நீர், படை, விஷம், துட்ட மிருகம் இவை தம்மால் எனக்குத் தீதொன்றும் என்றும் வாராமல், உனது மயில் வாகனம், பன்னிரண்டு திருத் தோள்கள், வேல், திருவரை, சீறடி, செங்கை, பன்னிரு கண்கள், ஆறு திருமுகங்கள், ஆறு திருமுடிகள், இவை எப்பக்கமும் என்முன் தோன்ற வந்து, எனது துன்பங்களை ஒழித்து, வரமெலாம் தந்து, இன்புற்று எனது உள்ளத்தில் வீற்றிருந்து, பழுத்த தமிழ்ப் புலமையைப் பாலித்து, இரு வினை, மும்மலம் இவைகளை ஒழித்து, உன் பழைய அடியார் கூட்டத்தில் என்னைச் சேர்த்து, பேரின்பத்தை ஊட்டி, என் முன் வந்து உனது திருவடித் தரிசனத்தைத் தந்து என்னை ஆட்கொண்டருளுவாயாக.

# 31. செந்திற் கலம்பகம்

(சுவாமிநாத தேசிகர்)

—: o :—

1. புயம்ஆ றிரண்டுக்கும் பொன்னணியாம்.
   புள்ளி மான்மகட்கும்
   கயமான் மகளுக்கும் கண்ணிணையாம்,
   கடுங் கூற்றுவந்தால்
   நயமாய தொண்டர்க்கு நற்றுணையாம்,
   செந்தில் நன்னகர்மே
   வியமான் மருகன் திருக்கரத் தேந்திய
   வேற்படையே. 119.

2. வரங் கொண்ட உமை முலைப்பால்
மணங் கொண்ட செவ்வாயும்
பரங் கொண்ட களிமயிலும்
பன்னிரண்டு கண் மலரும்
சிரங் கொண்ட மறை யிறைஞ்சும்
சேவடியும் செந்தூரன்
கரங் கொண்ட வேலு மென்றன்
கண்ணைவிட்டு நீங்காவே. 120.

3. இன்பமுந் துன்பமுஞ் சங்கடம் கொண்டயர்ந்
தங்குமிங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெங் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனே!
புன்குருந் துந்திநன் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசித்
தன்*பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்ததென் செந்திலெம் பெருமானே. 121.

# 32. முத்துக்குமாரசுவாமி திருவருட்பா

(தருமபுர ஆதீனம் 10-ஆவது மகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் அருளியது)

—:o:—

1. பொன்னெடுங் குன்றே அனந்தசந் த்ரோதயம்
போலவரு ஞான ஒளியே
பொய்யிருளை நீக்கியிடு மெய்யிரவி யுதயமே
பூரண னந்த சுகமே
அன்னையினும் அன்புமிகும் அன்புருவ மேஇருவர்
அறிவரிய ஒரு பிரமமே
அருமருந் தே அமுத சலதியே அடியார்
அறிந்தகரு வூலமே யென்

* பொருந்தம்=தாமிரபர்ணி ஆறு.

றுன்னையே பாடிநின் றுடியிரு கண்ணில்நீர்
ஓடரோ மஞ் சிலிர்ப்ப
உள்ளங் கரைந்துருக அடியனேன் ஆனந்த
உல்லாசம் ஆவ தென்றோ
முன்னைவினை தீர்த்தருளு மன்னனே புள்ளூரின்
முக்கட் குருக்கள் குருவே!
முத்தர்குரு வேயோக சித்தர் குருவே பால
முத்துக் குமர குருவே! (122)

2. அன்னைசொற் கொருசெவி, ஐயர்சொற் கொருசெவி,
அம்மான் துதிக்கொரு செவி,
ஆனைசொற் கொருசெவி, வீரர்சொற்கொருசெவி,
அயன்துதிக் கொருசெவி, விண்ணோர்
மன்னர்சொற் கொருசெவி,வள்ளிசொற்கொருசெவி,
வான்வனிதை சொற்கொரு செவி,
மறைதுதிக் கொருசெவி, அடியர்சொற்கொருசெவி
வல்லசுரர் சொற்கொரு செவி,
பன்னிரண் டுங்கொடுத் தென்சொல் கேளாமற்
பராமுகம தாயிருந்தால்
பாவியேன் மெலிவுகுறை எவர்செவியி லேற்றிப்
படுந்துயர் களைந்து கொள்வேன்
முன்னமறை நாலும்வந் துன்னுபுள் ளூரனே!
முக்கட் குருக்கள் குருவே!
முத்தர் குருவே! யோக சித்தர் குருவே! பால
முத்துக் குமர குருவே. (123)

# 33. திருச்செந்தூர் அகவல்

(சிற்றம்பலநாடிகள்)

(பகுதி)

—:o:—

ஓமெனுந் தாரக ஒண்பொருள் சிவனுக்
காமென மொழிந்தே அருட்குரு வானோன்
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கு ஞான தேசிகன்
பொய்வழிச் சமணைப் புலையிருள் நீக்கிச்
சைவம் வளர்க்கும் சம்பந்த மூர்த்தி

முருகன் குமரன் மூவிரு முகன்மால்
மருகன் சிவனருள் மைந்தன் கந்தன்
மலைமகள் பாலன் வயங்கிளர் வேலன்
கலைபயில் புலவன் கார்த்தி கேயன்
வளையொரு மருப்பு வாரண முகவற்
கிளையவன் குகன்மயி வேறும் பெருமாள்
சூர சங்காரன் சுப்பிர மணியன்
வீரருள் வீரன் விரைகமழ் கடம்பன்
சேந்தன் வள்ளி தெய்வ யானை
காந்தன் செவ்வேள் காங்கெயன் சிலம்பன்
ஆயிர நாமத் தையன் துய்யன்
சேயருட் கோமான் சேவற் றுவசன்
வரங்கிளர் கருணைப் பரங்கிரி உறைவோன்
மாவினம் விளங்கு மாவினன் குடியோன்
நந்தூ ரலைவாய்ச் செந்தூர்க் கடவுள்
பாரகம் விளக்கும் ஏரகத் தமர்வோன்
மாலயன் இறைஞ்சும் சோலைமா மலையோன்
குன்றுதோருடல் நன்றென மகிழ்ந்தோன் ......
குமரவேள் சரணங் குறித்து மாதவத்தீர்
நிமலமெய்ஞ் ஞானம் நீவிரும் பெறுவீர். 124.

# 34. போரூர்ச் சந்நிதி முறை

[ சிதம்பர சுவாமிகள் ]

—:o:—

1. பச்சைக் குடைதிருப் புந்தகைப் பாசடை
   யூடுருவ
   மெச்சக் கடைச்சியர் சேல்பாயும் போரி
   விசாகனெங்கோன்
   கொச்சைச் சிறியனை யிந்நாளும் பண்ணிய
   கோகனதத்
   தச்சற் கினியெனைப் பண்ணக் கொடானிது
   சத்தியமே. 125.

2. குமரா நமஎன்று கூறினர் ஓர்கால்
அமரா வதியாள்வ ரன்றி - யமராசன்
கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாயுதரப்
பைபுகுதார் சேரார் பயம். மாலை 47 (126)

3. நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடவாமல் பாவியேன் - காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கியெனை ஒண்போரூ ரையாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து. (மாலை 92) 127.

4. சமரபுரித் தேவோ! தணிகைமலைத் தேனே!
அமரும் பழநிமலைக் கான மணிவிளக்கோ! 128.

5. சீரலைவாய் முத்தோ திருப்பரங்குன் றத்தரசோ
ஏரகத்தில் என்றும் இருந்த பெருவாழ்வோ! 129.

6. பழமுதிர் சோலைப் பரனே! குறிஞ்சிக்
கிழவனென நல்லோர் கிளக்கும் பெருமாளோ!
தாலாட்டு 23-25) (130)

# 35. இலஞ்சி முருகன் உலா

[ மேலகரம் - பண்டாரக் கவிராயர் (பகுதி) ]

—:o:—

## முருகன் பெருமை

(1) திருமுருகாற் றுப்படையைச் செப்பியநக் கீரன்
வெருவு பயந் தவிர்த்த வீரன் — மருவாத
சிங்கமுகன் ஆனைமுகன் தீயஒரு சூரபன்மன்
அங்கவரை மாய்த்த அறுமுகவன் — துங்கமுறப்
பாடுந் திருப்புகழைப் பன்னிரண்டு நற்புயமும்
சூடுங் கருணைச் சுவாமி மிக — வாடியஅப்
புத்தே ளிருக்கும் புரந்தரற்கும் விண்ணுலகில்
தத்தம் பதிநிலைமை தானளித்தோன் — சித்தமகிழ்ந்
திந்திரனார் தம்மகளை யேய்ந்துமணங் கொண்டருளிச்
சுந்தரஞ்சேர் மான்மகளாம் தோகைக்காச் - சந்திரனேர்

ஆறு கருணை அழகுமுகம் காட்டாமல்
கூறுமொரு வேங்கைக் குலமரமாய் — வீறியே
நின்று வருந்தி நெடுங்குறவர் வந்தாட
அன்று வலிய அணைந்த குகன் — சென்றுபுரி
தாகமார் நாரதனுர் தாம்செயும்யா யகத்தகரை
வாகனமாக் கொண்ட வடிவேலன் — பூகஞ்சூழ்
[1]மன்னிலஞ்சி சூழும் [2]மலரிலஞ்சி யுஞ்சூழ்ந்த
தென்னிலஞ்சி வாழும் திருக்குமரன் — என்னையே
ஏழு பிறப்பும் இனிப்பிறவா தாளவந்து
வாழும் இலஞ்சி வடிவேலன் — ஊழிக்கும்
காய்த்த கருப்பிணிக்குக் [3]கான்மருந்தாய் என்றனக்கு
வாய்த்த இலஞ்சி வடிவேலன் — ஆய்ப்பாகர்
முன்னும் குருஎனக்கு முக்கால முங்குருவா
மன்னும் இலஞ்சி வடிவேலன். (66–77)

காட்சி

(2) வெள்ளியால் அண்டமெலாம் வேண்டியது மற்றுமெலாம்
வள்ளல்பாற் கூறு வதும்பாரீர் – உள்ளமுடன்
சென்னி வணங்காத் திசைமுகனைக் காவல்வைத்து
மன்னி யிருந்த வகை பாரீர் - துன்னியே
இந்திரன்வந் தெய்தி இடருரைப்பக் கேட்டுவந்து
சிந்தை மகிழ்ந்திருக்கும் சீர்பாரீர் - அந்தமுனி
மீறு மகத்தில் வெகுண்டு வருந்தகரை
ஏறி நடத்தும் எழில்பாரீர் – சீறியே
அண்டம் புரந்திருந்த ஆண்மயிலை வாகனமாக்
கொண்டு நடத்துங் கொலுப்பாரீர் – தொண்டுபுரி
அண்டரெல்லாம் கூடி அடிவணங்கிப் போற்றிசெய்து
தெண்டனிட்டு நிற்குஞ் செயல்பாரீர் - கண்டமறு
உள்ளவன்தான் வேண்டியே உண்மைப் பொருள்கேட்ப
விள்ள வவன் வீற்றிருக்கு மெய்பாரீர் – உள்ளும்
அகத்தியன்வாய் பொத்தி அடிபோற்ற உண்மை
மகத்துவத்தைக் கூறுமறை பாரீர் – மிகக்குறத்தி
துன்றுதினை நற்றேனும் சொற்றேனும் கூட்டியே
தின்று ருசித்திருக்கும் சீர்பாரீர் - என்றுரைப்ப
முத்தர்களும் பத்தர்களும் மோன முனிவர்களும்
சித்தர்களும் ஆழிபோற் சேர்ந்தொலிப்ப – நித்திலத்தின்

---

[1] இலஞ்சி – குளம். [2] இலஞ்சி - மகிழ மரம். [3] கால் – திருவடி, கான்மருந்து – வனமூலிகை மருந்து எனலுமாம்.

தொங்கலார் தேர்மீதிற் சோலைமலை செந்தூரில்
தங்குந் திருஇலஞ்சிச் சண்முகனுர். *(349-359)* *(131)*

*349* வெள்ளி — சுக்கிரன் ; *351* அந்த முனி — நாரதர் ; *352* தகர் - ஆடு ; *353* ஆண் மயில் - சூரன் ; *354* கண்டம் மறு உள்ளவன் – சிவபிரான்.

# 36. தணிகைப் பதிற்றுப்பத் தந்தாதி

(கச்சியப்ப முநிவர் பாடியது)

—:o:—

1. எழுத்தி னவ்வுயிர் என்ன நிறைந்தளாய்
முழுத்த பேரறி வாய்முத லாகிய
வழுத்து சீர்த்தித் தணிகை மணுளனை
அழுத்தும் உள்ளத் தவர்க்கனுர் இல்லையே. 132.

(அனுர் - துன்பம்)

2. சிந்தித் தறியேன் அரைக்கணமும்
தெரிசித் தறியேன் ஒருகாலும்
வந்தித் தறியேன் கனவினிலும்
வழுத்தி அறியேன் மறந்தேனும்
பந்தித் தடர்க்கும் மலஞ்சவட்டிப்
பரமா னந்தம் எனக்களித்தான்
கந்தித் தலருங் காவிவரைக்
கந்தன் கருணைக் கெதிருண்டோ ! 133.

3. அற்றவருக் கற்றபர மானந்தப் பெருவெள்ளம்
உற்றதிருத் தணிகைவரை உறப்பணிந்தா ரேயன்றி
மற்றவரை வணங்குநரும் வணங்குநரை வணங்குநரும்
பற்றறுத்துத் துடைத்தார்கள் பங்கயத்தோன்
கையெழுத்தே. *(134)*

# 37. தணிகை ஆற்றுப்படை

(கச்சியப்ப முநிவர் பாடியது)

(பகுதி)

—:o:—

எத்துயர்த் திரளும் அத்தினத் தகற்றும்
சரவணப் பொய்கைத் தடம்புனல் துளைந்து
மென்மெலக் குன்றம் மீமிசை இவர்ந்து
காலை நண்பகல் மாலைமுப் பொழுதும்
வைகல் வைகல் மலர்மூன்று தெரிக்கும்
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது ......
வள்ளி நாயகி மணத்தினை முடித்த
கள்ள வேழக் கடவுளைப் பணியா
வீர ரொன்பதின்மர் வார்கழற் ருழ்ந்துமற்
ருவயின் வதியும் அமரரைத் தொழுது ......
தீரா மலப்பிணி தீர்த்தருள் கொழிப்ப
அருட்டிரு வுருவுகொண் டவிர்மணித் தவிசின்
ஞான சத்தியும் கிரியா சத்தியும்
வானவர் கோமான் வளம்பயில் மகளும்
கானவர் நலங்கூர் கன்னியு மானன
இரண்டு பாலும் இருந்தனர் களிப்பக்
கண்டமெய் யடியர் கலவினர் போற்ற
காணு விண்ணவர் கலவா தேத்தக்
கட்கடை ஒழுகும் கருணை நோக்கமோ
டினிதுவீற் றிருக்கும் எழில்நேர் காண்டலும்
எஞ்சுநோய் துவர இரியல் போக
விஞ்சுநாற் பொருளுமே - வந்து துவன்ற ......
செய்முறை தெரியாது திருமுன் நிற்ப
இருமைப் பயனும் எளிதினுற் றளிக்கும்
பூதியும் திருவுருப் பூச்சுநன் களித்திட்
டென்னைத் தன்வய மாக்கிய உலகை
என்வய மாக்கி ... வழிவரு கின்றனன்
அத்தகு பெருமான் அருள்விளை யாடலைச்
சற்றிது கேண்மதி தவமேம் படுந ......
இன்னுன் ஒருவனை முன்னுபு சென்றவன்
பூங்கழற் சேவடி போற்றுதி யாயின்

பேரஞர் உறுத்த பேதுறு நோயும்
காரண நோயும் கையிகந் திரியக்
கடைக்கணித் தருளிக் கரையினுற் பொருளும்
கொடைக்கட னீயிர் குறித்த அளவையின்
எண்மடங் காற்றி என்றுந் தீரா
அகம்படித் தொழின்மையின் அழுத்துவ னன்றே......
மல்ல லாவணம் மறுகும் வீதியும்
நாடொறும் எழிலால் நவநவ மாகி
இமைக்குநர் நாட்டம் இமையாமை செய்ய
மண்டலம் விண்டலம் மாற்றிய தென்ன
இறும்பூது பயவா ஏர்குலாய்க் கிடந்த
திசைகாப் பாளர் இசைநிறை தேவர்
அலரவன் நெடுமால் ஆதிய கடவுளர்
முதுக்குறை அன்பின் முறைமுறை பழிச்சச்
சாறுநா ளல்லது வேறுநாள் அறியா
துலகமுழு தோம்புபல் சிறப்பின்
நிலைபெறு தணிகை மலைகிழ வோனே. (135)

# 38. தணிகைத் திருவிருத்தம்

## [ சுப்பிரமணிய முனிவர் பாடியது ]

—:o:—

(1) பன்னரிய உன்னற் புதத்திருப் புகழைப்
பகர்ந்துகொண் டுன்திருமலைப்
படியேறும் அன்பர்வினை பொடியாகும் என்றுநிறை
மொழிமாந்தர் பகருவதுகேட்
டென்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணியொழித்
தெனையும்வாழ் வித்தருளுகென்
றிரவுபகல் உன்னருட் சந்நிதியில் வந்துமுறை
யிடுவேற் கிரங்கி யருள்வாய்
பொன்னிறக் காந்தளொடு செங்குவளை மலர்களும்
பொறப்பமர் கடப்ப மலரும்
பூத்தலர் குறிஞ்சியும் சேத்தகூ தளமும்
புனைந்ததிரு மார்பழகனே
தன்னமும் மனத்துய ரிலாதமர ரைக்காத்த
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச அரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (136)

(2) நலமருவு மதுரைத் தமிழ்ச்சங்க மேற்புலவர்
நடுவீற் றிருந்த முதல்வா!
நக்கீரர் சொன்னமுரு காற்றுப் படைத்தமிழும்
நல்லருண கிரிநாதர் சொல்
புலமையுறு சித்திரச் சந்தப்ர வாகமும்
புனிதச் செவிக்கு ளார்த்த
புகழாள குறுமுனிக் காரணத் துட்பொருள்
புலப்படுத் திய குரவனே!
கொலைகளவு முதலான பாதகம் எனக்குவெகு
கோடிக ளிருந்திடினும் உன்
கூர்மந்தி ரப்படையி னுல்வீட்டி எனதுளம்
குடிகொண் டிருந்தருளுவாய்
சலனமறு சருவபரி பூரண தயாநிதே
சரவணோற் பவ குமரனே!
தணிகையங் கிரிவாச! அரன்விரும் புபதேச!
சகலபண் டிதராசனே. (137)

# 39. தணிகாசல அநுபூதி

## ( கந்தப்ப தேசிகர் )

—:o:—

சிந்தா மணியே திருமால் மருகா
வந்தார்க் குயர்வாழ்வு கொடுத்தருள்வாய்
நொந்தாழ் வினையேன் முகநோக்கி வரம்
தந்தாள் முருகா தணிகா சலனே. 138.

# 40. தணிகைச் சந்நிதிமுறை

## ( கந்தப்ப தேசிகர் )

—:o:—

(1) யானும் பிரிந்திருக்க கில்லேன் தணிகைவரை
யானுமெனை நீங்கியமர் கிற்றிலான் - கானவரை
போலுமவன் தோளழகும் பொற்சதங்கை தண்டையணி
காலழகும் வேலழகும் கண்டு. 139.
(அந்தாதி 39)

(2) அறுமு கந்தனில் ஒருமுகந்தனை
அடியனேற்குற வாக்கிடீர்
அம்பகம்பனி ரண்டி லொன்றிலென்
ஆணவங்கெட நோக்கிடீர்
வெறிகொள் பன்னிரு கையி லொன்றிலென்
வெம்பவக்கடல் தடுத்திடீர்
விளங்கும் ஆறுசெவ் வாயி லொன்றினல்
வீடுசேர்மொழி கொடுத்திடீர்
செறியும் ஆறிரு செவியில் ஒன்றில்என்
செய்தி யாவையுங் கேட்டிடீர்
செய்ய மார்பம் ஓராறி லொன்றிலென்
செந்தமிழ்த் தொடை பூட்டிடீர்
தறுகண் வேடர்கள் உதவுமின் கொடி
தனமும் அன்பர்கள் மனமுநீள்
தணிகையங்கிரி முடியு நண்பு
தழைத்த செங்கல்வ ராயரே. 140.

(கலம்பகம் 66)

(3) பெற்ருலும் இனிஒருவர் எனைத்தணிகை
வரையகத்தே பெறவும் வேண்டும்
உற்ருலும் அருந்தவங்கள் அவ்வரைக்கே
உறல்வேண்டும், உயர்ந்த கல்வி
கற்ருலும் உமதுதிருப் புகழுதே
நாடோறும் கற்க வேண்டும்
செத்தாலும் இவ்வுடலம் அத்தலமீ
துற வேண்டும் சேந்தனரே. 141.

(கலம்பகம் 75)

# 41. தணிகை உலா

## [ கந்தப்ப தேசிகர் (பகுதி) ]

—:o:—

(1) [1]கல்லாரமா மலையான் கற்பகத்தான் ஏத்துதிருக்
[2]கல்லாரமா மலையான் [3]கற்பகத்தான் – [4]செல்லார்
[5]பரங்குன் றலைவாயான் பாலனல் லார்தேக
பரங்குன் றலைவாயான் பாலன் – வரங்கொள்திரு
ஏரகத்தான் எண்ணு வினன்குடியான் எப்பொழுதும்
ஏரகத்தான் [6]எண்ணு வினன்குடியா – னேரார்
அகங்குன்று தோரூட லானு னெனதென்
அகங்குன்று தோரூட லானுன் – மகந்துன்று
சோலைமலை யாதரித்த சுந்தரத்தான் என்பிறவி
வேலை[7]மலை யாதரித்த வேதாந்தன் – சாலப்
பருவேங் கடமுலையார் பாடலரு தோங்கும்
திருவேங் கடமலைவாழ் சீலன் – உருவாம்
[8]இருக்கந்த மாதனமா யேய்ந்ததுபோ லென்றும்
திருக்கந்த மாதனஞ்சேர் செல்வன் – உருக்கி
முதிர்காமத் தான்மயங்கு மூடருளஞ் சேராக்
கதிர்காமத் தான்வடிவேற் கந்தன் – மதியாத
சூராவி சாகத்தான் தோன்றும் விசாகத்தா
னேராவி சாகத்தா னேகத்தான் – சீராரும்
[9]காந்தந் தனிலுறையே காந்தன் பலவிதவு
காந்தன் வலாரிமகன் காந்தன் – காந்துமணி
வள்ளிக் கிரியினுன் வள்ளிக் குழியிலெழும்
வள்ளிக் கிசைந்தருளும் வள்ளியான் – துள்ளு
மயிலா னயிலான் [10]மையிலா னையிலான்
மயிலா னையிலான் மையிலான் - ஒயிலான்

---

[1]கல் ஆரமாம் அலையான் – ரத்னமாலை அணிந்த திருமால். [2]கல்லார மாலை - செங்கழுநீர் மாலை - திருத்தணி. [3]கற்பு – அகத்தான். [4]செல் – மேகம். [5]நல்லார் தேக (பரம்) பாரம் குன்றுதலை வாய்க்க விடாதவன்; அவர்கள்பால் இருப்பவன். [6]எண் – நாவில் நன்குடியான். [7]மலையாது அரித்த. [8]இருக்கு வேதம் அந்தம் அழகு — ஆதனம் — ஆசனம். [9]காந்தம் – கந்தபுராணம். [10]மை– குற்றம்; நை – நைதல் – அழிதல்; மயில்- ஆனை இவர்களை இல் – மனைவியராகக் கொண்டவன். மையிலான் – ஆட்டை வாகனமாகக் கொண்டவன்.

திருமான் மருகன் திருமான் மருகன்
வருமான் மகவான் மருகன் – பெருமான்
உருவ னருவ னுபய னபயன்
முருகன் முருகன் முருகன் - ஒருவனுமை
சேயானுன் தீயவர்க்குச் சேயானுன் தன்னுருவம்
சேயானுன் தன்பெயரும் சேயானுன் ...... (87–101)

(2) தானவரை முன்னந் தடிந்தமுரு கோன்வந்தான்
வானவரைக் காத்திடுஞ்சீ மான்வந்தான் — தானதன்மஞ்
செய்யா தவரிடத்திற் சேரா தவன்வந்தான்
மையாரு நீலமலை யான்வந்தான் — நெய்யாரும்
வேலா யுதன்வந்தான் வென்றிக் கொடிபடைத்த
காலா யுதத்திருக்கை யான்வந்தான் — மாலாகி
வந்தாரை வாழ்விக்கும் வள்ளற் குகன்வந்தான்
மந்தா கினிக்கு மகன்வந்தான் — கொந்தாரும்
செச்சைத் தொடைபுனைந்த செவ்வேள் இதோவந்தான்
பச்சைமயி லேறும் பரன்வந்தான் — வச்சிரத்தின்
கோமான் மகட்கிசைந்த கோமான்வந் தான்குறவர்
பூமான் தனைப்புணர்பூ மான்வந்தான் — பூமேல்வாழ்
வேதன் இருகாலில் விலங்கிட் டவன்வந்தான்
சூத மெறிசுந் தரன்வந்தான் — போதம்
மருவுதணி கேசன் வந்தான் வந்தான் ...... (190–199)

(3) பட்டி வள்ளி

கைவளையல் ஏற்றியிரு காலில் வளைந்தேற்றி
மைவளையும் நெஞ்ச மயலேற்றி — வெய்ய
இருட்டுவிடி யாமுன் இனத்தவர்கா ணுமல்
திருட்டுவியா பாரஞ்செய் செட்டி — வெருட்டிஒரு
வேடுவனுய் ஓர் புலவன் வெண்பாவைக் கைக்கொண்டு
கோடு திரியுங் குறச்செட்டி — பாடாநக்
கீரனைப்பூ தத்தாற் கிரிக்குகையுட் கற்சிறைசெய்
தோரரிய பாவை யுகந்தணைந்து — கீரனுக்கு
வீட்டுவழி காட்டியிடும் வேளாண்மை யாஞ்செட்டி
ஆட்டிலுவந் தேறும்அன்ன தானசெட்டி — ஈட்டுபுகழ்
தேவேந் திரன்மகள்பாற் சிந்தைகுடி கொண்டசெட்டி
நாவேந்தற் கேயின்பம் நல்குசெட்டி — பூவேந்திக்
கண்டு பணிபவர்தம் காசுபறிக் குஞ்செட்டி
பண்டறுவர் ஊட்டுதன பாலசெட்டி — தொண்டர்
மதுரையிற்சொக் கப்பசெட்டி மைந்தன் இளஞ்செட்டி
குதிரை மயிலாம் குமரசெட்டி — சதிருடனே

சீவபர ஐக்கியஞ் செய்திடுகந் தப்பசெட்டி
மூவர் வணங்குமுரு கப்பபெட்டி — பாவனைக்கும்
அப்பாலுக் கப்பாலாம் ஆறுமுக செட்டியிவன் .........

(310-319)

( அருணகிரிக் கிளி )

(4) கைக்கிளியைப் பார்த்து வெகு காதலுடன் அன்னைமீர்
இக்கிளியைத் தாரும் எனக்கென்ருள் – அக்கிளிதான்
வில்லிபுத்தூ ரான்செவியில் மேலரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண் – பல்லவையுள்
மற்ருெருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்ததுகாண் — வெற்றிப்
பிரபுடதே வக்குரிசில் பேணி எதிர்காண
முருகன் மயில்மேல் முடுகி — வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றும்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகான் – எந்தைபிரான்
முத்தித திருவென்னும் முன்பதினு ருயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண் — சித்தியெட்டும்
கற்றதுகாண் நந்தம்மைக் கண்ணுலும் பாராமல்
உற்றதுகாண் சிற்றின்பத் தோருறவு — மற்றதுகாண்!
நாமுரைக்கும் வார்த்தைகளை நற்செவிகே ளாதிருக்கும்
ஓமுரைக்கும் பூதியுங்கண்'டுற்றிருக்கும் – தோமுரைக்கும்
மற்றைக் கிளிபோல் வசப்படாது ... (350-358) (142)

# 42. பிள்ளைத் தமிழ்கள்

## 1. காப்புப் பருவம்

—: o :—

( திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் )

சீரார் கமலத் திரு ஈன்ற
தெய்வப் பிடியும் குறக்கொடியும்
சேரும் பெருமாள், வேற்பெருமாள்
செந்திற் பெருமாள், மயிற்பெருமாள்
காரார் குடுமித் திருமலையிற்
கருணைப் பெருமாள், குகப் பெருமாள்
கந்தப் பெருமாள் முத்தொழிலும்
காக்கும் பெருமாள் தனைக்காக்க,

பாரா யிழையைத் திருமகளைப்
பாரப் புயத்தில், திருமார்பிற்
பதிக்கும் பெருமாள், வேயினிசை
பாடும் பெருமாள், பசும்பெருமாள்
ஆரா அமுதங் கடைந்தமரர்க்
கருளும் பெருமாள், திகிரிசங்கம்
அணியும் பெருமாள் முதலைதடிந்
தானை காத்த பெருமாளே. (143)
(கவிராஜ பண்டாரத்தையா)

(திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்)

அம்மைமுலை உண்டுவிளை யாடும்இளை யோனைஎமை
ஆட்கொண்ட குமரேசனைச்
செம்மையுள ஆறுமுக னைத்திரு விரிஞ்சைவரு
சேயைப் புரந்தருள்கவே
மும்மைமலம் அகலநக் கீரமுநி சொன்னதிரு
முருகாறெனுந் தேறலும்
எம்மருண கிரிநாதர் ஓதுபதி னாறு
யிரந்திருப் புகழமுதுமே. (144)
(மார்க்கசகாய தேவர்)

## 2. செங்கீரைப் பருவம்

(முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்)

மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியார் இளவலோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யிற்கருணை
வெள்ளமென வீற்றிருக்கும்
ஆனேறு யர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும்
அருமருந் தாகி நின்ற
ஆதிப் பிரானென்று மும்முதற் கடவுளும்
அடித்தொழும் பாற்ற மற்றக்
கூனேறு மதிநுதல் தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவள் தொண்டை வாய்த்

தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடி யருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடி யருளே. (145)
(குமரகுருபர சுவாமிகள்)

(தணிகைப் பிள்ளைத் தமிழ்)

மேனைஎனு மாதா மகீதந்த பொற்சுட்டி
வெண்பிறை நுதற்கண் ஆட,
மென்முலைப் பால்கறந் தூட்டியிடு கைத்தாய்
மிலைச்சுபூஞ் சுடிகை யாட
வானமுறு கார்த்திகைத் தாதியர்கள் செவியிலணி
மகரகுண் டலமும் ஆட
வரநதி எனுஞ் செவிலி புனையும்அரை மணியாட
வளர்சரவ ணப்பொய்கையாம்
மானமுறு கோடா யணிந்தவயி ரக்கடக
மரைமலர்க் கையிலாட
வண்மைபெறு பாண்டிமா தேவியெனு நற்ருய்
வனைந்திடு சதங்கை யாடத்
தேனெழுகு பைங்குவளை மலர்செருத் தணிகையிறை
செங்கீரை யாடி யருளே
சேணுடர் அர்ச்சனைசெய் சேஞ பதிக்குரிசில்
செங்கீரை யாடி யருளே. (146)
(கந்தப்ப தேசிகர்)

## 3. தாலப் பருவம்

(மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ்)

ஒருசிற் பரனே தமிழ்விற் பனனே
உலகம் எலாம் உதவும்
உமையாள் உயிரே! எமைஇனி தாள
உகந்த க்ருபா நிதியே
அருமைத் தனமே ஒருமைக் கதியே
அவுணர் குலப் பகையே!
அண்டர்க் குறவே! தொண்டர்க் கிணையாய்
அருள்மழை மாரிபெயும்

குருவித் தகனே! எழிலற் புதனே!
குஞ்சரி மஞ்சரியும்
கொடிய கிராதர் குலக்கொடி யும்புணர்
கோவே! எப்பொருளும்
தருகற் பகமே மயிலைக் கரசே
தாலோ தாலேலோ
சமர விபாடன குமர சடானன
தாலோ தாலேலோ. (147)
(இலக்கண விளக்கம் – வைத்தியநாத தேசிகர்)

(பழநிப் பிள்ளைத் தமிழ்)

கங்கைக் கொருமா மகனே! குகனே!
கனியே! கண்மணியே!
கருணை லயமே! மறையோர் தவமே!
கருதும் பெருவாழ்வே!
திங்கட் சடிலன் மகிழுங் குருவே!
தேவர்கள் பணிகோவே!
தெய்வச் சுருதிப் பொருளே! பொருளின்
தெளிவே! களிகூரும்
துங்கப் புயனேர் திருமால் மருகா!
சோதிச் சுடரொளியே!
தோகைக் குடையாய்! நீபத் தொடையாய்
சொல்லுக் கினியானே!
சங்கத் தொருவா! பழநித் தலைவா!
தாலோ தாலேலோ
தமிழால் உயரும் சிவமா மலையாய்
தாலோ தாலேலோ. (148)
(விசையைகிரி வேலச் சின்னையன்)

## 4. சப்பாணிப் பருவம்

(க்ஷேத்திரக் கோவை பிள்ளைத் தமிழ்)

திருவலஞ் சுழிஐங்க ரத்தனா லயமெனத்,
திருஏரகப் பதியெனும்
திருநகரம் உன்பொனா லயமெனச், சேய்ஞலூர்
திகழ்தண்டி ஆலயமென,

மருவும்ஆ வடுதுறைவன் விடையினு லயமென்ன,
வந்தகு ரியனுலயம்
மகிழ்சூரி யன்கோயி லாமெனச், சீகாழி
வடுகனு லயமாமெனப்,
பெருகுசிற் சபைசபா பதியினு லயமெனப்
பேசுதிரு வாரூர்நகர்
பெரியநா யகர்கோயி லென்னவா னோர்களும்
பேணுமிவை மத்தியாகத்
தருமருத வனமகா லிங்கநா யகன்மதலை
சப்பாணி கொட்டி யருளே
தநதைவெண் காடர்புகழ் எந்தைமுரு கேசனே
சப்பாணி கொட்டி யருளே. (149)

(காஞ்சி - சிதம்பர முனிவர்)

(தணிகைப் பிள்ளைத் தமிழ்)

மலையலையை அங்கையில் அடக்கி, இகல் வாதாவி
மலையலை வயிற்றடக்கி
வண்டமிழ் எனும்புதிய தென்கலை யுடன்பழைய
வடகலையை நாவடக்கி
நிலவலயம் உத்தரம் தாழ்ந்துதென் திக்கின் மேல்
நிமிர்தலைத் தாளடக்கி
நீனிற விடத்தினை மிடற்றடக் குங்கயிலை
நிமலனை உளத்தடக்கிக்
குலவிய கருப்பநிறை மாதரென மந்தநடை
கொண்டுவளர் தென்றலெனுமோர்
குழவியைத் தன்வயின் அடக்குமல யத்திலமர்
குறுமுனிக் கருள்குரவனுய்த்
தலைமைபெறு வீட்டுநெறி காட்டுதணி கைக்கிறைவ
சப்பாணி கொட்டி யருளே
சரவணப் பொய்கைதனில் அவதரித் திடுமுருக
சப்பாணி கொட்டியருளே.

(கந்தப்ப தேசிகர் 150)

## 5. முத்தப் பருவம்

(சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்)

பாவாய்! குதலைக் குயிலே! மழலைப்
பசலை மடக் கிளியே!
பவளக் கொடியே! தவளத் தரளப்
பணியே! கண் மணியே!
பூவாய் எனவந் திமயத் தரசன்
புகழத் திகழும் இளம்
புதல்விக் கருமைப் புதல்வா! பெருமைப்
புவனத் தொருமுதல்வா!
தேவா திபனே! கருணை லயனே!
சிவனேயத் தவனே!
சேயே! சுருதித் தாயே! தமிழின்
திருவே! ஒருபோதும்
மூவா முதலே! மூவிரு முகனே!
முத்தந் தந்தருளே!
முருகா! *செய்கை முராரிதன் மருகா!
முத்தந் தந்தருளே! (151)

(அந்தகக்கவி வீரராகவர்)

(போரூர் முருகன் பிள்ளைத் தமிழ்)

பூவே! பூவிற் பரிமளமே! யப்
பூநிறை சுவை நறவே!
பொங்குங் கடலே! கடலில் உதித்தெழு
புனிதத் தெள்ளமுதே!
காவே! காவிற் கொஞ்சும் பஞ்ச
வனக்கட வுட்கிளியே!
கண்ணே! கண்ணுறு பாவாய்! பூவாய்!
கனியே! கனிரசமே!

---

* செய்கை — செய்யூர் = சேயூர்.

தேவே! தேவர் சிரோமணி யேயென்
சீருயிரே! உயிரிற்
செம்பொரு ளே!அரு ளே!முழு மணியே!
மணியிற் தேசிகமே!
மூவா! மறையே! மறையின் பொருளே!
முத்தந் தந்தருளே!
முத்தமிழ் நற்சம ரப்பதி நாயக!
முத்தந் தந்தருளே. (152)

(சிதம்பர சுவாமிகள்)

## 6. வருகைப் பருவம்

(திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்)

பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமான் என்னும் பேராளா!
சேரா நிருதர் குலகல்கா!
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா! தேவர் சிறைமீட்ட
செல்வா' என்றுன் திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடன்அப்
பாவா வாவென் றுனைப்போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே. 153.

(பகழிக் கூத்தர்)

(பழநிப் பிள்ளைத் தமிழ்)

சீரார் நலஞ்சேர் பூவுலகில்,
தேவா சுரரில், மற்றையரில்

தினமும் உனது கொலுக்காணச்
செல்லா தாரார்; திறைவளங்கள்
தாரா தாரார்; உனது பதம்
தனையே வணங்கித் தொழவேண்டித்
தழுவா தாரார் எவ்வேளை
சமயங் கிடைக்கும் என நினைந்து
வாரா தாரார்; உனதருளை
வாழ்த்திப் புகழ்ந்து துதிக்கமனம்
வசியா தாரார்; பணிவிடைகள்
வரிசைப் படியே நடத்தாதார்
ஆர்ஆர் எனத்தா லாட்டுகின்ற
அரசே; வருக வருகவே
அருள்செர் பழநிச் சிவகிரிவாழ்
ஐயா வருக வருகவே. 154.

(வேலச்சின்னேவையன்)

( க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் )

ஐந்தரு எனுங்கற்ப கச்சோலை வருக! அறி
வானந்த வெள்ளம் வருக!
அனந்தகல் யாண மேருகிரி வருகவே
அங்கை ஆமலகம் வருக!
சிந்தையில் மகோதயஞ் செய்திருளை நீக்கிடுஞ்
சிவஞான பானு வருக!
செனனவெப் பந்தணிக் குங்கோடி மதிவருக
தித்திக்கும் அமுதம் வருக
எந்தையே வருகஎனை, ஈன்றதா யேவருக,
என்கண்மணி வருக வருக!
எண்ணனந் தங்கோடி மன்மதா காரமாம்
என்றுமிளை யோன் வருகவே
மைந்தனேவருக, மணியே வருக, வள்ளலே
வருக, வைப்பே வருகவே
மாயூர நகர்மேவு கேயூர மணிபுய
மயூரவா கனன்வருகவே. 155.

(காஞ்சி – சிதம்பர முனிவர்)

## 7. அம்புலிப் பருவம்

(சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்)

தவிராத வெவ்வினை தவிர்க்குமுரு காறும்
தரித்தா றெழுத்தோதலாம்
சந்நிதிக் கருணகிரி நாதன் திருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந்துய்யலாம்
புவிராஜன் வளவன் கழுக்குன்றின் வளமைபுரி
புண்ணியம் தரிசிக்கலாம்
பொருஞ்சூர னைப்பொரும் கதைமுதற் கந்தப்
புராணக் கடற் காணலாம்
கவிராஜன் இப்பிரான் மிசைசெய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்
கவிவீர ராகவன் சொற்றபிள் ளைக்கவி
கலம்பகக் கவி வினவலாம்
அவிராட கக்கோவில் புக்குவிளை யாடலாம்
அம்புலீ ஆட வாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே. 156.

(அந்தகக் கவி வீரராகவர்)

(முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்)

குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்
குடித்திட விடுத்து நின்றான்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப் புடைத்தான்
இன்றைக் குழந்தையென் றெண்ணது குலிசன்முதல்
எண்மரும் பிறரும் ஒருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை; அது கிடக்க
முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்ட நாள்
முழுமதிக் கடவுள் நீ அவடித்திப் புண்டது
மொழிந்திடக் கடவதன்றால்

அன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
அம்புலீ ஆடவாவே;
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ஆடவாவே 157.

(குமரகுருபர சுவாமிகள்)

## 8. சிற்றில் பருவம்

(திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்)

கந்தப் பதுமச் சரவணமுங்
கந்த புரியும் கந்தவெற்பும்
கழுநீர் உதிக்கும் திருத்தணியும்
காஞ்சி புரத்தின் மாவடியும்
சொந்தப் புரிஏ ரகத்துடனே
சோலை மலையும் பரங்குன்றும்
துங்கத் திருஆ வினன்குடியும்
சோதித் திருவேங் கடமலையும்
சந்தப் பொதியும் குற்ருலத்
தலமும் இலஞ்சித் தமிழ்ப்பதியும்
தழைக்குங் கதிர்கா மத்தடமும்
சயிலந் தோறும் விளையாடிச்
செந்திற் பதியும் புரந்தபிரான்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்லுத் தவழும் திருமலையிற்
செல்வா சிற்றில் சிதையேலே. 158.

(கவிராஜ பண்டாரத்தையா)

(மயிலம் முருகன் பிள்ளைத் தமிழ்)

ஊரார் பெருவீ டிழைக்குங்கா
லுன்முன் னவனைத் தொழுதிழைப்பர்
உகந்து சிறுவீ டியாமிழைப்பின்
உனது சரணம் தொழுதிழைப்போம்
தேரா யதுவும் ஒருகுறப்புன்
சிறுமி மிச்சில் தின்னமாநீ
தின்ற தனையாம் இனியறியத்
தெய்வ யானை தனக்குரைப்பேம்

பேரா யிரங்கள் பெற்றபிரான்
பெற்ற பிள்ளை யானுலென்!
பெரிய இமையப் பேராட்டி
பெற்ற பெருவாழ் வானுலென்!
ஆரா னுலென் இனிப்பொறேம்
அடியேஞ் சிற்றில் அழியேலே.
அனகா மயிலைக் கிரிமுருகா
அடியேஞ் சிற்றில் அழியேலே! 159.
(இலக்கண விளக்கம் - வைத்தியநாத தேசிகர்)

(விரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்)

வேதன் முடியிற் படுங்கமலம்
விண்ணோர் சிரத்தில் அணிபதுமம்
விசய மயில்மேல் எழுமுளரி
விமலர் புயஞ்சேர் திருக்கஞ்சம்
சாதம் ஒழிக்கும் அம்புயமெந்
தலைமே லிருக்கும் புதுநளினம்
தண்டை சதங்கை கிங்கிணிசேர்
சலசம் புவியிற் படலாமோ
காதம் புதிய மணங்கமழும்
கடம்பா முருகா கதிர்வேலா!
கந்தா குமரா பெருங்கருணைக்
கண்ணு வண்ணு கதியருள் ஐ
யா! தண் களப மணிமார்பா
அடியேஞ் சிற்றில் அழியேலே
அரசே! விரிஞ்சைப் பதிவாழ்வே!
அடியேஞ் சிற்றில் அழியேலே. 160.

பூத்தே உலகம் புரப்பாளைப்
பொய்யர் தமக்குக் கரப்பாளைப்
பொழியுங் கருணை விழியாளைப்
பொற்புங் கற்பும் அழியாளைக்
கூத்தை உடையான் இடத்தாளைக்
குவிமா முலைமேல் வடத்தாளைக்
குறையா எண்ணெண் கலையாளைக்
குளிர்சேர் இமய மலையாளை
மாத்தே வருக்கும் தெளியாளை
வணங்கும் அடியார்க் கெளியாளை
வரையைச் சிலையா வளைத்தாளை
மறைக்கு முதலாய் முளைத்தாளை

ஆத்தே ஆத்தே எனுங்குமரா
அடியேஞ் சிற்றில் அழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே!
அடியேஞ் சிற்றில் அழியேலே. 161.

பொய்யா உளத்தில் இருப்பாரைப்
பொலியுங் கயிலைப் பொருப்பாரைப்
பொருமா கரியை உரிப்பாரைப்
புரமூன் றெரிய எரிப்பாரைக்
கையார் மறிமான் மழுவாரைக்
கமலா லயன்மால் தொழுவாரைக்
கனக சபையில் நடிப்பாரைக்
கங்கை முடியின் முடிப்பாரை
மையார் மலத்தை ஒழிப்பாரை
மதவேள் எரிய விழிப்பாரை
மறலி நடுங்கப் பொருவாரை
வழிக்குத் துணையா வருவாரை
ஐயா ஐயா எனுங்குமரா
அடியேஞ் சிற்றில் அழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே!
அடியேஞ் சிற்றில் அழியேலே. 162.

இம்மா நிலத்தை அளந்தானை
இகல்மா மருதம் பிளந்தானை
இலங்கா புரியைக் கெடுத்தானை
இமையோர்க் கமுதம் கொடுத்தானைக்
கைம்மா இடுக்கண் களைந்தானைக்
ககனம் அளவா வளர்ந்தானைக்
கன்றால் விளவை எறிந்தானைக்
கருதார் உளத்திற் பிரிந்தானை
மைம்மா சுணத்தில் நடித்தானை
வருபா ரதத்தை முடித்தானை
வையம் அனைத்தும் அயின்றானை
வடத்தின் இலையில் துயின்றானை
அம்மான் அம்மான் எனுங்குமரா!
அடியேஞ் சிற்றில் அழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே!
அடியேஞ் சிற்றில் அழியேலே. 163.

(மார்க்சகாய தேவர்)

## 9. சிறுபறைப் பருவம்

( க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ் )

ஒருத்தியென வள்ளிகலி யாணமுஞ் செய்துபின்
உற்றிருந் தருள் மாமலை
உமைக்கரன் உரைத்ததென வள்ளிக் கனைத்தையும்
உகந்தே உரைத்தருள்மலை
மருத்தங்கு நீலமலர் மூன்றுமுப் போதினும்
மகிழ்ந்தே தினந்தருமலை
வள்ளலுனை அர்ச்சித்து வாசவன் வெள்ளானை
வாங்கக் கொடுத்தருள்மலை
கருத்தங்கு பவமெலாம் தூரத்தி லேநின்று
கண்டோர்க் கொழித்தருள்மலை
கண்ணுதலை எந்தைநீ சிவலிங்க வடிவினிற்
கண்டுபூ சித்திடுமலை
திருத்தணி மலைக்குமர ஈராறு கைக்கொண்டு
சிறுபறை முழக்கியருளே
தினநீல மலர்மேவு பன்னிரு புயாசலா
சிறுபறை முழக்கி யருளே. 164.

(காஞ்சி. சிதம்பர முனிவர்)

( முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழ் )

இழுமென் மொழித்தெளி தமிழின் வடித்திடு நவரசமே!
இதய இருட்டற உணர்வில் உதித்திடு சுடரொளியே!
கழுவு மணிக்கலன் நடுவில் இழைத்திடு குலமணியே!
கனிதரு முக்கனி யொடிவடி கட்டிய சுவையமுதே!
ஒழுகு நறைச்செழு மலர்விரி யக்கமழ் புதுமணமே!
உருகும் உளத்தருள் பெருகி உவட்டெழு சலநிதியே!
பழமறை கட்கொரு முதல்வன் முழக்குக சிறுபறையே!
பருதி புரிச்சிறு குமரன் முழக்குக சிறுபறையே! 165.

(குமர குருபர சுவாமிகள்)

## 10. சிறுதேர்ப் பருவம்

(திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்)

மாதரிரு விழியாகும் அம்புக்கும் மதனவேள்
வாளிக்கும் நடுவாகியே
மாலாகும் அருணகிரி நாதர்அரு ணைச்சிகரி
வடவாச விற்பயில, நம்
பாதமலர் பாடுநீ என்னஅடி யேனும்எப்
படிபாட என்றஅளவில்
பத்திதரு முத்திநகை அத்திஇறை வாஎனப்
பாடென்று சொல்லிஇயலாற்
பூதலமும் எங்கிளையும் ஈடேறநாவிற்
பொறித்தவ ருரைத்த கவிதைப்
புத்தமுது பன்னிரு செவிக்குநிறை யக்கொண்டு
போதமு னளித்தருளினற்
சீதள மலர்ச்சரணம் உதவுகர னூராளி
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி
சிதறுமுனி சிறுதேர் உருட்டியருளே. 166.

விழிததும்பிய புனலின் முழுகிவந் தனைபுரியும்
அடியார்க ளுக்கமுதமே
வினையெனுங் குவடுபொடி படநடம் பயிலுமொரு
மயில்வாகனக் கடவுளே
பழிசுமந் திடுமசுரர் முடியொடும் தலைசிதற
வடிவே லெடுத்த அரசே
பவமெனுங் கடலில்விழும் எனையும்அன் பெனுமினிய
கரையேற விட்டபுணையே

பொழிகரும் புயலனைய இனியஅம் பிகைமுலைகள்
பொழிபால் குடித்தகளிறே
புதியசெங் கமலமலர் சரவணந் தனில்மருவி
விளையாடி யிட்டஅரசே
செழியசெந் தமிழ்குலவு திருவிரிஞ் சையின்முருக;
சிறுதேர் உருட்டியருளே;
சிவசிதம் பரநடன மிடுதிகம் பரர்குமர;
சிறுதேர் உருட்டியருளே. 167.

(மார்க்கசகாய தேவர்).

(திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்)

மங்கல மடப்பிடி குறக்கொடி யிடத்தினும்
வலத்தினும் இருந்து வாழ்க
மாமயிலும் வாழ்கஅதன் மேலிலகு நூபுரம்
வனைந்தசே வடியும்வாழ்க
பொங்கொளி தயங்குதிரு ஆபரண முந்நூல்
புனைந்திடுபொன் மார்பும் வாழ்க
போர்வேலும் ஈராறு செங்கையும் பன்னிரு
புயங்கள்சுந் தரமும்வாழ்க
தங்குகரு ணைக்கண்கள் ஆறிரண் டுந்திருச்
சண்முகத் தருளும் வாழ்கத்
தாழ்குழைமுந் நான்கினெடு பவளவா யாறுடன்
தடமகுடம் இனிது வாழ்கத்
திங்கள்மும் மாரிபொழி யச்சேவல் வாழ்கநீ
சிறுதே ருருட்டியருளே
சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே. 168.

(கவிராஜ பண்டாரத்தையா)

# 43. தனிப் பாடல்கள்

(குமரகுருபர சுவாமிகளின் நூல்கள் எழுதப்பட்ட ஓலைகளிற் காணப்பட்ட தனிப் பாடல்கள்; டாக்டர் சுவாமிநாதையர் வெளியிட்ட பிரபந்தத் திரட்டு)

—: o :—

ஆறு முகவனை, நாறு மலர்கொடு
கூறும் அடியவர், பேறு பெறுவரே. 169.

கற்றறிவ தென்றும் கனவினுமுன் னமையே
மற்றறியேன் வள்ளி மணவாளா - வெற்றிச்
செழுத்திருக்கை வேலைச் சிறுகாலை வாழ்த்தி
எழுந்திருக்கை வேலை எனக்கு. 170.

# 44. வாழ்த்து

—: o :—

( முடிவுரை )

அந்த ணளர்சொல் ஆரணம் ஓங்குக
வந்து நீதியை மன்னவர் மன்னுக
எந்தை ஆறெழுத் தேபொரு ளாகுக
கந்த வேலடி யார்கள் களிக்கவே. 171.

(பரங்கிரிப் புராணம் – இறுதிப் பாட்டு).

*பதினோராந் திருமுறை முற்றிற்று.

—: o :—

---

*குறிப்பு :—பக்கம் 794 பொருளடக்கத்தில் ‘ பாட்டு எண் ’ என்னும் தலைப்பின் கீழ் 2. பரிபாடலுக்கு நேராக உள்ள 2–8 என்பதற்குப் பதிலாக 2–9 என்று திருத்தி, அதற்கேற்ப 3 முதல் 41 வரையிலுள்ள நூல்களுக்கு உரிய பாட்டு எண்களின் ஒவ்வொன்று சேர்த்து. இறுதியில் 42. பிள்ளைத் தமிழ்கள் 142-க்குப் பதிலாக 143 என்று திருத்திக் கொள்ளவும்.

உ
திருந்நரிகேசன் துணை



# பன்னிரண்டாம் திருமுறை

—:o:—

முருகவேளின் பன்னிரண்டாம் திருமுறை – சிவபிரானுக்குரிய 12–ஆம் திருமுறையிற் போல முருகன் **அடியார் சரித்திரங்களைக்** கூறும். அது "சேய்த்தொண்டர் புராணம்" என்னும் பெயருடன் வரகவி–தேனூர் சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் இயற்றினது. 2708 பாடல்களைக் கொண்டது: விரிவஞ்சி, அந்நூல் இப்போது அச்சிடப்படாமல், அந்த அந்த அடியார்களின் சுருக்க வரலாறு அந் நூலுக்கு ஆதாரமாயிருந்த பழைய தமிழ் நூற் பாடல்களுடன் இப்போது உரைநடை உருவாக வெளிவருகின்றது. பதினோராம் திருமுறையிற் கூறியதுபோலப், பத்தொன்பதாம் நூற்றுண்டுக்கு முன் இருந்த 41 அடியார்களைப்பற்றிய குறிப்பு மாத்திரம் இத்திருமுறையிற் காண்பதாகும். அவ்வடியார்களாவார்:—

1. செந்தில்வாழ் அந்தணர்
2. அகத்தியர்
3. முசுகுந்தர்
4. நாகனுர்
5. நக்கீரர்
6. நல்லியக்கோடன்
7. **பரிபாடல் ஆசிரியர்கள்:—**
   **(1) கடுவன் இளஎயினனுர்**
   **(2) ஆசிரியன் நல்லந்துவனுர்**
   (3) குன்றம் பூதனுர்
   (4) கேசவனுர்
   (5) நல்லழிசியார்
   (6) நப்பண்ணனுர்
   (7) நல்லச்சுதனுர்
8. கல்லாட நூலாசிரியர்
9. ஔவையார்
10. சேந்தனுர்
11. கச்சியப்ப சிவாசாரியர்

12. கோனேரியப்பர்
13. முருகம்மையார்
14. பொய்யாமொழியார்
15. அருணகிரிநாதர்
16. ஞானவரோதயர்
17. நிரம்ப அழகிய தேசிகர்
18. சேறைக் கவிராசபிள்ளை
19. குமரகுருபரர்
20. சிவப்பிரகாச சுவாமிகள்
21. திருஞானசம்பந்த தேசிகர்
22. சம்பந்த சரணலய சுவாமிகள்
23. மார்க்க சகாயதேவர்
24. குணசீலர்
25. அந்தகக் கவி
வீரராகவ முதலியார்
26. சிதம்பர சுவாமிகள்
27. சிற்றம்பல நாடிகள்
28. வென்றிமாலைக் கவிராயர்
29. பகழிக் கூத்தர்
30. பாலசுப்பிரமணியக் கவிராயர்
31. விசயகிரி சின்னேவையன்
32. வேதாந்த
சுப்பிரமணிய பிள்ளை
33. மேலகரம் பண்டாரக்கவிராயர்
34. வைத்தியநாத தேசிகர்
35. சாமிநாத தேசிகர்
36. சிவஞான தேசிகர்
37. கச்சியப்ப முநிவர்
38. தொட்டிக்கலை
சுப்பிரமணிய முநிவர்
39. காஞ்சி, சிதம்பர முநிவர்
40. செங்கோடைக் கவி
ராஜப் பண்டாரத்தையா
41. கந்தப்ப தேசிகர்

2. பதினேராந் திருமுறையின் முன்னுரையிற் கூறிய வாறு மேற் கூறப்பட்டவற்றுள் விடுபட்டன இருப்பின் அவையும், 19-ஆம் நூற்றாண்டிலும் பின்னரும் இருந்த பெரிய அடியார்களின் வரலாறும் 12-ஆம் திருமுறையின இரண்டாம் பகுதியாக வெளியிடலாம். இத் திருமுறையில் அவ்வவ் வடியார் முருகவேளுடன் சம்பந்தப்பட்ட குறிப்புக்கள் மாத்திரம்தான் கூறப்பட்டுள்ளன.

3. வரலாறுகளின் தலைப்பில் 'அடியேன்', 'அடியார்க்கும் அடியேன்' என வரும் உடுக்குறியிட்ட அடிகள் சேய்த் தொண்டர்த் தொகையினின்றும் எடுக்கப்பட்டன. அச் சேய்த் தொண்டர்த் தொகை வருமாறு :—

## சேய்த் தொண்டர்த் தொகை

—:o:—

(தேனூர் வரகவி. சொக்கலிங்கம் பிள்ளை பாடியது)

### 1

**செந்தில்வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்**
செங்கல்வ கிரிஞான சத்திதரன தன்பால்

பைந்தமிழ்தேர்ந் தருள்முநிவர் அடியார்க்கும் அடியேன்
பகருடுப்பூர் நாகனுர் அடியார்க்கும் அடியேன்
அந்தமில்சீர் நக்கீரர் அடியார்க்கும் அடியேன்
அருளார்நல் லியக்கோடர் அடியார்க்கும் அடியேன்
எந்தமிழ்மு தாட்டியார் அடியார்க்கும் அடியேன்
எம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

2

கம்பைசூழ் காஞ்சிநகர் மாதவத்தின் பயனைக்
கந்தவேள் திருச்சரிதம் கடலுலகுக் களித்த
நம்பெருமான் கச்சியப்பர் அடியார்க்கும் அடியேன்
நலந்திகழு முருகம்மை அடியார்க்கும் அடியேன்
இம்பரெலாம் பரவுறுபொய் யாமொழியார்க் கடியேன்
இளந்தமிழின் செழுங்கொண்டல் எனஉலகம் பரவும்
எம்பெருமான் அருணகிரி நாதர்க்கும் அடியேன்
எம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

3

குமரகுரு பரஅடிகள் அடியார்க்கும் அடியேன்
கோதில்சிவப் பிரகாசர் அடியார்க்கும் அடியேன்
திமிரமல இருளகற்றும் சிவஞானி தருமைத்
திருஞான சம்பந்த தேசிகர்க்கும் அடியேன்
அமுதகவி சம்பந்த சரணர்வர கவியென்
றறைமார்க்க சகாயர்குண சீலர்க்கும் அடியேன்
எமதுசிதம் பரதேவர் அடியார்க்கும் அடியேன்
எம்மான,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

4

வென்றிமா லைக்கவிஞர் அடியார்க்கும் அடியேன்
வியன்பகழிக் கூத்தர்தம தடியார்க்கும் அடியேன்
துன்றுபுகழ் செங்கோட்டைக் கவிராயர்க் கடியேன்
துகளறுசீர்க் கச்சியப்ப முநிவரர்க்கும் அடியேன்
நன்றுதிகழ் மாதவசுப் பிரமணியர்க் கடியேன்
நவையில்சிதம் பரமுநிவர் அடியார்க்கும் அடியேன்
என்றும் எம துளங்குடிகொள் கந்தப்பர்க் கடியேன்
எம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

5

அரகரவேல் மயிலென்பார் எல்லார்க்கும் அடியேன்
ஆலயநற் றிருத்தொண்டர் அனைவர்க்கும் அடியேன்
முருகனையே பாடுவார் எல்லார்க்கும் அடியேன்
முத்திநிலை பெறநாடி நித்தமுரு கையன்
திருவருளைச் சிந்திப்பார் அனைவர்க்கும் அடியேன்
திருத்தணியிற் பிறந்தவர்கள் எல்லார்க்கும்அடியேன்
இருகதிரைப் புறங்காணும் அழகுசுடர் வண்ணத்
தெம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

6

காவடியில் தேன்பால்மற் றவைசுமந்து செலுத்திக்
கந்தனையே போற்றுவார் அடியார்க்கும் அடியேன்
பாவலர்மா மணிபழநித் தலசரிதம் பகர்ந்த
பாலசுப் பிரமணியர் அடியார்க்கும் அடியேன்
நாவலர்தம் மாமணிசின் னப்பர்க்கும் சாமி
நாதர்க்கும் நலமருவு சேய்த்தொண்டர் தங்குற்
றேவல்புரி தொண்டரடித் தொண்டர்க்கும் அடியேன்
எம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

7

குகனேரி யப்பர்தம தடியார்க்கும் அடியேன்
குறைவிலருள் ஞானவரோ தயர்தமக்கும் அடியேன்
புகழ்சேரி ராமலிங்க நாயனுர்க் கடியேன்
புனிதகவி குஞ்சரத்தின் அடியார்க்கும் அடியேன்
தகவருமாம் பழக்கவிஞர் அடியார்க்கும் அடியேன்
தண்டபா ணிப்பெரியார் அடியார்க்கும் அடியேன்
இகமிறைஞ்சும் குமரகுரு தாசர்க்கும் அடியேன்
எம்மான்,எந் திருத்தணிகை அம்மானுக் காளே.

8

வானுர்ந்த சீர்கொள்தணி கேசர்பத நீழல்
வலங்கொள்தணி காசலவேள் அடியார்க்கும் அடியேன்
தாஞய தனிக்குமரன் திருவருள்சார் சச்சி
தானந்த நாயனுர் அடியார்க்கும் அடியேன்
தேனுருங் கடம்பணிவார் அடிநீழ லடைந்த
செல்லப்பன் காதலன் மீனுட்சி தனயன்
தேனுரன் சொக்கலிங்கன் அடிமைகேட் டுவப்பார்
திருத்தணிகை அம்மானுக் கன்பரா வாரே.

—: o :—

உ

வேலு மயிலுந் துணை.

# பன்னிரண்டாம் திருமுறை

—:o:—

## 1. செந்தில்வாழ் அந்தணர்

*"செந்தில்வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"

செந்தில் வாழ் அந்தணர் திரிசுதந்தரர் எனப் பேர் பெறுவர்; இவர்கள் கங்கைக் கரையில் தவம் செய்து, பூலோகம், சுவர்க்கலோகம், சத்தியலோகம் ஆகிய மூன்று உலகங்களிலும் சென்று வசிக்கும் சுதந்திரத்தைப் பிரமன், சிவன், திருமால் மூவரிடத்தும் வரமாகப் பெற்ற காரணத்தால் 'திரிசுதந்தரர்' எனப் பெயர் பெற்றனர். திரிசுதந்தரர் 78,000 பேர். இவர்கள் கீழ்க்கண்ட தலங்களில் கீழ்க்கண்டவாறு சென்று அமர்ந்தனர்:

1. விருத்தாசலத்தில் 1,000 பேர் சிவபிரானைப் பூசித்திருந்தனர்.
2. திருச்செந்தூரில் 2,000 பேர் முருகவேளைப் பூசித்திருந்தனர்.
3. சிதம்பரத்தில் 3,000 பேர் நடராஜப்பெருமானைப் ஷை
4. கமலாசனபுரத்தில் 4,000 பேர் திருமாலைப் பூசித்திருந்தனர்
5. திருவண்ணாமலையில் 5,000 பேர் சிவபிரானைப் பூசித்திருந்தனர்.
6. ஜகந்நாதத்தில் 6,000 பேர் திருமாலைப் பூசித்திருந்தனர்.
7. திருவீழிமிழலையில் 7,000 பேர் சிவபிரானைப் பூசித்திருந்தனர்.
8. மதுரையில் 8,000 பேர் சிவபிரானைப் பூசித்திருந்தனர்.
9. தண்டகவனத்தில் 9,000 பேர் ஸ்ரீராமரைப் பூசித்திருந்தனர்.
10. கோகுலத்தில் 10,000 பேர் திருமாலைப் பூசித்திருந்தனர்.
11. வதிரிகாச்சிரமத்தில் 11,000 பேர் திருமாலைப் பூசித்திருந்தனர்.
12. சுவாமிமலையில் 12,000 பேர் முருகவேளைப் பூசித்திருந்தனர்.

ஆக 78,000 பேர்

*திருச்செந்தூர் — அந்தணர்கள் (முக்காணியர்) இரண்டாயிரம்பேர் முருகவேளைப் பூசித்துச் சிறப்புற்றனர், இவர்களை அன்புடன் நினைப்பவரும் திரிமூர்த்திகளைப் பூசித்த பேற்றினைப் பெறுவர் எனத் திருச்செந்தூர்ப் புராணம் கூறும்:

............ யாரு மகிழ்ச்சி திளைக்கும்
செந்தமிழ் என்னும் திருத்தகு பாடை
தந்தருள் ஞானமும் தந்தருள் என்றான்.

மொழிந்தெதிர் நின்ற முனிவனை நோக்கிச்
செழுந்தமி ழுஞ்சிவ ஞானமும் வேட்பின்
எழுந்துயர் *காவி யிருங்கிரி அண்மின்
தழுந்தர முண்டதன் தன்மையும் கேண்மோ.

பாரிடை வந்து பணிந்தவர்க் கெல்லாம்
ஈருட லீட்டிருள் மாயைகன் மங்கள்
வேரொடு மாய்த்தலிற் காசியின் மேலாம்
ஞானம் எவற்றினும் மேலது நல்கும்.

ஆங்குப் படர்ந்து ஞானசத்தி
 தரனை அகத்தா மரை யிருவி
ஓங்குந் தவத்தால் முநிவர ! நின்
 உள்ளம் விழைந்த விழைவெல்லாம்
பாங்கு பெறத்தெவ் வுதிஎன்று
 பணித்த காசி நகரிறைவன்
பூங்கட் கமல பதம்இறைஞ்சி
 விடைகொண் டினிது புறம்போந்தான்.

( தணிகையை அடைந்து ஆண்டவனைக் கேட்கும் வரம் )

'' நின்பாதம் நாயேன், மணப்ப மெய்ஞ் ஞானம்
 இன்னே வழங்குபு தமிழின் பாடைப்
 புணர்ப் பினிதருளுக ''.

(வரம் பெறுவது)

இன்னபல் வரமும் நல்கென் றிரந்தனன் முநிவர் கோமான்
அன்னணம் வரங்கள் நல்கி அறுமுகக் கடவுள் அன்னோன்
தன்னைநற் றமிழின் பாடை தனக்கு முன் குரவ னுக்கிப்
பொன்னிவர் கோயி லுள்ளாற் போதந்து ஞானம் கூறும்:

---

* காவி கிரி — திருத்தணி.

"குருயிரைக் குடிக்கும் வேலிறைவன்
இயம்பிய ஞானமுற் றுணர்ந்து
நன்றுவீ றன்பிற் பன்முறை தாழ்ந்து
நளினமொத் தலர்ந்த தாள்நீழல்
ஒன்றியாங் கடித்தொண் டுஞற்றினன் பன்னாள்
உறைந்துபின் னுரிய னருளால்
மன்றல்சூழ் பொதியம் அடுத்துமுத் தமிழை
வளர்த்துவாழ்ந் திருந்தனன் முனிவன்."
(தணிகைப் புராணம்–அகத்திய ... படலம்).

(2) அகத்தியர் பழநியில் தமிழின்
விரிவிலக்கணம் போதிக்கப் பெற்றது

"தமியனேற் கருளிய இன்தமி ழதன்கூற்றை
வீற்றுரு விரித் தருளுகென்றலும்
விளம்பலுற்றனன் மேலோன்"

"இருநூற் றொருபத்தாறு, பேதமாய் நடப்பன
உயிர்மெய் யெனப் பெயர்பெறும் பெற்றியின்
வருஞ் சார்பு, நீதெரிந்திடென் றவற்றுள் விரிவெலாம்
நிகழ்த்திட நீடதிகாரம், கோதிலேந்தென வரன்முறை
உணர்த்தி வெற்குழகன் ஏகினன் கோயில்".
(பழநிப்புராணம் – அகத்தியச் சருக்கம் 50).

"வாமன முநிக்கொரு தமிழ்த்ரயமும் அபரிமிதமாக
விவரித்த கடவுட் புலவன்" (பூத...வகுப்பு).

"அகத்திய முநிக்கொரு தமிழ்த்ரயம் உரைத்தவ"
—(சித்து வகுப்பு)

"சிவனைநிகர் பொதியவரை முநிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே"
—(திருப்புகழ் 49).

"தென்றல் வரை முநிநாத ரன்று
கும்பிடந லருளே பொழிந்த
தென்பழநி மலைமே லுகந்த பெருமாளே"
—(திருப்புகழ் 185).

"தமிழ் தமிழிறை மாமுநிக்கு காதில் உணர் உணர்விடு...
குருபர குமரேசா" (திருப்புகழ் 441)

"மூதமிழ் முநிக்குக் கூட்டு குருநாதா" (திருப். 919)

"இயலும் இசைகளும் நடனமும் வகைவகை
சத்யப் படிக்கினித கத்யர்க்கு ணர்த்தியருள்
தம்பிரானே" —(திருப்புகழ் 921)

### (3) அகத்தியர் முருகவேளைக் குன்றக்குடியில் வழிபட்டது.

மலைகளுள் குன்றக்குடி எவ்வாறு உயர்ந்ததென அகத்தியர் சிவபிரானிடம் விண்ணப்பிக்கச், சிவபிரான் — 'கந்தபிரான் தாம்ஏறிய மயிலினை முன்னொருகால் மலையாகுக' எனக் கோபத்திற் சபித்தனர் ; மயிலும் கந்தபிரானை வணங்கி 'யான் உய்வதெப்படி' எனக் கேட்டது. கந்தபிரான் — 'நீசெல்க ; யானும் அங்கு வருவேன்' என்றார். சபித்த படியே மயில் மலை உருவமாயிற்று. அந்த மலையில் குமாரக் கடவுள் வந்து வீற்றிருந்தார். குமாரக்கடவுள் அங்கு வந்து வீற்றிருப்பதால் மயூரகிரி தனிச் சிறப்புற்றது என விளக்கினர். இவ்வரலாற்றை அறிந்தவுடன் அகத்தியர் மயூரகிரிக்கு வந்து, சரவணதடத்தில் முழுகி, மலைவலம் செய்து, பூசனை புரிந்தனர்.

*" தன்மம் வேண்டிலன் தனிவிசும் பாண்டு மீள் வதனால் ;
பொன்னை வேண்டிலன் *முப்பகை கொண்டு போதலினால்;
*மின்னை வேண்டிலன் யௌவனம் அகறலின் ; மேலோய்
மன்னு நின்பதம் வேண்டினன் வழங்கிட வேண்டும் "

(மயூரகிரிப் புராணம் – அகத்தியச் சருக்கம்).

முருகா ! உனது திருவடியை யான் அடைதல் வேண்டும்; அந்த அருளைப் பாலித்தருள்க என வேண்டினர் ; தாம் விரும்பிய வரத்தைப் பெற்றனர்.

இவ்வாறு, தணிகை, பழநி, குன்றக்குடி என்னும் தலங்களில் வழிபட்டு, அகத்தியர் முருகவேளின் முதற்றனி அடியாராயினர்.

## 3. முசுகுந்தர்

—: o :—

### பகரரிய பத்திநிறை முசுகுந்தர்க் கடியேன்

கயிலையில் சிவபிரானும் தேவியும் வீற்றிருந்த சோலையில் ஒரு முசு (ஆண் குரங்கு) வில்வ இலைகளை நிரம்பப் பறித்து அவர்கள் மீது சொரிந்தது. அது நம்மை வழிபடுகின்றது என இறைவன் கூறத், தேவி அந்த முசுவுக்கு ஞானத்தை நல்கினள். முசு கீழே இறங்கி வந்து அடியனேன் பிழையைப்

---

* தன்மம் – தருமம் ; முப்பகை – தாயத்தார், கள்வர், அசுரர் ; மின் – பெண்கள்.

பொறுத்தருள்க என வேண்டிற்று, நீ எம்மை வில்வ இலைகளால் வழிபாடு புரிந்தனை. மாநுடனாகப் பிறந்து முழுதுலகையாளுக நீ என இறைவர் திருவாய்மலர்ந்தார். முசு "பெருமானே! நித்தம் உங்களைத் தரிசித்திருந்த நான் உங்களை பிரிந்து எங்ஙனம் இருப்பேன்; செல்வத்தில் மயங்கி நான் உய்யும் வழியை இழத்தல் கூடுமே" எனத் துக்கிக்க, இறைவன் நீ பூமியிற் சிலகாலம் வாழ்ந்து பின்னர் இங்கு மீளுக என்றனர். முசு 'இந்த முசு முகத்துடனே நான் மண் மீது பிறக்க அருளுக; அப்போதுதான் ஆணவம் என்னைப் பீடிக்காது' என்றது. 'நன்று' என்றனர் இறைவர்; முசுவும் உலகை ஆண்டு வந்த அரிச்சந்திரன் என்பவனுக்கு மருமானாக உலகில் உதித்து, முசுகுந்தன் எனப் பேர் பெற்றது; கருவூர் தமது ராஜதானியாக முசுகுந்தர் உலகை ஆண்டனர். இவர் சூரனுடைய அரசாட்சிக் காலத்தில் இருந்தவர். திருப்பரங் குன்றத்தில் முருகவேள் தேவசேனையைத் திருமணம் செய்த போது இந்திரனால் அந்தத் திருமணத்துக்குத் திருப்பரங் குன்றத்துக்கு வரவழைக்கப்பட்டனர் முசுகுந்தர். ஆறுமுகப் பெருமானது அடித் தாமரை மறவாத அன்பராதலால் முசுகுந்தர் முருகவேளுக்குத் திருமணம் எனக் கேட்டதும் அளவிடற்கரிய மகிழ்ச்சி எய்தி அழைக்க வந்த தூதரை நோக்கி —

"ஈண்டை மாநிதி யாவும் நல்குகோ
காண்ட குங்குடை கவரி நல்குகோ
ஆண்டி ருந்தஎன் அரசு நல்குகோ
வேண்டு கின்றதென் விளம்புவீர்" என்றார்.

— கந்தபுராணம் 5–2–55.

திருமணத்தைத் தரிசித்து முசுகுந்தர் கருவூருக்கு மீண்டனர். பின்னர், முசுகுந்தர் வசிட்ட முனிவர் உபதேசித்தபடி வெள்ளி நாள் விரதம் (சுக்ரவார விரதம்), கார்த்திகை நாள் (கிருத்திகை விரதம்), கந்த ஷஷ்டி விரதம் ஆகிய விரதங்களை அநுட்டித்தார். முருகவேள் மகிழ்ந்து எதிர் தோன்றி எந்த நல் வரம் வேண்டுகின்றாய் என வினவினர். முசுகுந்தர் 'முருகா! என் அரசாட்சி உலகெலாம் நன்று நடைபெற வேண்டி உம்மிடம் உள்ள வீரவாகு ஆதிய வீரர்களை எனக்குத் துணைபுரிய அருளுதி' என்றனர். முருகவேளும் நன்றெனக் கூறி வீரவாகு முதலியோரை நோக்கி — "முசுகுந்தன் உங்களைக் காட்டிலும் என்பால் அதிக அன்புள்ளவன், நீங்கள் அவனுக்குத் துணைவராய்ப் போய் இருத்திர்" என்றனர். அப்போது வீரவாகு முதலானோர் சூரர் குலத்துடன் மாறுபட்

டழித்த நாங்கள் ஒரு மாநுட அரசனிடம் தொழில்புரிய மாட்டோம் எனப் பதில் கூறினர். அறுமுகவேள் '' நம் உரை மறுத்தீர் ஆதலால் நீங்கள் மாநுடராய்அதே முசுகுந்தனுக்குச் சேனை வீரர்களாகக் கடவீர்; பின்னர் பற்பகல் கழிந்த பின் நோற்று எம் பக்கலில் வருவீர்களாக'' எனக் கட்டளையிட்டனர். வீரவாகு முதலானோர் தமது பிழையை நினைத்து "பொய்யரேம் பிழைபொறுத் தருடியால்'' என்று முருகனது பொன்னடி பணிந்தார். அங்ஙனமே முசுகுந்தருக்குச் சேனைகளாக வந்து சேர்ந்தனர் வீரவாகு முதலானோர். மாநுடனாக வந்த வீரவாகு புட்பகந்தி என்பவளை வேட்டு, தனது மகள் சித்ரவல்லி என்பவளை முசுகுந்தற்குத் திருமணம் புரிவித்தார். சித்ரவல்லிக்குப் பிறந்த குமரன் அங்கிவன்மன். முசுகுந்தர் இந்திரனுக்குத் துணையாகச் சென்று அவுணர்களை அட்டார். இந்திரன் பூசித்திருந்த தியாகராஜ மூர்த்தியை இறை அருள் துணைசெய்ய முசுகுந்தர் பெற்றுத் திருவாரூரில் தாபித்து வழிபட்டார். பின்னர் அங்கிவன்மனுக்கு முடிசூட்டி நோற்றிருந்து கயிலையை அடைந்தார். வீரவாகுதேவரும் தம்பியர் எண்மரும் இலக்கருடன் தங்கள் குழந்தைகளை அங்கிவன்மன்பால் இருத்தித் தாங்கள் அரியதவம் ஆற்றி மாநுடத்தன்மை நீங்கி அனைவர்களும் கந்தகிரியை அடைந்தார்கள். இவ் வரலாற்றைக் குறிக்கும் கந்தபுராணச் செய்யுள்களுள் ஒருசில காட்டுவாம் :

**வில்வ இலையிட்டு பூசித்த முசுவுக்கு இறைவன் அருள்புரிதல்**

விழுமியதொர் கூவிளையின் மெல்லிலைகள் இட்டு
வழிபடல் புரிந்தனை மனுக்குலம் உதித்து
முழுதுலகை யாளுகென முன்னவன் மொழிந்தான்.

**முசு முகத்துடன் உதித்தது**

தாரணி ஆள்அரிச் சந்திரன் என்போன்
ஓர்மரு மானென வேஉதித் தன்றே;

மாமுக மேமுசு மற்றுள எல்லாம்
காமரில் ஏர்தரு காட்சிய தாகிக்
கோமுறை சேர்முசு குந்தன் எனுவோர்
நாம இயற்பெயர் நண்ணிய தன்றே.

—(கந்தபுராணம் 5-2-37, 43, 44).

**முசுகுந்தர் தவமிருந்து முருகவேளிடம் வரம் கேட்டது**

...... ஆறுமா முகமுடை அமலன் ......
கோனவன் தனக் கருளுவான் மஞ்ஞைமேல் கொண்டு
தானை வீரனும் எண்மரும் இலக்கருஞ் சார ... வந்தான்.

வந்து தோன்றலும் மன்னவர் மன்னவன் மகிழ்ந்து
கந்த வேளடி பணிந்தனன் கைதொழுஉப் பரவ
அந்த மில்பகல் விரதங்கள் ஆற்றினை அதனால்
எந்த நல்வரம் வேண்டினை அதுபுகல் என்றான்.

என்ற காலையில் முசுமுகம் உடையவன் எந்தாய்
நன்று பாரெலாம் எனதுசெங் கோலிடை நடப்பான்
வென்றி மொய்ம்பினன் ஆதியாம் வீரரை எல்லாம்
ஒன்று கேண்மையின் துணைவராத் தருதியென்
றுரைத்தான்.

### முருகவேள் வீரவாகு முதலானோரிடம் கூறுவது

நோற்றல் கூடிய முசுகுந்தன் நும்மினும் எம்பால்
ஏற்றமே தரும் அன்பினன் எழுகடற் புவியும்
போற்ற வைகுவான் நீவிர்கள் ஆங்கவன் புடைபோய்
ஆற்றல் சான்றிரு துணைவராய இருத்திர்என்
றறைந்தான்.

### வீரவாகு முதலானோர் மறுத்து, சாபம் பெறுதல்

...... சூர்குலம் தனையடும் திறலி னேங்கள்
பழிபடப் பானுவின் வழிவரும் சிறுமகன் பாங்கராகி
இழிதொழில் புரிகிலோம் எனமறுத் துரைசெய்தார்
யாரும் வீரர்
ஞான நா யகன்அவர் மொழிதனைத் தேர்ந்துநம்
உரைமறுத்தீர்
ஆனதோர் பான்மையால் நீவிர்மா நுடவராய்அவனி
மன்னன்
சேனையா கிப்புறம் போற்றியே பற்பகற்
சேர்திர் பின்னர்
வானுளோர் புகழவே நோற்றுநம் பக்கலில்
வருதிர் என்றான்.

— கந்தபுராணம் 6-23-31.

### முசுகுந்தர் தன் மகனுக்கு முடிசூட்டிக் கயிலையை அடைதல்

கருவூரில் - எண்ணரிய பலகாலம் இறையரசு செலுத்தியபின்
மண்ணுலகம் புரக்க அங்கிவன்மனுக்கு முடிசூட்டித்
துண்ணெனவே நோற்றிருந்து தொல்கயிலை
தனை அடைந்தான்.

துங்கமிகு முசுகுந்தன் தொல்கயிலை அடைந்தபின்னர்
எங்கள் விறல் மொய்ம்பினனும் இலக்கருடன் எண்மர்களும்
தங்கள் சிறூர் தமைவிளித்துத் தத்தமது சிறப்பு நல்கி
அங்கிவன்மன் பாலிருத்தி அரியதவம் ஆற்றினரே ;

மாதவம்எண் ணிலஇயற்றி மானுடத்தன் மையைநீங்கி
ஆதிதனில் அடல்எய்தி அருள்முறையால் அனைவர்களும்
மேதகுசீர் கந்தகிரி விரைந்தேகி வேற்கடவுள்
பாதமலர் பணிந்தேத்திப் பத்திமைசெய் துற்றனரால்.

— கந்தபுராணம் 6-23 ; 124-126.

முருகவேள் உலா வரும்போது வீரவாகு முதலிய தேவர்களுடன் முசுகுந்தரும் வருவதாக இலஞ்சி முருகன் உலா உடையார் —

" வீரவாகுவுடன் — பின்னவரும்
மற்றைய வீரர்களும் மாபூதச் சேனைகளும்
கொற்றமுசு குந்தக் குரிசிலுடன் — பற்றுமனத்
தொண்டருடன் ...... மண்டிவர " என்கின்றார் (115).

## 4. நாகனார்

—: o :—

*" பகருடுப்பூர் நாகனார் அடியார்க்கும் அடியேன் "

**பொத்தப்பி** நாட்டில், உடுப்பூரில் இருந்த வேடர்களுக்கு அதிபதி **நாகனார்**. அவர் மனைவி **தத்தை**. இவர்கள் புதல்வர்ப் பேறுவேண்டி முருகவேளை நாளும் வழிபட்டு வந்தனர் ; சேவல், மயில் இவைகளை முருகன் திருக்கோயிலுக்குச் சமர்ப்பித்தனர். வேடர்களைக் கூட்டிக் குரவைக் கூத்தாட்டுவித்தனர். முருகனுக்குத் திருவிழா எடுத்தனர். இவர்கள் வழிபாட்டுக்கு இரங்கி குமரவேள் ஒரு ஆண் மகவைத் தந்தனர். இந்த ஆண்மகவே *' கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின் ' — என மணிவாசகப் பெருமானாற் சிறப்பிக்கப்பட்ட கண்ணப்ப நாயனார்.

இவ்வரலாற்றால் கண்ணப்ப நாயனாரது தந்தை நாகனார் முருகவேளின் பழந்தொண்டர்என்பது நன்கு விளங்குகின்றது.

* திருக்கோத்தும்பி 4.

பொருவருஞ் சிறப்பின் மிக்கார் இவர்க்கினிப் புதல்வர்ப்பேறே
அரியதென் றெவருங் கூற அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல் முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நிற்பார் ;

வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்பம் நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா எடுத்த பின்றை ;

பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியா நாகற்(கு)
எயிலுடைப் புரங்கள் செற்ற எந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார் அருளி ஞலே,

கானவர் குலம்வி ளங்கத் தத்தைபாற் கருப்பம் நீட
ஊனமில் பலிகள் போக்கி உறுகடன் வெறியாட் டோடும்
ஆனவத் திங்கள் செல்ல அளவில்செய் தவத்தி ஞலே
பான்மதி உவரி யீன்ற லெனமகப் பயந்த போது ......

...... வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்
அரிக்குறுந் துடியே யன்றி அமரர்துந் துபியும் ஆர்த்த ;
அருவரைக் குறவர் தங்கள் அகன்குடிச் சீறூர் ஆயம்
பெருவிழா எடுத்து மிக்க பெருங்களி கூறும் காலை ......
தாதை ...... புதல்வனை எடுத்துக் கொண்டான் ......

(பெரியபுராணம் – கண்ணப்ப நாயனுர் 10-15);

## 5. நக்கீரர்

—:o:—

### " அந்தமில்சீர் நக்கீரர் அடியார்க்கும் அடியேன் "

மதுரைக் கடைச்சங்கப் புலவர்கள் நாற்பத்தொன் பதின்மர்களுள் தலைமைத்தானம் பெற்றிருந்தவர் நக்கீரர். இவர் திருப்பரங்குன்றத்துக்குப் போய் அங்குச் சரவணப் பொய்கையில் ஸ்நாநஞ் செய்து, அநுட்டானஞ் செய்து, ஐந் தெழுத்தைச் செபித்து மதுரைக்கு மீள்வது நித்ய கடனுகக் கொண்டிருந்தனர்.

கடவுளருள் அங்கயற்கண்ணி பாகன் சோமசுந்தரப் பெருமானையும், மானிடரில் பாண்டியனையும் தவிர வேறு யாரைக் குறித்தும் தமிழ்ப்பா பாடுவதில்லை என்ற ஒரு விரதத்தை இவர் மேற்கொண்டிருந்தார். இதை உணர்ந்த (பரங்குன்றத்து) முருகவேள் நாரதருக்கு இதைக் குறிப்பிக்க

நாரதரும் நக்கீரர் பரங்குன்றத்துக்கு வந்து திருக்குளத்தில் அநுட்டானம் செய்கின்றார் என்று குறிப்பிட, முருகவேள் தமது அருகே நின்ற உக்கிரன், அண்டாபரணன் என்னும் பூதகணத் தலைவர்களை அழைத்து "நக்கீரன் சரவணப் பொய்கையில் அநுட்டானம் செய்கின்றான்; அவனிடம் ஒரு குறை கண்டு அவனை மலைக்குகையிற் சிறையிடுங்கள்" எனக் கட்டளையிட்டனர். அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு பூதர்கள் சரவணப் பொய்கைக் கரையில் இருந்த அரசமரத்து இலை ஒன்றைக் கிள்ளிக் கீழே எறிய, அந்த இலை பாதி நீரிலும் பாதி கரையிலும் விழ, நீரில் விழுந்த பாகம் மீனாகவும், தரையில் விழுந்த பாகம் பறவையாகவும் மாறி, மீன் பறவையை நீர்ப் புறம் இழுக்கவும், பறவை மீனைத் தரைப்புறம் இழுக்கவும் மல்லாடுவதைக் குளக்கரையில் ஜெபம் செய்து கொண்டிருந்த நக்கீரர் கண்டனர். கண்ட அவர் "ஐயோ! பாவம் இரண்டும் வேதனைப் படுகின்றனவே — இம் மீனையும் பறவையையும் இணைத்து நிற்கும் மெல்லிய நரம்பன்ன பாகத்தைக் கிள்ளி விட்டால் பறவை பறந்து பிழைக்கும்; மீனும் நீரில் மறைந்து பிழைக்கும் என எண்ணி நக்கீரர் அந்த நரம்பைக் கிள்ளினர்; நல்லது செய்யக் கருதியது தீமையாகமுடிந்தது. அவர் கிள்ளின வுடன் மீனும் பறவையும் துடிதுடித்துக் குருதிகக்கி இறந்துபட்டன. உடனே பூதர்கள் இருவரும்அவர் எதிர்தோன்றி 'எங்கள் கடம்பன் உறை பரங்கிரியில் இக் கொலை பாதகத்தைச் செய்தனை" என்று ஓர் அறை நககீரர் முதுகில் அறைந்து அவரைக் கொண்டு போய் மலைக்குகையில் அடைத்துச் சென்றனர். என்செய்வார் தமிழ்ப் புலவர்; "மயிலேறும் கந்தனுக்குத் தமிழ்ச் சூட்டாக் குறையால் இக்கதி நேர்ந்தது" என உணர்ந்தார். உடனே சுவையூறும் தமிழ் மாலையாம் 'திருமுருகாற்றுப்படை'யைப் பாடிப் "பழமுதிர் சோலை மலைகிழவோனே" என முடித்தனர். அன்றிரவு குமரவேள் நக்கீரது கனவில் தோன்றி நாம் "அவனிதனில் கிழவனென வரச் சிறிது நாளாம்" எனக் கூறி மறைந்தனர். நக்கீரர் உடனே விழித்து 'என்றும் இளையாய்' என வருமாறு:—

"குன்றம் எறிந்தாய் குரை கடலிற் சூர் தடிந்தாய்
புன்றலைய பூதப் பொரு படையாய் — என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய் என் உள்ளத் துறை"

என்னும் அருமைப் பாடலைப் பாடினர். நமதாண்டவரும் நாம் கொண்ட காரியம் நிறைவேறிற்று என மகிழ்ந்து தமது வேலாயுதத்தாற் பாறையைப் பிளந்து, பாவலரைக் குகையினின்றும் வெளியேற்றினர். இந்தப் பாறைக்கு 'வேலெறி பாறை' எனப் பெயர் வழங்கும் என்பர்.

திருமுருகாற்றுப்படைக்கு "உலகம் உவப்ப" என்னும் முதல் எடுத்துத் தந்தனர் முருகவேள் என்று திரு ஆலவாயுடையார் திருவிளையாடற் புராணம் பாடினவரும், அருணகிரியாரும் கூறுவர்.

"தலமகிழ் தமிழ்க்கு நல்ல தண்டமிழ் முருகன் சென்று
நலமுறு கனவிற் சொல்வான் நற்றமிழ் முருகன் நம்பேர்
பலமிகு தமிழி னுலோர் பாடாற்றுப் படையா நம்மை
உலகமென் றெடுத்துப் பாடென் றுள்ளுறை
கொடுத்தா னன்றே"
—(ஆலவாய் – திருவிளையாடல் 44-26);

"அடிமோனை சொற்கிணங்க உலகா முவப்ப என்றுன்
அருளால் அளிக்குகந்த பெரியோனே"
—(திருப்புகழ் 203).

**மேற்சொன்ன வரலாற்றைக் குறிக்கும் பாடற் பகுதிகள்**

1. ஊற்றிருந்த தேனருவி ஒழுகியபூந் துணர்ச்சோலை
உடுத்த கூடல்
வீற்றிருந்தோன் நாற்பதுடன் ஒன்பதெனும் புலவருக்குள்
விமலன் சேர
ஆற்றல்பெறு நக்கீரன் தமிழ்க்கடலை அளந்துகொண்ட
அறிவின் மிக்கான்
கீற்றெழுந்த மதிச்சடையா னுடன்வாது கூறியருங்
கீர்த்தி கொண்டான்.

2. ...... பரங்கிரியிற் படர்ந்து நித்தம் ...... சரவணப்பூந்
தடங் குடைந்து ......
நியமக் கடன்கழித்தே அஞ்செழுத்தை யேற்றியபின்
மதுரை சேர்வான்.

3. ...... கூடல் அங்கயற்கண் பாகனன்றி.
மானிடரில் மாறனன்றி அகிலந் தன்னுள்,
துங்கமெழுந் தமிழ்மாலை தொடுப்பதில்லை யென்று
கொண்டான், தூயரேனும்
வெங்கொடுமை வருங்காலம் அறிகுவரோ குமரனருள்
மேவி லார்கள்.

4. இத்தகைய கீரனிசைத் தமிழ்மாலை செய்திலனென்
றிதயத் தெண்ணிக்
கொத்திருந்த கடம்பணிந்தோன் பக்கமுறை நாரதனைக்
குறித்து நோக்க,
அத்தகைமை அறிந்தவனும் நக்கீரன் வருசமயம்
அறையச், செவ்வேள்

மொய்த்தவிறல் உக்கிரன்அண்டாபரணன் தனையழைத்து
மொழிவ தானன்.

5. ......... சரவணப் பொய்கை ......... புனிதநீர்
சேர்வான் கீரன்
வெம்புமொரு குறையேற்றி மாமலையிற் சிறைபுகுத்தி
மேவு கென்றான்.

6. செப்பரிய நக்கீரன் சரவணப்பூந் தடங்குடைந்து
திருநீ றிட்டுக்
கப்பெழுந்த திருஅரசின் நீழலிலே மருவுபஞ்சாக்
கரவெண் பாறை
ஒப்பரிய தலனிருந்தே அஞ்செழுத்தை உருவியற்றி
உறைந்த காலை

7. திருஅரசின் இலைச்சருகு தெண்ணீரில் விழும்பொழுது
சேல தாகும்
பொருகரையில் விழும்பொழுது பறவையா மென்றுவரும்
பூதர் தேர்ந்து
மரமுடியிற் சருகதனைக் கிள்ளியிட அங்குமிங்கு
மருவி வீழப்
பரியகயல் ஒருபுறமும் பறவையுரு ஒருபுறமும்
பதைப்பக் கண்டான்.

8. அன்றுசிறி தஃறிணைகள் பட்டபெரும் பாடுகண்டே
அகத்துள் முன்னிக்
கன்றிமிக நைந்திரங்கிக் கையுகிராற் கிள்ளியிடக்
கயலும் புள்ளும்
குன்றியுடல் புரண்டுபுரண் டங்காந்து வாய்பிளந்து
குருதி கக்கிப்
பொன்றிடுங்காற் கண்மூடித் துடித்தயர்ந்து குப்புறவே
புலர்ந்த தம்மா;

9. அக்கணத்தில் உக்கிரன்அண் டாபரணன் பற்கடித்தே
அழன்று சீறிக்
கக்குநறு அருவிதவழ் கடம்பனுறை பரங்கிரியிற்
கடிய பாவ
மிக்கொலையாம் பாதகஞ்செய் தனைஎன்று வெந்அறைந்து
வெருவப் பற்றிப்
புக்கபெரு மலையின்மேற் குகையடைத்துப் பாறைகொண்டு
புதைத்தார் மன்னோ,

10. அந்தநாள் அரியதமிழ் தெரிபுலவன் நெட்டுயிர்த்தே
அயர்ந்து விம்மிச்

சிந்தைமிக நைந்துநைந்து முகஞ்சுளித்துக் கண்பனித்துத்
தேம்பித் தேம்பி
வந்துசில நாள்கழிய மனத்துறுதி படநினைத்தான்
மயிலி லேறும்
கந்தனுக்குத் தமிழ்சூட்டாக் காரணமீ தென்றுமனக்
கருத்துட் கொண்டான் ;

11. சுவையூறுந் தமிழ்மாலை உலகமென எடுத்தோதித்
தொன்னூல் ஈற்றின்
நுவலியது கிழவோனே எனக்கூற நெடுங்காலம்
நோன்பு கோடி
புவியிலிளைத் தறிவரிய குமரவேள் அவன்கனவு
பொருந்தத் தோற்றி
அவனிதனிற் கிழவனென வரச்சிறிது நாளாமென்
றறைந்து போனான் ;

12. அப்பொழுது நக்கீரன் தமிழ்மாலை இளையோனென்
றறைந்து சூட்டச்
செப்பரிய குடமுனிவர்க் குபதேசம் செலுத்துமொரு
செஞ்சொ லாளி......
கொந்தவிழ்தார் பெறுவீரர் சூழ்ந்துவர மயிலில்வரு
கோலங் கண்டான்

13. அக்கணத்து நக்கீரன் அதிசயித்துத் தலைதுளக்கி
யருளா னந்தம்
கக்கியகண் பனிக்கவுடல் மயிர்க்கூச்சுப் புளகமொடு
கம்பஞ் சேர
...... செவ்வேள் தக்கஇரு பதம் பணிந்து மும்மைவலஞ்
சூழ்ந்துபுகழ் சாற்று வானால் ;

14. பனிவரையின் மகளுதவ உண்டருளும் செங்கனிவாய்ப்
பாலா போற்றி
குனிசிலைவேள் மிகநாண வடிவழகு கொண்டருளும்
குமரா போற்றி
வினயமெழுஞ் சூர்கிளையை வேரறுக்க உளத்தில்வைத்த
விருத்தா போற்றி
முனிவருளங் கனியமிக வரங்குலவு பரங்கிரியின்
முருகா போற்றி.

15. கருதரிய ஆறுமுகங் கொண்டருள நிறைந்தஅருட்
கடலே போற்றி
திரைமருவு நிலவங்கம் சேரவுயிர்ச் சரக்கையிடுஞ்
செட்டி போற்றி

விரிதருவான் குஞ்சரத்தைக்கண்ணியிட்டுப் பிடித்தஎழில்
வேடா போற்றி
குருதிஎழும் வேலேந்தி வரங்குலவு பரங்கிரியிற்
குமரா போற்றி;

16. அப்பொழுது கூறுமிரும் பனுவலுக்கு மகிழ்ந்தனம்என்
றருளிச் செவ்வேள் . . .
செப்புவரங் கேண்மதியென் றுரைத்திடவேஅஞ்சலித்துத்
திருந்து ஞாலம்
ஒப்பில்இளை யோனெனவே உனைஉரைக்க வேண்டுமியான்
உரைத்த மாலை
தப்பறவே துதித்திடுவோர் விருப்புதவ வேண்டுமெனத்
தாழ்ந்து நின்றான்;

17. அவ்வரந்தந் தருளியபின் ......... எனைஆண்ட அண்ணல்
மறைந்திடலும் ...... முருகனைப் போற்றிப்
புலவன் போனான்.

—(பரங்கிரிப் புராணம் - நக்கீரச் சருக்கம்).

திருமுருகாற்றுப்படையின் வரலாறு பரங்கிரிப் புராணத்தில் இவ்வாறு இருக்க, திருக்காளத்திப் புராணத்தில் பின் வருமாறு உளது.

மேல் மாளிகையில் மனைவியொடு தனித்திருந்த பாண்டியன் தன் மனைவி கூந்தலிலிருந்து நறுமணம் வந்து வீச, 'இந்த நறுமணம் கூந்தலின் இயற்கை மணமோ' என ஐயுற்று, யான் ஐயுற்ற பொருள் இன்னதென்று விளக்குபவர்க்கு ஆயிரம் பொன் உள்ள இந்த முடிப்பு உரியதாகும் என்று விளம்பரம்செய்து, அந்த முடிப்பைச் சங்கமண்டபத்தில் தூக்கி நிறுவினன். பலகாலம் அப் பொற்கிழி அநுப்பவரின்றி இருந்தது, நாட்டிற் பஞ்ச காலம் வந்தது. சோமசுந்தரப் பெருமானுக்குப் பூஜை புரியும் அர்ச்சகர் தருமி என்பவர் பஞ்சத்துக்கு ஆற்றாது, எம்பெருமானே! நான வேறு நாட்டுக்குச் செல்வேன் - பஞ்சம் தீர்ந்த பின் வருகின்றேன் எனச் சிவபிரானிடம் முறையிட்டார். சிவபிரான் 'அன்ப! இந்தப் பாடலை எடுத்துப் பாண்டியனிடம் காட்டு; அவன் சங்க மண்டபத்தில் தூக்கி வைத்துள்ள ஆயிரம் பொன் உனக்குக் கிடைக்கும்' என்று கூறிக்

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பீ
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே"

என்னும் பாட்டை அளித்தனர். அங்ஙனமே தருமி பாண்டிய னிடம் அதைக் காட்ட, பாண்டியன் தான் நினைத்த எண்ணம் அப் பாடலில் இருக்கக் கண்டு, மகிழ்ந்து, நன்று 'சங்கத்தா ரிடம் இப் பாடலைக் காட்டுக' என்றனன். தருமி சங்கத்தா ரிடம் அப்பாடலைக் காட்ட, சங்கப்புலவருள் நக்கீரர் இப்பாட லிற் குற்றம் உளது; இது உதவாது என்றனர். தருமி வருந்திச் சிவபிரானிடம் முறையிட, சிவபிரான் ஒரு புலவனாக எதிர் தோன்றி, சங்கமண்டபத்துக்கு வந்து, 'இந்தக் குற்றமில்லாத பாட்டிற் குற்றங் கண்டவர் யார்' என வினவினர். நக்கீரர் 'நானே கூறினேன்' என்றனர். குற்றம் யாது என வினவினர் புலவர். நக்கீரர் – "மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணம் கிடையாது; இயற்கை மணம் உண்டு என்று இந்தச் செய்யுள் கூறுவதால் 'இல்லது கூறல்' என்னும் குற்றம் இதன்கண் உளது என்றார்; புலவர் 'தெய்வ மகளிரின் கூந்தலுக்கோ' என்றனர். நக்கீரர் அவர்கள் கூந்தலுக்கும் இயற்கை மணம் கிடையாது என்றனர். "நீ வழிபட்டேத்தும் தேவி ஞானப் பூங்கோதை அம்மையின் கூந்தலுக்கோ' என வினவினர் புலவர்: அம்மை கூந்தலும் அத் தன்மையதே என்றனர் நக்கீரர். வந்த புலவர் உடனே தமது 'நெற்றிக் கண்ணையும் சடையையும் காட்ட, நக்கீரர் – "வடிவெலாம் காட்டினாலும் சாற்றிய செய்யுளில் குற்றம் குற்றமே — சடை கொண்டு வெருட்டல் வேண்டாம்" என்றனர். 'எம்மொடு மாறுபட்டு தேவி கூந்தலைப் பழித்த அறிவிலாய்! நீ குட்டநோய் கொள்' என்றனர் பெருமானார். நக்கீரர் பயந்து அவர் திருவடியில் வீழ்ந்து 'அறிவிலாது செய்த பிழையைப் பொறுத்தருளிச் சாபப்பிணி கெட அருளுக' எனவேண்டினர். சிவபிரானும் கோபம் தணிந்து 'நீ கயிலை காணில் இக்கொடுநோய் தீரும்' எனக் கூறி மறைந்தனர். தருமிக்கும் பொற்கிழி அளிக்கப் பட்டது. நக்கீரர் குட்டநோயால் வருந்தி கயிலை காண வடதிசைப் பயணம் கொண்டார்.

"என்றினி மதுரை காண்பேம் எப்பகல் சவுந்த ரேசன்
தன்திருவடிகள் காண்பேம் தாயையெஞ் ஞான்று காண்பேம்
வென்றிவேல் தரும வேந்தர் வேந்தனை எந்நாட் காண்பேம்
ஒன்றுயிர்த் துணையாம் சங்கத் துறவையெப் பொழுது காண்பேம்"

எனக்கூறித் துக்கத்துடன் புறப்பட்டுச் சென்று இமயமலையை அடைந்தார். அங்குக் குளக்கரையில் ஆலமர நிழலில் நக்கீரர் அமர்ந்திருந்தபொழுது இலை ஒன்று நீரில் விழ, பாதி பறவை யாய்ப் பாதி மீனாய் ஒன்றை ஒன்று இழுப்பதைக் கண்டு அதிச யித்திருக்க, பூதம் ஒன்று இவரைத் தூக்கிச்சென்று ஒரு இருட்

குகையில் இவரை அடைத்து - நீராடுவதற்கு ஒருகுளத்துக்குச் சென்றது. அந்தக் குகையில் முன்னரே அடைபட்டிருந்த 999 பேர்களும் " நீவந்து சேர்ந்தாய் 'ஆயிரம்' பேர் கணக்காகி விட்டது, அதற்காகத்தான் பூதம் காத்திருந்தது, இனி இப் பூதத்துக்கு நாம் யாவரும் இரையாவோம்' எனக் கூறி வருந் தினர். நக்கீரர் – தம்மைப்பற்றி வருந்தாது - இவர்களுடைய துயரை ஒழிக்கவேண்டும்; ஐம்பெரும் பூத வாயில் அகப்பட்ட உயிர்க்குத் தமது திருவடி நீழலைத்தரும் குமரவேளுக்கு இந்தச் சிறு பூதத்தினின்றும் நம்மைக் காத்தல் ஒரு அரிய காரியமா எனச் சிந்தித்துத் திருமுருகாற்றுப்படையைப் பாடினர் :—

கரும்போ, அமுதோ, தேனோ எனச் சுவைக்கும் சொற் களைக் கொண்ட வள்ளியின் பேச்சையும் நிறுத்தி, நக்கீரர் பாட்டின் தமிழ்ச் சுவையில் முருகவேள் மனங் களிப்புற்று எழுந்தருளி வந்து பூதத்தைக் கதை கொண்டு அடித்து வீழ்த்தி குகையில் அடைபட்டிருந்த நக்கீரராதியோரைக் குகையி னின்றும் வெளியேற்றினர்; நக்கீரர் முருகவேளைப் பணிந்து 'பெருமானே! யான் ஆலவாய்ப் பெருமானிடம் ஆணவத்தால் வாதாட, இந்நோய் வந்தது. கயிலையைக் காணின் நோய் அகலும் என்றார் இறைவர்; அடியேனுக்குக் கயிலையைக் காட்டி இப்பிணியை ஒழித்தருளுக என வேண்டினர். முருகவேள் எந்தையார் 'கயிலை' என்றாரே ஒழிய வடகயிலை எனக் கூற வில்லை ஆதலால் தென்கயிலையாகிய காளத்தியைக் கண்டாலும் உன் பிணி ஒழியும்; இப் பொய்கையில் நீ முழுகினால் கயிலை யைக் காண்பாய் எனக்கூறி மறைந்தனர். நக்கீரரும் முருகனைத் தியானித்து அந்தப் பொய்கையில் முழுக, திருக்காளத்தியில் பொன்முகரி நதிக்கரையில் எழுந்தார்--அதிசயித்தார், நோயும் தொலைந்தது. 'கயிலை பாதி காளத்தி பாதி' என்னும் நூலைப் பாடி ஞானப் பூங்கோதை பாகராம் காளத்திநாதரை வணங்கினர். தக்ஷிண கயிலையாகிய காளத்தியில் தங்கி யிருந்து இறைவன் மலர்த்தாள் நிழலை அடைந்தனர்.

மேற்கூறிய சரித சம்பந்தமான சீகாளத்திப் புராணப் பாடல்களுட் சில :

(நக்கீரர் முருகன் பெருமையை நினைந்து - முருகாற்றுப்படை பாடினது)

வரைபுணர் குறிஞ்சி மன்னன் வரைபக எறிந்த செவ்வேள்
முருகலர் அலங்கற் றிண்டோள் முருகனென் றவன்பொற் றண்டைத்
திருவடி மலரி றைஞ்சில் தீவினைச் செல்லல் முற்றும்
பரிதியங் கடவுட் கண்ட பனியென அகன்று போமால்;

ஆறிரு தடந்தோள் அண்ணல் ஆறெழுத் தினையும் ஓதில்
வேறொரு பிணிபோம் என்கை வியப்பதோ பிறவியென்னும்
மாறரு மனுதி நோயும் மாறிவே தாக மங்கள்
கூறரும் இன்ப வீட்டிற் குடிபுகுந் திருப்ப ரன்றே;

ஐம்பெரும் பூத வாயின் அகப்படும் உயிரை மீட்டுச்
செம்பொனஞ் சிறுச தங்கைத் திருவடி நிழலில் வைக்கும்
நம்பிநங் குமர வேட்கிந் நாளொரு சிறுபூ தத்தால்
இம்பரிங் குறுநோய் தீர்த்தல் எளிதலால் அரியதன்றே.

இன்னன நினைந்து கீரன் இலங்கிலை நெடுவேற் செம்மல்
பன்னிரு செவியும் ஆரப் பருகமு தாகி யோதில்
உன்னிய உன்னி யாங்கிங் குதவுவ தாகிப் பாவுள்
முன்னுற வந்து நிற்கும் முருகாற்றுப் படைமொழிந்தான்.

பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலைக் கருங்கண் வள்ளி
கன்னலும் அமுதும் தேனும் கைக்குமின் தீஞ்சொல் மாற்றித்
தன்னிகர் புலவன் கூறும் தமிழ்செவி தாழ்த்துக் கேளா
அந்நிலை மனங்க ளிப்புற் றறுமுகம் படைத்த கோமான் ......

மயில்மிசை அலையிற் றோன்றும் வளரிளம் பரிதிப் புத்தேள்
இயன்மலி உருவந் தோன்ற இவர்ந்தறு முகமி லங்க ......
வந்து தோன்றி—

பூதநா தனுக்கங் காமப் புலவனைப் பூதம் உண்ணும்
காதலான் அணுகும் போதோர் கதையினுல் அலகில் அண்டம்
மோதினன் எனவே மோதி முடிதகர்த் ததனை வீட்டி
மேதையாம் புலவ னேடும் விடுத்தனன் முழையு ளோரை.

**திருமுருகாற்றுப்படையின் சிறப்பு**

" மணிமுடி அரசர் வாழ்வு மக்கட்பே றுதி நல்கிப்
பிணிமிடி பகையி டுக்கண் பேயினுக் களவு கள்வர்
பணிவிடம் ஒழிக்கும் ஆற்றுப் படை
மொழி புலவர் சிங்கம் ;
—(சீகாளத்திப் புராணம்– நக்கீரச் சருக்கம்).

**இலை விழுந்து பறவையும் மீனும் ஆன விசித்திரமும்
பூதத்தின் கையில் நக்கீரர் சிக்கியதும் மீண்டதும்**

**1**

ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்குமொரு பேரரசின்
இலை பார் விழிற் பறவையாம்
இதுநிற்க நீர்விழிற் கயலாம் இதன்றியோர்
இலையங்கும் இங்குமாகப்

பார்கொண்ட பாதியும் பறவைதா னுகை,அப்
பாதியும் சேல தாகப்
பார்கொண் டிழுக்கஅது நீர்கொண் டிழுக்கஇப்
படிகண்ட ததிசயமென
நீர்கொண்ட வாவிதனில் நிற்குமொரு பேழ்வாய்
நெடும்பூத மதுகொண்டு போய்
நீள்வரை எடுத்ததன் கீழ்வைக்கு மதுகண்டு
நீதிநூல் மங்காமலே
சீர்கொண்ட நக்கீர னைச்சிறை விடுத்தவா
. . . செங்கீரை யாடியருளே
திரையெறியும் அலைவாய் உகந்தவடி வேலனே
செங்கீரை யாடியருளே.

— (செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் 13).

2

ஓராயி ரம்பேரை வருடத்தில் ஒருநாளில்
உண்கின்ற கற்கிமுகிதான்
ஒன்றுகுறை யாகிவிடு மன்றுநக் கீரர்வர
ஓடிப்பிடித் தவரையும்
காராய குன்றத் தடைத்துரிய நியதிக்
கடன்துறை முடிக்க அகலக்
கருதிமுரு காறவ ருரைத்தருள நீலக்
கலாபமயி லேறி யணுகிப்
பேரான குன்றந் திறந்திவுளி முகியைப்
. . . பிளந்துநக் கீரர்தமையும்
பெரியவேல் கொண்டுபுனல் கண்டுசுனை மூழ்கிப்
பிரான்முகலி நதியின்மேவச்
சீராய திருவருள் புரிந்தகர னூராளி
. . . சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே.

— (திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் 93).

### 3. திருப்புகழ்

1. மலைமுகஞ் சுமந்த புலவர்செஞ் சொல்கொண்டு
வழிதிறந்த செங்கை வடிவேலா. (91)

2. கீர(ன்) வகுத்த பாவினில் பொருட்
கோலமாய் வரு முருகோனே, (432)

3. கந்தன் குகன் என்றன் குரு என்றுந்தொழும்
அன்பன் கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே.
(805)

4. மருகு மாமது ரைக்கூடல் மால்வரை
வளைவு ளாகிய நக்கீரர் ஓதிய
வளகை சேர்தமி ழுக்காக நீடிய கரவோனே.
(1191)

5. கீதஇசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரரியல் கேட்ட க்ருபைவேளே. (1278)

### 4. திருவகுப்பு

1. பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்குமொரு
கவிப் புலவன்
இசைக்குருகி வரைக்குகையை இடித்துவழி
காணும்......வேலே. (வேல் வகுப்பு):

2. அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீர னுக்குதவி.
(பூத - வகுப்பு).

3. எதிரில்புல வர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளிமுகி யைப்பொருத ராவுத்த னைவனும்
......வேடிச்சி காவலனே.
(வேடிச்சி காவலன் வகுப்பு :

4. இயல்முநி பரவ ஒருவிசை அருவரை யூடதி
பார கோர இவுளி முகத்தவள்
கொங்கை கொண்ட சண்டமார்பைப் பிளந்தன
......வாகைப் புயங்களே. (புயவகுப்பு):

5

உன்கமல நயன அருள் பெற்ற நக்கீரர்தாம்
உயர்முத்தி சேர்ந்திடு மலை,
(திருக்காளத்தி) க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ் —
சிறுபறை 9.)

6

உனதின் புறுகவி புகலென் றனுதினம்
உற்றறி வித்திடவும்
உயர்செந் தமிழ்சிறி தறைகின் றிலனென
ஒட்டு கவிப்புலவன்
அனமின் றெனமது ரையிலந் தணன்அடர்
வற்கடம் உற்றிடலும்
அழுதன் பொடுதொழ அறிசுந் தரனருள்
பொற்கவி யைச்சொலவே
இனிதன் றிதுபொருள் எனவந் திறைதரு
குட்டம் அடுத்திடுநோய்
இடருங், குகையுறு சிறையும் தவிர்தரு
நற்கவி சொற்றிடலும்
முனிவின் றெதிர்வரு முருகன் தணிகையின்
முத்தம் அளித்தருளே
முதிருஞ் சுவையமு தொழுகுந் துவரிதழ்
முத்தம் அளித்தருளே. (தணிகைப் பிள்ளைத்தமிழ்)-

7

"ஆதிமுரு, காற்றுப்படை யியம்பி
அங்கமுறு வெங்குட்டம்
மாற்றிச் சுனைமுழுகு வண்கவியும்"
"பாடாநக் கீரனைப் பூதத்தாற் கிரிக்குகையுட்—
கற்சிறைசெய் தோரரிய பாவை
உகந்தணைந்து, கீரனுக்கு வீட்டுவழி காட்டியிடும்
வேளாண்மை யாஞ்செட்டி."
"ஆற்றுப் படையே அனங்கன் அடுபோரை
மாற்றுப் படையாகி வைகும்"
(தணிகை உலா 170, 313, 620)

## 6. நல்லியக்கோடன்

—:o:—

*"அருளார்நல் லியக்கோடர் அடியார்க்கும் அடியேன்"

நல்லியக்கோடன் ஒரு சிற்றரசன். இவன், ஒய்மானாட்டு நல்லியக்கோடன் எனவும் வழங்கப்படுவன். பத்துப் பாட்டினுள் மூன்றாவதாகிய 'சிறுபாணாற்றுப்படை'த் தலைவன். இவன் ஓவியர் குடியிற் பிறந்தவன். ஈகையில் மழைபோன்ற பெரிய கையினை உடையவன். பேகன், பாரி, காரி, ஆய், அதிகமான், நள்ளி, ஓரி, இவ் வேழு வள்ளல்களின் கொடைத் திறத்தைத் தான்ஒருவனே கொண்டவன். முருகவேளை இடைவிடாது சிந்தித்து வழிபடும் திறத்தினன். இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என்னும் சங்கப்புலவரால் 'சிறுபாணாற்றுப் படை' என்னும் நூலிற் சிறப்பிக்கப்பட்டவன். இவனுடைய ஊர் திண்டிவனத்தைச்சார்ந்த கிடங்கில். இவனுடைய பிற ஊர்கள் வேலூர், (இதுஉப்புவேலூர்) மாவிலங்கை என்பன. இவன் தன் பகை மிகுதிக்கு அஞ்சி முருகக்கடவுளை வழிபட, அக் கடவுள் இவன் கனவில் தோன்றி "கேணியில் பூத்த பூவைப் பறித்துப் பகைவர்பால் விடுக' எனக் கட்டளையிட்டனர்; இவன் அவ்வாறே அந்தப்பூவை விட, துஅ வேலாகச் சென்று, பகைவரை அட்டு, இவனுக்கு வெற்றி தந்தது. வேல் வென்ற இடம் — வேலூர் ஆயிற்று.

### மேற்சொன்ன வரலாறு வரும் பகுதிகள்

" நன்மா விலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்
...... பெயன்மழைத் தடகைப்
பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை
நல்லியக்கோடன் ......
கிளைமலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்

* * * *

[1]திறல்வேல் நுதியிற் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூர் .........
ஏற்றருஞ் சென்னிக்,
குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்லிசை நிலைஇய பண்பின்
நல்லியக்கோடன்"

[1]முருகன் கையில் வலியினை உடைத்தாகிய வேலின் நுதி போலே கேணி பூக்கப் பட்ட வெற்றியை உடைய வேலாலே வெற்றியை உடைய வேலூர்.

நல்லியக்கோடன் தன் பகை மிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்ட வழி அவன் "இக் கேணியிற் பூவை வாங்கிப் பகை வரை எறி என்று கனவிற் கூறி அதிற் பூவைத் தன் வேலால் நிருமித்ததொரு "வரலாறு. குறிஞ்சியாகிய ஒழுக்கத்தை உடைய நிலத்திற்கு அரசன், கொய்யப்பட்ட தளிர் விரவின மாலையினையும், பிறரிடத்து நில்லாமற் போகின்ற புகழ் தன்னிடத்தே நிற்றற்குக் காரணமான குணத்தினையும் உடைய நல்லியக்கோடன்" - நச்சினர்க்கினியர் உரை; சிறுபாணுற்றுப் படையும் (120, 124, 160, 172, 266) அதன் உரையும்.

## 7. பரிபாடல் ஆசிரியர்கள்

—:o:—

"பரிபாடல் ஆசிரியப் பண்பாளர்க் கடியேன்";

(1) **கடுவன் இளவெயினனுர்:** பரிபாடலில் ஐந்தாம் பாடல் இவர் பாடினது. இவர் திருமாலையும் பாடியுள்ளார் "எமக்கு வேண்டுவன பொருளும், பொன்னும், போகமும் அல்ல; நின்பால் அருளும், அன்பும், அறனுமே வேண்டும்" என்னும் இவரது வேண்டுகோள் முருகவேள் மாட்டு இவருக்குள்ள பேரன்பைப் புலப்படுத்துகின்றது.

(2) **ஆசிரியன் நல்லந்துவனுர்:** பரிபாடலில் 8-ஆம் பாடல் இவர்பாடினது. இவர் ஊர் மதுரை. *"திருப்பரங்குன்றத்தின் பெருமையையும். அதிற் கடம்ப மரத்தின் அடியிலே கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளின் திரு அருட்சிறப்பையும் பாராட்டியிருககும் பகுதியும், அக்குன்றின் வாழ்வையே தம்முடைய வாழ்வாகக் கருதி உள்ளம் உருகி இவர் அதனை வாழ்த்தியிருக்கும் பகுதியும் இன்புறற்பாலன".

(3) **குன்றம் பூதனுர்:** பரிபாடல் 9, 18ஆம் பாடல்கள் இவர் பாடினவை. முருககடவுள்பால் அன்புடையவர் *"திருப்பரங் குன்றத்துள்ள சோலை, சுனை, அருவி, காந்தள், தினை, மயில் முதலியவற்றை வருணித்து, அக் குன்றம் இமயத்தையும்

---

*பக்கம் 908, 909 டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்கள் எழுதியுள்ள குறிப்பு.

முருகக்கடவுளின் ஊர்தியாகிய யானையையும் ஒக்கும் என்று இவர் கூறியிருப்பதுபாராட்டற்பாலது. குன்றத்தை இங்ஙனம் அழகுறப் பாடியிருத்தலால் இவர் இப் பெயர் பெற்றனர் போலும்.'

(4) கேசவனுர்: இவர் பரிபாடல் 14-ஆம் பாடலை இயற்றியவர். *முருகக்கடவுளை முன்னிலை யாக்கி இவர் துதித்திருப்பது மிக்க இன்பம் பயக்கின்றது " நின்னை யாங்கள் மேவி அடுத்தடுத்து வழிபடுவதன் பயம்(ன்) இன்னும் இன்னும் நின் புகழினும் பலவாக அவ்வழி பாடுகள் தாமே ஆகுக" என்னும் இவரது வேண்டுகோள் இவருக்கு முருகவேளிடத்துள்ள ஒப்புயர்வற்ற அன்பைத் தெரிவிக்கின்றது.

(5) நல்லழிசியார்: இவர் பரிபாடல் 17-ஆம் பாடலைப் பாடினவர். திருப்பரங்குன்றத்தில் முருகவேள் எழுந்தருளிய கடப்பமரத்தை அன்பர்கள் வழிபடுதலையும், அக் குன்றத்தின் அடியில் உறைவோர் விண்ணுலக இன்பத்தையும் விரும்பார் என்பதையும் இவர் அழகாகக் கூறியுள்ளார்.

(6) நப்பண்ணனுர்: இவர் பரிபாடல் 19-ஆம் பாடலைப் பாடினவர். வள்ளியம்மையின் திருமணவிழாச் செய்தி, முருகக்கடவுள் கடப்பமரத்தின் அடியில் எழுந்தருளியிருத்தல் முதலியன கூறியுள்ளார்.

(7) நல்லச்சுதனுர்: இவர் பரிபாடல் 21-ஆம் பாடலைப் பாடினவர். *முருகக்கடவுளுடைய அடியின் கீழும் திருப்பரங்குன்றத்தின் கீழும் உறைதல் தமக்குக் கிடைக்கவேண்டும் என்று இவர் வேண்டுதல் அவர் பால் இவருக்கு உள்ள அன்புப் பெருக்கைக் காட்டுகின்றது.

## 8. கல்லாட ஆசிரியர்

—:o:—

" மல்லார்ந்த பாக்களிசை கல்லாடர்க் கடியேன் "

கல்லாடம் என்னும் நூல் இயற்றியவர் பெயர் கல்லாடர்: இவர் காலம் ஆராய்ச்சி நிலையில் உள்ளது. கல்லாட ஆசிரியர் காலம் எது எனினும், அவர் அருளிய கல்லாட நூலின் அருமை பெருமை அளவிடற்கரியன. மிகமிக அழகிய உயர் செந்தமிழ் நடை ; படிக்கப் படிக்க இனிக்கும் நடை; ஆழ்ந்த கருத்துக்களை அழகுபெற வெளிப் படுத்தும் நடை; சிவபிரானிடத்தும்

முருகவேளிடத்தும் பேரன்புடையவர் இவர். கல்லாடத்தின் சிறப்பு " கல்லாடம் கற்றவனுடன் மல்லாடாதே " என்னும் பழமொழியாலும்,

" கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச் — சொல்லாயும்
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம் "

என்னும் வெண்பாவினுலும் நன்கு பெறப்படும்.

" திருக்கண்ணப்பதேவர் திருமறம் " என்னும் நூலும் இவர் இயற்றின தென்பர்.

## 9. ஔவையார்

—:o:—

*" எந்தமிழ்மூ தாட்டியார் அடியார்க்கும் அடியேன் "

ஔவைப் பிராட்டியின் திருநாமம் பலபேர்களுடன் இணைக்கப்பட்டு வருவதால் ஔவையார் ஒருவரா பலரா, — என்றெல்லாம் ஆயவேண்டியிருக்கிறது. ஒரு ஔவையாரே அரியதோர் நெல்லிக் கனியை உண்டு பலகாலம் வாழ்ந்திருந் தார் எனவும் கூறுவர். அதியமான் நெடுமானஞ்சி என்பவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன், உண்டோரை நெடுங் காலம் சீவித்திருக்கச் செய்யும் கருநெல்லிப் பழத்தை ஔவை யாருக்குக் கொடுத்துப் புகழ்பெற்றவன்; சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தும், கம்பர் காலத்தும் ஔவையார் எனப் பெயர் பெற்றவர் இருந்ததாக வரலாறுகள், கர்ணபரம் பரைச் சேதிகள் உள்ளன; எது எப்படியாயினும் முருகன் அடியாராய் விளங்கின ஔவையைப் பற்றியே நாம் கருத வேண்டியது.

தமிழ்ப்பித்தராம் நமது முருகவேள் ஔவையாருடைய பாடலைப் பெற விரும்பி எருமை மேய்க்கும் பையனுடைய வேடம் பூண்டு ஒரு நாவல் மரத்தின்மீதேறி இருந்தனர். அம் மரத்தின் கீழே மணற் பரப்பில் அலுப்பாறிக் கொண்டிருந்த ஔவையார் பையனை நோக்கி 'அப்பா! உண்பதற்குச் சில நாவற்பழம் பறித்துப் போடு' என்றார். பையன் 'பாட்டீ! உனக்குச் சுடுகிற பழம் போடவா, சுடாத பழம் போடவா' எனக் கேட்டான். ஔவையார பழத்திற் சுடுகிற பழம்கூட

இருக்குமோ என வியந்து, விளக்கமுறுது, 'தம்பீ! சுடுகிற பழம் போடு' என்று சொன்னர். பையன் நன்கு அளிந்த பழங்களைப் பறித்துக் கீழே மணலிற் போட, மணல் பழங்களில் ஒட்டிக் கொண்டதால், ஔவையார் ஒவ்வொரு பழத்தையும் மணல் போக ஊதி ஊதி உண்டனர். பையன் 'பாட்டீ! நீதானே சுடுகிறபழம் வேண்டும் என்ருய்; அதனல் தான் ஊதிஊதி ஆறவைத்து உண்ணவேண்டி இருக்கிறது' எனக் கூறி நகைத்தான். ஔவையார் ஹாஹா! இந்த உண்மை நமக்குப் புலப்படவில்லையே! இந்தப் பையன் அன்றே என்னைப் பரிகசிக்கின்ருன் என நாணங்கொண்டு வருந்தி—"கருங்காலிக் கட்டைக்கு நாணுக்கோ டாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும் – பெருங்கானிற்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்தோற்ற
தீரிரவும் துஞ்சாதென் கண்"

எனப் பாடி ஏக்கம் உற, முருகவேள் ஔவையாருக்குக் காட்சி அளித்தருள, ஔவையார் மெய் புளகங்கொள்ள கண்ணில் ஆனந்த வெள்ள அருவி நீர் பாய—

*"செந்தமிழின் திருவுருவே! செல்வமக மேரே!
தித்திக்குஞ் செந்தேனே தெவிட்டாத கரும்பே!
பைந்தமிழின் நறுங்கனியே! பழங் கனிந்த ரசமே!
பதம்பரவும் அடியார்தம் பவங்களையும் மருந்தே!
அந்தமிலா முழுமுதலே! வேல்மயிலென் றறைவோர்
அகத்திலுறு திருவிளக்கே! ஆறெழுத்தின் பயனே!
எந்தமையோர் பொருட்படுத்தி எழுந்ததிருத் துரையே!
இனியுனது திருவடியை இமைப்பொழுதும் மறவேன்;

*அம்மை உமை அகமகிழும் ஆனந்தத் துரையே!
அடலவுணர் குலமுழுதும் அறஎழுந்த துரையே!
வெம்மைதடிந் தடியாரை வாழ்விக்கும் துரையே!
மின்னகுவேல் கரத்தேந்தி விளையாடும் துரையே!
செம்மைநலம் திரண்டெழுந்த சிங்காரத் துரையே!
சிகியேறி உலகைவலம் செய்துவரும் துரையே!
எம்மையுமோர் பொருட்படுத்தி எழுந்ததிருத் துரையே
இனியுனது திருவடியை இமைப்பொழுதும்
மறவேன்"

---

* சேய்த்தொண்டர் புராணம் — ஔவையார் 79, 80.

எனப் பாடித் துதித்துப் பரவசமாயினர். பிரானும்-அஞ்சற்க! உன்னொடு விளையாட வந்தேன். நான் கேட்கும் நான்கு வினாக்களுக்குத் தக்க விடைகளைக் கூறுவாயாக எனக் கூறிக்—(1) கொடியது எது (2) இனியது எது (3) பெரியது எது (4) அரியது எது — என வினவினர். அதற்கு ஒளவையார் கூறின பாடல்கள் பின்வருமாறு:

(1) கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை
அதனினுங் கொடிதுஆற்றொணாக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினுங் கொடிது
இன்புற அவர்கையில் உண்பது தானே.

(2) இனியது கேட்கில் தனிநெடு வேலோய்!
இனிது இனிது ஏகாந்தம் இனிது
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனிது அறிவுள் ளோரைக்
கனவினும் நனவினுங் காண்பது தானே.

(3) பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமால் உந்தி வந்தோன்
கரிய மாலோ அலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம்
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

(4) அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானிட ராதல் அரிது
மானிட ராயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது
ஞானமும் கல்வியும் நயத்த காலையும்
தானமும் தவமும் தான்செயல் அரிது
தானமுந் தவமுந் தான்செய்வா ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

## 10. சேந்தனர்

—:o:—

*" தீந்தமிழ்ப்பா பாடிமகிழ் சேந்தனர்க் கடியேன் "

சேந்தனர் அருளிய பாடல்கள் சைவத் திருமுறையில் ஒன் பதாந் திருமுறையாம் திருவிசைப்பாவில் உள்ளன. இவர் ஊர் திருவீழிமிழலை என்ப. தில்லையில் தேர் விழாவின்போது தேர் தடைபட்டுச் செல்லாதிருத்தலைக் கண்டு இப் பெரியார் திருப்பல்லாண்டு பாடித் தேரைச் செல்ல வைத்தார் என்ப. சிவபெருமானே நள்ளிரவில் இவர் வீட்டுக்குச் சென்று கூழுணவு பெற்று அதன் மிகுதியைத் தமது திருமேனியிற் காட்டி இவரது பேரன்பை உலகுக்குத் தெரிவித்தனர் என்ப. திருவிடைக்கழி முருகபிரான்மீது இவர் பாடிய *பதிகம் 'நற்றுயிரங்கல்' என்னும் அகத்துறையின்பாற்படும்.

## 11. கச்சியப்ப சிவாசாரியர்

—:o:—

*கம்பைசூழ் காஞ்சிநகர் மாதவத்தின் பயனுய்க்
கந்தவேள் திருச்சரிதம் கடலுலகுக் களித்த
நம்பெருமான் கச்சியப்பர் அடியார்க்கும் அடியேன்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் காஞ்சீபுரத்தில் உள்ள குமரகோட்டத்து அருச்சகர். காளத்தியப்ப சிவாசாரியரின்

* (11-ஆம் திருமுறை) பக்கம் 824-827 பார்க்க.

மைந்தர். அவர் காலம் 11-ஆம் நூற்றுண்டின் இறுதியும் 12-ஆம் நூற்றுண்டின் துவக்கமும் என்ப. காஞ்சியில் இருந்த பெரியோர்கள் கேட்டுக் கொண்டபடி இந் நூல் வடமொழியிலிருந்து தமிழில் ஆக்கப்பட்டது. கச்சியப்ப சிவாசாரியரின் கனவில் முருகவேள் தோன்றி 'அன்ப! நமது புராணத்தைத் தமிழில் தருக' என்க் கட்டளையிட்டுத் 'திகட சக்கர' என முதலும் எடுத்துத் தந்து மறைந்தன ரெனவும், அக்கட்டளைக்கிணங்கித் தாம் பாடி எழுதின ஓலைச் சுவடியை முருகன் சந்நிதியில் அர்த்த ஜாம பூஜை முடிந் ததும் வைத்துத் திருக்கதவம் மூடி அடுத்த நாள் காலை பூஜைக்குச் செல்லும்போது சுவடியை எடுத்துப் பார்க்கத் தாம் எழுதிய பாடல்களில் இறைவன் செய்துள்ள திருத்தங் களைக் கண்டு கச்சியப்பர் மகிழ்வர் என்றும் கர்ணபரம்பரைச் செய்தி உளது; ஆதலால் தமிழ்த் தெய்வத்தின் திருக் கரம் பட்ட இந்நூலுக்கு ஒப்பு உயர்வு கிடையாது.

'திகழ் தசக்கரம்' என்பது 'திகட சக்கரம்' எனவருமா என்று ஒருபுலவர் தடை கூறினர் என்றும், அதற்கு இலக்கணம் (வீர சோழியம் என்னும் நூலில்) உளது என்று முருகவேளே புலவராக வந்து காட்டினர் என்றும் கூறுவர். எழுந்த வாதங்களை வென்று பலரும் போற்ற இந்த நூலை அரங் கேற்றினர் என்ப. அன்றுமுதல் இன்றளவும் செவ்விய இலக் கிய இலக்கண விளக்கத்துக்கும், செந்தமிழ் நடைச் சிறப்புக் கும், பொருட்செறிவுக்கும், பத்திச் சுவை ததும்பும் அமைப் புக்கும் எடுத்துக் காட்டாக இந் நூல் பெரும் புலவர்களால் பாராட்டப்பட்டு வருகின்றது. இந்த ஆசிரியரைப் பற்றியும் கந்த புராணத்தைப் பற்றியும் தெரியக்கூடிய விஷயங்களுள்ள பாடல்களும். பாடற்பகுதிகளும் கீழ்க் குறிக்கப்பட்டுள.

1

"காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்தன் எந்தை கதையினை நூல்முறை
தந்தி டென்னத் தமியன் இயம்புகேன்"

"வேற்படை நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலால்
...... கம்பர் காஞ்சியிற் கட்டுரைத் தேனியான்"

"வடநூல் தெரீஇத், தென்சொலாற் சிறியேன்
உரை செய்தலால்";

"ஆன சொற்றமிழ் வல்ல அறிஞர்முன்
யானும் இக்கதை கூறுதற் கெண்ணுதல் ......"
"காதைக் கெவன்பெயர் என்றிடில் ......
போற்று கந்த புராணம தென்பதே"
"விருத்தத் தொகைகளால் ...... தனிக்கதை
சாற்றுகேன்"
—(கந்தபுராணம் – அவையடக்கச் செய்யுள்கள்)

2

உச்சித மாம்சிவ வேதியன் காளத்தி
யோங்கு மைந்தன்
கச்சியப் பன்செய்த கந்த புராணக்
கலைக் கடலின்
மெச்சிய கல்வி மதியும்வெண் தாமரை
மேவு மின்னும்
இச்செவி நாவினுக் கின்பாம் அமுதும்
எழுந்தனவே.
—(அபியுக்தர் வாக்கு).

3

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ னனேன்
வாதமுறு புலவர்குழாம் மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
இலகுகந்த புராணமரங் கேற்றினனே.
—(அபியுக்தர் வாக்கு)

4

மருவு புலவனர் கவிக்கு ளேசிறு
வழுவ தறைமகா சபைக்கு ளேகியெ
வகைய பெயரதா இலக்கண விதி
மொழிவோனே. (525)

முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கென வேஅவை
முற்பட்டு புதுத்துறை மாறிய
புலவோனே. (793)

—(திருப்புகழ்-சமாஜப் பதிப்பு.)

5

பருதியென வருசூதன் உரைத்த காந்தப்
பரவையருள் முகிலமுதம் பருகித் தென்னூல்
தருவுநன்காண் டப்பணியும் படல மான
சாகையுல வையும்விருத்தத் தழையும் ஓசை
வருதுணரு முன்வரமன் ஞிமிறு மோங்க
வளரொளியாம் பொருட்கனியை வழங்குஞ் சீர்த்தி
கருதரிய காஞ்சிவளர் கச்சி யப்பக்
கற்பகத்தா ருவையிறைஞ்சிக் கருத்துள் வைப்பாம்.

—(உபதேச காண்டம் – ஞானவரோதயர்).

6

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டில் ஏறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழ தான
காதன்மழை பொழிந்த அருட் கொண்ட லான
கச்சியப்பன் இருபாதம் உச்சி வைப்பாம்.

—(கந்தபுராணச் சுருக்கம்–சம்பந்த சரணலயர்).

7

தவிராத வெவ்வினை தவிர்க்கு முருகாறும்
தரித்தா றெழுத்தோதலாம்
சந்நிதிக் கருணகிரி நாதன் திருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந் துய்யலாம்......
பொருஞ்சூர னைப்பொருங் கதைமுதற் கந்தப்
புராணக் கடற் காணலாம் ......
அயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுடன்
அம்புலீ ஆட வாவே.

—(அந்தகக்கவி வீரராகவர்–சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்):

8

அந்தப் புரமும்அறுநான்கு கோட்டகத்தாருமொன்ருய்க்
கந்தப் புராணம் பதினு யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல் லக்குச் சிவிகையும் தாங்கியச் சந்நிதிக்கே
வந்தப் புராணம் அரங்கேற்றி ஞர்தொண்டை
மண்டலமே.

—(தொண்டைமண்டல சதகம்—படிக்காசுப் புலவர்):

## 12. கோனேரியப்பர்

—:o:—

### *" குகனேரி யப்பர்தம தடியார்க்கும் அடியேன் "

குகனேரியப்பர் கச்சியப்ப சிவாசாரியரிடம் தீக்ஷை பெற்றவர். செங்குந்தமரபினர்; தந்தையார் சிவாநந்த முதலியார், தாய் அமுதாம்பிகை. குகனேரியப்பன் என்பது கோனேரியப்பன் என மருவிற்று; வடமொழி, தென்மொழி கற்றுணர்ந்தவர்; வடமொழி ஸ்காந்த மகா புராணத்துள் சங்கர சங்கிதையின் 12 காண்டங்களில் ஒன்ருய சிவரகசிய காண்டத்தின் பிரிவுகளான ஏழுகாண்டங்களில், கச்சியப்ப சிவாசாரியார் கந்தபுராணத்தை ஆறு காண்டங்களுடன் முடிக்க, ஏழாவது காண்டத்தை உபதேச காண்டம் என்னும் பெயருடன் இவர் கச்சியப்ப சிவாசாரியர் அவர்களின் கட்டளைப்படி தமிழ்ப் புராணமாக 4348 செய்யுள்களிற் பாடி அரங்கேற்றினர்.

2: முருகவேளின் பிரமோற்சவ தினமொன்றில் பெரு மழை பெய்து உற்சவம் தடைபடுவது நோக்கி —

" கார்க்கும் மழைக்கும் கவலேம் கடுஞ்சிறையாற்
சூர்க்குடைந்த நின்னைச் சுகத்திருத்தி – ஊர்க்குள்விடும்
கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்தல்
அந்தமோ ஆகண்ட லா ! "

எனப்பாடி மழையைத் தடுத்தனர் இவர் என்று கூறுவர்; இவருடைய அருமை பெருமையைப் பாராட்டி —

" அன்றுமுழி நின்றுதித்த ஆரமுதை ஒப்பிடுவர்
பொன்றுமைக் கேயதுவாம் புந்திநினைந் – தொன்ற
வுகுநேரிற் றுருவென லொக்குமலால் வேறென்
குகனேரி நாவலனுக் கு ".

எனக் கச்சியப்ப முநிவர் பாடினதாகக் கூறுவர்.

## 13. முருகம்மையார்

—: o :—

*" நலந்திகழு முருகம்மை அடியார்க்கும் அடியேன் "

இந்த அம்மையார் காலம் சரியாகத் தெரியவில்லை- திரு முருகாற்றுப் படையை நியமமாகப் பாராயணஞ் செய்யும் பொழுது தொன்று தொட்டு ஓதப்படுவதான

" ஒருமுரு காஎன்ற னுள்ளங் குளிர உவந்துடனே
வருமுரு காஎன்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காஎன்று தான்புலம் பாநிற்பத் தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே "

என்னும் பாடல் முருகம்மையாரின் வரலாற்றைக் குறிக் கின்றது.

" முருகா, முருகா " என்று உருப் போடுதலையே விரத மாகப் பூண்டிருந்த அம்மையார் ஒருவர், திருமணம் ஆன பின்பும் 'முருகா, முருகா' எனக் கூறி வந்தனர். பக்கத்து வீட்டில் இருந்த முருகன் என்னும் பெயருடைய வாலிபன் ஒருவன் தன்மீது விருப்புற்று அழைக்கின்றுள் இந்த அம்மை என நினைத்தான்; இதைக் குறிப்பாக அறிந்த அம்மையாரின் கணவர் —(இனி முருகா முருகா எனக் கூறுதே என்று கண்டித்தார். கண்டித்தும் தமது நற்பழக்கத்தை விட மனம் வராத இந்த அம்மையார் ஒருமுறை 'முருகா, முருகா' என்றபோது அயல் வீட்டு முருகன் அம்மையாரிடம் வருவதைக்

கண்ட அம்மையாரின் கணவர் மிகக் கோபங் கொண்டு அம்மையாரின் கரத்தை வெட்டினர். நோய்தாளாது புலம்பும் போதும் அம்மையார் ‘ முருகா ! முருகா ! எனைக் காத்தருள் ’ எனப் புலம்ப முருகவேள் தோன்றி வெட்டப்பட்ட கையை முன்போலாக்கி உதவி, அம்மையாருக்கும் சாமீப பதவியை அளித்தருளினர். இவ் வரலாற்றின் விரிவைச் சுப்பிரமணிய பராக்ரமத்தில் ‘ முருகமூர்த்தி ’ என்னும் தலைப்பிற் காண்க. இவ்வம்மையாரின் வரலாற்றைக் குறிக்கும் பாடலும், பாடற் பகுதிகளும் பின்வருமாறு ;—

(1) “ காண அரிவைமுன் நிற்குங் கதிர்வேலா ”

—திருப்புகழ் 573, பக்கம் 312 கீழ்க்குறிப்பு.

(2) “ அரிவை முரு காஎன் றழைக்குமுன் னேவந்து
கரமுதவி நின்ற கருணைப் பெருந்தேவோ ”

“ அரிவை முருகாஎன் றிசைக்க அருள்வாரி தருவன் ”

“ நிலைமைநெறி யுளதெரிவை முருகாஎன
உரைதருமுன் நிலவியவள் கரமுதவ வலனே ”

— (திருப்போரூர் சந்நிதிமுறை – தாலாட்டு 19 –
பிள்ளைத் தமிழ் அம்புலி 4 ; பெரிய கட்டியம் 8.)

## 14. பொய்யாமொழிப் புலவர்

—: o :—

*“ இம்பரெலாம் பரவுறுபொய் யாமொழியார்க் கடியேன் ”

இவர் ‘ தஞ்சைவாணன் கோவை ’ என்னும் அருமையான நூலின் ஆசிரியர். இவர் சரிதம் விரிந்த சரிதம்; விரிவை — அபிதான சிந்தாமணி, தமிழ்நாவலர்சரிதை முதலிய நூல்களிற் காணலாம். இங்கு முருகவேளுடன் இவர் சம்பந்தபட்ட வரையிற் கூறுவோம் :

சிவபிரானைப் பாடின வாயால் சிவகுமரனை யான் ஏன் பாடவேண்டும், கோழியையும் பாடிக் குஞ்சையும் பாடுவேனோ என்று முரட்டுத்தனமாகக் கூறினவர். முருகவேள் இவருக்கு நல்லறிவு புகட்டவேண்டி, இவர் காட்டுவழியில் தனிமையாகப் போய்க்கொண்டிருந்த பொழுது வேடனாக எதிர் தோன்றி வெருட்டினர். இவர் பயந்து நான் ஒருபுலவன் என்றார். புலவனாயின் ‘ என்மீது ஒருபாடல் சொல்லுக ’ என்றார் இறைவர். புலவர் உன் பெயர் என்ன எனக் கேட்க வேடனும் இறைவர் என் பெயர் ‘ முட்டை ’ என்றார். புலவர் உடனே—

"பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே - மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாறுய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்குங் காடு"

என 'நற்றுயிரங்கல் துறை'யிற் பாடினர்: இதைக்கேட்ட வேடர் –' பாலுள்ள கள்ளி தீ ஏறிப் பொறிபறக்கும் வேளையில் வேலமுள் சாம்பலாகப் போகும் – தைக்கமுடியாது; ஆதலால் உன் கவியிற் பொருட் குற்றம் உளது. உன் பெயரைச் சொல்; நான் பாடுகிறேன் பார்' என்றூர் இறைவர். புலவர் தன்பெயர் பொய்யாமொழி என்று சொல்ல, வேடரும் ஆம்; நும்மொழியும் பொய் - ஆம் – மொழிதான் என வேடிக்கையாகக் கூறி

"விழுந்த துளி அந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடு மென்றுஞ் – செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்துப் பெய்வளையும் போயினளே
பொய்யா மொழிபகைஞர் போல்"।

எனப் பாடிக் கோழிக் குஞ்சைப் பாடமாட்டேன் என்று இருந்தாயே, இப்போது முட்டையையும் பாடிவிட்டாயே என எள்ளிநகைத்து, நல்லறிவு ஊட்டி, அவர் நாவில் ஆறெழுத்தை வேல்கொடு பொறித்து ஆண்டனர் என்ப.

இவ் வரலாற்றைத் திருப்புகழ் 422, பக்கம் 562 - 565க் கீழ்க் குறிப்பிற் காண்க. அருணகிரியாரும், வரகவி மார்க்க சகாய தேவரும் இவரைப் பற்றிக் கூறியுள்ளன சில ஷை குறிப்பிற் காண்க. பிற கீழ்வருவன :—

(1) "முற்பா டப்பா டற்று ருக்கோர்
முட்கா டற்கப் பொருளீவாய்"

(2) "முற்பட்ட முரட்டுப் புலவனை
முட்டைப் பெயர்செப்பிக் கவிபெறு பெருமாளே"

(3) "அயில் அவசமுடன் அததிரி தருகவி
ஆளப் புயங்கொண் டருள்வோனே"

(4) "கற்று விற் காட்டிக் கரை துறை
நற்று யிற் காட்டிப் புகழ்கலை
கற்றூர் சொற் கேட்கத் தனிவழி வருவோனே!"
—(திருப்புகழ் 422, 1022, 1119, 1171).

(5) "பொய்யா மொழிப் புலவர் மதுரையிற் சங்கம்
புரக்க எழுநாள் மறவனுய்ப்
புறவுற வளைத்தெனது பெயர் 'முட்டை' பாடெனப்
'பொன்போலும்' என்று பாட
வெய்யான பாலைக்கி தேலாது நும்பெயர் விளம்பென
விளம்ப அவர்மேல்
'விழுந்த துளி' என்றெடுத் துப்பாடி அவர் நாவில்
வேல்கொடு பொறித்த சதுரா"
—(விரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் சப்பாணி 4).

(6) "வேலைக் கலைபயின்ற மேதகுபொய் யாமொழிக்குப்
பாலைக் கடையிதென்று பகர்ந்தபெரும் பாவலனே"
—(போரூர்ச் சந்நிதிமுறை தாலாட்டு 20).

(7) "கண்பாவுகா னகவேடனுய்க் கையம்புவில்
லொடுமேவியே
பண்பாவுமென் பெயர்முட்டைநீ பாடாயொரு
கவியென்னலும்
புண்பாவுவெஞ் சுரவண்மையாற் பொய்யாமொழிப்
புலவோன் சொலும்
வெண்பாவுகந் தணிமார்பனே வேலாயுதா
வேலாயுதா"
—(தணிகை வேலாயுதச் சதகம் 89).

(8) "வெருட்டிஒரு வேடுவனுய் ஓர்புலவன் வெண்பாவைக்
கைக்கொண்டு கோடு திரியுங் குறச்செட்டி"
—(தணிகை உலா 312).

## 15. *அருணகிரிநாதர்

—:o:—

"இளந்தமிழின் செழுங்கொண்டல் எனஉலகம் பரவும்
எம்பெருமான் அருணகிரி நாதர்க்கும் அடியேன்"

இவர் காலம் 15-ஆம் நூற்றுண்டு. தேவார திருவாசகங்கள் சிவபெருமானுக்கு எவ்வளவு உகந்தனவோ அவ்வளவு உகந்த பாமாலைகளாகத் திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநு

---

*இவர் சரித்திர விரிவை 'அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் எமது நூலிற் காண்க.

பூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு ஆகிய ஐந்து திவ்விய நூல்களை முருகவேளுக்குச் சூட்டினர் அருணகிரியார். இவர் இளமையிற் காமவலையிற் பட்டுப் பின்னர் திருஅண்ணாமலையில் திருக்கோயிலில் வடவாசலில் தவமிருந்தபோது இவர் வழி வழி அடிமை ஆதலின் முருகவேள் தோன்றி, இவருடைய மூவாசைகளையும் போக்கி இவர் நாவில் வேல்கொடு பொறித்து 'நீ பாடுக' என்றனர். அடியேன் எப்படி பாடுவேன் என்றனர் அருணகிரியார். "பத்தி தரு முத்திநகை அத்தி இறைவா" எனப் பாடு என்றனர் ஆண்டவர். அங்ஙனமே, அமுதச் சுவையையும் அப்புறப்படுத்த வல்ல திருப்புகழாம் தேம்பாக்கள் பதினாறாயிரம் பாடினர் அருணகிரியார். முருகன் திருவருளால் வேல், மயில், தமது தோளில் பொறிக்கப் பெற்றார். 'அருணகிரிநாத' என முருகனால் அழைக்கப்பெற்றார். ஜெபமாலை ஒன்று முருகன் தரப்பெற்றார். கணபதி, சிவபிரான், பார்வதி, வள்ளியம்மை இவர்கள் நால்வராலும் அருள்பாலிக்கப் பெற்றார்; முருகனது நடனதரிசனத்தைப் பல தலங்களிற் கண்டார். திருவடி தீக்ஷை, சக்ஷு தீக்ஷை முருகவேளிடம் பெற்றார்; அபரிமிதமான வித்தைகள் கை வரப் பெற்றார்; பாத தரிசனம் பெற்றார்; மனோலயம் பெற்றார்; யோக நிலை உபதேசிக்கப் பெற்றார். மெய்ஞ் ஞானத்தைப் பெற்றார். பாரதம் பாடின வில்லிபுத்தூரரொடு வாது செய்து, கந்தரந்தாதி பாடி, வாதில் வென்று, தம்மிடம் தோற்ற புலவர்களின் காதைக் குறடு கொண்டு துணிக்கும் அவ் வில்லிபுத்தூரரது கொடிய வழக்கத்தை நிறுத்தினர். சம்பந்தாண்டானொடு போட்டியிட்டு முருகவேளைப் பிரபுடதேவ ராஜனது முனனிலையில் சபையில் வரவழைத்தார். தமது உடலை அண்ணாமலைக் கோபுரத்தில் வைத்து, கிளியுருவிற் புகுந்து, விண்ணுலகத்துப் பாரிஜாதப் பூவை மண்ணுலகுக்குக் கொண்டுவரச் சென்றார். பாவலர் இறந்துவிட்டார், உடல் கோபுரத்திற் கிடக்கின்றது எனச் சம்பந்தாண்டான் அரசனிடம் சொல்ல, அந்த உடல் தகனம் செய்யப்பட்டது. கிளி உருவமாய்ப் பூவுடன் விண்ணுலகில் இருந்து வந்த அருணகிரியார் தமது உடல் மறைந்ததை அறிந்து, 'இது ஆண்டவன் செய்த திருக்கூத்து; இதுவும் நியாயமே' எனத் தேர்ந்து கிளி உருவுடனேயே இருந்து கந்தரநுபூதி, திருவகுப்புப் பாடித் தேவியின் திருக்கரத்தமர்ந்தனர் என்ப. இவ்விஷயங்கள் அருணகிரியார் திருவாக்காலும், பிற பெரியோர்களின் திருவாக்காலும் அறியக்கிடக்கின்றன; அவை கீழ்வருமாறு:—

(1) அருணகிரியார் தம்மைப்பற்றிக் கூறுவன

(1) "பழைய நினது வழியடிமை"—திருப்புகழ் 1127.

(2) " காமுகன் அகப்பட்ட ஆசையை மறப்பித்த
காலீனை மறக்கைக்கும் வருமோதான் "
திருப்புகழ் 426;

(3) " மடவார்பால் ஏகாப் பழிபுணு மருளற
நீதோற்றிமு னுளும் அடிமையை
ஈடேற்றுதலால் உன் வலிமையை மறவேனே "
—திருப்புகழ் 360;

(4) " விலைமாதர் ... கனிவாயில் கண்ணழிவு வைத்த புத்தி
ஷண்முகம் நினைக்கவைத்த கன்மவசம்
எப்படிக்கு மறவேனே "—திருப்புகழ் 1189.

(5) ' மேன்மைத் திருப்புகழை ஓதற்கெனக் கருள்வோனே '
—திருப்புகழ் 425;

(6) " என் பிழையுடன் பட்டுப் பத்தருள் வைக்கும்
பொறையை என்செப்பிச் செப்புவது !
ஒப்பொன் றுளதோதான் !"— திருப்புகழ் 460.

(7) " சுகஞா னக்கடல் மூழ்கத் தந்(து)
அடியேனுக்கு அருள்பாலிக்கும் சுடர் பாதக்குகனே"
— திருப்புகழ் 633;

(8) " அருணை நகர்மிசை கருணையொ டருளிய
(இருசரணமும்) – (மவுன வசனமும்) மறவேனே '
—திருப்புகழ் 513, 515;

(9) " பரகதி பெற்றிட நோக்கிய பார்வையும்
மறவேனே "—திருப்புகழ் 751;

(10) " அடைக்க லப்பொரு ளாமென நாயெனை
அழைத்து முத்திய தாம்அநு பூதியெ
னருட் டி ருப்புகழ் ஓதுக வேல் மயில் அருள்வோனே "
—திருப்புகழ் 850;

(11) " ஜெபமாலை தந்தசற் குருநாதா "—திருப்புகழ் 106;

(12) " அருணகிரிநாத எனும் அப்பனே போற்றி "
—திருப்புகழ் 827;

(13) "செந்திலிலும் என்றன்முன் கொஞ்சி நடனம்
கொளும் கந்தவேளே"—திருப்புகழ் 16.

(14) தகையா தெனக்குன் அடிகாண வைத்த
தனியேரகத்தின் முருகோனே"—திருப்புகழ் 199.

(15) "தணிகைமலை தனில் மயிலில் நிர்த்தத்தில் நிற்கவல
பெருமாளே"—திருப்புகழ் 308.

(16) "அறிவும்அறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப் பொழுதில் வாழ்வித்த
வேதியனும்-வேடிச்சி காவலனே"—திருவகுப்பு.

(17) "யோகத் தாறுப தேசத் தேசிக
யோக அநுபுதி யளித்த பாத"—திருப்புகழ் 68, 392.

(18) "மாயாதீத மனேலயந் தரு நாதா"—திருப்புகழ் 705.

(19) "திருப்புகழ் ... செப்பென எனக் கருள்கை மறவேனே
...மருப்புடைய பெருமாளே"—திருப்புகழ்.விநா. 3.

(20) "எனை அடிமை கொண்ட சுவாமி சதாசிவ
கடவுள் எந்தையர்"—திருப்புகழ் 856.

(21) "இதழ்சடையார், அடியேன் துயர் தீர்ந்திட
வெண்தழல் மாபொடி அருள்வோர்"
—திருப்புகழ் 568.

(22) "என்மாசு சேர் எழுபிறப்பையும்
அறுத்த உமை"—திருப்புகழ் 439.

(23) "ஆணவ மயக்கமுங் க(ல்)லி, காமியம்
அகற்றி, என்றனை ஆள்உமை பரத்தி"
—திருப்புகழ் 647.

(24) "கடையேன் இருவினை நோய் மலம்
மாண்டிட தீண்டிய ஒண்சுக மோகினி
வளிநாயகி"—திருப்புகழ் 568.

(25) "இடர்களின் பிணியோட எனையும் அருள் குறமாது"
—திருப்புகழ் 643.

(26) "மயிலுமாடி நீயாடி வரவேணும்—
உதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜன்
உளமுமாட வாழ்தேவர் பெருமாளே"
திருப்புகழ் 1056.

(27) "சயிலம் எறிந்த கைவேற்கொடு
மயிலினில் வந்தெனை ஆட்கொளல்
சகமறியும்படி காட்டிய குருநாதா"—திருப்புகழ் 331

(28) "உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில்
ஒருநொடி தனில்வரு மயில்வீரா" –திருப்புகழ் 755.

(2) பிற பெரியோர் கூறுவன

(1) "வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர் — நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"

(2) "காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே — தேசுபெறும்
ஊழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு."

—தனிப்பாடல்கள்.

## 3

### மயிலம் முருகன் பிள்ளைத் தமிழ்
(இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர்)

(1) "தண்டமிழ் விரகன் பரனொடு வாதுசெய்
சங்கத் தமிழ் நிபுணன்
சகல கலாதரன் இறைவ னுரைக்குரை
தந்தருள் நக்கீரன்
கொண்ட லெனச்சந் தத்தமிழ் மாரிபெய்
கொற்றவன் அருணகிரிக்
கோமான் எண்டிசை யளவு நெடும்புகழ்
கொண்ட அருட் செந்தேன்
அண்டர்தெள் ளமுதொடு முக்கனி யூறல்
அளவி வடித்தென்ன
அணிபெறு கவிதர மாலிகை நீபத்
தலர்மா லிகையினுடன்
கொண்டணி பன்னிரு பொற்புய பூதர
கொட்டுக சப்பாணி
குக்குட கேதன மயில நிகேதன
கொட்டுக சப்பாணி." (6)

(2) "மதுரம் பொழியும் அருணகிரி
வாக்கி னிடத்தும் அவனினிதில்
திளைத்த அநுபூ தியினுமறைச்
சிரத்தும் அழியாச் சிதாநந்தச்
செந்தேன் பரவைக் கடலகத்தும்
சிறியேன் சிந்தைச் சிலாதலத்தும்
முளைத்த பவள இளங்கிளையின்
முளையே வருக வருகவே
முழுது மயிலா சலமுகந்த
முருகா வருக வருகவே."

## 4. சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்

( அந்தகக்கவி வீரராகவ முதலியார் )

(1) "உலகிற் பேரருண கிரிதிருப் புகழ்கண்டு"
(விநாயக வணக்கம்)

(2) "அருணகிரி சொரிகவிதை யமுதத்தி னேயனை"
(காப்புப் பருவம் 3)

(3) "வழுவி லருணகிரி புகழு முதுதமிழ்த் தூக்கனை" ஷை 4.

(4) "மதுர முருகக் கவிதை மகிழ்தரு திருப்புகழ்
மலர்க்கே மணத்த மணமே" (சப்பாணிப்பருவம் 10)

(5) "கோடாத அறநெறியி னறுவகைமை லிபியைநவில்
குண நிபுண ரருண கிரிமித்திரா" (முத்தப்பருவம் 10)

(6) "சந்நிதிக் கருணகிரி நாதன் திருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந்துய்யலாம்" (அம்புலிப்பருவம் 10)

(7) "திருப்புகழெனு அருணகிரி நாதன் புகழ்ந்த
பல மாலையும்" (சிறுதேர்ப்பருவம் 8)

## 5. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

( வரகவி மார்க்க சகாயதேவர் )

(1) விடியாமல மாயைக ளாமிருள் தீர்த்துத் தீர்த்து
விழிநீர் தரு யோகிகள் சேர்திரு வீட்டுக் கேற்ற
வெளிரு அமுதா யுலகோ ரிடர் நீக்கப் பாட்டு
மிகவோத முனுளொரு நேயனுள் நாக்கிற் றீட்டும்
வடிவே லுடனே * * *

"செம்மையுள ஆறுமுக னைத்திரு விரிஞ்சைவரு
சேயைப் புரந்தருள்கவே"

* * * * * *

"எம் மருணகிரி நாத ரோது பதினாறு யிரந்
திருப்புக ழுமுதுமே" (காப்புப்பருவம் 2, 10)

(2) இஞ்சிகு முருகனை யன்பன் அன்புற இயம்பு
பாடல்களை யறியலாம்" (அம்புலிப் பருவம் 10)

(3) சத்தநிலை வழுவாம லத்தமொரு சற்றுந்
தளர்ந்துவெளி ரூம லமுதந்
தழுவுபதி னாறு யிரந்திருப் புகழெனுந்
தமிழ்மாலை சாற்றி யுருகிச்
சித்திபெறும் அருணகிரி நாதர் புகழ் கரனூர
சிறுபறை முழக்கி யருளே. (சிறுபறைப்பருவம் 3)

(4) மாதரிரு விழியாகும் அம்புக்கு மதனவேள்
வாளிக்கு நடுவாகியே
மாலாகும் அருணகிரி நாதரரு ணைச்சிகரி
வடவாச லிற்பயிலநம்
பாதமலர் பாடுநீ யென்னஅடி யேனும்எப்
படிபாட என்ற அளவிற்
பத்திதரு முத்திநகை யத்தியிறை வாவெனப்
பாடென்று சொல்லி யியலாற்
பூதலமும் எங்கிளையும் ஈடேற நாவிற்
பொறித்தவர் உரைத்த கவிதைப்
புத்தமுது பன்னிரு செவிக்குநிறை யக்கொண்டு
போதமுனளித் தருளினாற்
சீதள மலர்ச்சரணம் உதவுகர னூராளி
சிறுதேர் உருட்டியருளே
செயசெயென அமரர்தொழ அசுரர்முடி சிதறுமுனி
சிறுதேர் உருட்டியருளே. (சிறுதேர்ப்பருவம் 1)

## 6. திருப்போரூர்ச் சந்நிதி முறை

(சிதம்பர ஸ்வாமிகள்)

1. அருணகிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருணை நதிக்கிரி யானபுகழ் மாலை புனைபுயனே.
—(அலங்காரம் 78)

2. அருணகிரி நாத னருந்தமிழ்நூற் கீரன்
கருணைபெற ஓதுங் கவிமாலைத் தோளானே.
—(தாலாட்டு 17)

3. புனைபா மாலை தரித்தேத்தும் பொருவி லருண கிரிநாதன்
புகழ்வீட் டின்பம் பெறவுதவும் போரூர் முருகப்
பெருமானே, —(பெருங்கழி நெடில் விருத்தம் 6)

4. அருணகிரி நாதன் மகிழ்ந்தோது பாடல்
* * * * * *
இருணையமெய் யன்பர்குழாம் இசைந்து பாட
* * * * * *
சமரபுரி நாயகரே யாடீ ரூசல். (ஊசல் 7)

5. அருணையங்கிரி நாதன் தமிழ் மணமும்
அரிய கீரன் தமிழ் மணமுங்
குரவினன் மணமுங் கமழ்தரு போரூர்க்
குமரனே யமரர் நாயகனே.
(குறுங்கழில் நெடில் விருத்தம் 3)

6. சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த — எம்மான்
அருணகிரி நாதன் அநுபவநா யேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு. (நேரிசைவெண்பா 3)

## 7. தாயுமானவர்

(1) தேவர் தொழும் வாதவூர்த் தேவே யென்பேன் ......
பூவுலகில் வளரருண கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் ...... (ஆகார 31)

(2) '' ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார் — வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றுர் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன் '' (உடல்பொய் 26)

(3) யான்று னெனலறலே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்று னுரைத்தமொழி கொள்ளாயோ? (ஷை 65)

(4) கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன
எந்தையருள் நாடி யிருக்குநா ளெந்நாளோ?

(5) *அறிவை யறிவ துவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ?

---

*' அறிவை யறிவ து பொருளென அருளிய பெருமாளே'
— திருப்புகழ் 509.

## (8) அருளையர் இயற்றிய 'தாயுமானவர் துதி'

அருண கிரியார்க் காறு முகன்சொலும்
பொருணல மல்லது பொருளென மதியான்.

## (9) திருந்தனிகைத் திருவிருத்தம்*

(தொட்டிக்கலை – ஸ்ரீசுப்பிரமணிய முநிவர்)

(1) பன்னரிய வுன்னற் புதத்திருப் புகழைப்
பகர்ந்துகொண் டுன்திருமலைப்
படியேறும் அன்பர்வினை பொடியாகும் என்றுநிறை
மொழிமாந்தர் பகருவது கேட்
டென்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணியொழித்
தெனையும் வாழ்வித் தருளுகென்
றிரவுபக லுன்னருட் சந்நிதியில் வந்துமுறை
யிடுவேற் கிரங்கி யருள்வாய்.

* * * * * *

(2) நக்கீரர் சொன்னமுரு காற்றுப் படைத்தமிழும்
நல்லருண கிரிநாதர் சொல்
புலமையுறு சித்திரச் சந்தப் ப்ரவாகமும்
புநிதச் செவிக்குளார்த்த புகழாள!

## (10) க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ்

(சிதம்பர முநிவர்)

(1) "எம்மையாள் அருணகிரி நாதரோதுந் திருப்புகழெனுந்
தாங்கார மணிமார்பன்" (விநாயகர் துதி)

(2) "பொய்யா மொழியையும் புகழ்கொண்ட அருணகிரி
...... ...... ...... நாதரையும் ......
கவிசொலென்றே யடி யெடுத்துக் கொடுத்தவன்
கனிவாயின் முத்தமருளே" (முத்தப்பருவம் 10)

(3) "தருப்பொலியும் அமரா பதிக்கர சானவன்
சபையில்நட ராச ரங்கைத்
தமருகத் தெழுசத்த சூத்திர வியாகரண
சாகரந் தான் விரித்தோன்
பொருப்புயர் பரங்கிரியின் மறுகினன் மெய்க்கவிசொல்
பொய்யா மொழிப் புலவராய்
பொன்பா எனுங்கவியுன் முன்பாட உன்பாடல்
பூவுலகிலே கொண்டு மேற்

கருப்பவ மகற்றவரும் அருணகிரி நாதராய்க் கந்தநின்
னருள் பெற்ற பின்
கற்பகக் கனிரசக் கடலமுத வாரிதென்
கடலென மகிழ்ந்து பாடுந்
திருப்புகழ் முழக்கமணி யீராறு செவியனே
சிறுபறை முழக்கி யருளே
தென்னருணை வளர்கோபு ரத்துவாழ் முருகனே
சிறுபறை முழக்கி யருளே. (சிறுபறை 1)

## (11) தணிகைச் சந்நிதி முறை

(கந்தப்ப தேசிகர்)

1. கோட்டமரும் பைங்கிளியே கூறுய் தணிகைவரைக்
கோட்டமரு நங்கள் குமரேசன் — தாட்டுணைக்கண்
அன்பாம் அருணகிரி நாதன் அறைந்தபுகழ்
இன்பாயென் கைவந் திருந்து. (அந்தாதி 65)

2. கருப்புகழாம் பிறசமயக் கதைகேளா தநுதினமுன்
திருப்புகழை யுரைப்போர்க்குச் சித்தியெட்டு மெளிதாமே.
(கலம்பகம்)

3. வஞ்சகம் புரியு மவ ரலங்கார வறும்புகழ்
வேண்டிலேன், வேண்டும்
வரம்பெறும் அருண கிரி நினை முன்னுள்
வழுத்தலங் காரமும் புகழும். (ஷை 4)

4. காதலா யொருமயிலிற் களித்தேறுந் தணிகைவரைக்
கந்தன் யார்க்கு
நாதனே யெனத்தெளிந்த அருணகிரி நாதனுமுன்
நவின்ற பாவை
ஒதுவார் திருப்புகழென் றுலகினுள்ளோ ரதற்குநிகர்
உண்டோ மற்றைச்
சாதலார் விண்ணவர்கள் தம்புகழைத் திருப்புகழாச்
சாற்றி டாரே. (ஷை 11)

5. அருணகிரி நாதன் அறைந்தபதி னுரு
யிரகவிதை யென்றுலகில் யாரும் — உரைபுகலுந்
தெய்வத் திருப்புகழுஞ் செஞ்செவிகள் பன்னிரண்டி
னெய்தத் தனிக்கேட் டெழுந்தருளி (தணிகையுலா 16)

6. "கந்தரநு
பூதியலங் காரம் புகழ்வகுப்பந் தாதிகரத்
தோதுகிளி யாயிருந்த வுத்தமனும்" (ஷை 169)

7. "கைக்கிளியைப் பார்த்துவெகு காதலுடன் அன்னைமீர்
இக்கிளியைத் தாருமெனக் கென்றாள் — அக்கிளிதான்
வில்லிபுத்தூ ரான்செவியின் மேலரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண் - பல்லவையுள்
மற்றொருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்ததுகாண் — வெற்றிப்
பிரபுடதே வக்குரிசில் பேணியெதிர் காண
முருகன் மயில்மேல் முடுகி — வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றுந்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகாண்—எந்தைபிரான்
முத்தித் திருவென்னு முன்பதினா றாயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண் — சித்தியெட்டுங்
கற்றதுகா ணந்தம்மைக் கண்ணாலும் பாராமல்
உற்றதுகாண் சிற்றின்பத் தோருறவு — மற்றதுகாண்
நாமுரைக்கும் வார்த்தைகளை நற்செவிகே ளாதிருக்கும்
ஓமுரைக்கும் பூதியுங்கண் டுற்றிருக்கும்—தோமுரைக்கும்
மற்றைக் கிளிபோல் வசப்படா தென்றுரைத்துப்
பற்றிக் கொடுபோனார் பாவைதனை." (ஷை 350)

8. வள்ளைச் செவிக்கணியாய் மன்னுந் திருப்புகழைக்
கிள்ளைக் கிசைப்பதனைக் கேட்டுவந்து (ஷை 614)

9. — வேலர்
அலங்காரத் துட்பெருளை யாய்வதுவே தேகங்
கலங்கா வலங்கார மென்றும் — இலங்குகந்த
ரந்தாதி மேலாசை யாவதுயிர்த் தோழியெனு
நந்தாதி மேலான நட்பென்றும் — சந்தமுரு
காற்றுப் படையே யநங்க னடுபோரை
மாற்றுப் படையாகி வைகுமென்றுந் — தோற்றும்
அநுபூதி ஐம்பதுமே யாருயிர் பேரின்ப
அநுபூதி நல்கும் அணியென்றும் (ஷை 618)

## (12) சென்னிமலை ஆண்டவன் காதல்

பச்சைமயி லான்சூரைப் பாயுமயி லான்சேரும்
இச்சை மங்கை வாரணத்தாள் ஏறுமங்கை வாரணத்தாள்
நாட்டில் அருணகிரி நாதன் திருப்புகழ்சொல்
பாட்டின் மகிழ்ந்து படிக்கா சளித்தபிரான்
தாலமிகுஞ் சென்னிமலை தன்னில்வளர் கல்யாண
வாலசுப்ப ராயனென்று வாணர்புகழ் வாசலினன்
(55-57)

## (13) இலஞ்சி முருகன் உலா

'ஆசிலாப், பாவில் அருணகிரி பைந்தமிழின் மாரிபெய்ய
நாவிற் திருப்பெயரை நட்டோனே' (153)

## (14) திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்

1. குருவாக வந்தருண கிரியைத் திருப்புகழ்க் கூறென
.... .... .... முதற்சந்தமும்
திருவாய் மலர்ந்துரைசெய் குமரகுரு நாதனே
சிறுபறை முழக்கியருளே. (சிறுபறை 10)

2. எதிரும் புலவன் வில்லிதொழ
எந்தை உனக்கந் தாதி சொல்லி
ஏழைப் புலவர் செவிக்குருத்தோ
டெறியுங் கருவி பறித்தெறிந்தே
அதிருங் கடல்சூழ் பெரும்புவியில்
அறிந்தார் அறியார் இரண்டுமில்லார்
ஆரும் எனைப்போல் உனைத் துதிக்க
அளித்த அருண கிரிநாதன்
உதிருங் கனியை நறும்பாகில்
உடைத்துக் கலந்து தேனைவடித்
தூற்றி யமுதின் உடன்கூட்டி
ஒக்கக் குழைத்த ருசிபிறந்து
மதுரங் கனிந்த திருப்புகழ்ப்பா
மாலை புனைந்தான் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே. (வருகை 8)

—:o:—

## 16. ஞானவரோதயர்

*"குறைவிலா அருள்ஞான வரோதயர்க்கும் அடியேன்"

ஞானவரோதய பண்டாரம் எனப்படுவர் இவர். இவர் ஊர் திரிசிராப்பள்ளிக்கு அடுத்த வயலூர். பள்ளியிற் பிரம் படிக்கு அஞ்சி இவர் சிறு வயதில் பள்ளிக்குப் போகாது

வயலூர் முருகவேளின் சிலை உருவத்தின் பின்புறத்தில் ஒளித்துக் கொண்டார். இரவெல்லாம் கோயிலில் அடைபட்டுக் கிடந்தார். இரவில் முருகன் வெளிப்பட்டு இவருக்குக் கவி பாடும் திறத்தையும் ஞானப் பேற்றையும் அருளினர்; ஞான வரோதயர் என்னும் அருமைப் பெயரையும் பெற்ருர். மறு நாள் இவருடைய பெற்ரேர்கள் இவரைக் கோயிலிற் கண்டு பிடித்து இவர் திடீரெனக் கவி நலமும், ஞான நிலையும் பெற்ற பேற்றினைக் கண்டு மகிழ்ந்தார்கள். முருகவேளின் கட்டளைப்படி இவர் விராலிமலைப்ப்ரதேசத்துக்குத் தலைவரான அழகிய மணவாளதேவர்மூலம் விராலிமலைத் திருக்கோயிலைக் கட்டி, அவருடன் அக் கோயிலின் முதற் பரிபாலகராக விளங்கினர். " உலகம் உட்கொண் டுவப்ப முருகவேள் " என்று முருகவேள் அடி எடுத்துக் கொடுத்து உபதேச காண்டத்தைப் பாடுக என, இவர் உபதேச காண்டத்தைத் தமிழில் 2602 செய்யுள்களிற் பாடி முடித்தார். நூலில் முருகர் துதியில் —

'வயலூர் அதனில் எந்தைக்கு, எங்க ணுலகும்புகழ
உபதேசஞ் செய்து, எளியேற்கும் அவ்வழி
யென் றிரங்கிச் சீர்த்தி பொங்குதமிழ் மொழியின்
உபதேசகாண்டம், புகறி எனச் சிறிதருளும் புனிதன்
செவ்வேள், ஐங்கரன்பின் னவன்கந்தன். உமைகோன்
மைந்தன், அமரர்பணி குமரனடி அகத்துள்வைப்பாம்"

என இவர் பாடியதினின்றும், வயலூரில் உபதேசம் பெற்ற அருணகிரியாரே இவருக்கு ஞானத் தந்தை எனப் புலப்படுகின்றது. இவர்காலம் காளமேகப் புலவரது காலம் என்பது—

'ஞானவரோதயர் மதுரைக்குப் போனபோது காளமேகப் புலவர் எழுதி அனுப்பின கவிதை —

" முதிரத் தமிழ்தெரி நின்பாடல் தன்னை முறையறிந்தே
எதிரொக்கக் கோப்பதற் கேழேழு பேரில்லை யின்தமிழின்
பதரைத் தெரிந்தெறி கோஇல்லை ஏறப் பலகையில்லை
மதுரைக்கு நீ சென்ற தெவ்வாறு ஞான வரோதயனே "

எனத் தமிழ் நாவலர் சரிதையில் உள்ள குறிப்பால் விளங்கும். காளமேகப் புலவரது காலம் 14-ஆம் நூற்ருண்டின் இறுதியிலும் 15-ஆம் நூற்ருண்டின் முதலிலும் என்ப.

இவரை ஆட்கொண்டவர் முருகபிரானே, அவரே இவருக்குக் குலதெய்வம் என்பன.

" எற்குப் பேறு நல்கும் குருபரன் "
" எங்குலத் தேவாகிய திருத்தணியில் வரும் சரவணன் "

"எமது குலக்கோமான் சரவணேற்பவன்"
'எமது குலத்தேவாங் கந்தன்', 'எங்குலத் திறையாங் கந்தவேள்' என உபதேச காண்டத்தில் (பாடல் 906, 1887, 2110. 832, 898) வருவனவற்ருல் விளங்கும்.

—:o:—

## 17. நிரம்ப அழகிய தேசிகர்

"பரங்கிரிப் புராணமொடு சேதுபுரா ணமுஞ்சொல்
நிரம்பஅழ கியதேசி கப்புலவர்க் கடியேன்"

நிரம்ப அழகிய தேசிகர் திருப்பரங்கிரிப் புராணம், சேது புராணம்–பாடினவர். பதினாரும் நூற்ருண்டின் இறுதியில் இருந்தவர். கி.பி. 1592–ல் திருவாரூர்ப் புராணம் பாடின சம்பந்த முநிவருடைய ஆசிரியர் இவர். ராமேசுரம் ஆடல் மண்டபத்தைக் கட்டின ராமநாதமுநிவர் கி.பி. 1598–ல் இருந் தவர். அவரை நிரம்ப அழகிய தேசிகர் தாம் பாடிய சேது புராணத்தில் 'மாதவர்கள் மிக வாழ்க, இராமநாத மா முநிவன் நீடூழி வாழ்க' என வாழ்த்தியுள்ளார். நிரம்ப அழகியர் வாக்கு அருமையான வாக்கு. படிக்க இனிக்கும் பாடல்களைக் கொண்டன இவர் பாடிய திருப்பரங்குன்றப் புராணமும், சேது புராணமும்.

—:o:—

## 18. சேறைக் கவிராச பிள்ளை

"புவிராசர் போற்றவந்த கவிராசர்க் கடியேன்"

கவிராச பிள்ளை கருணிகமரபினர். 'கருணேசன் சேறைக் கவிராசன்' *தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலும் சைவ சித்தாந்த சாஸ்திரங்களிலும் சிவ புராணங்களிலும் மிக்க பயிற்சியுள்ளவர். சொல்லினிமை, பொருளினிமை வாய்ந்த அதி விசித்திரகரமான செய்யுட்கள் செய்தலில் வல்லவர்; வாதுக்கு வந்தோர்களை வென்று அடக்கும் ஆற்றலும் உடை யவர். செய்யுட்களை விரைந்து செய்யும் ஆற்றல் உடையவரா யிருந்தமையால் ஆசு கவிராசர், ஆசுகவிராசராசர், ஆசுகவி ராச சிங்கம் என்றும், வண்ணம் பாடுதலில் ஆற்றலுடையவ ராயிருந்தமையால் 'வண்ணக் களஞ்சியம்' என்றும் வழங்கப் பெறுவர்.

இவர் சேயூர் முருகன் உலா, வாட்போக்கி நாதர் உலா, திருக்காளத்தி நாதர் உலா, அண்ணுமலையார் வண்ணம் முதலிய நூல்களை இயற்றியவர். இவர் முருகக் கடவுளை உபாசித்து மந்திர சித்தி பெற்றவர். ஒருவனை விடந் தீண்டிய பொழுது இக் கவிராசப் பிள்ளையின் மாணவன் ஒருவன்

"ஆறுமுகன் ஆணை அவனடியார் தம்மாணை
ஏறு மயிலாணை என்ஆணை – வீறுபுகழ்
தேறு கவிராஜ ராஜன் திருவாணை
*ஏறிய வாறே இறங்கு"

என்ற வெண்பாவைப் பாடி விஷந் தீர்த்ததாகத் *திருக் காளத்திநாதருலா முகவுரையிற் கண்டுளது. இவர் பதினும் நூற்ருண்டினர் என்று கருதப்படுகிருர்.

இவர் பாடிய சேயூர் முருகனுலாவின் பெருமையை அந்தகக் கவி வீரராகவ முதலியார் தாம் பாடிய சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில்—"கவிராசன் இப்பிரான் மிசை செய்த கவி வெள்ளை கற்றுருகலாம்" என அம்புலிப் பருவத்தில் விசேடித்துக் கூறியுள்ளார்". இவர் வரலாற்றைக் காளத்திநாதர் உலாவின் முகவுரையிற் காணலாம்.

—:o:—

## 19. குமர குருபரர்

### *"குமரகுரு பரஅடிகள் அடியார்க்கும் அடியேன்"

திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீவைகுண்டம் என்னும் ஊரின் வடபாலில் ஸ்ரீ கைலாசம் என்னும் பகுதியில் சைவவேளாள குலத்திற் சண்முக சிகாமணிக் கவிராயர் என்பவருடைய அருந்தவப் புதல்வர் குமரகுருபரர். இவர் தாயார் சிவகாம சுந்தரி அம்மையார். இவர் பதினேழாம் நூற்ருண்டினர்; ஐந்தாண்டு வரையில் பேச்சின்றி ஊமையாயிருந்த காரணத்தால் பெற்றேர்கள் இவரைச் செந்திலாண்டவர் சந்நிதியில் விட்டுத் தாமும் பாடுகிடந்தனர். செந்திற் பெருமான் அந்தக் குழந்தையின் கனவில் தோன்றி 'நீ யார்' என்றனர். அவனருள் கூடிடவே பிள்ளையும் 'அடியேன்' என வாக்கு அமைந்து பதில் அளித்தது! முருகவேளும் அப்பிள்ளைக்குத் தென்மொழி, வடமொழிகளின் இயல் எல்லாம் உணரப் போதித்துக், கடல்மடை திறந்தாலன்ன கவித்திறம் அளித்து, மழை பொழிந்தாலன்ன பிரசங்கம் நிகழ்த்தும் பேராற்றலும் தந்து, திருவடி சூட்டி, வெண்ணீறு நல்கி மறைந்தனர்.

* 'ஏறிய கொம்பே இறங்கு' என்றும் பாடம்.

இங்ஙனம் இருமொழிகளிலும் புலமை கிடைக்கப்பெற்றும், இறைவனைப் பாடுதற்குத் தக்க மொழி தென் மொழியே எனத் தேர்ந்து 'பூமேவு செங்கமலப் புத்தேளும்' எனத் தொடங்கிச் சிறந்த கலிவெண்பாவாகக் 'கந்தர் கலிவெண்பா' வைப் பாடி அருளினர். பின்பு வடக்கே பயணம் புறப்பட்டு மதுரைக்கு வந்து ஸ்ரீ மீனாட்சியம்மைமீது பிள்ளைத் தமிழ் பாடி மதுரையை அரசாண்டிருந்த திருமலை நாயக்கர் முன்னிலையில் அதை அரங்கேற்றினர். அரங்கேற்றுகையில் ஸ்ரீ மீனாட்சியே அருச்சகரின் பெண் குழந்தை போன்று வந்து முத்தப் பருவத்தில் ''காலத்தொடு'' என்னும் செய்யுளின் பொருளை அவர் உரைக்கும்போது சுவாமிகளின் கழுத்தில் ஒரு முத்துமாலையைஅணிந்து மறைந்ததாக உரைப்பர்பெரியோர். வருகைப் பருவத்தில் 'தொடுக்குங் கடவுள்' என்னும் பாடலைக் கேட்டு 'இன்னும் ஒருமுறை வாசித்துப் பொருள்உரைக்க' எனக் கேட்டு, அப்பாடலை வியந்து மறைந்ததாகவும் கூறுவர்:

பின்பு தருமபுர ஆதீனத்தில் 4–ஆம் பட்டத்தில் குருமூர்த்தியாய் விளங்கிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரைத் தரிசித்து அவரே தமது ஞானாசிரியராக அறிந்து வணங்கி அவர் கட்டளைக் கிணங்கச் சிதம்பரத்துக்குப் பயணம் ஆயினர். வழியில் வைத்தீசுரன் கோயிலில் வீற்றிருக்கும் முத்துக் குமரப் பெருமான் 'இங்கு நீ பாடாமற் செல்லற்க' என்று கூறிப் 'பொன்பூத்த குடுமி' என முதலடியும் எடுத்துக் கொடுத்து மறைய — 'முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழை' இவர் பாடினர். சிதம்பரத்தில் தங்கிச் சிதம்பர மும்மணிக்கோவை முதலிய நூல்களைப் பாடித் தமது ஞான தேசிகரின் விருப்பின்படி காஷாயம் பெற்றுக் குமர குருபர முனிவர் எனப் பெயர் பெற்றுக், காசித் தலத்தை அடைந்து, சகலகலாவல்லி மாலை என்னும் பிரபந்தத்தை இயற்றிப் பாதுஷாவினிடம் பேசி அவன் உதவியால் கேதார கட்டத்தில் இடம் பெற்று 'குமாரசாமி மடம்' என்ற அருமை வாய்ந்த மடத்தைக் கட்டுவித்தனர். அதிலே தங்கியிருந்தபோது 'காசிக் கலம்பகம்' இவரால் இயற்றப்பட்டது. பின்னர் தருமபுரத்துக்கு வந்து ஞானாசாரியரைத் தரிசித்து அவர் இட்ட கட்டளைப்படி காசிக்குத் திரும்பி வந்து அங்கேயே தங்கியிருந்து ஒரு வைகாசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத் திருதியையிலே சிவபிரானது திருவடி நீழலிற் கலந்தனர்.

(1) ஊமைப் பிள்ளையைத் திருச்செந்தூர் ஆண்டவனிடத்திலேயே ஒப்புவித்திடலாம் எனப் பெற்றோர்கள் புறப்பட்டபொழுது கண்ட நன்னிமித்தங்கள்

உற்றதோர் ஐந்தாம ஆண்டில் ஒய்யெனச் செல்லாநிற்கும்

மற்றவர் மனையி னின்று மறுகில்வந் தனரப் போது
பெற்றமொன் றிளங்கன் றோடு பெருமடி சுரந்த பாலோ
டுற்றது நேரே கண்டார் உலப்பிலா மகிழ்ச்சி பூத்தார்.
மறையவர் இருவர் அப்பால் வந்தனர் அதுவுங் கண்டார்
குறையிலை போபோ என்றோர் ஏதிலன் கூறக் கேட்டார்
நறைகமழ் கின்ற தேமாங் கனிசிலர் நல்கக் கொண்டார்
நிறைதரு மகிழ்ச்சி பொங்க நடந்தனர் நிகரி லாதார்.

### செந்திலாண்டவன் திருவருள் புரிதல்

"காங்கேயன் கருணை பூத்துச் செவ்வண்ணக் குமர
னுவோர் திருவுருக் கொண்டு தோன்றி .........
வாய் மலர்ந்து .........

மருவிய நீயா ரென்ன வாய்திறந் தடியேன் என்னப்
பொருவிலக் கரமுப் பானும் பொலிதரும் ஐம்பத்தொன்றும்
தருமிரு மொழிகட் குள்ள இயலெலாம் உணரச் சாற்றிப்
பெருகிலக் கியமுங் கூறிப் பிறழ்தராப் புலமை செய்து
கடல்மடை திறந்தா லென்னக் கவிபுகல் வாக்கு நல்கி
அடல்கெழு பிரசங் கத்தின் அமைபெருஞ் சிறப்பு நல்கி
மடனிகு சமய மாதி வயங்குதீக் கைகளும் செய்து
படர்மறை அனைத்துந் தேறப் பதமலர் சென்னி சூட்டி ...
திருந்துவெண் ணீறு நல்கித் திருவுருக் கரந்தான் ஐயன் (51)

### மீனுட்சி அம்மை பிள்ளைத்தமிழை அரங்கேற்றினபோது தேவி குழந்தையாய் வந்து, திருமலை நாயகர் மடிமீது வீற்றிருந்தது

செற்றமில் புலவர் சிங்கம் தினமொரு பருவ மாக
அற்றமில் அறிஞர் மெச்ச அணிந்தரங் கேற்றும்போது
பற்றிய புகழ்வா ரானைப் பருவத்தின் மழவா யம்மை
வெற்றிநா யகர்ம டிக்கண் மேவிவீற் றிருந்தா ளென்றே (93)

### முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் பாடினது

...... கந்தனுர் இளங் குழவியாய்த் தோன்றினுர் கனவில்
இங்கு நம்மைநீ பாடுறு தேகலை என்று
தங்கு பேரரு ளால்நுதற் பூதியுஞ் சாத்திப்
பொங்கு பேரெழிற் புண்ணியர் மறைந்தனர் ......

குமிழ் மறிந்தகண் தையல்தன் மகனருள் குறித்தாங்
கிமிழ் பெருங்களி யோடு'பொன் பூத்த'என றெடுத்தே
அமிழ்து முற்சுவை புறந்தரச் சுவையமை பிள்ளைத்
தமிழ் முடித்தனர் பாடுபு புலவர்தந் தலைவர். (205)

—(குமரகுருபர சுவாமிகள் சரித்திரம்).

(2) " காசிவாழுஞ் சிவானந்த குமரகுரு பரமுனியையும்
கவிசொலென் றேயடி எடுத்துக் கொடுத்தவன்
கனிவாயின் முத்தம் அருளே
கந்தனே புள்ளூரில் வந்தமுத் துக்குமர
கனிவாயின் முத்தம் அருளே " (10)
—(க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ்).

—: o :—

## 20. சிவப் பிரகாச சுவாமிகள்

*" கோதில்சிவப் பிரகாசர் அடியார்க்கும் அடியேன் "

சிவப்பிரகாச சுவாமிகள் 17–ஆம் நூற்றுண்டில் இருந்தவர். காஞ்சீபுரத்தில் தொண்டை மண்டல வேளாளர்க்குத் தீக்ஷா குருவாகக் குமாரசாமி தேசிகர் என்பவர் இருந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள் – முறையே சிவப்ரகாசம், வேலாயுதம், கருணைப் பிரகாசம் என்பவர்கள்; சிவலிங்க தாரணம் செய்துகொண்டு வீர சைவ சமயாசார நெறியைப் பற்றினவர்கள் இவர்கள். கல்வி கேள்விகளில் வல்லவராய் மூவரும் விளங்கினுர்கள். மூவரும் திருவண்ணுமலைக்கு வந்தார்கள், அங்கே சிவப்ரகாச சுவாமிகள் 'சோணசைல மாலை' என்னும் அருமையான நூலை இயற்றினுர். பின்பு இலக்கணம் கற்கவேண்டித் திருநெல்வேலியை அடைந்து, தருமபுர ஆதினத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுக்கு ஞான தீட்சை செய்த ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் சைவ சந்நியாசம் பெற்றுத் திருநெல்வேலியிற் சிந்துபூந்துறையில் இருந்த வெள்ளியம்பலவாண சுவாமிகளை அடைந்து, தமது எண்ணத்தைச் சிவப்பிரகாச சுவாமிகள் தெரிவிக்க, அவர் சுவாமிகளின் இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு 'கு' எனத் தொடங்கி 'கு' என முடித்து, இடையில் 'ஊருடையான்' என அமைத்து ஒரு வெண்பாப் பாடுக என்று கூறச், சுவாமிகள் —

" குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு — வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோல் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு "

என்னும் வெண்பாவைப் பாடினர். வெள்ளியம்பலவாண சுவாமிகளும் இவ் வெண்பாவை மிக வியந்து பாராட்டி ஐந்திலக்கணங்களையும் நன்கு போதித்தார். சுவாமிகள் தம்மிடம் இருந்த முந்நூறு பொன்னைக் குரு தக்ஷிணையாக

வைத்து அவரை உபசரிக்க, அவர் 'இது நமக்கு வேண்டாம்—எம்மைத் தூஷித்தலையே விரதமாகக் கொண்ட திருச்செந்தூர்த் தமிழ்ப் புலவரை நீங்கள் ஜெயித்து அவர் வந்து எம்மை வணங்கும்படி செய்தால் அதுவே எமக்கு உகந்த குரு தக்ஷிணையாகும்' என்றார். இதைக் கேட்ட சிவப்ரகாச சுவாமிகள் திருச்செந்தூருக்குச் சென்று அந்தப் புலவரைச் சந்தித்தார். சுவாமிகள் வெள்ளியம்பலவாண சுவாமிகளிடம் பாடங் கேட்டவர் என அறிந்து தமது வழக்கப்படி அந்த சுவாமிகளை அப் புலவர் தூஷிக்கத் தொடங்கினர். அப்போது சுவாமிகளுக்கும் அப் புலவருக்கும் வாதம் ஏற்படப், புலவர் சுவாமிகளை நூதன வகையிற் பாடி வெற்றி பெறலாம் எனக் கருதி நாம் இருவரும் நிரோட்டக யமகம் (இதழ் ஒட்டாத பாடல்கள்) பாடுவோம்; முன்னர்ப் பாடி முடித்தவருக்கு அஃதியலாதார் அடிமையாதல் வேண்டும்' என்றனர். சிவப்பிரகாச சுவாமிகளும் இதுவே நல்ல தருணம் என மகிழ்ந்து அந்தப் பந்தயத்துக்கு இணங்கிப் பாடத் தொடங்கி முருகக் கடவுளின்மீது "திருச்செந்தில் நிரோட்டக யமகஅந்தாதி" என்னும் 30 பாடல்கள் கொண்ட நூலை முடித்தருளினர். புலவர் அந்த நேரத்தில் ஒரு பாடல் கூட அமைக்க முடியாமற்போகவே 'நான் அடிமையாயினேன்' என்று சிவப்ரகாசரது தாளில் வீழ்ந்து வணங்கினர். தமது அடியராய் அமைந்த புலவரைத் திருநெல்வேலிக்கு அழைத்து வந்து வெள்ளியம்பலவாண சுவாமிகளுக்கு அடிமை ஆக்கினர்; சுவாமிகளும் மகிழ்ந்தனர். பின்னர் சிவப்ரகாச சுவாமிகள் துறவியாகவே இருந்து தம்பியர்களுடன் வடக்கே பல தலங்களைத் தரிசித்துச் சிதம்பரத்தில் தங்கி 'நால்வர் நான்மணி மாலை' என்னும் மிக அருமையான நூலைப் பாடினர்; அதன் பின், காஞ்சிபுரத்தை அடைந்து அங்குத் தங்கி 'பிரபுலிங்க லீலை' என்னும் அருமை நூலைப் பாடினர். பின்னர் விருத்தாசலத்துக்கு வந்து 'பழமலை அந்தாதி' முதலிய நூல்களைப் பாடினர். பின்னர் 'நன்னெறி' என்னும் நீதிநூலை இயற்றினர். அகராதி செய்த வீரமா முனிவருடன் தருக்கம் செய்து 'ஏசு மத நிராகரணம்' எனப் பெயரிய நூலை அருளினர். தம்பி கருணைப் பிரகாச சுவாமிகள் 18–ஆம் வயதில் சிவனடி சேர்ந்தனர். அவர் தொடங்கி அரைகுறையாய் விட்ட சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் பாடினர் சிவப்ரகாசர். தமது 32–ஆம் வயதில் கன்னிமதியில் பௌர்ணமி திதியில் பரசிவத்தொடு கலந்தனர். இவருடைய தம்பியும் கருணைப் பிரகாசருடைய தமையனுமான வேலைய சுவாமிகள்—

" அல்லிமலர்ப் பண்ணவனும் ஆராய்ந் தறிகவிதை
சொல்லும் இருவரிடைத் தோன்றிய யான் - முல்லை
அரும்பிற் பொலியும் அணிமுறுவல் நல்லாய்
கரும்பிற் கணு நிகர்த்தேன் காண் "

என்னும் வெண்பாவைப்பாடித் துயர்க்கடலில் ஆழ்ந்து, பின்பு ஒருவாறு தெளிந்து, சீகாளத்திப் புராணத்தை முடித்துத் தமது 72-ஆம் வயதில் சிவலிங்க ஐக்கியமாயினர்.

செந்தில் முருகன் திருவருளைப் போற்றின சிவப்பிரகாச சுவாமிகளைக் "கற்பனைக் களஞ்சியம்" என்பர். இவரது கற்பனைத் திறம் 'சோணசைல மாலை' முதலிய நூல்களிற் காணலாகும்.

**செந்தில் நிரோட்டக யமக அந்தாதியிலிருந்து ஒரு பாடல்**

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற்செந்திற்கந்தநெற்றிக்
கணக்காக னார்தந்த நின்றனை யேயினிக் காதலினாற்
கணக்காக னுநிகர்த் தேயழி யங்கத்தின் காதலற்றே.

(கணக் காகம்—கூட்டமாகிய காகங்களும், நாய்களும், தின் காயம் – உண்கின்ற உடலை, நிலை என்று (கண்ணி) நினைத்து, என்ன கணக்காக நான் அலைந்து (எய்த்தேன்) இளைத்தேன்; எழில் - அழகிய செந்தூர்க் கந்தனே! நெற்றிக் கண் அக்கு ஆகனார் – நெற்றிக் கண்ணையும் எலும்பணிந்த திருமேனியையும் உடைய சிவனார் தந்த – பெற்ற, நின்றலையே-உன்னையே, இனிக் காதலினால் - விருப்புடன் க(ண்)ண – தியானிக்க, கா - காத்தருளுக, கனு நிகர்த்தே - கனவைப்போன்று, அழிகின்ற (அங்கத்தின்) உடல்மீதுள்ள, காதல் அற்றே – விருப்பம் நீங்கி.

(க–உ.) உடல்மேல் வைத்த ஆசை தொலைந்து உன்னை நினைக்கும்படி காத்தருளுக.

—: o :—

## 21. திருஞானசம்பந்த தேசிகர்

" *திமிரமல இருளகற்றும் சிவஞானத் தருமைத்
திருஞான சம்பந்த தேசிகர்க்கும் அடியேன் "

திருஞான சம்பந்த தேசிகர் தருமபுரத் ஆதீனத்து ஆரும் பட்டம் வகித்த குருமூர்த்தி; 17-ஆம் நூற்றாண்டினர். சம்பந்த சரணாலயர்க்கு ஞானோபதேசம் செய்தவர். இவர் பல தலங்

களைத் தரிசித்துத் திருநெல்வேலிக்குச் சென்றனர். அங்கு ஓர் அறச்சாலை மடத்துத் தலைவராக இருந்த தமிழாகர முனிவர்க்கு ஞானோபதேசம் செய்தனர். தமிழாகர முனிவர் சந்திர கலாமாலை, நீதி சாரம் முதலிய நூல்களை இயற்றினவர். திரு ஞானசம்பந்த தேசிக சுவாமிகள் வேள்விமலை என்னும் தலத்தை அடைந்து முருகவேளை வழி பட்டபோது வள்ளி யம்மையைக் காணுது "இங்கு வள்ளித்தாய் இல்லையோ" என்று கூறினுர். தாய் – 'இதோ இருக்கின்றேன்' என்று கூறி காட்சி தந்தனர். இவ்வரலாற்றை "எழில் வேள்விமலையி லோர் அம்மை எங்கே என்றியம்பியே திருமுனிற்கும், சம்பந் தனுக் கருள்செய் என்றுவள் ளிக்கருள்செய் சைவ நாயகன் வருகவே, தருமையம் பதிமுருக" என வரும் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழிற் காணலாகும். இவர் திரு அம்பல தேசிகரிடத்தில் தமது ஞானபீடத்தை ஒப்புவித்து முத்தி நிலை எய்தினர்.

—: o :—

## 22. சம்பந்த சரணுலய சுவாமிகள்

"*அமுதகவி சம்பந்த சரணர்வர கவியென், றறைமார்க்க
சகாயர், குண சீலர்க்கும் அடியேன்"

சம்பந்த சரணுலயர் பாண்டி நாட்டினர்; சைவ வேளாள மரபினர். 17 - ஆம் நூற்றுண்டினர்; இவர் தருமபுரத்து ஆதீனத்து ஆருவது குருமூர்த்தியாயிருந்த திருஞான சம்பந்த தேசிக சுவாமிகளிடத்தில் ஞானோபதேசம் பெற்று, அவரிடம் மிக்க பக்தி பூண்டு, சம்பந்த சரணுலயர் என்னும் பெயரை வகித்தவர். சிவப்பிரகாச சுவாமிகளுக்கு இலக்கண நுட்பங் களை விளக்கிய வெள்ளியம்பலவாண சுவாமிகளிடம் கல்வி பயின்றனர். இவரது துறவொழுக்கத்தையும், கல்விப் பெருக் கையும் கேட்டறிந்த மைசூர் மன்னர் பெட்ட தசாமராஜ உடையார் II இவரை வரவழைத்தனர். இவருடைய கரிய திரு மேனியைக் கண்ட அரசன் 'அண்டங் காக்கைபோல் உளரே' என்று கூறி நகைத்தார். அப்போது சுவாமிகள் புன்னகை யுடன் "தாங்களே அண்டங் காக்கைக்குப் பிறந்தவர்" (அண்டம்–உலகை; காக்கை–காவல் புரிவதற்கு) எனச் சாதுரிய மாகக் கூற அதன் சொன்னயத்தையும், பொருணயத்தையும் கண்டு மன்னர் மகிழ்ந்தனர் என்ப. அந்த மன்னரின் வேண்டு கோளின்படி கச்சியப்பசிவாசாரியர் செய்த கந்தபுராணம் 10346 பாடல்களைச் சுருக்கிச் சொன்னயம், பொருணயம்

விளங்கக் 'கந்தபுராணச் சுருக்கம்' என்னும் நூலை (1048 செய்யுள் களாக) இயற்றினர். "சூதனங் குரைத்த காந்தம் இன்புறு கச்சியப்பன் இயம்பினன் தமிழால்; அன்னோன் அன்புறு தமிழைப் போற்றி அறிந்தவா சுருக்கிச் சொல்கேன்" (பாயிரம் 11) என்று கூறியுள்ளார். சிவபக்தி, குருபக்தி நிறைந்த செல்வர் இவர். முருகவேளே இவரை ஆட்கொண்ட தெய்வம் என்பது —

"பிணியான தறுத்தெனை யாளும் அருட்பெருமான்"
உற்ப - 95

"என்னை ஆளுடைய செவ்வேள்" (மகேந்-1)

என இவர் நூலில் வருவன வற்ருல் அறியக் கிடக்கின்றது.

—:o:—

## 23. மார்க்க சகாய தேவர்

மார்க்க சகாயர் காலம் விளங்க இல்லை. 17 – 18-ஆம் நூற்ருண்டினராயிருக்கலாம். இவர் வரலாறும் தெரியவில்லை. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் பாடினவராதலாலும், இவர் பெயர் மார்க்க சகாய தேவர் என்பதாலும் இவர் திரு விரிஞ்சை என்னும் தலத்தினரோ (அத்தலத்தில் ஈடுபட்ட வரோ) என்பதும், முருகவேளின் திருவடிக்கண் மாரு அன்பு பூண்டவர் என்பதும் பெறப்படுகின்றன. இவரைப் பற்றிய சில குறிப்புக்கள் இவர் அருளிய பிள்ளைத் தமிழிற் கிடைக்கின் றன; அவை பின்வருமாறு:—

### (1) தமது குறைகளை எடுத்துரைப்பது

(1) உருகா மனத்திமிரம் உடையேன், இரக்கமுடன் ஒரு பூதருக்கும் உதவேன்; உலகோர் பழித்த செயல் புரிவேன்; இடர்க் கடலில் உழல்வேன்; இரக்க எழுவேன்; மருவார் கறுத்த குழல் மடமாதர் கட்கடையின் மயலால் இளைத்து மெலிவேன்; வழிபாடும் அர்ச்சனையும் அறியேன்; (48)

(2) உருகாமனமும் சிவஞானம், உணரா அறிவும் உனதுபுகழ்
ஓதா நாவும், ஓதக்கேட்,டுவந்தே யினிய நதிபோலப்,
பெருகா விழியும் உடையேனை — (53)

(3) அகநெகிழ்ந் துருகியிரு விழிசலம் பொழிய உன
திருதாள் துதிக்க அறியேன்
அனுதினம் கலைமறைகள் நெறிநடந் திடல்வழுவி
அதிபா தகத்தை நினைவேன்
இகபரந் தனையறியும் அறிவறிந் திடுமுனிவர்
இடம்நாடி யுற்று மருவேன் (101)

### (2) முருகவேள் இவரை ஆட்கொண்டது

(1) 'ஆறுமுகத் தரசை எமை ஆண்டவனை' (1)
(2) 'எம்பாதகம் நீக்கிய வேலவனை' (5)
(3) 'தொண்டனுக எமைக் கொளும் சிறு தோன்றலே' (9)
(4) 'சங்கையிலா வினையேனை யுன் அன்பரோ டாளும் மனோகர' (31)
(5) 'பிறவிக் கடலில் வீழாமற் பேணி எடுத்திங் கென துள்ளம், பிரியா விரிஞ்சைப் பதிவாழும் முருகா வருக' (53)
(6) 'பவமெனுங் கடலில்விழும் எனையும்அன் பெனும்இனிய கரையேற விட்ட புணையே' (97)
(7) 'மனமும்ஐம் புலனும்ஒரு வழிசெலும் படியெனது மலமா சொழித்த குகனே' (98)
(8) 'எனையும் ......... அடிமைகொண் டருளிஎழு பவவேர் ஒழிக்கும் அரசே' (101)

### (3) முருகவேள் திருவடி சூட்டினது

(1) 'எந்தையை என் ஆவியை என் ஆவிக் கருந் துணையை என்சிரசில் ஒலமிடு பாதச் சதங்கையனே' (6)
(2) 'ஐம்புலனு லுழலாமலும் அந்தகனுர் பிடியாமலும் அன்றடியேன் முடி சூடிய சீர்பாதா!' (29)
(3) 'சாதம் ஒழிக்கும் அம்புயம்எம் தலேமே லிருக்கும் புது நளினம்' (72)
(4) 'உதயசெங் கதிரனைய சரணபங் கயமெனது முடிமேல் அழுத்து முதல்வா' (100)

### (4) பக்தர் கூட்டத்தில் தன்னைச் சேர்த்தது

(1) 'மலமாயை விட்டகல மறவாத பத்தருடன் வறியேனை வைத்த தலேவா' (49)
(2) 'எம்பிரான் எமையும் அன்பர் தங்களோ டிணங்கவே கருணை அருளினுன்' (68)
(3) 'எனையும்அன் பினர்களுடன் அடிமைகொண் டருளிஎழு பவவேர் ஒழிக்கும் அரசே' (101)

### (5) தேவியாலும் ஆட்கொள்ளப்பட்டவர்

'கடைக்கணில் அருளுடையாள் கருப்புகு வினையனை எடுத்தவள்' (89)

இவர் நக்கீரரிடத்தும், அருணகிரியாரிடத்தும், அளவிலாப் பக்தி பூண்டவர்.

(1) நக்கீரரைப் பற்றியன

(1) 'மொய்ம்பு பெறவே தொழுத கீரற் கிரங்கினனே' (6)

(2) 'மும்மைமலம் அகலநக் கீரமுனி சொன்னதிரு
முருகா றெனுந் தேறல்' (10)

'அருணகிரியாரைப் பற்றியன — பக்கம் 926 – 927 பார்க்க;

—:o:—

## 24. குணசீலர்

குணசீலர் கொங்கு நாட்டில் திருச்செங்கோட்டில் இருந்த புலவர். இவரை ஆழ்வார் திருநகரியிலிருந்த பிரதிவாதி பயங்கரன் என்னும் புலவர் வாதுக்கு அழைக்க வந்தனர். குணசீலர் அஞ்சி முருகவேளிடம் வாதில் என்னைக் காத் தருள வேண்டும் என முறையிட்டார். பிரதிவாதி பயங்கரன் வரும் வழியில், திருச்செங்கோட்டுக்கு அருகில் உள்ள சோலை யில் மாடு மேய்ப்பவனாக முருகவேள் கோலங்கொண் டிருந் தனர். வாதுக்கு வந்த புலவர் அந்தச் சோலையில் பல்லக்கி னின்றும் இறங்கி, எதிரில் இருந்த திருச்செங்கோட்டு மலை யைப் பார்த்து, இந்த மலையைச் 'சர்ப்பகிரி' என்று சொல்லு வார்களே: அப்படியாயின் இது ஏன் படமெடுத்து ஆடவில்லை என்னும் கருத்தை உட்கொண்டு, கட்டளைக் கலித்துறைப் பாடலொன்றை —

" சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயிலமென்ன
அமரிற் படம்விரித் தாடாத தென்னை ? "

எனத் தொடங்கி அதைப் பூர்த்தி செய்ய முடியாது விழித்துக் கொண்டிருக்கும்போது, அங்கே அண்மையில் பசுக்களைமேய்த் துக் கொண்டிருந்த இடைப்பையன் (முருகவேள்) அப் புலவ ரைப் பார்த்து —

" அஃதாய்ந்திலையோ —
நமரன் குறவள்ளி பங்கன் எழுகரை நாடுயர்ந்த
குமரன் திருமரு கன்மயில் வாகனம் கொத்துமென்றே"

என அப் பாடலை முடித்து, கேட்ட வினாவுக்கு விடையையும் அளித்தனர். இதைக் கேட்ட பிரதிவாதி பயங்கரன் 'ஆஹா! இம்மலை முருகவேளின் மலை: அவர் வாகனமாகிய மயில் அம் மலைமீதுள்ளது. படமெடுத்தால் அம்மயில் நம்மைக் கொத்தி விடும் என்று பயந்து இப் பாம்பு படம் எடுத்து ஆடவில்லை என எவ்வளவு நயம்படக் கருத்தமைத்து இப் பாடலை ஒரு நொடியில் இவன் பூர்த்தி செய்தான் என அவனுடைய ஆற் றலையும் அறிவையும் கண்டு வியப்புற்று – 'அப்பா! நீ யார்!

இவ்வளவு ஞானம் உள்ள நீ ஏன் மாடு மேய்க்கும் வேலையில் இருக்கிறாய்?' என, அவன் 'ஐயா! நான் இவ்வூர்ப் புலவர் சிகாமணி குணசீலரின் கடை மாணக்கன். 'ஆசுகவி பாடு வதில் ஆற்றல் இல்லாதவன் நீ, 'மாடுமேய்த்துப் பிழை' என்று கூறி என்னை ஒதுக்கிவிட்டார்' என்று விடையளித் தான். இதைக்கேட்ட பிரதிவாதி பயங்கரன் ஒதுக்கப்பட்ட மாணக்கனே இத்துணை ஆற்றல் உள்ளவன் என்றால், குணசீல ரிடம் உள்ள இடை மாணக்கர், தலை மாணக்கர் எவ்வளவு பேராற்றல் உடையவர்களாயிருக்கவேண்டும்; அவர்களுடைய ஆசிரியர் குணசீலர் எவ்வளவு திறமையும் ஞானமும் உள்ள வராயிருக்கவேண்டும் என யோசித்து, அச்சம் கொண்டு பல்லக்கிலேறி வந்த வழியே திரும்பி ஓடிவிட்டான் என்பது வரலாறு.

> "பெருமை மிகும்அர வச்சிலம் பாமெனிற் பெட்புறுமவ்
> வரவு படம்விரித் தாடாத தென்னென் றகத்துனுமோர்
> கருவி வெருக்கொள ஆமேய்ப் பவனுய்க் கனிந்துதிரு
> மருகன் மயில் கொத்தும் என்றெனச் சொல்கொங்கு
> மண்டலமே"
>
> —(கொங்குமண்டல சதகம்).

—:o:—

## 25. அந்தகக்கவி வீரராகவ முதலியார்

"அந்தகர்நங் கவிவீர ராகவர்க்கும் அடியேன்"

அந்தகக்கவி வீரராகவர் 'சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்' பாடினவர். சேயூர்க் கலம்பகம் ஒன்றும் இவர் பாடினர்என்ப. இவர் ஊர் செங்கற்பட்டு ஜில்லா உழலூர் என்றும், பொன் விளைந்த களத்தூருக்கு அருகில் உள்ள புதூர் என்றுங் கூறுவர்; வடுகநாத முதலியாரின் புத்திரர்; பிறவிக் குருடர்; கல்வியில் ஆதிசேடனே, அகத்தியரோ எனத் தக்கவராய்ப் புகழ்பெற் றவர். "ஏடா யிரங்கோடி எழுதாது தன்மனத் தெழுதிப் படித்த விரகன், இமசேது பரியந்தம் எதிரிலாக் கவிவீர ராகவன் விடுக்கும் ஓலை" என்பது அவரது சீட்டுக் கவியில் வருவது. திருக்கழுக்குன்றப் புராணம், திருக்கழுக்குன்ற உலா, ஆரூர் உலா இவர் இயற்றிய நூல்கள். பதினேழாம் நூற்றாண்டினர். பிள்ளைத்தமிழில் இவர் புகழ்ந்துள்ள பெரி யார்கள் (1) நக்கீரர் (2) அருணகிரிநாதர் (3) கந்த புராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் (4) சேயூர் முருகன் உலாப்

பாடிய சேறைக் கவிராஜபிள்ளை, பிள்ளைத் தமிழில் தாலப் பருவத்தில் ' தாளுந் தண்டையும் அழகிய பெருமாள் தாலோ தாலேலோ ' என இவர் பாடினது, அருணகிரியார் ' சிவந்த காலும் தண்டையும் அழகிய பெருமாளே ' என்னும் திருப் புகழை—(1075, 1076) நினைவூட்டும். இவரது சரித்திர விரிவை சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், திருக்கழுக்குன்ற உலா முகவுரைகளிலும், அபிதான சிந்தாமணியிலும் காணலாம்.

—: o :—

## 26. சிதம்பர சுவாமிகள்

*" எமதுசிதம் பரதேவர் அடியார்க்கும் அடியேன் "

சிதம்பர சுவாமிகள் திருப்போரூர்ச் சந்நிதிமுறை இயற் றிய பெரியார். இவர் ஊர் மதுரை. 17–ஆம் நூற்றுண்டினர்; அவிநாசி சாந்தலிங்க சுவாமிகளது மாணுக்கராய குமாரதேவ ருடைய மாணுக்கர் இவர். ஒழுவிலொடுக்கம் முதலிய நூல் களுக்கு உரை எழுதினவர். வீர சைவ தீக்ஷை பெற்று மதுரைக்குச் சென்று அங்கே ' மீனுட்சியம்மை கலிவெண்பா ' வைப் பாடினர். தேவியார் மகிழ்ந்து, ' திருப்போரூருக்குப் போய் அங்கே உள்ள முருகபிரான் திருக்கோயில் ஜீர்ணப்பட் டிருப்பதைப் புதுப்பிப்பாயாக ' எனக் கட்டளையிட்டனர். சுவாமிகள் அவ்வாறே திருப்போரூருக்கு வந்து புதிதாக ஆலயம் அமைத்து ஆண்டவன் திருவருளைப் பெற்று சிவாநு பூதிச் செல்வராய் விளங்கி முருகவேளின் திருவடி நிழலிற் கலந்தனர். இவர் வரலாற்றின் விரிவைத் திருப்போரூர்ச் சந்நிதிமுறை முகவுரையிற் காணலாம்.

—: o :—

## 27. சிற்றம்பல நாடிகள்

" அருட்சிற்றம் பலநாடி அடியார்க்கும் அடியேன் "

சிற்றம்பல நாடிகள் திருச்செந்தூர் அகவல் இயற்றியவர்; மாயூரத்துக்கடுத்த சித்தர் காட்டில் இவர் சமாதி உளது. இவர் வரலாறு அபிதான சிந்தாமணியிலும், புலவர் புராணத் திலும் காணலாகும். இவருக்கு 63 மாணுக்கர்கள் இருந்தனர். ஒருமுறை உணவு கொள்ளுகையில் பரிசாகரன் நெய்யென

நினைத்து வேப்பெண்ணெயைப் பரிமாறச் சீடர் அனைவரும் அதனை அறியாது உண்டனர்; ஒருவர் மாத்திரம் வேப்பெண்ணெய் என்றறிந்து உணவைக் கான்று ஆசாரியருக்கு அறிவித்தனர். ஆசாரியர் இவன் பரிபாகம் இல்லாதவன் என அவரை விலக்கினர். ஏனையோருடன் தனித்தனி சமாதிக்குழி செய்வித்துச் சீடருடன் ஒரே கணத்தில் சிற்றம்பல நாடிகள் சமாதி அடைந்தனர். விலக்கப்பட்ட ஒருவரும் பின்னர் வந்து சமாதியிடம் 'சற்குருவாம் சிற்றம்பலவா! மிக்க நீ எனைவிடுத்துருக்கரந்தால் மீண்டும் ஈண்டெழுந்தருளவே வேண்டும்' என முறையிட, ஆசிரியர் 'வருக' என அழைத்து அவரையும் சமாதியிற் கலப்பித்தனர் என்ப.

—:o:—

## 28. வென்றிமாலைக் கவிராயர்

*"வென்றிமாலைக்கவிஞர் அடியார்க்கும் அடியேன்"

வென்றிமாலையர் அந்தணர். இவர் திருச்செந்தூர்த் திருக்கோயிலில் மடைப்பள்ளிவேலை செய்து கொண்டிருந்தார். ஒருநாள் நைவேத்தியம் காலதாமதப்பட கோயில் அதிகாரிகள் இவரைத் தண்டித்தார்கள். இவர் மானமிழந்து வாழ்தலினும் கடலில் வீழ்ந்திறத்தல் நன்றெனத் துணிந்தபோது முருக பிரான் ஓர் அன்பர்போலத் தோன்றி—'அன்ப! நீசெந்தூர்த் தலத்தின் மான்மியத்தைத் தமிழிற் பாடுவாயாக-வடமொழி மூலம் செவ்வல் என்னும் ஊரில் கிருஷ்ண சாஸ்திரியிடம் இருக்கின்றது. அதை அவர் தமிழில் மொழிபெயர்த்துத் தருவார். அதைப் பாடலாகப் பாட உனக்கு வாக்குவரும்' எனக் கூறி மறைந்தார். அங்ஙனமே இவர் சாஸ்திரியாரைக் கண்டு அவர் மொழிபெயர்த்துத் தந்த தமிழ் மான்மியத்தைப் பாடலாகப் பாடத் திடீரென்று இவருக்குத் தடைபடாத வாக்குபிறந்தது. முருகன் திருவருளால் திருச்செந்தூர்ப் புராணத்தைப் பாடிமுடித்தனர். அவர் அதைஅரங்கேற்ற முயன்ற போது திருச்செந்தூர்த் திரிசுதந்தரர்களாகிய (முக்காணிய) பிராமணர்கள் இவரை அசட்டைசெய்து இகழ்ந்தார்கள். இவர் மனம்நொந்து புராணஏட்டைக் கடலிலே வீசிஎறிந்து சிவயோகபரராய்க் கந்தக்கடவுளின் திருவடியை அடைந்தனர். அப் புராணஏடு அலைகளால் ஒதுக்கப்பட்டு ஈழதேசத்தில் யாழ்ப்பாணத்துக் கருகே ஒருவரிடம் கிடைத்தது. அவர் இருந்த தெருவில்மாத்திரம் சக்கரசுவாசம் என்னும் விஷக்

காற்று வாராதிருப்பதை அறிந்த அந்த ஊரார் வியப்புற்ற போது முருகவேள் இன்னுரிடத்தில் எமது புராணம் உளது. அதன் பெருமையால் அந்தத் தெருவில் மாத்திரம் அந்நோய் பரவவில்லை என்று ஊராருக்குக் கனவில் தெரிவித்தனர். அவர்கள் அந்நூலைப் பெற்று வீடுகள் தோறும் அதை நேசித்துப் பூசித்து வாசிக்க, ஊர் க்ஷேமம்அடைந்தது என்பர்.

இவ் வரலாற்றைத் திருச் செந்தூர்ப் புராணத்துப் பாயிரத்திலும், சுப்பிரமணிய பராக்ரமத்தில் 'புராண பாலன கிருபாமூர்த்தி' என்னும் தலைப்பினும் காணலாம். புராணம் கிடைத்த இடத்துக்குப் 'பனைமுனை' 'புராணமுனை'எனப் பேர் போந்தது.

" விரிதருசீர்ப் புகழ்ச்செவ்வற் கிருட்டிணசாஸ் திரியெனுநால்
வேதன் வேதங்
கருதரிய வடகலையை ஆராய்ந்து சொலஅதனைக்
கருதிச் செவ்வேள்
சரிதையென உணர்ந்துணராப் புல்லறிவி னுலினிய
தமிழே போலத்
தெரிதரத்தென் செயந்திபுர மான்மியமாம் எனஉலகிற்
செப்பி னேனுல்"

(திருச்செந்தூர்ப் புராணம்-பதிகம் 15).

" மயில்வாழி தகர்வாழி சேவல் வாழி
மநுஅனைய திரிசுதந் தரத்தர் வாழி
குயில்வாழு மொழித்தெய்வ யானை வாழி
குறவர்குலக் கொடிவாழி, கொடுஞ்சூர் மாய்த்த
அயில்வாழி செயந்திபுரத் துற்ருேர் வாழி
ஆறுமுகப் பெருமான்தன் கருணை வாழி
பயில்வான்மை முகில்வாழி புராணம் கேட்போர்
படிப்போர்கள் கிளைகளெல்லாம் வாழி மாதோ"

(திருச்செந்தூர்ப் புராணம்-ஈற்றுப் பாடல்).

—:o:—

## 29. பகழிக் கூத்தர்

*" வியன்பகழிக் கூத்தர்தம தடியார்க்கும் அடியேன் "

பகழிக்கூத்தர் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் பாடினவர்; இவர் வைணவமரபினர். இப் பிள்ளைத்தமிழைப் பாடி வயிற்று நோய் நீங்கப் பெற்ருர் என்ப. பிள்ளைத் தமிழ் அரங்கேற்றி முடிந்ததும் சபையோரிற் சிலர் இவர் வைணவர் என்று மரியாதை செய்யாது புறக்கணித்தனர். அன்றிரவு முருக வேளுக்குச் சாத்தப்பட்டிருந்த ரத்னப் பதக்கம் காணுமற் போக, விடியற்காலையிற் கோயிலார் தேட, அது நித்திரை செய்துகொண்டிருந்த பகழிக் கூத்தரது கழுத்தில் அணியப் பட்டிருந்ததைக் கண்டு, அவர் மகிமையை அறிந்து தாம் செய்த அபராதத்தைப் பொறுத்தருளும்படி அவரைக்கேட்டுக் கொண்டு அவரைப் பல்லக்கில் ஏற்றி ஊர்வலம் வந்து மரியாதை செய்தனர் என்ப.

இவர் சன்ஞசி கிராமத்தினர். " திருப்புல்லாணி மால் அடியான் தர்ப்பாதனன் மகன் பகழிக் கூத்தன் " என்பர் இவரை. 'சிந்தாமணிச் சுருக்கம்' என்னும் நூலும் இவர் எழுதியுள்ளார். " செம்பிநாட்டு, வீரநாராயணச் சதுர்வேத மங்கலம் விளங்கவே வந்த நெடுமால், வேதியர் குலாதிபதி தர்ப்பாதனன் புதல்வன் மிக்க பகழிக் கூத்தனே ' — சிந்தாமணிச் சுருக்கத்துப் பாயிரம்.

சன்ஞசிக் கிராமமானது ' வீர நாராயணச் சதுர்வேத மங்கலம் ' எனவும் அழைக்கப்படும். ' நெடுமால் வேதியர் குலாதிபதி ' என்பதால் இவர் வைஷ்ணவ பிராமண குலத்தினர் என்பது பெறப்படும். இவர் காலம் துணிந்து கூறுவதற்கில்லை;
(செந்தமிழ்–தொகுதி 6, பக்கம் 180 பார்க்க);

—:o:—

## 30. பாலசுப்பிரமணியக் கவிராயர்

*" பாவலர்மா மணிபழநித் தலசரிதம் பகர்ந்த
பாலசுப் பிரமணியர் அடியார்க்கும் அடியேன் "

பாலசுப்பிரமணியக் கவிராயர் துளுவ வேளாள குலத்தினர்; பதினேழாம் நூற்ருண்டினர். கி.பி. 1627-28ல் பழநிப் புராணத்தைப் பாடினர். இவர் தந்தையார் 'பெரிய கவி ராயர்' என்ப.

" புலமையிற் சிறந்த துளுவர்தங் குலத்தான்
புகழ்பெரி யவண்கவி ராயன்
சொலவரு மதலை சங்கமன் 'பால
சுப்பிர மணி'யனும் கவிஞன்
புலவருந் துதிக்க அருள்நிலைப் பெரியோர்
புகழ்பழ நிப்புரா ணத்தைச்
சிலமொழி யறிந்து குமரவேள் அருளாற்
செழுந்தமிழ் உரைபகர்ந் தனனே "

" மலர்தலை உரகம் தாங்கும்
மணிமுடிச் சகம தென்னும்
நிலைபெற நிறுத்த மூவைஞ்
ஞூற்றின்மேல் திகழும் ஐம்பால்
தலைசெறி பருவம் தன்னில்
தனிநெடுங் கதிர்வேல் அண்ணல்
நலனுறு பழநி மூதூர்ப்
பெருமையை நவில லுற்றேன் "

என வரும் பாடல்களைக் காண்க.

'நல்லன புரி வைகாவூர் நாடுசீர் நாளும் வாழ்க' என இவர் வாழ்த்தியுள்ளார். 'கொங்கு வைகாவூர் நனுடதில் திருவாவினன்குடி' என்பது திருப்புகழ்; ஆதலால் இவர் கொங்குமண்டலம் வைகாவூர் நாட்டுப் பகுதியைச் சார்ந்தவர் என்க. வைகாவூர் நாடு - வையாபுரி நாடு - ஆவினன்குடிப் பகுதி இதுவே.

' அழகு துரையே! வைகாவூர்க் கதிபா சிற்றில் அழியேலே
அமலா பழநிச் சிவகிரிவாழ்அரசே சிற்றில் அழியேலே '
(பழநிப் பிள்ளைத் தமிழ்.)

பெரிய கவிராயர் பழநிப் பெருமானுக்குத் தொண்டு புரிந்து வந்தவர். ஆண்டவன் அருளால் ஆண் மகவு பிறந்தது: குழந்தை கண் பார்வை மட்டிட்டும், காது செவிடாகவும் இருந்தது. பழநிப் பெருமானையே வேண்டி வேண்டி நின்றனர். பெருமான் சங்கம வடிவுடன் தோன்றிக் குழந்தையைத் தடவிக் கடப்ப மலர் ஒன்றைக் கொடுத்து இதைக் குழந்தையின் கண்ணிலும் காதிலும் ஒற்றுங்கள் எனக் கூறி மறைந்தார். அவ்வாறே செய்ய அந்தக் குழந்தைக்குக் கண்ணொளி கூடிற்று, செவி கேட்கலுற்றது, நல்லறிவு கூடிற்று.

குழந்தை பாலசுப்பிரமணியர் வடமொழி, தென்மொழிகளிற் பயின்று நல்ல புலமையை அடைந்தனர். தஞ்சை சமஸ்தானத்தில் 'கவிராயர்' என்னும் பட்டத்தைப் பெற்றனர். பெரியோர்களின் விருப்பத்தின்படி பழநிப் புராணத்தைப் பாடி முடித்தார்.

இவர் வரலாற்றைப் பழநிப்புராண முகவுரையிற் காண்க.

—: o :—

## *31. வைத்தியநாத தேசிகர்

"சிவஞ்சார்வைத் தியநாத தேசிகர்க்கும் அடியேன்"

இவர் 'இலக்கண விளக்கம்' இயற்றிய ஆசிரியர். இவர் ஊர் திருவாரூர்; அபிடேகத்தார்குலம்; படிக்காசுப் புலவரின் ஆசிரியர். அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் புகழப் பட்டவர். பாசவதைப் பரணி, நல்லூர்ப் புராணம், வாட் போக்கிப் புராணம், திருவாரூர்ப் பன்மணிமாலை முதலிய நூல்கள் இயற்றியவர். பொம்மபுரம் சிவஞானபாலைய சுவாமி மீது பாசவதைப் பரணி பாடிப் பரிசு பெற்றவர். இவர் காலம் 17–ஆவது நூற்றாண்டு. இவர் பாடியுள்ள 'மயிலம் முருகன் பிள்ளைத்தமிழ்' செவ்விய அழகிய நடையினது. மயிலம் முருகபிரான் 'நம்மீது பாடுக' என இவர்க்கு வரம் உதவ இவர் இப் பிள்ளைத்தமிழைப் பாடினர் என்பது—

"கதலிக் கனியும் சர்க்கரை யுஞ்செங்
கன்னற் பொழிபாலும்
கருணையின் அருள்செய் திவைபோ லச்சுவை
கனிதந் தினிதாயே
மதுரித் தமுதொழு கும்படி நம்மேல்
வடிதமிழ் பாடுகென
வரமுத வியமயி லைக்கிரி வேளை" (காப்பு-10)

'சந்தத் தமிழ்பா டுதற்குவரம் தந்தாய் வருக வருகவே' எனவரும் ஆசிரியர் வாக்காலே தெரிகின்றது. தாம் பாடிய நூலில் முருகவேள் குடிகொண்டுள்ளார் என்கின்றார். "சிவ ஞான தேசிகன் சிந்தையினும் எளியனேன் சேர்த்த தமிழ் மாலைதனிலும் சந்ததம் குடிகொண்டு பணிகொண்ட அருளாள சப்பாணி கொட்டியருளே"—(சப்பாணி 1.

அருணகிரியார் மீது அளவிலா மதிப்புக்கொண்டவர் இவர். அவர் நூல்களையும் நன்கு கற்றவர்-உதாரணமாகத் திருவகுப்

*பக்கம் 882 ல் 31, 32, 33, 34, 35 எண்களை 33, 34, 35, 31 32 எனத் திருத்துக.

பில் உள்ள 'மகரசல நிதிகுறுகி' (சீர்பாதவகுப்பு), 'ஐம்பத் தொன்றில் எட்டாறில் மூன்றினில் ஐந்திற் றங்கும் அப்பாலை வான்பொருள்'' (பூதவேதாள வகுப்பு) என வருவனவற்றை இவர் வாக்கில் —

'' மகரசலநிதி குறுக அசுரர் குலபதி மறுக '' (காப்பு-4)

'' அஞ்சினும் ஆறினும் எட்டினும் மூன்றினும்
ஐம்பத் தொன்றினுமே

அறியும் நிரந்தர புனித புரந்தர '' (சப்பாணி – 7)
எனவரும் இடங்களிற் காணலாம். இவர் வாக்கின் அழகைப் 11-ஆம் திருமுறையில் உள்ள (பக்கம் 867, 874) பாடல்களிற் காண்க.

கவி வீரராகவ முதலியார் இவரைப் புகழ்ந்து பாடின வெண்பா:

'' ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோ நாற்பத்
தொன்பதின்ம ரென்றே உரைப்பரோ – இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புடவி
தன்மீதந் நாட் சரித்தக் கால் ''

'' திருவாரூரிற் திருக்கூட்டத்தில், தமிழ்க்கு இலக்காகிய வைத்தியநாதன், இலக்கண விளக்கம் வகுத்துரை எழுதினன்' என்பர் சாமிநாத தேசிகர்.

—: o :—

## 32. சாமிநாத தேசிகர்

*'' நாவலர்தம் மாமணிசின் னப்பர்க்குஞ்...சாமிநாதர்க்கும்...அடியேன் ''

இவர் திருச்செந்தூர்க் கலம்பகம் பாடினவர்; பதினேழாம் நூற்றாண்டினர்; கல்லாட உரையாசிரியராம் மயிலேறும் பெருமாள் பிள்ளையிடம் தமிழும், கனகசபாபதி சிவாசாரியாரிடம் வடமொழியும் கற்றவர். திருவாவடுதுறை ஆதீனத்தில் நிருவாண தீக்ஷை பெற்றவர்; துறவி; வைத்தியநாத தேசிகரின் காலத்தவர்; தொல்காப்பியம் முதலிய நூல்களை எழுத்தெண்ணிப் படித்தவர். திருநெல்வேலி ஈசான மடத்தில் இருந்தவர். ஈசான தேசிகர் என்பது இவரது அபிஷேகச் சிறப்புப் பெயர். இவர் 'இலக்கணக் கொத்து' என்னும் நூலும் அதன் உரையும் எழுதினவர். இவருடைய மாணவர் நன்னூலுக்கு உரை எழுதின சங்கர நமச்சிவாயப் புலவர்.

'முருகக்கடவுள்மீது வைத்த பேரன்பினல் இவர் திருச்செந்தூர்க் கலம்பகம் என்னும் நூலைப் பாடி முருகபிரானது சந்நிதியில் அரங்கேற்றுவித்தனர். அன்று முதல் இக் கலம்பகத்தின் முப்பது தோத்திரச் செய்யுள் வேறெடுத்து முருகக் கடவுள் பள்ளியறைக்கு எழுந்தருளுங் காலத்தில் ஓதுவா மூர்த்திகள் தோத்திரம் செய்வது வழக்கமாயிருக்கின்றது' —என்று 1905-ல் அச்சேறிய கலம்பகத்து முன்னுரையிற் கண்டிருக்கிறது.

—:o:—

## 33. பழநிச் சமீன் விசயகிரி சின்னேவையன்

*" நாவலர்தம் மாமணிசின் னப்பர்க்கும் (சாமிநாதர்க்கும்) ... அடியேன் "

'பழநிப் பிள்ளைத் தமிழ்' சின்னப்ப நாயக்கர் என்பவரால் இயற்றப் பெற்றது. காப்புச் செய்யுளோடு 31 செய்யுட்களை உடையது. இவருடைய வாக்கினல் இவர் முருகக் கடவுளிடத்து உண்மையான அன்புடையவரென்று தோற்றுகின்றது'. (டாக்டர் உ. வே. சாமிநாதையர்).

இந் நூலாசிரியர் விசையகிரி வேலச் சின்னேவையன்; காலம் கி. பி. 18–ஆம் நூற்றுண்டின் தொடக்கம், இவர் மதுரையில் விஜயரங்க சொக்கநாத நாயகர் அரசு புரிந்த காலத்தில் இருந்தவர். —(தேவஸ்தான பதிப்பு முகவுரை).

—:o:—

## 34. வேதாந்த சுப்பிரமணிய பிள்ளை

" வேதாந்தம் உணர்சுப்ர மண்யர்க்கும் அடியேன் "

இவர் 18–ஆம் நூற்றுண்டில் இருந்தவர். திருப்புகழ் பெற்ற தலமாகிய குன்றக்குடி புராணம் இயற்றியவர்.

" மருது பாண்டிய ராசபோசனுயர் சமுக மதனிற் கன மருவு பஞ்ச லக்ஷண விதக்ஷண நலங்கமழும் வேதாந்த வாரி கரைகண்ட முகில் சுப்பிரமணிய விற்பன வசீகரன் " எனச் சிறப்புற்றவர்.

—:o:—

## 35. மேலகரம் பண்டாரக் கவிராயர்

" மேலகரம் பண்டாரக் கவிராயர்க் கடியேன் "

இவர் திரு இலஞ்சி முருகன் உலாவைப் பாடினவர். பதி னெட்டாம் நூற்றுண்டில் இருந்தவர். திருக்குற்றுலத் தல புராணம் பாடிய கவிஞர் பெருமான் மேலகரம் திரிகூட ராசப்பக் கவிராயருடைய முதற் புதல்வர் இவர். முருக வேளிடத்திற் பேரன்புடையவர். முருகன் தம்மை ஆட்கொண்டதை —

" என்னையே, ஏழு பிறப்பும் இனிப் பிறவா தாளவந்து
வாழும் இலஞ்சி வடிவேலன் "

என இலஞ்சி உலாவிற் (75) போற்றியுள்ளார்.

—:o:—

## 36. சிவஞான தேசிகர்

" சிவயோக சிவஞான தேசிகர்க்கும் அடியேன் "

இவர் தருமபுர ஆதீனத்துப் பத்தாவது பட்டம் தரித் தவர்; வைத்தீசுரன்கோயில் முத்துக்குமாரக் கடவுள்மீது திரு அருட்பாக்கள் பாடினவர்; 18-ஆம் நூற்றுண்டில் இருந்தவர்.

---

## 37. கச்சியப்ப முனிவர்

*" துகளறுசீர்க் கச்சியப்ப முனிவர்க்கும் அடியேன் "

இவர் பதினெட்டாம் நூற்றுண்டினர். சிவஞான முனிவ ரின் முதன் மாணக்கர்; தணிகைப் புராணம் பாடினவர். இவர் ஒரு பெரும் புலவர்; 'கவி ராட்சசர்' எனப் பேர் பெற்றவர். தணிகை ஆற்றுப்படை பாடித் தமது சீடர் கந்தப்ப தேசிகரின் குன்மநோயைப் போக்கினவர். இவர் பாடிய தணிகைப் புராணத்தைப் படித்தவர் சங்க நூல், சைவ சித்தாந்த சாத்திரம் முதலிய சகல நூல்களையும் கற் றவர் ஆவர். இவர் வரலாற்றைத் தணிகைப் புராணம் முகவுரையிற் காணலாம். பேரூர்ப்புராணம், திரு ஆனைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், காஞ்சிப் புராணம் 2-ஆம் காண்டம், கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது முதலியன இவர் செய்த நூல்கள்.

மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் ஸ்ரீ கச்சியப்ப முனிவரைத் தமது வித்யா குருவாகவும் வழிபடு தெய்வமாகவும் எண்ணி ஒழுகி வந்தனராம். பிள்ளை அவர்கள் நூல் இயற்றும்பொழுதும் பாடம் சொல்லுகையிற் பொருள் கூறும்பொழுதும் முட்டுப்பாடு நேர்ந்தால் இம் முனிவர் பிரானைத் தியானித்தல் வழக்கமென்றும் உடனே அம் முட்டுப்பாடு நீங்கும் என்றும் சொல்வதுண்டென டாக்டர் சுவாமி நாதையர் அவர்கள் எழுதியுள்ளார்கள். கச்சியப்ப முனிவர் கி.பி. 1790-ஆம் ஆண்டிற் பரிபூரண தசை அடைந்தனர்.

—:o:—

## 38. தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்

*" நன்றுதிகழ் மாதவசுப் பிரமணியர்க் கடியேன் "

இவர் வேளாளர்; துறவி; சித்தாந்த சைவர். கி.பி. 1785-86 ஆண்டில் பரிபூரணமான ஸ்ரீ சிவஞான முனிவர் இவருடைய வித்யா குரு; அவரிடம் மெய்யன்பு வைத்திருந் தவர்; சிவஞான முனிவருடைய திருவுருவைத் தொட்டிக்கலை சிதம்பரேசர் திருக்கோயில் சந்நிதி மண்டபத்தில் அமைத்து அதை வழிபட்டு வந்தவர். மிக இனிமையான செய்யுள்கள் செய்ய வல்லவர். அதனல் ' மதுரகவி ' என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். இவர் திரு ஆவடுதுறைக் கோவை, கலைசைக் கோவை, பழநிக் குழந்தைவேலர் பஞ்ச ரத்தின மாலை, ஆயலூர் முருகர் பிள்ளைத் தமிழ், சுப்பிரமணியர் திரு விருத்தம், திருத்தணிகைத் திருவிருத்தம் முதலிய நூல்களை இயற்றியவர். முருகக் கடவுளை உபாசித்து மந்திர சித்தி பெற்றவர். சுப்பிரமணியர் திருவிருத்தம் பாடி ஒருவ ருடைய குட்டரோகத்தையும், திருத்தணிகைத் திருவிருத்தம் பாடி ஒருவருடைய அந்தகத் தன்மையையும் இவர் தீர்த்தனர் என்ப. இவர் வரலாற்றைத் திருவாவடுதுறைக் கோவை முகவுரையிற் காண்க.

—:o:—

## 39. காஞ்சீபுரம் சிதம்பர முனிவர்

*" நவையில்சிதம் பரமுனிவர் அடியார்க்கும் அடியேன் "

இவர் ' சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ் ' பாடினவர். இந் நூல் 100 தலங்களைக் கூறு கின்றது. பல தலத்து வரலாறுகளும், பல பெரியோர்

வரலாறுகளும் பொதிந்து கிடக்கின்ற அருமையான நூல் இது. இவர் ஊர் காஞ்சிபுரம். இந்நூலகத்திலிருந்து இவரைப் பற்றி அறியக் கூடிய விவரங்கள் பின் வருவன :

(1) நோயால் வருந்திய இவர் காஞ்சியில் முத்தி மண்டபத்தின் ஆறுமுகக் கடவுளைத் தியானித்துவர, அப் பெருமான் இவரை ஆட்கொண்டு ஆகத்தில் வந்த பிணியையும் தீர்த்தருளினர். 'முத்தி மண்டபமேவு கச்சியினுள் அடியேனை ஆண்டுகொண்டு, என் ஆகத்தில் வந்த பிணி தீர்ந்திடவு முன்னிற்கும் ஆறுமுக மெய்த்தெய்வமே''—செங்கீரை 3.

(2) முருகவேள் குருவாக இவரது கனவில் தோன்றித் திருவடி தீக்ஷை செய்தது;

"எனையும்ஒரு பொருளெனத் திருவுளத் தெண்ணியே
என்கனவு முன்புவந்தே
இருந்தருள்செய் குருவடிவு காட்டியே கருணையுடன்
இணையடியென் முடி வைத்தவன்"
—(முத்தம் 9).

(3) இவர் காசித் தலத்தில் வாசம் கொண்டது :

'' காயப் பெருஞ்சிறை ஒழிக்கவே என்னையும்
காசிதனில் வைத்த பெருமாள்'' — அம்புலி 3.

(4) மயில் தியானம் உள்ளவர் :

'' என் கண்ணின் நடுவிலும் .........
எந்தை தாளின் கீழும் ...... நிற்கும் மயில்''
—(சிறுபறை 6);

(5) முருகக் கடவுளிடம் இவர் வேண்டும் வரம் :

'' தேகம்விட் டுன்சந்நி திக்கடிய னேன்வரச்
சிறுதேர் உருட்டி யருளே''—சிறுதேர் 10.

—:o:—

## 40. செங்கோடைக் கவிராஜ பண்டாரத்தையா

*'' துன்றுபுகழ் செங்கோட்டைக் கவிராயர்க் கடியேன்''

இவர் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவராகத் தெரிகிறது. இவர் பாடிய திருமலை முருகன் பிள்ளைத் தமிழில் இவர் வாக்கின் அருமையைக் காணலாம். அருணகிரி நாதரிடத்திற் பேரன்புடையவர்.

## 41. கந்தப்ப தேசிகர்

*"என்றும்எம துளங்குடிகொள் கந்தப்பர்க் கடியேன்"

இவர் திருத்தணிகையில் வாழ்ந்தவர்; வீர சைவர்; தணிகேசரிடத்தில் இவருக்கு இருந்த பக்தி அளவிடற்கரியது:

"யானும் பிரிந்திருக்க கில்லேன் தணிகைவரை
யானுமெனை நீங்கியமர் கிற்றிலான்"

—(தணிகை அந்தாதி 39) எனவும்,

"பெற்றாலும் இனிஒருவர் எனைத்தணிகை வரையகத்தே
பெறவும் வேண்டும்
உற்றாலும் அருந்தவங்கள் அவ்வரைக்கே உறல்வேண்டும்
உயர்ந்த கல்வி,
கற்றாலும் உமதுதிருப் புகழமுதே நாடோறுங்
கற்க வேண்டும்,
செத்தாலும் இவ்வுடலம் அத்தலமீ துறவேண்டும்
சேந்த ஞரே"—(தணிகைக் கலம்பகம் 75)

எனவும் பாடின பக்தர் இவர். கச்சியப்ப முநிவருடைய மாணுக்கர்; திருத்தணிகை உலா, கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி (சந்நிதிமுறை) பாடினவர்.

'கல்லார மாஹாத்மியம்' என்னும் வடநூலைத் தமிழ்ப் புராணமாக (தணிகாசல புராணம்) பாடினவர். இவர் வாக்கின் அழகு தணிகை உலாவிற் சிறந்து விளங்குகின்றது: 'தணிகாசல அநுபூதி' பாடி ஒருவருடைய நோயைத்தீர்த்தார் என்பர். விசாகப்பெருமாள் ஐயர்; சரவணப் பெருமாள் ஐயர் என்னும் பெரும் புலவர்களின் தந்தையார் கந்தப்ப தேசிகர். கந்தப்ப தேசிகருக்கு மனைவிகள் இருவர். ஆண் குழந்தை பிறந்தால் பெருமாளின் திருநாமம் குழந்தைக்கு வைப்பதாக இரு மனைவியரும் பிரார்த்தித்திருந்தனர். இருவரும் ஒரே சமயத்திற் கருவுற்று, ஆண்குழந்தைகளை ஈன்றனர். குழந்தைகளுக்குப் பேர் வைக்கவேண்டிய தினத்தில் கந்தப்ப தேசிகர் முருகக் கடவுளின் பெயரை வைக்கவேண்டும் என்றனர். அப்போது அவருடைய மனைவியர் நாங்கள் பெருமாள் பெயரை வைப்பதாக முன்னரே பிரார்த்தனை செய்திருக்கின்றோமே என்றார்கள். அறிவிற் சிறந்த கந்தப்ப தேசிகர் 'நன்று அப்படியே ஆகட்டும்' எனக் கூறி பெருமாள் பெயரே வரும்படி 'விசாகப்பெருமாள்' 'சரவணப்பெருமாள்' எனப் பெயர் வைத்தனர் என்ப. என்னே இவரது பக்தியின் திறம்!

பன்னிரண்டாம் திருமுறை முற்றிற்று.

—:o:—

## நன்றி, பாராட்டு

பன்னிரண்டு திருமுறைகள் எழுதிஅச்சில் ஏற்றிப்
பண்புடனே முடிவளவும் எனக்குதவிக் காத்த
பன்னிரண்டு விழிக்கருணைப் பரமனவன் அருளைப்
பரவியுளங் களிகூர்ந்து நினைக்கும்போ தெல்லாம்
என்னிரண்டு கண்மணியே! என்னுயிரே! அன்பே
என்பொன்னே! என்மணியே! எனப்போற்றி ஐயன்
தன்னிரண்டு பாதமலர் தலைக்கணியாக் கொண்டு
தமியனு னந்தமலி இன்பமுறு வேனே.

## வாழ்த்து

வாழ்கநந் தணிகை வள்ளல்
வாழ்கநற் றெழில்க ளெல்லாய்
வாழ்கஇப் பன்னி ரண்டு
மகாமுறை அச்சி லேற்றி
மாழ்குதல் இரா தளித்த
மாண்பர்கல் யாண சுந்த்ரர்
வாழ்கமற் றவர்இல் லாளும்
வாழ்கசீ ரடியா ரெல்லாம்.

திருத்தணிகேசன் துணை

முருகவேள் பன்னிரு திருமுறைகள் முற்றிற்று.

உ

# அநுபந்தம் 1

## ( சித்து வகுப்பின் விளக்கக் குறிப்பு )

பக்கம் 533-ல் உள்ள "சித்து வகுப்பு" அநுபந்தம் 2 இதனுடன் ஸ்ரீலஸ்ரீ மகான் ஈசுவர சுவாமிகள் கருணையுடன் பின்னர் எழுதி அனுப்பின அருமை வாய்ந்த கீழ்க்கண்ட குறிப்புக் களையும் சேர்த்துக் கொள்க :—

அடி 8 – **செம்பிராகை :** பிராய் அல்லது பராய் என்னும் மரவகை. இது செம்மை, வெண்மை இருவகை. இது முரட்டு மரம்; பத்தடிக்குமேல் வளராது; முண்டு, முடிச்சு நிறைந் திருக்கும்; பாலுண்டு; இலை சுரசுரப்பாயிருக்கும். குடுக்கை கள் நயம்படுவதற்கு இதனல் தேய்ப்பதுண்டு. பராய் முரடு - பலா முரடு என்ருயிற்று.

அடி 9 – **கற்ருழை :** இங்கு செங் கற்ருழை. தாய்க்கு நிக ராஞ்சிவந்த கற்ருழை அங்கம் குளிர்விக்கும்; பாஞ்சயத்தைப் பொன்னுக்கும் பார்". (அ-கு) இது இரும்பைத் தங்க மாக்கும்.

அடி 23 - **அப்பிரகசத்தை :** *இது அப்பிரகத்தினின்று *( மைக்கா ) பிரித்தெடுக்கப்படும் ரசம். பாஷாணங்கள் அனைத்திலும் ரசம் உண்டு. இலிங்கத்திலிருந்து நன்னரி வேர்ப் பட்டையால் வாலையில் வைத்து பிரித்தெடுக்கப்படுவது லிங்கசத்தை! இதுதான் வாலை ரசம்; வீரத்தினின்று இட்டி கைத் தூளால் பிரித்தெடுக்கப்படுவது வீரசத்தை; அப்பிரகத் தினின்று வெள்ளைக் குதிரை மூத்திரத்தால் பிரித்தெடுக்கப் படுவது அப்பிரகசத்தை; ரசவாதத்திற்கு மிகவும் ஏற்றது. இதற்கு ரசப்ரீதி என்ற பெயரும் உண்டு.

அடி 26 – **காசீசம் :** இது காசிசம் என்றிருத்தல் வேண்டும்.

அடி 35 : மரித்தவர் (முன் இவரே அவராய்) இறந்து போனவர்கள், சனித்த (கருவாய் தனிலே அவரே இவராய் வந்து தங்கிப்) பிறந்த, குழி-(ஒரு தாயின்) கருக் குழியி னிடத்து, (உப்புறு) உவர்ப்புறு-சுரந்தூறித் ததும்பிய அரு வருப்புள்ள, (சலத்தினை)-பூப்பு நீரினை அதாவது பிரசவித்த மாதரார் கருக்குழியினின்றூறிய சூதக சலத்தை (இதனல் சாமானிய சூதக நீரினும் இது வீறுடைத் தென்பது பெறப் பட்டது). இது சித்தர் நூலில் அடிக்கடி உருமாற்ற-மை, வசிய-மை, மாரண-மை முதலியவற்றிற்கு உபயோகம் காணக் கிடக்கிறது.

அடி 37 : (மனைகள் எங்கும் ஓடி) எங்கும் உள்ள பிறர் மனைகளில் ; (கேளு) அடியிற் கண்ட அணிபணி வகைகளைக் கேள் : வீட்டில் விரைந்து தேடு.

அடி 50 : (பூநாக செம்பு) 'சகல வேதி' என்பது பூநாக செம்புக்கு அடைமொழி ; நாங்கூழ், பூமி வேர், பூநாகம், நாக்குப் பூச்சி என்பன ஒரு பொருள் ; இதனிடம் செம்பு சத்தை உள்ளது. பூ நாகத்தை நிரம்பக் கொணர்ந்து புளித்த மோரில் இட்டு வைத்தால் அவற்றின் வயிற்றிலுள்ள மண் வெளிப்பட்டு விடும் ; பிறகு அவற்றினின்று பிரித்தெடுக்கப் படுவது பூநாக செம்பு. இது ரசவாதத்திற்கு இன்றியமையாதது. பழைய கௌரிபாஷாண உண்டையை இதனுடன் சேர் என்பதே இவ்வடியின் கருத்து.

அடி 55 : இரதமொ டுருகிய (சருகு பித்தளை) சருகு பித்தளை – உயர்ந்த பித்தளை ரேக்கு ; ரசம் கலந்தது. சருகு போன்று மெல்லியதாய்ச் சலசல என்று ஒலிப்பது.

அடி 68 : பீலியில் இடமுண்டு என்கின்றார் சித்தர். கந்தவேள் வாகனமாகிய மயில் இறைச்சி கேட்பவரா (கந்தவேளின்) அடிமை? ஆணைவேறு இடுகின்றார் – எப்படியாயினும் ஆகுக. ஸ்வாமிகள் இவரிடத்தில் நம்பிக்கை வைக்கலாகாது என்பதை எடுத்துக் காட்டவே இதனைக் கூறி உள்ளார்கள்.

---

## அநுபந்தம் 2

### தொகுதி ஆறின் கீழ்க் குறிப்புக்களிலும் பிற பாகத்தும் உள்ள பொருட் குறிப் பகராதி

[எண் – பக்க எண்]

---


**அகப்பொருட்டுறைகள்**

அணைந்தவழி ஊடல் 254
அலர் அறிவுறுத்தல் 160
அவயவம் கூறல் 236
இடம் அணித்து என்றல் 159
இடம் குறித்தல் 251
கண்ணயந் துரைத்தல் 221, 247, 260
காட்சி 147
நற்றுயிரங்கல் 824 - 826
பொழுது கண்டுமயங்கல் 150

**அசுரர், அரசர், முதலியோர்**

அக்கினி முகாசுரன் 580
இந்திரஜித் 556
இரணியன் 785
இலக்குமணன் 556

கர்ணன் (பகலிற்கொடுப்பது) 161
கற்கிமுகி 350, 432
குகைநமசிவாயர் 143
கூன் பாண்டியன்–
(இரண்டு கூன்) 208
சிங்க முகாசுரன் 446
திருவள்ளுவர் (மாதாநு பங்கி) 755
தேவகி 757
நக்கீரர் 432. 506
நரகாசுரன் 332
பலராமர் (பலபத்திரன்) 264
பாநுகோபன் 580
பாரி 161
மதுகைடவர் 760
மந்தேகர் 190
மாதாநுபங்கி
(திருவள்ளுவர்) 755
மாவலி 17
முகிலன் 143
முசுகுந்தர் (வரலாறு) 562
முரன் 332
ராவணன் 198, 364, 775, 792
வங்கிய சூடாமணி 350
வச்சிரவாகு 580
வலாசுரன் வரலாறு 638, 770
வள்ளிமலை திருப்புகழ் சுவாமி
147, 164. 167, 174, 265, 267
வாலி 198
விருத்திராசுரன் 332
வில்விபுத்தூரார் 206

**அணிகள்**

நிந்தாஸ் துதி 664
முரண நிரனிறை அணி 238
வஞ்சப் புகழ்ச்சி 641

**அரிய பதங்களுட் சில**

அதிகாசம் (பெருநகை) 788
அவிதா (ஆபத்தில் முறை யிடும் சொல்) 549
ஒக்கல் (இடுப்பு) 360
கயந்தலை (மெல்லியதலை) 809
களிறு (சொற்ப்ரயோக விளக்கம்) 4
சேவல் (துணை) 162
தரங்கம் (கவலை) 34, 751
தரணி (மலை) 778
பயகரன் 80
பலாசனம் (கிளி) 770
பொருள் (மகன்) 158
மதலை (தூண்) 785
மார் (மார்பு) 792
ராவுத்தன் 432
விகிர்தன் 686
விட்டேறு (வேல்) 358

**அருணகிரியார்**

அநுக்கிரகம் பெற்ற இடங்கள் 426
அருணகிரியாரும் திரு மந்திரமும் 60
உடல் மறைந்ததில் நியாயம் கண்டது 330
கவிபாடும் ப்ரசாதம் பெற்றது 430
காட்டில் வழி தப்பினபோது முருகர் உதவினது 322, 336
சுருக்கவழி உபதேசம் 83
திடபக்தி 63
திருப்புகழ் முருகருக்கு மதாணி 424
திருவகுப்பு அடிப்படை எது என்பது 424
திருவகுப்பு பாடினகாலம் 438
பாடல்களிற் பிரபந்த வகைகள் 556, 547
பாடின பாடல்களை முருகர் ஏற்றனர் என்பது 662

மெய்ஞ்ஞானி என்பது 426
யமனுக்கு அஞ்சாமை 63

**ஆதிசேடன்**

உலகைத் தாங்குவது 349, 416, 556
ரத்னமுடி 765

**உபதேசம்**

தும்மும்போது குமர சரணம் என்க 214, 261
தும்மும்போது 'சிவாய' என்பது 262
யான்தான் அறல் 92

**உவமைகள்**

கண்-சிவனுண்ட நஞ்சுக்கு உவமை 148
நெஞ்சுக்கு கல்உவமை 623
யானையின் கைக்குப் பனை உவமை 317, 392
வணங்காத தலைக்கு, கைக்கு உவமைகள் 41, 42

**ஐராவதம்**

நான்கு மருப்பு 418, 538
முருகரால் மாண்டது 424

**கங்கை**

ஆயிரமுகம் 294, 328, 350, 758, 767
பிற நதிகள் கங்கையை வணங்குவது 167, 194

**கண்ணபிரான்**

(திருமாலும் பார்க்க)

ஆயர்பாடியில்வளர்ந்தது 454
சகடு உதைத்தது 454
குழலுக்கு மலைஉருகினது 454
சேலைகளை வாரினது 454
புள்ளின்வாயைக்கீண்டது454
பூபாரம் தீர்க்க வந்தது 452
பேயை அட்டது 455
மருதிடைத் தவழ்ந்தது 454
மலையைக் குடையாக ஏந்தினது 454
யானையை (குவலயா பீடத்தை) அட்டது 455
விசுவரூபம் எடுத்தது 404

**கணபதி**

கணபதியும் ராவணனும் 775
கஜமுகாசுரனை அட்டது 627, 775
கையிற் கலசம் குடம் (கும்பகரம்) 747
சாமர கர்ணம் 748
சிந்தாமணி விநாயகர் 750
தந்தையைப் போலவும் தாயைப் போலவும் உள்ள இலக்கணங்கள் 448
திறை கொண்ட யானை வரலாறு 143
பாரதம் எழுதினது 775
பிறை சூடி 750

**சம்பந்தர்**

கூன் இரண்டு தீர்த்தது 208
சம்பந்தரே தெய்வம் 177
சமணரைஅஞ்சவைத்தது 778
சித்ரகவி நிருபன் 426
லீலைகள் 780

**சிவபிரான்**

உபதேசம் பெறவணங்கினது 165
காளி நாண நடனம் 598
சங்கார காலத்திற் கங்காளர் 762
தியாகராஜர் மூர்த்தி வரலாறு 333
திரிபுரம்-தேவர்கள் தேரானது 234
வெள்ளி பொன் செம்பு214

தேவியின் ஊடலைத் தீர்க்க
வணங்குவது 504, 752
நெருப்பே மஞ்சனம் 741
பிறப்பிறப்பு இலாதவர் 650
மகாபல லிங்கம் 775
மான்தோலுடை 783

**சூரியன்**

ஏழு குதிரைகளின்பெயர் 432
ஏழு நிறம் 292
சூரியனுக்கு அருக்கியம்
கொடுத்தலின் கருத்து 190
பல் இழந்தது 163
பன்னிரு சூரியர்-பெயர் 292

**சேவல்**

சேவலின் ஆற்றல் 14, 334,
360, 792
சேவலின் குரல் 542
சேவலின் முறைநெறி-
யானையைவென்றது 542
தீமதலை 168
மயிலுடன் நட்பு 785

**தமிழ்**

சங்க மங்கலம் பொருந்து
தமிழ் 590
சீர்முதலிய உறுப்புக்கள்
186, 264
தமிழும் முருகரும் 186,
312, 264

**தலங்கள்**

அமராவதி 85
கதிர்காமம் 334
குற்றாலம் 334
திரு ஏரகம் ;
சோழன் கட்டினது 148
திருச்செங்கோடு :
நாகாசலம் 639
வேதம்பூசித்தது 170, 241
திருச்செந்தூர் :
கடல் முத்து வீசுவது 211,
790
குதிரை முகம் மாறினது-
வதனாரம்ப தீர்த்தம் 202
திருத்தணிகை :
இந்திர நீலசுனை 476
தணிகையில் விளையாடல்
470
நீலமலரின் விசேடம்407
பெருமை 407
திருப்பரங்குன்றம் :
இமயத்துக்கு ஒப்பு 810
பராசர முநிவரின்
குமாரர்கள் 600
நாகாசலம் (திருச்செங்கோடு)
639
பழமுதிர் சோலை 146, 229
மனம், வாக்கு, காயம் வழி
பாட்டுக்கு உரிய தலங்கள்76
வள்ளிமலை
தேன்மலை 152
மன்றல் கிரி 356
மூங்கில், குரங்கு, தேன்
விசேடம் 354
வெண்குன்று 821
தாள வகைகள் 368

**திருமந்திரம்**

அருணகிரியாரும்
திருமந்திரமும் 60

**திருமால்**

(கண்ணபிரான் என்னும் தலைப்பும் பார்க்க)

அட்ட முதலைக்கு நான்கு
கண்கள் 237
இந்திரனுக்கு உதவினது 332
இரணியனை அட்டது785
உலகுண்டது 61
கண்கள் சூரிய சந்திரர் 169

கஜேந்திரனுக்கு அருளியது 237, 333
சிவனுக்கு இடபமானது 223
தேவர்கள் மயங்க சங்கம் ஊதினது 148
தேவியர் அடிவருடத் துயிலுதல் 739
நரசிங்கமூர்த்தி 757
மச்சாவதாரம் 783

### திருமுருகாற்றுப்படை

தேவசேனையின் கலவியின்பத்தினும் அதிகமாகத் தித்தித்தது 203
புயவகுப்பு திருமுருகாற்றுப் படையைத் தழுவிப்பாடப் பெற்றது 458
வரலாறு 318,350(கற்கிமுகி வரலாறு)
வள்ளியின் பேச்சினும் இனிமை மிக்கது 203, 318
வேலைச் சிறப்பித்த இடங்கள் 741

### தேவசேனை

தேவசேனையும் ஐராவதமும் 331, 679

### தேவர்கள்

அக்கினி (ஆட்டுவாகனம்) 144
இந்திரர் பலர் 443
இலக்கர் (வரலாறு) 582
குபேரன் 765
சனி (சூரியன் பிள்ளை) 199
தேவர்கள் தேரானது (திரிபுர தகனத்தின் போது) 234
நந்தி (விடைமுகர்) 563
நந்தி (கடலில் மீனனது) 783
நவக்கிரகங்கள் 199
நவவீரர்கள் (வரலாறு) 582
பத்ரகாளி 580
பயிரவர் (காரி) 560, 786
(நடம்) 380, 386
பிரமனைக் கண்டித்தது 564
முருகன் அடியார்களைத் தேவர் வணங்குவது 314
மேனை 338
யமன்-தனித்தலைப்புப்பார்க்க
வடுகர் (ரத்தபிச்சை எடுத்தல்) 256
வீரவாகு (ஆதியோர்) 561, 580
வீரவாகு தேவரின் பக்தி 582
ஹரிஹர புத்திரன் (வரலாறு) 564

### தேவாரம்

வேதம் என்பது 242, 261

### தொகைவகைய

3. மூ ஏடணை 672
மும்மதம் 418
மூவகையானை 665, 754
மூவுலகு–420
4. கவி–நால்வகை 640, 641
தேர்வீரர்-நால்வகை 585
நந்தி நாதர்-நால்வர் 558
5. கற்பக தருஐந்து 444, 467
மன்மதன்பாணங்கள்ஐந்து 558
7. எழுபிறப்பு-விவரம் 410, 430, 672
எழுபுவி 416
எழுவகைக் கூத்து (நிருத்தம்) 388
8. அஷ்ட கருமங்கள் (வசியம் முதலிய) 490
அஷ்ட கஜங்கள் 418, 442
அஷ்ட நாகங்கள் 556, 568
அஷ்ட பயிரவர் 560
எண் கிரி 568

எண் குணம் 646
நாதர் எண்மர் 558
9. நவ சக்திகள் 582, 583
நவ நாதர்கள் 558
நவரசம் 381
நவ வீரர்கள்–வரலாறு 582
11. பதினொரு ருத்திரர் 564, 810
12. ஆதித்தர்பன்னிருவர் 562
கணுக்கிர கண்ணியர் பன்னிருவர் 563
14. பதினான்கு தலங்கள் 416
16. திருவுருவம் – (முருகவேளின்-விவரம்)-690
18. பதினெண்கணங்கள் 322, 424, 560
36. தத்துவம் முப்பத்தாறு விவரம் 682
84,00,000 யோனிபேதம் 410
பண் வகைகள் 372-375

பார்வதி

அசுரர்களை அட்டது 307
எரி வடிவு 306
காதில் மலர் 310
சக்ரதலத்தி 350
சடக்ஷரி 350
சடையினள் 306
சேனை–பூதவேதாளங்கள் 360
திருவடியிற் கொன்றை,பிறை மணப்பது 504
தேவியை வல்லி, வல்லி எனக் கூறுமிடம் 764
பஞ்சாயுதம் 307
பாம்பு அணிதல் 450
பூர நாள் 235
பெருந் திருமகள் 449
யமனை உதைத்தது 449
ராஜதலக்ஷண லக்ஷ்மி 793
வயிறு கமலம் 422

பாரதம்

சேனை (அக்குரோணி)கணக்கு 404, 406

பேய்கள்

உணவு 319
உணவு செய்வகை – அடுப்பு, அரிசி முதலிய 393, 394
குரக்கு வாதம் 384
பாடுதல், ஆடுதல்–எழுவகை நிருத்தம் 388, 389
மோகினி, யோகினி முதலிய 362, 783
வாத்தியம் வாசித்தல் 37
விளையாட்டுமுதலிய 366, 400

மந்திரங்கள்

குமாராய நம 670, 820
சரவணபவா 786 (பிசாசுகளை ஓட்ட)
சிவாய 262
சிவாய நம 231
'முருகன்' ஆதிய ஆறு நாம மந்திரங்கள் 179, 645
வேலு மயிலும் 480, 626

மயில்

அன்னத்தை அட்ட வரலாறு 556
ஆதிசேடனைத்தாக்குவது 556
ஆற்றல் 13, 95, 334, 433
இறகின் வண்ணம் 423, 797, 768
உலகெலாம் வலம் வந்தது 433
கலபத்தேர் 637
வாசுகியை உதறுவது 766

முக்கியமான விஷயங்கள்

அஞ்சன வகைகள் 486
அடியார் பெருமை 47

அடியாரொடு இணங்குதல் 670
அந்தக்காலம் (சாநாள்) 259, 741
அருள், அன்பு, அறன் மூன்றும்தான் வேண்டும் 809
அருளைப் பெறும் வழி 657
அற்ற அடியார் 266
அறத்தின் சிறப்பு 58
அன்னதானத்தின் விசேடம் 56
ஆமை மந்தரமலையைத் தாங்கினது 731
ஆயிரம் பிறை தொழுதல் - சதாபிஷேகம் 772
ஆவேசம் வருதல் 574
ஆறு திருப்பதிகளின் துதிப் பாடல்கள் 827, 828
இந்திர பதவியும் நூறு அசுவமேத யாகமும் 574
இரவு பகல் அற்ற இடம் 19, 73, 428
ஈதலின் சிறப்பு 20
ஈ, தா, கொடு (பொருள்) 680
எலுமிச்சம்பழப் பாட்டு 213
ஐந்தெழுத்து 231
ஐவர் சேஷ்டை 7
ஒருவனுமாறு 538
ஓம் 149
கடல் கடைந்ததும்-கடைந்த போது உதித்தனவும் 38, 417
கந்தரநுபூதியில் முன்னுக்கும் பின்னுக்கும் சம்பந்தமுள்ள பாடல்கள் 4, 9, 16, 20, 22-25 (பக்கம் 631, 636, 647, 652, 655, 656, 657)
கந்தரநுபூதி பாடிய பின் திருவகுப்பு பாடினது 626
கந்தழி 686
கலைஞானம் வேண்டாம் 664
கவந்தம் 377, 402
குரவைக் கூத்து 434
கூத்து வகை 388, 389
கொள்ளித்தலை எறும்பு 102
கோழியும் சங்கும் 222
கோளறு பாடல்-199
சங்கும் கோழியும்-222
சசியின் பதவி 445
சந்தப்பாவின் விசேடம் 588
சிவபிராற்கு உபதேசித்த பொருள் 669
சிறு சண்பகம்-சண்பகம் 464
சீவன் அசத்து 224
சும்மா இரு-பொருள் 642
செய்து — செய்ய என்னும் பொருளில் வருவது 401
ஞானம் விவரம் 414
ஞான விளக்கு 265
ஞான வாள் 67
தத்துவங்கள் 43, 682
தானத்தின் சிறப்பு 58
தானம் இடும்போது இறைவனைத் தியானிக்க 635
திண்டிம கவி 594
துணங்கைக் கூத்து 86
தேவகி புலம்பல் 757
தேவாரம்-வேதம் 242
தோட்டுணைவன் 584 (விளக்கம்)
நகை வகைகள் 492-496
நாம்-நீர் என்னும்முன்னிலைப் பொருளில் வருவது 649
பச்சிலை வகைகள் 482
பாம்பின் பற்கள் 731
பாழ்நிலை 11
பாஷாண வகைகள் 496
பெண்கள் ஆடல்களில் முருகன் புகழைப்பாடுதல் 736
பெண்கள் கவரி வீசுவது 568
பேய்த்தேர் 234

பேயோட்டுதல் -- சரவணபவ மந்திரம் 786
பொருள் இன்னதென்பது 629
பொருள், பொன், போகம் – வேண்டாம் 809
பொன்னுலகு அழிபட்டதும்– சீர்பெற்றதும் 444
மங்கலச் சொற்கள் 300
மடற்றிறம் 225
மந்த்ரநூல்–கந்தரநுபூதி 626
மயில் விசிறி 569
மவுன கட்கம் 430
மவுன நிரக்ஷர மந்திரம் 462
மனத்தின் சுழற்சி வேகம் 182
மனம், வாக்கு, காயம் – மூன்றுலும் வணங்குவது 59
மனேலய சமாதி 428
முத்து பிறக்கும் இடம் 735
முருகனடி சேராதவர் இவ ரிவர் என்றது 809
யானை மூவகை-665, 754
ரசவாதம் 490, 498–502
வடசேடி 255
வடவை–பரிமுகம் 239, 320, 741
வண்டுவிடு தூது 468
வள்ளிச் சன்மார்க்கம் 669
வறுமையின் கொடுமை 651
வாள் பூசனை 578, 579
விரகதாபம் 152
ஜாதிப் பெயர்கள் 88
ஜீவபோதமும் சிவபோதமும் 660

முநிவர்கள்

அகத்தியர்–தமிழ் உபதேசம் 350, 782
பராசர முநிவரின் புதல்வர் அறுவர் 600
வண்டாய்ப் பூசித்தல் 300

முருகர்

அக்கினி ஏந்திச்சென்றது 425
அசுரர் பிணங்களைச் சாம்ப லாக்கியது 446
அம்மான், அம்மான் எனத் திருமாலை அழைப்பது 876
அழகு–நிறம் 471
ஆத்தே-ஆத்தேஎனத்தாயை அழைப்பது 330, 876
இசைப் ப்ரியர் 561
உக்ர பாண்டியனுக வந்தது 336
உகந்த மலர்கள் 476
உருத்திர சன்மராக வந்தது 337
—வரலாறு 820, 821
ஐயா, ஐயா எனத் தந்தையை அழைப்பது 876
ஐராவதத்தை அட்டது 424
ஒரு மகவு ஆறு மகவு ஆனது 422
கங்காதரன் - கங்கையால் ஆதரிக்கப்பட்டவன் 760
கடல் சுவறவேல் விட்டது 60
கிருத்திகை குமாரன் 338
கூதளப் ப்ரியர் 332
சகல கலா வல்லவர் 510
சிவனுக்கு உபதேசம் 424, 425
சுராலயன்(ச, ரி, க, ம, ப, த, நி) 761
செங்கழுநீர் மாலையர் 550
தாய்தந்தையர்க்கு உகந்தவர் 588
திருவடிச் சிறப்பு 90, 267
திருவடியின் இடம் 431
திருவுருவங்கள் பதினறு விவரம் 690
நடுநிலையர் 544

நடனம் அம்பலத்தில் 540
நறும்புகைப் ப்ரியர் 566, 812
நாம விசேடம் 33, 179, 207
பட்சபாதம் அற்றவர் 544
(நடுநிலைமை உடையவர்)
படைகள்(பன்னிரு கைகளில்) 465, 572, 573
படை - சிவந்த படை 814
பவளமேனி 815
பன்னிரு கையில் உள்ளவை - 465, 829
பிணிமுக ஊர்தி 680, 813, 821
பிரமனைக் கண்டித்தது-விலங்கிட்டது 358, 444
புயம்—மலைக்கு ஒப்பு 431
பொட்டழகு 150
மடல் எழுதினது 436
மலைகள் பன்னிரண்டுடன் பொருதது 726
மன்மதனிலும் அழகர் 504
முருகர் - கையில் மணி 465, 466
சிவந்த ஆடை 354, 814
சிவந்த நிறம் 814
சிவந்த மாலை 814
பெற்ற சீதனம் 154
முகம்தாமரைக்குஒப்பு 571
முகம்—மதிக்கு ஒப்பு 571
முருகரும் செந்நிறமும் 658
முருகரும் தமிழும் 186, 312
முருகரும் திருமுருகாற்றுப் படையும் 318
முருகரும் வேதாளங்களும் 672
மூவரும் வணங்குவது 560
வண்டின் உருவெடுத்தது 746
வள்ளியின் கொங்கைத் தழும்பு 543
வள்ளியின் கொங்கையை விடாத கரத்தர் 176
விருத்தவேடம் 356
வீடு அளிப்பவர் 338, 358
வேள்வி (யாகம்) காப்பவர் 207, 508

**யமன்**

சூரியனுடைய பிள்ளை 169
தீயரையும் நல்லாரையும் நடத்தும் வகை 586
யமனூர்க்குப் போகும் வழி 594

**ராமாயணம்**

கடல்மீது பாணம் எய்தது 53

**வள்ளி**

உந்திவனமாது 152, 163
உயிர் ஓவியம் 340
கிராதகுலி 766
குழல்—பாளைக் குழல் 655
கூதளமாலை அணிதல் 671
தழை உடை 420, 436
பிரமன் தங்கை 755
யானைமருப்பால் தினை குத்துதல் 157
வனதேவதைகள் வணங்குதல் 440

**வாத்தியம்**

கொடுகொட்டி 392
வாத்திய வகைகள் 376, 388

**வேல்**

ஒளி 360
கடலை அட்டது 782
கடலை, மலையை, சூரனை அட்டது 337
நீதி சத்தி 216
பிரமனைச் சிறையிட்டது 160, 196, 741

யமனை விலக்கும் 162
வள்ளியின் கண்ணுக்கு
உவமை 316
வேல் பஞ்சகிருத்தியம் செய்
யும் 316
வேல் வாங்கு வகுப்பின்
கருத்துள்ளது 158
வேல் வினையை ஓட்டும் 673
வேலின் பெருமை (சூலத்
தினும் மேம்பட்டது) 210,
211. 316ம் தொடர்ச்சியும்,
625, 728
வேலுக்கு ஆறுமுகம் 49
வேலுக்கு உறை 549
வேலுக்கு மணிகட்டி இருத்
தல் 733

—:o:—

## அநுபந்தம் 3

### சூரன், சிங்கமுகன், தாரகன், சேவல், மயில் வரலாறு

முன்னொரு கற்பத்தில் பிரபாகரன் என்னும் அரசனுக்கும் சுகுமாரி என்னும் அவன் மனைவிக்கும் சூரன்-பதுமன் என்னும் இரட்டைப் பிள்ளைகளும், அவர்கள்பின் சிங்கன், தாரகன் என்னும் இரண்டு பிள்ளைகளும் தோன்றினர். இந் நால்வரும் அரசு புரியும்போது, அகத்திய முநிவரிடம் கந்த பிரானது பெருமையைக் கேட்ட சூரன் கந்தருக்கு மயில் வாகனமாக ஆவதற்கு விரும்பினன்; பதுமன் அவருக்குச் சேவற் கொடி ஆவதற்கு விரும்பினன்; திரண பிந்து முநிவரிடம் துர்க்கையின் பெருமையைக் கேட்ட சிங்கன் அந்த தேவிக்குச் சிங்க வாகனமாக விரும்பினன்; இடப யோகியாரிடம் சாத்தனுருடைய பெருமையைக் கேட்ட தாரகன் சாத்தனுருக்கு (ஐயனுருக்கு) யானை வாகனமாக விரும்பினன்; இத்தகைய நோக்கங்களுடன் இவர்கள் நால்வரும் தவஞ் செய்தனர். இந் நிகழ்ச்சிகளைக் கருடனாதியர்களால் அறிந்த மயில் முதலான ஊர்திகள் தங்கள் பதத்தை இவர்கள் நாடுகின்றார்களே எனச் சினந்து அவர்களிடம் சென்று நீங்கள் சிந்தித்த எங்கள் முகம் கொண்ட பூதர்களாகக் கடவீர்கள் எனச்சபித்தன. பின்னர் அவ் வூர்திகள் அந் நால்வரின் வேண்டுகோளுக்கு இரங்கி, உங்கள் கருத்து இறைவன் திருவருளால் இறுதியிற் கை கூடும் என வரம் தந்து சென்றன. சாபத்தின்படி பூதர்களின் உருக் கொண்ட சூரனாதிய நால்வர்களின் கலகத்தால் முருக வேளுக்கு ஊர்தியாயிருந்த மயிலும் சேவலும் கருடனாதிய ஊர்திகளை வதைத்தன. இந் நிகழ்ச்சியை தேவர்கள் முறையீட்டால் அறிந்த முருகவேள் பூதர்கள் நால்வரையும் நீங்கள் அசுரர்கள் ஆகுக எனச்சபித்தனர். பின்னர் அவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி நீங்கள் அப் பிறவியில் எம்மால் வதைக்கப் பட்ட பின் பழைய நிலையை அடைவீர்கள் என அருளினர்;

அப்போது சூரனும் பதுமனும் 'அண்ணலே! நாங்கள் மயிலும் சேவலுமாகித் தங்களுக்குப் பணி செய்ய நெடுங் காலமாகத் தவம் புரிகின்றோமே என விண்ணப்பிக்க, நீங்கள் இருவரும் ஒருவடிவாகிச் 'சூரபத்மா' என்னும்பெயர் தரித்து எம்முடன் போர் புரியும்போது எமது ஆணையால் மயிலும் சேவலும் ஆவீர்கள்' என அருள் புரிந்தார். இந் நான்கு பூதர்களும் இறைவனிட்ட சாபத்தின்படி காசிபருக்கு மைந்தராகத் தோன்றினர். சூர பத்மா முருகனுடன் போர் புரிந்து – சேவலும் மயிலும் ஆனன். சிங்கமுகனும், தாரகனும் இறந்த பின் பூதர்களாய் நந்தி தேவரிடம் இருந்தனர். துர்க்கையும், சாத்தனாரும் (ஐயனாரும்) தங்களுக்கு ஊர்திகள் வேண்டுமென நந்தி தேவருக்குத் தெரிவிக்க, அவர் தம்மிடம் பூதர்களாயிருந்த சிங்க முகனையும், தாரகனையும் அவர்கள் விரும்பியவாறே ஊர்திகளாக்கித் துர்க்கைக்குச் சிங்கத்தையும், ஐயனுருக்கு ஆனையையும் அளித்தனர். கருடனுதியர்க்கு இடையூறு செய்த மயிலும் சேவலும் தாம்செய்த பலவித அபசாரம் நீங்கக் காஞ்சியில் தவம் செய்து வீடு உற்றன.

—உபதேச காண்டம் - ஞானவரோதயர் - பக்கம் 20, 27, 31

—: o :—

## அநுபந்தம் 4

### முருகவேளுக்கு உரிய விரதங்கள்

கந்தவேளுக்கு உரிய விரதங்கள் எவை எவை என்பதை அருள வேண்டும் எனப் பிரார்த்தித்த முசுகுந்த சக்ரவர்த்திக்கு வசிட்ட முநிவர்கூறிய மூன்றுவிரதங்கள் பின்வருமாறு:

(1) **வெள்ளிநாள் விரதம்** (சுக்ரவார விரதம்)-இவ்விரதத்தை அநுட்டிப்பவர்கள் நினைத்த காரியங்கள் விரைவில் நிறைவேறும்; தனது நாட்டைக் கோரன் என்னும் அசுரன் வௌவப் பகீரதன் என்னும் அரசன் இவ்விரதத்தை மூன்று ஆண்டு அநுட்டித்து முருகவேளைத் தியானிக்க, முருகவேளின் திருக்கை வேல் கோரனைக் கொன்றது. பகீரதன் தனது அரசாட்சியைப்பெற்றான்.

"எள்ளரும் சிறப்பின் மிக்க எழுவகை வாரந் தன்னுள்
வெள்ளிநாள் விரதந் தானே விண்ணவர் உலகங் காத்த
வள்ளல்தன் விரத மாகும்; மற்றது புரிந்த மேலோர்
உள்ளமேல் நினைந்த எல்லாம் ஒல்லையின் முடியும் அன்றே''

கந்த புராணம் 6-23-3.

(2) **கிர்த்திகை விரதம்**-எழுவகை முநிவரில்தானே மேலாகச் சிறக்க வேண்டி நாரத முநிவர் விநாயகரைப் பணிந்து கேட்க அவர் "உன் எண்ணம் நிச்சயம் கைகூடும்; நீ ஆறுமுகப் பிரானை வழிபட்டு கிருத்திகை நக்ஷத்திரநோன்பை 12 வருடம் நோற்பாயாக என்றனர். நாரதர் அங்ஙனமே நோற்று "எழுவகை முநிவோருக்கும் ஏற்றமாம் பதத்தைப்" பெற்றார். இவ்விரதத்தை அநுட்டித்துத்தான் ஒரு மறையோன் மநுச்சக்ரவர்த்தியாகி உலகெலாம் ஆண்டான்.

(3) **ஐப்பசி சுக்கில சஷ்டி விரதம்**—தேவர்களும் முநிவர்களும் இந்த கந்தசஷ்டி விரதத்தை நோற்றார்கள். ஐப்பசிமாதத்தில் சுக்கிலபக்ஷம்முதல் ஆறுநாளும் நோற்கவேண்டும். இவ்விரதங்களில் விளக்கத்தைக் கந்த புராணம் கந்த விரதப் படலத்திற் காணக.

—:o:—

## அநுபந்தம் 5

### அருணகிரிநாதர் அருளிய நூல்கள்—சில குறிப்புக்கள்

(1) **அருணகிரிநாதரின் முற்பிறப்பு வரலாறு**-தேவேந்திரனுடைய சபையில் நடராஜப் பெருமானுடைய திருக் கரத்தில் உள்ள தமருகத்தில் எழுகின்ற சத்த தாள இலக்கணங்களை எல்லாம் விரித்து விளக்கிய-புலவர் ஒருவர் பின்னர் திருப்பரங்குன்றத்தில் திகழ்ந்தவராய்ப் பின்னர் பொய்யாமொழிப் புலவராய், அதன் பின்னர் அருணகிரி நாதராய் உதித்தனர்-என க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் கூறுகின்றது. பக்கம் 929-ல் 'தருப்பொலியும்' எனத் துவக்கும் பாடலைப் பார்க்க. இதனுலன்றோ தாளமும், சந்தமும் திருப்புகழில் ததும்புகின்றன.

(2) திருப்புகழ் சுவாமிகள் என்றும், தண்டபாணி சுவாமிகள் என்றும் வழங்கப் பெற்ற "வண்ணக் களஞ்சியம் முருகதாச சுவாமிகள் (1839—1898) பாடிய புலவர் புராணத்தில் அருணகிரிநாத சுவாமி சருக்கம் என்பதில் 82 பாடல்கள் பாடியுள்ளார். அந் நூலில், கர்ண பரம்பரையாக வந்த சேதிகள் சில காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்றிரண்டு கூறுவதாம்.

(1) கந்தரநுபூதி மந்த்ர நூல் என உணர்ந்த ஒரு மந்த்ரவாதி கந்தரநுபூதிக்குச் சக்கரம் தாபித்தான். அதனுல் அநுபூதியின் பெருமையை உணர்ந்த ஒருவன்—பொன்னும் மணியும் பட்டாடையும் கொண்டும், கந்தரநுபூதியை உருவேறப் பாராயணம் செய்துகொண்டும் மதுரைக்குஅருகில் ஒருசிற்றூருக்கு வழி நடந்தபோது திருடர்கள் அவனை நெருங்க, அவன் தன் கையிலிருந்தவெற்றிலையின் காம்பைத் 'தொளைபட்டுருவத்

தொடு வேலவனே" எனவரும் அநுபூதிப் பாடலொலியுடன் அவர்கள்மேல் எறிய அவர்கள் வேலாற் பிளப்புண்டு மாய்ந்தனர் என்ப.

(2) சோழ தேசத்தவனும், வேளாள குலத்தவனும், அடியார்க்கு அடியனுய்ப் பக்தி பூண்டவனும், பூதவேதாள வகுப்பை நிரம்பப் பாராயணம் செய்து வந்தவனுமான சங்கரன் என்னும் பெரியோன் ஒருவன் திருச் செந்தூருக்கு வழி நடக்கும் போது, வழிதெரியாது மயங்க, ஐந்துவயதுப் பிராமணப் பிள்ளையாய் முருகவேள் தோன்றித் திருச் செந்தூர் வரையும் வழிகாட்டி வந்து மறைந்தனர்—என்ப.

புலவர் புராணம் 77, 78, 80.

## அநுபந்தம் 6

## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் வரலாற்றுத் துதி

அடியார்செய் தவப்பயனுல் நினைத்தமாத் திரைமுத்தி யளிக்குஞ் சீர்த்தி
குடியாக விளங்கருணை நகருதித்துக் குறிஞ்சிமகிழ் குமர வேளின்
கடியார்பூங் கழற்புணையைக் கொண்டுபவ ஜலராசி கடந்தன் னேன்பால்
ஒடியாந லுபதேசஞ் செபமாலை இவைபெற்றே உயர்ந்தோன் யாவன்? 1

பச்சைமயில் வாகனமும் வடிவேலுங் குக்குடமும் பாடல் தோறும்
வைச்சதிருப் புகழ்ப்பாக்கள் பதினறு யிரம்பாடி, வாது செய்த
விச்சைநிறை வில்லிபுத்தூர்ப் புலவருளம் மிகநாண வேண்டு வோர்தம்
இச்சை யெலாம் நிறைகந்த ரந்தாதி எனுநூலை இசைத்தோன் யாவன்? 2

எந்தைதிரு வடிவினெளி நினைந்துநினைந் துருகியவன் எழிலின் வண்ணம்
கந்தரலங் காரமெனக் கலித்துறையாற் பாடியதைக் கண்டோ ரெல்லாம்
செந்தமிழின் அணியிதுவோ கந்தபிரான் அணியிதுவோ தெரிகி லேமென்
றந்தமிலா அதிசயத்தை எந்நாளும் உறச்செய்த அன்பன் யாவன்? 3

பின்னரொரு நாள் சம்பந் தாண்டானென் பானெருவன் பேச்சைக் கேட்ட
மன்னர்பிர புடதேவ மாராஜர் உளமாட மயிலின் மீதே
தன்னிக ரிலாக்கந்த வேள்திருக்கை வேள்விளங்கச் சபையில் வந்து
முன்னருறச் செய்தமகா தவப்புலமை நிறைசெல்வ முன்னேன் யாவன்? 4

கிளியுருவிற் பொன்னுலகம் புகுந்துமலர் கொடுவந்த கீர்த்தி யுற்று
வெளியுருவிற் கலவாது மாதேவி திருக்கரத்தில் விளங்க நின்று
கிளியுருவில் திகழ்ந்தேநங் கந்தரநுபூதி சொல்லிக் கேடில் லாத
ஒளியுருவச் சீர்பாத வகுப்பாதி பாடியே உயர்ந்தோன் யாவன்? 5

அவனே எங் குலதெய்வம், அவனே எம் உயிர்த்துணைவ னுகும்; நாளும்
அவன் கழலே வாழ்த்துவோம், அவனருளே நாடுவோம், அவன் பாதச்சீர்
நவநவமாய்ப் புகழ்ந்துமகிழ்ந் தாடுவோம்; பாடுவோம், நாடி நாடித்
தவமுதல்வா! அருணகிரி யப்பா! என்றழைத்திடுவோம் தவத்தைச்சார்வோம்

## தொகுதி - 6 பிழை திருத்தம் முதலிய

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | — | 23 | கான | கன |
| 13 | — | 34 | இடபத்திஅ | இடபத்தின் |
| 15 | — | 14 | அறை | அரை |
| 26 | — | 25 | கீழ்க்குறிப்பிற் சேர்க்க:—"இறைவன் திருவடியிற் சிந்தை பதிந்த அடியார்களைக் காலனும், காலதூதர்களும் அணுகார்கள்". திருப்புகழ் பாடல் 1178, அடி 1: 'பாதம் நினைபவர்க்கும் கால தரிசனை கூடும்' என்பதில் கூடும் என்பதை அச் சொல்லின் ஓசை வேறுபாட்டால் கூடுமா எனத் தொனிக்க வைத்து வினுவாக்கி, 'கூடாது,' என்று விடையாகும் பொருளையும் காணலாம். இங்ஙனம் வினு ஆக்கிப் பொருள் காணுதலை வடமொழியிற் "காகு" என்பர். | |
| 35 | — | 4 | அலே | மனக்கலக்கம் |
| 58 | — | 30 | புலவரும் | புதல்வரும் |
| 59 | — | 24 | வந்தித்துத் | வந்தித்து |
| 150 | 6 | 2 | நீலத்நை | நீலத்தை |
| 166 | 20 | 4 | செயதுங்கரி | செயதுங்க |
| 168 | 18 | | 'தீ மதலைக் கொடி தோகைத் தோகை திகழ் திருக்' எனப் படிக்கவும். | |
| 169 | 23 | 3 | சத்திபின் | சத்தியின் |
| 174 | 27 | 4 | கேள்வளற் | கேள்வனற் |
| 176 | — | 18 | வேடுவசி | வேடுவச்சி |
| 189 | 40 | 1 | விசுப | வீசுப |
| 240 | — | | கடைசி வரிக்குப் பின் சேர்க்க:—"ஈண்டு நினைவுக்குவரும்; இவ்வாறே கடல் முதலியவற்றைக் குறித்தும் நோதல் உண்டு; உதாரணம்:—" | |
| 255 | — | 30 | ஆழ்ந்த | சூழ்ந்த |
| 267 | — | 13 | வாகனமமோ | வாகனமாம் |
| 310 | — | | வரி 22-ன் பின் சேர்க்க:—"சாய்குழை பிண்டித் தளிர் காதில் தையினுள்" "குவளைக் குழைக் காதின் கோலச் செவி"—பரிபாடல் 11–95–97. | |
| 331 | — | 34 | இகுவர் | இருவர் |
| 340 | — | 14 | ஓழுக | ஒழுக |
| 346 | — | 12 | காரணமும் ஒழிய | கரணமும் ஒழிய |
| ,, | — | 24 | பக்சம் | பக்கம் |
| 348 | — | 2 | வருணணே | வருணனை |
| 382 | — | 21 | சிரங்சள் | சிரங்கள் |
| 401 | — | 24 | கோட்டைப் | கோட்டை |

| | | | | |
|---|---|---|---|---|
| 454 | — | 32 | பெருாகடல் | பொருகடல் |
| 455 | — | 32 | சம்சன் | கம்சன் |
| 464 | — | 29 | சண்பக | *சண்பக |
| 469 | — | 24 | குச்கரி | குச்சரி |
| 470 | — | 6 | மோதிப | மோதிப் |
| 473 | — | 19 | நீரை | நீர் |
| 479 | — | 17 | நூல்களின்று | நூல்களினின்று |
| 493 | — | 1-4 | இந்த நான்கு வரிகளுக்குப் பதிலாகப் பக்கம் 959 அநுபந்தம்1-ல் உள்ளஉரையைத் தழுவுக. | |
| 498 | — | 34 | அகரோணி | அக்ரோணி |
| 538 | — | 8 | குபெர | குபேர |
| 540 | — | 20 | விநையிட்டங்கள் | விநையீட்டங்கள் |

பலிப்பது அகலவிடும் :—அகலஎன்பதற்கு அகற்சி உற-விருத்தியாக-பெருக என உரை கொண்டால் 'பலிப்பது அகல விடும்' என்பதற்கு 'நல்லன எல்லாம்—நல்ல பயன்கள் யாவும் உண்டாதலைப் பெருகச் செய்யும்' எனப் பொருள் காணவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 545 | — | 23 | பெறத் | பெறக் |
| 559 | — | 7 | போயிணம் | போயினம் |
| ,, | — | 35 | கூறிற்று | கூறும் |
| 584 | — | 4 | வீரகசேரி | வீரகேசரி |
| 593 | — | 11 | மொழிப்புரை | பொழிப்புரை |
| 608 | — | 13 | கற்பகாடவி 6 19 | கற்பகாடவி6-19 |
| ,, | — | 27 | 16 – 14 | 16 - 84 |
| 624 | — | 31 | கயாமா | கயமா |
| 666 | — | 6 | போல்லாதது | பொல்லாதது |
| 696 | — | 34 | சைஸ்தர்யை | சைதைர்யை |
| 697 | — | 9 | சருணுபம் | சாருணுபம் |
| 698 | — | 26 | வக்ரம் | வக்த்ரம் |
| 699 | — | 21 | ஸன்ஸ்திதம் | ஸனஸ்திதம் |
| 701 | — | 24 | (ஷண்முகம்) | ஷட்புஜம் |
| 707 | — | 19 | தொழுதிரங்கள் | தொழுதிரங்கல் |
| 712 | — | 22 | அன்றும் என்பதை நீக்கிவிடவும். | |
| 718 | — | 13 | 1, 13, 42, 49 | 1, 13, 42, 44, 49 |
| ,, | — | 16 | தேவ | தேவே |
| 719 | — | 11 | நிகனம் | நிகளம் |
| 720 | — | 13 | 20, 2, 4 | 20, 24 |
| 748 | — | 7 | குடம்போன்ற மத்தகத்தை உடைய | கும்பம் (அபிஷேக) கலசத்தைக் கையிலுடைய |

,, — 23-ஆவது வரிக்குப் பின் சேர்க்க: 'அடி 5' தாய் தந்தையர்க்கு அபிஷேகம் செய்யும் பொருட்டு விநாயக மூர்த்தியின் ஒரு கரத்தில் அபிஷேக ரத்ன கலசம் உண்டு. 'அரதனக் கலச வியன் கரம் தந்தை தாய்க் காக்கி'—தணிகைப் புராணம் - பக்கம் (751, வரி 1-4 பார்க்க).

751 — 15-ஆவது வரிக்குப் பின் சேர்க்க: (7) சசியின் மங்கிலிய நூலைப் புரந்தது — கந்தரலங்காரம் 21, பக்கம் 22 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

761 — 24 கங்கை முடியிற் சூடியுள்ளவன் என்பதன் பின் சேர்க்க :— (அல்லது கங்கையால் ஆதரிக்கப் பட்டவன் - கங்கையில் வளர்ந்தவன்).

762 — 12-ஆவது வரியின் பின் சேர்க்க :— '' இதனுல் கங்காதரனும் (சிவனும்), முருகனும் வேறு அன்று என்பதும் பெறப்படும் ''

| | | | | |
|---|---|---|---|---|
| 772 | — | 27 | எள்பது | என்பது |
| 782 | 5 | 15 | மைக்கடவின் | மைக்கடலின் |

794 — 3 பரிபாடல் 2-8 பரிபாடல் 2-9 எனத் திருத்திப் பின்வரும் பாட்டின் எண்களில் ஒவ்வொன்று சேர்த்து 42. பிள்ளைத் தமிழ்கள் 143-168 எனத் திருத்துக.

| | | | | |
|---|---|---|---|---|
| 815 | குறுந்தொகை | 3 | உடுக்கைக்குன்றிள் | உடுக்கைக்குன்றின் |
| 819 | — | 18 | பெற்ருேய | பெற்ருேய் |
| 832 | 30 | 3 | திரிந்தோமை | திரிந்தேமை |
| 838 | 4 | 2 | வணங்கா | வணங்காச் |
| 852 | — | 7 | பாதங்கள் | பாதகங்கள் |
| 877 | — | 23 | முக்கனியொடி | முக்கனியொடு |
| 882 | — | 49 | 31,32,33,34,35 | 33,34,35,31,32 |
| 895 | — | 23 | அந்தமில் | *அந்தமில் |
| 903 | — | 30 | விசித்திரழும் | விசித்திரமும் |
| 922 | — | 14 | ஒன் று | ஒன்று |
| 929 | — | 4 | திருத்தணிகை | திருந்தணிகை |
| 935 | — | 36 | கொம்பே | கொம்பால் |
| 957 | — | 34 | கூறி | கூறிப் |
| 288(தொகுதி 3)-565-19 | | | சக்கிரிதன் மருகோனே | சக்கிரி மகிழ்ந்த வேளே |
| 289 | ,, | உரை | மாலின் மருகனே | மால் மகிழ்ந்த வேளே |

## உரையாசிரியர், பதிப்பாளர் இவர்களின்

## முடிவுரை

"தகப்பன்சாமி எனவரு பெருமாளே! - புவிதனில் எனக் குண்டாகு பணிவிடை கணக்குண்டாதல் திருவுளம் அறியாதோ" என்னும் பிரார்த்தனையுடன் "முருகவேள் பன்னிரு திருமுறை" என்ற தலைப்புடன் உரை எழுதத் தொடங்கி 1952-ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தில் அச்சுக்குக் கொடுக்கப் பட்ட இந் நூல், முருகவேளின் திருவருளாலே 1957-ஆம் ஆண்டு பங்குனி உத்திரத்தில் நிறைவேறப் பெற்றது. பாடல்களுக்கு எழுதப்பட்ட உரையிலும், அச்சேறிய வகையிலும் குறைபாடுகள் இருப்பின், ஆன்றோர் அவைதமைப் பொறுத்துக் குணமேதேனும் இருப்பின் அதனையே கொள்ளுமாறு வேண்டப்படுகின்றனர்.

இந்த ஆறுவது தொகுதியின் சுமார் ஆயிரம் பக்கத்து அச்சு வேலை பெரும்பாலும், நல்ல திறமையும் அடக்கமும் நற்பக்தியும் வாய்ந்த இளைஞர் சிரஞ்சீவி கு. து. சுவாமிநாதன் என்பவரால் சீரான வகையில் செய்யப்பட்டு நிறைவுற்றது. அவ்விளைஞருக்கு எங்களது ஆசியும், நன்றியும் உரித்தாகுக. முருகவேளின் திருவருள் பெருகுவதாக.

ஐந்துவருட காலம் இடையூறு ஏதுமின்றி இவ்வேலையைச் செவ்வனே நடப்பித்து முற்றுவித்த எமதாண்டவர் திருத்தணிகேசரின் திருவருளை வியந்து அவருடைய பொன்னார் திருவடிகளைப் போற்றுவதன்றி வேறு எவ்வண்ணம் எங்கள் நன்றியை நாங்கள் அவருக்குக் காட்டவல்லோம்.

"ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேயுணரில்
என்செயலே காண்கிலேனே"-சிவபோகசாரம் 45.

என்னும் திருவாக்கின் உண்மையைக் கண்கூடாகக் இங்கே காண்கின்றோம்.

சென்னை,
16-3-1957.

வ. சு. செங்கல்வராயன்,
மீனாக்ஷி கலியாணசுந்தரம்.

வாழ்க முருகவேள், தேவியர், வேல், மயில்
வாழ்க சேவலும் வீரரோன் பதின்மரும்
வாழ்க முருகவேள் பன்னிரு திருமுறை
வாழ்க முருகவேள் அடியவர் நாளுமே.

வேலு மயிலுந் துணை.

—:o:—